# பாண்டியர் வரலாறு

(முதல் பாகம்)

ம. இராசசேகர தங்கமணி



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

த.பா.நி. (க.வெ.) வரிசை எண்—822

# பாண்டியர் வரலாறு

(முதல் பாகம்)

(பட்டப் படிப்பிற்குரியது)

ஆசிரியர்

ம. இராசசேகர தங்கமணி, எம்.ஏ., பி.டி.,
துணைப் பேராசிரியர்,
வரலாற்றுத்துறை,
அரசினர் கலைக் கல்லூரி,
கரூர்.




தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition—September, 1978

Number of Copies—2000

T.N.T.B.S. (C.P.) No. 822



# HISTORY OF THE PANDYAS (Part-I)

M. RAJASEKARA THANGAMANI

Price Rs. 15-00

Published by the Tamilnadu Textbook Society under the Centrally Sponsored Scheme of production of books and literature in regional languages at the University level, of the Government of India in the Ministry of Education and Social Welfare (Department of Culture), New Delhi.

This book has been printed on concessional paper made available by the Government of India.

*Printed by*
Vijayakumar Printing Works
17, Ashtabujam Road,
Choolai, Madras-600007

# அணிந்துரை

(திரு. செ. அரங்கநாயகம், தமிழகக் கல்வி அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கிப் பதினெட்டாண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் இளங்கலை வகுப்புவரை மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்றுவந்தனர். 1969ஆம் ஆண்டிலிருந்து அறிவியல் பாடங்களையும் தமிழிலேயே கற்பிக்க ஏற்பாடு செய்துள்ளோம். தமிழிலேயே கற்பிப்போம் என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளில் தொண்டுசெய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித்தர முன்வந்துள்ள நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மனநிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்றுவருகிறது. இவ்வகையில் கல்லூரிப் பேராசிரியர்கள் கலை, அறிவியல் பாடங்களை மாணவர்களுக்குத் தமிழிலேயே பயிற்றுவிப்பதற்குத் தேவையான பயிற்சியைப் பெறுவதற்கு மதுரைப் பல்கலைக்கழகமும் சென்னைப் பல்கலைக்கழகமும் ஆண்டுதோறும் எடுத்துவரும் பெருமுயற்சியைக் குறிப்பிட்டுச் சொல்லவேண்டும்.

வரலாற்றியல், அரசியல், உளவியல். பொருளியல், மெய்ப்பொருளியல், புவியியல், புவியமைப்பியல், மனையியல், கணிதவியல் இயற்பியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், விலங்கியல், தாவரவியல், பொறியியல், சட்டவியல் ஆகிய எல்லாத் துறைகளிலும் மூலநூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்று இரு வகையிலும் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் நூல்களை வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான **பாண்டியர் வரலாறு (முதல் பாகம்)** என்னும் இந் நூல் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் 822 ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 857 நூல்கள் வெளிவந்துள்ளன. இந் நூல் மைய அரசு, கல்வி, சமூக நல அமைச்சகத்தின் 'மாநில மொழியில் பல்கலைக்கழக நூல்கள் வெளியிடும் திட்ட'த்தின்கீழ் வெளியிடப்படுகிறது.

தமிழில் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும் என்பதே நம் குறிக்கோளாகும். கல்லூரிகளிலும் பல்கலைக்கழகங்களிலும் கலையியற் பாடங்களையும், அறிவியற் பாடங்களையும், தொழில்நுட்ப அறிவுப் பாடங்களையும் பயிலுகின்ற மாணவர்கள், அவற்றைத் தமிழில் பயிலவேண்டும் என்பதை வலியுறுத்தி வருவதற்குக் காரணம், தமிழறிவு வளர வேண்டும் என்பதைவிட, தமிழ் மக்களின் அறிவுஆற்றல் எளிதாக விரைவாக வளரவேண்டும் என்பதுதான். 'எதிலும் தமிழ்; எங்கும் தமிழ்' என்னும் குறிக்கோளை நிறைவேற்ற வேண்டிய கடப்பாடு தமிழக ஆசிரியப் பெருமக்களையும் மாணவர்களையும் சார்ந்ததாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக்கழகங்களின் பல்வகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரியதாகுக!

செ. அரங்கநாயகம்

# முன்னுரை

நிலமடந்தையின் திலகமெனத் திகழ்வது தமிழ்நாடு. இது பண்டு சேர, சோழ, பாண்டியர் என்னும் முடியுடை மூவேந்தரால் ஆளப்பட்டு வந்தது. இம் மூவருள் பாண்டியர் தொன்மைமிக்கவர். சங்கம் வைத்துத் துங்கத்தமிழ் வளர்த்த இவர்கள், முத்து வாணிகத்திலும் தலைசிறந்து விளங்கினர். சங்க காலத்திற்கு முன்பே இவர்கள் மேம்பட்ட நாகரிகத்தைப் பெற்றிருந்தனர் என்பதனை ஆதிச்ச நல்லூர், சாயர்புரம், கொற்கை முதலான இடங்களில் மேற்கொள்ளப்பட்ட அகழ்வாய்வுகள் அறிவிக்கின்றன.

கடைச்சங்க காலத்திற்கு முன்பே தமது ஆட்சியை நிறுவிய இவர்கள் (சில இடைவெளிகள் இருப்பினும்) கி. பி. பதினேழாம் நூற்றாண்டுவரைப் பாண்டிய நாட்டினை ஆண்டு வந்தனர். தமிழக வரலாற்றில் — ஏன் உலக வரலாற்றிலும் கூட, இவர்களைப்போன்று நீண்ட, நெடுங்காலம் தொடர்ந்து ஆண்டதொரு பேரரசினை நாம் காண இயலவில்லை.

தொன்மைச் சிறப்பும், வரலாற்று முக்கியத்துவமும், பண்பாட்டுப் பெருமையும் பெற்றுள்ள, பாண்டியரது வரலாறு இதுகாறும் செம்மையான முறையில் எழுதப் பெறவில்லை. இவ் வரலாற்றினை எழுதுவதில் சிக்கல்கள் பல காணப் பெறுகின்றன. அவற்றுள், ஒரே காலத்தில் ஒருவருக்கு மேற்பட்ட மன்னர்கள் பாண்டிய நாட்டில் ஆண்டமையும், ஒரே பெயரும் பட்டமும் கொண்ட மன்னர் பலர் இந் நாட்டில் இருந்தமையும், பல்வேறு பட்டங்களும் பெயர்களும் கொண்ட மன்னர்களையும் வேறுபடுத்தி அறிவதற்குரிய சான்றுகள் கிடைக்கப் பெறாமையுமே தக்க காரணியங்களாகலாம்.

இத்துணை இடர்ப்பாடுகளுக்கிடையில் வரலாற்றறிஞர் திரு. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியாரும், கல்வெட்டறிஞர் திரு. தி. வை. சதாசிவ பண்டாரத்தாரும் தமக்குக் கிடைத்துள்ள ஆதாரங்களைக் கொண்டு, பாண்டியர் வரலாற்றினை ஓரளவு தெளிவாக எழுதியுள்ளனர். இவர்களது பெரும்பணி பாராட்டத்தக்கதே. இருப்பினும் இவற்றை நாம் அதிகார

பூர்வமான பாண்டியர் வரலாறு என்று கருதமுடியுமா என்பது ஐயப்பாட்டிற்குரியதாம். இவ்விரு புத்தகங்கள் இயற்றப்பட்ட பின்னர் பாண்டியர் வரலாற்றிற்குத் தொடர்புடைய புதிய கல்வெட்டுகள் பல கிடைத்தவண்ணம் உள்ளன. அவற்றுள் சில தெளிவாக வெளியிடப்பெற்றும், பல வெளியிடப்பெறாமலும் உள்ளன. தமிழ்நாடு, கருநாடகம், ஆந்திரம், கேரளம் முதலான மாநிலங்களிலும், அண்டை நாடான ஈழத்திலும் காணப்பெறுகின்ற கல்வெட்டுகள் முழுவதும் வெளிவந்தால்தான் உண்மையான, தெளிவான, முறையான பாண்டியர் வரலாற்றினை உருவாக்க முடியும். அப் பொற்காலத்தை நாம் விரைவில் எதிர்பார்ப்போம். அப் பொற்காலம் வருவதற்கு முன்பே, இதுகாறும் கிடைத்துள்ள சான்றுகளைக் கொண்டு விரிவானதொரு பாண்டியர் வரலாற்றினை உருவாக்குவது நமது கடமையாகிறது. இக் கடமையை நிறைவேற்றும் முயற்சியில் ஈடுபட்டுள்ள தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தாரின் தூய பணி போற்றத்தக்கது.

அண்மைக் காலத்தில் கிடைத்துள்ள எண்ணிறந்த கல்வெட்டுச் சான்றுகள், அகழ்வாய்வுகள், இலக்கிய ஆதாரங்கள், அறிஞர் பெருமக்களது ஆய்வுக்கட்டுரைகள் ஆகியவற்றின் அடிப்படையில் எனது நீண்ட நாளைய ஆராய்ச்சியையும் சேர்த்துப் பாண்டியர் வரலாற்றில் புத்தொளி பாய்ச்ச முற்பட்டுள்ளேன். பாண்டியர் நிகழ்த்திய போர்கள் பற்றிய விவரங்களை அறியும் பொருட்டு, போர்கள் நிகழ்ந்த ஊர்களுக்கு நேரில் சென்று, ஆய்ந்து புதிய செய்திகளையும் இந்நூலில் தந்துள்ளேன். இது காறும் வெளியிடப்பெறாத கல்வெட்டுகள் சிலவற்றைப் படியெடுத்து இணைத்துள்ளேன்.

இந் நூல் சென்னை, மதுரைப் பல்கலைக்கழகப் பட்டப்படிப்பு மாணவர்களுக்கான பாடத்திட்டத்தின் அடிப்படையில் எழுதப்பட்டுள்ளது. ஆயினும், இது மேற்பட்டப் படிப்பினை மேற்கொண்டுள்ள மாணவர்கட்கும் பயன்படும் பாங்கில் அமைந்துள்ளது.

இந்நூலினைப் படைக்க எனக்கு ஆணையிட்ட தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தாருக்கும், ஒளிப்படங்கள் தந்துதவிய தமிழ்நாட்டரசு தொல்பொருள் ஆய்வுத் துறையினருக்கும் என் இதயங்கனிந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ம. இராசசேகர தங்கமணி

# பொருளடக்கம்

## (முதல் பாகம்)

# 1. பாண்டியர் வரலாற்றுக்கான ஆதாரங்கள்

## வரலாறும் அதன் முக்கியத்துவமும்

இந் நிலவுலகின்கண் உள்ள ஒவ்வொரு நாடும் தனக்கென ஒரு வரலாற்றினைப் பெற்றுள்ளது. ஒரு நாட்டின் வரலாறு அந்த நாட்டைப்பற்றி மட்டும் கூறாது அந்நாட்டிற்குத் தொடர்புடைய அண்டைநாடு பற்றியும், தன்னாட்டில் படையெடுத்து வந்த பிற நாட்டினரின் வரலாறு பற்றியும், தனது நாடு அன்னிய நாட்டில் மேற்கொண்ட படையெழுச்சி பற்றியும் கூறுகின்றது. இவ்வாறு ஒரு நாட்டின் வரலாறு மற்ற நாடுகளின் வரலாற்றுடனும் தொடர்பு கொண்டுள்ளது.

**வரலாறு ஒரு விளக்கம்:** இவ்வுலகில் நாம் காணுகின்ற ஒவ்வொன்றுக்கும் ஒரு வரலாறு உண்டு. 'விமானம் வளர்ந்த வரலாறு', 'மோட்டார் வண்டியின் வரலாறு', 'ஆங்கில இலக்கிய வரலாறு', 'தமிழ் இலக்கிய வரலாறு', 'அரசியலமைப்பு வரலாறு', 'விஞ்ஞான வரலாறு' போன்ற சிலவற்றினை நாம் எடுத்துக் காட்டாகச் சுட்டிக்காட்டலாம் இதனால் வரலாறு, அனைத்தையும் உள்ளடக்கியதொன்று என்பது விளங்குகின்றது. இருப்பினும், 'வரலாறு' என்று கூறும்போது அது ஒரு நாட்டின் அரசியல் வரலாற்றினைக் குறிப்பதாகவே பலர் கருதுகின்றனர். இக் கருத்து பிழைபட்டதாகும். பேரரசுகளின் எழுச்சி வளர்ச்சி, வீழ்ச்சி, அப் பேரரசினைக் கட்டிக் காத்த மாமன்னர்கள்—அவர்களது வெற்றி, தோல்விகள்—விருப்பு, வெறுப்புகள்—அவர்களது திருமணங்கள்—அவர்களைத் தமது காந்தக் கண்களால் கவர்ந்த கவர்ச்சிக் கன்னியர்—அவர்களது காதல் வாழ்க்கை, பொழுதுபோக்குகள்—மாமன்னர்களது கல்வி, கலைத்திறன், அன்றாட நிகழ்ச்சிகள் ஆகியவற்றின் குறிப்பேடே வரலாறு என்று கருதப்பட்ட காலம் கடந்து விட்டது. அண்மைக் காலத்தில் வரலாறு என்பது ஒரு நாட்டு மக்களின் சமுதாய, பொருளாதார, சமய வாழ்க்கையை அடுத்தது காட்டும் பளிங்கு போல் எடுத்துக்காட்டும் கண்ணாடியே ஆகுமென்பது அறிஞர்கள் கருத்தாகும்.

**வரலாறும் வாழ்வும் :** மாமன்னர்களின் மமதைமிக்க வரலாற்றுக் குறிப்புகள் இன்று மக்கள் மத்தியில் மதிப்பிழந்து விட்டன. ஆண்டாண்டு காலமாக இதனைப் போன்ற மன்னர்களது வரலாறுகளைப் படித்துவந்த மக்களிடையே சலிப்புத் தோன்றிவிட்டது. பண்டைக் காலத்தில் மக்கள் எவ்வாறு வாழ்ந்தனர்? அவர்களது பண்பாடு யாது? அவர்களது பொருளாதாரம் எவ்வாறு பெருகியிருந்தது? அவர்களது வாழ்க்கையில் தோன்றிய சிக்கல்கள் யாவை? என்பன போன்ற வினாக்களை எழுப்பி, அவற்றிற்கு விடை காணல் வேண்டுமென்பது இன்றைய வரலாற்றறிஞர்களின் ஆராய்ச்சியாகவுள்ளது. இன்றைய கல்லூரி மாணவர்களும் இதனைப் போன்ற புதுமைக் கருத்துகளை அறியவே நாட்டங்கொண்டுள்ளனர். இக்கால வரலாற்று ஆசிரியர்களும் வரலாற்று நூல்கள் இயற்றுவதில் புதிய முறைகளைக் கையாண்டு வருகின்றனர். நாட்டின் இயற்கையமைப்பினையும், இயற்கை வளங்களையும், அதனைச் சார்ந்துள்ள மக்கள் வாழ்க்கையினையும், அவர்கள் மேற்கொண்ட தொழில் துறைகளைப்பற்றியும், அவர்களிடையே நிலவி வந்த சாதிசமயப் பிரிவுகள் பற்றியும், அவர்கள் உண்ணும் உணவு, அணியும் ஆடை, பூணும் அணிகலன், கொண்ட கொள்கைகள், சிந்தனைகள் பொருள் பெருக்கம், அரசியல் ஆதிக்கம், கலை, கல்வி, இலக்கியம், மொழி ஆகியவற்றில் காட்டிய ஈடுபாடு, அவர்களது வாணிபம், ஏற்படுத்தியிருந்த சமுதாய அமைப்புகள், தலைவர்கள் ஆகியவை பற்றியும், விளக்கிக் கூறும் வரலாற்று நூல்கள் அண்மைக் காலத்தில் வெளி வருகின்றன; அவை நமது முன்னோர்களின் வாழ்க்கை முறையினைப் படம் பிடித்துத் தருகின்றன. வரலாறு, மக்கள் வாழ்க்கையோடு பின்னியும் பிணைந்தும், இணைந்தும் இழைந்தும் காணப்படுகின்றது.

தமிழினத்தின் வரலாறும் வளர்ச்சியும் மேற்கூறிய அடிப்படையில் அமையப் பெறுவதே நலம் பயப்பதாக இருக்குமென்பதனை வரலாற்று அறிஞர் திரு. பி. டி. சீனிவாச ஐயங்கார் அவர்களும் 'தமிழ் வரலாறு' என்னும் நூலின் முன்னுரையில் கீழ்க்கண்டவாறு தெளிவுபடுத்துகின்றார். 'வரலாறு என்பது அரச குடும்பத்தின் உயர்வு தாழ்வுகளைக் கூறுவதாகவும், மாற்றாரென்று பகைவரைக் கற்பித்துக் கொண்டு அவர்தம் நாட்டின் மேல் படையெடுத்து, ஈவு இரக்கமின்றி மக்களைக் கொன்று குவிக்கும், போர் நிலையை விளக்குவதாகவும், மாற்றாரின் நாட்டினை எரியூட்டி மக்கள் வாழ்வினை அழித்து அரச மகளிரையும் பிற பெண்களையும் கற்பழிக்கும் சீர்கேடுகளைக் குறிப்பதாகவும், அமைதிமிக்க வாழ்வினைக் குலைத்து அசுர வாழ்வில் கொலை

முதலியன செய்யும் கொடுமைகளை விளக்குவதாகவும், ஒன்று மறியாப் பால்மனம் மாறாப் பச்சிளங் குழந்தைகளையும் பழி வாங்கும் வன்கண்மையைக் காட்டுவதாகவும் இருப்பின் அந்த வரலாற்று முறை தமிழ்நாட்டிற்கு ஒவ்வாது.'[1]

## தென்னிந்திய வரலாறு புறக்கணிக்கப்படல்

வரலாறு எழுதும் கலை இந்தியாவில் முழு வளர்ச்சி பெற விலலையென்பது அறிஞர்கள் கருத்து. மேலான முறையில் எழுதப்பெற்ற மேலைநாட்டு வரலாற்று நூல்கள் நமக்கெல்லாம் வழிகாட்டியாகத் திகழ்கின்றன. 'இந்திய வரலாறு' பற்றிய நூல்கள் பல, ஆங்கிலத்தில் மேலை நாட்டாசிரியர்களாலும் நம் நாட்டாசிரியர்களாலும் எழுதப்பெற்றுள்ளன. இவைகளைத் தழுவி நம் நாட்டின் வட்டார (பிராந்திய) மொழிகளிலும் பல நூல்கள் இயற்றப்பட்டுள்ளன; மொழிபெயர்ப்புகளாகச் சில நூல்களும் காணப்படுகின்றன. இவையனைத்தும் தொடக்க காலத்தில் வெளிநாட்டினரால் எழுதப்பெற்ற காரணத்தால், வரலாற்று நிகழ்ச்சிகள் பல, வெளிநாட்டவரது நோக்கிலேயே பார்க்கப்பட்டு, அவர்களது கருத்துகளைப் பிரதிபலிப்பதாகவே அமைந்துவிட்டன. நமது நாட்டினரின் எண்ணத்தினையும் எழுச்சியினையும் எடுத்துக்காட்டுவதாக, அவை அமைய வில்லை. அந் நூல்களில் நமது நாட்டுத் தலைவர்களைப்பற்றியும், சுதேச மன்னர்களைப்பற்றியும், சுதந்திரப் போராட்ட வீரர்களைப் பற்றியும் குறைத்து மதிப்பிடப் பெற்றுள்ளன.

**புதிய வரலாறு:** அண்மைக் காலத்தில் இந்திய வரலாறு இந்தியக் கண்ணோட்டத்துடன் இயற்றப்பட்டு வருகிறது. இம் முயற்சியில் 'பாரதிய வித்யா பவன்' தொகுப்புகள் பாராட்டத் தக்கன. இந்திய சுதந்திரப் போராட்டமும் சரியான முறையில் இன்று எழுதப்பட்டுவிட்டது. மேற்கூறிய வகையில் நிறைவு பெறாத இந்திய வரலாற்றிலும், இந்திய நாட்டின் கண்ணுள்ள பல்வேறுபட்ட மக்களின் சமுதாய வரலாறும் சரியாக எழுதப் படவில்லை. மேலைநாட்டு வரலாற்றறிஞர்கள் வட இந்திய வரலாற்றினையே விரிவாக எழுதி, தென்னிந்திய வரலாற்றினைப் புறக்கணித்துவிட்டனர். தமிழினத்தின வரலாற்றினைக் குறிக் காமல் சென்றனர். அவர்கள் கண்ணுக்குப் பட்டிருப்பவை யெல்லாம் விந்திய சாத்பூரா மலைகளுக்கு வடபால் நிலவும் இந்திய நிலப்பரப்பும், அதில் வாழ்ந்த உயிரினங்களுமேயாகும். மேலை நாட்டினருக்குப் பின்பு இந்திய வரலாற்றினையியற்றிய

[1] Srinivasa Iyengar, P. T., 'History of Tamils' Part III.

இந்திய நாட்டு வரலாற்றறிஞர்களும் தென்னிந்திய வரலாற்றினைப் புறக்கணித்தே வந்துள்ளனர்.

இந்திய வரலாற்றில் தென்னகம் புறக்கணிக்கப்பட்டுள்ள அவல நிலையினை வரலாற்று அறிஞரான திரு. வின்செண்ட் ஸ்மித் (Vincent Smith) அவர்கள் கீழ்க்கண்டவாறு தமது நூலில் குறிப்பிட்டுள்ளார். 'இற்றை நாள் வரை பெரும்பாலான பண்டைய இந்திய வரலாற்றறிஞர்கள் தென்னகம் என்ற ஒன்று இல்லையென்றே கருதினர்.'

இந்நிலையைக் கண்ணுற்ற தமிழ்நாட்டு முன்னாள் ஆளுநர் மாண்புமிகு ஸ்ரீ பிரகாசா அவர்களும், தென்னிந்திய வரலாற்று மேதை திரு.கே.கே. பிள்ளை அவர்களின் 'தென்னிந்திய வரலாறு' என்னும் நூலின் அணிந்துரையின்கண் பின்வருமாறு குறிப்பிடுகின்றார். 'உண்மையில் என்னைப் போன்ற வட இந்தியாவைச் சார்ந்தவர்களுக்குத் தென்னாட்டைப்பற்றிப் போதிய அறிவு கிடையாது. மேலும், இதுகாறும் தோன்றிய இந்திய வரலாற்று நூல்கள் பெரும்பாலும் வட இந்தியாவைப்பற்றி மட்டுமே கூறியுள்ளன. தென்னாட்டில் தொன்றுதொட்டே நிலவி வந்த பண்பாட்டையும் பண்டைய மக்களின் வீரச் செயல்களையும் கலைத்திறனையும் அவர்கள் அறவே மறந்தனர் போலும்.'

பேராசிரியர் சுந்தரம்பிள்ளையவர்களும் 'விஞ்ஞான முறையில் இந்திய வரலாறு ஒன்றை எழுதப்புகும் ஆசிரியர்கள் கிருஷ்ணா, காவிரி, வைகை முதலான பேரியாறுகளின் பள்ளத் தாக்குகளில் முதன்முதல் நடைபெற்ற நிகழ்ச்சிகளை அடிப்படையாக வைத்து இந்திய வரலாறு தொடங்கி முறைப்படி வரைதல் வேண்டும்' எனக் கூறியுள்ளார். இக் கருத்தினை இக்கால வரலாற்றறிஞர்களும் ஆதரிக்கின்றனர். எனவே, வரலாற்றாசிரியர்கள் காய்தல் உவத்தலின்றி வரலாற்றுச் செய்திகளை ஆய்ந்து அவற்றைக் கொண்டு வரலாறு படைத்தலே முறைமையாகும்.

**தமிழ்நாட்டு வரலாறு :** இந்திய வரலாறும், தென்னிந்திய வரலாறும் பெரும்பாலும் ஆங்கிலத்திலேயே வெளிவந்தன. இதனைத் தழுவியும், மொழிபெயர்த்தும் எழுதப்பட்ட ஒருசில நூல்கள் தமிழிலும் அண்மைக் காலத்தில் வெளி வந்துள்ளன. இருப்பினும், 'தமிழ்நாட்டு வரலாறு' பற்றிய ஒருசில சிறந்த நூல்களே வெளிவந்துள்ளன. அவற்றுள் திரு. மா. இராசமாணிக்கர் இயற்றியுள்ள 'தமிழக வரலாறும், தமிழர் பண்பாடும்', திரு. அ. மு. பரமசிவானந்தம் அவர்கள் இயற்றியுள்ள

'தமிழக வரலாறு', திரு. கே. கே. பிள்ளையவர்கள் இயற்றியுள்ள 'தமிழக வரலாறு—மக்களும் பண்பாடும்', திரு. என். சுப்பிரமணியன் அவர்கள் ஆங்கிலத்தில் இயற்றியுள்ள 'தமிழ்நாட்டு வரலாறு' ஆகியவை குறிப்பிடத்தக்கனவாகும். நம் தமிழ் நாட்டரசும் வரலாற்றுக் குழு ஒன்றினை நிறுவி, தமிழ்நாட்டு வரலாற்றினை விரிவான அளவில், போற்றத்தக்க முறையில் பல பாகங்களாக வெளியிட்டு வருகிறது. இம் முயற்சி மிகவும் பாராட்டத்தக்கதொன்றாகும். இவையனைத்தும் வெளிவந்து விட்டால் தமிழ்நாட்டு வரலாற்றில் இருள் அடைந்த சில பகுதிகள் ஒளி பெறும்; நமக்குச் சில சிக்கல்கள் தீரும் என்பதில் எட்டுணையும் ஐயமில்லை.

பண்டைக்காலத் தமிழக வரலாற்றினை உருவாக்குதல் எளிதென்று கூறவியலாது. ஏனெனில், வரலாறு இயற்றுவதற்கு அடிப்படையான ஆதாரங்கள் பல தேவைப்படுகின்றன. மக்களினத்தின் வளர்ச்சியினையும் வாழ்வினையும் கற்பனை கலவாது, ஒழுங்குபடுத்திக் காலவரையறையின் அடிப்படையில் கூறுவது தான் வரலாறு ஆதலின், அதற்குத் தக்க ஆதாரங்களை நாட வேண்டியுள்ளது. ஆதாரமில்லையேல் வரலாற்றேடு வெறும் கட்டுக்கதையாகிவிடும்.

**பழைய நிகழ்ச்சிகள் குறித்துவைக்கப் பெறுமை:** பண்டைக் காலத்தில் பொதுவாக இந்தியாவிலும் சிறப்பாகத் தமிழகத்திலும் வரலாற்று நிகழ்ச்சிகளை வரைமுறையுடன் ஏட்டில் எழுதிவைக்கும் வழக்கத்தினை மேற்கொள்ளவில்லை. தம்மைப் பற்றிப் பிற்காலத்தவர் தெரிந்துகொள்ள வேண்டுமென்று உயர்ந்தவர்கள் நினைப்பதில்லை. செயற்கரியனவற்றைச் செய்த போதிலும் அது கடமையின்பாற்பட்டதென்று எண்ணி, அதனை விளம்பரப்படுத்த வேண்டுவதில்லையென்று கருதி அதனை எழுதி வைக்காது சென்று விட்டனர். 'வலது கை தானம் செய்வது இடது கைக்குத் தெரியக் கூடாது' என்றெண்ணிய பண்டைய மக்களின் அரும்பெரும் பணிகளைப்பற்றிய குறிப்புகள் நமக்குக் கிடைக்காமல் போயின.

உன்னதமான இலக்கியங்களையும் உரைகளையும் படைத்துத் தந்த நம் முன்னோர் வரலாற்று நிகழ்ச்சிகளைக் குறித்து வைக்காமற் போனது பெருங்குறையேயாகும். அவர்கள் விட்டுச் சென்ற ஒருசில நிகழ்ச்சிக் குறிப்புகளும் உண்மையில் வரலாற்றுக் கண்ணோட்டத்துடன் எழுதப்பெறவில்லை. எனவே, அந்த ஆதாரங்களைக் கொண்டு நமது வரலாற்றினை நாம் தெளிவாக இயற்றமுடியவில்லை. ஏனெனில், நம் நாட்டு

ஆதாரங்கள், மேலைநாட்டினரின் ஆதாரங்களைப் போன்று வரலாறு படைப்பதற்கு அவ்வளவாகப் பயன்படுவதில்லை. இதனால் நமது ஆதாரங்களை நாம் முழுமையாக அப்படியே ஏற்றுக்கொள்ள முடியவில்லை. இதனை வரலாற்றுக் கண்ணோட்டத்துடன் ஆழ்ந்து ஆராய்ந்து, சீர்தூக்கிப் பார்த்த பின்பே நாம் கொள்ள வேண்டியுள்ளது. எனவே, நமது வரலாற்றினைப் படைக்க நம்மிடம் அதிக அளவில், 'எழுதப்பட்ட சான்றுகள்' **(Written evidences)** இல்லையென்பது புலனாகும். இதன் காரணமாகத்தான் திரு. அல்பிருனி என்னும் முஸ்லிம் அறிஞர் 'இந்துக்கள் முறையான நிகழ்ச்சிகளில் நாட்டம் செலுத்துவதில்லை; நிகழ்ச்சிகளைக் காலவரையறையுடன் தொடர்ச்சியாக எழுதுவதில் கவனம் செலுத்துவதில்லை' என்று குறிப்பிடுகின்றார்.

**அண்ணாவின் கூற்று:** மேற்கூறிய காரணங்களால் 'தமிழக வரலாற்றை'ச் சிறப்பாகப் 'பாண்டியர் வரலாற்றை' நாம் உறுதியான அடிப்படையில் உருவாக்க முடியவில்லை. இதனால் வரலாற்றாசிரியர்கள் பல தொல்லைகட்கு ஆளாகின்றனர். வரலாறு படிப்போரும் முறையான தெளிவான வரலாற்றைக் கற்க இயலவில்லை. இந் நிலையினைத் தமிழ்நாட்டரசின் முன்னாள் முதல்வர் திரு. சி. என். அண்ணாதுரையவர்கள் பின்வருமாறு விளக்குகின்றார். "ஒரு மன்னனுடைய மகன் யாரென்று சரித்திரப் புத்தகங்களைப் புரட்டினால் வரகுண பாண்டியன் மகன் இரண்டாம் வரகுண பாண்டியன் என்று போட்டு 'இது இல்லை என்பாரும் உண்டு' என்று அடியிலே குறிப்புத் தரும் வகையில் குழப்பமான வரலாற்றை வைத்திருக்கிறோம். நம்முடைய தமிழ்ப் பண்புக்கு ஏற்றபடி நம்முடைய அருமை பெருமைகளை நாம் குறித்து வைக்கின்ற பழக்கத்தை நெடுங்காலமாக இழந்து விட்டோம். இன்றைய தினம் உரோம் நாட்டு வரலாற்றை நீங்கள் துருவிப் பார்க்க வேண்டுமென்றால் ஜூலியஸ் சீசர் அணிந்து கொண்டிருந்த கால் செருப்பின் அளவிலேயிருந்து கிளியோபாட்ரா அணிந்திருந்த காதணிவரை வரலாற்றுக் குறிப்புண்டு. ஆனால், தமிழகத்தின் வரலாற்றை நீங்கள் பார்க்க வேண்டுமானால், இந்த மண்டலத்திலே ஆண்டுகொண்டிருந்த மன்னன் இன்னாருடைய மகன் என்று கூறுவதற்கு இரண்டு மூன்று வரலாற்றாசிரியர்களும், நான்கைந்து தமிழ்ப் புலவர்களும், பத்துப் பதினைந்து திங்கள் சேர்ந்து உட்கார்ந்தாலும் ஆளுக்கொரு செய்தியைத்தான் தரமுடியுமே தவிர, அத்துணைப் பேரும் ஒத்த கருத்தைத் தர முடியாத நிலையிலிருக்கிறது. இதற்குக் காரணம் புலவர்களிடையே புலமைக் குறை என்ற

அர்த்தமல்ல! நம்முடைய முன்னோர்களுடைய செயல்களைக் குறித்து வைப்பது இழுக்கு என்ற தவறான கருத்திலே குறித்து வைக்காமல் போய்விட்டார்கள்'' என்று வருந்திக் குறிப்பிடுவதால் நம் முன்னோர்கள் வரலாற்று நிகழ்ச்சிகளை முறையாகக் குறிப்பிடாமை நமக்கொரு பெருங்குறையேயாகும்.

**இலக்கியமும் கல்வெட்டும் !** நாம் இவ்விதம் கூறுவதால் நம் முன்னோர்களுக்கு வரலாற்றுணர்வே இல்லையென்று நாம் கூற வியலாது. ஏனெனில் அவர்கள் வரலாற்று ஆதாரங்களை முழுக்க முழுக்க முறையாகக் குறித்து வைக்கவில்லையெனினும், தம் இலக்கியங்களில் அங்கொன்றும் இங்கொன்றுமாக ஒரு சில வரலாற்று நிகழ்ச்சிகளைக் குறிப்பிடத்தவறவில்லை. இவற்றினைக் கொண்டு நாம் பாண்டியர் வரலாற்றினை ஒருவாறு கணிக்க முடிகின்றது. சங்க காலப் பாண்டியர் வரலாறு பற்றியும் அதற்கு முந்தைய பாண்டியர் வரலாறு பற்றியும் நாம் முழுக்க முழுக்க சங்க இலக்கியங்களையே நம்பியுள்ளோம். இங்கிலையில் ஒருசில கல்வெட்டுகளும் நமக்குக் கை கொடுக்கின்றன. கல்வெட்டு என்பது கல்லிற் செதுக்கப்பட்ட வரலாற்று ஏடு எனல் பொருந்தும். இவற்றுள் நெடுஞ்செழியனைப்பற்றிக் கூறுகின்ற மாங்குளம் கல்வெட்டு மிகவும் குறிப்பிடத்தக்கதாகும். அடுத்து நமக்கு வெளிநாட்டினர் குறிப்புக்கள், புராணங்கள், புதைபொருள் சின்னங்கள் ஆகியவை பெருந்துணை புரிகின்றன.

**பாண்டியர் வரலாற்றின் பகுதிகள் :** நமக்குக் கிடைத்துள்ள சான்றுகளின் அடிப்படையில் நாம் பாண்டியரது வரலாற்றினை உருவாக்க வேண்டியவர்களாக உள்ளோம். எனவே, பாண்டியர் வரலாற்றினை நாம் சில பகுதிகளாகப் பகுத்து ஆய்தல் நலம் பயப்பதாகும். கடைச் சங்க காலத்திற்கு முந்திய பாண்டியர், கடைச் சங்கப் பாண்டியர், முதற்பாண்டியப் பேரரசு, சோழரது ஆட்சியில் பாண்டியர், இரண்டாவது பாண்டியப் பேரரசு, முஸ்லிம்கள் படையெழுச்சியும், உள்நாட்டுக் குழப்பமும், தென் பாண்டி நாட்டையாண்ட பாண்டியர் என்ற பெரும் பிரிவுகளாக எளிமை கருதி இதனைப் பகுத்து ஆராயலாம். அடுத்து ஆட்சி முறை, சமுதாய வாழ்வு, கல்வி, கலை வளர்ச்சி, சிற்றரசர்கள் போன்ற சிறிய தலைப்புகளின் கீழ் பாண்டியர் வரலாறு உருவாக்கப்படுகின்றது.

**ஆதாரங்கள் :** மேற்கூறிய தலைப்புகளின்கீழ் பாண்டியர் வரலாற்றினைப் படைப்பதில் பல வகையான ஆதாரங்கள் நமக்குப் பெருந் துணை புரிகின்றன. அவற்றுள் இலக்கியச் சான்றுகள், கல்வெட்டுக்கள், செப்பேடுகள், பழம்பொருள்

சின்னங்கள், அகழ்வாய்வு, நாணயங்கள், அன்னிய நாட்டினர் குறிப்புகள் ஆகியவை குறிப்பிடத்தக்கனவாகும். இருப்பினும், எளிமை குறித்து இவற்றை நாம் பின்வரும் தலைப்புகளாகப் பகுத்துக் கொள்ளலாம். 1. இலக்கியச் சான்றுகள்; 2. வெட்டெழுத்துகள்; 3. தொல் பொருள் ஆய்வு; 4. நாணயங்கள்; 5. நினைவுச் சின்னங்கள்; 6. அயல் நாட்டினரின் குறிப்புகள்; 7. நாடோடி இலக்கியங்கள்; 8. கன்ன பரம்பரைக் கதைகளும் புராணங்களும்; 9. நில அமைப்பு முதலியன.

## இலக்கியம்

உலக வரலாற்றினை உருவாக்க, உலகில் உலவும் பல்வேறு மொழிகளில் தோன்றிய இலக்கியங்கள் ஓரளவு துணை புரிகின்றன. ஆனால், தமிழக வரலாற்றினையும், பாண்டியர் வரலாற்றினையும் உருவாக்கும் பணியிலோ இலக்கியங்கள் பெருந்துணை புரிகின்றன. தொல்காப்பியர் காலந்தொட்டு, ஏன் அதற்கு முன்புங்கூடத் தமிழில் உயர்ந்த இலக்கியங்கள் தோன்றியுள்ளன. ஆனால், அவற்றுள் பெரும்பாலானவை இன்று கிடைக்கப் பெறாமல் அழிந்துபட்டன. மக்கள் வாழ்வினை விளக்கும் இலக்கியத்திற்கும், அவ் வாழ்வினைப் பின்னணியாகக் கொண்டு இயற்றப்பெறும் வரலாற்றுக்கும் நெருங்கிய தொடர்புண்டு. எனவேதான் 'பாவியத்தின் செய்முதற் பொருள்கள் பெரும்பான்மையும் வரலாற்று நிகழ்ச்சிகளே. ஆனால், அவற்றினை வகுத்தமைக்கும் முறையும், மாற்றி அமைத்துக் கொள்ளும் தன்மையும் மாறுபட்டவை' என்று மேலை நாட்டறிஞர் பௌரா (Bowra) என்பார் கூறுவார்.

### வரலாறும் இலக்கியமும்

வரலாறும் இலக்கியமும் மக்கள் வாழ்க்கையினைக் கருப்பொருளாகக் கொண்டுள்ளதால், ஒன்றுக்கொன்று நெருங்கிய தொடர்பினைக் கொண்டுள்ளது. இதனை அறிஞர் கார்லைல் அவர்களது கீழ்க்காணும் கருத்து நன்கு விளக்குவதாகவே அமைந்துள்ளது. 'வரலாறு என்பது உண்மையில் இலக்கியமே ஆகும். உண்மை நிகழ்ச்சிகள் நன்முறையில் விளக்கப்படுமானால் கற்பனைக் காவியத்தைவிடச் சுவையும் சிறப்பும் மிக்கதாய் வரலாறு விளங்கும்.' வரலாறு இயற்றுதற்கு இலக்கியம் பயன்படுவதுபோல, இலக்கியம் இயற்றுதற்கும் வரலாறு பயன்படுகிறது. எனவே, இலக்கியமின்றி வரலாறு வலிவு பெறாது, வரலாறு இன்றி இலக்கியம் சுவை பெறாது என்பது புலனாகிறது.

**இலக்கியத்தின் தன்மை**

பாண்டியர் வரலாற்றினை உருவாக்குவதில் தமிழ் இலக்கியங்கள் முக்கியமானதோர் இடத்தினைப் பெற்றுள்ளது. இருப்பினும், மேலை நாட்டு இலக்கியங்களைப் போல் நம் நாட்டு இலக்கியங்கள் வரலாறு படைப்பதற்கு முழுக்க முழுக்கப் பயன்படுவதில்லை. ஏனெனில், தமிழிலக்கியங்கள் பெரும்பாலும் சமயச் சார்புடையதாகவும், மன்னர்களைப் பெரிதும் புகழ்ந்து கூறுவதாகவும் அமைந்துள்ளன. இதனால் ஒரு சமயத்தைச் சார்ந்துள்ள மன்னன், அவனது மதம், அவனைச் சார்ந்துள்ளோர், அவனது ஆட்சி ஆகியவைபற்றி விரித்துரைத்தலும், புறச் சமயத்தைச் சார்ந்துள்ள மன்னன், மக்கள், ஆட்சி பற்றிய உண்மையான நிகழ்ச்சிகள் ஆகியவை குறிப்பிடப் பெறாமல் விடுபடுவதும் உண்டு. அடுத்து பரிசில் பெறும் புலவன் தனக்குப் பரிசில் அளித்த வேந்தனை அளவுக்கு மீறிப் புகழ்வதால் அவ் வேந்தனது கொடைத் திறத்தினையும் வெற்றிகளையும் முழுமையாக அறிந்து கொள்ள இயலவில்லை.

**காலக் கணிப்பு** : இலக்கியங்கள் மக்களின் வாழ்க்கையை அடுத்தது காட்டும் பளிங்குபோல் படம் பிடித்துக் காட்டும் இயல்புடையவை. இலக்கியங்கள் அவை தோன்றிய காலத்து மக்களின் சமூக, அரசியல், பொருளாதார, சமய வாழ்க்கையை அறியப் பெரிதும் பயன்படுகின்றன. ஆனால், காலவரையறையைக் கணக்கிடுவதில் இலக்கியச் சான்றுகளை மட்டும் நாம் நம்பிப் பயனில்லை. இவ்விலக்கியச் சான்றுகளுடன், வேறு பல சான்றுகளைக் கொண்டே காலத்தைக் கணிக்க வேண்டியுள்ளது. எனவே, இலக்கியச் சான்றுகளில் வரலாற்றுக்குத் தேவையான வரலாற்றுச் செய்திகளை மட்டும் ஆய்ந்து, தேர்ந்து ஏற்றுக் கொள்ளுதல் வரலாற்றறிஞரின் கடனாகும்.

**அ. பயன்படும் தமிழ் இலக்கியங்கள்**

பாண்டியர் வரலாற்றினைப் பொறுத்தமட்டில், சங்கப் பாடல்கள் தரும் செய்திகள் எண்ணிறந்தவை; சிறந்தவை. இவற்றுள் தொல்காப்பியம் முதன்மையானது. ஒல்காப் பெரும் புலமைத் தொல்காப்பியர் இயற்றிய தொல்காப்பியமும் அதற்கெழுந்த உரைகளும் சிறந்த ஆதாரங்களாக விளங்குகின்றன. இதனையடுத்து நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறு நூறு, பதிற்றுப் பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு, புறநானூறு ஆகியவையடங்கிய எட்டுத்தொகை நூல்களும்; திருமுருகாற்றுப் படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும் பாணாற்றுப்படை, முல்லைப்பாட்டு, மதுரைக் காஞ்சி, நெடுநல்

வாடை, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை, மலைபடுகடாம் போன்ற பத்துப்பாட்டு நூல்களும் பாண்டியர் வரலாற்றினை உருவாக்கப் பெருந்துணை புரிகின்றன. அடுத்து, பதினெண் கீழ்க்கணக்கு நூல்களும் நமக்குப் பல ஆதாரங்களை வழங்கு கின்றன. நாலடியார், நான்மணிக் கடிகை, இன்னா நாற்பது, இனியவை நாற்பது, கார் நாற்பது, களவழி நாற்பது, ஐந்திணை ஐம்பது, ஐந்திணை எழுபது, திணைமொழி ஐம்பது, திணைமாலை நூற்றைம்பது, கைந்நிலை, திருக்குறள், திரிகடுகம், ஆசாரக்கோவை, பழமொழி, சிறுபஞ்ச மூலம், முதுமொழிக் காஞ்சி, ஏலாதி ஆகியவை பதினெண் கீழ்க் கணக்கு நூல்களிலடங்கும். அடுத்து இரட்டைக் காப்பியங் களான சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகியவை பாண்டியர் வரலாற்றினை உருவாக்கப் பெருந்துணை புரிகின்றன. இவற்றுள் சிலப்பதிகாரம் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியனது ஆட்சி பற்றியும், மக்கள் வாழ்வு பற்றியும் அரிய பல செய்திகளைச் செப்புகின்றது.

**உரையாசிரியர்** : மேற்கூறிய இலக்கியங்களேயன்றி, அவற் றிற்குச் செம்மையான முறையில் உரைகண்ட ஆற்றல் மிக்க உரையாசிரியர்களது கருத்துகளும் நமக்குப் பெருந்துணை புரி கின்றன. இவ்வுரையாசிரியருள் நச்சினார்க்கினியர், இளம் பூரணர், அடியார்க்கு நல்லார், பரிமேலழகர் ஆகியோர் குறிப் பிடத்தக்கவராவர். இவர்களது விளக்கவுரைகள் பாடல்களுள் குறிப்பிடப் பெறாத பல அரிய செய்திகளை எடுத்துக்கூறுகின்றது. சங்க காலப் பாண்டி வேந்தரைப்பற்றிய செய்திகளையும் மக்கள் வாழ்வுபற்றிய செய்திகளையும் அறிந்துகொள்ள சங்கப்பாக்களே நமக்கு முக்கியமானதும், முதன்மையானதுமான ஆதாரங்க ளாகும். சங்க காலத்து வேந்தர்கள், சங்க காலத்திற்கு முந்திய பாண்டிய வேந்தர்கள் ஆகியோருள் பலர் செந்தமிழ்ப் புலவர் களாகத் திகழ்ந்தமை போற்றுதற்குரியதொன்றாகும். இச் சங்க நூல்களும் சில வேந்தர்களைப்பற்றிய விரிவான செய்திகளைக் குறிப்பிடாது பெயர்களை மட்டும் குறிப்பிடுகின்றது.

அடுத்து, சங்க கால வேந்தர்களுள் இன்ன வேந்தனுக்குப் பின்பு இன்ன வேந்தன் ஆட்சி புரிந்தான் என்பதனையோ, இன்ன வேந்தன் இன்ன ஆண்டு ஆட்சியினைத் தொடங்கி இன்ன ஆண்டு வரை ஆண்டான் என்பதனையோ, இன்ன வேந்தன் இன்ன வேந்தனுக்கு இன்ன உறவினன் என்பதனையோ அறிந்து கொள்ளக் கூடவில்லை. இதனால் வரலாற்றின் முதுகெலும்பாக, அடிப்படையாகக் கருதப்பெறும் காலவரையறை, சங்க காலப் பாண்டியர் வரலாற்றிற்கும் அதற்கு முன்னராண்ட பாண்டி

வேந்தர் வரலாற்றிற்கும் கணிக்கப் பெறவில்லையென்பது பெருங் குறையேயாகும். இக் காலவரையறையைக் கணிக்கும் முயற்சியில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டு, பெரும்பணியாற்றிய திரு. சிவராசபிள்ளையவர்கள் பாராட்டுக்குரியவரேயாவர். இருப்பினும், இம் முயற்சியில் இவரும் வெற்றிபெற்றதாகக் கூற வியலாது.

**பாண்டிக் கோவை :** அடுத்து 'பாண்டிக் கோவை', சேக்கிழார் இயற்றிய 'பெரிய புராணம்', மணிவாசகப் பெருமான் இயற்றிய 'திருச்சிற்றம்பலக் கோவையார்', பட்டினத்தார் இயற்றியுள்ள 'திருவிடை மருதூர் மும்மணிக் கோவை', நம்பியாண்டார் நம்பி இயற்றியுள்ள 'கோயிற்திருப் பண்ணியர் விருத்தம்', செயங்கொண்டார் இயற்றிய 'கலிங்கத்துப் பரணி, 'தேவாரம்', 'திருவாய் மொழி' போன்ற இலக்கியங்களும் பாண்டியர் பற்றிய சில செய்திகளைத் தன்னகத்தே கொண்டுள்ளன. இவற்றுள் பாண்டிக்கோவை நமக்குப் பெரிதும் பயன் படுவதாக உள்ளது. கோவைகளுள் முற்பட்டதாகிய இக் கோவையில் அரிகேசரி பராங்குச மாறவர்மனது போர்ச் செயல்கள் மிக விரிவாகக் கூறப்பட்டுள்ளன. 'வைஷ்ணவ குரு பரம்பரை', 'மதுரைத் தல வரலாறு', 'திருவையாறு தல புராணம்' போன்ற தல புராணங்களும் பாண்டியரைப்பற்றிக் குறிப்பிடுகின்றன.

### ஆ. பிறமொழி நூல்கள்

மேற்கூறிய தமிழ் நூல்களேயன்றி வடமொழியில் இயற்றப் பட்ட சில நூல்களும் பாண்டியரைப்பற்றிய செய்திகளைக் கூறுகின்றன. அவற்றுள் 'மதுரை விஜயம்' என்னும் நூல் குறிப்பிடத்தக்கதாகும். இந் நூல் விசயநகர வேந்தனுன குமார கம்பண்ணனது மனைவி கங்காதேவியால் இயற்றப்பட்டதாகும். குமார கம்பண்ணனது மதுரைப் படையெழுச்சி பற்றியும், அவனது வெற்றி பற்றியும் இந் நூல் விவரிக்கின்றது. முஸ்லிம் ஆதிக்கத்தினின்றும் மதுரை விடுவிக்கப்பட்ட செய்தி இதனுல் அறியப்படுகின்றது.

அடுத்து திருவரங்கம் 'கோயிலொழுகு' என்னும் வட மொழி நூலும் மாலிக்காபூரின் பாண்டி நாடடுப் படையெழுச்சி பற்றியும், திருவரங்கம் கோயில் கொள்ளையடிக்கப்பட்ட நிகழ்ச்சி பற்றியும் குறிப்பிடுகின்றது. வரதாம்பாவின் 'அச்சுதராயா பியூதயம், முக்குதிம்மண்ணுவின் 'பாரிஜாதா பகரநமு' திருமலம்பாவின் 'வரதாம்பிகா பரிணயம்' முதலான தெலுங்கு நூல்

களும் பாண்டிய வரலாற்றுச் செய்திகள் சிலவற்றைக் கூறுகின்றன.

### இ. முஸ்லிம் ஆதாரங்கள்

மேற்கூறப்பட்ட ஆதாரங்களேயன்றி அமீர் குஸ்ரூ (Amir-khusru), வாசப் (Wassaf), பரணி, பெரிஷ்தா போன்ற முஸ்லிம் வரலாற்றறிஞர்களும் பாண்டியர் வரலாறு பற்றிய செய்திகளைக் குறித்துள்ளனர். தரீக்-கு-அலை (Tarikh-i-Alai), அசிகா (Ashika) ஆகிய நூல்கள் அமீர்குஸ்ருவால் இயற்றப்பட்டுள்ளன. இவற்றில் மாலிக்காபூரது மதுரைப் படையெழுச்சி விளக்கப்பட்டுள்ளது. வாசப் என்பானும் மாலிக்காபூர் மதுரை மாநகரின்கண் கொள்ளையடித்த நிகழ்ச்சிகளையே குறித்துச் செல்கின்றார். இபின்பதூதாவின் குறிப்புகளிலிருந்து முஸ்லிம் சுல்தான்களின் ஆட்சிக்காலத்தில் பாண்டி நாட்டு மக்களது வாழ்க்கை பற்றியும், மதுரைநகரின்கண் பல்லாயிரக்கணக்கான மக்களின் உயிரைக் குடித்த தொற்றுநோய் பற்றியும் விரிவாகக் கூறியுள்ளார். தென்னிந்தியாவிலும் இலங்கையிலும் சுற்றுப்பயணம் செய்த இவர் மதுரையில் தான் கண்டவற்றையும் கேட்டவற்றையும் தெளிவாக எழுதியுள்ளமை நமது கவனத்தைக் கவர்கின்றது.

### ஈ இலங்கை நூல்கள்

இலங்கை நாட்டு (ஸ்ரீலங்கா) நூல்களான மகாவம்சம், வம்சம், சூளவம்சம், யாழ்ப்பான வைபவமாலை (Yalpana vaipavamalai), சேகராஜசேகரமாலை (Segarajasekaramalai), நிகய சம்கிரஹவம் (Nikaya samgrahava) முதலானவையும் பாண்டியர் வரலாறு பற்றியும், பாண்டியர் ஈழவரிடையே நிகழ்ந்த போர்கள் பற்றியும், அரசியல் உறவுகள் பற்றியும் அறியப் பயன்படுகின்றன.

## வெட்டெழுத்துகள்

(Inscriptions)

இந்தியாவிலேயே தமிழ்நாட்டில்தான் பெருமளவில் வெட்டெழுத்துகள் கிடைத்துள்ளன. தமிழக வரலாற்றினை உருவாக்க நமக்குக் கிடைத்துள்ள ஆதாரங்களில் இதுவே முதன்மை வகிக்கின்றது. இதனைக் கல்வெட்டுகள் என்றும் செப்புப் பட்டயங்கள் என்றும் இருவகையாகப் பகுக்கலாம்.

**அ. கல்வெட்டுச் சாசனங்கள்**

**கல்வெட்டின் வளர்ச்சி :** கல்லிலே வெட்டப்படுகின்ற எழுத்து கல்வெட்டு எனப்படும். இதனைப் போன்ற கல்வெட்டுகள் தமிழ்நாட்டில் ஆயிரக்கணக்கில் காணப்பெறுகின்றன. கற்கோயில்களைக் கட்டத் தொடங்கிய காலமுதல் இவை பல்கிப் பெருகின. இக் கல்வெட்டுகள் கோயில்களின் 'மதில் சுவர் களிலும், உட்புறச் சுவர்களிலும், பொதுக் கட்டடங்களின் சுவர்களிலும், குகைகளிலும், குன்றுகளிலும், கல்தூண்களிலும் பொறிக்கப்பட்டுள்ளன. கல்வெட்டுகளின் தோற்றத்தினையும் வளர்ச்சியினையும், ஆய்ந்து பார்க்குங்கால், தமிழகத்தில் பன்னெடுங் காலத்திற்கு முன்பே நடுகல் அல்லது வீரக்கல் நட்டு வழிபடுகின்ற வழக்கம் நிலவி வந்ததென்பதனைக் 'காட்சி கால்கோள் நீர்ப்படை நடுகல் - சீர்தகு சிறப்பில் பெரும்படை வாழ்தலென்-றிரு மூன்று வகையிற் கல்லொடு புணர' என்னும் தொல்காப்பிய அடிகளாலறியலாம். எனவே கல்வெட்டு, தோன்றுவதற்கு முன்பே நடுகல் தோன்றியதென்பது புலனாகிறது.

**நடுகல் :** போரிலே பெருவீரம் விளைவித்து வீரமரண மெய்திய வீரனின் நினைவாக நடுகல் எடுத்து, அக் கல்லில் அவ்வீரனது பெயரும் உருவமும் பெருமையும் பொறிக்கப்படுதல் அக்கால மரபாகும். இதனைப்போன்ற நடுகற்கள் தமிழகத்தின் பல பகுதிகளிலும் கிடைத்துள்ளன நடுகல்லைப் போன்றே சமண முனிவர்கள் நோன்பியற்றி, உயிர் துறந்த இடங்களில் அவர்களைப்பற்றிய செய்திகளை அவர்களுடைய மாணவர்கள் பாறைகளில் செதுக்கி வைத்தல் வழக்கமாயிற்று. இதனைப் போன்ற சமாதிச் சாசனங்கள், மலைப்பாறைகளிலும் குன்றுகளிலும் குகைகளிலும் காணலாம். திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள கழுகுமலை, மதுரை மாவட்டத்திலுள்ள ஆனைமலை, திருச்சிராப்பள்ளிக் குன்று, கரூருக்கண்மையிலுள்ள ஆர்நாட்டார்மலை போன்றவற்றை இதற்கு எடுத்துக்காட்டாகக் காட்டலாம்.

**அரச ஆணையும் தானமும் :** பின்னர் கோயில்களில் நிகழும் வழிபாடுகளும், விழாக்காலச் சிறப்பு நிகழ்ச்சிகளும், பகலும் இரவும் இடையீடின்றி எரிக்கப்படும் நந்தா விளக்குகளும், அங்குப் பணிபுரியும் தேவகன்மிகளும், கடமைகளும், கோயிலுக்கு நிவந்தங்கள், அணிகலன்கள் அளித்த விவரம் பற்றியும், அரசனின் ஆணை பற்றியும், அரசனின் கொடை பற்றியுமான செய்திகள் கோயில் சுவர்களில் வெட்டி வைக்கப் பெற்றன. இவ்வாறு கல்வெட்டுகள் வளர்ச்சி பெற்றன.

**கல்வெட்டுகள் படியெடுக்கப்படுதல் :** இவ்விதம் பொறிக்கப்பட்ட கல்வெட்டுகளை இந்திய அரசாங்கத்தார் கண்டெடுத்து, ஆய்ந்து அச்சிட்டு வெளியிடுவதற்காக ஒரு துறையை (Dep rtment) ஏற்படுத்தியுள்ளனர், மாநில அரசுகளும் இது போன்ற துறையினை நிறுவி கல்வெட்டுகளைப் படியெடுத்து வருகின்றன. கோயில்களைப் பழுதுபார்த்துப் புதுப்பிக்கும் சில 'புண்ணியவான்கள்' இக் கல்வெட்டுகளை அகற்றிவிட்டு, அதன் முக்கியத்துவம் அறியாது, அவற்றைத் தூக்கி எறிந்துவிட்டனர் அல்லது மாற்றியமைத்துவிட்டனர். இதனால் அவை பயன் படாது போய்விட்டன. மீண்டும் இதுபோன்ற அவலநிலை நேரா வண்ணம் அரசு ஏற்பாடுகள் செய்துள்ளபோதிலும் இவை சில சமயங்களில் தவிர்க்க முடியாததாகின்றன. நல்ல வேளையாக இந்த ஆண்டு முதல் இந்திய அரசு கோயிற்சிலைகள் திருட்டு போகாவண்ணம் தடுக்கவும், கல்வெட்டுகளையும் கோயில்களை யும் பாதுகாக்கவும் பதிவு அதிகாரிகளை (Registration Officers) நியமித்துள்ளனர். இச் செயல் போற்றத்தக்க தொன்றாகும்

**கல்வெட்டின் பகுதிகள்**

கல்வெட்டு மங்கல வாசகம், சாசனம் எழுதப்பட்ட காலம், சாசனச் செய்தி, கையெழுத்துகள், ஓம்படைக் கிளவி ஆகிய ஐந்து பகுதிகளைக் கொண்டிருக்கும். மங்கல வாசகம் கல்வெட்டின் தொடக்கத்தில் பொறிக்கப்பட்டிருக்கும். பெரும் பான்மையான கல்வெட்டுகள் 'ஸ்வஸ்தி ஸ்ரீ' எனும் சொல் லினைத் தொடக்கத்தில் கொண்டுள்ளது. இதன் பொருள் மங்கலமுண்டாகட்டும் என்பதாகும்.

கல்வெட்டுகளின் தொடக்கத்தில் மன்னனது மெய்க் கீர்த்தியும், பின்னர் இன்னார், இன்ன அறத்தின் பொருட்டு இவ்வளவு பொருள் அளித்தனர் என்பன போன்ற செய்திகளும் குறிக்கப்பெறும். வேந்தனது வெற்றிகளையும் சாதனைகளையும் அருமை பெருமைகளையும் அவை நிகழ்ந்த காலத்தின் அடிப் படையில் வரையறை செய்து முறையாக வெளியிடப்பெற்றிருப் பதே மெய்க்கீர்த்தி எனப்படும். மன்னனுடை ஆட்சியாண்டு, மிகுந்து செல்லச் செல்ல, அவ்வாண்டுகளில் செய்யப்பெற்ற மெய்ப்புகழும், வீரச்செயலும், அம் மன்னனுடைய மெய்க் கீர்த்திகளில் முறையாக இடம் பெறும்.

**மெய்க்கீர்த்தி**

விரிவான அளவிலான மெய்க்கீர்த்தி வெளியிடும் முறையை முதன்முதலில் மேற்கொண்டவன் முதலாம் இராசராச சோழப்

பெருமன்னனாவான். இவனையடுத்தாண்ட சோழவேந்தர்களும் இம் முறையினைப் பின்பற்றினர். அவர்களைப் பின்பற்றியே பாண்டிவேந்தர்களும் பெரிய அளவிலான மெய்க்கீர்த்திகளை வெளியிட்டனர். பொதுவாக, குறுநில மன்னர்களது கல்வெட்டுகளில் மெய்க்கீர்த்தி இடம் பெறுவதில்லை.

ஒவ்வொரு மன்னனின் மெய்க்கீர்த்தியும் ஒவ்வொருவிதமான மங்கல மொழியினைக் கொண்டு தொடங்கப் பெற்றிருத்தலின், அம் மெய்க்கீர்த்தியின் தொடக்கத்திலுள்ள மங்கலமொழியினைக் கண்டவுடனே, அக் கல்வெட்டு எவ்வேந்தனுடையதென்று அறிந்து கொள்ளலாம். மாறவர்மன் திரிபுவன சக்கரவர்த்தி பராக்கிரம பாண்டியனது மெய்க்கீர்த்தி 'திருமகள் புணர' என்னும் தொடக்கத்தினையும், சடையவர்மன் குலசேகர பாண்டியனது மெய்க்கீர்த்தி 'பூதல மடந்தை' என்னும் தொடக்கத்தினையும் கொண்டு விளங்குவதனை ஈண்டு நாம் எடுத்துக் காட்டாகச் சுட்டலாம். ஒன்றுக்கு மேற்கொண்ட மங்கல மொழியினைத் தனது மெய்க்கீர்த்தியின் தொடக்கமாகக் கொண்டோரும் சிலர் உண்டு. எடுத்துக்காட்டாக சடையவர்மன் சீவல்லபனது மெய்க்கீர்த்தி 'திருமடந்தையும் சயமடந்தையும்' என்னும் தொடக்கத்தினையும் 'பூமாது புணர' என்னும் தொடக்கத்தினையும் கொண்டுள்ளது என்பதனை ஈண்டுச் சுடடலாம்.

**எழுத்துகள்**

இக் கல்வெட்டுகள் பெரும்பாலும் தமிழிலும் வட்டெழுத்துகளிலும் காணப்படுகின்றன. சில கல்வெட்டுகள் பிராமி எழுத்துகளிலும் கிரந்த எழுத்துகளிலும் எழுதப்பட்டுள்ளன. ஒன்பதாம் நூற்றாண்டிலேயே வட்டெழுத்துகள் தமிழகத்தினின்றும் மறைந்துவிட்டன. கல்வெட்டுகளின் துணை கொண்டு அக்கால தமிழ்மொழி, வடமொழி இவற்றின் வளர்ச்சி, நடைமாறுபாடு, சொல்வளம் போன்றவற்றையும் அறியலாம்.

பாண்டியர் வரலாறுபற்றிய கல்வெட்டுகள் நமக்கு அதிக அளவில் கிடைத்துள்ளதால், பாண்டியர் வரலாற்றினைப் பெரும் பகுதிகளாகப் பகுத்துக்கொண்டு, அக் காலக் கட்டத்தின் வரலாற்றினை வரையப் பயன்படும் கல்வெட்டுகளை அதன் அடிப்படையில் முறையாக ஆராய்வோம். தென்னிந்தியக் கல்வெட்டுகள் பகுதி 14 (South Indian Inscriptions, Vol. XIV) பாண்டியர் காலக் கல்வெட்டுகளின் தொகுப்பாகும். எனவே, இது பாண்டியர் வரலாற்றினை உருவாக்கப் பெரிதும் பயன் படுகின்றது.

**சங்க காலம்:** பாண்டியர் வரலாற்றுக்குத் துணைபுரியும் கல்வெட்டுகள் நம் தமிழகத்தின் பல பகுதிகளில் கிடைத்துள்ளன. ஆனால், கி. பி. முதல் நூற்றாண்டிலிருந்து மூன்றாம் நூற்றாண்டு முடிய ஆட்சிபுரிந்த சங்க காலப் பாண்டி வேந்தர்களைப்பற்றிய கல்வெட்டுச் செய்திகள் நமக்கு அதிகமாகக் கிடைக்கவில்லை. இக் காலக் கட்டத்தில் ஆண்டுவந்த பாண்டியருள், நெடுஞ்செழியனைப்பற்றிய கல்வெட்டொன்றே இதுகாறும் நமக்குக் கிடைத்துள்ளது. இவ் வேந்தன் சமண சமயத் துறவிகளுக்கு அமைத்துக் கொடுத்த படுக்கைகளை எடுத்துக்கூறும் இக் கல்வெட்டு மதுரை மாவட்டம் மாங்குளத்தில் கிடைத்துள்ளது.

**முற்காலப் பாண்டியர்:** கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டு முதல் கி. பி. பத்தாம் நூற்றாண்டு முடிய ஆட்சிபுரிந்த முற்காலப் பாண்டிய வேந்தர்களைப்பற்றிய (அதாவது, பாண்டியன் கடுங்கோன் முதல் சோழன் தலைகொண்ட வீரபாண்டியன் ஈறாக ஆண்ட) கல்வெட்டுச் செய்திகள் நமக்குப் பெருமளவில் கிடைத்துள்ளன. இதுகாறும் பாண்டிய மன்னர்கள் காலத்திய கல்வெட்டுகள் ஏறத்தாழ 380 கிடைத்துள்ளன. அவற்றுள் 200-க்கு மேற்பட்ட கல்வெட்டுகள் இம் முதற் பிரிவைச் சேர்ந்த பாண்டி வேந்தர்களைப் பற்றியனவாகும். இந்தக் காலத்தியக் கல்வெட்டுகளுள் சில அதுபோழ்து ஆட்சி புரிந்த வேந்தர்களது ஆட்சிக் காலத்தை அறிந்துகொள்ள ஆதாரமாய் உள்ளன. இவ்வாறு நமக்குப் பெருந்துணை புரியும் கல்வெட்டுக்களுள் முக்கியமானதாக மூன்றினை நாம் குறிப்பிடலாம். அவை:
(1) பராந்தக நெடுஞ்சடையனது ஆனைமலைக் கல்வெட்டு;
(2) இரண்டாம் வரகுண பாண்டியனது ஐவர்மலைக் கல்வெட்டு;
(3) மாறவர்மன் அரிகேசரியின் வைகைக்கரைக் கல்வெட்டு.

**ஆனைமலைக் கல்வெட்டு:** மதுரையிலிருந்து ஆறு கல் தொலைவிலுள்ள ஆனைமலைக் கல்வெட்டு காரி ஆண்டு 3871-ல் வெளியிடப்பட்டதாகும். இவ்வாண்டினை நாம் கிறிஸ்து ஆண்டுக்குக் கணக்கிட்டோமானால் இது கி. பி. 770ஆம் ஆண்டிற்குச் சமமாகும். இக் கல்வெட்டின் மூலம் இவ்வாண்டில் பராந்தக நெடுஞ்சடையன் ஆட்சி புரிந்தான் என்பது உறுதியாகத் தெரிகிறது. இக் கல்வெட்டின் துணைகொண்டு பராந்தக நெடுஞ்சடையனது சிறப்புப் பெயர்களையும் வெற்றிகளையும் நாம் அறிந்துகொள்ள முடிகின்றது.

**ஐவர்மலைக் கல்வெட்டு:** இரண்டாம் வரகுணனின் ஐவர் மலைக் கல்வெட்டு அவனது எட்டாமாட்சியாண்டில் வெளியிடப் பட்டதாகும். இக் கல்வெட்டில் சக ஆண்டு 792 குறிக்கப்

பெற்றுள்ளன. இவ்வாண்டு கி. பி. 870க்குச் சமமாக உள்ளது. இக்கல்வெட்டு இவனது எட்டாமாட்சியாண்டில் வெளியிடப் பெற்றதாகலின் இவன் கி. பி. 862—63-ல் அரசு கட்டிலேறி யிருத்தல் வேண்டுமென்பது உறுதியாகிறது.

**வைகைக் கரைக் கல்வெட்டு**

மூன்றாவதாக குறிக்கப்பெற்றுள்ள வைகைக்கரைக் கல் வெட்டு பாண்டியரது காலவரையறையினைக் கணிப்பதில் பெருந் துணை புரிகின்றது. பாண்டியர் காலவரையறையின் மையமாக இதனைக் கொள்வது மிகவும் பொருத்தமுடையதாகும். இக்கல் வெட்டினால் பாண்டியரது வரலாற்றில் முந்நூறு ஆண்டுகளாக ஆண்டு வந்த பாண்டிய வேந்தர்களது மரபு வழி தெளிவு பெறு கிறது.

**கல்வெட்டு கிடைத்த வரலாறு**

இக்கல்வெட்டு 1961 ஆம் ஆண்டு மதுரை வைகைக்கரையில் கண்டுபிடிக்கப்பட்டு. தற்போது மதுரை அங்கயற்கண்ணி ஆலயத்தில் (மீனாட்சியம்மன்) பார்வைக்கு வைக்கப்பட்டுள்ளது. இதனைக் கல்வெட்டறிஞர் திரு. கே. ஜி. கிருஷ்ணன் அவர்கள் எபிகிராபிகா இண்டிகாவில்[1] பதிப்பித்துள்ளார். இதிலுள்ள வடமொழிப் பகுதி கிரந்த எழுத்திலும், தமிழ்ப்பகுதி வட்டெழுத் திலும் எழுதப்பட்டுள்ளது. வைகையாற்றங்கரையில் ஒரு வண்ணான் துணி வெளுப்பதற்குப் பயன்படுத்தி வந்த இக் கல்லினை திரு. கே. வி. இராமன் அவர்கள் முதன் முதலாகக் கண்டுபிடித்தார். பிற்காலத்தில் புகழ்பெற்று விளங்கிய மெய்க் கீர்த்திகளுக்கு இதுவே முன்மாதிரியாகத் திகழ்கின்றதென்று கூறினால் தவறாகாது.

இக்கல்வெட்டினைப் படித்த மத்திய அரசின் கல்வெட்டியல் துறைத்தலைவர் (Superintendent for Epigraphy, govt. of India) திரு. கே. ஜி. கிருஷ்ணன் அவர்கள், இது செழியன் சேந்த னுடையதென்று அறிமுகப்படுத்தினார். இது பலராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டது. பின்னர் இக்கல்வெட்டினைக் காண நேர்ந்த தமிழ்நாட்டரசு தொல்லியல் துறை இயக்குநர் திரு. ஆர். நாக சாமி அவர்கள் இதனைப்படித்து, இது சேந்தன் மாறனின் கல் வெட்டென்று கருத்துத் தெரிவித்தார்.[2] விவாதத்திற்குரிய கல் வெட்டு வாசகத்தினை நாமும் ஈண்டு காண்போம்.

[1] Epigraphia Indica. XXXVIII. Part I. Page 27-38. No. 4.

[2] நாகசாமி இரா. ‘நெல்வேலி வென்ற நெடுமாறனின் வைகைக்கரைக் கல்வெட்டு’—ஆராய்ச்சி (நா. வானமாமலை) மலர் 4; இதழ் 3. ஏப்ரல் 1974. பக். 225-231.

1. பாண்டிய குல மணி பிரதீபனுய் ப்ராதுர் பாவஞ் செ
2. ய்து விக்ரமங்களா லரை சடக்கி மறங்
3. கெடுத்தறம் பெருக்கி அக்ரா ஹாரம் பல
4. செய்த பரிமிதமாகிய ஹிரண்ய கர்பகோ
5. ஸஹஸ்ர துலாபாரத்து மஹாதா நங்களாற்
6. கலிகடிந்து மங்கலபுரங் நகரமாக்கி வீ
7. ற்றிருந்து செங்கோனடாவா நின்ற கோச்சே
8. ந்தன் மாறனை ம்பதாவது ராஜ்ய ஸம்வத்ஸர
9. ஞ்செல்லா நிற்க வைகை சொம் மதகுப
10. டுத்தரி கேஸரியா (னெ) னப் பியரிட்டு காறெடு
11. வித்து காணுண்தை இடை அடைத்து
12. .................. (ஆர். நாகசாமியின் வாசகம்)

**கருத்து வேறுபாடு**

இக்கல்வெட்டினைத் திரு. கே. ஜி. கிருஷ்ணன் அவர்கள் படித்ததற்கும், திரு. ஆர். நாகசாமி அவர்கள் வேறுவிதமாகப் படித்ததற்கும் காரணமாக உள்ள சொற்களையும் அவர்கள் படித்ததையும் ஈண்டு நாம் காண்போம்.

| வரி | கே. ஜி. கிருஷ்ணன் படித்தது | ஆர். நாகசாமி படித்தது |
|---|---|---|
| 7 | நடாவி | நடாவா |
| 8 | மற்றை | மாறன் |
| 9 | சொன் | சொம் |
| 11 | ஓடை | இடை |

ஏழாவது வரியினை 'செங்கோ நடாவி னின்ற' என்று திரு. கே. ஜி. கிருஷ்ணன் அவர்கள் படித்ததை திரு. நாகசாமிஅவர்கள் 'செங்கோ நடாவா நின்ற' என்று படித்துள்ளார். திரு. கே. ஜி. கிருஷ்ணன் அவர்கள் 'கோச் சேந்தன் மாறனைம் பதாவது ராஜ்ய சம்சத்சரம் செல்லா நிற்க' எனப் படிப்பதால் இது சேந்தனைப்பற்றிச் செப்புவதாகச் சுட்டிக் காட்டுகின்றார்.

**முடிபு**

இக்கல்வெட்டு சேந்தனைக் குறிக்கின்றதா? அல்லது சேந்தன் மகன் மாறனைக் குறிக்கின்றதா? என்பது ஆராய்ச்சிக்குரிய

தோன்றுதான்.[1] இருப்பினும் சேந்தனைப்பற்றியும், சேந்தன் மாறனைப்பற்றியும் மற்ற ஆதாரங்கள் யாது கூறுகின்றன என்பதனை நாம் சிறிது ஆய்ந்து பார்க்குங்கால் இக்கல்வெட்டு சேந்தன் மாறனைக் குறிப்பதாகவே தோன்றுகின்றது. இக்கல் வெட்டில் குறிக்கப்பெறும் சேந்தன் ஹிரண்ய கர்ப்பம், துலா பாரம், கோசாஹஸ்ரம் போன்ற தானங்களைச் செய்ததாகக் குறிப்பிடுகின்றது. வேள்விக்குடிச் செப்பேடும், சின்னமனூர்ச் செப்பேடும் சேந்தனின் மகனான அரிகேசரி பராங்குசமாறவர்மன் மேற்கூறிய தானங்கள் பலவற்றைச் செய்ததாகக் குறிப்பிடுகின்றன. இதனால் கல்வெட்டில் கூறப்பட்டுள்ள செய்தியும் செப்பேடுகளில் குறிக்கப்பட்டுள்ள செய்திகளும் ஒத்திருக்கின்றதென்பது புலனாகும்.

அடுத்து இக்கல்வெட்டில் வைகையாற்றில் இவ்வேந்தன் மதகொன்று அமைத்து அதற்கு 'அரிகேசரியான்' எனப்பெயரிட்டான் என்று குறிக்கப்பட்டுள்ளது. அரிகேசரியென்பது சேந்தன் மாறனின் பட்டப் பெயர்களில் ஒன்றாகும். இதனால் சேந்தன் மாறன் தனது பட்டப்பெயரினையே இதற்கிட்டான் எனக்கொள்ளுதல் பொருத்தமாகத் தோன்றுகின்றது. சேந்தன் தனது மகனின் நினைவாக, அவனது மகனின் பெயரால் மதகமைத்தான் எனக்கொள்ளுதல் பொருத்தமுடைத்தன்று. ஏனெனில், மன்னன் தனது தந்தையின் பெயரால் மதகு அமைப்பதுதான் வழக்கமேயன்றி, மகனின் பெயரால் அல்ல.

மேற்கூறியவற்றால் வைகைக்கரைக் கல்வெட்டு சேந்தன் மாறனுடையதென்று உறுதியாகக் கூறலாம்.

**ஒரு மாற்றம் :** இக்கல்வெட்டினைக் கொண்டு சேந்தன் மாறன் குறைந்தது ஐம்பது ஆண்டுகள் ஆட்சிபுரிந்தானென்பது தெளிவு. நெல்வேலி வென்ற நெடுமாறனாகிய இவன் முப்பது ஆண்டுகளே ஆண்டதாகக் கூறும் திரு. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியாரது கருத்து இதுகாறும் வரலாற்றறிஞர்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டிருந்தது. ஆனால், இக்கருத்து இப்பொழுது மாற்றப்பட வேண்டியதாகும்.

[1] ஆராய்ச்சி இதழில் திரு. இரா. நாகசாமி அவர்கள் எழுதிய கட்டுரையை மறுத்து, திரு. முத்துக்கோனார் அவர்கள் 'வைகைக்கரைக் கல்வெட்டு நெல்வேலி வென்ற நெடுமாறனுடையதல்ல, சேந்தனுடையதே' என்ற தலைப்பில் கட்டுரை ஒன்றினை 'ஆராய்ச்சி' இதழில் வெளியிட்டுள்ளார். இவர் தமது கட்டுரையில் திரு. கே. ஜி. கிருஷ்ணன் அவர்களது கருத்துக்கு வலிவூட்ட முயன்றுள்ளார்.

இக்கல்வெட்டினால் சைவ நாயன்மார்களது காலமும் மாற்றம் பெறுகிறது. சம்பந்தர் நெல்வேலி வென்ற நெடுமாறனது உடன்காலத்தவனாகிறான்.

**வேறு சில கல்வெட்டுகள் :** மாறவர்மன் அவனி சூளாமணியின் காலமுதல் பாண்டி வேந்தர்கள் மாறவர்மன், சடையவர்மன் என்னும் பட்டங்களை ஒருவர்பின் ஒருவராக மாறி மாறிப் புனைந்து கொண்டனரென்பதனைக் கல்வெட்டுகள் உணர்த்துகின்றன. இக்காலக் கட்டத்தில் ஆண்ட வேந்தர்களைப்பற்றி கேந்தூர், சோழவந்தான், ஆனைமலை, திருப்பரங்குன்றம், சாலை கிராமம், திருவிசலூர், திருநெய்த்தானம், ஆடுதுறை, சின்னமனூர், குத்தாலம், மதுரை, கீழ்மாத்தூர், உத்தமபாளையம், கோயில் குளம், பெருங்குளம், சீவைகுண்டம், செவிலிப்பேரி, திருப்புடை மருதூர், கும்பகோணம், செந்தலை, திருச்சிராப்பள்ளி, திருக்கோடிகா, தேனூர், ஆணையூர், நாங்குனேரி, திருக்காட்டுப்பள்ளி, திருச்சோற்றுத் துறை. அம்பா சமுத்திரம், தளபதி சமுத்திரம், கழுகுமலை, ஏர்வாடி, சிற்றண்ணவாயில். ஐவர்மலை, திருவதிகை வீரட்டானம், இராமநாதபுரம் (திண்டுக்கல்லுக்கண்மையில்), லால்குடி, நியமம் ஆகிய ஊர்களில் காணப்பெறும் கல்வெட்டுகளும் இக்காலக் கட்டத்திலாண்ட பாண்டியரைப்பற்றிய செய்திகளைக் குறிப்பிடுகின்றன.

மேற்கூறிய கல்வெட்டுகளேயன்றி, பல்லவர், சோழர் போன்ற அண்டை அரசர்களின் கல்வெட்டுகளும் பாண்டி வேந்தர்களைப்பற்றிய ஒருசில செய்திகளைக் கூறுகின்றன.

**சோழராதிக்க காலம் :** அடுத்த காலப் பகுதியில் (சோழராதிக்கம் அல்லது கி. பி. 966 முதல் கி. பி. 1190 வரை) ஆண்ட பாண்டியர்களைப்பற்றிய கல்வெட்டுகள் நமக்கு மிகுதியாகக் கிடைக்கவில்லை. இக்காலக் கட்டத்தில் இவர்கள் சோழர்களுக்கடங்கிய சிற்றரசர்களாக ஆண்டு வந்ததால் இவர்களைப்பற்றிய செய்திகள் சோழர்களது கல்வெட்டுகளில்தான் பெரும்பாலும் குறிக்கப்பெற்றுள்ளன. முதற் பராந்தகன், கண்டராதித்தன், அரிஞ்சயன், சுந்தரசோழன், ஆதித்த கரிகாலன், முதலாம் இராசராசசோழன், முதலாம் இராசேந்திர சோழன், இராசாதிராசன், இரண்டாம் இராசேந்திர சோழன், வீரராசேந்திர சோழன், முதற் குலோத்துங்க சோழன், இரண்டாம் இராசாதிராச சோழன், மூன்றாங் குலோத்துங்க சோழன் ஆகிய வேந்தர்களது மெய்க்கீர்த்திப் பகுதியில் இப்பாண்டி வேந்தர்களைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. காஞ்சி மாநகரத்தையடுத்த ஆர்ப்பாக்கம், திருவக்கரை, திட்டக்குடி, மதுரைக்கருகா

மையிலுள்ள ஆணையூர், மன்னார்கோயில், ஆத்தூர், சுசீந்திரம், சேரமாதேவி முதலான இடங்களில் காணப்பெறும் கல்வெட்டுகளும் இப்பாண்டி வேந்தர்களைக் குறிப்பிடுகின்றன. இப்பகுதியில் இரண்டாம் இராசசிம்ம பாண்டியன் முதலாக மாறவர்மன் விக்ரம பாண்டியன் ஈறாக உள்ள வேந்தர்களே இடம் பெற்று உள்ளனர். இக்காலக் கட்டத்தில் சோழ வேந்தர்கள் தனக்குக் கீழ்ப்பட்ட பாண்டிய நாட்டில் சோழ அரசப் பிரதிநிதிகளையனுப்பி அவர்களுக்குச் 'சோழ பாண்டியன்' எனப் பெயர் சூட்டி ஆளச் செய்தனர். சோழரின் ஆட்சிக்கெதிராகக் கிளர்ந்தெழுந்து கலகஞ்செய்த பாண்டியர்களைப்பற்றி இவ்வாதாரங்களின் மூலம் ஓரளவு அறிந்து கொள்ளலாம்.

**சோழ பாண்டியர் கல்வெட்டுகள்**

பாண்டிய நாட்டில் ஆட்சி புரிந்து வந்த சோழ-பாண்டிய வேந்தர்களைப்பற்றி அறிந்து கொள்ளப் பயன்படும் கல்வெட்டுகள் பல கிடைத்துள்ளன. இவை சோழ-பாண்டியரது ஆட்சிபற்றிய முழு விவரங்களையும் அளிக்கின்றன. பாபநாசம், மன்னார்கோயில், கோபாலசாமிக் கோயில் கல்வெட்டுகள், அம்பாசமுத்திரம் கல்வெட்டுகள், சுசீந்திரம் ஸ்தானுநாதர் கோயில் கல்வெட்டுகள், கன்னியாகுமரி புவந்நதீஸ்வரர் கோயில் கல்வெட்டுகள், திருவாலீஸ்வரம் வாலீஸ்வரர் கோயில் கல்வெட்டுகள் ஆதனூர் (கோவில்பட்டி வட்டம்), கழுகுமலை, கங்கை கொண்டான் (திருநெல்வேலி மாவட்டம்), செவிலிப்பேரி, சேரமாதேவி, அழகர் கோயில் முதலான ஊர்களில் காணப்பெறும் கல்வெட்டுகள் ஆகியன சோழ-பாண்டிய வேந்தர்களின் ஆட்சி பற்றித் தெரிவிக்கின்றன.

**பாண்டியரின் மீட்சிக் காலம்**

இதனையடுத்த பாண்டியரின் மீட்சிக் காலத்தைப்பற்றி அறிந்து கொள்ளவும் நமக்குக் கல்வெட்டுச் சான்றுகள் துணை புரிகின்றன. இப்பகுதியுள் முதல் பாண்டி வேந்தனாக இடம் பெறும் சடையவர்மன் சீவல்லபனைப்பற்றிய கல்வெட்டுகள் மதுரை, திருநெல்வேலி, இராமநாதபுரம் ஆகிய மாவட்டங்களில் அதிக அளவில் கிடைத்துள்ளன. இவை எழுபதுக்கும் மேற்பட்டவையாகும். 'திருமடந்தையும் செயமடந்தையும்' 'பூமாது புணர' எனத் தொடங்கும் கல்வெட்டுகள் இவ்வேந்தனைக் குறிப்பதாகும். இவனுக்குப் பிறகாண்ட வேந்தர்களைப்பற்றிய செய்திகள் தேவதானம, விக்கிரம மங்கலம், விசய மங்கலம், நாங்குனேரி, மாரமங்கலம், கோட்டாறு, சுசீந்திரம், தேவதானம், கட்டாரி மங்கலம ஆகிய இடங்களில் கிடைத்துள்ள கல்வெட்டு

களிலும், முதலாம் குலோத்துங்கன், விக்ரமசோழன், இராசாதிராச சோழன், மூன்றும் குலோத்துங்க சோழன் ஆகியோரது மெய்க்கீர்த்திகளிலும குறிக்கப்பெற்றுள்ளன.

**பிற்காலப் பாண்டியர் காலம்**

இரண்டாவது பாண்டியப் பேரரசின் காலத்தில் ஆட்சி புரிந்த பாண்டி வேந்தர்களைப்பற்றி அறிந்து கொள்ள ஏராளமான கல்வெட்டுகள் கிடைத்துள்ளன. இவர்களது கல்வெட்டுகளில், நாள், கோள், நட்சத்திரக் குறிப்புகள் காணப்படுகின்றன. எடுத்துக்காட்டாக 'ஸ்ரீகோச்சடைய வன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீகுலசேகர தேவற்குயாண்டு நாலாந்தியதியும் அமரபட்சத்துத் தசமியும் வியாழக்கிழமையும் பெற்ற பூராடத்து நாள்' என்பதனைச் சுட்டலாம். இக்காலக் குறிப்புகளை ஆய்ந்து உலகிற்கு உணர்த்திய பெருமை டாக்டர் கீல்ஹார்ன், எல். டி. சுவாமிக்கண்ணு, இராபர்ட் சிவல், ஜாகோபி ஆகிய அறிஞர்களைச் சாரும். திருவெள்ளரை, திருத்தங்கால், அழகர் கோயில், சிவில்லிபுத்தூர், திருநாம நல்லூர், திருப்பத்தூர், திருவெந்திபுரம், சுசீந்திரம், திருக்கோளிலி (தஞ்சை மாவட்டம்), எலவானசூர் (தென் ஆர்க்காடு மாவட்டம்), திருவரங்கம், சீவைகுண்டம், திருச்சி (தாயுமானவர் கோயில்), திருப்பரங்குன்றம், இளையான்குடி, தென் திருப்பேரை, திருச்சி, நாங்குனேரி, திருப்பாற்கடல், திருப்புட்குழி, கல்விடைக் குறிச்சி, அச்சிறுப்பாக்கம், திருமாணி குழி, திருக்கோவலூர், சேரமாதேவி முதலான இடங்களில் காணப்பெறும் கல்வெட்டுகள் இக்காலக் கட்டத்தில் ஆண்ட வேந்தர்களைப்பற்றிய செய்திகளைக் கூறுகின்றன.

திருவரங்கத்தில் காணப்பெறும் முதல் சடையவர்மன் சுந்தர பாண்டியனது வடமொழிச் சுலோகங்களால் எழுதப்பட்ட கல்வெட்டு, இவ்வேந்தனது அறச் செயல்களையும், வீரதீரச் செயல்களையும் விரித்துரைக்கின்றது.

இக்காலத்தியப் பாண்டியர் வரலாற்றினை அறிந்து கொள்ளப் பாண்டியர் கல்வெட்டுகளையன்றி சோழர், போசளர், தெலுங்குச் சோழர், காடவராயர், சம்புவராயர், காகாதித்தியர் போன்ற சமகாலத்தவருடைய எண்ணிறந்த வெட்டெழுத்துகளும் நமக்குப் பெரிதும் பயன்படுகின்றன.

'காலிங்கராயன் அணை கட்டிய பட்டயம்' அண்மையில் வெளியிடப்பட்டுள்ளது. இதனைக் கூறும் ஓலைச் சுவடிகள் புதுப்பை செல்லப்ப வாத்தியார் வீட்டில் கிடைத்துள்ளது.

இதில் வீரபாண்டியனது (கி. பி. 1253) ஆட்சிக் காலம்பற்றிய செய்திகள் கூறப்பட்டுள்ளன.

**முகமதியர் படையெழுச்சி**

பாண்டிய நாட்டின்கண் முகமதியரின் படையெழுச்சியேற்பட்ட காலத்தினைப்பற்றித் தெளிவாக அறிந்து கொள்ள பாண்டியரது கல்வெட்டுகள் நமக்கு உதவவில்லை. தென்னார்க்காடு, வடவார்க்காடு பகுதிகளில் கிடைத்துள்ள ஒரு சில கல்வெட்டுகளும், திருப்பத்தூர் வட்டத்திலுள்ள வேலங்குடி, சீவில்லிபுத்தூர், குடுமியான்மலை ஆகிய ஊர்களில் கிடைத்துள்ள ஒரு சில கல்வெட்டுகளே இக்காலப் பகுதியின் சான்றுகளாக விளங்குகின்றன. காயல்பட்டணத்தில் ஏராளமாகக் கிடைத்துள்ள அராபிக் கல்வெட்டுகளும், தமிழ்க் கல்வெட்டுகளும் முஸ்லிம் படையெழுச்சிபற்றி அறிய நமக்குத் துணை நிற்கின்றன. இவை யாவும் சமாதிகளில் பொறிக்கப்பட்டுள்ளன. இக்காலத்தைப்பற்றிய நிகழ்ச்சிகள் முஸ்லிம் அறிஞர்களது குறிப்பில்தான் இடம் பெறுகின்றது.

**தென்காசிப் பாண்டியர்**

கி. பி. பதினைன்காம் நூற்றாண்டின் பிற்பகுதி முதல் பதினேழாம் நூற்றாண்டின் பிற்பகுதி வரையில் தென் பாண்டி நாட்டை ஆட்சிப் புரிந்த தென்காசிப் பாண்டியரைப்பற்றி அறிந்து கொள்ளப் பல கல்வெட்டுகளும், சில செப்பேடுகளும் பயன்படுகின்றன. அவற்றுள் கரிவலம்வந்தநல்லூர், திருக்குற்றாலம், திருப்புத்தூர், தென் காசி முதலான ஊர்களில் காணப்பெறும் கல்வெட்டுகள் குறிப்பிடத்தக்கனவாகும்.

வரதுங்கராம பாண்டியன், வில்லவனை வென்ற நிகழ்ச்சியும், வல்லமெறிந்த செய்தியும் தென்காசிக் கல்வெட்டில் கூறப்பட்டுள்ளது.

சங்கரநயினார் கோயில், திருவாங்கூர் சமஸ்தானத்தைச் சேர்ந்த களாங்காடு, மார்த்தாண்டபுரம், விந்தனூர், (சாம்பூர் வடகரை), களக்காடு ஜமதக்னீஸ்வரர் ஆலயம், திருநெல்வேலி மாவட்டம் கோவில்பட்டி வட்டத்தைச் சேர்ந்த சோழபுரம் (விக்ரம பாண்டீஸ்வரர் கோயில்), செங்கோட்டை சிவன் கோயில், விஷ்ணு கோயில் முதலான இடங்களிலுள்ள கல்வெட்டுகள் தென்காசிப் பாண்டியரின் ஆட்சிபற்றி தெரிந்து கொள்ளத் துணை புரிகின்றன.

**ஆட்சிமுறை**

மாறஞ்சடையனது மானூர்க் கல்வெட்டு பாண்டியரது கிராம ஆட்சிமுறையினை விரித்துரைக்கின்றது. இக்கல்வெட்டு சோழர்கால கிராம ஆட்சிமுறையினை விளக்கிக்கூறும் உத்திர மேரூர் சாசனத்திற்குக் காலத்தால் முற்பட்டதென்பது ஈண்டு குறிப்பிடத்தக்கதாகும். மானூர்க் கல்வெட்டினையடுத்து கி. பி. 1228-29ஆம் ஆண்டினதான சுசீந்திரம் கல்வெட்டும், கீழக்கரை மலையாள பிராமணரது மகாசபையின் அமைப்பு, செயல்முறை பற்றித் தெளிவாக எடுத்துக் கூறுகின்றது. அடுத்து வரகுண மகாராசனின் திருச்செந்தூர்க் கல்வெட்டும் கிராமசபையாரின் உரிமைகள்பற்றி எடுத்துக் கூறுகின்றது. குத்தாளம். திருவாத ஊர், கோட்டாறு, ஆனைமலை ஆகிய இடங்களில் கிடைத்துள்ள கல்வெட்டுகள் பாண்டியரது ஆட்சிமுறைபற்றி அறிந்து கொள்ளத் தக்க ஆதாரங்களாக உள்ளன.

**மக்கள் வாழ்க்கை**

பாண்டியர்கால மக்கள் வாழ்க்கை, கலையுணர்வு, சமய வாழ்க்கைபற்றிய அரிய செய்திகளும் கல்வெட்டின் வாயிலாக அறியப்படுகின்றன. விக்ரம பாண்டியனது திருப்பாசெட்டி கல் வெட்டும், மாறவர்மன் சுந்தரபாண்டியனின் பிள்ளையார்பட்டிக் கல்வெட்டும், செங்கற்பட்டு மாவட்டத்திலுள்ள சிறுதவூர் கல் வெட்டும், தளபதி சமுத்திரம், கீரமங்கலம், தென்கரை (பெரிய குளம வட்டம), மதுரை, சிதமபரம, நாகப்பட்டினம், மலையடிக் குறிச்சி, திருப்புலீஸ்வரம் (திருநெல்வேலி மாவட்டம்) ஆகிய இடங்களில் கிடைத்துள்ள கல்வெட்டுகளும் பாண்டியர்கால சமுதாய வாழ்வினைப் படம் பிடித்துக் காட்டுகின்றன.

**நடுகல்**

கல்வெட்டுகளைப் போன்று, தமிழகத்தின் பல்வேறு பகுதி களில் கண்டெடுக்கப்பட்டுள்ள நடுகற்களும் தமிழக வர லாற்றைச் சீராக அமைப்பதற்குப் பயன்படுகின்றன. கடந்த ஆண்டு வட ஆர்க்காடு மாவட்டம் செங்கம் வட்டப் பகுதியில் மட்டும் அறுபதுக்கும் மேற்பட்ட நடுகற்கள் படியெடுக்கப் பட்டுள்ளன. பாண்டியர் வரலாற்றினைத் தெளிவுபடுத்தும் நான்கு நடுகற்கள் நமக்குக் கிடைத்துள்ளன. இவற்றுள் விழிஞத்தில் இரண்டும், திருநெல்வேலி மாவட்டம் கழுகுமலையில் ஒன்றும், வடஆர்க்காடு மாவட்டம் காந்தப்பாளையத்தில் ஒன்றும் கிடைத் துள்ளன. கோயில்களில் கிடைத்துள்ள கல்வெட்டுகளைவிடச் சிறந்த முறையில், அக்கால மக்களின் உருவ அழகு, உடையழகு,

கலைத்திறன், பண்பாடு, வீரம் ஆகியவற்றை நேருக்கு நேராகக் காட்டி நம் பழந்தமிழரின் பண்பாட்டு மேன்மையை இன்று காட்டும் சிறந்த புகைப்படமாக-ஒளிப்படமாக விளங்குவது நடு கற்கள்தான் என்பதில் சிறிதும் ஐயமில்லை. மனிதர்களுக்கு மட்டுமின்றி விலங்கினங்களுக்கும் அககாலத்தில் கல் நடப் பட்டன.

### ஆ. செப்பேட்டுச் சாசனங்கள்

**செப்பேடு என்றால் என்ன ? :** செப்புப் பட்டயத்தில் எழுதப் பெற்ற எழுத்துகள் செப்பேட்டுச் சாசனம் என்று அழைக்கப் பெறுகிறது. கல்லின்மீதும் செப்புப்பட்டயத்தின் மீதும் எழுதிய எழுத்து அழியாதென்பதனையறிந்த பாண்டியர் செப்புப்பட்ட யங்களை அதிக அளவில் வெளியிட்டுள்ளனர். பல்லவர்களைப் போன்று பாண்டியர்களும் பெரிய அளவிலான செப்பேட்டுச் சாசனங்களில் பல அரசியற் செய்திகளைத் தெரிவித்துள்ளனர். பாண்டியர்களது வரலாறுபற்றியும், ஆட்சி முறைபற்றியும், மக்களின் சமுதாய வாழ்வுபற்றியும் அறிந்து கொள்ள செப் பேட்டுச் சாசனங்கள் பெருந்துணை புரிகின்றன.

### ஆறு செப்பேடுகள்

வேள்விக்குடிச் சாசனம், சீவரமங்கலச் சாசனம், (சிறிய) சின்னமனூர்ச் சாசனம், (பெரிய) சின்னமனூர்ச் சாசனம், தள வாய்புரச் சாசனம், சிவகாசிச் சாசனம் ஆகியவை பாண்டிய வேந்தர்களால் வெளியிடப்பெற்ற சாசனங்களுள் முக்கிய இடம் பெறுகின்றன. இவற்றுள் தளவாய்ப்புரச் சாசனமும், சிவகாசிச் செப்பேடும் அண்மைக் காலத்தில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இவையிரண்டும் பாண்டியர் வரலாறுபற்றிய பல புதிய செய்தி களைத் தருகின்றன.

சடையவர்மன் குலசேகரன் திருப்புவனம் செப்பேடு, 1958 ஆம் ஆண்டு கோயில்பட்டி வட்டத்திலுள்ள பாண்டவர் மங்கலத்தில் கண்டெடுக்கப்பட்ட சடையவர்மன் சுந்தரசோழ பாண்டியனின் செப்பேடு ஆகியனவும் பாண்டியர் வரலாறு பற்றிய செய்திகளைச் செப்புகின்றன.

### குறுநில மன்னரது செப்பேடுகள்

பாண்டியர்களது சிற்றரசர்களாக இருந்து ஆட்சிபுரிந்த ஆய்குல மன்னர்களது செப்பேடுகளும் பாண்டியர் வரலாறு பற்றி நமக்கு அறிவுறுத்துகின்றன. இவற்றுள் பார்த்திவ சேகர

புரச்சாசனம், திருப்பறப்புச் சாசனம், பாலிபத்துச் சாசனம், திருநந்திக்கரைச் சாசனம் முதலானவை குறிப்பிடத்தக்கன வாகும்.

**அண்டையரசர் செப்பேடுகள்**

மேற்கூறிய செப்பேட்டுச் சாசனங்களேயன்றி பாண்டியர்களது சமகாலத்தில் அண்டை நாடுகளை ஆண்டு வந்த சோழர், பல்லவர், சேரர், போசளர் போன்றவர்களது செப்பேடுகளும் பாண்டியர் வரலாறுபற்றிய செய்திகள் சிலவற்றைக் கூறுகின்றன. அவற்றுள் நந்திவர்மப் பல்லவனது உதயேந்திரச் செப்பேடு, இரண்டாம் பருதிவிபதியின் உதயேந்திரச் செப்பேடு, தெள்ளாறு எறிந்த நந்திவர்மனது மகனை நிருபதுங்க வர்மனுடைய வாகூர்ச் செப்பேடு, முதலாம் இராசேந்திர சோழனின் கரந்தைச் செப்பேடு, திருவாலங்காட்டுச் செப்பேடு ஆகியவை குறிப்பிடத்தக்கனவாகும்.

இரண்டாம் நந்திவர்மப் பல்லவமல்லனின் கொற்றங்குடிச் செப்பேடுகள், தண்டந்தோட்டம் செப்பேடுகள், ஸ்கந்தசிஷ்ய வர்மனுடைய ராயக்கோட்டைச் செப்பேடுகள், மூன்றும் நந்தி வர்மனின் வேலூர்ப்பாளையம் செப்பேடுகள்—ஆகியனவும் பாண்டியர்-பல்லவர் போர்பற்றிய செய்திகளைத் தெரிவிக்கின்றன.

ஈண்டு நாம் பாண்டி வேந்தர்களால் வழங்கப்பெற்ற ஆறு செப்பேடுகள்பற்றியும், ஆய்குல வேந்தர்களால் வெளியிடப் பெற்ற நான்கு செப்பேடுகள்பற்றியும் விரிவாகக் காண்போம்.

## வேள்விக்குடிச் சாசனம்

சங்க காலப் பாண்டியர் வரலாற்றினை உருவாக்க உதவும் சாசனங்களுள் இதுவே மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது. பாண்டியர்களால் வெளியிடப்பெற்ற சாசனங்களுள் இதுவே காலத்தால் முற்பட்டது. இச்சாசனம் பத்து ஏடுகளைக் கொண்டுளது. இவ்வேடுகளுள் முதல ஏடும் கடைசி ஏடும் வெளிப்புறம் எழுதப்படாது உட்புறம் மட்டுமே எழுதப்பட்டுள்ளன. ஏனைய எட்டு ஏடுகளும் இருபுறமும் எழுதப்பட்டுள்ளன. பதினெட்டுப் பக்கங்களைக் கொண்ட இச் சாசனம் மொத்தம் நூற்றைம்பத்தைந்து (155) வரிகளைக் கொண்டுள்ளது.

**பொருளடக்கம்:** இச்சாசனம் தமிழ்நாட்டில் கிடைத்துள்ள பழைய காலத்துச் செப்பேடுகளைப் போன்று தமிழ், சமஸ்கிருதம் ஆகிய இரு பகுதிகளையும் கொண்டுளது. தமிழ்ப்பகுதி வட்டெழுத்திலும், சமஸ்கிருதப் பகுதி கிரந்த எழுத்திலும்

எழுதப்பட்டுள்ளன. தமிழ்ப்பகுதியில் விரவி வரும் சமஸ்கிருதச் சொற்கள் பெரும்பாலும் கிரந்த எழுத்திலேயே எழுதப்பட்டு உள்ளன. இவை யாவும் அழகிய செய்யுள் நடையிலேயே அமைந்துள்ளன. இச்சாசனத்தின் தமிழ்ப் பகுதி சொல்லழகும் பொருளழகும் கொண்ட செய்யுளாக விளங்குவது மிகவும் போற்றி மகிழத்தக்கது. தமிழ்ப் பகுதியில் காணப்பெறும் மெய்யெழுத்துகள் பெரும்பாலும் புள்ளியிடப்பட்டுள்ளன.

பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி என்னும் பாண்டிய மன்னனால் கொற்கை கிழான் நற்கொற்றனுக்கு முன்னாளில் தானமாக வழங்கப்பட்ட 'வேள்விக் குடி' என்னும் ஊரினைப் பராந்தக நெடுஞ்சடையன் மீண்டும் அவன் மரபினனுக்கு வழங்கியதை விளக்குவதே இச்சாசனம். பராந்தக நெடுஞ்சடையனுக்கு முன்பு பாண்டிய நாட்டை ஆட்சி புரிந்த ஆறு மன்னர்களைப்பற்றிய விரிவான செய்திகள் இச்சாசனத்திலிருந்தே முதன் முதலாகத் தெரிய வருகின்றன. நெடுஞ்சடையனின் திருமண உறவுபற்றியும் வெற்றிகள்பற்றியும் இதில் குறிக்கப்பட்டு உள்ளன. இச் சாசனம் கிடைக்காமலிருந்தால் அவர்களைப் பற்றிய வரலாற்றுச் செய்திகள் பல நமக்குத் தெரியாமலே போயிருக்கும். பாண்டியர் வரலாறும் விரிவான முறையில் நமக்குக் கிடைத்திருக்காது.

இச்சாசனம் சர்வக்கிரது யாஜியான வரோதய பட்டன் என்பானால் எழுதப்பட்டது. பராந்தக நெடுஞ்சடையனால் கி. பி. 770-ல் அளிக்கப்பட்ட இந்தத் தானத்தை நிறைவேற்றுவதற்குக் கரவந்தபுரத்துவாசியான மூவேந்த மங்கலப் பேரரையன் என்பான் நியமனம் செய்யப்பட்டான். இச்சாசனத்தின் மூலப்படி (Original) இலண்டனில் பிரிட்டிஷ் அருங்காட்சியகத்தில் (British Museum) பாதுகாப்பாக வைக்கப்பட்டுள்ளது. அது எப்போது எவ்விதம் இலண்டனுக்குக் கொண்டு செல்லப்பட்டதென்பதுபற்றிய விவரங்கள் ஏதும் தெரியவில்லை.

## சீவரமங்கலச் சாசனம்

இந்தச் செப்பேட்டுச் சாசனமும் பராந்தக நெடுஞ்சடையனால் வழங்கப்பட்டதாகும். சிவரமங்கலம் என்னும் ஊர் தானமாக வழங்கப்பட்ட செய்தியினை இச்செப்பேடு குறித்தலின் இது சீவரமங்கலச் செப்பேட்டுச் சாசனம் எனும் பெயர் பெறுகின்றது. இம்மன்னன் தனது பதினேழாம் ஆட்சியாண்டில் தென்கள வழி நாட்டைச் சேர்ந்த வேலங்குடி எனும் ஊரினை சிவரமங்கலம் எனப் பெயரிட்டு சிகுமிச்ரனின் மகனை சுச்சத

பட்டன் என்பானுக்குத் தானம் வழங்கியதாக இச்செப்பேட்டின் வாயிலாக அறிகிறோம். இச் செப்பேட்டுச் சாசனம் 'சென்னை அருங்காட்சியகச் செப்பேடு-15' (Madras Museum Plate No. 15) என்னும் 'பழம் பொருள்களின் பட்டியல்' (The List of Antiquities) என்னும் நூலில் குறிக்கப்பட்டிருக்கிறது.

இச்சாசனத்தில் ஏழு செப்பேடுகள் ஒரு வளையத்தில் கோக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு செப்பேடும் 11¼" நீளமும் 4⅛" அகலமும் கொண்டதாகவுள்ளது செப்பேடுகள் 328½ தோலா எடையும், வளையம் 11¼ தோலா எடையும் ஆக மொத்தம் 339¾ தோலா எடையும் உள்ளன. இவ்வேழு செப்பேடுகளுள் முதல் ஏடும் கடைசி ஏடும் உட்புறங்களில் மட்டும் எழுதப்பட்டுள்ளன. மற்ற ஏடுகள் இருபுறமும் எழுதப்பட்டுள்ளன. இச் செப்பேடுகளின் தொடக்கத்தில் 19 வரிகளில் ஆறு வடமொழிச் சுலோகங்கள் இடம் பெறுகின்றன. இதனைத் தொடர்ந்து வட்டெழுத்தில் வரையப்பட்டுள்ள தமிழ்ச் செய்யுட்கள் இடம் பெறுகின்றன. செய்யுள் ஓசை நயமும் மோனைச் சிறப்பும் கொண்டு மிளிர்கின்றது.

**அறியப்படும் செய்திகள் :** இச்சாசனத்தின் மூலம் நெடுஞ்சடையன் வெள்ளூர், விண்ணம், செழியக்குடி, ஆயிரவேலி, அயிரூர் புகழியூர் என்னும் ஊர்களில் நடைபெற்ற போர்களில் வெற்றிபெற்ற நிகழ்ச்சிகளும், இவனது மற்ற சாதனைகளும், விருதுப் பெயர்களும் குறிக்கப்பெற்றுள்ளன. இம்மன்னன் சமரச சமய நோக்குடையவன் என்பதனையும் இச் செப்பேட்டினால் அறிய முடிகின்றது. மாறவர்மன்பற்றியும் அவனது முன்னோர்களைப்பற்றியும் அறிந்து கொள்ளவும் இச்சேப்பேடு துணை புரிகின்றது.

பாண்டியனுடைய பெரும்பணைக்காரனாகிய அரிகேசரி இச் சாசனத்தை எழுதினான் என்பதும், வண்களந்தையூரில் பிறந்தவனும் வீரமங்கலப் பேரரையனுமாகிய மூர்த்தி எயினன் என்பான் இத்தானத்திற்கு ஆணத்தியாக அமர்த்தப்பட்டான் என்பதும் இச்சாசனத்தால் அறியப்படுகின்றன. இச் செப்பேடுகள் எவ்விடத்தில் எவ்வாறு கிடைத்தனவென்பதனை அறிந்து கொள்ள இயலவில்லை.

## (சிறிய) சின்னமனூர்ச் சாசனம்

**கிடைத்த வரலாறு :** மதுரை மாவட்டத்தில் பெரியகுளம் வட்டத்திலுள்ள சின்னமனூரில் இச்செப்பேடு கிடைக்கப்

பெற்றதால் இது சின்னமனூர்ச் செப்பேடு என அழைக்கப் பெறுகிறது. ஆங்கு கிடைத்த இரு செப்பேடுகளில் இது சிறிய தாகலின் சிறிய சின்னமனூர்ச் செப்பேடு எனவும் பெயர் பெறு கின்றது. இற்றை ஏறத்தாழ எண்பத்தேழு ஆண்டுகட்கு முன்பு இவ்வூர்ப் பெருமாள் கோயிலில் மடைப்பள்ளி கட்டுவதற்காகக் கடைக்கால் தோண்டியபோது இவ்விரு செப்பேடுகளும் கிடைத்தன.

சென்னை அருங்காட்சியகத்தில் முன்பு பாதுகாப்பாக வைக்கப்பட்டிருந்த இச்செப்பேடுகள் தற்போது மைசூரிலுள்ள சாசன இலாகாவில் இருப்பதாகக் கூறப்படுகிறது.

இச் செப்பேடு முழுமையும் கிடைக்கப் பெறாமை பெருங் குறையேயாகும். இப்செப்பேட்டுச் சாசனத்தின் இடையே சில ஏடுகள் காணப்படவில்லை; காணாமற் போனது போக இப்போது இச்சாசனத்தில் மூன்று ஏடுகளே காணப்படுகின்றன. ஒவ்வொரு செப்பேடும் $8\frac{11}{12}$'' நீளமும் 3'' அகலமும் கொண் டது. இவ்வேடுகளை இணைக்கின்ற வளையமும் இதில் காணப் படவில்லை. இம்மூன்று ஏடுகளும் சேர்ந்து 51 தோலா எடை யுள்ளன. சீவரமங்கலச் செப்பேட்டினைச் செதுக்கிய பாண்டிப் பெரும் பணைக்காரன் மகனை அரிகேசரியே இச்சாசனத்தையும் வெட்டியுள்ளதால், சீவரமங்கலச் செப்பேட்டினை வழங்கிய பராந்தக நெடுஞ்சடையனே இச்செப்பேட்டினையும் வழங்கி யிருக்க வேண்டும்.

**அறியப்பெறும் செய்திகள் :** இச்சாசனத்திலும் முதலிரண்டு ஏடுகள் வடமொழியில் இயற்றப்பட்டுள்ளன. இதனைத் தொடர்ந்து தமிழ்ப்பகுதி வட்டெழுத்தினால் எழுதப்பட்டுள்ளது. சங்க காலப் பாண்டிய மன்னர்களின் பெயர்களும் அவர்களது வீரச் செயல்களும், சயந்தவர்மன் (Jayantavarman), அவனது மகன் அரிகேசரி பெயர்களும் அவர்களது வெற்றிச் சிறப்புகளும் இச்சாசனத்தில் குறிக்கப் பெற்றுள்ளன.

இத்தானத்திற்கு ஆணத்தியாக நியமிக்கப்பட்டவன் அண்ட நாட்டுக் குண்டூர்க் கூற்றத்துக் குண்டூரில் இருந்த உத்தர மந்திரி யாகிய தாயசிங்கன் என்பானாகும். இடைக்காலப் பாண்டியர் களும் பல்லவர்களைப் போன்று 'வர்மன்' என்னும் பெயர் சூட்டிக் கொண்டது ஈண்டு குறிப்பிடத்தக்கதாகும்.

## (பெரிய) சின்னமனூர்ச் சாசனம்

சின்னமனூரில் கிடைத்த இரு சாசனங்களுள் இது பெரிய தாகலின் பெரிய சின்னமனூர்ச் சாசனம் எனப் பெயர் பெற்றது. இச்செப்பேட்டுச் சாசனம் முழுமையாகக் கிடைக்கப் பெறவில்லை. ஒன்பது ஏடுகளைக் கொண்டிருந்த இச் சாசனத்தின் முதல் ஏடும் கடைசி ஏடும் நமக்குக் கிடைக்கவில்லை. இவ்வேழு ஏடுகளும் பாண்டியர் வரலாறு படைப்பதற்குப் பயனுள்ள சில செய்தி களைக் கூறுகின்றன. முதல் நான்கு ஏடுகளில் வடமொழிச் சுலோகங்கள் கிரந்த எழுத்திலும் ஏனைய ஏடுகளில் தமிழ்ச் செய்யுள்கள் வட்டெழுத்திலும் பொறிக்கப்பட்டுள்ளன.

ஒவ்வொரு செப்பேடும் ஏறத்தாழ 10" நீளமும் $3\frac{3}{8}$" அகலமும் கொண்டதாக உள்ளது. ஏழு செப்பேடுகளின் மொத்த எடை 390 தோலா என்று கணக்கிடப்பட்டுள்ளது. இச்செப்பேடு இராசசிம்மப் பாண்டியன் காலத்தில் வழங்கப்பட்டது.

**கூறும் செய்திகள் :** பாண்டியன் குலப்பெருமையை இச் செப்பேடு சிறக்கக் கூறுகின்றது. பல்கலைவல்ல சுந்தர பாண்டியன், அரிகேசரி, சடிலன், இராசசிம்மன், வரகுணன் ஸ்ரீமாறன் போன்ற பாண்டிய மன்னர்களின் பெயர்களும் அவர்களது வெற்றிகளும் இதில் குறிக்கப்பட்டுள்ளன. வரகுணப் பேரரசனின் மகன் பரசக்கரகோலாகலன், குண்ணூர், சிங்களம், விழிஞம், குடமூக்கு (கும்பகோணம்) என்னும் ஊர் களில் பெற்ற வெற்றிகளையும், பராந்தக சடையன் செந்நிலம், கரகிரி, பெண்ணாகடம் என்னும் போர்க்களங்களில் பெற்ற வெற்றிகளையும் இச்செப்பேடு செப்புகின்றது.

இச் செப்பேடுகளின் மூலம் இராசசிம்மன் உலப்பிலி மங்கலம், நைப்பூர், கொடும்பை (கொடும்பாளூர்), நாவல் என்னும் போர்க்களங்களில் அடைந்த வெற்றிகளும், இவன் விகடவாடவன், மந்தர கௌரவன் என்னும் சிறப்புப் பெயர் களைப் பெற்றிருந்த செய்திகளும் நன்கு விளக்கப்பட்டுள்ளன. இராசசிம்மன் காலத்துப் பணிபுரிந்த பல அலுவலர்பற்றியும் இச்செப்பேடு குறித்துச் செல்கிறது.

இச்செப்பேட்டில் குறிக்கப்பட்டுள்ள தானத்தைக் கொடுக் கும்படி மன்னனிடம் விண்ணப்பஞ் செய்தவன் சோழநாட்டுப் புள்ள மங்கலத்துச் சடையபிரான் பட்ட சோமயாஜி ஆவான் என்பதும், ஆணத்தியாக இருந்தவன் களவழி நாட்டு வேம் பற்றூர்க் கூற்றங்கோன் ஆவான் என்பதும் இச்செப்பேட்டினால் அறியப்படுகிறது.

## தளவாய்புரச் சாசனம்

இந்தச் சாசனம் திருநெல்வேலி மாவட்டம் கோவில்பட்டி வட்டத்திலுள்ள தளவாய்புரம் என்னும் ஊரின் புறவெளியில் அகழ்ந்தெடுக்கப்பட்டதால் தளவாய்புரச் சாசனம் எனும் பெயர் பெற்றது. ஏழு செப்பேடுகளைக் கொண்ட இச்சாசனம் பராந்தக வீரநாராயணனால் வழங்கப்பட்டது. இதிலுள்ள ஒவ்வொரு ஏடும் 18'' நீளமும் 5½'' அகலமும் கொண்டுளது. இச் செப்பேடுகளனைத்தும் ஒரு செப்பு வளையத்தில் கோக்கப் பட்டுள்ளது. இரட்டை மீன் புலி வில் ஆகிய உருவங்கள் பொறிக்கப்பட்டு, அவைகளைச் சுற்றி விளிம்பிலே வட்டமாகக் கிரந்த எழுத்தில் அநுஷ்டுப் - சுலோகம் ஒன்றும் எழுதப்பட்டு அழகாகக் காட்சி தரும் முத்திரை ஒன்றும் அதன் முகப்பில் உள்ளது.

நாம் முன்பு கண்ட செப்பேடுகளைப் போன்று இதிலும் முதல் ஏடும் கடைசி ஏடும் வெளிப்புறம் எழுதப்பெறாது உட்புறம் மட்டுமே எழுதப்பட்டுள்ளது. ஏனைய ஐந்து ஏடுகளும் இரு புறங்களிலும் எழுதப்பட்டுள்ளது. வழக்கம் போலவே இச்செப்பேடும் வடமொழி, தமிழ் ஆகிய இரு பகுதிகளைக் கொண்டுளது. இந்த இருவகை எழுத்துக்களும், பெரிய சின்னமனூர்ச் செப்பேட்டுச் சாசனத்தின் எழுத்துகளைப் பெரிதும் ஒத்திருக்கின்றன. சின்னமனூர்ச் செப்பேடுகளைப் போன்று இச் செப்பேடுகளின் வடமொழிச் சாசனத்தின் இடையிலும் சில இடங்களில் வருகின்ற தமிழ்ச் சொற்கள் வட்டெழுத்திலேயே குறிக்கப்பட்டுள்ளன. பெரிய சின்ன மனூர்ச் சாசனத்தை வழங்கிய இராச சிம்மன், இந்தச் சாச னத்தை வழங்கிய பராந்தக வீரநாராயணனின் மகன் என்பது ஈண்டு நினைவிற்கொள்ளத் தக்கதாகும்.

'ஸ்வஸ்திஸ்ரீ' எனத் தொடங்கி 'நமசிவாய' என முடியும் வடமொழிப் பகுதி அறுபத்தைந்து வரிகளைக் கொண்டு, இனிய நடை கொண்ட செய்யுளாகப் போற்றப்படுகிறது. தமிழ்ப் பகுதியும் இனிய கம்பீரமான நடையில் அமைந்த செய்யுள் களால் எழுதப்பட்டுள்ளன. பத்துப்பாட்டிலே ஆறுவதாகக் கருதப்படும் மதுரைக் காஞ்சியின் தொடக்கமாகிய 'ஓங்குதிரை வியன் பரப்பில்' என்னும் சொற்றொடரே இச்செப்பேட்டுத் தமிழ்ப் பகுதியின் தொடக்கமாகவும் உள்ளது ஈண்டு குறிப்பிடத் தக்கது.

**இயற்றியவன் :** வடமொழியிலுள்ள மன்னர் மரபுப் புகழ்ச்சியினை (பிரஸஸ்தி) ஸ்ரீ வல்லபமங்கலத்து வாசியான மாதவனும் தமிழ்ப் பகுதியிலுள்ள மன்னர் மரபுப் புகழ்ச்சியினை மார்த் தாண்டன் என்பானும், கருமார சிரேணியின் தலைவனும், பாண்டிய திரமிளாபரணன் என்னும் கவியும் இயற்றினர். தமிழில் மன்னர் மரபுப் புகழ்ச்சியுரையை (பிரஸஸ்தி) மார்த் தாண்டன் என்பானும், தமிழாபரணன் என்னும் விருதினை உடைய ஸ்ரீ வல்லபனுன பாண்டி மாராயப் பெருங்கொல்லன் எழுதினன் என்பதும், இவன் வைகுண்ட வளநாடன் என்றும் குண்டூர்வாசியென்றும் அழைக்கப்பட்டான் என்றும் இச் செப்பேடு செப்புகின்றது.

பாண்டியர் வரலாற்றைக் கணிக்க உதவும் முக்கியமான செப்பேடுகளுள் இதுவும் ஒன்றாகும். பாண்டிய மரபின் பழம் பெருமைகளையும், புராண வரலாறுகளையும் இச்செப்பேடு மிகத் தெளிவாக விளக்கிக் கூறுவதில் இச்சாசனம் முதன்மை வகிக் கின்றது. தலையாலங்கானத்து செருவென்ற பாண்டிய நெடுஞ் செழியன், கடுங்கோன், பராந்தகன், ஸ்ரீ வல்லபன் முதலான புகழ் பூத்த பாண்டிய மன்னர்களின் வெற்றிகளும் சிறப்புப் பெயர்களும் இச்சாசனத்தில் சிறப்பாகக் கூறப்படுகின்றன.

அப்பால் இச் சாசனத்தை வழங்கிய பராந்தக வீர நாரா யணின் புகழும் பெருமையும் சாதனைகளும் பரக்கப் பேசப்படு கின்றன. செந்நிலம், குன்றை, மேலைக்கொங்கு, பொக்கரணி, தென்மாயல், வெண்பை, பராந்தகம் ஆகிய போர்க் களங்களில் இவன் பெற்ற பெருவெற்றிகளும் குறிக்கப் பெற்றுள்ளன. இவனது அதிகாரிகளின் பெயர்களும் இதில் குறிக்கப்பட் டுள்ளன. இவன் தனது நாற்பத்தைந்தாம் ஆட்சியாண்டில் கரவந்தபுரத்தில் தங்கியிருந்த போழ்து இச்சாசனத்தை வழங்கினன் என்பதனையும் இச்செப்பேடு குறிக்கின்றது.

**முக்கியத்துவம் :** தளவாய்புரச் சாசனம் பாண்டியர் மரபு வழிபற்றிய சில சிக்கல்களைத் தீர்க்கப் பயன்படுவதாலும், பாண்டியர் வரலாற்றினைக் கணிக்கப் பெருந்துணை புரிவதாலும் பெரிதும் முக்கியத்துவம் வாய்ந்தது. தென் மதுராபுரி நிறுவப் பட்டதும், அங்கே சங்கம் அமைத்துத் தமிழ் வளர்க்கப்பட்டதும் இச்செப்பேட்டின் மூலமாகவே அறியப்படுகின்றது.

## சிவகாசிச் சாசனம்

இச் செப்பேட்டுச் சாசனம் பல்லாண்டு காலமாக இராமநாத புர மாவட்டத்திலுள்ள சிவகாசியில் ஒரகண்டேகனகைய

நாயுடுவின் குடும்பத்தில் இருந்து வந்தது. தற்போது தமிழ் நாட்டரசு தொல்பொருள் ஆய்வுத் துறை இயக்குநராகப் பணி புரிந்து வரும் திரு. ஆர். நாகசாமி அவர்கள் இதனைக் கண்டு பிடித்துச் சென்னை அருங்காட்சியகத்தில் வைப்பதற்குத் தக்க ஏற்பாடுகளைச் செய்தார். சென்னை அருங்காட்சியகமும் இதனைத் தக்க பாதுகாப்புடன் வைத்துள்ளது.

**அமைப்பு :** ஐந்து ஏடுகளைக் கொண்ட இந்தச் சாசனத்தின் சில பகுதிகள் உடைந்துள்ளன; இதனால் சில வரிகள் தெளிவாக நமக்குப் புலப்படவில்லை. பாண்டியர்களின் மற்றச் செப்பேட்டுச் சாசனங்களைப் போன்று இந்தச் சாசனமும் முதல் ஏடும் கடைசி ஏடும் உட்புறத்தில் மட்டுமே எழுதப்பட்டுள்ளன. வெளிப் புறம் காலியாக உள்ளது. மற்ற மூன்று ஏடுகளும் இரு புறங் களிலும் எழுதப்பட்டுள்ளன வழக்கம்போலவே இந்தச் சாசனத்திலும் சமஸ்கிருதம் தமிழ் ஆகிய இருபகுதிகள் உள்ளன. முதலில் உள்ள சமஸ்கிருதப் பகுதி கிரந்த எழுத்திலும், அடுத் துள்ள தமிழ்ப்பகுதி வட்டெழுத்திலும் பொறிக்கப்பட்டுள்ளன. இவ்விரு பகுதிகளையும் கூர்ந்து நோக்குங்கால் தமிழ்ப் பகுதியே முதலில் தயாரிக்கப்பட்ட அதிகாரப் பூர்வமான ஏடு என்பதும் அதனை ஒட்டியே சமஸ்கிருதப் பகுதி இயற்றப்பட்டிருத்தல் வேண்டுமென்பதும் தெளிவாகத் தெரிகிறது.

இந்தச் செப்பேட்டுச் சாசனத்தை வழங்கியவன் வீர பாண்டியன் ஆவான். இவன் தன் மூன்றும் ஆட்சியாண்டில் சாசனங்கள் எழுதும் வடமொழிக் கவியான பீதாம்பரன் என்பானுக்குப் பிரமதேயமாக வழங்கிய தானத்தைக் குறிக்கவே இச்சாசனம் வரையப்பட்டது. இந்தச் சாசனத்தின் மரபுப் புகழ்ச்சியுரையினை (பிரஸஸ்தி) உருகீர்த்தியின் மகனை விஷ்ணுத் நாதன் என்பான் இயற்றினன்.

பாண்டியர் குல மரபுபற்றியும், பெருமைபற்றியும், வீர பாண்டியனின் பிறப்பு, அரியணையேறல், வெற்றிகள், சிறப்புப் பெயர்கள் முதலியன இச்சாசனத்தில் விளக்கப்பட்டுள்ளன. இவன் காலத்தில் பணியாற்றிய சில அதிகாரிகளின் பெயர்களும் இச்சாசனத்தால் அறியப்படுகின்றன. இச்சாசனம் வழங்கப் பட்ட சில ஆண்டுகளுக்குப் பிறகு இவன் முதலாம் இராசாதி ராசனால் தோற்கடிப்பட்டான் என்பதும் இச்சாசனத்தால் அறியப்படுகின்றது.

**எந்த வீரபாண்டியன்? :** இச்செப்பேட்டுச் சாசனத்தை வழங்கிய வீரபாண்டியன், தனது மூன்றுவது ஆட்சியாண்டில்

இதனை வெளியிட்டிருக்கிறான் என்பதனை இச்செப்பேடு குறிக்கின்றது. ஆனால், இதில் சக ஆண்டு குறிக்கப் பெறவில்லை. எனவே இச்செப்பேட்டை வழங்கியவன், கி. பி. பத்தாம் நூற்றாண்டில் ஆட்சிபுரிந்த வீரபாண்டியனா? அல்லது கி. பி. பதின்மூராம் நூற்றாண்டில் ஆட்சிபுரிந்த வீரபாண்டியனா? என்பது உறுதியாகத் தெரியவில்லை. இதனைக் குறித்து அறிஞரிடையே கருத்து வேறுபாடு உளது.

**சோழன் தலைகொண்டவனே :** கி. பி. பத்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த வீரபாண்டியனே இச்சாசனத்தை வழங்கினானென்று கூறும் ஆராய்ச்சியறிஞர்கள், இவனது சமகாலத்தில் மாறபரணன், சுந்தரபாண்டியன் என்ற இரு பாண்டியர் ஆண்டதையும் எடுத்துக் காட்டுகின்றனர். இவ்வீரபாண்டியனே சோழ வேந்தன் ஒருவனது தலையினைப் போர்க்களத்தில் வெட்டி வீழ்த்தி 'சோழன் தலைகொண்ட வீரபாண்டியன்' என அழைக்கப்பட்டனனென்றும், அதே வீரபாண்டியனே சில காலத்திற்குப் பின்பு பரகேசரி இரண்டாம் ஆதித்த கரிகாலச் சோழனால் வெட்டப் பெற்றான் என்றும் கூறுகின்றனர். இதனால் பத்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த வீரபாண்டியனே சிவகாசிச் செப்பேட்டை வழங்கினானென்று கூறுவர்.

**ஆனையூர்க் கல்வெட்டு :** மதுரைக்கண்மையில் ஆனையூர் என்னுமிடத்தில் கிடைத்துள்ள கல்வெட்டொன்றில் வீர பாண்டியன் மாங்கல்யபுரத்திலுள்ள மானபரணன் திருமாளிகையிலுள்ள வீர கேரளன் என்னும் இருக்கையிலிருந்து கொண்டு ஆணை பிறப்பித்ததாகக் குறிக்கப்பட்டுள்ளது. இவன் சேர நாட்டு இளவரசியின் மைந்தனுவானென்று சிவகாசிச் செப்பேடு குறிப்பிடுவதனையும், இவனது இருக்கை வீரகேரளனென்று அழைக்கப்படுவதனையும ஒப்புமைப்படுத்தி 'சோழன் தலை கொண்ட வீரபாண்டியன்' என்பானே இச்செப்பேட்டினை வழங்கினானென்று திரு. கே. வி. இராமன் அவர்கள் குறிப்பிடுகின்றார். இவ்வேந்தனது தந்தை மானபரணன் என்று இச்செப்பேடு குறிப்பிடுவதனையும், இவனது அரண்மனை மானபரணன் திரு மாளிகையென்று ஆனையூர் கல்வெட்டுக் குறிப்பிடுவதனையும் திரு. கே. வி. இராமன் அவர்கள் தனது கருத்திற்கு ஆதரவாக எடுத்துக் காட்டுகிறார். ஆராய்ச்சியறிஞர் திரு. டி. என். சுப்பிரமணியன் அவர்களும் சோழன் தலைகொண்ட வீரபாண்டியனே இச்செப்பேட்டினை வழங்கியதாகப் பல ஆண்டுகட்கு முன்பே குறிப்பிட்டுள்ளார்.

**11-ஆம் நூற்றுண்டு வீரபாண்டியனே**

இச்சாசனத்தை வழங்கியவன் கி. பி. பதிஞோராம் நூற்ருண்டில் ஆட்சிபுரிந்த வீரபாண்டியனே என்பாருமுளர். சிவகாசிச் செப்பேட்டினை வழங்கிய வீரபாண்டியனுக்கு மாஞபரணன் என்ற தந்தையும் சுந்தரபாண்டியன் என்ற தமயனும் இருந்தன ரென்பது இச் செப்பேட்டால் அறியப்படுகின்றது. இப் பாண்டியர் மூவரும் ஒரே காலத்தில் வாழ்ந்தவரென்பதும் இம் மூவரும் முதலாம் இராசாதிராசன் (முதலாம் இராசேந்திர சோழனின் மகன்) என்ற சோழனுல் வெல்லப்பட்டனரென்பதும் சோழ சாசனங்களால் அறியப்படுகின்றது.

கி. பி. 1018 முதல் கி. பி. 1054 முடிய சோழப் பெருமன்னனுக வீற்றிருந்த இராசாதிராசனது சாசனத்தில் 'தென்னவர் மூவருள் மாஞபரணன் பொன்முடி ஆஞப்பருமணிப் பசுந்தலை பொருகளத் தரிந்து, வாரளவிய கழல் வீரகேரளனை முனைவயிற் பிடித்து தனதகிவாரணக் கதக் களிற்ருனுதைப் பித்தருளி, அளவில் பெரும் புகழ்ச் சுந்தரபாண்டியன் கொற்ற வெண்குடையுங் கற்றை வெண்கவரியும் சிங்காதனமும் வெங்களத் திழந்து தன் முடிவீழத் தலைவிரித் தடிதளர்ந்தோட தொல்லைய முல்லையூர்த் துரத்தி' என்று கூறப்பட்டுள்ளது.

**இராசாதிராச சோழனின் சமகாலத்தவன் :** முதலாம் இராசாதிராசன் இளவரசனுக இருந்தகாலை வீரபாண்டியனை வெற்றி கொண்டான் என்பது ஈண்டு நினைவிற் கொள்ளத் தக்கதாகும். இராசாதிராசன் கி. பி. 1018ஆம் ஆண்டு இளங்கோப் பட்டம் பெற்றமையின், இவனுல் வெல்லப்பட்ட வீரபாண்டியன் கி. பி. பதிஞோராம் நூற்ருண்டின் முற்பகுதியில் வாழ்ந்தவனென்பதும் புலனுகிறது. இவனுல் வெளியிடப்பட்ட சிவகாசிச் செப்பேடும் பதிஞோராம் நூற்ருண்டினைச் சேர்ந்ததே என்பதும் சொல்லாமல் விளங்கும்.

அடுத்து, சிவகாசிச் செப்பேட்டினை நுண்ணிதின் ஆய்வோர், அதில் அரசியல் அலுவலர் பலர் குறிக்கப் பெற்றிருப்பதனை யாவரும் அறிவர். கி. பி. பதிஞோராம் நூற்ருண்டிலும் அதற்குப் பின்னரும் வெளியிடப்பெற்ற சாசனங்களில் மட்டுமே இது போன்று அரசியல் தலைவர் பலர் குறிக்கப் பெறுகின்றனர். கி.பி. பத்தாம் நூற்ருண்டில் வெளியான சாசனங்களில் பெருவாரியான அரசியல் தலைவர் பெயர் குறிப்பிடப்பெறவில்லை.

**எழுத்தமைதி :** எழுத்தமைதியையும், தமிழ் நடையினையும் நாம் நுணுகி ஆய்ந்து பார்க்குங்கால், சிவகாசிச் செப்பேடு கி.பி.

பதினோராம் நூற்றாண்டில் இயற்றப் பெற்றதாகவே தோன்று கின்றது. கி.பி. பத்தாம் நூற்றாண்டில் இயற்றப்பட்ட சாசனங் களில் இதுபோன்ற உன்னதமான வளர்ச்சி பெற்ற மொழியினை நாம் காண்டலறிது. எனவே, சிவகாசிச் செப்பேடு கி.பி. பதினோராம் நூற்றாண்டில் வாழ்ந்த வீரபாண்டியனால் இயற்றப் பட்டதாகக் கூறலாம்.

அடுத்து இச்செப்பேட்டினைச் சோழன் தலைகொண்ட' வீர பாண்டியன் வழங்கவில்லை என்பதனை ஒரு சில சான்றுகளால் நிறுவலாம்.

1. சோழன் தலை கொண்ட வீரபாண்டியன், மானாபரணன், சுந்தர பாண்டியன் ஆகிய மூவரும் ஒரே காலத்தில் (சமகாலம்) வாழ்ந்ததாகத் தெரியவில்லை. இவர்களுக்கிடையேயான உறவு முறையும் தெள்ளிதின் விளங்கவில்லை.

சிவகாசிச் செப்பேட்டை வழங்கிய வீரபாண்டியனும், மானா பரணனும், சுந்தர பாண்டியனும் சமகாலத்தவர். மானாபரணன் தந்தையும், மற்றிருவரும் அவனது மக்களும் ஆவர். சிவகாசிச் செப்பேட்டிலும் இவ்வுறவு முறை கூறப்பட்டுள்ளது. மேலும், இவர்களது உறவு முறையும், இவர்கள் சமகாலத்தில் வாழ்ந்தவரென்பதும் இராசாதிராசனது சாசனத்தால் இனிது விளங்குகின்றது.

2. சோழன் தலைகொண்ட வீரபாண்டியன் சுந்தர பாண்டி யனுக்குப் பள்ளிப் படைக் கோயிலொன்று அமைத்தான் என்று கல்வெட்டுச் சாசனத்தால் அறியப்படுகின்றது. இதனால் சுந்தர பாண்டியன் வீரபாண்டியனுக்கு முன்பே இறந்துபட்டான னென்பது உறுதியாகிறது. ஆனால், சிவகாசிச் செப்பேட்டில் குறிக்கப்பட்டுள்ள சுந்தர பாண்டியனோ, வீரபாண்டியனது இறப்பிற்குப் பின்னரும் உயிர் வாழ்ந்திருந்தான்; வீரபாண்டியன் முதலாம் இராசாதிராசனால் கொல்லப்பட்ட பிறகும் சுந்தர பாண்டியன் உயிர் வாழ்ந்திருந்தான் என்பது சாசனத்தால் அறியப்படுகின்றது.

இச்சாசனத்தினை வழங்கிய சில ஆண்டுகளுக்குப் பின்னரே வீரபாண்டியன், முதலாம் இராசாதிராச சோழனால் வெல்லப் பட்டான் என்பதனைச் சாசனங்களிலிருந்து அறிகிறோம்.

மேற்கூறப்பட்ட சில சான்றுகளால் சிவகாசிச் செப்பேடு கி.பி. பதினோராம் நூற்றாண்டில் ஆட்சிபுரிந்த வீரபாண்டியன் என்னும் வேந்தனால் வழங்கப்பட்டதனை இனிதறியலாம். இக்

கால ஆய்வுநிலையில், நமக்குக் கிடைக்கின்ற சான்றுகளின் அடிப்படையில், இச்சாசனம் கி. பி. பத்தாம் நூற்றாண்டில் ஆட்சிபுரிந்த வீரபாண்டியனால் வழங்கப்பட்டிருத்தல் இயலாத தொன்றாகும். வேறு சான்றுகள் கிடைக்கப்பெறின் இக்கருத்து வலிமை இழக்கலாம். மாற்றவும் படலாம்.

## திருப்பூவனம் புஷ்பவனேஷ்வரர் கோயில் செப்பேடுகள்

மேற்கூறப்பெற்ற ஆறு பெருஞ் செப்பேடுகளேயன்றி பாண்டியர் காலத்தில் வேறுசில சிறிய செப்பேடுகளும் வழங்கப் பட்டன. அவற்றுள் திருப்பூவனம் புஷ்பவனேஷ்வரர் கோயில் தர்மகர்த்தாக்களின் பாதுகாப்பில் வைக்கப்பட்டுள்ள செப் பேட்டுச் சாசனங்களும் பாண்டியர்பற்றிய சில செய்திகளைத் தந்துதவுகின்றன. இச்செப்பேட்டுச் சாசனங்களில் ஸ்ரீகோச் சடையவர்மன் திரிபுவனச் சக்கரவர்த்திகள் குலசேகர தேவன் இராசகம்பீர தேவனின் (முதலாம்) (1190—1217 கி. பி.) இருபத்தைந்தாமாட்சியாண்டில், வேதங்களில் வல்ல ஆயிரத்து எண்பது பிராமணர்களுக்குத் தானமாக நிலமளிக்கப்பட்ட செய்தி குறிக்கப்பட்டுள்ளது.

திரு. கால்டுவெல் அவர்கள் இச்செப்பேடுகளை முதன் முதலாக Indian Antiquary volume VI. 142 ff-ல் வெளியிட்டார். இச்செப்பேட்டுத் தொகுதியில் உள்ள பத்து செப்பேடுகளுள் ஐந்து செப்பேடுகளே இவரால் மசிப்படத்துடன் வெளியிடப் பட்டது. பின்னர் இச்செப்பேட்டுத் தொகுதிகள் முழுமையாக மொழிபெயர்ப்புடன் திரு. பர்ஜஸ், நடேச சாஸ்திரி ஆகிய இருவராலும் (Burgess and Natesa Sastry) மேற்கூறப்பட்ட தொகுதியில் பக்கம் 21-36. எண் 23-ல் வெளியிடப்பட்டன.[1] இச்செப்பேட்டில் சுந்தரபாண்டியனைப்பற்றியும், இராமன் பல்லவரையர் என்ற அமைச்சனைப்பற்றியும் குறிக்கப்பட் டுள்ளன.

### திருப்பூவனம் புஷ்பவனேஷ்வரர் கோயில் இரண்டாவது செப் பேட்டுச் சாசனம்

இக்கோயில் தர்மகர்த்தாக்களிடம் மற்றுமொரு செப்பேடும் உள்ளது. இச்சாசனம் 'கோனேனலை கொண்டான்' (kononalai kondan) என்பானால் இராசகம்பீர சதுர்வேதி மங்கலத்துச் சபையாருக்கு வழங்கப்பட்ட ஆணையாகும். இதனைத் திரு. கால்டுவெல் அவர்கள் முதன் முதலில் இந்தியன் ஆண்டி

[1] See also Mad. Ep. Rep. 1899. PP. 14-15.

குவரியின் ஆறும் பாகத்தில் (Indian Antiquary, Vol. VI) வெளியிட்டார்; பின்னர் இச்செப்பேடு திருவாளர்கள் பர்ஜஸ், நடேச சாஸ்திரி (Sri. Burgess, Natesa Sastri) ஆகியோரால், எண் 24. பக்கம் 37–38ல் வெளியிடப்பட்டது.

**தென்காசிப் பாண்டியர் காலம்**

தென்காசி, கரிவலம்வந்தநல்லூர் ஆகிய நகரங்களைத் தலைநகராகக் கொண்டு ஆட்சிபுரிந்த பிற்காலப் பாண்டிய வேந்தர்களைப்பற்றி அறிந்து கொள்ளச் செப்பேடுகள் சில பயன்படுகின்றன. அவற்றுள் தளவாய் அக்கிரகாரச் செப்பேடுகளும், புதுக்கோட்டைச் செப்பேடுகளும், திருக்குற்றாலச் செப்பேடுகளும் குறிப்பிடத்தக்கனவாகும்.

**தளவாய் அக்கிரகாரச் செப்பேடு**

இதனை வெளியிட்டவர் வரதுங்கராம பாண்டியர் ஆவார். இச்செப்பேடுகள் சகம் 1504–இல் (கி. பி. 1582) மருகனேரி என்னும் ஊரினைச் சொக்க பண்டிதர் மகன் சந்திரசேகரன் என்னும் மருத்துவனுக்கு வழங்கியதைக் குறிப்பிடுகின்றன.[1]

சகம் 1540இல் இவ்வேந்தனால் வெளியிடப்பெற்ற செப்பேடு உதயம்பட்டர் மகன் கோவிந்தபட்டருக்கு, சிலாரிப்பட்டி என்னும் ஊரினை இவ்வேந்தன் தானமாக அளித்த செய்தியினைக் குறிப்பிடுகின்றது.[2]

தளவாய் அக்கிரகாரச் செப்பேட்டில் சடையவருமன் பராக்கிரம பாண்டியன் (கி. பி 1422–1463) சேரனைத் திருக்குற்றாலப் போரில் வென்ற செய்தி கூறப்பட்டுள்ளது.

திருக்குற்றாலத்திலுள்ள குத்தால நாதசாமி கோயிலில் காணப்பெறும் இரண்டு செப்பேடுகளைக் கொண்டு அழகன் பெருமாள் சீவல–வரகுணராம பாண்டிய குலசேகர தேவரின் ஆட்சிபற்றி அறிந்து கொள்ளமுடிகின்றது.

**புதுக்கோட்டைச் செப்பேடு**

தமிழ்நாட்டில் புதுக்கோட்டை என்னும் பெயரில் பத்துக்கும் மேற்பட்ட ஊர்கள் உள்ளன. இவண் குறிக்கப்பெறும் புதுக்கோட்டை சீவில்லிபுத்தூர் வட்டத்தில் உள்ள ஒரு கிராமமாகும். தென்காசிப் பகுதியினை ஆண்டு வந்த சீவல்லபப் பாண்டியனும்

1 T. A. S. Series Vol. 1.

2 T. A. S. Vol. I. PP. 126-133.

வரதுங்கராம பாண்டியனும் சகம் 1505 சுபானுவில் (கி.பி. 1583) செப்பேட்டுச் சாசனம் ஒன்றினை வெளியிட்டனர். இச்செப்பேடு பிற்காலப் பாண்டியரைப்பற்றிய செய்திகளைக் கூறுகின்றன. திருமலை நாயக்கரால் புதுக்கோட்டை கிராமம் அளிக்கப்பட்ட செய்தியும் இச் செப்பேட்டில் கூறப்பட்டுள்ளது. சீவல்லபப் பாண்டியனும் வரதுங்கராம பாண்டியனும் வழங்கப்பட்ட இச்செப்பேட்டினைப் புதுக்கோட்டைச் செப்பேடு என்று கூறுவதில் தவறேதுமில்லையென்று கருதுகிறேன்.

இச்செப்பேட்டுச் சுருக்கத்தினை முதன் முதலில் வெளியிட்டவர் திரு. வெங்கையா ஆவார். இவர் இதனை Epigtaphical Report for 1906. PP. 71–2ல் வெளியிட்டார்.

**அபிராம அதிவீரராமனின் செப்பேடு**

அதிவீரராமபாண்டியனின் மகனான இரண்டாம் அபிராம அதிவீரராம பாண்டியன் மூவரை வேந்தன் சாசனத்தை வெளியிட்டான். நாகம நாயக்கனின் பேரனும் பெடப்பாவின் மகனுமான ஐயன் காரப்பன் என்ற அதிகாரியின் வேண்டுகோளுக்கிணங்க, அபிராமன், மூவரை வேண்டன், சாதலேரி - ஆகிய கிராமங்களை ஒன்று சேர்த்து பெட்ட நாயக்கன்-சமுத்திரம் என்னும் புதுப்பெயரிட்டு அறுபத்தொன்பது பிராமணர்களுக்குத் தானமாக வழங்கியுள்ளான். இச்செப்பேடு தென்காசிப் பாண்டியரது காலத்தில் பணிபுரிந்த அதிகாரிகள் பலரைப் பற்றிக் கூறுகின்றது. (Rangacharya–A Topographical List of Inscriptions of the madras presidency-66: page. 1167).

## ஆய்குல மன்னர் செப்பேடுகள்

பாண்டிய நாட்டினை ஆண்டு வந்த பாண்டிய மன்னர்கள் வழங்கிய செப்பேட்டுச் சாசனங்களைப் போன்று ஆய்குல மன்னர்கள் வழங்கிய சாசனங்களும் பாண்டியர் வரலாற்றினைத் தொகுப்பதற்குப் பெருந்துணை புரிகின்றன. அவற்றுள் நமக்கு மிகவும் பயன்படுகின்ற கருநந்தடக்கனின் பார்த்திவ சேகரபுரச் சாசனம், கருநந்தடக்கனின் திருப்புறச் சாசனம், கருநந்தடக்கனின் பாலியத்துச் சாசனம், விக்கிரமாதித்திய வரகுணனின் திருநந்திக்கரைச் சாசனம் ஆகியவற்றினைப்பற்றி மட்டுமே ஈண்டு நாம் காண்போம்.

**அ. பார்த்திவ சேகர புரச் சாசனம்**

இந்தச் செப்பேட்டுச் சாசனம் கி. பி. 886ஆம் ஆண்டு சூலை மாதம் எட்டாம் தேதி வேணாட்டு ஆய்குல வேந்தனான கருநந்தடக்கன் என்பானால் அளிக்கப்பட்டது. பழைய திருவாங்கூர்

மாநிலத்தின் (சமஸ்தானம்) தலைநகரான திருவனந்தபுரத்தில் அரசாங்கத் தலைமைச் செயலகத்தில் கிடைத்த இச்சாசனம் திருவாங்கூர் மாநில புதை பொருள் ஆராய்ச்சித் துறை தலைவரான திரு. து. அ. கோபிநாத ராயர் அவர்களிடம் ஐம்பத்தேழு ஆண்டுகட்கு முன்பு ஒப்படைக்கப்பட்டன.

இந்தச் சாசனத்தில் ஐந்து செப்பேடுகள் உள்ளன. இவையாவும் சேர நாட்டில் வழக்கிலிருந்த வட்டெழுத்தினுல் எழுதப்படாது, பல்லவ நாட்டில் வழக்கிலிருந்த வட்டெழுத்தினுல் எழுதப்பட்டிருத்தல் குறிப்பிடத்தக்கதாகவுள்ளது.

இம்மன்னன் முன்சிறை என்னும் ஊர்ச் சபையாரிடமிருந்து நிலங்களைப் பெற்று, அதற்கீடாக வேறு நிலங்களையளித்து பார்த்திவ சேகரபுரம் என்னும் ஊரினையமைத்து, ஆங்கு திருமால் கோயிலையமைத்தான். இம்மன்னன் வரகுண பாண்டியனின் சம காலத்தவன் என்பதும் இவன் சிரீவல்லபன் எனவும் அழைக்கப்பட்டானென்பதும் இச்சாசனத்தால் அறியக் கிடைக்கிறது. ஆய்குல வேந்தர்களின் பெயர்களையும் அவர்களின் சம காலத்திய பாண்டிய மன்னர்களின் பெயர்களையும் இச்சாசனம் குறிப்பதால், இது வரலாற்று முக்கியத்துவம் உடையதாகும். பார்த்திவ சேகர புரத்தில் காந்தளூரில் புகழ்பெற்று விளங்கிய சாலையைப் போன்ற ஒன்றினை அமைத்து கல்வித் தொண்டாற்றிய செய்தி வரலாற்று மாணவர்களை மகிழ்விக்கும் செய்தியாகும்.

**ஆ. திருப்பறப்புச் சாசனம்**

தென் திருவாங்கூரில் கோதையாற்றின் கரையின்கண் அமைந்துள்ள திருப்பறப்பு என்னும் ஊரின் நடுவண் அமைந்து உள்ள சிவன் கோயிலில் இச்சாசனம் கிடைத்தமையின் இது திருப்பறப்புச் சாசனம் எனப் பெயர் பெறுகின்றது. இந்தச் சாசனத்தின் முதல் ஏடும் கடைசி ஏடும் கிடைத்துள்ளன. இடையிலுள்ள மற்ற ஏடுகள் காணப்பெறுமை வருந்தத்தக்கது. இவ்விரண்டு ஏடுகளும் ஒரு புறம் மட்டுமே எழுதப்பட்டுள்ளது.

முதல் ஏடு கிரந்த எழுத்தில் வடமொழியில் எழுதப்பட்டு உள்ளது. இச் சாசனம் "நமோ நாராயணு" என்னும் தொடக்கத்தைக் கொண்டுளது. பாண்டியர் வரலாற்றைக் கணிக்க இது எவ்வகையிலும் பயன்படவில்லை.

இரண்டாவது ஏடு பல்லவர் காலத்திய தமிழ் எழுத்தில் எழுதப்பட்டுள்ளது. இதில் பொறிக்கப்பட்டுள்ள தமிழ்

எழுத்துகள் மிக்க அழகுடன் விளங்குகின்றன. எழுத்துக்களின் வரிவடிவ வளர்ச்சியில் இதற்கென ஒரு தனியிடம் உண்டு. கருநந்தடக்கன், அவன் மகன் விக்கிரமாதித்திய வரகுணன் ஆகியோர்களது காலத்தில் இச்சாசனம் வழங்கப் பெற்றிருத்தல் வேண்டும்.

**இ. பாலியத்துச் சாசனம்**

பாலியத்து அச்சன் என்பான் வீட்டில் இந்தச் சாசனம் நெடுங்காலமாக இருந்ததனால் இது பாலியத்துச் சாசனம் என அழைக்கப்படுகிறது. ஐம்பத்தேழு ஆண்டுகட்கு முன்பு திரு. து. அ. கோபிநாதராவ் அவர்கள் அதனைக் கண்டெடுத்து திருவாங்கூர் தொல்லியல் வரிசையில் (Travancore Archaelogical Series) வெளியிட்டார்.

இந்தச் சாசனத்தில் இரண்டே ஏடுகள்தான் உள்ளன. முதல் ஏட்டின் முன்புறம் பொறிக்கப்பட்டுள்ள தமிழ் எழுத்து பல்லவர் ஆட்சியின் இறுதிக் காலத்திலும், சோழர் ஆட்சியின் தொடக்க காலத்திலும் வழக்கில் இருந்ததனை ஒத்திருக்கின்றது. முதல் ஏட்டின் பின்புறமும் அடுத்த ஏட்டின் இருபுறங்களும் வடமொழியில் நாகரி எழுத்தில் எழுதப்பட்டுள்ளன. இது நாகரியில் எழுதப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கதாகும். ஏனெனில், தென்னாட்டில் நாகரியில் எழுதப்பெற்ற சாசனங்கள் மிகுந்த அளவில் கிடைக்கப் பெறவில்லை.

வடமொழிப் பகுதியின் தொடக்கத்தில் புத்த பகவானுக்கும் தருமம் சங்கம் ஆகியவற்றுக்கும் வணக்கம் கூறப்பட்டுள்ளதும் குறிப்பிடத்தக்கதாகும். இச் சாசனத்தினால் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டில் வேணாட்டு ஆய்குல மன்னர் பாண்டியருக்குக் கீழடங்கியிருந்த செய்தியினை அறிய முடிகிறது.

**ஈ. திருநந்திக் கரைச்சாசனம்**

இந்தச் சாசனம் திருவனந்தபுரம் அரசுத் தலைமைச் செயலகத்தில் கிடைத்த பார்த்திவ சேகரபுரச் சாசனத்துடன் கண்டெடுக்கப்பட்டதாகும். இந்தச் சாசனம் ஒரே ஒரு ஏட்டைக் கொண்டுளது. எட்டு வரிகளைக் கொண்ட இச் செப்பேடு 14½" நீளமும 2¾" அகலமும் கொண்டுளது.

இந்தச் செப்பேட்டுச் சாசனம் விக்கிரமாதித்திய வரகுணன் என்னும் ஆய்குல வேந்தனால் வழங்கப்பட்டது. இம்மன்னன் தனது எட்டாம் ஆட்சியாண்டிலே பங்குனி மாதம், திருநந்திக்

கரை என்னும் இடத்தில் தங்கியிருந்தபோது தானம் செய்த தனை இச் செப்பேடு குறிப்பிடுகிறது.

கோக்கருநந்தடக்கனுக்குப் பின்னர் இம்மன்னன் வேணாட்டு மன்னனாகப் பதவியேற்றான் என்பது இச்செப்பேடு புலப் படுத்தும் செய்தியாகும்.

## தொல்பொருள் ஆய்வு

பண்டைய வரலாற்று முக்கியத்துவம் உள்ள இடங்களில் நிலத்தை அகழ்ந்து ஆராய்ச்சி செய்தல் தொல் பொருள் ஆய்வு எனப்படும். இந்திய நாட்டின்கண் தொல்பொருள் ஆய்வுத் துறை மிகவும் பிற்பட்ட காலத்தில்தான் தோற்றுவிக்கப் பட்டது. இருப்பினும் மிகக் குறுகிய காலத்தில் இத்துறை பல அரிய பெரிய காரியங்களைச் செய்துள்ளது. தொல் பொருள் ஆய்வின் முக்கியத்துவத்தினையறிந்து இதற்கென்று தனித்த தொரு துறையை நிறுவிய பெருமை இந்தியாவின்கண் ஆட்சி புரிந்த ஆங்கில ஆட்சியாளர்களையே சாரும். இந்தியாவின் தொன்மையான சான்றுகளை அறிந்து கொள்ள வேண்டுமென் பதில் பெரிதும் ஈடுபாடு கொண்டவர்களுள் சர். வில்லியம் ஜோன்ஸ் என்பவர் குறிப்பிடத்தக்கவராவார். இவரது பணி அளவிடற்கரியது. 'இராயல் ஏஷியாடிக் சொசைட்டி ஆஃப் பெங்கால்' (Royal Asiatic Society of Bengal) என்னும் அவை யினைத் தோற்றுவித்த வித்தகர் இவரேயாவார். இத்துறையில் இவரது அடியொற்றி இந்தியப் பழம் சாசனங்களை ஆராய்ந்து உலகிற்கு வெளிப்படுத்திய அறிஞர்களுள் திரு. பெர்குசன் (Fergusson), திரு. கன்னிங்காம் (Cunningham), பண்டாரகர் இராஜேந்திரலால் மித்ரா (Dr. Rajendralal Mitra), பண்டாரகர் பாப்தாஜி (Dr. Bapthaji) போன்றவர்கள் முன் வரிசையில் நிற்கின்றனர்.

### தொல்பொருள் துறையின் தோற்றம்

கர்சான் பிரபு (Lord Curzon 1899-1905) அவர்களது காலம் இந்தியத் தொல் பொருளாய்வு வரலாற்றின் பொற்காலமாகும். தொல்பொருள் ஆய்வுக்கெனத் தனித்ததொரு துறையினை (Archaeglogical Servey of India) கி. பி. 1870-ல் சர். அலெக் சாந்தர் கன்னிங்காம் அவர்களைப் பொது இயக்குநராகக் (Director General) கொண்டு ஏற்படுத்திய இவர் இந்தியத் தொல் பொருளாய்வு வரலாற்றில் தனித்ததொரு இடத்தினைப் பெறுகிறார். கி. பி. 1902-ல் இத்துறையின் பொது இயக்குநராக திரு. சர். ஜான் மார்ஷல் (Sir John Marshal) என்பார் நியமிக்கப்

பட்டார். இவருக்கு உதவியாக திரு. ஓஜெல், திரு. ஸ்டெயன், திரு. புளேஜ், திரு. ஸ்பூனர் ஆகியோர் அமர்த்தப்பட்டனர். இத்துறையில் திரு. பானர்ஜி அவர்களது பணியும் குறிப்பிடத்தக்கது.

**அகழ்வாய்வு செய்யப்பட்ட இடங்கள்**

இலக்கியங்களில் கூறப்பட்டுள்ள வரலாற்றுச் செய்திகளை உறுதிப்படுத்த தொல் பொருள் ஆய்வு மிகவும் பயன்படுகிறது. அரிக்கமேடு, கொற்கை, வசுவசமுத்திரம், ஆதிச்சநல்லூர், பூம்புகார், கருவூர் ஆகிய இடங்களில் மேற்கொள்ளப்பட்ட அகழ்வாய்வின் விளைவாக சங்க இலக்கியத்தில் கூறப்பட்டுள்ள செய்திகள் பல உறுதி செய்யப்படுகின்றன. இவற்றினைக் கொண்டு தமிழர், யவனர் வாணிகம்பற்றியும், தமிழகத்தின் தொழில்கள்பற்றியும், மக்கள் பயன்படுத்திய பலபொருள்கள் பற்றியும் நாம் அறிந்து கொள்ள முடிகிறது. எடுத்துகாட்டாக பாண்டியரின் துறைமுக நகரான கொற்கையில் மேற்கொள்ளப் பட்ட அகழ்வாய்வு பண்டைக் கால பாண்டிய நாட்டு மக்களைப் பற்றிய பல உண்மைகளை எடுத்தியம்புகின்றன. திருநெல்வேலி மாவட்டம், சாயர்புரத்தில் மேற்கொள்ளப்பட்ட அகழ்வாய்வில் இடைக் கற்காலக் கருவிகள் கிடைத்திருப்பதாகப் பண்டாரகர் ஏ. ஐயப்பன் கூறுகிறார்.

**கொற்கை**

தமிழ்நாட்டரசு தொல் பொருள் ஆய்வுத் துறை கி. பி. 1968 முதல் 1972 முடிய கொற்கையை அகழ்ந்து[1] ஆய்வு நடத்திற்று. இதில் கிடைத்துள்ள பொருள்களையும், எழுத்துகளையும் கொண்டு இங்கு கி. மு. 785ஆம் ஆண்டளவில் சிறந்ததொரு நாகரிகம் நிலைபெற்றிருந்ததனையறிய முடிகின்றது. ஆதிச்சநல்லூரில் தோன்றிய தமிழர் நாகரிக வளர்ச்சியின் தொடர்ச்சியினைக் கொற்கையில் காணலாம்.

கொற்கையில் கிடைத்துள்ள வரிவடிவமும் அரிக்கமேடு, உறையூர், கருவூர் ஆகிய இடங்களில் கிடைத்துள்ள வரிவடிவங்

1 தமிழ்நாட்டரசு தொல்லியல் துறையின் சார்பில் திருவாளர்கள் நடன காசிநாதன், ஆ. அப்துல் மஜீத், கு. தாமோதரன், மா. சந்திரமூர்த்தி ஆகிய நால்வரும் கொற்கையில் அகழ்வாய்வு நிகழ்த்தினர்.

இவ்வகழ்வாய்வுபற்றிய சிறப்பம்சங்கள், தமிழ்நாட்டரசு தொல்பொருள் ஆய்வுத்துறையினர் வெளியிட்டுள்ள 'Damilica' தமிழகம் முதற்தொகுதியில் காண்க. இவ்வாய்வுபற்றிய அறிக்கை (Report) வெளியிடப்பட்டால் நாம் மேலும் பல செய்திகளை அறிந்து கொள்ளலாம்.

களும் ஒன்றுபோல் காணப்படுகின்றன. இங்கு கிடைத்துள்ள பானை ஓடுகளில் இடம் பெற்றுள்ள குறியீடுகளும் முத்திரைகளும் (Stamps and Seals) சிந்துவெளியில் கிடைத்துள்ளவற்றை ஒத்திருக்கின்றன. மாறன் என்ற பெயருள்ள எழுத்துகளும், வில், அம்புக் குறியீடுகளும் இங்கே கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இவையனைத்தும் கி. மு. இரண்டாம் நூற்றாண்டினைச் சேர்ந்த தமிழ் எழுத்துகளாகும் என்று அறிஞர்கள் கருதுகின்றனர். கொற்கையில் 'அக்கசாலை' யொன்று புகழ்பெற்று விளங்கிய தென்றும், அக்கசாலை இருந்த தெரு 'அக்கசாலைத் தெரு' வென்றும், அழைக்கப்பட்டதாக அறிகிறோம். இன்றும் அங்கு பொன்றாது நின்று நிலவுகின்ற பிள்ளையார் கோயில் அக்கசாலை பிள்ளையார் கோயில் என்றே அழைக்கப்பெறுகிறது.

### கொற்கையின் வேறு பெயர்

பண்டைக் காலத்தில் கொற்கை மாநகர் 'மதுரோதய நல்லூர்' எனவும் அழைக்கப்பட்டது. இதனை 'கொற்கையாகிய மதுரோதய நல்லூர்' என்று திருச்செந்தூர்க் கல்வெட்டும், திருநெல்வேலி மாவட்டம் சீவைகுண்டம் வட்டத்திலுள்ள ஆற்றூர்க் கல்வெட்டும் குறிப்பிடுவதனாலறியலாம்.

### தொழில்[1]

கொற்கையில் கிடைத்துள்ள பொருள்களைக் கொண்டு, இங்கு சங்கறுக்கும் தொழிலும், கடல் கடந்த வாணிகமும் சிறந்து விளங்கினவென்பது புலனாகின்றது. இச்செய்திகளைத் தமிழ் இலக்கியங்களில் பரக்கக் காணலாம். இதனால் சங்க

1 சங்கியான வளையல்களையும் மணிகளையும், முத்துக்களாலான மணிகளையும் அவர்கள் அணிந்திருந்தனர். செம்பு, இரும்பு போன்ற உலோகங்களான பொருள்களும் கொற்கை அகழ்வு ஆய்வில் கிடைத்துள்ளதால், அவர்கள் மண்பாண்டங்களுடன் உலோகப் பாத்திரங்களையும் பயன்படுத்தினர் என்பது தெளிவு. இவைகளையன்றி இவர்கள் வடநாட்டுடன் கொண்டிருந்த பண்பாட்டுத் தொடர்பின் விளைவாக வ நாட்டில் புழக்கத்தில் இருந்த மண்பாண்டங்களின் (N.B.P.) பானையோடுகளையும் பயன்படுத்தினர். இதனைக் கொற்கையில் கிடைத்துள்ள பானையோடுகளால் அறியலாம். பெரும்பாலும் கறுப்பு, சிவப்பு நிற (black and red ware) மட்பாண்டங்களையே அவர்கள் பயன்படுத்தினர்.

இறந்தவர்களை அடக்கம் செய்வதற்கு அகன்ற வாயினை உடைய பக்கங்களில் கண்கள் உள்ள மிகப்பெரிய தாழிகளைப் பயன்படுத்தியுள்ளனர். சங்கறுக்கும் தொழில் இங்குச் சிறப்புற்றிருந்த போதிலும், சங்குகளை அறுக்கப் பயன்படுத்தப்பட்ட கருவிபற்றி ஒன்றும் அறிந்து கொள்ளவியலவில்லை. இதனால் அக்காலத்திய மண்பாண்ட, உலோக சங்கறுக்கும் தொழில்பற்றி அறியலாம். (திரு. அ. அப்துல் மஜீத் அவர்கள், கரூர் கல்லூரி மாணவர்களுக்கு நிகழ்த்திய பேச்சு).

இலக்கியங்களில் கூறப்பட்டுள்ள செய்திகள் புனைந்துரையல்ல; உண்மையேயாகுமென்பது தெளிவாகிறது. சாயர்புரத்தில் மேற்கொள்ளப்பட்ட அகழ்வாய்வும் பல செய்திகளைத் தந்துதவுகின்றது.

இதுகாறும் கூறியவற்றான் பண்டைக்கால மக்கள் வாழ்வு பற்றி அறிந்து கொள்ளவும். இலக்கியச் செய்திகளில் கூறப்பட்ட சில வரலாற்றுச் செய்திகளை உறுதிப்படுத்தவும் தொல் பொருள் ஆய்வு பயன்படுகின்றனவென்பதனை அறியலாம்.

## நாணயங்கள்

### நாணயத்தின் பயன்

நாணயங்கள் தொல்பொருள் ஆய்வின் ஒரு பகுதியாகவே இருப்பினும், இதனைத் தனித்துப் படித்தல் நலம் பயப்பதாகும். ஒரு நாட்டின் வரலாற்றினை அறிந்து கொள்வதற்கு நாணயங்களும் ஓரளவு துணை புரிகின்றன. நாணயங்களிற் காணப்படும் சில எழுத்துகள் நமக்குத் தருகின்ற சான்று, கல்வெட்டு, செப்பேடு ஆகியவற்றின் மூலமாகக் கிடைக்கும் வரலாற்றுச் சான்றுகளோடு பெரிதும் தொடர்புடையது. நாணயங்களின் துணை கொண்டு, அன்று ஆட்சி புரிந்த வேந்தர்களது பெயர்களையும், அவர்களது ஆட்சிக்காலம் ஆகியவற்றைப்பற்றியும் நாம் அறிந்துகொள்ள முடிகின்றது. அரசியல், ஆட்சியியல், சமயவியல், பண்பாட்டியல், பொருளாதார இயல் ஆகியவற்றின் வரலாற்றினைப்பற்றி அறிய உதவும் நாணயங்கள், காலவரையறையினைக் (Chronology) கணிக்கவும் பெருந்துணை புரிகின்றன.

### தென்னிந்திய நாணயமும், வட இந்திய நாணயமும்

பொதுவாக நாம் இந்திய நாணயங்களைப்பற்றி ஆய்வு நிகழ்த்துங்கால், தென்னிந்திய நாணயங்கள் வட இந்திய நாணயங்களைப் போன்று வரலாற்றுக்குத் தேவையான பல செய்திகளைத் தருவதில்லை என்பதனை அறியமுடியும். தென்னிந்தியாவில் பழங்கால நாணயங்கள் நமக்குப் பெருமளவில் கிடைக்கவில்லை. அவ்வாறு கிடைத்துள்ள ஒரு சில நாணயங்களிலுள்ள எழுத்துகளும் அதிகமான செய்திகளைத் தருவதில்லை. பெரும்பாலும் வேந்தர்களுடைய பெயர்களும் பட்டப் பெயர்களும் அவற்றில் பொறிக்கப்பட்டுள்ளனவேயன்றி, வெளியீட்டாண்டுகள் குறிக்கப்பெறவில்லை. மேலும் அவற்றில் காணப்படும் எழுத்துகள் செப்பமற்றதாகவும் தெளிவற்றதாகவும் உள்ளன. பண்டைய இந்திய நாணயங்களனைத்தும் உருவங்களையும், அடையாளங்களையும் மட்டுமே கொண்டு விளங்கின. கிரேக்கரின் வருகைக்குப்

பின்பே நம்நாட்டு நாணயங்களிலும் வேந்தர்களின் பெயரினையும் பொறிக்கின்ற முறை அமலுக்கு வந்தது. மாவீரன் அலெக்சாந்தரின் வருகைக்கு முன் நம் நாட்டு நாணயங்கள் ஒழுங்கற்றதாகவும் இருந்தது. அவனது வருகையால்தான் நமது நாணயங்கள் சீர்திருத்தம் பெற்றன.

**அ. பாண்டியர் நாணயங்கள்**

பாண்டிய நாட்டில் ஏராளமான நாணயங்கள் கிடைத்துள்ளன. அவற்றுள் பெரும்பான்மையானவை பிற்காலத்தைச் சார்ந்ததாகும். சங்ககாலப் பாண்டியரின் நாணயங்கள் ஒரு சிலவே நமக்குக் கிடைத்துள்ளன. இவை சதுரவடிவும், நீண்ட சதுரவடிவும் (square and rectangular) உடையனவாய், ஒரு பக்கம் இரட்டைமீனும், மறுபக்கம் யானையின் உருவத்தினையும் கொண்டு விளங்குகின்றன. இவ்வாரம்பகால நாணயங்கள் அனைத்தும் செப்புக் காசுகளேயாகும். இவைகளில் யானையின் உருவம் பொறிக்கப்பட்டிருந்த காரணத்தால்தான் இவை யானை அச்சு நாணயங்கள் என்று கல்வெட்டுகளில் குறிக்கப்பட்டன போலும். இவை பல உருவங்களில், வேறு வேறு சின்னங்கள் பொறிக்கப்பட்டு, சிறிதும் பெரிதுமாகக் காணப்படுதலின், இவை வேறு வேறு படிநிலைகளை (Denomination) கொண்டவை யென அறியலாம். இவை பெரும்பாலும் ஆரம்ப காலச் சோழர் நாணயங்களைப் போன்றுள்ளன. பின்னர் பாண்டியர் வட்ட வடிவக் காசுகளும் வெளியிட்டனர்.

மேற்கூறிய செப்புநாணயங்களேயன்றி தங்க நாணயங்களும் பாண்டி நாட்டில் கிடைத்துள்ளன. இவை ஒரு பக்கம் மீன் சின்னத்தினைக் கொண்டு, எழுத்துகள் பொறிக்கப்படாது காணப்படுகின்றன. சங்க இலக்கியங்களில் கானம், காசு என்று குறிக்கப் பெற்றிருப்பவை இவையேயாதல் வேண்டும். பல்லவர்களைப் போன்றும், சோழர்களைப் போன்றும் பாண்டியர்களும் பொன், வெள்ளி, செம்பு இவற்றாலான நாணயங்களை வெளியிட்டனர்.

பாண்டியர் காலத்தில் 'காசு, பழங்காசு' எனப் பெயர்பெற்ற நாணயங்கள் வழக்கிலிருந்தனவென்பது இரண்டாம் வரகுண பாண்டியனது கல்வெட்டுகளால புலனாகின்றது. பாண்டி வேந்தர்கள் தங்களது வெற்றிகளது நினைவாகவும், தங்களது சிறப்புப் பெயர்களின் பெயராலும் நாணயங்கள் வெளியிட்டுள்ளனர். கலியுக ராமன், கச்சி வழங்கும் பெருமாள், சமர கோலாகலன், 'எல்லாம் தலையான' கோதண்ட ராமன் போன்றவற்றை ஈண்டு நாம் எடுத்துக்காட்டாகச் சுட்டலாம்.

### ஆ. பாண்டிய நாட்டில் வெளிநாட்டு நாணயங்கள்

பாண்டிய நாட்டின்கண் வெளிநாட்டினரின் காசுகள் கிடைத்திருத்தல் வியப்பானதொரு செய்தியாகும். தினர், திரமன் ஈழக்காசு, உரோம் நாட்டு வெள்ளி, தங்க நாணயங்கள் முதலான அன்னிய நாணயங்கள் பாண்டிய நாட்டில் வழக்கிலிருந்தன. பராக்கிரமபாகு பாண்டிய நாட்டை வென்றபோது கஹபணம் (kaha-pana) என்ற ஈழக்காசு பாண்டிய நாட்டில் புழக்கத்திற்கு விடப்பட்டன.

### உரோம் நாட்டு நாணயம்

அடுத்து பொதுவாகத் தமிழகத்திலும் சிறப்பாகப் பாண்டி நாட்டிலும் உரோமானிய நாணயங்கள் அதிக அளவில் கிடைத்துள்ளன. பெரும்பாலும் இவை தமிழகத்தின் கடற்கரைகளில் கிடைத்துள்ளன. இவற்றுள் அகஸ்டஸ் நெர்வா (கி. பி. 98) என்ற உரோம நாட்டு மன்னனின் தங்கக் காசுகள் அறுபத்து மூன்று மதுரை மாவட்டத்திலுள்ள 'கலயம்புத்தூரில்' மட்டும் கிடைத்துள்ளன. உரோம நாட்டு மன்னர்களான நீரோ (கி.பி. 46)கொனேரியஸ் ஆர்க்கேடியஸ், டொமிட்டன் (கி.பி. 96) ஆகியோரது நாணயங்களும் மதுரை மாநகரின்கண் கிடைத்துள்ளன. இதன் பட்டியலைத் தமிழ்ச் சங்கம் என்னும் தலைப்பில் காணலாம்.

உரோமியக் காசுகள் தமிழகத்தில் அதிக அளவில் கிடைத்துள்ளதால், சங்க காலத்தில் தமிழகத்திற்கும் உரோமிய நாட்டிற்கும் வாணிகம் பெருமளவில் நடந்ததாகச் சங்க இலக்கியங்களிலும் மேலைநாட்டு நூல்களிலும் குறிக்கப் பெற்றுள்ள செய்தி உறுதி பெறுகிறது. பாண்டிய நாட்டின் துறைமுகமான கொற்கையில் பண்டைக் காலத்தில் நாணயங்கள் அடிக்கப் பட்டன. இங்கு ஒரு அஃகசாலையும், அஃகசாலைத் தெருவும் இருந்தது. அன்று கட்டப்பட்ட அஃகசாலைப் பிள்ளையார் கோயில் இன்றும் காணப்படுகிறது.

பழங்காலத்தில் புராணக் காசுகள் (பழைய காசுகள்) என்று அழைக்கப்படும் வெள்ளிக் காசுகள், இந்தியாவில் வட இமயந் தொட்டுத் தென்குமரி வரை, கராச்சி முதல் அசாம் வரை கண்டெடுக்கப்பட்டுள்ளது. இதுபோன்ற காசுகள் இலங்கையிலும் காணப்படுகின்றன. இவற்றை வெளியிட்ட மன்னர் யார்? என்பது புதிராகவே இருந்து வந்தது. இருப்பினும் இவை பாண்டியர் காலக் காசுகளே என்று அறிஞர் திரு. உலோவந்தான் கருத்துத் தெரிவித்தார். அண்மைக் காலத்தில்

போடிநாயக்கனூரில் எடுக்கப்பட்டுள்ள இதனைப் போன்ற வெள்ளிக் காசுகளின் பின்புறம் மீன் உருவம் பொறிக்கப்பட்டுள்ளதால் திரு. உலோவந்தான் அடிகள் (Rev. E. Loventhan) கூறியது பொருத்தமுடையதென்றே தோன்றுகின்றது.

**அன்னியராட்சி :** ஒரு நாட்டில் நிகழ்ந்த அன்னிய ஆட்சி பற்றிய செய்தியினை, அந் நாட்டில் கிடைக்கின்ற அன்னிய (அண்டை) நாட்டு நாணயங்களைக் கொண்டு அறியலாம். எடுத்துக்காட்டாகப் பாண்டி நாட்டில் சோழராட்சி, சுல்தான்களாட்சி, விஜயநகர ஆட்சி ஆகியன நிகழ்ந்தனவென்பதனை அவர்களது நாணயங்கள் பாண்டி நாட்டின் பகுதிகளில் கிடைத்துள்ளதாலறியலாம்.

இதுகாறும் கூறியவற்றான், பாண்டி வேந்தர்கள், கிறித்தவ ஊழி அரும்புமுன், நாணயங்கள் வெளியிட்டனரென்பதும், அங்கு கிடைத்துள்ள வெளிநாட்டு நாணயங்களால் அவர்கள் வெளிநாட்டுடன் வாணிகம் நடத்தினரென்பதும் தெரிகின்றது. நாணயங்களும் ஒரு நாட்டின் வரலாற்றை வரையப் பயன்படுகின்றதென்பதும் இனிது விளங்குகின்றது.

## நினைவுச் சின்னங்கள்

**நினைவுச் சின்னம் என்பது யாது?**

பண்டைய மக்களுடன் தொடர்புள்ள வரலாற்று முக்கியத்துவம் மிக்க பண்டைய பொருள்கள் அனைத்தும் நினைவுச் சின்னங்களாகும். பண்டைய மக்களின் வாழ்க்கையினைப் படம் பிடித்துக் காட்டுகின்ற இச் சின்னங்களை அரசு பாதுகாத்து வைத்துள்ளது. இவை பண்டைய மக்களின் நினைவாகவே பாதுகாக்கப்பட்டு வருகின்றது. பண்டைய நினைவுச் சின்னங்களைப் பாதுகாப்பதன் அவசியத்தை உணர்ந்த ஆங்கில ஆட்சியாளர்கள் இந்தியாவின் நினைவுச் சின்னங்களைப் பேணுவதில் நாட்டம் கொண்டனர். திரு. கர்சான் பிரபு அவர்கள் (கி. பி. 1899—1905) கி. பி. 1904-ல் 'பழம் நினைவுச் சின்னங்களைப் பேணும் சட்டம்' ஒன்றினை (The Ancient monuments preservation Act) நிறைவேற்றினர். இச் சட்டம் அமலுக்கு வந்ததன் விளைவாகப் பல நினைவுச் சின்னங்கள் அழியாது காக்கப்பட்டன.

**பாண்டியர் நினைவுச் சின்னங்கள்**

விண்ணைத் தொட்டு முத்தமிட்டுக் கொண்டிருப்பது போன்று வானளாவ நிற்கும் பாண்டியரது கோயில்கள், அகழ்வாய்வின்போது கிடைத்த கட்டடங்கள், கற்சிலைகள், செப்புப்

படிமங்கள், மண் சிலைகள், உருவங்கள், கோட்டை, அரண்மனை, அழகுபடுத்தப்பட்ட பானைகள், மணிகள், அணிகலன்கள், கருவிகள், விளையாட்டுப் பொருள்கள், சுடுமண் பொம்மைகள், நாணயங்கள் ஆகியவை நமது அரசினரால் நன்கு பாதுகாக்கப் பட்டு வருகின்றன. பாண்டியர் கால ஓவியங்கள், குடைவரைக் கோயில்கள் ஆகியவையும் இன்றும் நன்முறையில் பராமரிக்கப் பட்டுள்ளன. சிற்றண்ணவாயிலில் உள்ள ஓவியங்கள் அமிலங் களால் கழுவப் பெற்று பாதுகாக்கப்பட்டுள்ளமையை, ஈண்டு நாம் எடுத்துக்காட்டாகச் சுட்டலாம். திருநெல்வேலி மாவட்டத் திலுள்ள திலமலைப்புரம் குகைக் கோயிலில் காணப்பெறும் ஓவியங்களும் அரசினரால் நன்கு பாதுகாக்கப்பட்டுள்ளது.

**குடைவரைகள் :** இதுபோன்று திருமெய்யம், குடுமியா மலை, கழுகுமலை, திருப்பரங்குன்றம், ஆனைமலை, திருமால்புரம் ஆகிய ஊர்களில் காணப்படுகின்ற பாண்டியர் கால குடை வரைக் கோயில்களும், பல்லவர்கள் மாமல்லபுரத்தில் சமைத் துள்ள ஒற்றைக் கற்கோயிலைப் போன்று பாண்டியர் காலத்தில் உருவான கழுகுமலை என்னுமிடத்திலுள்ள வெட்டுவான் கோயிலும் இன்று அவர்களது கலைத்திறனை எடுத்துக்காட்டும் நினைவுச் சின்னங்களாக உள்ளன. இவையனைத்தும் அரசினரால் நன்கு பேணப்பட்டுள்ளன.

கொற்கை அகழ்வாய்வில் கிடைத்துள்ள பழங்காலச் சின்னங் களும், பாண்டிய நாட்டில் கிடைத்துள்ள செப்புத் திருமேனி களும், கற்சிலைகளும் சென்னை அருங்காட்சியகத்திலும் (Madras Museum) புதுக்கோட்டை அருங்காட்சியகத்திலும் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன. இதுபோல் பாண்டியர் கால நினைவுச் சின்னங்கள் அரசினரால் போற்றிப் பாதுகாக்கப்பட்டுள்ளதால் பாண்டியர் வரலாறும், தமிழக வரலாறும் தெளிவு பெறு கின்றன.

## அயல்நாட்டினரின் குறிப்புகள்

தமிழகத்திற்கு வருகை புரிந்த அயல்நாட்டினரின் குறிப்பு களும் பாண்டியர் வரலாற்றினை உருவாக்கப் பெருந்துணை புரி கின்றன. ஒரு நாட்டின் வரலாற்றினை இயற்றுவதற்குப் பிற நாட்டினரின் குறிப்புகள் நம்பத்தகுந்த சான்றுகளாக எடுத்துக் கொள்ளப் பெறுகின்றன. எனவேதான் ஆராய்ச்சியறிஞர் திரு. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியாரும் 'ஒரு நாட்டைப்பற்றியும், அதன் மக்களைப்பற்றியும் வெளிநாட்டுப் பார்வையாளர்கள் தரும் குறிப்புகள் அந்த நாட்டு வரலாற்றாசிரியர்கட்குச் சுவை பயப்பனவாக உள்ளன' என்று குறிப்பிட்டுள்ளார்.

**முக்கியத்துவம் :** பிற நாட்டினரது குறிப்புகளின் உண்மைத் தன்மை குறித்து வரலாற்றறிஞரிடையே ஒருமித்த கருத்து உருவாகவில்லை. அவர்களது சான்றுகள் முழுமையையும் நாம் உண்மையென்று அப்படியே ஏற்றுக் கொள்ள இயலாதென்று சிலர் கருதுகின்றனர். சந்திரகுப்த மௌரியரது அரசவையில் அமர்ந்திருந்த கிரேக்க நாட்டுத் தூதுவனை மெகஸ்தனிஸின் குறிப்பில் பாண்டிய நாட்டில் ஏழு வயது நிரம்பிய பெண்களும் தாயாக இருந்தனர் என்று குறிக்கப்பட்டுள்ள செய்தியும், மார்க்கோபோலோவின் குறிப்புகளில் பணம் காய்க்கும் மரங்கள் இந்தியாவில் இருந்தன என்று குறிக்கப்பட்டுள்ள செய்தியும், பொன்னைத் தோண்டி வருகின்ற எறும்புகள்பற்றிய (Gold digging ants) மேலைநாட்டினரின் குறிப்புகளில் காணப்படுகின்ற செய்தியும் நம்பத்தகுந்தவையாக இல்லை. இவை யாவும் உயர்வு நவிற்சியாகவே இருத்தல் வேண்டும். எனவே, இவர்களது குறிப்பில் கூறப்பட்டுள்ள செய்திகளை ஆய்ந்து அளவிட்டு மேற் கொள்ளுதலே அறிவுடைமையாகும்.

மேற்கூறிய குறைபாடு அயல்நாட்டினரது குறிப்புகளில் இடம் பெற்றுள்ள போதிலும் சில விஷயங்களில் உள்நாட்டுச் சான்றுகளைவிட வெளிநாட்டுச் சான்றுகளைக் கொள்வது என்றென்றும் நன்மை பயப்பதாகும். ஏனெனில் அன்னிய நாட்டினர், உள்நாட்டினரைவிடக் காய்தல் உவத்தலின்றித் தாங்கள் உணர்ந்தவற்றைக் கூறும் இயல்பினராவர்.

**கிரேக்கர், ரோமானியர்:** பாண்டிய நாட்டைப்பற்றி அன்னிய நாட்டினர் எழுதியுள்ள குறிப்புகள், நமக்குப் பல செய்திகளைத் தெரிவிப்பதோடு கவர்ச்சியுடையனவாகவும் உள்ளன. கிரேக்க ரோமானிய ஆசிரியர்கள் எழுதிய குறிப்புகளே பாண்டிய நாட்டினைப்பற்றி வெளிநாட்டினர் எழுதிய குறிப்புகளில் மிகவும் பழமையானவை என்று நாம் பொதுவாகக் குறிப்பிடலாம். அவர்கள் கி.பி. இரண்டாம் நூற்றாண்டின் இறுதி வரையில் எழுதியுள்ள குறிப்புகளைக் கொண்டு சங்க காலத் தமிழகத்தைப் பற்றி நாம் தெளிவாக அறிந்து கொள்ள முடிகின்றது. தொடக்க காலத்தில் இக்குறிப்புகள் விரிவாக இல்லாமலும், தவறான சில செய்திகளைக் கொண்டிருந்த போதிலும், நாளடைவில் தவறுகள் குறைந்து விரிவான முறையில் எழுதப்பட்டன.

**அராபியர் :** கி. பி. எட்டாம் நூற்றாண்டிலிருந்து அரபு வணிகர்கள், பயணிகள், நூலாசிரியர்கள், நிலநூல் வல்லுநர்கள் முதலியோர் எழுதிய குறிப்புகள் முக்கியத்துவம் பெறுகின்றன. பெஞ்சமின், வெனிஸ் நாட்டு வணிகனான மார்க்கோபோலோ

போன்ற ஐரோப்பியர்கள் எழுதிவைத்த குறிப்புகள் சிலவும் நமக்குக் கிடைத்துள்ளன. இவையாவும் பாண்டியர் வரலாற்றிற்கு ஒளியூட்டுவனவாக அமைந்துள்ளன. அடுத்து, பதினான்காம் நூற்றாண்டின் இறுதியில் தமிழகத்திற்கு வந்த வெளிநாட்டுப் பயணிகள், எழுத்தாளர்கள் ஆகியோருடைய தொகை வேகமாய் அதிகரித்தன.

**மெகஸ்தனிஸ் :** கிரேக்க ரோமானிய நாட்டினரைத் தமிழ் மக்கள் பொதுவாக யவனர் எனறே குறித்தனர். கிரேக்க ரோமானிய குறிப்புகளைப் பொருத்தமட்டில், மெகஸ்தனிஸ் குறிப்புகளே தமிழகத்தை நேரடியாகக் குறிக்கின்றன. அவன் பாண்டிய நாட்டினைப்பற்றி எழுதிய குறிப்புகள் வியப்பு மிக்க தாகவும் சுவை மிக்கதாகவும் உள்ளது. ஹெராக்லிஸ் என்ப வருடைய மகள் பண்டையா என்பாள் பாண்டி நாட்டினை ஆண்டுவந்தாளென்றும், அவளுக்கு ஹெராக்லிஸ் இந்தியாவின் தென்பகுதியில் கடல் வரையில் பரவியிருந்த நாட்டினை வழங்கினு னென்றும், அந்த நாடு மூந்நூற்று அறுபத்தைந்து கிராமங் களாகப் பிரிக்கப்பட்டிருந்ததென்றும், ஒரு நாளைக்கு ஒரு கிராமம் என்ற கணக்கில் எல்லாக் கிராமங்களும் முறையாக அந்த அரசிக்குத் திறை செலுத்தவேண்டுமென்றும், அவ்வாறு திறை செலுத்தத் தவறிய கிராமங்களின் திறையைத் தண்டுவதற்கு (வசூல் செய்ய) மற்ற கிராமங்கள் உதவி புரியவேண்டும் என்றும் அவர் குறிப்பிட்டுள்ளார்.

அடுத்து, 'பெரிப்ளூஸ்' என்னும் நூலினை இயற்றிய ஆசிரி யரும், மூத்த பிளினியும் (ஏறத்தாழ கி. பி. 75) டாலமியும் (கி. பி. 130) எழுதிவைத்த குறிப்புகள் தமிழக வரலாற்றினைத் தெளிவுபடுத்தப் பெரிதும் பயன்படுகிறது.

**பிளினி:** கி. பி. 79ஆம் ஆண்டில் இறந்துபட்ட பிளினியும் மெகஸ்தனிஸ் கூறியதைப் போன்றதொரு கதையினைப் பாண்டிய நாட்டின் தொடர்பாகக் கூறுகின்றூர். இவரும் பாண்டிய நாட் டினைப் பெண்ணரசி ஒருத்தி ஆண்டு வந்ததையும் அவள் பெரிய தொரு படையினைக் கொண்டிருந்ததாகவும் குறிப்பிடுகிறூர்.

**மார்க்கோபோலர் :** இத்தாலி நாட்டு வெனிசு நகரத்தைச் சேர்ந்த மார்க்கோபோலோ என்பானும் பாண்டியரது ஆட்சியின் மாட்சிபற்றியும், காயல் என்னும் துறைமுகம் அதன் வணிகச் சிறப்பு, முத்துக் குளிக்கும் தொழில் ஆகியவை பற்றியும், மக்களது சமூக, பொருளாதார வாழ்வுபற்றியும், பாண்டி வேந்தர்களின் நீதி நெறிமுறைபற்றியும் மிக விளக்க மாக எழுதியுள்ளார். இவரது குறிப்பினைக் கொண்டு முதலாம்

மாறவருமன் குலசேகர பாண்டியனது ஆட்சிபற்றிய செய்திகளை அறிந்துகொள்ள முடிகின்றது. மார்க்கோபோலோ 'இடைக்கால உலகப் பயணிகளின் இளவரசர்' என்று போற்றப் படுகின்றார்.

ஒன்பதாம் நூற்றாண்டிலிருந்து அரபுப் பயணிகளும் சில நூல் வல்லுநரும் எழுதி வைத்த குறிப்புகள் நமக்குப் பெரிதும் பயன்படுகின்றன. மிகப் பழங்காலத்திலிருந்தே இந்தியப் பெருங்கடலில் நடைபெற்ற வாணிபத்தின் பெரும்பகுதி அராபியர் கையில்தான் இருந்தது.

**இபின்-பதூதா :** அடுத்து, வடமேற்கு ஆப்பிரிக்காவைச் சேர்ந்த அரபுக்கலப்பினரான மூர் இனத்தைச் சார்ந்த இஸ்லாமியரான இபின் பதூதாவின் குறிப்புகள் பாண்டிய நாட்டில் முஸ்லிம் பற்றிய சில செய்திகளை அறிந்துகொள்ளப் பயன்படுகிறது. கி. பி. 1300-ல் டாஞ்சியரில் பிறந்த இவர் தனது இருபத்திரண்டாம் வயது முதல் ஐம்பத்திரண்டாம் வயது முடிய ஓயாமல் பல நாடுகளிலும் பயணஞ் செய்து கொண்டே இருந்தவராவர். எனவே, இவரது குறிப்புகள் ஏனையோரது குறிப்புகளைக் காட்டிலும் பயனுடையதாக உள்ளது. மதுரையில் ஆட்சி புரிந்து வந்த கியாதுடீன் சுல்தானுக்கும் (கி. பி. 1341—42) போசள வேந்தனை மூன்றாம் வீர பல்லாளனுக்கும் நிகழ்ந்த போர் பற்றியும், கியாதுடீனின் அட்டூழியங்கள்பற்றியும், பாண்டிய நாட்டு மக்கள் வாழ்வுபற்றியும் இவர் எழுதியுள்ள குறிப்புகள் பாண்டிய நாட்டு வரலாற்றினைச் செம்மையான முறையில் உருவாக்கப் பயன்படுகிறது. இவன் மதுரை மாநகரின்கண் சிலகாலம் தங்கியிருந்தானென்பதும், சுல்தான் கியாதுடீனுக்கு மைத்துனனென்பதும், இவனது குறிப்புகள் காய்தல் உவத்தலின்றி நன்முறையில் எழுதப்பட்டுள்ளதென்பதும் ஈண்டு குறிப்பிடத்தக்கதாகும்.

**சீனப் பயணியர் :** கி. பி. ஏழாம் நூற்றாண்டில் தமிழகத்திற்கு வருகை தந்த யுவான் சுவாங் என்னும் சீனப் பயணி மதுரைக்கருகில் அசோகப் பெருமன்னனால் கட்டப்பட்ட விகாரத்தையும், பள்ளியையும் கண்டதாகக் குறித்துள்ளான். இதனால் பாண்டியரின் சமய வாழ்வு புலனாகின்றது.

**இலங்கை வரலாற்று நூல்**

மேற்கூறிய குறிப்புகளேயன்றி, இலங்கை வரலாற்று நூலான 'மகாவம்சம்' 'தீபவம்சம்' போன்ற நூல்களும் பாண்டியர் வரலாற்றினைப்பற்றிய பல அரிய செய்தியினைக்

குறிக்கின்றது. இந்நூல் ஈழ பாண்டிய உறவுபற்றியும், ஈழ பாண்டிய போர்களைப்பற்றியும் கூறுவதோடு சில பாண்டி வேந்தர்களது ஆட்சிக்காலத்தைக் கணிப்பதிலும் உற்ற துணையாக, ஊன்றுகோலாக உள்ளது. இரண்டாம் இராசசிம்ம பாண்டியன், சடையவருமன் குலசேகர பாண்டியன், சடையவருமன் வீரபாண்டியன், முதலாம் மாறவருமன் குலசேகர பாண்டியன் போன்ற வேந்தர்கள் ஈழத்துடன் கொண்டிருந்த நட்பும், பகையும் 'மகாவம்சம்' என்னும் நூலில் நன்கு விளக்கப்பட்டுள்ளன.

## நாடோடி இலக்கியங்கள்

ஒரு நாட்டின் வரலாற்றினை உருவாக்குவதில் நாடோடி இலக்கியங்களும் சில செய்திகளைத் தந்துதவுகின்றன. வாழையடி வாழையாக மக்களிடையே வழங்கி வந்த உண்மை நிகழ்ச்சிகளே நாடோடி இலக்கியங்களாக உருவெடுத்தன. நாடோடி இலக்கியங்கள், வரலாற்றினைக் கணிக்கப் பெரிதும் பயன்படுகின்றனவென்பதனை உறுதிப்படுத்துவதற்கு, சோட்டா நாகபுரியின் வரலாற்றிற்கு நாடோடி இலக்கியங்கள் பெரும்பாலும் பயன்பட்டதனை ஈண்டு நாம் எடுத்துக்காட்டாகச் சுட்டலாம்.

மக்களிடையே வழங்கி வந்த பல நாட்டுப் பாடல்கள் தொகுக்கப் பெற்று, நூல் வடிவில் வெளிவந்துள்ளன. சில பாடல்கள் இன்னும் தொகுக்கப் பெறாது மக்களிடையே நிலவி வருகின்றன. பாண்டி நாட்டின் பகுதிகளிலும், கொங்கு நாட்டின் பெரும் பகுதிகளிலும் இன்னும் 'பொன்னர் சங்கர்' கதை நாட்டுப் பாடல் வடிவில் நிலவி வருவதனையும், மதுரை மாவட்டத்தில் வீரபாண்டிய கட்டபொம்மன், காளையேறும் வீர விளையாட்டு, வருணபகவான் வழிபாடு போன்றவைபற்றிய நாட்டுப் பாடல்கள் நிறைந்துள்ளதனையும் ஈண்டு நாம் எடுத்துக் காட்டலாம்.

### தாலாட்டுப் பாடல்

தாலாட்டுப் பாடல்களும், ஒப்பாரிப் பாடல்களுங்கூட நாட்டுப் பாடல்களில் சேர்க்கப்படலாம். தாலாட்டுப் பாடல்களும் சில சமயங்களில் பழங்கால நிகழ்ச்சிகளைப் பின்னணியாகக் கொண்டுள்ளன. நம் தமிழகத்துத் தாய்மார்கள் பாடுகின்ற தாலாட்டுப் பாடல்களும் இனிமையான தமிழில் அமைந்து சில வரலாற்றுச் செய்திகளைச் செப்புகின்றன. இத் தாலாட்டுப் பாடல்களைக் கொண்டு பழந்தமிழரின் பண்பாட்டினையும், சமூக,

பொருளாதார வாழ்வினையும் படம் பிடித்துக் காட்டுவதாக அமைந்துள்ளன. எடுத்துக்காட்டாக ஒரு பாடலை மட்டும் ஈண்டு காண்போம்.

'ஆராரோ ஆரிரரோ
ஆராரோ ஆரிரரோ
ஆறே பெருகிவர
அலைகடலும் பொங்கி வர
அலைகடலின் கரையினிலே
அராபிய கப்பல் வரும்—அதில்
அழகான குதுர வரும்—அது
ஆயிரம் வெலை மதிச்சி
ஆணிமுத்து வாங்கிப் போகும்
ரெண்டு கப்பல் கொடிபிடிக்க
ரெட்டை மச்சம் அசைஞ்சு வர
லகுவாக எடுத்த முத்தோ
எளவரசே கண்ணுறங்கு
கொற்கைத் தொறை முகத்தில்—கண்ணே நீ
கொண்டு வந்த கெட்டி முத்தோ
குலசேகர பட்டினத்தில்—கண்ணே நீ
குளிச்சு எடுத்த முத்தோ
தூத்துக்குடித் தொறை முகத்தில்—கண்ணே நீ
துணிஞ்சு எடுத்த முத்தோ
வங்காளக் கடலிலே—கண்ணே நீ
வாரி வந்த நல்ல முத்தோ
வீதி பெரு வழியில்—கண்ணே நீ
வித்து வந்த வங்க முத்தோ
ரோமாபுரி தேசத்திலே—கண்ணே நீ
ரோந்து வந்த பாண்டி முத்தோ
தென்மதுரை வீதியிலே—கண்ணே நீ
தெரிந்தெடுத்த நல்ல முத்தோ
முன்னூறு முத்திலே—கண்ணே நீ
மூழ்கி எடுத்த முத்தோ
நானூறு முத்திலே—கண்ணே நீ
நடந்து வந்த நல்ல முத்தோ
ஐநூறு முத்திலே—கண்ணே நீ
அஞ்சாம வந்த முத்தோ
அறநூறு முத்திலே—கண்ணே நீ
அழகாக வந்த முத்தோ
எழுநூறு முத்திலே—கண்ணே நீ

எழிலாக வந்த முத்தோ
மூணு கப்பல் கொடி பிடிக்க
முத்துக் கப்பல் ஓடிவர
மூழ்கி குளிச்சி முத்தெடுக்கும்
மூத்தவனே கண்ணுறங்கு
அத்தை அடிச்சாளோ
அனிச்சம் பூச் செண்டாலே
அம்மான் அடிச்சானோ
ஆணி முத்துச் சரத்தாலே
அடிச்சாரை சொல்லியழு
ஆக்கினையும் செஞ்சிடுவோம்
பாட்டி அடிச்சாளோ
பால் முத்துச் சரத்தாலே
பாண்டியரே உன் மாமன்
பாலகனே கண்ணுறங்கு' [1]

மேற்கூறிய பாடல் திருநெல்வேலி மாவட்டம் ஏரல் பகுதியில் மக்களிடையே இன்றும் நிலவி வருகிறது. ஏரல் பகுதி கடற்கரையை ஒட்டி அமைந்துள்ள நெய்தல் நிலப்பகுதியாகும். ஏரல் பகுதி மட்டுமின்றி காயல்பட்டினம், முக்காணி, தூத்துக்குடி ஆகிய பகுதிகளிலும் முத்துக் குளித்தலே முக்கியமான தொழிலாகும். தாலாட்டுப் பாடும் பெண்கள் தமது பகுதிகளின் சிறப்பையும், தொழிலையும் வைத்துப் பாடுதல் வழக்கமாகும். இவ்வழக்கினைப் பின்பற்றியே இப்பாடலிலும் முத்துக் குளித்தலும், வெளிநாட்டு வாணிபமும் சிறந்த முறையில் சித்திரிக்கப் பட்டுள்ளன.

**பாடலின் கருத்து:** கி. பி. இரண்டாம் நூற்றாண்டில் வாணிகத்தில் சிறந்து விளங்கிய கொற்கைப் பட்டினத்தையும், கி. பி. பன்னிரண்டு பதின்மூன்றாம் நூற்றாண்டுகளில் தலை சிறந்து விளங்கிய குலசேகரப்பட்டினத்தையும், இருபதாம் நூற்றாண்டில் இணையற்று விளங்கிய தூத்துக்குடித் துறை முகத்தையும் அங்கு நிகழ்ந்த வாணிகத்தினையும் இப்பாடல் நன்கு விளக்குகின்றது. இப்பாடல் கி. பி. பதினாறாம் நூற்றாண்டிற்குப் பின் தோன்றியிருக்கலாம் அல்லது பழங்காலத்தில் இருந்தே மக்களிடையே நிலவி வந்திருக்கலாம் தூத்துக்குடியின் சிறப்பும் இதில் கூறப்பட்டிருத்தலின் இருபதாம் நூற்றாண்டில் இப்பாடல் தோன்றியதாகவும் கொள்ளலாம். இதன் காலம்

[1] மா. சந்திரமூர்த்தி; 'தாலாட்டும் தாயக வரலாறும்', 'கல்வெட்டு' இதழ்.

யாதாக இருப்பினும் மக்களிடையே பண்டைய சிறப்பு மிக்க சில நிகழ்ச்சிகள், மக்களிடையே பாடலாக வழி வழியாகப் பாடப்பட்டுள்ளனவென்பது போதரும். சங்க இலக்கியச் செய்திகளும், இப்பாடலால் குறிப்பிடப்பட்டுள்ள செய்திகளும் ஒத்திருப்பது ஈண்டு குறிப்பிடத்தக்கதாகும். அராபியரின் குதிரை வாணிகம்பற்றிய செய்திகள் இப்பாடலில் இடம் பெற்றிருப்பதும் பாராட்டத் தக்கதொன்றாகும்.

**ஐவர் ராசாக்கள் கதை:** அடுத்து, நாட்டுப் பாடல் தொகுதியில், மதுரைப் பல்கலைக்கழகத்தார் அண்மையில் பதிப்பித்துள்ள 'ஐவர் ராசாக்கள் கதை' பாண்டிய வரலாற்றினைச் சமைப்பதில் துணை புரிகின்றது. இந்நூல், குலசேகர பாண்டியனின் பிறப்பு, போர்ச் செயல்கள், நாட்டியப் பெண்ணை நாடியது, வள்ளியூரில் கோட்டையமைத்தது, இறப்பு போன்ற செய்திகளை விளக்கமாகக் கூறுகிறது. இந் நாட்டுக் கதைப் பாடல் குலசேகர பாண்டியனது வரலாறுபற்றிய சில செய்திகளைத் தெள்ளத் தெளியக் கூறுகின்றது. இப்பாடலில் கூறப்பட்டுள்ள செய்திகள் சில, கல்வெட்டுச் சான்றுகளால் உறுதி செய்யப்படுகின்றதென்பதனை அறிந்து கொள்ளும் போதுதான் நாட்டுப் பாடல்கள் எவ்வாறு பல உண்மை நிகழ்ச்சிகளைத் தன்னகத்தே கொண்டுளது என்பது தெரிகிறது. இதனை விளக்குவதற்கு ஒரே ஒரு எடுத்துக்காட்டினை மட்டுமாவது ஈண்டு நாம் காணுதல் நலம் பயப்பதாகும்.

'ஐவர் ராசாக்கள் கதையின்' இருநூற்றுப் பதினைந்தாவது வரியில் (215) இக்கதையின் பாட்டுடைத் தலைவன் 'இறந்தகால எடுத்த பெருமாள்' என்றும், இருநூற்றி எண்பத்து மூன்றாவது (283) வரியில் 'வல்லப மாறன்' என்றும் போற்றப் பெற்று உள்ளான். இதனைக் கொண்டு மேற்கூறிய இரு பட்டப் பெயர்களையும் இவன் தாங்கியிருந்தான் என்பது புலனாகின்றது. சீவல்லபனுடைய மூன்றும் ஆட்சியாண்டில் வெளியிடப்பெற்ற கல்வெட்டொன்றில், இவ்வேந்தன் 'சடைய வருமன்' என்றும். 'இறந்த காலம் எடுத்த பெருமாள்' என்றும் குறிப்பிடப் பெற்றுள்ளான்.

**வீணாதி வீணன் கதை:** இக் கதையில் குலசேகர பாண்டியனின் ஆட்சிக் காலத்திய சில செய்திகள் கூறப்பட்டுள்ளன.

இதுகாறும் கூறியவற்றான் நாடோடிப் பாடல்களும் ஒரு நாட்டின் வரலாற்றினைத் தொகுக்க, சில ஆதாரங்களைத் தன்னகத்தே கொண்டுள்ளதென்பது இனிது விளங்குகின்றது.

## கன்ன பரம்பரைக் கதைகளும் புராணங்களும்

திட்டமாக வரையறுக்கப்பட்ட எல்லைக் கோட்டிற்குள் அமைந்ததாகி, உண்மைகளை முறையாக விளக்குவதே வரலாறு ஆகும். நாம் வரலாற்றுக்கு முற்பட்ட நிகழ்ச்சிகளின் உண்மைகளையும் அறிந்து கொள்ள வேண்டுமெனின் கன்ன பரம்பரைக் கதைகளையும் புராணங்களையும் நாட வேண்டியுளது. அவற்றை நாம் முழுமையாக ஏற்றுக் கொள்ள முடியாது. அவற்றிலுள்ள ஒரு சில நிகழ்ச்சிகளை மட்டும் நாம் ஆய்ந்து பார்த்து அதன் மெய்ம்மையைத் தேர்ந்தெடுத்துக் கொள்வதில் தவறில்லை. இராமாயணம், மகாபாரதம், திருவிளையாடற் புராணம், கந்தபுராணம், செங்கோன்தரைச் செலவு, பதினெண் புராணங்கள் போன்ற இன்னோரன்ன கதைகள் இதிலடங்கும்.

'இராமாயணம் போன்ற காவியங்கள் வரலாற்று மூலங்கள் ஆக மாட்டா என்பது வரலாற்றறிஞர் திரு. வின்சென்ட் ஸ்மித்[1] அவர்களது கருத்தாகும். இருப்பினும் இதனை நாம் பன்னெடுங்காலமாக மக்களிடையே வழக்கிலிருந்த கதையாகக் கொள்ளலாம். இதுபோல தமிழகத்தின் மூலைமுடுக்குகளில் பல கதைகள் வழங்குகின்றன. பண்டாரகர், வின்டர்னிடஸ் போன்றவர்கள் காவியங்களைச் சிறந்த ஆதாரமாகக் கொண்டனர். 'அரசியல் வரலாற்றை அறிந்து கொள்வதற்குப் புராணங்கள் தக்க சான்றுகள்' என்ற கருத்தினைப் பண்டாரகர் திரு. வின்டர்னிட்ஸ் என்பார் தெரிவித்தார். புராணங்களையும், கன்ன பரம்பரைக் கதைகளையும் நாம் வரலாற்றில் ஏற்றுக்கொள்ளுவதா? தள்ளுவதா? என்பது குறித்து அறிஞர்களிடையே கருத்து வேறுபாடு நிலவுகின்றது. இருப்பினும் இச்செய்திகளை ஆய்ந்து பார்த்து, மற்ற சான்றுகளுடன் தொடர்புபடுத்திப் பார்த்து, நமக்குத் தேவைப்படும் செய்திகளை மட்டும் நாம் எடுத்துக் கொள்ளுதல் நலம் பயப்பதுவேயாகும்.

பாண்டிய நாட்டில் நிகழ்ந்த முஸ்லிம் படையெழுச்சிபற்றிய சில செய்திகளை அறிந்து கொள்ள 'பிரபண்ணுமிர்தம்' என்னும் வடமொழி நூலும், 'ஆச்சாரிய சூக்தி முக்தாவளி' என்ற தெலுங்கு நூலும் வெகுவாகப் பயன்படுகின்றன.

## நில அமைப்பு முதலியன

நாம் மேற்கூறிய ஆதாரங்களேயன்றி வேறு சில அம்சங்களும் வரலாற்றினை உருவாக்கப் பெருந்துணை புரிகின்றன.

[1] 'The Oxford History Of India' PP. 30-31.

அவற்றுள் நில அமைப்பும் தோற்ற வளர்ச்சியும், அப்பரப்பில் உயிரும் மக்களும் வாழ்ந்த வரலாறும், தாவரங்களும் நமக்குப் பண்டைய வரலாற்றினை உருவாக்குவதில் ஓரளவுக்குத் துணை புரிகின்றன.

மேற்கூறியவற்றான், வரலாறு என்னும் அழியாத வீடு, கால வரையறை என்னும் அடிப்படையில் (foundation) இலக்கியம் என்ற சாந்தாலும், வெட்டெழுத்துச் சாசனங்கள் என்ற செங்கல்லாலும், வெளிநாட்டினர் குறிப்பு என்னும் மரத்தாலும், தொல்பொருள் ஆய்வு என்னும் இரும்புக் கம்பிகளாலும், நினைவுச் சின்னங்கள் என்னும் ஓடுகளாலும், பழைய நாண யங்கள் என்ற சுண்ணும்பினுலும், நாடோடி இலக்கியங்கள், நில அமைப்பு முதலிய வண்ணங்களாலும் கட்டப்பெற்றுள்ளன வென்பது இனிது விளங்கும்.

## வரலாற்றுப் பெட்டகங்கள்

இவ்வாறு பலவிதமான ஆதாரங்கள் வரலாற்றினை உருவாக்க நமக்குப் பயன்படுகின்ற போதிலும், அவற்றினைத் தேடிப் பிடித்துத் தொகுத்தல் என்பது எளிமையான செயல் அன்று. ஆங்காங்கே பலவிடங்களில் சிதறிக் கிடக்கின்ற வரலாற்றிற் கான ஆதாரங்களனைத்தையும் ஒன்று திரட்டி அவற்றினை முறைப்படி வகுத்தும் தொகுத்தும் வைத்தல் வேண்டுமென்ற எண்ணத்தினுல்தான் இந்திய அரசும் மாநில அரசுகளும் சில நிறுவனங்களை நிறுவி, நற்பணியாற்றி வருகின்றன. இவ்வாறு இந் நிறுவனங்களில் பாதுகாப்பாக வைக்கப்பட்டிருக்கும் ஆதாரங்களின் துணை கொண்டே வரலாறு உருவாகி வரு கின்றது. நமது அண்டை மாநில நகரான மைசூரில் இந்தியக் கல்வெட்டு ஆராய்ச்சிக் கழகம் ஒன்று நிறுவப்பட்டுள்ளது. இக் கழகம் தன்னுலியன்றவரை வரலாற்றிற்குப் பெருந்துணை புரிந்து வருகின்றது. தமிழக வரலாறுபற்றியும், பாண்டியர் வரலாறு பற்றியும், அறிந்து கொள்ளத்தக்க ஆயிரக்கணக்கான வெட்டெழுத்துச் சாசனங்களின் மூலங்கள், ஆங்கு தொகுத்து வைக்கப்பட்டுள்ளன. அவை சிறிது சிறிதாகத் தொடர்ந்து அச்சிடப் பெற்று, வெளிவந்து கொண்டிருக்கின்றன. இன்னும் வெளியிடப் பெருமல் குவிந்து கிடக்கின்றவையனைத்தும் அச்சிடப்பெற்று, வெளிவந்து விட்டால் பாண்டிய வரலாற் றிலும், தமிழக வளர்ச்சியிலும் பல சிக்கல்கள் தீர்க்கப்பட்டு விடும். இதனைப் போன்று ஒவ்வொரு மாநிலத்திலும் 'தொல் பொருள் ஆய்வுத்துறை' என்ற நிறுவனம் நிறுவப்பெற்று அரும்

பணியாற்றி வருகின்றது. இத்துறையினர் தமது மாநிலங்களில் கிடைத்துள்ள வெட்டெழுத்துகளையும் நினைவுச் சின்னங்களையும் பாதுகாத்து வைத்து வரலாற்றில் ஆராய்ச்சியினை நிகழ்த்தும் அறிஞர் பெருமக்களுக்கு வழங்கி வருகின்றனர்.

**தொல்பொருள் ஆய்வுத்துறை:** நம் தமிழ்நாட்டு அரசுத் தொல்பொருள் ஆய்வுத் துறையும், அரசின் நல்லாதரவுடன் திறமையாகச் செயல்பட்டு வருகிறது. இத்துறையினர் பல பகுதிகளிலுமுள்ள கல்வெட்டுகளையும், நடுகற்களையும், பழஞ் சுவடிகளையும், செப்பேட்டுச் சாசனங்களையும் படியெடுத்து வெளியிட்டு வருகின்றனர். 'கன்னியாகுமரி மாவட்டக் கல் வெட்டுகள்' 'செங்கம் நடுகற்கள்' 'தஞ்சை பெரிய கோயிற் கல்வெட்டுகள்' போன்ற வெளியீடுகளும், 'கல்வெட்டியல்' 'பூம்புகார்' 'Hero stones' 'தமிழகக் கோயிற்கலைகள்' 'கல்வெட்டு ஓர் அறிமுகம்' 'மாமல்லபுரம்' என்னும் நூல்களும், 'தமிழிகா' 'கல்வெட்டு' என்னும் ஆண்டிதழ், காலாண்டிதழ் போன்ற இதழ்களும் தமிழ்நாட்டரசின் தொல்பொருள் ஆய்வுத் துறை யின் அரிய முயற்சியால் முகிழ்ந்தவையேயாகும். மேலும் இத் துறை மாவட்ட வாரியாகக் கல்வெட்டுகளைத் தொகுத்து வெளியிட முயற்சித்து வருவதும், பழம் பொருட் சின்னங்களைப் பாதுகாத்து வருவதும், கோடைகாலத்தில் 'கல்வெட்டுப் பயிற்சி வகுப்புகளை' நடத்தி வருவதும் போற்றுதற்குரிய செயல்களேயாகும்.

நமது மத்திய அரசு தொல் பொருள் ஆய்வுத் துறையும் இத்துறையில் பல செயற்கரிய செயல்களைப் புரிந்து வருகிறது. கல்வெட்டுத் தொகுதிகளை வெளியிடுவதுடன் கல்வெட்டு ஆண்டறிக்கையும் (ஆண்டுதோறும்) வெளியிட்டு வருகின்றது. இத்துறையில் திரு. கே. ஜி. கிருட்டிணன், திரு. கே. வி. ராமன், திரு. கே. சவுந்தரராஜன், திரு. சர்க்கார் ஆகியோரது பெரு முயற்சிகள் பெரிதும் பாராட்டத்தக்கவையாக உள்ளன. தற்போது மாவட்டந்தோறும் பதிவு அலுவலர்கள் (District Registration Officers) நியமிக்கப்பட்டு கோயில் கலைக் கருவூலங்கள் அனைத்தும் பதிவு செய்யப்பட்டு, களவு போகா வண்ணம் பாதுகாக்கப்பட்டு வருகின்றன; கோயில்களும் நன்கு பராமரிக்கப்பட்டு வருகின்றன.

**ஆவணக் காப்பகம்:** அடுத்து மாநிலங்களும், மத்திய அரசும் 'ஆவணக் காப்பகம்' வைத்து ஆவணங்களைக் காத்து வருகிறது. இவற்றுள் சென்னை எழும்பூரில் உள்ள ஆவணக் காப்பகமும் (Madras Archives), டெல்லியிலுள்ள இந்திய

ஆவணக் காப்பகமும் (Indian Archives) குறிப்பிடத்தக்கதாகும். ஆங்கிலேயர் இந்தியாவில் காலடி எடுத்து வைத்து, கிழக்கிந்தியக் கம்பெனியை நிறுவிய பின்பு நிகழ்ந்த நிகழ்ச்சிகளும், கடிதத் தொடர்புகளும் இங்கு சேர்த்து வைக்கப்பட்டுள்ளன. இங்குள்ள ஆவணங்களைக் கொண்டு இன்றைய தமிழ்நாட்டு வரலாற்றைச் செம்மையாக உருவாக்க முடியும். இருப்பினும் பாண்டியர் வரலாற்றைப் பொருத்தமட்டில் ஆவணக் காப்பகம் நமக்குப் பயன்படுவதில்லை. இவ்வரலாற்றுப் பெட்டகங்களேயன்றி, பல்கலைக்கழக நூலகங்களில் தொகுத்து வைக்கப் பெற்றுள்ள வரலாற்றுச் சான்றுகளும் வரலாறு படைப்பதில் நமக்குத் துணைபுரிகின்றன.

மேலே கூறப்பட்ட பழமையான ஆதாரங்களை அடிப்படையாகக் கொண்டு பாண்டியரது வரலாறு எழுதப்பட்டு வருகிறது. இந்நூற்றாண்டின் தொடக்க காலத்தில் நம்மிடையே வாழ்ந்து, மறைந்த பேரறிஞர்களான திருவாளர்கள் கே. வி. சுப்பிரமணிய அய்யர், வெங்கய்யா, கிருஷ்ண சாஸ்திரி, டி. ஏ. கோபிநாதராவ், கீல்ஹார்ன், எல். டி. சாமிக்கண்ணுபிள்ளை முதலானோரின் கல்வெட்டாய்வுப் பணி பாண்டியர் வரலாறு எழுதப்புகுவார்க்குக் கலங்கரைவிளக்கமாக அமைந்துள்ளன. தமிழுலகம் என்றென்றும் இவர்களுக்குக் கடமைப்பட்டுள்ளது.

முதன்முதலில் தொடர்ச்சியானதொரு 'பாண்டியர் வரலாறு' என்னும் நூலினைத் தொகுத்தளித்த பெருமை திரு. கே. வி. சுப்பிரமணிய அய்யர் (K. V. Subramanya Aiyer) அவர்களையே சாரும். 'பழமையான தக்கண நாட்டின் வரலாற்றுக் குறிப்புகள் (முதல் பாகம்) (Historical sketches of Ancient Dekhan, Vol. I. 1917) என்னும் நூலில்தான் இவர் இவ்வரலாற்றினை வெளியிட்டார். இதன் பின்னர் தென்னிந்திய வரலாற்றறிஞர் திரு. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியார் அவர்கள் 1929-ல் 'பாண்டியரின் அரசு' (The pandyan Kingdom, 1929) என்னும் சிறப்புமிக்க வரலாற்று நூலை ஆங்கிலத்தில் எழுதினார். 'தென்னிந்திய வரலாறு' (The History of South India) என்ற நூலும் இவரால் பின்னர் எழுதப்பட்டது. இவை தமிழக வரலாற்றில் புதிய ஒளியைப் பாய்ச்சின. இவரால் ஆங்கிலத்தில் எழுதப் பட்டுள்ள வரலாற்று நூல்கள் பாண்டியர் வரலாறு சமைக்க முன்னோடியாக அமைந்துள்ளன.

பாண்டியர் வரலாறுபற்றிய புத்தகம் ஒன்றினை முதன் முதலில் தமிழில் எழுதும் முயற்சியினை மேற்கொண்ட பண்டிட் ஹரிஹர அய்யர் (Pandit Harihara Iyer) பாராட்டுக்குரியவர்

ஆவார்.[1] இருப்பினும் தமிழில் சிறந்ததொரு பாண்டியர் வரலாற்று நூலை இயற்றி, வெற்றி கண்டவர் கல்வெட்டறிஞர் திரு. தி. வை. சதாசிவ பண்டாரத்தார் ஆவார் (1940).

அடுத்து, பாண்டியர் வரலாற்றுத் தொடர்புடைய கல்வெட்டுகளைத் தொகுத்து, 'தென்னிந்தியக் கல்வெட்டுகள் தொகுதி-14' (South Indian Inscriptions. Vol. XIV-Pandyas) என்னும் தலைப்பில் வெளியிட்ட காலஞ்சென்ற திரு. ஏ. எஸ். இராமநாத அய்யரின் (A. S. Ramanatha Ayyar) பெரும்பணி போற்றுதற்குரியதாகும் (1962). தமிழக வரலாற்றுக் கழகத்தினர் தமிழில் வெளியிட்டுள்ள 'பாண்டியர் செப்பேடுகள் பத்து' (Ten pandya copper-plates) என்னும் நூலும் பாண்டியர் வரலாறு பற்றிய பல செய்திகளைத் தெளிவாகத் தொகுத்துக் கூறுகிறது (1967). இதில், புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்டுள்ள வீரநாராயணனின் 'தளவாய்புரச் சாசனம்' வீரபாண்டியனின் 'சிவகாசிச் சாசனம்' ஆகியன சேர்க்கப்பட்டுள்ளமை பாண்டியர் வரலாற்றிற்குப் புத்தொளி ஊட்டுவதாக உள்ளது. பண்டாரகர் கே.வி. இராமன் அவர்கள் 'அண்மைக் காலக் கண்டுபிடிப்புகளின் அடிப்படையில் பாண்டிய வரலாற்றில் சில அம்சங்கள்' (Dr. K. V. Raman. 'Some Aspects of pandyan History in the light of recent discoveries' என்னும் தலைப்பில் 1971-72-ல் வழங்கிய சொற்பொழிவும் (Sri Subramania Ayyar Endowment lectures for the year 1971-72) பாண்டியர் வரலாற்றிற்கான சில புதுச் செய்திகளைத் தந்துதவுகின்றன.

தென்னிந்திய வரலாற்று மேதை பண்டாரகர். கே. கே. பிள்ளையவர்கள் இயற்றியுள்ள 'தமிழக வரலாறும் மக்கள் பண்

[1] 1926-இல் ஆர். அரிகரமையரவர்கள் 'பாண்டிய ராஜ வம்ச சரித்திரம்' என்னும் பெயரில் பாண்டியர் வரலாற்றை மூன்று பகுதிகளாக வெளியிட்டார். அவை முறையே (1) முற்பட்ட பாண்டியர் (2) இடைப்பட்ட பாண்டியர் (3) பிற்பட்ட பாண்டியர் என்பனவாகும். மூன்றுவது பகுதியில் 'பாண்டிய ராஜ வம்ச சரித்திரம் பொது விஷயங்கள்' என்னும் தலைப்பில் பாண்டியர் வரலாற்றின் முக்கியத்துவம், பாண்டியர் வரலாற்றிற்கான ஆதாரங்கள் பாண்டியரது ஆட்சிமுறை, பாண்டிய நாட்டின் நிலைமை - முதலானவைபற்றியும் இவ்வாசிரியர் ஆய்ந்துள்ளார். திருநெல்வேலி மாவட்டம், அம்பா சமுத்திரம் தீர்த்தபதி உயர்நிலைப் பள்ளித் தலைமைத் தமிழாசிரியரால் இயற்றப்பட்டு, அம்பா சமுத்திரம ஸ்ரீ ராமகிருஷ்ண அச்சகத்தில் பதிப்பிக்கப் பெற்ற இந்நூலிறகு திரு. கே. ஏ. நீலகண்டம் அவர்கள் அணிந்துரை வழங்கியுள்ளார். முதன் முதலில் தமிழில் எழுதப்பட்ட இந்நூல் இலக்கியம், கல்வெட்டு, செப்பேடு ஆகிய ஆதாரங்களைக் கொண்டு வெளிவந்தது. இதனல் பாண்டியர் வரலாறு எழுதும் ஆர்வம் அன்றே முகிழ்த்தது எனலாம்.

பாடும்'[1] என்னும் நூலும், 1974ஆம் ஆண்டு வெளியான 'மதுரைத் திருக்கோயில் திருக்குட நீராட்டுப் பெருவிழா மலரில்' இவர் எழுதியுள்ள The Madurai Pandyas' (பக். 153-160) என்னும் கட்டுரையும் பாண்டியர் வரலாறுபற்றிய சில புதுச் செய்திகளைத் தந்துதவுகின்றன.

கல்வெட்டறிஞர்களான திரு. கே. ஜி. கிருஷ்ணன், திரு. இரா. நாகசாமி, திரு. நடன காசிநாதன், திரு. புலவர் செ. இராசு,[2] திரு. முத்துக்கோனார்[3] ஆகியோர் அண்மைக் காலத்தில் எழுதியுள்ள ஆய்வுக் கட்டுரைகளும் பாண்டியர் வரலாற்றினைச் செம்மையான முறையில் உருவாக்கப் பயன்படுகின்றன.[4]

மேற்கூறப்பட்ட அறிஞர்களது ஆய்வுரைகளின் துணை கொண்டும், மத்திய தொல்பொருள் துறையினர், மத்திய கல்வெட்டுத் துறையினர், தமிழ்நாட்டரசு தொல்பொருள் ஆய்வுத் துறையினர் - ஆகியோரது சீரிய கருத்துகளின் துணை கொண்டும் பாண்டியர் வரலாற்றினை நாம் ஒருவாறு கோவைபட அமைக்க முடிகின்றது.

அறிஞர்களது ஆய்வுரைகளின் அடிப்படையிலும், கல்வெட்டுத் தொகுதிகள் கூறும் கருத்துகளின் அடிப்படையிலும், இலக்கியங்கள் காட்டும் ஒளியின் அடிப்படையிலும், எனது சொந்த ஆராய்ச்சியின் அடிப்படையிலும் - பாண்டியர் வரலாற்றினைத் தொகுத்துக் கூறுவதே இந்நூல். தமிழகத்தில் காணப்

1 தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை (தமிழில்).

2 திரு. இராசு அவர்கள் 'கொங்கு' இதழிலும் 'தேனோலை' இதழிலும் எழுதி வருகிறார். கொங்கு நாட்டின் பல பகுதிகளில் காணப்பெறும் பாண்டியர் கல்வெட்டுகளைப் படித்து வெளியிட்டு வருகிறார். இதுகாறும் வெளியிடப் பெறாத சுந்தரபாண்டியனின் கல்வெட்டுகள் பலவற்றைப் படியெடுத்துள்ளார்.

3 மதுரைத் திருக்கோயில் திருக்குட நீராட்டுப் பெருவிழாமலரில் 'வரலாற்று ஏடுகளிலே மதுரைக் கோயில்' என்னும் தலைப்பில் கட்டுரை எழுதியுள்ளார். பாண்டியர் வரலாறுபற்றி இவர் நெடுங்காலமாக ஆய்வுகளை மேற்கொண்டு வருகிறார்.

4 பண்டாரகர், தேவகுஞ்சரி, பண்டாரகர் ஆர். சண்பகலட்சுமி, கே. ஆர். சீனிவாசன், பண்டாரகர் கே. வி. சௌந்தரராஜன், ஈழத்து அறிஞர் கலாநிதி. ஆ. வேலுப்பிள்ளை, ஒய். பி. சுப்பராயலு, மயிலை சீனி வேங்கடசாமி-முதலானோர் எழுதி வரும் கட்டுரைகளும் பாண்டியர் அரசியல் வரலாற்றையும், சமூக கலாசார வரலாற்றையும் தொகுக்க உதவுகின்றன. திருவாளர்கள் சிவராஜபிள்ளை, வி. கனகசபை - ஆகியோரது சங்க காலப் பாண்டியரது காலவரையறை போற்றத் தக்கது.

பெறும் கல்வெட்டுகள் அனைத்தும் வெளியிடப்பட்டுவிட்டால் [1]அ 'பாண்டியர் வரலாறு' முழுமை பெறும். அந்நன்னாளை, பொன்னாளை விரைவில் எதிர்ப்பார்ப்போம்.

**பாண்டியர் வரலாற்றின் பாகுபாடு**

பாண்டியர் வரலாறு நீண்டதொரு வரலாறு. 'கிறிஸ்துவின் பிறப்பிற்கு முன்பே பிறந்த பாண்டியரின் ஆட்சி ஏறத்தாழ கி. பி. பதினேழாம் நூற்றாண்டு வரை உயிர் பெற்றிருந்தது. இவ்விடைப்பட்ட காலத்தில் சில குறுகிய காலப் பகுதிகளில் மட்டும் இவர்கள் அரசப் பதவியில் அமர்ந்திருக்கவில்லை என்பது உண்மையேயாயினும், இவர்கள் அரசியல் அரங்கினை விட்டு முழுவதும் வெளியேறிவிட்டதாகக் கூறுதல் இயலாது. இத்துணை நீண்ட, நெடிய காலம் ஆட்சி புரிந்த-ஏன் உலக வரலாற்றிலேயே நெடுங்காலம் ஆட்சி புரிந்த பாண்டியரது ஆட்சிக் காலத்தை நாம் சில பிரிவுகளாகப் பிரித்து ஆய்வதே முறையாகும். பாண்டியரது வரலாற்றின் காலப் பகுப்பினைப் பொறுத்தவரையில் வரலாற்றறிஞரிடையே ஒருமித்த கருத்து உருவாகவில்லை.

பாண்டியர் வரலாறுபற்றிய குறிப்புகளை எழுதிய திரு. டி. ஏ. கோபிநாத ராவ் அவர்கள் பாண்டியர் வரலாற்றினைச் சங்க காலப் பாண்டியர், இடைக்காலப் பாண்டியர், பிற்காலப் பாண்டியர் என்று முப்பெரும் பகுதிகளாகப் பிரித்துள்ளார். இடைக்காலப் பாண்டியர் என்னும் பகுதியில் கி. பி. ஆறாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதி முதல் (கடுங்கோனின் ஆட்சி முதல்) கி. பி. பத்தாம் நூற்றாண்டு வரையுள்ள பாண்டியரைப்பற்றி ஆய்

| | |
|---|---|
| 1 அ. இதுகாறும் சேகரிக்கப்பட்ட கல்வெட்டுகள் | 21,464 |
| இதுகாறும் வெளியிடப்பட்டவை | 4,171 |
| | 17,293 |
| அச்சில் உள்ளவை ............ | 2,158 |
| தயாரிக்கப்பட்டு வருபவை ............ | 2,150 |
| | 4,308 |
| வெளியிடப்பட வேண்டிய கல்வெட்டுகள் — | 12,985 |

(பாண்டியர் செப்பேடுகள் பத்து (1967. பக் ii)

ஆ. 'இதுகாறும் தமிழகத்தில் கல்லிலும், செம்பு போன்ற உலோகங்களிலும் எழுதப்பெற்றுள்ள சாசனங்கள் ஏறத்தாழ ஒரு இலட்சமாகும். (கல்வெட்டுக் கருத்தரங்கு (1968) முன்னுரை; புலவர் செ. இராசு 'நடுகற்கள்' நான்காவது தமிழ் ஆராய்ச்சி மாநாட்டுக் கருத்தரங்கம், யாழ்ப்பாணம் 1974).

கிருர். பிற்காலப் பாண்டியர் என்னும் தலைப்பில் தென்காசிப் பாண்டியரை உள்ளடக்குகிருர்.

திரு. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியார் அவர்கள் சங்ககாலப் பாண்டியர், முதற் பாண்டியப் பேரரசு, இரண்டாவது பாண்டியப் பேரரசு, 14 ஆம் நூற்றுண்டிலும் அதன் பின்னரும் ஆண்ட பிற்காலப் பாண்டியர் என்று பாண்டியர் வரலாற்றினைப் பகுத்துள்ளார். கி.பி. ஆரும் நூற்றுண்டின் இறுதிப் பகுதி முதல் கி.பி. பத்தாம் நூற்றுண்டு முடிய ஆண்ட பாண்டியரை இவர் முதற் பாண்டியப் பேரரசு என்றும், கி. பி. 1190 முதல் கி. பி. 1319 முடிய ஆண்ட பாண்டியரை இரண்டாவது பாண்டியப் பேரரசு என்றும், தென்காசிப் பாண்டியரைப் பிற்காலப் பாண்டியர் என்றும் குறிப்பிடுகின்ருர்.

திரு. தி. வை. சதாசிவ பண்டாரத்தார் அவர்கள் பாண்டியர் வரலாற்றினைக் கடைச்சங்க காலத்திற்கு முந்திய பாண்டியர்கள், கடைச்சங்க காலத்துப் பாண்டியர்கள், கி. பி. 575 முதல் கி. பி 900 வரை ஆட்சி புரிந்த பாண்டியர்கள், கி. பி. 900 முதல் கி. பி. 1190 வரையில் ஆண்ட பாண்டியர்கள், கி. பி. 1190 முதல் கி. பி. 1310 முடிய ஆட்சி புரிந்த பாண்டியர்கள் தென் பாண்டி நாட்டில் ஆட்சி புரிந்த பிற்காலப் பாண்டியர்கள் என்றும் பகுத்துள்ளார்.

முதலாவது பாண்டிய அரசினையும், இரண்டாவது பாண்யடி அரசினையும் இடைக்காலப் பாண்டியர் என்னும் பெரும்பிரிவில் அடக்கியுள்ள டி. ஏ. கோபிநாதராவ் அவர்களது காலப் பகுப்பு பொருத்தமுடையதாகத் தோன்றுகிறது. இவ் இடைக்காலப் பாண்டியரை முதலாவது பாண்டியப் பேரரசு, இரண்டாவது பாணடியப் பேரரசு என்று பிரிப்பதைக் காட்டிலும் முற்காலப் பாண்டியர், பிற்காலப் பாண்டியர் என்று பகுப்பது பொருத்த முடையது என்று கருதுகிறேன். இங்கிலாந்து நாட்டில், இடைக் காலத்தில் பிளாண்டஜெனட்களின் (Plantagenets) ஆட்சி நடை பெற்றது. இதனை வரலாற்றறிஞர்கள் முற்கால பிளாண்ட ஜெனட்கள் (Early Plantagenets) என்றும், பிற்காலப் பிளாண்ட ஜெனட்கள் (Lator Plantagenets) என்றும்(இரண்டாம் ஹென்றி முதல் மூன்ரும் ஹென்றி முடிய — முதலாம் எட்வர்ட் முதல் இரண்டாம் ரிச்சர்ட் முடிய) பிரித்துள்ளமை ஈண்டு நினைவுகூரத் தக்கதாகும்.

**இப்புத்தகத்தின்கண் பாண்டியர் வரலாறு**

1. கடைச்சங்க காலத்திற்கு முந்தைய பாண்டியர்
2. கடைச்சங்க காலப் பாண்டியர்

3. களப்பிரர் இடையீடு
4 முற்காலப் பாண்டியர்
5. சோழராதிக்கம்
6. பாண்டியரின் மீட்சி
7. பிற்காலப் பாண்டியர்
8. உள்நாட்டுக் குழப்பமும் முகம்மதியர் படையெழுச்சியும்
9. மதுரையில் சுல்தான்கள் ஆட்சி
10. திருநெல்வேலிப் பாண்டியர் (தென்காசிப் பாண்டியர்)

என்னும் சிறு பிரிவுகளாகப் பகுக்கப்பட்டு ஆயப்பட்டுள்ளது.

திரு. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியார் அவர்கள் முதற் பாண்டிய அரசு என்றும் இரண்டாவது பாண்டிய அரசு என்றும் குறிப்பிட்டுள்ள பகுதிகள், இவண் முற்காலப் பாண்டியர், பிற் காலப் பாண்டியர் என்று குறிக்கப்பட்டுள்ளன. அண்மைக் காலத்தில் பாண்டியர் சாசனங்கள்பற்றி ஆய்வுகள் நிகழ்த்திய ஈழத்து அறிஞர், கலாநிதி ஆ. வேலுப்பிள்ளை அவர்கள் 'சோழர் குல மன்னர் சோழப் பேரரசைக் கட்டி எழுப்பு முன்புப் பாண்டி நாட்டில் ஆதிக்கம் செலுத்திய பாண்டியரை முற்காலப்பாண்டிய ரெனவும் சோழப் பேரரசு வீழ்ந்தபின் தமிழ்நாடு முழுவதும் ஆட்சி செலுத்திய பாண்டியரைப் பிற்காலப் பாண்டியர் எனவும் கூறலாம்' என்று குறிப்பிட்டிருப்பதும்[1] ஈண்டு நினைவுகூரத் தக்கதாகும். திரு. கே. கே. பிள்ளையவர்கள் 'முதற் பாண்டிய அரசு' (First Pandyan Empire) என்று குறிப்பிடுவது பொருத்த முடையதாகத் தோன்றவில்லை என்று கருதுவதும்[2] இங்கு கவனிக்கத் தக்கது.

பிற்காலப் பாண்டியர் காலம், பாண்டியர் வரலாற்றில் ஒளி மிகுந்த காலமாகும். பிற்காலப் பாண்டியரைப் பேராதிக்கப் பாண்டியர் எனவும், கீர்த்திமிகு பாண்டியர் எனவும், இரண் டாவது பாண்டியப் பேரரசைச் சார்ந்த பாண்டியர் எனவும் அழைக்கலாம். இவர்கள் காலத்தில்தான் பாண்டியர் தமிழகத் தில் மட்டுமின்றி, தென்னிந்தியாவிலேயே புகழ் பூத்த அரசர் களாகத் திகழ்ந்தனர்.

[1] வேலுப்பிள்ளை, ஆ. கலாநிதி. 'சாசனமும் தமிழும்' கண்டி 1972. பக். 202.

[2] K. K. Pillai. 'The Madurai Pandyas' மதுரைத் திருக்கோயில், திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா மலர்- 1974.

# 2. பாண்டியரும் பாண்டிய நாடும்

நிலமடந்தையின் திலகமெனத் திகழ்வது தமிழ்நாடு. இது பண்டு தமிழகம் என்றழைக்கப்பட்டது. இது இந்தியத் துணைக் கண்டத்தின் தென் கோடியில் அமைந்துள்ளது. வேங்கடம் எனப்படும் திருப்பதி மலைகள் தொன்றுதொட்டு தமிழகத்தின் வட எல்லையாக இருந்து வந்தன. தெற்கு, கிழக்கு, மேற்கு ஆகிய மூன்று திசைகளிலும் கடல்களே இதன் எல்லைகளாக அமைந்தன. இப்பகுதியில் வாழ்ந்த மக்கள் தமிழைத் தமது தாய்மொழியாகக் கொண்டிருந்ததால் இவர்கள் தமிழர் என்றே அழைக்கப்பட்டனர். தமிழ்நாடு தொன்மைச் சிறப்பும், வரலாற்று முக்கியத்துவமும், வணிகச் சிறப்பும் கொண்டிருந்த காரணத்தால் உலக அரங்கில் புகழ் பெற்றிருந்தது.

தமிழர்களின் பூர்விகம் (Origin) பற்றி வரலாற்றறிஞர்களிடையே ஒருமித்த கருத்து உருவாகவில்லை. குமரிக் கண்டக் கொள்கை[1] (Lemurian Origin of Tamils), மத்திய தரைக் கடல்

1. தமிழகத்தின் தென் கோடியில் பண்டு குமரிக்கண்டம் அல்லது லெமூரியாக் கண்டம் என்னும் பெயரில் நிலப்பரப்பொன்று இருந்ததாகவும், அங்குதான் தமிழரின் தென்மையான நாகரிகம தோன்றியதாகவும் அறிஞர் சிலர் கருதுகின்றனர். 'லெமூரியாக் கண்டம் 200,000 ஆண்டுகட்குமுன் முதல் 50000 ஆண்டுகட்கு முன் வரை இருந்ததென்றும், 50000 ஆண்டுகட்கு முன் பெரும்பாலும் அழிந்ததென்றும் கூறினேம்' என்றும் திரு. கா. அப்பாத்துரை அவர்கள் குறிப்பிடுகின்றார் (குமரிக் கண்டம் அல்லது கடல் கொண்ட தென்னாடு-கழகம். 1961. பக், 56-57). இக்கருத்து பொருந்துவதாகத் தெரியவில்லை.

அடுத்து 'நடுகற்காலம்' அல்லது 'இரண்டாங்காலம்' (Mesohthic or Secondary) காலப்பகுதியில் திரயாசி (Triassic) ஜுராஸிக் (Jurassic) க்ரெடேஷியஸ் (Cretaceous) மண் தொகுதி காலத்தில் லெமூரிய நாகரிகம் தொடங்கியதாக திரு. கா. அப்பாத்துரை அவர்கள் குறிப்பிடுகிறார். இது முற்றிலும் பொருந்தாக் கூற்றாகும். மண்ணியல் வல்லுநர் கூற்றுப்படி மெசோசோயிக் (Mesozoic) காலமென்பது 70 முதல் 225 மில்லியன் ஆண்டுகளுக்குரியது. இக் காலப் பகுதியில் குட்டிப் போட்டுப் பாலூட்டும் மிருகங்களும், டினோசார் மிருகங்களும், பறவையினங்களும், பூ பூக்கும்தாவரங்களும்தான் இருந்தனவேயன்றி மனிதன் வாழவில்லை. கெய்னோஸோயிக் (Cainozoic) காலப் பகுதியைச் சேர்ந்த பிளியோசின் (Pliocene) காலத்தில்தான் மனிதனைப் போன்ற மனிதக் குரங்குகள் வாழ ஆரம்பித்தன, இதன் காலம் ஏறத்தாழ 2 - 10 மில்லியன் ஆண்டாகும். இதனையடுத்து பிளிஸ்டோசின் (Pleistocene) காலத்தில்தான் ஹோமோ எரெக்டஸ் (Homo erectus, First Trueman) என்ற உண்மையான முதல்

கொள்கை (Mediterranean origin), திராவிடர்களின் ஆதி முன்னோரைச் சார்ந்த கொள்கை (Protohistoric Dravidian origin) மொஹஞ்சோதாரோ கொள்கை (Mohenjo-Daro origin)[2] ஆகியன இவற்றுள் சிலவாகும். வரலாற்றுக் காலத் தமிழர்கள் ஆரியர் இந்தியாவிற்கு வருவதற்கு முன்பே இந்தியாவில் வாழ்ந்து வந்த வரலாற்றுக் காலத் திராவிடரின் ஆதி முன்னோரேயாவர் என்னும் கருத்து பெரும்பாலான வரலாற்றறிஞர்களால் ஏற்றுக் கொள்ளப் பெறுகின்றது. தமிழர் வெளிநாட்டினின்றும் வந்து திராவிட நாட்டில் குடியேறிய மக்களாவர்[3] என்னும் கருத்தினைச் சிலர் ஏற்றுக் கொள்வதில்லை. எனவேதான் பேராசிரியர் திரு. வி. ஆர். இராமச்சந்திர தீட்சதர்[4] அவர்கள், தமிழர்கள் தமிழகத்தின் பூர்வ குடிகளே (autochthonous people) என்னும் கொள்கையினை வலியுறுத்தியுள்ளார். தொல்லியல், மண் பாண்டம், இறந்தோரைப் புதைத்தல்-ஆகியவற்றின் ஆய்வின் அடிப்படையில் தமிழர்கள் கல்லியம் சார்ந்த பண்பாட்டைக் கொண்டோரின் வழியினரே (descendants of the people of the lithic culture) என்று திரு. தீட்சதர் அவர்கள் கருதுகின்றார். கல் சார்ந்த கருவிகளைப் பயன்படுத்திய தமிழர் படிப்படியாக தென்னிந்தியாவில் இரும்புக் காலத்தைக் கண்டுள்ளனர். திரு. தீட்சிதர் அவர்களின் வாதம் ஈண்டு பொருத்தமுடையதாகத் தோன்றுகிறது.

---

மனிதன் தோன்றியிருக்கிறான், இவனுக்குச் சிந்திக்கத் தெரியும். இக்காலம் ஏறத்தாழ 10000-2 மில்லியன் ஆண்டுகளுக்குரியதாகும். [Life Before man, (Time Life 1nternational Netherland. B. V.) பட்டியல் பக்கம், 26 காண்க.] எனவே, கா. அப்பாத்துரையர் கூறியிருப்பது எவ்வாறு பொருந்துமென்று தெரியவில்லை. அடுத்து இவர் தமது நூலில் 'இலமூரியா வாழ்க்கைக் காலம் நடுகற்காலம் ஆகும். (Mesolithic)' என்று தவறுதலாகக் குறித்துள்ளார் (பக்.60) மெஸோஸோயிக் (Mesozoic) என்பதனையே இவர் மெஸோலிதிக் என்று தவறுதலாகக் கொண்டார் போலும்.

எனவே, குமரிக் கண்டக் கொள்கை பொருந்தாது.

2 சிந்துவெளியில் மொகஞ்சோதாரோ என்னுமிடத்தில் தோன்றிய நாகரிகம் திராவிடர்களுடையதே என்பதனை முதன் முதலில் வணக்கத்திற்குரிய தந்தை ஹீராஸ் அவர்கள் (Rev. Fr. Heras) அறிவித்தார். இவ்வகழ்வாய்வில் கிடைத்த முத்திரைகளிலும், பானையோடுகளிலும் காணப்படும் குறியீடுகள் திராவிட மொழியைச் சார்ந்தவையே என்று அவர் வெளியிட்டார். ஆனால், பண்டாரகர் எஸ். ஆர். ராவ் (Dr. S. R. Rao) அவர்கள் இதில் காணப்படுகின்ற குறியீடுகள் சமஸ்கிருத எழுத்துகளோடு தொடர்புடையவை என்று அறிவித்துள்ளார். அண்மையில் அன்னிய நாட்டு மொழியியல் அறிஞர் பலர் இதன் எழுத்துகளை ஆய்ந்து வருகின்றனர். எனவே, தற்கால ஆய்வு நிலையில் இதனை நாம் அறுதியிட்டு உறுதியுடன் கூறவியலவில்லை.

**தமிழக மூவேந்தர்**

சேரர், சோழர், பாண்டியர் என்னும் முடியுடை வேந்தர், முறையே தமிழகத்தின் முப்பெரும் பிரிவுகளாக சேர, சோழ, பாண்டிய நாடுகளை ஆண்டு வந்தனர். இம் மூவரும் ஆண்டு வந்த பகுதிகள் தலைகீழான ஆய்தவெழுத்தின் வடிவில் ஃ மூன்று மண்டலங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தன. இவற்றை முறையே குடபுலம், குணபுலம், தென்புலம் எனக்கூறுவது வழக்காகும் இவற்றுள் சேரநாடு மேல் நாடானதால் குடபுலம் என்றும், சோணாடு அதற்குக் கிழக்கே உள்ளமையின் குணபுலமென்றும், அவ்விரண்டிற்கும் தெற்கில் அமைந்துள்ளமையின் பாண்டிய நாடு தென்புலம் எனவும் அழைக்கப்பட்டன.

இம் மூன்று அரசுகளும் எந்தக் காலத்தில் நிறுவப்பட்டன என்பதனை அறுதியிட்டுக் கூறவியலவில்லை. ஆனால், பரிமேலழகர் இம் மூவேந்தரும் படைப்புக் காலங்கொட்டு மேம்பட்டு வரும் பழங்குடியினர் என்று கூறியுள்ளார்.[5] இதனால் தமிழ் வேந்தர்கள் தொன்மை மிக்கவர்கள் என்பது புலனாகிறது. இம் மூவருள் முந்தியவன், தமிழ்ச் சங்கம் நிறுவிய பாண்டியனாவான். இவனது உண்மையான வரலாற்றுக் காலம் கி. பி. நான்காம் நூற்றாண்டு முதல் ஆரம்பிக்கிறதெனலாம். இதற்கு முன்னதான நிகழ்ச்சிகள் யாவும் தெளிவற்றதாகவே உள்ளன. எனவேதான் கிறிஸ்துவின் பிறப்பிற்கு முன்னதான தமிழகவரலாறும், குழப்பமாகவே காணப்படுகின்றது. ஈண்டு நாம் பாண்டிய வேந்தர்களைப்பற்றியும், அவர்களது வரலாற்றைப்பற்றியும் அறிந்து கொள்வதற்கு முன் பாண்டிய நாட்டைப்பற்றிச் சிறிது காண்போம்.

---

3 'திராவிட' என்னும் வடமொழிச் சொல் தமிழரது மொழியினைக் குறிப்பதற்கு திரு. மாக்ஸ் முல்லரால் (Max Muller) முதன் முதலில் பயன்படுத்தப் பட்டது. பின்னர், தான் கூறியது தவறென்று உணர்ந்த திரு. மாக்ஸ் முல்லர் அவர்கள் தனது கருத்தைத் திரும்பப் பெற்றுக் கொண்டார். ஆனால், தமிழியல் வல்லுநர்கள் இவரது திருத்தத்தை ஏற்றுக் கொள்ளவில்லை. எனவே, திராவிட என்னும் சொல் இந்தியாவின் தென் பகுதியைக் குறிப்பதேயன்றி, ஒரு தனிப்பட்ட இனத்தினரையோ (Ethnic Stock) ஒரு குறிப்பிட்ட மொழி பேசுகின்ற வகுப்பாரையோ (linguistic group) குறிப்பதாகக் கொள்ளுதல் அத்துணைப் பொருத்தமுடையதாகத் தோன்றவில்லை Kuppuswamy, T. V. 'The Urban phase of Ancient Tamil Culture'. Bulletin of the Institute of Traditional Cultures, Madras-1972.

4 Ramachandra Dikshitar, Prof. V. R. 'Origin and spread of Early Tamils' (Sankara Parvathi Lectures, University of Madras)

5 திருக்குறள் - குடிமை 5. பரிமேலழகர் உரை. இது மிகைப்படுத்திக் கூறப்பட்டதாகும்.

## பாண்டிய நாடு

**எல்லை :** சேர, சோழ, பாண்டியருள் பாண்டியரே மிகத் தொன்மை வாய்ந்தவர். வடக்கே வெள்ளாறும், தெற்கே குமரி முனையும், மேற்கே பெருவெளியும், கிழக்கே கடலும் பாண்டிய நாட்டின் பண்டைய எல்லைகளாகும். இது ஐம்பத்தாறு காவதம் பரப்புடையதாகும். இதனையே,

'வெள்ளா றதுவடக்கு மேற்குப் பெருவெளியாம்
தெள்ளர் புனற்கன்னி தெற்காகும்-உள்ளான
ஆண்ட கடல்கிழக் கைம்பத் தறுகாதம்
பாண்டிநாட் டெல்லைப் பதி'

என்று இச்செய்யுள் குறிப்பிடுகின்றது. இக் காலத்தைய மதுரை, திருநெல்வேலி, இராமநாதபுரம் மாவட்டங்களும் திருச்சி மாவட்டத்தின் ஒரு பகுதியும் அன்று பாண்டிய நாட்டில் அடங்கியிருந்தன.

**தமிழுடன் தொடர்பு :** தமிழ் வளர்த்த காரணத்தால் பாண்டிய நாடு 'செந்தமிழ் நாடென்றே' அழைக்கப்பட்டது. மற்ற நாடுகள் கொடுந்தமிழ் நாடு என்று அழைக்கப் பெற்றன. இவற்றைக் கீழ்க்காணும் பாடலால் அறியலாம்.

'செந்தமிழ் நாடே
சந்தனப் பொதியத் தடவரை முனிவனும்,
சவுந்தர பாண்டியன் செந்தமிழ் நாடனும்
சங்கப் புலவரும் தழைத்தினி திருந்த
மங்கலப் பாண்டி வளநாடென்ப'

'பாண்டிய நாடே பழம்பதி'யென்பது மணிவாசகப் பெருமானின் மணிமொழி. 'சோழவள நாடு சோறுடைத்து' என்று மொழிந்த ஔவையார் 'பாண்டியநா டின்னுடைத்து நல்ல தமிழ்' என்றும் மொழிந்துள்ளார். இதனால் பாண்டிய நாட்டிற்கும், தமிழுக்கும் உள்ள நெருங்கிய உறவு நன்கு புலப்படும்.

**பாண்டியர் :** பாண்டியர், வடநாட்டுப் பாண்டுவுடன் தொடர்புடையவரென்று சமணக் கதைகள் கூறுகின்றன.[1]

1 'பாண்டுவின் மக்கள் தெற்கேயுள்ள மதுரையைத் தலைநகராகக் கொண்டு பாண்டிய நாட்டில் ஆட்சி புரிந்ததாக சமணக் கதைகள் கூறுகின்றன'. திரு. பார்னெட் அவர்கள் இக்கருத்தினை மறுத்து, பாண்டியர்கள் பாண்டவர்கள் அல்ல என்று ஆணித்தரமாகக் கூறியுள்ளார்.

Dr. Barnett (Taylor R. Oriental Historical Manuscripts, Vol I. PP. 195 ff): Chinnathamby, J. R. 'The Pandyans'.

பாண்டவர், பாண்டியர் என்னும் பெயரொற்றுமை கொண்டே சிலர் இவ்வாறு கருதுகின்றனர். எனவே, இக்கருத்து வரலாற்றாசிரியர்களால் வன்மையாக மறுக்கப்படுகின்றது.[1] பாண்டியர் என்னும் சொல் பண்டு என்னும் சொல்லுடன் தொடர்பு கொண்டது. இதனைப் பண்டையோர் என்பதன் மரூஉ முடிபு என்று நவிலலாம். இவர்கள் தொன்மை மிக்கோர் ஆதலின் பண்டையோர் எனப்பட்டனர். பண்டையோர் என்பது பழையர் என்ற சொல்லுடன்[2] ஒப்புமை கூறத்தக்கதாகும். இவர்கள் சிந்துவெளி மக்களின் கால்வழியினரே என்பதனைவிட இவர்கள் தமிழகத்தின் பூர்வீக குடிகள் என்பது பொருத்தமாகும்.

கொற்கைப் பகுதியில் பழையர் என்னும் இனப் பிரிவினர் வாழ்ந்து வந்துள்ளனர்.[3] பண்டைக் காலத்தில் பழையன் மாறன் என்னும் பெயரில் வேந்தன் ஒருவன் வாழ்ந்து வந்தான். 'நெடுந்தேர் இழையணியானை பழையன் மாறன்' என்னும் வேந்தனொருவன் கிள்ளிவளவனுடன் போர் செய்து தோல்வி பெற்றான் என்னும் செய்தி அகநானூற்றில் குறிக்கப்பெறுகிறது.[4] இருநூற்று ஒன்றாம் அகநானூற்றுப் பாடலினைக் கொண்டுக் கொற்கையில் பழையன் மாறன் என்னும் பாண்டிய வேந்தன் ஒருவன் அரசு செலுத்தி வந்தான் என்று தெரிகிறது. பழையன் மாறன் என்னும் பெயர் கொண்ட சோழர் படைத்

1 'இந்தியத் துணைக் கண்டத்தின் தென்கோடி முனையில் பழமையான, ஆரியர் அல்லாத, தமிழரசு ஒன்றிருந்தது......... இவர்கள் இதிகாசப் பாண்டுவின் வழியினர் என்பது அறிஞர்களால் ஏற்றுக் கொள்ளத் தக்கதாக இல்லை' Walkers, 'Hindu world'. P. 180. 'The association of the Pandyas of the Sonth with the Surasenas of Mathura and the Pandus of North India is probably alluded to in the confused statement of Megasthenes. (Please refer B. C. Law's 'Tribes in Ancient India'. Fourth Edition. P. 272. and 'mccrindles Ancient India' (Megasthenes and Arrian) PP. 163-164.

2 'இப்பண்டைய அரசின் குடிகள் (பாண்டியர் சிந்துவெளி நாகரிக மக்களின் வழியினராக இருக்கலாம்' Wolpert. 'India' P. 6. திரு. வோல்பர்ட் அவர்களது ஊகம் பொருத்தமுடையதல்ல.

3 அகநானூறு 201.

4 Ibid. 346. அடி. 19.

இப் பழையன் மாறன், பாண்டியன் ஆவான் என்பதனைப் பதிற்றுப் பத்தின் ஒன்பதாம் பதிகத்தால் உறுதி செய்யலாம். தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியனுக்குக் கொடுக்கப்பட்டுள்ள நெடுந்தேர் என்னும் அடைமொழி இவனுக்கும் கொடுக்கப்பட்டுள்ளது. மேலும், இவன் கூடலுடன் தொடர்புபடுத்தப்பட்டுள்ளதால் இவன் பாண்டியன் என்பதுறுதி.

Ramachandran, C. E., 'Ahananuru in its Historical Settnig' University of Madras, Madras. 1974. P. 26.

தலைவன் ஒருவனும் அகநானூற்றில்[1] குறிக்கப்பெறுகிறான். இவன் போர் செய்த செய்தியும் அதில் கூறப்பட்டுள்ளது. மோகூரிலும் பழையர் (பாண்டியர்) வாழ்ந்து வந்தனர் என்ற செய்தி இலக்கியச் சான்றுகளால் புலனாகின்றது.[2] இலங்கை வரலாற்றிலும் பழையன் மாறன் என்றொரு வேந்தன் குறிக்கப் பெறுகிறான்.

மேற்கூறிய இலக்கியச் சான்றுகளையெல்லாம் ஆய்ந்து பார்க்குங்கால் பண்டைக் காலப் பாண்டியர் முதன்முதலில் கொற்கைப் பகுதியில் வாழ்ந்தனர் என்றும், அவர்கள் பழையர் என்று அழைக்கப் பெற்றனர் என்றும் அறியலாம். இப் பழையரே பண்டையோர் என்றழைக்கப்பட்டு, பின்னர் பாண்டியர் என்றும் அழைக்கப்பட்டனர் என்று கருதலாம்.

பண்டைக் காலத்தில் இலங்கையும் பாண்டிய நாடும் தமக்குள் கலாசாரத் தொடர்பினையும் அரசியல் தொடர்பினையும் கொண்டிருந்தன. அக் காலத்தே இலங்கைக்கும் தமிழகத்திற்கும் இடையே இரு காவதத் தொலைவே இருந்தது. இதனால் இலங்கையை ஆண்ட பழையன் மாறன் என்பான் பாண்டியனே யாவான் என்று கொள்ளலாம்.

**பாண்டியரின் வேறு பெயர்கள்**

இவர்கள் (1) பாண்டியன் (2) செழியன் (3) கூடற் கோமான் (4) தென்னவன் (5) வழுதி (6) மாறன் (7) மீனவன் (8) பஞ்சவன் (9) கௌரியன் (10) வேம்பின் கன்னியன் (11) கைதவன் (12) மலையப் பொருப்பன் (13) வையைத் துறைவன் (14) குமரிச் சேர்ப்பன் (15) பூழியன் (16) பூமியன் (17) பனவன் (18) கடலன் (19) தமிழ்க் காடன் (20) பொதிய வெற்பன் (21) தென் புலங்காவலன் என்னும் பல பெயர்களால் அழைக்கப் பெற்றனர்.[3] கொல்லிப் பொருப்பன், கொங்கர் பெருமான் என்னும் பெயர்களும் உண்டு.[4]

1 அகநானூறு 186, 326; நற்றிணை-10.

2 பதிற்றுப் பத்து—பதிகம் 5: மதுரைக் காஞ்சி-508வது வரி.
அகநானூறு 44, 346, 251: பதிற்றுப்பத்து 44, 49, ஐந்தாம் பத்தின் பதிகம்.

3 கையேடு—1968 கலைக் காட்சிக்குழு. இரண்டாவது உலகத் தமிழ்க் கருத்தரங்கு மாநாடு, சென்னை. பக்கம் 268.

4 தொல்காப்பியம் உரை - தெய்வச்சிலையார் மேற்கோள் பாடல் 18. மாறவர்மன் குலசேகர பாண்டியன் இரு கொங்கு நாடுகளையும் வென்றதனால் இப் பெயர்கள் கூறப்பட்டுள்ளன.

### பாண்டியரது குலம்

பாண்டியர் தங்களைச் சந்திர குலத்தினர் என்று கூறிக் கொள்கின்றனர். சோழர்களோ தங்களைச் சூரிய குலத்தவர் என்று கூறிக் கொள்கின்றனர். நெஞ்சையள்ளும் சிலப்பதிகாரமும் 'தென்னவர் குலத்தோர் முதல்வன்', 'தென்னவர் குல முதல்' என்று சந்திரனையும் 'மாலைத் திங்கள் வழியோன்', 'திங்கட் செல்வன் திருக்குலம்' என்று குறிப்பிடுகின்றது. இச் செய்தி மற்ற தமிழ் இலக்கியங்களிலும் கூறப்படுகின்றது.

### பாண்டியரது இனம்

பாண்டியர் இடையர் வழி வந்தோர் என்று கருதலாம். இவர்கள் ஆயர் (இடையர்) வழி வந்தோர் என்ற செய்தி முல்லைக் கலியில் இரண்டு இடங்களில் குறிக்கப்பட்டுள்ளது. முல்லைக் கலி இவர்கள் புல்லினம் (ஆடு), நல்லினம் (மாடு பசு) ஆகியவற்றை மேய்த்து வந்ததாகக் கூறும்.[1] இதனால் பாண்டியர் இடையர் வழி வந்தோர் என்று கொள்ளுதல் தவறாகாது.

திராவிட மொழியறிஞரான திரு. ஞா. தேவநேயப் பாவாணர் அவர்களும் இவர்களது பெயர் எருதைக் குறிப்பதனால், இவர்கள் ஆடு மாடு மேய்த்து வந்தோராவர் என்று கூறுகின்றார்.

### அரச சின்னங்கள்

பாண்டியரது தலைநகரம் மதுரை. அவர்களது கொடி இணைக்கயல் ஆகும். இவ்விணைக் கயல் செங்குத்தான நின்ற நிலையில் வைக்கப் பெற்றிருக்கும். வேப்ப மாலை பாண்டியரது அடையாள மாலையாகும். கனவட்டம் பாண்டியரது குதிரையாகும்.

### பாண்டியரது தொன்மை

வடமொழியாளர் ஆதிகாவியமாகக் கொண்டாடும் வான்மீகி இராமாயணத்தில் தமிழ்நாட்டைப்பற்றிய செய்திகள் குறிக்கப் பெற்றுள்ளன.[2] அக்குறிப்பில் பாண்டியரது தலைநகரம் பொன்னும் முத்தும் பதிக்கப் பெற்ற கோட்டை வாயிலைக் கொண்டிருந்ததென்று குறிக்கப்பட்டுள்ளது.

வியாச முனிவரால் இயற்றப்பெற்ற மகாபாரதத்தில் பாண்டவருள் ஒருவனான அருச்சுனன் பாண்டியர் குலப் பைங்கொடி

1 முல்லைக்கலி-4.

2 இராமாயணம் (வான்மீகி) கிஷ்கிந்தா காண்டம்-படலம் 41. பாடல் 19.

ஒருத்தியைத் திருமணம் செய்து கொண்ட செய்தி குறிக்கப் படுகிறது.

இதுபோல் வேறுசில வடமொழிப் புராணங்களிலும் தமிழக மூவேந்தரைப்பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன.[1]

கி. பி. நான்காம் நூற்றாண்டினராக அறிஞர்களால் கருதப் பெறும் காத்தியாயனர், பாணினி வியாகரணத்திற்கு இயற்றிய உரையில்[2] 'பாண்டிய' என்னும் சொல்லுக்கு இலக்கணம் வகுத்துள்ளார்.

வட இந்தியாவின் முதற் பெருப் பேரரசு என்னும் பெருமையினைக் கொண்ட மௌரிய வம்சத்தின் மாமன்னனாகத் திகழ்ந்த மாமன்னன் அசோகன். அவன் கிறித்து பெருமான் தோன்றுவதற்கு முன்பே, பேரரசுடன் தோன்றிய மன்னன். அவனது இரண்டாவது பாறைக் கல்வெட்டிலும், பதின்மூன்றாவது பாறைக் கல்வெட்டிலும் பாண்டியரது அரசு குறிக்கப்பட்டு உள்ளது.[3]

வட இந்தியாவின் முதல் மாபெரு வேந்தன் என்று பெருமை பேசிக் கொள்ளும் சந்திரகுப்த மௌரியனது அவையில் அமைச்சனாகத் திகழ்ந்தவரும், 'அர்த்தசாத்திரம்' என்னும் பொருள் நூலின் ஆசிரியருமான சாணக்கியன்[4] (கௌடில்யர், விஷ்ணு குப்தர்) என்பானும் 'பாண்டிய கவாடம்' என்னும் முத்தினைப் பற்றிக் குறித்துள்ளார். சந்திரகுப்த மௌரியனது அவையில் வீற்றிருந்த கிரேக்க நாட்டுத் தூதுவரான மெகஸ்தனிசும் பாண்டியர்பற்றித் தமது குறிப்புகளில் குறிக்க மறக்கவில்லை.

இலங்கை நாட்டு வரலாற்றினை விரிவாக விரித்துக் கூறும் வரலாற்று நூலான 'மகாவம்சம்' கி. பி. 478-ல் ஆட்சி புரியும் உரிமை பெற்ற விசயனென்னும் வேந்தன், பாண்டியர் குலப்

1 Markandeya, Ch. 57, V. 45; VAYUK 45, 124, Matsya, 112, 146.

2 See Caldwell, 'Comparative Grammar' P. 12.
Bandarkar 'Early History of the Deccan' P. 6.

1 See A. R. E. 1907 Onwards and A. S. I. 1909-10. P. 125 and A. R. E. 1909. P. 71.

1 Kautilya ii. இதில் பாண்டியரது தலைநகரான மதுரையைப்பற்றியும், ஆங்கு உற்பத்தியான உயர்ரகத் துணிகள்பற்றியும் குறிப்பிடுகின்றார். இதனால் பாண்டியரது நெசவுத் தொழிலின் சிறப்பும் தொன்மையும் அறியப்படுகின்றது.

பைங்கிளியொருத்தியை மணந்தான் என்னும் செய்தியையும்,[1] ஆண்டுதோறும் தன் மாமனாராகிய பாண்டி வேந்தனுக்கு அரிய பரிசில்கள் அனுப்பினானென்ற செய்தியையும் கூறுகின்றது.

கி. பி. 79 ஆம் ஆண்டில் இறந்தவரான பிளினி என்னும் மேலைநாட்டு வரலாற்றறிஞர் 'இந்தியாவிற் பண்டோவென்ற ஒரே சாதி பெண்ணரசுக்கு உட்பட்டது. ஹெராக்லிசுக்கு ஒன்னே ஒன்னு கண்ணே கண்ணு என்று கூறுவதுபோல் ஒரு மகள் இருந்தாளாம். தன் அவள்மீது கொண்டிருந்த அன்பின் காரணமாக ஒரு நாட்டின் அரசியாக அவளை ஆக்கினானாம். அவளது வழியினர் முந்நூறு ஊர்களை ஆண்டு வந்தனர். அவர்கள் பெரும்படையைக் கொண்டிருந்தனர்'[2] என்று கூறுகின்றார். மெகஸ்தனிஸும் இதனைப் போன்ற கதையொன்றினையே கூறியுள்ளார். டாலமியும[3] பாண்டிய அரசினைக் குறிப்பிட்டு அதன் தலைநகர் மதுரையென்று குறிப்பிடுகின்றார்.

இப் பெண்ணரசியின் கதை பாண்டிய நாட்டிற்குப் பொருந்துவதாகத் தோன்றவில்லை. காரணம் யாதெனின் பாண்டிய வரலாற்றில் பெண்ணரசியின் ஆட்சி நடைபெற்றதாகச் சான்றுகளில்லை. ஒருவேளை இக்கதை மலையத்துவச பாண்டியனின் மகளாகத் தோன்றி பெண்ணரசியாக விளங்கிய புராணக்கதையின் திரியாக இருக்கலாம். இக்கதையினைப் பின்னிணைப்பில் உள்ள 'பாண்டியர்பற்றிய புராணக் கதைகள்' என்னும் பகுதியில் காண்க.

மேலை நாட்டறிஞர்களான சோப் (Schoff) போன்ற அறிஞர்களும் பாண்டியர்களது நாட்டைப்பற்றி சிறப்பினைக் கூறுகின்றனர். பாண்டிய வேந்தனொருவன் உரோம் நாட்டிற்கனுப்பிய தூதுக்குழுபற்றி அறிஞர் ஸ்டிராபோ கூறுகிறார்.[4]

இதுகாறும் கூறியவற்றான் 'தண்ணார் தமிழ் அளிக்கும் தண் பாண்டி நாடு' என்று மணிவாசகராலும், 'முத்தும் முத்தமிழும் கொழித்த நாடு' என்று கம்பராலும் போற்றப் பெற்ற பாண்டிய

1 See Geiger Mahavamsa PP. 59 and 61.

2 Mccrindle, Ancient India as described by Ptolemy, (Majumdar. Ed. P. 183)

3 Ibid.

4 'ஏறத்தாழ கி. பி. 29-இல் பாண்டி வேந்தனாகக் கருதப்பெறும் ஒருவன் உரோம நாட்டு வேந்தனான அகஸ்டஸ் சீசருக்கு தூதுக்குழு ஒன்றினை அனுப்பினான்'. இது வாணிகத் தொடர்பின் பொருட்டாகும்.

நாடு, தொன்மைச் சிறப்பு மிக்கதாக இருந்து, வட நாட்டினர், அன்னிய நாட்டினர் ஆகியோர் பாராட்டுதலையும் பெற்றிருந்தது என்பது புலனாகும். கிறித்து பிறப்பதற்கு முன்பே சிறப்புற்று இருந்த பாண்டிய நாடு, ஏறத்தாழ கி. பி. பதினேழாம் நூற்றாண்டுவரை புகழீட்டி வந்தது என்பது தமிழக வரலாற்றின் சுவை மிக்கதொரு செய்தியாகும். இத்துணை நீண்ட காலம் ஆட்சி புரிந்த அரசப் பரம்பரையினை நாம் வரலாற்றில் காண்பதரிது. எனவே, திராவிட அரசரான[1] பாண்டியர் தமிழக வரலாற்றிலோர் அணியாகத் திகழ்கின்றனர்.

பாண்டிய நாடு என்று எண்ணுகின்றபோது, முத்தமிழும், கடலில் பூத்த முத்துமே எல்லோருடைய இதயங்களிலும் மின்னவிடும். பாண்டிய வேந்தர்களோ ஏறத்தாழ எல்லோரும் முத்தமிழை முழுதுணர்ந்த வித்தகர்களாகவும், பாப்புனையும் ஆற்றல் பெற்ற நற்றமிழ்க் குரிசில்களாகவும் திகழ்ந்தனர். பாண்டிய நாட்டு மககளோவெனின் இனப்பற்றும் மொழிப் பற்றும் மிக்கவர்களாகி விடுதலை வேட்கை கொண்டு விளங்கி வந்தனர். பழைமையும் தொன்மைச் சிறப்பும் மிக்க பாண்டியர் தமிழக வரலாற்றில் தனக்கெனவோர் தனித்த வரலாற்றினை யாத்தனர்; தமிழ் மொழியைக் காத்தனர். கடல் கடந்த வாணிகத்தில் நாட்டம் கொண்டிருந்தனர்; வெளியுலகில் நல்ல பெயரையும் புகழையும் நிலை நாட்டியிருந்தனர். குடைவரைக் கோயில் பல குடைந்தனர்; கண்ணைக் கவரும் சிற்பங்கள் பல வடித்தனர்; பிரம்மாண்டமான கோபுரங்கள் பல எழுப்பினர். கலைக் காவலர்களாக விளங்கினர். இதனால் இவர்களது கலைபார்வமும் இறையன்பும் நன்கு புலனாகின்றது மறக்குடியினரான இவர்கள் தமது பகைவர்களை வெட்டி வீழ்த்தினர். எட்டுத் திக்கும் வெற்றிக்கொடி நாட்டினர்; தமது வீரத்தினை வெளியுலகிற்கு எடுத்துக் காட்டினர்; தமது பேரரசினை கட்டிக் காத்தனர். இவ்விதமாகப் பல்துறை வல்லுநர்களாகத் திகழ்ந்த இப்பாண்டியரின் நாட்டைப்பற்றியும் அதன் புவியியல் கூறுபாடுகள் பற்றியும் ஒரு சிறிது காண்போம்.

சங்கங்கள் வழியாகத் தண்டமிழ் வளர்ந்த பாண்டிய நாட்டின் புவியியலைப்பற்றிய பல செய்திகள் சங்க இலக்கியங்களில் பரவலாக எடுத்துரைக்கப்படுகின்றன. யாம் எடுத்தியம்பும் வரலாற்றின் காலவரைக்குள் உட்பட்டிருந்த பகுதி

[1] 'பாண்டியர், சோழர், காலிங்கர் ஆகியோர் திராவிடர்களேயாவர்.
Caldwell, R. 'A Comparative Grammar of the Dravidian Languages'. P. 111.

களாகக் கூறப்படுபவை இன்றைய மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலி மாவட்டங்களின் பகுதிகளடங்கியதாகும். மேலும் புதுக்கோட்டை மாவட்டத்தின் ஆலங்குடி, திருமயம் வட்டங்களும், தஞ்சை மாவட்டத்தின் அறந்தாங்கி வட்டமும், கோவை மாவட்டத்தின் பழனி வட்டமும், கன்னியாகுமரி மாவட்டத்தின் தோவாள் வட்டமும்கூட பாண்டிய நாட்டிற்குட்பட்டிருந்தன. இப்பகுதிகளின் கணித எல்லையைத் திட்டவட்டமாகக் கூற முடியாதெனினும், குறிப்பாக பாண்டியநாடு 8°5' வடக்கு அட்சத்திலிருந்து 11°30' வடக்கு அட்சம் வரையிலும், 77°15' கிழக்குத் தீர்க்கத்திலிருந்து 79°30' கிழக்குத் தீர்க்கம் வரையிலும் பரவியிருந்தது எனலாம்.

எல்லைகளைத் திட்டவட்டமாகக் கூறும்பொழுது நாம் இந் நூலில் குறிக்கும் பாண்டிய நாட்டின் வடகிழக்கெல்லையாக புதுக் கோட்டைக்கருகில் ஓடும் வெள்ளாறும், வடக்கெல்லையாக மேலூர், திருச்சி மாவட்டங்களின் மலைப்பகுதிகளும், வட மேற்கெல்லைகளாக விருப்பாச்சிக் கணவாயும், மேற்கு, தென் மேற்கெல்லைகளாக மேற்குத் தொடர்ச்சி மலையும், கிழக்கு, தென் கிழக்கெல்லைகளாகக் கடல்களும், தெற்கெல்லையாக இன்றைய கன்னியாகுமரி மாவட்டத்தின் தென்முனை நிலப்பகுதிகளும் விளங்கின எனக் கூறலாம். ஆனால், இவ்வெல்லைகள் யாவும நிலைத்த எல்லைகளாக விளங்கின எனக் கூறுவதற்கில்லை. ஏனெனில், நாம் கூறும் வரலாற்றின்போழ்து நிகழ்ந்த சில பூசல்கள், சண்டைகள் ஆகியவற்றின் முடிவாக எல்லைகள் எப் பொழுதும் மாற்றத்தையடைந்து வந்திருக்கின்றன என்பதை மறக்க முடியாது. இவ்வெல்லைகள் மாற்றங்களடைந்து வந்திருப் பதை வரலாறு எடுத்தியம்பும் போக்கில் நோக்குவோம்.

**பாண்டியநாடு – புவியியற் கூறுகள்**

ஒரு நாட்டின் புவியியற் கூறுகள் அந்நாட்டு வரலாற்று வளர்ச்சியிலும், சமுதாய, பொருளாதார அமைப்புகளின் தோற்றத்திலும் பெரும்பங்கு வகிக்கின்றன. உண்மையில் மனிதனின் முன்னேற்றம் அவனுடைய கலாச்சார முயற்சி ஆகியன சூழ்நிலையையும், பாரம்பரியத்தையும் சார்ந்தமை கின்றன இக்கருததை மனத்திற் கொண்டு பாண்டிய நாட்டின் புவியியற் கூறுகள் இங்கு எடுத்துரைக்கப்படுகின்றன.

டாக்டர் என். சுப்பிரமணியன்[1] தனது நூலான தமிழக வரலாற்றில் இந்திய நாட்டின் பிரிவுகளைப்பற்றிக் குறிப்பிடும்

[1] Subramanian, Dr. N. 'History of Tamil Nad (To. A. D. 1336). Koodai Publishers, Madurai. P. 1.

பொழுது வடக்கு, தெற்கு இடைப்பட்ட பகுதிகளெனப் பிரிப்பது வடக்கு, தெற்கு என பாகுபடுத்துவதைவிடச் சிறந்த தெனக்கூறி, தமிழகம் என்பது தென்பிரிவுக்குட்பட்டதெனவும், இப்பிரிவு குறிப்பான பண்பு நலன்களைக் கொண்ட ஒரு பகுதி யாக அமைகிறதெனவும் குறிப்பிடுகிறார். இப்பிரிவு முப்பெரும் பிரிவுகளில் சிறியதானாலும் புவியமைப்பியலைப் பொறுத்தவரை தக்காண பீடபூமிப் பகுதியைச் சேர்ந்ததாதலின் பழமையானது. எனவே, தமிழகத்தினுள் அடங்கும் பாண்டிய நாட்டு மலைப்பகுதி களின் பாறைகளும் பல மில்லியன் ஆண்டு வரலாற்றைக் கொண்டவையாக அமைகின்றன.

### மலைகள்

பாண்டிய நாட்டிற்குள் காணப்படும் மலைத்தொடர்கள் பழனி, ஆனைமலை, கோடை, பொதியமலை போன்றவைகளாகும். இன்றைய மதுரை மாவட்டத்தின் மேற்புறத்தில் காணப்படும் பழனிமலைக்குத் தெற்கில் இப்பகுதிக்கு அழகூட்டும் கம்பம் பள்ளத்தாக்கும், அதற்கப்பால் வருடநாடு, ஆண்டிப்பட்டி மலைத் தொடர்களும் முக்கியமானவையாக அமைந்து விளங்குகின்றன. மதுரையின் மேற்புறத்திலுள்ள தேக்கடி, பொள்ளாச்சியின் தென் மேற்கிலுள்ள ஆனைமுடி ஆகிய பகுதிகளின் இயற்கைக் காட்சிகள் தெவிட்டாதவைகளாக விளங்குகின்றன.

### பழனிமலைத்தொடர்

இது பழனி என்ற நகரத்தின் பெயரால் விளங்குகிறது. இதன் வடமொழிப் பெயரான வராககிரி அல்லது பன்றி மலைகள் என்பது இம்மலைத் தொடரின் தோற்றத்தைப் பொறுத்தெழுந்த பெயராகக் கொள்ளப்படுகிறது. மேற்குத் தொடர்ச்சி மலைகளின் ஒரு பிரிவாக விளங்கும் இப்பழனி மலைத்தொடர் அத்தொடர்ச்சி மலைகளின் முக்கியப் பிரிவாகும். இத்தொடரின் தென்மேற்கில் இன்னொரு பிரிவு ஏலக்காய் மலை என்ற பெயரால் அழைக்கப் படுகின்றது இம்மலைகள் கம்பம் பள்ளத்தாக்கின் மேற்புற உயர்மட்ட சுவராக அமைந்து விளங்குகின்றன.

பழனி மலைத்தொடர் 40 மைல் நீளமும், 25 மைல் அகலமும் கொண்டது கிழக்கு மேற்காக இத்தொடர் இரண்டு பிரிவு களாகப் பிரிக்கப்படுகிறது. அப்பிரிவுகள் கீழ்ப்பழனி, மேல்பழனி என்பனவாம். கீழ்ப்பழனி 3000 அடியிலிருந்து 5000 அடிக்குட் பட்ட பல சிகரங்களைக் கொண்டதாகவும், சிகரங்களுக்கிடையில் காணப்பெறும் வன்சரிவுகளில் பேரழகூட்டும் காட்டுப் பகுதி களைக் கொண்டதாகவும் விளங்குகிறது.

மேல்பழனி 6000 அடியிலிருந்து 8000 அடிக்குட்பட்ட உயரங்களைக் கொண்டமைகிறது. வேம்படிச் சோலை மலையே இப் பிரிவின் உயர்ந்த மட்டங்கொண்டதாகமைகிறது. இம்மலைத் தொடரின் தென் விளிம்பாக அமைந்து விளங்குவது கோடையாகும். சிற்ருறுகள், சிறு பள்ளத்தாக்குகள், சிறு காடுகள், குளிர்ந்த காலநிலை போன்ற கூறுகள் மேல்பழனியிலிருந்து, கீழ் பழனியை வேறுபடுத்திக் காட்டுகின்றது.

பழனி மலைத்தொடரின் சரிவு வடக்கு நோக்கி காணப்படுகிறது. ஆனால், தெற்கே இம்மலைத் தொடர் வன்சரிவுடைய (steep slope) ஓங்கல்களைக் கொண்டமைகின்றது. இவ் வன்சரிவுடைய ஓங்கல்களே (eliffs) கம்பம் பள்ளத்தாக்கின் பாறைச் சுவர்களாகவும், பேரழகுதரும் காடுகளைக் கொண்டதாகவும் உள்ளன. வடக்கிலிருந்து தெற்காக இம்மலைகளை ஊடுருவிச் செல்லும் இரு முக்கிய பள்ளத்தாக்குகள் வில்பட்டி, பூம்பாறை என்பனவாம். இவ்விரண்டிலும் பூம்பாறையே குறிப்பிடத் தக்கது.

**சிறுமலைகள் :** மதுரை மாவட்டத்தின் கிழக்குப் பகுதியில் காணப்பெறும் சிறுமலைகள் மதுரையிலிருந்து 16 மைல் தூரத்திலுள்ளன. இம்மலைகள் குறுக்காக 12 மைல் நீளம் கொண்ட ஒரு பிண்டமாகவும், கடல் மட்டத்திலிருந்து 4400 அடி உயரத்தைக் கொண்ட ஒரு சிகரத்தைப் பெற்றதாகவும் உள்ளன. இம்மலைகளின் மேல் மட்டத்தில் கொப்பரை வடிவங்கொண்ட ஒரு பீடபூமி பகுதியும் காணப்படுகின்றது.

ஆண்டிப்பட்டி மலைத்தொடர், சிறுமலை, அழகர்மலை ஆகிய இம் மூன்று மலைகளும் முக்கோண வடிவில் அமைந்துள்ளன. அதற்குள் நத்தம் என்ற ஊரைச் சுற்றி நத்தம் குன்றுகளும், அய்பலூராருகே அய்யலூர் குன்றுகளும் உள்ளன. யானைமலை, கழுகுமலை, அரிட்டாபட்டிக் குன்று, சிற்றண்ணவாசல் குன்று, உண்டாங்கல்லு, சித்தர்மலை, கருங்காலக்குடிக்குன்று, பூவில் உடையார்மலை, உதயகிரி, உம்மணமலை, குன்றக்குடி-முதலாய சிறு மலைகளும் பாண்டிய நாட்டில் உள்ளன.

**கரண்டமலை**

சிறுமலைகளின் வட கிழக்கில், 8 மைல் தூரத்தில் காணப்படுபவை கரண்ட மலையாகும். இம்மலைகளிலிருந்து பல திசைகளில் தாழ்ந்த தொடர்கள் வன்சரிவுடைய பள்ளத்தாக்குகளை அரவணைத்துச் செல்கின்றன. எனவே, இம்மலைகள் வெட்டப்பட்ட மலைகள் போன்று தோற்றமளிக்கின்றன. மதுரை

யிலிருந்து 12 மைல் தூரத்தில் காணப்படும் அழகர்மலைகள் தாழ்ந்த மட்டங்களைக் கொண்ட ஒரு தொடராகக் காணப்படுகின்றன. இம்மலைகளிலிருந்தும் தாழ்ந்த தொடர்கள் பல திசைகளில் பிரிந்தும் செல்கின்றன.

**ஆனைமலை:** பாண்டிய நாட்டின் முக்கிய தொடராம் ஆனைமலைகள் அடர்ந்த, செழித்த காடுகளைக் கொண்டதாக விளங்குகின்றன முகில் தவழும் சிகரங்கள், துள்ளி விழும் அருவிகள் இவற்றை அணி செய்கின்றன. இம்மலைகளேயல்லாது, நத்தம், பசுமலை, நாகமலை போன்றவைகளும் பாண்டிய நாட்டினுளடங்கும்.

**மேற்குத் தொடர்ச்சி மலை:** திருநெல்வேலி மாவட்டத்திற்கு மேற்கெல்லையாக அமைவது மேற்குத் தொடர்ச்சி மலைகளே. சீரற்ற சங்கிலித் தொடரின் தொடர்ச்சியாக அமைகின்ற இப்பகுதி இங்கு சீர் பெற்றமைகின்றது. தென்காசியைச் சூழ்ந்து நிற்கும் பிரிவைத் தவிர்த்து மற்றவை சிறு வளைவாகித் தன் பொருநைப் பள்ளத்தாக்குடன் கூடிய பாபநாசம் வரை செல்கின்றன. பின் தென் கிழக்காக 12 மைல்களுக்கு ஒரு பெரும் வளைவாகச் சென்று அதன் பின் நேர் தெற்காகக் கடல் வரை செல்கின்றன. இப் பிரிவின் சராசரி மட்டம் 5000 அடிகளாகும். இவ் வுயரத்துடன் கூடிய சுமார் 20 சிகரங்கள் இப் பிரிவில் காணப்படுகின்றன.

கடையநல்லூருக்கருகில் சிறு கரங்கள் போன்ற தொடர்கள் இதனின்றி சமவெளியில் நுழைகின்றன. ஆனால், முக்கியத் தொடர் அரியங்காவு கணவாயை நோக்கி வேகமாகச் சரிகிறது. பின்னர் திரும்பவும் படிப்படியாக உயர்ந்து ஐந்தருவிப் பள்ளத்தாக்கையடையும்பொழுது 5000 அடி உயரத்தைப் பெறுகின்றன. பஞ்சந்தாக்கி என்ற சிகரம் மட்டும் 5135 அடி உயரங் கொண்டதாக உள்ளது. பின்னர் தென்காசி, அம்பா சமுத்திரம் பகுதியிலிருந்து மேற்குத் தொடர்ச்சி மலைகள் விரிந்து செல்லத் தொடங்கி குறிப்பிடத்தக்க அகலங்கொண்டதாக அமைகின்றன. இவைகளின் அடிவாரத்தில் சிறுசிறு குன்றுத் தொடர்கள் அரணாக அமைகின்றன. இவற்றிற்குப் பின்னால் அகன்ற பள்ளத்தாக்குகளும், பரந்த பீடபூமிகளும் காணப்படுகின்றன.

**அகத்தியர் மலை:** திருநெல்வேலி மலைகளில் பெயர் பெற்றதாக அமைவது அகத்தியர் மலையாகும். இது இப் பகுதிகளிலுள்ள மக்களால் 'ஏகபொதிகை' என அழைக்கப்படுகிறது.

கூம்பு வடிவங்கொண்ட இம்மலை திருவாங்கூரிலிருந்தோ அல்லது திருநெல்வேலியிலிருந்தோ பார்க்கும்பொழுது சிறப்புமிக்க சிகரமாகத் தெரிகின்றது.

**ஐந்தலைப் பொதிகை மலை :** ஐந்தலைப் பொதிகை எனும் மலை இம் மலைக்குச்( அகத்தியர்) சில மைல்கள் தூரத்தில் காணப்படுபவைகளில் ஒன்றாகும். சமவெளியிலிருந்து நோக்கும்பொழுது முகில் தொட்டு நிற்பது போன்று காட்சியளிக்கின்ற இம்மலை நாகமலையைப் பக்கத்தில் கொண்டுள்ளது. தென் கிழக்காகச் செல்லும் ஐந்தலைப் பொதிகையின் நீர்பிரிமேடு (Water Shed) நாங்குநேரி வரை வருகிறது. இவ்விடமே மேற்குத் தொடர்ச்சி மலை தெற்காகச் செல்லத் தொடங்கும் பகுதியாக அமைகிறது. இது இங்கு திரும்பவும் அகலத்தை இழந்து, வன்சரிவைப் பெறுகிறது. திருக்குறுங்குடியில் இத்தொடர் 6000 அடி உயரத்தையடைகிறது. திருநெல்வேலி மாவட்டத்தின் மேற்குத் தொடர்ச்சி மலை பணகுடிக்கு வடக்கில் முடிவடையும்பொழுது ஒரு சிறு கணவாயை உருவாக்கி முடிவடைகின்றது.

பணகுடிக்கப்பால் திரும்பவும் மலைகள் உயர்ந்து ஒரு சில மைல்களுக்கப்பால் சரிகிறது. இச் சரிவின் முடிவிற்கப்பால் காணப்படும் ஒரு தனித்த மலை அராம்போலி கணவாய் என்ற ஒன்றை உருவாக்க மேற்குத் தொடர்ச்சி மலைக்கு உதவுகிறது. இத் தனித்த மலையின் அடிவாரம் கடலிலிருந்து 2—3 மைல்கள் தூரத்திலும் குமரி முனைக்குச் சற்று மேற்கிலும் அமைகிறது.

இராமநாதபுரம் மாவட்டத்தில் மேற்குத் தொடர்ச்சி மலை, சீவல்லிபுத்தூர் வட்டத்தின் வடமேற்குப் பகுதிகள் வழியாகச் செல்கிறது. இம் மலைத்தொடரையும், திருப்பத்தூர் வட்டத்திலுள்ள பிரான் மலையையும் தவிர இம்மாவட்டம் ஒரே வெட்ட வெளியாக அமைகிறது. நிலம் பொதுவாகத் தென் கிழக்கு நோக்கிச் சரிகிறது.

திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள குற்றாலத்தைப்போன்றே ராஜபாளையம், சீவில்லிபுத்தூர் வட்டங்களில் காணப்பெறும் மேற்கு மலைத்தொடர்ப் பகுதிகள் அழகூட்டும் வளமான இயற்கைக் காட்சிகளைப் பெற்றுள்ளன. ஒரே தன்மைத்தான தாவர வகைகளும, மண்வகைப் பரவலும், பாறையமைப்புகளும்கூட இப்பகுதிகளில் காணப்பெறுகின்றன. உயர்ந்த பாசி படர்ந்த மலைச்சரிவுகள் (Moss-dried Mountain-slopes) மணமகள் போன்று எழுந்து மறையும கதிர்களால் அலங்கரிக்கப்பட்டுள்ள காட்சி, கண்கொள்ளாக் காட்சியாகும். இவ்வழகுக்கு அழ

கூட்டும் வகையில் சிறுநீர்க் கீற்றுகள் மலைச் சரிவில் சரிந்தோடு கின்றன. ராஜபாளையத்திற்கருகில் தேக்கு மரத் தோட்டங்கள் விண்ணைத் தொடும்படி நிற்கும் காட்சியும் ரம்மியமான காட்சி யாகும்.

**சீவில்லிபுத்தூர் மலை :** மூவாயிரம் அடிகளுக்கு மேல் உயரம் கொண்டுள்ள சீவில்லிபுத்தூர் மலைப்பகுதிகள் வண்ணச் சோலைத் தீவுகளாகக் கொண்டமைகின்றன. இச் சோலைகள் மேற்கு மலைத் தொடர் சோலைகளைப் போன்றல்லாது அடர்த்தியின்றியும், அதிக வளமின்றியும் காணப்படுகின்றன. இவற்றிற்குக் காரணம் யாதெனின் மேல்பழனி மலைகள் இப் பகுதிகளுக்கு மழையைத் தராததேயாகும். இதன் காரணமாக இப் பகுதிகள் ஈரப்பதம் குறைந்தவைகளாகவே காணப்பெறுகின்றன.

**திருவண்ணுமலை :** சீவில்லிபுத்தூருக்கருகில் காடுகளடர்ந்த முகடுகளின் மேலிருப்பது அழகர் கோயில். அழகர் கோயிலின் அடிவாரத்தில் காணப்பெறும் பேரகழியின் வழியாக ஊர்ந்து செல்லும் ஒரு சிற்றருவி இம் மலைக்கு அணி செய்வதாய் அமைந் துள்ளது. சீவில்லிபுத்தூருக்கு வடக்காக ஒன்றரைக்கல் தொலைவில், மேற்கு மலைத்தொடரின் அடிவாரத்தில் சிறுகுன்ருக நிற்பது திருவண்ணுமலை. இம் மலையின் உச்சியில்தான் மகா விஷ்ணு கோயில் அமைந்துள்ளது.

**குன்னக்குடிக்குன்று :** சமநிலப் பகுதிகளில் சிதறிக் காணப் படும் எஞ்சிய குன்றுகளில் மேல வாணரிருப்பு, பிரான்பட்டி, பூலாங்குறிச்சிமலை போன்றவை குறிப்பிடத்தக்கனவாகும். திருப் பத்தூர் வட்டத்திலுள்ள குன்னக்குடிக்குன்று அழகிய மயில் போன்று காட்சியளிக்கிறது. இக் குன்றின்மேல் குன்று தோறாடும் குமரன் 'சுப்பிரமணியன்' என்னும் பெயரில் வடக்கு நோக்கி அமர்ந்துள்ளான். இக் குன்றின் அடிவாரத்தில் அழகிய குகைக் கோயில் ஒன்றும் உள்ளது.

**பறம்புமலை :** திருப்பத்தூரிலிருந்து பதினைந்துகல் தொலைவி லுள்ளதும், சதுர்வேதி மங்கலத்திலிருந்து ஐந்துகல் தொலைவி லுள்ளதுமான பிரான்மலை, குறுநில மன்னனும், கொடை வள்ளலுமான வேள்பாரி ஆட்சிபுரிந்த மலையாகும். சதுர்வேதி மங்கலத்திற்குக் கவிச்சக்ரவர்த்தி கம்பன் ஒரு தடவை வருகை புரிந்ததாகவும் கூறப்படுகிறது. பிரான்மலை பறம்புமலையென்றும் கொடுங்குன்றமென்றும் அழைக்கப்பெறுகிறது.

**ஆறுகள்**

மேற்குமலைத் தொடருக்கும், கிழக்கு மலைத்தொடருக்கும் இடைப்பட்ட சமவெளிப் பகுதி மேற்கு-கிழக்காகச் சரிந்து காணப்படுகிறது. இதனால் மேற்குமலைத் தொடரில் தோன்றும் ஆறுகள் யாவும் மேற்கினின்றும் கிழக்காக ஓடி வங்கக்கடலில் கலக்கின்றன. தமிழகத்தின் சிறந்த ஆறுகளிலொன்றான வைகை பாண்டிய நாட்டை வளப்படுத்துகிறது. பழனி மலையில் தோன்றும் இவ் வாறு மதுரை மாநகருக்குச் சீரையும், சிறப்பையும் வழங்குகிறது. மதுரையைக் கடந்து, கிழக்காகப் பாய்ந்து வங்கக் கடலுடன் கலக்கிறது. இது வற்றுகின்ற ஒன்றாதலால் ஆண்டு முழுவதும் இதில் நீர் ஓடுவதில்லை. மேற்கு மலைத் தொடரில் பொழியும் மழையை அணைகள் கட்டி வைகையில் திருப்புவதால் ஒரு சில மாதங்களைத்தவிர மற்ற மாதங்களில் இதில் நீர் ஓடுகிறது. இதனைப் 'பொய்யாக் குலக்கொடி' என்று சங்க இலக்கியம் பேசுகின்றது.[1]

பண்டைக் காலத்தில் வைகையின் போக்கு வேறாக இருந்ததை இலக்கியங்களின் மூலம் நாம் அறிந்து கொள்கிறோம். பழனியின் சரிவுகளில் வழிந்து வரும் மஞ்சளாறு தேவதானப் படிக்கருகில் 200 அடி உயரங்கொண்ட ஒரு நீர்வீழ்ச்சியை உருவாக்குகின்றது. பின்னர் வத்தலகுண்டுவைக் கடக்கும் பொழுது கீழ்பழனியில் எழும் ஐயம்பாளையம் என்ற ஆறு இதனுடன் கலக்கிறது. பின்னர் இரண்டறக் கலந்த இவ் வாறுகள் வைகையில் வீழ்கின்றன. இச் சங்கமத்தினருகிலேயே வைகை, தென்கிழக்காகப் பாய்கிறது. நாகமலைப் பகுதிகளில் வைகை, பேரணை, சிற்றணை என்ற இரு அணைகளால் தடுக்கப் படுகிறது. பேரணை பெரியாற்றில் ஓடுகின்ற நீர் தொடர்ந்து நீர்ப் பாசனத்திற்கு உதவ வழிசெய்கிறது. வைகையுடன் சுருளியாறு கலக்க வழி செய்யப்படுவதற்குமுன், வைகை ஒன்றிரண்டு வாரங்கள் மட்டுமே வெள்ளப்பெருக்கைக் கொண்ட ஓராறாக இருந்து வந்தது. அச் சமயத்தில் வைகையின் நீர்ப்பெருக்கு பாசனத்திற்குப் போதுமானதாக இல்லை. வங்கக்கடலுள் கலக்கும் சமயத்தில் இவ் வாறு ஒரு சிற்றோடையின் தன்மையை மட்டுமே பெற்றிருந்தது.

குண்டாறும் அதன் உபநதிகளும் திருமங்கலம் என்ற நகரத்தின் பக்கமாக ஓடுகின்றன. ஆனால், இராமநாதபுரத்திலுள்ள காமுடி என்ற நகரத்தையடையும்வரை இவ் வாறுகளின்

1 சிலம்பு-புறஞ்சேரியிறுத்த காதை. 169-170.

நீர்ப்பாசனத்திற்குப் பயன்படுவதில்லை. இவ்வாறு சீரற்ற நிலையைக் கொண்டிருப்பதால், ஒரு நாளில் வெள்ளப் பெருக்கும் மறுநாளில் வரண்ட நிலையும் கொண்ட ஒரு சிற்றாறாகவே இது உள்ளது.

**மணிமுத்தாறு**

திருமணிமுத்தாறும் பாலாறும் மேலூர் வட்டத்திற்கு வடக்கில் ஓடுகின்ற ஆறுகள். இவ் வாறுகளும் சீரற்றத்தன்மை கொண்டவைகளாதலால் முக்கியத்துவம் குறைந்தவைகளாகக் கருதப்படுகின்றன. ஆனால், கடைப்போக்கில் பயனுள்ள ஆறுகளாக விளங்குகின்றன. மதுரை மாவட்டத்தின் வடக்கில் இருக்கும் திண்டுக்கல் பழனி சமநிலப் பகுதிகளில் இணையாகப் பாயும் நான்கு சிறு ஆறுகள் பழனி மலையில் தோன்றிப் பின்னர் அமராவதியிலும், காவிரியிலும் கலக்கின்றன. இச் சிற்றாறுகள் கொடவனாறு, நங்காஞ்சி, நல்ல தங்கை, சண்முகநதி என்பவையாம். குந்தாறைப் போன்றே இவைகளும் ஒரு நாள் வெள்ளப் பெருக்குடனும் மறுநாள் சிறுத்தோடும் நீர் கொண்டவையாகவும் விளங்குகின்றன. விருபாக்சியினருகில் விழும் அழகான நங்காஞ்சி வீழ்ச்சி இவ் வாற்றமைப்புகளில் சிறப்பமைப்பாகும். இவ் வாறுகளில் மிகுந்த பயனளிப்பதாக விளங்குவது வில்பட்டி, பூம்பாறைப் பள்ளத்தாக்குகளில் வழிந்தோடும் சண்முகநதியாகும்.

மேற்குறித்த ஆறுகளனைத்தும் மதுரை மாவட்டத்தின் வெளிப்புறப் பகுதிகளை வளப்படுத்தும்பொழுது வைகை இம் மாவட்டத்தின் மத்திய பகுதியில் வளங்கொழிக்கச் செய்கிறது. மேற்கூறிய நான்கு சிற்றாறுகளும் முடிவில் வைகையில் வீழ்கின்றன. இவைகள் வைகையில் கலந்த பின்னர், குறிப்பிடும் வகையில் எவ் வாறும் வைகையில் கலப்பதில்லை.

**சுருளியாறு :** வளைந்தோடும் சுருளி, கம்பம் பள்ளத்தாக்கின் தலைப்பகுதியை வளமாக்குகிறது. இவ் வாற்றின் தலைப்பகுதி நீர் கிளைக் குன்றுகளின் வன்சரிவில் வீழ்ச்சியாகி மாறி பள்ளத்தாக்கின் அடிப்பகுதியை அடைவது ஒரு வனப்பூட்டும் எழில். சமீபகாலம்வரை முக்கியத்துவம் பெற்றிராத இவ் வாறு பெரியாற்றின் குறுக்கே கட்டப்பட்ட அணைகளின் உதவியாலும், இவ் வணைகளிலிருந்து நீர் பிரிமேட்டைக் குடைந்து உருவாக்கப் பட்ட சுரங்க வழியின் வாயிலாகக் கொண்டு வரப்பட்ட நீராலும் முக்கியத்துவத்தைப் பெற்றுள்ளது. இதனல் வழிந்தோடும் நீர்ப்பெருக்கைப் பெற்றுள்ள சுருளி கம்பம் பள்ளத்தாக்கை

வளப்படுத்துகிறது. தற்போது சுருளியாறுனது 9-10 மாதங்களுக்கு நீர்ப்பெருக்கைக் கொண்ட ஒன்றாகத் திகழ்கிறது.

**தேனியாறு :** தேனி என்ற உபநதி அல்லி நகரத்திலிருந்து 10 மைல் தொலைவில் சுருளியுடன் கலக்கிறது. தேனி ஒரு வற்றாத ஆறு. அதோடு இது போடிநாயக்கனூர் பள்ளத்தாக்கின் வழியாகப் பாய்ந்தோடுகிறது. சுருளி, தேனி சங்கமத்திற்குக் கிழக்கில் இரண்டு மைல் தொலைவில் இப் பிணைந்த நீர்நிலை வைகையுடன் சங்கமமாகிறது. இதனுல் ஆழமான வேகம் குறைந்த ஆருக மாறுகின்ற வைகை திசையிலும், போக்கிலும் மாறுபாடடைந்து ஆண்டிப்பட்டி, நாகமலை ஆகியவைகளின் வடபகுதிச் சரிவில் வழிகின்றது. இங்குதான் வராக நதியும், மஞ்சளாறும் வைகையில் கலக்கின்றன. மேல்பழனியில் தோன்றும் வராக நதி வைகையுடன் கலக்குமுன், பெரியகுளம் என்ற சிறு நகரைத் தழுவிப் பாய்ந்து பாம்பாற்றில் கலக்கிறது. இவ் வாறே பின்னர் கோடையில் ஐந்தருவிகளை உருவாக்குவதுடன் அழகான நீர்வீழ்ச்சிகளையும் உருவாக்குகிறது.

**தண்பொருநை :** தண்பொருநை திருநெல்வேலி மாவட்டத்தை வளமாக்கும் நதிகளுள் ஒன்று. இது 75 மைல் நீளம் உடையது; 1750 சதுர மைல் நிலத்தைச் செழிப்பாக்குகிறது. சமநிலத்தில் முதன் முதலாக இதனுடன் கலக்கும் உபநதி மணிமுத்தாறு. ஆழ்ந்த செங்கல் தேரிச் சோலையில் எழும் மணிமுத்தாறு வரட்டாறு, குசான் குவியாறு என்பவைகளால் அதிக நீருடைய ஆருக மாற்றப்படுகிறது. குசான் குவியாறு கருமண்டி அம்பன் அணையிலிருந்து வழிந்து வரும் நீராலும், கீழ் மணிமுத்தாருலும் இன்னும் அதிகமான நீரைப் பெறுகிறது. பேயாறு, பாம்பாறு, உள்ளாறு, காரியாறு, சேர்வையாறு ஆகியன மலைமேல் தோன்றி பொருநையுடன் மலையிலேயே கலக்கிறது.

**ஜம்பு நதி :** ஜம்பு நதி, கடயம், பெரும்பட்டு போன்ற இடங்களுக்கு மேற்கில் குளிராட்டி மலையில் தோன்றுகிறது. இராவணசமுத்திரத்தில் இது இராம நதியுடன் கலக்கிறது. இராம நதி மேலைக் கடயத்திற்குத் தெற்கே செங்குத்தான மலையிலிருந்து ஓடி வருகிறது. ஜம்புநதி இராம நதியில் கலந்த பின் இணைந்த ஆறு, வராக நதியென வழங்குகிறது. ஜம்பு நதி மூன்று அணைகளாலும், இராம நதி ஓரணையாலும், வராக நதி இரண்டு அணைகளாலும் தடுக்கப்படுகிறது.

**வராக நதி :** வராக நதி தன்போக்கில் ஓடி வரும்போது சிவசைலத்திற்குமேல், மலைமுகடுகளில் எழுந்து வழியும் கருணை

யாற்றுடன் பாப்பான்குளத்துக்கருகில் கலக்கிறது. பின்னர் இணைந்த ஆறாக ஓடி வந்து தண்பொருநையில் திருப்புடைமருதூருக்கருகில் கலக்கிறது. ஆண்டவன் கருணைபோல், ஆண்டு முழுவதும் வற்றாத இது கடனாநதி எனவும் பெயர் பெறுகின்றது.

**பச்சையாறு :** களக்காட்டு மலையாகிய வெள்ளி மலையிலே பச்சையாறு தோன்றுகிறது. இது தருவை என்னுமிடத்தில் பேராற்றில் கலக்கிறது. பேராற்றில் கலப்பதற்கு முன்பு இது நாங்குநேரி, திருநெல்வேலி வட்டங்களைச் செழிப்பாக்கி வருகின்றது. பேராறு ஆகிய பொருநையில் சிற்றாறு என்பது சீவலப்பேரியில் வந்து கூடுகிறது. இது திருக்குற்றாலமலையாகிய திரிகூடமலைமேல் தோன்றி குற்றாலம், தென்காசி, கங்கைகொண்டான் வழியாக நாற்பது மைல் ஓடுகிறது.

பண்புளிமலைமீது தோன்றும் அனுமாநதி சொக்கம்பட்டி மலைமேல் தோன்றும் கருப்பாற்று நீரை ஏற்றுப் பன்னிரண்டு கல் தொலைவு ஓடிச்சென்று வீரகேரளன்புதூருக்கு அருகே சிற்றாற்றில் சேர்கிறது. இதற்கு மேலே மலையடிவாரத்திலே மந்தளம்பாறையிலிருந்து ஓடிவரும் அழுதகண்ணீர் ஆறும் ஐந்தருவி ஆறும் சிற்றாற்றில் இணைகின்றன. இச் சிற்றாற்றில் கூடுகின்ற மற்றொரு ஆறு உப்போடையாகும். உப்போடைச் சிந்தாமணிப் பக்கம் தோன்றி கழுகுமலையில் உருவாகிப் பல குளங்களுக்கு நீரினை அளித்து, இறுதியில் சீவலப்பேரியின் அருகில்தான் சிற்றாற்றில் சேர்கிறது. சீவலப்பேரி முக்கூடல் எனவும் அழைக்கப் பெறுகிறது. பேராறு, உப்போடை, சிற்றாறு ஆகியன மூன்றும் கூடுமிடமே முக்கூடல் ஆகும். பேராறு, அம்பாசமுத்திரம், சேரன்மாதேவி, திருநெல்வேலி, சீவைகுண்டம் முதலான நகரங்களின் வழியே ஓடி கொற்கையருகே கடலில் சங்கமம் ஆகிறது.

நாங்குநேரி வட்டம் (பச்சையாற்றுக்குத் தென்புறம் உள்ளது) கருணையாறு, நம்பியாறு, அனுமாநதி – முதலான நதிகளால் வளப்படுத்தப்படுகிறது.

**நம்பியாறு :** மகேந்திர மலைச்சரிவில் உள்ள மாயம்பரம்பு சோலையில் எழும் நம்பியாறு கீழ்மணிமுத்தாறிலிருந்து பிரிந்து வரும் ஒரு கால்வாயில் நீர்வளம் பெறுகிறது. தாமரையாறு, கோம்பையாறு, கோடம்டியாறு போன்ற சிறு நதிகள் திருக்குறுங்குடியருகில் சமநிலமடைந்து பின்னர் தென் வழியாகப் பாய்ந்து கடலையடைகின்றன. திருவாங்கூரின் வட்டத்திற்குள் எழுகின்ற அனுமாநதி இருபது மைல் நீளமுடைய போக்கிற்குப்

பின் இம்மாவட்டத்தின் எல்லையிலிருந்து ஐந்து மைல்களுக்குக் கிழக்கே கடலுடன் கலக்கிறது. இவ்வாறு ஒரு வேகமான ஆறாகவும், மிகுந்த பயனுடையதாகவும் உள்ளது.

**வைப்பாறு:** இராமநாதபுரம் மாவட்டம், ஆறுகளைவிட நீர்த் தேக்கங்களுக்கே பெயர் பெற்ற ஒரு மாவட்டம். ஒரு சில தனித்த குன்றுகளைத் தவிர வேறெந்த பெருமலைப் பகுதிகளும் காணப் படா இம் மாவட்டத்தில் நீர்த்தேக்கங்களே பெயர் பெற்றவை களாகத் திகழ்வதால் இதை ஏரி மாவட்டம் என அழைப்பர். சீவல்லிபுத்தூர் வட்டத்தில் சரிகின்ற மேற்கு மலைத்தொடர் மட்டுமே ஒரு சில சிற்றாறுகளின் தோற்றுவாயாக அமைகிறது. பெரியாறு, நங்கனத்தாறு, முடங்கியாறு போன்ற பல ஆறுகள் வற்றுகின்ற நதிகளாக விளங்குகின்றன. இவ் வாறுகளெல்லாம் இங்குள்ள பல சிறு, பெரு நீர்த்தேக்கங்களில் தான் முடிகின்றன. பின்னர் எல்லா ஆறுகளும் ஒருங்கிணைந்து வைப்பாறு என்ற ஒரு பெரும் ஆறாக சாத்தூர் வட்டத்தின் வழியாக ஊர்ந்து பின்னர் திருநெல்வேலி மாவட்டத்தில் நுழைகிறது.

**குந்தாறு:** இம் மாவட்டச் சமநிலங்கள் வைகையாலும் மற்ற சிறு ஆறுகளாலும்கூட பயன்பெறுகின்றன. வைகை யாறு வடமேற்கெல்லையான சிவகங்கை வட்டத்தின் வழியாக இராமநாதபுரத்தினுள் நுழைகிறது. குந்தாறும்கூட இம் மாவட்டத்தின் ஆறுகளில் முக்கியமான ஒன்றாக அமைந்து பல சமநிலப் பகுதிகளை வளப்படுத்துகிறது.

**பழையாறு:** கன்னியாகுமரி மாவட்டத்தில் சில சிற்றாறுகள் ஓடுகின்றன. அவற்றுள் பழையாறே புகழ் வாய்ந்தது. பல சிற்றாறுகள் கூடுவதால் பழையாறு உருவாகிறது. இச் சிற்றாறு களில் ஒன்று மகேந்திரகிரியின் தென்புறம் தோன்றி பல ஊர்களை அணைத்து ஊர்ந்து, மணக்குடியருகில் கடலில் வீழ் கிறது. இவ் வாற்றின் தொடக்கத்தில் பண்டைக் காலத்தில் கட்டப்பட்ட ஒரு அணை 'பாண்டியன் அணை' என்ற பெயரால் வழங்குகிறது. இவற்றை மக்கள் பறளி ஆறெனஅழைக் கின்றனர்.

**தேனாறு:** நீர்வளங் குறைந்த சேது நாட்டின் (இராமநாதபுர மாவட்டம்) வழியாகப் பாய்கின்ற சிறு நதியென்னும் அழகிய பெயர் பெற்றுள்ளது. இதனையடுத்துள்ள குன்றக்குடியில் கோயில் கொண்டுள்ள இறைவன் தேனாற்று நாயகர் எனச் சாசனத்தில் குறிக்கப்பட்டுள்ளார்.[1]

[1] 25 of 1909.

**சிலம்பாறு**

இச் சிறு ஆறு திருமாலிருஞ்சோலையில் தோன்றிப் பாய்ந்த செய்தியினைச் சிலப்பதிகாரம் செப்புகின்றது.

'நிலம்பக வீழ்ந்த சிலம்பாற் றகன்றலை'[1]

'அயங்கும் அருவி யார்த்தமிழ்ப் பிழியச்
சிலம்பா றணிந்த சீர்கெழு திருவில்
சோலையோடு தொடார் மொழி மாலிருங்குன் றம்'[2]

என்னும் இலக்கிய அடிகள் அன்று சிலம்பாறு ஓடியதனைத் தெரிவிக்கின்றது.

**குமரியாறு**

குமரியாறு, கன்னியாகுமரிக்குத் தெற்கே ஓடியது. கடல் கோளின் விளைவால் அது கடலில் மூழ்கிவிட்டது. பண்டு குமரியாறு வளம் பெருக்கி வந்ததனைச் சிலப்பதிகார உரையாசிரியர் அடியார்க்கு நல்லார் 'அக்காலத்து அவர்............. குமரியாகிய பௌவமென்றூர் என்றுணர்க' என்று குறிப்பிடுகின்றூர்.[3]

**கடற்கரை**

பாண்டிய நாடு நீண்ட நெடிய, அழகிய கடற்கரையைத் தன்னகத்தே கொண்டுளது. இது பண்டு முத்துக்கரை[4] எனப்பட்டது. இங்கு முத்து அதிகம் விளைந்தமையின் வெளி காட்டினர் இவ்வாறு அழைத்தனர். இக் கடற்கரை கட்டுமாவடியிலிருந்து குமரி வரை நீண்டு செல்கிறது. இக் கடற்கரையில் பண்டு தென்னந்தோப்புகளும் கள்ளிப் புதர்களும், மீனவக் குடிசைகளும் மண்டிக் கிடந்தன. இன்றும்கூட இதே நிலை தான் தென்படுகிறது. இக் கடற்கரையிலுள்ள சில பகுதிகள் இராமாயண காவியத்துடன் தொடர்புபடுத்தப் பெறுகின்றன. இக் கடற்கரைப் பகுதிகளில் பல துறைமுகங்கள் காணப் பெற்றன. அவற்றுள் தொண்டி, தனுஷ்கோடி, பாம்பன், கீழக்கரை போன்றவை குறிப்பிடத்தக்கனவாகும். தேவிபட்டினமும்

1 சிலம்பு-காடுகாண் காதை-108.

2 பரிபாடல் 15-21-23.

3 சிலம்பு 8:12. அடியார்க்கு நல்லார் உரை.

4 சோழ நாட்டுக் கடற்கரை சோழ மண்டலக் கடற்கரை எனவும், சேர நாட்டுக் கடற்கரை மலையாளக் கடற்கரை எனவும் அழைக்கப்பட்டது போன்று பாண்டிய நாட்டுக் கடற்கரை முத்துக் கடற்கரை (Pearl Fishery Coast) என அழைக்கப்பட்டது.

இராமேசுவரமும்கூட சிறிய துறைமுகங்களாக அன்று திகழ்ந்தன. இக்கடற்கரையில் மீனவ நத்தங்களான நம்புதலை, புதுமாடம், மணக்குடி, பனிய குளம், உச்சிப்புளி, பெரிய பட்டினம் போன்றவை பரவிக் கிடக்கின்றன. இங்கமைந்துள்ள துறைமுகங்களுள் தூத்துக்குடித் துறைமுகமே வாணிகச் சிறப்பு வாய்ந்தது.

பாண்டிய நாட்டுக் கடற்கரையில் புதினமிக்க திருத்தலங்கள் பல காணப் பெறுகின்றன. இவற்றுள் முதன்மையானது இராமேசுவரம் ஆகும். அகில இந்திய புண்ணியத் தலமாகக் கருதப்பெறும் இராமேசுவரம், கங்கைக் கரையிலுள்ள காசியுடனே வைத்தெண்ணப்படும் சிறப்பால் காசி-இராமேசுவரம் என அழைக்கப் பெறுகிறது. பாக் ஜலசந்தியில் அமைந்துள்ள இச்சிறு தீவு பதினாறுகல் நீளம் கொண்டது. மணற்பாங்கான இத்தீவில் புதர்களும், வளர்ச்சி குன்றிய தாவரங்களும் ஏராளமாகக் காணப்படுகின்றன.

இத் தீவில் இராமேசுவரம், பாம்பன் என்னும் இரு கிராமங்கள் அடங்கியுள்ளன. பாம்பன் தனுஷ்கோடியையும் தன்னுள் கொண்டுள்ளது.

சமய மையமாகவும், பாண்டியரின் பண்பாட்டு மையமாகவும், அனைத்திந்திய புனிதத் தலமாகவும் விளங்கி வரும் இராமேசுவரத்தில் உள்ள கோயிலில் பாண்டியர் காலக் கல்வெட்டுகளும், யாழ்ப்பாண வேந்தர் கல்வெட்டுகளும் காணப்படுகின்றன. இலங்கைக்கும் பாண்டிய நாட்டிற்கும் இணைப்பாக விளங்கிய இத் தீவு, தமிழக வரலாற்றில் சிறந்ததோர் இடத்தினைப் பெறுகின்றது.

பண்டு இராமேசுவரம் தமிழகத்துடன் நிலப்பரப்பில் இணைந்தே இருந்தது. இற்றைக்கு ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்பு வீசிய புயலாலும், அடித்த வெள்ளத்தாலும் இப்பகுதி உடைந்து தனித்தீவு ஆயிற்று. இவ்வாறு தமிழகத்தினின்றும் பிரிக்கப்பட்ட இத் தீவின் இடைவெளி, போர்த்துக்கீசியர் வாணிபத்தின் பொருட்டு கடலாழப்படுத்தப்பட்டதால் விரிவடைந்தது.

**கொற்கைக் குடாக்கடல்**

சங்க காலத்தில் ஆர்கலிக் கடல் தரையைக் குடைந்து உள்ளே புகுந்து வந்திருந்தது. அதுவே அன்று கொற்கைக் கடல் என அழைக்கப்பட்டது. அது கடற்கரையிலிருந்து

ஐந்துகல் தொலைவு உள்நாட்டில் ஊடுருவியிருந்தது. கொற்கைக் கடலில் தாமிரபரணி ஆறு சேருமிடத்தில் கொற்கைத் துறை முகம் விளங்கியது. கி. பி. பத்தாம் நூற்றாண்டிற்குப் பின் மணல் தூர்ந்த காரணத்தால் இத் துறைமுகம் அழிந்தது. கொற்கைப் பட்டினம் இருந்த இடம் தற்பொழுது 'மாற மங்கலம்' என்று அழைக்கப்படுகின்றது.

**கீழக்கரை :** பாண்டிய நாட்டின் கடற்கரையில் உள்ள ஊர்களுள் கீழக்கரை ஒன்றாகும். பண்டைக் காலத்தில் அங்கு முத்துச் சலாபம் சிறப்பான முறையில் நடைபெற்றது.

**கோடிக்கரை :** இராமேசுவரத்திற்கு அருகில் அமைந்துள்ள ஊர்களுள் கோடிக்கரை குறிப்பிடத்தக்கதாகும். தாலமி (Ptolemy) போன்ற யவன ஆசிரியர்கள் கோடிக்கரையைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளனர். இதனால் கோடிக்கரையின் சிறப்பு புலனாகின்றது.

**தீவுகள்**

பாண்டிய நாட்டுக் கடற்கரை நன்கு உடைவுபட்டுள்ள காரணத்தால் ஆங்கு இயற்கையான துறைமுகங்களும் தீவு களும் காணப் பெறுகின்றன. இத் தீவுகளில் பெரும்பாலானவை இன்றைய இராமநாதபுர மாவட்டத்தில் அமைந்துள்ளன. ஈண்டு நாம் இத் தீவுகளைப்பற்றி விரிவாக அறிந்து கொள்ள வேண்டிய அவசியமில்லையாதலின், இவைகளைப்பற்றிய ஒருசில செய்திகளை மட்டும் காண்போம்.

**ஷிங்கிள் தீவு (Shingle Island)**

சிங்களத்தீவு என்றே அழைக்கப்பெறும் இத் தீவு இலங்கைத் தீவினின்றும் வேறுபட்டது என்பது நினைவிற்கொள்ளத்தக்கது. சிங்கள மீனவர்கள் இங்கு நெடுங்காலம் தங்கியிருந்து மீன்பிடி தொழிலில் ஈடுபட்டிருந்ததாலேயே இத் தீவு இப்பெயர் பெற்ற தாகக் கூறுகின்றனர். 'ஷிங்கிள் தீவு' என்பதே பின்னர் சிங்களத் தீவு எனத் திரிந்தது போலும்.

**குருசாடித்தீவு**

இராமேசுவரத்திலிருந்து ஏறத்தாழ 250 மீட்டர் தொலைவில் 'குருசாடித்தீவு' என்னும் பெயரில் தீவொன்று காணப்படுகிறது. இது இராமேசுவரத்திற்கு அப்பால் மன்னார் வளைகுடாவி லுள்ளது. முத்துக் குளித்தல் இன்றும் இத் தீவின் முக்கிய தொழிலாகும்.

பூமுரிச்சான்தீவு (பள்ளிவாசல், புள்ளிதீவு) என்பது இராம நாதபுரத்தின் கிழக்கு – தென் – கிழக்குக் கடற்கரையிலிருந்து இருபத்தைந்துகல் தொலைவில் உள்ளது. பூமுரிச்சான் என்னும் செம்படவனின் பெயரால் இத் தீவு பெயரிடப்பட்டதென்று கூறுவர். இது முருகைப் பாறைகளாலான (Coral) ஒரு தீவு ஆகும். இம் முருகை இராமேசுவரத்திலிருந்து தூத்துக்குடி வரை நீண்டு காணப்படுகிறது.

மணலித் தீவைச் சுற்றியும் மணலி மீன்கள் அதிகமாகக் காணப்படுகின்றன. முருகைப் படிவுகளும் பரல் பரப்பப்பட்ட கடற்கரையும் இங்குள்ளதால் கலங்கட்டி மீன் பிடித்தல் (Kalanghatti Fishing) என்ற புதியமுறை இங்கு பின்பற்றப்படு கிறது.

முசல்தீவு, மண்டபத்திலிருந்து தென்மேற்கில் ஆறரை கல் தொலைவிலுள்ளது. முயல்கள் இத்தீவில் அதிகமாக இருந்த தால் இத் தீவு இப்பெயர் பெற்றதாம்.

முளித்தீவு என்பது புதுமாடத்திலிருந்து ஆறரைக்கல் தொலைவில் உள்ள மற்றொரு தீவாகும். இது வலைத்தீவிற்கும் முசல் தீவிற்கும் இடையில் அமைந்துள்ளது.

வலைத்தீவு என்னும் பெயர் வலைமீன் என்னும் ஒருவகை மீன் இங்கு அதிகமாகக் காணப்பெறுவதாலும், இராமாயண வாலியுடன் தொடர்பு கொண்டதாலும் இதற்கு இடப்பட்ட தாகக் கூறுவர். இது கித்தோரியம்மன்தீவு எனவும் அழைக்கப் பெறுகிறது. இங்கு கித்தோரியம்மனின் கத்தோலிக்கக் கோயில் ஒன்றும் உளது.

தலையாரித்தீவு புதுமாடத்திலிருந்து ஒன்பதுகல் தொலைவி லுள்ளது. இத் தீவு முருகைகளின் முடிவாக அமைகிறது. தலையாரித்தீவு வலைத்தீவிலிருந்து ஒரு சிறு கால்வாயால் பிரிக்கப் படுகிறது. ஆனாலும், பண்பு நலன்களில் இவை இரண்டும் ஒத்தே காணப்படுகின்றன.

கீழக்கரை, தலையாரித்தீவு ஆகியவற்றிலிருந்து ஐந்துகல் தொலைவில் தூப்பாத்தீவு உள்ளது. அப்பம் என்ற தாவரம் இங்கு மிகுதியாக வளர்ந்ததால், இதற்கு இப்பெயர் வந்ததாகக் கூறுவர். இங்கு வறட்சி மிகுதியின் காரணமாக மக்கள் வாழமுடியவில்லை; புதர்களே வளர்ந்துள்ளன.

பூவரசங்கல்லித்தீவு என்ற தீவொன்றும் இங்குள்ளது. இது கீழக்கரையிலிருந்து தென்மேற்கில் ஐந்தரைக்கல் தொலைவில் அமைந்துள்ளது.

**கச்சத்தீவு**

இராமேசுவரத்திலிருந்து வடகிழக்கே பத்துக்கல் தொலைவில் கச்சத்தீவு காணப்படுகிறது. பண்டு பாண்டிய நாட்டின் பகுதியாக இருந்த இத்தீவு இன்று ஸ்ரீலங்காவுடன் இணைந்துவிட்டது. இப் பகுதிகளில் அசுத்த நீர் காணப்படுகின்ற காரணத்தாலேயே இது 'கச்சா' தீவு என அழைக்கப்பட்டதாகக் கூறப்படுகிறது.

மேற்கூறப்பட்ட தீவுகளேயன்றி பழைய முளித்தீவு, அணைப் பார்தீவு, நல்லத்தண்ணித்தீவு, சுளித்தீவு, உப்புத்தண்ணித்தீவு முதலான தீவுக் கூட்டங்களும் காணப்படுகின்றன

தெற்கு முகமாகச் செல்லும்போது, மன்னார் வளைகுடாவில் தீவுகள் அதிகமாகக் காணப்படவில்லை. இராமநாதபுரத்தைப் போலவே, தெற்கில் திருச்செந்தூர் வரையில் கடற்கரை தாழ்ந்தும், பன்மரங்கள், புதர்கள் அடர்ந்த காடுகளைக் கொண்டதாகவே காணப்படுகின்றது. இக் கடற்கரைப் பகுதியில் முக்கியமாக உள்ள இடம் தாழ்ந்த பாறை ஓங்கலான திருச்செந்தூரேயாகும். இங்கிருந்து ஏறத்தாழ ஏழுகல் தொலைவுவரை கடற்கரையானது படிப்படியாகத் தாழ்ந்து மணப்பாடு என்றவிடத்தில் மணல் சூழ்ந்த கடற்கரையாக மாறுகிறது. மணற்பாறை கடலுள் நீண்டு குலசேகரபட்டினத் துறைமுகத்தின் தென் பாகமாக அமைகிறது. இங்கிருந்து கடற்கரை திடீரெனத் தென் மேற்காகத் திரும்பி குமரி வரைச் செல்கிறது. இப் பகுதியில் கடற்கரை மேடு பள்ளங்கள் நிறைந்த மறைந்ன்று பகுதிகளாக விளங்குகிறது. தெற்கில் குட்டங்குடி, இடிந்த கரைப் பகுதிகளில் கடற்கரைக் கடலுள் நுழைந்து காணப்படுகிறது.

பாண்டியர் காலத்திலிருந்தது போலவே இன்றும் இராமேசுவரத்திலிருந்து, குமரிமுனை வரையிலுள்ள கடலுள் நுழைந்து தென்படும் பகுதிகள் முத்துக்குளிப்பதற்கேற்ற பகுதிகளாகவே அமைந்துள்ளன. திருச்செந்தூரிலிருந்து வடகிழக்காக நீண்டு அமையும் முருகைப் பாரின் உட்பட்ட பகுதி சிறுகலங்கள் நிற்பதற்குச் சரியான பகுதிகளாக அமைகின்றன. வீர பாண்டியன் பட்டினத்திற்கு அப்பாலும் இவ் வமைப்பே காணப்படுகின்றன. காயல்பட்டினத்திற்கு முன் மற்றுமொரு முருகைப் பார் கடற்கரையிலிருந்து மூன்றுகல் தொலைவில் காணப்படுகிறது.

**ஈழத்தீவு (ஸ்ரீலங்கா) :**

பண்டைக் காலத்தில் ஈழத்தீவு நில அடிப்படையில் பாண்டிய நாட்டுடன் இணைந்தே இருந்ததாகப் புவியியல் வல்லுநர்கள் கூறுகின்றனர். காலம் சில சென்ற பின்னர் ஏற்பட்ட புயலாலும், கடல்கொந்தளிப்பாலும் ஈழம் தமிழ்நாட்டினின்றும் பிரிக்கப்பட்டது; இரண்டிற்குமிடையே கடலும் மண்டியது. இவ்விரண்டிற்குமிடையேயான கடற்பகுதி பண்டு அதிகமாக இருந்ததில்லை. இதனைப் பாண்டிய நாடு சென்ற ஈழ நாட்டுத் தூதுவர்கள் மிகவிரைவில் தமது துறைமுகத்தை வந்தடைந்தனர் என்ற மகாவம்சக் குறிப்பாலறியலாம்.[1]

பாண்டிய நாட்டிற்கும் இலங்கைக்கும் இடைப்பட்ட கடல், சங்க காலத்தில் ஆர்கலிக் கடல் என அழைக்கப்பட்டது. இதனை ஆர்கலிக் கடல் (Orgalic Sea) என்று தாலமியும், ஆர்கலஸ் (Argalus) என்று பெரிப்ளூஸ் நூலாசிரியரும் குறிப்பிடுகின்றனர். ஆனால், இக் காலை இது பாக்குடாக் கடல், மன்னார் குடாக்கடல் என்று அழைக்கப் பெறுகின்றது.

கடல்கோளுக்கு முன்பு பாண்டிய நாட்டின் தென்கோடிப் பகுதியும் இலங்கையின் வடகோடிப் பகுதியும் நெருங்கியே இருந்தது. பின்னர் ஏற்பட்ட கடல்கோளின் காரணமாகவே இலங்கையும் பாண்டிய நாடும் வேறுபடுத்தப்பட்டதாகத் தெரிகிறது.

பழங்கால முதற்கொண்டே பாண்டிய நாடும் ஈழமும் நெருங்கிய அரசியல் உறவும், பண்பாட்டு உறவும், வாணிக உறவும் கொண்டிருந்தன. ஆபத்து நேர்ந்த காலத்தில் ஒருவருக்கொருவர் அன்புடன் உதவி புரிந்ததுடன், திருமண உறவும் கொண்டிருந்தனர். ஈழ நாட்டு அரசியருள் சிலர் பாண்டிய நாட்டுப் பைங்கிளியாக இருந்தமை ஈண்டு குறிப்பிடத்தக்கனவாகும். பாண்டிய - ஈழ உறவுபற்றி 'பாண்டியரின் வெளிநாட்டுறவு' என்னும் பகுதியில் விரிவாகக் காணலாம்.

**பாண்டிய நாட்டின் சிறப்புமிக்க நகரங்கள்**

பாண்டிய நாட்டின்கண் வரலாற்றுச் சிறப்புமிக்க பல நகரங்களும், சைவ, வைணவ, சமண திருத்தலங்களும், துறைமுகப் பட்டினங்களும் இருந்தன. இவற்றைப்பற்றி அறிந்து கொள்ளாவிடில், பாண்டிய நாட்டுப் புவியியல் முற்றுப்பெறாது. எனவே, ஈண்டு நாம் பாண்டிய நாட்டின் தலைநகரங்களாக விளங்கிய மதுரை, கொற்கை, கபாடபுரம், மணலூர் முதலான

1 Madras Tamil Lexicon. Vol. II. P. 1166.

வைப்பற்றியும் திருச்செந்தூர், திருப்பரங்குன்றம், அழகர் கோயில் முதலான திருப்பதிகள்பற்றியும், கோட்டைகள்பற்றியும் ஒரு சிறிது காண்போம்.

**மதுரை :** பாண்டிய நாட்டின் தலைநகரம் மதுரையாகும். கல்வெட்டுகளில் மதுரை மாநகர் மதுரோதய வளநாட்டைச் சேர்ந்ததாகக் குறிக்கப்பட்டுள்ளது. இது தமிழ்க் கூடல், வண்டமிழ்க் கூடல், நான்மாடக் கூடல் முதலான பல பெயர்களால் அழைக்கப்படுகின்றது. தமிழகத்தில் சென்னைக்கடுத்த தொன்னகராகவும் இது விளங்குகின்றது. மதுரைப் பன்னெடுங்காலம் பாண்டியரின் தலைசிறந்த நகரமாக விளங்கிற்று. மதுரை மாநகர்பற்றி விரிவாகப் பின்னர் காண்போம்.

**மணலூர் :** பாண்டியருக்குத் தலைநகராய் விளங்கிய நகரங்களுள் மணலூரும் ஒன்றாகும். இது சிலகாலமே பாண்டியரின் தலைநகரமாய் விளங்கியது.

**தென்மதுரை**

பாண்டிய நாட்டின் பண்டைய தலைநகரங்களுள் 'தென் மதுரை'யும் ஒன்று. தமிழ்ச் சங்கத்தினைத் தன்னகத்தே கொண்டிருந்த இந்நகரம் கடல்கோளின் விளைவாக அழிவுற்றது.

**கபாடபுரம்**

பாண்டியரது தலைநகரங்களுள் ஒன்றான கபாடபுரம் பண்டு பெரும்புகழ் பெற்றுத் திகழ்ந்தது. இடைச் சங்கத்தின் வளர்ச்சிக்குத் தாயகமாகத் திகழ்ந்த இத் தொன்னகர் முத்து வாணிகத்தின் முடிசூடா மன்னராகவும் திகழ்ந்தது. முத்தமிழையும், முத்தையும் தன்னகத்தே கொண்டிருந்த இத் தொன்னகர் மௌரிய சந்திரகுப்தனது காலத்திலேயே (கி. மு. 325 – கி. மு. 301) பெரும் புகழ் பெற்றிருந்தது என்பதனைச் சாணக்கியர் 'பாண்டிய கவாடம்'பற்றிக் குறித்துள்ளதால் அறியலாம். ஒல்காப் பெரும்புலமைத் தொல்காப்பியரின் தொல்காப்பியம் இங்குதான் அரங்கேற்றப்பட்டதென்பதனை இறையனார் அகப்பொருளுரையால் அறியலாம். பின்னர் இம்மணி நகரும் கடல்கோளுக்கு இரையாயிற்று.

**கொற்கை**

இற்றைக்கு இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னரே கொற்கைத் தென்னாட்டுத் துறைமுகங்களுள் தலை சிறந்ததாக

விளங்கிற்று. முத்து ஏற்றுமதியில் சிறப்புற்று, செல்வச் செழுந் துறையாக விளங்கியதால் பாண்டிய வேந்தன் 'கொற்கைக் கோமான்' என்றும் 'கொற்கைத் துறைவன்' என்றும் அழைக்கப்பெற்ருன். இத் துறைமுகம் பொருநை ஆறு கடலோடு கலக்குமிடத்தில் அமைந்துள்ளது.

வாணிக மையமாகத் திகழ்ந்த கொற்கைச் சில காலம் பாண்டியரது தலைநகராகவும் திகழ்ந்தது. இதனைப்பற்றி விரிவான செய்திகளைப் 'பாண்டிய நாட்டுத் துறைமுகங்கள்' என்னும் தலைப்பில் கண்டு கொள்க.

கொற்கை அழிந்தபின் காயல், பாண்டிய நாட்டின் தலைசிறந்த துறைமுகமாகத் திகழ்ந்தது. காயலுக்குப்பின் உவரியும் சில காலம் பாண்டியரது துறைமுகமாக விளங்கியது.

**அழகர் கோயில் :** அழகர் கோயில் மதுரையிலிருந்து பன்னிரண்டுகல் தொலைவில் அமைந்துள்ளது. அழகர் சுவாமி கோயில் என்னும் புகழ்மிக்க கோயில் இங்குள்ளது. மதுரை நாட்டு மேலூர் வட்டத்தில் உள்ள அழகர் கோயில் திருமாலிருஞ் சோலை எனப்படுகிறது.[1]

**பழமுதிர்சோலை :** திருமுருகனின் அறுபடைவீடுகளில் பழமுதிர்சோலையும் ஒன்று. திருமுருகாற்றுப்படை இதனைப் 'பழமுதிர்சோலை மலைகிழவோனே' என்று சிறப்பித்துப் போற்றும். பண்டு இம்மலையில் சிவன், துர்க்கை, கணபதி, முருகன், திருமால், ஆகிய ஐவர்க்கும் தனித்தனிக் கோயில்கள் இருந்தன.

**திருப்பரங்குன்றம் :** திருப்பரங்குன்றம், மதுரைக்கருகில் அமைந்துள்ளது. ஆறுமுகனின் அறுபடை வீடுகளில் ஒன்ருன இத் திருத்தலத்தின்மீதுப் புலவர்கள் பாமாலைச் சூடியுள்ளனர். பரிபாடலில் எட்டுப்பாக்கள் திருப்பரங்குன்ற முருகனின் புகழ் பாடுகின்றன.[2] இங்குள்ள மலைப்பகுதியில் பண்டு சமணர் பலர் வாழ்ந்து வந்தனர். ஆங்குள்ள இயற்கைக் குகைத்தளத்தில் வெட்டப்பட்டுள்ள சமணப் படுக்கைகளின்மீது பொறிக்கப் பட்டுள்ள பிராமிக் கல்வெட்டுகள் இதனை உறுதிசெய்கின்றன. 'அந்துவன் பாடிய சந்துகெழு நெடுவரை' என்னும் அகநானூற்றுப் பாடல்[3] திருப்பரங்குன்றத்தின் சிறப்பைக் கூறு

[1] M. E. R. 1928-29.

[2] பரிபாடல். 5, 8, 9, 14, 17, 18, 19, 22.

[3] அகநானூறு, 59.

கின்றது. தமிழிலக்கியங்களில் இது 'தண்பரங்குன்று' எனப் போற்றப்பெறுகிறது. இப்பெயர் பின்னர் 'தென்பரங்குன்றம்' என்று மாறியது. மதுரைக்குத் தெற்கிலிருப்பதால் இது 'தென் பரங்குன்றம்' என ஆயிற்று என்றும் கூறலாம்.

**சீவலப்பேரி:** நெல்லை மாவட்டத்தின்கண் தாமிரபரணியும், சிற்றாறும், கோதண்டராம நதியும் ஒன்று கூடுமிடம் பண்டு முக்கூடல் என அழைக்கப்பட்டது. 'முக்கூடற்பள்ளு' என்னும் புகழ்மிக்க நாடகம் இவ் வூரைப்பற்றி எழுந்ததேயாகும். இம் முக்கூடலே இன்று சீவலப்பேரி என அழைக்கப் பெறுகின்றது. இராமேசுவரம் செல்லும் பக்தர்கள் சீவலப்பேரியெனும் முக்கூடலில் நீராடுதல் உண்டு.

**தேவிபட்டினம்:** பாண்டிய நாட்டின் சைவத் திருப்பதிகளில் தேவிபட்டினமும் ஒன்றாகும். இது இராமநாதபுரம் மாவட்டம் கடலோரத்தில் உள்ள சைவத் திருப்பதியாகும்.

பாண்டிய நாட்டில் வைணவத் திருத்தலங்கள் பல இருந்தன. அவற்றுள் திருக்குளந்தை, திருக்குருகூர், திருக்குறுங்குடி, திருக்கோட்டியூர், திருக்கூடல், சீவில்லிபுத்தூர் ஆகியன குறிப்பிடத்தக்கனவாகும்.

**கோட்டைகள்**

பாண்டிய நாட்டின்கண் கோட்டைகள் பல கட்டப்பட்டிருந்தன. அவற்றுள் ஒருசிலவற்றைக் காண்போம்.

**நிலக்கோட்டை:** இங்கு பாளையக்காரன் ஒருவன் கட்டிய மண் கோட்டையொன்றுள்ளது. இதனருகே சிறுமலையின் சாரலில் குலசேகரன் கோட்டை என்னும் ஊரொன்றுள்ளது. இக்கோட்டைப் பாண்டிய வேந்தனான குலசேகரனது பெயரால் அமைக்கப்பட்டது. நிலக்கோட்டைக்கு அருகில் தொட்டியன் கோட்டை ஒன்றும் உள்ளது.

மதுரையைச் சேர்ந்த திருமங்கலத்திற்கு அருகில் மேலக்கோட்டை, கீழக்கோட்டை, நடுக்கோட்டை என அழைக்கப் பெறுகின்ற மூன்று கோட்டைகள் உள்ளன.

**உக்கிரன் கோட்டை:** தமிழகத்தின் தென்கோடியில், தென்பாண்டி நாட்டில் திருநெல்வேலியிலிருந்து இருபத்தைந்து கிலோ மீட்டர் தொலைவில், மானூர் அழகிய பாண்டியபுரம் செல்லும் வழியில் இவ் வூர் விளங்குகின்றது. பாண்டியர் காலத்தில் இவ் வூர் 'கரவந்தபுரம்' என்னும் பெயரில் பெருமை பெற்று

விளங்கியது. இவ் ஊர் களக்குடி, கரவந்தபுரம், தென்களந்தை, க்ரகிரி என்னும் பல பெயர்களால் அழைக்கப் பெறுகிறது.[1]

இராமநாதபுர மாவட்டத்தில் செம்புறையும் கரிசல் மண்ணுமே மிகுதி. கடற்கரையோரப் பகுதிகளில் மண்சாரி அதிகம். சீவில்லிபுத்தூர், சாத்தூர் வட்டங்கள் குறுமண் சாரியும் செம்மண்ணும் கொண்டவைகளாக உள்ளன. செம்மண் செழுமை குன்றியுள்ளது. ஆயினும் நீர்வளம் மிகுந்த பகுதிகள் மிகுந்த வளமுடன் காணப்படுகின்றன.

**பருவகாலங்கள்**

தமிழர்கள் பண்டு தொட்டு வேளாண்மையையே முக்கியமான தொழிலாகக் கொண்டு, உணவு உற்பத்தியைப் பெருக்கி மக்களின் பசிப் பிணியைப் போக்கினர். ஒரு நாட்டின் விவசாயம் பருவமழையைப் பொறுத்தே அமைகிறது. பாண்டிய நாட்டு விவசாயப் பெருங்குடியினரும் பருவமழையையே நம்பியிருந்தனர். பாண்டிய நாட்டு விவசாயம் இரு பருவக்காற்றுகளை நம்பியே இருந்தது. பாண்டிய நாட்டிற்கு மழைதரும் பருவக்காற்றுகள் தென்மேற்கு, வடகிழக்குப் பருவக்காற்றுகள் ஆகும்.

தென்மேற்குப் பருவக்காற்று பாண்டிய நாட்டிற்கு அதிக மழையைக் கொடுப்பதில்லை. இப் பருவக்காற்று மேற்கு மலைத் தொடருக்குக் கிழக்கிலுள்ள பகுதிகளுக்கு மழைப் பொழிவைத் தருவதில்லையாதலால், இப் பகுதி வளமாக இல்லை. இப் பருவக் காற்றின் மூலமாகப் பொழியும் மழை பல ஆறுகளில் நீர்ப் பெருக்கினை ஏற்படுத்துவதால், இப் பகுதி நிலங்கள் ஓரளவு நீர்ப் பாசனம் பெறுகின்றன. பாலக்காட்டுக் கணவாயின் வழியாக உட்புகும் இப் பருவக் காற்றால் திண்டுக்கல், மதுரை, பொள்ளாச்சி, தென்காசி, குமரி போன்ற பகுதிகள் பயன்பெறுகின்றன. இராமநாதபுர மாவட்டத்தின் பகுதிகள் சில, இப் பருவக் காற்றால் ஆகஸ்டு-செப்டம்பர் மாதங்களில் மழைபெற்று வளமடைகின்றன. அவ்வாறு மழை பெறும் பகுதிகளில் பெரும் பாலானவை கடலோரப் பகுதிகளேயாகும்.

வடகிழக்குப் பருவக்காற்று, தென்மேற்குப் பருவக் காற்றைப் போன்று பாண்டிய நாட்டிற்கு அதிக மழையைக் கொடுப்பதில்லை. இக்காற்றினால் பாண்டியநாடு சொற்பமான மழையையே பெறுகின்றது. கிழக்குக் கடற்கரைப் பகுதிகளே

1 தாமோதரன், கு. 'கரவந்தபுரம்' (அச்சிடப் பெறாத ஆராய்ச்சிக் கட்டுரையைப் பார்க்க அனுமதித்த நண்பர்க்கு நன்றி.)

இதனால் மழை பெறுகின்றன. இவ் வாற்றை மக்கள் பறளியாறெனக் கூறுகின்றனர்.

**மண் வகைகள்**

மதுரை மாவட்டத்தில் செம்மண்ணே மிகுதி. கரிசல் வகைகள் ஒருசில பகுதிகளிலன்றி வேறெங்கும் காணப்படவில்லை. பழனிமலைப் பகுதிகளைத் தவிர்த்து, திருமங்கலம் வட்டத்தில் மட்டுமே கரிசல் மண் அதிகமாகக் காணப்படுகிறது. கீழ்க்காணும் அட்டவணையிலிருந்து செம்மண், கரிசல் மண் ஆகியவற்றின் விகிதாசாரங்களையும் அவைகள் காணப்பெறும் பகுதிகளையும் அறிந்து கொள்ளலாம். மண் வகையைப் பொறுத்தே தாவரங்களும் வளரும் என்பதனை நாமறிவோம்.

| வட்டம் | விகிதம் | |
|---|---|---|
| | கரிசல் மண் | செம்மண் |
| கோடைக்கானல் ........... | 36 | 64 |
| பழனி ........... | 6 | 94 |
| திண்டுக்கல் ........... | 4 | 96 |
| பெரியகுளம் ........... | 9 | 91 |
| மதுரை ........... | 14 | 86 |
| மேலூர் ........... | 0 | 100 |
| திருமங்கலம் ........... | 61 | 39 |

திருநெல்வேலி மாவட்டப் பகுதிகளிலும்கூட கரிசல் மண் குறைவாகவும், செம்மண் மிகுதியாகவும் காணப்படுகிறது. கோவில்பட்டி, சிவைகுண்டம், சங்கரநயினார்கோயில் ஆகிய வட்டங்களில் மட்டுமே கரிசல் மண்ணின் விகிதம் சற்று அதிகமாகவும் மற்ற பகுதிகளில் குறைந்த விகிதாசார அளவிலும் காணப்படுகிறது. பொதுவாக 25 விகிதப் பகுதி கரிசல் மண்ணாலும், மீதம் செம்மண்ணாலும் நிறைந்த பகுதிகளாகவும் காணப்படுகின்றது. கீழ்க்காணும் பட்டியல் இதனை விளங்கக் கூறும்.

| வட்டம் | விகிதம் | |
|---|---|---|
| | கரிசல் மண் | செம்மண் |
| அம்பாசமுத்திரம் ......... | 11 | 89 |
| கோயில்பட்டி ......... | 69 | 31 |

| | | | |
|---|---|---|---|
| நாங்குநேரி | ......... | 3 | 97 |
| சங்கரநயினார்கோயில் | ......... | 33 | 67 |
| சிவைகுண்டம் | ......... | 57 | 43 |
| தென்காசி | ......... | 8 | 92 |
| திருநெல்வேலி | ......... | 27 | 73 |
| திருச்செந்தூர் | ......... | 11 | 89 |
| மாவட்ட விகிதம் | ......... | 25 | 75 |

சில சமயங்களில் இப்பருவக் காற்றுகள் பொய்ப்பதும். இதன் விளைவாக இப்பகுதிகள் வறட்சி நிலையை அடைவதும் உண்டு இராமநாதபுர மாவட்டத்தின் சில பகுதிகள் இவ் வறட்சியால் மிகவும் பாதிக்கப்படுகின்றன. இச் சமயங்களில் காற்றின் செயல்கள் மணல் மேடுகளை உருவாக்குவது இவ் வறட்சிக் காலத்தில் எவ்வாறு காற்று ஒரு நிலத் தோற்றங்களை உருவாக்கும் காரணியாக அமையலாம் என்பதற்கு உதாரணமாக அமைகிறது.

**பயிர்கள்**

பாண்டிய நாட்டுத் தாவரங்கள்பற்றியும், விளைவிக்கப்பட்ட பயிர்கள்பற்றியும் நாம் விவரமாக அறிந்து கொள்ளவியலவில்லை. காரணம் இவை காலத்திற்குக் காலம் வேறுபடும் இயல்புடையவை. இவையனைத்தும் மண் அமைப்பைப் பொறுத்தும் தட்பவெப்ப நிலை, பருவக் காற்றுகள் ஆகியவற்றைப் பொறுத்தும் அமைகின்றன. வைகையாற்றின் கரையோரங்களில் நெல், வாழை முதலான பயிர்களும், கடற்கரையோரங்களில் தென்னையும், வறண்ட மணற்பாங்கான பகுதிகளில் பனையும், செழிப்புக் குறைவான பகுதிகளில் கம்பு, கேழ்வரகு, சோளம், துவரை, கடலை முதலான பயிர்களும் பயிராயிற்று எனக் கூறலாம். இராமநாதபுரம் பகுதிகளில் மரங்கள் நிறைந்த காடுகள் அதிகம் காணப்படுகின்றன. திருநெல்வேலிப் பகுதிகளில் ஆற்று நீர்ப்பாசனம் பெறும் பகுதிகளில் நெல் விளைந்தன.

**பறவைகள், விலங்குகள்**

பாண்டிய நாட்டில் வசித்து வந்த பறவைகள் விலங்குகள்—ஆகியவைபற்றியும் நாம் ஒரு சிறிது காண வேண்டியுள்ளது. பாண்டிய நாட்டுச் சங்க இலக்கியங்களில் இதுபற்றிய குறிப்

புகள் சில காணப்படுகின்றன. இவற்றுள் சிலவற்றைக் காண்போம்.

சங்க இலக்கியத்தில் ஒன்றான பத்துப்பாட்டில் பறவை, விலங்குகள்பற்றிக் கூறப்பட்டுள்ளன. இவற்றுள் ஆமா[1] (காட்டுப்பசு), உளியம்[2] (கரடி), கேழல்[3] (ஆண்பன்றி), பிணவு[4] (பெண்பன்றி), புரவி[5] (குதிரை), புலி[6], மந்தி[7], யூகம்[8] (கருங்குரங்கு), மூசுக்கலை[9] (கரிய முகம் கொண்ட குரங்கு), ஆட்டுக்கிடா[10] முதலான விலங்குகளும் அன்னம்[11], கிள்ளை[12] (கிளி), குருகு[13], கூகை[14] (கோட்டான்), சுரும்பு (ஆண் வண்டு), ஞிமிறு[15] (வண்டு), நாரை[16], புறவு[17], மயில்[18], யானையங்குருகு (வண்டாழ்ங் குருகு)[19] முதலான பறவைகளும் குறிப்பிடத்தக்கனவாகும்.

பாண்டிய நாட்டுக் காடுகளில் பண்டுதொட்டு இன்றுவரை காட்டு மாடுகளும், காட்டு எருமைகளும், காட்டுப் பன்றிகளும்

1 திருமுருகாற்றுப்படை. 314-15; மதுரைக்காஞ்சி. 293.

2 திருமுருகாற்றுப்படை. 311-14.

3 மதுரைக்காஞ்சி. 174.

4 I. bid.

5 மதுரைக்காஞ்சி. 184.

6 I. bid.643.

7 திருமுருகாற்றுப்படை, 4-12.

8 I. bid. 302.

9 I. bid. 302-303.

10 I. bid. 232-4.

11 மதுரைக்காஞ்சி. 385-6; 674-75.

12 I bid. 95. உரை.

13 I bid. 268-69.

14 திருமுருகாற்றுப்படை. 49.

15 மதுரைக்காஞ்சி. 684-85.

16 நெடுநல்வாடை. 16-17.

17 I bid ......... 45-46.

18 I bid. 97-99. மதுரைக்காஞ்சி 675.

19 மதுரைக்காஞ்சி. 673-75.

வசித்து வந்துள்ளன. ஆங்குள்ள மலைப் கருங் குரங்குகள் அன்று அதிகமிருந்தன. இன்றுங்கூட அவை மிகுதியாகக் காணப்படுகின்றன. கம்பம் பள்ளத்தாக்குப் பகுதிகளில் யானை களும் மிகுதியாக வசித்து வந்தன.

முடிவாக, பல்வேறு புவியியல் கூறுகள் - மலைகள் - நதிகள்- மண் வகைகள் - பருவங்கள் போன்றவை ஒரு நாட்டின் பொருளாதார, கலாச்சார சமுதாய வளர்ச்சியைப் பாதிக்கும் அம்சங்களாகும். பாண்டிய நாட்டின் இக் கூறுபாடுகள் புவியியற் கூறுபாடுகளால் மிகுந்த மாற்றத்திற்கு உள்ளாகி இருக்க வேண்டும் என்பதில் கருத்து வேறுபாடு இல்லை. மேற்கூறப் பட்டவற்றுள் சில கூறுபாடுகள் பாண்டிய நாட்டிற்கே உரியவை யாகச் சில இருப்பினும், பல அம்சங்கள் தமிழ்நாட்டிற்கே பொதுவானவையாகவும் காணப்படுகின்றன. பாண்டிய நாட்டு வரலாற்றைக் காண்பதற்குமுன் :புவியியற் கூறுபாடுகளையும் அறிய வேண்டுவது அவசியமாதலின், இவற்றை நாம் சிறிது கண்டோம்.

# 3. தமிழ்ச் சங்கம்

**தமிழ் வளர்த்த பாண்டியர்**

பாண்டிய மன்னர்கள் தம் தாய்மொழியாம் தமிழ்மொழி யின்பால் எல்லையற்ற பற்றுக்கொண்டு தமது தலைநகரில் சங்கம் நிறுவி தமிழ் வளர்த்தனர் என்பது பல சான்றுகளால் அறியப் படுகின்றது. 'தமிழ் மதுரை' 'தமிழ் வையை' 'தமிழ்க் கடல்' என்று பண்டையத் தமிழ் நூல்கள் குறிப்பிடுவதாலும் 'பாண் டிய! நின்னுடைத்து நல்லதமிழ்' என்று ஒளவைப்பிராட்டி குறிப்பிடுவதாலும் பாண்டியர் தமிழ் வளர்த்த பெருமை நன்கு புலனாகும். ஆயினும், சிலர் பண்டைக் காலத்தில் தமிழ்ச் சங்கம் நிறுவப்படவில்லையெனப் பகர்கின்றனர்.

**சங்கம் எனும் சொல்**

'சங்கம்' என்னும் சொல் தமிழ்ச்சொல் அன்று என்றும், வடமொழிச் செல்லின் மரூஉ என்றும் சிலர் கூறுகின்றனர். மேலும் வடநாட்டின் புகழ்பெற்றிருந்த நாலந்தா, தட்சசீலம் போன்ற சங்கங்களைப் பார்த்துத் தமிழகத்திலும் சங்கங்கள் இருந்ததாகப் புனைந்துரைக்கின்றனரென்றும் புகல்கின்றனர்.

'சகரக் கிளவியும் அவற்றோ ரற்றே
அ, ஐ, ஒள எனும் மூன்றலங்கடையே'

எனும் தொல்காப்பிய நூற்பாவை ஆதாரமாகக் காட்டி தமிழில் 'ச' என்ற எழுத்தினை முதலாகக்கொண்டு சொல் வராதென்று கூறுகின்றபோது சங்கமென்னும் பெயரில் எவ்வாறு ஒரு கழகம் செயல்பட்டிருக்க முடியுமென்று வினவுகின்றனர்.

அடுத்து 'சங்கம்' என்னும் சொல் சங்க இலக்கியங்களில் யாண்டும் குறிக்கப் பெறவில்லை என்பதனையும் தமக்கு ஆதார மாகச் சுட்டுகின்றனர். 'சங்கம்' நிலவவில்லை என வலியுறுத்திக் கூறுவோரில் பி. டி. சீனிவாச ஐயங்காரும், கே. என். சிவராச பிள்ளையும் முதன்மையானவராவர். சிவபெருமானும், முருகப் பெருமானும் சங்கத்தில் வீற்றிருந்ததாகக் கூறப்படுதல் கற்பனைக் கதையென்றும், இச் சங்கத்தைப் புரந்ததாகக் கூறப்படும்

வேந்தரது எண்ணிக்கையும் புலவரது எண்ணிக்கையும் அறிவுக்குப் பொருந்தாத புள்ளிவிவரங்களென்றும், போரும் பூசலும் மலிந்து ஒற்றுமை இன்றி, வேற்றுமை மண்டிக்கிடந்த காலத்தில், தமிழகத்தின் பல்வேறு பகுதிகளிலிருந்து புலவர்கள் ஓரிடத்தில் கூடினர் என்பது நம்புதற்குரியதன்று என்றும் இவர்கள் எடுத்துக் கூறுகின்றனர்.

சங்கம் எனும் சொல், சங்க இலக்கியத்தில் பயன்படுத்தப் படவில்லையென்பது உண்மையே. இதனால் பாண்டிய நாட்டின்கண் பண்டைக்காலத்தில் தமிழ்ச் சங்கம் நிறுவப்படவில்லை என்று எவரும் கூறவியலாது. சங்கமிருந்ததற்கு நாம் எண்ணிறந்த இலக்கியச் சான்றுகளைக் காட்டமுடியும்.

**சங்கத்தின் வகைகள் :** அடுத்து சங்கம் என்னும் சொல் குறிப்பிடுகின்ற கருத்தினை நாம் முதன்முதலில் அறிந்து கொள்ள வேண்டும் பின்பு அப்பொருளுக்கு இயைந்தனவாகிய சங்கங்கள் பண்டைத் தமிழகத்தில் செயல்பட்டனவா? என்பதனை ஆய்வு செய்ய வேண்டும். ஏனெனில், அக்காலத்தில் நான்கு வகையான சங்கங்கள் செயல்பட்டுவந்தன. அவற்றின் வகைகளையும் ஈண்டு நாம் காண்போம்.

1. சமண, புத்த சமய சங்கங்களைப் போன்று நூல்களை இயற்றுவதிலும், கற்பதிலும் ஈடுபட்டிருந்த சமய சார்புற்ற கழகம் அல்லது சங்கம். இதில் தோன்றிய இலக்கியங்கள் சமயச் சார்புடையனவாகும்.

2. இலக்கியத்தில் ஈடுபாடுகொண்ட வேந்தனொருவன், தானியற்றிய கவிதைகளையும், தன்னைச் சார்ந்துள்ள புலவர்களின் கவிதைகளையும் செவிமடுத்து, இன்புற்ற கழகங்கள்.

3. ஒருபெரும் தலைமைப் புலவனையும் அவனைப் பின்பற்றும் பல புலவர் பெருமக்களையும் அங்கத்தினராகக் கொண்டு திகழ்ந்த கழகங்கள்.

4. ஒரு தன்மைத்தான பண்புகளைத் தன்னகத்தே கொண்டு திகழ்ந்த இலக்கியங்கள் எழுந்த காலப்பகுதி. நமக்குக் கிடைத்துள்ள சங்க நூல்களனைத்தும் மேற்கூறிய நான்கு வகைச் சங்கங்களையும் சார்ந்தவையேயாகும். புலவர்குழு எனும் பொருளினைத் தாங்கி நின்ற 'சங்கம்' என்னும் சொல முதன் முதலாக மணிமேகலையில் பயிலப்பட்டுள்ளது. மணிமேகலை ஒரு புத்தமதக் காப்பியமாதலின், இதில் குறிக்கப்பெற்ற சங்கம் மேற்சொல்லப்

பட்ட நான்கனுள் முதலாவது வகையினைச் சார்ந்ததாக இருத்தல் கூடும்.

புலமை நலஞ்சார்ந்த அறிவுடை வேந்தனைச் சார்ந்து, பல புலவர் குழாங்கள் அக் காலத்தில் இருந்தனவென்பதற்குப் புறநானூற்றிலுள்ள 'நகுதக்கனரே' எனத் தொடங்கும் எழுபத்திரண்டாவது செய்யுள் சிறந்ததொரு எடுத்துக்காட்டாகும். இதில் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன், தனது ஆதரவின்கீழ் செயல்பட்டு வந்த, ஒரு புலவர் அவைக்களத்தைப்பற்றித் தனது பாடலில் குறிப்பிடுகின்றார். இதனை நாம் மேற்கூறப்பட்ட நான்கனுள் இரண்டாவது வகையைச் சார்ந்ததாகக் கொள்ளலாம்.

மேற்கூறிய பாடலில் மாங்குடி மருதனைத் தலைவனாகக் கொண்ட புலவர் குழாம் தன்னைப் பாடாதொழிக என்னும் பொருள்பட, நெடுஞ்செழியன் வஞ்சினம் கூறினமையான் இச் செய்யுளே மூன்றும் வகைக்கும் எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம்.

அடுத்து, ஒரு குறிப்பிட்ட காலப்பகுதியில் வாழ்ந்த புலவர் பெருமக்கள், சில பொதுவான இயல்புகளைக் கொண்ட பாடல்களை இயற்றித் தொகுத்ததனை, நான்காவது வகைக்குச் சுட்டலாம். இவர்கள் ஒருவருக்கொருவர் நெருங்கிய தொடர்புடைய புலவர்களாகவும், மன்னனின் ஆதரவினைப் பெற்றவர்களாகவும் வாழ்ந்தனர்.

**மொழிக் கலப்பு :** தமிழ்ச் சங்கம் என்பது தமிழ்ச் சான்றோர் பலர் குழுமியிருந்த ஒரு மன்றம் என்பது தெளிவு. இதனையோர் இலக்கியக் கழகம் என்றும் இயம்பலாம். ஆரிய நாகரிகம் தமிழகத்தில் வேரூன்றியபோது. அவர்களது சொற்களும் பண்பாட்டுக் கூறுபாடுகளும், சிறிதளவு தமிழகத்தில் பரவின. அடுத்து, சமண சமயத்தினரும் புத்த சமயத்தினரும் தமிழகத்தின்கண் புகுந்து. தமது சங்கத்தினை நிறுவி, தமது சமயத்தினைப் பரப்புவதில் கண்ணும் கருத்துமாயிருந்தனர். இதன் விளைவாகத் தமிழகத்தில் வழக்கிலிருந்த பல அழகிய தமிழ்ச் சொற்கள் மறைந்தன; மாற்றம் பெற்றன; வேற்று மொழியுடன் கலந்தன; நாற்றிசையிலும் பரவின. இவ்விதம் மாற்றம் பெற்ற சொற்களுள் 'சங்கம்' என்ற சொல்லும் ஒன்றாகும். மேற்கூறிய காரணத்தால் 'சங்கம்' என்னும் சொல் அமைப்பே வைதீக ஆரியரும், சமண சமயத்தினரும், புத்த சமயத்தினரும் தமிழ

கத்தில் காலடி எடுத்து வைத்த பின்பே, ஏற்பட்டதெனக் கூறுதல் முற்றும் பிழைபட்ட கருத்தாகும்.

**கூடல் :** கூடல் என்னும் சொல், சங்க இலக்கியத்துள் பல விடங்களில் குறிக்கப்படுகின்றது. கூடல் என்பது இடவாகு பெயராகவே பயன்படுத்தப்பட்டதெனத் தெளியலாம். ஏனெனில், தமிழ்ச் சங்கம் அல்லது கூடல் வளர்ந்த இடமாகிய மதுரையம்பதியானது கூடல் எனப் பெயர் பெற்றதனை யாவரும் அறிவர். புலவர் பலர் கூடி தமிழாய்ந்தமையால், மதுரை 'தமிழ் கெழு கூடல்' என இலக்கியத்தில் சிறப்பிக்கப் பட்டுள்ளது.[1] மதுரைப் புலவர் குழுவால் வளர்க்கப்பட்ட தமிழ் 'கூடல் தமிழ்' என்றே மதுரைக்காஞ்சி என்னும் நூலில் குறிக்கப்பெறுகின்றது.

'நாம் வேண்ட நன்னெஞ்சே நாடுதிபோய் நானிலத்தோர்
தாம் வேண்டும் கூடற் றமிழ்'

என்ற இலக்கிய வரிகளாலும் இதனை அறியலாம்.

கூடல் தமிழ் பின்பு சங்கத்தமிழ் எனப்பெயர் பெற்றது. 'சங்கத் தமிழ் மூன்றும் தா' என்னும் இலக்கிய அடி இதனை நன்கு வலியுறுத்துகின்றது. கிறித்து அப்தத்தின் தொடக்க காலத்தில், கூடல் என்னும் சொல் பாண்டி நாட்டின் தலைநக ரான மதுரையைக் குறிக்கப் பயன்பட்டது உண்மையே யாயினும், ஆங்கு வளர்ந்து வந்த தமிழைக் குறிக்கவும், அச் சொல்லே பயன்படுத்தப்பட்டது. இவ்வாறு கூடல் என்னும் சொல் மதுரையம்பதியுடனும் தமிழுடனும் பின்னிப்பிணைந்தும் இணைந்தும் இழைந்தும், காணப்படுகின்றமை குறிப்பிடத்தக்க தொன்றாகும்.

**சங்க நூல்கள் :** நமது பண்டைய தமிழகத்து வரலாற்றினை அறிந்து கொள்ளத்தக்க புறச்சான்றுகள், வெகு சிலவே நமக்குக் கிடைத்துள்ளன. இந்நிலையில் நாம் முழுக்க முழுக்க அகச்சான் றினையே சார்ந்திருக்க வேண்டியுள்ளது. இவ் வகச் சான்றுகள் அனைத்தும் சங்க இலக்கியத்துள் புதைந்து கிடக்கின்றன. இவற்றினை நாம் அகழ்ந்து, ஆராய்ந்து, வரலாற்று கண்கொண்டு தேர்ந்தெடுத்து அவற்றினைத் தொகுக்க வேண்டியுள்ளது. இவை யாவும் எட்டுத் தொகை, பத்துப்பாட்டு எனும் தொகை நூல் களுள் அடங்கும் இலக்கியங்களாகும்.

1 புறநானூறு 58.

**பண்பாட்டுக் கலப்பு**

சங்கங்கள், சமண புத்த சமயத்தினர் தமிழகத்தில் புகுந்த பின்புதான் புகழடைந்தனவென்பது அறிஞர்களின் கருத்தாகும். இருப்பினும் கிறித்து அப்தத்திற்கு முன்பே ஆரியர்கள் தமிழகத்தில் புகுந்ததாலும் வடமொழியும் வடமொழிப் பண்பாடுகளும் தமிழகத்தில் கலக்க ஆரம்பித்ததாலும் 'சங்கம்' என்னும் வடசொல் ஆரம்பக் காலத்திலேயே மக்களிடையே வழக்கத்திலிருந்திருக்க வேண்டும் என்று கருதலாம். ஆனால் இலக்கியத்தில் இச் சொல் இதே பொருளில் ஆரம்ப காலத்தில் பயன்படுத்தப்படாமல், கி. பி. ஏழாம் நூற்றாண்டிற்குப் பின்பே பயன்படுத்தப்பட்டதாகக் கொள்ளலாம்.

**சங்கத்தினைக் குறித்த வேறு சொற்கள்**

'சங்கம்' என்னும் சொல் தமிழ் இலக்கியங்களில் பயிலப்படு முன்பு அவையம், அவை, புணர் கூட்டு, கூடல், மன்றம், கழகம், நிலையம், புணர்ப்பு, தொகை போன்ற தமிழ்ச் சொற்கள் புலவர் குழாத்தினைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டுள்ளன.

'நிலந்தரு திருவிற் பாண்டிய னவையத்
தறங்கரை நாவி னான்மறை முற்றிய
வதங்கோட் டாசாற கரிறபத் தெரிந்து'

என்ற தொல்காப்பிய பாயிரச் செய்யுளாலும்,

'தொல்லாணை நல்லாசிரியர்
புணர் கூட்டுண்ட புகழ்சால் சிறப்பின்
நிலந்தரு திருவின் நெடியோன்'

என்ற மதுரைக்காஞ்சி யடிகளாலும்,

'புலனா வுழவர் புதுமொழி கூட்டுண்ணும்
புரிசை சூழ் புனலூர்'
பழுதில் கொள்கை வழுதியர் அவைக்கண்
அறிவு வீற்றிருந்த செறிவுடை மனத்து
வான்றோய் நல்லிசைச் சான்றோர் குழீஇ
அருந்தமிழ் மூன்றுந் தெரிந்த காலை

என்ற அகநானூற்றின் உரைப்பாயிரத்தில், இடைவள நாட்டு மணக்குடியான் பால்வண்ணத் தேவனான வில்லவதரையன் நல்லிசைப் புலவர்கள் சங்கத் தமிழமர்ந்து முத்தமிழை ஆய்ந்ததாகக் கூறுவதாலும்,

'நிலனாவிற் றிரிதரூஉ நீண்மாடக் கூடலார்
புலனாவிற் பிறந்தசொல் புதிதுண்ணும்......'

என்ற கலித்தொகைப் பாடலடிகளாலும் அறியலாம்.

மேற்கூறிய அடிகளில் 'சங்கம்' என்னும் சொல் பயன் படுத்தப்படாது அதற்கு இணையான அவையம், புணர்கூட்டு, கூட்டு, நீண்மாடக் கூடலார் என்னும் தமிழ்ச் சொற்கள் பயன் படுத்தப்பட்டுள்ளதனை நன்கறியலாம். இவையேயன்றி தொல் காப்பியம், சிலப்பதிகாரம், மணிமேகலை, பதினெண்கீழ்க் கணக்கு நூல்களுள் சில ஆகியவையும் இவற்றுள் அடங்கு மென்று அறிஞர் கருதுவர். இச் சங்க இலக்கியங்களைக் கொண்டு அக் கால மக்கள் வாழ்வினையும், மன்னனது அருஞ் செயல் களையும், போர்முறைகளையும், ஆட்சிமுறையினையும் தெளிவாக அறிந்து கொள்ள முடிகின்றது.

**தெளிவில்லாக் காலக் கணிப்பு**: எண்ணிறந்த சங்கச் சான்றோர் களால் இயற்றப்பட்ட சங்கப் பாடல்களிலிருந்து, மன்னனது ஆட்சிக் காலங்களை நாம் அறிந்து கொள்ளக் கூடவில்லை. இன்ன ஆண்டில், இன்ன திங்களில், இன்ன நாளில், இன்னது நிகழ்ந் தது என்பதனைத் தெளிவாக உணர்த்தாத, இவர்களது பாடல் களிலிருந்து, பண்டைத் தமிழக வரலாற்றினை நாம் தெளிவாகத் தொகுக்க முடியவில்லை. ஒரு குறிப்பிட்ட வேந்தன், எந்த ஆண்டு ஆட்சிக்கு வந்து, எந்த ஆண்டு வரை, ஆட்சி புரிந்தான் என்றும், அவனுக்குப் பின் இத்தகைய உறவுள்ள இன்ன வேந்தன், அரியணை ஏறினனென்றும் அறிய முடியாத காரணத் தால் சங்ககால வேந்தர்களைப்பற்றியும் அவர்களது கால வரை யறைபற்றியும் நாம் தெளிவாக அறிந்துகொள்ள இயலவில்லை. இதனால் வரலாற்றின் உயிர்நாடியான காலக்கணிப்பு (Chronology) குழப்பமாக உள்ளது. இக் குழப்பத்தினைப் போக்கவும் நீக்கவும் உறுதுணையாயுள்ள கல்வெட்டுகளோ, செப்புப்பட்டயங் களோ நமக்குப் போதிய அளவு கிடைக்கப்பெறுமையின், வரலாறு தொடர்ச்சியற்றதாகவே காணப்படுகிறது. இவ் விலக் கியச் செய்திகளில விளக்கப்படும் சில நிகழ்ச்சிகளை உறுதியான முறையில் காலங் கணிக்கப்பட்ட வேறு சில நிகழ்ச்சிகளுடன் ஒப்புமைப்படுத்தியே அவற்றின் காலத்தினை நாம் ஒருவாறு கணிக்க வேண்டியுள்ளது.

அடுத்து, ஓரே பெயர் கொண்ட ஒன்றுக்கும் மேற்பட்ட வேந்தர்களையும், அவர்களது சாதனைகளையும் நாம் வேறுபடுத்தி யறியத்தக்க சான்றுகள், சங்கச் சான்றோரின் பாடல்களில்

காணப்பெறவில்லை அடுத்து, சங்க இலக்கியங்கள் யாவும் நமக்கு முழுமையாகக் கிடைக்கப் பெறவில்லை. அவற்றுள் சில கடல்கோள்களால் அழிக்கப்பட்டு விட்டனவென்பதும் ஈண்டு நாம் நினைவிற் கொள்ளத்தக்கதாகும். இத்துணை இடர் பாடுகளுக்கிடையில், சங்ககாலப் பாண்டி வேந்தரைப்பற்றிய செய்திகளை அறிந்துகொள்ள சங்க இலக்கியத்தைதான் பெரும் பாலும் சார்ந்திருக்க வேண்டியுள்ளது. இதனைத் தவிர வேறு சான்றுகள் நமக்குப் பயன்படுவதாகவில்லை.

**சங்கம் ஒன்று? மூன்று? :** 'சங்கம்' எனும் சொல் சங்க இலக்கியத்தில் யாங்கணும் காணப் பெறுமையின் மதுரை யின்கண் சங்கம் என்ற ஓர் இலக்கிய மன்றமே இயங்கவில்லை யென்பதும், இது ஒரு கற்பனையேயாகுமென்றும் சிலர் கருது கின்றனர். அடுத்துத் தமிழகத்தில் மூன்று சங்கங்கள் செயல் படவில்லையென்றும், ஒரே ஒரு சங்கம்தான் இருந்ததென்றும் சிலர் கருத்துத் தெரிவிக்கின்றனர். இக் கருத்துகளை நாம் சிறிது ஆய்ந்து பார்த்தல் அவசியமாகிறது.

**இலக்கியத்தில் சங்கம் :** தமிழ்ச் சங்கத்தினைப்பற்றிய செய்திகள் முதன் முதலாக இறையனார் களவியல் உரையிற்றான் குறிக்கப் பெற்றுள்ளது. இந்நூலின் முதற் சூத்திரத்தில் தலை இடை கடை ஆகிய முச்சங்கங்களின் வரலாறு கூறப்பட்டுள்ளது பேராசிரியர் அடியார்க்கு நல்லார் போன்ற உரையாசிரியர்கள் இச்செய்தியினை ஒப்புக்கொள்கின்றனர். சங்கமெனும் சொல்லை யும் பயன்படுத்துகின்றனர். பரஞ்சோதி முனிவரும் தமது திருவிளையாடற்புராணத்தில் தமிழ்ச்சங்கம்பற்றிக் குறிப்பிடு கிறார்.

இரட்டைக் காப்பியங்களுள் ஒன்றானதும், கி.பி. இரண் டாம் நூற்றாண்டினதாக வைத்தெண்ணப்படுவதுமான சீத்தலைச் சாத்தனாரின் 'மணிமேகலை'யில் 'சங்கம்' குறிக்கப்பட்டுள்ளது. ஆயினும், இது தமிழ்ப் புலவர் குழாத்தினைக் குறிப்பிடாமல் புத்த சங்கத்தினையும், புத்தப் பெரியார்களின் குழுவினையும் குறிப் பதாகவே உள்ளது.

அடுத்து, கி. பி. ஏழாம் நூற்றாண்டின் தொடக்க காலத்தில் வாழ்ந்தவராகக் கருதப்படுபவரும் சைவநாயன்மார்களுள் தலை யாயவருமான அப்பரடிகள் தமது தேவாரத்தில் சங்கத்தினைப் பற்றிக் குறிப்பிடுகின்றார். தென்னாடுடைய சிவபெருமானை

போற்றிப்பரவுகின்ற அவர், பின்வரும் அடிகளால் சிவபெருமானது தமிழ்த் தொண்டைப் பாராட்டுகின்றார். இங்கு 'சங்கம்' என்னும் சொல் புலவர் (சான்றோர்) குழுவினைக் குறிப்பதாக உள்ளது.

'மூன்று வகைச் சங்கத்து நான்கு
வருணத்தோடு பட்ட சான்றோர்'

'நன்பாட்டுப் புலவனாய்ச் சங்கமேறி
நற்கனகக் கிழிதருமிக் கருளினோன் காண்'.[1]

அப்பரடிகளின் காலத்தில் வாழ்ந்தவரும், சைவ சமயக் குரவருமான தமிழ்ஞானசம்பந்தர் '...அந்தண் மதுரைத்தொகையாக்கினானும்...' என்று குறிப்பிடுவதனால் சங்கம் என்ற சொல்லும் தொகை என்ற சொல்லும் ஒரே பொருளைக் குறிப்பனவாகவும், ஏழாம் நூற்றாண்டில் தொகை என்னும் சொல்லும் புலவர் குழாத்தினைச் சுட்டப் பயன்பட்டதனையறியலாம்.

'உயர் மதிற் கூடலினாய்ந்த வொண்டீந்தமிழின் துறைவாய் நுழைந்தனையோ' எனத் திருக்கோவையாரில் குறிக்கப் பெற்றிருந்தாலும், 'கலியன் சொன்ன சங்கத் தமிழ்மாலை பத்தும்' என்று திருமங்கையாழ்வார் குறிப்பிடுவதாலும், 'எங்கும் சேல் பாய்தடத்துமுள செய்யுள் மிக்கேறு சங்கம்' எனவும் 'சென்றணைந்து மதுரையினிற் றிருந்திய நூற்சங்கத்துள் அன்றிருந்து தமிழ் ஆராய்ந்த அங்கணர்' என்றும் சேக்கிழார் செப்புவதாலும், 'சங்கம் வளர்ந்திட கின்ற பொலன் கொடி' என மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழும், 'செஞ்சொற் புலவர்கள் சங்கத்தமிழ்தெரி செந்திற்பதி' என்று திருப்புகழும் சுட்டுவதனாலும் பாண்டிய நாட்டின்கண் தமிழ்ச் சங்கம் செயல்பட்டதென்பது இனிது விளங்கும். மேற்கூறப்பட்ட இலக்கியச் சான்றுகளேயன்றி 'மாபாரதம் தமிழ்ப்படுத்தும் மதுராபுரி சங்கம் வைத்தும்' என்று சின்னமனூர்ச் செப்பேடு செப்புவதாலும் சங்கம் இருந்தமை உறுதிபெறுகிறது.

**சங்கம் நிறுவப்பட்டமை :** இவ்வாறு தமிழிலக்கியங்களில் பலவிடத்தும் குறிக்கப்பெற்ற சங்கத்தினைப்பற்றிய செய்திகளை நாம் அறிந்து கொள்ளுதல் நலம் பயப்பதாகும். பண்டைக் காலத்தில் பாண்டிய நாட்டினையாண்டுவந்த வேந்தர்கள், தாய்மொழியின்மாட்டு எல்லையற்ற ஈடுபாடு கொண்டு, அதனை

[1] தேவாரம் — 6-76-3.

வளர்ப்பதில் கண்ணும் கருத்துமாகவிருந்தனர்; தமிழ்ப் புலவர் பலரையும் வரவழைத்து நல்லாதரவு நல்கி செந்தமிழைச் செழுந் தமிழாக்கப் பேருதவி புரிந்தனர். இச் சங்கத்துள் பல பகுதி களைச் சேர்ந்த புலவர் பெருமக்களும், ஈழத்தினைச் சார்ந்த சில புலவர் பெருமக்களும் ஒன்று கூடித் தமிழாய்ந்தனர். இவ் விதமாகவே சங்கம் நிறுவப்பட்டதென இறையனுரைகப் பொருள் உரையாசிரியர் குறிப்பிடுகின்றூர். மேலும், தலைச்சங்கம் கடல் கொண்ட தென்மதுரையில் நிகழ்ந்ததாகவும், அதில் சிவபெரு மான், முருகப்பெருமான், அகத்தியர், குபேரன், முரஞ்சியூர் முடி நாகனுர் முதலாய ஐந்நூற்று நாற்பத்தொன்பதின்மர் சங்கத்தின் கண்ணமர்ந்து தமிழாய்ந்ததாகவும் அவர் குறித்துச் செல்கின் றூர். நான்காயிரத்து நானூற்று நாற்பத்தொன்பதின்மர் (4449) இச் சங்கத்துடன் தொடர்புகொண்ட புலவர் பெருமக்களாவர். இத் தலைச் சங்கம் நான்காயிரத்து நானூற்று நாற்பதாண்டுகள் தொடர்ந்து செயல்பட்டு வந்ததாகவும், இக் காலத்தில் பரிபாடல், முதுநாரை, முதுகுருகு, களரியாவிரை போன்ற நூல்களியற்றப் பட்டதாகவும் களவியலுரையாசிரியர் குறிப்பிடுகின்றூர். இச் சங்கத்தினைக் காய்சினைவழுதி முதலாகக் கடுங்கோன் ஈருக பாண்டி நாட்டினையாண்டுவந்த வேந்தர் எழுபத்தொன்பதின்மர் காத்து வந்ததாகவும், இவர்களுள் எழுவர் தமிழ்ப்பாடலியற்றும் தகுதி பெற்றிருந்ததாகவும் கூறப்படுகின்றது.

'செங்கோன் தரைச் செலவு' என்னும் நூலும் இத் தலைச் சங்க காலத்தில் இயற்றப்பட்டதாகக் கருதப்படுகிறது. இந் நூல் முழுமையாக நமக்குக் கிடைக்கப் பெறவில்லையாயினும், பகுதியாகச் சில பாக்கள் கிடைக்கின்றன. இவற்றினின்றும பாண்டிய நாட்டின்கண் சங்கம் இருந்த செய்தி அறியப்படு கின்றது.

'செங்கோன் றரைச் செலவைச் சேந்தன் றனியூரான்
றுங்கன் றமிழ்த்தாப் புலித்தொடரால்—அங்கிசைத்தான்
சக்கரக்கோ முன்னின்று சாறறுட பெரு ஆழி
யக்கரக்கோ நாமஞ்சுவோம்.'

என்று பஃறுளியாற்றுத் தலைப்பாய்ச்சல் ஏழ்தெங்கநாட்டு முத்தூர் அகத்தியன் கூறுவதாலும,

'தமிழ்த் தலைமை கொண்டான்
சக்கரன் றெக்கார் குழுவில்'
'................ மணிக்கோடு
தங்கு பெரு வளநாட்டிற்
றமிழிலிருந்து புறங்காக்கும் தமிழ்நாடியாங்கே'

என்னும் செங்கோன்றரைச்செலவுப் பகுதியாலும், அதன் உரையாலும் அறியலாம்.

**இடைச் சங்கம் :** தலைச் சங்கம் செயல்பட்டு வந்த தென் மதுரை கடல்கோளுக்கிரையாயிற்று; பாண்டியர் தலைநகர் குமரிக்கும் தென்பால் கடல் புகாதிருந்த கபாடபுரத்திற்கு மாற்றப்பட்டது. தமிழ்ச் சங்கமும் ஆங்கு நிறுவப்பட்டது. இதுவே இடைச் சங்கமென இயம்பப்படுகின்றது. இடைச் சங்கம் நிறுவிய வெண்டேர்ச்செழியன் முதலாக முடத்திரு மாறன் ஈறாக ஐம்பத்தொன்பதின்மர் பாண்டி நாடாண்ட காவலர்கள் இடைச் சங்கத்தினையும் புரந்து வந்தனர். இப்பாண்டியருள் கவியரங்கேறிய காவலர் ஐவர்.

**கடைச் சங்கம் :** இடைச் சங்கத்தில் அகத்தியர், இறையனார், தொல்காப்பியர், இருந்தையூர்க் கருங்கோழி மோசி, உலோபா முத்திரை, வெள்ளூர்க் காப்பியன், சிறுபாண்டரங்கன், திரையன் மாறன், துரைக்கோமன், கீரந்தை, கவுதமனார், நாரதர், பனம் பாரனார், சியாமளேந்திரர் முதலான ஐம்பத்தொன்பது புலவர்கள் வீற்றிருந்து தமிழாய்ந்து வந்தனர். இதன்கண் உறுப்பினராய் இருந்து கவிதை இயற்றிய கவிஞர்கள் மூவாயிரத்து எழு நூற்றுவர்.

**புலவரின் தூய பணி:** இப் புலவர்கள் கலி, குருகு, வெண்டாளி, வியாழமாலை என வகைவகையான பாடல்களை யாத்தனர். இவர்களுக்கு இலக்கண நூல்களாய் அமைந்தவை அகத்தியம், தொல் காப்பியம், மாபுராணம், இசை நுணுக்கம், பூதபுராணம் முதலியவைகளாகும். அவிநயம், பஞ்சமரபு, பரதசேனாபதியம், பஞ்சபாரதீயம், கூத்தநூல், வாமனநூல், இந்திர காளியம், தொல்காப்பியம், பேரிசைச் சூத்திரம், இசைநுணுக்கம், இசை நூல் இன்னோரன்ன பலவும் இப்புலவர் பெருமக்களால் இயற்றப் பெற்றன. மூவாயிரம் ஆண்டுகள் இச் சங்கம் தொடர்ந்து சீரிய முறையில் செயல்பட்ட பின்பு கபாடபுரமும் கடல்கோளுக்கிலக் காயிற்று. இதன் காரணமாக பாண்டியரது தலைநகர் உத்தர மதுரைக்கு மாற்றப்பட்டது. கடைச்சங்கமும் மதுரையின்கண் நிறுவப்பட்டது. கபாடபுரத்தில் இடைச் சங்கம் செயல் பட்டதனை 'இரண்டாம் ஊழியதாகிய கபாடபுரத்தின் இடைச் சங்கம்' என்ற அடியார்க்கு நல்லார் சிலப்பதிகார உரையாலும்,

'இவ்வகை யரசிற் கவியரங் கேறினர்
இவகை யரசர் ஆயிடைச் சங்கம்

விண்ணகம் பரவும் மேதகு கீர்த்திக்
கண்ணகல் பரப்பிற் கபாடபுர மென்ப'

என்ற பழைய அகவற் பாவாலும் இனிதறியலாம்.

மதுரையில் கூடிய தமிழ்ச்சங்கம் பாண்டியன் முடத்திரு மாறனால் நிறுவப்பட்டதென்பர். இக் கடைச் சங்கத்தினைப் புரந்த கடைசிப் பாண்டியன் உக்கிரப் பெருவழுதியாவான் நற் புலவர்கள் நாற்பத்தொன்பதின்மர் தமிழுக்கு ஆக்கம் தந்தனர். இச் செந்தமிழ்ப் புலவர்களுள் மூவர் பாண்டி வேந்தராவர். சேந்தப் பூதனார், அறிவுடையரனார், பெருங்குன்றூர்க் கிழார், இளந்திருமாறன், மதுரையாசிரியர், நல்லந்துவனார், சிறுமேதாவி யார், மருதனிளநாகனார், கணக்காயனார் மகனார் நக்கீரனார் முதலானோர் இவர்களுள் குறிப்பிடத்தக்கவராவர். கபிலர், பரணர் போன்ற பெரும் புலவர்களும் கடைச்சங்க காலத் தவர்களே.

**கடைச்சங்க நூல்கள் :** கடைச் சங்கத்தின் பெரும் புலவர்கள் நெடுந்தொகை, குறுந்தொகை, நற்றிணை, புறநானூறு, ஐங்குறு நூறு, பதிற்றுப்பத்து, கலிநூற்றைம்பது, பரிபாடல், கூத்து, வரி, சிற்றிசை, பேரிசை முதலான நூல்களை யாத்தனர். இச் சங்கத்தில்தான் திருவள்ளுவர் திருக்குறளை அரங்கேற்றினர் என்று தெரிகின்றது. நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரத்திலும், தமிழணியாம் மணிமேகலையிலும் குறட்பாக்கள் எடுத்தாளப் பட்டுள்ளதாய் இதனை நன்கறியலாம். இவர்கட்கு இலக்கண நூல்களாயமைந்தவை அகத்தியம், தொல்காப்பியம் என்பவை யாகும்.

**சங்கப் பலகை :** கடைச் சங்கத்துச் சான்றோர்கள் ஏறத் தாழ ஆயிரத்தெண்ணூற்று ஐம்பதாண்டுகள் தமிழாய்ந்தனர் எனலாம். சங்கச் சான்றோர்களுக்கென்று கன்மாப் பலகையால் செய்த இருக்கைகள் வேந்தனால் அமைக்கப்பட்டன. இவ் விருக் கைளில் அமர்ந்தே சங்கச் சான்றோர் தமிழாய்ந்தனர். இவ் விருக் கையைப் பிற்காலத்தவர் 'சங்கப் பலகை' என வழங்கிவிட்டனர். இதனைப் பழைய திருவிளையாடற் புராணம் 'மொழியறி சங்கப் பலகை' என்றும் 'பாவறி சங்கப் பலகை' என்றும் குறிப்பிடு வதனால் அறியலாம்.

சங்கம் அமைக்கப்பட்ட காலத்தில் பாண்டி வேந்தன் புலவருடையவும், தனது வழிபடு கடவுளர்களாகிய முருகப் பெருமான், சிவபெருமான் ஆகியோரது சிலைகளைச் சங்க மண்டபத்தில் நிறுவி அக் கடவுளரே கழகத்துத் தலைவரெனக்

கூறினன். இவ் வழக்கே திரிபுரமெரித்த விரிசடைக் கடவுளும் குன்றமெறிந்த குமரவேளும் தலைச் சங்கமிருந்து நூலாராய்ந்தன ரென பிற்காலத்தவரால் கூறப்படலாயிற்று. இன்னும் பிள்ளையார் பிடித்து வைத்து ஒவ்வொரு கருமங்களையும் செய்யத் துவங்குவது பெரும்பாலரிடம் வழக்கமாக உள்ளது.

**நல்லன கொண்டு அல்லவை நீக்குதல்**

கடைச் சங்கத்தின் தோற்றத்தைப்பற்றி இறையனார் அகப் பொருள் உரைகாரர் மட்டுமின்றி திருவிளையாடற் புராண ஆசிரியரான பரஞ்சோதி முனிவரும் குறிப்பிட்டுள்ளார். முச் சங்கங்களின் தோற்றம், அவற்றின் வளர்ச்சி, புலவரது எண்ணிக்கை, இறையனார் அகப்பொருளும் அதன் உரையும், அவை வளர்ந்த வரலாறு, அவற்றைப் பின்னிப் பிணைந்துள்ள தெய்வீக நிகழ்ச்சிகள், பகுத்தறிவுக்கொவ்வா புள்ளி விவரங்கள், அளவைக்கொவ்வாத காலவரையறைகள் ஆகிய அனைத்தும் முழுமையாக ஏற்றுக் கொள்ளத் தக்கனவல்ல. இதில் கற்பனை கலந்துள்ளதென்பது யாவருமறிவர். இப்புராண வரலாற்றுள் நல்லன கொண்டு அல்லனவற்றை நீக்கிவிடுதல் ஆராய்ச்சியாளர் களின் கடனாகும்.

இறையனார் களவியல் எனும் அகப்பொருள் இலக்கணம் கிறித்து அப்தத்தின் தொடக்க காலத்தில் இயற்றப்பட்டது. ஆனால், இதன் உரை கி. பி. ஆறு அல்லது ஏழாம் நூற்றாண்டில் தான் இயற்றப்பட்டது. இவ் வுரையின்கண் கற்பனையாகவும், உயர்வு நவிற்சியாகவும் கூறப்பட்டவையும் சில உண்டு. நம்பத் தகாத குறிப்புகள் சில இதனுள் காணக் கிடைத்தலின் இதனைப் பொய்யுரையென்றோ, புனைந்துரையென்றோ தள்ளிவிடுதல் தகாது. பண்டைக் காலத்தில் காலக் கணக்குகளைக் கவனியாது, வரலாறுகளை எழுதியுள்ளமை உலக வரலாற்றில் ஆர்வமுள்ளவர் களுக்கு நன்கு புலனாகும். பண்டைய நூல்களையும் பிற ஆதாரங் களையும் நன்கு ஆராய்ந்து, விவிலிய நூலின் (Bible) பழைய ஏற்பாட்டினை உருவாக்கிய மோசே என்பாரும், சிலர் ஆயிரத் துக்கு மேற்பட்ட ஆண்டுகள் உயிர் வாழ்ந்தனர் எனக் குறித் திருத்தல் கவனிக்கத் தக்கதாகும். எகிப்திய மன்னனொருவன் முப்பதினாயிரம் ஆண்டு வாழ்ந்திருந்தான் என்று அந் நாட்டு வரலாறு செப்புகின்றது. இதனைக் கொண்டு நம் நாட்டில் மட்டுமின்றி பிற நாடுகளிலும் கற்பனை கலந்த பகுத்தறிவுக் கொவ்வாத செய்திகள் கூறப்பட்டுள்ளனவென்பது விளங்கு கின்றது. எனவே, பண்டைக் காலத்தினர் சில நிகழ்ச்சிகள் நெடுங்காலம் நீண்டதாகவும், சில வேந்தர்கள் பன்னெடுங்காலம்

ஆண்டதாகவும், சில நூல்கள் பன்னெடுங்காலத்திற்கு முன்பே இயற்றப்பட்டதாகவும் கூறிக் கொள்வதில் பெருமை கொண்டிருந்தனர் என்பது புலனாகின்றது. இதற்குப் பழந்தமிழர்கள் மட்டும் விதிவிலக்கல்ல.

**செவிவழிச் செய்தி :** 'கண்ணகன் பரப்பிற் கபாடபுரம் என்ப' என்றும் '...ஆயிரத்தெண்ணூற்றைம்பது வரும் என்ப' என்றும் சங்க வரலாற்றினை எடுத்துக் கூறும் நூல்களில் குறிக்கப் பெற்றுள்ளதால் இதனை செவிவழிச் செய்தி என்பர்.

**மூச் சங்கம் நடைபெற்றது உண்மையே**

சங்கம்பற்றிக் கூறப்பட்டுள்ள ஒருசில கற்பனைக் கதைகளைக் கொண்டு, சங்கம் என்ற கழகமே நடைபெறவில்லையெனக் கூறுதல் பிழைபட்ட கருத்தாகும். 'சங்கம்' செயல்பட்டதனை வலியுறுத்த, நாம் முன்பே பல இலக்கிய ஆதாரங்களையும் சின்னமனூர்ச் செப்பேட்டின் பகுதியையும் கண்டோம். மேலும் இதன் தொடர்பாகக் குறிக்கப் பெற்றிருக்கும் மன்னர்கள், புலவர்கள், அவர்களியற்றிய தீந்தமிழ்ப் பாடல்கள் ஆகிய வற்றினை ஆதாரமாகக் கொண்டு சங்கம் செயல்பட்டதனை அறுதியிட்டு உறுதியாகக் கூறலாம். மேலும் சங்கம்பற்றி நிலவி வருகின்ற செவிவழிச் செய்திகளை நாம் அப்படியே ஏற்றுக் கொள்வது தவறு. இறையனாரகப் பொருளில் கூறப்பட்டிருப்பது போன்று சங்கம் பண்டைக் காலத்தில் நிலவி வந்ததா? இல்லையா? என்பது ஆய்வுக்குரிய தொன்றேயாகும்.

பண்டைக் காலத்தில் பாண்டிய நாட்டினை தலை, இடை, கடை என்றழைக்கப்படும் மூன்று தமிழ்ச் சங்கங்கள் இருந்தனவா? என்று சிலர் வினவுகின்றனர். மூன்று தமிழ்ச் சங்கங்களும் தமிழகத்தில் செயல்பட்டு வந்ததனை அகச்சான்றுகளின் துணையால் மட்டுமின்றி புறச்சான்றுகளின் துணையாலும் அறியலாம்.

தலைச்சங்கம் தென்மதுரையின்கண் செயல்பட்டு வந்ததனை இலங்கையின் வரலாற்று நூலான 'மகாவம்சம்' தெள்ளத் தெளிய எடுத்துரைக்கின்றது. இதில் தென்மதுரைபற்றிய குறிப்பு இடம் பெறுகின்றது. இலங்கை வேந்தன் 'விசயன்' என்பானும் அவனது தோழர்களும் தென்மதுரையிலிருந்து பெண் பெற்றதாகக் குறிப்பிடுகின்றனர். அடுத்து 'சத் தர்மாலங்காரம்' என்னும் சிங்கள நூலும் 'தட்சிண மதுரான்' என்றதொரு பெயர்க் குறிப்பினைத் தருகின்றது. இதன் காரணமாகத்

தென்மதுரையின்கண் தலைச்சங்கம் செயல்பட்டதனை நன்கறியலாம்.

**கபாடபுரத்தில் ஆட்சி :** பாண்டிய நாட்டின்கண் ஒரேயொரு தமிழ்ச் சங்கம்தான் செயல்பட்டு வந்தது. அதுவே கடைச் சங்கமெனச் சிலர் கருதுகின்றனர். சில அறிஞர்கள் இதனை மறுத்துமுச்சங்கங்கள் நிலவியதாகச் செப்புகின்றனர். இதனை நாம் ஓரளவு ஆய்ந்து பின்பே முடிவு கூறுதல் வேண்டும். கபாடபுரம் பாண்டியரின் தலைநகராயிருந்து கடல்கோளின் காரணமாக அது அழிந்த நிகழ்ச்சிகளும் தமிழிலக்கியத்தில் பலவிடங்களில் காணப்பெறுகின்றன. கபாடபுரம் பாண்டியர் தலைநகராகச் சிறப்புப் பெற்றிருந்தமை இராமாயணம், மகாபாரதம், அர்த்த சாத்திரம் ஆகிய நூல்களால் உறுதிப்படுகின்றது. முல்லைக் கலியில்,

> 'மலிதிரை ஊர்ந்து தன்மண் கடல்வெளவலின்
> மெலிவின்றி மேற்சென்று மேவார்நாடு இடம்படப்
> புலியொடு வில்நீக்கிப் புகழ்பொறித்த
> ..........................................தென்னவன்'

என்று குறிக்கப்பட்டுள்ளதாலும்,

செஞ்சொற் கவி நிறைந்த சிலப்பதிகாரத்தில்,

> 'பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்
> குமரிக் கோடும் கொடுங்கடல் கொள்ள
> வடதிசை கங்கையும் இமயமுங் கொண்டு
> தென்றிசை யாண்ட தென்னவன் வாழி!'[1]

என்று குறிக்கப்பட்டுள்ளதாலும் வடமதுரை பாண்டியரின் தலைநகராவதற்கு முன்பே தென்மதுரையிலும் கபாடபுரத்திலும் பாண்டியர் தமது தலைநகரங்களையமைத்துக் கொண்டாண்டதாக அறியலாம்.[2] மேலும் பிளினி அவர்கள், கன்னியாகுமரிக்குத் தெற்கே துறைமுகமொன்று சிறந்து விளங்கியதாகக் குறித்துள்ளார். இதனைக் கொண்டும் பாண்டியர் கபாடபுரத்திலும் அதற்குத் தெற்கேயும் ஆட்சி மேற்கொண்டதாக அறியலாம்.

1 சிலப்பதிகாரம் — 11:19-22.

2 "இவற்றின் அடிப்படையில் நோக்கின் வடமதுரையானது பாண்டிய நாட்டின் தலைநகராவதற்குமுன் பாண்டியர்கள் அதற்குத் தென்பால் கபாடபுரத்தில் அமர்ந்தும், அதற்கும் முன்பு, மேலும் தெற்கில் அமைந்திருந்த தென்மதுரையிலிருந்தும் ஆட்சி புரிந்து வந்தனர் என்ற வரலாற்று உண்மை என்பது உறுதியாகின்றது, பிள்ளை, பண்டாரகர் கே. கே. 'தமிழக வரலாறு மக்களும் பண்பாடும்' பக். 78. (தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம். சென்னை-1972)

**ஒரே சங்கமா? மூன்று சங்கங்களா?**

தமிழகத்தின்கண் நிகழ்ந்த கடல்கோள்களின் காரணமாகப் பாண்டியரது கோநகர் தென்மதுரையிலிருந்து கபாடபுரத்திற்கும், கபாடபுரத்திலிருந்து வடமதுரைக்கும் மாற்றப்பட்டது போன்று தமிழ்ச் சங்கமும் மாற்றப்பட்டது. முதற் சங்கத்தின் தொடர்ச்சியே மற்றிரு சங்கங்களேயாதலான், இவற்றை நாம் ஒரே சங்கமெனக் கருதலாம். இருப்பினும் தமிழிலக்கியங்களும் செவிவழிச் செய்திகளும் இதனை மூன்று தனித்தனிச் சங்கமாகவே கூறுகின்றன. இம் மூன்று சங்கங்களில் வீற்றிருந்த சான்றோர்களும், அவர்களை ஆதரித்து வந்த மன்னர்களும் வேறுபட்டவராக இருந்த காரணத்தாலோ, சங்கம் மூன்றிடங்களில் நடைபெற்றதாலோ, ஒரு சங்கம் தோன்றி மறைந்து மறு சங்கம் தோன்றுவதற்கு இடைவெளி இருந்ததாலோ, இவை ஒரே சங்கமாகக் கருதப்பெறாது முச் சங்கங்களாகவே கருதப் பட்டிருத்தல் வேண்டும்.

அடுத்து, பாண்டி நாட்டில் முதற் சங்கம் இருந்ததென்பதனை நாம் ஒரு சில சான்றுகளாலறியலாம். பாண்டிய நாட்டுத் தலைநகராம் தென்மதுரைபற்றிச் சிங்கள நூல்கள் குறிப்பிடுவதனை நாம் முன்பே கண்டோம். இங்குதான் முதற் சங்கம் செயல்பட்டதாகத் தமிழ் மரபு கூறுகின்றது. இங்கு தமிழ்ப் புலவர்கள் கூடித் தமிழ் ஆய்ந்து, தமிழிலக்கண நூல்களையும் யாத்தனரென்று கொள்ள இடமுண்டு. இடைச் சங்கத்தில் வீற்றிருந்து தமிழாய்ந்தவராகக் கருதப்படும் ஒல்காப்பெரும் புலமைத் தொல்காப்பியனார் தமது நூலில் 'என்மனார் புலவர்', 'என்ப', 'மொழிப', 'பாங்குற உணர்ந்தோர் பன்னுங்காலை' எனக் குறிப்பிட்டுள்ளார். இதனால் தொல்காப்பியருக்கு முன்னரே தமிழ்ப்புலவர் பலர் வாழ்ந்து வந்தனரென்றும், இலக்கண நூல்களும் இலக்கிய நூல்களும் இயற்றி வந்தனரென்பதும் உறுதி பெறுகிறது. இப் புலவர்களுள் பெரும்பாலோர் முதற் சங்கத்தினைச் சார்ந்தோர் என்றுங் கருதலாம்.

இதுகாறுங் கூறியவற்றான் பாண்டி நாட்டின்கண் தென் மதுரை, கபாடபுரம், மதுரை ஆகிய மூன்று தலைநகரங்களில், வெவ்வேறு காலங்களில் தமிழ்ச் சங்கங்கள் செயல்பட்டு வந்ததாக, இறையனார் அகப்பொருள் உரைகாரர் குறிப்பிடுவது உண்மையேயாகுமென்று அறியலாம். இருப்பினும் ஒவ்வொரு சங்கமும் பல்லாயிரமாண்டுகள் தொடர்ந்து செயல்பட்டதாகவும் சிவன் முருகன் போன்ற கடவுள்கள் சங்கத்தில் வீற்றிருந்து தமிழாய்ந்ததாகவும், சில புராணக் கதைகளையும் இவர் கூறி

யிருத்தல் பொருத்தமற்றதாகும். அடுத்து, அகத்தியர்பற்றிய புராணக் கதைகள் பல, தமிழகத்தில் நிலவுகின்றன. இவை ஒன்றுக்கொன்று மாறுபட்டுள்ளன. இவற்றுள் எதனை நாம் ஏற்றுக்கொள்வது என்பது புதிராகவேயுள்ளது. 'அகத்தியம்' என்னும் இலக்கண நூலின் ஒருசில பாடல்கள் நமக்குக் கிடைத்துள்ளமையின் அகத்தியர் என்றொரு தமிழ்ப் புலவர் வாழ்ந்து வந்தார். அவர் அகத்தியத்தை யாத்தளித்தார் என்பதனை மட்டும் நாம் உறுதியாகக் கொள்ளலாம்.

**கடைச் சங்கத்தின் அழிவு**

பாண்டி நாட்டின்கண் மிக்ச் சிறப்புற்று விளங்கிய கடைச் சங்கம் எவ்வாறு அழிவுற்றது? அதன் அழிவுக்குக் காரணங்கள் யாவை? என்ற வினாக்களுக்கு நாம் அறுதியிட்டு உறுதியாக விடைகூற வியலவில்லை. இருப்பினும் இதன் அழிவிற்கு நாம் ஒருசில காரணங்களைச் சுட்ட முடியும். இச் சங்கம் உச்சநிலையிலிருந்தபோது தீந்தமிழ் இலக்கியங்கள் பல மலர்ந்தன. மன்னரும் புலவர்களைப் பெரிதும் ஆதரித்தனர். சிலகாலஞ்சென்ற பின்பு இந் நிலை மாற்றம் பெற்றது. அரசியலில் நிகழ்ந்த குழப்பநிலையும், உறுதியற்ற தன்மையும், பாண்டி வேந்தர்களை அரசியலிலேயே ஈடுபாடு கொள்ளச் செய்தது. அன்னியப் படையெழுச்சியும், உள்நாட்டுக் குழப்பமும் சங்கம் சிறந்த முறையில் செயல்படுவதைத் தடுத்தன. அவர்களுக்குப் பின் வந்த பல்லவர்களும் தமிழைப் போற்றிப் பாதுகாக்காமல் புறக்கணித்து விட்டனர்.

கடைச் சங்கம் அழிந்துபட்டதற்கு இலக்கிய வரலாற்றறிஞர்கள் பல காரணங்களைக் கூறுகின்றனர். இச் சங்கம் கி. பி. மூன்றும் நூற்றாண்டின் முற்பகுதியில் அழிய, இடைப்பகுதியில் பல்லவர்கள் வருகை தந்தனர். காஞ்சியைத் தலைநகராகக் கொண்ட இவர்கள் சோழ வேந்தர்களுடனும் குறுநில வேந்தர்களுடனும் போர் செய்து, தமிழகத்தின் வடபகுதியினைக் கைப்பற்றிக் கொண்டனர். கடைச் சங்கப்புலவர்கள் தமது பாடல்களில் பல்லவரைப்பற்றியும், அவரது படையெழுச்சிபற்றியும் யாண்டும் குறிப்பிடாத காரணத்தால் பல்லவரின் வருகைக்கு முன்பே பாண்டிநாட்டில் கடைச் சங்கம் அழிந்துபட்டிருக்க வேண்டும்.

**பஞ்சம்** : அடுத்து, பாண்டி நாட்டில் பன்னீராண்டு காலம் கடும் பஞ்சமொன்று நிகழ்ந்ததாகவும், அதுபோது மன்னனின் ஆதரவினைப் பெற முடியாத சங்கப்புலவர்கள் பாண்டிய நாட்டில் பிழைக்க வழியின்றி சேர, சோழ நாடுகளுக்குக் குடியேறினரென்றும், இறையனர் அகப்பொருளுரை குறிப்பிடுகிறது.

பாண்டிய நாட்டின்கண் பன்னீராண்டு வறுமையும் வெறுமையும் அரசோச்சியதனை மக்கள் உண்ண உணவின்றி வாடியதனை சீத்தலைச் சாத்தனாரது சொல்லாலும் அறியலாம். இதனை மணிமேகலை கீழ்க்கண்ட அடிகளால் தெரிவிக்கின்றது.

'பன்னீராண்டு பாண்டி நன்னாடு
மன்னுயிர் மடிய மழைவளம் மிழந்தது'.

கடைச் சங்கத்தின் இறுதிக் காலத்தில் உக்கிரப் பெருவழுதி என்பான் பாண்டிய நாட்டினை ஆண்டு வந்தான். கொடுமையான பஞ்சமொன்று அவனது ஆட்சிக் காலத்தில் மக்களை வாட்டியது என்னும் செய்தி இலக்கியச் சான்றுகளால் நன்கறியப்படுகின்றது. பெரும்பெற்ற புலியூர் நம்பிகளும் பாண்டிய நாட்டில் நிலவிய பஞ்சம்பற்றிப் பழைய திருவிளையாடற் புராணத்தில் குறிப்பிடுகின்றார்.[1] இலீலா சங்கிரக அத்தியாயம் 44-இல் இவ் வறுமையின் கொடுமைபற்றிய குறிப்பு காணப்படுகிறது. மூவேந்தரும் இந்திரனிடம் சென்று மழை பெய்ய வேண்டினர் என்ற செய்தி கூறப்பட்டுள்ளது.

மேற்கூறிய இலக்கியச் சான்றுகளேயன்றி கல்வெட்டுகளும் இச் செய்தியினை உறுதி செய்வதாக உள்ளது. திருநெல்வேலி மாவட்டம், சங்கரநயினார்கோயில் கோபுர வாசலின் உட்புறம் (கீழ்ப்பக்கம்) உள்ள கீழ்க்காணும் கல்வெட்டும் இவ் வறுமை பற்றி அருமையாகப் பேசுகிறது இதோ அக் கல்வெட்டு :

'விசுவாவசு ௵ வைகாசி மீ (உ) யச உ
திங்கட்கிழமையும் உத்தராடமும்
பெற்றநாள் தேவேந்திர குடும்பன் பலாத்துப்படி'.

முன் துவாபர யுகத்தில் உக்கிரப் பெருவழுதியும் சோழனும், சேரனும் உலகம் வறுமைப்பட்டு இருக்கின்ற காலத்திலே தேவேந்திரன் பக்கல் மழை கேட்கப்போனவிடத்திலே பகவானும் மனம் மகிழ்ந்து 'இரும்' என்ன, சேரனும், சோழனும் வணங்கியிருக்க, தேவேந்திரனும் வரிசை செய்தாற்போல கவடு வினைக்க, பாண்டியன் கோபித்து எழுந்து தேவ கன்னிகைகள் மக்கள் நாலு குடும்பத்தாரைக் கைப்பிடியாகப் பிடித்துக் கொண்டு செந்நெல் விதையும், கன்னல் விதையும், (கதலி) விதையும், பனை விதையும் முதலான பல வித்தும், ஒரு ரிஷபமும் ஒரு சாவியும் கொண்டு பூமியில் வந்தான். நால்வரில் முதல்வனுக்குத் தேவேந்திரக் குடும்பப் பட்டமும் கட்டி மூன்று

1 பழைய திருவிளையாடற் புராணம்; 12:3, 44:30.

பெருக்கு வாரியன், அக்கசாலே, (இளந்தாரியன்) என்று வரிசைப் பட்டமும் கட்டி, ஒரு நாளையிலே 1200 கிணறு வெட்டி வேளாண்மை கண்டபடியினாலே......'

இக் கல்வெட்டுப் பகுதியில் புராண வாடை சிறிது வீசுகின்ற போதிலும், வரலாற்றுச் செய்தி இல்லாமலில்லை. வேந்தன் தேவ கன்னியர் மக்களை அழைத்து வந்து, அவர்களைக் கொண்டு கிணறுகள் வெட்டி, வறுமையை ஓட்டி, வளமையைத் தேடினான் என்ற செய்தி ஈண்டு குறிப்பிடத்தக்கதாகும்.

மேற்கூறப்பட்ட செய்திகளைக் கொண்டு பாண்டியன் உக்கிரப் பெருவழுதியின் காலத்தில் கொடிய பஞ்சமொன்று புலவர்களையெல்லாம் பாண்டிய நாட்டை விட்டு விரட்டியது எனக் கூறும் இறையனார் களவியல் உரைக்கூற்று உண்மையே யென்பதனையறியலாம்.

பன்னிரண்டாண்டுகள் உருண்டோடின. பன்னிரண் டாண்டென்பது குறுகியதோர் காலமல்ல. இக் காலக் கட்டத்தில் பல புலவர்கள் மாண்டிருக்கலாம். சிலர் மதுரைக்குத் திரும்பி வராமல் தாம் அடைக்கலம் புகுந்த இடத்திலேயே தங்கியிருக்க லாம். இருப்பினும் சில புலவர்கள் மதுரை வந்து சேர்ந்தனர். இதுகாறும் புலவர்கள் எவ்வாறு தமது வாழ்வைக் கழித்தனரோ என்பதனை அறிந்து கொள்வதில் பாண்டியன் ஆர்வம் கொண் டிருந்தான்; இதுபற்றிப் புலவர்களையும் வினவினான். புலவர் களும் தாங்கள் பஞ்ச காலத்தில் அயிந்தன் என்பானைத் தஞ்சம் புகுந்ததாகவும் அவன் தங்களைக் காத்தருளியதாகவும் விடை யிறுத்தனர். இதனைப் பின்வரும் தனிப்பாடலடிகள் நமக்குக் கூறுகின்றன.

'காலை ஞாயிறு கடுங்கதிர் பரப்பி
வேலையும் குளனும், வெடிபடச் சுவறித்
தந்தையை மக்கள் முகம் பாராமல்
வெந்த சாகம் வெவ்வே றருந்திக்
குணமுள தனையும் கொடுத்து வாழ்ந்த
கணவனை மகளிர் காண்பா ராமல்
விழித்த விழியெல்லாம் வேற்றுவிழி யாகி
அறவுரை யின்றி மறவுரை பெருகி
உரைமறந் தொழிந்த ஊழிக் காலத்தில்
தாயில்லா தவர்க்குத் தாயே யாகவும்
தந்தையில் லாதவர்க்குத் தந்தையே யாகவும்
இந்த ஞாலத் திடுக்கண்தீர

வந்து தோன்றினன் மாசிதிக் கிழவன்
நீலஞ் சேரு நெடுமால் போல் வான்
ஆலஞ்சேரி அயிந்தன் என்பான்
தன்குறை சொல்லான் பிறர்பழி யுரையான்
மறந்தும் பொய்யான் வாய்மையும் குன்றான்
இறந்து போகாது எம்மைக் காத்தான்
வருந்தல் வேண்டாம் வழுதி
இருந்தனம் இருந்தனம் இடர்கெடுத் தனனே'[1]

மீண்டுவந்த புலவர் அனைவருமே புலமையில் தன்னிகரற்று விளங்கினர் எனக் கூறுவதற்கில்லை. அவருள் ஒருசிலரே அறிவுசால் புலமை பெற்றிருந்தோர் எனலாம். பஞ்சகாலத்தில் பயிற்சியில்லாக் காரணத்தால் ஒருசிலரது புலமையும் மழுங்கியிருத்தல் கூடும். இதன் காரணமாகவே பாண்டிய வேந்தனும் பொருள் இலக்கணம் வல்லாரைக் காணேன் என்று கலங்கியதாகவும், அவனது கலக்கத்தைப் போக்கவும் நீக்கவும் தேர்ச்சியான புலமை மிக்கோர் அன்றில்லை என்பதாகவும் பின்வரும் கல்லாடச் செய்யுள் செப்புகின்றது.

'உலகியல் நிறுத்தும் பொருள் மரபொடுங்க
மாறனும் புலவரும் மயங்குறு காலை
முந்துறும் பெருமறை முளைத்து அருள்வாக்கால்
அன்பினை ஐந்திணை என்று அறுபது சூத்திரம்
கடல் அமுது எடுத்துக் கரையில் வைத்ததுபோல்
பரப்பின் இன்தமிழ்ச் சுவைதிரட்டி மற்றவர்க்குத்
தெளிதரக் கொடுத்த தென்தமிழ்க் கடவுள்'.

இப்பாடலில் இறைவனே நூல் செய்தனன் என்பதனை நாம் தள்ளினும், அன்று புலவர்கள் இல்லாப் பஞ்சம் ஒன்று ஏற்பட்டதனை நாம் மறத்தல் இயலாது.

புதிதாக நூல் படைக்கத்தான் புலவர்களால் முடியவில்லையென்றால், அதற்கு உரைகாணக் கூடவா அவர்களால் இயலவில்லை? ஆம். இறையனார் களவியலுக்கு உரைகூற முடியாமல் தவித்தனர் அவைக்களப் புலவர்கள். உரை கூறுவதற்கும் இறைவனையே தேடுகின்றனர். பின்னர் உரை காணும் முயற்சியில் ஒவ்வொருவராக ஈடுபடுகின்றனர். இறுதியாக உருத்திர சன்மன் ஒருவனே நல்லுரை காண்கின்றான் இவ்வாறு நல்லுரை தேடிய கதைகளைப்பற்றியெல்லாம் நாம் கேட்கின்றபோது, அக்

1. தனிப்பாடல் திரட்டு. பாகம்-1, பாடல் 9.

காலக் கட்டத்தில் வாழ்ந்து வந்த புலவர்களின் புலமைக் குறை வினை நாம் நன்கு அறிந்து கொள்ள முடிகின்றது.

மேற்கூறிய செய்திகளைக் கோவைபட ஆய்ந்தால் பஞ்சகாலம் முடிவுற்றுத் திரும்பிய புலவர்கள் ஆழ்ந்த இலக்கண, இலக்கிய அறிவு நிரம்பப் பெற்றவர்கள் என்று நாம் கருத இயலாது. இதனால் வாழையடி வாழையாக உயர் புலமைமிக்க பாவல ரேறுகளைக் கொண்டிருந்த தமிழ்ச்சங்கம் அவர்களை இழந்து விட்டதென்றும், பெயரளவில் புலவர்கள் என்று தங்களைக்கூறிக் கொள்கின்ற புலவர்களையே பெற்றிருந்தது என்பதும் புலனாகும். சில புலவர்கள் பாடல் புனைவதைத் தமது பொழுதுபோக்காகக் கொண்டு, அன்றாட வாழ்வைச் சீர்செய்வதனையே தமது தலையாய கடமையாகக் கொண்டிருந்தனர் என்பதும் போதரும். இதன் காரணமாகத்தான் அவர்கள் உரைகாணும் ஆற்றலையும் இழந்து விட்டனர் எனலாம்.

அடுத்து, பஞ்சகாலம் முடிந்து பாண்டிய நாட்டில் புலவர்கள் கூடினரென்ற செய்தி இறையனார் அகப்பொருளுக்கு உரை காணக்கூடிய புலவர் குழாத்தினையே குறித்தது எனலாம். அதில் தான் அகப்பொருளும் காணப்படுகிறது. அதற்கு உரையும் எழுதப்படுகிறது. பஞ்சகாலத்திற்குப் பின்புதான் நூலும் உரையும் ஒரே காலத்தில் தோன்றுகின்றது. இந் நிகழ்ச்சி களுக்குப்பின் யாது நடந்தது என்பதனை அறிந்து கொள்ளப் போதிய ஆதாரங்கள் கிடைக்கவில்லை.

வரலாறு தொடர்கிறது; சேரன் செங்குட்டுவன் வடநாடு நோக்கிப் பயணம் தொடர்கிறான்; ஆரியப்படை கடந்த நெடுஞ் செழியன் ஆராயாது செய்த குற்றத்திற்காக இறந்துபடுகிறான்; இந் நிலையில் கொற்கையின்கண் வீற்றிருந்த வெற்றிவேற் செழியன் மதுரை மாநகர் போந்து மணிமுடி தரித்துக் கொள் கிறான்; நன்மாறன் என்று போற்றப்பெறுகிறான். பஞ்சம் தெளிந்த பாண்டிய நாட்டில் மீண்டும் பஞ்சம் தஞ்சம் புரிகிறது; செய்வதறியாது திகைக்கிறான் பாண்டியன்; கண்ணகியின் சீற்றமே இதற்குக் காரணமென்றறிகிறான்; பொற்கொல்லர் ஆயிரவரைப் பலியிடுகிறான்; கண்ணகியின் சீற்றம் தணிந்ததாக எண்ணுகிறான். இதனைச் சிலப்பதிகார உரைபெறு கட்டுரைப் பகுதி பின்வருமாறு கூறுகின்றது.

"அன்றுதொட்டு, பாண்டியன் நாடு மழை வறம் கூர்ந்து, வறுமை எய்தி, வெப்பு நோயும் குருவும் தொடர, கொற்கையில் இருந்த வெற்றிவேற்செழியன், நங்கைக்குப் பொற்கொல்லர்

ஆயிரவரைக் கொன்று களவேள்வியால் விழவொடு சாந்திசெய்ய நாடு மலிய மழை பெய்து நோயும் துன்பமும் நீங்கியது''.

இவ்வாறு நாட்டில் வறுமையும் வெறுமையும் ஆட்சி செய்கின்றபோது மன்னனது எண்ணமெல்லாம் மக்களது இல்லாமையை ஓட்டவேண்டுமென்பதிலேயே நாட்டமாயிருக்குமேயல்லாது, புலவர்களைப் பேணிக்காத்து, இலக்கியத்தை வளர்ப்பதில் நாட்டம் செல்லாது. அடுத்து, புலவர் பெருமக்களும் தம்மைத் தொடர்ந்து ஆதரிப்பாரின்றித் தமது புலமையைப் பெருக்கிக் கொள்ள வழியின்றி வாடிருயிப்பர். இந் நிலையில் பாண்டியனது ஆட்சியும் வலுவிழந்து காணப்பட்டது. வேந்தனின் ஆதரவின்றி, புலவர்கள் தம்முயற்சியால் ஒன்றுகூடி நூலியற்றுதல் என்பது இயலாத காரியமாகும். எனவே வேந்தன் வலிமை குன்றினன்; புலவர்கள் ஆதரிப்பாரின்றி விடப்பட்டனர். தமிழாராய்ச்சி மன்றம் கூட்டப் பெறவில்லை; இதனால் நூல்களும் இயற்றப் பெறவில்லை. நாட்டில் அரசியல் குழப்பமும் ஏற்பட்டது; பாண்டிய நாட்டின் பல பகுதிகள் பல வேந்தரது ஆட்சிக்குட்பட்டது. தமிழ் வளர்ச்சி குன்றியது. நெடுநாளைய குழப்பத்திற்குப் பின்னர் அன்னியர் படையெழுச்சி என்னும் சூறைக் காற்றும் சுழன்றடித்தது. தனது தனி முயற்சியால் பாவியற்றும் பாவலர்களும் தமது செயல்குன்றினர். புலவர்களில்லை; சங்கமும் இல்லை.

**களப்பிரர் :** களப்பிரர் என்னும் கலியரசர் தமிழகத்தின் மீது படையெடுத்து வந்தனர் அதுபோழ்து மதுரை மாநகரும் பாண்டிய நாடும் அவரது தாக்குதலுக்கு இலக்காயிற்று. பல வேந்தர் தோற்கடிக்கப்பட்டு, மதுரையும் அழிக்கப்பட்டது. இவ் வழிவின் காரணமாகத் தமிழ்ச் சங்கமும் அழிந்துபட்டிருக்கவேண்டும். பாண்டிய நாட்டின்கண் களப்பிரர் படையெழுச்சிபற்றி வேள்விக்குடிச் செப்பேடுகள் சில செய்திகளைச் செப்புகின்றன. இதன் காரணமாகப் பாண்டி நாட்டில் பல மாற்றங்கள் ஏற்பட்டன. தமிழர் இலக்கியம், தமிழர் கலை, தமிழர் பண்பாடு, தமிழ் மொழி ஆகிய அனைத்தும் வீழ்ச்சியுற்றன. உக்கிரப் பெருவழுதியின் காலத்திற்குப் பின் கடைச் சங்கம் மறைந்தொழிந்தது.

களப்பிரரின் படையெழுச்சியால் பாண்டியரது கடைச் சங்கம் முழுவதும் அழிவுற்றதென்பது யாவரும் ஒப்புக்கொள்ளக் கூடியதே. இருப்பினும் களப்பிரரது படையெழுச்சிக்கு முன்பே கடைச் சங்கம் அழியத் தொடங்கியதென்பதனையும் ஈண்டு நாம் நினைவிற் கொள்ளவேண்டும். எனவே, பஞ்சம் நிகழ்ந்த காலத்தில்

எவரும் பேணுவாரற்றுக் கிடந்து, அழிவுப் பாதையை நோக்கி விரைந்து சென்று கொண்டிருந்த, தமிழ்ச் சங்கம் களப்பிரரது படையெழுச்சியால் முழுமையாக அழிந்ததென்று கூறலாம். கடைச் சங்கம் களப்பிரர் படையெழுச்சியால் அழிந்த செய்தியினை வேள்விக்குடிச் செப்பேடு செப்புவதாலும் அறியலாம்.

## சங்கமும் அதன் காலமும்

**முன்னுரை:** பாண்டிய நாட்டின்கண் முச் சங்கங்கள் நிறுவப் பட்ட செய்தியினையும், தமிழ் வளர்க்கப்பட்ட செய்தியினையும் நாம் முன்பே கண்டோம். இச் சங்கங்களில் வீற்றிருந்து இலக்கியம் செய்த தமிழ்ச் சான்றோர்களும் தமிழ்ப் புலவர்களும் சங்கப் புலவர்கள் என அழைக்கப் பெறுகின்றனர். இவர்களால் இயற்றப்பட்ட இலக்கியங்கள் யாவும் சங்க இலக்கியமெனவும், இவ் விலக்கியங்கள் எழுந்த காலம் சங்க காலம் எனவும் அழைக்கப்பெறுகிறது. சங்க இலக்கியங்கள் எழுந்த சங்க காலத்தினை நாம் அறுதியிட்டு உறுதியாகக் கூறுதல் இயலாததாகவே உள்ளது. இருப்பினும் சங்க இலக்கியததுள் குறிக்கப்பட்டுள்ள ஓருசில செய்திகளைக் கொண்டு இச் சங்க காலத்தினை ஒருவாறு அறிய முடிகின்றது. இதனைக் குறித்து பல்வேறு அறிஞர்கள் பல்வேறு கருத்துகளைக் கொண்டுள்ளனர். ஈண்டு நாம் சங்க காலம்பற்றி அறிஞர்கள் முன் வைக்கும் கருத்துகளை ஆய்ந்து முடிவெடுப்போம்.

### சங்க காலம்பற்றிய அறிஞரது கருத்துகள்

**1. கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டுக்கும் பிற்பட்டது**

பண்டாரகர் கால்டுவெல், பண்டாரகர் பர்னல் போன்ற மேலை நாட்டறிஞர்கள் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டுக்கு முற்பட்ட தமிழிலக்கியம் எதுவும் இல்லையெனக் கருதுகின்றனர்.[1] இக் கருத்து முற்றிலும் பிழைபட்டதாகும் என்று திரு. பி. சுந்தரம்பிள்ளை முன்பே தெரிவித்தார். தமிழகத்தின் தலைசிறந்த நூல்களுள் பெரும்பாலானவை, ஒன்பதாம் நூற்றாண்டிற்கு முன்பே இயற்றப்பட்டு விட்டன. சில ஒப்பற்ற தமிழிலக்கியங்கள் கி. பி. இரண்டாம் நூற்றாண்டிற்கு முன்பே இயற்றப்

1 வி. கனகசபை அவர்கள் தமது '1800 ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழர்' என்னும் நூலில் இக் கருத்தைக் குறிப்பிட்டு, அடிக்குறிப்பில்

"Dr. Burnell in his "South Indian Palaeography' and Dr. Caldwell in his 'Introduction to the Comparative grammer of 'Dravidian languages, have expressed this view' என்று குறிப்பிட்டுள்ளார்.

பட்டுவிட்டன. கி. பி. முதல் நூற்றாண்டிற்குத் தமிழகத்தின் 'அகஸ்டஸ் காலம்' ஆகும் என்பதனை திரு. வி. கனகசபை அவர்களும் குறிப்பிடுகிறார். தமிழிலக்கியத்தின், 'அகஸ்டஸ் காலம்' கிறித்து அப்தத்தின் முதல் மூன்று நூற்றாண்டு என்பது வரலாற்று மேதை திரு. வின்சென்ட் ஸ்மித் அவர்களது கருத்தாகும்.[1] எனவே, தமிழிலக்கியங்களை கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டிற்குப் பின்னே தள்ளுவது பொருத்தமற்றதாகும்.

## 2. கி. பி. எட்டாம் நூற்றாண்டு

பரிபாடல், சிலப்பதிகாரம் முதலான நூல்களில் இடம் பெற்றுள்ள ஒரு சில நிகழ்ச்சிகளை, வானவியல் கணிப்பின்படிக் கணக்கிட்டு, சங்க காலம் கி.பி. ஏழு அல்லது எட்டாம் நூற்றாண்டில் முடிவுற்றதாக திரு. எல். டி. சாமிக்கண்ணுப் பிள்ளையவர்கள் குறிப்பிடுகின்றார்.

சிலப்பதிகாரத்தில் காணப்படும் பின்வரும் அடிகளைச் சுட்டிக்காட்டி, தமது வான நூல் அறிவையும் எடுத்துக்காட்டி கண்ணகி மதுரையைத் தீக்கிரையாக்கியது கி. பி. 756ஆம் ஆண்டு ஜூலைத் திங்கள் இருபத்து மூன்றாம் நாள் என்று கணிக்கின்றார். அதே சமயத்தில் கடைச்சங்க காலமும் முடிவுறுகிறது என்கிறார். இதோ அப் பாடல்:

'ஆடித் திங்கள் பேரிருள் பக்கத்து
அழல்சேர் குட்டத்து அட்டமி ஞான்று
வெள்ளி வாரத்து ஒள்ளெரி உண்ண
உரைசால் மதுரையொடு அரைசு கேடுறும்'[2]

பேரிருட் பக்கம் — கிருஷ்ண பட்சம் (பௌர்ணமி முதல் அமாவாசை வரையுள்ள காலம்) அழல் சேர்குட்டம் — கார்த்திகைப் பரணீ — முதலாய உரைக் குறிப்புகளையும், தமது வான நூல் அறிவையும் துணையாகக் கொண்டே இவர் இம் முடிவுக்கு வருகிறார்.

அடியார்க்கு நல்லாரின் குறிப்புகளைக் கொண்டே தமது ஆய்வினை நிகழ்த்திய திரு. சாமிக்கண்ணு, உரையாசிரியரின் குறிப்புகள் பிழையானவை என்பதனையும் சுட்டிக் காட்டுகின்றார். உரையாசிரியரின் குறிப்பே தவறுடையதெனில், அதனை அடிப்படையாகக் கொண்டெழுந்த ஆய்வு முறை எவ்

[1] Smith, V.A. 'Early History of India'. P. 445

[2] சிலப்பதிகாரம்: கட்டுரைகாதை. 133-136.

வாறு இருக்கும் என்ற வினு எழுப்பப்படுமானுல், அது தவறுடை யதாகவே இருக்குமென்பதில் ஐயமுண்டோ? இதன் காரண மாகவே இதனை அறிஞர் பெருமக்கள் ஏற்றுக்கொள்ளவில்லை.

சிலப்பதிகார மூலத்தைக் கொள்ளாமல், உரையாசிரியரது குறிப்பைக் கொண்டு ஆய்தல் முறையன்று. அடுத்து, சிலப்பதி கார சோதிடக் குறிப்பும், அண்மைக்காலச் சோதிடக் குறிப்பும் சில அடிப்படை உண்மையில் வேறுபட்டிருக்க வேண்டும். எனவேதான். திரு. கே. ஜி. சங்கர ஐயரவர்களும் கி. பி. ஒன்று முதல் கி. பி. 1400 வரையிலாக உள்ள கால இடைவெளியில் சிலப்பதிகாரம் கூறும் சோதிடக் கணிப்பு பொருந்தி வரவில்லை என்று கூறுகின்றுர். இதன் காரணமாக சோதிடக் கணிப்பைக் கொண்டு ஆய்வு நிகழ்த்திய திரு. சாமிக்கண்ணு அவர்களது கருத்து ஏற்றுக் கொள்ளத் தக்கதல்ல என்பது போதரும்.

### 3. கி. பி. ஏழாம் நூற்றுண்டிற்கு முன்னர்

நாவுக்கரசரது பாடலைக் கொண்டு சங்கத்தினை கி. பி. ஏழாம் நூற்றுண்டினுக்கு முற்பட்டதென்று சிலர் கருதுகின்றனர்.

சைவ சமயக் குரவரான திருநாவுக்கரசர் கி. பி. ஏழாம் நூற்றுண்டில் வாழ்ந்தவர். இவர் முதலாம் நரசிம்ம வருமப் பல்லவனது (கி. பி. 630-660) உடன் காலத்தவரென்பது யாவரும் அறிந்த உண்மையுங்கூட ஆகும். திருநாவுக்கரசர் சங்க காலத்திற்கு மிகவும் பிற்பட்டவரென்பது இவரது பாக்களால் நன்கு புலனுகின்றது.

> 'நன்பாட்டுப் புலவனுய்ச் சங்கமேறி
> நற்கனகக் கிழிதருமிக் கருளி னுன்காண்'[1]

என்று தமது தேவாரத்தில் குறிப்பிடுகின்ற திருநாவுக்கரசரது பாட்டடிகளை நாம் கூர்ந்து நோக்குங்கால், இவர் தனக்கு ஏதோ பல்லாண்டுகளுக்கு முன்பு நடைபெற்ற நிகழ்ச்சியினையே குறிப் பிடுகின்ற உணர்வு நமது உள்ளத்தில் எழுகின்றது.

திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரின் உடன்காலத்தவ ராகும். இவரது தேவாரப் பாடல்களை நாம் பயிலுங்கால் சங்க இலக்கியத்தினின்றும் மேம்பட்ட மொழி நடையைக் காண முடிகிறது. இவற்றுள் கையாளப் பெற்றுள்ள சொற்களும் எளியவை; இக் காலத்துச் சொற்களுக்குற்ற இலக்கண விதியும் சொல்லமைப்பும் பொருளமைப்பும் பொருத்தமாகவுள்ளன.

1 அப்பர் தேவாரம்: திருப்புத்தூர் திருத்தாண்டகம்: 8.

சங்க இலக்கியங்களில் கையாளப்பெற்றுள்ள சொற்களுக்கும் தேவாரத்தில் கையாளப்பெற்றுள்ள சொற்களுக்கும் பெரிய வேறுபாடு காணப்படுகின்றன. சங்க இலக்கியத்தில் இடம் பெற்றுள்ள பல தமிழ்ச் சொற்கள் பின்பு தோன்றிய இலக்கியங்களில் வேறு பொருளில் பயன்படுத்தப்பட்டுள்ளன; சில சொற்கள் முற்றிலும் உருமாற்றம் பெற்றுள்ளன; பல சொற்கள் வழக்கொழிந்தும் போய்விட்டன. சங்க இலக்கியம் கி. பி. ஆறும் நூற்றுண்டு வரை நீடித்திருக்க வேண்டுமேயானல் அதற்கடுத்த நூற்றுண்டில் தோன்றிய இலக்கியங்கள் அதனின்றும் முற்றிலும் வேறுபட்ட, மாற்றங்கள் பல பெற்ற சொல்லாட்சியுடன் கூடிய இலக்கியமாகத் தோன்ற வழியில்லை. சங்க இலக்கியத்தினையும் தேவாரங்களையும் கற்போர் இவை இரண்டினிக் தமிடையே பொருந்த கால இடையீடு இருந்திருக்கவேண்டுமென்பதனை நன்குணர்வர்.

மேற்கூறிய பாடலைக் கொண்டு கி. பி. ஏழாம் நூற்றுண்டினளவில் சங்கம் என்னும் சொல் இலக்கிய வழக்கிலிருந்தது என்பதனை மட்டும் அறிந்து கொள்ளலாமேயன்றி, சங்க காலத்தின் அழிவினை அக் காலத்திற்குக் கொண்டு செல்லுதல் முறையாகாது என்பதனையறியலாம்.

## 4. கி. பி. ஆறும் நூற்றுண்டு

**திரு. மு. இராகவையங்கார்:** அடுத்து திரு. மு. இராகவையங்காரவர்கள் சங்க காலத்தை கி. பி. ஆறும் நூற்றுண்டு வரை இழுத்துச் செல்கின்றுர். இவர் 'குச்சரக் குடிகை' 'குச்சரக் குடிகை குமரியை மரீஇ' என்ற மணிமேகலைக் காப்பியத்தில் இடம் பெற்றுள்ள சொற்களை கூர்ச்சரம் என்னும் நாட்டினைக் குறிப்பதாகக் கொண்டு கி. பி. ஆறும் நூற்றுண்டில் வாழ்ந்த கூர்ச்சரது காலத்தினையே சங்கத்தின் இறுதிக் காலமாகக் கொள்வர். மத்திய அரசு தொல்லியல் துறை இயக்குநர் பண்டாரகர் திரு. என். பி. சக்கரவர்த்தியவர்களும் ஐயங்காரது கருத்தினை ஆதரிக்கின்றுர். மணிமேகலைக்கும் கூர்ச்சரத்திற்கும் தொடர்பில்லாதபோது, வெறும் பெயர் ஒப்புமைக் கொண்டு இக் காலத்தைக் கணித்தல் பொருத்தமற்றதாகத் தோன்றுகிறது.

அடுத்து, மு. இராகவையங்காரவர்கள், தமிழகத்தில் காணப்படும் பிராமிக் கல்வெட்டுகளையும், சங்க காலத் தமிழ் இலக்கண இலக்கியங்களையும் ஒப்பிட்டு ஆய்வு நிகழ்த்துகிறுர். தமிழகத்தில் காணப்படும் பிராமிக் கல்வெட்டுகள் ஏறத்தாழ கி. மு. இரண்

டாம், மூன்றும் நூற்றாண்டைச் சார்ந்தவையாதலாலும், இவையனைத்தும் நன்கு வளர்ச்சி பெறாத நிலையிலுள்ளதாலும், சங்க இலக்கியங்களோ நன்கு வளர்ச்சி பெற்ற மொழியினைக் கொண்டு உள்ளதாலும் சங்க இலக்கியங்கள் கி. பி. ஆறும் நூற்றாண்டிற்கு முன்னர் தோன்றியிருக்க முடியாதென்று ஐயங்கார் கருதுகின்றார். கல்வெட்டுகளில் இடம் பெற்றுள்ள எழுத்துகளும் சொற்களும் இலக்கண வரம்பிற்குட்படாதவையென்பதும், அரைகுறையாகக் கல்வி பயின்றவர்கள் செதுக்கியவையென்பதும் கல்வெட்டை ஆய்வோர் அறிந்த ஒன்றாகும். மேலும் பண்டைய கல்வெட்டுகளில் எழுத்துப் பிழைகள் பல காணப்படுவதனையும் நாம் அறியலாம். எனவே கல்வியறிவின் மேம்பட்டு விளங்கிய தமிழ்ப் புலவர்களது இலக்கிய நடையையும் கல்வெட்டு நடையையும் திரு. இராகவையங்கார் ஒப்பிடுதல் முறையாகாது.

## 5. கி. பி. ஐந்தாம் நூற்றாண்டு

கடைச் சங்க காலம் கி. மு. ஐந்தாம் நூற்றாண்டு வரை நீடித்ததாக அறிஞர் சிலர் கருதுகின்றனர். அவர்களுள் திருவாளர்கள் வி. ஆர். இராமச்சந்திர தீட்சதர், கே. ஆர். சீனிவாச ஐயங்கார், சி. இ. இராமச்சந்திரன் ஆகியோர் குறிப்பிடத் தக்கவராவர்.

சங்க காலம் கி. மு. ஐந்தாம் நூற்றாண்டில் தொடங்கி கி. பி. ஐந்தாம் நூற்றாண்டு வரை நீடித்ததாக திரு. வி. ஆர். இராமச்சந்திர தீட்சதர் கருதுகின்றனர்.[1] திரு. கே. ஆர். சீனிவாச அய்யங்காரவர்களும் இக் கருத்தினையே முழுக்க முழுக்க ஆதரிக்கின்றனர்.[2] திரு. சி. வி. இராமச்சந்திரன் அவர்களும் சங்கத்தின் தொடக்கம் கி. மு. ஐந்தாம் நூற்றாண்டே என்பார்.[3]

அடுத்து, இக் கருத்தினுக்கு ஆதரவாக இலக்கியச் சான்றுகளைச் சிலர் எடுத்துக்காட்டுகின்றனர். அவர்கள் எடுத்துக்

[1] Ramachandra Dikshitar, V. R. 'Studies in Tamil Literature and History'. P. 4. சங்க காலத்தின் தொடக்கம் கி. மு. ஐந்தாம் நூற்றாண்டு என்றும் அவர் கூறுவார். Ibid. P. 21; இவரது இக் கருத்தினைத் திரு. என். சுப்பிரமணியன் அவர்கள் தமது நூலில் எடுத்துக்காட்டி மறுத்துள்ளார். 'History of Tamil Nad' P. 39. (1972)

[2] Srinivasa Iyengar, K.R. 'The Age of Imperial Unity' P. 293.

[3] Ramachandran, C. E. 'Pattuppattu In Its Historical Setting' (University of Madras. 1974) P. 5

காண்பிக்கும் பாடல் அகநானூற்றில் உள்ளதாகும். அப் பாடலைக் கீழே காண்போம்.

'பல்புகழ் நிறைந்த வெல்போர் நந்தர்
சீர்மிகு பாடலிக் குழீஇக் கங்கை
நீர்முதற் கரந்த நிதியங் கொல்லோ'[1]

இக் கருத்து ஏற்றுக் கொள்ளத் தக்கதாக இல்லை.

**திரமிளசங்கம் :** கி. பி. நானூற்றெழுபதாமாண்டில் வச்சிர நந்தியால் நிறுவப்பெற்ற 'திரமிள சங்கத்'தினையே சங்ககாலத் தொடக்கம் என்று சிலர் கருதுகின்றனர்.[2] இச் சங்கம் நிறுவப் பெற்றதனை 'திகம்பர தரிசனம்' என்னும் நூல் குறிக்கின்றது. இச் சங்கத்தினையும் தமிழ்ச் சங்கங்களையும் நுண்ணிதின் ஆய்ந்து பார்த்தால், இவை ஒன்றுக்கொன்று முற்றிலும் வேறுபட்டன வென்பது நன்கு புலனாகும். இவண் குறிக்கப்பெற்றுள்ள 'திரமிள சங்கம்' சமயச் சார்புடையதாக இருந்து, சமண சமயக் கோட்பாடுகளைப் பரப்புவதற்கென்றே நிறுவப்பட்ட நிறுவன மாகும். எனவே, இதனைத் தமிழ்ச் சங்கத்துடன் தொடர்பு படுத்துதல் பொருந்தாது.

திரு. இராகவையங்கார் போன்றோர் சங்க இலக்கியத்தினை மிகவும் பின்னுக்குத் தள்ளுவது பொருத்தமுடையதன்று. அவர் கூறுவது போன்று சங்க காலம் ஆறும் நூற்றாண்டு வரை நீடித்திருக்குமேயாகில், அதில் நிச்சயமாக ஓரிடத்திலாவது பல்லவரைப்பற்றிய குறிப்பு இடம் பெற்றிருக்கும். ஆனால், அவர்கள் சங்க இலக்கியத்தில் யாண்டும் குறிக்கப் பெறவில்லை. பல்லவர்கள் கி. பி. ஏழாம் நூற்றாண்டில்தான் செல்வாக்குப் பெற்று இருந்தபோதிலும் அவர்கள் கி. பி. நான்காம் நூற்றாண்டளவிலேயே வரலாற்று அரங்கிற்கு வருகை புரிகின்றனர். இதனை அவர்களது பிராகிருத சாசனங்களினாலறியலாம். முடிவேந்தர் மூவரையும், குறுநில மன்னர்களையும் அடைந்து அவர்கள் புகழ் பாடி, பரிசில்பெற்ற புலவர் பெருமக்கள். பல்லவரைப்பற்றி ஒன்றும் குறிப்பிடாதிருத்தலின் சங்க நூல்கள் கி. பி. நான்காம் நூற்றாண்டிற்கு முற்பட்டவையென்பது இனிது விளங்கும்.

### 6. கி. பி. நான்காம் நூற்றாண்டு

**சமுத்திரகுப்தனது வெற்றி :** குப்தரது காலம் இந்திய வரலாற்றின் பொற்காலம். இவர்கள் மௌரியரது காலத்திற்கு

[1] அகநானூறு 265.

[2] Vaiyapuri Pillai, S. 'History of Tamil Language and Literature'

ஏறத்தாழ ஐந்நூறு ஆண்டுகளுக்குப் பின்னர் தொடங்குகிறது. இம் மரபின் முதல் மன்னன் முதலாம் சந்திரகுப்தன். இவனை யடுத்து கி. பி. 336-ல் சமுத்திர குப்தன் அரியணையேறுகிருன். இவனது ஆட்சியும் கி. பி. 380 வரை நீடிக்கிறது. இவன் தென்னிந்தியாவில் மாபெரும் படையெழுச்சி ஒன்றினை மேற் கொண்டதனுல் புகழ் பெற்றுள்ளான். இவன் தனது வெற்றி களைத் தூண்களில் குறித்துள்ளான். அவ்வாறு அவனுல் நிறுவப்பட்ட தூண் ஒன்றில் 'மந்தராஜா' என்னும் பெயர் காணப்படுகின்றது. இதனை 'மாந்தரஞ்சேரல் இரும்பொறை' என்னும் சேர வேந்தனுடன் தொடர்புபடுத்தி கி. பி. நான்காம் நூற்ருண்டினை இச் சேரனுக்கு ஏற்றி, இக் காலமே சங்கத்தின் இறுதிக் காலமெனச் செப்புவாரும் உண்டு.

மாந்தரஞ்சேரல் களப்பிரரது படையெழுச்சிக்கு முன்பு ஆண்டு வந்தவனென்பதும் சங்க காலத்தின் இறுதியில் வாழ்ந்தவனென்பதும் யாவரும் அறிந்ததேயாகும். சமுத்திர குப்தன் சேர நாட்டின்மீதும் படையெடுத்ததாக அறுதியிட்டு உறுதியாகக் கூற முடியாது. மேலும், தமிழிலக்கியங்களில் இது பற்றிய சான்று யாங்கணும் காணப் பெறவில்லை. இதனுல் அலகாபாத்தில் காணப்படுகின்ற சமுத்திர குப்தனது வெற்றித் தூண் மாந்தரஞ்சேரலைக் குறிப்பதாக நாம் கொள்ளவியலாது.

தென்னிந்திய வரலாற்றறிஞரான திரு. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியார் சங்க இலக்கியங்கள் தோன்றிய காலம் கிறித்து அப்தத்தின் தொடக்கநூற்ருண்டுகளாகுமென்று கருதுகின்ருர்.[1] இவர் கி. பி. முதல் நூற்ருண்டு முதல் கி. பி. மூன்று அல்லது நான்கு நூற்ருண்டு முடிய சங்கமென்று சொல்லுவார்.

### 7. கி. பி. மூன்ரும் நூற்ருண்டிற்கு முற்பட்டது

இதுகாறும் கூறியவற்ருன் கடைச் சங்க காலத்தைக் கி. பி. நான்காம் நூற்ருண்டிற்கும் அதற்குப் பின்னரும் கொண்டு செல்வது பொருத்தமுடையதன்று என்பதனைக் கண்டோம். நமக்குக் கிடைத்துள்ள ஆதாரங்களின் அடிப்படையில் ஆய்ந்து பார்க்குங்கால் கடைச்சங்கம் கி. பி. மூன்ரும் நூற்ருண்டு வரை நீடித்தது என்ருே அல்லது அதற்குச் சிறிது முற்பட்டதென்ருே கருதலாம். நாம் இவ்வாறு கருதுவதற்குப் பின்வரும் காரணங்களைச் சுட்டலாம்.

1. சங்க இலக்கியங்களை நுண்ணிதின் ஆய்ந்து பார்த்தால் அதன் யாப்பு கி. பி. மூன்ரும் நூற்ருண்டிற்கு முற்பட்டதாகத் தோன்றுகிறது.

[1] Nilakanta Sastry, K. A, 'Pandyan kindom' P. 24; 'Colas' P.3.

2. நம் தமிழர் அன்னிய நாட்டினருடன் நெருங்கிய வாணிகத் தொடர்பினைக் கொண்டிருந்தனர். இதன் காரணமாகவே நம் நாட்டில் உரோமானியரது நாணயங்களும், மண்பாண்டங்களும், மதுச்சாடிகளும் கிடைத்துள்ளன. இவ் வாணிகம் ஏறத்தாழ மூன்றும் நூற்றுண்டின் இறுதிப் பகுதியில் முடிவுற்றதாகத் தெரிகிறது.

3. தமிழகத்தின் பல பகுதிகளில் மேற்கொள்ளப்பட்ட அகழ்வாய்வுகளும், அவற்றில் கிடைத்துள்ள பொருள்களும், ஆங்கு நிலைபெற்றிருந்த யவனச் சேரிகளும் — மற்றும் பல சான்றுகளும் கி.பி. மூன்றும் நூற்றுண்டிற்கு முன்னர்த் தமிழகம் மேலை நாடுகளுடன் கொண்டிருந்த வாணிகத் தொடர்பை விளக்குகின்றன.

4. சிலப்பதிகாரத்தில் கூறப்பட்ட செய்திகளின் அடிப் படையில் இலங்கை வேந்தன் கயவாகுவும் (Kajabahu) சேரன் செங்குட்டுவனும் சம காலத்தவர் என்பது அறிஞர்களால் உறுதி செய்யப்பட்டுள்ளது. கயவாகு-செங்குட்டுவன் ஆகிய இருவரும் உடன் காலத்தவரே என்னும் கருத்தினை முதன்முதலில் நிறுவி யவர் சிலப்பதிகாரத்தைப் பதிப்பித்த பண்டாரகர் உ. வே. சாமி நாத அய்யர் (Dr. U. V. Swaminatha Iyer) ஆவார். இதன் பின்னர் திரு. வி. கனகசபை அவர்கள் வெளிநாட்டாரது குறிப்பு களையும் ஆய்ந்து, உள்நாட்டு இலக்கியங்களையும் ஒப்பிட்டுப் பார்த்து 'ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழர்' என்னும் தமது நூலில் செங்குட்டுவன், கயவாகு, சதகர்ணி ஆகிய மூவரும் சமகாலத்தவரே என்பதனை உறுதி செய் தார். இவற்றையடுத்து அரிக்கமேட்டில் மேற்கொள்ளப்பட்ட அகழ்வராய்ச்சிகள் இக் கருத்தினை வலியுறுத்துவதாக அமைந் தன.

5. சங்க காலத்தின் காலவரையை இறுதியாக நிர்ணயம் செய்தவர் திரு. ஐராவதம் மகாதேவன் அவர்கள் ஆவார். திருச்சி மாவட்டத்திலுள்ள புகழியூர் (வேலாயுதம்பாளையம், ஆர்நாட் டார்மலை) கல்வெட்டினை ஆய்ந்த இவர், பிராமி எழுத்திலான இக் கல்வெட்டே சங்க காலத்தினை நிர்ணயிப்பதாக அறிவித்தார். இவரது இக் கண்டுபிடிப்பே சங்க காலக் காலவரையறையினை உறுதியான அடிப்படையில் அமைக்கப் பெருந்துணை புரிகிறது. வரலாற்றறிஞர்களும் இக் கருத்தினை ஏற்றுக் கொள்கின்றனர்.

ஈண்டு நாம் மேற்கூறப்பட்ட கருத்துகளைத் தனித்தனியே விரிவாகக் காண்போம்.

**1. சங்க இலக்கியமும் அதன்பின் தோன்றிய இலக்கியமும் மாறுபடுகிறது**

சங்கம் மருவிய காலத்தினைப் போன்று சங்க காலத்தில் ஆரியப் பண்பாட்டின் செல்வாக்கு அவ்வளவாக இடம்பெறவில்லை. சங்க காலத்திற்குப்பின் தோன்றிய இலக்கியங்களைக் காட்டினும் சங்க நூல்களில் வடமொழிச் சொற்கள் மிகவும் குறைவாக இருப்பதனை உணரலாம். சங்க நூல்களில் பின்பற்றப்பட்டயாப்பும் தனித்தன்மை பெற்றுள்ளது. சங்கநூல்கள் அனைத்தும் ஆசிரியத்திலும் வஞ்சியிலும் அமைந்தவை. சங்க மருவிய நூல்கள் பெரும்பாலும் வெண்பாவாலும், பல்லவர் காலத்தில் இயற்றப்பட்ட நூல்கள் பெரும்பாலும் விருத்தத்தாலும், துறையாலும், தாழிசையாலும் செய்யப்பட்டவையாகும். இதுபோன்று பல வேற்றுமைகள் இவ் விரண்டினிடையே நிலவுவதால் சங்க இலக்கியம் கி. பி. மூன்றும் நூற்றுண்டிற்கும் முற்பட்டதாகவே கொள்ளவேண்டும்.

தமிழரின் இரு கண்களாகக் கருதப்படும் காதலையும் வீரத்தையும் கருப்பொருளாகக் கொண்டு, சங்க இலக்கியங்கள் எழுந்தன. ஆனால், பிற்காலநூல்களோ ஒழுக்கத்தினையும், கடவுளையும், கடவுளை அடையக்கூடிய வழிமுறைகளையும் விரித்துரைத்தன. சமய வழக்கங்களைப்பற்றி சங்க இலக்கியங்கள் ஆங்காங்கு சுட்டிக் காட்டிய போதிலும், சில ஐதீகச் சடங்குகள் இடம்பெற்ற போதிலும், சங்க இலக்கியங்களுள் ஒன்றுகூட சமயச் சார்புடைய நூலாக இருக்கவில்லை.

சமுதாய வாழ்வில் ஆரியரது நாகரிகத்தின் செல்வாக்குச் சிறிதளவு காணப்பட்ட போதிலும், சாதிக் கட்டுப்பாடு சங்க காலத்தில் இருந்ததாகச் சான்றுகள் காணப்படவில்லை. முற்காலத்திற்கே உரிய சிறப்பம்சமான சில சமூகமரபுகளும், சங்கம் மருவிய காலம் பல்லவர்காலம் ஆகிய பகுதிகளில், வழக்கில்லாத ஆதிகாலச் சமயக் கூறுபாடுகளும் சங்க இலக்கியத்தில் கூறப்பட்டிருத்தலின், இது கி. பி. மூன்றும் நூற்றுண்டிற்கு முற்பட்டதென்பதனையறியலாம்.

**அன்னிய நாடுகளுடன் வாணிகத் தொடர்பு**

சங்க காலத்தில் நம் தமிழகம் அபிசீனியா, அராபியா, பாபிலோன், எகிப்து, கிரேக்கம், உரோமம், சீனம், பினீசியா முதலிய நாடுகளுடன் வாணிபத் தொடர்பு கொண்டிருந்தமை தமிழிலக்கியங்களால் புலப்படுகின்றன. இவற்றுள் குறிப்பாக அதிலும் சிறப்பாக தமிழ்நாட்டுக்கும் உரோம நாட்டுக்கும் வாணிகம்

பெரிய அளவில் நடைபெற்று வந்ததனை மேனாட்டறிஞர்களது குறிப்புகளால் நன்கு அறியலாம். கிறித்து பிறந்ததற்குப் பின் இரண்டு நூற்றாண்டுகள் வரை இவ் வணிகம் உயர்நிலையி லிருந்தது. மேனாட்டாசிரியரான தசித்தசு என்பார் தம் நாட்டுப் பெண்கள் தம்மை அழகு செய்து கொள்வதற்கான வாசனைப் பொருட்களை இந்தியாவினின்றும் தருவித்துக் கொண்டதனால் உரோமநாட்டின் செல்வம் வீண் செலவு செய்யப்பட்டதாகக் குறிப்பிடுகின்றார்.[1] உரோம நாட்டுப்பெண் இவ் வகையில் வீணாக்கப்பட்டதைப்பற்றி பிளினியும் குறிப்பிடுகின்றார்.[2] தமிழகத்து வணிகர்கள் அந்நிய நாடுகளுக்கு மிளகினைப் பெருமளவில் ஏற்றுமதி செய்ததன் விளைவாக, பெரும் செல்வத்தினை ஈட்டினரென்று திரு. சோப்பு அவர்கள்[3] குறிப்பிடுவதும் ஈண்டு குறிப்பிடத்தக்கதாகும். கி. பி. முதல் நூற்றாண்டினரான 'எரித்தியக் கடலின் பெருப்புளூஸ்' என்ற நூலின் ஆசிரியரும், கி. பி. இரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த டாலமிஎன்பாரும் தமிழகம் மேலை நாட்டினருடன் கொண்டிருந்த வாணிகத் தொடர்பினைச் சுட்டுக் காட்டுகின்றனர்.

மேற்கூறிய செய்திகள் சங்கநூல்களில் காணப்படும் செய்திகளால் உறுதி செய்யப்படுகின்றன. சங்க நூலான அகநானூறும் பொன்னோடு வந்து கறியோடு திரும்பும் பிறநாட்டினரைப் பற்றிக் குறிப்பிடுகின்றது. இதனை,

'யவனர் தந்த வினைமாண் நன்கலம்
பொன்னொடு வந்து கறியொடு பெயரும்.[4]

என்னும் பாடலடிகள் நன்கு உணர்த்துகின்றன. அடுத்து பட்டினப்பாலையும் கடலால் வந்த நிமிர்ந்த செலவினையுடைய குதிரைகளும் மிளகுப் பொதிகளும், வேறு அரியபெரிய பொருள்கள் யாவும் திரண்டு, செல்வம் தலைதெரியாது அகன்றுள்ள இடங்களைக்கொண்ட தெருக்களின் மேன்மையைப் பாடுகின்றன. மதுரைக்காஞ்சியோ நாட்டுப் பொருள்களை விற்றுவிட்டு பொன்னுடன் திரும்பிவரும் பெரும் நாவாய்களைப் பற்றிச் சிறப்பித்துப் பேசுகின்றன. செஞ்சொற் காவியமாம் சிலப்பதிகாரமும்,

1 Tacitus: Annals iii. 53

2 Pliny: 'Natural History' Vi. P. 26.

3 W. H. Schoff. P. 214.

4 அகநானூறு. 149:9-10.

'கலந்தரு திருவின் புலம்பெயர் மாக்கள்
கலந்திருந்து உறையும் இலங்கு நீர் வைப்பும்.'

என்று செப்புகின்றது. இதுபோல் சங்க இலக்கியத்துள் பல இடங்களில் தமிழர்-யவனர் வணிகத் தொடர்பு சிறப்பித்துப் பேசப்படுதலின் மேலைநாட்டினர் குறிப்பும் சங்க இலக்கியத்துள் வருகின்ற குறிப்பும் ஒத்திருக்கின்றதனை நாமறியலாம். மேனாட்டு அறிஞர்களும் சங்கச் சான்றோர்களும் குறிப்பிடுகின்ற இவ் வாணிகம் கி. பி. மூன்றாம் நூற்றாண்டிற்குட்பட்டதாகலின் சங்க காலம் கி. பி. மூன்றாம் நூற்றாண்டுவரை நீடித்ததனையறியலாம்.

**உரோம நாட்டு நாணயங்கள் :** தமிழர் மேலைநாடுகளுடன் மேற்கொண்டிருந்த கடல் வாணிகத்தின் விளைவாக, மேலை நாட்டினர் காசுகள் எண்ணிறந்த அளவில் நமக்குக் கிடைத் துள்ளன. தமிழகம் உரோம நாட்டினருடன் பெருமளவில் வாணிபம் நடத்தியதன் விளைவாக நம்நாட்டின் பலபகுதிகளில் உரோம நாட்டு நாணயங்கள் கிடைத்துள்ளன. கீழைநாடுகளி லிருந்து அளவற்ற சுகபோகப்பொருட்களை இறக்குமதிசெய்ததன் விளைவாகவே உரோம நாட்டு நாணயங்கள் மதிப்பிழந்து விட்டனவென்று திரு. சோப்பு குறிப்பிடுகின்றார். கலையநல்லூர், மதுரை, கருவூர், வெள்ளாச்சி, வெள்ளாளூர் முதலிய இடங்களில் பெருமளவில் கண்டெடுக்கப்பட்ட உரோம நாணயங்கள் தமிழக உரோமநாட்டு வாணிப வளர்ச்சியினை நன்கு வெளிப்படுத்து கின்றன. இக் காலக் கட்டத்தில்தான் இந்தியாவிற்கும் மேலை நாட்டாருக்குமிடையே நெருங்கிய வணிக உறவு வளர்ந்து வந்தது. அலெக்சாந்திரியாவில் நிகழ்ந்த படுகொலைகளின் விளை வாகவும், உரோமத் தனிபரசு வீழ்ச்சியுற்றதன் காரணமாகவும் கி. பி. மூன்றாம் நூற்றாண்டிற்குப்பின் இவ் வாணிபம் தடை பட்டது. உரோமத் தனியரசு வீழ்ந்துபட்டபின்பும், வியாபாரம் தடைப்பட்ட பின்பும் அவர்களது நாணயங்கள் நம் தமிழகத் திற்கு வருதல் இயலாததாகலின் இவையனைத்தும் கி. மு. மூன்றாம் நூற்றாண்டின் கால எல்லைக்குள் நம் நாட்டிற் புகுந் திருக்க வேண்டும் எனக் கொள்ளலாம்.

**வாணிகத்தின் அழிவு**

உரோமத் தனியரசின் வீழ்ச்சியோடு, நம் தமிழகத்திலும் கி. பி. நான்காம் நூற்றாண்டிற்கும் ஏழாம் நூற்றாண்டிற்கும் இடைப்பட்ட காலப்பகுதியில் குழப்பமானதொரு அரசியல் சூழல் ஏற்பட்டதனை வரலாறு கற்றோர் நன்குணர்வர். இவ் வாறு குழப்பமும் கொந்தளிப்பும் அமைதியின்மையும் அர சோச்சிய ஒரு காலக் கட்டத்தில், வாணிபம் செழிப்பதென்பது

இயலாததொன்றாகும். அடுத்து கி. பி. ஏழாம் நூற்றாண்டளவில் தமிழகத்தின்கண் பல்லவர்கள் நல்லாட்சி செலுத்தி அமைதிப் பணியை மேற்கொள்ளுமுன்பு தமிழகத்து அரசியலும், சமுதாயச் சூழலும் அமைப்பும் நிலைகுலைந்து கிடந்ததனை, யாவரும் அறிவர். இக் காலம் இருண்ட காலமெனவும். தமிழகத்து வரலாற்றில் அழைக்கப் பெறுகிறது. எனவே, இக் காலப் பகுதியில் நிகழ்ந்த வரலாற்றை நாம் விரிவாக அறிந்து கொள்ள வியலவில்லை. இவர்களது காலத்தில் தமிழகம் தொடர்ந்து அன்னிய நாட்டு வாணிகத்தில் ஈடுபட்டிருந்ததாகவும் நமக்கு இலக்கியச் சான்றுகளில்லை. எனவே, மேற்கூறிய வாணிகத்தில் தொடர்புகள் யாவும் பல்லவரது காலத்திற்கு முன்பு, ஏன் களப்பிரரது காலத்திற்கு முன்பே—அதாவது கி. பி. மூன்றாம் நூற்றாண்டிற்கு முற்பட்டதாகுமென்பது தெளிவு.

**அகழ்வாய்வுகள் :** அடுத்து, அண்மைக் காலத்தில் நம் தமிழகத்தின் பலபகுதிகளில் மேற்கொள்ளப்பட்ட அகழ்வாய்வுகள், மேற்கூறிய வாணிகத் தொடர்பினை நமக்கு உறுதி செய்வனவாய் அமைந்துள்ளன. அண்மைக் காலத்தில் கொற்கை, பாலாறு கடலில் புகுமிடமான வசவசமுத்திரம், கருவூர், பூம்புகார் ஆகிய இடங்களில் அகழ்வாய்வு மேற்கொள்ளப் பட்டன. அவை வெற்றிகரமாகவும் நடந்தேறின. இவைதவிர புதுச்சேரிக்கு அருகில், சில ஆண்டுகளுக்கு முன்பே அகழ்வாய்வு நடத்தப் பெற்றதனை யாவரும் அறிவர். இவ் வகழ்வாய்வின்போது கிடைத்துள்ள பழம்பொருட்கள் தமிழக-உரோமானிய வாணிக உறவினை உறுதி செய்வதாயமைந்துள்ளன.

**அரிக்கமேடு :** அரிக்கமேடு என்னும் பெயரினைக் கொண்ட அது ஒரு மேட்டுப் பகுதியென்பதனையறியலாம். இது அரியாங்குப்பத்தாற்றை அணைந்தவாறு அமைந்துள்ளது. இங்கு மேற்கொள்ளப்பட்ட அகழ்வாய்வின்போது சோழ நாட்டின் சிறப்பானதொரு துறைமுகம் அங்கு புதையுண்டிருந்தது கண்டுபிடிக்கப்பட்டது. கிறித்து ஆண்டின் தொடக்கத்தில் யவனர் இங்கு தமது குடியிருப்புகளை ஏற்படுத்தியிருந்ததற்கான சான்றுகள் கிடைத்துள்ளன. இந் நகரம் அக் காலத்தில் பொதுகை (புதுச்சேரி) என்றே யவனர்களால் அழைக்கப்பட்டது. அரிக்கமேட்டில், யவனர் கடல் வாணிகத்திற்காக நிறுவியிருந்த பண்டக சாலைகள் வெளிக்கொணரப்பட்டன. சுட்ட செங்கற்களால் கட்டப்பெற்ற இவை அன்று 'பந்தர்கள்' என்னும் பெயரால் அழைக்கப்பெற்றன. மேலும், இவ் வாய்வின்போது பெரிய சிறிய அளவிலான செங்கற்கள், மணிகள், விலையுயர்ந்த கற்கள்,

பவழம், கண்ணாடி, பளிங்கு, பல உருவங்களில் கல் பதிக்கப் பெற்ற பதக்கங்கள், வளையல்கள், சங்கு வளையல்கள், பலவித அணிகலன்கள், சுடுமண் பொம்மைகள், சாயத் தொட்டிகள், பாண்டங்கள் உரோமானிய மதுக்குடங்கள் (Amphorae), அதன் உயர்ந்த பகுதிகள் ஆகியவை கிடைத்துள்ளன.[1] பிராமி எழுத்து பொறிக்கப்பட்ட பானை ஓடுகளும் இங்குக் கிடைத்துள்ளன.[2]

இங்குப் பல தொட்டிகளும், கிணறும் கிடைத்துள்ளதால், இங்கு சாயப்பட்டரையமைத்து, துணிகளுக்குச் சாயமேற்றும் தொழில் நடைபெற்றதாக, புதைபொருள் ஆராய்ச்சி வல்லுநர் பண்டாரகர் சர் மார்டிமர் வீலர் (Sir Mortimer Wheeler) கருதுகின்றார்.[3] தமிழகத்திலிருந்து வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படும் நுண்கலிங்கங்கள் (fine cloth) இங்குதான் வண்ண மூட்டப்பெற்றன.

**உரோமானியப் பானை ஓடுகள்**

தமிழகத்தின் பல பகுதிகளில் உரோமானியப் பானை ஓடுகள் கிடைத்திருப்பது இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். உரோம் நாட்டிலிருந்து நம் நாடுகளுக்குப் பலவகையான மண்பாண்டங்கள் இறக்குமதி செய்யப்பட்டன. அவற்றுள் கரும் சிவப்புப் பானைகள் (Black and Red ware) உரோமானிய மதுக்குடங்கள் ஆகியவை குறிப்பிடத் தக்கவையாகும். கரும் சிவப்புப் பானை ஓடுகள் இன்றும் வண்ணம் மாறாது, பளபளப்பு குறையாது, முகம் பார்க்கும் கண்ணாடிபோல் இருப்பது போற்றத் தக்கதாகும். இவைகளைச் சுடும் முறையே புதுமையானதாகும். இதுபோன்ற பானை ஓடுகள் கருவூரில் ஏராளமாகக் கிடைக்கின்றன. உரோமானிய மதுக்குடத்தின் சிதைந்த பகுதிகளும் கருவூரில் கிடைக்கின்றன. 1973-74-ல் தமிழ்நாட்டரசு தொல்லியல் துறையினர் கருவூரில் அகழ்வாய்வு மேற்கொண்டு, ஒரு

1 குருமூர்த்தி, சா. 'தொல்பொருளாய்வும் தமிழர் பண்பாடும்' பக். 31. (சென்னைப் பல்கலைக் கழகம். 1974.)

2 'பிராமி எழுத்துகள் பொறிக்கப்பட்ட பானை ஓடுகள் அக்கால சமுதாயத்தில் சாதாரணக் குடிமக்களிடையே நிலவி வந்த கல்வி, எழுத்து அறிவை நமக்கு உணர்த்துகின்றன!'.

'அரிக்கமேட்டுப் பானை ஓடுகளில் காணப்படுகின்ற பிராமி எழுத்துகள், கி. பி. முதல், இரண்டாம் நூற்றுண்டைச் சார்ந்தவையாகும்'.

I bid. பக். 81.

3 Ancient India, No. II, PP. 17-124. 1945-இல் சர் மார்டிமர் வீலர் பாண்டிச்சேரிக்கு அருகில் உள்ள அரிக்கமேட்டில் முதன்முதலில் அறிவியல் முறைப்படி அகழ்வாய்வைத் தொடங்கினர்.

பெரிய கட்டடத்தை வெளிக்கொணர்ந்தனர். (இவ் வகழ் வாய்வினை நாங்கள் சென்று பார்த்தபோது பானை ஓடுகளையும் மதுக்குடத்தின் ஓடுகளையும் கண்டோம். இங்கு அகழ்வாய்வு நிகழ்த்திய அகழ்வாய்வாளர்களான திரு. அ. அப்துல் மஜீத், திரு. மா. சந்திரமூர்த்தி ஆகிய நண்பர்கள் கொற்கை, வசவ சமுத்திரம், ஆகிய அகழ்வராய்ச்சிகள்பற்றியும், ஆங்கு இது போன்று கிடைத்துள்ள பானை ஓடுகள்பற்றியும் குறிப்பிட்டனர். அவைகளைப்பற்றிய ஒப்பாய்வினையும் விளக்கினர்).

உரோம நாட்டு மண்பாண்டங்களைப் போன்று பானைகள் இங்குத் தயாரிக்கப்பட்டன. அரிக்கமேட்டில் கிடைத்துள்ள மண்கல ஓடுகள் அனைத்தும் இத்தாலி நாட்டு நகரமான அரிஸ்லோ என்னுமிடத்தில் வனையப்பட்டு, வாணிக முத்திரைகள் பொறிக்கப்பட்ட அரிட்டைன் என்ற பானை ஓடுகளாகும். உரோமானிய மதுச்சாடிகள் பெரிய அளவிலும் இரட்டைக் கைப்பிடி கொண்டதாகவும் காணப்படுகின்றன. இச் சாடி பெரிய அளவில் இருப்பதால் இதனைப் பூமியில் புதைத்துவிட்டு, மதுவை ஊற்றி வைப்பர். தேவைப்படும்போது அதனை மொண்டு சிறு சாடிகளிலும் புட்டிகளிலும் ஊற்றிக் கொள்வர். இங்குக் கண்ணாடிக் கிண்ணங்களும் காணப்படுகின்றன. இது போன்ற மண்பாண்டங்கள் கி. பி. 20—50 ஆண்டுகளில் உரோம் நாட்டிலிருந்து தமிழகத்திற்கு இறக்குமதி செய்யப் பெற்றிருத்தல் வேண்டுமென்று அகழ்வாய்வறிஞர் பண்டாரகர் திரு. மார்ட்டிமர் வீலர் கருதுகின்றார்.[1]

**யவனச்சேரி:** அரியாங்குப்பத்திலுள்ள யவனச்சேரி கி. பி. முதல் நூற்றாண்டில் தொடங்கி கி. பி. இரண்டாம் நூற்றாண்டில் கைவிடப் பெற்றிருத்தல் வேண்டும் என்று நாம் கருதலாம். இச் சேரி கி. பி. இரண்டாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் அழிந்துபட்டதாகக் கூறப்படுகின்றது.

வசவசமுத்திரம், கொற்கை, கருவூர், பூம்புகார் ஆகிய இடங்களில் மேற்கொள்ளப்பட்ட அகழ்வாய்வால் கிடைத்துள்ள பொருள்களைக் கொண்டு தமிழக வாணிகம் கி. பி. மூன்றும் நூற்றாண்டுவரை சிறப்பாக நடைபெற்றதாக அறிகிறோம். சங்கறுக்கும் தொழில் இவ் விடங்களில் சிறப்படைந்திருந்ததனை இங்குக் கிடைத்துள்ள சங்கு வளையல்களால் நன்கு அறிகிறோம். சங்க காலத்தில் தமிழகத்தில் சங்கறுக்கும் தொழில் சிறப்புற்று

1 Sir Mortimer Wheeler, 'Ancient India, II. PP. 24-25.

விளங்கியமை சங்க இலக்கியச் சான்றுகளால் நன்கு தெளிவாகிறது.

அடுத்து, தமிழகத்தின் பல பகுதிகளில் கிடைத்துள்ள உரோமானிய நாணயங்களைப்பற்றியும் ஒரு சிறிது ஆய்வோம். கீழ்க் கொடுக்கப்பட்டுள்ள பட்டியலில் தமிழகத்தில் கிடைத்துள்ள உரோமானியக் காசுகள்பற்றிய விவரங்கள் தரப்பட்டு உள்ளன.

**தமிழ்நாட்டில் கிடைத்துள்ள உரோமானியக் காசுகள்**

1. கோவை மாவட்டம் ... அகஸ்டஸ் (கி.பி. 14)
2. கோவை மாவட்டம் ... டைபீரியஸ் (கி.பி. 37)
3. கலயம்புத்தூர், மதுரை மாவட்டம் ... அகஸ்டஸ் நெர்வா (கி.பி. 98) 63 தங்கக் காசுகள்
4. கரிவலம்வந்தநல்லூர் ... நெல்லை மாவட்டம் ... ஹேறட்ரியன் (கி.பி. 118) 6 காசுகள்
5. கரூர், திருச்சி மாவட்டம் ... அகஸ்டஸ், டைபீரியஸ் (கி.பி. 37) 500 காசுகள்
6. கரூர், திருச்சி மாவட்டம் ... கிளாடியஸ் (கி.பி. 54) 5 காசுகள்
7. கரூர், திருச்சி மாவட்டம் ... மார்கஸ் அரிலஸ் (கி.பி. 180)
8. கரூர், திருச்சி மாவட்டம் ... அகஸ்டஸ், டைபீரியஸ் (கி.பி. 37)
9. கட்டங்கண்ணி, தாராபுரம் வட்டம் ... கோவை மாவட்டம் ... அகஸ்டஸ் டைபீரியஸ் (கி.பி. 37)
10. காவிரிப்பூம்பட்டினம், தஞ்சை வட்டம் ... ரோமானியக் காசு
11. குளத்துப்பாளையம், தாராபுரம் வட்டம், கோவை மாவட்டம் ... அகஸ்டஸ், பியோடோசியஸ் (கி. பி. 395)
12. மதுரை மாநகர் ... நீரோ (கி.பி.46)
13. மதுரை மாநகர் ... கொனேரியஸ் ஆர்க்கேடியஸ்
14. மதுரை வட்டம் ... டொமிட்டன் (கி.பி.96)
15. மாமல்லபுரம் ... டியோகாடிசியஸ் ... 4-ஆம் நூற்றாண்டு.
16. மேற்படி-
17. மாம்பலம் ... அகஸ்டஸ் (கி.பி. 14)
18. பெண்ணூர், கோவை மாவட்டம் ... அகஸ்டஸ்

19. பொள்ளாச்சி ... அகஸ்டஸ், டைபீரியஸ்

20. தஞ்சாவூர் ... டியோகிளேடியன் ... (கி.பி. 305)

21. தொண்டைமாநத்தம், கடலூர் வட்டம் ... டைபீரியஸ், நீரோ

22. வெள்ளலூர், கோவை மாவட்டம் ... அகஸ்டஸ் காசுகள் அகஸ்டஸ் கிளாடியஸ் காசுகள்

இவை தவிர புதுச்சேரிக்கு அருகில் அரிக்கமேடு என்ற இடத்திலும், பாலாறு கடலில் புகுமிடத்தில் வசவசமுத்திரம் என்னுமிடத்திலும் ரோமானியப் பானை ஓடுகள் கிடைத்துள்ளன.[1]

மேற்கூறிய நாணயங்களேயன்றி, கலிகுலன், வெசுப்பாசியன், திரேசன், கொமோடசு, கேத்திரியன் போன்ற உரோம வேந்தர் காலத்திய நாணயங்களும் இந்தியாவின் பலபகுதிகளில் கிடைத்துள்ளன. இவையனைத்தும் கி. பி. முதல் இரண்டு நூற்றாண்டுகளில் ஆட்சி புரிந்த உரோம நாட்டு மன்னர்களது நாணயங்களாகும்.

**சோப் அவர்களின் கருத்து**

ஆராய்ச்சியறிஞர் திரு. சோப்பு என்பாரும் தென்னாட்டில் கண்டெடுக்கப்பட்ட நாணயங்களைப்பற்றிக் கீழ்க்காணுமாறு கூறுகின்றார். 'இவற்றுள் தைபீரியசு (Tiberius), கலிகுலன் (Caligula) கிளேடியசு (Claudius), நீரோ (Nero) ஆகியோர் காலத்திற்குரியன பல, வெசுப்பாசியன் (Vespasian), தைத்தசு (Titus) ஆகியோர் காலத்திற்குரிய நாணயங்கள் மிகச் சிலவே இந்தியா முழுவதிலும் கண்டெடுக்கப்பட்டன. தொமீசியன் (Domitian), திரேசன் (Trajan), கேத்திரியன் (Hodrian) முதலிய மன்னர் காலத்து நாணயங்களும் பல இடங்களில் உள்ளன. இவர்களுக்குப் பின்பு கொமோடசு (Commodus) காலத்து[2] நாணயங்களே கிடைத்துள்ளன.

எனவே, பழந்தமிழ் நூல்களிலிருந்து பெறப்படும் செய்திகளும் தென்னிந்திய வாணிகம்பற்றிக் கூறும் மேலைநாட்டாரின்

[1] இப் பட்டியல் தமிழ்நாட்டரசு தொல்பொருள் துறையினர் வெளியிட்டுள்ள 'பூம்புகார்' (ஆசிரியர் அறுவர்) என்னும் நூலில் பக்கம் 61-62லிருந்து எடுக்கப்பட்டது.

[2] Schoff, W. H; (Editor) 'The Periplus of the Erythrean Sea' Section, 54. P. 220.

குறிப்புகளும், தமிழகத்தில் மேற்கொள்ளப்பட்ட அகழ்வாய்வுகளும், தமிழகத்தில் கிடைத்துள்ள உரோமநாட்டு நாணயங்களும் சங்க காலத்தை வரையறுப்பதில் பெருந்துணை புரிகின்றதனை யறியலாம். மேற்கூறிய சான்றுகளைக் கொண்டு பொதுவாக சங்க காலம் கி.பி. மூன்றாம் நூற்றாண்டிற்குட்பட்டதாகக் கணிக்கலாம்.

**இளங்கோவடிகளின் காலமும் கடைச்சங்க காலமும்**

கடைச்சங்க காலத்தை இன்னும் நாம் திட்டமாக வரையறுக்க வேண்டுமாயின் வரலாற்றைத்தான் நாடவேண்டும். தமிழிலக்கியங்களில் வரும் வரலாற்றுப் பெயர்க்குறிப்புகள் நமக்கு இவ் வகையில் பெருந்துணை புரிகின்றன. செஞ்சொற் காப்பியமாம் சிலப்பதிகாரமும் இலங்கை வரலாற்று நூலான 'மகாவம்சமும்' கூறும் குறிப்புகளிலிருந்து சேரன் செங்குட்டுவனது காலத்தினை நாம் வரையறுக்கலாம்.

சேரன் செங்குட்டுவன் சேர வேந்தருள் மாணிக்கமாகத் திகழ்ந்தவன். இவன் சிலப்பதிகாரம் செய்த இளங்கோவடிகளின் அண்ணன். கடைச் சங்க காலத்தின் இறுதியில் வாழ்ந்தவன். இவன் சேரர் தலைநகரின்கண் பெருவிழாவொன்று நடத்தினான். அவ் விழாவிற்கு வருகை புரிந்தவருள் இலங்கை வேந்தனும் கயவாகுவும், பெயர் குறிப்பிடப்படாத மாளவ நாட்டு மன்னன் ஒருவனும் குறிப்பிடத்தக்கவராவர்.[1]

**கயவாகு:** இலங்கை வேந்தனான கயவாகுவின் ஆட்சிக் காலத்தை அறிய வேண்டுமாயின் இலங்கை நாட்டு வரலாற்று ஏடுகளைத்தான் நாட வேண்டியுள்ளது. சிங்களவரின் காலக் களிப்பேடுகளில் மரபுரையாகத் தயாரித்துத் தரப்பட்ட இலங்கை வேந்தர்களது பெயர் வரிசைப் பட்டியல்கள் மிக நீளமானவை. அவற்றுள் கயவாகு எனப் பெயர் பூண்டோர் இருவர் காணப்படுகின்றனர். இவர்களுள் முதலாம் கயவாகு என்பான் கி. பி. இரண்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியினன் ஆவான். இரண்டாம் கயவாகுவோ பன்னிரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்து வந்தான். சிலப்பதிகாரத்தில் குறிக்கப்பட்டவன் இரண்டாம் கயவாகுவாக இருக்க முடியாது. எனவே, சிலம்பு செப்பும் இலங்கை வேந்தன் முதலாம் கயவாகுவேயாகும்.

முதலாம் கயவாகு கி.பி. 113 முதல் கி.பி. 125 முடிய அரியணையிலமர்ந்திருந்தானென்றும் திரு. கனகசபைப் பிள்ளை கருது

1 சிலப்பதிகாரம். பக். 31.

கின்றார். அவன் கி. பி. 173 முதல் கி. பி. 195 வரையில் வாழ்ந் திருந்தானென்று திரு. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியார் செப்பு வார். எனவே, கடைச் சங்க காலமென்பது இவ் வாண்டுகளுக்கு முற்பட்டதாகக் கொள்ளலாம். ஏனெனில், சேரன் செங்குட்டு வனது ஆட்சிக் காலத்திலேயே கடைச் சங்கம் செயல்பட்ட தாகத் தெரியவில்லை. சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய இரட்டைக் காப்பியங்கள் செங்குட்டுவனது காலத்தில் எழுந்தன வாகும். இவைகளில் யாண்டும் மதுரைத் தமிழ்ச் சங்கம் (கடைச் சங்கம்) குறிக்கப் பெறவில்லை. சாத்தனார் சங்கப் புலவரே யாயினும், கண்ணகியும் கோவலனும் மதுரை மாநகரிற் புகு முன்பே சங்கம் அழிக்கப்பட்டு புலவர்கள் பல பகுதிகளில் சிதறி வாழ்ந்ததாகத் தெரிகிறது. ஏனெனில், மதுரையைப்பற்றிச் சிறப்பித்துக் கூறும் சிலப்பதிகாரம் சங்கம்பற்றி ஒன்றும் கூற வில்லை. கோவலன் கொலையுண்டபோதோ, கண்ணகி பாண்டி யனது அவையில் வழக்குரைத்தபோதோ – ஏன், கண்ணகி மதுரையை அழித்தபோதோ—கடைச் சங்கம் இருந்ததாகக் குறிக்கப் பெறவில்லை. பரணர் சங்கப் புலவரேயாயினும் அவர் செங்குட்டுவனைப் பாடியுள்ளபோதிலும், கலைக்கப்பட்டபின் புலவர்கள் பல இடங்களில் பரவிச்சென்று வாழ்ந்தவர்களென்று கொள்ளல் பொருந்துமென்று தமிழறிஞர்கள் கருதுகின்றனர்.

**மாளவ மன்னன் :** சேரன் செங்குட்டுவன் நடத்திய விழா விற்கு கயவாகுவுடன் வந்திருந்த மாளவ மன்னன் யாவன்? என் பதனையும் நாம் ஆய்ந்து பார்த்தால் இவ் விருவரது காலத்தினை யும் அடிப்படையாகக் கொண்டு சேரன் செங்குட்டுவன் காலத்தை வரையறை செய்ய இயலும். இதனை நாம் ஆய்ந்து பார்க்குங்கால் இவ் வேந்தன் கங்கைக் கரையிலுள்ள மகத நாட்டின் வேந்தனை, நட்பு முறையில் சென்று பார்வையிட்டதாக சிலப்பதிகாரத்தில் குறிக்கப்பட்டுள்ளது. அவ் வரசன் 'நூற் றுவர் கண்ணர்' அதாவது நூறு கர்ணர்கள் என்று பெயர் பெறு கின்றான். 'நூற்றுவர் கண்ணர்' என்ற தமிழ்ச் சொல் வட மொழியில் சதகர்ணி என்றழைக்கப் பெறுகின்றது. சாதவாகன (ஆந்திர) மரபைச் சார்ந்த பல வேந்தர்கள் 'சதகர்ணி' என்னும் பட்டத்தினைக் கைக்கொண்டிருந்தனர். இவர்களது நாணயங் களும் கல்வெட்டுகளும் நமக்குக் கிடைத்துள்ளன. அவற்றில் இப் பெயரின் 'பாளி' வடிவமான 'சதகர்ணி' இடம் பெற்று உள்ளது. வடமொழிப் புலவர்கள் இதனை 'சாதகர்ணி' என்று அழைக்கின்றனர். இவ்வாறு அழைத்தல் தவறுடையதாகும்.

மகதப் பேரரசின் வரலாற்றினைப்பற்றி வாயுபுராணம், பாக வத புராணம், விஷ்ணு புராணம், மத்சய புராணம் ஆகியவை

நமக்குப் பல செய்திகளைத் தருகின்றன. இவற்றினைக் கொண்டு மௌரியர்கள் மகதப் பேரரசினை 137 ஆண்டுகளும், சுங்கர்கள் 112 ஆண்டுகளும், கண்வர்கள் 45 ஆண்டுகளும், இறுதியாக ஆந்திர மரபைச் சேர்ந்த அரசர்கள் 456 ஆண்டுகளும் ஆண்டதாக அறியலாம். ஆந்திர அரசர்கள் மொத்தம் முப்பது பேர் இக் கால கட்டத்தில் ஆட்சி புரிந்ததாகவும் இப் புராணம் கூறுகின்றது இக் கருத்தினை பண்டாரகர் வின்செண்ட் சுமித் அவர்களும் (Vincent Smith), பண்டாரகர் கோபாலாச்சாரியாரும் ஏற்றுக் கொள்கின்றனர். ஆனால், இவை ஒன்றிலாவது ஆந்திர அரசர்களது பெயர்கள் முழுமையாகக் குறிக்கப் பெறவில்லை யென்பது வருந்துதற்குரியதே.

மகதப் பேரரசினை ஆட்சி புரிந்த முற்காலப் பேரரசர்களுள் சந்திரகுப்த மௌரியனது ஆட்சிக் காலமே உறுதியாக நிறுவப் படுகிறது. மௌரியப் பேரரசினைத் தோற்றுவித்த இவன் கிரேக்க நாட்டு அலெக்சாந்தரின் படைத்தலைவனை செல்யூகஸ் நிகேடாரின் உடன் காலத்தவன். கி. மு 301-ல் அரியணையேறிய செல்யூகஸ் நிகேடார் கி. பி 305-ல் சந்திரகுப்த மௌரியனுடன் அமைதி உடன்படிக்கை செய்து கொண்டுள்ளான். செல்யூகஸ் முடிபுனைந்து கொள்வதற்கு இரண்டாண்டுகளுக்கு முன்பே சந்திரகுப்தன் ஆட்சியினைத் தொடங்கியிருக்கிறான். இதனைக் கொண்டு சந்திரகுப்தன் கி. மு. 312-ல் அரியணையேறினன் என்று வரையறுக்கலாம். இந்த ஆண்டினை அடிப்படையாகக்கொண்டு ஆந்திர வேந்தர்களது காலத்தினைக் கணித்தால் முதல் சதகர்ணி கி.பி. 77 முதல் கி.பி. 133 வரை ஆட்சி புரிந்ததாகக் கொள்ளலாம்.

இவ்வாறு நாம் சதகர்ணியின் காலத்தைக் கணக்கிடுவதற்கு மத்சய புராணம் தரும் செய்திகளே துணைபுரிகின்றன. மத்சய புராணம் மேற்கூறிய புராணங்களில் மிகவும் பழமை வாய்ந்தது. பெரும்பாலான அரசர்களின் காலக்கணிப்பை இது கூறுகின்றது. இப் புராணம் கூறும் காலவரையறையை ஈண்டு காண்போம்.

10 மோரியர்கள் 137 ஆண்டுகள் ஆண்டனர்: கி.மு. 312–கி.மு.175

10 சுங்கர்கள் 112 ஆண்டுகள் ஆண்டனர்: கி.மு. 175-கி.மு. 63

4 கண்வர்கள் 45 ஆண்டுகள் ஆண்டனர்: கி.மு. 63–கி.மு. 18

இவர்களையடுத்து ஆந்திர மன்னர்கள் அரச பதவியேற்றனர். நமக்குத் தேவைப்படுவது முதலாம் சதகர்ணியின் ஆட்சிக்

காலமேயாதலின் நாம் ஈண்டு முதல் ஆறு மன்னர்களின் காலக் கணிப்பை மட்டும் குறிப்போம்.

சிமுகன்: 23 ஆண்டுகள் ஆண்டான் : கி.மு. 18–கி.பி. 5

கிருஷ்ணன்: 18 ஆண்டுகள் ஆண்டான் : கி.பி. 5–கி.பி. 23

சீமலகர்ணி. 18 ஆண்டுகள் ஆண்டான் : கி.பி. 23–கி.பி. 41

பூர்ணோத் சுங்கன்: 18 ஆண்டுகள் ஆண்டான்: கி.பி. 41–கி.பி. 59

சிரீவஸ்வாமி: 18 ஆண்டுகள் ஆண்டான் : கி.பி. 59–கி.பி. 77

சதகர்ணி: 56 ஆண்டுகள் ஆண்டான் : கி.பி. 77–கி.பி. 133

மத்ச்ய புராணம் தரும் தகவல்களையேற்றுக் கொள்வோமாயின், இலங்கை வேந்தன் கயவாகுவின் ஆட்சிக் காலமும் சாதவாகன (Sathavahanas) மன்னனான சதகர்ணியின் ஆட்சிக் காலமும் முழுமையாகப் பொருந்தியுள்ளதை நாமறிந்து கொள்ளலாம். இதனை அடிப்படையாகக் கொண்டு சேரன் செங்குட்டுவனும் கயவாகுவும் சதகர்ணியும் ஒரே காலத்தில் வாழ்ந்தனர் என்பதனை நாம் அறிந்து கொள்ளமுடிகின்றது. இவ் வடிப்படையில் சேரன் செங்குட்டுவன் இரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்தவனெனவும் சிலப்பதிகாரம் கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் இயற்றப்பட்டது எனவும் நாம் கொள்ளலாம்.

**சிங்கள நூல் :** அடுத்து, கி. பி. ஐந்தாம் நூற்றாண்டில் இயற்றப் பெற்ற மகாவம்சமும், அதற்கு முன்பு எழுதப்பட்ட தீபவம்சமும் இலங்கை வரலாற்றினைத் தெளிவாகக் கூறும் வரலாற்று நூல்களாகும். இவ் விரண்டும் முதலாம் கயவாதுவைப் பற்றிக் குறித்துச் செல்கின்றன. இந் நூல்களைக் கொண்டு 'கயவாகு 'கழுகு மூக்கன்' என்று குறிப்பிடப்படும் 'திச்சன்' என்பானின் மைந்தனுவானென்பது புலனாகின்றது. கழுகு மூக்கனது காலத்தில் சோழவேந்தனொருவன் ஈழத்தின்மீது படையெடுத்துப் பல்லாயிரக்கணக்கான வீரர்களைச் சிறைபடுத்திச் சென்றதாக இலங்கை வரலாற்றுநூல் விவரிக்கின்றது. சிறைக் கைதிகளாகச் சோணாடு கொண்டுவரப்பட்ட சிங்கள வீரர்களைக் காவிரிக்குக் கரைகட்டும் பணியில கரிகாற் சோழன் ஈடுபடுத்தினான் என்ற மரபுரை ஒன்று இன்னும் நிலவுகின்றது. இச் செய்தி பிற்காலத் தமிழ் இலக்கியங்களாலும் கல்வெட்டுகளாலும் உறுதி செய்யப்படுகிறது. கரிகாலனின் காலத்தில் தொடங்கப்பெற்ற காவிரிக்குக் கரையெடுக்கும் பணி அவன் காலத்திலேயே முடிக்கப்பெற்றதா? அல்லது அவனுக்குப் பின்பாண்ட சோழவேந்தனின் ஆட்சிக் காலத்திலும் தொடர்ந்து

மேற்கொள்ளப்பட்டதாவென்பது உறுதியாகத் தெரியவில்லை. இருப்பினும் காவிரியின் கடல் முகத்திலிருந்து ஏறத்தாழ நூறு கல் தொலைவுவரை ஆற்றின் இரு பக்கங்களிலும் கரைகள் கட்டப்பட்டதாகக் கூறப்படுதலின், இப் பணி கரிகாலன் காலத்திலேயே முடிவடைந்திருக்கும் என்பதனைவிட, அவனுக்குப் பின்னும் தொடர்ந்ததாகக் கருதுவதே பொருத்தமாகத் தோன்றுகிறது. இதனைக்கொண்டு சோழவேந்தன் சேரன் செங்குட்டுவனுக்குச் சில காலம் முற்பட்டவனாதலின், இவன் கயவாகுவின் தந்தையான கழுகு மூக்கனின் உடன்காலத்தவன் என்பதனையும் நாம் நிறுவலாம். இதனடிப்படையில் சேரன் செங்குட்டுவன் கி. பி. இரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்ததாகக் கொண்டு சங்க காலமும் இரண்டாம் நூற்றாண்டு வரை நீடித்ததாகக் கொள்ளலாம். அடுத்து சிலப்பதிகாரம் கி.பி.இரண்டாம் நூற்றாண்டைச் சார்ந்தது என்பது அறிஞர் பலரது கருத்தாகும். சிலப்பதிகாரத்தில் கூறப்பட்டுள்ள வானவியல் குறிப்புகளைக் கொண்டு (astronomical data) திரு. வி. ஆர். தீட்சிதர் அவர்கள் இம்முடிவுக்கே வருகிறார்.[1]

**ஐராவதம் மகாதேவன் அவர்களது கணிப்பு**

கல்வெட்டறிஞரான திரு. ஐராவதம் மகாதேவன் அவர்கள் திருச்சி மாவட்டம், கரூர்வட்டம், புகழூருக்கருகில் உள்ள ஆர்நாட்டார் மலையில்[2] பொறிக்கப்பட்டுள்ள பிராமிக்கல்

1 திரு. வி. ஆர். இராமச்சந்திர தீட்சரது கருத்தினைத் திரு. சுப்பிரமணியன் அவர்கள் தமது நூலில் கையாண்டுள்ளார் (Subramanian, N. History of Tamil Nad' P. 44). பரிபாடலிலும் சிலப்பதிகாரத்திலும் காணப்படும் சில நிகழ்ச்சிகளை எடுத்துக்கொண்டு, அவற்றை வானவியல் கணிப்பின்படி கணக்கிட்டு கடைச் சங்கம் கி. பி. 7 அல்லது 8 ஆம் நூற்றாண்டில் நடைபெற்றிருக்கலாம் என்று திரு. எல். டி. சாமிக்கண்ணு பிள்ளையவர்கள் கருத்துத் தெரிவித்தார். இவரது கருத்து ஏற்றுக்கொள்ளத்தக்கதல்ல. காரணம், இந் நூல்களில் காணப்பெறும் காலக் குறிப்புகளைச் சரியாகக் கணக்கிடுவதற்குத் தேவையான குறிப்புகள் அவற்றுள் கிடைக்கவில்லை, சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகியன கி. பி. இரண்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியைச் சார்ந்தனவே என்று திரு. என். சுப்பிரமணியன் அவர்கள் கருதுவார். (History of Tamil Nad. P. 45 )

2 புகழூர், கருவூரிலிருந்து வடமேற்கே பத்துகல் தொலைவில் உள்ளது. புகழூருக்கு அருகில் வேலாயுதம் பாளையம் என்னும் ஊர் உளது. இது காவிரியின் வட கரையில் அமைந்துள்ளது. இவ் வூரிலுள்ள மலையே ஆர் நாட்டார் மலையென்று அழைக்கப் பெறுகிறது. இதனை 'ஆறு நாட்டார் மலை' எனவும் 'புகழிமலை' எனவும் அழைப்பர். இம்மலையின்மீது முருகப் பெருமானுக்கு ஒரு கோயில் உள்ளது. மலையின் தெனபுறம் இயற்கைக் குகைத்தளம் ஒன்றுளது. இதன் வட புறம் மற்றுமொரு குகைத்தளம் உளது. இவ் விரு குகைத்தளங்களிலும் சமணப் படுக்கைகளும், பிராமிக் கல்வெட்டுகளும் காணப் பெறுகின்றன. இவற்றுள்

வெட்டுகளை மிக நுண்மையாக ஆய்ந்தார்.[3] இங்குள்ள கல்வெட்டுகளை மிகவும் தெளிவாகப் படித்து அளித்த பெருமை திரு. ஐராவதம் மகாதேவன் அவர்களையே சாரும். இக் கல்வெட்டுகளில் குறிக்கப் பெற்றுள்ள கோஆதன் செல்லிரும்பொறை மகன் பெருங்கடுங்கோன், அவன் மகன் இளங்கடுங்கோன் ஆகியோர் முறையே பதிற்றுப்பத்தின் ஏழாம், எட்டாம், ஒன்பதாம் பாட்டுகளின் தலைவர்களான செல்வக்கடுங்கோ வாழியாதன், பெருஞ்சேரல் இரும்பொறை, இளஞ்சேரல் இரும்பொறை ஆகிய சங்ககாலச் சேரவேந்தர்களே என்று தெளிவு படுத்தினர். பெருஞ்சேரல் இரும்பொறையைப் 'பாலைபாடிய பெருங்கடுங்கோ'வுடனும், இளஞ்சேரல் இரும்பொறையை 'மருதம்பாடிய இளங்கடுங்கோ'வுடனும் ஒப்பிடுவதும் உண்டு. சங்க இலக்கியத் தலைவர்களான பிட்டன், பிட்டன் கொற்றன், அதியன் மகன் எழினி முதலானோரும் இக் கல்வெட்டில் குறிக்கப் பெறுகின்றனர். சங்க இலக்கியங்களில் பல பெயர்களை இக் கல்வெட்டுகள் குறிப்பிடுவதால் இவை சங்க காலக் கல்வெட்டு களே என்று முடிவு செய்துள்ளார்.

இம் முடிவு பல அறிஞர்களால் ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளது. திரு. இரா. நாகசாமி அவர்களும் '........இவை சங்ககாலக் கல்வெட்டுகள் என திரு. ஐ. மகாதேவன் குறிப்பது முற்றிலும் பொருத்தமே' என்று குறிப்பிடுகின்றார்.

திரு. ஐ. மகாதேவன் அவர்கள் தனது முடிவினை 'இந்து'[4] ஆங்கில செய்தித்தாளிலும், இரண்டாவது உலகத்தமிழ்

---

வடக்குப் புறமுள்ள குகைத்தளத்தில்தான் அதிகமான படுக்கைகள் வெட்டப் பட்டுள்ளன, ஆனால், தென்புறம்தான் கல்வெட்டுகள் பல காணப்பெறுகின்றன. இவை வரலாற்றுச் சிறப்பு மிக்கவை. வடபுறத்திலுள்ள கல்வெட்டு கி. மு. 2ஆம் நூற்றாண்டுக்குரியதென்று இரா. நாகசாமி கருதுகிறார்.

3 திருவாளர்கள். ஐராவதம் மகாதேவன், இரா. நாகசாமி, நடன காசிநாதன், மயிலை. சீனிவேங்கடசாமி, செங்கைப் பொதுவன் ஆகியோர் இக் கல்வெட்டுகளை ஆய்ந்துள்ளனர். மகாதேவன் அவர்கள் பியூளரின் வழியைப் பின் பற்றி எழுத்துகளை வாசித்துள்ளார்.

4 'We need no longer rely on the slender and insecure evidence of the gajabahu synchronism, nor merely on the Circumstantial evidence of the Indo-Roman trade to fix and place the Sangam age in the Christian Era. The inscriptions are a Spectacular Confirmation of the Sober view that the sangam age of the Three Tamil monarchies belongs to the first Three centuries of the Christian era. It is no longer possible to doubt the historical truth of the existence of the Tamil kingdoms of the sangam Age. The inscriptions also

மாநாட்டில் படித்த கட்டுரையிலும் மிகவிளக்கமாக வெளியிட்டுள்ளார்.

இம் முடிவினைக் காணும்போது, இனிமேல் சங்க காலத்தைக் கணிக்க விரும்புவோர் தமிழரின் அயல்நாட்டு வாணிகத்தையும், கயவாகு-செங்குட்டுவன் உடன்காலக் கணிப்பையும் நம்பியிராமல், திரு. மகாதேவனது முடிவினை அடிப்படையாகக் கொண்டே கணித்துவிடலாம் என்ற எண்ணம் தோன்றுகிறது.

இக் கல்வெட்டுகளின் எழுத்தமைதிகொண்டு, இவை கி.பி. 3-4 ஆம் நூற்றூண்டுக்கு உரியவை என்றும், தமிழி எழுத்துகளின் பிற்காலத்தவை என்றும் திரு. மகாதேவன் அவர்கள் கூறுகின்றூர்.

தமிழக-யவன கடல் வாணிப காலத்தினைப்பற்றிய சங்க இலக்கியச் சான்றுகளையும், வெளிநாட்டினர் குறிப்புகளையும், அகழ்வாய்வின் முடிவுகளையும், சேரன் செங்குட்டுவனது ஆட்சிக் காலத்தினையும், திரு. ஐராவதம் மகாதேவன் அவர்களது முடிவினையும் ஆய்ந்து பார்க்குங்கால், இவற்றிடையே உடன்பாடு காணப்படுதலின் சங்க காலம் ஏறத்தாழ கி. பி. மூன்றும் நூற்றூண்டு வரை நீடித்ததாகக் கொள்ளலாம். சங்க இலக்கியங்கள் எழுந்ததும் இக் காலமேயென்பர்.[5]

**முச் சங்கங்களின் காலவரையறை:** இன்றைய ஆய்வு நிலையில் நாம் பல வகையான கருத்து மாறுபாடுகளையும் மனத்திற் கொண்டு தமிழகத்தின்கண் தலை, இடை, கடை என்றழைக்கப்படும் மூன்று தமிழ்ச் சங்கங்கள் செயல்பட்டதென்றும்,[6] இவை

---

settle the question about the Capital of the Cheras as at least one branch of the family ruled from karur (Vanji). The other important facts emerging from the inscriptions are that the Brahmi was the Tamil script of the age and that Jainism had already reached the Tamil Country and received royal patronage'. The Hindu. Sunday. 3 - 3 - 65. P. 13.

5 The discovery of the Roman coins of the reign of Augustus and the excavations at Arikamedu and descriptions of foreign trade in the sangam classics prove beyond doubt that the first three centuries of the Christian era was the age of the Extant Tamil Classics, One of which is the Ahananuru'.

Ramachandran, C. E. 'Ahananuru In its Historical Setting' P. 5.

6 Subramanian, N. 'History of Tamil Nad'. P. 46. (1972). Koodal Publishers, Madurai-1.

பன்னெடுங்காலம் நீடித்ததென்றும், இவற்றுள் கடைச்சங்கமே தமிழிலக்கியத்தின் தங்க காலமெனவும் அறியலாம். நமது ஆய்வின் அடிப்படையில் முச் சங்கங்களின் காலத்தினையும் ஒருவாறு முடிவு செய்வது நலம் பயப்பதாகும். தலைச் சங்கம் கி. மு. ஐந்தாம் நூற்றாண்டிற்கும் கி. மு. இரண்டாம் நூற்றாண்டிற்கும் இடையில் செயல்பட்டதாகக் கொள்ளலாம்.[1] கி. மு. இரண்டாம் நூற்றாண்டிற்கும் கி. பி. முதல் நூற்றாண்டிற்கும் இடைப்பட்ட காலத்தில் இடைச் சங்கம் நிகழ்ந்ததென்றும், கடைச் சங்கம் கி.பி. முதல் நூற்றாண்டிலிருந்து ஏறத்தாழக் கி. பி. மூன்றும் நூற்றாண்டு வரை தமிழ்ப் பணியாற்றிய தென்றும் முடிவு செய்யலாம். மேலும் சில சான்றுகள் நமக்குக் கிடைத்தால் இக் கருத்து மாற்றப்படலாம். எனவே, இவண் கூறப்பட்டுள்ள கருத்து இறுதி முடிவாகாது.

### முடிவுரை

சங்க காலத்தைப்பற்றிய செய்திகளைக் கூறும் முதல் நூல் இறையனார் அகப்பொருள் ஆகும். இது பிற்காலத்தைச் சேர்ந்த நூலாகும். இதில் கூறப்பட்டுள்ள செய்திகள் அனைத் தையும் வரலாற்றடிப்படையில் ஏற்றுக்கொள்ள இயலாது. இறையனார் அகப்பொருளை அடிப்படையாகக் கொண்டு ஆய்ந்து பார்த்தால் தலைச்சங்கம் கி. மு. 10000-ல் தொடங்கியதாக நாம் கொள்ள வேண்டியுள்ளது. இக் கருத்துச் சிறிதும் பொருத்த முடையதன்று. காரணம், கி.மு. 4000-ல்தான் எழுதுகின்ற (writing) முறையே கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. வரலாற்றறிஞர் சிலர் இறையனார் அகப்பொருள் உரையில் கூறப்பட்டுள்ள தலைச் சங்கம், இடைச் சங்கம் ஆகியவை நடைபெறவில்லையென்றும், கடைச் சங்கம் மட்டுமே ஏற்றுக்கொள்ளத் தக்கதென்றும் குறிப்பிடுகின்றனர். முச் சங்கங்கள் நீடித்த காலத்தையும், முச் சங்கங்களில் வீற்றிருந்த புலவர்களது எண்ணிக்கையையும், அவற்றைப் புரந்த பாண்டிய வேந்தர்களது எண்ணிக்கையை யும் நாம் ஏற்றுக்கொள்ளாவிட்டாலும் முச் சங்கங்கள் நடை பெற்றதனை நாம் ஏற்றுக்கொள்ளலாம். தமிழகத்தின் சங்க காலம் கி. மு. 500-ல் தொடங்கி, கி. பி. 300-க்கு முன்னர் முடிவுற்ற

[1] சில அறிஞர்கள் சங்க காலம் கி.மு. மூன்றும் நூற்றாண்டு தொடங்கி, கி.பி. மூன்றும் நூறாண்டு வரை நீடித்ததாகவும் கொள்வர். அவர்களுள் பண்டாரகர் என். சுப்பிரமணியம் ஒருவராவார்.

Ibid. p. 46. (The age of the Sangam could be taken to be a period of six centuries from the 3rd century B.C. to the 3rd century A.D.)

தலைச்சங்கம் கி.மு. நான்காம் நூற்றாண்டுக்கும், இரண்டாம் நூற்றாண்டுக்கும் இடைப்பட்டது என்று பண்டாரகர் கே. கே. பிள்ளையவர்கள் கருதுவார். (பிள்ளை, கே.கே. 'தமிழக வரலாறு-மக்களும் பண்பாடும்' பக். 81)

தென்று கருதலாம். கடைச் சங்கம் கி. பி. முதல் நூற்றாண்டில் தொடங்கி, கி. பி. மூன்றாம் நூற்றாண்டு வரையில் நீடித்ததாகக் கொள்வதே தற்கால ஆய்வு நிலையில் பொருத்தமுடையதாகத் தோன்றுகிறது. பண்டாரகர் கே.கே. பிள்ளையவர்களும் 'கடைச் சங்கம் கி. பி. முதல் மூன்று நூற்றாண்டுகள் நிகழ்ந்து வந்தது என்பதில் ஐயமேதுமில்லை' என்று குறிப்பிட்டுள்ளதும் ஈண்டு நினைவுகூரத்தக்கது.[1] திரு. என். சுப்பிரமணியன் அவர்களும் இக் கருத்தினையே தமது நூலில் வலியுறுத்துகிறார்.[2]

1 பிள்ளை, கே.கே. 'தமிழக வரலாறு-மக்களும் பண்பாடும். பக். 81.
2 Subramanian, N. 'History of Tamil Nad' p. 42 and 46.

# 4. கடைச் சங்க காலத்திற்கு முந்திய பாண்டியர்கள்

## வடிம்பலம்ப நின்ற பாண்டியன்

**சான்றுகள்:** பாண்டிய மன்னர்களுள் காலத்தால் முற்பட்டவன் இவனேயாவான். சின்னமனூர்ச் செப்பேடுகளும் வேள்விக்குடிச் செப்பேடுகளும் இவ் வேந்தனைப்பற்றிய மூன்று கதைகளைக் குறிப்பிடுகின்றன. தொல்காப்பியம், புறநானூறு, மதுரைக்காஞ்சி ஆகிய நூல்களும் வடிமபலம்ப நின்ற பாண்டியனைப்பற்றிய சில செய்திகளைச் செப்புகின்றன.

**நெடியோன் :** ஒல்காப் பெரும் புலமைத் தொல்காப்பியரின் தொல்காப்பியத்திற்கு உரைகண்ட சான்றோருள் ஒருவராகிய நச்சினார்க்கினியர், வடிம்பலம்ப நின்ற பாண்டியன் இருபத்து நாலாயிரம் ஆண்டுகள் ஆட்சி புரிந்தானென்று தமது உரையில் குறிப்பிடுகின்றார். ஈண்டு இம் மன்னன் இத்துணை நீண்ட நெடுங் காலம் ஆட்சி புரிந்தான் எனக் குறிக்கப்பெற்றிருத்தல் உண்மையன்று; புனைந்துரையேயாகும். இருப்பினும் இவன் நீண்ட காலம் ஆட்சி புரிந்தனன் என்பதில் ஐயமில்லை. மேலும், சங்கச் சான்றோர்கள் இவனை 'நெடியோன்' என்று பல்லிடத்தும் குறிப்பிட்டுள்ளமையின் இவனது ஆட்சிக் காலம் பல்லாண்டு காலம் நீடித்தது என்றோ, நெடிய உருவம் கொண்டோன் என்றோ அறியலாம்.

புறநானூற்றின் ஒன்பதாம் பாட்டிலிருந்து இவன் பஃறுளி என்னும் பெயர் கொண்ட ஆற்றை வெட்டுவித்தான் என்றும் கடல் தெய்வத்திற்கு விழாவெடுத்தான்[1] என்றும் அறியப்படுகின்றது. எனவே, குமரி முனைக்குத் தெற்கிலிருந்த குமரி நாடு முதலியன கடற்கோளால் அழிவதற்கு முன் அப் பகுதிகளை வடிம்பலம்ப நின்ற பாண்டியன் ஆண்டு வந்தான் எனவும் அறிய

[1] 'முன்னீர் விழவின் நெடியோன்
நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே'—புறநானூறு 9.

இவன் கடல்கடந்த நாடுகளை வென்று, புகழ் கொண்டு, பெருமை கொள்ளுவதற்குக் கடல் பேருதவியாக இருந்ததால், கடல் தெய்வத்திற்கு விழாவெடுத்தான். இதன் காரணமாக 'முந்நீர் விழவின் நெடியோன்' என்று சிறப்பிக்கப் பெறுகிறான்.

முடிகின்றது. பாண்டிய நாட்டின் தெற்கெல்லை கடற்கோளின் காரணமாக இவனது காலத்தில் சுருங்கியிருத்தல் வேண்டும்.

**சிறப்புப் பெயர்கள் :** இவன் நிலந்தரு திருவிற் பாண்டியன்[1] எனவும் சிறப்பிக்கப்படுகிருன். "நிலந்தரு திருவின்" என்பது 'புதிய நிலப் பகுதிகளைத் தன்னாட்டுடன் இணைத்த' எனப் பொருள்படுதலின்[2] கடற்கோளால் தென்பகுதியை யிழந்த இம் மன்னன் அதற்கீடாக வட பகுதியை வென்று[3] தனது பேரரசினைப் பெருக்கினுன் எனக் கொள்வதில் தவறில்லை.

நச்சினார்க்கினியர் தமது தொல்காப்பிய உரையில் இம் மன்னனை 'மாகீர்த்தி'[4] எனக் குறிப்பிடுவதால் இவன் பெரும் புகழுடன் பாண்டிய நாட்டையாண்டான் என்பது புலனுகின்றது. தமிழகத்தின் தொன்னூலாம் "தொல்காப்பியம்", இவ் வேந்தனது பேரவையின் கண்ணேதான் அரங்கேற்றம் செய்யப் பட்டது என்று நச்சினார்க்கினியர் போன்ற அறிஞர் கூறுவர்.[5]

**சிறப்பியல்புகள் :** மேற்கூறியவற்றுன் நெடியோன் என்ற வடிம்பலம்ப நின்ற பாண்டியன் பெரு வெற்றி வீரனுகவும்,[6]

1 "நிலந்தந்த பேருதவிப்
பொலந்தார் மார்பின் நெடியோன் உம்பல்"
மதுரைக்காஞ்சி, 60-61.

2 'மாற்றாரது நிலத்தினைத் தன்கீழ் வாழ்வார்க்குக் கொண்டு கொடுக்கும் போர்த் திருவினையுடைய பாண்டியன் மாகீர்த்தி அவை' – இளம்பூரணர் உரை. (தொல்காப்பியம், பாயிரம்.) என்றும் பொருள் கொள்ளலாம்.

3 "பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்
குமரிக் கோடும் கொடுங்கடல் கொள்ள
வட திசைக் கங்கையும், இமயமும் கொண்டு
தென்திசை யாண்ட தென்னவன் வாழி" (சிலம்பு 11:19-22)

என்னும் சிலப்பதிகார அடிகளால் இவன் இமயம் கொண்டான் எனலாம்.

"மலிதிரை யூர்ந்துதன் மண்கடல் வௌவலின்,
மெலிவின்றி மேற்சென்று மேவார்நா டிடம்படப்
புலியொடு வில்நீக்கிப் புகழ்பொறித்த கிளர்கெண்டை
வலியினான் வணக்கிய வாடாச்சீர்த் தென்னவன்" கலித்தொகை, 104

'அங்ஙனமாகிய நிலக்குறைக்குச் சோழநாட்டெல்லையிலே முத்தூர்க் கூற்றமும், சேரமானாட்டுக் குண்டூர்க் கூற்றமும் என்னுமிவற்றை இழந்த நாட்டிற்காக வாண்ட தென்னவன்' சிலம்பு: 17-22 உரை. சோழன் நலங்கிள்ளி திரனும் இக் கருத்தினைக் கூறுவார்.

4 என், 2-ல் உள்ளதே.

5 தொல்காப்பியப் பாயிர உரை. நச்சினார்க்கினியம் பக். 3.

"தொல்காப்பியம் புலப்படுத்திய மாகீர்த்தியாகிய நிலந்தரு திருவிற் பாண்டியன் அவைகளத்து" என்று சிலப்பதிகாரவுரைப் பாயிரத்து அடியார்க்கு நல்லார் கூறியுள்ளார். இவரே வேனிற் காதையில் "சயமா கீர்த்தியனாகிய நிலந்தரு திருவிற் பாண்டியன் தொல்காப்பியம் புலப்படுத்திரிஇனான்" என்று குறிப்பிட்டுள்ளார்.

6 நெடியோன் நால்வகைப் படையுடன் சென்று சேர சோழர் ஆகிய இரு பெரும் வேந்தரையும், குறுநில மன்னர் சிலரையும் வென்றான்: குறிஞ்சிநில வேந்தர்களை வெற்றி கொண்டான்; இவ்வாறு பகைவர் நாடுகளை வென்று கைக் கொண்டு சிறந்தான். (மதுரைக்காஞ்சி, 43-48).

கற்றோரைப் போற்றும் பெற்றியுடையோனுகவும், பஃறுளி யாற்றினை வெட்டுவித்து, வேளாண்மையைப் பெருக்கிய மாமன்னனுகவும், பெரும்புகழ் கொண்டோனுகவும் விளங்கிப் பாண்டிய நாட்டினை நெடுங்காலம் ஆண்டு வந்தானென அறிகிறோம்.

இவன் காலத்தில் தமிழ்ச் சங்கத்தினையொத்த அவையம் ஒன்று நிறுவப்பட்டிருந்தது. இதில் வீற்றிருந்த அதங்கோட்டாசான் என்னும் பெரும் புலவர் பெரும்புகழ் பெற்றிருந்தார் என்பதும் பனம்பாரனுரியற்றிய தொல்காப்பியப் பாயிரத்தால் அறியலாம். இதனை,

'நிலந்தரு திருவிற் பாண்டிய னவையத்து
அறங்கரை நாவி னான்மறை முற்றிய
அதங்கோட் டாசாற் கரிறபத் தெரிந்து'

என்று தொல்காப்பியப் பாயிரம் குறிப்பிடுகின்றது.

**சயமாகீர்த்தி :** இவன் 'சயமா கீர்த்தி' என்னும் சிறப்புப் பெயரையும் பெற்றிருந்தானென்று அறிகிறோம். 'கவியரங் கேறினர் எழுவர் பாண்டியருள், ஒருவன், சயமாகீர்த்தியனுகிய நிலந்தரு திருவிற் பாண்டியன், தொல்காப்பியம் புலப்படுத் தி(ரீஇயி)னன்' எனக் கூறப்பட்டுள்ளதால் இதனை நாம் அறியலாம். அடியார்க்கு நல்லாரும் நச்சினர்க்கினியரும் இவ் வேந்தனை சயமாகீர்த்தி என்றே குறித்துள்ளனர். இவன் யவத்தீவில் (சாவாத் தீவு) வெற்றி பெற்று, ஆங்குக் கடல் நீர் தன் அடிகளைக் கழுவுமாறு பாறையில் தன் காலடியைப் பொறித்து வைத்ததனுல் இப் பெயரினைப் பெற்றதாகத் திரு. இரா. இராகவையங்கார் அவர்கள் குறிப்பிடுகின்றார். சய என்ற சொல் சாவா என்னும் தீவினைக் குறிப்பதாகக்கொண்டு, இதனை உறுதிப்படுத்துவதற்கு அங்குள்ள சாசனங்கள் சிலவற்றைச் சான்ருகக் காட்டியுள்ளார்.

**வெற்றிகள் :** இவன் கடல் கடந்து சென்று சாவாத் தீவு (Jawa), அதனையடுத்த மதுரைத் தீவு, மலயம் என்று அழைக்கப் பெற்ற சுமத்திராத் தீவு, போர்னியோத் தீவு ஆகியவற்றை வென்றுள்ளான். இவையனைத்திலும் பண்டு பாண்டியரது ஆட்சி நடைபெற்றது. போர்னியோத் தீவிலுள்ள ஒராறு 'பொருநை' என்னும் பாண்டிய நாட்டின் ஆற்றுப் பெயரைத் தாங்கியிருத்தலாலும், மதுரையென்னும் பெயர் கொண்ட தீவொன்று ஆங்கு இருத்தலாலும் இதனை நாம் உறுதியாகக் கொள்ளலாம். அங்குள்ள மற்ருேர் ஆறு 'கடுங்கோன்' எனப் பெயர் பெறுகிறது.

'மதுரைக்காஞ்சி'யின் ஆசிரியரான மாங்குடி மருதனார் என்னும் புலவர் பெருமான் இவ் வேந்தனைப்பற்றிய சில செய்திகளை வரைந்துள்ளார். அவற்றுள், இவன் சோழர், சேரர் ஆகிய இரு பெரும் முடிமன்னர்களையும், மற்றும் பல வேளிர்களையும் வென்று புகழ் பெற்றதாகவும், மலைகளை நீந்தி வழிகளை உண்டாக்கும் ஆற்றல் பெற்றதாகவும் குறிப்பிடுகின்றார்.

**வடிம்பலம்ப நின்ற பாண்டியன் – பெயர்க் காரணம்**

திருவிளையாடற் புராணத்தில் இவ் வேந்தனைப்பற்றிய கதையொன்று கூறப்பட்டுள்ளது. அக் கதையினை நாம் முழுமையாக ஏற்றுக்கொள்ளுதலியலாது. இந் நெடியோன் வடிம்பலம்ப நின்ற பாண்டியனென்று எவ்வாறு அழைக்கப்பெற்றான் என்பதனை விளக்குவதாக இக் கதையினைக் கொள்ளலாம். அக் கதையாவது :

ஒரு காலத்தில் கொடுங்கடல் கோபங் கொண்டு பொங்கியெழுந்தது; மதுரையை அழிக்கத் தொடங்கியது; அக் காலை மதுரையை ஆட்சி புரிந்து வந்த உக்கிரகுமார பாண்டியன் என்பான், சோமசுந்தரப் பெருமான் தனக்களித்த வேலைப் பொங்கி வரும் கடல்மீது வீசினான். கடல் நீரையெல்லாம் அவ் வேல் வற்றச் செய்துவிட்டது. கடலும் அவனைப பணிந்து அவனது பாதங்களைக் கழுவியது. அதன் காரணமாக மேன்மை பெற்ற அவ் வேந்தன் கடல் வடிம்பலம்ப நின்ற பாண்டியன் எனப் புகழ் பெற்றான் என்பதாகும். 'அவன் கடலை அடக்கிக் கடலில் நாவாய் செலுத்திக் கடற்பயணத்தை எளிதாக்கினான் என்பது அதன் கருத்தாகும்.[1]

இக் கதையில் பாண்டி வேந்தனது பெயர் உக்கிரகுமாரன் எனக் குறிக்கப்பெற்றிருந்த போதிலும், இச் செயல் நிலந்தரு திருவிற் பாண்டியனுடையதுதான். இங்குக் கடல் பொங்கி வந்ததாகக் குறிக்கப்பட்டுள்ள நிகழ்ச்சி முதற் கடற்கோளாக இருத்தல் வேண்டும். கடல் சுவற வேலெறிந்ததென்பது, இவன் கடல் கடந்து சென்று பல நாடுகளை வென்றதனைக் குறிக்கும். கடல் வடிம்பலம்ப நின்றது என்பது, இப் பாண்டியன் கடலில் கப்பல்களைச் செலுத்திய திறனைக் குறிப்பதாகக் கொள்ளலாம். இவன் கடல் கடந்து வென்ற நாடுகளில் உள்ள கடற்கரையில் கிடந்த பாறையில் தனது வெற்றியின் நினைவாகத் தனது காலடியினைப் பொறித்து, கடல்நீர் அச் சுவட்டைக் கழுவுமாறு

[1] வேங்கடசாமி, மயிலை சீனி, 'பழங்காலத் தமிழர் வாணிகம்' பக்கம் 33-34.

செய்தான். இக் காரணம்பற்றியே இவன் கடல் தெய்வத்திற்கு விழா வெடுத்தனன் போலும்.

இவன் அவையும், சங்கமும் கொண்டு ஆட்சி புரிந்த இடம் குமரிநாட்டின் தென்மதுரைப் பகுதியாகும். குமரிமலையும், பஃறுளியாறும் இக் குமரி நாட்டின்கண்தான் இருந்தன. இவ் வேந்தனது காலத்தில்தான் முதற் கடற்கோள் நிகழ்ந்ததாகவும், குமரிமலையும் பஃறுளியாறும் கடலில் அமிழ்ந்தனவாகவும் அறிஞர் கூறுவர்.

பாண்டியனொருவன் கடல் சுவற வேலெறிந்த கதையும், ஒரு பாண்டியனிடத்துக் கடல் அடைக்கலம் புகுந்த கதையும் சின்ன மனூர்ச் செப்பேடுகளில் குறிக்கப் பெற்றுள்ளன. கடற் கோளால் உலகங்களெல்லாமழிய, பாண்டி வேந்தன் ஒருவன் மட்டும் உயிர்வாழ்ந்திருந்த செய்தி வேள்விக்குடிச் செப்பேட்டில் குறிக்கப்பட்டுள்ளது.[1] இம் மூன்று கதைகளும் வடிம்பலம்ப நின்ற பாண்டியனை நெடியோனைக் குறிப்பாக ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர்.

மேற்கூறியவற்றையெல்லாம் நோக்க, கடல் வடிம்பலம்ப நின்ற பாண்டியனும், நிலந்தரு திருவிற் பாண்டியனும் ஒருவனே யாவன் என்பது புலனாகின்றது.[2]

'முடத்திருமாறன்' என்னும் பெயரில் 'முடம்' என்ற சொல்லினை மட்டும் நீக்கிவிட்டால் 'திருமாறன்' என்பது 'திருவிற் பாண்டியன்' என்பதனோடு பெயரால் ஒருமைப்படு கின்றது. முடத்திருமாறன், கடற்கோளுக்கு முன்னும் பின்னும் இருந்தானாதலின், கடற்கோள் நிகழ்ந்தபோது தப்பி வருங்காலை இவன் கால்கள் முடம்பட்டிருத்தல் கூடுமென்றும், அதன் காரணமாக முடத் திருமாறனும் நிலந்தரு திருவிற் பாண்டியனும் ஒருவனேயாதல் வேண்டுமென்று தமிழறிஞர் திரு. இரா. இராக வையங்கார் அவர்கள்[3] கருதுகின்றார். இக் கருத்தினைத் திரு.

[1] 'வெம்முனை வேலொன்று விட்டும் விரைவரவிற் கடல்மீட்டும்' சின்ன மனூர்ச் செப்பேடு. 'பாண்டியர் செப்பேடுகள் பத்து' பக். 167. வேள்விக்குடிச் சாசனம். சமஸ்கிருதப் பகுதியின் தமிழாக்கம் 'பாண்டியர் செப்பேடுகள் பத்து' பக்கம் 83.

[2] 'பொலந்தார் மார்பின் நெடியோன்' என்னும் மதுரைக்காஞ்சியடிக்கு 'நெடியோன் வடிவலம்ப நின்ற பாண்டியன்' என்றே நச்சினார்க்கினியர் பொருள் கூறியுள்ளார். 'முந்நீர்க்கண் வடிவலம்ப நின்றான்' என்ற வியப்பால் நெடியோன் என்றார் என்ப (புறநானூற்று உரை செய்யுள் 9). 'அடியில் தன்னள வரசர்க் குணர்த்தி' என்ற சிலம்பின் அடியால் கடல் கொள்வதற்கு முன்னும் கடல் கொண்ட பின்பும் இருந்த பாண்டியன் ஒருவனே என்பது புலனாகும்.

[3] இராகவையங்கார், இரா., 'தமிழ் வரலாறு', பக்கம் 32-34.

மா. இராசமாணிக்கனர் அவர்களும் ஆதரிக்கின்றார்.[1] இருப்பினும் பெரும்பாலான அறிஞர்கள் இக் கருத்தினை ஆதரிக்கவில்லை. எனவே, இதனை நாம் ஏற்றுக்கொள்ள இயலவில்லை.

**புலமை :** நெடியோன் என அழைக்கப்பெறும் இவன் நல்லிசைப் புலவனாகவும் விளங்கினான் என்பதனை இவன் நற்றிணையில்[2] பாடிய இரு பாடல்களால் அறியலாம். இப் பாடலில் இவன் குட்டுவனைக் குறிப்பிடுவதால், இருவரும் நண்பர்களாய் இருந்தனர் எனக் கருதலாம்.

**காலம் :** இவனது அவையில் தொல்காப்பியம் இயற்றப் பட்ட காரணத்தால், இவன் தொல்காப்பியர் காலத்தினன் என்பது உறுதி. தொல்காப்பியம் கி.மு. 306-க்கு முன்பு அரங்கேற்றப் பட்டதாகத் தமிழறிஞர் கருதுகின்றனர்.[3] இந் நூல் இயற்றப் பட்ட பின்னரும் இவ் வேந்தன் வாழ்ந்திருந்தான். எனவே, இவன் கி.மு. நான்காம் நூற்றாண்டின் பிற்பகுதியினன் ஆவான்.[4]

## பாண்டியன் கடுங்கோன்

**முதலாம் கடுங்கோன் :** இவன் தலைச் சங்கத்தின் இறுதிக் காலத்தில் பாண்டிய நாட்டினை ஆண்டு வந்தான். இவனது தலைநகரம் தென்மதுரையாகும். முதற் சங்கத்தினைக் காத்தோம்பிய மன்னர்களது பட்டியலின் இறுதியில் காணப்படுவோன் கடுங்கோன் என்பதனை இறையனாரகப் பொருளுரையால்

[1] '...சிலப்பதிகாரத்தால் அறியப்பட்டவனும், தொல்காப்பியப் பாயிரத்திற் கூறப்பட்டவனுமான திருவிற் பாண்டியனும், கடற்கோளுக்கு முந்தியும் பிந்தியும் இருந்தவனுமாகக் களவியல உரை கூறிய (முடத்) திருமாறனும் ஒருவனே எனத் துணியப்படும் என்க.' இராசமாணிக்கனர், மா. 'பத்துப்பாட்டு ஆராய்ச்சி' பக். 330.

[2] நற்றிணை 105, 228.

[3] இராசமாணிக்கனர், மா. 'பத்துப்பாட்டு ஆராய்ச்சி' பக்கம் 341.

[4] 'வேறு தக்க சான்றுகள் கிடைக்கும் வரையில் தொல்காப்பியம் கி.மு. 4ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் செய்யப்பட்டது என்றும், அக் காலமே நெடியோன் காலம் என்றும் கொள்வது பொருத்தமாகும்.' Ibid.

அடியார்க்கு நல்லாரும் களவியல் உரைகாரரும் தொல்காப்பியம் கபாடபுரத்தில் இயற்றப்பட்டது எனக் கூறியுள்ளனர். இந் நிகழ்ச்சிக்குப் பின்பே கபாடபுரம் அழிந்தது. சாணக்கியர் தமது பொருள்நூலில் 'பாண்டிய கவாடகம்' என்பது கபாடபுரத்துக் கடலில் எடுத்த முத்து என்று கூறுகிறார். சாணக்கியரின் காலம் ஏறத்தாழக் கி.மு. 325-301 எனக் கொள்ளலாம். காரணம் இவர் சந்திரகுப்த மௌரியனது அவையில் இருந்ததால், அவ் வேந்தனது காலமே இவருக்குப் பொருந்தும். கபாடபுரம் அழிவதற்கு முன்பு கபாடபுரத்தில் எடுக்கப்பெற்ற முத்து 'பாண்டிய கவாடகம்' என்றழைக்கப்பட்டது போலும். இலங்கை நூலில் மூன்று கடற்கோள்கள் குறிக்கப் பெறுகின்றன. அவற்றுள் மூன்றாவது கடற்கோள் கி.மு. 306-ல் நிகழ்ந்தது. இக் காலம் சாணக்கியரின் காலத்திற்கு ஒத்து வருகிறது. எனவே, இவ் வேந்தன் கி.மு. நான்காம் நூற்றாண்டினன் என்பது பொருந்தும்.

அறியலாம். இக் கருத்து திரு. வெங்கையா[1] திரு. எச். கிருஷ்ண சாஸ்திரி,[2] திரு. கே. வி சுப்பிரமணிய ஐயர்[3] போன்ற அறிஞர் பெருமக்களது குறிப்புகளாலும் உறுதி பெறுகின்றது. பாண்டிய நாட்டினைக் களப்பிரரின் பிடியிலிருந்து மீட்ட மற்றொரு கடுங்கோனும் பாண்டியர் வரலாற்றில் இடம் பெறுகிறான். எனவே, தலைச்சங்க காலத்தின் இறுதியில் ஆட்சி புரிந்த இக் கடுங்கோனை முதற் கடுங்கோன் என்றோ, தலைச்சங்க காலத்திய கடுங்கோன் என்றோ அழைப்பது சாலப் பொருந்தும்.

**தலைநகரம் :** இப் பாண்டியன் அவையும், சங்கமும் கொண்டு அரசாண்ட இடம் குமரி நாட்டின் தென மதுரைப் பகுதியாகும். தென்மதுரையைத் தலைநகராய்க் கொண்டாண்ட பாண்டி வேந்தருள் இறுதியாகக் கருதப்படும் இவனைப்பற்றிய அரசியல் செய்திகள் ஒன்றும் நமக்குக் கிடைக்கப் பெறவில்லை.

## நெடுஞ்செழியன்

### முன்னுரை

இப் பாண்டி வேந்தன் கிறித்து பிறப்பதற்கு இரண்டு நூற்றாண்டுகளுக்கு முன்பு பாண்டிய நாட்டின்கண் ஆட்சி புரிந்தான். கிறித்து பிறந்த பின்பு சங்க காலத்தில் ஆண்டு வந்த 'தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியன்', 'ஆரியப் படை கடந்த நெடுஞ்செழியன்' ஆகிய இருவரினும் இவ் வேந்தன் வேறுபட்டவன் மட்டுமல்லன், காலத்தால் முற்பட்டவனும் ஆவான்.

### ஆதாரங்கள்

இவ் வேந்தனைப்பற்றி மீனாட்சிபுரம் கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன. இதனை மாங்குளம் கல்வெட்டுகள் என்றும் சொல்வர். மதுரையிலிருந்து மேலூர் செல்லும் நெடுஞ்சாலையிலிருந்து மற்றொரு குறுக்குச் சாலையொன்றின் வழியே சென்று, அதிலிருந்து மற்றொரு வண்டிப் பாதை வழியாகச் சென்றால், மீனாட்சிபுரம் என்னும் ஊரினையடையலாம். இவ் வூர் மலையடிவாரத்தில் உள்ளது. அவ் வூரார் இம் மலையினைக் 'கழுகுமலை' என்றும் 'ஓவா மலை' என்றும் கூறுகின்றனர். இங்குள்ள கல்வெட்டினைப் பின் காண்போம்:

[1] Epigraphical Report, 1908.
[2] Epigraphia India-Vol. XXII, p. 295
[3] The Indian Antiquary Vol. XXII, p. 295.

'கணிய் நந்த ஸிரிய் இருவ் அன்கே
தம்மம் இத்தஅ நெடுஞ்செழியன் பணஅன்
கடல்அன் வழுத்திய் கொட்டு பித்தஅ பளிஇய்
கணிய் நந்த ஸிரிய்கு அன் தமம்.'[1]

இங்கே நெடுஞ்செழியன் 'கடலன்' என்றும், 'வழுதி' என்றும், 'பணவன்' என்றும் குறிப்பிடப் பெறுகிறான். இவையனைத்தும் பாண்டிய வேந்தர்களது குலப் பெயர்களாதலின், இவண் குறிப்பிடப் பெற்றுள்ள நெடுஞ்செழியன் பாண்டி வேந்தன் என்பது புலனாகின்றது.

**காலம்**

இவ் வேந்தன் கி. மு. இரண்டாவது நூற்றாண்டில் ஆட்சி புரிந்தவனாயிருத்தல் வேண்டுமென்று திரு. ஐ. மகாதேவன்[2] அவர்கள் கருதுகின்றார். இக் கல்வெட்டு கி.மு. 3—2ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது என்பதில் ஐயமில்லை, என்று டாக்டர் இரா. நாகசாமி அவர்களும்[3] கருதுகின்றார்.

**முதலாம் நெடுஞ்செழியன் :** தமிழ் 'இலக்கியங்களில் குறிக்கப்பெறுகின்ற ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியனும், தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியனும கிறித்துவுக்குப் பின்னர்தான் ஆட்சி புரிந்தனர் என்பதனை அறிஞர் ஏற்றுக்கொள்கின்றனர்.[4] எனவே, இந் நெடுஞ்செழியனுக்குப் பின்னரே ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன், தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியன் ஆகிய இருவரும் ஆட்சி புரிந்தனர் என்பதனை இலக்கியச் சான்றுகளாலறியலாம். இதனால் கிறித்து பிறப்பதற்கு முன்பே தன்னாட்சியினை நிறுவிய இப் பாண்டியனை முதலாம் நெடுஞ்செழியன் என்றும், ஆரியப் படை கடந்தானை இரண்டாம் நெடுஞ்செழியன் என்றும்,[6]

1 நடனகாசிநாதன், தாமோதரன், கு. 'கல்வெட்டு ஓர் அறிமுகம்'

2 நாகசாமி, இரா., 'கல்வெட்டியல்' பக்கம் 58.

3 Ibid.

4 டாக்டர் இரா. நாகசாமி அவர்கள் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியனும் தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியனும் கிறித்துவிற்குப் பிற்பட்டவர்கள் என்று கூறுவதற்குச் சான்றுகள் இல்லை என்று கருதுகின்றார் (கல்வெட்டியல் பக். 53). திருவாளர்கள் வி. கனகசபை, எம். சீனிவாச ஐயங்கார், டாக்டர் கிருஷ்ணசாமி ஐயங்கார், கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியார், தி. வை. சதாசிவ பண்டாரத்தார் முதலான அறிஞர் பெருமக்கள் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் கிறித்துவிற்குப் பின்புதான் ஆட்சிபுரிந்தான் என்று அறுதியிட்டுக் கூறுகின்றனர்.

6 '...................... ஓராயிரம் கிரது செய்தும்' சின்னமனூர்ச் (சிறிய) செப்பேடு. பாண்டியர் செப்பேடுகள் பத்து, பக்கம் 79. வரி 7.

தலையாலங்கானத்துச் செருவென்றானை மூன்றாம் நெடுஞ்செழியன் என்றும் அழைப்பது சாலப் பொருத்தமுடையதாகும். நம்பி நெடுஞ்செழியனை நான்காம் நெடுஞ்செழியன் எனவும் கூற லாம்.

## பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி

**சான்றுகள்**

சங்க காலப் பாண்டி மன்னர்களுள் பெரும் புகழ் கொண்டு சீரும் சிறப்புமிக்க ஆட்சியினை நிறுவியவர்களுள் இவனும் ஒருவன் என்பது சின்னமனூர்ச் செப்பேடு, வேள்விக்குடிச் செப்பேடு, புறநானூறு, மதுரைக்காஞ்சி ஆகியவற்றுள் குறிக்கப்பெற்று உள்ள செய்திகளாலறியலாம். இவனை வடிம் பலம்ப நின்ற பாண்டியனின் வழியில் தோன்றியவன் எனலாம்.

சின்னமனூர்ச் செப்பேடுகளில் பாண்டியனின் முன்னோருள் ஒருவன் ஆயிரம் வேள்விகள் இயற்றிப் புகழ் பெற்றதாக ஒரு செய்தி[1] குறிக்கப் பெற்றுள்ளது. இது பல்யாகசாலை முது குடுமிப் பெருவழுதியையே சுட்டுவதாகக் கொள்ளலாம். இப் பாண்டியனை வேள்விக்குடிச் செப்பேடுகள் 'கொல்யானை பல வோட்டிக் கூடா மன்னர் குழாந்தவிர்த்த - பல்யாக முதுகுடுமிப் பெருவழுதியெனும் பாண்டியாதிராசன்' எனக் குறிப்பிடுகின்றது. சங்க இலக்கியமாகிய மதுரைக்காஞ்சி இம் மன்னனைப் 'பல்சாலை முதுகுடுமித் தொல்லாணை நல்லாசிரியர்-புணர் கூட்டுண்ட புகழ் சால் சிறப்பின்' என்று சிறப்பிக்கின்றது. இவண் சாலை எனக் குறிக்கப் பெறுவது வேள்விச் சாலை. இவ் வேந்தனது இயற் பெயர் குடுமி என்பதாகும்.[2] இவன் வேந்தர்க்குரிய பல்வேறு வகையான வேள்விகளைச் செய்தான் என்பதனை இவனது இயற் பெயருக்கு முன்னர்ச் சேர்க்கப்பட்டுள்ள அடைமொழியாலறிய லாம்.[3]

1 அறிஞர் பலர் இவனை முதலாம் நெடுஞ்செழியன் என்று குறித்துள்ளனர்.

2 குடுமி ...... புறம். 6, 9, 12.
குடுமிக்கோமான் ......... புறம். 64.
முதுகுடுமி ............ மதுரைக்காஞ்சி 759.

இவனது இயற்பெயர் குடுமி எனக்கொண்டு, இவ் வேந்தன் முதுமை மிக்கவன் என்ற காரணத்தாலும், பழங்காலத்தினன் என்ற காரணத்தினாலும் 'முது' என்னும் அடைமொழியினை அறிஞர்கள் இவனது பெயருடன் இணைத்தனர் எனக்கொள்ளுதல் பொருத்தமுடையது.

3 வேள்வியியற்றுதல் தமிழரின் தொன்மையான வழக்கு என்றும், ஆரியர் இதனைத் தமிழர்களிடமிருந்து கற்றுக்கொண்டனர் என்றும் புலவர் செந்துறை முத்து அவர்கள் தமது 'மணிமேகலை காவியமா? பௌத்தமா?' என்னும் நூலில் குறிப்பிட்டுள்ளார். வேள்வியியற்றுதல் ஆரியரின் ஆதிகால வழக்கமேயென்றும், இது தமிழர் நெறியன்று என்றும் மொழிஞாயிறு ஞா. தேவநேயப் பாவாணர் முதலிய தமிழறிஞர் கருதுகின்றனர். இது தமிழர் நெறியன்று என்பதே பொருத்த முடையது.

**அளித்த தானம் :** முதுகுடுமிப் பெருவழுதியின் ஆட்சிக் காலத்தில் நற்கொற்றன் என்னும் வேதியன் கொற்கையில் வேதவேள்வியில் சிறந்தவனாக விளங்கினான்; அவன் கொற்கை கிழான் எனவும் சிறப்பிக்கப் பெற்றான். இப் பாண்டி மன்னன் கொற்கைகிழானை வரவழைத்துப் பாகனூர்க் கூற்றத்தில் (தற்போழ்து சோழவந்தான் என அழைக்கப்படும் பகுதியில்) வையையாற்றங்கரையில் தேன் மலர்ச் சோலைகள் சூழ்ந்த ஓரிடத்தில் வேள்வியொன்றினைச் செய்வித்தான். அவ் விடத்திற்கு 'வேள்விக்குடி' என்னும் பெயரினை இட்டு அதனை நற்கொற்றனுக்கு இம் மன்னன் நீரோடு அட்டிக் கொடுத்தான் என்பது வேள்விக்குடிச் சாசனத்தால் அறியப்படுகின்றது. இச் சாசனம் இம் மன்னனைச் 'சீரோடு திருவளரச் செய்தார் வேந்தன்' எனச் சிறப்பிக்கின்றது.

**சிறப்பு :** வேள்விச்சாலைகள் நிறுவுவதில் பேரார்வம் காட்டிய இவ் வேந்தன் சான்றோர்களைப் போற்றிப் புரப்பதிலும் பேரார்வம் கொண்டிருந்தான்; நெட்டிமையார் முதலான பல சான்றோர்களை ஆதரித்தான்; இரவலர்களுக்கும் தகைமை சான்ற புலவர்களுக்கும் பாணர்களுக்கும் பொன்னும் பொருளும் வாரி வழங்கினான்; வாளாண்மையும் தோளாண்மையும் சிறக்கப் பெற்ற இவன் பகையரசர்களை வென்றடிப் படுத்திய மாபெரும் வீரனாக விளங்கினான்; சிவபெருமானிடத்தும் பெரியோர்களிடத்தும் பேரன்பு கொண்டோனாகவும் சிறந்து விளங்கினான் என்று காரிகிழார், நெட்டிமையார், நெடும்பல்லியத்தனார் எனும் புலவர் பெருமக்கள் இவ் வேந்தனது பெருமைகளைப் புறநானூறு எனும் நூலின்கண் ஐந்து பாடல்களில் வியந்து பாராட்டுகின்றனர். ஈண்டு நெட்டிமையார் பாடிய பாடல்களுள் ஒன்றைக் காண்போம்.

'பாணர் தாமரை மலையவும் புலவர்
பூநுதல் யானையொடு புனைதேர் பண்ணவும்
அறனோ மற்றிது விறன்மாண் குடுமி
இன்னா வாகப் பிறர்மண் கொண்டு
இனிய செய்திநின் ஆர்வலர் முகத்தே.'[1]

இவ் வேந்தன் எஞ்ஞான்றும் போர்த்தொழிலையுடையவன் என்பதும், பாசறைக்கண் இருக்குங்காலத்தும் ஈகைத் தொழிலில் ஈடுபாடு கொண்டவனென்பதும், பாசறையின்கண் ஓய்வெடுத்துக் கொண்டிருக்கும்போதும், இசையின்பம் நுகர்

1 புறநானூறு-12.

பவன் என்பதும் புறநானூற்றுப் பாடலொன்றால் அறியப்படுகின்றது.

தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியனை வாழ்த்திய புலவர் மாங்குடி மருதனார்,

'பல்சாலை[1] முதுகுடுமியின்
நல்வேள்வித் துறைபோகிய'

என்று கூறி முதுகுடுமியின் வழிவந்த சிறப்புடையவனாக அவனைக் காட்டுதல் இவனது சிறப்பினை நன்கு புலப்படுத்துகின்றது.[2]

**கழுதை ஏர் உழுதல்**

ஆண்மையும் அஞ்சாமையும் வாய்க்கப்பெற்ற இவ் வேந்தன் தனது பகைஞர்களை வென்றடிப்படுத்தி, பாண்டியரின் புகழினைப் பாரறியச் செய்தான். தன்னுடன் மாறுபட்டுப் போரிட்ட பகைஞருடைய படைகளை முறியடித்து, அவர்களது அரண்களை இடித்துத் தரைமட்டமாக்கியதுடன் நில்லாது ஆங்குக் கழுதைகளைப் பூட்டிய ஏரினால் உழுதான். இதனை,

'கடுந்தேர் குழித்த ஞெள்ள லாங்கண்
வெள்வாய்க் கழுதைப் புல்லினம் பூட்டிப்
பாழ்செய் தனையவர் நனந்தலை நல்லெயில்'

1 'இப் பாண்டியன் பல யாகசாலைகளை அமைத்தவனே தவிரப் பல யாகங்களைச் செய்தவன் அல்லன். வேத நெறிப்படி யாகம் செய்யும் அரசன் ஏதேனும் ஒரு க்ஷத்திரிய கோத்திரத்துடன் இணைக்கப்படல் வேண்டும். சங்ககாலப் பாண்டியர் அங்ஙனமே க்ஷத்திரிய கோத்திரங்களில் ஏதேனும் ஒன்றனுடன் இணைக்கப் பட்டமைக்குச் சான்றுகளில்லை.'

பி. டி. சீனிவாச அய்யங்கார் 'தமிழர் வரலாறு' பக். 436. (P. T. Srinivasa Ayyangar-History of the Tamils p. 436 )

மதுரைக்காஞ்சியிலும் புறப்பாடல்களின் அடிக்குறிப்பிலும் இவன் முறையே 'பல்சாலை என்றுய', 'பல்யாகசாலை' என்றும் குறிக்கப் பெறுகின்றான். இருப்பினும நூற்றாண்டுகள் பல கழிந்த பின்னர் எழுதப்பட்ட வேள்விக்குடிச் செப்பேட்டில் இவனது பெயர் 'பலயாக முதுகுடுமிப் பெருவழுதி' என்றே குறிக்கப்பட்டுள்ளது. இதனால் வேள்விக்குடிச் செப்பேட்டில் இவன இவ்வாறு தவறுதலாகக் குறிக்கப் பட்டுள்ளான்; 'சாலை' என்னும் சொல் இவனது பெயரிலிருந்து நீக்கப்பட்டது.

'The word salai has dropped out of the title of this king during the lapse of centuries' Ibid p. 437. Foot Note No. 5.

'இம் மன்னன் பல வேள்விகள் செய்யப் பொருள் உதவி செய்திருக்கலாம். ஆயின், இவன் வேள்வி செய்தமைக்குச் சான்றில்லை எனபதே இங்கு அறியத்தகும' இராசமாணிக்கனார், மா. 'பத்துப்பாட்டு ஆராய்ச்சி'-பக்கம் 345.

2 கடைச்சங்க காலத்திற்கு முன்பு ஆட்சிபுரிந்த இவ் வேந்தனைப் பற்றி, கி.பி. எட்டாம் நூற்றாண்டில தோன்றிய வேளவிக்குடிச செப்பேடு சிறப்பித்துப் பேசுகிறதென்றால், பன்னூறு ஆண்டுகள் கழிந்தும் இவனது புகழ், வீரம் ஆகியவை மங்காது, மறையாது பாண்டியரின் நெஞ்சங்களில நிறைந்திருந்தன எனபது புலனாகிறது. எனவே, இவன் அந்நாளையளவு புகழ்பெற்றிருந்தான் என்றும், கால வெள்ளத்தால் இவனது புகழ் அழியவில்லை என்றும் கூறலாம்.

என்று நெட்டிமையார் இக்கோமானைச் சிறப்பித்துப் பாடியுள்ள புறநானூற்றுப் பாடலால் அறியலாம்.

இப் பாடலைக் கொண்டு தமிழகத்தின் தங்க காலமாம் சங்க காலத்தில் வேந்தனொருவன் தனது மாற்றானின் கோட்டையை அழித்து, ஏரில் கழுதையைப் பூட்டி ஏர் உழும் வழக்கம் இருந்த தென்பது நன்கு புலனாகிறது.[1] கழுதை யேர் உழுதபின்பு, அந் நிலத்தில் வெள்ளை வரகும் கொள்ளும் விதைத்தல் அக் காலத்தில் பெருவழக்காயிருந்து வந்தது. இதனை,

'மன்னெயில் அழித்த மண்ணு மங்கலமும்-மாற்றரசன் வாழ்ந்த மதிலைபழித்துக் கழுதை யேரான் உழுது வெள்ளை வரகும் கொள்ளும் வித்தி மங்கல மல்லாதன செய்தவன் மங்கலமாக நீராடு மங்கலமும்' என்ற நச்சினார்க்கினியர் உரையாலறியலாம்.

**முடிவுரை :** இதுகாறும் கூறியவற்றான் பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப்பெருவழுதி போரில் நாட்டமும், கொடையளிப்பதில் ஆர்வமும், இறைவன்மீது பேரன்பும் கொண்டு விளங்கினான் என்பது தெளிவாகிறது. நெடும்பல்லியத்தனாரும் இவ் வேந்தனைச் சிறப்பித்துப் பாடியுள்ளார். இவனைப் பாடியுள்ள நான்கு புலவர்களும் இவ் வரசனின் காலத்தில் வாழ்ந்தனர் எனலாம்.

1 தமிழகத்தில் மட்டுமன்றிக் கலிங்க நாட்டிலும் கழுதையேர் உழும் வழக்கம் இருந்தது என்பதனைக் கலிங்கநாட்டுக் காரவேலன் (கி.மு. 176-163) என்னும் வேந்தன் கழுதையேர் உழுததால் அறியலாம். Harikrishna Mehtab 'History of Orissa', Vol. I.

# 5. கடைச் சங்க காலத்துப் பாண்டியர்

**முன்னுரை**

கடைச் சங்க காலத்திற்கு முந்திய பாண்டி மன்னர்களைக் காட்டிலும் கடைச்சங்க காலத்துப் பாண்டி மன்னர்களைப் பற்றிய செய்திகள் தமிழ் இலக்கியங்களிலும் செப்பேடுகளிலும் அதிகமாகக் காணப்படுகின்றன. இப் பாண்டி மன்னர்களின் வரலாறுபற்றி அறிந்துகொள்ள உதவும் ஆதாரங்களில் தலையாயது சங்க இலக்கியங்களேயாகும். நமக்குக் கிடைத்திருக்கும் பாட்டும் தொகையுமாகிய பழந்தமிழ் நூல்கள் கி. பி. முதல் மூன்று நூற்றாண்டுகளுக்குரியனவாய் இருக்கலாம் என்பது ஆராய்ச்சியறிஞர்களின் கருத்தாகும். இக் கால வரையறைக்குள் பாண்டி நாட்டினையாண்ட வேந்தர்களைப்பற்றி வரிசையாகக் கால வரையறையுடன தெளிவாகக் குறிப்பதற்குச் சான்றுகள் ஏதும் கிடைக்கப் பெறுமை வருந்துதற்குரியது எனவே, கடைச்சங்க காலத்துப் பாண்டி வேந்தர்களின் பெயர்களையும், வெற்றி மேம்பாடுகளையும், ஆங்காங்கு இலக்கிய வாயிலாக அறியும் செய்திகளைக் கொண்டு ஈண்டு நாம் காண்போம்.

**சான்றுகள்**

மூன்றாவது (கடை) தமிழ்ச் சங்கம் பாண்டியரது தலைநகராம் மதுரையின்கண் நிறுவப்பட்டது. இச் சங்கம் நன்கு செயல்படப் பாண்டி மன்னர்கள் நாற்பத்தொன்பதின்மர் பேருதவி புரிந்தனர் என்பதும், அன்னோர் ஆயிரத்தெண்ணூற்றைம்பது ஆண்டுகள் அரசோச்சினர் என்பதும் இறையனார் களவியற்கு உரைகண்ட தொல்லாசிரியர் கூற்றாகும். செஞ்சொற் காப்பியமாம் சிலப்பதிகாரத்தின் உரைப்பாயிரத்திற்கு மேற்கோளாகக் காட்டப்பெற்ற 'வேங்கடங் குமரி தீம்புனற் பௌவம்' எனத் தொடங்கும் ஆசிரியப் பாவும் பாண்டி மன்னர் நாற்பத்தொன்பதின்மர்பற்றியே குறிக்கின்றது. எனவே, ஒவ்வொரு பாண்டி வேந்தரது சராசரி ஆட்சிக் காலம் ஏறத்தாழ முப்பத்தெட்டு ஆண்டுகளாகும். அன்னோர் பெயர் யாவும் கிடைக்கவில்லையாயினும், நற்றிணை, குறுந்தொகை, பரிபாடல், அகநானூறு, புறநானூறு ஆதிய தமிழ் நூல்களின் துணை

கொண்டு ஒருசில மன்னர்களின் பெயர்கள்பற்றி அறிந்து கொள்ள முடிகின்றது. ஈண்டு நாம் அவ் வேந்தர்பற்றிய செய்தி களைச் சிறிது ஆய்வோம்.

## பாண்டியன் முடத்திருமாறன்

**காலம் :** குமரி நாட்டினைக் கொடுங்கடல் கொண்ட பின்பு குமரியாற்றிற்கும் தாமிரபரணியாற்றிற்கும் இடைப்பட்ட நிலப் பகுதியினைப் பாண்டி மன்னர் ஐம்பத்தொன்பதின்மர் ஆண்டு வந்தனர். இவர்களது தலைநகரம் கபாடபுரம். இவ் வேந்தருள் இறுதியில் ஆட்சி புரிந்தவனே முடத்திருமாறன் ஆவான். எனவே, இவன் கடைச் சங்கத்தின் இறுதியில் ஆட்சி புரிந்தான் எனக் கொள்ளலாம். இவனது காலத்திலும் பாண்டி நாட்டின் பெரும் பகுதி கடற்கோளுக்கு இரையாயிற்று. தலைநகராம் கபாடபுரமும் கடலுள் அமிழ்ந்தது. விலை மதிப்பிடவியலாத தமிழ் நூல்கள் பல அழிந்தன. இதனை,

> 'ஏரணம் உருவம் யோகம் இசைகணக் கிரதஞ் சாலந்
> தாரண மறமே சந்தந் தம்பநீர் நிலமு லோகம்
> மாரணம் பொருளென் றின்ன மான நூல் யாவும் வாரி
> வாரணங் கொண்ட தந்தோ வழிவழிப் பெயரு மாள'

என்னும் பழம் பாடலால் அறியலாம்.

இக் கடற்கோளின்போது தங்களைக் காப்பாற்றிக்கொண்ட பாண்டியன் முடத்திருமாறனும் பைந்தமிழ்ப் புலவர் சிலரும் சிறிது தொலைவு வடக்கே சென்று மணலூர் என்னும் நகரத்தில் தங்கினர். அங்குச் சிலகாலம் பாண்டியரது ஆட்சி நடை பெற்றது மகாபாரதத்தில் குறிக்கப்பெறுகின்ற பாண்டியர் தலைநகராம் மணலூர் இஃதே என்று கொள்ளலாம். பின்னர் முடத் திருமாறன் வையையாற்றங்கரையிலுள்ள மதுரையம் பதிக்குத் தனது தலைநகரை மாற்றி, வளப்படுத்தினன். பாண்டி நாட்டின்கண் நல்லாட்சி செலுத்திய இவ் வேந்தன் மதுரையில் கடைச் சங்கத்தையும் நிறுவினன், என்ற செய்தி இறையனர் அகப் பொருளுரையால் அறியக் கிடக்கின்றது.

**தமிழ்ப்பற்று :** இடைச் சங்கத்தினைப் போற்றிக் காத்த கடைசி பாண்டி மன்னனாகவும், கடைச் சங்கத்தினைப் பேணிக் காத்த பாண்டி மன்னர்களுள் முதல்வனாகவும் திகழ்ந்த முடத் திருமாறன் முத்தமிழைப் போற்றி வளர்த்தான்; பைந்தமிழ்ப் புலவர்களைப் போற்றிப் பாதுகாத்தான்; தமிழறிஞர்கள் தமிழ் ஆராய்ச்சியினை மேற்கொண்டு சத்தான செந்தமிழ் நூல்கள் பல

இயற்றிப் பேருதவி புரிந்தான். கண்ணும் ஆவியுமாகத் தமிழ் அன்னையைப் போற்றிப் பாதுகாத்த இக் காவலன் தமிழ்ப் பாவலனாகவும் விளங்கியமை ஈண்டு பாராட்டத் தக்கதாகும். எட்டுத்தொகை நூல்களுள் ஒன்றாகிய நற்றிணையில் இவன் இயற்றிய பாடல்கள் இரண்டு[1] இடம் பெற்றுள்ளன. இவை சொற்சுவையும் பொருட்சுவையும் மிக்கதாக விளங்குகின்றன. பாலைத் திணையையும் குறிஞ்சித் திணையையும் இன்சுவைப் பொருந்தப் பாடுவதில் இவன் வல்லவன். இவன் முடமாகப் பிறந்ததாலோ, போர்க்களத்தின்கண் முடமாக்கப்பட்டதாலோ முடத்திருமாறன் என அழைக்கப் பெற்றிருத்தல் வேண்டுமென்று கருத இடமுண்டு. மொழி காத்த இம் மன்னன் தமிழ் இலக்கிய வரலாற்றில் தக்கதோர் இடத்தைப் பெறுகிறான்.

**முடிவுரை**

இதுகாறும் கூறியவற்றால் முடத்திருமாறன் மூன்று பெருமைகளால் பெரும்புகழ் பெற்று விளங்குகிறான் என்பது புலனாகின்றது. அவை:

1. இடைச் சங்கம், கடைச்சங்கம் ஆகிய இரு சங்கங்களிலும் வீற்றிருந்து தமிழ் ஆய்ந்தது.

2. கடைச் சங்கத்தினை அமைத்துத் தமிழ் வளர வழி செய்தது.

3. தாமே சிறந்த செந்தமிழ்ப் புலவராய் விளங்கி தமிழ்ச் செய்யுட்கள் இயற்றியது என்பவையாகும்.

## பாண்டியன் மதிவாணன்

**இயற்றிய நூல்:** இம் மன்னன் தனது பெயருக்கேற்ப சிறந்த அறிவுடையோனாக விளங்கினான். செந்தமிழ்ப் புலமை மிக்க இவன் கவிதை புனையும் ஆற்றல் மிகப்பெற்று கவியரங்கேறினான் என்று நெஞ்சையள்ளும் சிலப்பதிகாரத்திற்கு உரை கண்ட அடியார்க்கு நல்லார் குறிப்பிடுகின்றார். கடைச் சங்கத்தைப் போற்றிப் புரந்த பாண்டி வேந்தர் ஐம்பத்தொன்

[1] முதற்பாடல் குட்டுவனது குடமலையினையும், ஆங்குள்ள மலர், சுனை, வண்டு ஆகியவற்றைப் போற்றுகின்றது.

'குட்டுவன் குடைவரைச் சுனைய மாயிதழ்க் குவளை
வண்டுபடு வான்போது கமழும்'-நற்றிணை. 105.

அடுத்த பாடல் மழை பொழியும்போது ஏற்படும் மின்னல், இடி, இருள் ஆகியனவற்றை விளக்குவதாக உள்ளது.

"மின்னு வசிபு
அதிர்குரல் எழிலி முதிர்க ன் தீரக்
கண் தூர்பு விரிந்த கனையிருள் நடுநாள்' - நற்றிணை. 228.

மருள் ஒருவனாவான் இவன் 'மதிவாணர் நாடகத் தமிழ் நூல்' என்னும் ஒப்பற்ற நூலை இயற்றிப் புகழ் பெற்றான். இந் நூல் அடியார்க்கு நல்லார் சிலப்பதிகாரத்திற்கு உரையெழுதுவதற்கு மேற்கோளாகப் பயன்பட்ட ஐந்து இசை நாடக நூல்களுள் ஒன்றாகும் என்பது போற்றுதற்குரியது. இசை நுணுக்கம், இந்திரகாளியம், பஞ்சமரபு, பரதசேனாபதியம் ஆகியவை அடியார்க்கு நல்லார் மேற்கோளாகப் பயன்படுத்திய மற்ற நான்கு நூல்களாகும்.

**நூலின் சிறப்பு :** 'மதிவாணர் நாடகத் தமிழ்நூல்' முதனூலிலுள்ள வசைக்கூத்திற்கு மறுதலையாகிய புகழ்க்கூத்தின் இலக்கணத்தைத் தெள்ளிதின் உணர்த்தும் உயரிய நூலாகுமென்று சிலப்பதிகார உரையாசிரியர் குறிப்பிட்டுள்ளார்.[1] இத் தகு சிறப்பு மிக்க இந் நாடகத் தமிழ்நூல் இன்று நமக்குக் கிடைக்கப் பெறவில்லையென்பது வருந்துதற்குரியது. இந் நூல் முழுமையும் கிடைக்கப் பெறாதிருப்பினுங்கூட, இவற்றின் ஒரு சில சூத்திரங்கள் சிலப்பதிகார உரையின் மேற்கோளாக எடுத்தாளப் பட்டிருத்தல் நமது மனக்குறையை ஒருவாறு போக்குகின்றது. இந் நூல் முழுமையும் நாற்பாவாலும்,வெண்பாவாலும் இயற்றப் பெற்றதாகக் கூறப்படுகின்றது. இவ் வேந்தனைப்பற்றிய பிற செய்திகள் எதுவும் நமக்குக் கிடைக்கப் பெறவில்லை.

**கவியரங்கேறியவன் :** முடத்திருமாறன் முதலாக உக்கிரப் பெருவழுதி ஈறாக கடைச்சங்கத்தைப் புரந்த வேந்தருள் ஒருவனான மதிவாணன், கவியரங்கேறிய பாண்டியர் மூவருள் ஒருவனுவான். மாநிலம் ஆண்டு பெற்ற புகழினும், முத்தமிழ் விரவிய பெருநூல் ஒன்றினை இயற்றி, அதனால் ஈட்டிய இறவாப் புகழே பெரிதாம். புலவனாகவும், புரவலனாகவும் மிளிர்ந்த மதிவாணன், கலைவாணனாகவும் போற்றப் பெறுகிறான்.

## கருங்கை ஒள்வாட் பெரும்பெயர் வழுதி

### பெயர்க் காரணம்

இவ் வேந்தனது இயற்பெயர் இன்னதென்று தெரிந்திலது. கருங்கையென்பது வலிமையுடைய கையென்றும், ஒள்வாள் என்பது ஒளிபொருந்திய வாள் என்றும் பொருள்படும் எனவே, இவன் வலிமை பொருந்திய கையில் வாளேந்திய பெரும் புகழுடைய பாண்டியனென்பது இவனது பெயரால் பெறப்படுகின்றது. வீரமும், கொடைத் தன்மையும் ஒருங்கமையப் பெற்ற

1 சிலப்பு-உரைச் சிறப்புப் பாயிரம்-அடியார்க்கு நல்லார் உரை.

இவன் கரிகாறசோழனின் சமகாலத்தவன். கரிகாற் பெருவளத்தானின் மாமனை இரும்பிடர்த்தலையார் என்னும் புலவர் பெருமானுற் பாடப்பெறும் பெருமையுடையவன். இவனது குடிப்பிறப்பின் சிறப்பு, மனைவின் மாண்பு வீரம், குறிப்பறிந்து கொடுக்கும் கொடைப்பண்பு ஆகியவற்றினை இரும்பிடர்த்தலையார் புகழ்ந்து பேசுகின்றார். புறநானூற்றின் மூன்றுவது பாடல் இவனது சிறப்பினைப் பரக்கப் பேசுகின்றது.

**உடன் காலத்தவர்**

வரலாற்றுச் சான்றுகளைத் தந்துதவும் புறநானூற்றினை அடிப்படையாகக் கொண்டு பார்த்தால் இவனே பாண்டிய அரசர்களுள் முன்னவன் ஆவான். ஏனெனில், இவனே பெருஞ்சோற்று உதியன் சேரலாதன் என்னும் சேர அரசனின் காலத்தில் வாழ்ந்தவன் ஆவான். இவர்களது உடன் காலத்தினனாகச் சோழநாட்டினை ஆண்டு வந்தவன் உருவப்பஃதேர் இளஞ்சேட்சியென்பவன் ஆவான்.

**பாடிய புலவர்**

இரும்பிடர்த்தலையார் மட்டுமே இவனை நேர்முகமாகப் பாடியுள்ளார். வேறு புலவர்கள் இவனைக் குறித்துப் பாடல்கள் ஏதும் பாடவில்லை. பொறையன் (சேர) மரபினைச் சேர்ந்த கருவூரேறிய ஒள்வாட் கோப்பெருஞ்சேரலிரும்பொறையும் முதல் தலைமுறையினனாக இம் மூவருடன் வைத்து எண்ணப்படுகிறான்.

## பொற்கைப் பாண்டியன்

**நீதிக்கோர் எடுத்துக்காட்டு**

கடைச்சங்க காலத்தில் பாண்டி நாட்டையாண்ட வேந்தர்களுள் இவனும் ஒருவனாவான். இவன் செங்கோல் வழுவாது அரசோச்சி, 'சட்டத்தின் முன் யாவரும் சமம்' எனும் பொன்னுன கருத்தினை நிலைநாட்டி, நீதிக்கோர் எடுத்துக் காட்டாகத் திகழ்ந்தான். தான் செய்த குற்றத்திற்காகத் தன் கையினையே வெட்டிக்கொண்டு முறைசெய்த இம் மன்னன் நீதியின் ஊற்றாக விளங்கினன் என்பது பாராட்டத்தக்கது.

**சான்றுகள்:** இப்பாண்டியன் பொற்கை பெற்ற வரலாற்றினை சிலப்பதிகாரம்,[1] பழமொழியாகிய இரு நூல்களும் எடுத்தியம்பு

1 'வச்சிரத் தடக்கை அமரர் கோமான்
உச்சிப் பொன்முடி ஒளிவளை உடைத்தகை
குறைத்த செங்கோல் குறையாக் கொற்றத்து
இறைக் குடிப்பிறந்தோர்'—சிலப்பதிகாரம்-23: 42-13-16.

இன்றன. கணவனையிழந்த கண்ணகியின் முன் தோன்றிய மதுரை மா தெய்வம், பாண்டியரது செங்கோல் சிறப்பை எடுத்துரைத்தபோது பொற்கைப் பாண்டியன்பற்றிய செய்தியையும் கூறிற்று என்று இளங்கோவடிகள் கூடியுள்ளார்.

பொற்கைப் பாண்டியனென்பது இவ் வேந்தனது காரணப் பெயராகும். இவனது இயற்பெயர் யாதென்பது விளங்கவில்லை. யாது காரணம்பற்றி இவன் பொற்கைப் பாண்டியனென்னும் பெயர் பெற்றனனென்பதனை ஈண்டு நாம் காண்போம்.

**பெயர்பெற்ற வரலாறு:** இவ் வேந்தன் மதுரை மாநகரின்கண் சீரிய முறையில் செங்கோல் செலுத்தி வரும்போது, ஆங்கு கீரந்தை எனப் பெயர் கொண்ட அந்தணன் ஒருவன் வாழ்ந்து வந்தான். வறுமையில் வாடிய இவன் தனது மனைவியை இல்லத்திலேயே விட்டுவிட்டு, வெளியூர் சென்று பொருள் தேடி, தனது வாழ்வினை வளமாக்கிக் கொள்ள முடிவெடுத்தான். கணவனது கருத்தறிந்த காரிகையோ அவனைப் பிரிந்து தனித்து வாழப் பெரிதும் அஞ்சினாள். மனைவியது வாட்டத்தைப் போக்கவும், அச்சத்தை ஓட்டவும் முற்பட்ட அவன் தனது மனைவிக்கு ஆறுதலும் கூறினான். நாட்டு மக்களின் நலம்பேணி மக்களைக் காத்தருளும் பாண்டிய வேந்தனின் காவல் சிறந்ததென்றும், அவனது காவலுக்கு முன் ஏனைய காவல் சிறிதும் பயனற்றதென்றும், நாட்டு மக்களின் நலனே தன்னலனெனக் கொண்டு அவன் மக்களைக் காத்து வருதலின் அவள் சிறிதும் கலங்காது கவலையற்றிருக்கவும் அறிவுரை கூறி வீட்டினின்றும் புறப்பட்டுச் சென்றான்.

**நகர்வலம் வருதல் :** நள்ளிரவில் நகர்க் காவல் புரிந்துவந்த மன்னன், கணவன் - மனைவிக்கிடையே நடைபெற்ற இவ் வுரையாடலைக் கேள்விப்பட்டான். அன்று முதல் நாடோறும் நகர்க் காவல் செய்ய வரும்போது கீரந்தையின் மனைவிக்கு எவ்வித தீங்கும் நிகழாவண்ணம் பாதுகாத்து வந்தான். அரசன் அன்றாடம் தன் வீட்டுப் பக்கம் வந்து செல்லும் செயல் அவளுக்குத் தெரியாது.

நாட்கள் பல சென்றபின், பொருளீட்டச் சென்றிருந்த கீரந்தை தன் வீடு திரும்பினான். அன்றிரவு தன் மனையாளுடன் உரையாடிக் கொண்டிருந்தான். இவன் வீடு திரும்பிய செய்தி மன்னனுக்குத் தெரியாது. நள்ளிரவில் நகர்க் காவல் புரிய வந்த வேந்தன், வழக்கம்போல் கீரந்தையின் வீட்டின் பக்கம் சென்றபோது அவனது வீட்டில் ஆண் குரலோசை கேட்ப

தைக் கண்டான். வேந்தனுக்கு அக் குரல் கீரந்தையினுடையதா அல்லது வேறு ஒருவனுடையதா என்ற ஐயம் ஏற்பட்டது. உடனே ஐயந்தீர்தற் பொருட்டு அவ் வீட்டின் வாசற் கதவைத் தட்டினான். அவ் வோசையைக்கேட்ட அந்தணன் தனது வீட்டு கதவினைத் தட்டியவன் யாவனெனச் சினங் கொண்டெழுந்தான். தானில்லாதபோது, எவனோ ஒருவன் தனது வீட்டிற்கு வந்து செல்லும் வழக்கமுண்டு போலும் என ஐயுற்றான் அந்தணன். கணவன் கருத்தறிந்த காரிகை பெரிதும் வருந்தினாள். தான் தனது கணவனுக்கு நேர்மையாக நடந்து கொண்டு வந்ததனை எவ்வாறு எடுத்துக்காட்டுவதெனத் தவித்தாள். 'அந்தோ அன்றொரு நாள், மன்னனது செங்கோல் என்னைக் காக்குமென்று கூறிச் சென்றீரே! இன்று அச் செங்கோல் காவாதோ?' எனக் கூறிக் கதறினாள். மனைவியின் மாசற்ற சொற்கேட்டு உணர்வு பெற்ற கணவனும் ஒருவாறு ஐயம் நீங்கினான்.

கீரந்தையின் வீட்டில் நடந்த உரையாடலைக் கதவருகில் கேட்டுக்கொண்டு நின்ற பாண்டியன் தன் செயலுக்குப் பெரிதும் வருந்தினான். உடனே விரைந்து சென்று அத் தெருவிலுள்ள எல்லா வீடுகளின் கதவுகளையும் தட்டி விட்டு, ஒருவர் கண்ணுக்கும் புலப்படாமல் தன் அரண்மனை புகுந்தான்.

**கையை வெட்டிக் கொள்ளல்:** மறுநாட் காலையில் கீரந்தையின் தெருவிலுள்ளோர் அனைவரும் கூடினர். நேற்றிரவு எவனோ ஒருவன் தங்களது வீடுகளின் கதவினைத் தட்டிச் சென்றானென்றும் அக் கள்வனைக் கண்டுபிடித்து, தக்க தண்டனை வழங்க வேண்டுமென்றும் மன்னனை வேண்டினர். கீரந்தை மனைவிக்குண்டாகிய பழி ஒருவாறு நீங்கப் பெற்றமை கண்டு மகிழ்ந்த வேந்தனுக்கு, தனது செயலால் நாட்டு மக்களுக்குண்டாகிய அச்சத்தினைக் கண்டு பெரிதும் வருந்தினான். நீதியின் இருப்பிடமாய்த் திகழ்ந்த பாண்டியன் அமைச்சரையழைத்தான்; 'இக் குற்றம் புரிந்தார்க்குக் கொடுக்க வேண்டிய தண்டனை யாது?' என்று வினவினான். 'அத் தீமை செய்தாரின் கரத்தினை வெட்டியெறிதலே அதற்குத் தக்க தண்டனையாகுமென்று' அமைச்சன் விடையளித்தான். உடனே பாண்டியன் தன் உடைவாளை உருவியெடுத்தான்; கதவைத் தட்டிய தனது கரத்தினை வெட்டி வீழ்த்தினான். இச் செயல் கண்டு ஆங்கு கூடியிருந்தோர் அனைவரும் துடித்தனர்; கண்ணீர் வடித்தனர்; பாண்டியனது நீதி வழுவா நெறிமுறையினை யெண்ணியெண்ணி வியந்தனர். கரமிழந்த பாண்டியன் பின்பு பொற்கையொன்று செய்து பொருத்திக் கொண்டான். இதன் காரணமாக இவன் பொற்கைப் பாண்டியனென்றும் பெயர் பெற்றான்.

**சிலம்பு கூறுவது :** பழமொழி, சிலப்பதிகாரம் ஆகிய நூல்களேயன்றி தொல்காப்பிய உரையும் பொற்கைப் பாண்டியனது வரலாற்றினை நமக்கு எடுத்தியம்புகின்றது. தொல்காப்பியத்திற்கு உரைகண்ட உரையாசிரியராம் இளம்பூரணர், களவியல் முதல் சூத்திரத்தில் காட்டியுள்ள பின்வரும் மேற்கோள் செய்யுளும் இவ் வரலாற்றினை நமக்கு உணர்த்துகின்றது.

'புகழ் நடுதல் வேண்டித் தன்
ஆடுமழைத் தடக்கை அறுத்து முறைசெய்த
பொற்கை நறுந்தார்ப் புனைதேர்ப் பாண்டியன்
கொற்கையம் பெருந்துறை'

மேற்கூறப்பட்ட வரலாற்றினை நாம் முழுமையாக ஏற்றுக் கொள்ளத்தக்க வேறு சான்றுகள் கிடைத்தில. இப் பாண்டி வேந்தனது காலத்தில் வாழ்ந்து வந்த புலவர் பெருமக்கள் இவனது அருஞ்செயலைப் புகழ்ந்து பாடவில்லை. குறிப்பிடத் தக்க இச் செயலைப் புகழ்ந்து பாடாததன் காரணம் யாதெனவும் புலப்படவில்லை. இப் பாண்டியனது காலத்தில் புலவர்கள் எவரும் இல்லையென்று சொல்லுவதும் முறையன்று. இவ் வரலாற்றினைக் கூர்ந்து நோக்குங்கால் இது ஒரு புராண வரலாறோ என்று சிலர் எண்ணவும் தோன்றும். மேலும், இவன் தனது கையினை வெட்டிக் கொண்ட பின்பு, பொற்கையொன்று தானாகவே வளர்ந்ததென்று கூறப்படுவது பகுத்தறிவுக்கு ஒவ்வாததாகும்.

**நெடுஞ்செழியனின் முன்னோன் :** இவன் கடைச் சங்க காலத்தில் வாழ்ந்த முடத்திருமாறன், மதிவாணன் ஆகியோருக்குப் பிற்பட்டவனும், ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியனுக்கு முற்பட்டவனுமென்று உணரலாம். ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியனால் கொலை செய்யப்பட்ட கோவலனின் மணவியாம் கண்ணகி மதுரை மாநகரினை எரியூட்ட முற்படுங்கால், மதுராபதித் தெய்வம் அவள் முன் தோன்றி பாண்டியரது செங்கோற் சிறப்பினை எடுத்தோதியபோது, பொற்கைப் பாண்டியனது வரலாறும் கூறப்படுதலின், இவன் நெடுஞ்செழியனுக்கு முற்பட்டவன் என்பது உறுதி பெறுகிறது.

**முடிவுரை :** நீதியின் ஊற்றாகவே விளங்கித் தன் கையையே வெட்டிக் கொண்ட இப் பாண்டியன், தூய மதப் பற்றால் தூண்டப்பெற்று, எரியும் தீயில் தனது கையை நீட்டிக் கருக்கிய ரிட்லி (Ridley) என்னும் மத வீரனுடன் ஒப்பிடத் தகுந்த

வனுவான். மனுநீதிச் சோழனின் நீதிவழுவா நெறி முறையும் ஈண்டு நினைவுகொள்ளத் தக்கதாகும்.

## கடலுள் மாய்ந்த இளம் பெருவழுதி

### பெயர்க் காரணம்

கடைச்சங்க காலத்தில் வாழ்ந்த பாண்டி வேந்தருள் இவனும் ஒருவனுவான். இவனது இயற்பெயர் இளம்பெருவழுதி என்பதாகும். பாண்டி வேந்தருள் பெருவழுதியென்னும் பெயருடையார் பலரிருந்தனர். உக்கிரப் பெருவழுதி, கருங்கை ஒள்வாள் பெரும் பெயர் வழுதி, வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி, முதுகுடுமிப் பெருவழுதி ஆகியோர் அவர்களுள் குறிப்பிடத்தக்கவர் ஆவர். அவர்களுள் இப் பாண்டியன், தனது இளமைக் காலத்தே, ஆன்றவிந்து அடங்கிய சான்றோர் களிடத்துக் காணத்தக்க அருங்குணங்களனைத்தும் சிறக்கப் பெற்றிருந்தமையால் அக் காலப் பெருமக்கள் இவனை இளம்பெருவழுதி எனச் சிறப்பித்துக் கூறுனர்.

கடைச் சங்க காலத்திற்கு முன்பே, பண்டைத் தமிழர் கடலில் கலஞ்செலுத்தும் கலையில் நல்ல தேர்ச்சியும் உயர்ச்சியும் பெற்று விளங்கினர். கரிகாற் பெருவளத்தான், செங்குட்டுவன், இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் போன்ற தமிழ் வேந்தர்கள் இத் துறையில் குறிப்பிடத்தக்க தேர்ச்சி பெற்றிருந்தனர். பாண்டி நாட்டு மக்களும் பண்டைக் காலத்தில் கடலில் கலஞ் செலுத்தி மீன் பிடித்தலையும், முத்துக் குளித்தலையும், அயல் நாடு சென்று வாணிகஞ் செய்தலையும் தொழிலாகக் கொண்டிருந்தனர். அக் காலப் பாண்டி வேந்தர்களும் அவற்றிற்குப் பேராதரவு நல்கினர். நம் இளம் பெருவழுதியும் வாணிகத்தின் பொருட்டோ கடலில் கலஞ் செலுத்திப் போர் குறித்துச் சென்ற காரணத்தாலோ, வேறு பிற காரணத்தாலோ கடலில் பயணஞ் செய்த காலை அங்கே மூழ்கி இறந்த காரணத்தால், பிற்காலச் சான்றோர் அவனைக் 'கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி' என அழைக்கலாயினர். இதனுல் இவன் கடலுள் துஞ்சினனென்பது தெளிவாகிறது.

### பாடிய பாடல்கள்

இவன் பாடியனவாகப் புறநானூற்றிலோர் செய்யுளும்[1] பரிபாடலில் ஓர் செய்யுளும்[2] இடம் பெறுகின்றன. நற்றிணை

1 புறநானூறு–182.
2 பரிபாடல்–15.

யிலும்[1] இவன் பாடியனவாக இரண்டு செய்யுட்கள் காணப்படு கின்றன. இப் பெருவழுதி கடலுள் மாய்ந்த இளம் பெரு வழுதியேயென நற்றிணைக்கு உரைகண்ட பின்னத்தூர் நாராயண சாமி ஐயரவர்களும் கூறுகின்றார். எனவே, இவன் நான்கு செய்யுட்கள் யாத்துள்ளான் என்பதும், செந்தமிழ்ப் புலமையிற் சிறந்து விளங்கிய செங்கோல் வேந்தனென்பதும் இனிது விளங்குகின்றன. இவனது செய்யுளைக் கொண்டு இவன் வைணவ சமயத்தின்கண் பெரிதும் ஈடுபாடு கொண்டவனென் பதும் தெளிவாகிறது.

**திருமாலைப் பாடினன் :** இவ் வேந்தன் இயற்றிய நற்றிணைச் செய்யுட்களால் அவனுடைய நல்லிசைப் புலமையும், அறிவின் நுட்பமும் நன்கு புலப்படுகின்றன. பரிபாடலில் இவன் இயற்றி யுள்ள பாடலைக் கொண்டு இவ் வேந்தன் திருமாலிருஞ் சோலை மலையில் எழுந்தருளியுள்ள திருமாலிடம் கொண்டிருந்த அளவு கடந்த அன்பினை ஒருவாறு அறியலாம். திருமாலிருஞ் சோலை மலையின் கவின்மிகு காட்சியும், இவனது கை வண்ணத்தால் நன்கு சித்திரிக்கப்பட்டுள்ளது. ஆங்கெழுந்தருளியிருக்கும் திருமால், கண்ணபிரானும் பலதேவனும் ஆகிய இருவேறு வடிவங் கொண்டு சொல்லும் பொருளும் போல ஒன்றுபட்டு வீற்றிருக்கும் காட்சியும் அழகின் ஆட்சியும், இளம் பெருவழுதி யின் புலமை மாட்சியினை நன்கு வெளிப்படுத்துகின்றது.

இக் கவின்மிகு காட்சியினைத் தான் கண்டு களித்ததுடன் நில்லாது, தான் பெற்ற இன்பமும் இவ் வுலக மக்களும் பெற வேண்டுமென்ற பரந்த நோக்கங் கொண்டு உலக மக்களை நோக்கி 'நறுமணங் கமழும் துளாப மாலையினை அணிந்த திருமால் அளித்தால் அல்லது துறக்க இன்பம் பெற இயலாது. ஆதலால் நீவிர் மனைவி மக்களோடும், தாய் தந்தையரோடும், அன்புடைச் சுற்றத்தினரோடும் சூழப் போந்து அப் பெருமான் எழுந்தருளி யுள்ள சோலை மலையினை வணங்கி வழிபாடு செய்வீர்' என்று அன்பொழுக அழைக்கின்றார். உலக மக்களையழைத்து திருமாலை வணங்கச் சொல்வதுடன், தானும் அக் குன்றத்தினடியிலேயே வாழ விரும்புவதாகவும் கூறியுள்ளார்.

**தமிழர் பண்பாட்டினை பறைசாற்றும் பாடல்**

புறநானூற்றில் இவன் யாத்துள்ள பொருண்மொழிக் காஞ்சி இவனது பரந்த மனப்பான்மையினையும், விரிந்த அறி வினையும் எடுத்துக் காட்டுகின்றது. பழிக்கு அஞ்சுவதும்,

1 நற்றிணை—56.

புகழ் பெற விழைவதும், தன்னலங் கருதாது பிறர் நலம் பேணி உழைப்பதும், அஞ்சுவதற்கஞ்சுவதும் ஆகிய நற்பண்புகளை மனிதன் பின்பற்ற வேண்டுமென்று வற்புறுத்தி வாழ்க்கைச் சட்டம் வகுக்கிறான் இக் காவலன். இப் பாடலில் இளம் பெருவழுதி சிறந்த தமிழ்ப் பண்பாடுகளையெல்லாம் தொகுத்துக் கூறி, அத்தகைய நற்பண்பு வாய்க்கப் பெற்றவர்களால்தான் உலகம் நின்று நிலவுகின்றதாகக் கூறி,

'பண்புடையார் பட்டுண்டு உலகம் அஃதின்றேல்
மண்புக்கு மாய்வது மன்'

என்னும் குறள் மொழியை நமக்கு நினைவுறுத்துகின்றார். இத்துணைச் சிறப்பு மிக்க கருத்துகளை நமக்குக் கூறும் அவனது பாடலைக் கீழே காண்போம்.

'உண்டா லம்ம! இவ்வுலகம்; இந்திரர்
அமிழ்தம் இயைவதாயினும், இனிதெனத்
தமியர் உண்டலும் இலரே; முனிவிலர்;
துஞ்சலும் இலர்; பிறர் அஞ்சுவது அஞ்சிப்
புகழ் எனின் உயிரும் கொடுக்குவர்; பழி எனின்
உலகுடன் பெறினும் கொள்ளலர்; அயர்விலர்
அன்ன மாட்சி அனைய ராகித்
தமக்கு என முயலா நோன்தாள்
பிறர்க்கு என முயலுநர் உண்மை யானே'[1]

**முடிவுரை**

இதுகாறும் கூறியவற்றான் இளம் பெருவழுதி ஒரு சான்றோர்-அருந்தமிழ்ப் புலவர் - அரிய சிந்தனையாளர் - பண்பாளர் - திருமாலை வழிபடும் தெய்வக் கொள்கையினர் என்பதனையறியலாம்.

## பாண்டியன் அறிவுடை நம்பி

**தமிழ்ப் புலமை**

பாண்டியர் குடியில் தோன்றிய இவ் வேந்தன் கல்வி கேள்விகளில் சிறந்து விளங்கியதோடு பெருஞ்செல்வம் உடையவனாகவும் விளங்கினான். இவன் தான் பெற்ற செல்வத்தைத் தான் மட்டும் துய்த்து மகிழாது, பிறர்க்கும் வாரி வழங்கும் கொடை வள்ளலாக வாழ்ந்தவன். பெயருக்கேற்ப பேரறிவுடையோனாகத் திகழ்ந்த இவ் வேந்தன் தாய்த்தமிழை உயிருக்கு நிகரெனப்

1 புறநானூறு—182.

போற்றி வளர்த்ததோடு, தலைசிறந்த கவிஞனாகவும் திகழ்ந்தான். இவன் இயற்றிய பாடல்கள் நற்றிணையில் ஒன்றும், குறுந்தொகையில் ஒன்றும், அகநானூற்றில் ஒன்றும், புறநானூற்றில் ஒன்றும் இடம் பெற்றுள்ளன. நற்றிணையிலுள்ள பதினைந்தாம் பாடலும், குறுந்தொகையிலுள்ள இருநூற்று முப்பதாம் பாடலும், அகநானூற்றிலுள்ள இருபத்தெட்டாம் பாடலும், புறநானூற்றிலுள்ள நூற்றியெண்பத்தெட்டாம் பாடலும் இவ் வேந்தனியற்றியதாகும்.

**புலவரின் நண்பன் :** இவ் வேந்தன் சோணாட்டினை யாண்டு வந்த கோப்பெருஞ் சோழனின் சம காலத்தவனென்பது பிசிராந்தையார் என்னும் புலவர் பெருமான் அறிவுடைநம்பியின் மீதுப் பொருண்மொழிக் காஞ்சி பாடியுள்ளதால் அறியப்படுகின்றது. பிசிராந்தையார் பாண்டி நாட்டுச் சான்றோருள் தலைசிறந்தவரென்பதும், கோப்பெருஞ் சோழனின் கெழுதகை நண்பரென்பதும் யாவருமறிந்த உண்மையாகும். பண்டைக் காலப் புலவர்கள் மன்னர் தவறு செய்யுங்கால் அதனை இடித்துக் கூறி நல்வழியில் செலுத்தும் அஞ்சாமையும் அறிவாற்றலும் கொண்டிருந்தனர்.

**புலவரின் அறிவுரை :** நம் அறிவுடைநம்பி சில காலம் மக்களது ஏழ்மை நிலையறியாது, குடிமக்களிடம் பெரும் பொருளை வரியாகப் பெற்று வந்தான். மன்னனைச் சூழ்ந்த அமைச்சர் முதலான அரசியல் அதிகாரிகளும் அவனை இடித்துரைத்து நன்னெறிப் படுத்தும் முயற்சியில் ஈடுபட்டாரில்லை. வரி கொடா மக்கள்மீது நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டது. வரிச் சுமைதாங்கவொண்ணாது அல்லற்பட்ட குடிமக்கள் தனது துன்பத்தினை மன்னனிடத்துக் கூறும் துணிவைப் பெற்றிலர். இதனைக் கேள்விப்பட்ட பிசிராந்தையார் பாண்டிநாட்டு மக்கள் மீது கொண்ட அன்பாலும் பாண்டிவேந்தனை நல்வழிப்படுத்தும் எண்ணத்தாலும் வேந்தனைக் காணச் சென்றார். அறிவுடை நம்பியும் அறிவிற் சிறந்த சான்றோராம் ஆந்தையாரை இன்முகங் காட்டி வரவேற்று, இன்சொல் பேசி அளவளாவிக் கொண்டிருந்தார். அதுபோழ்து ஆந்தையார் வேந்தனிடம் நெறியல்லா நெறியில் வரிவசூல் செய்யப்படுவதன் கொடுமையினை அழகிய உவமை வாயிலாக எடுத்துக்காட்டி நல்வழிப்படுத்தினர். பிசிராந்தையாரது இப் பாடல் புறநானூற்றின்கண்[1] இடம் பெற்றுள்ளது.

1 Ibid–184.

**மன்னனின் மனமாற்றம்:** ஆந்தையாரின் அறிவுரையைச் செவிமடுத்த பாண்டிவேந்தனும் மனந்திருந்தினன்; மயக்கந் தெளிந்தான். தன் குறைபாட்டினையுணர்ந்து மக்கள் நலனைத் தன்னலனெனக் கொண்டு அறிவுடை வேந்தனாய் மாறினன். நெறியறிந்து வரி வாங்கும் அறிவுடை வேந்தனாகத் திகழ்ந்த இவன் மக்களது நம்பிக்கையினைப் பெற்றான்; புலவர் பெருமக்களது பாராட்டுக்கும் இலக்கானான்.

ஆடவரிற் சிறந்தவனை நம்பியென அழைத்தலும், பெண்டிரிற் சிறந்தவளை நங்கையென நவில்தலும் நம் பண்டைய மரபாகும். எனவே, இவ் வேந்தன் ஆடவரிற் சிறந்து விளங்கும் பெருமையும் அறிவுத் திறனும் ஒருங்கே பெற்றிருந்தமையின் அறிவுடைநம்பியென வழங்கப் பெற்றனனெனலாம்.

அறிவுடைநம்பியின் அருந்தமிழ்ப் பாடல்கள் நான்கினைக் கொண்டு, தமிழரின் வாழ்க்கை முறையினையும் பண்பாட்டு நிறைவினையும் அறிந்து கொள்ள முடிகின்றது. கொஞ்சுமொழி பேசும் பிஞ்சுள்ளம் கொண்ட குழந்தையின் சிறப்பினைப் பேசும் இவ் வேந்தனது பாடல் ஒன்றினை ஈண்டு நாம் காண்போம்; களி கொள்வோம்.

'படைப்புப் பலபடைத்துப் பலரோடு உண்ணும்
உடைப் பெருஞ் செல்வராயினும் இடைப்படக்
குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
இட்டும் தொட்டும் கவ்வியும் துழந்தும்
நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்த்தும்
மயக்குறு மக்களை இல்லோர்க்குப்
பயக்குறை இல்லைத் தாம்வாழும் நாளே.'[1]

இவன் நான்காம் தலைமுறையைச் சேர்ந்த கோப்பெருஞ் சோழன், சேரமான் குட்டுவன் கோதை ஆகியோரது சமகாலத்தினனாவான். இப் பைந்தமிழ்ப் புலவர் இச் செந்தமிழ் வேந்தனது வெற்றிச் சிறப்பினைச் சிறப்பித்துப் பாடியிருப்பதோடு இவன் அறக்கள வேள்வியுடன் மறக்கள வேள்வியுமாகிய இருவகை வேள்விகளையும் இயற்றினன் எனக் கூறுகின்றார்.

**மறக்கள வேள்வியின் மாண்பு:** மறக்கள வேள்வியின் சிறப்பினை இவர் எவ்வாறு வேந்தனுக்குணர்த்தினரென்பதனை ஈண்டு காண்போம். 'நெற்கதிரை அறுத்துக் களத்திற் குவித்து

1 Ibid—188.

வைகோற் போரை அழித்துப் பிணையடித்தலைச் செய்து இறுதியாகக் கிடைத்த நெல்மணிகளைச் சுற்றத்தாரோடு உண்டு களிப்பதற்கு முன்பாகக் கடவுளர்க்குப் படைத்துப் பரிசிலர்க்கு அவரவர் தகுதிக்கேற்ப வழங்குவர். இதனைப் போன்று மறக்களவேள்வியில் போர்க்களத்தின்கண் வேந்தன் மாற்றாரது காற்படைகளையும் கொன்று களத்திற் குவிக்கிறான். பின்னர் யானைகளை எருதுகளாகக் கொண்டு பிணக்குவியல்களின் மீது செலுத்திப் பிணையடித்துக் கலக்கி, அவ்வாறு கலக்கிய தாலுண்டான நிணச் சேற்றை உதிரமாகிய உலையில் ஏற்றுகின்றான். அதன் பின்னர் ஈனு வேண்மான் அதனை இடமாகத் துழாவிச் சமைப்பாள். அவ்வாறு சமைக்கப் பெற்ற கூழ்ப் பலியைக் களப்பலியாக மன்னன் வழங்குவான். பின்பு கொன்றொழித்தன போக எஞ்சிய யானை குதிரைகளையும், மற்றும் பிற கொள்ளைப் பொருள்களையும் பரிசிலர்க்கு வரிசைப்படி வழங்குவான்.

**முடிவுரை :** எண்ணிறந்த புலவர் பெருமக்களால் பாராட்டப் பெறும் இவ் வேந்தன் சங்ககாலப் பாண்டிய வேந்தருள் தலைசிறந்த வீரனாகவும் வேந்தனாகவும் பாராட்டப் பெறுகிறானென்பது மகிழ்ச்சிக்குரியதொன்றாகும்.

## ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன்

### ஒல்லையூர் அமைவிடம்

செந்தமிழ்ப் புலமையிற் சிறந்து விளங்கிய பாண்டி வேந்தருள் ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியனும் ஒருவனாவன். பண்டைக் காலத்தில் பாண்டிய நாட்டின் வடவெல்லைப் பகுதிகளுள் விளங்கிய நாடுகளுள் ஒல்லையூர் நாடு தலைசிறந்ததாகும். புதுக்கோட்டை மாவட்டத்தின்கண்ணுள்ள ஒலியமங்கலம் என்னும் ஊரே பண்டு ஒல்லையூரென அழைக்கப்பட்டது. இந்த ஒல்லையூரும் அதனைச் சார்ந்த நாடும் ஒல்லையூரெனவே கூறப்படுகிறது. இது மலையரண், காட்டரண், நிலவரண் ஆகிய நால்வகை அரண்களாலும் சூழப்பட்டிருந்தது.

பாண்டியருக்குரிய அப் பகுதியினை ஒருகால் சோழர் கைப்பற்றிக் கொண்டனர். இதனைக் கேள்வியுற்ற பாண்டி வேந்தனை பூதப்பாண்டியன் பெரும் படை திரட்டினான். சோழரைத் தாக்கினான். பாண்டியப் படையின் தாக்குதலுக்கு எதிர் நிற்க மாட்டாது, சோழப்படை நிலை குலைந்து ஓடிற்று. ஒல்லையூர் மீண்டும் பாண்டியர் வசமாயிற்று. இவ்வாறு ஒல்லையூரைச் சோழர்களிடமிருந்து மீட்டுப் பாண்டியருக்கேற்பட்ட பழியினைத்

துடைத்த மாவீரனும் பூதப்பாண்டியனை ஒல்லையூர் தந்த பூதப் பாண்டியனென்று பாண்டி நாட்டு மக்கள் அழைத்தனர்.

**கவிஞன் :** போர்க்களத்தில் பெருவீரம் காட்டிப் போர் செய்த இவன், ஒப்புயர்வற்ற புலவனாகவும் விளங்கினான். செந் தமிழ்ப் புலமைமிக்க இவ் வேந்தன் இயற்றிய தெள்ளு தமிழ்ப் பாடல்கள், அகநானூற்றிலும் புறநானூற்றிலும் இடம் பெற்றுள்ளன. ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன், கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி, அறிவுடைநம்பி, தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் போன்ற சங்கம் வைத்துத் தமிழ் வளர்த்த பாண்டி வேந்தரது படைவரிசையில் பூதப்பாண்டியனும் ஒருவனாக வைத்தெண்ணப்படும் பெருமைக் குரியவனாவான்.

**சான்றோரின் நண்பன் :** அறிவும் ஆற்றலும் நிரம்பப் பெற்ற இவன் பல அறிவிற் சிறந்த சான்றோர்களைத் தனது நண்பர் களாகப் பெ ற்றிருந்தான். அவர்களுள் திதியன் என்பான் குறிப் பிடத்தக்கவனாவான். பொதிய மலையினைச் சார்ந்த நாட்டினுக்குத் தலைவனான இவன் இசையில் வல்லவனாகவும் இனிய இசைக் கருவிகளை வாசிப்பதில் சிறந்தவனாகவும் போர்க்கலையில் இணை யற்றவனாகவும் விளங்கினான். திதியன் தனக்குக் கீழ் ஆட்சி புரியும் சிற்றரசனாக இருப்பினும் அவனது அருமை பெருமை யினைக் கண்டு அவன்மீது அளவற்ற அன்பு செலுத்தினான். இத் திதியனை யல்லாமல் பாண்டிய நாட்டு மையல் என்னும் ஊரினனாகிய மாவன், எயில் என்னும் ஊரினனாகிய ஆந்தை, அந்துவஞ்சாத்தன், அழிசி, ஆதன், இயக்கன் முத லாகிய இவ் வைவரும் பூதப்பாண்டியனுடைய சிறந்த நண்பர் களாவர்.

**நன்னெறி பரப்புதல் :** இப் பாண்டியன், மன்னருக்கு வெற்றியை விளைவிப்பது வேலன்று; வளையாத செங்கோலே என்பதனை நன்குணர்ந்திருந்தான். தன் நாட்டில் சிறிதும் நெறி முறை பிறழாது நல்லாட்சி நடாத்த வேண்டுமென்பதில் கண்ணுங் கருத்துமாயிருந்தனன். அதன் பயனாக அறங்கூற வையத்தினைத் தன் அரசியலில் தோற்றுவித்து அதனைப் பெரிதும் ஆர்வத்துடன் போற்றி வந்தான். இவ் வகை செவ்வனே செயல் புரிதற் பொருட்டுக் கல்வி, அறிவு ஒழுக்கங்களிற் மேம்பட்டவரும் காட்சி, கருத்து, நூல் என்ற மூன்று வகையாலும் வழக்கினை நுண்ணிதின் உணர வல்லவருமாகிய சான்றோரை அமர்த்தி நன்னெறியை நாட்டில் நிலைநாட்டி வந்தான்.

**போர்ச் செயல்கள் :** பூதப் பாண்டியனது நீதிநெறிபிறழா ஆட்சியின் விளைவாகப் பாண்டிய நாட்டில் மறநெறிகுன்றி அறநெறி அரசோச்சியது. இதனைக் கேள்வியுற்று பொறாமை கொண்ட சோழன், தான் முன்பு பூதப்பாண்டியனுடன் போர் புரிந்து தோல்வியைத் தழுவியதையும் மறந்து மீண்டும் பாண்டியனுடன் போர் புரிந்து ஒல்லையூரைக் கைப்பற்றத் திட்டமிட்டான். தான் மட்டும் தனித்து நின்று, பாண்டியனை வெல்லுதல் இயலாதென்பதனை உணர்ந்த சோழன் சேரன் துணையை வேண்டினான். எண்டிசையிலும் பாண்டியரது புகழ் பரவுவதைக் கண்டு பொறாமை கொண்டிருந்த சேரனும் சோழனுக்குதவ முன் வந்தான். சோழனும் சேரனும் தத்தம் நால்வகைப் படைகளையும் திரட்டிக் கொண்டு வந்து ஒல்லையூரைத் தாக்கினர்.

அஞ்சா நெஞ்சங் கொண்ட பூதப்பாண்டியனும் கொதித்தெழுந்து தன் ஆற்றல் மிக்க படையுடன் அணிவகுத்து நின்றான். பின்னர்த் தன் படை வீரர்கட்கு எழுச்சியூட்டத் தக்க வீரமொழிகளை மிக்க உணர்ச்சியுடன் கூறி அவர்களை ஊக்குவித்தான்.[1] 'தடங்தோள் வீரர்காள்! சிங்கம் போலச் சினந்து என்னை வெல்லுதற்கு வந்த பெரும் படையையுடைய எனது பகைஞர்களை அலற அலறத் தாக்கி அவர்களைப் புறங்கொடுத்து ஓடச் செய்யாது போயின், இதோ என் அருகில் இருக்கும் அழகிய மனைவியைப் பிரிந்து வருந்துவேனாக! அறனில்லை திரியாத அவைக்களத்து அறவழி நடவாத ஒருவனை வைத்து அதனால் முறை திறம்பிக் கொடுங்கோல் செய்தேனாக! மாவன், ஆந்தை, அந்துவன் சாத்தன், ஆதன், அழிசி முதலான கண் போன்ற என் நண்பர்களுடன் கூடி மகிழும் மகிழ்ச்சியை யான் அடையாமற் போக! வளமிக்க பாண்டிய நாட்டினையாளும் பெருங்குடி மரபில் பிறத்தல் நீங்கிச் சிறிதும் வளப்பம் இல்லாத வன்புலங்களைக் காக்கும் வேறு குடியிற் பிறப்பேனாக' என்பதே அவன் கூறிய வஞ்சினமாகும். பின்னர் தனது படையுடன் ஒல்லையூர் எல்லை சென்று சேர சோழப் படைகளைத் தாக்கினான். தன் வீரம் வெளிப்படப் போரிட்ட மாற்றாரை வெட்டிச் சாய்த்தான். இறுதியில் மாற்றானின் அம்பினை நெஞ்சில் தாங்கி இறந்துபட்டான்; தன் வீரப் புகழினை இவ் வுலகில் நட்டான்.

**மனைவியின் மாண்பு :** இவனுக்கு வாழ்க்கைத் துணைவியாக அமையும் பேறுபெற்ற பெருங்கோப்பெண்டு என்பாளும்

[1] இவன் வீரர்களுக்குக் கூறிய வீர உரையினை, சீவகன் வீர உரையுடனும், மொகலாய வேந்தனான பாபர், கிரேக்க மாவீரன் அலெக்சாந்தர், பிரெஞ்சு மாவீரன் நெப்போலியன் போன்ற மாபெரும் படைத்தலைவர்களது வீர முழக்கத்துடனும் ஒப்பிட்டுணரலாம்.

நல்லிசைப் புலமை மிக்க மெல்லியல் நங்கையாவாள் என்பது ஈண்டு குறிப்பிடத் தக்கதாகும். ஒத்த கல்வியும் அறிவும் திருவும் நிரம்பப் பெற்ற இவர்கள் வாழ்வில் இன்பமும் நிரம்பப் பெற்றது இவர்களது காதல் வாழ்க்கை இல்லறமென்னும் நல்லறத் திற்குச் சிறந்ததொரு எடுத்துக்காட்டாய் விளங்கியது. இங்ஙனம் இவர்கள் செம்மை நலஞ் சார்ந்த வாழ்க்கையில் ஈடுபட்டு விருந் தோம்பி வாழ்ந்து வருங்கால் பூதப்பாண்டியன் போர்க்களத் தின்கண் விழுப்புண் பட்டிறந்தான். கற்பிற் சிறந்த மங்கை நல்லாளாம் பெருங்கோப்பெண்டு இதனைக் கேள்வியுற்றுத் துன்பத்தால் துடித்தாள்; கண்ணீர் வடித்தாள். பிரிவாற்றாத இவள் தன் கணவனது ஈமத்தீயில் தானும் வீழ்ந்து உயிர்துறக்க முடிவெடுத்தாள். அதுபோழ்து ஆங்கிருந்த மதுரைப்பேரால வாயார் முதலான மூதறிஞர்கள் அவ் வம்மையாரைத் தீப்புக விடாமல் தடுத்தனர். கற்பிற் சிறந்த இப் பொற்பின் செல்வியோ அதனைப் பொருட்படுத்தாது 'பல்சான்றீரே பல் சான்றீரே' எனத் தொடங்கும் அரியபாடலைப்[1] பாடித் தீப் புகுந்து தன் இன்னுயிர் நீத்தாள். கற்புடைப் பெண்டிரின் புகழினைக் காத்தாள்.

**நினைவாக ஊர் அமைக்கப்படல்:** கன்னியாகுமரி மாவட்டத் தினுள்ள தோவாளை மாவட்டத்தின் தலைநகரான பூதப்பாண்டி யெனும் பேரூர் இவ் வேந்தனின் நினைவாக நிறுவப்பட்டதாகும். இவ் வூர் இவ் வேந்தனது மகனான பசும்பொன் பாண்டியனால் அமைக்கப் பட்டிருத்தல் வேண்டுமென்று திரு. கே.என்.சிவராச பிள்ளையவர்கள் கருதுகின்றார். திரு. ரா. பி. சேதுப்பிள்ளை யவர்களும் 'நாஞ்சில் நாடு என்னும் திருவாங்கூர் தேசத்திலுள்ள பூதப்பாண்டி என்ற ஊர் அவன் (பூதப் பாண்டியன்) பெயரால் அமைந்ததென்று கருதலாகும்'[2] என்று குறிப்பிட்டுள்ளார்.

### கோயில் நிறுவப்பெறுதல்

பூதப்பாண்டியில் பூதலிங்க சுவாமி ஆலயம் ஒன்று உள்ளது. இக் கோயிலினமைப்பு பாண்டி வேந்தர்களின் கலைச் சாயலைக் கொண்டுள்ளது. இப் பகுதியில் பாண்டியராட்சி பரவியிருந்த தென்பதனை 'கேரள உற்பத்தி', 'கேரள மகாத்மியம்' ஆகிய நூல்களாலறியப் படுகின்றன. மேலும் திருவிதாங்கூர் வர லாற்றுக் குறிப்பேடும் இக் கருத்தினையே வலியுறுத்துகின்றது.

1 புறநானூறு-246.
2 சேதுப்பிள்ளை, ரா. பி. 'ஊரும் பேரும்' பக். 95.

**ஆட்சிக்காலம்**

வரலாற்றுச் செய்திகளையும் இலக்கியச் செய்திகளையும் ஒப்பிட்டு நோக்குங்கால் பூதப்பாண்டியன் கி.பி. 25 முதல் கி.பி. 50 முடிய ஆட்சி புரிந்ததாகக் கருதலாம்.

**தமிழ்ப் புலமை :** தித்திக்கும் தீந்தமிழைக் கற்றுத் துறை போகிய இம் மாமன்னன் கவிதையியற்றுவதிலும் மன்னனாகத் திகழ்ந்தான். புறநானூற்றிலும் அகநானூற்றிலும் இடம் பெற்றுள்ள இவனது பாடல்கள் இவனது தமிழ்ப் புலமைக்குச் சிறந்த எடுத்துக்காட்டாக அமைந்துள்ளன. இவனியற்றிய பாடல்களுள் 'மடங்கலிற் சினைகு மடங்கா வுள்ளத்து' எனத் தொடங்கும் புறநானூற்றுப் பாடல் மிகவும் குறிப்பிடத்தக்க தாகும். இப் பாடலிலிருந்து இவன் மாபெரும் வீரனென்பதும், மனைவி மாட்டுப் பேரன்புடையவனென்பதும், செங்கோல் வழு வாத வேந்தனென்பதும், தனது நண்பர்களிடம் பேரன்பு கொண்டிருந்தானென்பதும், பாண்டி நாட்டினையாளும் அரசுரி மையினை எவற்றினும் மேம்பட்டதாகக் கருதிபவனென்றும் அறியமுடிகிறது.

இவ் வேந்தனது பாடல்களின் துணைகொண்டு ஆய்ந்து பார்த்தால், இவன் பரந்துபட்டதொரு அரசினை ஆண்டு வந்த தாகக் கூறவியலாது.

## பசும்பூண் பாண்டியன்

**அரியணையேறுதல்**

பூதப்பாண்டியனை அடுத்து பசும்பூண் பாண்டியன் பாண்டிய நாட்டு வேந்தனாக மணிமுடி தரித்துக் கொண்டான். இவனது ஆட்சிக் காலம் கி.பி. 50 முதல் கி.பி. 70 முடிய இருந்ததாக அறிஞர் சிலர் கருதுகின்றனர். பசும்பூண் பாண்டியன், தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனுக்குப் பின்னரே ஆட்சி மேற்கொண்டனன் என்று திரு. சி. இராமச் சந்திரன் அவர்கள் கருதுகின்றார்.[1] இருப்பினும் இவ் வேந்தன்

[1] 'கீழ்க்கண்ட சான்றுகளால் பசும்பூண் பாண்டியன் செழியனுக்குப்பிற் பட்டவனே யென்பதும், முற்பட்டவனல்ல என்பதும் புலனாகிறது. ஆலங்கானப் போரில் செழியனால் தோற்கடிக்கப் பட்டவருள் இருங்கோவேண்மானும ஒருவன் ஆவான் (அகம், 36). இருங்கோவேண்மான் கபிலரின் உடன் காலத்தவன் (புறம் 201, 202). கபிலர், செல்வக்கடுங்கோ வாழியாதனைப் பற்றியதான, பதிற்றுப் பத்தின் ஏழாம் பத்தினை இயற்றியுள்ளார் (பதிற்றுப் பத்துப்பதிகம், 7). செல்வக் கடுங்கோ பெருஞ்சேரல் இரும்பொறையின் தந்தை ஆவார் (Ibid பதிகம் : 8). எனவே, பெருஞ்சேரல் இருமபொறை தலையாலங்கானத்துச் செழியனுக்குப் பிந்திய தலைமுறையினர் ஆவான். இவற்றைக் கொண்டு பார்க்குங்கால் பெருஞ்சேரல் இரும்பொறையின் உடன்காலத்தவனான பசும்பூண் பாண்டியனும் தலையாலங் கானத்துச் செருவென்ற செழியனுக்குப் பிற்பட்டவன் ஆவான்.

தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியனுக்கு முன்னராண்டவன் என்று கொள்வதே பொருத்தமுடையதாகத் தோன்றுகிறது.

**சான்றுகள்**

இவ் வேந்தனைப்பற்றி அறிந்து கொள்வதற்கு அகநானூறு பெரிதும் பயன்படுகிறது. பரணர், நக்கீரர், மதுரை ஈழத்துப் பூதன் தேவனார், மதுரைக் கணக்காயனார் முதலான புலவர்கள் பசும்பூண் பாண்டியனின் சிறப்புகளை எடுத்துக் கூறுகின்றனர்.

**வேறு பெயர்கள்**

இவ் வேந்தன் பசும்பொன் பாண்டியன் எனவும் குறிக்கப் பெறுகிறான். இவன் 'பசும்பூண் செழியன்' என்றும் சங்க இலக்கியங்களில் குறிக்கப்பெறுகிறான். தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனும் இலக்கியங்களில் பசும்பூண் செழியன் என்று அழைக்கப் பெறுகிறான். எனவே, காலத்தால் முற்பட்ட இப் பசும்பூண் பாண்டியனை முதலாம் பசும்பூண் பாண்டியன் என்றே குறிப்பிடலாம். கானப்பேர் கடந்த உக்கிரப் பெருவழுதியும் இப் பாண்டியனும் ஒருவனேயாகலாம் என்று அறிஞர் சிலர் கருதுகின்றனர்.[2] கடைச் சங்ககாலப் பாண்டி வேந்தருள் கானப்பேர் கடந்த உக்கிரப் பெருவழுதியே இறுதியானவன் என்று திரு. தி. வை. சதாசிவ பண்டாரத்தார் அவர்கள் குறிப்பிடுகின்றார்.[3]

**அரசியல் சூழல்**

இவ் வேந்தன் பாண்டிய நாட்டை அரசாண்டு வந்தகாலை, சேரநாட்டினைச் செங்குட்டுவனின் தமயனான களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரலும், தகடூர் நாட்டினை நெடுமிடல் அஞ்சி

---

Ramachandran, C. E. 'Ahananuru In Its Historical Setting' page No. 26.

ஆனால். திரு. மயிலைசீனி வேங்கடசாமி அவர்கள் பசும்பூண் பாண்டியன், தலையாலங்கானத்துச் செழியனுக்கு முற்பட்டவன் என்றும், களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரலின் உடன் காலத்தவன் என்றும் தமது நூலில் குறிப்பிடுகின்றார். அடுத்து, இவன் முதல் பசும்பூண் பாண்டியன் என்று அழைக்கப் பெற வேண்டியவன் என்கிறார்.

(கொங்கு நாட்டு வரலாறு. பக்.48)

[2] 'This Pasumpun Pandya could be identified with Kanapper Katanda (Kadantha) Uggiraperu Valudi' Ramachandran, C. E. 'Ahananuru In Its Historical Setting' page 25.

[3] சதாசிவ பண்டாரத்தார், தி. வை. 'பாண்டியர் வரலாறு' பக். 28. (1950) எனவே, பாண்டியன் கானப்பேர் கடந்த உக்கிரப் பெருவழுதிபற்றி இறுதியில் காண்போம்.

யென்னும் அதிகமானும், துளுநாட்டினை நன்னன் என்பானும் ஆண்டு வந்தனர்.

**போர் நிகழ்ச்சிகள்**

பாண்டிய அரசினை விரிவுபடுத்துவதில் பெரிதும் நாட்டம் கொண்டிருந்த பசும்பூண் பாண்டியன் முதலில் தகடூர் நாட்டினை ஆண்டு வந்த அதிகமான் அரசரை வென்றதாகத் தெரிகிறது. இதன் காரணமாக இவனது அரசு விரிவுபடுத்தப்பட்டது; அதிகமான் அரசனது மலையின் உச்சியில் பாண்டியனது மீனக் கொடி பட்டொளிவீசிப் பறந்தது.[1] அதிகமான் அரசன் பாண்டியனின் சிற்றரசனாக மாற்றப்பட்டான்; அதிகமான் அரசனும் பாண்டியர்க்கு உற்ற துணையாக, ஊன்று கோலாக விளங்கினான். நெடுமிடல் அஞ்சி[2] பசும்பூண் பாண்டியனின் நண்பனாகவும்,[3] படைத்தலைவனாகவும் இருந்து பாண்டியரது பெருமையினையும் புகழினையும் உயர்த்த அரும்பாடுபட்டான்.

**கொங்கு நாட்டின்மீதுப் படையெடுப்பு**

**முதல் படையெழுச்சி**

கொங்கு வேந்தன் பாண்டியனுடன் முரண்பட்ட காரணத்தால், பசும்பூண் பாண்டியன் கொங்கரை ஒடுக்கும் பணியில் ஈடுபட்டான்; கொங்கு நாட்டின்மீதுப் போர் தொடுத்தான். அதிகமான் நாட்டு நெடுமிடல் அஞ்சியின் படைத் தலைமையின் கீழ் படையொன்றினைக் கொங்கு நாட்டின் மீது ஏவினான். குருகுல ராயன் என்னும் பட்டம் பூண்ட காவலியர் தலைவனும் அதிகனுக்குத் துணையாக அனுப்பப்பட்டான்.[4] பாண்டியப் படையினர் கொங்கு நாட்டில் பேரழிவினை நிகழ்த்தினர். இதனைக் கண்டு வெஞ்சினம் கொண்ட கொங்கர் அனைவரும் ஒன்று திரண்டனர்; சேரர், சோழர் ஆகிய வேந்தரது உதவியைப்

1 '............................கழல் தொடி அதிகன்
கோளற வறியாப் பயங்கெழு பலவின்
வேங்கை சேர்ந்த வெற்பகம் பொலிய
வில்கெழு தானைப் பசும்பூண் செழியன்
களிறணி வெல் கொடி' – அகநானூறு. 162.

2 தகடூரைத் தலைநகராகக் கொண்டு ஆண்டுவந்த அதிகமான் அரசருள் முதன் முதலாக அறியப்படுபவன் நெடுமிடல் அஞ்சியே யாவான. இவன் ஒருமுறை சேரநாட்டு வேந்தனும் களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரலால் தோற்கடிக்கப் பட்டான் என்பதனைப் பதிற்றுப் பத்துச் செய்யுள் ஒன்றால் அறியலாம் (நான்காம் பத்து. 2:10–1). பசும்பூண் பாண்டியனின் பகைவர்கள் நெடுமிடலுடன் போர் தொடுத்து அவனை வெற்றி கொண்டதாக பரணரும் பாடியுள்ளார் (அகநானூறு. 266;10–13).

3 அகநானூறு 162.

4 இராசசேகர தங்கமணி, இரா. 'பாண்டியர்க்குத் துணைநின்ற வேட்டுவர்' வேட்டுவர் குரல்' மாத இதழ். இதழ் 2. பிப்ரவரி. 1976.

பெற்றனர்; வாகைப் பறந்தலை என்னுமிடத்தில் பாண்டியப் படையைச் சந்தித்தனர். இப் போரில் அதிகமான் அரசன் வீர மரணம் அடைந்தான். பாண்டியப் படை வெற்றியின்றி திரும்பியது. அதிகமானது இறப்புச் செய்தி கேட்டு கொங்கர் மகிழ்ந்தனர்.[1]

**இரண்டாம் படையெழுச்சி**

இத் தோல்வி செய்தி கேட்டு, பசும்பூண் பாண்டியன் துடித்தான்; வெஞ்சினம் கொண்டான்; மறவர் படையினையும், வேட்டுவர் படையினையும் ஒன்று திரட்டினான்; ஆய் அண்டிரன் என்னும் வேளிர் தலைவனது தலைமையில் தனது ஆற்றல்மிகு படையினை அனுப்பி வைத்தான். கொங்கு நாட்டினை அடைந்த இப் படை கொங்கரை வலிவுடன் தாக்கியது. இத் தாக்கு தலுக்குத் தாக்குப் பிடிக்க முடியாமல் கொங்கர் உலைந்து ஓடினர்; மேலைக் கடற்கரைப் பகுதியில் அடைக்கலம் தேடினர்; கொங்கு நாட்டின் நகரங்கள் தீக்கிரையாக்கப்பட்டன. இதனைக் கீழ்க்காணும் புறப்பாடலால் அறியலாம்.

'...............கொங்கர்
குடகடல் ஓட்டிய ஞான்றை
தலைப் பெயர்த்திட்ட வேலினும் பலவே'

இவ் வெற்றியால் பெருமகிழ்ச்சி கொண்ட பாண்டியன், தனக்குப் பெருந்துணை புரிந்த மறவர்களைக் கொங்கு நாட்டில் குடியேற்றினான்[2].

**துளு நாட்டின்மீது போர்**

கொங்கரை வென்ற பாண்டியன் அடுத்து நன்னனது துளு நாட்டின்மீதுப் படையெடுத்தான். அதிகனது தலைமையில் துளு நாடு சென்ற பாண்டியப் படையினை, நன்னனது படைத் தலைவனான மிஞிலி என்பானின் தலைமையிலான படை கடுமையாக எதிர்த்தது. இப் போரில் பாண்டியர் படைத்தலைவனான

[1] 'கூகைக் கோழி வாகைப் பறந்தலைப் பசும்பூண் பாண்டியன் வினைவல் அதிகன், களிறொடுபட்ட ஞான்றை ஒளிறுவாள் கொண்கர் ஆர்ப்பு';
குறுந்தொகை. 393: 3-6.

[2] வேட்டுவர், காவலியர்-ஆகியோரைக் கொங்கு நாட்டினில் குடியேற்றினான். (இதற்கு முன்பும் கொங்கு நாட்டில் வேட்டுவர் வசித்து வந்தனர்). இவ் வெற்றியால கூடலில் மகிழ்ச்சி பொங்கிற்று.

'..................... கொங்கர் ஓட்டி
நாடு பலதந்த பசும்பூண் பாண்டியன்'. அகநானூறு. 253.

அதிகன் இறந்துபட்டான்.[1] இப் போரில் முடிவு தெரியவில்லை. கோசரது நாடே பாண்டிய இலக்கியங்களில் துளுநாடு என குறிக்கப்பட்டது. மங்களூரை நடுவிடமாகக் கொண்ட, துளு மொழி வழங்கும் நாடே துளு நாடாகும்.[2] கேரள நாட்டிற்கும் துளு நாட்டிற்கும் சந்திரகிரி எல்லையாக அமைந்துள்ளது.

**ஆட்சியெல்லை**

பேரார்வம் கொண்டு, அண்டை நாடுகளை வென்ற பசும்பூண் செழியன் தனது தந்தையினும் பரந்துபட்டதொரு அரசினை ஆண்டுவந்தான். இவனது அரசு ஆய்நாடு, கொங்குநாடு ஆகியனவற்றை உள்ளடக்கியிருந்தது; மலைநாடும் இவனது பேரரசிற்கு உட்பட்டிருந்தது. 'எரித்திரியக்கடலின் பெரிப்ளூஸ் என்னும் நூலின் ஆசிரியர், திருவாங்கூர், பாண்டிய நாட்டைச் சேர்ந்த பகுதியென்று குறிப்பிட்டிருப்பதனையும் ஈண்டு நாம் இதற்குச் சான்றாகக் கூறலாம். இதனால் இவ் வாசிரியரது கால மாகிய கி.பி. 70-ல் ஆய்நாடு பாண்டிய நாட்டின் ஒரு பகுதி யாகவே இருந்தது என்பது விளங்கும்.

கி. பி. 140-ல் தாலமி என்னும் மேலைநாட்டறிஞர், திருவி தாங்கூர் ஆயோயி (Aioi) நாட்டினைச் சேர்ந்ததாகக் குறிப்பிடு கின்றார். இதனால் பாண்டியரிடம் தோல்விகண்ட ஆய்வேந்தர் தனது நாட்டினைப் பாண்டிய மன்னனின் ஆட்சிக்குட்பட்டு ஆண்டு வந்தான் என்றோ, பசும்பூண் பாண்டியனது ஆட்சிக் காலத்தில் பாண்டியர்க்கு உட்பட்டு ஆண்ட ஆய்வேந்தர் சில காலம் சென்ற பின்னர், தனியாட்சி நிறுவினர் என்றோ கருதலாம். ஆய்நாடு பாண்டியர்க்கு உட்பட்டிருந்த போதிலும் ஆய்நாட்டின் புகழ் மங்காது இருந்ததென்றும் நாம் கருத இட முண்டு.

**புதிய நகரினை நிறுவுதல்:** 'பூதப்பாண்டி' என்னும் பெயரால் சிறந்த நகரொன்று இன்றும் காணப்படுகிறது. இந் நகர்

[1] 'கறையடியானை நன்னன்பாழி, ஊட்டரு மரபின் அஞ்சுவர பேஎய்க் கூட்டெதிர் கொண்ட வாய்மொழி மிஞிலி, புள்ளிற் கேமமாகிய பெரும்பெயர், வெள்ளத்தானை அதிகன் கொன்று வந்து, ஒள்வாள் அமலை ஆடிய ஞாட்பு'— (அகநானூறு, 142:9–14)

இப் போர் வாகைப் பறந்தலையில் நடந்ததாகவும், இப் போரில் அதிகமான் அரசனை நெடுமிடல் அஞ்சி இறந்துபட்டதாகவும் திரு. மயிலை சீனிவேங்கடசாமி குறிப்பிடுகின்றார். கொங்கருடன் செய்த போரினையே இவர் துளுநாட்டு நன்ன னுடன் செய்த போராகக் கருதுகின்றார் போலும்.

('கொங்குநாட்டு வரலாறு' – பக். 48).

[2] இத் துளு நாடே அசோகனது கல்வெட்டில் 'சத்தியபுத்ரா' என்று குறிக்கப் பெறுவதாக அறிஞர் கூறுகின்றனர்.

பசும்பூண் பாண்டியனால் நிறுவப்பட்டதேயாகும். இதனை, இவன் தனது வெற்றியின் சின்னமாகவும், தனது தந்தையின் நினைவாகவும் நிறுவினான் என்பர்.[1]

## அழகிய பாண்டியன்

பசும்பூண் பாண்டியனுக்குப் பின்னர் அழகிய பாண்டியன் அரியணையேறினான். பொதியமலையினை ஆண்டு வந்த குறுநில மன்னன் இவனுடன் மாறுபட்டதால், இவன் ஆய்வேளைத் தோற்கடித்தான். இவ் வெற்றியின் நினைவாகப் பொதியமலையின் அடிவாரத்திலுள்ள ஊர் ஒன்றனுக்கு 'அழகிய பாண்டியபுரம்' எனப் பெயரிட்டான் என்பர்.[2] இவ் வேந்தனைப்பற்றிய பிற செய்திகள் ஒன்றும் தெரியவில்லை.

## ஆரியப் படை கடந்த நெடுஞ்செழியன்

**சான்றுகள்**

புகழ் பூத்த சங்ககாலப் பாண்டி வேந்தர்களுள் பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் மிகவும் குறிப்பிடத் தக்க வனாவான். மதுரையம்பதியினைத் தலைநகராகக் கொண்டு, செங்கோல் செலுத்தி வந்த இவ் வேந்தனின் வெற்றியினையும் பெருமையினையும் முத்தமிழ்க் காப்பியமாம் சிலப்பதிகாரம் சிறக்கப் பேசுகின்றது. வீரத்தின் உலைக்களனாய், வெற்றியின் நிலைக்களனாய், விளங்கிய இம் மன்னன் நீதியின் இருப்பிட மாகவும் புலமையின் பிறப்பிடமாகவும் போற்றப் பெறுகிறான். இவனது செந்தமிழ்ப் புலமைக்கு இவனியற்றியுள்ள புற நானூற்றுப் பாடலே சான்றாகும். இப் பாட்டினால் சாதியைக் காட்டிலும் கல்வியே சிறப்பு வாய்ந்ததென்பதும், கல்வி கற்றலே இவ் வாழ்வின் பெரும் பயனென்பதும், அறிவுடையோன் யாவ ராலும் போற்றப் பெறுவரென்பதும் அறியப்படுகின்றது. கல்வியறிவுடையார் யாவரும் இப் பாடலைக் கற்றல் நன்றாதலின் இப் பாடலைக் காண்போம்.

'உற்றுழி யுதவியும் உறுபொருள் கொடுத்தும்
பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே
பிறப்போ ரன்ன உடன்வயிற் றுள்ளுஞ்
சிறப்பின் பாலாற் றாயுமனந் திரியும்
ஒருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளும்

[1] Sivaraja Pillai, K. N. 'The Chronology of the Early Tamils'.
[2] Ibid. page 122. F.N.

மூத்தோன் வருக வென்னா தவருள்
அறிவுடை யோனா றரசுஞ் செல்லும்
வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளுங்
கீழ்ப்பா லொருவன் கற்பின்
மேற்பா லொருவனும் அவன்கட் படுமே'[1]

**நெடுஞ்செழியன் பலர்**

முடியுடை மூவேந்தருள் சேரர், இரும்பொறை, குட்டுவன், கோதை, ஆதன் முதலான பெயர்களால் அழைக்கப்பட்டது போலவும், சோழர் கிள்ளி, வளவன், சென்னி முதலான பெயர் களால் அழைக்கப்பட்டது போலவும், பாண்டியர் செழியன், வழுதி, மாறன் முதலான பெயர்களால் அழைக்கப்பட்டனர். பாண்டி வேந்தருள் நெடுஞ்செழியன் என்னும் பெயர் கொண்ட வேந்தர் பலராவர். நம்பி நெடுஞ்செழியன், தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் போன்ற பெயர்களை ஈண்டு நாம் எடுத்துக்காட்டாகச் சுட்டலாம். அவர்களினின்றும் இவனை வேறுபடுத்திக் காட்ட, அறிஞர், இவன் வடவாரியரை வெற்றி கொண்ட அருஞ்செயலை இவனுக்கேற்றி ஆரியப் படை கடந்த நெடுஞ்செழியனென்று சிறப்பித்தனர்.

இவன் சோழ வேந்தனும் கரிகாற் பெருவளத்தானின் சமகாலத் தவனாவான். நெடுஞ்செழியன் பேராற்றல் வாய்ந்தவனாகவும், நீதி தவறாது செங்கோல் செலுத்துவதில் வல்லவனாகவும், செந் தமிழ்ப் புலமை சிறக்கப் பெற்றவனாகவும், நீதி தவறினால் தனது இன்னுயிரையும் உவந்தளிக்கும் பண்பாடு மிக்கவனாகவும் விளங்கினானென்பது தமிழ் இலக்கியங்களால் தெளிவாகிறது.

**கோவலன் கொலை செய்யப்படுதல்**

இம் மன்னன் பொற்கொல்லனது சூழ்ச்சியின் காரணமாக குற்றமறியாக் கோவலனெனும் வணிகனைத் தனது கோப் பெருந்தேவியின் சிலம்பினைக் கவர்ந்த கள்வனென்று கருதி வெட்டி வீழ்த்துமாறு கட்டளையிட்டான். இதனைக் கேள்வியுற்ற கோவலனின் கற்புடை மனைவியாம் கண்ணகி, இம் மன்னனிடம் வழக்குரைத்துத் தன் கணவன் கள்வனல்லன் என்பதனை மெய்ப்பித்தாள். உண்மையுணர்ந்த பாண்டியன் நெடுஞ்செழியன் கோவலனை ஆராயாது கொல்வித்த குற்றத்திற்காகப் பெரிதும் வருந்தி நெஞ்சம் துணுக்குற்று, பழிக்கஞ்சி 'பொன் செய்க் கொல்லன் தன் சொல் கேட்ட யானோ அரசன்? யானே கள்வன்!' என்று நெஞ்சு நடுங்கக் கூறி அரியாசனத்திலிருந்து வீழ்ந்து

[1] புறநானூறு—183.

உயிர் துறந்தான், என்று சிலப்பதிகாரம் செப்புகின்றது. மன்னனிறந்தது கண்ட கோப்பெருந்தேவி பிரிவுத் துன்பம் பொறாது தானும் உயிர் துறந்தாள். இதனால் இவ் வேந்தனது அறநெறி பிறழாத் தன்மையினையும், நீதி தவறின் உயிர் வாழாத் தன்மையினையும் அறியலாம். இவன் நீதியையே உயிராகக் கொண்டிருந்தனனென்பதும் புலனாகும்.

**வடவாரியரை வெல்லல் :** பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் பாண்டி நாட்டினையாண்டு வந்தகாலை, சேர நாட்டினை சேரன் செங்குட்டுவன் திறம்பட ஆண்டு வந்தான். இதே காலத்தில் கொங்கு நாடு செல்வக் கடுங்கோ வாழியாதனாலும் பெருஞ்சேரலிரும்பொறையாலும் (தகடூரை எறிந்தவன்) ஆளப்பட்டு வந்தது. இவனது பெயருடன் அமைந்துள்ள அடைமொழியிலிருந்து, வடபுலத்து வேந்தருள் ஒருவரையோ சிலரையோ இவன் வெற்றி கண்டிருத்தல் வேண்டும் என்று அறியலாம். இவ் வெற்றி குறிப்பிடத்தக்கதொன்றாக இருத்தலினாலேயே இது புலவர் பெருமக்களால் பெரிதும் போற்றப் பெறுகின்றது.

> 'வட வாரியர் படை கடந்து
> தென்றமிழ்நா டொருங்கு காணப்
> புரைதீர் கற்பிற் றேவி தன்னுடன்
> அரசு கட்டிலிற் றுஞ்சிய பாண்டிய
> நெடுஞ்செழியன்'[1]

என்ற சிலப்பதிகார அடிகளாலும் அறியலாம். இவனிடம் தோல்வி கண்ட ஆரிய வேந்தன் யாவன்? என்பதும், எந்த ஆண்டு எந்த இடத்தில் தோல்வி பெற்றனன் என்பதனையும் அறிந்துகொள்ளப் போதிய சான்றுகள் இதுகாறும் கிடைக்கவில்லை. இப் பாண்டி வேந்தன் பெரு வெற்றி வீரனாய்த் திகழ்ந்தான் என்பதில் எவ்வித ஐயமுமில்லை.

**வட வேந்தருடன் போரிட்ட மற்றத் தமிழரசர் :** ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியனேயன்றி தமிழக வேந்தர் பலர் வடநாட்டு ஆரியருடன் போர் செய்ததனை ஈண்டு நாம் நினைவிற் கொள்ளல் வேண்டும். இதனைத் தமிழிலக்கியச் சான்றுகளால் நன்கு அறியலாம். ஆரியர்கள் தமிழகத்தின் ஒப்பற்ற சிறப்பினை உணர்ந்து ஆங்காங்கே தங்கி தங்கள் நிலையினை உறுதிப்படுத்திக் கொள்ள முயன்று வந்தனர். இதன் காரணமாக இவர்கட்கும் தமிழ்

[1] சிலப்பதிகாரம்—பாடல். 23; 14–18.

வேந்தர்கட்குமிடையே அடிக்கடி போர் நிகழ்ந்து வந்தது. தஞ்சைக்கு அண்மையிலுள்ள வல்லம் என்னும் ஊரினைச் சுற்றி காவற்காட்டில் ஆரியப்படையொன்று வந்து தங்கியிருந்ததாகவும் சோழரின் வலிமை மிக்க தாக்குதலுக்கு முன் நிற்க மாட்டாது அது அழிந்துபட்டதாகவும் அறிகிறோம். இதனைச் 'சோழர் வில்லீண்டு குறும்பின் வல்லத்துப் புறமிளை ஆரியர் படையின் உடைக' என்னும் அடிகளாலறியலாம்.

கடையெழு வள்ளல்களுள் ஒருவனாகிய காரி என்பான், தனது முள்ளூர் மலையினை முற்றுகையிட்டிருந்த ஆரியப் படையினை வென்று அதனைத் துரத்தியடித்துள்ளான். ஆடுகோட் பாட்டுச் சேரலாதனும் தண்டகாரணியத்தில் ஆரியர் கவர்ந்து சென்ற ஆனிரைகளை மீட்கும் பொருட்டு அவருடன் போர் புரிந்து புறமுதுகிட்டோடச் செய்துள்ளான்.

சேரன் செங்குட்டுவன், இமயவரம்பன், நெடுஞ்சேரலாதன் முதலிய மன்னர்களும் ஆரிய வேந்தர்களை அவர்களது நாட்டிலேயே வென்று அவர்கட்குரிய இமயத்தின்கண் தங்களது அடையாளக் கொடிகளைப் பொறித்தனர் என்பது சங்கச் செய்யுளால் அறியப்படுகின்றது.

'மதுரைக்காஞ்சியெனும் அதிமதுரத் தமிழ் நூல் ஆரியப் படை கடந்த நெடுஞ்செழியனது அருமை பெருமைகளை நன்கு எடுத்துக் காட்டுகின்றது.

**தமிழ்ப் புலமை :** தித்திக்கும் தீந்தமிழைக் கற்றுத் துறை போகிய இம் மாமன்னன் கவிதையியற்றுவதிலும் மன்னனாகத் திகழ்ந்தான் புறநானூற்றிலும் அகநானூற்றிலும் இடம்பெற்று உள்ள இவ் வேந்தனது பாடல்கள் இவனது தமிழ்ப் புலமைக்குச் சிறந்த எடுத்துக்காட்டாக அமைந்துள்ளது. இவனியற்றிய பாடல்களுள் 'மடங்கலிற் இனைகு மடங்கா வுள்ளத்து' எனத் தொடங்கும் புறநானூற்றுப் பாடல் மிகவும் குறிப்பிடத்தக்க தாகும். இப் பாடலிலிருந்து இவன் மாபெரும் வீரனென்பதும், மனைவி மாட்டு பேரன்புடையவனென்பதும், செங்கோல் வழு வாத வேந்தனென்பதும், தனது நண்பர்களிடத்துப் பேரன்பு பூண்டிருந்தானென்பதும், பாண்டி நாட்டினை ஆளும் உரிமையினை எல்லாவற்றிலும் மேம்பட்டவனாகக் கருதியவனென்பதும் புலனாகின்றது.

**சிறப்பு :** ஆற்றலும் அருந்தமிழ்ப் புலமையும் ஒருங்கே வாய்க்கப்பெற்று, வடவாரியரை வென்றடக்கி, நீதிக்காகவே

உயிர் வாழ்ந்து, நீதி தவறிய காலத்து தனது இன்னுயிரையும் நீத்து, நீதியைக் காத்துநின்ற செங்கோல் வேந்தனை இவன் பாண்டியர் வரலாற்றில் தனக்கெனவோர் தனியிடத்தினையே பெற்றுள்ளான் என்பதே போற்றுதற்குரியதொன்றாகும்.

**முடிவுரை :** இரண்டாம் தலைமுறையைச் சேர்ந்த சங்க காலப் பாண்டிவேந்தர்களுள் இவன் மிகவும் குறிப்பிடத்தக்கவனாவான். சேரன் செங்குட்டுவன் இவனது உடன் காலத்தினனாகச் சேரநாட்டினை யாண்டுவந்தான். ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியனும், வெற்றிவேற் செழியனும் இச் சேரப் பெருவேந்தனின் உடன் காலத்தவரே என்பது சிலப்பதிகாரம்[1] நீர்ப் படைக் காதையால் அறியப்படுகின்றது. இவன் கி. பி. 150-ல் அரியணையேறினான் என்று கருதலாம்.[2]

## வெற்றிவேற் செழியன்

**அரியணையேறுதல் :** இவன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியனின் மகன் ஆவான். இவன் இளஞ்செழியன் எனவும் அழைக்கப் பெறுகிறான். நெடுஞ்செழியன் மதுரை மாநகரின்கண் பேரரசனாக வீற்றிருந்து ஆட்சி புரிந்து வருங்கால், இளவரசனாகிய இவன் கொற்கையிலிருந்து அரசியலைக் கவனித்து வந்தான். நெடுஞ்செழியன் உயிர்துறந்த பின்பு, வெற்றிவேற் செழியன் பாண்டியநாட்டின் பெருமன்னனாக முடிசூட்டப்பட்டான். சேரப் பெருவேந்தனும் செங்குட்டுவன்

[1] Ibid. பாடல் 184.

[2] சேரன் செங்குட்டுவனும் இலங்கை வேந்தனும் முதலாம் கயவாகுவும் உடன் காலத்தவர் என்ற கருத்து பெரும்பாலான வரலாற்றறிஞர்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டிருப்பதால், செங்குட்டுவன் கி.பி. இரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்தவன் என்பது புலனாகும். ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் சேரன் செங்குட்டுவனின் உடன் காலத்தவன் ஆதலின், இவனும கி.பி. இரண்டாம் நூற்றாண்டைச் சார்ந்தவன் ஆவன் என்பதுறுதி. டாக்டர் கிருஷ்ணசாமி ஐயங்காரவர்கள் நெடுஞ்செழியன் கி. பி. 150—ஆம் ஆண்டளவில் அரியணையேறியிருத்தல் வேண்டுமென்று கருத்துத் தெரிவித்துள்ளார். இக் கருத்தினைத் திரு. எம். சீனிவாச ஐயங்காரும் ஆதரித்தார்; திரு. வி. கனகசபை அவர்களது கால நிர்ணயத்தை இவர் ஏற்றுக் கொள்ளவில்லை. திரு. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியார் திரு. தி. வை. சதாசிவபண்டாரத்தார் ஆகியோர் சங்ககாலப் பாண்டியரது காலத்தை நிர்ணயிக்கும்போது திரு. வி. கனகசபை அவர்களது கால நிர்ணயத்தினின்றும் சிறிது மாறுபடுகின்ற போதிலும், பெரும்பாலும் கனகசபையின் கருத்தை ஏற்றுக் கொள்கின்றனர். நெடுஞ்செழியன் கி. பி. 50—ல் அரியணையேறினான் என்று திரு. வி. கனகசபை அவர்கள் குறிப்பிடுகின்றார். இது பொருத்தமாகத் தோன்றவில்லை,

உக்கிரப்பாண்டியன் என்று குறிக்கப்பெறுபவன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியனேயாவான் என்று திரு. எஸ். கிருஷ்ணசாமி ஐயங்காரவர்கள் தமது 'பண்டைய இந்தியா' (Ancient India pp 355–58) என்னும் நூலின்கண் குறிப்பிடுகின்றார். உககிரபாண்டியன் அல்லது உககிரப் பெருவழுதி என்பான் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டிய நெடுஞ்செழியனையடுத்து ஆட்சிக்கு வந்தவனே என்று திரு. வி. கனகசபை அவர்கள் கருதுகின்றார்.

கண்ணகிக்குச் சிலை வடிப்பான் வேண்டி இமயத்தினின்றும் கல்கொணரும் முடிவுடன் வடபுலம் நோக்கிப் படை கொண்டு சென்ற போழ்துதான் வெற்றிவேற் செழியனின் முடிசூட்டு விழா மதுரை மாநகரின்கண் சீரும் சிறப்புடன் கொண்டாடப்பட்ட தென்பதனைச் செந்தமிழ் வித்தகர், சேர இளவல் இளங்கோ வடிகளின் திருவாக்கால் அறியமுடிகின்றது.

**உடன்கால வேந்தர் :** இவனது உடன் காலத்து மன்னர் களாகச் சேரநாட்டில் செங்குட்டுவனும், சோணாட்டில் (உறையூர்) பெருநற்கிள்ளியும், இலங்கை நாட்டின்கண் கயவாகுவும் ஆண்டு வந்தனர். இப் பெருநற்கிள்ளியே இராச சூயம் வேட்ட பெருநற்கிள்ளியெனவும் போற்றப் பெறுகிறான்.

**பஞ்சமும் நீக்கமும் :** இவ் வேந்தனது ஆட்சிக் காலத்தில் பாண்டியநாடு கொடும் பஞ்சத்திற்குள்ளாகியது; யாங்கணும் வறுமையும் வெறுமையும் அரசோச்சிற்று. இப் பஞ்சத்தைப் போக்குவான் வேண்டி இவன் கண்ணகிக்கு விழாவொன்று எடுத்து, பொற்கொல்லர் ஆயிரவரைக் கொன்று, வேள்வி செய்து கண்ணகியின் சீற்றத்தைப் போக்கினான்; இல்லாமை என்னும் பேயினை நாட்டினில் இல்லாமல் செய்தான். நாடு வளம் பெற்றது; மக்கள் மனமெல்லாம் மகிழ்ச்சியுற்றன. இச் செய்தியினைச் சிலப்பதிகாரம் செப்புகின்றது.[1]

சிலப்பதிகார உரையும் இதனை 'அன்று தொட்டுப் பாண்டிய நாடு மழை வறங் கூர்ந்து வறுமை எய்தி வெப்பு நோயும், குருவும் தொடரக் கொற்கையிலிருந்த வெற்றிவேற் செழியன், நங்கைக்குப் பொற்கொல்லர் ஆயிரவரைக் கொன்று களவேள்வி யால் விழாவொடு சாந்தி செய்ய நாடு மலிய மழைபெய்து, நோயும் துன்பமும் நீங்கியது'.[2]

இவ் வேந்தன் சித்திரமாடத்துத் துஞ்சிய நன்மாறன் எனவும் அழைக்கப்பெற்றான் என்று அறிஞர் கருதுகின்றனர்.[3] இக் கருத்து பொருத்தமுடையதாகத் தோன்றுகின்றது. ஈண்டு

[1] 'கொற்கையில் இருந்த வெற்றிவேற் செழியன்
பொற்றொழிற் கொல்லர் ஈரைஞ் ஞூற்றுவர்
ஒருமுலை குறைத்த திருமா பத்தினிக்கு
ஒருபகல் எல்லை உயிர்ப்பலி யூட்டி' சிலப்பதிகாரம்–27; 127–130.

[2] Ibid. உரைபெறு கட்டுரை.

[3] சதாசிவ பண்டாரத்தார், தி. வை. 'பாண்டியர் வரலாறு' பக். 22. (இரண்டாம் பதிப்பு. 1950). இவ் விரு வேந்தரும் தனித்தனி வேந்தரே எனக் கருதுவாரும் உண்டு.

நாம் நன்மாறனைப்பற்றி யாது கூறப்பட்டுள்ளது என்பதனைக் காண்போம்.

**சான்றுகள்**

நன்மாறன் ஞாயிற்றினைப் போன்று ஆற்றல் மறவனாகத் திகழ்ந்தானென்பதனை இளங்கோவடிகளின் கூற்றாலும், சீத்தலைச் சாத்தனாரது கூற்றாலுமறியலாம். இவன் கல்வி கேள்விகளிற் சிறந்த சான்றோரைப் போற்றிப் பாதுகாக்கும் சான்றாண்மை மிக்கவன்; மக்கள் நலனைத் தன்னலனெனக் கொண்டு நல்லாட்சி புரிந்த காவலன். மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார் என்னும் புலவர்[1] இப் புரவலரைச் சிறப்பித்துப் பாடியுள்ளார். இப் பாடல் சங்க இலக்கியமாகிய புறநானூற்றில் இடம் பெற்றுள்ளது. இவனது அருங்குணங்களனைத்தும் இப் பாடலின் வாயிலாக அறியப்படுகின்றன. மாலை தாழ்ந்து தொங்கும் மார்பும், நீண்ட கால்களும் கொண்ட இவன் அழகிய தோற்றத்தினை யுடையவனென்பதும் இப் பாடலால் உணர்த்தப் படுகின்றது.

**பெயர்க் காரணம்**

மக்களைப் பேணிக் காத்த இக் காவலன் சித்திர மாடத்தில் இறந்துபட்டதால், சித்திரமாடத்துத் துஞ்சிய நன்மாறனென அழைக்கப் பெறுகிறான். சித்திர மாடமென்பது ஓவியச் சாலையாகும். இவன் எப்படி இறந்தானென்று துணிந்து கூறவியலவில்லை. செங்கதிர் பரப்பும் வெங்கதிரோன் போன்று பகைவருக்குப் பகைவனாய் இவன் விளங்கியமையின், இவனது பகைவர் பலர் ஒன்றுகூடி சித்திரமாடத்தில் இவனை வஞ்சனையால் கொன்றிருத்தல் வேண்டுமெனச் சிலர் கருதுகின்றனர்.

இவ் வேந்தன் ஓவியக் கலையில் வல்லவனென்றும் ஊகிக்கலாம். நாட்டினை வளப்படுத்தி, நாட்டு மக்கட்கு ஆக்கம் பலவும் ஆக்கித் தந்து நல்லாட்சி புரிந்த இக் காவலன் நீண்ட நாள் ஆட்சி புரியாது குறுகிய காலத்திலேயே இறந்துபட்டான்.

வெற்றிவேற் செழியன் என்றும் சித்திரமாடத்துத் துஞ்சிய நன்மாறன் என்றும் அழைக்கப்பெறும் இவ் வேந்தன் கி. பி. 175 முதல் கி. பி. 190 முடிய ஆட்சி புரிந்திருத்தல் வேண்டுமென்று கொள்ளலாம்.[2]

[1] புறநானூறு-59.

[2] திரு. வி. கனகசபை அவர்கள் வெற்றிவேற் செழியன் கி. பி. 75 முதல் கி. பி. 90 முடிய ஆட்சி புரிந்திருப்பதாகக் கருதுகின்றார். சங்ககாலப் பாண்டி

## தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்

### வேறு பெயர்கள்

கடைச்சங்க காலத்தில் வாழ்ந்த இப் பாண்டி வேந்தனது இயற்பெயர் செழியன் என்பதாகும். இதனை 'அடு போர்ச் செழியன்' 'இயல் தேர்ச் செழியன்' 'கொடித் தேர்ச் செழியன்' 'கொற்றச் செழியன்' 'மறப்போர்ச் செழியன்' என்று புலவர் பெருமக்கள் இவனைப் பாராட்டியிருத்தலாலறியலாம். இவன் நெடிய தேரைப் பெற்று இருந்தமையின் நெடுஞ்செழியன் என்னும் பெயரினைப் பெற்று இருத்தல் கூடும். புலவர் பெருமக்கள் இவனை ஏத்திப் புகழ்கின்ற இடங்களில் யாண்டும் நெடுஞ்செழியன் என குறிப்பிட்டதாகத் தெரியவில்லை.[3] மாறாக இவனது நெடுந் தேரே குறிப்பிடப்பட்டுள்ளது.[4] இதனைக் 'கடும்பகட்டு யானை நெடுந்தேர்ச் செழியன்'[5] 'இமையணி நெடுந்தேர்க் கைவண் செழியன்'[6] 'பொன்னணி நெடுந்தேர்த் தென்னவர் கோமான்'[7] 'எழுவுறழ் திணிதோள் இயல் தேர்ச் செழியன்'[8] என்ற அடிகளாலறியலாம்.

---

வேந்தர்களது காலநிர்ணயத்தைக் கீழ்க்கண்டவாறு வி. கனகசபை அவர்கள் கணித்துள்ளார்.

1. முதலாம் நெடுஞ்செழியன் — கி. பி. 50–75. (ஆரியப்படை வென்றவன்)

|

2. வெற்றிவேற் செழியன் — கி.பி. 75–90.

|

3. இரண்டாம் நெடுஞ்செழியன் — கி.பி. 90-128. (தலையாலங்கானப் போர் வென்றவன், யானைக்கட்சேயைச் சிறை கொண்டவன், வெள்ளியம்பலத்துத் துஞ்சியவன்)

|

4. உக்கிரப் பெருவழுதி — கி. பி. 128–140. (கானப் பேரெயில் கடந்தவன்; சோழ வேந்தன் பெருநற் கிள்ளியின் இராசசூய வேள்வியில் கலந்து கொண்டவன்)

|

5. நன்மாறன் — கி பி. '140-150. (இலவந்திகைப் பள்ளித்துஞ்சியவன்)

சேரன் செங்குட்டுவன், கயவாகு ஆகிய இருவரும் சமகாலத்தவரென்பதும், இவர்கள் கி. பி. இரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்திருத்தல் வேண்டுமென்ற கருத்தும் பெரும்பாலான வரலாற்றறிஞர்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளதால் திரு. கனகசபை அவர்களது காலக்கணிப்பில் நூறு ஆண்டுகள் சேர்த்துக் கொள்ளுதல் பொருத்தமாகத் தோன்றும் என்று நான் கருதுகிறேன்.

3 Ramachandran, C. E. 'Ahananuru In Its Historical Setting' p. p. 22.

4 அகநானூறு–47, 175, 296.

5 அகநானூறு-299.

6 Ibid — 47.

7 Ibid — 192.

8 Ibid — 209.

'செழியன்' என்றும் 'நெடுந்தேர்ச் செழியன்' என்றும் சான்றோர்களால் குறிப்பிடப்படும் இவன் 'பசும்பூண் பாண்டியன்'[1] என்ற பெயராலும் அழைக்கப்பட்டுள்ளான் என்பதனை இலக்கியச் சான்றுகளாலறியலாம். எடுத்துக்காட்டாக 'பலர் புகழ் திருவின் பசும்பூண் பாண்டியன்'[2] 'நாடு பல தந்த பசும்பூட் பாண்டியன்'[3] 'வில் கெழுதானைப் பசும்பூட் பாண்டியன்'[4] 'விசும்பு இவர் வெண்குடைப் பசும்பூட் பாண்டியன்'[5] என வரும் இலக்கிய அடிகளால் அறியலாம்.

**பெயர்க் காரணம்**

இவன் பசுமையான பொன்னாற் செய்யப்பட்ட அணிகலன்களை அணிந்திருந்த இளமைக் காலத்திலேயே வெற்றிச் சிறப்போடு விளங்கியமையின் பசும்பூண் பாண்டியனென்று அழைக்கப்பெற்றிருத்தல் வேண்டும் என்று கூறலாம். தலையாலங் கானப் போரில் பகை வேந்தர் எழுவரை எதிர்த்துப் போரிட்ட போது இவன் இளைஞனாயிருந்தனனென்பதும் நினைவிற் கொள்ளத் தக்கதாகும். இவன் தலையாலங்கானம் என்னுமிடத்தில் நிகழ்ந்த பெரும் போரில் தனது பகைஞருடன் போரிட்டு வியக்கத்தக்க வெற்றியொன்றினைப் பெற்று புகழ் பெற்றமையின் இவன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் என்று அழைக்கப்பெறுகிறான்.

**சான்றுகள் :** கடைச்சங்க காலத்தில் பாண்டி நாட்டை யாண்டு வந்த வீரமும் புகழும் மிக்க வேந்தரின் படை வரிசையில் முன்னணியில் வைத்துப் போற்றத்தக்க இவன், ஈடு இணையற்ற வெற்றி வீரனாகத் திகழ்ந்தான். இவனது பெரு வெற்றியும் சிறப்பும் புறநானூற்றுப் பாடல்களிலும்[6] மதுரைக்காஞ்சி,[7] நெடுநல்வாடை போன்ற நூல்களின் பாடல்களிலும் சிறப்பித்துப் பேசப்படுகின்றது. மேற்கூறிய இலக்கியச் சான்று

1 Ibid — 162; குறுந்தொகை-303.

2 மதுரைக் கணக்காயனார்-அகநானூறு. 338.

3 நக்கீரர். அகநானூறு. 253.

4 பரணர், அகநானூறு 192.

5 ஈழத்துப் பூதன் தேவனார். Ibid. 131.

6 இடைக்குன்றூர் கிழார் — புறநானூறு-76, 79.

7 மதுரைக்காஞ்சி — குட்டநாட்டு வெற்றி 89-105 — தலையாலங்கானத்து வெற்றி 125-130 — பரதவரை வென்றது 139-144 — பகைவரது நாட்டை அழித்தது 145-176 — நெடுஞ்செழியன் படையெடுப்பு 177-196 — பண்பு நலன் 131-132, 197-224 — பகைவரை வீழ்த்தி நாட்டை நன்கு ஆண்ட கீர்த்திமிகு மன்னன்.

களேயன்றி இராசசிம்மனது சின்னமனூர்ச் செப்பேடும் நெடுஞ் செழியனது அருஞ்செயலைப் பாராட்டிப் பேசுகின்றது.[1]

**அரசியல் சூழல்** : இவன் பாண்டி நாட்டின் பெரு மன்னனுக ஆண்டு வந்தகாலை, யானைக் கண்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை என்பான் சேர நாட்டினையாண்டு வந்தான்; இவனது தலைநகரம் மேலைக் கடற்கரைக்கு அருகிலுள்ள தொண்டியாகும். யானையினது பார்வை போன்ற கண் பார்வையினைக் கொண்டவனுதலின் இவன் யானைக் கண் மாந்தரஞ் சேரல் இரும்பொறையென அழைக்கப்பட்டான். இதனை 'வேழ நோக்கின் விறல் வெஞ்சேய்' என்ற குறுங்கோழியூர் கிழார் பாடலடியாலறியலாம். எட்டுத்தொகை நூல்களுள் ஒன்றுன 'ஐங்குறு நூறு' என்னும் நாலினைத் தொகுப்பித்தவன் இவனேயாவான். இவ் வேந்தனுக்கு முன் பாண்டி சேர வேந்தனும் நெடுஞ்செழியனின் சம காலத்தவனேயாவான்.

அக் காலத்துச் சோழ நாட்டினை இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியென்பான் ஆண்டு வந்தான். அடுத்து, சோணுட்டின் எல்லையில் (தென் மாகாணம்) கடற்கரையை அடுத்த நீடுரைத் (மாயூரத்திற்கருகில்) தலைநகராகக் கொண்டு மிழலைக் கூற்றமென்னும் சிறிய நாட்டினை எவ்வி யென்னும் குறுநில மன்னன் ஆண்டு வநதான். பொதிய மலையும் அதனைச் சூழ்ந்த பகுதியும் திதியன் என்னும் குறுநில வேந்தனுலும், தகடூர் நாடு அதியமான் எழினி என்பானுலும், மைசூரிலுள்ள எருமை நாடு எருமையூரனுலும் ஆளப்பட்டு வந்தது. இருங்கோ வேண்மான், பொருநன் என்னும் குறுநில வேந்தரும் தமக்குரிய பகுதிகளையாண்டு வந்தனர். துளுவர், நாகர், கொங்கர் போன்ற அண்டை அரச மரபினரும் அக் காலத்தில் தமது நாடுகளைச் சிறப்புடன் ஆண்டு வந்தனர். சேர நாட்டின் ஒரு பகுதியான குட்டி நாடு குட்டுவர் சிலரால் ஆளப்பட்டு வந்தது.

இவன் சித்திரமாடத்துத் துஞ்சிய நன்மாறனின் புதல்வன் என்பது ஆராய்ச்சியாளர்களின் முடிவு. இப் பாண்டியன் இளம் வயதிலேயே ஆட்சிப் பொறுப்பேற்றுன் என்பதனை இலக்கியங்கள் வாயிலாகவும், இவனது தந்தை சின்னுட்களே ஆட்சி புரிந்து, சித்திரமாடத்துத் துஞ்சினுனென்பதாலும் அறியலாம்.

## தலையாலங்கானப் போர்

### காரணம்

பாண்டியன் நெடுஞ்செழியன் அரசு கட்டிலேறுங்கால் இளைஞனுகவே இருந்தான். இதன் காரணமாக இவ் விளைஞனை

[1] S.I.I. Vol. III No. 206.

வென்று விடுதல் எளிதென்று இவனது பகைஞர்கள் கருதினர். இவனது இளமைத் தன்மையைக் கண்டு பகைவர்கள் ஏளனம் செய்தனர். இளைஞனை வெல்லுதல் எளிமையான செயலே எனக் கருதிய சோழன் இராசசூயம் வேட்ட பெருநற் கிள்ளியும், சேரவேந்தனும், திதியன், எழினி, எருமையூரன், பொருநன், இளங்கோ வேண்மான் முதலான குறுநில மன்னரும் ஒன்றுதிரண்டு பாண்டியன்மீதுப் படையெடுத்தனர்.

**போரின் போக்கு :** சேர, சோழ குறுநில மன்னர்களது கூட்டிணைவுப் படை மதுரையை நோக்கிக் கடிது சென்றது; பாண்டிய நாட்டில் நுழைந்து மதுரைக்கருகில் சென்றுவிட்டது. இதனைக் கேள்வியுற்ற பாண்டியனும் வஞ்சினம் கூறித் தன் படையுடன் மாற்றாரை எதிர்த்தான். பாண்டிய வேந்தன் இளைஞனாக இருந்தபோதிலும் புலியெனப் பாய்ந்து மாற்றாரை வெட்டி வீழ்த்தினான். பாண்டியப் பெரும் படையும் ஊக்கத்துடன் உறுதி குலையாது போர் செய்தது. கூடற் பறந்தலையில் நடந்த இக் கடும் போரில் சேரரும் சோழரும் பாண்டியனது தாக்குதலுக்கு ஈடு கொடுக்கமாட்டாது தம் முரசங்களை விட்டொழித்து ஓடினர்; சோழ நாட்டிற்குள் புகுந்து கொண்டனர்.[1]

சோழ நாட்டிற்குள் புகுந்த பகைஞரது படையைப் பாண்டியனது படை துரத்திச் சென்றது. தஞ்சை மாவட்டம், திருவாரூர்க்கு வடக்கே எட்டு கல் தொலைவில் அமைந்திருந்த தலையாலங்கானம் என்னுமிடத்தில் மீண்டும் இரு படைகளுக்குமிடையே போர் மூண்டது. இக் கடும் போரில் இருதிறத்தாரும் தமது திறமையைக் காட்டி ஆவேசமாகப் போர் புரிந்தனர். இக் கொடும் போரில் ஆயிரக்கணக்கான வீரர்கள் மாண்டனர். சேர வேந்தனும், சோழ வேந்தனும் கொல்லப்பட்டனர். சேர சோழ வேந்தரது முரசங்கள் பாண்டியனால் கைப்பற்றப்பட்டன. வேளிர்கள் உயிர் பிழைத்தால் போதுமென்று கருதி போர்க் களத்தினின்றும் ஓட்டம் பிடித்தனர். இவ்வாறு, வரலாற்றுப் புகழ்மிக்க தலையாலங்கானப் போர் பாண்டியனுக்கு வெற்றி மாலை அணிவித்தது. இப் போரில் வெற்றி வாகை சூடிய பாண்டிய நெடுஞ்செழியன், தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் என்று பெயர் பெற்றான்.

**பாண்டியன் வெற்றி :** தலையாலங்கானத்துப் போரில் சேர, சோழ வேந்தர் கொல்லப்பட்டனர் என்பதனைக் கல்லாடனாரின்

1 அகநானூறு – 116.

கூற்ருலறியலாம்.[1] இதோ அவரது கூற்று 'நின்ெடு பொருத இரு வேந்தரும் போர்க்களத்தில் விழுந்து மாயப் பொருதாய், அவரது முரசங்களைக் கைப்பற்றினுய்.'

அடுத்து இராசசிம்ம பாண்டியனது சின்னமனூர்ச் செப்பேடும்,

'தலையாலங் கானத்தில் தன்னொக்கும் இருவேந்தரைக்
கொலைவாளின் தலைதுமித்துக் குறைத்தலையின் கூத்தொழித்தும்'[2]

என்று சேர, சோழ வேந்தர் இப் போரில் கொல்லப்பட்ட செய்தியைக் குறிப்பிடுகின்றது. இதனுல் கல்லாடனுரின் கூற்று உறுதி செய்யப் பெறுகிறது.

**புலவர் போற்றும் வெற்றி**

பாண்டிய நெடுஞ்செழியனின் வரலாற்றுப் புகழ் மிக்க தலையாலங்கான வெற்றி புலவர் பெருமக்களது ஒருமித்த பாராட்டுதல்களைப் பெற்றிருந்தது. செயற்கருஞ் செயல் செய்த இம் மாவீரனின் இவ் வெற்றி கல்லாடனுர், இடைக் குன்றூர் கிழார்,[3] குட புலவியனுர்,[4] மதுரை நக்கீரர்,[5] ஆலம்பேரி சாத்தனுர்,[6] மாங்குடி மருதனுர்[7] முதலான புலவர் பெருமக்களால் பாராட்டப் பெற்றுள்ளது.

**போரின் விளைவுகள்**

இப் போரின் விளைவாகப் பாண்டிய நெடுஞ்செழியனின் புகழ் தமிழகம் முழுவதும் பரவியது. சேர, சோழ நாடுகளில் பாண்டியரின் செல்வாக்கு ஓங்கியது. கி. மு. மூன்ரும் நூற்ருண்டளவில் பாண்டியர் தமிழக அரசியலில் முடிசூடா மன்னராகத் திகழ இப் போர் காரணமாக அமைந்தது.

**போரின் முக்கியத்துவம்**

ஒரு நாடு மற்ெருரு நாட்டுடன் போர் புரிவது இயற்கை. ஆனுல், இப் போரில் இரு பேரரசரும் ஐந்து வேளிரும் ஒன்று

1 புறநானூறு-25.
2 S I.I. Vol. III No. 206.
3 புறநானூறு-77.
4 Ibid - 19.
5 அகநானூறு - 36.
6 Ibid - 175.
7 மதுரைக்காஞ்சி—127-130.

சேர்ந்து பாண்டிய அரசனை எதிர்த்தனர்; ஆனால், தோல்வியையே தழுவினர். இப் போர் நெடுஞ்செழியனின் வரலாற்றில் மட்டுமன்றிப் பாண்டியர் வரலாற்றிலும் - ஏன் தமிழக வரலாற்றிலும் சிறந்தவொரு இடத்தைப் பெற்றுள்ளது. பாண்டிய - சோழ போராட்டத்தில் இப் போர் பொன்னெழுத்துகளால் பொறிக்கப் படவேண்டிய வீர அத்தியாயமாகும்.

## இவ் வேந்தனின் பிற படையெழுச்சிகள்

**சேரவேந்தனை வெல்லுதல்**

தலையாலங்கானப் போரில் பாண்டியனை எதிர்த்து உயிர் நீத்த சேர வேந்தனையடுத்து யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை என்பான் சேர நாட்டின் வேந்தனாக மணிமுடி தரித்துக் கொண்டான்; சேர வேந்தனைப் போர்க்களத்தில் கொன்ற நெடுஞ்செழியன்மீது பழிக்குப்பழி வாங்க உறுதி கொண்டான்; பாண்டிய நாட்டின்மீது படை கொண்டு சென்றான்; பாண்டியனைப் போர்க்களத்தில் சந்தித்தான்; இறுதியில் தோல்வியைத் தழுவினான். வெற்றி பெற்ற நெடுஞ்செழியன் சேர வேந்தனைச் சிறை வைத்தான்.

போரில் சிறை வைக்கப்பெற்ற சேரமான் சிறைக் காவலரை வென்று சிறையினின்றும் தப்பிச் சேர நாடடைந்து மணிமுடி தரித்துக் கொண்டான். அதனைக் கேள்விப்பட்ட செழியன் 'அடியுண்ட புலி அடங்கியிராது'; அஃது அடித்தாரைக் கொல்லுதற்குத் தன்னாலியன்ற முயற்சிகளை மேற்கொள்ளுமென்பதனை யறிந்து, அவனை அடக்கியொடுக்க முடிவெடுத்தான். சேர நாட்டின்மீது படையெடுத்தான்; முசிறியை முற்றுகையிட்டான்.[1] சேரனது படையினையழித்தான். சேரன் பணிந்தான். பாண்டியனே தனது வெற்றிச் சின்னமாகச் சேர நாட்டின்கண்

[1] நெடுஞ்செழியன் முசிறியைக கைப்பற்றிய செய்தி தாயங்கண்ணனாரின் செய்யுளிலும் ('வளங்கெழு முசிறியார்ப் பெழவளைஇ, அருஞ்சமம் கடந்து படிமம் வவ்விய, நெடுநல்யானை யடுபோர்ச் செழியன்' - அகம். 149;7-13) நக்கீரரது பாடலிலும (கொய்சுவற் புரவிக் கொடித் தேர்ச் செழியன், முதுநீர் முன்றுறை முசிறி முற்றிக் களிறுபட வெருக்கிய கல்லென ஞாட்பின் அரும்புண்ணுறுநர்"— அகம் 57:14-17) கூறப்பட்டுள்ளது. "(சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய) கிள்ளிவளவன் கொங்கு நாட்டுக் கருவூரை முற்றுகை செய்திருந்த காலத்தில் பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் சேரநாட்டு முசிறிப் பட்டினத்தை முற்றுகையிட்டு அங்கிருந்த படிமம் (தெய்வ உருவம்) ஒன்றை எடுத்துக்கொண்டு போனான் என்று தெரிகின்றது. கிள்ளிவளவன் கருவூரை முற்றுகையிட்டபோது, யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறைக்கு உதவிசெய்யச் சேரன் தன்னுடைய சேனைகளைக் கொங்கு நாட்டுக்கு அனுப்பியிருக்கக் கூடும். அந்தச் சமயத்தில் பாண்டியன் நெடுஞ்செழியன் முசிறியை முற்றுகையிட்டிருக்க வேண்டும் என்று தோன்றுகிறது." வேங்கடசாமி, மயிலைசீனி. 'கொங்குநாட்டு வரலாறு' பக்கம் 121—(1974).

சிறப்புற்று விளங்கிய பொற்பாவையொன்றைக் கவர்ந்து கொண்டு[1] மீண்டு வந்தான்.

**சோணாட்டுடன் போர் :** சேர நாடு சென்று செருவென்று, பகை கொன்று வந்த பாண்டியன் பின்பு சோணாட்டின்மீது பாய்ந்தான்; அவரது உரிமை மகளிர் நாணுமாறு அவர்களையும் அடிபணிய வைத்தான்.[2]

அடுத்துச் சோணாட்டின் அண்டையிலுள்ளதும் நீடுரைத் தலைநகராகக் கொண்டதுமான மிழலைக் கூற்றத்தின்மீது தனது சீற்றத்தினைக் காட்டினான். அந் நாட்டுக் குறுநில வேந்தனும் எவ்வியைத் தோல்வியுறச் செய்தான். தன்னாட்டுக்குப் பெருமை தேடித் தந்த படை வீரர்கட்கு, அரிமணவாயிலையடுத்த உரத்தூரில் பெருஞ்சோறு அளித்துச் சிறப்பு அளித்துக் களித்தான்.

எவ்வியின் தோல்வி கேட்டு அவனது சுற்றத்தினர் அவனுக்குதவி புரிய முன்வந்தனர். அவர்களை முறியடித்த பாண்டியன் அவர்கட்குரிய முத்தூர்க் கூற்றத்தினையும் கைப்பற்றிக் கொண்டான்.

தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் சேரரையும் சோழரையும் வேளிர் ஐவரையும் வென்றதுடன் நில்லாது அவர்களை அவரது தலைநகராம் வஞ்சியிலும் உறையூரிலும் வென்றதும், மிழலைக் கூற்றம், முத்தூர்க் கூற்றம் ஆகிய பகுதிகளைப் பாண்டிய நாட்டுடன் இணைத்துக்கொண்டதும் இவனது வெற்றிச் சிறப்பினைப் பறைசாற்றிக் கொண்டுள்ளன. இவ் வெற்றியினை மாங்குடிகிழாரது இருபத்து நான்காவது புறநானூற்றுப் பாடலால் அறியலாம். இப் போர்பற்றிய செய்தி மதுரைக்காஞ்சியில் குறிப்பிடப் பெறாமையின், இது ஓர் முக்கியத்துவம் மிக்க போராகக் கருதப்படவில்லையோ? என்று ஊகிக்கலாம். ஒருவேளை இப் போர் மதுரைக்காஞ்சி இயற்றப்பட்ட பின்னர் நிகழ்ந்திருக்கவும் கூடும்.

[1] நெடுஞ்செழியன் முசிறியிலிருந்து கைப்பற்றிச் சென்ற படிமம், சேரன் செங்குட்டுவனால் அமைக்கப்பட்ட கண்ணகியின் படிமமாக இருத்தல் வேண்டுமென்று திரு. எளங்குளம் குஞ்சன்பிள்ளை அவர்கள் தமது மலையாள நூலில் (கேரளம் அஞ்சும் ஆறும் நூற்றாண்டுகளில்) குறிப்பிட்டுள்ளார். இக் கருத்தினை வி.டி. இந்துசூடன் அவர்கள் (V.T. Indo Chudan) மறுத்து எழுதியுள்ளார் (The Secret Chamber, p. 83-84). திரு. மயிலை சீனி வேங்கடசாமி அவர்களும் இப் படிமம் கண்ணகியுடையதாக இருத்தல் இயலாதென்று கருத்துத் தெரிவிக்கிறார் (கொங்குநாட்டு வரலாறு-பக். 122).

[2] அதுபோழ்து குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவன் சோழவேந்தனாக ஆண்டு கொண்டிருந்தான் எனலாம். சேரநாட்டினைச் செங்குட்டுவனின் மகனான குட்டுவஞ்சேரல் (கோக்கோதை மார்பன்) அதுபோழ்து ஆண்டான் எனலாம்.

**குட்டுவரை வெல்லுதல்**

பண்டு சேரநாடு பல பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. அவற்றுள் வேணாடு, குடநாடு, கற்கா நாடு, குட்டநாடு முதலானவை குறிப்பிடத் தக்கனவாகும். இவை யாவும் தனித்தனி அரசர்களால ஆளப்பட்டு வந்தன. இவற்றுள் குட்ட நாடு என்பது புகழ் பெற்றது. இதனை ஆண்டு வந்தோர் 'குட்டுவர்' எனப்பட்டனர். குட்டுவர் பலர் நெடுஞ்செழியனது காலத்தில் குட்ட நாட்டினை ஆண்டு வந்தனர். பாண்டிய நெடுஞ்செழியன் இக் குட்டுவர்களை வென்று, இவர்களது கொட்டத்தை அடக்கினான். பாண்டியன் குட்டுவர்களை வென்ற செய்தி மதுரைக் காஞ்சியில் கூறப்பட்டுள்ளது.[1]

**பரதவர் தோல்வி :** பாண்டியரது வெற்றியும் உயர்ச்சியும் கண்டு சிறிதும் அஞ்சாத பரதவர் தருக்குற்று, நெடுஞ்செழியப் பாண்டியனுக்கு அளித்து வந்த திறைப் பொருளைத் தர மறுத்தனர். பாண்டிய நாட்டிற்குத் தெற்கே, கடற்கரையை அடுத்த பகுதியினைத் தமது இருப்பிடமாகக் கொண்டு வாழ்ந்து வந்த இவர்கள், கடல் வாணிகம் நடத்திக் கொண்டு பெருவாழ்வு வாழ்ந்தனர். முத்தும் பவளமும் மிகுந்த அளவில் கொண்டு பெருமையெய்தினர். திறை செலுத்த மறுத்த இவர்களை ஒறுக்கத் துடித்த பாண்டிய வேந்தன், படை கொண்டு சென்றான். பரதவர்களை வென்றான்; அவர்களைத் தன்னடிப்படுத்தினான். அவர்களது கடற்கரையையும், நெல்லூரையும் கைப்பற்றினான். இவ் வெற்றிபற்றிய செய்திகளைப் பத்துப்பாட்டில் ஒன்றாகிய மதுரைக்காஞ்சியால்[2] அறியலாம்.

**கொங்கரை வெல்லுதல்**

வெற்றிமேல்வெற்றிபெற்ற பாண்டியன், அடுத்து கொங்கரை வென்று, அவரது கொட்டத்தினையடக்க முற்பட்டான். தனது படைத் தலைவனும் அதிகனின் தலைமையில் படையொன்றினை ஆங்கனுப்பி வைத்தான். அதிகனும் கொங்கரை வாகை என்னுமிடத்தில் சந்தித்துப் பெரும் போர் புரிந்தான். எதிர்பாராத விதமாக அதிகன் உயிர் துறந்தான். கொங்கர் மகிழ்ந்தனர். இதனையறிந்த நெடுஞ்செழியன் தானே போருக்கெழுந்தான்; போர்க்களம் புகுந்தான்; வேங்கையெனப் பாய்ந்தான்; கொங்கரை வென்றான்.[3]

1 மதுரைக்காஞ்சி—127–130.

2 'தென்பரதவர் போரேறே'—Ibid, அடி. 144.

3 அகநானூறு–253:162. இவன் வேளிரையும் கொங்கரையும் வென்ற செய்தி அகநானூற்றில் மட்டுமன்றி புறநானூறு, குறுந்தொகை முதலான சங்க நூல்களிலும் கூறப்பட்டுள்ளது.

போர்க் கலையிலே பேரார்வம் கொண்ட தன்னேரிலாத வீரனாகவும் படைத் தலைவனாகவும் விளங்கினான். போர்க்களத்தின்கண் போர் மறவர்கள் களைப்படைந்த நேரத்தில் அவர்களுக்கு உற்சாகமூட்டி, புத்துணர்ச்சியூட்டி, வீர உரைகளும் ஆற்றி வந்தான்.

**ஆறுதல் கூறுதல் :** வெற்றி மடந்தை முத்தமிட்டளித்த முத்திரைகளாகிய விழுப்புண்களைப் பெற்றிருக்கின்ற போர் மறவர்கள், தனது வெற்றிக்கு உறுதுணையாக ஊன்றுகோலாக நின்றிருந்த வீரர்களை, அவர்கள் இரவு நேரத்தில் ஓய்வெடுத்துக் கொண்டிருந்த பாசறையின்கண் சந்தித்து, அன்புடன் அளவளாவி, பாராட்டுரைகள் வழங்கினான் இவ் வேந்தன். இவ்வாறு தனது உறக்கத்தினையும் பாராது, தான் ஓய்வெடுக்க வேண்டிய நேரத்தில், போர்க்களத்தின்கண் அஞ்சாது வென் சமர் புரிந்த வீரர்களைப் படைத்தலைவன் முன்னின்று அறிமுகப் படுத்த, தனித்தனியே சந்தித்து அவர்களுக்கு ஆறுதலும் தேறுதலும் கூறினான் இப் பாண்டியன் என்பதனை 'வேம்புதலை யாத்த நோன்கா ழெஃகமொடு' எனத் தொடங்கும் நெடுநல் வாடைப் பாடற் பகுதியால் அறியலாம்.

**நைட்டிங்கேலுக்கு முன்னோடி :** மேற்கூறிய முறையில் தனது வீரர்களை ஊக்குவித்த காரணத்தால் பாண்டிய நெடுஞ் செழியன், திறமை மிக்க படைத் தலைவர்களான வியத்தகு எகிப்து நாட்டு மாவீரன் அலெக்சாந்தர், மொகலாய வம்சத்து மாவீரன் பாபர் போன்றவர்களுடன் ஒப்பிடத்தக்க மாபெரும் படைத்தலைவன் ஆவான் என்பது நினைவிற் கொள்ளத் தக்க தாகும். இவனது தூய பணி, விளக்கொளி வனிதை நைட்டிங் கேலுடன் ஒப்புமை கூறத் தக்கதாகும்.[1]

**புலவரின் புரவலன் :** பெரு வீரனாகத் திகழ்ந்த இம் மாமன்னன் கற்றுத் துறைபோய காவலனென்பதும் கற்றோரைப் போற்றிப் புரக்கும் பெற்றியுடையோன் என்பதும் 'நகுதக் கனரே நாடுமீக் கூறுநர்' எனத் தொடங்கும் புற நானூற்றுப் பாடலால் நன்கறியப்படுகின்றது. புலவர்களின் புரவலனாகத் திகழ்ந்த இவ் வேந்தனால் ஆதரிக்கப் பெற்ற பைந்

[1] நைட்டிங்கேல் (Nightingale) என்னும் பெண்மணி கிரிமியாப் போரில் காயமடைந்த வீரர்களுக்கு இரவும் பகலும் சிகிச்சை செய்தாள்; ஆறுதலும் தேறுதலும் கூறினாள். இதன் காரணமாகப் பலர் குணமடைந்தனர். போர்க்களத்திலேயே சிகிச்சை செய்யும் தைரியமும் அஞ்சாமையும் கொண்ட இப் பெண்மணி விளக்கொளி வனிதை (The Lady of the Lamp) என்று போற்றப்பெறுகிறாள். இவ் வேந்தனும் போரில் புண்பட்ட வீரர்களை இரவில் பாசறையில் சந்தித்து ஆறுதல் கூறியமை போற்றத்தக்கதேயாகும்.

தமிழ்ப் புலவர்களுள் மாங்குடி மருதனாரும், மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரரும் குறிப்பிடத் தக்கவராவர். இவ்விரு பெரும் புலவரும் முறையே மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடை என்னும் அரிய நூல்களை இயற்றியுள்ளனர். இவ்விரு நூல்களும் இம் மன்னனது புகழ்பாடும் சிறப்புடையனவாகும். நெடுஞ்செழியப் பாண்டியனின்மீது பாடப்பட்டுள்ள இவை யிரண்டும் பத்துப்பாட்டுள் சேர்க்கப்பெற்றுள்ளன. மாங்குடி மருதனார் மாங்குடி கிழாரெனவும் அழைக்கப் பெறுதலுண்டு என்பதனையும் நாம் ஈண்டு மறத்தலாகாது.

**பாடிய புலவர்கள் :** இவ்விரு பெரும் புலவர்களேயன்றிக் கல்லாடனார்,[1] குடபுலவியனார்,[2] அள்ளூர் நன்முல்லையார், ஆலம் பேரிசாத்தனார்,[3] ஆலங்குடி வங்கனார், ஈழத்துப் பூதன் தேவனார்,[4] எருக்காட்டூர்த் தாயங்கண்ணனார்,[5] தத்தங்கண்ணனார், பரணர், பேராலவாயர், மருதன் இளநாகனார், முதுகூத்தனார், குறுங்கோழியூர் கிழார், விற்றூற்று வண்ணக்கன் தத்தனார்[6] முதலான புலவர் பெருமக்களும் இவ் வேந்தனது அருமை பெருமைகளைப் பாராட்டிப் பாடியுள்ளனர்.

**மதுரைக்காஞ்சி :** மாங்குடி மருதனாரே இவ் வேந்தனது அவைக்களத்தின்கண் தலைமை பூண்ட தலைமைப் புலவராவார். இவர் நெடுஞ்செழியனது நன்மதிப்பை வெகுவாகப் பெற்று இருந்தார். இப் புலவர் பெருமான், மன்னன் எல்லா வகையான சிறப்பும் பெற்று வாழ வேண்டுமென்றும், நாட்டு மக்கள் எல்லா வளனும் நலனும் அடையப் பெற்றவர்களாக இருத்தல் வேண்டுமென்றும் ஆவல் கொண்டிருந்தார். பாண்டியன் நெடுஞ்செழியன் போர் புரிவதனையே தொழிலாகக் கொண்டு, அறநெறி துறந்து, தனது வாணாளை வீணாகக் கழித்து வருதலைக் கண்டு வருந்தி, மன்னன் வீடடைவதற்கேதுவான அறநெறியை நாடுமாறு 'மதுரைக்காஞ்சி' என்னும் நூலினை இயற்றினார். இதனால் வேந்தனுக்கு நிலையாமை என்னும் கருத்து உணர்த்தப்பட்டது. இந்நூல் இவ் வேந்தனது வெற்றி மேம்பாடுகளையும், செங்கோற் சிறப்பினையும் எடுத்துக் கூறுவதுடன் நில்லாது, இவனது

1 அகநானூறு–209; புறநானூறு–23, 25, 371.

2 குடபுலவியனார். புறநானூறு–7.

3 அகநானூறு–175.

4 Ibid—231.

5 Ibid–335.

6 நற்றிணை–298.

முன்னோரின் பெருமைபற்றியும், மதுரை மாநகரின் எழில் ஏற்றம் ஆகியவைபற்றியும் எடுத்தியம்புகின்றது.

**கோதை:** பசும்பூண் செழியன் என்று அழைக்கப்பட்ட இவ் வேந்தன் 'கோதை' யென்னும் பெயராலும் அழைக்கப் பட்டான் என்பதனைத் 'தண்கடல் நாடன் ஒண்பூங்கோதை' என்னும் மதுரைக்காஞ்சி[1]யடிகளாலறியலாம். நக்கீரரும் இவனைக் 'கோதைமார்பன்'[2] என்று குறிப்பிடுவது ஈண்டு நினைவுகூரத்தக்கதாகும்.

**முடிவுரை:** இதுகாறுங் கூறியவற்றான் தலையாலங்கானத் துச் செருவென்ற நெடுஞ்செழியன் சங்க காலப் பாண்டிய வேந்தருள் முதன்மையான வீரம் நிறைந்தவனாக விளங்கினான் என்றும், இவன் பல பெயர்களால்[3] அழைக்கப் பெற்றானென்றும் இவனது ஆட்சிக் காலத்தில் பாண்டியரது மேலாண்மை அண்டை நாடுகளில் பரவியதென்றும் அறியலாம்.

## பாண்டியன் கானப்பேர் கடந்த உக்கிரப்பெருவழுதி

**பெயர்க் காரணம்**

கடைச் சங்கத்தினைக் கண்ணினும் மேலாகக் காத்தோம்பிய பாண்டிய வேந்தர்களுள் இவன் தந்தைதான் தலையாலங் கானத்துச் செருவென்ற பாண்டிய நெடுஞ்செழியனென்று வரலாற்றறிஞர்கள் கருதுகின்றனர். இவ் வேந்தன் தன் பகைவனாகிய வேங்கைமார்பன் என்பானை வென்று கானப்பேர் என்னும் எயில் அல்லது அரணைக் கைக்கொண்டவனாதலின் கானப் பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதியென அழைக்கப் பெறுகிறான்.

இவ் வேந்தனது அவ் வெற்றியை ஐயூர் மூலங்கிழார் என்னும் புலவர் ஒரு செய்யுளில் சிறப்பித்துப் பாடியுள்ளார்.

1 மதுரைக்காஞ்சி-524,

2 அகநானூறு. 346-25

3 இவ் வேந்தனுக்கு 'நெடுந்தேர்ச்செழியன்' என்னும் பெயரும் உண்டு என்று திரு. சி. இ. இராமச்சந்திரன் அவர்கள் கருதுகின்றார். எனவே, 'நெடுந்தேர்ச் செழியனும்' தலையாலங்கானத்துச் செருவென்ற செழியனும் ஒருவனே எனக் குறிப்பிடுகின்றார். இதனால் இவன் கூடலைக்கைப்பற்றினான் என்று குறிப்பிட்டுள்ளார் (C.E. Ramachandran 'Ahananuru In Its historical setting' page No. 42.) ஆனால், திரு. கே. என். சிவராஜபிள்ளையவர்கள், கொற்கையை ஆண்ட நெடும் தேர்ச்செழியனே கூடலை வென்றவன் ஆவான் என்று கூறுகிறார். தலையாலங் கானத்துச்செருவென்ற பாண்டியனின் முன்னோரது காலத்திலேயே பாண்டியநாடு கொற்கையிலிருந்து கூடல்வரைப் பரவியிருந்ததுடன், தலையாலங்கானத்தான் காலத்திலேயே கூடல் என்னும் சொல் வழக்கழிந்து, மதுரை என்னும் பெயரே வழக்கிலிருந்தது என்று சிவராஜபிள்ளை கூறுகின்றார். (The Chronology of the Early Tamils'-pp. 98-103.)

கானப்பேர் என்பது தேவாரப் பாடல் பெற்ற பாண்டி நாட்டுத் திருப்பதிகள் பதினான்களுள் ஒன்று. இது தற்காலத்தில் காளை யார்கோயில் என வழங்கப் பெறுகிறது. இறையனார் அகப் பொருளுரையிலும் சிலப்பதிகார உரையிலும் இவனைப்பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன.

**உடன் காலத்தவர் :** இம் மன்னனது ஆட்சிக் காலத்தில் சோணாடும், சேரநாடும் தம் பகை மறந்து நட்பு பாராட்டின. இவ் வேந்தன், சோழ வேந்தனும் இராசசூயம் வேட்ட பெருநற் கிள்ளியுடனும் சேர வேந்தனும் மாரிவெண்கோவுடனும் நட்பு பூண்டிருந்தான். சேரமான் மாரிவெண்கோ, சோழன் இராச சூயவேட்ட பெருநற்கிள்ளி என்னும் மன்னர்களும் ஐயூர் மூலங் கிழார், உலோச்சனார், பாண்டரங் கண்ணனார் முதலிய புலவர் களும் இவனது சமகாலத்தவர் ஆவர். இவர்கள் கி.பி. இரண் டாம் நூற்றாண்டின் கடைப்பகுதியில் வாழ்ந்ததாகக் கொள்ள லாம்.

**கவியியற்றுதல் :** அமைதிப் பணிகளில் ஆர்வம் கொண்டு செந்தமிழைப் போற்றி வளர்க்கும் செம்மலாகத் திகழ்ந்த இம் மாமன்னன் செய்யுளியற்றுவதில் வல்லவனாகவும், சிறந்து விளங்கினனென்பது ஈண்டு பாராட்டத்தக்கது. இவன் பாடி யனவாக நற்றிணையில் ஒரு பாடலும் அகநானூற்றில் ஒன்றும் உள்ளன. மேலும் இவன் குறிஞ்சியையும் மருதத்தையும் பாடும் ஆற்றல் மிக்கவன்.

**தமிழ்ப்பணி :** மதுரை உப்பூரி குடிகிழார் மகனார் உருத்திர சன்மனாரைக் கொண்டு எட்டுத்தொகையில் ஒன்றாகிய அக நானூறு என்னும் நெடுந்தொகையைத் தொகுப்பித்தான். இவர் ஒரு ஊமைப் புலவராவார். வாழ்க்கைச் சட்டம் வகுத்த வள்ளு வரின் திருக்குறளும் இவரது தலைமையில் அரங்கேற்றப்பட்ட தாகவும் அறிஞர் சிலர் கருதுகின்றனர். இறையனார் களவிய லுரையும் இவராற் கேட்கப்பட்டதென்பது வரலாறு ஆக லானும், திருக்குறளின் மாண்பையும், திருவள்ளுவரின் பெருமை களையும் விரித்துரைக்கும் திருவள்ளுவமாலைச் செய்யுள்களில் உக்கிரப்பெருவழுதி பாடியதும் ஒன்றாகவிருத்தலானும், களவிய லுரையின் தோற்றத்தோடும், திருக்குறள் அரங்கேற்றத்தோடும் இவ் வேந்தற்குத் தொடர்புண்டென்பது புலனாகிறது.

இக் கருத்தினைக் கல்வெட்டறிஞர் டி.வி. சதாசிவ பண் டாரத்தார் போன்ற அறிஞர் சிலர் மறுக்கின்றனர். இருப்பினும் திருவள்ளுவமாலையில் ‘வை வைத்த கூர்வேல் வழுதி’, ‘தாதவிழ்

தார் மாற', 'வாளார் நெடுமாற' என்னும் தொடர்கள் இடம் பெற்றிருத்தலின் அவை பாண்டியன் முன்னர்ப் பாடப்பட்டதென்பதனை அறியலாம். ஐயூர் மூலங்கிழாரும் ஔவையாரும்[1] இவ் வேந்தனைப் பாராட்டியுள்ளனர். மாந்தரஞ்சேரல் இரும்பொறை இவனது சமகாலத்திய சேரவேந்தன் ஆவான்.[2]

**கடைச்சங்க கால கடைசிப் பாண்டியன்**

இவனது ஆட்சிக் காலத்திற்குப் பின்னர், கடைச் சங்கம் தொடர்ந்து நடைபெறாது அழிந்துபட்டதென்ற செய்தி களவியலுரையால் நன்கு தெளிவாகின்றது இவ் வேந்தனுக்குப் பின்பு ஆட்சி புரிந்த மன்னர்களைப்பற்றி அறிந்துகொள்ள நமக்கு எவ்வித ஆதாரமும் கிடைக்கப் பெறவில்லை.

**மற்றும் சில வேந்தர்**

மேற்கூறப்பட்ட வேந்தர்களேயன்றி கடைச்சங்க காலத்தில் வேறு சில மன்னர்களும் ஆண்டு வந்தனரென்பதனை எட்டுத்தொகை நூல்களாலறியலாம். இவ் வேந்தர்களைப்பற்றிய வரலாற்றுச் செய்திகள், ஆட்சிக் காலம் ஆகியன நமக்கு முழுமையாகக் கிடைக்கப் பெறுமையின் இவர்களைப்பற்றிய ஒருசில செய்திகளையாவது சங்கச் சான்றோரின் சான்று கொண்டு அறிந்து கொள்ளலாம்.

## வெள்ளியம்பலத்துத் துஞ்சிய மாறன் வழுதி

கல்வி கேள்விகளிற் சிறந்த இம் மன்னன் புலமை சான்ற புலவர்களைப் போற்றி வளர்த்தான். காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் என்னும் புலவர் இவனைப் புகழ்ந்துப் பாடியுள்ளார்.[3] சோழன் குராப் பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவன் இவனது கெழுதகை நண்பனுவான்.

**திருமாவளவனுடன் நட்பு :** இப் பெருவழுதியும் திருமாவளவனும் அடிக்கடி ஒருவரையொருவர் சந்தித்து, அரசியல்பற்றி விசாரித்து மக்களுக்கு நலம் பல செய்து வந்தனர். இதனைக் கண்ணுற்ற காரிக்கண்ணனார் என்னும் புலவர் இவர்களது நட்பின் பெருமையினைச் சிறப்பித்துப் பாடியுள்ளார். இவன் பெரு வீரமும் வெற்றியும் கொண்டு பாண்டி நாட்டினையாண்டு

[1] புறநானூறு—21 (ஐயூர் மூலங்கிழார்): 367 (ஔவையார்)

[2] கூடலூர் கிழாரும், குறுங்கோழியூர் கிழாரும் மாந்தரஞ்சேரல் இரும்பொறையைப் பாடியுள்ளனர். இவ் வேந்தன் இதுகாறும் கிடைக்கப் பெறாத பத்தாம் பத்தின் தலைவனாக இருத்தல் வேண்டும் என்று கருதப்படுகிறது.

[3] புறநானூறு—58.

வந்தான். பகைவர்களாலோ அல்லது பிற காரணங்களாலோ பெரும் பழிக்கு ஆளாகியிருக்கிறான்; இவனது குடிப் பெயருக்கும் சோதனை வந்துற்றது; இந் நிலையில் இவன் வெள்ளியம்பலம் என்னும் ஊரில் இருந்து உயிர் விட்டான்; தன் குலப் பெருமையினைக் காத்தான். இவ் வேந்தனது செயலுக்கு அழகான ஆல மரத்தினைப் புலவர் உவமையாகக் கூறி மகிழ்ச்சி பெற்றார்.

## மாலைமாறன்

இவனைப்பற்றிய வரலாறோ அல்லது தமிழ் இலக்கியங்களோ நமக்கு மிகுதியாகக் கிடைக்கவில்லை. இவனது பெயரில் 'மாறன்' என்ற சொல் இருத்தலாலும், இவனியற்றிய பாடலில் அரசர் அறிந்த காட்சியொன்றை உவமையாக எடுத்துக் காட்டியுள்ளதால், இவன் பாண்டியரசர் குடியினன் எனக் கருதலாம்.

**புலமை :** புரவலனாகத் திகழ்ந்த இவன் புலவனாகவும் விளங்கினான். இவனியற்றிய இனிய பாடல் குறுந்தொகை என்னும் நூலில் இடம் பெற்றுள்ளது.[1] இவனியற்றிய பாடல் ஒன்றேயாயினும், இதனால் இவனீட்டிய பெயரோ பலவாகும். தலைவன், தலைவியின் காதல் வாழ்வு இப் பாடலில் நன்கு சித்திரிக்கப்பட்டுள்ளது. இதனால் சங்கத் தமிழரின் வாழ்வு நிலை படம் பிடிக்கப்பட்டுள்ளது.

## கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதி

### பெயர்க் காரணம்

கூடகாரமென்பது பாண்டிய நாட்டிலுள்ளதோர் ஊர்ப் பெயராகும்; இதனை உயர்நிலை மாடமெனக் கூறுவோருமுளர். பண்டைக்கால வேந்தர் யாண்டும் போர் வேட்கை கொண்டு, போர்மேற் சென்றமையின் அவருள் பலர் தமது அரண்மனையில் இறந்துபடாது போர்க்களத்தின்கண் வீரம் விளைவித்து வீர மரணமெய்தினர். அவ்வாறு இறந்துபட்ட வேந்தர்களைக் குறிப்பிடும்போது, அவர்கள் இறந்துபட்ட போர்க்களத்தின் பெயரையும் அவன் பெயருடன் இணைத்து வழங்குவது வழக்கமாயிருந்தது. இம் மாறன் வழுதியும் கூடகாரம் என்னும் போர்க்களத்தின்கண் மாற்றாருடன் போர் புரிந்து வந்தகாலை வீரமரணமெய்தியமையின் கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதியென அழைக்கப் பெற்றான். இவன் யாருடன் போர் புரிந்து மாண்டனனென்ற செய்தியினை அறிந்து கொள்ளத் தக்க சான்றுகள் கிடைத்தில.

[1] குறுந்தொகை—235.

**உடன் காலத்துச் சோழவேந்தன்:** மாறன் வழுதியின் ஆட்சிக் காலத்தில் சோணாட்டினைக் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் என்பான் ஆண்டு வந்தானென்றும், இவ் வேந்தனுக்குப் பின்னரே இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன் பாண்டிய நாட்டினை ஆட்சி புரிந்து வந்தானென்றும் அறிஞர் கூறுவர்.

**வெற்றிச் சிறப்பு :** இவன் வீரத்திலும் வெற்றியிலும் மேம் பட்டவனென்பதனை ஐயூர்முடவனார்,[1] மதுரை மருதன் இள நாகனார்[2] போன்ற புலவர் பெருமக்களின் பாடல்களாலறியலாம். இவ் வேந்தன் பகைஞர்களை வென்று அவர்களைக் கொன்று குவிக்கும் திறனுடையோனென்பதும், தன் குடிமக்கள்பால் பேரன்பு கொண்டு அவர்களைக் காத்தோம்பும் அருளுள்ளம் கொண்டோனென்பதும் ஐயூர்முடவனாரின் அருள் வாக்காலறிய லாம். மருதனிள நாகனாரின் செய்யுளில், இவ் வேந்தனது பெரு வீரமும், வடபுலத்து வேந்தர்களை வென்று தன்னடிப்படுத்தித் தன் குலப் பெருமையினை நிலைநாட்டிய மாண்பும் விரித்துரைக்கப் படுகின்றன.

மதுரையம்பதியிலிருந்து செங்கோல் செலுத்தி வந்த இச் செழுந்தமிழ் வேந்தன், பைந்தமிழ்ப் புலவர்களையும் சான்றோர் களையும் ஆதரித்து, அவர்களது நலம் பேணினனென்பது ஈண்டு குறிப்பிடத் தக்கதாகும். இவ் வேந்தனது அருமை பெருமைகள் புறநானூற்றின் ஐம்பத்தொன்று ஐம்பத்திரண் டாம் பாடல்களால் நன்கறியப்படுகின்றன.

## கீரன் சாத்தன்

இவன் பாண்டியர் குடிக்குத் துணை புரிந்து, அவர்களால் பெருமை பெற்றுத் திகழ்ந்ததால், தானும் பாண்டியர் குலப் பெயரைக் கொண்டு விளங்கினான். ஒரு அரச குலத்திற்குத் தன்னை அர்ப்பணித்துக் கொண்ட ஒரு வீரனோ, குறுநில மன்னனோ தனது தலைவனது குலப் பெயருடன் தன்னை இணைத்துக் கொள்ளுதல் பண்டைய மரபாக இருந்தது. இவ் வழக்கத்தின்படி வந்தவனே பாண்டியன் கீரன் சாத்தன் ஆவான்.

**ஈகைத் திறன் :** ஆவூர் மூலங்கிழார் பாடிய பாட்டைக் குறிப் பிடுங்கால் 'பாண்டியனை கீரஞ் சாத்தனை ஐயூர் மூலங்கிழார் பாடியது' எனக் குறிக்கப் பெற்றிருத்தலின் இவன் பாண்டி

[1] புறநானூறு-51.
[2] Ibid—52.

வேந்தனேயென்பது புலனாகும். ஐயூர் மூலங்கிழாரது[1] பாடலைக் கொண்டு இவன் ஈகைப் பண்பில் இணையற்று விளங்கினானென்பதும், கொற்றத்திலும் குறைவற்றுக் காணப் பெறுகிறானென்பதும், வெற்றிச் சிறப்பிலும் மேம்பட்டு விளங்கினானென்பதும் விளங்குகின்றது.

இவ் வேந்தனது படை ஒரு சமயம் மாற்றாரின் தாக்குதலுக்கு எதிர் நிற்கமாட்டாது புறமுதுகிட்ட செய்தியைக் கேட்டு, சினந்தெழுந்து, தானே படை நடத்திச் சென்று, பகைவரை வெட்டி வீழ்த்தி, பெரு வெற்றியீட்டியதாக, இலக்கியம் சான்று பகர்கின்றது.

## இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன்

**இலவந்திகையென்பது யாது?**

பண்டைத் தமிழர் தாங்கள் வாழ்வதற்குரிய இடங்களைக் கால நிலைகட்குத் (Season) தக்கவாறு மாற்றியமைத்துக் கொள்ளும் முறையினைப் பின்பற்றினர். அவ்வாறு அவர்கள் வாழ்ந்து வந்த இடங்கள் சித்திரமாடம், இலவந்திகைப்பள்ளி, வெள்ளியம்பலம் எனப் பலவகைப்படும்.

> "நிறைக் குறின் நிறைத்துப் போக்குறின் போக்கும்
> பொறிப்படை அமைந்த பொங்கில வந்திகை'

என்னும் பெருங்கதை அடிகளும்,

> 'பன்மல ரடுக்கிய நன்மரப் பந்தர் இலவந்திகை'

என்னும் சிலப்பதிகார அடியும் பண்டைக் காலத்தில் இலவந்திகைப் பள்ளி இருந்ததனைக் குறிப்பிடுகின்றது. பண்டைக் காலத்தில் வேந்தர் பலர் தமது முதுமைக் காலத்தில் இலவந்திகைப் பள்ளிகளில் வாழ்ந்து வந்ததாக இலக்கியச் சான்றுகளாலறியலாம்.

**பெயர்க் காரணம்:** இலவந்திகைப் பள்ளியென்பது தண்ணீரை வேண்டுமளவு தேக்கவும், போக்கவும் செய்யவல்ல பொறிகளால் அமைக்கப்பட்ட வாவியை நடுவிடத்தே கொண்டு நறுமணம் கமழும் பல வகையான மரங்களால் சூழப்பெற்ற எழில்மிக்க மலர்ச் சோலையாகும். ஆசிரியர் அடியார்க்கு நல்லாரும் இதனை நீராவியைச் சூழ்ந்த வயந்த சோலையென்றும் அது மன்னனும் உரிமை மகளிரும் ஆடும் காவற் சோலையென்றும் விளக்குகின்றார்.

[1] Ibid—178.

நன்மாறன் என்னும் இயற்பெயர் கொண்ட இவ் வேந்தன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனென அழைக்கப் பெறுகிறான். இவனைப் போன்றே இலவந்திகைப் பள்ளியில் இறந்துபட்ட சோழ வேந்தன் ஒருவன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நலங்கிள்ளி சேட்சென்னி என அழைக்கப் பெற்றனனென்பது ஈண்டு நினைவிற் கொள்ளத் தக்கதாகும்.

**சான்றுகள்**

இளம் பருவத்திலேயே படைக்கலப் பயிற்சியில் தேர்ச்சி பெற்ற இவன் இணையற்ற வீரனாகத் திகழ்ந்தான். இவனது பேராற்றலும் வன்மையும் காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக் கண்ணனார்,[1] மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் ஆகிய செந்தமிழ்ப் புலவர்களின் பாக்களாலறியப்படுகின்றன. இவனது வெற்றிச் சிறப்பும் கொடைச் சிறப்பும் நக்கீரனார், ஐயூர் மூலங் கிழார்,[2] வடம வண்ணக்கன் பேரி சாத்தனார்,[3] மருதனிள நாகனார்[4] போன்ற செந்தமிழ் வித்தகர்களின் வியத்தகு பாடல்களால் உணர்த்தப் பெறுகின்றன.

செல்வச் செருக்கும், வெற்றிச் சிறப்பும், செங்கோல் திறனும் ஒருங்கே வாய்க்கப்பெற்றுப் பெருவாழ்வு வாழ்ந்த இவன் ஆரம்ப காலங்களில் செருக்குடன் வாழ்ந்ததாகவும், பின்னர் புலவர்களது அறவுரையால் செருக்கழிந்து நல்வாழ்வு வாழ்ந்ததாகவும் புலவர் பெருமக்களது கூற்றாலறியலாம்.

**சிறப்பியல்பு :** குடிமக்களின் குறைபோக்கிப் புலவர்களின் வறுமை நீக்கி, இரவலர்களின் குறிப்பறிந்து, வேண்டுவன வேண்டியாங்கு வழங்கி, கற்றவரையே உற்றவரெனக் கொண்டு, உறவாடி மகிழ்ந்த இவன், சான்றோர்களின் பாராட்டுதல்களும் நல்லாசியும் பெற்று, நெறிமுறை தவறாது நாடாண்டு பெரும் புகழ் தேடிக் கொண்டான்.

மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனாரால் இயற்றப் பட்டு, புறநானூற்றில் ஐம்பத்தாறாவது பாடலாக இடம் பெற்று இருக்கும் பாடலொன்றினைக் கொண்டு சங்க காலத்தில் மேனாட்டு யவனர்கள் மது வகைகளைக் கொண்டு வந்து, நம் தமிழகத்தில் விற்ற செய்தி உணரப்படுகின்றது. அண்மைக் காலத்தில் திருச்சி மாவட்டம் கருவூரில் நடைபெற்ற அகழ்வாராய்ச்சியில்

1 Ibid—57.
2 Ibid—56 (நக்கீரர்); 196 (மூலங்கிழார்)
3 Ibid—198.
4 Ibid—55.

கிடைத்துள்ள யவனர்களது மதுக் குடத்தின் உடைந்த பகுதிகளும் இச் செய்தியினை உறுதிப்படுத்துகின்றன.

**முடிவுரை**

நக்கீரர், தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனை தம் இலம் வயதிலும், இளவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனைத் தனது முதுமைக் காலத்திலும் பாடியதாகத் தெரிகிறது.[1]

## குறுவழுதி

இக் காவலனும் செந்தமிழ்ப் புலமை மிக்க வித்தகனுவான். கல்வி கேள்விகளில் மேம்பட்ட இவன் கற்றோரைப் போற்றி வளர்த்து, மக்களுக்கு நல்லாட்சி நல்கி வந்தான். இவ் வேந்தனைப்பற்றிய வேறு செய்திகள் நமக்கு ஒன்றும் தெரியவில்லை.

வண்டமிழ் வளர்த்த இவ் வழுதி அண்டர் என்பானின் மகனுவான். இவ் வேந்தன் இனிய தமிழ் இலக்கியங்களை இயற்றியதால் இன்னிசை பெற்று விளங்குகின்றனேயன்றித் தன்னாட்சித் திறத்தாலோ, வெற்றிச் சிறப்பாலோ நற்புகழ் பெறவில்லை.

**இயற்றிய பாடல்கள் :** செந்தமிழ்ச் செல்வராகிய இக் குறுவழுதி பாடியனவாக நமக்குக் கிடைத்துள்ள பாடல்கள் மூன்று. இவை மூன்றும் இன்றும் இன்ப இலக்கியங்களாக இலங்குகின்றன. இவை புறநானூற்றில் ஒன்றும், அகநானூற்றில்[2] ஒன்றும், குறுந்தொகையில் ஒன்றுமாக அமைந்துள்ளது.

**பாடலின் சிறப்பு :** அகப்பொருள் புறப்பொருள் ஆகிய இரண்டிலும் அமைந்து விளங்கும் இவனது பாடல்கள் பண்டைத் தமிழரின் காதற் கொள்கையையும் விழுமிய முறையில் எடுத்தியம்புகின்றன. பெண்மை நலத்தினைச் சிறப்பித்துக் கூறும் இவரது பாடல் பெண்ணின் பெருமையினை உலகிற்குப் பறைசாற்றும் உன்னத இலக்கியமாகும்.

1 இராசமாணிக்கனர் டாக்டர் மா. 'பத்துப்பாட்டு ஆராய்ச்சி' சென்னைப் பல்கலைக்கழகம்—1970. பக்கம் 321.

2 புறநானூறு—349; அகநானூறு—150; அண்டர் மகன் குறுவழுதியும், குறுவழுதியும் ஒருவரல்லர்; இருவேறு அரசர்களே என்று புலவர் கா. கோவிந்தன் அவர்கள் கருதுவார். (சங்ககால அரசர் வரிசை—3. திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகம்—1963. பக்கம் 52)

## பன்னாடு தந்த பாண்டியன் மாறன் வழுதி

எட்டுத்தொகையுள் ஒன்றாக வைத்தெண்ணப்பெறும் நற்றிணையைத் தொகுப்பித்து நற்புகழ் கொண்ட நாயகன் இவனே யாவன். இவன் முத்தமிழ் முழுதுணர்ந்த வித்தகனென்பதனைக் குறுந்தொகையிலுள்ள இருநூற்றெழுபதாவது பாடலால் அறியலாம்.

**நற்றமிழ்ப்பணி :** வண்டமிழ் வளர்த்த வேந்தனான இவன் பைந்தமிழ்ப் புலமை மிக்க புலவர் பெருமக்களைப் போற்றிப் புரக்கும் பெற்றியுடையோனாகவும் திகழ்ந்தமை குறிப்பிடத் தக்கதொன்றாகும். 'நற்றிணை' என்னும் தனி சிறந்த தமிழ் நூலினை இவன் நூல் வடிவில் தொகுக்கவில்லையெனில் இப் பாடல்கள் நமக்குக் கிடைக்கப் பெறாமல் அழிந்தோ அல்லது அழிக்கப்பட்டோ போயிருக்கும். ஒன்பதடிச் சிறுமை யும் பன்னிரண்டடிப் பெருமையும் என்று அளவு வகுத்து, இரண்டிற்கும் இடைப்பட்ட அளவு கொண்ட பாடல்கள் நானூற்றைத் தொகுத்துத் தமிழகத்திற்கு வழங்கிய இவனது பணி தமிழ் நெஞ்சங்களில் நிலைத்து நிற்கக் கூடியதாகும்.

**வேறு பெயர்கள் :** இவ் வேந்தன் 'பன்னாடு தந்தான்' எனவும், 'பன்னாடு தந்த பாண்டியன்' எனவும், 'பன்னாடு தந்த பாண்டியன் மாறன் வழுதி' எனவும் அழைக்கப் பெறுகிறான். இவ் வேந்தனைப்பற்றிய அரசியல் செய்தியும், வரலாற்றுச் செய்தியும் நமக்குக் கிடைக்கப் பெறவில்லையாதலின், இவனது ஆட்சியின் மாட்சிபற்றி எதுவும் அறிந்து கொள்ளவியலவில்லை.

இவன் தனது பாடலில் காட்டும் அழகுமிக்க இன்பக்காட்சி இலக்கிய விருந்தினர்க்கு ஒரு நல்விருந்தாகும். தலைவன் தலைவி யுடன் கூடியுள்ள நிகழ்ச்சியும், அதுபோழ்து மழை பொழியும் காட்சியும் நம் நெஞ்சத்தினை விட்டு அகலாத செஞ்சொல் ஓவியங் களாகும்.

பன்னாடு என்பது மைசூர் இராச்சியத்துள் அடங்கிய கங்க வாடி 96,000-த்தைச் சார்ந்ததென்று அறிஞர் கூறுவர். எனவே, இவ் வேந்தன் பன்னாடு என்னும் பகுதியினை வென்று, பின்பு அப் பகுதியினை அவ் வேந்தனுக்கே வழங்கினான் எனக் கொள்ளுதல் தவறுடையதாகாது.

### நல்வழுதி

இவனது பெயரினைக் கொண்டே, இவன் ஒரு பாண்டி வேந்தன் என்பது தெளிவாகிறது. இவ் வேந்தனைப்பற்றிய

வரலாற்றுச் செய்தி எதுவும் நமக்குக் கிடைக்கவில்லை. தீந் தமிழின் திறமுணர்ந்த இக் காவலனது பா வளம் ஒன்றே நமக்குத் தெரிகின்றது. இவன் இயற்றிய இன்ப இலக்கியம் ஒன்றே, இன்றும் நின்று நிலவி, இவ் வேந்தனது புகழ் பாடுகின்றது.

**இயற்கைக் கவிஞன்:** 'பரிபாடல்' என்னும் நூலுள் வையை ஆறு குறித்து எழுந்துள்ள பாடல்கள் எட்டனுள் இவ் வேந்தன் பாடியுள்ள பாடலும்[1] ஒன்றாகத் திகழ்கின்றது. இப் பாடலை பரிபாடலில் பன்னிரண்டாவது பாடலாக இடம் பெற்றுள்ளது. இப் பாடலில் வையையாற்றின் நிலையும் புதுப்புனல் வருகையும் அப் புனல் கண்டு பண்டை மக்கள் மேற்கொண்ட புனல் விழாவும், வையையின் வளத்தால் பாண்டிய நாடு எய்திய சிறப்பும் நன்கு சித்திரிக்கப்பட்டுள்ளன. இவையனைத்தும் பன்முறை படித்தின்புறத் தக்கதாகும்.

இயற்கையைக் கண்டு கண்டு பூரித்த இவர், அவற்றை செஞ்சொல்லோவியமாக, நெஞ்சில் என்றென்றும் மங்காத மறையாத காட்சியாகத் தீட்டியுள்ள திறன் போற்றுதற்குரியதாகும். நல்வழுதியின் நல்லுள்ளத்தையும், புலமை வளத்தையும் இவனது பாடல்களில் காணலாம்.

## நம்பி நெடுஞ்செழியன்

வீரமும் வெற்றியும் செங்கோற் சிறப்பும் மிக்கவனாகிய இம் மன்னன் பெரும் புகழ் கொண்டு பாண்டி நாட்டினைச் சீருடனும் சிறப்புடனும் ஆண்டு வந்தான். இவனது இறப்பினைக் கண்டு வருந்திய பேரெயின் முறுவலார் என்னும் புலவர் பெருமான் பாடிய கையறுநிலைப் பாடல் கல் மனத்தையும் கசியச் செய்யும் பான்மையதாகும். இப் பாடல் புறநானூற்றில் இடம் பெற்றுள்ளது.[2]

**பாண்டிய வேந்தரும் புலமையும்:** பொதுவாகத் தமிழக வரலாற்றின்கண் தாய்மொழியாம் தமிழ் மொழியினைப் போற்றி வளர்த்தவர்களுள் பாண்டி மன்னர்களே முதன்மை வகிக்கின்றனர். இம் மன்னர்களுள் பெரும்பாலோர் தமிழைப் பேணிக் காத்ததுடன், தமிழாய்ந்து செய்யுள் பல இயற்றும் தேர்ச்சியும் புலமையும் பெற்றிருந்தனர் என்பது குறிப்பிடத்தக்கதாகும். சங்க கால இலக்கியத்தினை ஆய்ந்து பார்க்குங்கால், கடைச்

1 பரிபாடல்—10 : 100-102.
2 புறநானூறு-239.

சங்க காலத்தில் செந்தமிழ்ப் புலமை மிக்க பாண்டிய வேந்தர் பன்னிருவர் கவியியற்றினர் என்பது புலப்படுகின்றது. அன்னோர் இயற்றிய பைந்தமிழ்ப் பாக்கள் நற்றிணை, குறுந் தொகை, பரிபாடல், அகநானூறு, புறநானூறு ஆகிய தொகை நூல்களில் இடம் பெற்றுள்ளன. இப் பாடல்களால், சங்க காலப் பாண்டி வேந்தர்களும் சங்கப் புலவர்களுக்கு இணையாகக் கவியியற்றும் ஆற்றலினைப் பெற்றிருந்தனர் என்பது உள்ளங்கை நெல்லிக்கனி.

**காலக் கணிப்பில் சிக்கல் :** இதுகாறும் யாம் கண்ட பாண்டி வேந்தர்களின் ஆட்சிக் காலத்தினையும், எவனுக்குப் பின் எவன் ஆட்சிப் பொறுப்பேற்றான், அவர்களுக்கிடையேயான உறவு முறை யாது? என்பன போன்ற வினாக்களுக்குத் தகுந்த விடை கூறத்தக்க ஆதாரங்கள் சங்க இலக்கியத்தில் கிடைக்கப் பெற வில்லை. இருப்பினும் சங்க கால வேந்தர், குறுநில மன்னர், புலவர் முதலியோரைப்பற்றிய இலக்கியக் குறிப்புகளை ஒப்பிட்டு, வேறுபடுத்திப் பார்த்தால் ஓரளவு உண்மை புலப்படாமற் போகாது.

**இலக்கிய அடிப்படையில் வேந்தர்களைப் பிரித்தல்**

சங்க இலக்கியங்களுள் புறநானூறும் பதிற்றுப்பத்தும் எண்ணிறந்த வரலாற்றுச் செய்திகளைத் தன்னகத்தே கொண்டு உள்ளன. இவற்றுள் பதிற்றுப்பத்து சேரர் வரலாற்றின் தலை சிறந்த கருவூலமாகும். புறநானூறு மூவேந்தரின் வெற்றிச் சிறப்பினை எடுத்துக் கூறும் சிறந்த நூல். எனவே, இவ்விரு நூல்களைப் பெரிதும் அடிப்படையாகக் கொண்டு சங்க காலப் பாண்டி வேந்தர்களின் வரிசையினைப் பின்வருமாறு கூறலாம். பொதுவாகச் சங்க காலப் பாண்டி வேந்தர்களை நான்கு குழுக் களாகப் பகுத்து, அவற்றுள் அடங்கும் சில வேந்தர்களது பெயர்களை மட்டும் காணலாம்.

**முதலாவது தலைமுறை :** முதலாவது தலைமுறையினரில் கருங்கை ஒள்வாள் பெரும் பெயர் வழுதியே முதல் வேந்தனாகப் புறநானூற்றில் குறிக்கப் பெறுகிறான். இவனது உடன் காலத் தினனாகச் சேரநாட்டில் பெருஞ்சோற்று உதியன் சேரலாதன் குறிக்கப் பெறுகிறான்.

**இரண்டாவது தலைமுறை**

இரண்டாவது பிரிவில் பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன், வெற்றிவேற் செழியனை, சித்திரமாடத்துத்

துஞ்சிய நன்மாறன், தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் ஆகியோரைக் குறிப்பிடலாம்.[1] இமய வரம்பன் நெடுஞ்சேரலாதன், அந்துவஞ்சேரல் இரும்பொறை, பல்யானைச் செல்குழுகுட்டுவன், களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல், சேரப் பெருமன்னன் செங்குட்டுவன், பெரும்சேரல் இரும்பொறை, கரிகாலன் முதலியோர் இப் பிரிவினைச் சேர்ந்தவராவர். அதியமான் அஞ்சியை வெற்றி கொண்ட பெருஞ் சேரல் இரும்பொறை இரு பெரு வேந்தரை வென்றதாகக் குறிக்கப்பட்டுள்ளான். இவ் விருவரும் முறையே சித்திர மாடத்துத் துஞ்சிய நன்மாறனும், இராசசூயம் வேட்ட பெருநற் கிள்ளியாகவும் இருத்தல் கூடும்.

**மூன்றுவது தலைமுறை**

கானப் பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதி, இவனை யடுத்து வெள்ளியம்பலத்துத் துஞ்சிய மாறன் வழுதி, கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதி, இவர்களையடுத்து ஒல்லையூர் தந்த பூதப் பாண்டியன் ஆகியோர் குறிப்பிடப் பெறுகின்றனர். இப் பகுதியில் இறுதியாக இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன் குறிக்கப் பெறுகிறான். உக்கிரப் பெருவழுதி, சோழன் இராசசூயம் வேட்ட பெருநற் கிள்ளி, சேரமான் மாரி வெண்கோ ஆகிய மூவரும் சேர்ந்தமர்ந்திருந்தபோது ஔவையார் இவர்களைப் பாடியுள்ளார். இதனால் இம் மூவரும் சம காலத்தவர் என்பது புலனாகும். புலவர் நக்கீரர் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனையும், இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனையும் பாடியுள்ளதால் இவர்கள் இருவரும் இப் புலவரது காலத்தில் வாழ்ந்தவரெனலாம்.

**நான்காவது தலைமுறை**

நான்காவது பிரிவில் பாண்டியன் அறிவுடைநம்பியும், சேரமான் குட்டுவன் கோதையும், கோப்பெருஞ் சோழனும் அங்கம் பெறுவர்.

சிலர் சங்க காலத்து வேந்தர் குறுநில மன்னர், புலவர் ஆகியோரை ஐந்து தலைமுறையாகப் பிரிப்பர்.[2] இதில் பேரரசர் யாரும் காணப் பெறவில்லை. எனவே, நாம் நான்குடன் நிறுத்திக் கொண்டோம். இவர்களனைவரும் கி. பி. இரண்டாம் நூற்றாண்டிற்கு முற்பட்டவரென்று தெரிகிறது.

[1] இந்திரா சுப்புலட்சுமி, டாக்டர் வெ. 'சங்ககால அரசர்கள், வள்ளல்கள், புலவர்கள் தலைமுறை குறித்த ஓர் ஆராய்ச்சி'—'லண்டன் தமிழ்ச்சங்க ஆண்டு மலர்—1972-73. பக்கம் 38, (நண்பர்கள் அச்சகம், சென்னை-600018)

[2] Ibid. பக்கம் 32.

**முடிந்த முடிபல்ல:** கடைச் சங்க காலத்துப் பாண்டி வேந்தர்களைப்பற்றிய செய்திகள் பெரும்பாலும் சங்க இலக்கியத்தினை அடிப்படையாகக் கொண்டே கணிக்கப்பட்டுள்ளன. இக் காலத்திய வேந்தர்களைப்பற்றி ஓரிரண்டு கல்வெட்டுகளும் செப்பேடுகளுமே நமக்குக் கிடைத்துள்ளன. வேந்தனைப் புகழ்ந்து பாடும் புலவர் பெருமக்கள், அவனது வெற்றிச் சிறப்பையும் கொடைச் சிறப்பையும் அளவுக்கு மீறிப் புகழ்வதும், மிகைப்படுத்திக் கூறுவதும் உண்டு. இப் புலவர்கள் வேந்தனது பிற அரசியற் செய்திகளை விரிவாகக் கூறாத காரணத்தால் இவர்களைப்பற்றிய தெளிவான வரலாறு நமக்குக் கிடைக்கவில்லை. பாண்டி வேந்தருள் பெரும்பாலோர் செய்யுளியற்றும் திறன் பெற்றிருத்தலின், அவர்களது பாக்களைக் கொண்டு அவர்களது கல்வியறிவினையும், புலமையினையும், மனப்பான்மையினையும் நாம் ஓரளவு அறிந்து கொள்ள முடிகின்றது. இலக்கியத்தினை மட்டுமே ஆதாரமாகக் கொண்டுள்ள இப் பாண்டி வேந்தர்களைப் பற்றிய செய்திகள், சில இலக்கிய அறிஞர்களால் மறுக்கவும், மாற்றவும் படலாம். இதனை முடிந்த முடிபாகக் கொள்ளுதல் இயலாது.

# 6. களப்பிரர் இடையீடு

**சங்க காலத்தின் தொடக்க காலம்**

தமிழ்நாட்டின் சங்ககாலம்! இதுவே தமிழரின் தங்க காலம்! தமிழ் மொழியின் உயர்ச்சிக் காலம்! தமிழ் இலக்கியத்தின் மலர்ச்சிக் காலம்! கடல் கடந்த வாணிகத்தின் வளர்ச்சிக் காலம்! தமிழர் பண்பாட்டு வளர்ச்சியின் உச்ச காலம்! தமிழர் பொருளாதார வளர்ச்சியில் உயர்ச்சியுற்ற காலம்! பாண்டியரின் பெருமை பல்லிடத்தும் பல்கிப் பெருகிய காலம்!

தமிழரின் நெஞ்சத்தினை விட்டகலா இக் கால கட்டம் தமிழ் நாட்டின் வரலாற்றில் பொன்னுன மூத்துக்களால் பொறிக்கப் பட வேண்டிய பெருமையினைக் கொண்டு விளங்கிய காலமாம். இத்தகு சீர்மிக்க காலம் சீரழிந்தது – சிறப்பிழந்தது - இல்லை! இல்லை! சீரழிக்கப்பட்டது-பெருமை ஒழிக்கப்பட்டது-இதனை யடுத்துப் புதியதொரு கால கட்டம் உருவாயிற்று. அதுவே களப்பிரர் காலம்!

**களப்பிரர் காலம்:**

கி.பி. 250-க்கும் 575-க்கும் இடைப்பட்ட காலம்—

தமிழரின் மேன்மை தடைப்பட்ட காலம்.
களப்பிரரின் இடையீட்டுக் காலம்.
களப்பிரரின் படையெழுச்சிக் காலம்.
தமிழ் வேந்தர்தம் வீழ்ச்சிக் காலம்.
முடியுடை மூவேந்தர் முடியிழந்த காலம்.
இது தமிழகத்தின் இருண்ட காலம்.
இல்லை! இல்லை! இருட்டடிப்புக் காலம்!
சமணம் பெருகிய காலம்.
வைதீக சமயம் அருகிய காலம்.
தமிழ்ச் சங்கத்தின் வீழ்ச்சிக் காலம்.
சமண சங்கத்தின் உயர்ச்சிக் காலம்.
வடமொழி ஆதிக்கத்தின் உச்ச காலம்.

இவ்வாறு தமிழ்நாட்டு வரலாற்றில் பெரிதொரு மாற்றத்தினை-புரட்சியினை ஏற்படுத்திய களப்பிரர் யாவர்? எங்கிருந்து வந்தனர்?

அவர்களது பூர்வீகம் யாது? அவர்களது ஆட்சிச் சிறப்பு யாது? என்பனபோன்ற வினாக்களுக்கு இதுகாறும் சரியான விடை இறுக்கப்படவில்லை. இவ் வினாக்கள் வரலாற்றறிஞரிடையே பெரும் பரபரப்பையும்-கலகலப்பையும் ஏற்படுத்தியுள்ளன.

இவ் வினாக்களுக்கு நாம் விடைகூறப்படுமுன் களப்பிரரைப் பற்றி அறிவிக்கும் இலக்கிய, கல்வெட்டு, செப்பேடு ஆதாரங்களைப்பற்றி அறிவது நலம் பயப்பதாகும்.

**ஆதாரங்கள்**

**(அ) இலக்கிய ஆதாரங்கள்:-** தமிழ் நாவலர் சரிதை, யாப்பருங்கலம், பெரிய புராணம், விநயவினிச்சயம் ஆகியவற்றில் களப்பிரரைப்பற்றிய செய்திகள் சில கூறப்பட்டுள்ளன. தமிழ் நாவலர் சரிதையில் உள்ள 154, 155, 156, 157 ஆகிய நான்கு பாடல்களும் களப்பிரரைப்பற்றி குறிப்பிடுகின்றன.

யாப்பருங்கலம் என்னும் இலக்கணநூல் நந்திமலையில் ஆட்சி புரிந்து வந்த அச்சுதக் களப்பாளன் என்பானைக் குறிப்பிடுகின்றது. பெரிய புராணம், மூர்த்தி நாயனர் காலத்தில் மதுரை மாநகரின்கண் வடுகக் கருநாடக வேந்தன் பாண்டிய நாட்டைக் கைப்பற்றி ஆண்டான் என்பதனைக் குறிப்பிடுகின்றது.[1]

அறுபத்து மூன்று நாயன்மார்களுள் ஒருவரான கூற்றுவ நாயனரைப்பற்றி நம்பியாண்டார் நம்பி, 'ஓதம் தழுவிய ஞாலமெல்லாமொரு கோயில் வைத்தான் கோதை நெடுவேல் களப்பாளன் ஆகிய கூற்றுவனே'—எனக் கூறுகின்றார். வேந்தர் பலரை வென்று பெரும்புகழ் பெற்ற இவ் வேந்தன், தில்லைவாழ் அந்தணர்களிடம் தனக்கு முடிசூட்டி வைக்கும்படி வேண்டியதாகவும், ஆனல், அவர்கள் மறுத்துவிடவே, பின் அவன் இறைவனை வேண்டியதாகவும் கூறப்படுகின்றது. சிவபிரானும் அவர்பால் அருள்கொண்டு தமது திருவடியையே அவர்கட்கு முடியாகச் சூட்டியதாகவும் பெரியபுராணத்தில் கூறப்பட்டுள்ளது.[2] 'விநயவினிச்சயம்' என்னும் பாலிமொழியில் உள்ள

1 'கானக் கடிசூழ் வடுகக்கரு நாடர் காவலன்
மானப் படைமன்னன் வலிந்து நிலங் கொள்வானய்
யானைக் குதிரை கருவிப்படை வீரர் திண்டேர்
சேனைக் கடலுங் கொடுதென் திசை நோக்கி வந்தான்'
வந்துற்ற பெரும்படை மண்புதைய பரப்பிச்
சந்தப் பொதியில் தமிழ்நாடுடை மன்னன் வீரம்
சிந்திச் செருவென்று தன்னுணை செலுத்தும் ஆற்றல்
கந்தப் பொழில்சூழ் மதுராபுரி காவல் கொண்டான்!
பெரியபுராணம்-மூர்த்திநாயனர் புராணம்–11,12

2 பெரியபுராணம் — கூற்றுவ நாயனர் புராணம்.

நூலில் சோழநாட்டை அரசாண்டு வந்த அச்சுத விக்ரந்தன்[1] என்னும் பெயர்கொண்ட களப்பிர[2] மன்னனைப்பற்றிய குறிப்பு காணப்படுகின்றது. விநயவிநிச்சய நூலாசிரியரான புத்ததத்தர், புத்தகோஷரது காலமான கி.பி. 350-ல் வாழ்ந்தவர்.[3]

**செப்பேடு, கல்வெட்டு ஆதாரங்கள்**

களப்பிரரைப்பற்றிக் குறிப்பிடும் செப்பேட்டுச் சாசனங்களுள் வேள்விக்குடிச் செப்பேடுகள் முதன்மையானவை. அடுத்து தளவாய்புரச் செப்பேடு, வேலூர் பாளையச் செப்பேடு, பள்ளங்கோயில் செப்பேடு, முதலாம் பரமேஸ்வரவர்மனது கூரம் செப்பேடு, இரண்டாம் சாளுக்கிய விக்கிரமாதித்தியனது நெரூர்ச் சாசனம் வினயாதித்தியனது ஹரிஹர் சாசனம் முதலானவைகளும் களப்பிரரைப்பற்றிக் குறிப்பிடுகின்றன.

செந்தலைக் கோயில் மண்டபத்தூண் கல்வெட்டு, காஞ்சி வைகுந்தப் பெருமாள் கோயில் கல்வெட்டு, திருப்புகலூர்க் கல்வெட்டு முதலானவையும் இவர்களைப்பற்றிக் குறிப்பிடுகின்றன.

கடுங்கோன் என்னும் பாண்டி நாட்டு வீரன் களப்பிரரை வென்று பாண்டி நாட்டைக் கைப்பற்றினான் என்று வேள்விக்குடிச்செப்பேடுகள் விரித்துரைக்கின்றன.[4] அடுத்து தளவாய்புரச் செப்பேடும்[5] களப்பிரரை வென்றவன் மாக்கடுங்கோன் என்பதனையே குறிப்பிடுகின்றது.

சிம்மவிஷ்ணு களப்பிரரிடமிருந்து சோழநாட்டை மீட்டான் என்று வேலூர்பாளையம் செப்பேடும், பள்ளங்கோயில் செப்பேடும் கூறுகின்றன. செந்தலைக் கல்வெட்டும், வைகுந்தப் பெருமாள்கோயில் கல்வெட்டும் முத்தரைய மன்னனைப்பற்றிக் குறிப்பிடுகின்றன. நெற்குன்றம் கிழார் என்னும் களப்பாள அரசனைப்பற்றித் திருப்புகலூர்க் கல்வெட்டு உணர்த்துகின்றது. மேற்கூறப்பட்ட செப்பேடுகளில் களப்பிரர்பற்றி குறிப்பிடப் பெறுகின்றது. ஆனால், அவர்களைப்பற்றிய விரிவான செய்திகள் கூறப்பட்டில.

[1] புகாரைத் தலைநகராகக் கொண்டிருந்தான் – புத்ததத்தர் நூலாசிரியர். Nilakanta sastry, 'Colas' Vol. I p. 121.

[2] இவன் களப குலத்தைச் சேர்ந்தவன் என்று தெரிகிறது. University of Ceylon Review. (1948) p. 37; வேங்கடசாமி. மயிலை சீனி. 'பௌத்தமும் தமிழும்'.

[3] Law, K.C. 'Life and works of Buddagosha' – p.43.

[4] வேள்விக்குடிச் செப்பேடு, பாண்டியர் செப்பேடுகள் பத்து-பக்.38.

[5] தளவாய்புரச் சாசனம். பாண்டியர் செப்பேடுகள் பத்து–பக். 125.

அடுத்து, தொல்காப்பியச் சிறப்புப் பாயிரத்திலும், புறநானூற்றிலும், அகநானூற்றிலும், மதுரைக்காஞ்சியிலும், குறுந்தொகையிலும் வடுகர்பற்றிய குறிப்புகள் காணப்பெறுகின்றன. களப்பிரரால் வெளியிடப்பெற்ற கல்வெட்டுகளோ, செப்பேடுகளோ, நாணயங்களோ இதுகாறும் ஒன்றுகூடக் கிடைக்கப் பெறாமையின் மேற்கூறிய ஆதாரங்களையே நாம் அடிப்படையாகக் கொள்ள வேண்டியுளது. ஒருவேளை அவை பாண்டியராலும் பல்லவராலும் மறைக்கப்பட்டு அழிக்கப் பட்டிருக்கலாம்.

## களப்பிரரைப்பற்றி அறிஞர்களது கருத்து

களப்பிரர் யாவர்? இவர்பற்றி அறிஞர்கள் செப்புவன யாவை? என்பனபற்றி ஈண்டுக் காண்போம்.

### டி. ஏ. கோபிநாதராவ்

காஞ்சி வைகுந்தப் பெருமாள் கோயில் கல்வெட்டில்[1] நந்திவர்ம பல்லவமல்லனது முடிசூட்டு விழாவில் அவ் வேந்தனை வரவேற்றதாக சுவறன்மாறனாகிய இரண்டாம் பெரும்பிடுகு முத்தரையன் என்பான் குறிக்கப்பெறுகின்றான். இவன் கள்வர் காவலன் என்று செந்தலைக் கல்வெட்டில் சிறப்பித்துப் பேசப் படுகின்றான்.[2] எனவே, கள்வன் என்ற சொல்லே களப்பிரர் என்று வடமொழியில் திரிந்ததாகும். இதனால் களப்பிரர் முத்தரையரே என்று கோபிநாதராவ் கருதினார். அடுத்து, பாண்டியன் கடுங்கோன் தனது ஆட்சியைக் கைப்பற்றுமுன் அவன் வெற்றி கொண்டது முத்தரையரையேயாகும் என்றும் அவர் கருதினார். மேற்கூறியவற்றான் களப்பிரரும், முத்தரையரும் ஒருவரே என்னும் கருத்தினைத் திரு. கோபிநாதராவ் வலியுறுத்தினார் எனலாம்.

### மு. இராகவ ஐயங்கார்

முத்தரையரும் களப்பிரரும் ஒருவரே என்னும் மேற்கண்ட கருத்தை மறுத்துப் பேசும் திரு. மு. இராகவையங்கார்[3] களப்பிரர் என்போர் வெள்ளாளக் களப்பாழரே என்று வாதிடுகின்றார். சிவஞானபோதத்தின் ஆசிரியரான மெய்கண்டாரின் தந்தை அச்சுத களப்பாளர் என்பாரையும் ஒரு வெள்ளாளராகவே

1 Fn. on p. 49 to his edition of the Anbil plates of Sundara Chola: E. I. Vol. XV.

2 கோபிநாதராவ், ஆர். செந்தமிழ்—பாகம். 6.

3 Journal of Indian History. Vol. 8. part. I, April 1922. S. No. 22 p. 74.ff.

கருதுதல் வேண்டும் என்று அவர் கூறுகின்றார். அடுத்து, புத்த தத்தரால் குறிக்கப்பெறுகின்ற அச்சுதவிக்ரந்தனும், தமிழ் நாட்டில் சங்ககால அரசை மாய்த்தவனுமான களப்பாளனும் ஒருவனேயாகும் எனவும் அவர் கருதுகின்றார்.

மேலும், தமிழகத்தில் களப்பிரரின் ஆட்சி 5, 6-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும், - ஏன் - ஏழாம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் நீடித்ததென அவர் கூறுகிறார். இக் கருத்தை நாம் ஏற்றுக்கொள்ள இயலாது. காரணம் 6-ஆம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியிலேயே களப்பிரர் ஆட்சி பாண்டி நாட்டிலும், சோணாட்டிலும் ஒழிக்கப்பட்டதென்பது செப்பேட்டுச் சாசனங்களால் உறுதி செய்யப்படுகின்றன.

இறுதியாக யாப்பருங்கலத்தில் அச்சுதவிக்ரந்தன் பிராமணர்களைப் பேணிக்காத்தானெனக் குறிக்கப் பெற்றுள்ளதால் இவனோர் தமிழரசனேயன்றி கலிகுல அரசனல்ல என்றும் வாதிடுகின்றார். இக் கருத்தினைத் திரு. எஸ். கிருஷ்ணசாமி ஐயங்கார் மறுக்கின்றார். யாப்பருங்கலத்திலேயே களப்பிரரது இருப்பிடம் நந்திமலையென்று குறிக்கப் பெற்றுள்ளதால்[1] இக் கருத்து பிழைபட்டதேயென்றும் அவர் கூறியுள்ளார்.

**எஸ். கிருஷ்ணசாமி ஐயங்கார்**

சங்க இலக்கியங்களில் வேங்கடமலைத் தலைவனாகக் குறிக்கப் பெறும் புல்லி என்னும் வீரனைக் களப்பிரருடன் தொடர்பு படுத்துகிறார் ஐயங்கார்.[2] வேங்கடமலைப் பகுதியினரும் களவர் என்றே அழைக்கப் பெற்றதாகவும் அவர் கூறுகின்றார். ஆந்திர அரசர்களாலும், வலிமைமிக்க பல்லவர்களாலும் நெருக்குண்ட இவர்கள் முதன் முதலில் தொண்டை மண்டலத்தில் புகுந்து, பின்னர் சோழநாட்டில் ஆட்சியை நிறுவினரென்பதும், சில காலம் கழித்துப் பாண்டி மண்டலத்தையும் கைப்பற்றிக் கொண்டனர் என்பதும் அவரது கருத்தேயாகும். பிற்காலத்தில் தஞ்சையையடுத்தும், கொடும்பாளூரிலும் வாழ்ந்து வந்த முத்தரையர் களப்பிரரேயாவாரென்றும் அவர் கருதுகின்றார். இவரது கருத்து பெரும்பாலும் ஏற்றுக்கொள்ளத்தக்கதாகத் தெரிகிறது.

[1] 'பெரும்புகழ் அச்சுதக் கோவே!
நந்திமா மலை சிலம்ப!

[2] ஆர். கோபாலன் இயற்றிய 'காஞ்சிப் பல்லவர்' (Pallavas of Kanchi என்னும் நூலின் முன்னுரை.

**கே. ஆர். வெங்கட்டராமய்யர்**

கி. பி. ஐந்தாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் பெங்களூர்-சித்தூர் பகுதியில் வாழ்ந்து வந்த களப்பிரர் அந் நூற்றாண்டின் பிற்பகுதியில் தமிழகம் போந்தனரென்று அவர் கருதுகின்றார்[1] ஆரம்ப காலத்தில சிரவணபெல்கோலாவுக்கருகில் தமது ஆதிபிடத்தினை அமைத்துக் கொண்டிருந்த இவர்கள் கதம்ப அரசர்களது படையெழுச்சியால் கிழக்கு நோக்கி விரைந்தனர் என்றும் கூறுகின்ற இவர் கலியரசராகிய களப்பிரருடன் கலி யுகம், கலிகுலம் ஆகியவற்றைத் தொடர்புபடுத்துகின்றார். இவரது ஊகம் ஒரு வகையில் சரியாகவிருப்பினும் இவர்கள் ஐந்தாம் நூற்றாண்டின் பிற்பகுதியில்தான் தமிழகத்தில் நுழைந்தனர் என்று கூறுதல் பொருத்தமாகத் தோன்றவில்லை.

**வெங்கையா (Venkayya)**

இவர், களப்பிரர் தமிழகத்தைக் கைப்பற்றிய நிகழ்ச்சியை மூர்த்திநாயனார் புராணத்திலும் (பெரியபுராணம்) திருவிளையாடற் புராணத்திலும் கூறப்பட்டுள்ள செய்திகளுடன் ஒப்பிட்டுக் காட்டுகிறார். மேலும், தலையாலங்கானத்துப் போரில் நெடுஞ் செழியனை எதிர்த்த பலருள்ளும் ஒருவனாகக் கூறப்பெறும் எருமையூரனைக் களப்பிரனாகக் கருதுகின்றார்.[2] திரு. வெங்கையா அவர்களது கருத்தினைத் திரு. நீலகண்ட சாஸ்திரியார் மறுக் கிறார்.[3] இருப்பினும் எருமையூரனைக் களப்பிரன் என ஊகிக்கும் இவரது கருத்து மிகவும் பொருத்தமுடையதாகவே தோன்று கிறது.

**பி. டி. சீனிவாச அய்யங்கார்**

'தமிழக மூவேந்தரும் களப்பாளரைத் தமிழ்ப் பாக்களால் பாராட்டியிருத்தலின் களப்பாளர்கள் தமிழ்க்குறுநில மன்னர் களேயாவர்' என்பதனைத் 'தமிழர் வரலாறு' என்னும் தமது நூலில் திரு. பி. டி. சீனிவாச அய்யங்கார்[4] குறிப்பிடுகின்றார்.

'களப்பிரர்கள் கொடும்பாளூர் முத்தரையர் மரபினர்' ஆவர் என்னும் கருத்தினையும் அறிஞர்[5] கொண்டுள்ளனர். (The History and culture of the Indian People' p-226.)

1 Journal of Indian History. vol. 34. P. 183.
2 A. R. E. 1908. P. 53.
3 Nilakanta Sastry, K. A. 'The Pandyan Kingdom', P. 43' Foot Note
4 Srinivasa Iyengar, P. T. 'History of the Tamils' – P. 534.
5 'The History And culture of the Indian People' – P. 226.

**மறைமலை அடிகளார்**

களப்பிரர், கன்னட நாட்டைச் சார்ந்தவர்[1].

தமிழறிஞர் மறைமலை அடிகளாரது கருத்துரையில் களப்பிரர் கன்னட நாட்டினைச் சார்ந்தவர் என்று வலியுறுத்துவதனைச் சிறிது ஆய்ந்து பார்க்குங்கால் இதில் உண்மை பொதிந்துள்ளது என்பதனை நாம் அறியலாம். அண்மைக் காலத்தில் கிடைத்துள்ள ஒரு சில சான்றுகள் இதனை உறுதிப்படுத்துவதாகவும் உள்ளது. களப்பிரர்பற்றிய சாசனங்கள் கன்னட நாட்டில்தான் மிகுதியாகக் காணப்படுகின்றன. ஹோஸ்கட் என்னும் கன்னட நாட்டூரில் உள்ள வீரக்கல் ஒன்றில் 'களவர நாடு' என்ற ஒரு தொடர் காணப்படுகிறது. கதம்ப குல வேந்தன் காகுஸ்தன் (கி. பி. 425-450) 'களபோரர்' என்ற பழங்குடியினரின் பகைவன் என்று கல்வெட்டுகளில் கூறப்பட்டுள்ளது.[2]

அசோகனது கல்வெட்டில் களப்பூரியர் என்ற ஒரு மரபினர் குறிக்கப் பெற்றுள்ளனர். இவர்கள் களப்பிரரேயாவர் என்ற கருத்தும் இவரால் கூறப்படுகின்றது.[3]

**பண்டாரகர் மா. இராசமாணிக்கனார்**

'தமிழகத்திற்கு வெளியே வேற்றரசர் பட்டயங்களில் இவர்கள் (களப்பிரர்) குறிப்பிடப்படாமையின், இவர்கள் தென்னிந்தியரே என்பது தேற்றம்' என்று பண்டாரகர் திரு. மா. இராசமாணிக்கனார்[4] கூறுகின்றார்.

**சதாசிவ பண்டாரத்தார்**

கல்வெட்டறிஞர் திரு. டி. வி. சதாசிவ பண்டாரத்தாரோ மேற்கூறிய கருத்தை மறுத்துப் பேசுவார். அவர் கூறுவதாவது: 'சங்க நூல்களில் களப்பிரர் என்ற பெயர் காணப்படாமையானும், வராகமிகிரர் என்பார் தென்னாட்டவரின் வரிசையில் களப்பிரரைக் கூறாமையானும், அன்னார் பிராகிருதம், பாலி ஆகியவற்றைத் தமக்குரிய மொழிகளாகக் கொண்டு ஆதரித்துள்ளமையானும், அம் மரபினர் தமிழர் அல்லர் என்பதும், வடபுலத்தினின்றும் போந்த ஏதிலார் ஆவர் என்பதும் நன்கு

1 மறைமலை அடிகளார் 'மாணிக்கவாசகர் வரலாறும் காலமும்' பக். 269.
2 பன்னீர்செல்வம், இர. 'தமிழ்நாடும் களப்பிரர் ஆட்சியும்' பக். 29-30
3 மறைமலை அடிகளார் 'மாணிக்கவாசகர் வரலாறும் காலமும்' பக். 269.
4 இராசமாணிக்கனார், மா. 'பல்லவர் வரலாறு' (கழகம்) பக். 37.

புலனாகும். எனவே, களப்பிரர் தென்னிந்தியாவினரே என்னும் சில ஆராய்ச்சியாளர்களின் கொள்கை பொருந்தாமை காண்க. களப்பாள் என்ற சோணாட்டூரொன்றில் முற்காலத்தில் வாழ்ந்து கொண்டிருந்த அரசியல் தலைவன் ஒருவன் களப்பாளன் என்று சிறப்பித்து வழங்கப் பெற்றமையான், அவன் வழியினர் களப்பாளராயர் என்னும் குடிப்பெயர் பெற்றுப் பெருமையோடு வாழ்ந்து வருவோராயினர். எனவே, தமிழராகிய களப்பாளரும் ஏதிலாராகிய களப்பிரரும் ஒருவரேயாவர் என்னும் முடிபு எவ்வாற்றானும் ஒத்துக் கொள்ளத்தக்கதன்று.'[1]

ஆனால், அண்மையில் கிடைத்துள்ள தளவாய்புரச் செப்பேட்டில் 'கற்றறிந்தோர் திறல் பரவக் களப்பாழரைக் களைகட்ட மற்றிரடோள் மாக்கடுங்கோன்' என்று குறிக்கப்பட்டுள்ளது. இதனால் 'களப்பிரரென்னும் கலியரசன்' என்று சின்னமனூர்ச் செப்பேடு குறிப்பிடுவதும் 'களப்பாழர்' என்று தளவாய்புரச் செப்பேடு குறிப்பிடுவதும் ஒருவனையே என்பது தெற்றெனப் புலனாகிறது. இதனால் களப்பிரரும் களப்பாளரும் வேறானவர் என்ற பண்டாரத்தார் கருத்து வலிமையிழக்கிறது. தளவாய்புரச் செப்பேடு பண்டாரத்தார் அவர்கட்குக் கிடைக்கப் பெறாமையான் அவர் அவ்வாறு கூறினாரெனக் கொள்ளலாம்.

### டி. வி. மகாலிங்கம்

திரு. டி. வி. மகாலிங்கம் அவர்கள்[2] ஒளியரே களப்பிரர் என வாதிட்டு அதற்கு ஆதாரமாக வேள்விக்குடிச் செப்பேட்டைக் காட்டுகின்றார். இக் கருத்து வலிவுடையதாகத் தோன்றவில்லை.

### பண்டாரகர் பன்னீர்செல்வம்

'இவர்களது பெயரடைகளைக் கொண்டும், இவர்களது நாடு வேங்கடமும், வேங்கடத்தும்பரும் என்பது கொண்டும், அது தமிழ்மொழியல்லாத வேற்றுமொழி பயிலப்பெற்ற மொழி பெயர் தேயம் என்பது கொண்டும் களப்பிரர் புல்லியினத்தவராக வேங்கடமலைச் சாரல் பகுதியினை ஆண்டு வந்த ஒரு மலைவாழ் அரச குடியினராக இருந்திருக்க வேண்டும் என்ற முடிவுக்கு வரலாம்' என்று திரு. பன்னீர்செல்வம் அவர்கள்[3] கருதுகின்றார். களப்பிரரும் முத்தரையரும் ஒருவரே என்னும் கருத்தினையும் இவர் ஏற்றுக்கொள்கின்றார்.

1 சதாசிவ பண்டாரத்தார், தி.வை., 'பாண்டியர் வரலாறு' பக். 82.

2 Mahalingam, T. V. 'Kanchipuram in Ancient South Indian History'.

3 பன்னீர்செல்வம், இரா. 'தமிழ்நாடும் களப்பிரர் ஆட்சியும்' பக். 30–31.

**டி. என். சுப்பிரமணியன் அவர்கள்**

'அவ்வாறெனில் முத்தரையரைக் களப்பிரர் என்று கருதுவது தவறாகாது... ...... களப்பிரர் ஆட்சி வீழ்ச்சியடைந்த பின்னர் அப்பரம்பரையினர் சிற்றரசராகத் தாழ்ந்து தஞ்சாவூர்ப் பகுதிகளில் அரசாண்டு முத்தரையர் என்று பெயர் பெற்றிருந்தனர் போலும்' என்று திரு. டி. என். சுப்பிரமணியன் அவர்கள் குறிப்பிடுகின்றார்.[1]

**க.ப. அறவாணன்**

களப்பிரர் தமிழரே என்னும் கருத்தினை திரு. க. ப. அறவாணன் அவர்கள் வலியுறுத்திக் கூறுகின்றார்.[2]

**நடன காசிநாதன்**

களப்பிரர் என்பார் மைசூரின் தெற்குப் பகுதியிலும் தமிழகத்தின் வடஎல்லையுமான பகுதிகளில் வாழ்ந்து வந்தவரென்றும், அவர்கள் வேளிர் மரபினைச் சேர்ந்தவர்கள் என்றும் திரு. நடனகாசிநாதன் அவர்கள் கருதுகின்றார்.[3]

**வேறு சில கருத்துகள்**

**கருநடவேந்தன் :** களப்பிரர் கன்னட நாட்டிலிருந்து இடம் பெயர்ந்து வந்து, தமிழ்நாட்டைக் கைப்பற்றி ஆண்டனர் என்றும் (பெரியபுராணம்) மூர்த்தி நாயனார் புராணத்திலும், கல்லாடச் செய்யுளிலும் கூறப்படுகின்ற கருநடவேந்தன் களப்பிர வேந்தனே என்றும் ஆய்வாளர் சிலர் கருதுகின்றனர்.

**சாதவாகனரின் வழியினர்**

தக்கண நாட்டினையாண்டுவந்த சாதவாகன மன்னனான சதகர்ணியன் வீழ்ச்சிக்குப் பின் அவனது கிளையினரே தமிழகத்தைக் கைப்பற்றி ஆண்டிருக்கக் கூடும் என்றும் அவர்களே களப்பிரர் என்றும் சிலர் கருதுகின்றனர்.

**குறும்பர்**

தமிழ்நாட்டிலிருந்த குறும்பர் என்னும் சிற்றரசர்கள் தம்முள் ஒன்றுபட்டு முடிமன்னரை வென்று தமிழகத்தில் தமது ஆட்சியை நிறுவினரென்றும், அவர்களே களப்பிரர் எனப்பெயர்

1 சுப்பிரமணியன், டி.என். 'பாண்டியர் செப்பேடுகள் பத்து' பக். அ. 51.

2 அறவாணன், க.ப. 'சைனரின் தமிழிலக்கண நன்கொடை'. பக். 65 (1974).

3 நடனகாசிநாதன். முடிவேந்தர் முத்தரையர் 'முத்தரையர் முரசு' மலர் 1 இதழ் 1. 15-8-1974 (ஆசிரியர். ஊருணி முத்தரையன்) பக். 10;

பெற்றிருந்தனரென்றும் சிலர் கருதுகின்றனர். இச் சிற்றரசர் கலவரம் செய்து நாட்டைக் கொண்டமையின் களபரர் என்று பெயர் பெற்றிருக்கலாம் என்றும் கருதுகின்றனர்.

மேற்கூறப்பெற்ற பல்வேறு கருத்துகளின் அடிப்படையில் நாம் நான்கு கொள்கைகளை மனத்திற் கொள்ளலாம். அவை:

(1) களப்பிரர் கன்னட நாட்டைச் சேர்ந்தவர்.

(2) களப்பிரர் வடவேங்கடப்பகுதி (காளத்திமலைப் பகுதி)யைச் சேர்ந்தவர்.

(3) களப்பிரரும் முத்தரையரும் ஒருவரே.

(4) களப்பிரர் தமிழரே.

இந் நான்கு கொள்கைகளைப்பற்றியும் நாம் தனித்தனியே ஆய்ந்து பார்க்கலாம். களப்பிரரது பூர்வீகத்தைப்பற்றி நாம் ஆய்வதற்கு முன்பு 'களப்பிரர்' என்னும் சொல் எவ்வாறு தோன்றியது? அதன் வரலாறு என்ன என்பதனையும் சிறிது பார்க்க வேண்டியது அவசியமாகிறது.

**களப்பிரர் என்னும் சொல் :** களப்பிரரின் பூர்வீகம் கன்னட நாடாகும். கன்னடக் கல்வெட்டுகளில், 'களவரநாடு' 'களவாப்பு', 'களபோரா' போன்ற பெயர்கள் குறிக்கப்படுகின்றன. களவர நாட்டைச் சேர்ந்தவர் 'களவர்' என அழைக்கப்பட்டனரென்பது பொருத்தமுடையதாகும். காளத்திமலைப் பகுதியில் வாழ்ந்து வந்த மக்களும் 'களவர்' என்றே அழைக்கப் பெறுகின்றனர். இக் களவர் என்ற சொல் வடமொழியில் 'களப்பர' என்று மாற்றம் பெற்றது. இச் சொல் தமிழில் களப்பிரர் எனப்பட்டது. களவர் என்பது தமிழிலக்கியங்களில் கள்வர் என்றாகிப் பின்பு களப்பிரர் எனப் பெயர்பெற்றிருக்க வேண்டும். களவர் கோமான் என்றிருக்க வேண்டியபாடமே 'கள்வர் கோமான்' எனப் பிழைபட எழுதப்பட்டுவிட்டது எனலாம். பொதுவாகப் பண்டைக் காலத்தில் பனையோட்டிலும், கல்வெட்டிலும் எழுத்துகள் எழுதப்பெறுங்காலை மெய்யெழுத்துகளில் புள்ளியிடுதல் வழக்கமில்லை. புள்ளி வைப்பதனுல் பனையேட்டில் ஓட்டை விழும். கல்லில் சிதறலும் உடைப்பும் ஏற்படும் என்பதே இதன் காரணமாகும்.

**கலி என்னும் சொல்**

களப்பிர அரசரை வேள்விக்குடிச் செப்பேடு கலியரசன் என்று குறிப்பிடுகின்றது. பொதுவாகக் கலியென்பதற்குக் கொடிய அல்லது துன்பம் விளைக்கின்ற என்று பொருள்

கொள்ளலாம். நமது கிராமங்களிலும், 'கலிதீர்த்தான்' என்னும் சொல் இப்பொருளிலேயே பயன்படுத்தப்பட்டு வருகிறது. ஆனால் செப்பேட்டில் கூறப்படும் 'கலியரசன்' என்பதற்குக் 'கலி குலத்தைச் சார்ந்த அரசன்' எனப்பொருள் கொள்வதே நல்லது. சாளுக்கியப் பெருவேந்தனும் இரண்டாம் புலிகேசியின் கொப்பரம் செப்பேட்டிலும் 'கலிகுலம்' பற்றிய குறிப்பு காணப் படுகின்றது. அடுத்து 'கலியரசர்' என்பது ஓர் அரச குடும்பத் தினரைக் குறிப்பதாகவே இருக்கலாம் என்று திரு. கிருஷ்ண சாஸ்திரி அவர்களும் கருதினர்.

**கல்கி அப்தம்**

வடநாட்டில் சமணசமய அடிப்படையில் 'கல்கி அப்தம்' என்றவோர் ஆண்டுமுறை பயிலப்பட்டபோழ்து, தென்னாட்டில் 'கலியப்தம்' என்றவொரு ஆண்டுக் கணக்கீட்டுமுறை பௌத்த சமய அடிப்படையில் ஏற்பட்டதென்று கூறும் கருத்தொன்று நிலவுகின்றது.

சாமுண்டராயன் என்பான் கி. பி. நான்காம் நூற்றாண்டளவில் புத்தரது திருவுருவம் ஒன்றை நிலைபெறச் செய்தான் என்பதனைக் கூறுகின்ற கல்வெட்டு 'கலியப்தம்' 983-இல் பொறிக்கப்பட்டதாக அறிஞர்கள் கருதுகின்றனர்.

**கலிதேவ வணக்கம்**

கன்னட நாட்டு வரலாற்றினையும், அந் நாட்டு மக்கள் வாழ்க்கையினையும் நாம் சிறிது ஊன்றிப் பார்ப்போமானால், ஆங்கு 'கலிதேவன்' என்றவொரு தெய்வம் இருந்ததையும், கலி தேவ வணக்கம் பலரால் பின்பற்றப்படுவதனையும் அறியலாம். அந் நாட்டுக் கல்வெட்டுகளிலும், கலிதேவனுக்கு வழங்கப்பட்ட தானங்களைப்பற்றிய குறிப்புகள் பல காணப்பெறுகின்றன. கொப்பரம் செப்பேடுகளும் கன்னட நாட்டுக் கலிதேவன் ஒருவனைக் குறிப்பிடுகின்றது.[1]

**களப்பிரர் கன்னடியரே**

கலிதேவனின் தொடர்பு காரணமாகவே கன்னட நாட்டில் கலிகுலம் என்ற ஒரு இனமும், கலியப்தம் என்றவொரு ஆண்டுக் கணக்கும், கலி, கலிய என்ற சொற்களின் பயிற்சியும் அதிக அளவில் காணப்பெறுகின்றன. இவ்வாறு கலியுடன் நெருங்கிய உறவு கொண்ட களப்பிரர் தமிழகத்தின் வடவெல்லைக்

[1] Epigraphia India – XVII. P. 259 line–8.

கப்பாலுள்ள கன்னட நாட்டின் தென்பகுதியினையே தமது பூர்வீகமாகக் கொண்டிருந்தனர்.

அடுத்து, சிரவண பெல்கோலாவையொட்டி மலை மீதுள்ள கல்வெட்டொன்றில் 'களவப்பு' அல்லது 'களபப்பு' என்றசொல் காணப்படுகின்றது. அதன் வடமொழி வடிவமே 'களவப்ரா' ஆகும். மைசூர் இராச்சியத்தின் பேலூர்க் கல்வெட்டொன்று 'களபோரா' என்ற இனமொன்று ஆங்கு இருந்ததாகக் குறிப்பிடுகின்றது.[1] மேற்கூறியவற்றான் கலியரசரும் களப்பிரரும் ஒருவரேயாகுமென்பது புலனாகின்றது. பாண்டியரது செப்பேடுகளில் இவர்கள் கலியரசர் எனக் குறிக்கப் பெற்றிருப்பதும் இக் கருத்திற்கு அரண் செய்வதாக உள்ளது.

அடுத்து, களபா (களபம்) என்னும் சொல் யானை எனப் பொருள்படுவதால், களப்பிரர் யானைகள் மிகுதியாக வாழும் மைசூர் பகுதியிலிருந்தே வந்தனர் எனக் கூறுவது பொருத்தமாகத் தோன்றுகிறது.

**அரச குடியினர்**

களப்பிரர் அரச குடியினரா? இல்லையா? என்பதுபற்றி வரலாற்றாய்வாளரிடையே கருத்து வேறுபாடு நிலவிவருகிறது. இவர்கள் அரச குலத்தினரே என்று திரு. கிருஷ்ண சாஸ்திரியும்[2] அரச குடியினரல்லர் என பண்டாரகர் மா. இராசமாணிக்கர்[3] போன்ற ஆராய்ச்சியாளர் சிலரும் கருதுகின்றனர். இதுகாறும் நமக்குக் கிடைத்துள்ள சான்றுகளைக் கொண்டு ஆய்ந்து பார்க்குங்கால் இவர்கள் அரச குடியினரே என்பதனை அறிய முடிகின்றது. அதற்கான ஆதாரங்களைக் கீழே காண்போம்.

1. ஹோஸ்கட்டில் காணப்படும் வீரக்கல் ஒன்றில் 'களவர நாடு' என்னும் சொல் காணப்படுகின்றது. இதனால் களப்பிரர் தனக்கென ஒரு நாட்டினைப் பெற்றிருந்தனர் என்பது புலனாகும். அரசு ஒன்றினைப் பெற்றிருப்போர் அரச குலத்தினரேயாவர் என்பதில் ஐயமில்லை.

2. கதம்ப குல வேந்தனான காகுஸ்தன் (கி.பி. 425-450) என்பான் 'களபோரா' என்ற பழங்குடியின் பகைவன் என்று

[1] Mysore Archaeological Report - 1936. No. 16 line - 2.

[2] பன்னீர்செல்வம், இர. 'தமிழ்நாடும் களப்பிரர் ஆட்சியும்' பக். 28.

[3] இராசமாணிக்கர், மா. 'பல்லவர் வரலாறு' பக். 37. 'இவர்கள் ஒரு கூட்டத்தினர்'. அரச பரம்பரையினர் அல்லர்'

கல்வெட்டில் குறிக்கப்பெற்றுள்ளான்.[1] ஒரு வேந்தனது பகைவர் பெரும்பாலும் ஒரு குறிப்பிட்ட அரசினைக் கொண்ட அரசராகத் தான் இருக்க முடியும். எனவே, களப்பிரர் அரச குடியினரே.

3. களப்பு நாட்டை ஆண்டு வந்த திண்டிகன் (கி. பி. மூன்றாம் நூற்றாண்டு) என்பான், மேலைக்கங்க வேந்தனை கிருஷ்ணவர்ம மகதிராயனுக்குப் பின் கங்க அரசினையும் தன தாக்கிக் கொண்டான் என்ற செய்தி 'கொங்கு தேச ராஜாக்கள்' என்னும் நூலில் கூறப்பட்டுள்ளது.

4. 'பெரும்புகழ் அச்சுதக் கோவே!
நந்திமா மலை சிலம்ப!
நந்தி நிற்பரவுதல் நாவலர்க் கரிதே!'

என்ற செய்யுட் பகுதியினைக் கொண்டு களவர்கள் நந்திமலைப் பகுதிக்குத் தலைவர்களாக இருந்திருக்க வேண்டுமென்பது புலனாகின்றது. இவர்களது தலைவன் அச்சுதன் ஆவான்.

மேற்கூறியவற்றான் களப்பிரர்கள் தென் கன்னடப் பகுதியினைத் தாயகமாகக் கொண்ட ஒரு மலைவாழ் அரச குடிமக்களாவர் என்பது புலனாகும்.

**களப்பிரர் பாண்டிய நாட்டில் புகுதல்**

களப்பிரர் கன்னடியரே என்ற கருத்தினை வலியுறுத்தும் அறிஞர்கள், கதம்பர்களின் அச்சுறுத்தலால் அச்சமுற்ற களப்பிரர் கோலார்-நந்திமலைப் பகுதிகளில் குடியேறினர் என்றும் பின்னர் அருகிலுள்ள சமண மையமான 'சிரவண - பெல் கோலாவின்' தொடர்பால் சமண சமயத்தைத் தழுவினர் என்றும் சிலர் புத்த மதத்தையும ஆதரித்தனர் என்றும் கருதுகின்றனர்.[2] பின்னர் இவர்கள் தமிழகத்தினுள் படிப்படியாகப் புகுந்து பாண்டிய நாட்டிலும் புகுந்தனர் என்றும் அறிஞர்கள் கருதுகின்றனர்.

## வட வேங்கடத்திலிருந்து தமிழகத்தில் புகுந்தனர் எனும் கொள்கை

வேறு சில அறிஞர்கள் களப்பிரர் வேங்கட மலைப்பகுதியில் இருந்து தமிழகத்தில் ஊடுருவல் செய்தனர் என்று கூறுகின்றனர். காளத்தி மலைப் பகுதியினை ஆண்டு வந்த இவர்கள் படிப்

[1] Venkataraman, K. R. 'Journal of Indian History' XXXIV – A Note on Kalabhras. P. 185.

[2] பன்னீர்செல்வம், இர. 'தமிழ்நாடும் களப்பிரர் ஆட்சியும்' பக். 31.

படியாக தமிழகத்தினுள் நுழைந்துவிட்டனர். சங்கப் பாடல்களைக் கொண்டு, திருப்பதி முதல் கிருஷ்ணா நதி வரையிலான வேங்கடத்தை வேந்தர் மூவர் ஆண்டு வந்தனர் என்பதனை அறியலாம். இவர்கள் முறையே மேற்கு வேங்கடம், கிழக்கு வேங்கடம், வடக்கு வேங்கடம் ஆகிய பகுதிகளை ஆண்டு வந்தனர். இவர்களுள் கள்வர் கோமான் புல்லியும் ஒருவனுவன் என்பதனை அகநானூறு, புறநானூறு முதலான சங்கத் தமிழ் இலக்கியங்களால் அறியலாம்.[1] இவன் ஆண்டு வந்த வேங்கட மலைப் பகுதி என்பது தமிழகத்தின் வட எல்லையாம் வேங்கடத்திற்கு அப்பால் இருந்தது. தமிழக எல்லைகளுக்கு அப்பாற்பட்ட நிலப் பகுதிகள் யாவும் அன்று மொழி பெயர் தேயம் என அழைக்கப்பட்டது. இதனைக் கீழ்க்காணும் மாமூலனரது பாடலால் அறியலாம்.

'— ……வடுகர் முனையது
வல்வேற் கட்டி நன்னாட் டும்பர்
மொழி பெயர் தேயம்'[2]

இவ்வாறு மொழி பெயர் தேயமாகக் கருதப்பெற்ற பகுதியினைத் தான் புல்லியென்னும் கள்வர் கோமான் ஆண்டு வந்தான் என்பதனை அகநானூறு:

'புடையலங் கழற்காற் புல்லி குன்றத்து
நடையருங் கானம் விலங்கி நோன்சிலைத்
தொடையமை பகழித் துவன்று நிலைவடுகர்
பிழியார் மகிழர் கலிசிறந் தார்க்கும்
மொழிபெயர் தேஎம்'[3]

'கழல்புனை திருந்தடிக் கள்வர் கோமான்
மழபுலம் வணக்கிய மாவண் புல்லி
விழவுடை விழுச்சீர் வேங்கடம்'…[4]

என்று விரித்துரைக்கின்றது.

புல்லியின் பெயரால் 'புல்லியூர்' என்ற ஊரொன்று கன்னட நாட்டிலுள்ள கோரி குந்தி, (நாடு) பாகத்தில் இருந்ததென்றும் அங்கு அருகக் கடவுளின் கோயிலொன்று இருந்ததென்றும்

1 அகநானூறு. 61, 83, 209, 393; புறநானூறு. 385.
2 குறுந்தொகை–33.
3 அகநானூறு–295.
4 Ibid – 61.

கன்னட நாட்டு ஹொஸக் கோட்டைச் செப்பேடுகள் குறிப்பிடு கின்றன.[1]

புல்லியூர் கிராமத்திலுள்ள அருகக் கடவுளின் கோயிலுக்கு சிம்ம விஷ்ணுவின் தாயார் நிலதானமளித்துள்ளார். இவ்வூர் வடவேங்கடத்தை ஆண்டு வந்த புல்லியின் நினைவாக ஏற்பட்டது என்று நாம் ஊகிக்கலாம். இவ்வூகம் சரியென்று நிரூபிக்கப் பட்டால் கன்னட நாட்டினனான புல்லியே வட வேங்கடப் பகுதியிலும் தனது ஆட்சியை நிறுவினான் எனக் கொள்ளலாம்.

**பாண்டிய நாட்டில் குழப்பம்**

கடைச்சங்க காலத்தில் பாண்டி நாட்டில் கொடிய பஞ்ச மொன்று ஏற்பட்டதனை நாம் 'தமிழ்ச் சங்கம்' என்ற தலைப்பில் முன்பே கண்டோம். இக் கொடிய பஞ்சமே சங்கம் அழியக் காரணமாய் இருந்ததென்பதனையும் கண்டோம். அப் பஞ்சமும் வெற்றிவேற் செழியனது ஆட்சிக் காலத்தில் ஒருவாறு நீக்கப் பட்டதென்றும், ஆனால், அதன் நிழல் ஓரளவு இருந்ததென்றும் கண்டோம். சங்க காலத்தின் இறுதிக்குப் பின் பாண்டி நாட்டின் ஆட்சிபற்றி அறிந்துகொள்ளத் தக்க ஆதாரங்கள் ஒன்றும் நமக்குக் கிடைக்கவில்லை. இக் காலத்தில் நாட்டில் ஏற்பட்ட பஞ்சத்தின் காரணமாகவோ, அரசியல் குழப்பத்தின் காரணமாகவோ, பாண்டி நாட்டு மக்கள் நலமுடன் வாழவில்லை என்றே கொள்ளல் வேண்டும்.

இந் நிலையில் 'தடியெடுத்தவன் தண்டல்காரன்' என்னும் பழமொழிக்கொப்ப, — 'வலிமையே உரிமை' (might is right) என்ற கோட்பாட்டின்படி வலிவுள்ள பலர் பாண்டி நாட்டின் பல பகுதிகளில் ஆட்சி புரிந்தனர் எனலாம். இவர்களுள் பாண் டியச் சிற்றரசர்களும் வேளிர்களும் வேறு இனத்தினரும் ஆட்சி புரிந்திருக்கலாம். இவ்வாறு பலரது ஆட்சியில் பாண்டி நாடு தத்தளித்துக் கொண்டிருக்கையில்தான் வடவேங்கடப் பகுதி யில் வாழ்ந்து வந்த களப்பிரர் தமிழகத்தின் குழப்ப நிலை கண்டு தமிழகத்தில் புகுந்தனரெனலாம். இதனை இங்குள்ள வேளிர் சிலரும் வரவேற்றிருத்தல் வேண்டும்; களப்பிரருக்குத் துணை புரிந்திருத்தலும் கூடும்.[2]

அதே காலத்தில் வட பகுதியில் வலிமை பெற்று விளங்கிய பல்லவர்களும் தமது நாட்டின் எல்லையினை விரிவுபடுத்திக்

[1] 'பல்லவர் செப்பேடுகள் முப்பது' பக். 381.

[2] நடனகாசிநாதன், 'முடிவேந்தர் முத்தரையர்'—முத்தரையர் முரசு. மலர்-1. இதழ். 1 பக். 10.

கொண்டிருந்தனர். இதன் காரணமாக நெருக்குண்ட களப்பிரர் தொண்டை நாட்டைக் கைப்பற்றவியலாது, தமிழ் நாட்டினை எளிதாகக் கைப்பற்றிவிடலாமென்ற எண்ணத்துடன் தெற்கு நோக்கித் தமது படையைச் செலுத்தி சோணாட்டினைக் கைப்பற்றினர்; ஆங்கு தமது ஆட்சியை நிலையாக நிறுவினர். பின்னர் பாண்டிய நாட்டையும் கைப்பற்றிக் கொண்டனர்.

## தொண்டை நாட்டில் களப்பிரர்

தமிழகத்தில் நுழைய வேண்டும் எனில் களப்பிரர் தொண்டை மண்டலம் வழியாகவே புகுதல் வேண்டும். காரணம் என்னவெனில் அன்றைய பல்லவ நாடு ஆந்திரப் பகுதியை விட்டுத் தெற்கில் பாலாறு வரை பரவியிருந்தது. சில காலத்திற்கு முன்பே இவர்கள் பல்லவ நாட்டில் ஊடுருவல் செய்ய முயன்று தோல்வியினைத் தழுவியுள்ளனர் என்பதனை பல்லவர் வெட்டெழுத்துச் சாசனங்கள் உறுதிப்படுத்துகின்றன. முதன் முதலாகப் பப்பதேவன் என்னும் பல்லவ வேந்தன் இவர்களை எதிர்த்துப் போரிட்டு விரட்டியடித்துள்ளான். அடுத்து, சிவஸ்காந்தவர்மனின் காலத்திலும் களப்பிரர் பல்லவ நாட்டில் புக முடியவில்லை. ஆந்திர அரசர்களின் வீழ்ச்சியாலும், பல்லவ அரசர்களின் அதிகார உயர்ச்சியாலும், சமுத்திரகுப்தனின் படையெழுச்சியாலும், கி. பி. 3, 4-ஆம் நூற்றூண்டளவில் தொண்டை நாட்டில் ஏற்பட்ட குழப்பத்தினைப் பயன்படுத்திக் கொண்டு களப்பிரர் தொண்டை மண்டலத்தின்மீது முதன் முதல் பாய்ந்தனர். தொண்டை மண்டலத்தைக் கைப்பற்றினர். தொண்டை நாட்டில் உள்ள களந்தை என்னுமிடத்தில் கூற்றுவன் எனப் பெயர்க் கொண்ட வேந்தனொருவன் ஆட்சி புரிந்தானெனவும், அவனே திருத்தொண்டத்தொகையில் குறிக்கப்பெற்றுள்ள கூற்றுவநாயனாராவானென்று பெரியபுராணம் செப்புகின்றது.[1]

தொண்டை மண்டலத்தில் ஊடுருவல் செய்த களப்பிரர்கள் பின்பு அங்கிருந்து தெற்கு நோக்கி ஓடி வந்து சோணாட்டிற்குள் புகுந்தனர்; சோணாட்டிலோ நிலையான ஆட்சி அன்று நிறுவப் பெற்றிருக்கவில்லை. உள்நாட்டுக் குழப்பமும், பட்டத் தகராறும் அன்று நிலவியது. இதனை இலக்கியச் சான்றுகளாலறியலாம். கரிகாலனுக்குப் பிறகு சோணாட்டில் வலிமை பொருந்திய மன்னர் ஒருவருமிலர் என்பதும், இதனல் ஆங்கு ஏற்பட்ட தாயாதிச் சண்டையை சேரன் செங்குட்டுவன் தீர்த்து வைத்து

1 கூற்றுவநாயனர் புராணம்-4.

உள்ளான் என்பதும் இலக்கியச் செய்தியாகும்; இதனால் சோணாட்டில் சோக நிலையை நாமறியலாம்; இந் நிலையில் களப்பிரர் சோணாட்டில் புகுந்தனர்; ஆட்சியைக் கைப்பற்றினர். நிலையான ஆட்சியை உருவாக்கினர். மக்களுக்குப் பல நன்மைகளைச் செய்தனர். ஆங்கு ஆட்சி புரிந்த மன்னர்களுள் அச்சுத விக்கிராந்தன் என்னும் களப்பிர மன்னன் புகழ் பெற்றவனாகத் திகழ்ந்தான். இவனது ஆட்சிக் காலம் கி. பி. நான்காம் நூற்றாண்டு. இதனை இவனது அவையில் தனது 'அபிதம்மாவதாரம்' என்னும் நூலை அரங்கேற்றிய புத்ததத்தர் என்ற புத்த மதத்தினைச் சேர்ந்த துறவியின் குறிப்பாலறியலாம். அச்சுதனின் தலைநகரம் புகாரேயாகும். அங்கு பௌத்த மதம் சிறப்புற்று இருந்ததாகத் தெரிகிறது. 1973-74-ல் புகாரில் நடைபெற்ற அகழ்வாய்வில் 'புத்தவிகாரை' அகழ்ந்தெடுக்கப் பெற்றிருத்தல் இதற்குச் சான்றாகும்.

தமிழகத்தினை ஆட்சி புரிந்த களப்பிர வேந்தருள் சோணாட்டில் ஆட்சி புரிந்த அச்சுதனின் பெயரே நமக்குத் தெரிகின்றது. மற்ற நாடுகளில் ஆட்சி புரிந்த வேந்தர்களின் பெயர்களோ, ஆட்சிச் சிறப்போ நமக்குத் தெரியவில்லை. அதற்கான சான்றுகளும் கிடைத்தில, (தொண்டை நாட்டைத் தவிர).

சோணாட்டின்கண் பெரும் புகழ் பெற்ற வேந்தனாகி புகாரைத் தமது தலைமை இருப்பிடமாக அமைத்துக் கொண்டு அரசோச்சிய அச்சுதக் களப்பாளன், தமிழக மூவேந்தரையும் வெற்றி கொண்டு, ஆங்கு தனது மேலாண்மையை நிலவச் செய்துள்ளான்; தமிழகம் முழுமையும் அவனது காலடியில் இருந்தது. அவன் ஏகபோகச் சக்கரவர்த்தியாக இருந்து தமிழக மூவேந்தரின் சின்னங்களாகிய புலி, வில், கயல் ஆகிய மூன்றையும் தமது அரசச் சின்னங்களாகக் கொண்டு விளங்கினான் அவற்றையே தனது கொடியிலும் பொறித்திருக்கின்றான். இதனைக் கீழ்க்காணும் யாப்பருங்கலக்காரிகையின் பாடல் தெளிவுறுத்துகின்றது.

> 'அடுதிற லொருவர் பரவுதும் எங்கோன்
> தொடுகழற் கொம்பூண் பகட்டெழின் மார்பிற்
> கயலொடு கிடந்த சிலையுடைக் கொடுவரிப்
> புயலுறழ் தடக்கைப் போர்வேல் அச்சுதன்
> ஒன்று கடல் உலகம் முழுவதும்
> ஒன்றுபுரி திகிரி உருட்டுவோன் எனவே'[1]

[1] காரிகை, பக். 112-118.

மேற்கூறிய பாடல், யாப்பருங்கல விருத்தியுரையில் விளக்கத்தனார் இயற்றிய 'விளக்கத்தார் கூத்து' என்னும் நூலிலிருந்து மேற்கோளாக எடுத்துக் காட்டப்பட்ட செய்யுளாகும். இப்பாடலைக் கொண்டு அச்சுதக் களப்பாளன் சோழ நாட்டில் இருந்துகொண்டே தமிழகம் முழுவதும் அரசோச்சினான் என அறியலாம்.

கி. பி. 5ஆம் நூற்றாண்டில் பூம்புகாரில் வாழ்ந்திருந்த புத்த தத்ததேரர் என்னும் தமிழ்ப் பௌத்தர்[1] தாமியற்றியுள்ள 'விநயவினிச்சயம்' என்னும் பாலிமொழி நூலில், தமது காலத்தில் சோணாட்டினை ஆட்சி புரிந்து வந்த அச்சுத விக்கிராந்தன் என்னும் களப்பிர வேந்தனைப்பற்றிக் குறிப்பிடுகின்றார். அந் நூலுள் அம் மன்னன் 'களபகுல நந்தன்' எனப் போற்றப் பெறுகிறான்; இதனால் இவ் வேந்தன் களப்பிரன்[2] என்பது புலனாகிறது. புத்ததத்ததேரரால் குறிக்கப்பெற்றுள்ள அச்சுதக் களப்பாளனும் விளக்கத்தனார் குறிப்பிட்டுள்ள அச்சுத விக்கிராந்தனும் ஒருவனே யென்பதும், இவன் களப்பிரர் வழிவந்தோனே என்பதும் அறியப் படுகின்றன.[3]

மேற்கூறிய இலக்கியச் சான்றுகளேயன்றி, யாப்பருங்கலம் என்னும் இலக்கண நூலின் விருத்தியுரையில், தமிழக மூவேந்தரும் களப்பாளனைப் பாடிய வெண்பாக்கள் மேற்கோளாக எடுத்துக்காட்டப்பட்டுள. இவ் வெண்பாக்கள் தனிப்பாடல் திரட்டு என்னும் நூலிலும் இடம்பெற்றுள்ளன. இதனால் சேர, சோழ, பாண்டியர் ஆகிய மூவரும் களப்பிரருக்கு அடிபணிந்த செய்தி உறுதி பெறுகிறது.

சேர, சோழ, பாண்டியரை வென்ற களப்பாளன் சிதம்பரத்தில் அவர்களைச் சிறையிலிட்டு, அவர்களது காலில் விலங்கு பூட்டினானென்றும், அதுபோழ்து அவ் வேந்தர்கள் களப்பாளனைப் புகழ்ந்து பின்வரும் பாடல்களைப் பாடினார்கள் என்றும் கூறப்படுகின்றது.

1 ஆசாரிய புத்ததத்தர்தேரர் என்னும் புத்த பெரியார், சோழ நாட்டுத் தமிழர். அவர் சோணாட்டின்கண் அச்சுத விக்கந்தன் (அச்சுத விக்ரந்தன்)என்னும் களப்பிர வேந்தனது காலத்தில் வாழ்ந்தவர். இவர் சோழநாட்டுக் கவீரபட்டினம் (காவிரிப்பூம்பட்டினம்), உரகபுரம் (உறையூர்), பூத மங்கலம் முதலிய ஊர்களில் வாழ்ந்தனர். பூத மங்கலம என்னும் ஊரில் கணதாசர் என்றும் வேணுதாசர் என்றும் பெயர் கொண்ட அமைச்சர் பெருமான் கட்டிய புத்த விகாரையில் புத்த தத்ததேரர் தங்கியிருந்த சமயம் 'விநயவிநிச்சயம்' என்னும் நூலை இயற்றினார்— அச்சுத விக்கந்தன் அச்சுத நாராயணன் எனவும் அழைக்கப்பெறுகிறார்.

2 வேங்கடசாமி, மயிலை சீனி. 'மறைந்து போன தமிழ் நூல்கள்'

3 'பாண்டியர் செப்பேடுகள் பத்து'. பக். அ. 46.

சேர வேந்தன் பாடியது :

திணைவிதைத்தார் முற்றந் திணையுணங்கும் செந்நெல்
தனைவிதைத்தார் முற்றமது தானும்—கனைசீர்
முரசுணங்கும் சங்குணங்கும் மூரித்தேர்த் தானை
அரசுணங்கும் அச்சுதன்தன் முற்றத்து.'

சோழ வேந்தன் பாடியது :

'அரசர் குலதிலகன் அச்சுதன் முற்றத்தில்
அரச ரவதரித்த வந்நாள்—முரசதிரக்
கொட்டிவிடு மோசையினுங் கோவேந்தர்
வெட்டிவிடும் ஓசை மிகும்.'

பாண்டி வேந்தன் பாடியது :

'குறையுளார் எங்கிரார் கூர்வே லிராமன்
நிறையறு திங்க ளிருந்தான்—முறைமையால்
ஆலிக்குந் தானை யலங்குதார் அச்சுத! முன்
வாலிக் கிளையான் வரை.'

இதனைப் பாடியதும் ஒரு விலங்குகூடப் போட்டபின் பாண்டியன் பாடியது :

'குடகர் குணகடலென் றூர்த்தார் குடகர்க்
கிடகர் வடகடலென் றூர்த்தார்—வடகடலர்
தென்கடலென் றூர்த்தார் தில்லையச்சு தானந்தன்
முன்கடை நின்றார்க்கும் முரசு.'

மேற்கூறப்பட்ட நான்கு பாடல்களையன்றி மற்றுமொரு பாடலும் களப்பாள வேந்தனின் சிறப்பினைச் சிறப்பித்துப் பேசுகிறது. இவ் வெண்பாவைப் பாடிய புலவர் யாரென்று அறிந்து கொள்ள முடியவில்லை. அப் பாடலைக் கீழே காண்போம்.

'படுபருந்தும் சூற்பேயும் பல்விலங்கும் நாயும்
கொடியுங் கழுகுமிவை கூடி—வடிவுடைய
கோமான் களப்பாளன் கொல்யானை போமாறு
போமாறு போமாறு போம்.'

இதுகாறும் கூறியவற்றான் கி. பி. ஐந்தாம் நூற்றாண்டில் காவிரிப்பூம்பட்டினத்தினைத் தலைநகராகக் கொண்டு ஆண்டு வந்த அச்சுதக் களப்பாளன் தமிழகம் முழுவதையும் ஆண்டு வந்தான் எனலாம்.

அடுத்து, அச்சுதக் களப்பாளனின் புகழைப் பாடும் மற்றொரு பாடலும் யாப்பருங்கலக்காரிகையில் இடம் பெற்றுள்ளது. அதனையும் ஈண்டு காண்போம்.

'துவைத்துத் துளிமுன்னீர்க் கொற்கை மகளிர்
அவைப்பதம் பல்லுக்கு அழகொவ்வா முத்தம்
மணங்கமழ்தார் அச்சுதன் மண்காக்கும் வேலின்
அணங்கமழ் மங்கல்லார் பாட்டு'.[1]

மேற்கூறப்பட்ட பாடல்கள் அனைத்தையும் ஆழ்ந்து நோக்குங்கால் அச்சுதனின் ஆட்சி சிறப்புமிக்கதாக அமைந்ததென்றும், புலவர் பலரால் பாராட்டப்படும் பெருமைமிக்கதென்பதும் புலனாகும். இவன் ஒரு வேற்றரசன் என்பதனால் இவன் மக்களுக்கும், தமிழ்மொழிக்கும் ஊறு விளைவித்தான் என்று கூறுதல் முறையாகாது. எந்த வேந்தனும் தான் புதிதாகக் கைப்பற்றிய நாட்டில் நல்லாட்சி நிறுவி, மக்களின் நம்பிக்கையைப் பெறவேண்டுமென்று எண்ணுவானேயன்றி மக்களைக் கொடுமைப்படுத்தமாட்டான்.

அடுத்து, அச்சுதக் களப்பாளன் காலத்தில் புத்தமதமே ஏற்றம் பெற்றிருந்ததென்று தெரிகிறது. இதனால் களப்பிரர் ஆரம்பகாலத்தில் பௌத்த மதத்தினையும், பிற்பகுதியில் சமண சமயத்தையும் ஆதரித்தனர் எனலாம்.

**பாண்டிய நாட்டில் களப்பிரர்**

தமது பூர்வீக நாட்டிலிருந்து கதம்பர்களாலும், தொண்டை நாட்டிலிருந்து பல்லவர்களாலும் துரத்தப்பட்ட களப்பிரர் முதலில் சோழநாட்டைக் கைப்பற்றினர். பின்னர் பாண்டி நாட்டையும் கைப்பற்றி ஆங்கு தமது ஆட்சியினையும் நிறுவினர். இந் நிகழ்ச்சிகளனைத்தும் கி.பி. 2, 3-ஆம் நூற்றாண்டுகளில் நிகழ்ந்தவையென்றும், அப்போதுதான் களப்பிரர் தமிழகத்தில் தமது நிலைமையினை வலுப்படுத்திக் கொண்டனர் எனவும் கூறலாம்.

இதுகாறும் நாம் கண்டனவற்றுள் புல்லியின் வழியினரான களப்பிரர் வடவேங்கடப்பகுதியிலிருந்து புறப்பட்டு தொண்டை நாடு, சோழநாடு வழியாகப் பாண்டிய நாட்டை அடைந்தனர் எனக்கூறுவதே பொருத்தமுடையதாகத் தோன்றுகிறது எனலாம்.

[1] காரிகை. பக். 178.

**சமயம் முன்னே அரசியல் பின்னே**

'யானை வரும் பின்னே மணியோசை வரும் முன்னே' என்ற பழமொழியைப் போன்று, களப்பிரர் தமிழகத்தின்கண் நுழைவதற்குமுன், அவர்களது சமயம் தமிழகத்திலும் சிறப்பாகப் பாண்டிய நாட்டிலும் புகுந்து விட்டது. கிறிஸ்துவின் பிறப்பிற்கு முன்பே மதுரையையும் அதனைச் சூழ்ந்த பகுதிகளையும் சமண முனிவர்கள் ஆக்கிரமித்துக் கொண்டனர்; பின்னர் பாண்டிய நாட்டின் பல பகுதிகளிலும் தமது சமயச் செல்வாக்கைப் பரப்பினர். எடுத்துக்காட்டாகச் சித்தண்ணவாசல் கல்வெட்டில்,

'எருமி நாடு குமிழ்ஊர் பிறந்த
காவுடி ஈதேன்கு சிறு போவில்'

என்று குறிக்கப் பெற்றுள்ளதனைக் கொண்டு, எருமை நாட்டில் (மைசூர்) உள்ள குமிழ் ஊரில் பிறந்த காவிதி ஈதேன் என்ற சமணமுனிவன் சித்தண்ணவாசலில் தங்கி வாழ்ந்து வந்தான் என்பது புலனாகும். இதனால் கி.மு. இரண்டாம் நூற்றாண்டளவில் கன்னட நாட்டுச் சமணத் துறவிகள் பலர் குடிபெயர்ந்தனர் எனலாம். பாண்டிய நாட்டிலுள்ள குறந்தி திருக்காட்டாம்பள்ளி (Kurandi Thirukkattampalli) அன்று மாபெரும் சமண மையமாகத் திகழ்ந்ததென்றும், அப் பள்ளி எருமை நாட்டிலுள்ள சிரவணபெல்கோலா என்னும் மாபெரும் சமண மையத்துடன் தொடர்பு கொண்டிருந்தது என்றும் கல்வெட்டுகளால் அறிய முடிகின்றன. தமிழகத்தின் ஏனைய பகுதிகளைக் காட்டிலும், பாண்டிய நாட்டில்தான் சமண சமயம் பெருமளவில் பரவியிருந்தது என்பதும் யாவருமறிந்த செய்தியே.

தமிழகத்தில் சமணத் தொடர்பான கல்வெட்டுகள் ஏறத்தாழ இருபத்து மூன்று இடங்களில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. எழுபத்து ஏழு கல்வெட்டுகள் அங்கு காணப்படுகின்றன. இவற்றுள் பெரும்பான்மையான கல்வெட்டுகள் பாண்டிய நாட்டில் கிடைத்துள்ளன. இவற்றின் காலத்தை ஆய்ந்து பார்க்குங்கால் கி.மு. இரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்தவை ஐம்பது கல்வெட்டுகளாகும். இவற்றுள் அழகர்மலை, மாங்குளம், கொங்கர் புளியங்குளம், திருவாதவூர் ஆகிய இடங்களில் கி.மு. இரண்டாம் நூற்றாண்டிற்கு முன்பே சமணத் துறவிகள் குடியேறி விட்டனர். இவர்கள் அனைவரும் மைசூர் நாட்டிலிருந்துதான் தமிழகம் போந்தனர். அக் காலை சிரவணபெல்கோலா மைசூர் நாட்டின் சமண மையமாகத் திகழ்ந்தது. எனவே, சங்க காலத்தின் தொடக்க காலத்திலேயே சமணர்கள் தமிழகத்தினுள்

பெரும்பான்மையோர் பாண்டிய நாட்டினுள் அலையலையாகப் புகுந்தனர் எனலாம்.

கி. மு. இரண்டாம் நூற்றாண்டளவிலேகூட பாண்டிய வேந்தர் சமண சமயத்திற்கு நல்லாதரவு அளித்தனர் என்பதனை நெடுஞ்செழியன் என்னும் பாண்டி மன்னனின் கல்வெட்டுணர்த்துகின்றது.

**பாண்டியர் – களப்பிரர் இடையேயான முதல் போர்**

அடுத்து, தலையாலங்கானத்து நெடுஞ்செழியனது காலத்தில் பேரரசர் இருவரும், வேளிர் சிலரும் சேர்ந்து அப் பாண்டியனைத் தலையாலங்கானத்துப் போர்க்களத்தில் எதிர்த்தனர்; ஆனால், தோல்வியையே தழுவினர்;[1] இப் போரில் பாண்டியனை எதிர்த்துப் போர் புரிந்தவர்களுள் 'எருமையூரான்' என்பவனும் ஒருவனாவான். எருமையூரான் என்பதனால் இவன் மைசூர் பகுதியைச் சேர்ந்தவனென்பது தெள்ளிது. இவன் களப்பிரர் இனத்தவனென்பதும் ஊகிக்கப்படுகின்றது.

**இரண்டாவது போர்**

அடுத்து, அகநானூறு 342ஆம் பாடலைக் கொண்டு பாண்டியருக்கும் களவருக்கும் போரொன்று நடைபெற்றதனையும், அதன் விளைவாய்ப் பாண்டியன் 'களவர் கோமான்' எனப் புகழப் பட்டான் என்பதனையும் அறியலாம். இப் போரும் கிறித்து அப்தத்திற்கு முன்பே நடைபெற்றது.

கிறித்து அப்தத்திற்கு முன்பே சமண முனிவர்கள் பாண்டிய நாட்டின் பல பகுதிகளில் பரவியிருந்ததையும், களப்பிரர் இரண்டு தடவைப் பாண்டிய வேந்தருடன் போரிட்டிருப்பதையும், கி. பி. இரண்டாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் களப்பிரர் பாண்டிய நாடு முழுமையினையும் கைப்பற்றிக் கொண்டதையும் ஆழ்ந்து சிந்தித்துப் பார்க்குங்கால், களப்பிரர் படையெழுச்சிக்கும் சமண சமயத்தினருக்கும் ஏதேனும் நெருங்கிய தொடர்பு உண்டோ என ஐயுற வேண்டியுள்ளது. அடுத்து, சங்க காலத்திலிருந்தே களப்பிரர் பாண்டிய நாட்டினை வெல்வதில் முயற்சிகள் மேற்கொண்டிருந்தனர் என்பதும், இறுதியில் களப்பிரர் வெற்றி கண்டனர் என்பதும் புலனாகின்றது.

களப்பிரருக்கும் பாண்டியருக்கும் நடைபெற்ற போரினை சமணத்திற்கும் வைதீக சமயத்திற்கும் ஏற்பட்ட போராகவே

1 அகநானூறு–36.

கருதலாம். கொல்லாமையும், தீங்கு செய்யாமையும் உயிர்க் கொள்கைகளாகக் கொண்ட சமண சமயத்தினர் வைதீக சமயத்தை ஆதரித்து, உயிர்ப் பலியிட்டு யாகங்கள் செய்ய உறு துணை புரிந்த வேந்தனையும் சிற்றரசர்களேயும் வெறுத்திருத்தல் வேண்டும். இந் நிலையில் சமணத்தின் உயர்ச்சியில், பாண்டிய நாட்டுக் குறுநில மன்னர் பலர் சமண சமய ஆதரவாளர்களாக மாறியிருத்தல் கூடும். இத் தருணத்தில் பாண்டிய நாட்டில் பேரரசர் யாருமில்லாத காரணத்தால் குறுநில மன்னர் பலர் தத்தமது அதிகாரத்தை விரிவுபடுத்தும் பொருட்டு போரிட்டுக் கொண்டனர். இவ்வாறு அரசியல் குழப்பம் மிகுந்திருந்த சமயத்தில் களப்பிரர் பாண்டிய நாட்டின்மீது படையெடுத் தனர். பாண்டிய நாட்டில் ஆட்சி புரிந்த சமணச் சார்புடைய குறுநில வேந்தரும், மக்களும் சமணச் சார்புடைய களப்பிரர் படையுடன் சேர்ந்துகொண்டு வைதீகச் சமயக் குறுநில மன்னர் களையும், தீதியற்ற பாண்டிய மரபினரான சிற்றரசர் பலரையும் வென்று களப்பிரர் ஆட்சி அமைய துணை புரிந்திருத்தல் வேண்டு மென்று ஊகிக்கலாம். இதன் காரணமாகவே திரு. நீலகண்ட சாஸ்திரியாரும் மத எதிர்ப்பின் காரணமாகவே களப்பிரர் அரசியல் புரட்சியை உருவாக்கினர் என்று கூறியுள்ளார். எனவே, களப்பிரரின் வெற்றி சமய வெற்றியேயாகுமென்பதனை அறியலாம்.

வேதம், வேள்வி இவற்றுடன் தொடர்புடைய அந்தணரை யும், வைதீக சமயத்தையும் களப்பிரர் வெறுத்தனர்; முன்னர், பிராமணர்களுக்கு அளிக்கப்பட்டிருந்த பிரமதேயங்களைக் கைப் பற்றினர். எனவேதான், பல்யாகசாலை முதுகுடுமிப் பெரு வழுதியால் கொற்கைக் கிழான் நற்கொற்றன் என்பானுக்கு அளிக்கப்பட்ட 'வேள்விக்குடி' என்னும் ஊரினைக் களப்பிர வேந்தன் கைப்பற்றிக் கொண்டான். வேத வேள்வியில் வெறுப்பு கொண்ட களப்பிரன் வேள்வி இயற்றியதாக அளிக் கப்பட்ட ஊரினைக் கைப்பற்றியதில் வியப்பேதுமில்லை. காரணம் அவர்கள் பின்பற்றிய சமண சமயமே, வேள்வியினையும், வைதீக சமயத்தினையும் எதிர்த்துத் தோன்றியதுதானே! மதுரை மாநகரினை ஆண்டு வந்த களப்பிர வேந்தன் சமண சமயத்தினைச் சார்ந்திருந்தானென்பதனைப் பின்வரும் கல்லாடச் செய்யுளும் நன்குணர்த்துகின்றது.

'படைநான் குடன்று பஞ்சவன் துறந்து
மதுரை வவ்விய கருநடர் வேந்தன்
அருகர்ச் சார்ந்து நின்று'[1]

[1] கல்லாடம்—56.

களப்பிரர் காலத்தில் வைதீக சமயம், சைவம் ஆகியவை ஒடுக்கப் பட்டன. பௌத்தம் ஓரளவு ஆதரவு பெற்றிருந்தது. இருப் பினும் சமணமே அரசரின் ஆதரவு பெற்றுத் தலைசிறந்து விளங் கியது.

### சமணக் கல்வி

சமண சமயம் செல்வாக்குப் பெற்றிருந்த காரணத்தால் சமணத் துறவிகள் பலர் தமது சமயத்தினை நாடெங்கும் பரப் பினர். இவர்களுள் பெண்பால் துறவிகள் சிலரும் இருந்தனர். இவர்களிடம் பல மாணாக்கர்கள் (மாணவ, மாணவி) கல்வி பயின்றனர். அவர்கள் பொதுக்கல்வியுடன், சமயக் கல்வி யையும் பயின்றனர். இவற்றைப் பாண்டிய நாட்டின்கண் ணுள்ள கழுகுமலையில் காணப்பெறும் நூற்றுக்கணக்கான வட்டெழுத்துச் சாசனங்களைக் கொண்டறியலாம். இக் கல் வெட்டுகளில் சமண சமயப் பெரியார்களின் பெயர்கள் பல இடம் பெற்றுள்ளமை குறிப்பிடத்தக்கதாகும். சமணர் தமது சமயத்தைப் பரப்ப சங்கமொன்றினையும் நிறுவியிருந்தனர். இச் சங்கம்பற்றியும் ஈண்டு காண்போம்.

### சமண சங்கம்

சமண சமயத்தைப் பரப்புவதற்கும், அதன் கொள்கைகளை ஒழுங்குபடுத்துவதற்கும், சமயக் குரவர்கள் கூடிப் பேசு வதற்கும் சமணர்கள் தமக்கெனவோர் சங்கம் நிறுவப்பட வேண்டுமென்று கருதினர். இதன் விளைவாக கி. பி. 470ஆம் ஆண்டில் மதுரை மாநகரின்கண், பூச்சிய பாதர் என்பாரின் சீடரான வச்சிர நந்தி என்பார் திரமிள சங்கத்தினை (சமண சங்கம்) நிறுவினார். இதனைத் 'திகம்பர தரிசன சாரம்' என்னும் நூல் குறிப்பிடுகின்றது. இச் சங்கம் மதுரை மாநகரின்கண் பண்டு நிறுவப்பெற்றிருந்த தமிழ்ச் சங்கத்தினின்றும் வேறு பட்டதென்பது ஈண்டு நினைவிற் கொள்ளல் வேண்டும்.[1] இச் சங்கம் அமைக்கப்பட்டதால் சமணர்களது அமைப்பு (Organi- sation) பலப்படுத்தப்பட்டது. அவர்களது சமயப் பிரச்சாரமும், பெருக்கப்பட்டது. இச் சங்கம் சமணர்களது உயிர்நாடியாகக் கருதப்பட்டது. இதன் விளைவாக கி. பி. ஐந்தாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியிலும் ஆறாம் நூற்றாண்டிலும் சமண சமயம் பாண்டிய நாட்டில் பெரும் செல்வாக்குப் பெற்றது.

[1] கோவிந்தசாமி, மு. 'இலக்கியத் தோற்றம்', பக். 37. சிலர் இதனைத் தமிழ்ச் சங்கமாகவே கருதினர்.

அன்று பாண்டிய நாட்டில் மட்டுமன்றித் தமிழகம் முழுவதிலும் சமண சமயம் வேரூன்றியிருந்ததனைச் சேக்கிழார் பெருமானது கூற்றாலும் அறியலாம். இதோ அப்பாடல்:

"பூழியர் தமிழ்நாட்டுள்ள பொருவில்சீர்ப் பதிகள் எல்லாம்,
பாழியும் அருகர் மேவும் பள்ளிகள் பலவுமாகிச்
சூழிருட் குழுக்கள் போலத் தொடைமயிர் பீலியோடு
மூழிநீர் கையிற்பற்றி அமணரே யாகி மொய்ப்ப"[1]

சைவ சமயத்தின் தூண்களாக விளங்கிய சைவ சமயப் பெரியார்களின் வரலாறு கூற வந்த வரலாற்றறிஞராம் சேக்கிழார் பெருமான் (சமண சமய ஆதரவாளரல்ல) கூறுவது சமண சமய வளர்ச்சியினைப் படம்பிடித்துக் காட்டுகின்றது.

### சமண சமயத்தின் வீழ்ச்சி

தமிழகத்தில் வளர்ச்சிப் பெற்றிருந்த சமணமும் காலப் போக்கில் வீழ ஆரம்பித்தது. ஏறத்தாழ முன்னூறு ஆண்டுகள் தமிழகத்தில் நிலைபெற்றிருந்த களப்பிரர் ஆட்சி வீழ்ந்த பின்னும் சமணம் வீழவில்லை. பாண்டிய வேந்தர் பலர் இம் மதத்திற்கும் ஆதரவளித்தனர். இருப்பினும் சைவ வைணவப் பெரியார்களின் சமயப் பிரச்சாரத்தாலும், மன்னர்களின் ஆதரவாலும் சமணம் தாழ்ந்தது; காலப்போக்கில் வீழ்ந்தது.

### களப்பிரரும் முத்தரையரும்

தமிழகத்தினை ஆண்டு வந்த சிற்றரசர்களுள் முத்தரையர் முதன்மை வாய்ந்தவர் ஆவர். இவர்கள் காவிரியாற்றின் தென் கரையிலிருந்து புதுக்கோட்டை வரையிலான பகுதிகளை ஆண்டு வந்தனர். இவற்றுள் புதுக்கோட்டை மாவட்டம், தஞ்சை மாவட்டம், திருச்சிராப்பள்ளி மாவட்டம் ஆகியவற்றின் பெரும் பகுதிகள் அடங்கும். இவர்களால் ஆளப்பட்ட நாடு முத்தரையர் நாடென்று கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ளது.

முத்தரையர் நாட்டை ஆண்டு வந்தோர் முத்தரையர், முத்தரசர், மூத்தரைசர் என்னும் பெயர்களால் கல்வெட்டுகளில் குறிக்கப்பெறுகின்றனர். இம் முத்தரையர் சேர, சோழ, பாண்டியநாடு என்னும் முத்தரையை ஆண்டதால் முத்தரையர் (மு+தரையர்) என்று அழைக்கப்பட்டதாக வரலாற்றாய்வாளர்கள் கூறுகின்றனர்.

[1] பெரியபுராணம்–தி. ச. புராணம். 601.

முத்தரையர் களப்பிரரின் கால்வழியினரே என்ற கருத்து பெரும்பாலான ஆராய்ச்சியாளர்களால் ஏற்றுக்கொள்ளப் பட்டுள்ளது. இக் கருத்தினை ஆராய்ச்சியறிஞரான டி.ஏ. கோபி நாதராவ் அவர்கள் முதன்முதலில் வெளியிட்டார். பண்டாரகர் எஸ். கிருஷ்ணசாமி அய்யங்கார், திரு. டி. என். சுப்பிரமணியம், பண்டாரகர் பன்னீர்செல்வம் முதலானோர் இக் கருத்தினை ஆதரிக்கின்றனர். கல்வெட்டறிஞர் திரு. கே. ஜி. கிருஷ்ணன் அவர்கள் இக் கருத்தினை வலியுறுத்தியுள்ளார்.[1] திரு. மு. இராகவ ஐயங்கார்,: திரு. நடனகாசிநாதன் ஆகியோர் முத்தரையர், களப்பிரரின கால்வழியினர் அல்லர் என்ற கருத்தினைக் கொண் டுள்ளனர்.

### முத்தரையர் களப்பிரரின் கால்வழியினரே

முத்தரைய வேந்தர்களுள் சித்திரை நிலவாகக் கருதப்பெறும் இரண்டாம் பெரும்பிடுகு முத்தரையனான சுவரன் மாறன் என்பான் செந்தலைக் கல்வெட்டில் 'கள்வர் கள்வன்' என்று குறிக்கப்பெற்றுள்ளதால் இவன் கள்வர் மரபினன் என்பது உறுதிப்படுகின்றது. திரு. நடனகாசிநாதன் அவர்கள் 'ஸ்ரீகள்வர் கள்வன்' என்ற சொல்லுக்குக் 'களப்பிரரை வென்றவன்'[2] எனப் பொருள்கொண்டு,இவன் களப்பிரர்களினின்றும்வேறுபட்டவன் எனக் கருதுகின்றார். இவ்வாறு பொருள் கொள்ளுதல் பொருத்த முடையதாகத் தோன்றவில்லை. இவன் களப்பிரர்களுக்கெல்லாம் களப்பிரனாகி விளங்கினான் எனக் கோடலே பொருத்தமுடைத்து. மன்னாதி மன்னன், சூராதிசூரன், வில்லாதிவில்லன் - போன்ற சொற்களைக் கள்வர் கள்வன் என்னும் சொல்லுடன் ஒப்பிட்டுப் பார்ப்போர் இப் பொருளையே கொள்வர்.[3] எனவே, களப்பிரரும் முத்தரையரும் ஒருவரே எனக்கொள்ளுதலே பொருத்த முடையது. இதுபற்றி நாம் 'பாண்டியர் காலக் குறுநில மன்னர்கள்' என்னும் பகுதியில் விரிவாகக் காணலாம்.

### களப்பிரர் தமிழரே

களப்பிரர் தென்கன்னட நாட்டைச் சேர்ந்தவர் என்ற கருத்தினை ஏற்றுக்கொண்டாலும், இவர்கள் வேங்கடமலைப் பகுதியை ஆண்ட புல்லியின் மரபினர் என்ற கருத்தினை ஏற்றுக் கொண்டாலும், இவ்விரு பகுதிகளும் பண்டு மொழி பெயர் தேய

1 கிருஷ்ணன், கே. ஜி. Journal of Ancient Indian History. Vol. V. part-I. (1971-72) 'The Muttaraiyar'. p. 78.

2 நடனகாசிநாதன் 'முத்தரையர் முரசு' 15-6-65 பக். 9

3 இராசசேகர தங்கமணி, ம. 'முத்தரையர் முழக்கம்'. முத்தரையர் வரலாறு-6. பக்கம். 13.

மென்று கருதப்பட்டதால், களப்பிரர் தமிழரேயாவர் என்பது அறியப்படுகின்றது. வடவேங்கடமும் எருமைநாடும் செந்தமிழ் சேர் பன்னிரண்டு நாடுகளில் அடங்கி விடுகின்றது. எனவே, களப்பிரர் தமிழரே என்று ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர்.[1] இதற்கான ஆதாரங்கள் யாவை? அவற்றைக் கீழே காண்போம்!

1. சங்க நூல்களில் எருமையூர்[2], எருமை நன்னாடு[3], எருமை குடநாடு[4], எருமைவெளி[5] என்றெல்லாம் குறிக்கப்பெறுகின்ற எருமைநாடு இன்றைய கன்னட மாநிலமேயாகும். இதன் பழைய பெயர் மைசூர். ஆரியர் தென்னிந்தியாவிற்குள் நுழைந்தபோது பல தமிழ்ப் பெயர்களை வடமொழிப் பெயராக மாற்றினர். அவற்றுள் ஒன்றே மைசூர் நாடாகும். எருமை என்பது வட மொழியில் மகிஷம் எனப்பொருள்படும். எனவே, எருமையூர், 'மகிஷர் ஊர்' ஆகி பின்னர் மைசூரென மருவிற்றெனலாம். கல்வெட்டுகளிலும் மைசூர் எருமைநாடு என்று குறிக்கப் பெற்றுள்ளது.[6]

2. எருமைநாடு 'குடநாடு' என்றும் அழைக்கப்பட்டது. சேரநாடும், குடநாடென்று அழைக்கப்பட்டது. எனவே, இவ் விரண்டையும் வேறுபடுத்தி அறியுமுகத்தான் மைசூர்ப்பகுதி 'எருமைக்குடநாடு' என்று குறிக்கப்பட்டது.[7] ஒல்காப் பெரும் புலமைத் தொல்காப்பியனாரும் இக் குட நாட்டினை உள்ளிட்ட பன்னிரு நாடுகளைச் 'செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலம்' என்றே குறிப்பிடுகின்றார். அதனைப் பின்வரும் பாட்டாலறியலாம்:

'தென்பாண்டி, குட்டம், குடம், கற்கா, வேண், பூழி
பன்றி அருவா, அதன்வடக்கு-நன்றாய்
சீத மலாடு புனல்நாடு செந்தமிழ்சேர்
ஏதமில் பன்னிருநாட் டெண்.'

3. தமிழ்மொழியின் கிளைமொழி (dialect) பேசப்பட்ட பன்னிரு நாடுகளுள் எருமை நாடும் ஒன்றாகக் குறிக்கப்பெறு

1 கோவிந்தசாமி, மு. இலக்கியத் தோற்றம். பக். 37.
அறவாணன், க.ப. 'சைனரின் தமிழிலக்கண நன்கொடை' பக். 63-64
2 Nilakanta Sastry, K. A. 'A History of South India' p. 148.
அகநானூறு-16.
3 I bid.
Ibid-340
4 சதாசிவ பண்டாரத்தார், தி.வை. 'தமிழிலக்கிய வரலாறு' பக். 74.
Ibid-115.
5 Ibid-72, 73, புறநானூறு-273, 303.
6 Epigraphia Carnatica Vol. X Cu. 20; A.R. For 1907. Para-I.
7 அகநானூறு-115.

கிறது. எருமைநாடும், குடநாடும் ஒன்றே என்பதனை நாம் முன்பே கண்டோம். இது செந்தமிழ் நாட்டினின்று எருமை வெளியனார் என்ற தமிழ்ப் புலவரும்[1] அவரது மைந்தரான கடயிலனார்[2] என்ற புலவரும் தமிழ்ச் சங்கப்புலவர்களாக விளங்கினர்.

4. மைசூர் நாடாகிய எருமைநாடு சங்ககாலத்திலும், அதனையொட்டிய காலத்திலும் தமிழ்நாட்டின் பகுதியாகவே இருந்தது. இதனால் அப்பகுதியைச் சேர்ந்த களப்பிரரும் தமிழராவார். தமிழ் நாட்டின் வட எல்லையிலிருந்த வேங்கடமலையை ஆண்ட புல்லி யென்னும் களப்பிர வேந்தன் சங்க இலக்கியங்களில் தமிழ் வேந்தனாகவே குறிக்கப்பெறுகிறான்.[3]

5. மைசூர் எருமைநாடு என்றழைக்கப்பட்டதனைக் கல்வெட்டுகளும் உறுதி செய்வதாக உள்ளன.

6. களப்பிரர் கன்னட நாட்டில் வாழ்ந்து வந்தபோதிலும் தமிழரே ஆவர்.

களப்பிரர் தமிழரே என்பதனை உறுதிசெய்ய பின்வரும் பட்டியல் துணைபுரியுமெனலாம்.

1 Ibid-73; புறநானூறு 273, 303.

2 அகநானூறு-71.

3 'தமிழ்நாட்டு வடஎல்லையில் ஆண்ட புல்லி என்பானும் களப்பிர மன்னன் அவனைத் தமிழரசனாகவே தமிழிலக்கியங்கள் காட்டுகின்றன. அதுபோலவே களப்பிரர் கன்னட நாட்டார் எனக்கொள்ளப்பட்டால் கி. பி. 8-ஆம் நூற்றாண்டளவில் அவரும் தமிழரேயாதல் வேண்டும். அறவாணன், க. ப. 'சைனரின் தமிழிலக்கண நன்கொடை' பக். 64.

| | களப்பிர அரசன் | ஆண்ட இடம் | எல்லை | காலம் | பகைவன் |
|---|---|---|---|---|---|
| 1. | புல்லி | வேங்கடம் | தமிழ்நாடு | கி.பி. 1 | — |
| 2. | அச்சுதன் | சோழநாடு | ,, | கி.பி. 4 | — |
| 3. | களப்பிரன் | பாண்டியநாடு | ,, | கி.பி. 6 | கடுங்கோன் |
| 4. | ,, | தொண்டைநாடு | ,, | கி.பி. 4 | பப்பதேவன் |
| 5. | ,, | ,, | ,, | கி.பி. 4 | சிவஸ்காந்தவர்மன் |
| 6. | ,, | ,, | ,, | கி.பி. 5 | புத்தவர்மன் |
| 7. | ,, | ,, | ,, | கி.பி. 575-615 | சிம்மவிஷ்ணு |
| 8. | ,, | ,, | ,, | கி.பி. 630-660 | முதலாம் நரசிம்மன் |
| 9. | ,, | ஆந்திரா | ஆந்திரா | கி.பி. 7 | சாளுக்கியன் |
| 10. | ,, | ,, | ஆந்திரா | கி.பி. 8 | சாளுக்கியன் |
| 11. | களபோரர் | கன்னடநாடு | கன்னடம் | கி.பி. 3 | காகுஸ்தன் |
| 12. | திண்டீகன் | ,, | ,, | கி.பி 3-4 | — |
| 13. | களவர் | பாண்டியநாடு | தமிழ்நாடு | கி.மு. | பாண்டியன் |
| 14. | எருமையூரன் | ,, | ,, | ,, | பாண்டியன் நெடுஞ்செழியன் |

இப் பட்டியலை திரு. க. ப. அறவாணன் அவர்கள் தமது 'சைனரின் தமிழிலக்கண நன்கொடை' என்னும் நூலில் கொடுத்துள்ளார். அதனைப் பின்பற்றியதே இப் பட்டியலாகும்.

**இருண்ட காலமன்று**

இற்றை நாள்வரை களப்பிரரது காலம் இருண்ட காலம் என்றே வரலாற்றறிஞர்கள் கருதி வந்தனர். ஆனால், தற்காலத்திலோ ஆய்வாளர் பலர் இக் கூற்றினைப் பொய்யாக்கி வருகின்றனர். அக் காலம் இருண்ட காலம் அல்ல என்பதும், ஒளி மிகுந்த காலமே என்றும் சான்று காட்டி நிறுவுகின்றனர். அக் காலம் இருட்டடிப்புக் காலமேயென்றும், அக் காலத்திய களப்பிரர் தொடர்பான வரலாற்றுச் சான்றுகளைப் பிற்காலத்து வேத சமயத்தார் அழித்து விட்டனர் என்றும் கருதுகின்றனர். அம் முந்நூறு ஆண்டுகளில் ஆண்ட மன்னர்கள் யாவர் என்பது தெரியவில்லை. அவ்வரிய பண்பாட்டுப் போரின் வரலாற்றுத் தலைவர்கள் அறியப்படாமல் போனமைக்குக் காரணம், பிற்காலத்து வடமொழிப் பற்றும், வடபுலச் சமயக் கொள்கைகளும் கொண்ட பல்லவரின் பேரெழுச்சியாக இருக்கக் கூடும் என்றும் அவர்கள் கருதுகின்றனர்.

**இலக்கிய வளர்ச்சிக் காலம்**

களப்பிரர் காலத்தில் பிராகிருதமும், பாலிமொழியும் அரசாங்க ஆதரவு பெற்றது. அடுத்துத் தமது சமயக் கருத்துகளைத் தமிழ்மொழியில் போதித்தல் நலம் என்றும் உணர்ந்தனர். இக் காலக் கட்டத்தில் தமிழிலக்கியம் வளர்ச்சி பெறவில்லை என்று சிலர் குறைபட்டுக் கொண்டனர். ஆனால், திரு. மு. கோவிந்தசாமி போன்றோர் கி. பி. 4 முதல் கி. பி. 6ஆம் நூற்றாண்டு வரையிலான காலம் இலக்கிய எழுச்சியும், அற இலக்கியப் பெருக்கமும், இலக்கியத் தொகுப்பும் நிறைந்த காலமே யென்று வாதிடுவர். இதுபற்றிய அவரது கருத்தினைக் கீழே காண்போம்:

'தமிழ் இலக்கிய வரலாற்றில் இஃதொரு பொற்காலமாகும். இந்திய வரலாற்றில் கி.பி. 300—600க்கு இடைப்பட்ட காலத்தை-குப்தர் காலத்தைப் பொற்காலம் எனக் குறிக்கின்றனர். தமிழகத்தில் இக் காலம் ஓர் இருண்ட காலம் எனக் கருதப்படுகின்றது. சேர, சோழ, பாண்டியரின் வரலாறு எதுவும் இக் காலத்தில் தெளிவாகக் கிடைக்கவில்லை என்பதே அதற்குக் காரணம். ஆனால், இலக்கிய வளர்ச்சியில் ஒளி நிறைந்த காலம் இதுவெனத் தோன்றுகிறது.'[1]

1 கோவிந்தசாமி மு. 'இலக்கியத்தோற்றம்'-பக் 37.

இவ்வாறு அவர்கள் கூறுவதற்குக் காரணம் இல்லாமலில்லை. அக் காலத்தில் இலக்கியங்கள் அதிக அளவில் வெளிவந்துள்ளன. இவற்றிற்கெல்லாம் காரணம் திராவிட சங்கத்தின் தூய பணியேயாகும். அப் பணி யாது என்பதுபற்றிக் காண்போம்.

**இலக்கியத்தைப் பொருத்தமட்டில் ஒளி திரண்ட காலம்**

சங்க காலத்தில் இயற்றப்பெற்றுப் போற்றுவாரின்றிக் கிடந்த தனிப் பாடல்கள் பல எட்டுத்தொகை, பத்துப்பாட்டு எனத் தொகைநூற்களாகத் தொகுக்கப்பெற்றது இக் காலமே.

பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் பெரும்பாலானவை இக் காலத்தேதான் இயற்றப்பெற்றன.[1] ஐம்பெரும் காப்பியங்களுள் இரட்டைக்காப்பியங்களாகப் போற்றப்பெறும் சிலப்பதிகாரமும், மணிமேகலையும் இக் காலத்தில் இயற்றப்பட்டனவேயாம்.[2]

சைவ நாயன்மார்களுள் பெண்குலத்தின் பொன் விளக்காகத் திகழ்ந்த காரைக்காலம்மையாரின் அற்புதத் திருவந்தாதி, திருவிரட்டை மணிமாலை, திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம் ஆகியன இயற்றப்பட்டதும் இக் காலத்தேதான்.[3]

திருமூலரின் திருமந்திரம், முத்தொள்ளாயிரம், பெருங்கதை, இறையனார் அகப்பொருளுரை, பரிபாடல், கலித்தொகை, திருமுருகாற்றுப்படை[4] முதலியனவும் இக் காலத்தனவேயாகும்.

கிளி விருத்தம், எலி விருத்தம், நரிவிருத்தம் ஆகிய விருத்தப் பாக்கள் தோன்றியதும் இக் காலத்தேதான். கல்லாடம், பெருந்தேவனாரின் பாரதம், கபிலதேவர், பரணதேவர் பாடின நூல்கள் ஆகியன யாவும் இக் காலத்தில் முகிழ்த்தனவேயாகும்.

நீலகேசி, குண்டலகேசி, யசோதர காவியம், சீவக சிந்தாமணி முதலான காவியங்கள் தமிழில் தோன்றுதற்கு முழுமுதற் காரணமாக அமைந்தது வச்சிர நந்தியால் நிறுவப்பட்ட திராவிட சங்கமேயாகும் என்பதனை நாம் மறத்தல் இயலாது.

[1] Nilakanta Sastry, K. A. 'A History of South India' p.148.
[2] Ibid.
[3] சதாசிவ பண்டாரத்தார், தி.வை. 'தமிழிலக்கிய வரலாறு' பக். 74.
[4] கோவிந்தசாமி, மு. 'இலக்கியத்தோற்றம்' பக். 14, 79.

மேற்கூறிய நூல்களுள் பெரும்பாலானவை, தொண்டை மண்டலம் அல்லாத பிற பகுதிகளில் வளமை பெற்றனவென் பதும் ஈண்டு நினைவுகூரத் தக்கதாகும்.

## சமய நிலை

களப்பிரரது காலத்தில் பௌத்தமும் சமணமும் உயர்ந்தது; வைதீகச் சமயமும் சைவமும் தாழ்ந்தது எனலாம். பௌத்த சமயக் கோட்பாடுகள் மக்களைப் பெரிதும் கவர்ந்தன. இவர்கள் கொல்லாமை, புலால் உண்ணாமை, பொய்யாமை, பிறப்பினால் உயர்வு தாழ்வு பாராட்டாமை முதலாய உயர்ந்த அறங்களை ஓம்பி வந்தனர். வைதீகச் சடங்குகளையும், வேள்விகளையும், ஆரிய சமயத் தத்துவங்களையும் இவர்கள் மறுத்து வந்தனர். நாட்டின் பல பகுதிகளில் சமணப் பள்ளிகளும், பௌத்த விகாரைகளும் அமைக்கப்பட்டிருந்தன. சமண, பௌத்தத் துறவிகள் மக்களிடையே நல்லொழுக்கத்தையும், பிற உயிர்கள்மாட்டு அன்பை வளர்ப்பதனையும், அமைதியையும் போதித்து வந்தனர். சீனப் பயணியான யுவான் சுவாங் 'பாண்டிய நாட்டில் சமண நிர்க் கிரந்தர்கள் பெருமளவில் வாழ்ந்து வந்தனர்' எனக் குறிப்பிடு வதனாலும் அக் காலத்தில் சமணம் பெற்றிருந்த ஏற்றத்தினை நாமறியலாம்.

சமணம் அரச ஆதரவைப் பெற்றபோதிலும், வைதீக சமயத்தினர் துன்புறுத்தப்பட்டதாகத் தெரியவில்லை. சமண புத்த சமயத்தினரும், வைதீக சமயத்தினரும் ஏனையோரும் நெருங்கி நின்று, பூசலின்றி இணைந்து வாழ்ந்தனர்[1] என்றே கொள்ளலாம். சில சமயங்களில் சமயவாதிகளுக்குள் சொற் போர்கள் நிகழ்வதைத் தடுத்தல் இயலாது. குண்டலகேசி என்னும் பௌத்த காவியத்திலும், நீலகேசி என்னும் சமண நூலிலும் சமயச் சொற்போர்பற்றிக் குறிப்புகள் காணப்படு கின்றன. இதனால் அக் காலத்தில் அறிவு வளர்ச்சிக்கு முக்கியத் துவம் அளிக்கப்பட்டதென அறியலாம். மேற்கூறிய சமயங் களையன்றி, களப்பிரரது காலத்தில் சைவம், பிரமவாதம், ஆசீவகம், நிகண்டம், சாங்கியம், வைசேடிகம், பௌதிகம் அல்லது உலோகாயதம்[2] முதலான சமயங்களும் மக்களிடையே நிலவியிருந்தன. இச் சமயத் தலைவர்கள் தமது மதக்கோட் பாடுகளை மக்களிடையே பரப்பி வந்தனர். ஆனால், இவர்களுக் கிடையே சமயப் போர்கள் நிகழ்ந்ததாகத் தெரியவில்லை.

1 பிள்ளை, கே.கே, பண்டாரகர் 'தமிழக வரலாறு—மக்களும் பண்பாடும்' பக். 174.
2 மணிமேகலை—27

சமணர்கள் அருகதேவனின் அடியொற்றி நடந்தனர். வைதீக சமயத்துடன் ஓரளவு தொடர்பு கொண்டனர். இதன் விளைவாக அருகனை மட்டும் வணங்கிய இவர்கள், வாசுதேவன் பலதேவன் ஆகிய இருவரையும் தமது தெய்வ வரிசையில் சேர்த்துக் கொண்டனர். இவர்கள் தமிழ்மொழி பயின்று பல தமிழ் நூல்களை இயற்றினர். அவற்றில் சமண சமயக் கருத்துகள் பல இடம் பெற்றிருந்தன. இதனால் மன்னனும், மக்களும் இதனை ஆதரித்தனர். திருமகள் வழிபாடும் இவர்களுக்கு உடன்பாடாகவே இருந்தது.[1] சூழ்நிலைக்கேற்றவாறு தமது கொள்கையில் சில மாற்றங்களைச் செய்துகொண்ட சமணர்களுக்கும், வைதீகத்தில் சிறிதும் தொடர்பில்லாத பௌத்தர்களுக்கும் கருத்து வேறுபாடு ஏற்பட்டது. இது கருத்து மோதலாக மாறி அவர்களிடையே சமயப் பூசல் ஏற்பட வழிவகுத்தது. இப் பூசலில் சமணரது கை வலுத்து இருந்தது. இதனால் நாளடைவில் சமண சமயம் வெகு வேகமாகப் பரவவும் பௌத்தம் மறையவும் தலைப்பட்டது.

**சமணத்தின் உயர்ச்சி**

சமண சமயத்தின் அமைப்பும் வசதிகளும் போற்றத் தகுந்த வகையில் இருந்ததால் சமணம் தொடர்ந்து வளர்ந்தது. சமணத் துறவிகளும் அயர்வின்றி நாட்டின் பல பகுதிகட்கும் — சிற்றூர்க்கும் சென்று மக்களைச் சந்தித்துத் தமது கோட்பாடுகளுக்கு ஆதரவு தேடினர்; மக்களுக்குத் தொண்டும் புரிந்து வந்தனர். இவர்கள் பௌத்தர்களைப்போல் நகரங்களில் மட்டும் விகாரைகளமைத்துச் சமயப்பணி புரிந்தார்களில்லை; நாட்டுப் புறங்களிலும், மலைக் குகைகளிலும், காடுகளிலும் சமணப் பள்ளிகளையமைத்து, மக்களின் நன்மதிப்பைப் பெற்று அவர்களுடன் நெருங்கிய தொடர்பு கொண்டனர். மக்களும் சமணத் துறவிகளின் தூய வாழ்வினால் கவரப்பட்டனர். இதனால் சமண சமயம் பெருகியது; பௌத்தமோ அருகியது.

சமண சமயம் புத்த சமயத்தை வெற்றி கொண்டதனால் மட்டும் அது சிறப்புப் பெறவில்லை. இது தனித்து நின்று உள்நாட்டுச் சைவத்துடனும் வைணவத்துடனும் போட்டி போட வேண்டியிருந்தது. இப் போட்டியிலும் இது ஓரளவு வெற்றியே பெற்றது.

[1] பிள்ளை, கே. கே. பண்டாரகர் 'தமிழக வரலாறு மக்களும் பண்பாடும்' பக்கம். 175.

**களப்பிரர் வீழ்ச்சி**

எண்ணற்ற அரசப் பெருங்குடியினரை வென்று தமிழகத்தின் பெரும் பகுதியினை (அகலிடத்தை) ஆண்டு வந்த களப்பிரர் ஏறத்தாழ இரண்டரை நூற்றாண்டுகள் தமிழகத்தை ஆண்டனரெனலாம். இத்துணை கால நீண்ட ஆட்சிக் காலத்தில் களப்பிரர் தமது சமண சமயத்தைப் பெரிதும் வளர்த்தினர் வைதீக சமயத்தையும் பிராமணீயத்தையும் எதிர்த்தனர்; இக் கால கட்டத்தில் நாட்டுப்பற்றில் நாட்டங்கொண்ட பாண்டியர் அந்நிய ஆட்சிக்கு எதிராகப் புரட்சி கொடியுயர்த்தாமல் வாளாயிருந்தனர் என்று நாம் கொள்வதற்கில்லை. அவர்களும் தம்மால் இயன்றவரை களப்பிரரைத் தம் நாட்டை விட்டு ஓட்டுவதில் பெரும் முயற்சி செய்திருப்பர். அவையனைத்தும் களப்பிரரின் படை வலிமையால் அடக்கப்பட்டு ஒடுக்கப்பட்டிருக்கலாம். இவ்வாறு எழுந்த பல புரட்சிகளுக்குப் பின் 'கடுங்கோன் என்னும் தன்மான வீரன் பெருவலிவோடு களப்பிரரை வீழ்த்தினன் எனலாம்.

விடுதலை வேட்கையில் வெறி கொண்ட வீரனான கடுங்கோன் ஆண்டாண்டு காலமாகப் பாண்டிய நாட்டினை ஆண்டு வந்த பாண்டிய மரபின் கால் வழியினன். பாண்டிய நாட்டினை ஆண்ட மரபினர், அன்னிய ஆட்சியில் அடங்கி ஒடுங்கிக் கிடப்பதாவென்று வீறு கொண்டெழுந்தான். களப்பிரர் ஆட்சிக்கெதிராக மறவர்களை ஒன்று திரட்டினான்; அனைவருக்கும் படைப் பயிற்சி அளித்தான்; அப் படையின் தலைமையைத் தானே ஏற்றுக் கொண்டு களப்பிரர் ஆட்சிக்கெதிராகப் புரட்சிக் கொடியுயர்த்தினான்; கடுமையான போருக்குப் பின்னர் கடுங்கோனின் படை பல வெற்றிகளைப் பெற்று, களப்பிரரை விரட்டி ஓட்டியது; பாண்டியரது தன்மான உணர்ச்சியினையும், விடுதலை வேட்கையினையும் வெளிக் காட்டியது. அடிமையிருள் மறைந்தது; பாண்டியரின் புத்தாட்சியெனும் ஒளி பிறந்தது.

புரட்சி வீரனாகிய கடுங்கோன் மதுரை மாநகரின்கண் மீண்டும் பாண்டியராட்சியைத் தோற்றுவித்தான்; களப்பிரரது ஆட்சிக்குச் சாவுமணி அடித்தான். இதனை வேள்விக்குடிச் செப்பேடுகள்,

'படுகடன் முளைத்த பருதிபோல
பாண்டியாதி ராஜன் வெளிப்பட்டு
விடுகதிர் அவிரொளி விலக வீற்றிருந்து
...... ................ ............ ......
தங்கொளி நிறைந்த தரணி மங்கையைப்

பிறர்பா லுரிமை நன்கன மமைத்த
மானம் பேர்த்த தானை வேந்தன்
ஒடுங்கா மன்ன ரொளிநக ரழித்த
கடுங்கோ னென்னும் கதிர்வேற் றென்னன்"[1]

என்று பாராட்டுகின்றது. தளவாய்புரச் செப்பேடுகளும் தன்மான வீரனை கடுங்கோன் களப்பிரர்மீது கொண்ட வெற்றியினைக் குறிப்பிடுகின்றது. இதனால் பாண்டிய நாட்டில் களப்பிரரது ஆட்சி ஒழிக்கப்பட்டது உறுதியாகிறது.

பாண்டிய நாட்டைக் களப்பிரரிடமிருந்து கடுங்கோன் மீட்டுக்கொண்ட அதே காலத்தில், தொண்டை மண்டலத்தைக் காஞ்சிமா நகரினின்றும் ஆண்டு கொண்டிருந்த பல்லவவேந்தன் சோழநாட்டைக் களப்பிரரிடமிருந்து மீட்டுக்கொண்டான் என்று பல்லவர் செப்பேடுகள் செப்புகின்றன. வேலூர் பாளையம் செப்பேடுகள், சிம்ம விஷ்ணுவை (கி. பி. 575-615) 'களப்பிரரை முறியடித்த பெருவீரன்' என்று குறிப்பிடுகின்றது. பல்லவன் கோவில் செப்பேடுகளும் இவன்சோணாட்டைவிடுவித்ததுபற்றிக் கூறுகின்றன. இச் செப்பேடுகளில் களப்பிரரிடமிருந்துதான் இவன் சோணாட்டினைக் கைப்பற்றினனென்று குறிப்பிடப் பெற வில்லை. இருப்பினும் பாண்டிய நாட்டினை ஆண்டு வந்த களப் பிரரே சோணாட்டையும் அக் காலத்தில் ஆண்டு வந்தனர். இதனால் பல்லவன் களப்பிரரிடமிருந்தே சோணாட்டைக் கைப் பற்றினன் என்பது உறுதி.

**முடிவுரை**

இதுகாறுங் கூறியவற்றான் கடைச் சங்கத்தின் இறுதிப் பகுதியில் தமிழகத்தின் சேர, சோழ, பாண்டிய நாட்டுப் பகுதிகள் அனைத்தும் களப்பிரரது ஆட்சிக்கு உட்பட்டது என்றும், இக் காலக் கட்டத்தில் தமிழகத்தில் யாண்டும் சேர, சோழ, பாண்டியரின் ஆட்சி நடைபெறவில்லையென்றும், மாறாக தமிழகத்தில் நடைபெற்ற களப்பிரர் ஆட்சிபற்றியும் நாம் தெளிவாக அறிந்து கொள்ளச் சான்றுகளில்லை என்றும் அறிய லாம். இந் நிலையில் நாம் பின்வரும் கருத்துகளை மனத்தில் இருத்திக் கொள்ளுதல் நலம் பயப்பதாகும்.

1. கடைச் சங்கத்தின் வீழ்ச்சிக்குப்பின் தமிழகம் முழு வதும் களப்பிரரின் ஆட்சிக்குட்பட்டது.

[1] பாண்டியர் செப்பேடுகள் பத்து—பக் 38. வரி. 13-23.

2. தமிழகத்தில் களப்பிரரது ஆட்சி ஏறத்தாழ கி.பி. மூன்றும் நூற்றுண்டின் இறுதிப் பகுதி முதல் கி.பி. ஆறும் நூற்றுண்டின் இறுதிப் பகுதி முடிய நடைபெற்றது.

3. சங்க காலத்திலேயே களப்பிரக் குறுநில மன்னர் சிலர் பாண்டிய நாட்டைக் கைப்பற்ற, பாண்டிய வேந்தனை வீழ்த்த முயன்றுள்ளனர். ஆனல், தோல்வியைத் தழுவினர். ஆனல், கடைச் சங்க காலத்தின் இறுதியில் களப்பிரர் தமிழகம் முழுவதும் கைப்பற்றினர். இம் முயற்சியில் தமிழகக் குறுநில மன்னர் சிலரும், சமண சமயத்தினரும் களப்பிரருக்குப் பக்க துணையாக இருந்திருத்தல் வேண்டும்.

4. வட வேங்கடப் பகுதியிலிருந்து, தொண்டை மண்டலம் சோழ நாடு வழியாக இவர்கள் பாண்டிய நாட்டினுள் புகுந்ததாகத் தெரிகிறது.

5. இவர்கள் எருமை நாட்டினராகவோ, வட வேங்கடப் பகுதியைச் சார்ந்தவராகவே இருந்தபோதிலும் தமிழரே யாவர்.

6. வைதீக சமயத்தின் விரோதிகளாகத் திகழ்ந்த இவர்கள் சமண சமயத்தின் வளர்ச்சிக்குப் பாடுபட்டனர்.

7. அரசியல் வரலாற்றைப் பொருத்தமட்டில் இவர்களது காலம் 'இருண்ட காலமாக'க் கருதப்பட்டபோதிலும், இலக்கியத் துறையில் 'ஒளி திரண்ட காலமே'. ஆரிய சமயத்தை எதிர்த்த இவர்கள் தமிழ் மொழியை வெறுக்காமல், தமிழ் வளர்ச்சிக்குப் பாடுபட்டனர்.

8. சோழ நாட்டில் அரசு செலுத்திய களப்பிரர்பற்றி மட்டும் நமக்குச் சில செய்திகள் தெரிகின்றன.

9. களப்பிரர் வெளியிட்ட செப்பேடுகள், காசுகள் ஒன்றும் நமக்குக் கிடைக்காத காரணத்தால் இவர்களைப்பற்றி நாம் தெளிவாக அறிந்து கொள்ள இயலவில்லை. இவை யாவும் பல்லவ, பாண்டியரால் அழிக்கப்பட்டிருக்கலாம்.

10. களப்பிரரின் கால் வழியினரே முத்தரையர். முத்தரையர் சில காலம் குறுநில மன்னர்களாகவும், அதன்பின் சோழ பாண்டிய, பல்லவர்களின் படைத் தலைவர்களாகவும், அரசியல் தலைவர்களாகவும் பெருந்தொண்டு புரிந்தனர்.

11. முத்து ராஜாக்கள், அம்பலக்காரர்கள் போன்ற பல்வேறு பெயர்களைக் கொண்டு நம்மிடையே வாழ்ந்து வரும் இனத்தினர் களப்பிரரின் கால் வழியினரேயாவர். இவர்கள்

ஆந்திர நாட்டிலும், கர்நாடக மாநிலத்திலும் கூடபெருமளவில் வாழ்கின்றனர்.

12. களப்பிரர் ஆட்சி தமிழகப் பண்பாட்டு வரலாற்றில் ஒரு குறிப்பிடத்தக்க புரட்சியை ஏற்படுத்தியது.

## களப்பிரர் இடையீடு - இணைப்பு
## (Appendix)

**சிற்றரசரான களப்பிரர்**

முற் கூறப்பட்ட தலைப்பிலிருந்து களப்பிரர் தாழ்ந்த நிலையை அடைந்ததாக அறிந்த போதிலும், அவர்கள் அடிச்சுவடின்றி அழிந்து விடவில்லை என்பதனை நாமறியலாம். களப்பிரரின் கால் வழியினர் தமிழகத்தின் பல பகுதிகளில் சிற்றரசர்களாகவே அடங்கியிருந்தனர். சோழ நாடு பல்லவர்களால் கைப்பற்றப் பட்ட பின்பு களப்பிரரிடம் சிற்றரசராகவிருந்த சோழர் பல்லவரின்கீழ் சிற்றரசராகப் பணி புரிந்தனர். இதனைப் பல்லவர், சோழர் சாசனங்களினால் அறியலாம். பல்லவர் சோணாட்டை வென்ற பின்பு, களப்பிரர் சோழ நாட்டிலேயே சிற்றரசராகத் திகழ்ந்தனர் என்பதும் சாசனங்களால் அறியப்படுகின்றது.

இவ்வாறு தமிழகத்தின் சில பகுதிகளில் சிற்றரசர்களாகத் திகழ்ந்திருந்த களப்பிரர் தம்மாலியன்றவரை மீண்டும் மேலாண்மை பெற பல வேந்தருடன் போராடிக் கொண்டிருந்தனர். ஆனால், அவர்களது போராட்டம் வெற்றி பெறவில்லை. கி. பி. ஆறும் நூற்றாண்டிற்குப் பின்னர் பல்லவ நாட்டினை ஆண்டு வந்த முதலாம் நரசிம்மவர்மப் பல்லவன், மேலைச் சாளுக்கிய வேந்தர்களான முதலாம் விக்கிரமாதித்தியன், விசயாதித்தன், இரண்டாம் விக்கிரமாதித்தியன் முதலானோர் களப்பிரரை வென்றதாகப் பெருமையுடன் கூறிக் கொள்கின்ற நிகழ்ச்சிகள் அனைத்தும் பேரரசர்களான களப்பிரரை வென்றதாகக் கொள்வது அத்துணைப் பொருத்தமுடையதாகத் தோன்றவில்லை. இவ்வாறு கொள்வது சரித்திரத்துக்கும் முரண்பட்ட கருத்தாகும். எனவே, இவர்களனைவரும் சிற்றரசர் நிலைக்குத் தள்ளப்பட்ட களப்பிரரையே வென்றனர் எனலாம்.

அடுத்து, நெல்வேலி வென்ற நெடுமாறனும், களப்பிரருடன் போரிட்டு அவர்களை வென்றதாகத் தெரிகிறது. இதனைக் 'கலி கடிந்து மங்கலபுரம் நகரமாக்கி' என்னும் வைகைக் கரைக் கல்வெட்டடியால் அறியலாம். (ஆராய்ச்சி மலர் 4. இதழ் 3. ஏப்ரல் 74. பக். 225).

## தமிழர் வாழ்வுடன் இணைதல்

படையெடுப்பாளர்களாகத் தமிழகத்தில் நுழைந்து ஏறத்தாழ கி.பி. 300 முதல் கி.பி. 575 முடிய தமது மேலாண்மையினைத் தமிழகத்தில் நிறுவிய களப்பிரர், சிற்றரசர்களாக மாறினர்; பின்பு அவர்களது ஆட்சி, அரசியல், சமயம், பண்பாடு ஆகியவை கால வெள்ளத்தால் மூழ்கின. காலச் சக்கரம் சுழன்று வீழ்ச்சியுற்ற களப்பிரர், முத்தரையர், முத்துராஜாக்கள் என்னும் பெயரில் தமிழர் சமுதாயத்துடனும், பண்பாட்டுடனும் இணைந்து விட்டனர். இரண்டும் வெவ்வேறு என்று பிரிக்க முடியாத அளவிற்கு இவர்கள் தமிழருடன் கலந்தனர். தமது தனித்தன்மையையும் இழந்தனர். இவ்வாறு தமிழர் வாழ்வுடன் இணைந்து தமிழகப் பகுதிகளிலேயே நிலைத்து வாழ்ந்து வருவது தமிழகத்தின் தனித்த உயர்ந்த பண்பாட்டுச் சிறப்பினை வெளிப்படுத்துவதாகும். களப்பிரர் தமிழர் சமுதாயத்துடன் சங்கமம் ஆன நிகழ்ச்சி ஹூணர்கள் வடவிந்தியாவின்மீது படையெடுத்து வந்து பின்னர், இந்தியப் பண்பாட்டுடன் இணைந்த நிகழ்ச்சியுடன் ஒப்புமை கூறத்தக்கதாகும்.

இந்திய வரலாற்றில் குப்தருடைய இறுதிக் காலத்தில் ஏற்பட்ட ஹூணப் படையெழுச்சிக்குப்பின், காலம் பல சென்ற பின் ஹூணர்கள் சமுதாய அளவில் இந்துக்களாயினர்; இந்தியக் கலாச்சாரத்துடன் தம்மையும் இணைத்துக் கொண்டனர். அதுவே பேராற்றல் பெற்ற இராசபுத்திர மரபுகள் தோன்றுவதற்குக் காரணமாயிற்று. இந்திய வரலாற்றில் ஹூணப் படையெழுச்சி வடக்கு, மேற்கு - இந்திய அரசியல், சமுதாய வரலாற்றில் ஒரு திருப்புமுனையாக அமைந்தது என்று பண்டார்கர் வின்சென்ட்ஸ்மித் அவர்கள் கூறியிருப்பது போன்று தமிழக-அரசியல், சமுதாய வரலாற்றில் களப்பிரரது படையெழுச்சி ஒரு திருப்புமுனையாகவே அமைந்தது. களப்பிரரின் வழியினரான முத்தரையர் - முத்தரையரின் வழியினரான முத்துராஜாக்கள் தமிழகப் பண்பாட்டுடன் ஒன்று கலந்து விட்டனர் எனலாம்.

### பிற்காலத்தில் களப்பிரர்

பேரரசர்களாகத் திகழ்ந்த களப்பிரர் தமது மேலாண்மையினை இழந்தபின்பு முத்தரையச் சிற்றரசர்களாகச் சில காலமும் தனித்த வேந்தர்களாகச் சில காலமும் தமிழகத்தின் சில பகுதிகளில் ஆண்டு வந்த பின்னர், பிற்காலப் பெருவேந்தரிடம் செல்வாக்குப் பெற்று அரசியல் தலைவர்களாகவும், தானைத் தலைவர்களாகவும், படை வீரர்களாகவும் பணிபுரிந்து

வருவாராயினர். இவர்களது செம்மையான பணியினைக் கண்ட பெருவேந்தர் அவர்களது தொண்டினைப் பாராட்டினர். இதனால் அவர்கள் பெற்றிருந்த செல்வாக்கினை நாம் ஓரளவு அறிந்து கொள்ள முடிகின்றது. இவர்களுள் சிலர் முத்தமிழ் கற்ற வித்தகர்களாகவும், தமிழ்ப் புலவர்களை ஆதரிக்கும் புரவலர் களாகவும் நன்மதிப்புப் பெற்றிருந்தனர். களப்பிரரின் கால் வழியினரான முத்தரையர் வரலாறுபற்றி நாம் 'பாண்டியர் காலக் குறுநில மன்னர்கள்' என்னும் தலைப்பில் விரிவாகப் பின்னர் காணலாம். ஈண்டு நாம் களப்பிரரின் வழியினருள் ஒருவரான களப்பாளர்பற்றிக் காண்போம்.

தமிழகப் பெருவேந்தர்களிடம் படைப் பணியும், ஆட்சிப் பணியும் செய்து வந்த களப்பாளர், 'களப்பாளராசர்' என்னும் பட்டத்தினையும் பெற்றனர்.

வேளாண் மரபு அவர்களது சமுதாய வாழ்வில் தனித்ததோர் இடத்தினைப் பெற்றதாகக் கொள்ளலாம். இவர்கள் தமிழ்நாட்டு வேளாண் மரபில் கலந்ததால் களப்பாளர் எனவும் அழைக் கப்பட்டனர். இக் களப்பாளரே பிற்காலத்திய சாசனங்களில் களப்பாழர் எனவும் குறிக்கப் பெறுகின்றனர். இவ்வாறு களப் பாளர், களப்பாழர் என்னும் பெயர்களில் வாழ்ந்து வந்த தலைவர் சிலரைப்பற்றிய குறிப்புகள் புராணங்களிலும், இலக்கியங் களிலும் காணப்படுகின்றன. அவற்றுள் ஒரு சிலவற்றைமட்டும் கீழே காண்போம்.

இவர்களுள் கூற்றுவ நாயனார், மூர்த்தி நாயனார், சேக்கிழான் பாலறுவாயன் களப்பாளராயர், களப்பாளராசன் நெற்குன்ற வாணன், அச்சுத களப்பாளர் முதலானோர் குறிப்பிடத்தக்கவ ராவர்.

**1. கூற்றுவநாயனார்**

கூற்றுவநாயனார் உலகெலாம் தன்னடிப்படுத்தி ஒரு குடைக் கீழ்க் கொண்டு வந்து, ஆட்சி புரிந்த நிகழ்ச்சி பெரியபுராணத்தில் குறிக்கப்பட்டுள்ளது. இவரைப்பற்றிய செய்திகள் முன்பே கூறப்பட்டுள்ளன.

**2. மூர்த்திநாயனார்**

கருநடவேந்தன் என்று சேக்கிழார் பெருமானால் போற்றப் பெறும் இவ் வேந்தனைப்பற்றியும் நாம் முன்பே கண்டோம்.

### 3. சேக்கிழான் பாலறுவாயன் களப்பாளராயர்

பெரியபுராண ஆசிரியரான இவர் இரண்டாம் குலோத்துங்க சோழனது ஆட்சிக் காலத்திலும், மூன்றும் குலோத்துங்க சோழனது ஆட்சிக் காலத்திலும் அமைச்சராகப் பணி புரிந்தார். மூன்றும் குலோத்துங்க சோழனின் இரண்டாமாட்சியாண்டில் கோட்டூர்ச் சிவன்கோயில் இறைவர்க்கு நந்தா விளக்கெரிக்க பொற்காசுகள் சிவந்தமளித்த செய்தி அவ்வூர்க் கோயில் கல்வெட்டால் அறியப்படுகின்றது

### 4. களப்பாளராசன் நெற்குன்றவாணன்

நெற்குன்றம் என்னும் ஊருக்குத் தலைவராக விளங்கிய இவரைப்பற்றிய செய்திகள் திருப்புகலூர்க் கல்வெட்டால் அறியப்படுகின்றன. குலோத்துங்க சோழனது ஆட்சிக் காலத்தில் வாழ்ந்த இவர், வரையாது வழங்கும் வள்ளலாகவும் தண்டமிழ்ப் புலவராகவும், நல்லொழுக்கம் வாய்க்கப் பெற்றவ ராகவும் சிறப்பெய்தியவர்.

இவரது தமிழ்ப் புலமையினை இவர் திருப்புகலூர் இறைவன் மீது பாடியுள்ள அந்தாதியால் அறியலாம்.

இத் திருவந்தாதி இவரால் பாடப்பட்டதென்பதனைக் கீழ்க் காணும் அந்தாதி அடியால் அறியலாம்.

'களப்பாளன் நெற்குன்ற வாணன் அந்தாதிக் கலித்
துறையே'.

இவர் நற்பண்புகள் பல வாய்க்கப் பெற்றவர். நற்றோர் போற்றும் நற்றமிழ்ப் புலவர். இதனைப் புலவர், புராண ஆசிரியர் குமணன் என்பார் இவரைத் தெள்ளாறெறிந்த நந்தி வர்மன் முதலான வேந்தர்களுடன் ஒப்பிடும் கீழ்க்காணும் பாட லாலறியலாம்.

'தலை கொடுத்த குமணனிலும் உயிர் கொடுத்த நந்தியிலும்
தமிழ் காத்தான் போய்
விலைபடுமிந் நெற்குன்ற வாணனைமேல் எனத் துணிந்து
விளம்ப லாகி
நிலை பொறுத்த புலமையுற்று மானத்தும் புகழ் பெரிதா
கினைத்தாலும்
கலையுணர்ச்சி சிறிதுறினும் இனத்தொ டிகல்கொடுங்
குணமும் கடந்தானம்மா'

திருப்புகலூர்க் கல்வெட்டினைக் கொண்டு இக் களப்பாள ராசன் பிராமணர்களை உண்பிக்கச் சாலையொன்றினையமைத்து அதற்குச் சாலைப்புறமாக இறையிலியாக நிலமளித்தாரென்றும் அறிகிறோம். இதனால் இவர் தமது முன்னோரின் கொள்கைக்கு மாறாக அந்தணர்களை ஓம்பினர் என்றும் பிற்காலத்தில் இவர்கள் தமிழ்ப் பண்பாட்டினை ஏற்றுக் கொண்டனர் என்றும் கூறலாம்.

**அச்சுத களப்பாளர்**

நாம் முன்பே கி. பி. ஐந்தாம் நூற்றாண்டளவில் சோழ நாட்டினை ஆட்சி செய்து வந்த அச்சுத களப்பாளர் என்ற களப் பிர மன்னனைப்பற்றிக் கண்டோம். இவண் நாம் காணுகின்ற அக் களப்பிர வேந்தனின்றும் வேறுபட்டவன். சிவஞான போதம் என்னும் சைவசித்தாந்த நூலை இயற்றிய மெய்கண் டார் கி. பி. 12ஆம் நூற்றாண்டினராவார். இவரது தந்தையாரான அச்சுத களப்பாளரே நாம் குறிப்பிடுகின்ற களப்பாளராவார். எனவே, மெய்கண்டாரும் இக் குலத்தினரே எனக் கருத இட முண்டு.

இவ்வாறு ஏறத்தாழ மூன்று நூற்றாண்டு கால ஆட்சியால் தமிழக வரலாற்றில் தனக்கெனவோர் தனியிடத்தைப் பெற்ற களப்பிரர், வரலாற்றில் தனது முத்திரையைப் பதித்துச் சென்றனர் எனலாம்.

**சேர நாடு**

பாண்டிய நாடும் சோணாடும் களப்பிரரிடமிருந்து கைப் பற்றப்பட்ட அதே காலத்தில் சேரநாடும் சேரரால் கைப்பற்றப் பட்டதாகத் தெரிகின்றது. இதனைக் கைப்பற்றிய சேரவேந்த னது பெயர் யாங்கணும் குறிப்பிடப்பெறவில்லை.

மேற்கூறியவற்றான் தமிழகத்தில் கி. பி. ஆறும் நூற்றாண்டின் பிற்பகுதியில் களப்பிரரது பேரரசு அழிந்ததெனலாம். களப் பிரர் பேரரசர்களாகச் சிறந்து விளங்கிய நிலைமையினின்றும் தாழ்ந்தனர்; சிற்றரசர்களாக மாற்றப்பட்டனர்.

முடிவுரை : இதுகாறுங் கூறியவற்றான் கடைச்சங்க காலப் பாண்டி வேந்தரது ஆட்சிக்குப்பின், நாட்டில் பெரும் பஞ்சம் ஏற்பட்டதால், பாண்டியரது ஆட்சி பாண்டிய நாட்டில் நிலை பெறவில்லை என்றும், அதனால் பாண்டிய நாடு பல வேந்தர்களது ஆட்சிக்குட்பட்டதென்றும், இந் நிலையில் களப்பிரர் தமிழகம் புகுந்து பாண்டிய நாட்டினை யாண்டு வந்த வேந்தர் பலரை வென்று, தமது ஆட்சியை நிறுவினரென்றும், சேர, சோழ,

பாண்டியநாடு முழுமையும் அவரது ஆட்சிக்குட்பட்டதென்றும் புலனாகின்றது.

இவர்கள் தமிழகத்தில் நுழையுமுன்பே, இவர்களது சமண சமயம் தமிழகத்தில் புகுந்துவிட்டது. இவர்கள் தமிழகத்தில் நுழைந்தபோது தமிழகக் குறுநில மன்னர்களான வேளிரும் தமிழக மூவேந்தர்களுக்கு எதிராகப் போரிட்டு, களப்பிரரது வெற்றிக்கு வழிவகை செய்தனர். புத்த சமண சமயத்தை இவர்கள் ஆதரித்த போதிலும் சமணமே செல்வாக்குப் பெற்று இருந்தது. பேரரசர்களாகத் திகழ்ந்து இவர்கள் சிலகாலஞ் சென்ற பின்னர் சிற்றரசர்களாகவும், அரசியல் தலைவர்களாகவும் போர் வீரர்களாகவும் மாறிவிட்டனர் என்பதனையும் கண்டோம்.

களவர நாட்டைச் சேர்ந்த (மைசூர்) களப்பிரர் மைசூர் நாட்டின் தென்பகுதியிலும், தமிழகத்தின் வட எல்லையிலும் வாழ்ந்து வந்தவர்களென்றும்; வேளிர் பரம்பரையினரைச் சேர்ந்த அவர்கள், தமிழகத்தில் புகுந்து தமிழக ஆட்சியைக் கைப்பற்றினர் எனவும் அறியலாம். இவர்களைக் கன்னடியர் என்று கூறுவதனைவிடத் தமிழர் என்று கூறலாம். இவர்கள் வாழ்ந்து வந்த எருமை நாடு சங்க காலத்தில் தமிழ்நாட்டுப் பகுதியாகவே இருந்தது எனலாம்.

1908ஆம் ஆண்டு சாசன இலாகா அறிக்கையில் களப்பிரர் எவ்வாறு பாண்டியரை வென்றனர்? வென்றவர்கள் பாண்டிய நாட்டில் எவ்வாறு ஆட்சி செலுத்தினர்? பின்னர் அவர்கள் எவ்வாறு துரத்தப்பட்டனர் என்பவை தெரியவில்லை என்று எழுதினர். இன்னும் அதே நிலைதான். இக் கேள்விக்கு இன்னும் நம்மால் சரியான விடைகூற இயலவில்லை. காரணம், அவர்களால் வெளியிடப்பட்ட சாசனம் ஒன்றுகூட கிடைக்கப் பெறவில்லை.

# 7. முற்காலப் பாண்டியர்

## (கி.பி. 570 முதல் கி.பி. 966 முடிய)

### பாண்டியரின் மறுமலர்ச்சி

சங்க காலப் பாண்டி வேந்தர்களுள் உக்கிரப் பெருவழுதியே இறுதியாக ஆட்சிபுரிந்தவனுவான். இவன் கடைச்சங்க காலத்தின் இறுதியில் வாழ்ந்தவன். ஆறும் நூற்றுண்டின் இறுதிவரை உக்கிரப் பெருவழுதிக்குப் பின்பு ஆண்ட பாண்டி மன்னர்களைப்பற்றிய செய்திகள் நமக்குக் கிடைக்கவில்லை. களப்பிரர் என்னும் குலத்தினர் பாண்டிய நாட்டினைக் கைப் பற்றியபோது பாண்டி நாட்டின் அரியணையின்கண் அமர்ந் திருந்த வேந்தன் யாவன்? என்பதும், அவன் எங்ஙனம் தோற் கடிக்கப்பட்டான்? என்பதும் அறிந்துகொள்ளக் கூடவில்லை. ஏறத்தாழ முன்னூறு ஆண்டு காலம், பாண்டி நாட்டு மக்கள் பாண்டிய வேந்தனின் ஆட்சியினைக் காணுது துடித்தனர்;[1] களப்பிரரின் ஆட்சியால் கண்ணீர் வடித்தனர். இத் துன்ப இருளினைப் போக்கி இன்பவொளி தந்தவனே கடுங்கோன் என்னும் பாண்டி வேந்தனுவான். இவன் கி. பி. ஆறும் நூற் றுண்டின் இறுதிப் பகுதியில் களப்பிரரை வென்று, அவர்களை விரட்டியடித்து, பாண்டி நாட்டில் மீண்டும் பாண்டியர் ஆட்சியினைத் தோற்றுவித்தான். இவனது அருமை பெருமை களையும், இவனைத் தொடர்ந்து அரியணையேறிய மன்னர்பற்றியும் இவண் ஆய்வோம்.

## கடுங்கோன் (கி. பி. 570–600)

கடுங்கோனைப்பற்றிய செய்திகள் வேள்விக் குடிச் செப்பேடு களாலும் தளவாய்புரச் செப்பேடுகளாலும் அறியப்படுகின்றன. களப்பிரரின் கொடுங்கோன்மையினை ஒழித்த இக் கடுங்கோன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி போன்ற சங்ககாலப்

[1] கருநாட வேந்தன் ஒருவன் பாண்டிய நாட்டைக் கவர்ந்து கொண்டு அரசாண்டு வந்தான் என்றும், அவனது ஆட்சியால் சைவநெறி அழிந்து, சமண் நெறி தழைத்ததென்றும், பின் போர் இரவில் அவன் கொலை செய்யப்பட்டான் என்னும் செய்தியினைப் பெரியபுராணமும் கல்லாடமும் தெரிவிக்கின்றன. இந் நூல்களில் குறிக்கப் பெற்றுள்ள கருநாட வேந்தன் களப்பிரனுகவே இருத்தல் வேண்டுமென்று அறிஞர்கள் கருதுகின்றனர்.

பாண்டியரின் வழித்தோன்றலென்பதனையும், 'களப்ரன்' என்னும் கலியரசனை வென்றடக்கிய வேந்தன்[1] என்பதனையும் வேள்விக்குடிச் செப்பேடுகளும் தளவாய்புரச் செப்பேடுகளும் குறிப்பிடுகின்றன. இவன் குறுநில வேந்தர் பலரை வென்று, வெற்றிக்கொடி நாட்டியவன் என்பதும், பகையரசர்களின் அழகிய நகரங்களை அழித்தவனென்பதும், வீரத்திலும் வெற்றியிலும் மேம்பட்டவனென்பதும் பின்வரும் வேள்விக்குடிச் செப்பேட்டுப் பகுதியாலறியலாம். இவன் படையொன்றின் தலைவனாக இருந்து, களப்பிரரது ஆட்சிக்கெதிராகக் கலகங்கள் செய்து வந்தான் போலும்.

*களப்ரனென்னுங் கலியரசன் கைக்கொண்டதனை யிறக்கிய பின்*
*படுகடன் முளைத்த பருதிபோர் பாண்டியாதிராசன் வெளிப்பட்டு*
*விடுகதி ரவியொளி விலகவீற் றிருந்து*
*வேலை சூழ்ந்த வியலிடத்துக்*
*கோவும் குறும்பும் பாவுடன் முருக்கிச்*
*செங்கோ லோச்சி வெண்குடை நீழற்*
*றங்கொளி நிறைந்த தரணி மங்கையைப்*
*பிறர்பா லுரிமை திறவிதி னீக்கித்*
*தன்பா லுரிமை நன்கனம் அமைத்த*
*மானம் போர்த்த தானை வேந்தன்*
*ஒடுங்கா மன்னர் ஒளிநக ரழித்த*
*கடுங்கோ னென்னுங் கதிர்வேற் றென்னன்'*

அண்மையில் நமக்குக் கிடைத்துள்ள தளவாய்புரச் செப்பேடுகளும்[2] வேள்விக்குடிச் செப்பேடுகளில் குறிக்கப்பட்ட செய்திகளை உறுதிசெய்கின்றன. வெற்றி வீரனான இவன் ஆசிநாட்டி லடங்கிய திருமங்கலம் என்ற ஊரினைப் பன்னிரண்டு பார்ப்பனர்களுக்குத் தானஞ்செய்து அதற்கான செப்பேட்டையும் வழங்கினான்.[3] இதனால் இவன் கொடைத்திறம் மிக்கான்

1 .................. கற்றறிந்தோர் திறல் பரவக் களப்பாழரைக் களைகட்டமற்றிரன் டோண் மாக்கடுங்கோன் மான (ம்) போர்த்தருளிய கோன்'. தளவாய்புரச் செப்பேடு—சமஸ்கிருதப் பகுதி, 'பாண்டியர் செப்பேடுகள் பத்து' பக்கம். 106.

2 'கடிஞாயிறு கவினலங்கற் களப்பாழர் குலங்களைந்தும்' தளவாய்புரச் செப்பேடு—தமிழ்ப்பகுதி. Ibid. பக்கம். 125.

3 ..................... ஆசிநா டதனிற்படும் தேயம் கன்னிடக்கைத் தேசமலி திருமங்கலமிது பண்டு பெருநல்லூர்ப் படுவதனைப் பாங் கமைந்த குடிகளது காராண்மை மோடெழுந்த முதுகொம்பர்க் கோடெழுந்து கிடந்ததனைக்' தளவாய்புரச் செப்பேடு—சமஸ்கிருதப்பகுதி. Ibid. பக். 106.

என்பதும் புலனாகின்றது. 'மானம் பேர்த்த தானை வேந்தன்' என்னும் விருதுப் பெயரினை இவன் பெற்றிருந்தான் போலும்.

**கடுங்கோன் இருவர்:** பாண்டியர் வரலாற்றில் நாம் இரண்டு கடுங்கோன்களைச் சந்திக்கிறோம். இவன், முதற்சங்கத்தின் இறுதிக் காலத்தில் தென்மதுரையின்கண் வீற்றிருந்து ஆட்சி புரிந்ததாக இறையனாரகப் பொருளுரையில் குறிக்கப்பெற்றுள்ள கடுங்கோனின்றும் வேறுபட்டவன் என்பது ஈண்டு நினைவிற் கொள்ளத்தக்கதாகும். பாண்டியர்களின் புத்தரசினைக் கண்ட இக் கடுங்கோன் கடைச் சங்கத்தின் இறுதிக் காலத்திற்கு, ஏறத்தாழ நானூறு ஆண்டுகட்குப் பின்னர் ஆட்சி புரிந்தவனாவான். பெயரொற்றுமை ஒன்றையே கொண்டு இவ் விரு வேந்தரையும் ஒருவர் எனக்கொள்ளுதல் பிழைபட்ட கருத்தாகும்.

(இவன் கி. பி. 590 முதல் கி. பி. 620 வரையில் ஆட்சி புரிந்ததாக வரலாற்றறிஞர் திரு. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியார் 'தென்னிந்திய வரலாறு' என்னும் நூலின்கண் குறிப்பிடு கின்றார். கல்வெட்டறிஞர் திரு. டி. வி. சதாசிவ பண்டாரத்தார் அவர்கள் கடுங்கோன் கி. பி. 575 முதல் கி. பி. 600 வரையில் ஆண்டதாகக் குறிப்பிடுகின்றார்.[1] இவன் மூன்றாம் சங்க காலத்திற்குப் பிறகு கி.பி. ஏழாம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்தவன் என்று திரு. மயிலை சீனிவேங்கடசாமி அவர்கள் குறிப்பிடுகிறார்).[2]

முற்காலப் பாண்டியரின் முன்னோடியான இவன் எந்த ஆண்டு ஆட்சிக்கு வந்தான் என்பதனை அறுதியிட்டு உறுதியாகக் கூறச் சான்றுகளில்லை. இருப்பினும் ஆறாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் இவன் ஆட்சிக்கு வந்தான் என்பதுறுதி. இவன் கி.பி. 570-இல் அரியணை ஏறினான் என்று 'பாண்டியர் செப்பேடுகள் பத்து' என்னும் நூலின் முன்னுரையில் கூறப் பட்டுள்ளது. திரு. கே. கே. பிள்ளையவர்களும் இவன் கி. பி. 570-ல் அரியணையேறியதாகக் குறிப்பிடுகிறார்.[3] இதனையே நானும் ஏற்றுக்கொள்கிறேன்.

[1] டி.வி. சதாசிவ பண்டாரத்தார், 'பாண்டியர் வரலாறு' பக்கம். 37 வரி. 19.

[2] மயிலை சீனி வேங்கடசாமி. 'மதுரைக் காஞ்சியின் காலம்' பக். 238-242 பேராசிரியர் டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை வெள்ளி விழா மலர்.

[3] K. K. pillay 'The Madurai Pandyas' – மதுரைத்திருக்கோயில் திருக் குட நன்னீராட்டுப் பெருவிழா மலர். 1974. பக். 153.

## மாறவர்மன் அவனிசூளாமணி (600-625)

பாண்டியன் கடுங்கோனின் மைந்தனை[1] இவன் தனது தந்தையின் இறப்பிற்குப்பின் பாண்டி வேந்தனாக முடிசூட்டிக் கொண்டான். ஏனைய பாண்டிய மன்னர்களைப் பலபடியாகச் சிறப்பித்துக் கூறும் வேள்விக்குடிச் செப்பேடு, இவ் வேந்தனது அரிய செய்தியாக ஒன்றையும் குறிப்பிடவில்லை. இவனது ஆட்சிக்காலம் முதற்கொண்டு பாண்டி வேந்தர்கள் 'மாறவர்மன்' 'சடையவர்மன்' என்னும் பட்டப் பெயர்களை ஒருவர் பின் ஒருவராக மாறி மாறிப் புனைந்து கொண்டனர். மாறவர்மன் எனும் பட்டத்தினைப் புனைந்து கொண்ட முதல் பாண்டிய வேந்தன் இவனேயாவன். 'மாறவர்மன்' என்னும் பட்டப்பெயர்களையுடைய பாண்டி வேந்தர்களை 2, 4, 6, 8 ஆகிய எண்களில் காணலாம்.

இவன் கி. பி. 600 முதல் கி. பி. 625 முடிய ஆண்டதாகக் கொள்ளலாம். (இவ் வேந்தனது ஆட்சிக்காலம் கி. பி. 620-ல் தொடங்கி கி.பி. 645-ல் முடிவுற்றதாக வரலாற்றறிஞர் திரு. கே. ஏ. நீலகண்டசாஸ்திரியாரும், கி.பி. 600-ல் தொடங்கி கி.பி. 625ல் முடிவுற்றதாகக் கல்வெட்டறிஞர் திரு. டி.வி. சதாசிவபண்டாரத்தாரும் குறிப்பிட்டுள்ளனர்).

### அரசியல் சூழல்

இம் மன்னன் பாண்டிய நாட்டின் ஆட்சிப் பொறுப்பேற்ற போது, தமிழக அரசியலில் பல்லவர் மட்டுமே பாண்டியரது எழுச்சியையும வளர்ச்சியையும் தடுத்து நிறுத்தும் தடைக் கல்லாக நின்றனர்.[2] சிம்ம விஷ்ணு என்னும் மாவீரன் பல்லவ நாட்டின் வல்லமை மிக்க வேந்தனாக அதுகாலை வீற்றிருந்தான். சோழர்களோ புகழ் மங்கிக் கிடந்தனர்; தமிழக அரசியல் அரங்கில் இடம்பெறாத சிற்றரசர்களாகவே இருந்தனர்.

இவ் வேந்தனது சமகாலத்தவர்களாக இரண்டாம் புலிகேசி என்னும் ஆற்றல் மறவன் சாளுக்கிய நாட்டின் வேந்தனாகவும் (கி பி. 609-642), துர்விநீதன் (கி.பி. 605-650) என்னும் வெற்றி

1 'கடுங்கோ னென்னுங் கதிர்வேற் றென்னன்
மற்றவற்கு மகனாகி பொது நீக்கி மலர் மங்கை
ஓடுமண னயர்ந்த அற்றமி லடர் வேற்றானை
அவனி சூளாமணி'

வேள்விக்குடிச் செப்பேடு—நான்காம் ஏடு முன்புறம் 'பாண்டியர் செப்பேடுகள் பத்து' பக் 23.

2 பாண்டியர் அரியணையேறிய அதே காலத்திலோ, அதற்குச் சிறிது முன்னரோ பல்லவர்களும் வலிமை பெறத் தொடங்கினர் எனலாம், இதன் காரணமாக ஒரே காலத்தில் வலிமைபெற்ற இவ் விரு அரசுகளும் ஒருவரையொருவர் விழுங்க முனைந்தனர்.

வீரன் கங்கநாட்டின் காவலனாகவும், விஷ்ணுவர்த்தனன் (கி. பி. 614-635) என்பான் நாசிக், வேங்கி ஆகிய பகுதிகளில் மன்னனாகவும் ஆட்சி புரிந்து வந்தனர்.

தமிழக அரசியலைப் பொறுத்தமட்டில் பாண்டியர், பல்லவர் ஆகிய இருவர் மட்டுமே தங்களது மேலாண்மையினை நிறுவுவதில் இக் காலக் கட்டத்தில் போட்டி போட்டுக் கொண்டிருந்தனர் எனலாம். தென்னிந்திய அரசியலிலோ மும்முனைப்போட்டி மும்முரமாக நடந்தது. மேற்கூறிய இருவரும் பாதாமிச் சாளுக்கியரும் ஒருவருக்கொருவர் ஆதிக்கப் போட்டியில் ஈடுபட்டனர். இப் போட்டி முன்னூறு ஆண்டுகள் நீடித்தது.[1]

தந்தையிடமிருந்து ஆட்சிப் பொறுப்பினைபெற்றுக் கொண்ட இவன், பாண்டியப் பேரரசின் எல்லைகளை விரிவுபடுத்தவில்லை யென்பதும், இவனது ஆட்சிக் காலத்தில் பாண்டிநாடு பெரும் புகழ் ஈட்டவில்லையென்பதும், சில ஆண்டுகளே[2] பாண்டி நாட்டையாண்டான் என்பதும் உய்த்துணரப்படுகின்றன. பாண்டி வேந்தர்களைப் பின்பற்றியே சோழ வேந்தர்களும் (விசயாலயன் கால முதல்) 'இராசகேசரி' 'பரகேசரி' எனும் பட்டங்களை ஒருவர்பின் ஒருவராக மாறிமாறிப் புனைந்து கொண்டனர்.

மாறவர்மன் அவனிசூளாமணிக்குப்பின் அவனது மகனான செழியன் சேந்தனெனும் செந்தமிழ் வேந்தன் செங்கோல் செலுத்த ஆரம்பித்தான். மாறவர்மன் அவனிசூளாமணியும் அவனுக்குப்பின்பு ஆண்ட வேந்தர்களும், சங்ககாலப் பாண்டியர் போன்று தமது பட்டயங்களைத் தூய தமிழில் புனைந்து கொள்ளாது, வடமொழி கலந்து புனைந்து கொண்டனர்.

## செழியன் சேந்தன் (கி.பி. 625-640)

### வெற்றிகள்

கடுங்கோனின் பேரனான இவனைச் 'சிலைத் தடக்கைக் கொலைக் களிற்றுச் செழியன்' எனவும் 'மண்மகளை மறுக்கடிந்த வேந்தர் வேந்தன்' எனவும் 'செங்கோற் சேந்தன்' எனவும் வேள்விக்குடிச் செப்பேடுகள் பாராட்டிப் பேசுகின்றன. இவன்

[1] இம் மூன்று அரசுகளும் பலகாலம் போரில் ஈடுபட்ட பின்பு, சாளுக்கியர் முதலில் வீழ்ச்சியுற்றனர். பாண்டிய—பல்லவப் போராட்டமோ தொடர்ந்து நடைபெற்றது. சாளுக்கியருக்காக இராட்டிரகூடர் மும்முனைப் போட்டியில் பங்குகொண்டனர். இதனால் தென்னிந்திய வரலாற்றில் மும்முனைப் போட்டி நீடித்தது.

[2] 'இம் மாறவர்மன் தான் பெற்ற நாட்டைச் சில ஆண்டுகள் ஆட்சி புரிந்து சென்றவன் எனக் கருதுவதே பொருந்தும்'

சேரர்க்குரிய 'வானவன்'[1] எனும் விருதினையும் சோழர்க்குரிய 'செழியன்'[2] எனும் விருதினையும் பெற்றிருத்தலின் சேரரையும், சோழரையும் வெற்றி கொண்டிருத்தல் வேண்டுமென்று கொள்ளலாம். இவன் சேரரை வென்று 'வானவரம்பன்' என்ற விருதினையேற்றானென்று திரு. கே. கே. பிள்ளை அவர்கள்[3] குறிப்பிடுகிறார். இவ்வாறு இவன் முடியுடை வேந்தர்களை வென்றதனால்தான் 'வேந்தர் வேந்தன்' என்று வேள்விக்குடிச் செப்பேடுகளில்[4] புகழப்பட்டிருக்கிறான். இவனைச் சடைய வர்மன் எனவும் குறிப்பிடுவதுண்டு. இவன் 'ஜயந்தவர்மன்' என்று வடமொழியில் குறிக்கப்பெறுகிறான். 1959ஆம் ஆண்டு திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள மலையடிக்குறிச்சியில் கண்டு பிடிக்கப்பட்ட கல்வெட்டும்[5] இவனைப்பற்றி அறிந்து கொள்வதில் நமக்குப் பெருந்துணை புரிகின்றது.

**கொடை :** வெற்றியில் மேம்பட்ட இம் மன்னன் கொடை வழங்குவதிலும் மேம்பட்டவனாக விளங்கினான். இவன் இரணிய கர்ப்ப தானமும், துலாபார தானமும், மேலும் பலப்பல பெருந்தானங்களும் (மகாதானம்) செய்து பெருமை பெற்றவன் ஆவான் என்றும் வைகைக்கரைக் கல்வெட்டு இவ் வேந்தனின் ஐம்பதாம் ஆட்சியாண்டில் வெளியிடப் பெற்றதென்றும், மங்கலபுரமெனும் அழகிய நகரினை அமைத்த இவன், தனது மைந்தனும் தனக்குப் பின்பு ஆட்சி புரிந்தவனுமாகிய, அரிகேசரியின்[6] பெயரில் வைகையாற்றில் கண்மாயொன்று கட்டினான் என்றும் கே. ஜி. கிருஷ்ணன் அவர்கள் கருதுகிறார். ஆனால், இக் கருத்து பொருத்தமுடையதல்ல.

இவன் நாஞ்சில் நாட்டிலுள்ள தாழைக்குடி ஜயந்தீசர் கோயிலைக் கட்டுவித்ததால் மூலவர் 'சேந்தனீசுவரமுடைய நயினார்' என அழைக்கப் பெறுகிறாரென வரலாற்றறிஞர்கள் கருதுகின்றனர். 'மலை மண்டலத்து தாழைக்குடி சேந்தபிரான்'

1 'பாண்டியர் செப்பேடுகள் பத்து' பக். XI. வானவன் — வானவ நாட்டிற்கு அதிபதி. வானவன் நாடான திருநெல்வேலி மாவட்டத்துக் களக் காட்டுப் பகுதிக்குத்தலைவன் எனவும் கொள்ளலாம் (களக்காடு பெருமாள்கோயில் கல்வெட்டில் வானவன்நாடு குறிக்கப் பெறுகிறது).

2 செழியன் என்பது பாண்டியரின் மறுபெயரெனவும் கொள்ளலாம்.

3 கே. கே. பிள்ளை 'தமிழகவரலாறும் மக்கள் பண்பாடும்'. பக் 193.

4 '.........விலங்கல் வெல்பொறி வேந்தர் வேந்தன்' 'வேள்விக்குடிச் செப்பேடு' பாண்டியர் செப்பேடுகள் பத்து, பக் 39. வரி 6.

5 A. R. E. 1959–60. page. 358.

6 'அரிகேசரியான்' என்னும் பெயருடைய கண்மாய், Dr. K. V. Raman 'Some Aspects of Pandyan History in the light of recent discoveries'. இக் கருத்தினைத் திரு. இரா. நாகசாமி அவர்கள் மறுத்து, அரிகேசரியே தனது பெயரால் இக் கண்மாயைக் கட்டினான் எனச் சொல்வார்.

என்று திருநெல்வேலி நெல்லையப்பர் கோயில் கல்வெட்டில் குறிக்கப் பெற்றிருத்தலும், ஈண்டு நோக்குதற்குரியது.[1] பாண்டி நாட்டிலுள்ள சேந்தமங்கலம் என்னும் ஊர் இவனது பெயரினைக் கொண்டு விளங்குவதாகக் கொள்ளலாம்[2].

**காலத்தால் முற்பட்ட கல்வெட்டு:** இம் மன்னனது ஆணைப்படி இவனது அதிகாரியொருவன், திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள மலையடிக்குறிச்சியில் குகைக் கோயிலொன்றினை நிறுவினு னென்பது, மலையடிக்குறிச்சிக் கல்வெட்டாலறியப்படுகின்றது. இக் கல்வெட்டு இவ் வேந்தனின் பதினேழாம் ஆட்சியாண்டில் வெளியிடப்பட்டதாகும். ஏழாம் நூற்றாண்டின் எழுத்தமைதி கொண்ட இக் கல்வெட்டு, கலப்புத் தமிழிலும் வட்டெழுத்திலும் எழுதப் பெற்றுள்ளது. இதுகாறும் நமக்குக் கிடைத்துள்ள கல்வெட்டுகளில் இக் குடைவரைக் கோயிலில் காணப்படும் கல்வெட்டே காலத்தால் முற்பட்டதாகும். இவன் கி. பி. 625 முதல் கி. பி. 640 முடிய ஆட்சி புரிந்தான் எனலாம்.

இவ் வேந்தன் கி. பி. 620 முதல் கி. பி. 650 முடிய அரசு கட்டிலிலமர்ந்திருந்தனனென்று திரு. ஆர். நாகசாமி அவர்கள் குறிக்கின்றார்.[3] 1961ஆம் ஆண்டு வைகைக் கரையில் தோண்டி யெடுக்கப்பட்டுள்ள கல்வெட்டு இவ் வேந்தனுடையதென்று கூறும் கல்வெட்டறிஞர் திரு. கே. ஜி. கிருஷ்ணன் அவர்கள், இவன் ஐம்பதாண்டு காலம் ஆட்சி புரிந்ததாகக் குறிப்பிடு கின்றார். கி. பி. 645 முதல் கி. பி. 670 முடிய இவன் ஆண்டதாக திரு. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியாரும், கி. பி. 625 முதல் கி. பி. 640 முடிய ஆட்சி புரிந்ததாக திரு. டி. வி. சதாசிவ பண்டாரத் தாரும் கருத்துத் தெரிவிக்கின்றனர்.

## மாறவர்மன் அரிகேசரி (கி. பி. 640—690)

செழியன் சேந்தனின் மகனாகிய இவன் கி. பி. 640ஆம் ஆண்டு பாண்டிய நாட்டின் வேந்தனாக முடி புனைந்து கொண் டான். (திரு. ஆர். நாகசாமி அவர்கள் இவன் கி. பி. 650 முதல் கி. பி. 700 முடிய ஆட்சி புரிந்ததாக வரையறுக்கின்றார்.[4] இவனது ஆட்சிக் காலம் கி. பி. 670-ல் தொடங்கி கி. பி. 710

1 தென்னிந்தியக் கல்வெட்டு-பாகம் 5. எண் 416.

2 பண்டாரகர். ரா. பி. சேதுப்பிள்ளை—'ஊரும் பேரும்' பக் 96. வரி 13—14.

3 இரா. நாகசாமி. 'நெல்வேலி வென்ற நெடுமாறனின் வைகைக் கரைக் கல்வெட்டு ஆராய்ச்சி' பக் 226.

4 Ibid.

வரை நீடித்ததாக திரு. நீலகண்ட சாஸ்திரி அவர்களும். கி. பி. 640-ல் தொடங்கி கி. பி. 670-ல் முடிவுற்றதாக திரு. டி. வி. சதாசிவ பண்டாரத்தார் அவர்களும் கருதுகின்றனர்.)

**வேறு பெயர்கள் :** மாறவர்மன் அரிகேசரி, சுந்தரபாண்டியனெனவும் கூன் பாண்டியனெனவும், நெடுமாறனெனவும் தமிழ் இலக்கியங்களில் குறிக்கப் பெறுகிறான். வேள்விக்குடிச் செப்பேட்டிலும், சின்னமனூர் சிறிய செப்பேட்டிலும் அரிகேசரி மாறவர்மனெனக் குறிக்கப்பெறும் இவன். சின்னமனூர் பெரிய செப்பேட்டில் அரிகேசரி பராந்தகன் எனக் குறிக்கப்பட்டுள்ளான். எனவே, இவன் பராந்தகன் எனவும் அழைக்கப்பட்டான் என்பதனை அறியலாம்.

**அரசியல் சூழல் :** பாண்டியரின் புகழினையும் பெருமையினையும் பாரறியச் செய்த பெருவேந்தருள் ஒருவனான இவன் தனது ஆட்சிப் பகுதியினை விரிவுபடுத்தத் திட்டமிட்டான். இத்தருணத்தில் சேரரது அரசும் வலிமை பெற்ற பேரரசாகத் திகழ்ந்தது. அதனை ஆண்டு வந்த 'வில்வேலி' என்பான் சேர அரசன் எல்லைகளை விரிவுபடுத்தும் முயற்சியில் ஈடுபட்டு வந்தான். இதனைக் கண்ணுற்ற பாண்டியன், சேரரை வென்று அவரது மேலாண்மையினை ஒடுக்க முடிவெடுத்தான். தெற்கே பரதவர் என்னும் சிற்றரசர் பாண்டியருடன் மாறுபட்டிருந்தனர். இதே காலத்தில் பல்லவரும் வலிமை பெற்று, தொண்டை நாடு முழுவதிலும் தனது வெற்றிக் கொடி நாட்டி, புகழீட்டியிருந்தனர். புதிதாக வெற்றிகள் பல ஈட்டவும் காத்திருந்தனர். இவ்விதம் சேரரும், பாண்டியரும், பல்லவரும் தமது வலிமையினைப் பெருக்கிக் கொண்டு, ஒருவரையொருவர் விழுங்கக் காலம் கருதியிருந்தபோது, சோழர்களோ தம் பண்டைப் பெருமையினையிழந்து, சிற்றரசர்களாகச் சிதறிக் கிடந்தனர். அவருள் ஒருபிரிவினரே உறையூரைத் தலைநகராகக் கொண்டு ஆண்டு வந்தனர். வடக்கில் வலிமை மிக்க பல்லவப் பேரரசாலும், தெற்கில் புகழ் பூத்த பாண்டியப் பேரரசாலும் நெருக்குண்ட சோழர் புகழ் மங்கிக் கிடந்ததில் வியப்பொன்றுமில்லை. இம் மும்முனைப் போட்டியில், முழு வெற்றி பெற முழு மூச்சுடன் போராடிய மாவீரனே மாறவர்மன் அரிகேசரியாவான்.

## வெற்றிகள்

**பரதவர் :** பாண்டிய நாட்டின் தென் பகுதியில் பரதவர் என்ற இனத்தவர் தனியாட்சி மேற்கொண்டிருந்தனர். சங்க காலம்தொட்டு அவர்கள் பாண்டிய ஆட்சிக்கடங்காது, பாண்டி

யருக்குத் தொல்லை கொடுத்து வந்ததாகத் தெரிகிறது. சங்க காலப் பாண்டியரும் அவர்கள்மீது போர்தொடுத்து வெற்றி கொண்டதாகச் சங்க காலப் புலவர்கள் பாடியிருக்கின்றனர். 'தென் பரதவர் மிடல் சாய' என்று மூன்னூற்றெழுபத்து எட்டாவது புறப்பாட்டிலும், 'தென் பரதவர் போரேறே' என்று மதுரைக்காஞ்சியிலும் குறிப்பிடப்பட்டிருப்பதால், இவர்கள் கடைச் சங்க காலத்திலேயே, பாண்டி நாட்டின் தெற்குப் பகுதியில் குறுநில மன்னர்களாக ஆண்டு வந்தமை நன்கு புலனாகின்றது. தென் பாண்டிக் கடற்கரைப் பகுதியில், தொல்லைகள் ஈந்து வந்த பரதவரை அரிகேசரி மாறவர்மன் அடக்கியொடுக்கினான். இதனை 'விரவி வந்து அடையாத பரதவரைப் பாழ் படுத்தான்' என்று வேள்விக்குடிச் செப்பேடுகள்[1] சிறப்பித்துப் பேசுகின்றன. பரதவர், பரவர் எனவும், மீனவர் (மீன்பிடிப் போர்) எனவும் அழைக்கப் பெறுகின்றனர். இவர்கள் திருநெல்வேலிப் பக்கத்தில் கீழைக் கடற்கரையில் இருந்த நெய்தல் நில மக்களாவர்.

**குறுநாடு :** அடுத்து, இப் பாண்டி வேந்தன் குறுநாட்டு மக்களை வென்றடக்கினான் என்று குறிப்பிடப்படுகிறது. இக் குறுநாடு யாண்டுள்ளது? என்பதுபற்றித் தெளிவாக அறிந்து கொள்ள இயலவில்லை. இவண் குறுநாட்டார் எனப்படுவோர் சிறிய குறுநில அதிபதி (Lesser Chieftains) என்னும் பொருளிலும் வழங்கப்பட்டிருக்கக் கூடும்.[2]

**சேரநாடு :** சேர நாட்டினரும் பாண்டியர்க்கு ஓயாத தொல்லைகள் கொடுத்து வந்தனர். மாறவர்மன் அரிகேசரியும் கேரளரை வெல்வதில் ஆர்வம் கொண்டு அவர்களைப் பன்முறை வென்றிருக்கின்றான். மேலைக் கடற்கரையில் வாழ்ந்து வந்த இக் கேரளர் தமது சிற்றரசர்களின் துணை வலியுடன், மாற வர்மனோடு போர் தொடுத்து, பாண்டிய நாட்டினுள் புகுந்தனர். அஞ்சாநெஞ்சினனான அரிகேசரி மாறவர்மன் இவர்களைப் பாழி, நெல்வேலி, செந்நிலம் என்ற இடங்களில் சந்தித்துக் கடும் போர் நிகழ்த்தி, வெற்றித் திருமகளை மணந்தான். இச் செய்தியை வேள்விக்குடிச் செப்பேடுகள்,

'சூழி யானை செலவுந்திப் பாழிவா யமர்கடந்து
வில்வேலிக் கடற்றானையை நெல்வேலிச் செருவென்றும்
விரவிவந் தடையாத பரவரைப் பாழ்படுத்தும்

1 'பாண்டியர் செப்பேடுகள் பத்து' பக். 39. வரி 13.
2 Dr. N. Subramanian 'History of Tamil Nad' page 117. lines. 20-21.

அறுகாலினம் புடைதிளைக்குங் குறுநாட்டவர் குலங்
கெடுத்தும்
கைந் நலத்த களிறுந்திச் செந்நிலத்து செருவென்றும்'[1]

எனக் குறிப்பிடுவதாலறியலாம். இவ் வெற்றி வேந்தனது நெல்வேலி வெற்றியினை 'வில்லவனை நெல்வேலி உம்விரி பொழிற் சங்கர மங்கைப் பல்லவனையும் புறங்கண்ட பராங்குசன்' என்று பெரிய சின்னமனூர்ச் செப்பேடு[2] குறிப்பிடுவதனாலும் இச் செய்தி உறுதி பெறுகிறது.

வேள்விக்குடிச் சாசனத்தில் குறிக்கப்பட்டுள்ள பாழி, நெல்வேலி, செந்நிலம் ஆகிய இடங்கள் யாண்டுள்ளது என்பதனைத் திட்டவட்டமாக அறிந்து கொள்ள இயலவில்லை. சில அறிஞர்கள் நெல்வேலி என்பது தற்காலத்திய 'திருநெல்வேலி' எனக் குறிப்பிட்டிருப்பது பொருத்தமுடையதாகத் தோன்றவில்லை.[3]

அரிகேசரி மாறவர்மன் பெற்ற அரிய வெற்றிகளுள் நெல்வேலி வெற்றியே மக்கள் நெஞ்சில் நீங்கா இடம் பெற்றிருப்ப தென்பதனைத் திருத்தொண்டத்தொகை பாடியருளிய சுந்தர மூர்த்தி சுவாமிகள் 'நெல்வேலி வென்ற, நின்ற சீர் நெடுமாறன் அடியார்க்கும் அடியேன்' என்று குறிப்பிடுவதனாலறியலாம்.

**செந்நிலம்:** அடுத்து, இவனது செந்நிலப் போர் குறிப்பிடத் தக்கதொன்றாகும். அரிகேசரி மாறவர்மன் மட்டுமேயல்லாமல் இவ் வேந்தனுக்கு ஐந்து தலைமுறைக்குப் பின்னர் பாண்டி வேந்தனாக அரியணையேறிய, பராந்தக வீர நாராயணனும் செந்நிலத்தில் போர் புரிந்து, வெற்றி பெற்ற நிகழ்ச்சியினைத் தளவாய்புரச் சாசனம் குறிப்பிடுகின்றது. அரிகேசரி மாறவர்மனது செந்நிலப் போர் பாண்டிக் கோவையில் பல பாடல்களால் புகழ்ந்து கூறப்பட்டுள்ளன. எனவே, செந்நிலம் என்ற பகுதி (region) அக் காலத்தில் முக்கியமானதொரு இடத்தைப் பெற்றிருந்ததாக அறியலாம். இப் போர்க் காலத்தின்கண் பாண்டியனுடன் போர்புரிந்து, தோற்ற மன்னன் பெயர் குறிப்பிடப் பெறவில்லை. பாண்டியன் இப் போர்க்களத்தின் கண் தனது வலிமை மிக்க யானைப் படையைச் செலுத்தி வெற்றி கொண்டான் என்பதனை 'கைந் நலத்த களிறு உந்திச் செந்

[1] 'பாண்டியர் செப்பேடுகள் பத்து' பக். 39. வரி 11–15.
[2] Ibid. பக்கம் 168. வரிகள் 15–16.
[3] K. A. Nilakanta Sastri. 'The Pandyan Kingdom' page 46, lines—12–14.

நிலத்துச் செருவென்றும்' என்னும் செப்பேட்டுப் பகுதியாலறிய லாம்.[1]

**புலியூர் போர்;** அக் காலத்தில் பார்புகழத் தனியாட்சி செலுத்திய கேரளர் பாண்டியருடன் மாறுபட்டனர். நெடுமாற னிடம் பன்முறை தோல்வியும் கண்டனர். இருப்பினும் மனந் தளராத சேரர் கொங்கு நாட்டின் வழியாகப் பாண்டி நாட்டினுள் புகுந்தனர்; உறையூரை ஆண்டு வந்த சோழரும் அவருக்குத் துணை புரிந்தனர். இதனைக் கேள்வியுற்ற நெடுமாறன் கேரள ரைப் புலியூரில் வென்றான். 'மதில்களை யுடைய புலியூரைக் கடற்போரில் ஒரே நாழிகையில் வென்றும்' என்று இதற்குப் 'பாண்டியர் செப்பேடுகள் பத்து' எனும் நூலில் பொருள் கூறப் பட்டுள்ளது.[2] புலியூர் எனும் பெயரில் பல ஊர்கள் தமிழகத்தில் உள்ளன. இருப்பினும் நான் இது கருவூருக்குக் கிழக்கே ஒரு கல் தொலைவிலுள்ளதும், உறையூருக்கு நேர் மேற்கே நாற்பது கல் தொலைவிலுள்ளதுமான புலியூராக இருக்கலாமெனக் கருது கிறேன். இது பழங்காலத்திலும் புலியூரெனவே அழைக்கப் பட்டது என்பதனைக் கருவூர் பசுபதீசுவர் ஆலயக் கல்வெட்டு உறுதிப்படுத்துகிறது.[3] இப் புலியூர் சேர, சோழ, பாண்டிய நாட்டின் எல்லையிலிருந்தமை ஈண்டு குறிப்பிடத் தக்கதாகும். இதன் அருகில் உள்ள திருக்காம்புலியூரில்தான் அகழ்வாராய்ச்சி நடைபெற்றது. இப் போரில் கேரளன் தோற்கடிக்கப்பட்டான். தோல்வி பெற்ற கேரளர் உறையூர் நோக்கி ஓடினர்.

**உறையூர் போர்:** நெடுமாறன் கேரளருக்குத் துணை புரிந்த சோழரின் ஆதிக்கத்தினை ஒழிக்க எண்ணி உறையூர் நோக்கிச் சென்று, சோழரைத் தோற்கடித்து, அவர்களது கொட்டத்தை யடக்கினான். இதனை வேள்விக்குடிச் செப்பேடுகள்,

'பாரளவும் தனிச் செங்கோற் கேரளனைப் பலமுறையும்
உரிமைச் சுற்றமும் மாவும் யானையும்
புரிசை மாமதிற் புலியூர் அப் பகல்
நாழிகை இறவாமைக் கோழியுள் வென்று கொண்டும்'[4]

[1] 'பாண்டியர் செப்பேடுகள் பத்து' பக். 39. வரி 15.

[2] Ibid பக்கம் 45. வரி 19–20.
'புலியூரென்பது வரகு உண்ணுதை பெருங்குடியான் கூட்டம் ஆட்சி புரிந்த திருக் காம்புலியூராகும் (வாங்கல் வட்டாரம், கரூர் வட்டம்)' என்று 'கொங்கு வேளாளர் வரலாறு' என்னும் நூலின்கண் (83–84 ஆம் பக்கங்களில்) டி. கே. சக்திதேவி அவர்கள் குறிப்பிடுகின்றார்.

[3] கருவூரில் அகழ்வாய்வு நிகழ்த்தியபோழ்து, திரு. அ. அப்துல்மஜீத் அவர்கள் இதனைப் படித்துக் கூறினார்.

[4] 'பாண்டியர் செப்பேடுகள் பத்து' பக்கம் 39, வரி 15.

என்று பாராட்டுவதனலறியலாம். இப் பாடலின் கடைசியடி யால் இவன் சோழரை ஒரே பகற் பொழுதில் வென்று உறை யூரைக் கைப்பற்றினனென்பது அறியப்படுகின்றது; இவண் கோழியென குறிக்கப்பட்டிருப்பது உறையூராகும். இப் போரில் குறிப்பிடப்பெற்றுள்ள சோழச் சிற்றரசனது ஆண்மையையும் பேர்க்க முடியாத மானச் சிறப்பையும் வெற்றி வீரனை பாண் டியன் வியந்து பாராட்டியதாகக் கருதலாம். சோழர் குல மங்கையான மங்கையர்க்கரசியார் 'மானி' எனும் பெயரால் அழைக்கப்பட்டதும், ஈண்டு நினைவிற் கொள்ளத்தக்கதாகும். மங்கையர்க்கரசியார் மணிமுடிச் சோழனின் மகளென்று திருஞானசம்பந்தர் திருவாய் மலர்ந்து அருளினர்.

**மணவுறவு :** மாறவர்மன் அரிகேசரி சோழர் குல நங்கை யான மங்கையர்க்கரசியாரை மணஞ்செய்து கொண்டதனல், பாண்டி வேந்தனிடம் தோல்வி கண்ட சோழச் சிற்றரசன், தனது புதல்வியைப் பாண்டி வேந்தனுக்கு மணம் செய்வித்து, பகைமை ஒழித்து, உறவும் நட்பும் கொண்டானென்று எண்ண இடமுண்டு. தோல்வியைத் தழுவிய மன்னன், தனது மகளை, வெற்றி கொண்ட வேந்தனுக்கு மணம் செய்வித்து நட்பு கொள்ளுதல், பண்டைக் கால வழக்கமும் அரசியல் திறனும் ஆகும். இதனைப் போன்று பல நிகழ்ச்சிகளை நாம் தமிழக வரலாற்றில் காணலாம். மௌரியப் பெருவேந்தனை சந்திர குப்தனுடன் போரிட்டுத் தோல்விபெற்ற யவன நாட்டுப் படைத் தலைவன் செல்யூகஸ் நிகேடார் (Selukas Niketar) என்பான், பின்னர்த் தன் மகளைச் சந்திரகுப்தனுக்கு மணம் செய்வித்த நிகழ்ச்சி, இந்திய வரலாற்று மாணவர் அனைவரும் அறிந்த ஒன்றேயாகும்.

**மங்கலபுரம்**

'மங்கலபுரங் நகரமாக்கி வீற்றிருந்து' என்று வைகைக் கரைக் கல்வெட்டு குறிப்பிடுவதனல் நெல்வேலி வென்ற நெடு மாறன் மங்கலபுரம் என்னும் ஊரினை நகரமாக ஆக்கினன் என்பது அறியப்படுகின்றது. இம் மங்கலபுரம் யாண்டுளது என்பது குறித்து வரலாற்றறிஞரிடையே பல்வேறு கருத்துகள் நிலவுகின்றன.

திரு. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியார் அவர்கள்[1] மங்கலபுர மென்பது இன்றைய மங்களூரேயாகுமென்று கருதினர்.

[1] Nilakanta Sastry, K. A. 'The Pandyan Kingdom' pp. 55-56.

மங்கலபுரமென்பது சாத்தூர் மங்கலமாக இருத்தல் வேண்டுமென்று திரு. கே. ஜி. கிருஷ்ணன் அவர்கள் கருத்துத் தெரிவித்தார்.[1]

மங்கலபுரம் பாண்டிய நாட்டில் உள்ளதெனக் கருதலாம் என்றும், ஆனால், அது எது என்பது ஆராய்ச்சிக்குரியதென்றும் திரு. ஆர். நாகசாமி அவர்கள் கருதுகின்றார்.[2]

வைகையாற்றின் வடகரையில் அமைந்துள்ள மாநகரிக்குத் தெற்கில் உள்ள சாத்தமங்கலமே மங்கலபுரம் ஆகுமென்று திரு. முத்துக்கோனார் அவர்கள் கருதுகிறார். பிரெஞ்சு நாட்டு ஆராய்ச்சியறிஞர் டாக்டர் ஹேஸ் (Dr. Hasse) அவர்களும் இவ் விடத்தில் நவீன கருவிகளைக் கொண்டு அகழ்வாய்வு செய்த போது, இங்கு பூமிக்கடியில் கட்டடச் சிதைவுகள் தென்பட்ட தாகக் கூறியுள்ளமை முத்துக்கோனாரது கருத்திற்கு அரண் செய்வதாக உள்ளது. தொடக்க காலத்தில் சமண சமயச் சார்புடையவனாகத் திகழ்ந்த இவன் சமண மையமான மங்கல மாநகரியில் மாளிகை அமைத்திருந்தான் என்பதும் பொருத்த முடைய கருத்தாகவே தோன்றுகிறது.

இதுகுறித்து நாம் உறுதியாகவும் இறுதியாகவும் எதுவும் கூற இயலவில்லை. மதுரையை அடுத்தேதான் இவ் வேந்தன் தனது புதிய தலைநகரை அமைத்தான் என்று திரு. முத்துக் கோனார் அவர்கள் கருதுகின்றார். மதுரையினின்றும் வெகு தூரத்தில்தான் மங்கலபுரம் அமைந்திருத்தல் வேண்டுமென்று நான் கருதுகிறேன். திருநெல்வேலி மாவட்டத்தில் மங்கலபுரம் ஒன்றுள்ளது. இவன் வானவன் நாட்டையும் புதிதாக வென்றுள்ளான். எனவே, இம் மங்கலபுரம் திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ளதாக இருத்தலும் கூடும். அல்லது இவன் கொங்கு நாட்டில் இப்புதிய தலைநகரினை அமைத்திருத்தல் கூடும். ஏனெனில், அன்று கொங்கு நாட்டைக் கைப்பற்றும் எண்ணத்துடன்தான் பாண்டியரும் பல்லவரும் ஒருவர்க்கொருவர் மோதிக் கொண்டனர். எனவே, இது திருப்பூரை அடுத்த மங்கலம் என்னும் ஊராகவும் இருத்தல் கூடும்.

கயற் கொடியினைப் பாரெங்கும் பட்டொளி வீசிப்பறக்க விட்ட இவ் வேந்தனது வெற்றி மேம்பாடுகள் இறையனார் அகப் பொருளுரையிலுள்ள மேற்கோட் பாடல்களாலும் நன்கறியப்

[1] Krishnan, K. G. Epi Ind. Vol. XXXVIII. part I pp. 27-38. No 4.

[2] நாகசாமி, இரா. 'நெல்வேலி வென்ற நெடுமாறனின் வைகைக்கரைக் கல்வெட்டு' 'ஆராய்ச்சி' மலர் 4; இதழ் 3 ஏப்ரல் 1974 பக். 225-231.

படுகின்றன.[1] இவன் கோட்டாற்றின்மீது படையெடுத்து வெற்றிபெற்ற செய்தியினையும் இறையனாரகப் பொருளுரையா லறியலாம்.

**இறையன்பு :** பகைவேந்தர்கள்மீது புலியெனப் பாய்ந்து பெறற்கரிய பெருவெற்றிகள் பலபெற்ற நெடுமாறன், தென் னுடைய சிவபெருமான்மீது எல்லையற்ற அன்பு கொண்டிருந் தான். சிவநெறியே செந்நெறியென உணர்ந்து, சைவத்தொண்டு புரிந்துவந்தான். எனவேதான், இவன் சிவனடியார் அறுபத்து மூவருள் சிறப்பாக வைத்துப் போற்றப்பெறுகிறான். இவனது துணைவியார் மங்கையர்க்கரசியாரும், அமைச்சராகப் பணி புரிந்த குலச்சிறையாரும், இவனைப் போன்று சிவநெறிக்குச் சிறப்பான தொண்டு செய்ததன் விளைவாகவே, அறுபத்துமூன்று நாயன்மார்களுள் சேர்க்கப்பெற்றுள்ளனர். இவ் வேந்தனது சிவபக்தியினை இறையனாரகப் பொருளுரையிலுள்ள இருநூற்றி ஐம்பத்தாறாவது பாடலும், இருநூற்றியெழுபத்தொன்பதாம் பாடலும் சிறப்பித்துப் போற்றுகின்றன. பெரிய புராணமும் இவனது சிவபக்தியினைச் செப்புகின்றது.

**மதமாற்றம் :** இவன் தொடக்க காலத்தில் சமண சமயத்தின் கண் பேரார்வம் கொண்டு, அச் சமய வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வந்தான். இவனது பேராதரவின் விளைவாக மதுரை நகரினைச் சூழவுள்ள ஆனைமலை, நாகமலை போன்ற பகுதிகளில் சமண முனிவர்கள் தங்கி சமண சங்கமமைத்து, சமயப்பணியாற்றி வந்தனர். இதன் காரணமாக மன்னனும் மக்களிற்பலரும் அருகதேவனின் அடியொற்றினர். இதனை

'பூழியர் தமிழ் நாட்டுள்ள பொருவில் சீர்ப் பகுதிகளெல் லாம்
பாழியும் அருகர் மேவும் பள்ளிகள் பலவு மாகி'

என்று சேக்கிழார் பெருமான் குறிப்பிடுவதனாலறியலாம். இங்ஙனம் சமண சமயப் பற்றுடையவனாக வாழ்ந்து வந்த பாண்டிய வேந்தன், சைவ சமயத்தின் கண்மணியாம் திருஞான சம்பந்தப் பெருமானால் சைவ சமயத்திற்கு மாற்றப்பட்டான் என்பதனைச் சைவ சமய வரலாறுணர்த்துகின்றது. மங்கையர்க் கரசியாரும், குலச்சிறையாரும் மன்னனுக்குத் துணையாய் நின்று சைவ சமய வளர்ச்சிக்கு அரும்பாடுபட்டனர். மதுரையில் சமண சமயம் அழிந்து, சைவ சமயம் தழைத்தது. எனவே தான் சைவம் தழைத்தோங்க ஓயாதுழைத்த இவ் வேந்தனை

1 பாடல்கள் 22, 106, 235, 309.

வேள்விக்குடிச் செப்பேடுகள் 'அந்தணர்க்கும் அரசர்க்கும் வந்தணை என்று ஈத்தளித்த மகரிகை யணிமணி நெடுமுடி அரிகேசரி, அசமசமன் சிரீமாற வர்மன்'[1] என்று பாராட்டுகின்றது.

**துலாபார தானம்:** சேரரும், சோழரும் குறுநில வேந்தரும் திறை செலுத்த, சைவ சமயத் தொண்டர்கள் புகழ்ந்தேத்த மன்னர் மன்னனாய்த் திகழ்ந்த இவன் இரணிய கருப்ப தானமும், துலாபார தானமும் பல செய்து பெருமை பெற்றான். துலாபார தானஞ் செய்யும் வழக்கு கடைச்சங்க காலத்திலேயே நிலவியிருந்ததென்பதனைச் சிலப்பதிகாரச் செய்யுளாலறியலாம்.[2] பிற்காலச் சோழர்களும் இவ் வழக்கத்தினைப் பின்பற்றியிருந்தனர். இதனைச் சோழப் பெரு மன்னன் முதலாம் இராசராசன் தனது மனைவியுடன் இரணியகர்ப்ப தானமும், துலாபாரமும் செய்ததாலறியலாம்.

**சீனப்பயணி வருகை:** இவ் வேந்தனது ஆட்சியின் தொடக்க காலத்தில்தான் சீனப் பயணியான (Chinese Pilgrim) 'யுவான் சுவாங்' என்பான் பாண்டிய நாட்டினைப் பார்வையிட்டான். இவன் பாண்டிய நாட்டினைப்பற்றிய தனது கருத்துகளைக் குறிப்பேட்டில் குறித்துச் சென்றுள்ளான். இக் குறிப்பினின்றும் பாண்டிய நாடு வெப்பம் மிகுந்த நாடென்றும், மக்கள் கருத்த மேனியரென்றும், உறுதியும் போர் வலிமையும் மிக்கவரென்றும், வாணிகத்தால் வளம் பெற்று, செல்வத்தால் சிறப்புற்றவரென்றும் அறிகின்றோம். மேலும், பாண்டி நாட்டில் உப்பும், முத்தும் மிகுதியாகக் கிடைக்கிறதென்றும், பக்கத்துத் தீவுகளிற் கிடைக்கின்ற முத்துகளும், இங்கு கொண்டு வரப்படுகின்றனவென்றும், இங்கு வேறு விளைபொருள்கள் மிகுதியாக இல்லையென்றும் அறிகிறோம்.

## பாண்டியன் அரிகேசரியும் பாண்டிக் கோவையும்

பாண்டியர் வரலாறுபற்றி அறிந்துகொள்ள உதவும் ஆதாரங்களுள் பாண்டிக் கோவையும் ஒன்றாகும். இது தமிழிலுள்ள கோவைகளுள் காலத்தால் முற்பட்டது. இன்று இந் நூல் முழுமையும் கிடைக்கப் பெறவில்லை. உரையாசிரியர்களால் மேற்கோளாக எடுத்தாளப்பட்டுள்ள முந்நூற்றைம்பது பாடல்கள் மட்டுமே நமக்குக் கிடைத்துள்ளன. பாண்டிக் கோவையில் சிறப்பிக்கப்படும் பாட்டுடைத் தலைவனை அரிகேசரி யாவன்? என்பதில் வரலாற்றறிஞரிடையே கருத்து வேற்றுமை நிலவுகின்றது. வேள்விக்குடிச் சாசனத்தில் குறிக்கப்

1 'பாண்டியர் செப்பேடுகள் பத்து' பக். 39 வரிகள் 22-25.

2 சிலப்பதிகாரம் — நீர்ப்படை—173, 176.

பெறும் அரிகேசரி அசமசமன் மாறவர்மனும் இறையனார் அகப் பொருளின் தலைவனும் ஒருவனே என்னும் கருத்தினைத் திரு. கே. வி. சுப்பிரமணிய ஐயரவர்கள் கூறியுள்ளார். இக் கருத்தினை திரு. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியார் ஏற்றுக்கொள்ள மறுக் கிறார்.

**இவனது சிறப்புப் பெயர்கள்**

பாண்டிக் கோவையை நன்கு ஆராய்ந்து பார்க்குங்கால், அரிகேசரி மாறவர்மனே இதில் குறிப்பிடப்படும் மன்னனென் பதனை அறியலாம். இக் கருத்தினையே திரு. ஆர். நாகசாமி அவர் களும் வலியுறுத்துகின்றார்.[1] பாண்டிக் கோவையைக் கொண்டு இம் மன்னன் நெடுமாறன், பூழியன், மீனவன், நேரியன், வான வன், மாறன் எனும் தூய தமிழ்ப் பட்டங்களையும் அரிகேசரி பராங்குசா, விகாரி, அதிசயா, ரணோதயா, ரணாந்தகா எனும் வடமொழிப் பட்டங்களையும் கொண்டிருந்தானென்று அறியப் படுகின்றது.

**பாண்டிக்கோவை குறிப்பிடும் வெற்றிகள்**

இவன் தனது பகைவர்களுக்கெதிராக முப்பத்து நான்கு வெற்றிகள் பெற்றவனென்றும், இவற்றுள் சேரர்களுக்கெதி ராகப் போரிட்டுப் பதினைந்து வெற்றிகள் பெற்றானென்றும், இவன் சேரர்களை முதன் முதலாக ஆற்றுக்குடி என்னுமிடத்தில் தோற்கடித்தானென்றும் பாண்டிக் கோவை செப்புகின்றது. பின்னர் பூலந்தை, விழிஞம், கடையல், கோட்டாறு, நறையாறு, குலந்தை, வஞ்சி, வட்டாறு, இருஞ்சிறை ஆகிய இடங்களிலும் கேரளரைத் தோற்கடித்து அவர்களை அடக்கி ஒடுக்கினான். வேள்விக்குடிச் செப்பேடுகளும் இவன் 'பாரளவும் தனிச் செங் கோற் கேரளனைப் பல முறையும்' தோற்கடித்தான் எனக் குறிப்பிடுவதும் ஈண்டு உற்று நோக்கத் தக்கதாகும்.

அடுத்து, இவன் பாழி, சென்னிலம், நெல்வேலி, புலிப்பாய் போன்ற இடங்களில் வெற்றி பெற்றானென்பது பாண்டிக் கோவையால் அறியப்படுகின்றது. அரிகேசரி மாறவர்மன் பெற்றவைதான் என்பதனை வேள்விக்குடிச் செப்பேடுகள் சுட்டிக் காட்டுகின்றன. வேள்விக்குடிச் சாசனத்தில் 'புலியூர்' என்று குறிக்கப்பெற்றது ஈண்டு 'புலிப்பாய்' என்று குறிக்கப் பெற்றுள்ளது. இவ் விரண்டும் ஒன்றினையே குறிப்பனவாகக் கொள்ளலாம். மேலும், அரிகேசரி மாறவர்மன் 'சங்கர மங்கை'

[1] R. Nagasamy. 'Pandya Arikesari and Pandikkovai' Professor K. A. Nilakanta Sastri Felicitation Volume.

என்னுமிடத்தில் பல்லவரை வெற்றி கொண்டான் என்று பெரிய சின்னமனூர்ச் செப்பேடுகள்[1] செப்புகின்றன. பாண்டிக் கோவையிலும் சங்கர மங்கை வெற்றி குறிக்கப்படுகின்றது. சோழர்களின் ஆதிக்கத்தினை யொடுக்குவதன் பொருட்டு இவ் வேந்தன் உறையூரில் போர் செய்தானென்பதனை முன்பே கண்டோம். பாண்டிக் கோவையும் இவன் சோழர்களை உறையூர், வல்லம் என்னுமிடங்களில் வெற்றி கொண்டதாகக் குறிப்பிடுகின்றது. இவன் இலங்கையினை வென்றதும்[2] வேணாட்டினை வென்றதும் வெண்மாத்தில் இரு பகைவரை வென்றதும்[2] (சேரரும் வேணாட்டரசனுமாயிருக்கலாம்), கொங்கு நாட்டின் ஒரு பகுதியைக் கைப்பற்றியதும், வடகொல்லியைக் கைக் கொண்டதும் இவனது பிற வெற்றிகளாகப் பாண்டிக் கோவை குறிக்கிறது.

**பாண்டிக் கோவையும் பாண்டியர் செப்பேடுகளும்**

அரிகேசரி மாறவர்மனின் வெற்றிகளாக வேள்விக்குடிச் செப்பேட்டிலும் பெரிய சின்னமனூர்ச் செப்பேட்டிலும் குறிக்கப்பெற்றுள்ளவை பாண்டிக் கோவையில் குறிக்கப் பெற்றுள்ள வெற்றிகளுடன் ஒத்திருத்தலாலும், அரிகேசரி, பராங்குசா எனும் பட்டங்கள் சேந்தன் மகனாகிய மாறவர்மனுக்கு மட்டுமே வழங்கப்பட்டிருத்தலினைச் சாசனங்கள் உறுதி செய்வதாலும் பாண்டிக் கோவையில் குறிக்கப் பெறும் பாண்டி வேந்தனும், செப்பேடுகளில் குறிக்கப்பெறும் அரிகேசரியும் இவனேயாதல் வேண்டுமென்று கருதலாம்.

**விழிஞம் :** பாண்டிக் கோவையில் விழிஞம் வென்ற வீரனாக இக் காப்பியத் தலைவன் குறிக்கப்பெறுவதாலும், அரிகேசரி மாறவர்மன் விழிஞம் போரில் பங்கு கொண்டதாகச் சான்றுகள் யாதும் கிடைக்கப் பெறாமையாலும் திரு. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியார் பாண்டிக் கோவைக்கும் இவ் வேந்தனுக்கும் தொடர்பில்லையெனக் குறிக்கின்றார்.[3] விழிஞம் போர் ஒன்றினை மட்டுமே கொண்டு சாஸ்திரியார் முடிவெடுத்தல் பொருந்தாது. மேலும், அண்மைக் காலத்தில் விழிஞத்தில் ஒரு வீரக்கல் (நடுகல்) கண்டுபிடிக்கப்பட்டு பத்மனாபபுரம் (Padmanabha-puram) அருங் காட்சியகத்தில் வைக்கப்பட்டுள்ளது. வட்டெழுத்தில் எழுதப்பெற்ற இக் கல்வெட்டு விழிஞத்தைக் கைப்

[1] 'பாண்டியர் செப்பேடுகள் பத்து' பக் 168. வரி 16.

[2] இது திருச்சி மாவட்டம் அரியலூருக்கருகில் உள்ள 'வெண்மான் கொண்டான்' என்னும் ஊராக இருக்கலாம.

[3] K. A. Nilakanta Sastri. 'The Pandyan Kingdom' p. 49. lines 12-15

பற்றும் முயற்சியில் ஈடுபட்டு வீரமரணமெய்திய ஒரு வீரன் தனது செஞ்சோற்றுக் கடனைக் கழித்ததாகக் கூறுகிறது.[1] ஒரு வேளை இக் கல்வெட்டு அரிகேசரியின் காலத்ததாகவும் இருக்கலாம்.

பாண்டிக் கோவை அரிகேசரி மாறவர்மனின் சிறப்பினைச் சித்திரிப்பதாக வரலாற்று மேதை திரு. கே. கே. பிள்ளையவர்கள் கருதுகின்றார்.[2] பாண்டியப் பேரரசு இவனது ஆட்சிக் காலத்தில் வடகிழக்குப் பகுதியிலும் தென் மேற்குப் பகுதியிலும் விரிவடைந்தது. பரந்து விரிந்துபட்ட பாண்டிப் பேரரசின் புகழினை உயர்த்திய இவன் புகழ் மிக்க பாண்டி வேந்தர்களுள் முதன்மையானவனுவான்.

தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டிய நெடுஞ் செழியனே மாறவர்மனின் தந்தையான செழியன் சேந்தன் எனப்பெயர் பெற்றான் என்றும், இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நன்மாறனே இம் மாறவர்மன் எனவும் வரலாற்றறிஞர் ஒருவர் குறிப்பிட்டுள்ளது[3] பொருத்தமுடையதன்று.

## கோச்சடையன் ரணதீரன் (கி. பி. 690–730)

மாறவர்மன் அரிகேசரி இறந்தபின்பு அவன் மகனாகிய கோச் சடையன் ரணதீரன் கி. பி. 700-ல் பாண்டிய நாட்டு வேந்தனாக அரியணையேறினான். (இவ் வேந்தனது ஆட்சிக்காலம் கி. பி. 700 முதல் கி.பி. 730 வரை விளங்கியதாக திரு. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியார் குறிப்பிடுகின்றார். தமிழ்நாட்டுத் தொல்லியல் துறை இயக்குநர் திரு. ஆர். நாகசாமி அவர்களும் இக் கருத்தினையே கொண்டுள்ளார். திரு. டி. வி. சதாசிவபண்டா ரத்தார் அவர்கள் இவனது ஆட்சிக்காலம் கி. பி. 670 முதல் கி.பி. 710 முடிய இருந்ததென்று கருதுகின்றார்).

தந்தையிடமிருந்து தான் பெற்ற பாண்டியப் பேரரசினை விரிவுபடுத்துவதில் நாட்டங்கொண்ட இவன், தந்தையினும் மேம்பட்ட வெற்றி வீரனாகத் திகழ்ந்தான். இவ் வேந்தனை வேள்விக்குடிச் செப்பேடுகள் 'வானவன்' எனவும், 'செம்பியன்' எனவும், 'சோழன்' எனவும், 'கொங்கர் கோமான்' எனவும்,

[1] 470 of 1958–59.

[2] கே. கே. பிள்ளை. 'தமிழக வரலாறு மக்களும் பண்பாடும்' பக் 194. வரிகள் 7-9.

[3] Indian Antiquary Vol XI.

'மதுரகரு நாடகன்' எனவும்[1] 'மன்னர் மன்னன்' எனவும் குறிப்பிடுவதனுல் இவன் சேரநாட்டையும், சோழநாட்டையும், கொங்கு நாட்டையும், கருநாடக நாட்டையும் வெற்றி கொண்டு பெரும்புகழ் பெற்றனன் என்பது விளங்குகின்றது. வேள்விக்குடிச் செப்பேடுகள் இவனைச் 'செங்கோல் தென்னன்' எனப் போற்றுவதனுல் இவன் நீதிநெறி தவருது ஆண்டவனெனவும், வெற்றிமிக்க வேந்தன் எனவும் கொள்ளலாம்.

### போர்ச் செயல்கள்

**ஆய்வேளை வெல்லல் :** இவனது ஆட்சிக் காலத்தின்போது ஆய்வேள் என்னும் குறுநில வேந்தன் பொதியில் மலையின் தலைவனுக இருந்து வந்தான். திருநெல்வேலி மாவட்டத்தில் மேற்குத் தொடர்ச்சி மலையின் அண்மைப் பகுதியினை ஆண்டுவந்த இவன் பாண்டியர்க் கெதிராக உள்நாட்டுக் கலகங்களை ஏற்படுத்தினுன். கடல் போன்ற பெரும்படை கொண்டு தன்னிடம் போரிட்ட ஆய்வேளை இரணதீரன் மருதூர் என்னுமிடத்தில் தோல்வியடையச் செய்தான்.[2] இவண் குறிக்கப்படுகின்ற மருதூர் எனும் ஊர் திருநெல்வேலி மாவட்டத்தில் அம்பாசமுத்திரத்திற்கு அருகாமையிலுள்ள திருப்புடை மருதூராயிருத்தல் வேண்டுமென்பது அறிஞர்கள் கருத்தாகும். வேள்விக்குடிச் செப்பேடுகளில் குறிக்கப்பெறும் மருதூர் போர் சிறிய சின்னமனூர்ச் செப்பேட்டாலும் உறுதி பெறுகிறது.[3] அடுத்து,கோச்சடையன் இரணதீரன் செங்கொடி, புதான்கோடு என்னுமிடங்களிலும் பகைஞரை வென்று வெற்றிவாகை சூடினுனென்று வேள்விக்குடிச் சாசனம் சான்று பகர்கின்றது.[4]

### மங்கலபுரப் போர்

இவ் வேந்தன் மங்கலபுரத்தில் குறிப்பிடத்தக்க வெற்றியொன்றினைப் பெற்ருனென்று வேள்விக்குடிச் செப்பேடுகள்

[1] இங்கு செம்பியனென்றும் சோழனென்றும் கூறப்பட்டுள்ளது விந்தையாக உள்ளது. சிற்றரசர்களாகச் சிதறிக் கிடந்த சோழர்களுள் இரு பிரிவினையும் இவன் ஒருவேளை வென்றிருத்தல் வேண்டும். அல்லது இவன் குளித்தலை வட்டத்திலிருந்த செம்பாபுரியை ஆண்டு வந்த கொங்கரின் ஒரு பிரிவினரான 'செம்பரை' வென்றிருத்தல் வேண்டும் எனக் கருதலாம். செம்பக் கூட்டத்தினரை கி.பி. எட்டாம் நூற்ருண்டினளவில் குளித்தலைப் பகுதியில் ஆட்சி புரிந்தனரென்பதனை 'ஓதாளர் குறவஞ்சி' என்னும் நூலாலறியலாம். செம்ப கூட்டத்தினர், செம்பொன் கூட்டம், செம்பியர்குடி, செம்பகுலம் என பேச்சு வழக்கில் பேசப்படுகின்றது.

[2] 'பாண்டியர் செப்பேடுகள் பத்து' பக் 39. வரி 26.

[3] '........ ... கடற்ருனையை மருதூருண் மாண்பழித்து' சின்னமனூர் சிறிய சாசனம் 'பாண்டியர் செப்பேடுகள் பத்து' பக். 80 வரி 2

[4] 'செங்கொடியும் புதான்கோட்டுஞ் செருவென்றவர்' 'வேள்விக்குடிச் செப்பேடு – பாண்டியர் செப்பேடுகள் பத்து' பக்.39 வரி 28.

குறிப்பிடுகின்றன.[1] இவண் மங்கலபுரமெனக் குறிப்பிடப் பெற்றுள்ள இடம் யாண்டுளது, என்பதுபற்றி வரலாற்றறிஞர் களிடையே ஒருமித்த கருத்து உருவாகவில்லை இஃது தற் போதுள்ள மங்களூர் நகரேயாகுமென்று ஆராய்ச்சியறிஞர் திரு. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியார் கருத்துத் தெரிவிக்கின்றார்.[2] தென் கன்னட மாவட்டத்தில் உள்ள இம் மங்களூர் மேற்குத் தொடர்ச்சி மலைக்கு மேற்கேயமைந்துள்ளது. ஆனால், கல்வெட் டறிஞர் திரு. டி. வி. சதாசிவபண்டாரத்தார் இஃது திருச்சிராப் பள்ளி மாவட்டத்தில் கொள்ளிடத்தின் வடகரையில் அமைந் துள்ள மங்கலம் என்னும் ஊரேயாகுமென்று குறிப்பிடுகின்றார்.[3] இக் கருத்து பெரும்பாலான ஆராய்ச்சியறிஞர்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது.[4]

இப் போரில் பாண்டியனுடன் போர் புரிந்து தோல்வி கண்டவன் கொங்குநாட்டு மன்னனாயிருத்தல் வேண்டுமென்று நீலகண்ட சாஸ்திரியார் கருதுகின்றார்.[5] இக் கருத்தினைப் பண்டாரத்தார் மறுக்கின்றார். கோச்சடையனுக்கு இரணதீரன் எனும் சிறப்புப் பெயருளதால் மங்கலபுரத்தில் சாளுக்கியர்களை வென்றவன் எனக் குறிப்பதே பொருத்தமுடையதென்று கல் வெட்டறிஞர் டி. வி. சதாசிவ பண்டாரத்தார் கூறுகின்றார்.[6] இதனை நாம் சிறிது ஆய்வோம்.

### சாளுக்கியருடன் போர்

மாமல்லன் மகனான முதலாம் பரமேசுவரவர்மன் (கி.பி.668–680) காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு பல்லவ நாட்டினை ஆண்டு வந்த காலை முதலாம் விக்கிரமாதித்தியன் (கி.பி.655–681) சாளுக்கிய நாட்டினை ஆண்டு வந்தான். விக்கிரமாதித்தன் 'இரணரசிகன்' எனும் சிறப்புப் பெயரைப் பெற்றிருந்தான். சாளுக்கியர்கள் இரணரசிகன், இரணபராக்கிரமன், இரணராகம் முதலான சிறப்புப் பெயர்களைப் பெற்றிருந்தனர் என்பதனைச் சாளுக்கியர் வரலாறு நமக்குத் தெளிவாக உணர்த்துகின்றது.

1 'மங்களபுரமெனு மாநகருண் மகாரதரை யெறிந்தழித்து' Ibid பக். 40 வரி 1.

2 K. A. Nilakanta Sastri. 'The Pandyan Kingdom' p. 50 lines 10–11

3 டி.வி. சதாசிவ பண்டாரத்தார் 'பாண்டியர் வரலாறு' பக். 46 வரி 7–9.

4 திரு. இரா. நாகசாமி அவர்கள் மட்டும் இதனை ஏற்றுக் கொள்ளவில்லை. 'நெல்வேலி வென்ற நெடுமாறனின் வைகைக்கரைக் கல்வெட்டு' 'ஆராய்ச்சி' பக்கம் 226.

5 K A. Nilakanta Sastri 'The Pandyan Kingdom' p. 50 lines 13–15.

6 சதாசிவ பண்டாரத்தார் தி.வை. 'பாண்டியர் வரலாறு' பக். வரி 5–6. இக் கருத்தினைப் பிரெஞ்சு வரலாற்றறிஞரான திரு. தூப்ரே அவர்கள்தான் முதன் முதலில் தமது 'பல்லவர் வரலாறு' என்னும் நூலின்கண் குறிப்பிட்டார்.

தனது தந்தையான இரண்டாம் புலிகேசியின் காலத்தில் நரசிம்ம வர்மப் பல்லவன் சாளுக்கிய நாட்டிற் படையெடுத்து, வென்று, சாளுக்கியரின் புகழுக்குக் களங்கம் விளைவித்ததற்காக, பழிக்குப் பழி வாங்க வேண்டுமென்று கருதிய முதலாம் விக்கிரமாதித்தன் பல்லவ நாட்டின்மீது படையெடுத்து காஞ்சியைக் கைப்பற்றி பல்லவனை வெற்றி கொண்டு உறையூரில் தங்கியிருந்தான். இதனையறிந்த பாண்டி நாட்டு வேந்தனும் அரிகேசரி மாறவர்மனும் அவனது மைந்தனுன கோச்சடையனும் சாளுக்கிய வேந்தனை வெற்றிகொள்ள முடிவு கட்டினர். பாண்டியப்படை சாளுக்கியப் படையினைத் தாக்குவதற்குப் புறப்பட்டது. இரு திறத்தாருக்கும் புதுக்கோட்டைச் சீமையிலுள்ள நெல்வேலி என்னுமிடத்தில் கடும்போர் நிகழ்ந்தது. இதில் கோச்சடையன் வெற்றிபெற்றான். அவ் வமயம் முன்பு சாளுக்கியனிடம் தோல்வி கண்ட பல்லவ வேந்தன் சாளுக்கியப் படைகளைத் திருச்சிக்குக் கிழக்கே பதினேழு கல் தொலைவிலுள்ள பெருவளநல்லூரில் இடைமறித்துப் போரிட்டு வெற்றி பெற்றான்.

இரணஇரசிகனாகிய முதலாம் விக்கிரமாதித்தனை வென்ற காரணத்தால் கோச்சடையன் 'இரணதீரன்' என்னும் பட்டத்தினையும்,[1] பல்லவ வேந்தனின் மகனான இராசசிம்மன் 'இரணசயன்' என்னும் பட்டத்தினையும் பெற்றான்.[2] கோச்சடையன் சாளுக்கியனை கி.பி. 674ஆம் ஆண்டில் வெற்றி கண்டதாகக் கருதலாம்.[3] பிரெஞ்சு வரலாற்றறிஞர் தூப்ரே (Dubreuil) என்பவரும் மங்கலபுரத்தில் இரணதீரன் மாரதரை (Marathas) வென்றதாக வேள்விக்குடிச் செப்பேடு கூறுவதற்கு இப்படியே பொருள் கொண்டிருக்கிறார். மேலும், முதலாம் விக்கிரமாதித்தனின் கேந்தூர்க் கல்வெட்டுகளும்[4] பாண்டிய சாளுக்கியப் போர் நிகழ்ச்சி பற்றிக் குறிப்பிடுவதனால் இக்கருத்து உறுதி பெறுகிறது. ஆனால், தென்னிந்திய வரலாற்று மேதை திரு. கே. கே. பிள்ளையவர்கள் 'மங்களூர், அதாவது மங்களாபுரம் என்ற ஊரில் இவன் மராட்டியர்மேல் போர் தொடுத்து வெற்றிகொண்டான் எனவும் அறிகிறோம்,[5] எனத் தாமியற்றிய 'தமிழக வரலாறு மக்களும் பண்பாடும்' என்னும் நூலில் குறிப்பிடுகின்றார். வேள்விக்குடிச் செப்பேட்டில்,

[1] இராசமாணிக்கர் மா. பண்டாரகர் 'தமிழக வரலாறும் தமிழர் பண்பாடும்' பக்கம் 63, வரிகள் 29–30.
[2] Ibid வரிகள் 30-32,
[3] 'பாண்டியர் செப்பேடுகள் பத்து' பக்கம் XVI. வரிகள் 15-17.
[4] Epigraphica India–Vol IX No. 29
[5] பிள்ளை, கே.கே. 'தமிழக வரலாறும்–மக்கள் பண்பாடும்'. பக். 194.

'மங்கல புரமெனு மாநகருண் மகாரதரை பெறிந்தழித்து' என்று குறிப்பிட்டுள்ளதனைக் கொண்டு இவர் 'மகாரதர்' என்பதற்கு 'மராட்டியர்' எனப் பொருள் கொண்டு எழுதியுள்ளார். இது ஆய்வுக்குரியதொன்றாகும். இந் நிலையில் திரு. பண்டாரத்தார் அவர்களது கருத்தினை நாம் ஏற்றுக் கொள்ளலாம்.

**ஆதிக்கம் :** கோச்சடையன் இரணதீரனின் மேலாண்மை கொங்கு நாட்டின்மீது பரவியிருந்ததோடு, சாளுக்கிய அரசு, கங்க அரசு ஆகியவை கொண்ட கர்நாடக தேசத்தினை மேலைக் கடற்கரைப் பட்டினமாகிய மங்களூர்என்னும் மங்கலபுரத்தைத் தலைநகராகக் கொண்டு பாண்டியர்களுள் ஒரு கிளையினர் ஆட்சி புரிந்துள்ளனர் என்பதற்கு ஆதாரங்கள் உள்ளன. மாறஞ் சேந்தனுடைய கல்வெட்டுகளும் ஆங்கு கிடைத்துள்ளதனை ஈண்டு நாம் எடுத்துக்காட்டாகச் சுட்டலாம். இவனது மகனாகிய அரிகேசரி பராங்குச மாறவர்மனும் தந்தையைப் போன்று கொங்கு நாட்டினை வென்றதாகக் குறிக்கப்படுவதால், தந்தை காலத்தில் கிடைத்த வெற்றிகளைத் தனது காலத்திலும் நிலைத்த வெற்றிகளாக்கிக் கொண்டான் இவன் என்று கருதலாம்.

### கொங்குநாட்டு வெற்றியின் முக்கியத்துவம்

பாண்டிய வேந்தர்களது வெற்றிகளை நாம் ஆய்ந்து பார்க்குங்கால், கொங்கு நாட்டில் தமது ஆதிக்கத்தினை ஏற்படுத்துவதில் இவர்கள் பெரிதும் நாட்டமுடையவர்களாக இருந்தனர் என்பது புலனாகிறது. பிற்காலப் பாண்டியருங்கூட கொங்கு நாட்டினைக் கவர்வதில் ஆர்வம் செலுத்தினர். குறிப்பாக அதிலும் சிறப்பாகக் கி. பி. எட்டாம் நூற்றாண்டளவில் ஆண்ட பாண்டிய வேந்தர்கள் தொடர்ந்து கொங்கு நாட்டின்மீதுத் தாக்குதல் நிகழ்த்தியுள்ளனர். கோச்சடையன் 'கொங்கர் கோமான்' என்னும் பட்டத்தினைச் சூடிக் கொண்டதும், தேர்மாறன் மழகொங்கத்தை அடிப்படுத்தியதும், நெடுஞ்சடையன் வடகொங்கின் தலைவனை தகடூர் அதிகமான்மீது படைகொண்டு சென்றதும் பாண்டியர் கொங்கு நாட்டின்மீது கொண்டிருந்த நாட்டத்தைக் குறிப்பிடுவதாக அமைந்துள்ளன.

### முடிவுரை

பெறற்கரிய பெரு வெற்றிகள் பெற்று, பாண்டிய நாட்டின் எல்லைகளை விரிவுபடுத்தி, நல்லாட்சி புரிந்து, தோரணையான பட்டங்கள் பல புனைந்து செங்கோல் செலுத்திய மாமன்னனும் கோச்சடையனைப்பற்றிப் பெரிய சின்னமனூர்ச் செப்பேட்டின்

தமிழ்ப் பகுதி ஒன்றும் குறிப்பிடாதிருத்தல் விந்தையாகவுள்ளது. இராமநாதபுரம் நாட்டிலுள்ள கோச்சடை எனும் ஊர் இவனது பெயரைத் தாங்கி நிற்கிறது.[1]

## அரிகேசரி பராங்குச மாறவர்மன்
## (முதலாம் இராசசிம்மன்)
## (கி. பி. 730—768)

**இவனுக்குரிய பெயர்கள்**

இவன் கோச்சடையன் இரணதீரனின் மகனாவான். இவனது தந்தை இவனுக்கு இராசசிம்மன் எனப் பெயரிட்டு அழைத்தான். எனவே, இவன் முதலாம் இராசசிம்மப் பாண்டியன் என்று அழைக்கப் பெறுகிறான். கோச்சடையன் பல்லவ வேந்தனும் இராசசிம்மனின் மகளை மணந்து அவள் வயிற்றில் தோன்றியவனுக்கு அந்தத் தாய்வழிப் பாட்டனின் நினைவாக இராசசிம்மனெனப் பெயரிட்டிருத்தல் வேண்டுமென்று பிரெஞ்சு அறிஞர் பண்டாரகர் துப்ராய் கருதுகின்றார்.[2] இவனுக்குத் தன் தந்தை வழிப் பாட்டனை அரிகேசரி என்னும் பெயரும் உண்டு. மாறவர்மன் என்பது இவனது பட்டப்பெயராகும். எனவே, இவன் அரிகேசரி பராங்குச மாறவர்மன் என்று அழைக்கப் பெறுகிறான். மாறன் என்னும் பெயர் மாறவர்மன் என்றும் நெடுமாறன் என்றும் அழைக்கப் பெறுவதுண்டு. இவனது பாட்டனும், திருஞானசம்பந்தரின் சமகாலத்தவனுமாகிய நான்காம் எண்ணுக்குரிய பாண்டியனை மேற்கூறிய மூவகைப் பெயர்களால் அழைக்கப்படுவதனை ஈண்டு நாம் எடுத்துக்காட்டாகச் சுட்டலாம். இவன் பல்லவ வேந்தனை வென்று 'பல்லவ பஞ்சனன்' எனும் விருதையும் பெற்றான்.[3] அசமசமன், அலங்கிய விக்ரமன், அகாலகாலன் என்னும் பெயர்களையும் செப்பேடுகள் இவனுக்கு வழங்குகின்றன.[4]

அரிகேசரி மாறவர்மன் 'தேர் மாறன்' எனவும் அழைக்கப் பெறுகிறான். (தேர்மாறன் என்பது தேர்ந்த மாறன் எனவும் பொருள்படும்). ஆனால், திரு. மு. இராகவையங்கார் அவர்கள்

[1] சேதுப்பிள்ளை, ரா.பி. 'ஊரும் பேரும்'-பக்கம் 16, வரி 21-22, மதுரை அருகிலுள்ள கோச்சடையில் உள்ள கோயில் இவனது பள்ளிப்படைக்கோயிலாகவே இருத்தல் வேண்டுமென ஊகிக்கிறேன்.

[2] Dubreuil 'The Pallavas' page 68-69

[3] The Madras Museum Plates; பிள்ளை, கே. கே. 'தமிழக வரலாறு மக்களும் பண்பாடும்' பக்கம் 195.

[4] 'அரிகேசரி அசமசமன் அலங்கிய விக்ரமன் அகாலகாலனெனத் தனக்குரிய பலகுணநாம முலகுமுழு துகந்தேத்தப்' சின்னமனூர்ச் (சிறிய) சாசனம். பாண்டியர் செப்பேடுகள் பத்து' பக். 79 வரி 13-14.

இவன் 'மான்தேர்' என அழைக்கப் பெறுவதே சிறப்பிற்குரிய தென்று கருதுகின்றார். இவன் சைவ சமயத்தைச் சார்ந்தவனாயினும் பெரியாழ்வாரின் சீடனாகி வைணவ சமயத்திற்கு மாற்றப்பட்டான் என்று மு. இராகவையங்கார் கருத்துத் தெரிவிக்கிறார். இவனது முன்னோரும் சைவ சமயச் சார்புடையோரென்பது ஈண்டு நினைவுகூரத் தக்கதாகும். மாறவர்மனான இராசசிம்மனும் தனது தந்தை வழிப் பாட்டனான மாறவர்மன் அரிகேசரியைப் போன்று நெடுமாறன் எனும் பெயரினைப் பெற்றான். கடுங்கோன் பாண்டிய மரபின் புகழ்பூத்த மன்னனாக இவன் சிறந்து விளங்கினான்.

இவ் வேந்தன் கி. பி. 730 முதல் கி. பி. 765 முடிய[1] அரசோச்சினான் எனக் கருதலாம். இவனும் தனது தந்தையைப் போன்று வெற்றி வீரனாகத் திகழ்ந்து பாண்டி நாட்டின் மீன் கொடியைப் பட்டொளி வீசிப் பறக்கவிட்டான். இவனது ஆட்சிக் காலத்தில் சோழ நாடு வலுவிழந்து பல்லவர்களின் ஆட்சிக்குட்பட்டிருந்தது. தொண்டைமண்டலம் முழுவதிலும் தன்னாட்சி செலுத்திய நந்திவர்ம பல்லவமல்லன் சோணாடும் கொண்டு திக்கெட்டும் வெற்றி முரசு கொட்ட காலங்கருதியிருந்தான். பல்லவர்களின் உயர்ச்சி பாண்டியர்களுக்கு அதிர்ச்சியைத் தந்தது. இந் நிலையில் பல்லவரது வளர்ச்சியைப் பெரு முயற்சி கொண்டாயினும் தடுத்தல் வேண்டுமென்று பாண்டி மன்னன் முடிவு கட்டினான்.

**பல்லவருடன் போர்**

பல்லவ நாட்டில் பட்டத் தகராறு ஏற்பட்டதனைக் காரணமாகக் கொண்டு[2] மாறவர்மன் பல்லவ அரசியல் விவகாரங்களில் தலையிட்டான்; இதனால் பாண்டியருக்கும் பல்லவருக்கும் போர்

[1] திரு. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியார் இவன் கி. பி. 740 முதல் 765 முடிய ஆண்டதாகப் 'பாண்டியர் வரலாறு' என்னும் நூலிலும், திரு. டி. வி. சதாசிவ பண்டாரத்தார் அவர்கள் இவன் கி.பி. 710 முதல் கி.பி. 765 முடிய ஆண்டதாகவும் கருதுகின்றார். திரு. இரா. நாகசாமி அவர்கள் இவன் கி. பி. 730 முதல் 765 முடிய ஆண்டதாகவும் குறிப்பிடுகின்றார்.

[2] பரமேஸ்வரவர்மனின் இறப்பிற்குப்பின், பல்லவ நாட்டில் பெருங் குழப்பமும், அரசியல் நெருக்கடியும் ஏற்பட்டது. அரச அலுவலர்கள் கடிகையைச் சேர்ந்த பார்ப்பனரையும், பொதுமக்களில் முக்கியமானவர்களையும் கலந்து கொண்டு, இரணியவருமனின் மகனை இரண்டாம் நந்திவருமனை அரியணையேற்றினர். இதனை நாம் காஞ்சி வைகுந்தப் பெருமாள் கோயிலுள்ள சுவர்ச் சிற்பமுகப்புக் கூறுகளின் விவரக் குறிப்புகளின் வாயிலாக அறிகிறோம். இந்நிலையில் மூன்றும் நந்திவர்மனின் இருமக்களும் அவனுடன் அரச பதவிக்குப் போட்டியிட்டனர். அவ் விருவருள் ஒருவன் நந்திவருமனைக் காஞ்சி மாநகரில் நுழையவிடாதபடித் தடுக்க மேற்கொண்ட முயற்சியில் மாண்டு விட்டான். மற்றொருவனான சித்திரமாயன் பல்லவநாட்டில் ஓரளவு செல்வாக்குள்ளவனாகத் திகழ்ந்தான், பாண்டிய வேந்தனின் ஆதரவையும் நாடினான்.

நிகழ்ந்தது. நெடுவயல், குழும்பூர், குறுமடை, மன்னிக்குறிச்சி, பூவலூர், திருமங்கை, கொடும்பாளூர், பெரியலூர் முதலான ஊர்களில் நடைபெற்ற போர்களில் இவன் பல்லவ மல்லனின் படைகளை முறியடித்துப் பெரும்புகழ் பெற்றான். இதனை வேள்விக்குடிச் செப்பேட்டின் தமிழ்ப்பகுதி மிகச் சிறப்பாகச் சித்திரிக்கின்றது.[1] போர்க்களத்தின்கண் பல்லவ மன்னன் ஓட்டம் பிடித்ததாக இச் செப்பேட்டின் வடமொழிப் பகுதியும் குறிப்பிடுகின்றது.[2]

மேலே குறிப்பிடப்பட்ட போர்க்களங்களுள் பல புதுக்கோட்டைப் பிரதேசத்தில் காணப்படுவதால், பாண்டி நாட்டைக் கைப்பற்றும் பொருட்டு தெற்கு நோக்கிப் படை கொண்டு வந்த பல்லவனைப் பாண்டி வேந்தன் தனது நாட்டின் வட எல்லையில் சந்தித்து, தோற்கடித்து, விரட்டியடித்தான் எனக் கொள்ளலாம். இவன் மூன்றாம் நந்திவர்மப் பல்லவ மல்லனின் சமகாலத்தவன் என்பதும் பகைஞன் என்பதும் இவண் குறிப்பிடத் தக்கதாகும். சில இடங்களில் பல்லவரும் வெற்றி பெற்று உள்ளனர்.[3]

### நந்திக்கிராம முற்றுகை

வெற்றிக் கொடி நாட்டிய பாண்டியர் இறுதியாகப் பல்லவப் படையினைத் தஞ்சை மாவட்டம் கும்பகோணத்திற்கருகிலுள்ள நந்திக்கிராமம்[4] என்னும் ஊரில் முற்றுகையிட்டனர். இதனைக்

[1] 'மத்தயானை செலவுந்தி மானவேல் வலனேந்திக்
கடுவிசையா லெதிர்த்தவரை நெடுவயல் வாய் நிகரழித்து
கறுவடைந்த மனத்தவரைக் குறுமடைவாய்க் கூர்ப்பழித்து
மன்னிக்குறிச்சியுந் திருமங்கையு முன்னின்றவர் மூரணழித்து
மேவலோர் கடற்றானையோ டேற்றெதிரே வந்தவரைப்
பூவலூர்ப் புறங்கண்டும்
கொடும்புரிசை நெடுங்கிடங்கிற் கொடும்பாளூர்கூடார்
கடும்புரியுங் கடுங்களிறுங் கதிர்வேலிற் கைக்கொண்டும்
சேவ.........கூடாத பல்லவனைக் குழும்பூருட் டேசழிய
எண்ணிறந்த மால்களிறு மிவுளிகளும் பலகவர்ந்தும்
திரியலராய்த் தனித்தவரைப் பெரியலூர்ப் பீடழித்தும்'
வேள்விக்குடிச் செப்பேடு-'பாண்டியர் செப்பேடுகள் பத்து' பக்.40 வரி 10-20.

[2] '............திருமங்கை முன்னின்றவர் மூர்ணழித்து மேமவலோர் கடற்றானை ஒடேற்றெதிரேய் வந்தவரைப் பூவலூரப் புறங்கண்டுங்' வேள்விக்குடிச் செப்பேடு வடமொழிப்பகுதி. E. I. Vol XVII. 'பாண்டியர் செப்பேடுகள் பத்து' பக். 25 வரி 74-75.

[3] நென்மேலி, மண்ணை முதலான இடங்களில் நடைபெற்ற போர்களில் பாண்டியர் பல்லவர்களிடம் தோல்வி பெற்றனர். இதனால் சில இடங்களில் பல்லவரும் வெற்றி பெற்றனர் எனலாம்.

[4] நந்திக்கிராமம் என்பது கும்பகோணத்திற்கருகில் உள்ள நந்திவரம் என்னும் ஊராகும். இது நாதன் கோயிலுக்கருகில் ஒரு கல் தொலைவில் உள்ளது. இது பழையாறை நகரின் ஒரு பகுதியாகவே திகழ்ந்தது. சிற்றரசரான சோழர்கள் பழையாறையில்தான் தங்கியிருந்தனர்.

கேள்வியுற்ற புகழ்மிக்க பல்லவப் படைத் தலைவனும் உதயச் சந்திரன் பெரும்படையுடன் நந்திக்கிராமம் நோக்கிப் புறப்பட்டான்; பாண்டியரது முற்றுகையை முற்றிலும் தகர்த்தெறிந்தான்; பாண்டியப் படையினைத் தோற்கடித்தான்; சித்திர மாயாவைச் சிறைப்பிடித்து அவனது தலையைக் கொய்தான். செயற்கரிய செயல் புரிந்து பல்லவரின் புகழைப் பாரறியச் செய்த இம் மாவீரனின் அரும்பெருந் தொண்டினைப் பாராட்டுமுகத்தான் பல்லவ மன்னன் இவனை 'வில்வலம்' என்ற ஊருக்குக் குரிசில் ஆக்கினான். வடவார்க்காடு மாவட்டத்தின் கண்ணுள்ள வாணியம்பாடிக்கண்மையிலுள்ள உதயசந்திரபுரம் என்னுமூர் இன்றும் இப் படைத் தலைவனின் புகழ் பாடிக் கொண்டுள்ளது.

## பெரும்பிடுகு முத்தரையனும் பல்லவரும்

**சிறப்புப் பெயர்கள்**

நந்திக் கிராமத்தில் பல்லவ படைத்தலைவனான உதயச் சந்திரனின் வெற்றிக்குப் பெருந்துணை புரிந்தவன் முத்தரையர் குலத்துதித்தவனான இரண்டாம் பெரும்பிடுகு முத்தரையனெனும் மாவீரனாவான். இவன் பல்லவரின் கீழடங்கியிருந்து, பல்லவப் பேரரசின் வெற்றிகளுக்குப் பெரும்பணியாற்றினான். ஈடிணையற்ற வெற்றி வீரனான இவன் சுவரன் மாறன், திருமாறன், சத்துருகேசரி, அபிமானதீரன், கள்வர் காவலன், சத்துரு பயங்கர முத்தரையன் என்னும் பட்டப் பெயர்களைப் பெற்றிருந்தான்.[1]

இம் மாவீரன் பல்லவர்க்காகப் படை நடத்திச் சென்று பாண்டியரையும்[2] சேரரையும் 1. கொடும்பை 2. மணலூர் 3. திங்களூர் 4. அழுந்தியூர் 5. காந்தளூர் 6. காரை 7. வெங்கோடல் (தஞ்சை செம்புல நாடு) 8. அனல்வாயில் (அன்னவாசல்) 9. செம்பொன்மாரி 10. வெங்கோடை 11. புகளூர் 12. கண்ண

[1] சுவரன்மாறன், ஸ்ரீமாறன் – செந்தலைக் கல்வெட்டுகள் சத்துருகேசரி, அபிமானதிறன், கள்வர் காவலன்–கீழக்கோட்டைக் கல்வெட்டு. சத்துரு பயங்கர முத்தரையன் – திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள சிவலப்பேரிக் கல்வெட்டு. இவனுக்குக் களப்பிர காவலன் எனும் பட்டமும் உண்டென்று அறிஞர் டி.ஏ.கோபிநாதராவ் கூறுவார்.

[1] 'வெங்கட் பொருகயல் சேர்வெல் கொடியோன் வாள்மாறன்
செங்கட் கரும்பகடு சென்று றுழக்க வங்குழத்தார்
தேராழுந்து மா வழுந்தச் செங்குருதி மண் பரந்த
ஊராழுந்தியூர் என்னுமூர் பாச்சில் வேல் நம்பன்'

இப்பாட்டினால் அழுந்தூரில் பாண்டியர் இரண்டாம் பெரும்பிடுகு முத்தரையனிடம் தோற்ற செய்தி புலனாகின்றது.

னூர் ஆகிய இடங்களில்[1] தோற்கடித்தான் என்று செந்தலைக் கல்வெட்டுக் குறிப்பிடுகின்றது.[2] இக்காலத்திய பாண்டியர் கல்வெட்டுகள் இதுபற்றி யாதும் குறிப்பிடவில்லை. பாண்டியன் கொடும்பாளூர் போரில் வெற்றி பெற்றான் என்ற செய்தியினை மட்டும் வேள்விக்குடிச் செப்பேடுகள் குறிப்பிடுகின்றன. வேள்விக்குடிச் செப்பேடுகள் மற்ற போர்களைப்பற்றிக் குறிப்பிடாத காரணத்தாலும், இரண்டாம் நந்திவர்மன் மிக விரைவில் தனது இழந்த நாடுகளைத் திரும்பப் பெற்றுக் கொண்டதாலும் இரண்டாம் பெரும்பிடுகு முத்தரையன் பாண்டியரை வென்றனனென்பதுறுதி. 'பல்லவன் வெல்லத் தென்னவன் முனையைக் கெடச் சென்ற மாறன்' என்ற அடியாலும்[3] இக் கருத்து உறுதி பெறுகிறது.

பாண்டிய நாட்டிற்கும் பல்லவ நாட்டிற்கும் இடைப்பட்ட பகுதியினை யாண்டுவந்த முத்தரையர் பல போர்களில் பல்லவருடன் துணைநின்று பாண்டியருடன் போர் தொடுத்தனர் என்பதனை ஈண்டு நாம் கருத்திற் கொள்ள வேண்டும். பல்லவ மல்லன் பாண்டி வேந்தனை நென்மேலி, மண்ணை முதலியவிடங்களில் தோற்கடித்ததாகத் திருமங்கையாழ்வார் பரமேச்சுர விண்ணகரப் பதிகத்திற் கூறியிருக்கின்றார். இச் செய்தி நந்திவர்மப் பல்லவ மல்லனது உதயேந்திரம் செப்பேடுகளாலும்[4] உறுதிபெறுகிறது.

[1] கொடும்பை-கொடும்பாளூர். கொடும்பாளூர், அன்னல்வாயில், காரை, காந்தளூர், செம்பொன்மாரி–புதுக்கோட்டைச் சீமை. M.P.S. Vol. II, part 11, page 1254; Epigraphica Indica–Vol. XIII, page 137. திங்களூர், மணலூர் ஆகிய இரண்டும் தஞ்சை மாவட்டம், திருவையாற்றுக்குக் கிழக்கே கும்பகோணம் செல்லும் சாலையில், (திருவையாற்றிலிருந்தும) முறையே இரண்டு கல் தொலைவிலும், ஒன்பது கல் தொலைவிலும் உள்ளன. E. I. Vol XIII. p. 137. கண்ணனூர்-திருச்சி மாவட்டத்திலுள்ள சமயபுரம் புகழி-திருச்சி மாவட்டம், கரூர் வட்டத்தில் கருவூருக்கு வடககே கரூர்–சேலம் சாலையில் எட்டுகல்தொலைவில் உள்ள புகழூர் என்னும் ஊர். இது புகழியூரெனவும் சீவரமங்கலச் செப்பேட்டில் குறிக்கப் பெறுகிறது. மருங்கூர்–தஞ்சை மாவட்டம், நன்னிலம் வட்டத்திலுள்ள மருங்கூர் அழுந்தியூர்–தஞ்சை வட்டத்திலுள்ள அடஞ்சியூர். வெங்கோடல் (தஞ்சை செம்புலநாடு) யாண்டுளதென்று அறுதியிட்டுக் கூறவியலவில்லை.

[2] Epigraphica Indica Vol. XIII, pp. 134-149.

[3] சேரர், கொடும்பாளூர் வேளிர் ஆகியோர் துணையுடன் பாண்டியன் மேற்கொண்ட படையெழுச்சியினை சுவரன் மாறன் ஒடுக்கினான். S. R. Balasubramanian. op. cit, pp. 15–20. 'பல்லவன் வெல்லத் தென்னன் முனையைக்கெடச் சென்றமாறன்'

'நின்றடு வில்லவன் வல்லரன் பல்லவன்
செங்தோளெனச் சென்றிற சீர்த்தி'
'தஞ்சைக்கோன்...........கொடும்பாளூர்
காய்ந்தெறிந்தான்'

[4] S.I.I. Vol. II, No: 74.

மேற்கூறியவற்றை ஆய்ந்து பார்க்குங்கால் பாண்டியரும் பல்லவரும் வெற்றியும் தோல்வியும் மாறிமாறிப் பெற்றனர் என்பதனையறியலாம்.

**மழகொங்கம் :** பல்லவர்களிடம் ஒரு சில தோல்விகளைப் பெற்ற போதிலும் மனந்தளராத பாண்டி வேந்தன் மழகொங்கு நாட்டைக் கைப்பற்றி, அம் மன்னனிடமிருந்து கப்பத்தினைப் பெற்றான். மழகொங்கம் தற்போதைய திருச்சி, தஞ்சை மாவட்டங்களின் எல்லை நிலத்திலிருந்தது[1] என்று கே.வி. சுப்பிரமணிய ஐயர் கருதுகின்றார். சிலர் வேறு விதமாகக் கருதுகின்றனர்.[2] மழகொங்கினைத் தன்னடிபடுத்திய இவன் மழவரசனின் மகளையும் மணந்து கொண்டு நட்புறவு கொண்டான் என்பதும் வேள்விக்குடிச் செப்பேடுகளாலறியப்படுகின்றது.[3]

**மணஉறவு :** இவ் வேந்தன் கங்க மன்னனின் மகளான பூசுந்தரியை மணஞ்செய்து கொள்ள விரும்பியபோது வட வேந்தர் பலர் எதிர்ப்பு தெரிவித்து, போர்ப்படை திரட்டினர். இதனைக் கண்ட நெடுமாறனின் மகாசாமந்தனான மாறங்காரி பெரும்படையுடன் சென்று அவர்களை வென்றான். இவ் வெற்றிக்குப் பின் மாறவர்மன் பூசுந்தரிக்குப் பூ மாலையிட்டான். இவ்விதமாக இவன் கங்க மன்னனோடு நட்புறவு கொண்ட நிகழ்ச்சியினை வேள்விக்குடிச் செப்பேடுகள் சிறப்பித்துப் பேசுகின்றன.

**திருப்பாண்டிக் கொடுமுடி இறைவன்மாட்டு தீரா அன்பு**

வெண்பைப் போரில் சாளுக்கியர்களை வென்று இரண்டாம் கீர்த்திவர்மனின் கொட்டத்தினையடக்கிய இம் மாமன்னன் கொங்கு நாட்டின்மீது படையெடுத்துச் சென்றபோது திருப்

[1] Subramania Aiyar, K. V. Ancient Deccan p. 129.

[2] இதுயாண்டுளது என்பதனை உறுதியாக்கக் கூறவியலாது. இதனை மழநாடு அல்லது மழபாடியோடு ஒன்றாக்க முடியாது. 'ஒருவேளை மழவர்கீழ் இருந்த கொங்கின் ஒரு பகுதி (அது நாமக்கல் வட்டத்தில் இருந்திருக்க வேண்டும) மழகொங்கம் எனப்பட்டது எனலாம்'. சுப்பராயலு, ஒய். 'நாட்டுப்பிரிவுகள்' 'ஆய்வுத் தேன்' பக். 47. 'இன்று நாமக்கல் என்று வழங்கப்படும் ஆரைக்கல் பண்டு அதியமான் அரசர்களின்கீழ் இருந்தது......இராசசிம்மன் மழகொங்கத்தை அடிப்படுத்தி.........பசுபதியின் பன்மபாதம் பணிந்தான்.........இவ் வெற்றி அதியர்கள் மீது கொண்ட வெற்றி எனலாம்' நாகசாமி இரா. 'கலை' 'ஆய்வுத்தேன்' (பதிப்பாசிரியர் கொடுமுடி சண்முகப் பிரகதம்) 1973 பக். 3.

[3] 'கொங்கர்வன் நறுங்கண்ணிச் கங்கராசனோடு சம்பந்தஞ் செய்தும் வேள்விக்குடிச் சாசனம் 'பாண்டியர் செப்பேடுகள் பத்து' பக்கம் 40 வரி 27. கங்கநாட்டு வரலாற்றில் கங்க–பாண்டிய மணஉறவுபற்றிய குறிப்புகள் யாண்டும் காணப்பெறவில்லை. இக்காலை கங்கநாட்டு வேந்தனாக வீற்றிருந்தவன் முதலாம் சிவமாறன் (கி. பி. 755–765) இவனது செப்பேடுகளில் இதனைப்பற்றிய குறிப்புகள் யாண்டும் கூறப்பெறவில்லை என்பதனைத் திரு. கிருட்டிண சாஸ்திரியார் ஆய்ந்து கூறுகின்றார்.

பாண்டிக் கொடுமுடி என்னும் திருப்பதிக்குச் சென்று சிவபெருமானின் திருவடிகளை வணங்கிப் பொற்குவியலும் நவமணித் திரளும் இறைவர்க்கீந்து மகிழ்ந்தான். இதனை வேள்விக்குடிச் செப்பேடுகள் மிகச் சிறப்பித்துப் பேசுகின்றன.[1]

**கொடைத் திறன் :** வெற்றி வேந்தனான இவன் கொடை வழங்குவதிலும் நாட்டம் மிகக் கொண்டிருந்தான்; இவன் கோசகசிரங்களும் இரணியகர்ப்ப தானங்களும் துலாபார தானங்களும் சிறப்பாகச் செய்துள்ளான்.[2] இவனது வீரத்தினையும் வெற்றிமேம்பாட்டினையும் இறையனாரகப் பொருளுரை மேற்கோள் செய்யுட்களாலறியலாம்.

**ஆட்சியெல்லை :** இவனது ஆட்சிக் காலத்தில் பாண்டியப் பேரரசு வடக்கே ஏறத்தாழ காவிரியின் வடபகுதி வரையிலும், வடமேற்கே திருப்பாண்டிக் கொடுமுடி வரையிலும் பரவியிருந்தது. 'இராசசிம்மன் காலத்தில் தமிழ்நாடு பாண்டிய நாடாயிற்று. மதுரை மாநகரம் செழிப்புற்றது' என்று திரு. மு. ஆரோக்கியசாமி அவர்கள் குறிப்பிடுவதனால்,[3] பாண்டியநாடு இவனது ஆட்சிக் காலத்தில் பரந்து விரிந்ததொரு பேரரசாய்த் திகழ்ந்ததென்பதனை அறியலாம்.

மேலும் வாழையடி வாழையென வந்த வீரமறவர் குலத்தில் தோன்றிய இம் மாவீரன் கூடல், வஞ்சி, கோழி ஆகிய மதில்களைப் புதுக்கினான் என்று சாசனங்கள் குறிப்பிடுகின்றன.[4] இவண் குறிக்கப்பெற்றுள்ள மூன்றும் பாண்டியர், சேரர், சோழர் ஆகியோரின் தலைநகரங்களைக் குறிப்பிடுவதாகக்

1 'பாண்டிக் கொடுமுடி சென்றெய்திப் பசுபதியது பதும பாதம் பணிந்தேத்திக் கனகராசியும் கதிர்மணியும் மனமகிழ்க் கொடுத்திட்டும்' வேள்விக்குடிச் சாசனம் 'பாண்டியர் செப்பேடுகள் பத்து' பக்கம் 40 வரிகள் 24–26.

2 'எண்ணிறந்த கோசகசிரமும் இரணிய கர்ப்பமுந் துலாபாரமும் மண்ணின் மிசைப் பலசெய்து மறைநாவினோர் குறைதீர்த்தும்' 'வேள்விக்குடிச் சாசனம்'— Ibid. பக்கம் 40 வரிகள் 28–29.

3 ஆரோக்கியசாமி மு. பண்டாரகர் 'தமிழ் நாட்டுவரலாறு' பக் 51.

4 'கூடல் வஞ்சி கோழியென்று மாடமா மதில் புதுக்கியும்' வேள்விக்குடிச் சாசனம் 'பாண்டியர் செப்பேடுகள் பத்து' பக். 40 வரி 30. 'மதுரை, கரூர், உறையூர் ஆகிய நகரங்களின் மதிற்சுவர்களைப் புதுப்பித்ததாக திரு. கிருஷ்ண சாஸ்திரி கருதுகின்றார். மதுரை நகரிலேயே, தனது முன்னாள் வெற்றியின் நினைவாக அமைத்திருந்த வஞ்சி, கோழி என்னும் பெயரிடப்பட்ட மதில்களையும், கூடல் என்னும் பெயரினைக் கொண்ட மதிலையும் அவன் புதுப்பித்ததாக திரு. கே. ஜி. சங்கரன் கருதுகின்றார். இது பொருத்தமாகத் தோன்றவில்லை. ஏனெனில் இதில் கூடல் மதிற் சுவரையும் புதுப்பித்ததாகக் கூறப்படாதிருந்தால் ஒருவேளை பொருத்தமாக இருந்திருக்கும். சேரனையும் சோழனையும் வென்று தனைடிப் படுத்தியதால் இவன் கூடல், வஞ்சி, கோழி ஆகிய மூன்று மதில்களுக்கும் தலைவனாதலின் இவற்றினைப் புதுப்பித்தான எனக் கூறப்பட்டுள்ளதாகக் கொள்ளலாம்.

கொண்டால், முதலாம் இராசசிம்மன் எட்டுத்திக்கும் வெற்றி முரசு கொட்டிய மாவீரனென்பதனை அறியலாம்.

ஏறத்தாழ கி.பி. 730-ல் அரியணையேறிய இவ் வேந்தன் கி.பி. 768 முடிய பாண்டிய நாட்டு வேந்தனாகப் பெரும்பணியாற்றினான் என்று கூறலாம். (முதலாம் இராசசிம்ம பாண்டியனின் ஆட்சிக் காலம் கி. பி. 740-765 என்று திரு. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியாரும்,[1] கி. பி. 710-765 என்று திரு. தி.வை. சதாசிவபண்டாரத்தாரும்[2], கி.பி. 730-765 என்று திரு. இரா. நாகசாமி அவர்களும்[3] குறிப்பிடுகின்றனர்.) இவ் வேந்தனது ஆட்சிக்காலம் கி.பி.768-ல் முடிவடைகிறது என்பதனை, இவ் வேந்தனது மகனான நெடுஞ் சடையன் பராந்தகன் கி. பி. 768-ல் பட்டத்திற்கு வந்தான் என்பது உறுதி செய்யப்படுவதால் உறுதியாகக் கொள்ளலாம்.

**சமகாலத்து அரசர்**

இவ் வேந்தனது காலத்தில் கங்க அரசன் சிபுருஷன் (கி. பி. 726—788), சாளுக்கிய அரசன் இரண்டாம் விக்கிரமாதித்தன் (கி. பி. 733—746), இரண்டாம் கீர்த்திவர்மன் (கி. பி. 746—757), பல்லவ வேந்தன் இரண்டாம் நந்திவர்மன் (கி.பி. 710—775), இராட்டிரகூட அரசன் தந்திதுர்க்கன் (கி.பி. 725—758), முதலாம் கிருட்டிணன் (கி. பி. 758—772) ஆகியோர் தமது நாட்டின் பகுதிகளை ஆண்டு வந்தனர்.

இராசசிம்மனை அடுத்து அவனது மூத்த மகனான நெடுஞ் சடையன் பராந்தகன் அரசு கட்டிலேறினான். இவன் கங்க நாட்டு இளவரசியான பூசுந்தரிபால் பிறந்த புதல்வனாவான். இவன் இளமைக் காலத்திலேயே போர்ப் பயிற்சியில் தேர்ச்சி பெற்று விளங்க, முதலாம் இராசசிம்ம பாண்டியன் தக்க ஏற்பாடுகளைச் செய்திருந்தான்.

## நெடுஞ்செழியன் பராந்தகன் [வரகுணன்]
## (கி. பி. 768—815)

அரிகேசரி பராங்குச மாறவர்மனின் மகனான இவன் கி. பி. 768ஆம் ஆண்டில் அரியணை ஏறினான் என்பதனைக் கல்வெட்டுச் சான்றுகளால் உறுதி செய்யலாம். முற்காலப் பாண்டியரின் காலவரையறையைக் கூறுவதில் ஆராய்ச்சியறிஞர்களான திரு. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியாரும், திரு. தி. வை. சதாசிவ பண்

1 Nilakanta Sastri, K. A. History of South India.

2 சதாசிவ பண்டாரத்தார் டி.வி. 'பாண்டியர் வரலாறு' பக்கம் 45

3 நாகசாமி இரா. ஆராய்ச்சி

டாரத்தாரும் கருத்து வேறுபாடுகள் கொண்டிருந்தபோதிலும், நெடுஞ்சடையன் பராந்தகன் கி. பி. 765-ல் அரியணையேறினன் என்பதில் உடன்பாடான கருத்தையே கொண்டிருந்தனர்.[1] இவ்விரு அறிஞர்களும், இவன் அரசு கட்டிலேறிய ஆண்டு கி.பி. 765 என்று குறித்துள்ளதால், அறிஞர் சிலர் இக் கருத்தினை ஏற்றுக்கொண்டு, இதே ஆண்டில் இவன் ஆட்சியைத் தொடங்கியதாக அண்மைக்கால ஆய்வுரைகளிலும் குறிப்பிடலாயினர்.[2] ஆனால், இக் கருத்து பொருத்தமுடையதாகத் தோன்றவில்லை.

பராந்தக நெடுஞ்சடையன் தனது மூன்றுமாட்சியாண்டில் வேள்விக்குடிச் செப்பேட்டினை வழங்கியிருக்கிறன்.[3] இச் செப்பேட்டிற்கு ஆணத்தியாக இருந்தவன் மாறங்காரி ஆவான். இவன் ஆனைமலையில் நரசிங்கப் பெருமாளுக்குக் குடைவரை அமைத்துள்ளான். இச் செய்தியினைக் கூறும் ஆனைமலைக் கல்வெட்டு கலியுக ஆண்டு 3871-ல் பொறிக்கப்பட்டுள்ளது. இது கி. பி. 770-க்குச் சமமாகும். மாறங்காரி இவ் வேந்தனின் மூன்றுமாண்டில் ஆனைமலையில் திருப்பணி செய்ததாக இக் கல்வெட்டினுல் அறியப்படுவதால்,[4] பராந்தக நெடுஞ்சடையனின் ஆட்சிக்கால ஆரம்பம் கி. பி. 768 ஆகும் என்பது உறுதி. அடுத்து, இவ் வேந்தனது ஆறுமாட்சியாண்டுக் கல்வெட்டொன்று கலி ஆண்டு 3874-ல் பொறிக்கப்பட்டுள்ளது. இவ் ஆண்டு கி. பி. 773 க்குச் சமமாகும். (773—6 = 768) இக் கல்வெட்டினைக் கொண்டுதான் கல்வெட்டறிஞர் திரு. கே. ஜி. கிருஷ்ணன் அவர்களும் பராந்தக நெடுஞ்சடையன் கி. பி. 768-ல் அரியணையேறியதாகக் கூறியுள்ளார்.[5]

அடுத்து, மதுரை மாவட்டம் திருப்பரங்குன்றத்தில் உள்ள இவ் வேந்தனது வடமொழிக் கல்வெட்டையும், தமிழ்க் கல்வெட்டையும் ஒப்பிட்டு ஆய்ந்து பார்க்குங்கால் இவன் கி.பி. 768-ல் அரியணையேறிய செய்தி தெரிகிறது. பாண்டியர்

1 Nilakanta Sastri, K.A. 'The Pandyan Kingdom' P. 229.
சதாசிவ பண்டாரத்தார், தி. வை. 'பாண்டியர் வரலாறு' பக். 48

2 நாகசாமி இரா. 'ஆராய்ச்சி'

3 'பாண்டியர் செப்பேடுகள் பத்து' பக்கம் 16

4 'ஆனைமலைக் கல்வெட்டு கி.பி. 770ஆம் ஆண்டின் இறுதியில் பொறிக்கப்பட்டதென்பது இந்தக் கல்வெட்டிலிருந்தே தெரியவருகிறது. இதனைக் கொண்டு இதற்கு முன்னதாக அதாவது கி.பி. 770ஆம் ஆண்டின் முற்பகுதியிலேயே இந்தச் சாசனம் வழங்கப்பட்டதெனக் கொள்ள வேண்டும்'
S 1.1. Vol. X1V (The Pandyas) No. 1 and 3.
பாண்டியர் செப்பேடுகள் பத்து, பக். 17.

5 Part 11 of S,1.1. Vol. X1V.

செப்பேடுகள் பத்து என்னும் நூலின் முன்னுரையிலும் நெடுஞ் சடையன் பராந்தகன் கி. பி. 768-ல் அரியணையேறியதாகவே கூறப்பட்டுள்ளது.[1] மேற்கூறியவற்றைத் தெள்ளிதின் ஆய்ந்து பார்க்குங்கால், இவ் வேந்தன் கி.பி. 768-ல் ஆட்சிக்கு வந்தான் என நிறுவுவதே மிகவும் பொருத்தமுடையது. பாண்டியர் வரலாற்றில் இக் காலக்கணிப்பு ஒரு மைல் கல்லாகும் என்பதில் ஐயமில்லை.

#### உடன் காலத்து அரசர்

இவ் வேந்தன் பாண்டிய நாட்டை ஆண்டுவந்த போழ்து, பல்லவ நாட்டினைத் தந்திவர்மப் பல்லவனும் (கி.பி. 775—825) கங்க நாட்டினை இரண்டாம் சிவமாறன் (கி. பி. 788—812) இராட்டிரகூட அரசினை இரண்டாம் கோவிந்தன் (கி.பி. 722—780), துருவன் (கி.பி. 780—794), மூன்றாம் கோவிந்தன் (கி. பி. 794—814) ஆகியோர் தமது அரசுகளை ஆண்டு வந்தனர். தமிழகத்தின் வடக்குப் பகுதியில் தனியாண்மை செலுத்தி வந்த பல்லவர், பாண்டியரின் பகைவர் ஆவர். அக் காலத்தில் இராட்டிரகூடர், பல்லவருடன் பகைமை பாராட்டி வந்தனர். கங்க அரசன் சிபுருசனும் (கி.பி. 726—788), இராட்டிரகூட வேந்தன் முதலாம் கிருட்டிணனும் (கி.பி. 758—772) இவனது சமகாலத்தவரே.

#### சான்றுகள்

ஏறத்தாழ நாற்பத்தெட்டு ஆண்டுகள் பாண்டிய நாட்டின் பெருமைமிக்க மன்னனாக ஆண்டுவந்த இவ் வேந்தனைப்பற்றிய செய்திகள் இவனால் வழங்கப்பெற்ற (1) வேள்விக்குடிச் செப் பேடுகள் (2) சீவரமங்கலச் செப்பேடுகள் (3) திருப்பரங்குன்றக் கல்வெட்டுகள் (4) ஆனைமலைக் கல்வெட்டுகள் — ஆகியவற்றில் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. பாண்டியரது சாசனங்களேயன்றி பல்லவர், முத்தரையர்—முதலான அரச குலத்தவரின் சாசனங் களும், தமிழ் இலக்கியங்களும் இவ் வேந்தனைப்பற்றிய செய்தி களை அறிந்துகொள்ளப் பயன்படுகின்றன.

நெடுஞ்சடையனால் வெளியிடப்பட்ட வேள்விக்குடிச் செப் பேடுகள் இன்றும் பிரிட்டிஷ் பொருட்காட்சியகத்தில் பாதுகாப் பாக வைக்கப்பட்டுள்ளன. சீவரமங்கலச் செப்பேடுகள் சென்னைப் பொருட்காட்சிச் சாலையில் வைக்கப்பட்டுள்ளது. சீவரமங்கலச் சாசனம் 'சென்னை அருங்காட்சியகச் செப்பேடு-15'

[1] பாண்டியர் செப்பேடுகள் பத்து. பக் X; XIV, and 16.

(The Madras museum Plate No-15) எனவும் அழைக்கப் பெறுகிறது.

**இவனது செப்பேடுகளின் முக்கியத்துவம்**

இதுகாறும் நமக்குக் கிடைத்துள்ள செப்பேடுகளுள் இவனது செப்பேடுகளே காலத்தால் முற்பட்டதாகும். இவனது செப்பேடுகள் கிடைத்துள்ள காரணத்தால்தான் பாண்டி நாட்டில் நிலவிய களப்பிரர் ஆட்சிபற்றியும், கி. பி. ஆரும் நூற்ருண்டின் பிற்பகுதி முதல் கி. பி. எட்டாம் நூற்ருண்டு வரையில் பாண்டி நாட்டினை யாண்டுவந்த முற்காலப் பாண்டிய அரசர்களைப்பற்றியும் நாம் தெளிவாக அறிந்துகொள்ள முடிகின்றது. இவை கிடைக்கவில்லையெனின் பாண்டியர்களின் வரலாறு தொடர்ச்சியற்றதாகவே காணப்படும் என்பதுறுதி.

இவ் வேந்தனைப்பற்றி அறிந்து கொள்வதற்கு ஏராளமான வெட்டெழுத்துகள் துணைபுரிகின்றன. இவனது மூன்ருமாட்சி யாண்டில் வெளியிடப்பெற்ற வேள்விக்குடிச் செப்பேடு முதல், நாற்பத்து மூன்ருமாட்சியாண்டினதாகிய ஏர்வாடிக் கல்வெட்டு முடிய நமக்குக் கிடைத்துள்ள இவனது கல்வெட்டுகள், இவனது சாதனைகளைத் தொகுத்துரைக்கின்றது. ஏறத்தாழ ஐம்பதாண்டு காலம் ஆண்ட இவன் பாண்டியப் பேரரசின் புகழினைப் பாரறியச் செய்த ஆற்றல் மறவனாவான்.

சின்னமனூர்ச் செப்பேடுகள் இவனைக் 'கொற்றவர்கள் தொழு கழற்கால் கோவரகுண மகாராசன்' எனப் புகழ்ந்துரைக்கின்றன. இவனது ஆட்சியின் மாட்சிபற்றி அறிந்துகொள்ள பாண்டிய நாட்டில் மட்டுமின்றி, தொண்டை நாட்டிலும், சோழ நாட்டிலும் கிடைத்துள்ள பல கல்வெட்டுகள் நமக்குப் பெருந் துணை புரிகின்றன. இதனுல் இவனது போர் நிகழ்ச்சிபற்றிய செய்திகள் தெளிவு பெறுகின்றன. இவன் முதலாம் வரகுண பாண்டியனென்று வரலாற்றறிஞர்களால் அழைக்கப் பெறுகிருன்.

இவ் வேந்தனது நான்காம் ஆட்சியாண்டுக் கல்வெட்டுகள் சோழ நாட்டின்கண்ணுள்ள திருவியலூர்[1] என்னும் ஊரிலும் திருநெய்த்தானம்[2] என்னும் ஊரிலும் கிடைத்துள்ளன. இவனது ஆரும் ஆட்சியாண்டு கல்வெட்டு ஆடுதுறையிலும்[3]

[1] Ins. 17 of 1907.
[2] S.I.I. Vol. V No. 608.
[3] Ins. 364 of 1907.

எட்டாமாட்சியாண்டுக் கல்வெட்டு கும்பகோணத்திலும்[1] பத்தாமாட்சியாண்டுக் கல்வெட்டு செந்தலையிலும்[2] பதினொன்றும் ஆட்சியாண்டுக் கல்வெட்டுகள் திருச்சிராப்பள்ளி[3] திருக்கோடிகா[4] என்ற ஊர்களிலும் ஆட்சியாண்டழிந்த நிலையில் காணப்படும் கல்வெட்டொன்று திருச்சோற்றுத்துறையிலும்[5] காணப்படுகின்றது.

மேற்கூறப்பட்ட சோணாட்டின் பகுதிகளில் இவனது கல்வெட்டுகள் நிறைய காணப்படுதலின் சோழ மண்டலம் முழுவதும் வரகுண மகாராசனின் ஆளுகைக்குட்பட்டதாகக் கொள்ளலாம். மேலும், இப் பகுதியில் பல்லவ வேந்தனின் கல்வெட்டுகள் காணப்படாமையினாலும் இக் கருத்து வலிவு பெறுகிறது. கி.பி. 774 முதல் கி.பி. 826 முடிய பல்லவ நாட்டினை யாண்டு வந்தவன் தந்திவர்மன் என்ற வேந்தனுவான். எனவே, இவ் வேந்தனது ஆட்சிக் காலத்தில்தான் வரகுணன் சோழ நாட்டின்மீது படையெடுத்து, அதனை வென்று தன்னடிப் படுத்தியிருத்தல் வேண்டும் என்று தெரிகிறது.

**பட்டப் பெயர்கள் :** இவனது ஆனைமலைக் கல்வெட்டும் திருச்சிராப்பள்ளிக் கல்வெட்டும் இவன் ஜடிலன், பராந்தகன், மாறஞ்சடையன், வரகுண மகாராசன், நெடுஞ்சடையன் என்னும் பட்டங்களைக் கொண்டிருந்தான் என்பதனைச் சுட்டிக் காட்டுகிறதென்று ஆராய்ச்சியறிஞர் திரு. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியார் குறிப்பிடுகின்றார். ஆனால், வரகுணன் என்னும் பட்டம் நெடுஞ்சடையனுக்கு யாண்டும் குறிக்கப் பெறவில்லை யென்று கல்வெட்டறிஞர் திரு. டி. வி. சதாசிவ பண்டாரத்தார் கூறுகிறார்.[6] இவ் வேந்தனே முதலாம் வரகுண பாண்டியனுவா னென்று நீலகண்ட சாஸ்திரியார் கருதுவதால் இவன் சைவ சமயச் சார்புடையவனாக விளங்கிய போதிலும் வைணவ மதத்தைப் போற்றிப் புரந்த வைணவனாகவும் விளங்கியதாகக் கருதுகின்றார். எனவே, இவ் வேந்தன் ஏறத்தாழ ஐம்பது ஆண்டுகள் ஆட்சி புரிந்ததாகவும், இவனுக்குப்பின் இவனுடைய புதல்வன் சீமாறன் சீவல்லபன் அரசு கட்டிலேறினனென்றும் நீலகண்ட

1 Ins. 13 of 1908.
2 S.I.I. Vol. VI No. 446.
3 Annual Report on Archaelogical Survey of India for 1903–4 P. 275.
4 Ins. 37 of 1930–31.
5 India Archaelogy. A Review 1960–61.
6 சதாசிவ பண்டாரத்தார், டி. வி. 'பாண்டியர் வரலாறு' பக். 61-62.

சாஸ்திரியார் கருதுகின்றார்.[1] திரு. டி. என். சுப்பிரமணியன் அவர்களும் இவன் ஐம்பது ஆண்டுகள் ஆண்டதாகக் கூறுகின்றார்.[2]

நெடுஞ்சடையன், வரகுணன் எனும் பட்டத்தினைப் பெற்றிருக்கவில்லை என்று கருதும் திரு. சதாசிவ பண்டாரத்தாரவர்கள். வரகுணன் என்ற பெயருடைய மன்னனும் இரண்டாம் இராசசிம்ம பாண்டியன் என்னும் மன்னனும் இரண்டாம் நெடுஞ்சடையனுக்குப் பின்பு பாண்டி நாட்டினை ஆட்சி புரிந்ததாகக் குறிப்பிடுகின்றார். வரகுண பாண்டியன் நெடுஞ்சடையனின் பேரன் என்றும் இவர் குறிப்பிடுகின்றார்.[3] எனவே, பண்டாரத்தார் நெடுஞ்சடையன் முப்பத்தோராண்டுகள் மட்டுமே ஆட்சி புரிந்ததாகக் குறிப்பிடுகின்றார். நெடுஞ்சடையன் வைணவ சமயத்தினனென்று சீவரமங்கலச் செப்பேடுகளில் குறிக்கப் பெற்றிருத்தலின், இவன் சைவ சமயச் சார்புடையவன் எனக் கொள்ளுதல் முறையன்று. எனவே, வைணவ சமயச் சார்புடைய வரகுணனும் இவனும் வேறு வேறு மன்னரே எனப் பண்டாரத்தார் தமது நூலில் கருத்துத் தெரிவித்தார்.[4] 1958ஆம் ஆண்டு தளவாய்புரம் என்னுமிடத்தில் செப்பேடு ஒன்று கண்டுபிடிக்கப்பட்டுள்ளது; இச் செப்பேடு பராந்தக நெடுஞ்சடையன் வரகுணனென அழைக்கப்பட்டானென்றும் தெள்ளத் தெளிய அறிவிக்கின்றது. இச் செய்தியினால் வரலாற்றாசிரியரிடையே நிலவிய கருத்து வேறுபாடும் மறைந்தது. அடுத்து, 'காடவனைக் கருவூரில் கால்கலங்கக் களிறுகைத்த கூடலர்கோன் ஸ்ரீபராந்தகன்' என்று இச்செப்பேடு குறிப்பிடுவது சாஸ்திரியார் கருத்துக்கு வலிவூட்டுகிறது. இதனால் வரகுணன் பராந்தகன் என்னும் பெயரினையும் பெற்றிருந்தான் என்பது உறுதி பெறுகிறது.

**அரசியல் சூழல் :** நெடுஞ்சடையனின் போர் நிகழ்ச்சிகளைப் பார்க்குங்கால் அவனது காலத்திய அண்டைய அரசுகள்பற்றி ஒரு சிறிது கவனிப்பது நலம் பயப்பதாகும். நெடுஞ்சடையன்

1 Nilakanta Sastri, K. A. 'The Pandyan Kingdom' P. 54.

2 இவன் கி. பி. 798 அல்லது 799-ல் அரியணையேறி கி. பி. 849 அல்லது கி. பி. 850 வரையில் ஆட்சிபுரிந்தானென்று திரு. டி. என். சுப்பிரமணியன் அவர்கள் கருதுகின்றார்.

தென்னிந்தியக் கோயிற் சாசனங்கள்—பக்கம் 3—பகுதி 1, பக். XC1X.

3 சதாசிவ பண்டாரத்தார், தி. வை. 'பாண்டியர் வரலாறு' பக். 62.

4 Ibid.

திரு. சாஸ்திரியார், பண்டாரத்தார் ஆகிய இருவரும் நூலியற்றிய காலத்தில் 'தளவாய்புரச் செப்பேடு' கண்டுபிடிக்கப் பெறாத காரணத்தால் அவர்களிடையே இக் கருத்து வேறுபாடு காணப்படுகிறது.

பாண்டியப் பெருமன்னனாக அரசு கட்டிலேறியபோழ்து, வடக்கே பல்லவர்கள் தொண்டை நாட்டிலும் சோணாட்டிலும் தன்னாட்சியினை நிறுவி வலிமை மிக்கவர்களாக ஆண்டு வந்தனர். பல்லவப் பெருமன்னனான நந்திவர்மப் பல்லவ மல்லன் பாண்டியரின் வளர்ச்சியினைத் தடுக்கத் திட்டமிட்டிருந்தான். மேலைக் கடற்கரைப் பகுதியில், கொல்லத்திற்கும் திருவிதாங் கோட்டுக்கும் இடைப்பட்ட நிலப்பகுதி சங்க காலத்தில் வேணாடு (தென் திருவாங்கூர்) எனப் பெயர் பெற்றது. இந் நாட்டினை வேள் ஆய் என்னும் குறுநில மன்னன் ஆண்டு வந்தான். வேணாடு மலைவளம் சிறக்கப் பெற்று, யானைகள் நிறைந்த பகுதியாக இருந்து வந்தது. வேணாட்டை ஆண்டு வந்த குறுநில மன்னனான ஆய்வேள் கோச்சடையன் இரண தீரனால் தண்டிக்கப் பெற்றதனால் பாண்டியர்களுடன் மாறு பட்டிருந்தான்.

அதிகமான் என்னும் குறுநில மன்னனும் தகடூரைத் (தற்காலத்திய தர்மபுரி) தலைநகராகக் கொண்டு சேர நாட்டின் அண்டையில் ஆட்சிபுரிந்து வந்தான். இவர்களது குலம் சங்க காலத்திலேயே புகழ்மிக்கதாக விளங்கிற்று. ஔவையாரெனும் பெண்பாற் புலவரை ஆதரித்துப் போற்றியவன் இவனது முன்னோனான அதிகமானேயாவான். படிப்படியாகத் தனது வலிமையைப் பெருக்கிக் கொண்டிருந்த அதியமான[1] தகடூர் நாட்டின் தெற்கிலுள்ள கொங்கு நாட்டையும் கைப்பற்றிக் கொண்டு தனது எல்லையினை விரிவுபடுத்திக் கொண்டிருந்தான்.

**பெண்ணாகடப் போர் :** பாண்டியரின் வலிமை நாளுக்கு நாள் பெருகிக் கொண்டிருந்ததனைக் கண்டு அச்சமுற்ற பல்லவர் பாண்டியருக்கெதிராகக் கூட்டணியொன்றை அமைத்தனர்[2]. பாண்டியனின் மேலாண்மையினை ஒடுக்க எண்ணி, பாண்டி நாட்டின்மீது படையெடுத்தனர். இதனைக் கேள்வியுற்ற பாண்டியன் நெடுஞ்சடையன் அஞ்சவில்லை; பல்லவப் படையினைக் காவிரியின் தென்கரையிலுள்ள பெண்ணாகடத்தில் முறியடித்தான்; வேணாட்டின் தலைவனான ஆய்வேளையும் வென்று தனனடிப்படுத்தினான். பெண்ணாகடம் என்பது தஞ்சாவூர்க்

[2] 'கி.பி. எட்டாம் நூற்றாண்டில் சோமன் என்னும் அதியேந்திரன் புகழ் மிக்கவனாக நாமக்கல் பகுதியினை ஆண்டு கொண்டிருந்தான். இவனுக்குப் பல பட்டப் பெயர்கள் இருந்திருக்கின்றன. இவன் பல்லவர்களில் சிறந்த இராஜ சிம்மனின் நெருங்கிய உறவினனாய் இருந்திருக்க வேண்டும். இவன் வலி மிகுந்தவனாய் இருந்தான் என்பதற்குப் பல சான்றுகள் உள்ளன' என்று திரு. இரா. நாகசாமி அவர்கள் கருதுகின்றார். 'கலை' 'ஆய்வுக் கொத்து' பக் 3.

[3] கொங்கர், சேரலர், அதியர் ஆகியோரைத் தன்னுடன் சேர்த்துக் கொண்டான்.

கூற்றத்தில் காவிரிக்குத் தென்கரையிலுள்ள ஊராகுமென்பதனைத் திருவிசலூர்க் கல்வெட்டாலறியலாம்.[1] எனவே, பெண்ணாகடப் போர் தஞ்சாவூருக்கு அண்மையில் நடைபெற்றதென்பது தெளிவு; பின்னர் இவன் நாட்டுக் குறும்பர் எனும் இனத்தவரையும் அடக்கினான்.[2] இப் போர் நிகழ்ச்சியினை வேள்விக்குடிச் செப்பேடுகள் மிக அழகாகக் குறிப்பிடுகின்றன.[3] இப் போர் நிகழ்ச்சிகள் யாவும் இவ் வேந்தனது மூன்றும் ஆட்சியாண்டிற்கு முன்னர் நிகழ்வுற்றிருத்தல் வேண்டுமெனக் கொள்ளலாம். பாண்டியரது வெற்றியினைக் கண்டு பல்லவர் தம் படைவலியைப் பெருக்கினர்.

**வடநாட்டு வெற்றி :** இவன் தனது பதினேழாமாட்சியாண்டு முடிவதற்குள் வடதிசையில் பல அரிய வெற்றிகளைப் பெற்றான். இவனிடம் தோல்வி கண்ட வேந்தர்கள் பெரும்பாலும் இவனது தந்தையிடம் தோல்வி கண்டவரேயாவர். இருப்பினும் இவனது வெற்றிகள் தந்தையின் வெற்றிகளைவிட நிரந்தர விளைவுகளைப் பெற்றிருந்தது.

பெண்ணாகடப் போரில் பல்லவனைப் புறங்கண்ட இப் பெருவேந்தன் வெள்ளூர், விண்ணம், செழியக்குடி ஆகிய இடங்களிலும் தம் பகைஞரை வென்று வெற்றித் திருமங்கையை மணந்தானென்பதனை இவனது சீவரமங்கலச் செப்பேடுகள் தெளிவாக உணர்த்துகின்றன.[4] இம் மூன்று போர்களிலும் நெடுஞ்சடையனுடன் போரிட்டுத் தோற்ற மன்னர்கள் யாவர்? என்பது புலனாகவில்லை.

**புகழூர் போர் :** காவிரியின் தென் கரையில் பல்லவரை வெற்றிகண்ட பாண்டியன், காவிரியின் வடகரையிலுள்ள ஆயிரவேலி, அயிரூரிலும், புகழியூரிலும் அதியமானை வெற்றி கண்டான்; அவனது களிறுகளையும் குதிரைகளையும் கவர்ந்து கொண்டான். அதியமானுக்குத் துணையாகக் குடபாலும் குண

[1] Ins 314 of 1907.

[2] Epigraphia Indica Vol XV11 No. 16.

[3] 'தண்ணாக மலர்ச்சோலைப் பெண்ணாகடத் தமர் வென்றும்
தீவா யயிலேந்தித் திளைத்தெதிரே வந்திறுத்த
ஆய்வேளையுங் குறும்பரையு மடலமரு ளழித்தோட்டிக்
காட்டுக் குறும்பு சென்றடைய நாட்டுக் குறும்பிற் செருவென்றும்'
வேள்விக்குடிச் செப்பேடு. 'பாண்டியர் செப்பேடுகள் பத்து' பக். 41 வரிகள் 12–16.

[4] 'பொன்மலர்ப் புறவில் வெள்ளூர் விண்ணஞ்
செழியக் குடியென் றிவட்டுட் டெவ்வ'
'சீவரமங்கலச் செப்பேடு' 'பாண்டியர் செப்பேடுகள் பத்து' பக். 41, வரி 12-16.

பாலும் பெரும்படையுடன் வந்து போரிட்ட சேரனையும் பல்லவனையும் முறியடித்துத் துரத்தினானென்று சிவரமங்கலச் செப்பேடுகள் குறிப்பிடுகின்றன.[1] இவண் குறிக்கப்பெறுகின்ற ஆயிரவேலி அயிரூர் கருவூரிலிருந்து 12 கல் தொலைவில் காவிரியின் வடகரையில் உள்ளது.[2] புகழியூரென்பது இக் காலை புகளூர் என அழைக்கப் பெறுகிறது. இது திருச்சி மாவட்டத்திலுள்ள கருவூருக்கு வடமேற்கே ஏறத்தாழ பன்னிரண்டு கல்தொலைவில் உள்ளது. இதனருகிலுள்ள ஆர்நாட்டார் மலையில்தான் இரும்பொறை சேரர் குடிவழியைக் கூறும் வரலாற்றுப் புகழ்மிக்க கல்வெட்டு காணப்படுகிறது.

**ஆயிரவேலி அயிரூர்**

அயிரூரென்னும் ஊர் கொங்கர் பட்டயங்களில் 'அயிலூர்' எனக் குறிக்கப்பெற்றுள்ளது. கொங்கு மண்டல சதக ஊர்த் தொகையில் இவ்வூர் 'குருமந்தூர் கோசனம் செவியூர் அயிலூர்' எனக் குறிக்கப் பெற்றுள்ளது. இதனைக் 'குறும்பு நாட்டிலே யுள்ள அயிலூர்' என்று வல்லாள தேவனது காலத்தில் நம்பியூரில் வரையப்பெற்ற கல்வெட்டுச் சுட்டுகின்றது. ஆந்தை குலத்தவரின் காணிப்பாடலொன்று இதனை 'குளப்புல்லூரும்..... மருவுபுகழ் அயிலூருடன்' என்று குறிப்பிடுகின்றது. இன்றும் இவ்வூர் 'அயிலூர்' என்றே அழைக்கப் பெறுகின்றது. கொங்கரது பாடல்களிலும், இக் காலத்திலும் இது அயிலூர் என்றழைக்கப்படுவதனால், பாண்டியரது செப்பேடுகளில் 'அயிரூர்' என்று குறிக்கப்பெற்ற இவ்வூர் நாளடைவில் அயிலூர் எனத்திரிந்தது எனலாம்.

**கருவூர்:** புகளூர் போருக்குப் பிறகு இதன் தொடர்ச்சியாகக் கருவூரிலும் போர் நிகழ்ந்தது. இப் போரில் பல்லவனும் கேரளனும் பாண்டியன் நெடுஞ்சடையனை எதிர்த்துப் போர் புரிந்து மீண்டும் தோல்வியைத் தழுவினர். இதனைத் தளவாய்புரச் செப்பேடு,

'காடவனைக் கருவூரில் கால் கலங்கக்
களிறுதைத்த கூடலர் கோன் ஸ்ரீபராந்தகன்'.

1 '.....................காவிரி வடகரை
ஆயிர வேலி அயிரூர் தன்னிலும்
புகழியூரிலுந் திகழ்வேலதியனை
ஓடுபுறங் கண்டவனெலியுடை மணித்தே'
சிவரமங்கலச் செப்பேடு—'பாண்டியர் செப்பேடுகள் பத்து' பக். 65, வரி 10-13.

2 ஆயிரவேலி அயிரூர் புஞ்பவனகாசி என்றும் அழைக்கப் பெறுகிறது.

என்று குறிப்பிடுவதாலறியலாம்.[1] இவண் காடவன் என்பது தந்திவர்மப் பல்லவனைக் குறிப்பதாகும். கருவூர்ப் பகுதிகளை ஆட்சி புரிந்த காடை என்னும் இனத்தாரை இவன் வென்றதாகவும் சிலர் கருதுகின்றனர்.[2] காடை கூட்டத்தினர் கொங்கு வேளாளர் பிரிவைச் சார்ந்தவர்கள். இதனை உறுதிப்படுத்த சான்றுகளில்லை. மேலும், பாண்டியன் நெடுஞ்சடையன் தன்னிடம் தோல்வியுற்ற கொங்கர் கோமானைக் களிற்றொடும் பிடித்துக் கொணர்ந்து மதுரையம்பதியின்கண் சிறை வைத்ததோடு அவனது கொங்கு நாட்டையும் கைப்பற்றித் தன்னாட்டுடன் இணைத்துக் கொண்டான்.[3] அரண் மிகுந்த நகரான விழிஞத்தைக் கைப்பற்றி அதனை அழித்து வேணாட்டரசனை வென்று அவனது உடைமைகளையும் நாட்டையும் கவர்ந்து கொண்டான்.[4] கருவூர் வெற்றியும், புகழியூர் வெற்றியும் ஒரே போரைக் குறிப்பதாகவே கொள்ளலாம் என்று திரு. இரா. நாகசாமி அவர்கள் கருதுகின்றார்.[5]

### அதியனும் கொங்கு வேந்தனும் ஒருவரே

இச் சாசனத்தில் குறிக்கப்பெற்றுள்ள கொங்கு மன்னனும் அதியமானும் வெவ்வேறு அரசர் ஆவர் என்று ஆராய்ச்சியறிஞர் கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியார் கூறுகின்றார். ஆனால், கல்வெட்டறிஞர் டி. வி. சதாசிவ பண்டாரத்தார்' தன் நாட்டையிழந்து மதுரை சிறையிலிருந்த கொங்கு மன்னனும் அவ் வதியமானே

1 தளவாய்புரச் சாசனம் 'பாண்டியர் செப்பேடுகள் பத்து' பக். 125, வரி 25-26.

சிலர் கருவூர்போர் வெற்றி தோல்வியின்றி முடிவுற்றது என்பர். இதற்கு ஆதாரமாக கீழ்க்காணும் திருமங்கையாழ்வாரின் பாடலைக் காட்டுவர்.

"உலகுடை மன்னவன் தென்னவனைக்
கன்னிமாமதில் சூழ் கருவூர் வெருவப்
பலபடை சாய வென்றான்........."

—பரமேச்சுர விண்ணகரப் பதியம்.

திருமங்கையாழ்வார் வைணவ சமயத்தினர், பல்லவ வேந்தனும் வைணவன். எனவே, இக் கருத்து ஆய்வுக்குரிய தொன்றே, இதனை நாம் உண்மையென ஏற்றுக்கொள்ள இயலவில்லை, ஒருவேளை இது இரண்டாவது கரூர் போராகவும் இருக்கலாம்.

2 சக்திதேவி 'கொங்கு வேளாளர் வரலாறு'

3 'குடகொங்கத் தடன்மன்னனைக் கொல்களிற்றொடுங் கொண்டு போந்து கொடியணிமணி நெடுமாடக் கூடன்மதிலகத்து வைத்துக் கங்கபூமி யதனளவுங் கடிமுரசுதன் பெயரறையக் கொங்கபூமி யடிப்படுத்துக் கொடுஞ்சிலைபூட் டிழிவித்துப்' சீவரமங்களச் செப்பேடு Ibid. பக்கம் 65 வரி 20–23.

4 .........விழிஞத்தில் கண்டெடுக்கப்பட்ட தூண் ஒன்று பத்மநாபபுரம் அரண்மனைப் பொருட்காட்சியில் வைக்கப்பட்டுள்ளது. இத் தூணில் ஒருபுறம் செய்யுளாலான கல்வெட்டொன்றும் மறுபுறத்தில் உருவிய உடைவாளுடன் கூடிய போர் மறவன் ஒருவனின் உருவமும் பொறிக்கப்பட்டுள்ளன. எட்டாம் நூற்றாண்டினைச் சார்ந்ததாகக் கருதப்படும் இந்த வெட்டெழுத்துக் கல்வெட்டு ஒரு வீரன் தனது தலைவனுக்காகத் தான் செஞ்சோற்றுக் கடன் கழித்ததிற் பொருட்டு உயிர்நீத்த செய்தியினைக் குறிக்கின்றது. அத் தலைவனைப்பற்றிய விவரம் தெரியவில்லை. 472 of 1958–59.

என்பதில் ஐயமில்லை' என்று அறுதியிட்டு உறுதியாகக் கூறுகிறார்.[6] அதியமான் கொங்கு நாட்டினை வென்று தன்னடிப் படுத்தினானென்பதனை நாம் முன்பே கண்டோம். மேலும், நாட்டின் பகுதிகளான புகழியூர், கருவூர் என்னுமிடங்களில் அதியமான் பாண்டியனிடம் தோல்வி பெற்ற நிகழ்ச்சி சாசனங்களில் குறிக்கப் பெற்றிருத்தலின் அதியமான் கொங்கு நாட்டினையும் தன்னாட்சிக்குட்படுத்தினான் என்பது உறுதி பெறுகிறது. எனவே, கல்வெட்டறிஞர் டி. வி. சதாசிவ பண்டாரத்தாரவர்களது கருத்து ஈண்டு பொருத்தமுடையதாகவிருக்கிறதென்பதனை உணரலாம். நாமக்கல் குகைக் கோயிலைத் தோற்றுவித்த சோழனாகிய அதியேந்திரனே பாண்டியனுடன் போரிட்ட அதியன என்று அறிஞர்கள் கருதுகின்றனர்.[7]

**வேம்பில் மதிலழித்தல்:** இவ் வேந்தனது பதினோராம் ஆட்சியாண்டில் வெளியிடப்பட்ட கல்வெட்டொன்று திருச்சிராப்பள்ளியிலும் காணப்படுகின்றது. இக் கல்வெட்டின் துணை இவன் வேம்பில் மதிலையழித்து நியமத்தில் தங்கியிருந்தானென்றும், அதுபோழ்து சிராப்பள்ளி இறைவற்குத் திருவிளக்கு எரிப்பதற்கு நிவந்தமாக, 125 கழஞ்சு பொன் வழங்கினானென்றும் கூறப்பட்டுள்ளது.[8] இக் கல்வெட்டினைக் கொண்டு இவன் சோணாட்டின்மீது படையெடுத்து அதனைக் கைப்பற்றியதாக

---

[6] 'இவன் (பராந்தக நெடுஞ்சடையன்) மீண்டும் இப்பகுதிமீது படையெடுத்து வெற்றி கண்டிருக்கிறான். இவன் பல்லவனைக் காவிரியின் தென்கரையில் பெண்ணாகடத்தில் வென்றான் (வேள்விக்குடிச் செப்பேடு). பின்னர் காவிரியின் வடகரையில் ஆயிரவேலி அயிலூரிலும், புகழியூரிலும் அதியனை வென்றான் என்று ஸ்ரீவரமங்கலம் செப்பேடு கூறுகிறது. ஆதலின் போர் புகழியூரில் நடந்தது தெளிவு.. ......தளவாய்புரச் செப்பேடுகள் பராந்தக நெடுஞ்சடையன் காடவனைக் கருவூரில் வென்றான் என்று கூறுகின்றன. புகளூர். கருவூர் இரண்டும் அருகருகில் உள்ளதை அனைவரும் அறிவர். இவ்விரண்டு வெற்றிகளும் ஒரேபோலக் குறிக்கின்றன எனில் தவறாகா' நாகசாமி இரா, 'கலை'—ஆய்வுக்கொத்து பக்கம் 3. போர் நடைபெற்ற இடம் சிற்றூராயிருப்பின், அதற்கருகில் உள்ள பேரூர் ஒன்றினைக் குறித்து, ஆங்கு போர் நடைபெற்றதாகக் கூறுதல் வழக்கம். ஏனெனில், அப்பேரூர் பலருக்கும் தெரியும். எடுத்துக்காட்டாக, 1565ஆம் ஆண்டு, பாமினி மன்னர்களுக்கும், விசயநகர மன்னருக்கும ரக்ஸாஸ் டக்டி என்னும் இடத்தில் தான் போர் நடைபெற்றது. ஆனால், வரலாற்றில் இப்போர் 'தலைக்கோட்டைப் போர் என்றே அழைக்கப்பெறுகிறது. தலைககோட்டை என்பது ரக்ஸாஸ் டக்டிக்கு அருகிலுள்ள ஒரு பேரூராகும். இதுபோன்ற வேறு சில எடுத்துக் காட்டுகளையும் வரலாற்றில் காணலாம். இதனைப் போன்றே புகளூரில் நடைபெற்ற போரினைத் தளவாய்புரச் செப்பேடுகள் கருவூர்பபோர் என்று குறிப்பிடுகின்றன போலும், அல்லது புகளூரில் போர் தொடங்கி கருவூரில் இறுதி வெற்றியினைப் பாண்டியர் பெற்றிருக்கலாம்.

[7] சதாசிவ பண்டாரத்தார். தி.வை. 'பாண்டியர் வரலாறு' பக். 49–50. Venkayyah. I.A. Vol. XXII. page 66. இவ்வதியன் தகடூர் நாட்டினையாண்டு வந்த அதியன் எனக் கொள்வதனைவிட, வடகரைக் கவுண்டர் அதியன் எனக் கொள்வது பொருத்தமாகத் தோன்றுகிறது. கொங்கர் இனத்தைச் சேர்ந்த அதியனும் தகடூர் அதியனும் ஒருவருக்கொருவர் வேறுபட்டவராவார். கொங்கருக்கும் பாண்டியருக்கும் முன்பே இடைவிடாத பகைமை இருந்து வந்தது.

நாம் முன்னர் கூறிய செய்தி உறுதி பெறுகிறது. வேம்பில் என்பது இக்காலை வேப்பத்தூர் என்று அழைக்கப் பெறுகிறது. நியமம் என்னும் ஊர் முத்தரையரின் தலைநகரங்களுள் ஒன்றாகும் இது தஞ்சை மாவட்டம் திருக்காட்டுப்பள்ளிக்கருகில் கொள்ளிடக் கரையில் அமைந்துள்ளது. முத்தரைய மன்னர்களுள் புகழ் பெற்றவனாகிய இரண்டாம் பெரும்பிடுகு முத்தரையன் இங்கு பிடாரிக்குக் கோயில் அமைத்தான். இவண் குறிப்பிடப்பட்டு உள்ள வேம்பிலும் நியமமும் சோணாட்டின்கண்ணுள்ள ஊர்களாகும்.

சோணாட்டின் பகுதிகளான வேம்பில், நியமம் ஆகிய இடங்களில் வரகுணனது ஆதிக்கம் செலுத்தப்பட்ட காரணத்தால், பாண்டியன் சோழ நாட்டினுள் ஊடுருவல் செய்தானென்பதும் தனக்கெதிராக உருவாக்கப்பட்டிருந்த கூட்டணியைத் தகர்த்தெறிந்து முன்னேறினான் என்பதும் புலனாகும். இவனுக்கெதிரான கூட்டணியில் பல்லவர், சேரலர், கொங்கர், தகடூர் அதியமான், சோழர் ஆகியோர் இடம் பெற்றிருந்தனர். இதனால் பாண்டியரின் வளர்ச்சியைத் தடுத்து நிறுத்தப் பல்லவ வேந்தனும் தந்திவர்மன் மேற்கொண்ட முயற்சிகள் பலனளிக்கவில்லை என்பது தெளிவு. பாண்டியரது பேரரசோ நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து கொண்டிருந்தது; பல்லவரை விழுங்கவும் கனவு கண்டு கொண்டிருந்தது.

### பல்லவரை வெற்றி கொள்ளுதல்

பாண்டிய நாட்டின் எல்லைகளை விரிவுபடுத்த வேண்டுமென்ற தணியா வேட்கையுடைய இவன் தன் படை வலியால் சோணாட்டைக் கைப்பற்றியதோடு, வலிமை குன்றி வந்த பல்லவரை வென்று, தொண்டை மண்டலத்தைக் கைப்பற்றவும் திட்டம் தீட்டினான். அக்காலைத் தந்திவர்மன் என்னும் பல்லவப் பேரரசன் தொண்டை மண்டலத்தினை ஆண்டு வந்தான்.

---

7 'பராந்தக நெடுஞ்சடையனுடன் போரிட்ட அதியன் யார்? இதற்குத் தெளிவாக விடை கூறுவது கடினம். இதுகாறும் நமக்குக் கிடைத்துள்ள கல்வெட்டுகளின்படி மிகவும் வலிவுள்ளவனாக கி. பி. எட்டாம் நூற்றாண்டில் ஆண்டவன் நாமக்கல் குகைக் கோயிலைத் தோற்றுவித்த சோமனாகிய அதியேந்திரனே. ஆதலின் இவனே பராந்தக நெடுஞ்சடையனோடு போரிட்டான் எனலாம். அவன் பாண்டியனோடு போரிடும்போது மிகவும் தளர்ந்த வயதினனாய் இருந்திருக்க வேண்டும். நாகசாமி இரா. 'கலை' ஆய்வுக்கொத்து பக். V

8 "கோமாறஞ்சடையற்கு யாண்டு நான்கு நாள் ஈராயிரத்தைந்நூற்றொன்று வேம்பில் மதிலழித்துப் போந்து நியமத்திருந்தருளி சோமசூர்யான்வயத் வயதிலகாலங்காரர் ஆயின பாண்டியாதிராஜர் வரகுணதேவர் திருமலை படாரர்க்குக் கொடுத்தபொன் பாடிக்கல்லால் 125 நூற்றிருபத் தைங் கழஞ்சும் ..............." என்பதுவே அக் கல்வெட்டு.

வரகுணன் தனது பெரும் படையின் துணை கொண்டு தந்தி வர்மனை வென்று, தொண்டை மண்டலத்தின் தென்பகுதியைக் கைப்பற்றிக் கொண்டான். திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள அம்பாசமுத்திரத்தில் இவ் வேந்தனது பதினாறும் ஆட்சி யாண்டுக் கல்வெட்டொன்று கிடைத்துள்ளது. இக் கல் வெட்டில் வரகுணன் தொண்டை மண்டலத்தில் பெண்ணை யாற்றங்கரையிலுள்ள அரசூரில் வீற்றிருந்தபோது அம்பா சமுத்திரம் சிவன் கோயிலுக்கு 290 பொற் காசுகள் நாள் வழி பாட்டிற்கு நிவந்தமாக வழங்கிய செய்தி குறிக்கப்பட்டுள்ளது.[1] அம்பாசமுத்திரம் கல்வெட்டினால் தொண்டை மண்டலத்தின் தென்பகுதிவரை (பெண்ணையாற்றின் கரை) பாண்டிய நாட்டின் வட எல்லை வரகுணன் காலத்தில் விரிவுபடுத்தபட்டதென்பது புலனாகின்றது.

**பல்லவர் வீழ்ச்சி:** இவனது ஆட்சிக் காலத்தில் பாண்டி யரது கயற்கொடி பட்டொளி வீசிப் பறந்து கொண்டிருந்தது. சோணாட்டிலும் தொண்டை நாட்டின் தென்பகுதியிலும் இது காறும் ஓங்கிப் பறந்து கொண்டிருந்த பல்லவரின் சிங்கக் கொடி சிறப்பிழந்தது. ஆங்கு கயற்கொடியேற்றப்பட்டது. சோணாட் டினையும், தொண்டை மண்டலத்தின் தென்பகுதியினையும் இழந்ததால் வரகுணனது காலத்தில் பல்லவப் பேரரசு சுருங் கிற்று; பல்லவ வேந்தனின் உள்ளமும் வருந்திற்று.

**முத்தரையர்:** இவ் வேந்தனது பதினோராம் ஆட்சியாண்டுக் கல்வெட்டில் தஞ்சையைத் தலைநகராகக் கொண்டு ஆண்டு வந்த விடேல்விடுகு முத்தரையன் (கி. பி. 791—826) என்னும் குறுநில மன்னனைப்பற்றிய குறிப்பொன்று காணப்படுகிறது. மாற்பிடுகு முத்தரையனின் புதல்வனான இவன் குவாவன் சாத்தனெனவும் அழைக்கப் பெறுகிறான். தொடக்க காலத்தில் பல்லவருக்குக் கீழ் சிற்றரசர்களாக ஆண்டு வந்த முத்தரையரென்னும் மறக் குடியினர் சில காலம் சுயேச்சை பெற்ற வேந்தர்களாகவும் சிறந்து விளங்கினர். விசயாலய சோழன் தஞ்சையைக் கைப் பற்றுமுன் இவர்கள் தஞ்சைத் தரணியின்கண் தனித்தாண்டு மங்காப் புகழுடன் விளங்கினரென்பது கல்வெட்டுச் சான்று களால் உறுதி பெறுகிறது. இத் துணைச் சிறப்பு பெற்ற இம் முத்தரையர் முதலாம் வரகுண பாண்டியனது ஆட்சிக் காலத்தில் பாண்டியர்க்கடங்கிய சிற்றரசர்களாய் ஆட்சி புரிந் தனர் என்பது ஈண்டு குறிப்பிடத்தக்கதாகும். இம் முத்தரைய மன்னன் காஞ்சியைக் கைப்பற்றி ஆங்கு தனியாட்சி நிறுவினா

[1] Epigraphia Indica Vol. IX, No. 10 (Ins. 105 of 1905)

னென்று கீரனூர் கல்வெட்டுச் சான்று பகர்கிறது. இச் செய்தி இவனது பதின்மூன்றும் ஆட்சியாண்டுக் கல்வெட்டாலும் உறுதி பெறுகிறது. விடேல்விடுகு முத்தரையனின் மகளான சாத்தன் கனியார் என்பாள் வரகுணனது பதினொன்றுமாட்சி யாண்டில் ஆயிரத்தளி மகாதேவருக்கு நந்தா விளக்கொன்று தானம் செய்ததாகக் கல்வெட்டுணர்த்துகின்றது.[1]

பல்லவ தந்திவர்மனின் பதினாறும் ஆட்சியாண்டினதாகிய மலையடிப்பட்டிக் கல்வெட்டிலும் விடேல்விடுகு முத்தரையன் குறிக்கப் பெற்றுள்ளான். எனவே, இவன் பல்லவ தந்திவர் மனின் பதினாறும் ஆட்சியாண்டிற்குப் (கி. பி. 791) பின்னரே பாண்டியர்களின் சிற்றரசனாயிருந்து போர்ப்பணி புரிந்தானென் பதனை நாம் தெளிவாக அறிந்து கொள்ளலாம். மாறஞ்சடை யனின் பத்தமாட்சியண்டினதாகிய செந்தலைக் கல்வெட்டிலும் இவன் குறிக்கப் பெற்றுள்ளான். எனவே, விடேல்விடுகு முத்த ரையர் பாண்டியர்க்கடங்கிய சிற்றரசராக இருந்து பாண்டியர் தம் புகழினைப் பரப்பினான் எனலாம்.

**முத்தரையர் விடுதலை :** பாண்டியனுக்குக்கீழ் ஆண்டு வந்த முத்தரையர் சில ஆண்டுகள் கழித்து காவிரிக்கரைப் பகுதிகளைப் பாண்டியரிடமிருந்து மீட்டுக் கொண்டு, தனியாட்சி செலுத்தின ரென்பது இளங்கோ முத்தரையனென்னும்[2] வேந்தனின் ஆட்சி யாண்டு பொறிக்கப்பட்ட தஞ்சை மாவட்டக் கல்வெட்டு களாலும், குளத்தூர் வட்டக் (முன்னாள் புதுக்கோட்டை அரசு) கல்வெட்டுகளாலும் அறியலாம். இவன் ஏறத்தாழ பதினெட் டாண்டுகள் தனியாட்சி செலுத்தினானென்று தெரிகிறது.[3] எனவே, இவன் சீமாறன் சீவல்லபன் அரியணையேறுவதற்குச் சில ஆண்டுகட்கு முன்புவரை தனியாட்சி செலுத்தி வந்ததாக அறியலாம். இதுகாறுங் கூறியவற்றால் வரகுண பாண்டியனது ஆட்சிக் காலத்தின் இறுதிப் பகுதியில் பாண்டியர் காவிரிப் பகுதியினை இழந்தனர் என்பது புலனாகின்றது. இவண் இளங்கோ முத்தரையரென குறிக்கப்படுபவன் விடேல்விடுகு முத்தரையனே யாவனென்பது அறிஞரது கருத்தாகும்.[4]

**வரகுணன் பெயரில் ஊர் :** திருச்சிராப்பள்ளி நகரத்தின் ஒரு பகுதியாக விளங்கும் வரகனேரி என்னும் ஊர் வரகுணனின்

[1] Indian Archaeology 1960-61. A. Review Page 45.
[2] 12 of 1899; 61 of 1895; 14 and 39 of 1930-31; C.L.I.P.S. No. 237.
[3] 12 of 1899.
[4] M.P.S. Vol. II, Part II, Page 1255.

பெயரைத் தாங்கி நிலவுவதாகக் கருதலாம். வரகுணன் ஏரி என்ற பெயரே வரகனேரியென்று மருவிற்றென்பர்.[1]

**வேணாடு :** சேரனுக்குரிய அரணுடைப் பெருநகராய் மேலைக் கடற்கரையில் இருந்த பெருநகரம் விழிஞம் ஆகும். கொங்கு வேந்தன் சிறையிலடைக்கப்பட்டபின் பாண்டியன் நெடுஞ்சடையன். சேரநாட்டிலுள்ள வேணாட்டான் கோட்டத்தினையடக்க விழிஞத்தினை முற்றுகையிட்டான். விழிஞம் தன் பண்டைச் சிறப்பினை இழந்தது. இதனைச் சீவரமங்கலச் செப்பேடுகள்,

'ஆழி முந்நீர் அகழாக அகல் வானத்து அகடு உரிஞ்சும்
பாழி நீண்மதில் பரந்தோங்கிப் பகலவனும் அகல ஓடும்
அணி இலங்கையின் அரணிதாகி
மணி யிலங்கு நெடுமாட மதில் விழிஞம்'[2]

என்று அழகுபட சித்திரிக்கின்றது. பாண்டியனிடம் தன் நாட்டை இழந்த வேணாட்டரசன் வேள்விக்குடிச் செப்பேடுகளில் குறிக்கப் பெற்றுள்ள ஆய்வேளாக இருத்தல் கூடும் எனக் கருதலாம். இவ் வேணாட்டுப் படையெழுச்சி இவ் வேந்தனின் பதினேழாம் ஆட்சியாண்டிற்கு முன்னர் நிகழ்ந்திருக்க வேண்டுமென்று திரு. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியார் கருதுகின்றார்.[3]

**இவனது சாதனை :** பராந்தக நெடுஞ்சடையனது ஆட்சிக் காலத்தில் பாண்டியப் பேரரசின் பெருமையும் புகழும் எட்டுத் திக்குகளிலும் பரவியது. இவனது வெற்றிகள் இவன் தந்தையின் வெற்றிகளைக் காட்டிலும் உறுதியானது; நீடித்த பலன் தந்தது; பல்லவனையும், வேணாட்டு மன்னனையும், சேரனையும், அதியனையும் வென்றடிப்படுத்தி கொங்கு நாட்டினையும் கைப்பற்றித் தனது பேரரசினை விரிவுபடுத்திய இப் பாண்டிய மன்னன் எதிரிகள் புரட்சி செய்யாவண்ணம் தக்க ஏற்பாடுகளைச் செய்ய மறந்தானல்லன். தென் திசையில் தான் வென்ற நாடுகளைப் பாதுகாக்கும் பொருட்டும், குறுநில வேந்தர்களைக் கண்காணிக்கவும், பாண்டியப் பேரரசினையெதிர்த்து அவர்கள் கலகஞ் செய்யாதிருக்கும் பொருட்டும், கரவந்தபுரம் என்னும் நகரில் கோட்டையொன்றினைக் கட்டினான். இக் கோட்டையைச் சுற்றிலும் அரண்மிக்க ஆழ்ந்த அகழியையும் உயர்ந்த மதிலையும் அமைத்ததோடு ஆங்கு வலிமைமிக்க நிலைப் படையொன்றினையும்

1 சேதுப்பிள்ளை, இரா. பி. 'தமிழகம் ஊரும் பேரும்' பக்கம் 57–58.
2 சீவரமங்கலச் செப்பேடு—'பாண்டியர் செப்பேடுகள் பத்து'.
3 Nilakanta Sastry, K. A. 'The Pandyan Kingdom' page 57–58.

நிறுவியிருந்தான். இவ்வூரினைக் 'களக்குடி நாட்டுக் களக்குடியான கரவந்தபுரம்' என்று கல்வெட்டுகள்[1] சிறப்பிக்கின்றன. இவ்வூர் தற்போது திருநெல்வேலி மாவட்டத்தில் உக்கிரன் கோட்டை என்னும் பெயரால் அழிந்த நிலையில் காணப்படுகிறது.

**மீண்டும் வேணாட்டில் போர்**

இவ் வேந்தனது வேணாட்டு வெற்றி நிலையான வெற்றியாக இருக்கவில்லை. நாட்டுப்பற்று மிக்க வேணாட்டினர் பாண்டியர்க்கு அடங்கியிருக்க விரும்பவில்லை போலும். இப் படையெழுச்சி நிகழ்ந்து பத்தாண்டு கழித்து மீண்டும் இவ் வேந்தன் விழிஞத்தருகில் போரில் ஈடுபட்டானென்று திருவனந்தபுரம் அருங்காட்சியகக் கல்வெட்டு குறிப்பிடுவதனாலிதனையறியலாம்.

**மலை நாடு**

இவ் வேந்தன் தனது இருபத்து மூன்றுமாட்சியாண்டில் மலைநாட்டையாண்டு வந்த சடையன் கருநந்தனுக்கெதிராகப் போர் தொடுத்து அரிவியூர்க் கோட்டையை அழித்தான். தற்காலத் திருவாங்கூரின் எல்லையிலுள்ள இக் கோட்டை சடையன் கருநந்தனுக்குச் சொந்தமானதாக இருக்கலாம். இச் செய்தி இவனது கழுகுமலைக் கல்வெட்டில்[2] குறிக்கப்பட்டு உள்ளது. இக் கருநந்தன் பண்டைக் காலத்தில் பொதிய மலையினை ஆண்டு வந்த ஆய்வேந்தர் குடும்பத்தினைச் சேர்ந்தவனாயிருத்தல் கூடும். மேலும், இவன் பாண்டியருடன் போரிட்ட வேணாட்டரசர்களின் நண்பனாயிருத்தல் வேண்டுமென்றும் கருத இடமுண்டு.[3]

**சமயப்பொறை :** 'பரம வைஷ்ணவன் தானாகி நின்றிலங்கு மணி நீண்முடி நிலமன்னவன்' என்று சீவரமங்கலச் செப்பேடுகளால் சிறப்பித்துப் பேசப்படுவதால் இவ் வேந்தன் வைணவ சமய வளர்ச்சியில் எத்துணையார்வம் காட்டினானென்பது புலனாகின்றது. பொதுவாகப் பாண்டி வேந்தரனைவரும் சைவ சமயத்தினைப் பெரிதும் ஆதரித்து சிவநெறியே செந்நெறியெனக் கொண்டிருந்தனர். சிவநேயச் செல்வர்களின் வழிவந்த நெடுஞ்சடையனோ சைவ சமயத்தைப் பேணிக் காத்ததுடன் நில்லாது வைணவ சமயத்தினையும் ஆதரித்துப் புகழ் பெற்றுள்ளான்.

1 S.I.I. Vol. VII 431.
2 43 of 1908.
3 Nilakanta Sastri, K. A. 'The Pandyan Kingdom' page 58.

இதன் காரணம் யாதென்று ஆய்ந்து பார்க்கையில் இவனது ஆட்சிக் காலத்தின்போது பாண்டி நாட்டின்கண் வாழ்ந்துவந்த வைணவ சமயக் குரவரான பெரியாழ்வாருடன் இவன் நெருங்கிய தொடர்பு கொண்டிருத்தல் வேண்டுமென்றும், அப் பெரியாரிடத்து இவன் கொண்டிருந்த ஈடுபாட்டின் விளைவால் வைணவ மதத்தின்பால் ஈர்க்கப் பெற்றிருத்தல் வேண்டுமென்றும் கருதலாம். சமயப்பொறை மிக்குடைய இவன் பொதுமக்களின் பேரன்பிற்கும் பெருமதிப்பிற்கும் உரியவனாக இருந்து பெரும் புகழ் பெற்றான்.

### இவன் எடுப்பித்த திருமால் கோயில்

கொங்கு நாட்டைக் கைப்பற்றிய நெடுஞ்சடையன் ஆங்குள்ள காஞ்சிவாய்ப்[1] பேரூர்க்குச் சென்று, ஆங்கு திருமாலுக்குப் பெரியதோர் கோயில் எடுப்பித்தான் என்ற செய்தி செப்பேட்டில் குறிக்கப் பெற்றிருத்தலினாலும், இவனது வேள்விக்குடிச் செப்பேட்டில் வைணவ தர்ம சுலோகங்கள் இடம் பெற்றிருத்தலினாலும் இவன் வைணவச் சமயத்தின்பால் பெரிதும் ஈடுபாடு கொண்டிருந்தானென்பது உள்ளங்கை நெல்லிக்கனியாகும்.

இவனது ஆட்சிக் காலத்தில் தந்திவர்மப் பல்லவன், பல்லவ நாட்டினையாண்டு வந்தான், சைவசமயக் குரவரான மாணிக்க வாசகப் பெருமான் இக் காலத்தில் வாழ்ந்ததாக திரு. டி. வி. சதாசிவ பண்டாரத்தார், ஔவை சு. துரைசாமி போன்ற ஆராய்ச்சியறிஞர்கள்[2] கருதுகின்றனர். திரு. கே.ஜி. கிருஷ்ணன், திரு. மா. இராசமாணிக்கர், திரு. கே. வி. இராமன் முதலான ஆய்வாளர்கள் இக் கருத்தினை மறுப்பதுடன், மணிவாசகப் பெருந்தகை இரண்டாம் வரகுணனின் ஆட்சிக் காலத்தில் வாழ்ந்ததாகக் கூறுகின்றனர். இதனை நாம் இரண்டாம் வரகுணன் என்னும் தலைப்பில் பின்னர் ஆய்வோம்.

பரம வைணவனாக வாழ்ந்து வந்த இவ் வேந்தன் சிவ பிரானையும் சிந்தையில் வைத்துப் போற்றினான் என்பதில் எட்டுணையும் ஐயமில்லை. இவனது 'சிவபத்தியும் எல்லையற்றது என்பதனை நாம் இவண் மறத்தலாகாது.

[1] காஞ்சி என்பது ஆறு ஒன்றின் பெயர். இது இக் காலை நொய்யலாறு என அழைக்கப் பெறுகிறது. சிற்பக் கலையின் உறைவிடமாகத் திகழும் பேரூர் (கோயம்புத்தூருக்கு அருகில்) அவ் வாற்றின் கரையில் அமைந்துள்ளது.

[2] சதாசிவ பண்டாரத்தார், டி. வி. 'பாண்டியர் வரலாறு' பக்கம் 58. துரைசாமி பிள்ளை, சு. ஔவை. 'பாண்டியன் வரகுணன்'. 'மதுரை மீனாட்சி சுந்தரேசுவரர் மகா கும்பாபிடேக மலர்' 1963, பக்கம் 55.

**சுந்தரர்**

'சேரமான் தோழரும் அச்சேரபிரானும் பணிப்பூண்
ஆரமாப்பரை மதுரை ஆலவாயினில், வணங்க
வாரமா வந்தணைய வழுதியார் மனக்காதல்
கூரமா நகர்கோடித் தெதிர்கொண்டு கொடுபுக்கார்
தென்னவர்கோன் மகளாரைத் திருவேட்டு முன்னரே
தொன்மதுரை நகரின்கண் இனிதிருந்த சோழனார்
அன்னவர்கள் உடன் கூடஅணைய அவருங்கூடி
மன்னுதிரு ஆலவாய் மணிக்கோயில் வந்தணைந்தார்'

கழறிற்றறிவார் நாயனார் புராணம் 91, 92.

மேற்கூறிய பாடலிலிருந்து சேரமான் பெருமாள் நாயனார், சுந்தரருடன் தலயாத்திரை மேற்கொண்டபோது, மதுரை சென்றனரென்றும், பாண்டிய வேந்தனும், சோழ வேந்தனும் அவர்களை வரவேற்றனர் என்றும் அறிகிறோம்.

இப் பாடலின்கண் குறிக்கப் பெற்றுள்ள பாண்டிய வேந்தன் முதலாம் வரகுண பாண்டியனாகவும், சோழன் என்பவன் ஸ்ரீ கண்ட சோழனாகவும் இருத்தல் வேண்டுமென்று அறிஞர் கருதுகின்றனர்.[1] இச் சோழனே பின்னர் முதலாம் வரகுணனின் மகளை மணந்து பாண்டியனின் மருமகனாகிறான்.

**சுந்தரரின் உடன் காலத்தவர்**

சேரமான் பெருமாள் நாயனார் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டினரேயென்பது கி. பி. 1969-70-ல் திருவஞ்சைக் களத்தில் மேற்கொண்ட அகழ்வாய்வினால் முடிவு கட்டப்பட்டுள்ளது.[2] சுந்தரர் காலமும் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டு என்பது சில

[1] சுப்பிரமணிய அய்யர், ஏ. வி. 'சுந்தரமூர்த்தி நாயனார் காலம்' (கேரள நாட்டு வரலாறு காட்டும் பாதை)—ஆராய்ச்சி, ஏப்ரல் 1974 பக்கம் 276.

[2] கொடுங்கோளூர் என்றழைக்கப்பெறும் மகோதயபுரத்தைச் சேர்ந்த திருஅஞ்சைக்களத்தில் சேரமான் பறம்பு என்றதோர் வரலாற்றுப் புகழ்மிக்க மேடு இருக்கிறது. இவ் விடத்தில் இருந்த அரண்மனையில் சேரமான் தங்கியிருந்து அரசு செலுத்தியதாகக் கருதப்பெறுகிறது. கி.பி. 1969-70 ஆம் ஆண்டில் மத்திய தொலபொருள் ஆய்வுத் துறையினர், இந்தப் பறம்பையும், அதனருகிலுள்ள திருவஞ்சைக் களம் கோயிலிலுள்ள இரு இடங்களையும் அகழ்ந்து ஆய்வு நிகழ்த்தினர். இங்கு கிடைத்த மண்பாண்டத் துண்டுகள், சீனாவைச் சேர்ந்த மண்பாண்ட வகைகள், கருப்பு சிவப்புப் பானை ஓடுகள ஆய்வாளர்களால் ஆய்வு செய்யப்பட்டு, கி.பி. 8–9 ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததென்று முடிவு செய்யப்பட்டுள்ளது. இங்குக் கிடைத்த எந்தப் பொருளும் இந்தக் காலத்திற்கு முற்பட்டவையல்ல. சேர இரண்டாம் பேரரசைத் தோற்றுவித்த குலசேகரனே இவ் விடத்தில் கொடுங்கோளூா என்ற மகோதபுரத்தை ஒரு தலைநகராக ஆக்கியிருத்தல வேண்டும் எனறும குறிபபிட்டுள்ளனா. (மகரளாவல் நடந்திருக்கும் அகழ்வாராய்ச்சி, பண்டாரகர் கே. வி. இராமன்—பாளையங்கோட்டை ஆராய்ச்சி மலர்–2, இதழ்–1, பக்கம் 102–103)

ஆராய்ச்சியாளர்களால் முடிவு செய்யப்பட்டுள்ளது.[1] இவரது காலமும் ஏறத்தாழ கி.பி. 790-850ஆக இருத்தல் வேண்டுமென்று அண்மைக்கால ஆய்வுரை தெரிவிக்கின்றது.[2] இவற்றின் அடிப் படையில் ஆய்ந்து பார்க்குங்கால் சுந்தரர் முதலாம் வரகுண பாண்டியனின் உடன் காலத்தவரென்பது புலனாகின்றது.

**பாண்டியரின் அரசப் பிரதிநிதி**

அடுத்து, பெரிய புராணத்தில் குறிக்கப் பெற்றுள்ள சோழன் 'ஸ்ரீகண்ட சோழனாக இருத்தல் வேண்டுமென்பதனை முன்பே கண்டோம். இவர்களது உடன்காலத்தவனைப் பல்லவவேந்தன் தந்திவர்மனது முதல் 21 ஆண்டுவரையிலான கல்வெட்டுகளே நமக்குத் தொடர்ச்சியாகக் கிடைத்துள்ளன; இதன் பின்பு 49-வது ஆட்சியாண்டுக் கல்வெட்டே கிடைத்துள்ளது. ஆகவே, இவ்விடைக் காலத்தில் சோழவேந்தன் ஸ்ரீகண்டன் (இரண்டாம் வரகுணனின் தாய்வழிப் பாட்டன்) காஞ்சி மாநகரைக் கைப் பற்றிக்கொண்டு ஆட்சிபுரிந்திருத்தல் வேண்டுமென்று திரு. டி. வி. மகாலிங்கம் கருதுகின்றார்.[3] திரு. மகாலிங்கம் அவர்கள் கருதுவது போன்று ஸ்ரீநீலகண்டன் தனித்த ஆட்சியினை ஆங்கு நிறுவியிருந்தாலும். இல்லாவிட்டாலும், இவன் பாண்டியரது அரசப்பிரதிநிதியாகக் காஞ்சியில் இருந்தான் என்பதனை நாம் ஊகிக்கலாம்.

மேற்கூறியவற்றான் சேரமான் பெருமாள் நாயனார், சுந்தரர், ஸ்ரீகண்டசோழன் ஆகிய மூவரும் முதலாம் வரகுணனின் ஆட்சிக் காலத்தில், அதாவது, கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்தவ ரெனலாம். முதலாம் வரகுண பாண்டியன் சைவ சமயத்தில் பற்று கொண்டிருந்த காரணத்தால்தான் சைவசமயம் பெரியார் களான சேரமான் பெருமாள் நாயனாரையும், சுந்தரரையும் அன்புடன வரவேற்றான் போலும்.

**சேரமான் பெருமாள் காலம்**

திரு. டி.வி. சதாசிவ பண்டாரத்தார் அவர்கள் சுந்தரமூர்த்தி சுவாமிகளும், சேரமான் பெருமாள் நாயனாரும் கோச்சடையன் இரணதீரன் காலத்தில்தான் மதுரை போந்தனர் என்று தமது நூலில் குறிப்பிட்டிருப்பது[4] எவ்வாறு பொருத்தமுடைதென்று

1 சுப்பிரமணிய அய்யர், ஏ. வி. 'சுந்தரமூர்த்தி நாயனார் காலம்', ஆராய்ச்சி பக்கம் 277.

2 Ibid.

3 டி. வி. மகாலிங்கம், 'முற்கால தென்னிந்திய வரலாற்றில் காஞ்சிபுரம்' பக்கம் 192

4 சதாசிவ பண்டாரத்தார், தி. வை. 'பாண்டியர் வரலாறு' பக்கம் 48.

அறிந்து கொள்ளக்கூடவில்லை. சேரமான் பெருமாள் நாயனாரது காலம் ஒன்பதாம் நூற்றாண்டென்று அகழ்வாராய்ச்சியால் அறியப்பட்டபின்பு அவரது கொள்கை வலுவிழக்கின்றது எனலாம்.

**சமயப் பொறை**

பரம வைணவனான பராந்தக நெடுஞ்சடையன் பரம சைவனாகவும் வாழ்ந்தான் என்பது குறிப்பிடத்தக்கதாகும். எம் மதமும் சம்மதம் என்னும் பொன்னான கருத்தினை மனத்திற் கொண்டதோடு அதனைத் தனது வாழ்க்கையில் கடைப்பிடித்துக் காட்டிய இவன் சமயத்துறையில் பரந்த நோக்கமும் விரிந்த மனப்பான்மையுங் கொண்டவனென்பது இனிது விளங்குகின்றது. சமயப் பொது நோக்கில் இவன் மாமன்ன அசோகனுடனும், மொகலாயப் பெருமன்னன் அக்பருடனும் வைத்து எண்ணப்படும் பெருமையினைப் பெற்றுள்ளான். இவனது சமயப் பொறையினையும் அதன் மாட்சியினையும் அறிந்துகொள்ள வேண்டுமெனின் அசோகரது பாறைச் சாசனத்தை நன்கு அறிதல் வேண்டும். அப்போதுதான் சமயப் பொறையென்பது என்னவென்பதனைத் தெள்ளிதின் அறிந்து கொள்ள முடியும். சமயப் பொறைபற்றி அசோகப் பெருமன்னன் கூறுவதனை ஈண்டு காண்போம்.

"ஒருவன் தன் மதத்தைப் புகழ்ந்து, பிறர் மதத்தைப் பழித்தல் கூடாது; பிற மதங்களும் யாதேனும் ஒரு வகையில் பாராட்டத்தக்க பண்புடையவனே, இதையறிந்து நடந்தால் ஒருவன் தன் மதத்தையும் உயர்த்தியவனாவான். பிற மத வளர்ச்சிக்கும் துணை புரிந்தவனாவான். இதற்கு மாறாக நடந்து கொள்பவன் தன் மதத்திற்கும் மாசூட்டிப் பிற மதங்களையும் பாழ் செய்தவனாவான். தன் மதத்தை உயர்த்த வேண்டிப் பிற மதங்களைப் பழித்து பேசுபவன் உண்மையில் அவ்வாறு பழிப்பதால், தன் மதத்திற்குத் தானே கேடு விளைவிக்கின்றான். ஆகவே, பிற மதத்தவர்க்குப் பொன்னும் பொருளும் போல்வன அளிக்கும் புறச்செயல்களால் சமரசநிலை ஏற்பட்டுவிடாது; பிற சமயங்களையும் தம் சமயம் போல் மதிக்கும் பண்பாடு வளர்தல் வேண்டும்; அதுவே உண்மைச் சமரச நிலைக்கு வழித்துணையாம் என்று மாண்புமிகு மன்னன் மதிக்கிறான்" என்று மாமன்னன் அசோகன் தனது பாறைக் கல்வெட்டு இரண்டாவது அரச ஆணையில் குறிப்பிடுகின்றார். இதனால்தான் வழிபடும் மதத்தினைப் போற்றுவதுடன் பிற மதங்களையும் இகழாது அவற்றையும் போற்றுவதே சமயப் பொறை என்பதனை அறியலாம்.

புவனம் புகழும் இக் கொள்கையினை மாமன்னன் அசோகன் தனது வாழ்நாள் முழுவதும் போற்றினான்; பின்பற்றினான். பராந்தக நெடுஞ்சடையனும் இக் கொள்கையினைக் கைக் கொண்டான். மேற்கூறிய பொன்மொழியின் இலக்கணமாகத் திகழ்ந்தவருள் இப் பாண்டிய வேந்தனும் ஒருவனாவான். இதன் காரணமாக மக்களிடையே சமயப் பூசல் மறைந்தது; நெஞ்சில் தூய அன்பே நிறைந்தது.

**இவனது பட்டப் பெயர்கள்**

பராந்தக நெடுஞ்சடையன் எண்ணிறந்த பட்டங்களைப் புனைந்திருந்தனன் என்பது அவனது செப்பேடுகளினால் அறியப் படுகின்றது. தென்ன வானவன், சீவரன்,[1] சினச்சோழன், சீமனோகரன், புனப்பூழியன், வீரபுரோகன், வீதகன்மஷன், விநயவிச்ருதன், விக்கிரமபாரகன், மருத்பலன், மானிய சாசனன், மநூபமன், மர்த்திதவீரன், கிரிஸ்தரன், கீதகின்னரன், கிருபாலயன், கிருதாபதானனன், கலிப்பகை, கண்டகநிஷ்டூரன், கார்யதக்ஷிணன், கார்முக பார்த்தன், பண்டிதவத்சலன், பரிபூர்ணன், பாபபீரு, குணக்ராகியன், கூடநிர்ணயன் முதலான தோரணையான பல பட்டங்களைப் பெற்றுள்ள இவன் மிகச் சிறந்த பாண்டி வேந்தனென்பதில் எள்ளளவும் ஐயமில்லை. இவற்றுள் பெரும்பாலான சிறப்புப் பெயர்கள் வடமொழியில் காணப்படுகின்றன.

கி. பி. எட்டாம் நூற்றாண்டிற்குப் பின்பு ஆண்ட பாண்டி மன்னர்கள் காலத்தில் வடமொழி வளர்ச்சி பெறத் தொடங்கியது. சங்கம் வைத்து தமிழ் மொழியினைப் போற்றி வளர்த்து செந்தமிழ்ப் பெயர்களைப் புனைந்து மகிழ்ந்த பாண்டி வேந்தர் கி.பி. எட்டாம் நூற்றாண்டில் வடமொழிப் பெயர்களைப் பூண்டிழிந்தமை வியப்பிற்குரியதொன்றாகும்.

நெடுஞ்சடையன் பராந்தகனது முப்பத்தொன்பது, நாற்பத்தொன்று, நாற்பத்திரண்டு, நாற்பத்து மூன்றாவது ஆட்சியாண்டுக் கல்வெட்டுகள் முறையே திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள அம்பாசமுத்திரம்[2], தளபதி சமுத்திரம்[3], கழுகுமலை[4],

[1] வேள்விக்குடிச் செப்பேட்டில் இவன் சீவரன் (Sivaran) என்று குறிக்கப் பெறுகிறான். இது அவனது சிறப்புப் பெயர்களுள் தலையாயதாகும். Srinivasan, K R Some non–Pallava Cave Temples with Musical Inscriptions 'Damilica' (தமிழகம்) Part II, page 90.

[2] Ins 104 of 1905.

[3] Ins 12 of 1928–29.

[4] Ins. 863 of 1917.

ஏர்வாடி[1] ஆகிய ஊர்களில் கிடைத்துள்ளன. நற்பத்து மூன்று மாட்சிக்குப் பின்னர் வெளியிடப்பட்டதென்பதான கல் வெட்டுகள் நமக்குக் கிடைக்கப் பெறவில்லை.

**கலைப்பணி :** வீரத்தின் உலைக்களனாய், சமயப் பொறையின் நிலைக்களனாய் விளங்கி, எண்ணிறந்த சிறப்புப் பெயர்களைத் தாங்கி, இடைக்காலப் பாண்டியர் வரலாற்றில் அங்கு புகழ் தாங்கிய இவ் வேந்தன் கலைப் புரவலனாகவும் மங்காப் புகழ் பெற்றுள்ளான். இவ் வேந்தனது ஆட்சிக் காலத்தில் மதுரைக் கண்மையிலுள்ள ஆனைமலையில் திருமாலுக்குக் கோயிலொன்று அமைக்கப்பட்டு அதில் நரசிங்கப் பெருமாள் எழுந்தருளுவிக்கப் பெற்றார். திருப்பரங்குன்றத்தில் தென்னாடுடைய சிவபெரு மானுக்கு மண்டபக் கோயிலொன்று குடைவிக்கப்பட்டதும் இக் கலைக் காவலனது காலத்தில்தான். 'தென்னகத்தின் எல்லோரா' என்று போற்றப்பெறும் வெட்டுவான் கோயில் (கழுகுமலை) குடைவரைக் கோயிலும் இவ் வேந்தனது ஆட்சிக் காலத்தில்தான் குடையப்பட்டது.

**வெட்டுவான் கோயிலின் சிறப்பு**

பல்லவர்களின் காலத்திய மாமல்லபுரத்து ஒற்றைக் கற் கோயில்களைப் போன்று, கழுகுமலை கோயிலும் ஒற்றைக்கல் கோயில்தான். இருப்பினும் பல்லவர்களது கோயில்களைக் காட்டிலும், இது சிறப்பு மிக்கதாகும். இதில் எழில் மிகு சிற்பங்கள் பல உள்ளன.

ஆனைமலை, திருப்பரங்குன்றம், கழுகுமலை முதலான இடங் களில் குடைவரைக் கோயில்களைக் குடைவித்த இவ் வேந்தனது ஆட்சிக்காலம், பாண்டியர் காலக் குடைவரைக் கோயில் வர லாற்றில் புதியதொரு அத்தியாயத்தைத் தொடங்கி வைத்ததென லாம்.

துர்க்கைக்கும், மூதேவிக்கும் (சேஷ்டா) திருப்பரங்குன்றத் தில் தனித்தனிக் கோயில்கள் அமைக்கப்பட்டதும் இவனது ஆட்சிக் காலத்திலேதான் என்பதனையும் ஈண்டு நாம் நினைவிற் கொள்ளல் வேண்டும்.

**நெடுஞ்சடையன் காலத்திய அதிகாரிகள்**

நெடுஞ்சடையனது ஆட்சிக் காலத்தில், அவன் செம்மை யாக ஆட்சி புரிவதில் பெருந்துணை புரிந்தவர்கள் அரசியல்

[1] Ins. 605 of 1915.

அதிகாரிகளேயாவர். இவர்கள் நாட்டு நிர்வாகத்தைச் சீருடனும் சிறப்புடனும் நடத்தி வந்தனர். இவர்களுள் மாறன் காரி, மாறன் எயினன், சாத்தன் கணபதி, ஏனாதி சாத்தஞ்சாத்தன், தீரதிரன் மூர்த்தி எயினன், சங்கரன் சீதரன் முதலான அதிகாரிகள் குறிப்பிடத்தக்கவராவர்.

மூவேந்த மங்கலப் பேரரையனான மாறன்காரி உத்தர மந்திரியாக இருந்து மக்களுக்குச் சேவை செய்தான். வைணவப் பற்றாளனான இவன் ஆனைமலையில் திருமாலுக்குக் கற்றளி யொன்றி அமைத்து கி. பி. 770-ல் அதில் நரசிங்கப் பெருமானை எழுந்தருளச் செய்தான்.[1] மாறன்காரியை அடுத்து உத்தர மந்திரியாகப் பதவியேற்ற மாறன் எயினன், நரசிங்கப் பெருமாள் கோயிலுக்கு முக மண்டபம் ஒன்றினைக் கட்டிக் கடவுண் மங்கலம் செய்துள்ளான்.[2] பாண்டியனின் மகாசாமந்தனாகப் பணி புரிந்த சாத்தன் கணபதியும் திருப்பரங்குன்றத்தில் சிவ பெருமானுக்குக் குகைக் கோயிலொன்றினை அமைத்துள்ளான்.[3]

ஏனாதி சாத்தஞ் சாத்தன் பாண்டியரின் படைத்தலைவனாகத் திகழ்ந்தான். தீரதரன் மூர்த்தி எயினன் என்பானும் பாண்டி யரின் மகாசாமந்தனைகப் பணிபுரிந்தான். பராந்தக நெடுஞ்சடை யனால் வெளியிடப்பெற்ற சீவரமங்கலச் செப்பேட்டின்[4] ஆணத்தி யாக இவன் குறிக்கப்பெற்றுள்ளான்.

பாண்டிய மன்னனது யானைப் படையின் தலைவனான சங்கரன் சீதரன் பாண்டியரது வெற்றிக்குப் பெரிதும் பாடு பட்டான். இவனது அரும்பெரும் பணியைப் பாராட்டு முகத் தான் 'பாண்டி இளங்கோ மங்கலப் பேரரையன்' என்னும் பட்டம் இவனுக்கு வழங்கப்பட்டது.[5]

மேற்கூறியவற்றான் நெடுஞ்சடையன் காலத்தில் அரசியல் அலுவலர் பலர் நற்பணியாற்றினர் என்பதும், அவர்களில் சிலர் அரசியல் பணியுடன் இறைப்பணியும் செய்து வந்தனர் என் பதும் புலனாகின்றன. இவ் வதிகாரிகளைப்பற்றிய விரிவான

[1] Epigraphia Indica, Vol. III, pages 319 and 320. இவ் வானைமலைக் கல்வெட்டில் கலியுக ஆண்டு 3871 என்று குறிக்கப் பெற்றுள்ளது. நமக்கு இதுகாறும் கிடைத்துள்ள பாண்டியர் காலக் கல்வெட்டுகளில் இதுவே ஆண்டு வரையப் பெற்ற பழமைமிக்க கல்வெட்டாகும் என்பது குறிப்பிடத்தக்கது.

[2] Ibid. Page 320. Epigraphia Indica, Vol. VIII, page ff and Travancore Archaeological Series Vol. 1, page 157.

[3] Indian Antiquary, Vol. XXII, page 67.

[4] Ibid. pp. 69–75.

[5] Ibid.

செய்திகளைப் 'பாண்டியர் கால அரசியல் தலைவர்கள்' என்னும் பகுதியில் காண்க.

## சீமாறன் சீவல்லபன் (கி.பி. 815—862)

'சீர்கெழு செங்கோல் சீவல்லபன்' எனக் கல்வெட்டொன்றால் போற்றிப் புகழப்படும் சீமாறன் சீவல்லபன் தனது தந்தையார் இறந்தபின் கி.பி. 815ஆம் ஆண்டு அரசுரிமையேற்றான். தனது குடிமக்களின் பேரன்பினுக்குப் பாத்திரமான இவன் அவர்களின் பாராட்டுதலுக்கும் வணக்கத்திற்கும் உரியவனாவான் என்பதனை 'ப்ரேம பாத்ரம் ப்ரஜாராராம்' என்னுமடியால் அறியலாம். மேலும், இவன் 'ஏகவீரன்' 'அவனிய சேகரன்' பரசக்கர கோலாகலன்' 'அவனிப சேகரன்' என்னும் சிறப்புப் பெயர்களைப் பெற்றிருத்தலின் ஈடுஇணையற்ற வீரனாகவும் பார் முழுதுமாண்ட பண்பாளனாகவும், எட்டுத் திக்கும் வெற்றி முரசு கொட்டிய மாமன்னனாகவும் சிறந்துவிளங்கினனென்பது தெளிவாகின்றன. மேற்கூறிய பட்டங்களைப் பார்க்கின்றபோழ்து இவனது காலத்தில் வடமொழியின் செல்வாக்கு எத்துணையளவு இருந்த தென்பதும் புலனாகின்றது.

**ஆதாரங்கள் :** இவ் வேந்தனைப்பற்றிய முக்கியமான செய்திகள் சின்னமனூர்ச் செப்பேடுகளாலும், தளவாய்புரச் செப்பேடுகளாலும், சிற்றன்னவாசல் குகைக்கோயில் கல்வெட்டாலும் மற்றும் சில கல்வெட்டுகளாலும் அறியப்படுகின்றன. இலங்கை நாட்டின் வரலாற்று நூலான 'மகாவம்சமும்' நிருபதுங்க வர்மனின் வாகூர்ச் செப்பேடுகளும் இவ் வேந்தனது வெற்றிகளுள் சிலவற்றினை உறுதி செய்கின்றன.

**மண உறவு :** இவ் வேந்தன் பொத்தப்பிக் குலத்துச் சோழனான சிகண்டனின் சீர்மிகு செல்வியாம் அக்களநிம்மடியை மணந்து கொண்டான் என்பதனைத் தளவாய்புரச் செப்பேடுகள் செப்புகின்றன. இச் செப்பேட்டில் சீமாற சீவல்லபனுடைய தந்தையின் பெயர் பராந்தகன் எனக் குறிக்கப்பெற்றிருத்தலின் வரகுணன் பராந்தகனெனவும் அழைக்கப்பட்டதனையறியலாம். பொத்தப்பிக் குலத்துச் சோழர்கள் நீண்ட காலத்திற்கு முன்னரே பாண்டியருடன் தொடர்பு கொண்டிருந்தனர் என்பதும் இதனால் விளங்குகின்றது.

### போர்கள்

'புலிக்குப் பிறந்தது பூனையாகாது' என்பதுபோல் வெற்றி வேந்தனும் வரகுணனின் மகனாகப் பிறந்த சீமாறனும் வீரத்தின்

20

இருப்பிடமாய்த் திகழ்ந்தான். வெற்றி வீரனை இவன் குண்ணூர், சிங்களம், விழிஞம் ஆகிய இடங்களில் போர்புரிந்து மாற்றாரை மண்டியிடச் செய்தனன் என்பதனைச் சின்னமனூர்ச் செப்பேடுகளும் அண்மையில் கண்டுபிடிக்கப்பட்ட தளவாய்புரச் செப்பேடுகளும் விரித்துரைக்கின்றன.[1] எருக்கங்குடியில் கிடைத்துள்ள நெடுமாறன் சீவல்லபனது பதினெட்டாமாட்சி யாண்டுக் கல்வெட்டும் இவன் சிங்களம், குண்ணூர் ஆகிய இடங்களில் பெற்ற வெற்றிகளைக் குறிக்கின்றது.[2] குண்ணூர் போரில் இவனிடம் தோல்விகண்ட மன்னன் பெயர் குறிப்பிடப் பெறவில்லை.

**சேரர்மீது போர்:** கேரளத்து விழிஞத்தில் போர்செய்து இவன் சேர மன்னனை வெற்றி கொண்டான். விழிஞம் என்பது திருவனந்தபுரத்திற்குத் தெற்கே பத்து கல் தொலைவில் மேலைக் கடற்கரையில் அமைந்துள்ளது.[3] 'இலங்கையைப்போல் அரணால் சிறந்தது விழிஞம்' என்று இதனை சீவரமங்கலச் செப் பேடுகள் விவரிப்பதால் விழிஞம் அரண்மிக்க பகுதியென்பதனை நாம் அறிந்து கொள்ளலாம். நெடுஞ்சடையன் பராந்தகன் காலத்தில் விழிஞம் வெல்லப்பட்டபோதிலும், இவனும் விழி ஞத்தை வெல்ல வேண்டியிருந்ததனை யெண்ணும்போது கேரள மக்கள் பாண்டியனின் பிடியிலிருந்து விடுபட முயன்று பன்முறை பாண்டியர்க்கெதிராகக் கலகம் செய்தனர் என்பதனை ஊகிக்க லாம். இப் போரில் சேர மன்னன் கொல்லப்பட்டு மேலுலகிற் கனுப்பப்பட்டானென்பதனை, 'விண்ணுளை வில்லவற்கு விழிஞத்து விடைகொடுத்தும்' என்று தளவாய்புரச் செப்பேடு நகைச்சுவையுடன் குறிப்பிடுகின்றது.[4] இவனால் கொல்லப்பட்ட சேர வேந்தன் யாவனென்பது விளங்கவில்லை.

**சிங்கள வெற்றி:** கடல்கடந்த சிங்கள நாட்டிலும் (இலங்கை யிலும்) இவன் பாண்டியரது மேலாண்மையினை நிறுவினா னென்று சின்னமனூர்ச் செப்பேடுகளும், தளவாய்புரச் செப் பேடுகளும் குறிப்பிடுகின்றன. சீமாறனது சிங்கள வெற்றி

1 'தேங்கமழ் பொழிற் குண்ணூரிலுஞ் சிங்களத்தும் விழிஞத்தும் வாடாத வாகைசூடிக் கோடாதசெங் கோனடாவிக்' சின்னமனூர் (பெரிய) செப்பேடு. 'பாண்டியர் செப்பேடுகள் பத்து' பக்கம் 168, வரி 20–21.

'வேய் போலுந் தோளியர் கேள் வித்யாதர ஹிரண்ய கர்ப்பன் குண்ணூரி லமர்வென்றுங் குரைகடலீ ழங்கொண்டும் விண்ணுளை வில்லவற்கு விழிஞத்து விடைகொடுத்தும்' தளவாய்புரச் செப்பேடு. Ibid. பக்கம் 125, வரி 27–29.

2 334 of 1929–30.

3 S.I.I. Vol. III, page 13.

4 'தளவாய்புரச் செப்பேடு'—'பாண்டியர் செப்பேடுகள் பத்து' பக்கம் 125, வரி 35.

'மகாவம்சம்' என்னும் இலங்கை வரலாற்று நூலின் குறிப்புகளாலும் உறுதி பெறுகிறது. மகாவம்சம் பின்வருமாறு பாண்டியரின் சிங்களப் படையெழுச்சியை விவரிக்கின்றது.

முதலாவது சேனன் (கி.பி. 846–866) சிங்கள மன்னனது காலத்தில் பாண்டியப் படையெழுச்சியொன்று நிகழ்ந்தது. மகதளிதா என்னுமிடத்தில் பாண்டியர்க்கும் சிங்களர்க்கும் நடந்த போரில் பாண்டியர் பெருவெற்றி பெற்றனர். வெற்றி பெற்ற பாண்டியர் சிங்கள நாட்டினைப் பேரழிவிற்குள்ளாக்கினர். நகரங்கள் அழிக்கப்பட்டன; புத்த விகாரைகளும், கோயில்களும் அழிக்கப்பட்டன; விலைமதிப்பிடவியலாத செல்வம் கொள்ளையடிக்கப்பட்டது. தலைநகரம் பொலிவிழந்தது; இலங்கை நாடு செல்வத்தினையிழந்து வெறுமையுற்றது. பாண்டியரின் வலிமை மிக்க தாக்குதலுக்கு அஞ்சி இலங்கை வேந்தனும் முதலாம் சேனன் மலேயாவிற்கு ஓட்டம் பிடித்தான்; ஆங்கு தஞ்சம் புகுந்தான். இளவரசன் மகிந்தன் தற்கொலை புரிந்து கொண்டான். போர்க்களத்தில் வீரம் விளைவித்த இளவரசன் காசிபனும் போர்க்களத்தினின்றும் புறமுதுகுகாட்டி ஓடிவிட்டான்.[1] இத்துணைப் பெரிய அழிவிற்குப்பின் சிங்கள வேந்தன் பாண்டியனுடன் சமாதான உடன்பாடு செய்துகொண்டான்; பாண்டியனும் சிங்கள நாட்டினை முதலாம் சேனனிடம் வழங்கினான். 'குரை கடலீழங் கொண்டும்' என்று சின்னமனூர்ச் செப்பேடு குறிப்பிடுவதால் சீவல்லபன் சிங்களத்தினை வென்றானென்பது உறுதி பெறுகின்றது.

**இரண்டாம் சேனன் பாண்டிய நாட்டின்மீது படையெடுப்பு**

முதலாம் சேனனுக்குப்பின் இரண்டாம் சேனன் (கி. பி. 866-901) சிங்கள வேந்தனாகப் பதவியேற்றான். தனது முன்னோனின் காலத்தில் சிங்கள நாட்டிற்குப் பாண்டியராலேற்பட்ட இழுக்கைத் துடைக்கத் திட்டம் தீட்டினான். பாண்டிய நாட்டின்மீது படையெடுத்து வஞ்சம் தீர்த்துக் கொள்ள முடிவெடுத்தான். இவ் வேளையில் பாண்டி வேந்தனின் தாயத்தினனும் பாண்டிய அரசைக் கைப்பற்ற சதித்திட்டம் வகுத்து வந்தவனுமாகிய மாயபாண்டியன் என்பான் இரண்டாம் சேனனின் படையுதவியை நாடினான். இதனைக் கண்ட இரண்டாம் சேனன் தனது பெரும்படையுடனும் மாயபாண்டியனின் துணையுடன் பாண்டி நாட்டின்மீது போர் தொடுத்தான்.

[1] Nilakanta Sastri, K.A., 'The Pandyan Kingdom' p. 69.
பின்னர் இவன் பாண்டியர்களால் கொல்லப்பட்டான். சுப்பிரமணியன், டி.என்., தென்னிந்திய கோயிற் சாசனங்கள்'—பாகம் 3, பகுதி 2.

பாண்டியரின் தலைநகரம் முற்றுகையிடப்பட்டது. பாண்டி வேந்தனே போர்க்களத்தினின்றும் யானை மீதமர்ந்து ஓட்டம் பிடித்தான்; பின்பு உயிர் துறந்தான்; பாண்டி மாதேவியும் பாண்டி வேந்தனுடன் உயிர் துறந்தாள். வெற்றிச் செருக்கால் மகிழ்ந்த சிங்களர் பாண்டி நகரத்தைக் கைப்பற்றி மாயபாண்டியனுக்குப் பாண்டி நாட்டின் முடியினை அணிவித்து, பெரும் பொருளைத் திறைப்பொருளாகக் கைக்கொண்டு, பாண்டியர் முன்பு இலங்கையினின்றும் கைப்பற்றிச்சென்ற விலையுயர்ந்த பொருள்களையும் கவர்ந்துகொண்டு இலங்கை திரும்பினர்.

ஈண்டு நாம் மகாவம்சத்தில் கூறப்பட்டுள்ள செய்திகளனைத்தையும்[1] நாம் அப்படியே உண்மையென்று எடுத்துக் கொள்ள வியலாது. இவற்றினை ஆய்ந்து உண்மை நிகழ்ச்சிகளை மட்டுமே நாம் எடுத்துக் கொள்ளவேண்டும். மகாவம்சம் இலங்கையின் வரலாற்றினைச் சில இடங்களில் மிகைபடக் கூறியும், கற்பனையாக வருணித்துக் கூறியும் இருக்கிறது. முதலாவதாக, இலங்கை

1 'அவன் படையெடுத்துச் செல்லவேண்டிய ஏற்பாடுகளைச் செய்துவந்த போது, அதிர்ஷ்டம் ஒருவிதமாக அவனுக்கு உதவியது. பாண்டிய அரசகுமாரன் ஒருவன் தன் தந்தையை விரோதித்துக்கொண்டு, அரசுரிமையைத் தானே கைப்பற்றத் தீர்மானித்து, அதற்கு இலங்கை அரசன் உதவியை நாடி அவ்விடம் வந்தான். சேனனும் அவனை வரவேற்று உபசரித்து, அவனுடைய உதவியுடன் தன் படைகளை அனுப்பிவைத்தான். ஈழத்துப் படை பாண்டிய நாட்டில் இறங்கி, நாட்டைப் பாழ்படுத்தி, மதுரையை முற்றுகையிட்டது. யானைமீது அமர்ந்து போரிட்ட பாண்டியன் போர்க்களத்தில் காயமுறறு, நகரைத் துறந்து பாதுகாப்பான இடத்துக்கு ஓடிப்போனான். போன இடத்திலே அவன் இறந்து போனான். இவனுடன் சென்ற அவன் தேவியும் இறந்தாள். அதன்மீது ஈழத்துப் படை நிர்ப்பயமாக நகருள் நுழைந்து நகரைக் கொள்ளையிட்டது. தேவ பட்டணங்களை அசுரர்கள் கொள்ளையிட்டதுபோல இருந்ததாம் அது. சிங்கள சேனாதிபதி அரண்மனைப் பொக்கிஷத்தை ஆராய்ந்து சோதனையிட்டான். தன் நாட்டிலிருந்து கொணர்ந்த விலையுயர்ந்த பொருள்களோடு இங்கே நாடு நகரங்களில் இருந்தவற்றையும் அவன் கைப்பற்றினான். தான் கைக்கொண்ட நாட்டைத் தன் இஷ்டப்படி அரசு செலுத்தினான். அப்பால் அவன் பாண்டிய அரசகுமாரனுக்கு அந்த நாட்டை அளித்து முறைப்படி மகுடாபிஷேகம் செய்துவைத்தான். அவனுக்கு எந்தத் திசையிலும் எதிர்ப்பு இல்லை. யானை, குதிரை, அடிமைகள் பலரைக் கைக்கொண்டான். கடைசியாகத் தன் நாடு திரும்பித் தான் கொணர்ந்தவற்றை அரசனிடம் சமர்ப்பித்தானாம். சூளவம்சம் அத். 51, சுலோகங்கள் 34–35. தென்னிந்திய கோயிற் சாசனங்கள். பாகம் 3, பகுதி 1, பக்கம் CI–CII.

மகாவம்சம் கூறுவதனை நாம் ஏற்றுக் கொள்வோமாயின் பாண்டிய வேந்தன் முற்றிலும் தோற்கடிக்கப்பட்டானென்பது புலனாகின்றது. நம் நாட்டு வரலாற்றிலோ இச் செய்தி குறிக்கப் பெறவேயில்லை. இதன் காரணமாக இதனை நாம் முழுமையாக ஏற்றுக்கொள்ள இயலாதென்று சிலர் கருதுவதும் உண்டு. இருப்பினும் இலங்கையின் பழைய வரலாற்றினை விரித்துக் கூறும் நான்கு நூல்களும் இவ் வெற்றியினைக் குறித்துச் செல்கின்றன. இவ் வெற்றியின் விளைவாக இலங்கை வேந்தன் 'மதுரா தனு' என்னும் பட்டத்தினையும் புனைந்துகொள்கிறான். இப் பட்டம் பிற்காலச் சோழ வேந்தர்கள் 'மதுராந்தகன்' 'மதுரை கொண்டான்' என்று சூட்டிக்கொண்டதனை ஒக்கும். இவ் வேந்தனது கல்வெட்டுகள் இவன் 'மதுராதனு' என்னும் பட்டத்தினைப் புனைந்து கொண்டதனைக் குறிக்கின்றன. இவற்றையெல்லாம் நாம் நுண்ணிதின் ஆய்ந்து பார்க்குங்கால், இவற்றில் சிறிதளவே உண்மை இருப்பதாகத் தோன்றுகின்றது.

வரலாற்றில் குறிக்கப்பட்டுள்ள முதலாம் சேனன், இரண்டாம் சேனன் ஆகியோரது ஆட்சிக் காலத்தினை நமது பிற்காலச் சோழர் வரலாற்றடிப்படையிலும், தென்னிந்திய வரலாற்றடிப் படையிலும் மாற்றிக்கொள்ள வேண்டியுளது. எனவே, இவர்களது ஆட்சிக் காலத்தினைச் சற்றேறக்குறைய கி. பி. 822-842 என்றும் கி. பி. 842-877 என்றும் மாற்றிக் கொள்ளலாமென்று திரு. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியார் கருத்துத் தெரிவிக்கிறார்.[1]

**மகாவம்ச செய்தி நம்பத் தகுந்ததா?**

பாண்டியரது இலங்கைப் படையெழுச்சிபற்றியும் பாண்டிய வெற்றிபற்றியும் மகாவம்சம் கூறுகின்ற செய்தியினை நாம் உண்மையெனக் கொள்ளலாம்.[2] இரண்டாவதாக சிங்களர், பாண்டிய நாட்டின்மீது படையெடுத்து பாண்டியரை வென்று மாயபாண்டியனை மன்னனுக்கினர் எனக் கூறுவதனையும் நாம் உண்மையென்று ஏற்றுக்கொள்ளலாம். அடுத்து, மாய பாண்டியனைச் சீமாறன் வென்றான் என்று சின்னமனூர்ச் செப்பேடு குறிப்பிடுகின்றது. இச்செய்தியினை தளவாய்புரச் செப்பேடுகளும் உறுதி செய்கின்றன. ஆனால், பாண்டிய நாட்டில் மாயி பாண்டியன் ஆண்டதாகச் சான்றுகள் ஒன்றும் கிடைக்கவு மில்லை. இந்நிலையில் இச் செப்பேடுகள் செப்புவன உண்மையா? மகாவம்சம் செப்புவன உண்மையா? என்ற கேள்வி எழுகின்றது. பொதுவாக, மகாவம்சம் இலக்கிய நடையில் தன்னாட்டின் வரலாற்றினைத் தனக்குச் சாதகமாகக் கூறிக்கொள்கின்றதென நமக்குத் தோன்றுகிறது[3] என்றும், பன்னிரண்டாம் நூற்றாண்டில் பாண்டி நாட்டில் நடந்துகொண்டிருந்த உள்நாட்டுப் போர்களில் சிங்களவர்களும் தலையிட்ட நிகழ்ச்சியினை விவரிக்கின்ற மகாவம்சம் சிங்களவர்களுக்கும் சிங்களப் படைத்தலைவர்களுக்கும் சார்பாகவே உண்மை நிகழ்ச்சிகளைத் திரித்துக் கூறியிருப்பதாகத் தமிழக வரலாற்றறிஞர் கருதுகின்றபோதிலும், மகாவம்சத்தின் கூற்றினை மறுப்பதற்கில்லை. மாய பாண்டியன் என்பது இரண்டாம் வரகுணனைச் சுட்டுவதாகவே கொள்ளலாம்.

[1] Nilakanta Sastri, K. A., 'The Pandyan Kingdom' p. 63.

[2] தலைநகரைக் கைப்பற்றிய பாண்டியர்கள் ஏராளமான பொன்னையும் மணியையும் வாரிச் சென்றனர். விலையுயர்ந்த பொருள் எதையும் விட்டுவைக்கவில்லை. 'யக்கர்கள் புகுந்து கொள்ளையிட்டுச் சென்றதுபோல் தலைநகரம் காட்சியளித்தது' என்று மகாவமிசம் கூறுகிறது. (சூளவமிசம், அத்தியாயம் 50, சுலோகங்கள் 14-12.) கடைசியில் சிங்கள அரசன் பணிந்துவிடவே நாட்டை அவனுக்கே திருப்பி அளித்துவிட்டுப் பாண்டியர்கள் மதுரைக்குத் திரும்பினார்கள்.

திரு. டி. என். சுப்பிரமணியம், 'தென்னிந்திய கோயிற் சாசனங்கள்' பாகம் 3, பகுதி 1, பக்கம CI.

[3] See I. A. Vol. XXXV, 153 ff, for Translation of an important criticism of this book by Geiger.

சீமாறன் சீவல்லபன் இலங்கைமீது படையெடுத்து வெற்றி கொண்டான் என்பதும், இலங்கை வேந்தன் மாய பாண்டியன் ஒருவனது சதிகளை ஆதரித்துப் பாண்டியனால் பழி வாங்கும் முயற்சியில் தோல்விகண்டானென்பதும், சீமாறன் சீவல்லபனால் இவன் முறியடிக்கப்பட்டானென்பதும் உண்மைச் செய்திகளேயென்று வரலாற்றறிஞர் கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியார் குறிப்பிடுகின்றார்.[1] இக் கருத்து பொருந்துவதாகத் தோன்றவில்லை.

### பாண்டிய-பல்லவப் போராட்டம்

நிலப்படையின் பெருவலியால் சேரரையும், கடற்படை வலியால் சிங்களவரையும் வென்றடக்கிய சீமாறன் சீவல்லபன் அடுத்துப் படை வலியும் துணைவலியும் மிகக் கொண்டு தொண்டை நாட்டினையாண்டுவந்த வலிமை மிக்க பல்லவரை வென்றடக்கத் திட்டமிட்டான். பல்லவரும் பாண்டியரைப் போன்று வல்லவராக விளங்கி வந்தனரென்பதனை ஈண்டு நாம் மறத்தல் இயலாது. ஒத்த வலிமைகொண்ட இவர்கள் இருவரும் தெள்ளாற்றுப் போர், ஆனூர்ப் போர், குடமூக்குப் போர், அரிசிலாற்றங்கரைப் போர் ஆகிய போர்களில் பங்கு கொண்டு தங்களது வீரத்தினை நிலைநாட்டினர். மேலும், இக் காலத்தில் பாண்டிய-பல்லவப் போராட்டம் உச்ச நிலையையடைந்தது. இப் பகைமையினையும் போராட்டத்தினையும் வரலாற்றுப் புகழ் மிக்க சோழ-சாளுக்கிய போராட்டத்துடன் ஒப்பிடுவது மிகப் பொருத்தமுடையதாகும். இரண்டு போராட்டங்களுமே தொடர்ந்து பல காலம் நிகழ்ந்து கொண்டிருந்தனவென்பதனைக் கற்போர் இனிதுணரலாம்.

### தெள்ளாற்றுப் போர்

பல்லவ தந்திவர்மனது காலத்தில் முதலாம் வரகுண பாண்டியன் பல்லவர்களிடமிருந்து சோணாட்டினையும் தொண்டை மண்டலத்தின் தென்பகுதியினையும் கவர்ந்து கொண்டான் என்பதனை நாம் முன்பே கண்டோம். நந்திவர்மன் பல்லவப் பேரரசனாக முடிசூடியபின் பாண்டியரிடமிருந்து தொண்டைநாட்டினைக் கைப்பற்ற வேண்டுமென உறுதி பூண்டான். எனவே, பல்லவ மன்னன் கி. பி. 854ஆம் ஆண்டு பாண்டியருடன் போர் மேற்கொண்டான். நந்திவர்மப் பல்லவனது வலிமைமிக்க படையும் சீமாற சீவல்லபனின் பயிற்சி பெற்ற பாண்டிப் படையும்

[1] K. A. Nilakanta Sastry, 'The Pandyan Kingdom' page 64.

தெள்ளாறு[1] என்னுமிடத்தில் சந்தித்து ஒருவரையொருவர் எதிர்த்தனர்; செருக்களம் செங்களமாயிற்று; வலிமை மிக்கப் பல்லவப் படையின் தாக்குதலுக்கு ஈடுகொடுக்கவியலாத பாண்டிப் படை தோல்வியைத் தழுவியது.

இப் போரில் பெருவெற்றிபெற்ற நந்திவர்மன் 'தெள்ளா றெறிந்த நந்திவர்மன்' என்னும் சிறப்புப் பெயரினைப் பெற்ருன். இதனை இவனது கல்வெட்டுகளால் நாம் இனிதுணரலாம். மேலும் 'தெள்ளாற் றெறிந்து ராஜ்யமும் கொண்ட நந்தி போத்தரையர்' என்று திருச்சிராப்பள்ளி மாவட்டம் லால்குடி வட்டம் சென்னி வாய்க்காலிலுள்ள கல்வெட்டொன்று குறிப் பிடுவதனுல்,[2] இவன் தனது தந்தையின் காலத்தில் இழந்த தொண்டை மண்டலத்தின் தென்பகுதியினை மீட்டுப் பல்லவரின் மேலாண்மையினை ஆந்த நிறுவினுனென்பது புலனுகின்றது. இவனது கல்வெட்டொன்று திருவையாறு ஐயாறப்பர கோயி லில் காணப்பெறுவதும் ஈண்டு குறிப்பிடத்தக்கதாகும்.[3]

இப் போரில் வெற்றி வாய்ப்பினை இழந்த பாண்டியன் சீமாறன் சீவல்லபன் தொண்டை நாட்டின் தென்பகுதியினை இழக்க வேண்டியதோர் இக்கட்டான சூழ்நிலைக்குக் கொண்டு வரப்பட்டான் என்பது உள்ளங்கை நெல்லிக் கனியாகும். இவண் தெள்ளாறு எனக் குறிக்கப் பெறுகின்ற இடம் வடவார்க் காடு மாவட்டம் வந்தவாசி வட்டத்திலுள்ள ஊரேயாகும். மூன்ரும் நந்திவர்மப் பல்லவனது வரலாற்றில் தெள்ளாற்றுப் போர் ஓர் ஒளிமிக்க வீர அத்தியாயத்தைத் தொடங்கிய தெனலாம்.

தெள்ளாற்றுப் போரில் தன்னிடம் தோல்விகண்டு, ஓடிய பாண்டியரையும் அவர்க்குத் துணைநின்ற சேர, சோழப் படை

[1] தெள்ளாறு வடவார்க்காடு மாவட்டம் வந்தவாசி வட்டத்தில் உள்ளது. இப் போர் பாண்டிய—பல்லவப போராட்ட வரலாற்றில் குறிப்பிடத்தக்கதொரு நிகழ்ச்சியாகும்.

[2] S.I.I. Vol. XII, D. No. 56.

[3] தஞ்சை மாவட்டத்தின்கண்ணுள்ள திருவையாறு ஐயாறப்பர் கோயில் கருவறையின் தென்புறச் சுவற்றில் இவனது கல்வெட்டு ஒன்று கண்டுபிடிக்கப் பட்டுள்ளது. இதனைக் கல்வெட்டுப் பயிற்சி நிறுவன மாணவர் திரு. இராச கோபால் அவர்கள் 1973-74ஆம் ஆண்டு கண்டுபிடித்தார். இதுகாறும் இக் கோயில் ஆதித்த சோழனுல் கட்டப்பெற்றதென்று ஆராய்ச்சியறிஞர் கருதி வந்தனர். ஆதித்த சோழனுல் இக் கோயில் கட்டப்பெற்றதென்பது உண்மை யாயின், தெள்ளாறெறிந்த நந்திவருமன், காலத்தால் பிற்பட்டவனுவான். நந்தி வருமன் ஆதித்த சோழனுக்குக் காலத்தால் முற்பட்டவனெனில் இக் கோயில் ஆதித்தசோழனுல் கட்டப்பட்டதன்று என்பதனை இக் கல்வெட்டு முடிவு செய்வ தாக உளது. 'கல்வெட்டு' தமிழ்நாட்டரசு தொல்பொருள் ஆய்வுத் துறையின் நாலாண்டிதழ், இதழ் 2 ஆனந்தஆண்டு ஆடித்திங்கள். திருவையாற்றிற்கு மேற்கே ஒரு கல் தொலைவிலுள்ள திருநெய்த்தானத்துக் கோயிலிலும் இவ் வேந்தனது கல் வெட்டொன்று உளது.

களையும் பல்லவன் துரத்திச் சென்று கடம்பூர், வெறியலூர், வெள்ளாறு, பழையாறு என்னும் இடங்களில் முழுவதுமாகத் தோற்கடித்துப் பாண்டிய நாட்டு எல்லையை அடைந்தான் என்று நந்திக்கலம்பகம் சான்று பகர்கின்றது. பின்னர், பாண்டிய நாட்டின் எல்லையிலமைந்துள்ள குறும்பில் (கோட்டையினுள்) ஒளிந்துகொண்ட பாண்டியப் படையை மீண்டும் பல்லவன் தோற்கடித்தான் என்று நந்திக்கலம்பகம் கூறுகின்றது.[1] தெள்ளாற்றுப் போரின் தொடர்ச்சியாக நடைபெற்ற இப் போர்களைப்பற்றிச் சாசனங்களில் குறிப்புகள் காணப்பெறவில்லை. எனவே, இதனை நாம் உறுதியாகக் கொள்ள இயலவில்லை

**ஆனூர்ப் போர் :** தெள்ளாற்றுப் போரில் பெருவெற்றி பெற்ற நந்திவர்மன், மேலும் பாண்டியரை ஒடுக்க விரும்பி, கொங்கு நாட்டின்மீது படையெடுத்தான். கொங்கு நாட்டைக் கைப்பற்றும் நோக்கத்துடன் கொங்கு நாட்டில் நுழைந்த பல்லவனுக்கும், சீமாற சீவல்லபனுக்கும் ஆனூர் என்னுமிடத்தில் பெரும் போர் நிகழ்ந்தது. அடல் ஆனூரில் பல்லவரைப் பாண்டியன் தோற்கடித்ததாகக் கூறப்பெறும் ஆனூர், கோயம்புத்தூர் மாவட்டம், ஈரோடு-காங்கயம் பெருவழியில் நொய்யலாற்றங்கரையில் உள்ள பழையகோட்டைக் கருகில் உள்ள ஆனூராகவே இருத்தல் வேண்டும்.[2] இவ்வானூர் இன்றும் ஒரு தொன்மைமிக்க ஊராகவே காணப்படுகிறது. இவ்வூரில் கோட்டைகள் இருந்ததற்கான அடிச்சுவடுகள் இன்றும் காணப்படுகின்றன. பழைய கோட்டையின் பழம்பெயரும் ஆனூரேயாகும். இங்கு வாழ்ந்துவரும் பழைய கோட்டைப் பட்டக்காரரது முன்னோர் பலர் பாண்டியரது படைத்தலைவர்களாகப் பணிபுரிந்து பட்டயங்கள் பல பெற்றுள்ளனர்.[3]

1 நந்திக்கலம்பகம் - செய்யுள் 25, 27, 19, 22, 61, 31, 4.

2 11,12-12-76 தேதிகளில் கோவையில் நடைபெற்ற கோவை மாவட்ட வரலாற்றுக் கருத்தரங்கில் திரு, சு. வேலுச்சாமி அவர்கள் வாசித்த 'ஆனூர்ப் போரும் வெற்றிச் சின்னமும்' என்னும் கட்டுரை. (ஆனூர்-ஆனூர்-கொங்கு நாட்டில் நொய்யலாற்றங்கரையைச் சேர்ந்தது - பெருந்தொகை, பக். 612) ஆனூரில் 'ஆனூர் அம்மன் கோயில்' என்னும் பெயரில் கோயில் ஒன்றுண்டு.

3 'இத்தரை மீதினிற் சேனைபதி யாயிருந்து வெற்றி
ஒத்துவரப் பெற்றதற்கா தனக்கு இங்கு உறு பெயராம்
உத்தம சோழனென்று அன்பாற் தரப்பெறும் ஓங்குபட்ட
வர்த்தனன் வாழ்வுறு ஆனூர்திகழ் கொங்கு மண்டலமே'
(கொங்கு மண்டல சதகம்-87. முத்துச்சாமிக்கோனூர் பதிப்பு:
'ஆனூர் புரக்கவும் விக்கிரமக் கோட்டை அழிக்கச் சொட்டை
வீனூர் புரக்கவும் உத்தம சோழனை வென்றனென்று
தானூர் புரக்கின்ற சர்க்கரை பாண்டியன் தந்த பட்டம்
வானோர் புரக்கக் கலிதடுத்தான் கொங்கு மண்டலமே'
(கொங்கு மண்டல சதகம்-வாலசுந்தரக் கவிராயர்)

ஆணூர்ப் போர் ஏறத்தாழ கி. பி. 858-ல் நிகழ்ந்திருத்தல் வேண்டுமென ஊகிக்கலாம்.

பல்லவர்க்கும் பாண்டியர்க்கும் நடைபெற்ற இப் போர் கடுமையானதொரு போராகும். இப் போரில் எண்ணிறந்தோர் இறந்தனர். இதனுல் செருக்களம் செங்களமாயிற்று. குருதி படிந்த இக்களம் இன்றும் செங்குளம் என்றழைக்கப்படுகின்றது இப்போர்க்களத்திலிருந்து தோற்றோடிய படையைப் பாண்டியப் படை அறச்சலூர் மலையின் மேற்கு முனையில், ஆணூரில் இருந்து நான்கு கல் தொலைவில் மீண்டும் தாக்கி முழுவெற்றி பெற்றது. ஆணூரில் அம்மன் கோயிலும், அறச்சலூர் மலையின் மேற்கு முனையில் கொற்றவைக்கோயிலும் இருத்தலைக் கொண்டு இவ்விரண்டும் இப் போரின் நினைவுச் சின்னங்களாக எடுக்கப் பட்டிருத்தல் கூடுமோ என்ற ஐயம் எழுகின்றது. இக் கோயிலுக் கருகில் உள்ள முருகத்தொழு பிரம்மேஸ்வரமுடையார் கோயிலில் காணப்பெறும் சுந்தர பாண்டியனது கல்வெட்டு இக் கொற் றவைக் கோயிலைப் 'பிடாரி கோயில்' என்று குறிப்பிடுவது நினைவு கூரத்தக்கதாகும்.

பல்லவரின் சாசனங்களில் ஆணூர் போர்பற்றிக் குறிப்பிடப் பெருததால், பல்லவர்கள் பாண்டியனிடம் தோல்விபெற்றதாகக் கருதுவதில் தவறேதுமில்லை. பல்லவர்கள் வெற்றிபெற்றதாகக் கூறப்படும் போர்க்களங்களின் பெயர்கள் பாண்டியரது சாசனங் களில் குறிக்கப் பெறவில்லை; பாண்டியர்கள் வென்றதாகக் கூறப் படும் போர்க்களங்கள்பற்றிய குறிப்புகள் பல்லவரது சாசனங் களில் இடம் பெறவில்லை. இதனுல் பாண்டியர் - பல்லவர் போர்கள் அடிக்கடி நிகழ்வுற்றதென்றும், இவற்றுள் தமக்குச் சாதகமாக அமைந்த போர்களை மட்டும் தத்தமது சாசனங்களில் குறித்துக் கொண்டனர்போலும் எனக் கருதலாம்.

### குடமுக்குப் போர்

ஆணூர்ப் போரினை அடுத்துப் பாண்டியப் படையும் பல்லவப் படையும் மீண்டும் குடமுக்கு என்னும் இடத்தில்

---

'காரை ஆணூர் மாபழங் கோட்டையில்
கதித்தமுடி மன்னனுக
கனிவுடன் கொங்கினைக் காத்து நீடுழியாய்க்
களிப்புடன் வாழுமென்று'
(பட்டக்காரர் முன்னேர் ஒருவரின் முடிசூட்டு விழாபற்றிய பழம் பாடல்)

[5]பட்டக்காரர் மரபினர் வழிவழியாகச் சர்க்கரை, உத்தம காமிண்டன், மன்ருடியார் என்ற பட்டங்களைக் கொண்டு விளங்குகின்றனர். இக்குடி முதல்வன் கரியான் சர்க்கரை என்பவன். அவன் உத்தமசோழனை வென்றதற்காகப் பாண்டியன் மகிழ்ந்து அளித்த பட்டம் 'உத்தம காமிண்டன்' என்பதாம்.

புலவர் குழந்தை—கொங்குநாடு—பக். 166.

போர் புரிந்தான. இப் போர் ஆனூர்ப் போர் முடிந்த சில ஆண்டுகள் கழித்து நடந்ததாகக் கொள்ளலாம்.

**காரணம்**

பாண்டியர்க்கும் பல்லவர்க்கும் குடமுக்கில் போர் ஏற்படக் காரணம் யாது? என்பதனை அறுதியிட்டு உறுதியாகக் கூற இயலவில்லை. ஒருவேளை சீமாறன், பராந்தக வீரநாராயணனுக்கு இளவரசுப்பட்டம் கட்டியதால், வெகுண்டெழுந்த மாய பாண்டியன் (இரண்டாம் வரகுணன்) பல்லவரிடம் அடைக்கலம் புகுந்து, பாண்டிய அரசினைத் தனக்கு மீட்டுத் தரும்படி பல்லவரை வேண்டியிருக்கலாம். மாயபாண்டியனைக்காட்டிலும் வீரநாராயணன் ஆற்றலும் வீரமும் மிக்கவன். தெள்ளாற்றுப் போரில் கிடைத்த தோல்வியை, ஆனூர்ப் போரில் வெற்றியாக மாற்றுவதில் வீரநாராயணன் பெரும்பங்கு வகித்திருத்தல் வேண்டும். இதன் காரணமாக ஆனூர்ப் போருக்குப் பின் வீரநாராயணன், சீமாறனால் இளவரசனாக அமர்த்தப் பெற்றிருத்தல் வேண்டும். சிகண்டன் வலிமைமிக்க வேந்தனாக (தொண்டை நாட்டின்) இருந்த காரணத்தால் அவனது பேரனையே (அக்கள நிம்மடிக்கும் சீமாறனுக்கும் பிறந்தவன்) சீமாறன் இளவரசனாகத் தேர்ந்தெடுத்ததில் வியப்பில்லை. மாய பாண்டியன் மூத்த மகனாக இருந்தபோதிலும் திறமையற்றவனாகக் காணப்பட்ட காரணத்தால் அவனது உரிமை மறுக்கப்பட்டது. தனது உரிமை மறுக்கப்பட்டதால் மாயபாண்டியன் கிளர்ந்தெழுந்திருத்தல் வேண்டும். பராந்தக வீரநாராயணன் ஏறத்தாழ கி.பி. 858-59-ல் இளவரசனாக அமர்த்தப் பெற்றிருக்கலாம். இவன் கி.பி. 862-க்கு முன்பே இளவரசனாக அமர்த்தப்பட்டான் என்பது மட்டும் உறுதி. மாயபாண்டியனுக்குத் துணைபுரிய எண்ணிய நந்திவர்மன் சீமாறசிவல்லபனுக்கெதிராக பெரும்படை திரட்டினான். கங்கர், சோழர், காலிங்கர், மாகதர் ஆகியோரின் உதவியையும் பெற்ற பல்லவன் பாண்டியரது படையைக் குடமுக்கு என்னுமிடத்தில் எதிர்த்தான்.

இக் கூட்டிணைவுப் படையினைக்கண்டு சிறிதும் அஞ்சாத பாண்டியப்படை வீராவேசங் கொண்டு பகைஞர்களைக் கடுமையாகத் தாக்கிப் புறங்காட்டியோடச் செய்தது.[1]

[1] 'திருமாறன் திருவல்லபன் கும்பகோணத்தில் கங்கர, பல்லவர், சோழர், காலிங்கர், மகதர் ஆகியோரைத் தோற்கடித்தது மட்டுமன்றி, விழிஞம் என்ற இடத்தில் சோரனையும் தோற்கடித்தான். அதிலிருந்து இம் மன்னன் திருமாறத் திருவல்லபன் என்ற பெயர்பெற்றான். இவ்விதமாகப் பாண்டியர்கள் 'தமிழ் நாடு தமிழருக்கே' என்ற விருதுவாக்கின் உண்மையை எண்பித்தார்கள்' பண்டாரகர். மு. ஆரோக்கியசாமி, 'தமிழ்நாட்டு வரலாறு' பக்கம் 51,

இவ்விதம் மாற்றார் பலரைத் தனித்து நின்று தாக்கி, வெற்றிப் பாதையினை நோக்கி வீரநடைபோட்ட பாண்டியரின் வீரம் போற்றுதற்குரியதொன்றாகும். இப் போரில் சீமாறன் சீவல்லபன் வெற்றிபெற்ற நிகழ்ச்சியினைச் சின்னமனூர்ச் செப்பேடு சிறப்பித்துப் பேசுகின்றது.[1] பல்லவ வேந்தன் பாண்டி வேந்தனிடம் தோற்ற செய்தி நந்திவர்மனின் புதல்வனான நிருபதுங்க வர்மனின் வாகூர்ச் செப்பேடுகளாலும்[2] உறுதி செய்யப்பெறுகிறது. இவண் குறிக்கப்பெற்றுள்ள குடமூக்கு இந்நாளில் கும்பகோணம் என அழைக்கப் பெறுகிறது. இதனைக் கும்பகோணத்திலுள்ள கோயில்களில் காணப்படும் கல்வெட்டுகளாலும், சைவநாயன்மார்களின் பாடல்களாலும் அறியலாம். அண்மைக் காலத்தில் கண்டுபிடிக்கப்பட்ட தளவாய்புரச் செப்பேடுகளும் இப் போர் குடந்தையில் நடைபெற்றதாகவே குறிப்பிடுவதனால் அக் காலத்தில் குடமூக்கு என்பதும் குடந்தையென்பதும் கும்பகோணத்தையே குறித்தனவென்பதனையறியலாம்.

**சிறப்புப் பெயர்கள்:** இவன் மேற்கிலுள்ள குட்டுவர் (சேரர்), கிழக்கிலுள்ள சோழர், தெற்கிலுள்ள கூபகர், வடநாட்டவர் ஆகியோரைக் குடந்தைப் போர்க்களத்தில் வென்றழித்து, அமர் வல்லான் மகன்மீது தன் யானை ஒன்றினைச் செலுத்தி, அவனை அழித்தான். 'யம்புரசீலன் ஒளிர் இலை வேல் உபாய குதூளன்' ஆகிய இவன் வானுலகு சென்றபின் வரகுணன் ஆட்சியினை மேற்கொண்டான் என்று தளவாய்புரச் சாசனம் குறிக்கின்றது. இச் செப்பேட்டால் இவ் வேந்தன் 'யம்புரசீலன்' 'உபாய பஹீலன்' என்னும் சிறப்புப் பெயர்களைப் பெற்றிருந்தானென்று தெரிகிறது. இவன் 'அவனியசேகரன்' என்னும் சிறப்புப் பெயரினைப் பெற்றிருந்தான். இப் பெயரால் 'அவனிய சேகர மங்கலம்' என்னும் ஊரொன்றுளது. அது தற்போது 'அணியாபரணநல்லூர்' என வழங்கும் ஊராகவிருக்கலாமோ எனச் சிலர் ஐயுறுகின்றனர்.[3]

1 'கொங்கலர் பொழிற் குடமூக்கிற் போர் குறித்து
வந்தெதிர்ந்த கங்கபல்லவ சோள காலிங்க மாகதாதிகள்
குருதிப்பெரும் புனற்குளிப்பக் கூர்வெங்கணை தொடைநெகிழ்த்துப்'
சின்னமனூர்ப் பெரியசெப்பேடு. பாண்டியர் செப்பேடுகள் பத்து பக்கம். 169. வரி. 1–3.

2 Epi. Ind. Vol. XVIII, No. 2.
வாகூர்ச் செப்பேட்டில் இவனது தந்தையின் 'தெள்ளாற்றுப் போர்' குறிக்கப் பெறாதது விந்தையாக உள்ளது. இதனால் தெள்ளாறெறிந்த நந்திவருமன் வேறொருவனாயிருத்தல் வேண்டுமென்று கருதலாம். திரு. டி. என். சுப்பிரமணியன் அவர்களும் இவ் வெற்றியைப் பராந்தக சோழனின் உடன் காலத்தவனான நந்திவருமனுக்கே அளிக்கிறார். (தென்னிந்திய கோயிற் சாசனங்கள், பாகம் 3. பகுதி-1 பக். Xcix)

3 'தமிழக வரலாறு' – அறுவர் சொற்பொழிகள். 1972. கழக வெளியீடு, பக். 214.

மேற்கூறப்பட்ட போர் நிகழ்ச்சிகளைத் தளவாய்புரச் செப்பேடும்,

'...... செங்கண்மால் ஸ்ரீவல்லபன்
வேய்போலுந் தோளியர்கேள் வித்யாதர ஹிரண்ய கர்ப்பன்
குண்ணூரி லமர்வென்றுங் குரைகடலீ ழங்கொண்டும்
விண்ணுள வில்லவற்கு விழிநித்து விடை கொடுத்தும்
காடவனைக் கடலானூர்ப் பீடழியப் பின்னின்றும்
குடகுட்டுவர் குணசோழர் தென்கூபகர் வடபுலவர்
அடலழிந்து களஞ்சேர அமர்வல்லான் மகன் படத்தன்
களிறுன்று வண்குடந்தைக் கதிகாட்டி யம்புரசிலன்
ஒளிநிலைவேல் உபாயபஹீலன் உம்பர்வான் உலகணைந்த
பின்'[1]

எனச் சித்திரிக்கின்றது.

அடுத்து, இப் போரில் இவனால் அழிக்கப்பட்டதாகக் குறிக்கப் பெறும் 'அமர் வல்லான் மகன்' யாரென்பதனை அறிந்து கொள்ள இயலவில்லை. இவன் குடந்தைப் போரில் பெற்ற வியத்தகு வெற்றியும், கடல் கடந்து சென்று இலங்கையில் பெற்ற வெற்றியும் இவனுக்குப் 'பரசக்கர கோலாகலன்' என்னும் சிறப்புப் பெயரினை ஈட்டித் தந்தது போலும்.

மேற்கூறிய வெற்றிகளுக்குப்பின் இம் மன்னன் திருமாறத திருவல்லபன் (சீமாற சீவல்லபன்) என்னும் பெயர் பெற்றானென்று வரலாற்றறிஞர் திரு. மு. ஆரோக்கியசாமி அவர்கள் கருதுகின்றார்.[2]

இவ் வேந்தனது வெற்றிகள் வரலாற்று முக்கியத்துவம் கொண்டவையாகும். இதனை "இவ்விதமாகப் பாண்டியர்கள் 'தமிழ்நாடு தமிழருக்கே' என்ற விருது வாக்கின் உண்மையை எண்பித்தார்கள்; ஆனால், வெற்றி கண்ட திருமாறத் திருவல்லபன் அதிக நாள் தன் வெற்றியைக் கொண்டாடக் கூடவில்லை" என்பதனைப் பண்டாரகர் மு. ஆரோக்கியசாமி அவர்களது கூற்றாலறியலாம்.[3]

சோணாட்டின் பகுதியாம் குடமூக்கில் பாண்டியர் வெற்றி பெற்ற போதிலும் பாண்டியராட்சி தஞ்சை மாவட்டத்தின் மத்தியப் பகுதியில் மட்டுமே வலுப்பெற்றிருந்தது. பாண்டியரது கல்வெட்டுகள் அக் காலத்தில் தஞ்சை மாவட்டத்தின்

1 பாண்டியர் செப்பேடு பத்து, பக். 125, வரி 27-35.
2 பண்டாரகர். மு. ஆரோக்கியசாமி 'தமிழ்நாட்டு வரலாறு', பக். 51.
3 Ibid; page 52.

பல பகுதிகளிலும் காணக்கிடைத்தலின் அவர்களது ஆட்சி ஆங்கு நிலைபெற்றிருந்ததென்பது புலனாகின்றது. இருப்பினும் எல்லையோரப் பகுதிகளில் பாண்டியரின் மேலாதிக்கம் நிலையாக வேரூன்றாத காரணத்தால் அப் பகுதிகளில் பாண்டியர்க்கும் பல்லவர்க்கும் அடிக்கடி போர் நிகழ்ந்து வந்ததனை ஈண்டு நாம் நினைவிற் கொள்ளுதல் வேண்டும். மேலும், இக் காலத்தில் காவிரிக்கரையிலும், தஞ்சைப் பகுதியிலும் முத்தரையரென்னும் வலிமைமிக்க சிற்றரசர் ஆண்டு வந்தனரென்றும், இவரது ஆதரவினைப் பல்லவரும் பாண்டியரும் பெறுவதில் நாட்டம் கொண்டிருந்தனரென்றும், முத்தரையரது ஆதரவினைப் பெற்றவர் வெற்றி வாய்ப்பினைப் பெற்றனரென்றும் நாம் ஊகிக்கலாம். முத்தரையரது ஆட்சிப் பகுதி பாண்டிய நாட்டிற்கும் பல்லவ நாட்டிற்கும் இடையே அமைந்திருந்தது. இதனால் இவர்களது துணைப் படையினைப் பெறுவதற்குப் பாண்டியரும் பல்லவரும் முனைந்தனரெனலாம். இதன் காரணமாகத்தான் முத்தரையர் சிலகாலம் பாண்டியருக்காகவும் சிலகாலம் பல்லவருக்கு ஆதரவாகவும் போர் நிகழ்த்தினர் எனத் தெரிகிறது. இக காலக் கட்டத்தில் பாண்டியர் உயர்ச்சி பெற்று வந்தமை, பாண்டிய பல்லவப் போராட்டத்தின் ஒரு குறிப்பிடத்தகக நிகழ்ச்சியாகும்.

குடமுக்குப் போரில் பல்லவர் தோற்றதால், மாயபாண்டியனின் எண்ணம் நிறைவேறாமல் போயிற்று. பல்லவரின் உதவியை மட்டும் கொண்டு பாண்டியரை வீழ்த்த முடியாது என்று கருதிய மாயபாண்டியன் ஈழவேந்தனின் உதவியை நாடினான். ஈழவேந்தனும் இரண்டாம் சேனனும் மாயபாண்டியனை அன்புடன் வரவேற்று, பாண்டிய அரசினை அவனுக்கு மீட்டுத் தருவதாக உறுதி கூறினான். தனது சிற்றப்பனின் ஆட்சிக் காலத்தில் (முதலாம் சேனன்) சீமாற சீவல்லபன் ஈழ நாட்டில் பேரழிவினை நிகழ்த்திய செய்தி அவனது இதயத்தில் நிழலாடிக் கொண்டிருந்தது. சீமாறனைப் பழிவாங்க இதுவே தக்க தருணம் எனக் கருதி தனது பெரும் படையுடனும், மாய பாண்டியனுடனும் தமிழகம் நோக்கிப் புறப்பட்டான் இரண்டாம் சேனன்.

தமிழகத்திற்கு வந்த ஈழப் படையின் தலைவனாகக் குத்தகா (குட்டகா) என்பான் நியமனம் செய்யப் பெற்றிருந்தான். ஈழப் படையினர் பல்லவ வேந்தனும் நிருபதுங்கவர்மனுடன் உடன்பாடு செய்து கொண்டதாகத் தெரிகிறது. பொது எதிரியான சீமாற சீவல்லபனை எதிர்க்க இவ்விருவரும் உடன்பட்டதில் வியப்பில்லை. பாண்டிய நாட்டின் ஈழவர் தென்புறத்திலிருந்தும்,

பல்லவர் வட புறத்திலிருந்தும் தாக்கினர்.[1] பாண்டியர்க்கும் பல்லவர்க்குமிடையே அரிசிலாற்றங்கரையில் இறுதிப்போர் நடைபெற்றது. (இப் போர்பற்றி இந் நூலின் இரண்டாம் பாகத்தில் 'பாண்டியனின் வெளிநாட்டுறவு' என்னும் தலைப்பில் விரிவாகக் காணலாம்).

அரிசிலாறு, கும்பகோணத்திற்கருகில் உள்ளது. இது கும்பகோணத்திற்குத் தென்புறமாக ஓடிக் காரைக்காலுக்கு அருகில் கடலுடன் கலக்கிறது. இவண் குறிக்கப்பெறும் அரிசிலாற்றங்கரை, கும்பகோணத்திற்குத் தென்கிழக்கே நான்கு கல் தொலைவில் உள்ள அரிசிலாற்றின் தென்கரையிலுள்ள அரிசிற்கரைப் புத்தூராயிருத்தல் வேண்டும். மூன்றும் நந்திவர்மப் பல்லவனின் மைந்தனை நிருபதுங்கவர்மன் பல்லவரின் சார்பாகப்படை நடத்திச் சென்றான்.

அரிசிற்கரைப் போரில் பல்லவர் பெருவெற்றி பெற்றனர். பாண்டியன் சீமாறன் தோல்விகண்டான்; இந் நிலையில் ஈழப் படை மதுரையைத் தாக்கியது. இதனைக் கேள்வியுற்ற பாண்டியப்படை மதுரையை நோக்கி ஓடியது. பாண்டியப் படை தோற்கடிக்கப்பட்டது. சீமாற சீவல்லபன் மதுரையனின்றும் தப்பியோடி கழுதூரில் அடைக்கலம் புகுந்தான்.

ஈழப் படைத்தலைவனை குத்தகன், வரகுணனைப் பாண்டிய அரியணையில் அமர்த்தியதாக மகாவம்சம் கூறுகின்றது.[2]

சீமாற சீவல்லபன் போர்க்களத்தில் கொல்லப்பட்டான் என்று வரலாற்றறிஞர் பலரும் கருதுகின்றனர். பராந்தகப் பாண்டியரின் செப்பேட்டு அடிகளை இதற்கு ஆதாரமாகக் காட்டுவர் அறிஞர்.[3] திருவாளர்கள் டி. என். சுப்பிரமணியன், கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியார், தி. வை. சதாசிவ பண்டாரத்தார், கே.கே பிள்ளை முதலானோரும் இவன் போர்க்களத்தில் இறந்ததாகவே குறிப்பிடுகின்றனர்.[4] இவன் கி. பி. 862-ல்

1 Pillay, K. K., 'South India and Srilanka' p.p. 59–60.

2 சூளவம்சம், அத்தியாயம் 51, சுலோகங்கள் 34–35.

3 'ஒளிநிலை வேலது பாயபகு............உம்பர்வான் உலகணைந்த பின்.'

4 'இரண்டாம் சேனன் பாண்டிய நாட்டின்மீது படையெடுத்துவந்த காலத்தில் யானைமீதமர்ந்து போராடிக் காயமுற்று அதனால் பிறகு இறந்த பாண்டிய மன்னன் இந்த சீவல்லபனாகவே இருத்தல் வேண்டும்.' திரு. டி. என். சுப்பிரமணியன் 'தென்னிந்திய கோயிற் சாசனங்கள்: பாகம் 3, பகுதி 1, பக்.CIII Pillai, K. K., 'South India and Sri Lanka' page 58. Sastry, K. A., 'தென்னிந்திய வரலாறு' முதல் பாகம், பக்கம் 253 (மு. ரா. பெருமாள் அவர்கள் தமிழாக்கம்—தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை).

இறந்துபட்டான் என்பதனை ஐவர்மலைக் கல்வெட்டால் அறியலாம்.[1]

பாண்டியர் செப்பேட்டுச் சாசனங்களை நுண்ணிதின் ஆய்ந்து பார்க்குங்கால் இவன் கழுதூரில் இறந்ததாகத் தெரிகிறது. இதனை ஈண்டு நாம் ஆய்வோம்.

சீமாறன் சீவல்லபனுடைய இரண்டாம் புதல்வன் பராந்தகன் வீரநாராயணன் ஆவான். இவ் வீரநாராயணனுடைய 7ஆம் ஆண்டுக்குரியதான தளவாய்புரம் செப்பேடுகளில் ஒரு காலத்தே பாண்டிய மன்னர் இருவர் செய்த தானச் செயல்கள் குறிக்கப்பட்டுள்ளன. இருவருள் ஒருவன் கடுங்கோன்; மற்றொருவன் பெயர் தமிழ்ப் பகுதியில் குறிப்பிடப் படவில்லை.

'நின்குல முதல்வன் மைப்படுகண் மடமகளிர் மதவேள் மனுசமானன் வழுவாத செங்கோல் நடவி மண்மகட்கொரு கோவாகிக் கழுதூரில் சித்தி செய்த கடிக்கூடல் நகர்க்காவலன்' என்னும் பாண்டியன் சோமாசிகுறிச்சி என்னும் ஊரைக் காடக சோமாசியார் என்பவருக்குத் தானமாகத் தந்ததாகத் தமிழ்ப் பகுதி கூறுகிறது. இப் பகுதியால் இவ்வறச் செயல் ஆற்றிய அரசன் கழுதூர் என்னும் இடத்தில் இறந்தவன் என்பது அறியப்பெறும். வடமொழிச் சாசனத்தின் 27ஆம் சுலோகம் 'தெய்வ உலகம் சென்ற உன் (பராந்தகன் வீரநாராயண) னுடைய தந்தையால் கழுதூர் நிவாசத்தில் இருந்து காடக சோமாசியாருக்கு ஒரு கிராமம் தானமாகத் தரப்பட்டது' (தானமளித்தவன் சீமாற சீவல்லபன்) என்று கூறுகிறது. இவ்விரு பகுதிகளையும் இணைத்து நோக்குங்கால், பராந்தக வீரநாராயணனின் தந்தையாகிய சீமாறன் சீவல்லபன் தன் முதுமைப் பருவத்தில் கழுதூர் என்னும் இடத்தில் தங்கியிருந்தான; தானம் பல செய்தான்; கழுதூரில் இறந்தான் என்னும் அரியதோர் புத்துண்மை புலனாகும்.

பாண்டியர்-பல்லவரின் நீண்ட நெடும் போராட்டத்தில் வெற்றியும் தோல்வியும் மாறி மாறி நிகழ்ந்தபின், அரிசிற்கரைப் போரினால் பல்லவர் வலிமை பெற்று சோழ நாட்டின் வட பகுதியினை மறுபடியும் தன்னாட்டுடன் இணைத்துக் கொண்டனர். நிருபதுங்கவர்மனது கல்வெட்டுகள் லால்குடி, கண்டியூர், ஆலம்பாக்கம், திருச்சின்னம்பூண்டி, திருக்கோடிகா ஆகிய ஊர்களில் காணப்படுதலின் இக் கருத்து உறுதி பெறுகிறது. இது

[1] Ins. 705 of 1905.

பல்லவர் வளர்ச்சியையும் உயர்ச்சியையும் நன்கு எடுத்துக் காட்டுகின்றன. இப் போர் நிகழ்ச்சியினை நிருபதுங்கவர்மனின் வாகூர் செப்பேடுகள் மிகத் தெளிவாக விளக்குகின்றன.

சீவல்லபனுக்கு வெற்றியும் தோல்வியும் மாறி மாறிக் கிட்டிய போதிலும், இவன் ஈடிணையற்ற வேந்தனென்பதில் சிறிதும் ஐயமில்லை. தனது தந்தையான வரகுண பாண்டியன் தன்னிடம் விட்டுச் சென்ற பாண்டியப் பேரரசினைக் காத்தோம்பியதோடு நில்லாமல் நிலையான ஆட்சியினை நிறுவிய சீமாறன் சீவல்லபன் மாமன்னனெனப் போற்றப் பெறுகிறான். இருப்பினும் இவனது ஆட்சிக் காலத்தின் பிற்பகுதியில் பல்லவர்களின் கை ஓங்கியிருந்தது என்பது குறிப்பிடத்தக்க தொன்றாகும்.

பாண்டியரது மேலாண்மைக்குட்பட்ட சோணாட்டின் வட பகுதியில் நந்திவர்மனது. கல்வெட்டுகளும், அவனது மகனான நிருபதுங்கவர்மனின் கல்வெட்டுகளும் காணப்படுவதால், பாண்டிய - பல்லவப் போராட்டம் சோணாட்டின் எல்லைப் புறங்களில் நிகழ்ந்து கொண்டிருந்தனவென்றும், இவற்றில் வெற்றி மங்கை இருவரையும் மாறி மாறி முத்தமிட்டாளென்பதும், இறுதியில் பல்லவர் உயர்ச்சி பெற்றனர் என்பதும் அறியப்படுகின்றன.

சீவல்லபன் தனது ஆட்சியின் தொடக்கக் காலத்தில் பல்லவருக்கெதிராகச் சில வெற்றிகள் பெற்றபோதிலும், பிற்பகுதியில் பல்லவரின் உயர்ச்சியைத் தடுக்கவியலாது தடுமாறினான். இதனால் இவனது ஆட்சியின் பிற்பகுதியில் பல்லவருக்கு ஈடு கொடுக்க இயலாததொரு சூழல் உருவாயிற்று.

இவ் வேந்தனுக்கு வரகுணன், பராந்தகன் என்னும் புதல்வர்கள் இருந்தனர். புகழ்பெற்று விளங்கிய இப் பேரரசினைக் கல்வெட்டுகள் சிறப்பித்துப் போற்றுகின்றன.

புதுக்கோட்டைக்கருகிலுள்ள சிற்றண்ணவாயில் சமணக் குகைக் கோயில் கல்வெட்டொன்று[1] இவ் வேந்தனை,

'பார்முழுதாண்ட பஞ்சவர் குலமுதல்
ஆர்கெழுவைவேல் அவனிப சேகரன்
சீர்கெழு செங்கோல் சீவல்லபன்'

என்று பாராட்டிப் பாடுகின்றது. இக் கல்வெட்டினைக்கொண்டு இவன் 'அவனி சேகரன்' எனும் சிறப்புப் பெயரினைப் பெற்றிருந்தா

1 'சாசனத் தமிழ்க்கவி சரிதம்' பக். 32. Ins. 368 of 1904.

னென்பது புலனாகின்றது. இவனது கல்வெட்டொன்று சிற்றண்ணவாயிலில் காணப் பெறுகிறது. இதன் மூலம் திருச் செந்தூர் வட்டத்திலுள்ள (Taluk) ஆற்றூர் சேந்தமங்கலம் என்னும் ஊர் இவ் வேந்தனின் சிறப்புப் பெயரான அவனிப சேகரன் நினைவாக 'அவனிப சேகர சதுர் வேதி மங்கலம்' என்றழைக்கப்பட்டதாக அறிகிறோம்.[1] இதனைப் போன்று சீவல்லப வளநாடு என்பதும் இவனது பெயரால் அழைக்கப் பட்டது.[2] இவனது ஆட்சிக் காலத்தில் இவனது பெயரால் 'அவனிப சேகரன் கோளகை' என்னும் பொற்காசும் பாண்டி நாட்டில் புழக்கத்திலிருந்ததாகத் தெரிகிறது.[3] இவனால் சீவலப் பேரி (ஸ்ரீவல்லப ஏரி) என்று ஒரு ஏரி வெட்டப்பட்டது. இதனை யடுத்து இருந்த ஊரும் இப் பெயரையே பெற்றது.

**கலைக் காவலன்**

போற்றுதலுக்குரிய ஆற்றல் மறவனாகவும், நல்லாட்சியாள னாகவும் திகழ்ந்து பாண்டியப் பேரரசின் பெருமையினை அவனி முழுவதுமறியச் செய்த அவனிப சேகரனை இவன் கலைகளைக் காத்தோம்பும் கலைப் புரவலனாகவும், கலையிலே ஈடுபாடு கொண்ட கலைஞனாகவும் திகழ்கிறான். நுண்கலைகளின் வளர்ச்சிக்கு அயர்ச்சியற்ற முறையில் உழைத்த இவ் வேந்தனது ஆட்சிக் காலத்தினை ஓவியக் கலையின் பொற்காலமென்றே துணிந்து கூறலாம். ஈண்டு நாம் இவ் வேந்தனது ஆட்சிக் காலத்தில் பெரிதும் வளர்ச்சிப்பெற்று, உயர்ச்சி பெற்றுத் திகழ்ந்த ஓவியங் களின் சிறப்பு யாது? அவை யாண்டுளன? என்பனவற்றைக் காண்போம்.

**சித்தண்ணவாசல் ஓவியங்கள்**

அண்மையில் புதிப மாவட்டமாக உருப்பெற்ற புதுக் கோட்டை மாவட்டத்தில் சித்தண்ணவாசல் என்னும் கிராமம் அமைந்துள்ளது. புதுக்கோட்டையிலிருந்து வட மேற்கே ஒன்பது கல் தொலைவில் அமைந்துள்ளதுதான் சித்தண்ணவாசல். இது ஒரு சமணத் தளம் ஆகும். இங்குள்ள செங்குத்தான மலை யொன்றில் குடையப்பட்ட மண்டபத்தில்தான் கண்ணைக் கவரும் வண்ண வண்ண ஓவியங்கள் தீட்டப் பெற்றுள்ளன.

**தாமரைத் தடாகம் !** சமணர் சுவர்க்கங்களில் ஒன்றான சாமவசரண மண்டபத்திற்குச் செல்லும் வழியில் உள்ள

1 A.R.E. 1929-30, page. 74.
2 1bid. page-75.
3 1bid page-73 . 1ndian Antiquary, Vol. XX1, p. 323.

தாமரைத் தடாகத்தினைக் குறிப்பதாகக் கருதப்பெறும் மலர் நிறைந்த வண்ணத் தடாகம் ஒன்று மேல் விதானத்தில் வண்ணங்கள் கொண்டு தீட்டப் பெற்றுள்ளன; இத் தடாகத்தில் அல்லி, செந்தாமரை, வெண்டாமரை, ஆம்பல் முதலான அழகு மிக்க பூக்களும், பசுமையான இலைகளும், மின்னி மின்னியெழும் மீன் கூட்டங்களும், அவற்றை இரைதேடக் காத்திருக்கும் அன்னப் பறவைகளும், யானைகள், எருமைகள் முதலான மிருகங் களும், சமண முனிவர்கள் மூவரும் சிறந்த முறையில் ஓவிய மாகத் தீட்டப் பெறறுள்ளன.

### ஆடல் அணங்குகள்

அடுத்து, சித்தண்ண வாசலில் உள்ள ஓவியங்களுள் நாட்டிய மகளிர் இருவரது கவர்ச்சியான உருவகங்கள் அழகு படத் தீட்டப் பெற்றுள்ளன. இவர்களது கண்கள், உதடு, கை, விரல்கள், கூந்தல், உடை ஆகியவை அனைத்தும் போற்றத்தக்க முறையில் சித்திரிக்கப்பட்டுள்ளன. பாண்டியர் காலப் பாவையர் அணிந்திருந்த அணிகலன்களும் இவ் வோவியத்தில் நன்கு தீட்டப் பெற்றுள்ளன. இவர்கள் இருவரின் சித்திரங்கள் அர்த்த மண்டபத் தூண்களில் வரையப் பெற்றுள்ளன.

### அரசன் பட்டத்தரசி ஓவியங்கள்

வலப்புறத் தூணின் உட்புறத்தில் வரையப் பெற்றுள்ள அரசன் — அரசி ஓவியங்கள் இங்கே காணப்பெறும் சித்திரங் களுள் சிறந்தவையெனலாம். கம்பீரமான தோற்றத்தினையும் அழகிய முகத்தினையும் கொண்டு விளங்குகின்ற இவ் வேந்தனும் அரசியும், அவனிபசேகரனும் அவனது தேவியாருமே என்பது அண்மைக் காலத்தில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.[1]

'திருத்திய பெரும்புகழ் தேவ தரிசனத்து
அருந்தவ முனிவனைப் பொருட் செல்வன்
அறன்கிளர் நிலைமை இளம் கௌதமன் எனும்
வளங்கெழு திருநகர் மதுரை ஆசிரியர்
அவனிப சேகர சீர்கெழு செங்கோல் சிரீவல்லபன்'

என்ற அழகிய தமிழ்ப்பா அங்கு பொறிக்கப்பட்டிருந்தலின், இவ் வேந்தனது ஆட்சிக் காலத்தில் மதுரை ஆசிரியர் இளங் கௌதமன் என்பார் இக்குகையைத் திருப்பணி செய்வித்து,

[1] மா. சந்திரமூர்த்தி 'தமிழ்நாட்டு ஓவியங்கள்' தமிழகக் கோயிற் கலைகள், (தமிழ்நாட்டரசு தொல்பொருள்துறை வெளியீடு, ஆசிரியர்கள்: இரா. நாகசாமி, மா. சுந்தரமூர்த்தி பதிப்பு 1973 பக். 112.

ஓவியங்களைத் தீட்டியுள்ளார்[1] என்பது நன்கு புலனாகின்றது. இது சீமாறன் சீவல்லபனது காலத்ததாகும். இங்குள்ள தூண்களில் காணப்பெறும் குறிப்புச் சீட்டினைக் (label) கொண்டு, இது குறைந்தபட்சம் கி. பி. 800ஆம் ஆண்டைச் சார்ந்ததாகக் கொள்ளலாம்.[2]

தமிழ்நாட்டில் இதுகாறும் நமக்குக் கிடைத்துள்ள சிற்பங்களுள் இதுவே தலையாயதும் நிலையான புகழினைக் கொண்டுள்ளதுமாகும். எனவேதான் இதன் சித்திரச் சிறப்பைக் கண்ணுற்ற அறிஞர் பெருமக்கள், இதனைத் 'தமிழ்நாட்டின் அஜந்தா' என்று போற்றியுள்ளனர். சித்தண்ணவாசல் ஓவியத்தின் சிறப்பினைப்பற்றி விரிவாகப் 'பாண்டியர் காலக் கலைகள்' என்னும் தலைப்பில் காணலாம். வேறு அறிஞர் சிலரது கட்டுரைகளிலும் காணலாம்.[3]

**திருமலைப்புர ஓவியம்**

திருநெல்வேலி மாவட்டம் கடையநல்லூருக்கருகே உள்ள வர்ணச்சிமலை எனப் பெயர் பெறும் திருமலைப்புரக் கோயிலிலும் பாண்டியர் காலச் சித்திரத்தின் சிறப்பினைக் காணலாம். இவண் தீட்டப் பெற்றுள்ள ஓவியங்களும் இவ் வேந்தனது காலத்தைச் சேர்ந்ததேயாகும். ஏழாம் நூற்றாண்டளவில் இக் கோயில் வெட்டப்பட்ட போதிலும், இங்கு காணப்பெறும் ஓவியங்கள் இவ் வேந்தனது ஆட்சிக் காலத்தில்தான் தீட்டப் பெற்றன. பல்லவரது கலைச் சாயல் இதில் காணப்பெற்ற போதிலும் பாண்டியரின் தனிச் சாயல் தெரியாமலில்லை.

1 Annual Report on South Indian Epigraphy 369 of 1904; S.I.I. XIV, The Pandyas, No. 45 K. R. Srinivasan Proceedings of the Indian History Congress (madras) 1944, pp. 168 ff; K.R. Venkataraman Transactions of the Archaelogical Society of South India, 1956–57. pp. 87–94 and Annual Report on Indian Epigraphy 1960–61, Introduction pp. 19–20 Dr. K. V. Raman 'Some aspects of Pandyan History in the light of recent discoveries' p. 80

2 Annual Report on Indian Epigraphy, 1960–61. Introduction p. 20 The cave temple in its original design may have come into being earlier than A.D. 800.

3 1) K.R. Venkataraman 'A note on the Sittannavasal and Kudumiyamalai monuments'

2) மா. சந்தரமூர்த்தி 'தமிழ்நாட்டு ஓவியங்கள்' தமிழகக் கோயிற் கலைகள் பக்கம். 107–112.

3) பண்டாரகர் மா. இராசமாணிக்கர் 'தமிழகக் கலைகள்' பக். 23–25 இரண்டாம் பதிப்பு (1972)

4) பண்டாரகர், மா. இராசமாணிக்கர், 'பல்லவர் வரலாறு' பக்கம் 292–99 (1964)

5) மே.சு. இராமசாமி 'ஓவியம்' 'Madurai Sri Meenakshi Sundareswarar Mahakumbabhishekam–Souvenir 1963, பக். 100–104.

6) Ramachandran. T.N. 'Cave Temble and paintings of sittannavasal' Lalit Kala, No. 9 (New Delhi. 1961) p p. 34–37.

மேற்கூறியவையனைத்தும் பாண்டியர் கால ஓவியங்களின் கைவண்ணத்தையும்,[1] இவ் வேந்தன் கலைமீது கொண்டிருந்த ஈடுபாட்டினையும் நன்குணர்த்துகின்றன. இதுகாறும் பல்லவ மகேந்திரவர்மனது காலத்ததாகக் கருதப் பெற்று வந்த சித்தண்ணவாசல் ஓவியங்கள், இவ் வேந்தனது காலத்ததே என்பதனைக் கண்டறிந்த தொல்லியல் துறையினரின் பணி போற்றுதற்குரியதேயாகும். சீவலப்பேரி என்னும் ஊர் இவ் வேந்தன் தனது பெயரால் அமைத்ததேயாகும். இதன் பழைய பெயர் முக்கூடல் என்பதாகும்.[2]

## அரசியல் தலைவர்கள்

வாள் வலிமையும் தோளாண்மையும் கொண்டு வியத்தகு வெற்றிகள் பல பெற்ற இவ் வெற்றி வீரன் மக்களுக்கு நல்லாட்சி நல்கி, அவர்களைக் காத்தோம்பிய செங்கோல் வேந்தனாகவும் காட்சியளிக்கிறான். இவ் வேந்தன் தனது அமைச்சர்கட்கும் அரசியல் தலைவர்கட்கும் ஆட்சித் துறையில் நன்கு பயிற்சியளித்து அவர்களின் துணை கொண்டு மக்கள் நலம் பேணி மக்களின் நன்மதிப்பைப் பெற்றான். ஈண்டு நாம் இவ் வேந்தன் காலத்தில் நற்பணியாற்றிய ஒரு நல்லவனைப்பற்றி அறிவோம்.

சீவல்லபனது ஆட்சிக் காலத்தில் பொதுப்பணிகள் பல வற்றைச் சிறப்புறச் செய்த இவன் கூலவாணிகன் சாத்தனாரின் வழிவந்தவனாக இருக்கக்கூடுமோ என்று திரு. சதாசிவ பண்டாரத்தார் ஐயுறுகிறார்[3]. சிலர் இவனை ஒரு முத்தரைய மரபினனாகவும் கருதுவர்[4]. இவன் பல ஏரிகளையும், கிணறுகளையும், கால்வாய்களையும் வெட்டினான் என்று எருக்கங்குடிக் (இராமநாதபுர மாவட்டம், சாத்தூர் வட்டம்) கல்வெட்டுக் குறிப்பிடுகின்றது.[5] இவனைப்பற்றி விரிவாக 'அரசியல் தலைவர்கள்' என்னும் பகுதியில் காணலாம்.

## வரகுண பாண்டியன் (கி.பி. 862—880)

சீமாற சீவல்லபனுக்குப் பின் அவனது மகனான வரகுண பாண்டியன், பாண்டியப் பேரரசின் வேந்தனாக முடி புனைந்தான்.

[1] Dr. K.V. Raman, 'Some Aspects of Pandyan History in the Light of Recent Discoveries' page. 80.

[2] ஸ்ரீவல்லபபுரி என்பது சீவலப்பேரி எனத்திரிந்தது. தாமிர பரணியும் சித்திரா நதியும் சேருமிடத்தில் இவ்வூர் உளது.

[3] திரு. டி. வி. சதாசிவ பண்டாரத்தார் 'பாண்டியர் வரலாறு' பக்கம் 69-70.

[4] திரு. க. செந்தமிழ்ச் செல்வன் 'முத்தரையர் வரலாறு' பக்கம் 38-39.

[5] Annual Report for South Indian Epigraphy for 1929-30. p. 73.

இவன் சடையவர்மன்[1] என்னும் பட்டம் புனைந்து ஆட்சி புரிந்தான். இவனை இரண்டாம் வரகுண பாண்டியன் என்றும் வரலாற்றறிஞர்கள் அழைக்கின்றனர். இவனது ஆட்சிக் காலத்தில் பாண்டிய-பல்லவப் போராட்டம் உச்ச நிலையை எய்திற்று எனலாம். இவ் வேந்தனை,

'குரை கழற்கால் அரைசு இறைஞ்சக் குவலயம் தன தாக்கின
வரைபுரையும் மணிநெடுந்தோள் மன்னர்கோன் வரகுண
வர்மன்'

என்று பெரிய சின்னமனூர்ச் செப்பேடுகள்[2] புகழ்ந்துரைக்கின்றன.

**அரியணையேறிய ஆண்டு :** மதுரை மாவட்டம் ஐவர் மலையில் இவ் வேந்தனது எட்டாம் ஆட்சியாண்டினதாகிய சகம் 792-ல் வரையப்பெற்ற கல்வெட்டொன்று காணப்படுகின்றது.[3] அக்கல்வெட்டு கி.பி. 870ஆம் ஆண்டில் பொறிக்கப் பெற்றததால் வேண்டும். மேற்கூறிய கல்வெட்டால் இவ் வேந்தன் கி.பி. 862ஆம் ஆண்டில் பாண்டியப் பேரரசனாக ஆட்சியேற்றான்

[1] கல்வெட்டுகளில், இந்த வரகுணன் சடையன், மாறன் என்ற அடைமொழி எதுவுமின்றி வரகுண மகாராஜன் என்றே குறிக்கப்பட்டுள்ளான். பொதுவாக பாண்டியர் இந்தப் பட்டங்களை மாறன் சடையன் (மாறன் மகன் சடையன்) என்றோ சடையன் மாறன் (சடையன் மகன் மாறன்) என்றோ கொள்வது வழக்கம். ஆனால், வரகுணனைப் பொறுத்தமட்டில் இம் முறை பொருந்தாது. ஏனெனில், அவனது தந்தையும் மாறவர்மன். அவனும் மாறவர்மன். இதன் காரணமாகத்தான் அவன் தனக்குப் பட்டப்பெயர் எதையும் சூட்டிக் கொள்ளவில்லை போலும். மாறஞ்சடையன் எனும் அடைமொழியுடன் காணும் கல்வெட்டுகள் இவனைக் குறிக்காது. முதலாம வரகுணனையே குறிப்பனவாகும் என்று திரு. டி. என். சுப்பிரமணியம் அவர்கள் தென்னிந்திய கோயிற் சாசனங்கள் பாகம் 3-பகுதி 1, பக்கம் ciii கூறியுள்ளார்.

திரு. டி. வி. சதாசிவ பண்டாரத்தார் அவர்களோடு இவன் சடையவர்மன் என்று தமது 'பாண்டியர் வரலாறு' என்னும் நூலின்கண் பக்கம் 70-ல் கூறியுள்ளார்

'வரகுணனுக்குப் பின்னால் வந்த பராந்தக வீரநாராயணன் சடையன் ஆவான். அவனுக்குப் பின் வந்த ராஜசிம்ஹன் மாறவர்மன் ஆவான். ஆகவே, பராந்தகனுக்கு முன்னதாகப் பட்டம் எய்திய வரகுணன் ஒரு மாறவர்மனாக இருத்தல் வேண்டும். ஆனால், அவன் தந்தையான ஸ்ரீமாறன் ஸ்ரீவல்லபனே ஒரு மாறவர்மன் ஆவான். ஆகவே, ஸ்ரீவல்லபனுக்கும் அவன் மகனான வரகுணனுக்கும் இடையில் 'சடையன்' என்ற விருதைத் தாங்கிய வேறு ஒருவன் இருந்திருத்தல் அவசியம். ஈழத்து அரசனால் பாண்டிய சிங்காதனத்தில் அமர்த்தப் பெற்றவன் அவனே போலும், அவனைப்பற்றிய வேறு விவரம் ஏதும் இப்போது கிடைக்கவில்லை என்றும் திரு. டி. என். சுப்பிரமணியன் அவர்கள் 'தென்னிந்திய கோயிற் சாசனங்கள் பாகம்-பகுதி 1 (பக்கம் c iii–c iv)-ல் கூறியுள்ளார்.

திரு. டி.வி. சதாசிவ பண்டாரத்தார் அவர்களோ இவன் சடையவர்மன் என்று தமது 'பாண்டியர் வரலாறு' என்னும் நூலின்கண் பக்கம் 70-ல் கூறியுள்ளார்.

இக் கருத்துகளையெல்லாம் நுண்ணிதின் ஆய்ந்து பார்க்குங்கால் இவனை மாறவர்மனாகக் கொள்வதே பொருத்தமுடையதாகத் தோன்றுகின்றது.

[2] பாண்டியர் செப்பேடு பத்து-பக்கம். 169, வரி. 5-6. (சின்னமனூர்ச் செப்பேடு)

[3] Ins, 705 of 1905.

என்பது திண்ணம். ஆராய்ச்சியறிஞர்களான திரு. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியாரும், திரு. டி. வி. சதாசிவ பண்டாரத்தாரும் வேறு பாண்டிய மன்னர்களின் ஆட்சித் தொடக்க ஆண்டினைக் குறிப்பிடுவதில் கருத்து வேறுபாடு கொண்டிருப்பினும், இவ் வேந்தன் கி. பி 862ஆம் ஆண்டில் முடி புனைந்தான் என்பதில் ஒருமித்த கருத்தினைக் கொண்டுள்ளனர். எனவே, இரண்டாம் வரகுணவர்மன் கி. பி. 862ஆம் ஆண்டு முடி புனைந்தனன் என்பதனை நாம் உறுதியாகக் கூறலாம்.[1]

அடுத்து, இரண்டாம் வரகுண பாண்டியனும் தெள்ளாறு எறிந்த நந்திவர்மனும் (மூன்றும் நந்திவர்மன் கி.பி. 851—873) சமகாலத்தவர்களே என்பது சில ஆதாரங்களால் உறுதி பெறுகின்றது. பாண்டியரது காலவரையறை வரலாற்றில் இவர்களது உடன்காலம் (Contemporaneity) இரண்டாவது அடித்தளத்தை அமைத்திருப்பதாகவே திரு. கே. ஜி. கிருஷ்ணன் அவர்கள் கருதுகிறார்.

'சகர ஆண்டு எழுநூற்றுத் தொண்ணூற்றிரண்டு போந்தன வரகுணற்கு யாண்டு எட்டு' என்று கல்வெட்டொன்றில்[2] கூறப்பட்டுள்ளது. இதில் குறிக்கப் பெற்றுள்ள சகரயாண்டு 792 என்பது கி. பி. 870-க்குச் சமமானது. கி.பி. 870 என்பது வரகுணனின் எட்டாமாண்டாகவின், இவன் கி.பி. 862—63-ல் ஆட்சிக்கு வந்தான் என்று உறுதியாகக் கூறலாம்.

இதுகாறுங் கூறியவற்றால் இரண்டாம் வரகுண பாண்டியன் கி. பி 862-ல் அரியணையேறினான் என்பதனை அறுதியிட்டு உறுதியாகக் கூறலாம்.

அடுத்து, இவனது தம்பியான பராந்தக வீரநாராயணனும் இதே ஆண்டில் கூட்டாட்சியாளனாக நியமிக்கப்பட்டதாகவும் தெரிகிறது.

**ஆதாரங்கள்**

தளவாய்புரச் செப்பேடும், சின்னமனூர்ச் செப்பேடும் இவ் வேந்தனைப்பற்றிய ஒருசில செய்திகளை மட்டுமே எடுத்தியம்பு

[1] இவனது ஆட்சி சகாப்தம் 785 (கி.பி. 863-64)-ல் தொடங்கியிருத்தல் வேண்டுமென்று திரு. டி.என். சுப்பிரமணியம் கருதுகிறார். தென்னிந்திய கோயிற் சாசனங்கள் பாகம். 3, பகுதி-1, பக்கம். c iii.

[2] E. I. Vol. XXXII, p. 337. குணவீரக்குரவடிகளின் மாணவரான காழத்துச் சாந்தி வீரக்குரவர் ஐந்நூற்றைந்து காணம் கொடுத்து இயக்கியவ்வையின் திருமேனியைப் புதுக்கியதாகக் கூறப்படும் இக் கல்வெட்டு வரகுணனின் எட்டாமாட்சியாண்டினதாகும்.

கின்றன. இவ் வேந்தன் சிவபெருமான்மீது கொண்டிருந்த பக்தியினைத் தளவாய்புரச் செப்பேடு விரித்துக் கூறுகின்றது. சின்னமனூர்ச் செப்பேட்டின் துணை கொண்டு இவ் வேந்தனது பெயர் தவிர வேறொன்றும் அறிந்து கொள்ள முடியவில்லை யென்று திரு. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியார் குறைபட்டுக் கொண்டார்.[1] ஆனால், இன்றோ இவ் வேந்தனைப்பற்றி அறிந்து கொள்ள பல கல்வெட்டுகள் நமக்குக் கிடைத்துள்ளன. இவை பெரும்பாலும் பாண்டியநாடு, சோழ நாடு ஆகியவற்றின் பல் வேறு பகுதிகளில் கிடைத்துள்ளன.

**திருச்சி மாவட்டத்தில் :** திருச்சிராப்பள்ளி மாவட்டம், இலால்குடியில் (திருச்சிக்குக் கிழக்கே பதின்மூன்று கல் தொலைவு) இவ் வேந்தனது கல்வெட்டொன்று கிடைத்துள்ளது. இக் கல்வெட்டு தெள்ளாறெறிந்த நந்தி போத்தரையனது தானத்தைக் குறிப்பிடுவதனால், வரகுணனும் இப் பல்லவ வேந்தனும் உடன்காலத்தவரென்பது விளங்குகின்றது.[2]

**தஞ்சை மாவட்டத்தில் :** இவ் வேந்தனது கல்வெட்டுகள் சோணாட்டின் உட்பகுதியில் கிடைத்திருப்பது குறிப்பிடத் தக்கதாகும். இவனது ஐந்து கல்வெட்டுகள் தஞ்சை மாவட்டத்தி திருக்கோடிக் காவலிலும்[3] திருச்சாத்துறையிலும்[4] காணப் படுள்ள பெறுகின்றன. இவனது பத்தாமாண்டுக் கல்வெட்டும், பதினோராமாண்டுக் கல்வெட்டும் திருக்காட்டுப்பள்ளி, நியமம் (தஞ்சை மாவட்டம்) ஆகிய ஊர்களில் கிடைத்துள்ளன.[5] இக் கல்வெட்டுகளில் பல்லவச் சிற்றரசனான விடேல்விடுகு முத்தரையன் குறிக்கப் பெறுகிறான்.

புதுக்கோட்டை மாவட்டம் திருக்கோகர்ணம் என்னும் ஊரில் வரகுணனது பதினேழாமாட்சியாண்டுக் கல்வெட்டு காணக் கிடைக்கின்றது. வரகுணவதிரயன் என்பான் தான மளித்துள்ள செய்தியை இக் கல்வெட்டு குறிப்பிடுகின்றது.[6]

**கல்வெட்டுகளால் அறியப்படுவன**

இக் கல்வெட்டுச் சான்றுகளைக் கொண்டு வரகுணனது காலத்திலும் பல்லவ-பாண்டியப் போராட்டம் தொடர்ந்து நடை

1 Nilakanta Sastry, K.A. 'The Pandyan Kingdom' p. 68.
2 A.R.E. 1928–29. p. 66.
3 37 of 1937–38.
4 160 of 1930–31.
5 A.R.E. 1960-61, p. 20.
6 311 of 1904.

பெற்றதென்றும், தனது தந்தையின் ஆட்சிக்காலத்தில் வலிமை பெற்றிருந்த பல்லவரின் பகுதிகள் சிலவற்றை இவ் வேந்தன் கவர்ந்து கொண்டான் என்பதும் புலனாகின்றது. இவ் வேந்தனது கல்வெட்டுகள் திருவையாற்றினை அடுத்துள்ள திருநெய்த்தானம் என்னுமூரிலுள்ள மகாதேவர் திருக்கோயிலும் காணப்பெறுகின்றது. இக் கல்வெட்டில் கோன் பராந்தகனாரின் பெயரும் குறிக்கப்பட்டுள்ளது. வரகுண பாண்டியன் பங்கு கொண்ட கும்பகோணம், வெண்பில், இடவை முதலான இடங்களில் நடைபெற்ற போர்களில் இவனும் (கோன் பராந்தகன்) துணை புரிந்தான். இவன் வரகுணனின் தம்பியாவான் என்பதும் கண்டு நினைவிற் கொள்ளத் தக்கதாகும்.

**ஏர்வாடிக் கல்வெட்டு**

திருச்சி, தஞ்சை மாவட்டங்களிலேயன்றி திருநெல்வேலி, இராமநாதபுரம் மாவட்டங்களிலும் வரகுணனது கல்வெட்டுகள் காணப்பெறுகின்றன. இவ் வேந்தனது நாற்பத்தோராமாட்சியாண்டுக் கல்வெட்டு திருநெல்வேலி மாவட்டம், தளபதி சமுத்திரத்தில் காணப்படுகின்றது.[1] இவனது நாற்பத்து மூன்றாமாட்சியாண்டுக் கல்வெட்டு ஏர்வாடிக்கருகில் காணக் கிடைக்கின்றது.[2]

**அரசியல் சூழல்**

இரண்டாம் வரகுணன் பாண்டிய நாட்டின் மன்னனாக வீற்றிருந்தகாலை பல்லவப் பேரரசினை நிருபதுங்க வருமன் ஆட்சி புரிந்து வந்தான். பாண்டியர்க்கும் பல்லவர்க்கும் நெடுங்காலமாகவே நெடும்பகை மூண்டிருந்த போதிலும், இக் காலத்தில் வரகுணனும் நிருபதுங்கனும் பகைமை கொள்ளாது நட்பு கொண்டிருந்தனர். இச் செய்தியினைத் தென்னார்க்காடு மாவட்டம் திருவதிகை வீரட்டத்தானத்திலுள்ள நிருபதுங்க வர்மனின் பதினெட்டாமாட்சியாண்டுக் கல்வெட்டாலினிதுணரலாம்.[3]

[1] A.R.E. 1928–29. p.p. 66–67.
[2] 605 of 1915.
[3] S.I.I. Vol. XII, No. 71.
இக் கல்வெட்டினைக் கொண்டு இவ் வேந்தன் அதியரைய மங்கலத்து நகரத்தாரிடம் ஐந்நூற்று எழுபது கழஞ்சு பொன் அளித்து, அதன் வட்டியைக் கொண்டு அவ்வூர் திருவீரட்டானத்து மகாதேவருடைய வழிபாட்டினை நடத்தச் செய்த ஏற்பாடு புலனாகின்றது.
'இதைக் கவனிக்கும்போது நிருபதுங்கனிடமிருந்து படையுதவியடைந்ததாக வாஹீர்ச் செப்பேடுகளில் குறிக்கப் பெற்ற பாண்டியன் வரகுணனே என்று கருதலாம். ஈழத்து அரசனால் முடிசூட்டப் பெற்ற தாயாதியை வென்று பிவனிடமிருந்து அரசியலை அடைவதற்காகவே அவன் அந்த உதவியை வேண்டி இருத்தல் கூடும், இவ் விதம் வரகுணனுக்கு உதவி செய்து அவனைப் பாண்டிய

இதே காலத்தில்தான் ஏறத்தாழ ஆறு நூற்றாண்டுகளாக மங்கிய தோர் நிலவாக மங்கிக் கிடந்த சோழர்கள், வெற்றி வீரன் விசயாலயன் தலைமையில், முத்தரைய மன்னனை வென்று தஞ்சையைக் கைப்பற்றி புத்தாட்சி தொடங்கினர்;[4] இப் புத்தரசின் புகழும் 'செங்கதிர் பரப்பும் வெங்கதிரோனென யாண்டும் பரவ ஆரம்பித்தது.

**பல்லவனும் பாண்டியனும் நண்பர்**

சோழரின் எழுச்சியினைக் கண்டு அதிர்ச்சியடைந்த வரகுணன் சோழ அரசின் வளர்ச்சியினைத் தடுத்து நிறுத்த, முழு முயற்சி எடுத்துக் கொள்ளல் வேண்டுமென எண்ணினான். தனது தந்தையின் ஆட்சிக் காலத்தில் பாண்டிய அரசு பல்லவப் பேரரசிடம் தொண்டை நாட்டின் தென்பகுதியினையும், சோணாட்டின் பகுதிகளையும் இழந்துவிட்ட அவல நிலையும், அவன் உள்ளத்தில் நிழலாடியது. இருப்பினும் அக் காலை பல்லவப் பேரரசனாய் வீற்றிருந்த நிருபதுங்கனுடன் தான் கொண்டிருந்த நட்பு முறையின் காரணமாக பல்லவருடன் போர் மேற்கொள்ளும் எண்ணம், இவனது உள்ளத்தில் இடம் பெற வில்லை. வரகுணனது ஆட்சிக்காலத்தில்தான் பல்லவ-பாண்டிய போராட்டத்தின் இறுதிக் கட்டம் அமைந்தது என்பதும் நினைவு கொள்ளத்தக்கது.

**சோழரின் எழுச்சி:** ஆண்டுகள் சில கழிந்த பின்பு நிருபதுங்க வர்மன் இறந்துபட்டான். அவனது மகனாகிய அபராசிதவர்மன் என்பான் பல்லவ மன்னனாக முடிபுனைந்து கொண்டான். இதே காலத்தில் முதலாம் ஆதித்த சோழனும் சோணாட்டின்

---

சிங்காதனத்தில் அமர்த்தி, ஈழத்தரசனால் முடிசூட்டப் பெற்றவனை விரட்டியடித்த பெருமையையே இவன் புகழ் இலங்கையிலும் பரவியதாக வாஹீர்ச் செப்பேடுகள் குறிக்கின்றன போலும்.'

'இந்த நிலைமையை வேறு விதமாகவும் கணிக்க முடியும். ஸ்ரீவல்லபன் ஏதோ ஒரு காரணத்தால் தன இளைய குமாரன் பராந்தகனே தனக்குப் பின் பட்டம் கட்டப்பெற வேண்டுமென்று முடிவு செய்தான். இதனால் வெகுண்ட வரகுணன் இலங்கையடைந்து அந் நாட்டு அரசன் உதவியால் பாண்டிய சிங்காதனத்தைக் கைப்பற்றினான். தோல்வியுற்ற பராந்தகன் பல்லவ அரசனுடைய உதவியை நாடினான். இதன் பலனாக அண்ணன் தம்பிகளுக்குள் சமரசம் ஏற்பட்டு இருவரும் சேர்ந்து அரசுரிமையை வகிக்கலாம் என்று ஏற்பாடு செய்யப்பட்டது. எவ்விதம் நடந்ததென்பதை நாம் நிச்சயமாகக் கூறமுடியாது. எனினும், பல்லவ அரசனான நிருபதுங்கன் ஆட்சியைப்பற்றிய வரையில் அதனால் பெருத்த மாறுதல் ஏதும் ஏற்பட்டுவிடாது.'

திரு. தி. ந. சுப்பிரமணியன் 'தென்னிந்தியக் கோயிற் சாசனங்கள்' பாகம்-3, பகுதி-1, பக். c iv.

[4] ம. இராசசேகர தங்கமணி 'முதலாம் இராசேந்திர சோழன்' பக்கம் 39 வரி, 14-16.

மன்னனாக அரியணையேறினான் எனக்கொள்ளலாம்.[1] ஆதித்தனின் எழுச்சி சோழர் மறுமலர்ச்சிக்கு வித்தூன்றி, தமிழக வரலாற்றில் புதியதொரு வீர அத்தியாயத்தைப் படைத்ததெனலாம். பல்லவரின்கீழ் திறை செலுத்தும் சிற்றரசராக விளங்கிய சோழர், எவ்வகையிலேனும் பாண்டியரது ஆட்சியினை ஒழித்துக்கட்ட முனைந்தனர். பாண்டியரது வளர்ச்சியாலும், முத்தரையரது உயர்ச்சியாலும் புகழ் மங்கிக் கிடந்த சோழர்கள், மெதுவாக தமிழக அரசியலில் தலைகாட்ட ஆரம்பித்தனர்; புகழ் கூட்டவும் திட்டமிட்டனர். இற்றை நாள் வரை தொடர்ந்து நடைபெற்றுவந்த பாண்டியர் பல்லவருக்கான இருமுனை ஆதிக்கப் போட்டி, சோழரின் உயர்ச்சியால் மும்முனைப் போட்டியாக உருவெடுத்தது. நெடுநாளைய பாண்டிய பல்லவப் போராட்டத்தால் இருவருடைய வலிமையும் குன்றுகின்ற நேரத்தில், சோழர்கள் புத்துணர்ச்சியும் புதுப்பொலிவும் கொண்டு எழுந்தனர்-ஏன் எழுச்சியும் பெற்றனர். தமக்குக் கிடைத்த பொன்னான வாய்ப்பினைப் பயன்படுத்திக் கொள்ளத் துடித்தனர்.

### இடவைப் போரும் பாண்டியர் வெற்றியும்

இந்நிலையில் பாண்டியர்களின் இழந்த பகுதியினை மீட்கக் காலங் கருதியிருந்த வரகுண பாண்டியனும் இதுவே தக்க தருணமென்றுணர்ந்து, தனது திட்டங்களுக்குச் செயல் வடிவம் தர உறுதி கொண்டான்; வளர்ந்துவரும் சோழரை முளையிலே கிள்ளிவிடவும் உறுதி பூண்டான். எனவே, கி. பி. 880 ஆம் ஆண்டின் தொடக்கத்தில் தன் கடற்பெருஞ் சேனையுடன் வீராவேசத்துடன், சோணாடு நோக்கிக் கடும் புயலெனக் கடிது சென்றான்; காவிரியைக் கடந்தான்; அதன் வடகரையிலமைந்துள்ள மண்ணி நாட்டின் பகுதியான 'இடவை'[2] நகரின்மீது

1 இவனது இருபத்து நான்காமாண்டு ஆனித்தலைப் பிறையின் ஒரு சூரிய கிரகணம் சேர்ந்ததாகத் தக்கோலத்தில் உள்ள அவனுடைய கல்வெட்டொன்று செப்புகின்றது. கி. பி. 894ஆம் ஆண்டு ஜூன் மாதம் ஏழாம் நாளில் ஒன்றும், 985ஆம் ஆண்டு மே திங்கள் இருபத்தெட்டாம் நாளில் ஒன்றுமாக நேர்ந்த இரண்டு சூரிய கிரகணங்களுள் ஒன்றினையே இது குறிக்கின்றது. அவ்விதமானால் அவனுடைய ஆட்சியின் தொடக்ககாலம் கி.பி. 870 அல்லது 871 ஆக இருத்தல் வேண்டுமென்று அறிஞர் கருதுகின்றனர். (Epi. Ind. Vol. IV. XIX. No. 12)

2 கும்பகோணம் வட்டம் அணைக்கட்டுக்குக்கருகிலுள்ள திருப்பனந்தாள் என்னும் ஊரில் காணப்படுகின்ற, சகாப்தம் 1369 கொண்டதான விசயநகர வேந்தரது காலத்திய கல்வெட்டொன்றும் இடவையைக் குறிப்பிடுகின்றது. பிற்காலத்தைச் சார்ந்ததான இக் கல்வெட்டில் இடவையான பாண்டியனை வென்கண்ட சோழ சதுர்வேதி மங்கலம் என்னும் ஊர் குறிக்கப் பெறுகின்றது. (No. 42 of 1914) மண்ணியாறும அவ்வூரின் டக்கத்தில் ஓடுகின்றது. திருப்பனந்தாளுக்கு நான்கு கல் தொலைவில் அமைந்துள்ள சோழபுரம் என்னும் ஊரே இக்காலத்தில் 'பாண்டியனை வென்கண்ட சோழ சதுர்வேதி மங்கலம்' என்றழைக்கப்பட்டது போலும். பழைய வரலாற்றுச் சின்னங்கள் பல இன்னும் இங்கு காணப்

தன் ஆற்றல் மிக்க படையினை ஏவினான்; விசயாலய சோழனின் வீரமகனும், சோழ வேந்தனுமான ஆதித்தனும் பாண்டியனை எதிர்த்து வீரப்போர் புரிந்தான். ஆற்றல் மறவர்களான பாண்டியரோ பகைஞரை வெட்டி வீழ்த்தினர்; வெற்றிக் கொடியுயர்த்தினர். சோழரோ தோல்வியால் சோம்பினர். மீனக் கொடி கொண்ட பாண்டியரோ இடவை நகரையும் அதனைச் சூழ்ந்த பகுதிகளையும் கைப்பற்றிக் கொண்டனர். இவ் வெற்றிச் செய்தியினை மதுரை மாவட்டத்தின்கண்ணுள்ள திண்டுக்கல்லுக்கு அண்மையிலுள்ள இராமநாதபுரக் கல்வெட்டொன்று குறிப்பிடுகின்றது.[3]

வரகுண வர்மனது பாட்டனாகிய முதலாம் வரகுண பாண்டியன் இடவை மாநகரின்கண் அரண்மனையொன்றினையமைத்திருந்தனனென்பதனை நாம் முன்பே கண்டோம். சோழர்களின் ஆதிக்கத்திற்குட்பட்ட அப் பாண்டியரது அரண்மனையினைக் கைப்பற்றும் பொருட்டே இவ் வேந்தன் இடவை நகரின் மீதுத் தாக்குதல் நிகழ்த்தினான் என்பதனை ஈண்டு நாம் உய்த்துணரலாம்.

### திருப்புறம்பியப் போர்

தோல்வியைத் தழுவிய போதிலும் ஆதித்த சோழன் அயர்ந்து விடவில்லை; மனத்தளர்ச்சி பெறவுமில்லை; மாவலிமிக்க

---

பெறுகின்றது. புத்தர்சிலையொன்றும் இவ்வூர் சாலையின் மேற்புறத்தே காணப் பெறுகின்றது.

இடவையென்பது, மண்ணிநாட்டு இடவை என்று சாசனங்களிலும் க்ஷேத்திரக் கோவைத் திருத்தாண்டகத்திலும் குறிப்பிடப் பெறுகிறது. எனவே, இவ்வூர் திருவிடைமருதூராகவோ, பிறமாவட்டத்து ஊர்களாகவே இருக்க முடியாது. திருப்பனந்தாள், சேங்கனூர், திரைலோக்கி முதலாகிய ஊர்களைத் தன்னகத்தே கொண்ட மண்ணிநாட்டில் உள்ள ஊர்களில் ஒன்றாக அமைதல் வேண்டும். திருப்பனந்தாளில் காணப்படுகின்ற சகம் 1369 கொண்டதான விசய நகர வேந்தரது காலத்திய கல்வெட்டொன்றும் இடவையைக் குறிப்பிடுகின்றது. பிற்காலத்தைச் சார்ந்ததான இக் கல்வெட்டில் இடவையான பாண்டியனை வென்கண்ட சோழ சதுர்வேதி மங்கலம் என்னும் ஊர் குறிக்கப் பெறுகின்றது. (No. 42 of 1914) மண்ணியாறும் அவ்வூரின் அருகில் திருப்பனந்தாளுக்கருகில் (4 மைல்) உள்ள சோழபுரம் என்னும் ஊரே அன்று 'பாண்டியனை வென்கண்ட சோழ சதுர்வேதி மங்கலமென அழைக்கப்பட்டது போலும்.

காவிரியின் வடகரையில் உள்ள வேப்பத்தூர்ப் படையெடுப்பின் பின் மண்ணிநாட்டு இடவை அழிக்கப்பட்டுள்ளதால், இவ்வூர் திருப்பனந்தாளிலிருந்து இடவைக்கு இடவை வாய்க்கால் என்னும் கால்வாய் ஓடியதாகக்கல்வெட்டுக் குறிப்பொன்று இருத்தலைக் கொண்டும், இடவை இப் பகுதியில் உள்ள இடையார் நல்லூர் அல்லது சிற்றிடையார் நல்லூராக இருத்தல் வேண்டுமென்று துணியலாம்.

[3] Ins. 690 of 1905. பராந்தகப் பள்ளி வேளானயின நக்கம் புள்ளன் என்பான் கோமாறஞ்சடையனுடன் இடவை யாத்திரையில் பங்கு கொண்டான் என்ற செய்தியும் இக் கல்வெட்டால் அறியப் பெறுகின்றது. கோமாறஞ்சடையன் என்பான் பராந்தக வீரநாராயணனேயாவன் எனலாம்.

பாண்டியப் பேரரசினை முறியடிக்கத் தீவிர முயற்சிகளை மேற்கொள்ள வேண்டித் தமது படைகளுக்குப் பயிற்சி தந்து, தேர்ச்சி பெறச் செய்தான்.

இந் நிலையில் பாண்டியன் சோணாட்டின்மீது படையெடுத்து சோணாட்டின் ஒரு பகுதியினைக் கைப்பற்றித் தனது அரசினை விரிவுபடுத்தியதனைக் கேள்விப்பட்ட அபராஜிதவர்மப் பல்லவன் பாண்டியப் பேரரசின் எழுச்சியினையும் வளர்ச்சியினையும் ஒழிக்க முடிவு கட்டினான். திட்டங்கள் தீட்டினான். ஆதித்தனும் இதனைப் பெருவாய்ப்பாகக் கருதினான். அபராஜிதவர்மனின் நண்பனும் கங்க நாட்டு மன்னனுமான முதலாம் பிருதிவிபதியும் பல்லவர்க்குத் துணை புரிய முன்வந்தான். எனவே, ஆதித்த சோழனின் படையும், அபராஜித பல்லவனின் பெரும்படையும் கங்கரின் படையும் ஒன்று திரண்டு பாண்டியருக்கெதிராகப் போர் முரசு கொட்டியது. இரு திறத்தாருக்கும் இடையிலும் அதனைச் சூழ்ந்த பகுதிகளிலும் கடும் போர்கள் நிகழ்ந்தன. முடிவில் கும்பகோணத்திற்கு வடமேற்கே ஐந்தரைக்கல் (Mile) தொலைவில் மண்ணியாற்றின் வடகரையிலுள்ள திருப்புறம்பியம் (Srlpurampiam) என்னுமிடத்தில் இருபெரும் படைகளும் அணிவகுத்து நின்றன.[1] இப் போர் கி.பி. 880ஆம் ஆண்டு நடைபெற்றது எனக் கருதலாம்.[2] இரு திறத்தாரும் ஆற்றின் கரையில்

[1] திருப்புறம்பியப் போர் நடைபெற்றகாலை நிருபதுங்கன் உயிருடன் இருந்திருக்கிறான், இவனது நாற்பத்தோராமாண்டுக் கல்வெட்டும் நமக்குக் கிடைத்துள்ளது. இதனை நாம் நுண்ணிதின் ஆய்ந்து பார்க்குங்கால் நிருபதுங்கனும் வரகுணபாண்டியனும் இணைந்து நின்று பல்லவ அபராஜிதனையும் அவனது நண்பனையும் எதிர்த்தான் என்பதனை உய்த்துணரலாம். திரு. டி என். சுப்பிரமணியன் அவர்களும் அந்தப் போர் நிருபதுங்கனுக்கு விரோதமாக அபராஜிதன் நடத்தியதே போலும். அதிலே நிருபதுங்கனும் வரகுணனும் ஒரு கட்சியிலும் அபராஜிதனும் பிரிதிவிபதியும் எதிர்க்கட்சியில் சேர்ந்து போரிட்டார்கள் என்பது தெளிவாகும். போரில் அபராஜிதன் வெற்றி கொண்டு நாட்டை அடைந்தான்' என்று தென்னிந்திய கோயிற் சாசனங்கள் பாகம் 3 பகுதி 1ல் குறிப்பிட்டுள்ளதால் அறியலாம்.

வெற்றி வாய்ப்பினைப் பெற்ற அபராஜிதன் பதினெட்டு ஆண்டுகள் பல்லவ வேந்தனாகப் பணி புரிந்தான். தோல்வி கண்டு, நாடிழந்த நிருபதுங்கனோ வாளாயிருக்கவில்லை. இழந்துவிட்ட ஆட்சியுரிமையை மீட்க மேலும் முயற்சிகள் மேற்கொண்டான். அதில் ஓரளவு வெற்றியும் கண்டான். இம் முயற்சியில் அவன் பாண்டியர்களது உதவியைப் பெற்றான் எனவும் கொள்ளலாம். இவன் சிறிதளவு வெற்றி பெற்றான் என்பதனைத் திருத்தணிக்கண்மையில் உள்ள மடவளம் என்னும் ஊரில் கிடைத்துள்ள இவனது நாற்பத்தோராம ஆட்சியாண்டுக் கல்வெட்டொன்றாலறியலாம் (புராதன இந்தியா எண். ௬ பக்கம் 54)

[2] இப் போர் கி.பி. 880 ஆம் ஆண்டு நடைபெற்றதாக திரு. டி.வி. சதாசிவ பண்டாரத்தார் தமது 'பாண்டியர் வரலாறு' என்னும் நூலின் கண் பககம் 73-ல் கூறியுள்ளார். நானும் எனது 'முதலாம் இராசேந்திர சோழன்' என்னும் நூலின் கண் பக்கம் 41-ல் கி.பி. 880-ல நடைபெற்றதாகவே குறித்திருந்தேன்.

இப்போரில் கலந்துகொண்டு உயிர்துறந்த முதலாம் பிருதிவிபதி, நிருபதுங்கவர்மனது இருபத்தாறுமாட்சியாண்டில் உயிருடன் இருந்தான். இதனைக் கொண்டு இப்போர் கி. பி. 88[?]ஆம் ஆண்டிற்குப் பின்பும் கி. பி. 890ஆம் ஆண்டிற்கு

தம்மாற்றல் விளங்கக் கடும்போர் புரிந்தனர். போரில் பெருவீரம் காட்டிக் கலங்காது போர் புரிந்து விழுப்புண் பல பெற்ற கங்க மன்னனும் முதலாம் பிருதிவிபதி போர்க்களத்திலேயே வீரமரண மெய்தினன்.[3] (இருப்பினும் தன் நண்பர்களுக்கு வெற்றி தேடித்தந்தான்) கங்க மன்னனை வெட்டி வீழ்த்திய போதிலும் பாண்டியப்படை தோல்வியடைந்தது. பல்லவ வேந்தனும் அபராஜிதவர்மனும் ஆதித்த சோழனும் பெருவெற்றி பெற்றனர்.[4] தோல்வியைத் தழுவிய வரகுண பாண்டியன் தான் மீட்டிருந்த சோணாட்டுப் பகுதியினை இழந்து திரும்ப வேண்டியதாயிற்று. இப் போரில் அபராஜிதன் வெற்றி பெற்ற செய்தி இரண்டாம் பிருதிவிபதியின் உபயேந்திரம் செப்பேடுகளில் குறிக்கப் பெற்றுள்ளது.

**விளைவுகள்:** இப் போரின் விளைவாகப் பாண்டியரது முதற் பேரரசின் வலிமை குன்றியது. பாண்டியரின் புகழும் மங்கியது, (சோணாட்டில பாண்டியர் தம் ஆதிக்கத்திற்குச் சாவு மணியடிக்கப்பட்டது). சோழர் முடிமன்னராகிச் சோழ மண்டலம் முழுமையும் கடடியாளும் பெருவாய்ப்பினைப் பெற்றனர். இப் போர் நிகழ்ச்சியினால் அபராஜிதவர்மனின் படைப்பெருக்கம் சுருங்கி விட்டமையின், பல்லவப் பேரரசின் வலிமையும் குன்றியது. சோணாட்டில் பல்லவரது ஆதிக்கத்திற்கு முற்றுப்புள்ளி வைக்கப் பெற்றது. சோழர் குடியினை மீண்டும் வரலாற்றரங்கத்திற்குக் கொண்டு வந்த விசயாலய சோழனின் மகனுன ஆதித்த சோழன் தஞ்சை மாநகரின்கண் கொலு வீற்றிருந்து, சோழராட்சியினை விரிவுபடுத்த இப் போர் வாய்ப்பளித்தது.

---

முன்பும் நடைபெற்றதாகக் கொள்ளலாம். நிருபதுங்கவர்மனின் நாற்பத்தோராம் ஆண்டுக் கல்வெட்டும் நமக்குக் கிடைத்துள்ளது. இவற்றையெல்லாம் மனத்திற் கொண்டே திரு. டி. என். சுப்பிரமணியன் அவர்கள் திருப்புறம்பியப்போர் ஏறத்தாழ கி. பி. 890–ல் நடந்ததாகக் கொள்ளலாம் என்று கூறுகின்றார். (தென்னிந்தியக் கோயிற் சாசனங்கள் பாகம் 3 பகுதி 1 பக் C xii.

3 S.I.I. Vol. III, No. 76. Verse-18. முதலாம் பிருதிவிபதியின் பெயரான இரண்டாம் பிருதிவிபதியின் உதயேந்திரம் செப்பேடு ஒன்று மட்டுமே திருப்புறம்பியப் போர்பற்றிக் கூறுகின்றது. இதில் அவனது பாட்டனைப்பற்றிக் கூறப் பட்டுள்ளதாவது:

'ஸ்ரீபுறம்பியத்திலே நடந்த பெரும்போரில் இவ்வீரன் (முதலாம் பிருதிவிபதி) பாண்டிய மன்னனை வரகுணனை வெகுசீக்கிரம் முறியடித்தான். மேலும் தன் உயிரையே கொடுத்துத் தன் நண்பன் அபராஜிதனை (வெற்றி கொள்ள இயலாதவன்) பெயரால் மட்டுமின்றி உண்மையாகவும் அப்படிச் செய்து சுவர்க்கம் புகுந்தான்' சுலோகம் 18. பிருதிவிபதி நிருபதுங்கனின் சிற்றரசனுவான் என்பதனை வட ஆர்க்காடு மாவட்டத்தில் காணப்பெறுகின்ற இரண்டு கல்வெட்டுகளாலறியலாம் (Epi. Ind. Vol IV page 180–3)

4 இப் போரில் ஆதித்த சோழன பல்லவர் பக்கம் நின்று போரிட்டான் எனலாம். தொண்டை மண்டலப் பகுதிகளில் ஆதித்தனுடைய கல்வெட்டுகள் அவனது இருபத்தோராம் ஆட்சியாண்டுமுதல் (கி. பி. 891) கிடைப்பதாலும், தஞ்சை மாவட்டம் திருநெய்த்தானத்தில் கிடைக்கும்' சோழன் பல்யானை

**நினைவுச் சின்னங்கள் :** திருப்புறம்பியப் போரில் வீரம் விளைவித்து வீரனாகவே மாண்ட கங்க மன்னனும் முதலாம் பிருதிவீபதிக்கு நடுகல் கோயிலொன்று திருப்புறம்பியத்திலமைக்கப் பட்டது. கச்சியாண்டவர் கோயிலென்ற நடுகற் கோயிலும், போர்க்களத்தின்கண் குருதியாறு ஓடிய இடமாகக் கருதப் படும் உதிரப்பட்டி என்னும் பெயருடைய நிலப்பரப்பும், இன்றும் திருப்புறம்பியத்தில் காணப்படுகின்றன. இவண் கச்சியாண்டவன் கோயிலென்பது போர்க்களத்தின்கண் இறந்து பட்ட, காஞ்சியினை ஆண்டு வந்த, பல்லவ வேந்தனொருவனின் நடுகல்லாயிருத்தல் வேண்டும்.[5] மேற்கூறியவையனைத்தும் திருப் புறம்பியப் போரின் அடையாளமாக இன்றும் நின்று நிலவி திருப்புறம்பியத்தைக் காணும் மக்களின் நினைவினைப் பண்டைய போர் நிகழ்ச்சிக்கிழுத்துச் செல்வதாக உள்ளது.

### திருப்புறம்பியப் போரின் முக்கியத்துவம்

சோழ மண்டலத்தில் பாண்டியரது ஆதிக்கமும் பல்லவரது ஆதிக்கமும் ஒருங்கே மறைவதற்கும், சோழரது ஆட்சியும் ஆதிக்கமும் மீண்டும் தோன்றுவதற்கும், வழி செய்த இத் திருப்புறம்பியப் போர் தமிழக வரலாற்றில் பொன்னெழுத்துக் களால் பொறிக்கப்பட வேண்டியதொரு முக்கியமான வரலாற்று நிகழ்ச்சியாகும். பாண்டியர் வரலாற்றில் மட்டுமன்றித் தமிழக வரலாற்றிலும் திருப்புறம்பியப் போர் ஒரு திருப்பு முனையாக அமைந்துள்ளது. நீண்ட காலமாகப் பாண்டியரது ஆட்சிக்குட் பட்டிருந்த சோணாடு தனியாட்சிப் பெறவும், நீண்ட நெடுங்கால மாக நிகழ்ந்து வந்த பாண்டிய—பல்லவப் போராட்டத்தினை

---

கோக்கண்டனுயின ராஜகேசரிவர்மன்' என்று குறிக்கப் பெற்றுள்ள முதலாம் ஆதித்தனுடைய கல்வெட்டில் 'தொண்டை நாடு பாவின' என்னும் பட்டப் பெயர் அவனுக்கு வழங்கப் பெற்றிருத்தலாலும் இதனை நாமறியலாம். இவன் மேற்கொண்ட இப்பட்டப் போசள வேந்தர்கள் 'சோழ ராஜ்ய பிரதிஷ்டா சாரிய' என்னும் விருதினை ஒக்கும். தொண்டை நாட்டில் அபராஜிதனுடைய ஆட்சி நிலைநாட்டப்பெற ஆதித்தன் உதவி செய்தானெனபது இதனால் தெளி வாகிறது.

பல்லவர்க்குப் பக்கத் துணையாக விளங்கிய ஆதித்தன் சில காலஞ்சென்ற பின்பு பல்லவர்களை வென்று சோழர் ஆட்சியை நிறுவினன். பல்லவப் பெரு மன்னனான அபராஜிதனை வென்று அவனது நாட்டினையும் கைப்பற்றிக் கொண்ட தாக திருவாலங்காட்டுச செப்பேடுகள் செப்புகின்றன. வீரராசேந்திரனின் கன்னியாகுமரிக் கல்வெட்டும் ஆதித்தன் கோதண்டராமன் என்னும் பட்டப் பெயரினைப் பெற்றிருந்தானென்றும், போர்க் களத்தில் வீரம் விளைவித்த இவன் யானைமீதமர்ந்துகொண்டு போர் செய்த பல்லவ வேந்தனைக் கொன்று, வெற்றி கொண்டானென்றும் குறிப்பிடுகின்றது. (Travancore Archaelogical Series, Vol. 111, Page 142, Slogam 55) இவ்விரண்டும் ஒரே நிகழ்ச்சியைக் குறிப்பதாகக் கொண்டு. அபராஜித வர்மனின் இறுதிக்காலம் இவ்வாறு முடிவுற்றதாகவும் கொள்ளலாம். இதனால் அபராஜிதவர்மன் கி. பி. 907-ல் இறந்துபட்டான் எனலாம்.

[5] தி. வை. சதாசிவ பண்டாரத்தார், 'பாண்டியர் வரலாறு' பக். 75.

முடிவுக்குக் கொண்டு வரவும் இப் போர் துணை புரிந்ததால் இப் போர் தமிழக வரலாற்றில் தக்கதொரு இடத்தினைப் பெற்று உள்ளது. இப் போரின் முக்கியத்துவத்தினை யான் இயற்றியுள்ள 'இராசேந்திர சோழன்' எனும் நூலிலும்[1] காணலாம்.

**வேந்தனளித்த தானங்கள் :** இரண்டாம் வரகுண பாண்டியன் சீரலைவாய் எனப் புகழ்ப்படும் திருச்செந்தூர் முருகன் மாட்டு எல்லையற்ற பக்தி கொண்டவனாக விளங்கினான். திருமுருகனின் திருவடிகளில் பெரிதும் ஈடுபாடு கொண்ட இவன், முருகப் பெருமானுக்கு ஆண்டு முழுவதும் நாள் வழிபாடு இடையீடின்றி நடைபெற, ஆயிரத்து நானூறு பொற்காசுகளை நிவந்தமாக அளித்தான். இத் தொகை பன்னிரண்டு ஊர்களுக்குப் பகிர்ந்தளிக்கப்பட்டு, காசு ஒன்றிற்கு ஆண்டொன்றிற்கு, நெற்பொலிசை இரண்டு கலமாக அப் பன்னிரு ஊரினரும் திருச்செந்தூர்க் கோயிலுக்கு இரண்டாயிரத்தெண்ணூறு கல நெல் ஆண்டுதோறும் அளந்து வருமாறு ஏற்பாடுகளைச் செய்தான். இதனைத் திருச்செந்தூர்க் கோயிலிலுள்ள இவனது பதின் மூன்றும் ஆட்சியாண்டில் பொறிக்கப்பட்ட கல்வெட்டாலறியலாம். இக் கல்வெட்டில்[2] அக் கோயிலின் நாள் வழிபாட்டுத் திட்டமும் வரையப்பட்டுள்ளன.

திருக்கோடிக்காவலில் கிடைத்துள்ள இவ் வேந்தனது பதினேருமாட்சியாண்டுக் கல்வெட்டின் துணை கொண்டு, இவன் அவ் ஊரிலுள்ள கலைமகள் (சரஸ்வதி) கணபதி ஆகிய கோயில்களில் விளக்கெரிக்கப் பொன் தானஞ் செய்ததனை அறிந்து கொள்ளலாம்.[3]

திருச்சாத்துறைக் கல்வெட்டில் இவ் வேந்தன் முன்னூறு காசுகள் தானஞ் செய்த செய்தி குறிக்கப் பெற்றுள்ளது.[4]

திருச்சிராப்பள்ளியிலுள்ள திருமலை பெருமானடிகளுக்கு இவ் வேந்தன் ஐந்நூற்று இருபத்தேழு கழஞ்சு பொன் அளித்துள்ள செய்தி குறிக்கப் பெற்றுள்ளது. இப் பொன்னைக்

[1] ம. இராசசேகர தங்கமணி, 'முதலாம் இராசேந்திர சோழன்'

[2] Epigraphia Indica, Vol. XXI, No. 17.

[3] 37 of 1930–31.

[4] 160 of 1930–31.

கொண்டு இறைவர்க்கு நான்கு தங்கப்பட்டமும் ஒரு பொன் மலரும் செய்யப்பட்டது.[1]

**தானம்:** இரண்டாம் வரகுணன் சோணாட்டுப் பகுதிகளில் பலதடவை படையெழுச்சியினை மேற்கொண்டிருந்தான். அது போழ்து தஞ்சையைச் சுற்றியுள்ள கோயில்களுக்குத் தானங்கள் பல புரிந்துள்ளான். தஞ்சையிலிருந்து வடமேற்கே பதினோரு கிலோமீட்டர் (ஏழு மைல்) தொலைவிலுள்ள திருநெய்த்தானம் என்னுமூரிலுள்ள இறைவர்க்கு இவ் வேந்தன் நானூற்றிருபது காசுகள் தானமளித்துள்ளான். இக் கல்வெட்டு இவனது நான்காமாட்சியாண்டில் (கி.பி. 865) வெளியிடப் பெற்றதாகும். 'வரகுண மகாராஜா விளக்கு' எரிக்கப்பட இவ் வேந்தன் திருநெய்த்தான மகாதேவர்க்களித்த இக் கல்வெட்டு[2] பின்வருமாறு உள்ளது.

'கொமாறஞ்சடையற்கு யாண்டு (ச) மாண்டு திருநெத்தானத்து மஹாதெவற்கு வரகுண மஹாராஜ திருவிளக்கினுக்கு நம்பிராட்டியார் கைவழி கொண்ட காசு உ ா-ம் (200) கொன்பரா(ன்) தகனர் கைவழி கொண்ட காசு ா-ம் (100) வெண்பநாட்டு வெளாளன் வழி குடுத்த காசு ா உ ய (120).

### கட்டிய கோயில்கள்

எல்லாம் வல்ல இறைவன்மாட்டு நல்ல ஈடுபாடு கொண்ட இவ் வேந்தன், பல திருக்கோயில்களுக்குத் தானங்கள் வழங்கியதோடு ஆலயங்களும் எழுப்பியுள்ளார். அவற்றுள் இராமநாதபுர மாவட்டம், திருப்பத்தூரில் உள்ள திருத்தழிமாத ஆலயம் குறிப்பிடத்தக்கதாகும்.[3] இக் கோயிலின் அமைப்பும், சிற்பச் சிறப்பும் போற்றத்தக்க முறையில் அமைந்துள்ளது.

திருநெய்த்தானத்து மகாதேவர் ஆலயமும் திருப்பத்தூர் கோயிலமைப்பிலேயே (பாணி) அமைந்துள்ளதாலும், ஒரே காலத்தினதாகத் தோன்றுவதாலும், வரகுணனின் நான்காமாண்டுக் கல்வெட்டுகள் இங்கே காணப்படுவதாலும், திருநெய்த்

[1] A. R. No. 413 of 1904.

[2] A. R. S. I. E. 51 of 1895; S.I.I. Vol. V, page 608:

[3] Damilica Vol. II, Part 3; D. Devakunjari, 'The Mahadeva Temple of Thillaisthanam' page 49.

தானத்து மகாதேவர் ஆலயம் இவ் வேந்தனால் கட்டப்பெற்று இருத்தல் வேண்டுமென ஊகிக்கலாம்.[1]

### அரசியல் அதிகாரிகள்

வரகுண பாண்டியனின் ஆட்சிக்காலத்தில் பாண்டியநாட்டு மக்கள் குறையின்றி வாழ்ந்தார்கள். இதற்குக் காரணம் இப் பாண்டிய வேந்தனிடம் பணிபுரிந்த அரசியல் அதிகாரிகள் அரசியல் துறையில் நல்ல தேர்ச்சி பெற்றிருந்தமையேயாகும். அண்டநாட்டு வேளான், வெண்பநாட்டு வேளான், மனோமயன் மாறன், பராந்தகப் பள்ளிவேளான் நக்கன்புள்ளன் ஆகியோர் இவ் வேந்தனது காலத்தில் நற்பணியாற்றிய அரசியல் அலுவலர்களுள் குறிப்பிடத்தக்கவராவர்.

தஞ்சைப் பகுதிக் கோயில்களுக்கு அளிக்கப்பட்ட நில தானங்கள் அண்டநாட்டு வேளான் மூலமாகவே வழங்கப் பட்டுள்ளதால்,[2] இவன் வேந்தனது நம்பிக்கைக்குரியவன் என்பதனை அறியலாம். இறைப்பற்று கொண்ட வெண்பநாட்டு வேளான் திருநெய்த்தானத்து இறைவர்க்கு நன்கொடை அளித்துள்ளான்.[3] மனோமயன்மாறனும் திருப்பத்தூர் இறைவர்க்கு தானமளித்துள்ளான்.[4] பெருவீரனான புள்ளன் குளம் வெட்டி மக்களது நீர்த்தேவையைப் பூர்த்தி செய்தான்.[5]

இவ் வேந்தனது தம்பியான பராந்தக பாண்டியனும் ஆட்சித் துறையில் வேந்தனுக்குப் பெருந்தொண்டாற்றினான். பராந்தக

[1] திருநெய்த்தானத்திலுள்ள மகாதேவர் திருக்கோயில் முதலாம் ஆதித்த சோழனது காலத்தினைச் சார்ந்ததென்று பொதுவாகக் கருதப்பட்டு வந்தது. கட்டட அமைப்பு, சிற்ப அமைப்பு, கல்வெட்டுகள் ஆகியனவற்றை நுண்ணிதின் ஆய்ந்து பார்க்குங்கால், இது நிச்சயமாக முதலாம் ஆதித்த சோழனது காலத்திற்கு முற்றிலும் முற்பட்டதாகும். எனது சொந்த ஊரான புதுக்கோட்டை கிராமத்திலிருந்து தென்கிழக்கே நான்கு கல் தொலைவிலுள்ள திருநெய்த்தானத்து ஆலயத்தின் சிற்பங்களை நான் பன்முறை பார்த்ததுண்டு. இக் கற்றளியின் அமைப்பு சோழர் கால அமைப்பினின்றும் சிறிது வேறுபட்டதாகத் தோன்றுகின்றது.

Most likely the stone structure was built by the Pandya Maranjadaiyan alias Varaguna II during his sojourn in the chola country. Even so, there are many stylistic features in the temple earlier than the mid-9th century, Possibly the early features of the earlier temple of impermanent material were faithfully reproduced in the stone karrali The temple is stylistically quite similar to the Tiruttalimatha temple at Tiruppattur, District Ramanatha puram, which was built about the same period in the reign of Varaguna II.

[2] S.I.I. Vol. Nos. 12 and 12-B from Thiruvellarai and Lalgud. Ibid No 10 of Tiruchirappalli also appears to mention the same official.

[3] S.I.I. Vol V, No. 608. A.R.S.I.E. 51 of 1895.

[4] A R No. 138 of 1908.

[5] Ins. 690 of 1905.

பாண்டியன் வரகுணனுடன் இணைந்த ஆட்சியினை மேற்கொண்டிருந்தான் என்பதனை நாம் முன்பே கண்டோம்.

வரகுணனது ஆட்சிக் காலத்தில் அறக்கட்டளைகளைக் காத்தற்பொருட்டு, ஆயிரத்தெழு நூற்றுவர் கொண்ட குழுவொன்று அமைக்கப்பட்டிருந்த செய்தி போற்றுதற்குரியதே.

**கோயில் திருப்பணி**

வரகுணன் பல ஆலயத் திருப்பணிகள் செய்த இறையன்பன் என்பதனைக் கல்வெட்டுகள் உணர்த்துகின்றன. திருவிடைமருதூர் சோதி மகாலிங்கேசர் கோயிலுக்கு வடபால் கூடல் நாயகனுக்குக் கோயில் ஒன்று எடுப்பித்ததாகவும், குடதிசைக் கோபுரத்தினை அமைத்ததாகவும் அவ்வூர்த் தலபுராணம் கூறுகின்றது. அக் கோயிலைச் சுற்றி இவன் கயிலையில் உள்ளது போன்ற கொடுமுடிப் பிரகாரம் ஒன்றினையும் எடுப்பித்தான். அங்குள்ள வாயில் பாண்டியன் தோரணவாயில் என்றே அழைக்கப்பெறுகிறது. அம்பாசமுத்திரம் கோயில் நாள் வழிபாட்டிற்கு இவன் 290 பொற்காசுகள் வழங்கிய செய்தி இவ் வேந்தனது பதினோரும் ஆட்சியாண்டுக் கல்வெட்டில் கூறப்பட்டுள்ளது.

நாங்குநேரி வட்டம் இராதாபுரம் சிவன்கோயில் வரகுணீச்சுரம் என்னும் அவ்வூர் வரகுண பாண்டியபுரம் என்றும் அழைக்கப் பெறுகிறது.

**வரகுணனும் வரகுணன் கோவையும்**

தமிழகத்தில் கோவை என்ற இலக்கிய வகையொன்று பண்டைக் காலத்தில் புகழ்பெற்றிருந்தது. அவற்றுள் அரிகேசரி பராங்குச மாறவருமன் மீது பாடப்பெற்ற பாண்டிக் கோவையே காலத்தால் முற்பட்டது; தொன்மை நலஞ்சார்ந்தது. அடுத்து, இரண்டாம் வரகுண பாண்டியனின் சமகாலத்தவரும், சைவ சமயக் குரவருமான மாணிக்கவாசகரால் பாடப்பெற்ற திருக் கோவையாரும் சொற்சுவை, பொருட்சுவை மிக்கது. இவற்றிற்கு இடைப்பட்ட காலத்தில் கோவை இலக்கியங்கள் மக்கள் மத்தியிலே பெருமதிப்பு பெற்று செல்வாக்கு பெறத் தொடங்கியதெனலாம். இக் கால கட்டத்தில்தான் 'வரகுணன் கோவை' என்ற நூலொன்றும் சிறந்து விளங்கியிருத்தல் வேண்டும். இக் கோவை பல முக்கியமான வரலாற்றுச் செய்திகளைத் தன்னகத்தே கொண்டிருந்தது எனக்கொள்ளுதல் பொருத்தமுடையதே.

'முத்தரையர் கோவை'யைப் போன்று இதுவும் அக்காலை புகழ் பெற்றிருந்ததெனலாம்[1]

யாப்பருங்கலக்காரிகையின்கண் மேற்கோளாக எடுத்தாளப் பெற்றிருக்கும் பாடலொன்று, வரகுண பாண்டியனின் பெருமையினையும் புகழினையும் முன்னிறுத்தி, அகத்துறைப் பாடலாகப் பாடப்பெற்றுள்ளது. இப் பாடலை நுண்ணிதின் ஆய்ந்து பார்க்குங்கால், வரகுண பாண்டியனின்மீது பாடப்பெற்ற வரகுணன் கோவையென்ற நூலிலிருந்தே இது எடுக்கப்பட்டதோ என்ற சந்தேகம் நமக்குத் தோன்றுகிறது. இப் பாடல் முதலாம் வரகுண பாண்டியனைக் குறிக்கின்றதா? அல்லது இரண்டாம் வரகுண பாண்டியனைக் குறிக்கின்றதா? என்பதனையும் நாம் அறுதியிட்டு உறுதியாகக் கூறவியலவில்லை. ஈண்டு நாம் இப் பாடலைக் காண்போம்:

மண்டலம் பண்டுண்ட திண்டோள் வரகுணன் தொண்டியின் வாய்க்
கண்டலம் தண்டுறைக் கண்டதொன் றுண்டு கனமகரக்
குண்டலம் தெண்டையி ரண்டொடு தொண்டையும் கொண்டதோர் திங்கள்
மண்டலம் வண்டலம்பக் கொண்டல் தாழ வருகின்றதே[2]
யாப்பருங்கலக் காரிகை.

**மணிவாசகரின் சமகாலத்தவன் யார்?**

திருவாதவூரடிகளாகிய மாணிக்கவாசகப் பெருமான் முதலாம் வரகுண பாண்டியனது காலத்தில் வாழ்ந்தவரா? இரண்டாம் வரகுண பாண்டியனது ஆட்சிக் காலத்தில் வாழ்ந்தவரா? என்னும் வினா வரலாற்றாசிரியர்களையும், இலக்கிய ஆராய்ச்சியாளர்களையும் தீவிரமாகச் சிந்திக்க வைத்தது. இச் சிக்கலை அவிழ்க்க முயன்ற அறிஞர்கள் பலரும் ஒருமித்த கருத்துடையராக இல்லை.

மணிவாசகர் முதலாம் வரகுணனின் காலத்தவரே என்னும் கருத்தினை வலியுறுத்தியவர்களுள் கல்வெட்டறிஞர் திரு. தி.வை. சதாசிவ பண்டாரத்தார்[3], இலக்கிய வித்தகர் ஔவை. சு.

[1] பண்டைக் காலத்தில் 'முத்தரையர் கோவை' என்னும் பெயரில் நூலொன்று வழங்கிவந்தது. இந் நூல் குறுநில மன்னரான முத்தரையரது வரலாற்றினைத் தொகுத்துக் கூறியதெனலாம். இந் நூல் இன்று கிடைக்கப் பெறவில்லை.

[2] யாப்பருங்கலக் காரிகை–41. மேற்கோள்.

[3] திரு. தி. வை. சதாசிவ பண்டாரத்தார் 'பாண்டியர் வரலாறு'

துரைசாமிப்பிள்ளை[1] ஆகியோர் முதன்மையானவர்களாவர். இவர்களின் அடியொற்றி திரு. என். சுப்பிரமணியன் அவர்களும்[2] மணிவாசகரை முதலாம் வரகுணன் காலத்திற்கே கொண்டு செல்கின்றார்.

இலக்கிய அறிஞர் பண்டாரகர் மா. இராசமாணிக்கர், கல்வெட்டறிஞர் திரு. கே. ஜி. கிருட்டிணன், திரு. கே. வி. இராமன் முதலானோர் மணிவாசகப் பெருமான் இரண்டாம் வரகுண வருமனின் காலத்தவனே என்று அறைகின்றனர். ஈண்டு நாம் இச்சைவமணி யார் காலத்தவர் என்பதனைச் சிறிது ஆய்வோம்.

திருப்பரங்குன்றக் கல்வெட்டில் முதலாம் வரகுண பாண்டியன் மாறஞ்சடையனென்று குறிக்கப் பெறுகிறான். இக்கல்வெட்டின் காலம் கி.பி. 773-774 ஆகும். மாறங்காரி என்னும் அதிகாரி முதலாம் வரகுணனிடம் பணிபாற்றியவன். இவனது கல்வெட்டொன்று ஆனைமலையில் காணப்பெறுகின்றது. இக்கல்வெட்டின் காலம் கி. பி. 770 ஆகும். இக்கல்வெட்டுகளை ஆதாரமாகக் கொண்டு முதலாம் வரகுணனின் ஆட்சிக் காலம் கி. பி. 768-ல் தொடங்கி கி. பி. 815-ல் முடிந்திருக்க வேண்டுமென்பதனை அறியலாம்.

சுந்தரமூர்த்தி நாயனார் 'காடவர் கோன் கழற் சிங்கன்' எனக் குறிப்பிடுவது மூன்றாம் நந்திவர்மப் பல்லவனேயாகுமென்பது ஆராய்ச்சியறிஞர் பலரும் ஏற்றுக் கொள்கின்ற கருத்தாகும். இப் பல்லவ வேந்தனின் காலமோ கி.பி. 825–850 ஆகும். மணிவாசகப் பெருமான் சுந்தரரது காலத்திற்குப் பிற்பட்டவரென்பதும் அனைவரும் ஏற்றுக் கொள்ளும் செய்தியாகும்.[3]

'இரண்டாம் வரகுணன் மாணிக்கவாசகர், பட்டினத்தடிகள் ஆகியோரால் பாராட்டப்பட்டவன். இரண்டாம் வரகுணன் அபராஜிதவர்மனைத் திருப்புறம்பியத்தில் வென்று திருவிடைமருதூரில் தங்கியதைச் சுந்தரர் குறிப்பிடவில்லை[4] என்ற பண்டாரகர் மா. இராசமாணிக்கரது கருத்தும் இதனை வலியுறுத்துவதாகவே உள்ளது. இவற்றால் முதலாம் வரகுணனுக்குப் பிற்பட்டவர் சுந்தரர் என்பதும் சுந்தரருக்குப் பிற்பட்டவர் மாணிக்கவாசகர் என்பதும் பெறப்படுகின்றது.

[1] மதுரைக் கும்பாபிஷேக மலர் (1963)—ஔவை சு. துரைசாமி பிள்ளை 'பாண்டியன் வரகுணன்' பக்கம் 61.

[2] Dr. N. Subramanian, History of Tamil Nad.

[3] மதுரைத் திருக்கோயில்—திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா மலர், 1974. சி. ம. இலட்சுமணன், 'மணிவாசகர் காலத்து மன்னவன் யார்?'

[4] பண்டாரகர் மா. இராசமாணிக்கனார் 'பெரிய புராண ஆராய்ச்சி'.

அடுத்து, மணிவாசகப் பெருந்தகை ஈழம் சென்றது கி. பி. 869 என்பதனை இலங்கை நாட்டு நூலான 'இராச ரத்தம்' குறிப்பிடுவதாலறியலாம். இதனால் மாணிக்கவாசகரின் காலம் நன்கு தெளிவுறுகின்றது. இதனை அடிப்படையாகக் கொண்டு இச் சிவமணி கி. பி. 862 ஆம் ஆண்டு அரியணையேறிய இரண்டாம் வரகுணனது காலத்தவனேயாகுமென்பதனை நாம் உறுதியாகக் கொள்ளலாம்.

இவ் வரகுண பாண்டியன் தென்னாடுடைய சிவபிரான்மீது எல்லையற்ற அன்பு பூண்டிருந்தான்; சிவநெறியே செந்நெறியெனக் கொண்டிருந்தான். இவனது சிவப்பற்றைத் தளவாய்புரச் செப்பேடுகளும் பின்வருமாறு சிறப்பித்துப் பேசுகின்றது. 'மற்றவர்க்கு மகனாகிய கொற்றவனெங் கோவரகுணன்' என்ற அடியைக் கொண்டே இரண்டாம் வரகுணன் காலத்தவரே மணிவாசகர் என்பதனை அறியலாம்.

'மற்றவர்க்கு மகனாகிய கொற்றவனெங் கோவரகுணன்
பிள்ளைப்பிறைச் சடைக்கணிந்த பினாகபாணி எம்பெருமானை
உள்ளத்தி லினிதிருவி உலகங்காக் கின்றநாளில்
அரவரைசன் பல்லூழி ஆயிரமா யிருந்தலையால்'.[1]

மணிவாசகரிடம் கொண்டிருந்த தொடர்பின் காரணமாகவே இவ் வரகுணன் சைவ சமயத்தில் சிறந்த பற்று கொண்டிருந்தான் எனலாம்.

கல்வெட்டாராய்ச்சியறிஞர் திரு. கே. ஜி. கிருட்டிணன் அவர்களும் 1971ஆம் ஆண்டு மதுரை மாநகரின்கண் நடைபெற்ற பாண்டியர் வரலாற்றுக்கான கருத்தரங்கில் மணிவாசகர் இரண்டாம் வரகுணன் காலத்தவரேயென்பதனைப் பின்வரும் அடிகளால் வலியுறுத்தினார்:

'நம்மைப் பொருத்தமட்டில் இரண்டாம் வரகுணன் சிறந்ததோர் சிவநேயச் செல்வன் ஆவான். பிள்ளைப்பிறைச் சடைக்கணிந்த பெருமானைச் சிந்தையில் கொண்டோனென்று தளவாய்புரச் செப்பேடு இவனைக் குறிப்பதும் இதனை ஆதரிப்பதாக உள்ளது. எனவே, கி. பி. 862 ஆம் ஆண்டு அரியணையேறிய இரண்டாம் வரகுணனே மாணிக்கவாசகரின் உடன் காலத்தவரென்று நாம் முடிவு செய்யலாம்.'[2]

1 'பாண்டியர் செப்பேடு பத்து', தளவாய்புரச் செப்பேடு பக். 126, வரிகள் 2–5.

2 Varaguna II is according to us great Siva devotee. This is supported by statement in the Dalavaypuram plates that Varagunan II led a detached

பண்டாரகர் திரு. கே. வி. இராமன் அவர்களும் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்தவர் மாணிக்க வாசகரென்றும், அவர் இரண்டாம் வரகுணனின் உடன்காலத்தவரென்றும் தமது நூலில் குறிப்பிடுகின்றார்.[3] 'தமிழக வரலாற்றில் பாண்டியர் இருவர் வரகுணன் என்ற பட்டம் கொண்டிருந்தனர். அவர்களில் முதல் வரகுணன் பராந்தக நெடுஞ்சடையன் ஆவான். இரண்டாம் வரகுணன் மணிவாசகப் பெருமானின் சமகாலத்தவன் என்று கருதப்பட்டவன்' என்று கல்வெட்டு[4] என்ற ஏடும் குறிப்பிடுகின்றது.

அடுத்து, 'குமரகுருபரன்' என்ற ஏடும் 'திருவாதவூரடிகளாகிய மாணிக்கவாசக சுவாமிகளைத் தமது முதல் அமைச்சராகப் பெற்ற பேருடையவரும், சிவபெருமான் இடைக்காடரது பிணக்குத் தீர்த்த காலத்திய பாண்டிய அரசனாகிய குலசேகர பாண்டியனது திருமகனும், இறைவன் திருவாதவூரடிகளுக்கு உபதேசித்து ஆட்கொண்டமை - நரியைப் பரியாக்கி... முதலிய திருவிளையாடல்கள் நிகழப்பெற்ற மன்னவரும் திருப்பெருந்துறையில் ஆலயம் அமைக்கவும் அடியார்களுக்கு அளிக்கவும் வாதவூரரால் பயன்படுத்தப்பெற்ற பொருள் படைத்தவரும், 'வரகுணனும் தென்னவன்', 'வரகுணன் வெற்பின் வைத்த க்யல்' என்று திருக்கோவையாரில் குறிக்கப் பெற்றவரும், 'பெரிய அன்பின் வரகுண தேவர்' எனப் பட்டினத்தடிகளாலும், நம்பியாண்டார் நம்பியாலும் புகழப்பெற்ற இரண்டாம் வரகுணன் என்று ஆராய்ச்சியாளர் ஒரு சாராரால் கருதப்பெறும் சிவபக்திச் செல்வரும் ஆகிய அரிமர்த்தன பாண்டியன்'[4] என்று குறிப்பிடுகின்றது.

---

life devoted to the Lord having the crescent moon on his locks of hair. There fore we can conclude that Varagunan II, who ascended the throne in 862 A.D. was the contemporary of the saint.

K. G. Krishnan. At seminar on Pandyan History held at Madurai on 22-8-71—24-8-71.

[3] The description of this king in this copper plate (Dalavaypuram copper plate) as the king 'Meditating on Siva' is taken as sufficient evidence to settle the date of Manickavasagar as the contemporary of Varagunan II, ie, the later part of the 9th century A D. Though this is not improbable, there seem to be certain other difficulties in giving such an early date to Manickavasagar, who on the grounds of internal evidence and other evidences from saivite literature, is relegated to a later date.

Dr. K. V. Raman, 'Some Aspects of Pandyan History in the light of recent discoveries' (University of Madras) page 9.

[4] 'கல்வெட்டு', பதிப்பாசிரியர்: ஆர். நாகசாமி, இதழ் 3, பக். 3.

[5] 'குமரகுருபரன்' 1954—மார்கழித் திங்கள் இதழ்.

**முடிவு**

மேற்கூறப்பட்ட இலக்கியச் சான்றுகளாலும், கல்வெட்டுச் சான்றுகளாலும், அறிஞர்களது ஆராய்ச்சி உரைகளாலும் இரண்டாம் வரகுணனின் உடன் காலத்தவரே மணிவாசகப் பெருந்தகை என்பது உறுதி பெறுகிறது. வரகுணன், சிவ பெருமான்மீது கொண்டிருந்த ஈடிணையற்ற பேரன்பினைக் கண்ட மணிவாசகப் பெருந்தகை பெரிதும் மகிழ்ந்தார். அதனைத் தாமியற்றிய திருச்சிற்றம்பலக் கோவையாரில் மறவாமல் குறிப் பிட்டுள்ளார். அவனது பக்தித் திறத்தை விளக்க வேறு சான்று தேவையோ. ஈண்டு நாம் அப் பாடல்களைக் கண்டு களிப்போம்.

'மன்னவன் தெம்முனை மேற்செல்லு மாயினும் மாலரியே
றன்னவன் றேர்புறத் தல்கல்செல் லாது வரகுணனாந்
தென்னவ னேத்துசிற் றம்பலத் தான் மற்றைத் தேவர்க்
கெல்லா
முன்னவன் மூவலன் றூமற் றோர்தெய்வம் முன்னவனே'[1]

'புயலோங் கலர்சடை யேற்றவன் சிற்றம் பலம்புகழும்
மயலோங் கிருங்களி யானை வரகுணன் வெற்பின்வைத்த
கயலோங் கிருஞ்சிலை கொண்டுமன் கோபமுங் காட்டி
வருஞ்
செயலோங் கெயிலெரி செய்தபின் இன்றோர் திருமுகமே'[2]

சைவத் திருமுறைகளைத் தொகுத்தளித்து, சைவ உலகிற்குப் பெரும்பணியாற்றிய பெருந்தகையாம் நம்பியாண்டார் நம்பி, தமது கோயிற்றிருப்பண்ணியர் விருத்தத்தில் வரகுணனின் சிவப் பற்றைச் சிறப்பித்துப் பாடுகின்றார். இவர் கி. பி. பத்தாம் நூற்றாண்டில் தமிழகத்தில் வாழ்ந்து வந்தாரென்பது ஈண்டு நினைவிற் கொள்ளத் தக்கதாகும். அவர் இவ் வேந்தனது பக்திச் சிறப்பினை யாங்ஙனம் விளக்குகின்றார் என்பதனைக் காண் போம்.

'பொடியேர் தருமே னியனுநிப் பூசல் புகவடிக்கே
கடிசேர் கணைதுளிப் பக்கண்டு கோயிற்க ருவியில்லார்
அடியே படவமை யுங்கணை யென்ற வரகுணன்றன்
முடியே தருகழ லம்பலத் தாடிதன் மொய்கழலே'

மேற்கூறப்பட்ட இலக்கிய அடிகள் சிவனடியாரான வர குணனின் பக்தி மேம்பாட்டினைப் படம்பிடித்துக் காட்டு

1 திருச்சிற்றம்பலக் கோவையார் 306.
2 Ibid 327.

கின்றன. முற்றும் துறந்த முனிவரான பட்டினத்தடிகளோ, வரகுணன் சிவபெருமான்மீது கொண்ட அளவற்ற பற்றின் காரணமாக மேற்கொண்ட நடவடிக்கைகளை, தொண்டுகளை மிக அழகாக எடுத்துக் கூறுகின்றார். அவரது பாடல் மேற்கூறப் பட்ட பாடல்களுக்கெல்லாம் முடிமணியாகத் திகழ்கின்றது. அதனை அவர் திருவிடைமருதூர் மும்மணிக்கோவையில் யாங்ஙனம் விளக்குகின்றார் என்பதனைக் கீழே காண்போம்:

வெள்ளை நீறு மெய்யிற் கண்டு
கள்ளன் கையிற் கட்டவிழ்ப் பித்தும்
ஓடும் பன்னரி யூளைகேட் டரனைப்
பாடின வென்று படாம்பல வளித்தும்
குவளைப் புனலிற் றவளை யரற்ற
ஈசன் றன்னை யேத்தின வென்று
காசும் பொன்னுங் கலந்து தூவியும்
வழிபடு மொருவன் மஞ்சனத் தியற்றிய
செழுவிதை யெள்ளைத் தின்னக் கண்டு
பிடித்தலு மவனிப் பிறப்புக் கென்ன
இடித்துக் கொண்டவ னெச்சிலை நுகர்ந்தும்
மருத வட்டத் தொருதனிக் கிடந்த
தலையைக் கண்டு தலையுற வணங்கி
உம்மைப் போல வெம்மித் தலையுங்
கிடக்க வேண்டுமென் றடுத்தடுத் திரந்துங்
கோயின் முற்றத்து மீமிசைக் கிடப்ப
வாய்த்த தென்று நாய்க்கட்ட மெடுத்துங்
காம்பவிழ்ந் துதிர்ந்த கனியுருக் கண்டு
வேம்புகட் கெல்லாம் விதான மமைத்தும்
விரும்பின கொடுக்கை பரம்பரற் கென்று
புரிகுழற் றேவியைப் பரிவுடன் கொடுத்த
பெரிய அன்பின் வரகுண தேவரும்'[1]

[1] இவ் வேந்தன் திருவிடைமருதூரில் இருந்தபோழ்து, காவலர்கள் கள்வன் ஒருவனைக் கையும் களவுமாகப் பிடித்துக் கொண்டுவந்து நிறுத்தினர்: அவனது மெய்யில் திருநீறு இருந்ததனைக் கண்ட வேந்தன் அவனை விடுதலை செய்யு மாறு ஆணையிட்டான். இரவில் நரிகள் ஊளையிட்டுக் கொண்டிருந்தன; அதனைக் கேட்ட இவன் அவ்வோசை சிவசிவ என்னும் ஓசை போன்றிருத்தலின், அவற்றிற்கு ஆடைகள் பல அள்ளி வீசினான். நீரில் தவளைகள் கத்திக்கொண்டிருந்தன; அவ் வோசை அரகர என்று முழங்குவதாக எண்ணி காசும் பொன்னும் கலந்து அப் பொய்கையில் வீசியெறிந்தான்.

மருதூர் வட்டத்தில் இவன் ஒருகால் உலாவி வருங்கால், தனித்துக் கிடந்த ஒருவனது தலையோட்டைக் காண நேர்ந்தது. அதனைக் கண்டவுடன் அம் மண்டை யோட்டைப் போன்று தன் தலையும் அவ் வெல்லையில் கிடக்கும் சிவநலம் பெறல் வேண்டுமென்று அத் தலையையும் சிவன் அருளையும் வேண்டிக்கொண்டான். திருக் கோயில் முற்றத்திலே, நாய்கள் பல குழுமியிருப்பது கண்டு, நாய்கள் நலம் கருதி நாய்க்கட்டடம் ஒன்றினை இவன் கட்டுவித்தான். வேப்ப மரத்தடியில் உதிர்ந்து

**நம்மாழ்வார்**

சைவ சமயத்திற்கு அளப்பரிய தொண்டு செய்த நாயன்மார் நால்வருள் ஒருவராகக் கருதப்பெறும் மணிவாசகர் இரண்டாம் வரகுணனின் காலத்தில் வாழ்ந்து வந்தது போன்று, வைணவ ஆழ்வார்களின் தலைவராயிருந்து பெரும்பணி புரிந்த நம்மாழ் வாரும் இவ் வேந்தனது உடன் காலத்தவராவார். இவர் வாழ்ந் ததும் ஒன்பதாம் நூற்றாண்டேயாகும். இச் சமயக் குரவர்களின் பக்திப் பனுவல்கள் 'திருவாய்மொழி' என்றும் 'திருவாசகம்' என்றும் பெயரிடப்பட்டிருத்தல் எண்ணியெண்ணி மகிழத் தக்கதாகும்.

**இறையன்பு :** இரண்டாம் வரகுணன் நாடாள்வதில் கொண்டிருந்த நாட்டத்தைக் காட்டிலும் இறைவன்மீது கொண்டிருந்த ஈடுபாடே மிகுதியென்பது ஈண்டு குறிப்பிடத் தக்கதாகும். தளவாய்புரச் செப்பேடுகளும் இவனது பக்திப் பெருக்கினை விரித்துரைக்கின்றதேயன்றி இவனது சாதனைகளாக யாதும் கூறவில்லை. சின்னமனூர்ச் செப்பேடுகளும் இவனது வெற்றி மேம்பாடுகள்பற்றி விரிவாக யாதும் கூறவில்லை. இவற்றையெல்லாம் நுண்ணிதின் ஆய்ந்து பார்க்குங்கால் இவன் செயற்கரிய செய்த வேந்தனல்லவென்பதும், ஈசன் கழலேத்தும் செல்வமே செல்வமெனக் கொண்டு வாழ்ந்தான் என்பதும் புலனாகின்றது.

திருப்புறம்பியப் போருக்குப்பின் இவ் வேந்தன் நாடாட்சி யில் நாட்டங் கொள்ளாது, தனது தம்பியான வீரநாராயண னிடம் முழுப் பொறுப்பையும் ஒப்படைத்தான் எனத் தோன்று கிறது. ஏறத்தாழ கி. பி. 862-ல் அண்ணனுடன் இணைந்த மன்னனாக ஆட்சிப் பொறுப்பேற்ற இவன் போர் நிகழ்ச்சி களிலும் அரசியல் விவகாரங்களிலும் அண்ணனுக்கு உறுதுணை யாக இருந்தான். இரண்டாம் வரகுணனுக்கு ஆண் மகவு இல்லாத காரணத்தால், தனது அண்ணனுக்குப் பின்பு இவனே சடையவர்மன் என்னும் பட்டம் பூண்டு ஆண்டு வந்தான். வரகுணனுடன் இவன் இணைந்த ஆட்சி மேற்கொண்டதால்தான் வரகுணன் ஆட்சிப் பொறுப்பினை மறந்து, சிவனை நினைந்து செம்மையாக வாழ்ந்தான்.

---

கிடந்த வேப்பப் பழங்கள் சிவலிங்கம் போன்றிருந்ததால், அவற்றை உதிர்த்த வேப்புகட்கு அவன் விதானமளித்தான், தான் விரும்புவதனையே ஈசனும் விரும்பு வார் என்ற எண்ணத்தால், தான் விரும்பி மலைந்த நங்கையை இறைவர்க்களித்து இன்புற்றான்.

## இரண்டாம் வரகுணனும் திருவிடைமருதூரும்

இரண்டாம் வரகுண பாண்டியன், தஞ்சை மாவட்டம் திருவிடைமருதூரிலுள்ள மருதப்பர்மீது பெரிதும் ஈடுபாடு கொண்டிருந்தான். இவ் வேந்தன் தனது இறுதிக் காலத்தினை இவ் விறைவன் கோயிலிலேயே கழித்ததாகவும் கூறப்படுகிறது. திருவிடைமருதூர்க் கோயிலில் பெண் சிலையொன்று காணப் பெறுகின்றது. இதனை வரகுணனின் மனைவியென்றே கோயிலில் பணிபுரியும் அதிகாரிகளும் பணிபாட்களும் கூறுகின்றனர். இவ் வேந்தன் தனது மனைவியை மருதப்பர் அடிமையாக நல்கியதாகத் திருவிடைமருதூர்ப் புராணம் (மருதவனப் புராணம்) கூறுவதனை இதற்குச் சான்றாகக் காட்டுகின்றனர். வரகுணனது திருவுருவமும் பாண்டியன் தோரண வாயிலில் திருவிடைமருதூர்க் கோயிலில் உள்ளது.

திருவிடைமருதூரில் காணப்பெறும் சோழர் காலச் சாசனமொன்றில் 'வரகுணன் வயக்கல்' குறிக்கப்பெறுகிறது. இதனைக் கொண்டும் வரகுணனுக்கும் திருவிடைமருதூர் கோயிலுக்கும் நெருங்கிய தொடர்புண்டு என்பதனை அறியலாம்.

### முடிவுரை

சிவநேயச் செல்வனான இவன், தனது தந்தையினும் மேம்பட்ட வீரனாவான். தனது தந்தையின் ஆட்சிக் காலத்தில் பல்லவர்கள் கைப்பற்றியிருந்த பாண்டிய நாட்டுப் பகுதிகள் சிலவற்றை மீட்டதால் இவன் பெருமைக்குரியவனாவான். சோணாட்டுப் பகுதியில் படையெடுத்துச் சென்று தஞ்சை, திருச்சிப் பகுதிகளைக் கைப்பற்றியமை இவனது சாதனையாகும். சோணாட்டின் உட்பகுதிகளிலும் இவனது கல்வெட்டுகள் காணப் பெறுவதே இவனது வெற்றிக்குச் சான்றாகும். இருப்பினும் இவனது வெற்றிகள் நிரந்தரமாக இருக்கவில்லை. பல்லவர்க்குக் கீழ்ப்பட்டவனாகவே தனது ஆட்சியின் பிற்பகுதியில் இவன் ஆண்டதாகத் தெரிகிறது.

## பராந்தக பாண்டியன் (கி. பி. 859-907)

### முன்னுரை

சீமாறன் சீவல்லப பாண்டியனுக்கு வரகுணன், பராந்தக வீர நாராயணன் என்ற இரு புதல்வர்கள் இருந்தனர். சீமாற சீவல்லபனுக்குப் பின்பு, அவனது மூத்த மைந்தனான வரகுணன் பாண்டி நாட்டின் மன்னனாகப் பொறுப்பேற்கும் முறைமையும் பெற்றிருந்தான். இருப்பினும் பராந்தகன் வரகுணனைக்

காட்டிலும் திறமை மிக்கவனாகத் திகழ்ந்தமையின் ஏறத்தாழ கி. பி. 859-ல் இளவரசுப் பட்டம் சூட்டப் பெற்றான். இதனால் கோபம் கொண்ட வரகுணன் பல்லவர், ஈழவர் துணையுடன் கி.பி. 862-ல் பாண்டிய வேந்தனாக அரியணையேறினான் என்பதனை நாம் முன்பே கண்டோம்.

**அரியணையேறுதல்**

வரகுண பாண்டியன் திருப்புறம்பியப் போரில் தோல்வி பெற்ற பின்பு நெடுநாள் வாழ்ந்திருந்ததாகத் தோன்றவில்லை யென்றும், அவன் தனக்குப்பின் ஆட்சி புரியும் மைந்தர்களின்றி இறந்துபட்டதாகத் தோன்றுகிறதென்றும், அதன் காரணமாக அவனது தம்பியான பராந்தகன் பட்டமெய்தினனென்றும், ஆராய்ச்சியறிஞர் திரு. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியார் கருதுகின்றார்.[1] இவ் வேந்தன் கி.பி. 880 ஆம் ஆண்டு அரியணையேறினனென்பது இவரது முடிவாகும்.[2]

**காலம்**

கல்வெட்டறிஞர் திரு. டி. வி. சதாசிவ பண்டாரத்தாரவர்கள் பராந்தக பாண்டியன் தன் தமையன் இரண்டாம் வரகுண பாண்டியன் இறந்த பின்னர் பட்டம் பெற்றுள்ளமையின் இவன் கி.பி. 880ஆம் ஆண்டிற்குப் பிறகு அரியணையேறியிருத்தல் வேண்டும் என்பது ஒருதலை. ஆனால், அவ் வாண்டை இப்போது அறிதற்கியலவில்லை என்று தம் 'பாண்டியர் வரலாறு' என்னும் நூலில் குறிப்பிடுகின்றார்.[3]

இவ்விரு கருத்துகளையும் நாம் ஆராய்ந்து பார்க்குங்கால் திருப்புறம்பியப் போருக்குப்பின் (கி.பி. 880) வரகுணன் இறந்து பட்டதாகவும், அதன் பின்னரே அவன் பாண்டிய நாட்டின் அரியணையேறியதாகவும் தெளிவாக அறிய முடிகிறது. இவர்களது கருத்து ஈண்டு பொருத்தமுடையதாகத் தோன்றவில்லை.

தளவாய்புரச் செப்பேடுகளின் துணை கொண்டு நாம் இதனை நுண்ணிதின் ஆராய்ந்து பார்க்குங்கால், வரகுண பாண்டியன் இறந்துபட்ட பின் பராந்தக பாண்டியன் அரியணையேறியதாகத் தோன்றவில்லை. எனவே, இவன் திருப்புறம்பியப் போருக்கு முன்பே அரசு கட்டிலேறியிருத்தல் வேண்டுமென்பதும் உறுதி

[1] Nilakanta Sastri, K. A. 'The Pandyan Kingdom' (From the earliest times to the Sixteenth Century) 1972. page 70.

[2] Ibid. page 229.

[3] சதாசிவ பண்டாரத்தார், தி. வை. 'பாண்டியர் வரலாறு' 1950' பக். 76-77.

யாகத் தெரிகின்றது. தளவாய்புரச் சாசனத்தை வழங்கியவன் பராந்தக வீர நாராயணனுவான். இவன் தனது நாற்பத்தைந்தா மாட்சியாண்டில் இச் சாசனத்தினை வழங்கியுள்ளான். (கி. பி. 859+45=904). இச் சாசனம் வழங்கப்பட்டபோழ்து இரண்டாம் வரகுண பாண்டியனே பாண்டி நாட்டின் மன்னனுக வீற்றிருந்தான். வரகுணன் மன்னனுக அமர்ந்திருந்தபோது அவனது தம்பியான பராந்தக பாண்டியனின் நாற்பத்தைந்தாவது ஆட்சி ஆண்டு குறிக்கப் பெற்றிருத்தலின் அண்ணன், பெயரளவில் மன்னனுக வீற்றிருக்க உண்மையான ஆட்சிப் பொறுப்பினைத் தம்பி பராந்தக பாண்டியனே ஏற்று ஆட்சியினை நடத்தி வந்தானென்பது தெளிவாகத் தெரிகின்றது. அண்ணன் ஆட்சிப் பொறுப்பிலே நாட்டம் கொள்ளாததின் யாதோவெனின் சிவபெருமான்மீது தான் கொண்டிருந்த அளவற்ற பற்றேயாமென்றுணர்க. சிவ பக்தியில் மேம்பட்டு விளங்கிய இவ் வேந்தன் சிவ பூசையிலேயே தன் வாழ்நாளைக் கழித்து வந்தான் போலும், மக்களை ஆளவேண்டிய இவ் வேந்தன் தென்னுடைய சிவனுல் ஆளப்பட்டான் என்பதனை எண்ணுந்தோறும் இவன் பக்தி வாழ்வே பேரின்ப வாழ்வென எண்ணினுனென்பது புலகின்றது.

தஞ்சை மாவட்டம் திருநெய்த்தானம் (தில்லை ஸ்தானம்) மகாதேவர் திருக்கோயிலில் காணப் பெறுகின்ற வரகுண பாண்டியனது நான்காமாட்சியாண்டுக் கல்வெட்டில் நம்பிராட்டியாரும், கோன்பராந்தகனும் மகாதேவர்க்களித்த தானத்தினைக் குறிப்பிடுகின்றது. ஈண்டு நம்பிராட்டியார் என்பது வரகுண பாண்டியனின் தேவியையும், கோன் பராந்தகனர் என்பது வரகுணனின் தம்பியாகிய பராந்தக வீர நாராயணனைக் குறிப்பதாகவும் கொள்ளலாம்.

இக் கல்வெட்டுச் செய்தியினை நாம் நுண்ணிதின் ஆய்ந்து பார்க்குங்கால் பராந்தக வீரநாராயணன் தனது அண்ணனுடன் இணைந்த ஆட்சியினை மேற்கொண்டிருந்தானென்பது புலனுகும். அதுவும் இரண்டாம் வரகுணன் அரியணையேறிய அதே ஆண்டிலேயே, பராந்தகனும் ஆட்சிப் பொறுப்பினைப் பகிர்ந்து கொண்டான் என்றுகூட எண்ணத் தோன்றுகிறது. ஏனெனில், கி. பி. 862-க்கு முன்பே (கி. பி. 859) பராந்தகன் இளவரசுப் பட்டம் கட்டப் பெற்றுன் என்பது புலப்படுகிறது.

தமிழ்நாட்டைப் பொறுத்தமட்டில் இருவரோ இருவருக்கு மேற்பட்டவரோ இணைந்த ஆட்சியினை மேற்கொள்வது (Co-ruler) புதுமையாகத் தோன்றலாம். ஆனல், பாண்டிய

நாட்டிலோ இதுபோன்ற இணைந்த ஆட்சியினை நாம் அடிக்கடி காண்கிறோம். உலக வரலாற்றினை ஆய்ந்து பார்க்குங்கால், இணைந்த ஆட்சி முறையும் சில நாடுகளில் நிலவியதனை அறியலாம். ஸ்பார்டா நகரத்தில் (Sparta) இரண்டு மன்னர்களும், ரோம் நகரத்தில் இரண்டு கான்சல்களும் (Consuls) சில சமயங்களில் மூன்று அரசப் பிரதிநிதிகள் (மூவராட்சி, Triumvarate) இணைந்து ஆண்டதும் வரலாற்றில் குறிக்கப்பட்டுள்ளன. இதனைப் போன்றே பாண்டியர் இருவர் ஒரே சமயத்தில் ஆண்டனர்.

வீர நாராயணன் எவ்வாண்டு அரியணையேறினான்? என்ற வினாவிற்கு நாம் விடை காண்போம். திரு. நீலகண்ட சாஸ்திரியவர்கள் இவன் திருப்புறம்பியப் போருக்குப் பின் அதாவது கி. பி. 880ஆம் ஆண்டு ஆட்சிப் பொறுப்பேற்றிருத்தல் கூடுமென்று கூறுகிறார். இதனை நாம் உண்மையென்று ஏற்றுக் கொண்டால் இவன் தளவாய்புரச் சாசனத்தை வழங்கிய ஆண்டு (நாற்பத்தைந்தாம் ஆட்சியாண்டு 880+45=கி.பி. 925) கி. பி. 925 எனக் கொள்ளுதல் வேண்டும். இது நாம் ஏற்றுக் கொள்ளத் தக்கதாக இல்லை. எனவே, இவ் வேந்தன், வரகுணன் ஆட்சிப் பொறுப்பேற்ற சில நாட்களிலேயே (சுமார் 862-ல்) தானும் ஆட்சிப் பொறுப்பேற்றானென்றும், அண்ணனும் தம்பியும் இணைந்து பலகாலம் ஆட்சி புரிந்தனர் (Joint Rule) எனவும், இவனது ஆட்சி கி.பி. 907 வரை நீடித்திருத்தல் கூடுமென்றும் கூறுவதே பொருத்தமுடையதாகத் தோன்றுகிறது. அண்ணனும் தம்பியும் இணைந்த ஆட்சியினை மேற்கொண்டிருந்தனர் என்ற செய்தி இவ் விருவருமே சடையவர்மன் என்னும் பட்டம் புனைந்து ஆட்சி புரிந்ததனாலும் அறியலாம். வரகுண வர்மனுக்குப் பின் பராந்தக பாண்டியன் ஆட்சிப் பொறுப்பினையேற்றிருப்பானேயாகில் அவன் மாறவர்மன் என்னும் பட்டத்தினையல்லவா புனைந்திருத்தல் வேண்டும். சோழ வேந்தர் உடன் பிறந்தோருள் ஒருவர் பின் ஒருவர் ஆண்ட காலத்து இராசகேசரி, பரகேசரியென்னும் பட்டங்களை மாறி மாறிப் புனைந்து கொண்டனரென்பதனை ஈண்டு நாம் எடுத்துக் காட்டாகச் சுட்டலாம். மேலும், இவனது மைந்தனான இராசசிம்ம பாண்டியன் கி. பி. 907-ல் ஆட்சிப் பொறுப்பேற்றான் என்றும் கருதலாம்.

**சான்றுகள் :** இவ் வேந்தனது போர்ச் செயல்கள் இவனால் வழங்கப் பெற்ற தளவாய்புரச் செப்பேடுகளிலும், பெரிய சின்னமனூர்ச் செப்பேடுகளிலும் குறிக்கப் பெற்றுள்ளன.

**செந்நிலப் போர் :** இவன் செந்நிலம் என்னும் போர்க் களத்தில் தனது அண்ணனுடன் போரிட்டு வெற்றி மாலை சூடினன் என்றும், இதுவே அவனது முதல் வெற்றியாகுமென்பதும் சாசனச் செய்தியாகும். இதே வெற்றியினைச் சின்னமனூர்ச் செப்பேடும் செப்புகின்றன. இவ் வேந்தனுடன் போரிட்டு தோல்விகண்ட அந்த அண்ணன் யார்? அந்த அண்ணனுக்கும் இவனுக்கும் போர் ஏற்படக் காரணம் யாது? என்பன போன்ற வினைக்களுக்கு நாம் விடையளிக்க இயலவில்லை. மேலும், இவண் குறிப்பிடப்பட்ட அண்ணன் என்பது வரகுணனைக் குறிக்குமா? அல்லது சீமாற சீவல்லபனுக்கும் ஆசை நாயகிக்கும் பிறந்த மகனைக் குறிக்குமா? (Ilegal son) என்பதும் விளங்கவில்லை. இதனை ஆராய்ச்சியாளர்களின் ஆராய்ச்சிக்கு விடுதல் நல்லதென்று எண்ணுகிறேன்.[1]

**கரவந்தப்புரப் போர்:** வீர நாராயணன் கரகிரியில் உக்கிரனைப் போரில் முறியடித்து அவ் வேந்தனது களிற்றினங்களைக் கைப் பற்றினனெனவும், பெண்ணுகட நகரினை அழித்தானெனவும், கொங்கனைப் போரில் வென்று வெற்றிமாலை சூடினனெனவும் சின்னமனூர்ச் செப்பேடுகள் செப்புகின்றன. மேலும், வாளாண்மை மிக்க இவ் வேந்தன் தாளாண்மையும் மிக்கவனாகி எண்ணற்ற பிரமதேயங்களும், தேவதானங்களும், பள்ளிச் சந்தங்களும் அளித்து நீர் நிலைகளைப் பெருக்கிப் புகழெய்தினனென்றும் சின்னமனூர்ச் செப்பேடுகள் குறிப்பிடுகின்றன.

இங்கு கரகிரியென்பது கரவந்த புரமாகும். இக் கரவந்த புரம் தென்பாண்டி நாட்டில் திருநெல்வேலி வட்டத்தில் (Taluk) உள்ள உக்கிரன் கோட்டையேயாகும். இதன் பெயர்க் காரணத்தை நாம் ஆராய்ந்து பார்க்குங்கால் அக் கோட்டை உக்கிரன் என்னும் தலைவனின் ஆளுகைக்குட்பட்டிருத்தல் வேண்டுமென்பதனை ஊகிக்கலாம். கரவந்தபுரத்தின்கண் நெடுஞ்சடையன் பராந்தகன் பெருங்கோட்டையொன்றினை யமைத்து தன்னால் வென்றடக்கப்பட்ட நாடுகளைப் பாதுகாத்து வந்ததனை நாம் முன்பே கண்டோம். எனவே, உக்கிரன் கோட்டையின் தலைவனான உக்கிரன் பாண்டிய அரசிற்கடங்காது கலகம் விளைவித்திருக்கக் கூடுமென்றும், இதன் காரணமாகவே இருவருக்கும் போர் நிகழ்ந்ததென்றும் எண்ண இடமுண்டு. இப் போரில் உக்கிரன் பாண்டியனால் சிறை பிடிக்கப் பெற்றனனென்பதும் சாசனத்தால் அறியப்படுகின்றது. இதனால் கரகிரி

[1] வேல் வேந்தனை என்று குறிப்பிட்டிருத்தலின் இவன் வரகுணனையே வென்றான் எனக் கொள்வதில் பிழையேதுமில்லை.

யென்பதும், கரவந்தபுரமென்பதும், உக்கிரன் கோட்டை யென்பதும் ஒன்றினையே குறிப்பதாக திரு. டி. வி. சதாசிவ பண்டாரத்தார் கருதுகின்றார்.[1] இக் கரவந்தபுரத்தில் அரசியல் அறிஞர் பலர் தோன்றியிருத்தலின் ஆங்கொரு சாலை அல்லது கடிகை அமைக்கப் பெற்றிருத்தல் வேண்டுமென்று எண்ண இடமுண்டு.

**பெண்ணாகடப் போர் :** பெண்ணாகடம் இவ் வேந்தனால் அழிக்கப்பட்டதன் காரணம் யாதென்று தெரியவில்லை. பாண்டியர்க்குத் திறை செலுத்தி வந்த கொங்கு வேந்தன் திறை செலுத்த மறுத்ததாலோ, கொங்குநாடு தனியாட்சி கோரி புரட்சி செய்ததாலோ, கொங்கர் பாண்டிய நாட்டின் எல்லைப் புறங்களில் ஊடுருவல் செய்ததாலோ இவன் கொங்கரின் கொட்டத்தினை அடக்கினானெனக் கொள்ளலாம்.

இவண் குன்றை, பொக்கரணி, தென்மாயல், வெண்கை பராந்தகம், தென் விழிஞநகர் ஆகிய இடங்களில் நிகழ்ந்த போர்களிலும் வெற்றிவாகை சூடினானென்று தளவாய்புரச் செப்பேடுகள் குறிப்பிடுகின்றன.

**வீரதுங்கன் யார்?**

அடுத்து, இவ் வேந்தன் வீரதுங்கன் என்பானை வென்று வெற்றிக்கொடி நாட்டி அவனைக் கடிவாளமிட்டு குதிரையை யடக்குவது போன்று அடக்கினானென்று தளவாய்புரச் சாசனம் குறிப்பிடுகின்றது. இவண் இவனிடம் தோல்வி கண்ட வீரதுங்கன் யார்? என்பது தெளிவாகத் தோன்றவில்லை. ஒருவேளை இவன் கொடும்பாளூர் வேளிர் குலத்தினனாகக் குறிக்கப் பெற்றுள்ள வீரதுங்கனாகவும் இருத்தல் கூடுமென்று ஊகிக்கலாம். அந்த வீரதுங்கனும் இவண் குறிக்கப்பெற்றுள்ளவனும் ஒருவனா என்பதனை அறுதியிட்டுக் கூறப் போதிய ஆதாரங்கள் நமக்குக் கிடைத்தில.

**விருதுப் பெயர்கள் :** இவண் கலிப்பகை, கண்டருள் கண்டன் (வீரருள் வீரன்) மதுராபுரிப் பரமேச்சுரன், மானினி மகரகேதனன் போன்ற தோரணையான விருதுகளைக் கொண்டிருந்தானென்று தளவாய்புரச் சாசனத்தின் வடமொழிப் பகுதி அறிவிக்கின்றது. இச் சாசனத்தின் தமிழ்ப் பகுதியால் இவன் மனுசரிதன், வாட்சடையன் என்னும் அடைமொழிகளைத் தனது பெயருடன் இணைத்துக் கொண்டதாகத் தெரிகிறது.

[1] சதாசிவ பண்டாரத்தார், தி. வை. 'பாண்டியர் வரலாறு' பக். 77.

பராந்தக பாண்டியனென அழைக்கப் பெறும் இவன் வீர நாராயணனென்னும் பட்டப் பெயரினையும் கொண்டிருந்தான். இவ் வேந்தனது வெற்றிச் சிறப்பினைத் தளவாய்புரச் சாசனம்,

'விரைபரித்தேர் வீரநாரணன் முன்பிருந்த வேல் வேந்தனைச்
செந்தாமரை மலர்பழனச் செங்நிலத்தைச் செருவென்றும்
கொந்தர் பூம் பொழிற்குன்றையும் குடகொங்கிலும் பொக்
கரணியும்
தென்மாயலுஞ் செழுவெண்கையும் பராந்தகனதுஞ் சிலைத்
தெதிர்ந்த
மன்மாய மாமிகுத்தவர் வஸ்துவா கனங்கொண்டும்
ஆறுபல தலைகண்டும் அமராலயம் பலசெய்தும்
சேறுபடு வியன்கழனித் தென்விழிஞ நகர் கொண்டும்
கொங்கினின்று தேனூரளவுங் குடகொங்க ருடல்மடிய
வெங்கதிர்வேல் வலங்கொண்டும் வீரதுங்கனைக் குசை
கொண்டும்
எண்ணிறந்த பரமதேயமும் எண்ணிறந்த தேவதானமும்
எண்ணிறந்த தடாகங்களும் இருநிலத்தி லியற்றுவித்தும்
நின்றபெரும் புகழாலும் நீதிவழங்கு கொடையாலும்
வென்றிபோர்த் திருவாலும் வெல்வேந்தரில் மேம்பட்ட
கதிரார்கடுஞ் சுடரிலைவேல் கலிப்பகை கண்டருள் கண்டன்
மதுராபுர பரமேச்வரன் மாகிமமகர கேதனன் தன்'

என்று பாராட்டிப் பேசுகின்றது.

**பொதுப்பணிகள்:** இவ் வேந்தனது ஆட்சிக் காலத்தில் தடாகங்கள் பல வெட்டப்பட்டன. ஆற்றிலிருந்து பல கால் வாய்கள் அமைக்கப்பட்டன. மதுரை மாவட்டத்திலுள்ள நிலையூர் என்னும் ஊரின்கண் காணப்படும் இவ் வேந்தனது கல்வெட்டொன்று இவனது பெயரால் திரு. வீரநாராயணன் (Sri- Viranarayanan) என்னும் மதகொன்றிருந்ததாகத் தெரிவிக்கின்றது. இது இவ் வேந்தனின் நினைவாகப் பெயரிடப் பெற்றதாக வேண்டும். இம் மன்னனது காலத்தில் கோயில் நிர்வாகம் ஒழுங்காகக் கவனிக்கப்பட்டது. இவனது திருவைகுண்டம் கல்வெட்டினைக் கொண்டு கோயில் நிர்வாகத்தினையேற்று நடத்துவதில் பெரும்பணியாற்றியவர்களைப்பற்றிய குறிப்பு காணப்படுகின்றது.

**சோருடன் நட்புறவு:** வானவன் மாதேவி என்பாள் இவனது அருமை மனைவியாவாள். பட்டத்தரசியான இவள் சேரர் குடிப் பிறந்த குலக்கொடியாவாள். இப் பைங்கிளி திருமகள் போலவும்

இந்திராணி போலவும் அழகிற் சிறந்து விளங்கினாள். திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள சேரன் மாதேவி என்னும் ஊர் இவனது நினைவாக அழைக்கப் பெற்றிருத்தல் வேண்டும். இது சேர்மாதேவி என்னும் புகைவண்டி நிலையத்திற்கருகில் (Railway Station) உள்ளது. இத் திருமணவுறவின் காரணமாகப் பாண்டியர்க்கும் சேருக்குமிடையே நிலவி வந்த பகைமை இவனது காலத்தில் மறைந்ததென்றும், இவர்கள் நட்புறவுடன் வாழ்ந்தனரென்பதும் புலனாகின்றன. முன்பிருந்ததனைவிட இவ் வேந்தனது ஆட்சிக்காலத்தில் சேர மன்னர்களுடன் சுமுகமான உறவு நிலவியிருந்ததனைத் திரு. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியாரும் தமது 'பாண்டிய வரலாறு' என்னும் நூலில் குறிப்பிட்டுள்ளார்.[1] இக் கருத்தினையே பண்டாரகர் என். சுப்பிரமணியன் அவர்களும் தமது 'தமிழ்நாட்டு வரலாறு' என்னும் நூலில் சுட்டிக்காட்டியுள்ளார்.

மதுரை மாவட்டம், திண்டுக்கல் வட்டம் இராமநாதபுரம் பெரும்புள்ளிக் கல்வெட்டுகளை[2] ஆய்ந்து பார்க்குங்கால், கோச்சடைய மாறனும் (சடைய பராந்தக வீரநாராயணன்) இடவை, குடமூக்கு யாத்திரைகளில் பங்கு பெற்றான் என்ற செய்தி அறியப்படுகின்றது. இதனால் வரகுண பாண்டியன் (மாறஞ்சடையன்) இடவையிலும், குடமூக்கிலும் போர் செய்தபோது, இவனும் உதவியிருக்கிறான் என்பது ஊகிக்கப்பெறுகிறது.[3] இக் கல்வெட்டினைக் கொண்டு இவன் 'கோ-சடைய பராந்தக வீரநாராயணன்' எனவும் வழங்கப்பட்டான்[4] என்பதும் வரகுணனும், பராந்தக வீரநாராயணனும் சமகாலத்தவர்கள் என்பதும் புலனாகின்றது.

பராந்தக பாண்டியன் விழிஞத்தினையழித்தும் கொங்கு நாட்டின்மீது படையெடுத்தும் அதே சமயத்தில் சேரர்களுடன் நட்புறவு கொண்டிருந்தான் என்ற செய்தியும் ஒன்றுக்கொன்று முரணாகத் தோன்றுகிறது. இது வியத்தகத் தக்கதாகவும் உள்ளது. ஒன்று இவன் சேரர்களுடன் நட்பு கொண்

1 'The Pandyan Kingdom' page 70.

2 690 of 1905; 2901 of 1955-56.

3 திருப்புனந்தாளில் (தஞ்சை மாவட்டம்) காணப்பெறும் கல்வெட்டொன்றில் இடவை 'பாண்டியனை வென்-கண்ட-சோழ சதுர்வேதி மங்கலம்' எனக் குறிப்பிடுகின்றது—42 of 1944. இதனால் முதலில் வரகுணன் இடவையின் மீதுப் படையெடுத்துச் சென்று, அதனைக் கைப்பற்ற முடியாது போகவே, பராந்தகன் துணைப்படை ஒன்றினைக் கொண்டுசென்றான் போலும்.

4 'இடவை யாத்திரை முற்றுவித்த பராந்தகப் பள்ளிவேளான், அவன் மகன் விழிஞத்தும் இடவையிலும திருக்குடமூக்கிலும் மகாராஜா கோச்சடைய மாறற்குப் பணி லவும செய்த அந்த வேளான் குரும்பர் ஆதித்தன் புள்ளநக்கன்' பெருமபுள்ளிக் கல்வெட்டு.

டிருக்க வேண்டும். அல்லது பகைமை பூண்டு அவர்களுடன் போர் புரிந்திருக்க வேண்டும்.

**இரு மரபுகள் :** இக் கருத்தினை நாம் ஆழ்ந்து நோக்குங்கால், இவனது ஆட்சிக் காலத்தில் இருவகைப்பட்ட சேரர் குலத்தினர் இருவேறிடங்களில் ஆட்சி புரிந்து வந்ததாகத் தோன்றுகிறது. ஒரு மரபினர் சேர நாட்டினையும், மற்றொரு மரபினர் கொங்கு நாட்டினையும் ஆண்டுவந்ததாகத் தெரிகிறது. இதனைக் கோயம்புத்தூர் மாவட்டத்திலுள்ள பழனிக்கண்மையில் கீரனூர் என்னுமிடத்தில் அண்மைக் காலத்தில் கண்டுபிடிக்கப்பட்ட சேரர் கல்வெட்டால் அறியலாம். 1964ஆம் ஆண்டு இவ்வூரிலுள்ள வாகீஸ்வர ஸ்வாமி கோயிலில் கண்டுபிடிக்கப்பட்ட இரவிகந்தனின் இரண்டாமாட்சியாண்டுக் கல்வெட்டாலும் இதனை அறியலாம். பாண்டி நாட்டின் எல்லைப்புறப் பகுதியில் காணப்படும் இக் கல்வெட்டுகள் கொங்குச் சேரர்களின் கல்வெட்டுகளாகுமென்பது ஈண்டு நினைவிற் கொள்ளத் தக்கதாகும்.

ஒன்பதாம் நூற்றாண்டில் கொங்கு நாட்டினையாண்டு வந்த இச் சேர மன்னர், பாண்டிய நாட்டின் எல்லையோரப் பகுதிகளில் ஊடுருவல் செய்து, பாண்டியனுக்குத் தொல்லைகளீந்து வந்ததாகத் தெரிகிறது. இதன் காரணமாகத்தான் பராந்தக பாண்டியனும் கொங்குச் சேரர்மீது படையெடுத்து வெற்றி கொண்டானென்பதனை நாம் முன்பே கண்டோம் இச் சேரர் வழியில் தோன்றிய ஒரு இளவரசனே முதலாம் பராந்தக சோழனின் ஆட்சிக்கடங்கிய சிற்றரசனாகவும் சமகாலத்தவனாகவும் இருந்து வீர சோழனென்று அழைக்கப் பெற்றான். இவன் பராந்தக சோழனின் அனுமதி பெற்று நாமக்கல் செப்பேட்டுச் சாசனத்தை வெளியிட்டுள்ளான். சேரர்களின் குடிவழியினை இச் செப்பேடு முறையாகக் குறித்துள்ளது போற்றத் தக்கதாகும். முதலாம் ஆதித்த சோழனின் கல்வெட்டில் குறிக்கப்பெற்றுள்ள சேரமான் ஸ்தாணுரவி என்பானும் இக் குலத்தினில் தோன்றியவனாவான் (பிற்பகுதியில்).

இச் சேரர், சோழ வேந்தனுக்கு உறுதுணையாகவும் ஊன்றுகோலாகவும் இருந்து பெருந்தொண்டாற்றினர். இவர்கள் சோழருடன் நட்பு பூண்ட காரணத்தால்தான் பாண்டியருடன் பகைமை கொண்டிருத்தல் வேண்டுமென்று கருதலாம். மேலும் திருப்புறம்பியப் போருக்குப் பின்பு பாண்டியர் வலிமை குன்றியிருக்கின்றனரென்பதனை அறிந்ததால்தான் இச் சேர மன்னர்

பாண்டியப் பகுதியில் ஊடுருவல் செய்தனர் என்றும் தோன்று கின்றது.

பார்முழுதாண்ட பாண்டியர்கள், தமது வலிமை குன்றி வீழ்ச்சிப் பாதையில் விரைந்து சென்று கொண்டிருந்த போதிலும், பராந்தக பாண்டியன் தனது அரும் பெரும் முயற்சியினால் அண்டை நாடுகளை வென்று, பாண்டிப் பேரரசினைப் பெருக்கத் திட்டமிட்டான். அதன்படி பல அண்டை நாடுகளை வென்றடிப்படுத்தினான். பராந்தக பாண்டியனது பெரு முயற்சியால் பாண்டியப் பேரரசினை அழிவினின்றும் தடுத்து நிறுத்த முடியாவிட்டாலும், வீழ்ச்சிக் காலத்தினை ஒத்திப் போட்டானென்று துணிந்து கூறலாம்.

பகையரசர்களின் எழுச்சியின் காரணமாகப் பாண்டியப் பேரரசு தலைதூக்க முடியாமல் தவித்துக் கொண்டிருந்த இக் கட்டான சூழ்நிலையிலும்கூட, பராந்தக பாண்டியன் ஒரு சில வெற்றிகளைப் பெற்றுள்ளான் என்பதனை எண்ணும்போது, பராந்தக பாண்டியனின் திறமையினை நாம் போற்றத்தான் வேண்டியுளது.

தஞ்சை மாவட்டம், திருவையாற்றுக்கு அண்மையில் உள்ள திருச்சோற்றுத்துறை, திருப்பழனம் ஆகிய இடங்களில் காணக் கிடைக்கும் பரகேசரி வர்மனது கல்வெட்டுகளில், பராந்தகன் மானாபரணர் என்னும் பாண்டிய வேந்தன் குறிக்கப்பெறுகிறான். இது பராந்தக வீரநாராயணனைக் குறிப்பதாகவே தோன்று கிறது. இவ்வூகம் உண்மையேயென்று நாம் ஏற்றுக் கொள்வோ மாயின், இவனுக்கு 'மானாபரணன்' என்னும் பட்டப்பெய ரொன்று இருந்ததாகக் கொள்ளலாம்.

## இரண்டாம் இராசசிம்ம பாண்டியன்

### (கி. பி. 907 - 931)

**ஆதாரங்கள்**

'எண்ணிறந்த பிரமதேயமும்
எண்ணிறந்த தேவதானமும்
எண்ணிறந்த பள்ளிச்சந்தமும்
எத்திசையு மினிதியற்றி'[1]

என தளவாய்புரச் செப்பேடுகளால் சிறப்பித்துக் கூறப்பெறும் இராசசிம்ம பாண்டியன், ஏறத்தாழ கி. பி. 907-ல் பாண்டியப்

[1] பெரிய சின்னமனூர்ச் செப்பேடு 'பாண்டியர் செப்பேடுகள் பத்து' பக். 170, வரி 16-18.

பேரரசனாக முடி புனைந்து கொண்டான். சடையவர்மன் பராந்தக பாண்டியனின் மகனான இவனது போர் நிகழ்ச்சி பற்றியும், மற்ற செய்திகள்பற்றியும், சின்னமனூர்ச் செப்பேடுகள் எடுத்துரைக்கின்றன. திருவாலங்காட்டுச் செப்பேடும், கங்கபிரிதிவிபதியின் உதயேந்திரம் செப்பேடுகளும், 'மகாவம்சம்' என்னும் இலங்கை வரலாற்று நூலும், முதலாம் பராந்தக சோழனின் கல்வெட்டுகளும், இராசசிம்மனது போர்ச் செயலை அறிந்து கொள்ளப் பயன்படுகின்றன. பராந்தக பாண்டியனுக்கு வானவன் மாதேவியின்பால் பிறந்த இவன், தனது தந்தையின் இறப்பிற்குப் பின் பாண்டி நாட்டு அரியணை யேறினான்.

### தொல்லை தந்த ஆட்சி

அரசு கட்டிலேறிய பின்புதான் அரச பீடமென்பது பஞ்சணையல்ல. அது ஒரு முட் படுக்கையென்பதனை இவன் உணர்ந்து கொண்டான். அரச பதவியென்பது தொல்லையை விளைவிக்கின்ற விளைநிலமென்பதனை, இவ் வேந்தன் அனுபவித்து வந்த தொல்லைகள் நமக்குணர்த்துகின்றன. இவனுக்கு நேர்ந்த பல இன்னல்களை நாம் எண்ணிப் பார்க்கின்றபோது, மொகலாய மன்னனான ஹுமாயூனே (கி.பி. 1530—1540)[1] நமது மனக்கண் முன் காட்சி தருகிறான். செர்சா (கி. பி. 1540--1545) என்னும் சூர்வம்ச மன்னனிடம் தோல்வி கண்ட அம் மொகலாய மன்னன் டில்லி பேரரசினை இழந்து அண்டை நாட்டுக்காரர்களிடம் உதவி பெறக் கோரி, அவர்களிடம் மண்டியிட்டும் உதவி கிட்டாமல் நாடோடியாக அலைந்து, திரிந்த அவனது சோக வாழ்க்கையே இவ் வேந்தனது வாழ்க்கையிலும் நிழலாடுகின்றது. எனவே, இராசசிம்மன் முடிசூடியபோது தொல்லையினையும் சேர்த்து முடிசூடிக் கொண்டான் என்று கூறுவதே பொருத்தமுடைத்து.

### சின்னமனூர்ச் செப்பேடு

கி. பி. எட்டு, ஒன்பதாம் நூற்றாண்டுகளில் ஆட்சி புரிந்த பாண்டிய வேந்தர்களின் வரலாற்றுச் செய்திகளை முறையாக, தெளிவாக அறிந்து கொள்ள நமக்குப் பெருந்துணை புரிவது சின்னமனூர்ச் செப்பேடுகளாகும். இராசசிம்ம பாண்டியனின் முன்னோர்களது சாதனைகளையும், வீர வாழ்க்கையினையும், இத்தொல் குடியினரின் பெருமையினையும் விளக்கமாகப் படம் பிடித்துக் காட்டும், இச் சின்னமனூர்ச்

[1] Humayun the, Un for tunate. இம் மொகலாய மன்னனும் சிறந்த வீரனாக விளங்கிய போதிலும் தோல்வியுற்றான். நாடிழந்த இவன் இறுதியில் பாரசீக ஷாவின் உதவியால் மீண்டும் அரியணையேறினான்.

செப்பேடு இராசசிம்ம பாண்டியனால் வழங்கப்பட்டதாகும். இச் செப்பேடு வழங்கப்படாதிருப்பின் பாண்டியர் வரலாறு விளக்கம் பெறாது, இருட்டறையிலேதான் இருக்குமென்பது உண்மையே யாகும். எனவேதான் இவ் வேந்தன் வழங்கிய சாசனம் பாண்டிய வரலாற்றின் சிறந்ததொரு ஆதாரமாக வரலாற்றறிஞர் களால் போற்றப் பெறுகிறது. ஈண்டு நாம் இச் சாசனம் எவ்வாறு வழங்கப்பட்டதென்பதனைக் காண்போம்.

**வழங்கப்பட்ட சூழல்**

இவ் வேந்தன் தனது பதினாறும் ஆட்சியாண்டில் இச் சாசனத்தை வழங்கியிருக்கிறான். இவன் இராசசிம்மப் பெருங் குளக்கீழ், சூழப்புரம் (சூழநகர்) என்னும் ஊரின்கண் தங்கி யிருந்தகாலை, பராந்தகன் என்னும் அந்தணனுக்குச் சூழல்நாட்டு நற்செய்கைப் புத்தூர்க் கிராமத்தை, மந்தர கௌரவ மங்கலம் எனப் பெயரிட்டுத் தானமாக வழங்கினான். அதனால் இவன் 'மந்தர கௌரவ மேரு' என்னும் பட்டத்தினைப் பெற்றான். இச்செய்தியினைச் சின்னமனூர்ச் (பெரிய) செப்பேடு விளக்கிக் கூறுகின்றது. இவ்வாறு அந்தணர்க்கு நிலமளிக்கப் படுவதனை, 'பிரமதேயம்' எனச் சொல்லுவர். இதுபோன்று இவன் எண்ணிறந்த பிரமதேய தானங்கள் செய்துள்ளான்.

இச் செப்பேடுகளால் இவ் வேந்தன் நிகழ்த்திய சில போர் களும், அவன் அடைந்த வெற்றிகளும் நன்கு புலனாகின்றன. சடையன் மாறன், சீகாந்தன், இராசசிகாமணி, மந்தரகௌரவ மேரு, விகடவாடவன்[1] என்னும் பல சிறப்புப் பெயர்களை இவ் வேந்தன் பெற்றிருந்தானென்பதும் செப்பேடுகளாலறியப்படு கின்றன. வடமொழிப் பகுதியின் முப்பத்தேழாம் சுலோகத் தினைக் கொண்டு இவன் 'அபிமான மேரு' எனும் பட்டத் தினையும் பெற்றிருந்ததாக அறியலாம்.

**அரசியல் சூழல்**

இவ் வேந்தன் பாண்டிய நாட்டரியணையேறிய போழ்து தஞ்சையில் சோழராட்சி தழைத்து, வேரூன்றியிருந்தது. திருப் புறம்பியப் போருக்குப் பின் முதலாம் ஆதித்தன் (கி.பி. 871-907) வலிமை மிக்க பல்லவர்களை வென்று, தொண்டை மண்டலத் தைக் கைப்பற்றிக் கொண்டான். சோணாட்டின் எல்லையினை வடக்கே இராட்டிரகூடர்களின் பேரரசின் எல்லைவரை விரிவு படுத்தினான். பல்லவ இளவரசியையும், இராட்டிரகூட இள

[1] 'விகட வாடவன் சிரிகாந்தஞ் மீநாங்கித சைலேந்திரன்' சின்னமனூர்ப் பெரிய சாசனம் 'பாண்டியர் செப்பேடுகள் பத்து, பக். 170, வரி 14.

வரசியையும் மணந்து கொண்டு, கங்கர்களுடனும், சேர வேந்தனும் தாணுரவியுடனும் நட்புறவு கொண்டு, தமிழக அரங்கில் சோழர்களின் ஆதிக்கத்தினைப் பெருக்கிக் கொண்டு வந்தான். கொங்கு நாட்டினைக்[1] கைப்பற்றி, ஆங்கிருந்து கொண்டு வந்த பொன்னைக் கொண்டு, தில்லையம்பலத்திற்குக் கூரை வேய்ந்தான்.[2] ஆதித்தனுக்குப் பின் அவனது அருமந்த மகனும் முதலாம் பராந்தகன் (கி. பி. 907-955) சோணாட்டின் ஆட்சிப் பொறுப்பேற்றான்; அவன் சோழ அரசின் பெருமையினையும் புகழினையும் பெருக்குவதனையே நோக்கமாகக் கொண்டிருந்தான். இருபெரும் அரசுகளின் வேந்தர்களும் கி.பி. 907-ல் முடிமுனைந்து கொண்டு, தமது அரசுகளை விரிவுபடுத்துவதில் முனைந்து நின்றனர்.

**வெற்றிகள்**

இராசசிம்ம பாண்டியன் தன்னிடம் மாறுபட்டு போரிட்ட பகைஞர்களை உலப்பிலிமங்கலத்தில் வென்றதும், கொடும்பாளூர் (கொடும்பை) படையை முறியடித்ததும், தஞ்சை வேந்தனை நைப்பூரில் வென்றதும், காவிரிக்கரை மேலமைந்திருந்த கொங்கு நாட்டின் வஞ்சி நகரத்தை வென்று தீக்கிரையாக்கியதும், தென் தஞ்சைக் காவலனை நாவற்பதியில் வென்றதும் சின்னமனூர்ச் செப்பேடுகளில்[3] குறிக்கப்பட்டுள்ளன.

**சோழருடன் போர் :** மேற்குறிப்பிட்டுள்ள போர்களுள், உலப்பிலிமங்கலப் போரில் இவனிடம் தோல்விகண்ட வேந்தன் யாவன் என்பது அறிந்து கொள்ளவியலவில்லை. இவ் வேந்தனிடம் தோல்வி பெற்ற கொடும்பாளூர் வேந்தன், தஞ்சை சோழ வம்ச வேந்தர்களுடன் நெருங்கிய உறவினனான பூதிவிக்கிரம கேசரியாக இருத்தல் வேண்டுமென ஊகிக்கலாம். அக் காலை கொடும்பாளூர் வேளிர் சோழர்க்கடங்கிய சிற்றரசராக ஆண்டு வந்தனரென்பதனை ஈண்டு நாம் நினைவிற்கொள்ளுதல் வேண்டும்.

1 S.1.1. Vol. 111, No. 205; Verse 49.

2 'சிற்றம்பல முகடு கொங்கிற் கனகம் அணிந்த ஆதித்தன் நம்பியாண்டார் நம்பி—திருத்தொண்டர் திருவந்தாதி-65.

3 உலப்பிலிமங் கலத்தெதிர்ந்த தெவ்வருடலுகுத்த செந்நீர் நிலப் பெண்ணித கஙகராஜ மெனநவப பாணி தந்தும் மடைப் பகாநீர்த் தஞ்சையர் கோன் தானைவரை நைப்பூரிற் படைப் பரிசா ரந்தந்து போகத்தன பனைமுழங் கியுங் கொடும்பைமா நகாநிறைந்த குடைகடற் பெருந்தானை இடுமலையுற் றரியத்த னிரனைதய மேல் கொணடும் புனர்ப்பான்னி வடகரையிற் பொழில் புடைகும் முதல் வஞ்சிக் கனற்படவிழித் தெதிர்ந்த வீரர் கவந்தமாடக் கண் சிவந்துஞ் சேவலுயர் கொடிக்குமர னெனச் சீறித் தென்றஞ்சை காவலனது கரி துரக பதாதிசங்கங் களத்தவியப சின்னமனூர் (பெரிய) செபபேடு. 'பாண்டியர் செப்பேடுகள் பத்து', பக். 169–170, வரி 1-9.

கொடும்பாளூர் வேளிருக்கும் சோழருக்கும் இடையில் திருமண உறவும் இருந்தது. கொடும்பாளூர் வேளிர் சோழருக்குப் படையுதவியளித்து வந்துள்ளதால், தஞ்சை வேந்தனை நைப்பூரில் வென்றதும், கொடும்பாளூர் படையினை முறியடித்ததும் ஒரே படையெழுச்சியின் தொடர்ச்சியாக இருக்கலாமென்பதனை ஊகிக்கலாம்.

**சேரருடன் போர் :** சேரநாட்டு மன்னன், சோழனின் ஆதிக்கத்திற்குட்பட்டு சிற்றரசனாக ஆண்டு வந்தமையின் பாண்டியருக்கும் சேரருக்கும் இடையில் பகைமை ஏற்பட்டு போர் மூண்டது. போர் வஞ்சியில் நடைபெற்றதாகக் குறிக்கப்பட்டுள்ளது. தற்காலத்தில் திருச்சி மாவட்டத்தின் கருவூரே வஞ்சியாகும்.[1] எனவே, இப் போர் கருவூரில் நிகழ்ந்திருக்க வேண்டும். இப்போரில் பாண்டியனுடன் வஞ்சியில் தோல்வியெய்திய மன்னன் யாவனென்பது அறிந்து கொள்ளக்கூடவில்லை.

**சோழனிடம் தோல்வி :** கி.பி. 907-ல் சோழ வேந்தனாக முடி புனைந்து கொண்ட[2] முதலாம் பராந்தகன் தனது தந்தையினும் சிறந்த வெற்றி வீரனாகத் திகழ்ந்தான்; தனது பேரரசினைப் பெருக்குவதில் மகிழ்ந்தான். பள்ளம் நோக்கிப் பாயும் வெள்ளம் போன்று, வீழ்ச்சியின் பாதையினை நோக்கி விரைந்து சென்று கொண்டிருந்த பாண்டியப் பேரரசினைக் கைப்பற்றத் திட்டமிட்டான். பெரும்படையுடன் பாண்டிநாடு நோக்கிச் சென்றான்; பாண்டியரைத் தோற்கடித்தான்.[3] முதலாம் பராந்தக சோழனின் மூன்றாமாட்சியாண்டு கல்வெட்டுகளில் இவன் 'மதுரை கொண்ட கோப்பரகேசரி[4] என்று குறிக்கப்பட்டுள்ளதனால் கி.பி. 910-ல் இராசசிம்ம பாண்டியன் சோழருடன் போர் மேற்கொண்டு தோல்வி கண்டதாக உறுதியாகக் கூறலாம் இரண்டாம் பிருதிவிபதியின் உதயேந்திரம் செப்பேடுகளும் இவ் வெற்றியினைக் கூறுகிறது. உதயேந்திரச் செப்பேடு[5] பராந்தகனின் போர்த்திறமையை மிக அழகாக சித்திரித்து இவனுக்குச் 'சங்கராம ராகவன்' என்னும் பட்டத்தினையும்

[1] 1973ஆம் ஆண்டு தமிழ்நாட்டரசு தொல்லியல் துறையினர் நிகழ்த்திய அகழ்வாய்வினால் கருரே வஞ்சியென்பதனை காமுணரலாம் மேலும் சின்னமனூர்ச் செப்பேட்டில் 'புனற் பொன்னி வடகரையில்' என்று குறிக்கப் பெற்றிருந்ததால் இது உறுதிபெறுகிறது.

[2] A.R.E 1906, page 51, para 51.

[3] A.R.E. 1907, pp 58–59 (Venkayyah).
J.R.A.S, 1931, pp. 524–526 (Hultzsch).

[4] Ins. 2 of 1931, I.A.S. 157 of 1928.

[5] S.I.I. Vol. III, No. 99, Ins. 231 of 1926.

வழங்குகிறது. இவ் வெற்றியின் காரணமாக இவன் மதுராந்தகன் அல்லது மதுரைகொண்டானென்னும் பட்டத்தினையும் பெறுகிறான்.

**இலங்கைக்கு ஓட்டம் :** சோழனிடம் தோல்விகண்ட இராசசிம்ம பாண்டியன் தன் நாட்டைக் கைவிட்டு, இலங்கைக்கு ஓடினான்; இலங்கை வேந்தனும் ஐந்தாம் காசிபனிடம் (கி. பி. 913-923) அடைக்கலம் புகுந்தான்; தனக்குப் படையுதவி யளிக்க வேண்டுமாய்க் கோரிக்கை ஒன்றினையும் விடுத்தான். இவனது வேண்டுகோளுக்கிணங்கி இலங்கை வேந்தனும் பாண்டி வேந்தனுக்குத் துணையாக, சக்க சேனாதிபதியென்னும் போர்ப்படைத் தலைவனையும் நாற்படையாளரையும் பெருமளவில் அனுப்பி வைத்தான்.

**வெள்ளூர்ப் போர்**

ஈழப்படையினைத் துணைப்படையாகக் கொண்ட பாண்டிய வேந்தன் சோழர்களுடன் போர் மேற்கொண்டான். கி. பி. 920-ல் வெள்ளூர்[1] என்னுமிடத்தில் இருந்நறத்தாறச்சும் பெரும் போர் நடைபெற்றது. கடுமையான போருக்குப் பின்னர் பாண்டிப் படையும் ஈழப்படையும், சோழப்படையின் வலிமை மிக்க தாக்குதலுக்கு ஈடுகொடுக்க வியலாது பின் வாங்கியது; பின்பு உலைந்து ஓட ஆரம்பித்தது பாண்டிப்படை. சோழப் பெருமன்னனான முதலாம் பராந்தகன் வெற்றிமாலை சூடினான்.

வெள்ளூர் யாண்டுளது என்பதுபற்றி நாம் அறுதியிட்டு உறுதியாகக் கூறவியலவில்லை. இவ்வூர் பாண்டி நாட்டின் வட எல்லையிலாதல், சோழநாட்டின் தென் எல்லையிலாதல் இருந்ததோர் ஊராதல் வேண்டும்' என்று திரு. தி. வை. சதாசிவ பண்டாரத்தார் அவர்கள்[2] கருதினார்.

வெள்ளூர் போர் திருச்சி மாவட்டம், அரியலூர் வட்டம் செந்துறைக்கு அருகில் உள்ள வெள்ளூரில் நடை பெற்றிருத்தல் வேண்டுமென்று நான் ஊகிக்கிறேன்.[1] இப் போரில் சோழரின் சார்பாகப்போரிட்ட நக்கன் சாத்தன் போரில் இறந்துபட்டான்.[3] இவ் வெள்ளூருக்கு அருகில் இவனது நினைவாக நக்கன்பாடி என்ற ஊர் அமைந்துள்ளது. அடுத்து, இப் போரில் கலந்து கொண்ட வீரர்களைப் பற்றிய கல்வெட்டுகள் கீழப்பழுவூரில்

[1] Ibid. Vol. III, No. 99, Ins. 231 of 1926.
[2] 'பாண்டியர் வரலாறு', பக். 81.
[3] ம. இராசசேகர தங்கமணி 'வெள்ளூர் போர் ஓர் மறு ஆய்வு' திருச்சி மாவட்டக் கல்வெட்டுக் கருத்தரங்கு' 1976.

கிடைத்துள்ளன. இப் போரில் பங்கு கொண்ட படைத்தலைவர்களுள் பெரும்பாலோர் பழுவேட்டரையர்களேயாவர். இக் காரணங்களால் இப் போர் அரியலூர் வட்டத்திலேயே நிகழ்ந்திருத்தல் வேண்டுமெனக் கருதலாம். கீழ்ப்பழுவூரிலிருந்து ஏறத்தாழ 27 கல் தொலைவில் அமைந்துள்ள வெள்ளூரிலேயே இப் போர் நடைபெற்றதாகக் கொள்வதே பொருத்தமுடையது.

வெள்ளூர் போரில் கலந்து கொண்டு வீரமரணம் எய்திய வீரர்களைப்பற்றிய குறிப்புகள், இரண்டு கல்வெட்டுகளில் காணப்படுகின்றன. இவற்றுள் ஒன்று திருச்சி மாவட்டம் அரியலூருக்கு அருகிலுள்ள கீழப்பழூவூர் என்னும் ஊரில் காணப்படுகிறது. கீழப்பழுவூர்ப் பகுதியை அக் காலத்தில் பழுவேட்டரையர் என்போர் ஆண்டு வந்தனர். இவர்கள் சோழர்க்கடங்கிய சிற்றரசருள் வலிமை மிக்கவர். இவர்கள் நெடுங்காலம் சோழர்க்கு உறுதுணையாக இருந்ததனுடன், அவர்களுடன் திருமண உறவும் கொண்டிருந்தனர். இங்குள்ள கல்வெட்டு பராந்தக சோழனின் பன்னிரண்டாம் ஆட்சியாண்டில் வெளியிடப் பெற்றதாகும். இக் கல்வெட்டில், வெள்ளூரில் ஈழத்துப் படையின் துணையுடன் பாண்டிய வேந்தன் சோழவேந்தனைத் தாக்கியபோது, பெருவீரம் விளைவித்துப் போர் புரிந்து, போர்க்களத்தில் மாண்ட பழுவேட்டரையர் கண்டன் அமுதனாரின் சேனாதிபதி நக்கன் சாத்தன் பேரில் விளக்கு எரிக்க நிவந்தம் அளித்த செய்தி குறிக்கப்பட்டுள்ளது.[1]

அதே ஆண்டினதாகிய மற்றொரு கல்வெட்டு வடவார்க்காடு மாவட்டம் திருப்பாற்கடலில் கிடைத்துள்ளது.[2] இக் கல்வெட்டில் வெள்ளூரில் பெருமானடிகளோடு பாண்டியனும் சிங்கள வேந்தனும் போரிட்டு அஸ்தி கடை செய்த ஞான்று, நெற்றி சென்று உயிர் துறந்த நாலு சேவகர் புண்ணியமாகத் தர்மம் நிறுவப்பட்ட செய்தி கூறப்பட்டுள்ளது.

மேற்கூறிய கல்வெட்டுகளால் வெள்ளூரில் பாண்டியர்க்கும் சோழருக்கும் போர் நடைபெற்றதும், இப் போரில் பாண்டியன் பக்கம் ஈழப்படை போரிட்ட செய்தியும் உறுதி பெறுகிறது.

**பராந்தகனிடம் தோல்வி பெறுதல்**

அடுத்து, பராந்தகனின் கல்வெட்டுகளில், இவனிடம் தோல்வி கண்ட பாண்டி வேந்தனது பெயர் குறிக்கப் பெற

1 No. 231 of 1926.
2 S.I.I. Vol. III, No. 99.

வில்லை. ஆனால், பிருதிவிபதியின் உதயேந்திரம் செபபேடு 'பராந்தக மன்னன் 'பாண்டிய அரசனை ராஜஸிம்ஹனை வெற்றி கொண்டவுடனே, ஒரே சமயத்தில் இருவர் ஒரே விதமான பயத்தை அடைந்தார்கள். தன் அருமைத் தோழன் இறந்து விட்டதால் தளபதியான குபேரனும், சோழர்களுடைய ராஜ்யம் இலங்கையைச் சமீபித்து விட்டதால் விபீஷணனும் நடுக்கம் கொண்டான்' (சுலோகங்கள் 9-11) என்று குடுப்பிடுவதனால் இப் பாண்டி வேந்தன் இராசசிம்மனை யாகுமென்பது புலனாகிறது. அடுத்து, உதயேந்திரம் செப்பேடு வழங்கப்பட்ட காலத்தில் இராசசிம்மன் இறந்துபட்டான் என்பதும் தெரிகிறது.

வெற்றிவாகை சூடிய பராந்தக சோழன் பாண்டிய நாட்டின் பெரும் பகுதிகளைக் கைப்பற்றிக் கொண்டான்; மதுரை மாநகரின்கண் வீராபிடேகம் செய்து கொள்ளவும் ஆவல் மிகக் கொண்டான். எனவே, ஆடம்பர ஆரவாரத்துடன் மதுரை மாநகரின்கண்ணுள்ள பாண்டியனது அரண்மனையை அடைந்தான். பாண்டியரது கொலு மண்டபத்தினைக் கண்டான்; களி கொண்டான்; பாண்டியனின் மணிமுடியினை அரண்மனையில் தேடினான்; ஆனால், அவனுக்குப் பேரதிர்ச்சியைத் தரும் செய்தியே அங்குக் காத்திருந்தது. அரண்மனையில் யாங்ஙனும் பாண்டியரது அணிமுடியும் செங்கோலும் காணப் பெறவில்லை; இதனால் சோழன் பெரிதும் ஏமாற்றமடைந்தான்.

**பாண்டியரின் மணிமுடி இலங்கையில்**

இரண்டாம் முறையும் சோழரிடம் தோல்வியைப் பரிசாகப் பெற்ற இரண்டாம் இராசசிம்ம பாண்டியன் வேறு வழியின்றி கடல் கடந்து இலங்கை வேந்தனை நாடி ஓடினான். இவன் இலங்கை வேந்தனிடம் அடைக்கலம் புகுந்த நிகழ்ச்சியினை திருவாலங்காட்டுச் செப்பேடும், மகாவம்சம் என்னும் இலங்கை வரலாற்று நூலும் மிக அழகாகச் சித்தரிக்கின்றன. பராந்தக சோழன் பாண்டியருடன் நிகழ்த்திய போரினைத் திருவாலங்காட்டுச் செப்பேடு பின்வருமாறு விவரிக்கின்றது. அவனுடைய (பராந்தகனுடைய) பராக்கிரமாகிய நெருப்பினால் சூழப்பட்ட பாண்டியன், அந்த அக்கினிப் பிழம்பின் தாபத்தைத் தாங்காமல் அதைத் தணித்துக் கொள்வதற்காகவே போலும் தன்னுடைய பிதிரார்ஜிதமான ராஜ்யத்தையும் அரச பதவியையும் துறந்து அவசரம் அவசரமாகக் கடலில் புகுந்தான், (இலங்கைக்குச் சென்றான்) (சுலோகம்-51).

இந்நிகழ்ச்சியை மகாவம்சமும் குறிப்பிடுகின்றது. இராசசிம்மன் இலங்கைக்குச் சென்றபோது, ஆங்கு நான்காம் தப்புலன் என்பான் ஆட்சி புரிந்து வந்தான். இவன் கி.பி. 923 முதல் 934 முடிய இலங்கை வேந்தனாக அமர்ந்திருந்தான். அது போழ்து பாண்டி வேந்தன் 'சோழனிடம் பயந்து தன் நாட்டைத் துறந்து கப்பலேறி மஹாதிட்ட என்னும் இடத்தை வந்தடைந்தான்' என்று மகாவம்சம் குறிப்பிடுகின்றது.[1] இராசசிம்மனின் அவலநிலையினைக் கண்டு வருந்திய, இலங்கை வேந்தன் தன்னை நாடி வந்த பாண்டி வேந்தனை முறைப்படி வரவேற்று, ஆறுதலும் தேறுதலும் கூறி, சோழனிடமிருந்து பாண்டிய அரியணையை மட்டுமின்றி, சோழனுடைய அரியணையையும் கைப்பற்றி, இரண்டினையும் அவனுகளிப்பதாக உறுதியளித்தான். சோணாட்டின்மீது படையெடுப்பதற்கான ஏற்பாடுகளையும் தீவிரமாகச் செய்து கொண்டிருந்தான். இத்தருணத்தில் பால் பொங்கி வருகின்றபோது பானையே உடைந்தது போன்று, ஈழ நாட்டில் பெருங்கலகம் ஒன்று மூண்டது. இதன் காரணமாக சோணாட்டின்மீது படையெடுக்கின்ற முயற்சியும் கைவிடப்பட்டது.

இலங்கை வேந்தனின் உதவியைப் பெற்று, அவனது படைத் துணையுடன் தமிழகம் வந்து, சோழனை வென்று, தன்னாட்டினை மீட்டுக்கொள்ளலாம் என்ற தணியாத ஆசையால் இலங்கை சென்ற பாண்டியனுக்கு இச் செய்தி ஏமாற்றத்தையே தந்தது. தனக்கு இலங்கையில் உதவி கிடைக்காததால், பாண்டியன் தமிழகம் திரும்ப முடிவு செய்தான். தனது மணிமுடியினையும், அரச சின்னங்களையும் பாதுகாப்பதில் ஆர்வம் கொண்ட பாண்டியன், அவற்றை இலங்கை வேந்தனிடம் ஒப்படைத்துவிட்டுத் தமிழகம் திரும்பினன்.

### சேரநாட்டில் தஞ்சம் புகல்

நாடிழந்த பாண்டியன் வேறுவழியின்றி தனது தாயின் (வானவன் மாதேவி) பிறந்தகமாகிய சேரநாட்டிற்குச் சென்று ஆங்கு தங்கினன். பாண்டி வேந்தனாக அரியணையில் வீற்றிருந்து பாராள வேண்டிய இக் காவலன் நாடிழந்து, வாழ்க்கை வசதிகளை இழந்து சோகச் சுமையுடன் சேரநாட்டில் வாழவேண்டிய ஒரு இக்கட்டான சூழ்நிலைக்குக் கொண்டுவரப்பட்டான். இருப்பினும் இவன் பாண்டியப் பேரரசு முழுவதையும் இழந்ததாகத் தெரியவில்லை.

[1] சூளவம்சம், அத். 53, சுலோகம் 5

கேரளவேந்தனும் பாண்டிவேந்தனுக்கு ஆதரவாகப் படை திரட்டி சோழர்களை எதிர்த்துப் போரிட்டிருத்தல் கூடும். ஆயினும் பயன் ஏதும் கிட்டியதாகத் தெரியவில்லை. இதனை யடுத்து 'பாண்டிய மன்னனும் தனக்கு உதவக் கூடியவர்கள் தென்னாட்டில் யாருமில்லையென்பதை உணர்ந்து, வேறு வழியில்லாம , இராட்டிரகூடர்களுடைய உதவியை நாடியிருத்தல் கூடும். இவ்விதம் பராந்தக சோழனால் நாடிழந்த பல்லவன், பாணன், பாண்டியன ஆகிய மூவரும் இராட்டிரகூடர்களை அண்டினார்கள். இராட்டிரகூட மன்னனும் அவர்களுக்கு அபயமளித்து, இழந்த நாட்டை அவர்கள் திரும்பவும் அடைவதற்கு உதவினான்' என்று ஆராய்ச்சிப்பேரறிஞர் திரு. டி. என். சுப்பிரமணியன் அவர்கள் குறிப்பிடுகின்றார்.[1] இதற்கான ஆதாரத்தினையும் அவர் காட்டுகின்றார்.

### சோழ-பாண்டிய போராட்டம்

தொல்லைகள் எல்லைமீறி வந்தபோதிலும், அதனைக் கண்டு கலங்காத, எதையும் தாங்கும் நெஞ்சுரம் கொண்ட இராசசிம்மன், ஏறத்தாழ இருபத்து நான்காண்டுகள் ஆட்சி புரிந்தான். இவன் நைப்பூரிலும், நாவற்பதியிலும் சோழ வேந்தர்களை வென்றதாக இவனது செப்பேடுகள் உணர்த்துவதாலும், சோழர்களும் இராசசிம்மனை வென்றதாகக்கல்வெட்டுச் சான்றுகள் கிடைத்துள்ளதாலும், இருதிறத்தாரும் தம்முள் மாறுபட்டு பல போர்க்களங்களில் ஒருவரையொருவர் எதிர்த்துப் போரிட்டனரென்பது உறுதி பெறுகிறது. இப் போர்களில் இருவரும் வெற்றி தோல்வியினை மாறிமாறிப் பெற்றனரென்றும், இறுதியில் வெள்ளூரில் நிகழ்ந்த போரில் சோழர் இறுதி வெற்றி பெற்று, பாண்டிய வேந்தனைச் சேரநாட்டில் அடைக்கலம் புகச் செய்தனரென்பதும் உறுதியாகிறது. சோழபாண்டிய ஆதிக்கப் போராட்டத்தில் வெள்ளூர்ப் போர் ஒரு முக்கிய இடத்தினைப் பெற்றுள்ளது. சோழ மண்டலத்துடன், பாண்டிய மண்டலத்தையும் தனது அரசுடன் இணைத்துக் கொண்டு ஆட்சிபுரிந்த காரணத்தினால் முதலாம் பராந்தகன், 'இருமுடிச் சோழன்' என்னும் பட்டத்தினைப் பெற்றான்.

### கல்வெட்டுகள்

வெள்ளூர் தோல்விக்குப் பிறகும் இராசசிம்மன் சிலகாலம் பாண்டிநாட்டின சில பகுதிகளை ஆண்டு வநததாகத் தெரிகிறது. இவனது கலவெட்டுகள பாண்டிய நாட்டின பகுதிகளில அதிக

[1] Subramanian, T. N. South Indian Temple Inscriptions, Vol. III. Part I, CXXIX.

அளவில் கிடைத்துள்ளதால் இக்கருத்து வலிவுபெறுகிறது. இவ் வேந்தனது மூன்றுமாட்சியாண்டுக் கல்வெட்டொன்று ஆத்தூர் விஷ்ணு கோயிலில் காணப்படுகின்றது.[1] இக் கல்வெட்டினைக் கொண்டு, இவ் வேந்தனது அதிகாரிகளுள் ஒருவனான குளத்தூரைச் சார்ந்த விக்கிரம காமகாபல்லவரையன் என்பான் திருநாராயண விண்ணகருக்கு நிவந்தங்கள் அளித்துள்ள செய்தி அறியப்படுகிறது.

அடுத்து இவ் வேந்தனது கோட்டை மங்கல வட்டெழுத்துக் கல்வெட்டொன்று, இக் கோயில் இராசசிம்மேஸ்வரமென்று அழைக்கப்பட்டதாகக் குறிப்பிடுகின்றது. இது இரண்டாம் இராசசிம்மனின்[2] (சடையன் மாறன்) பெயரால் அழைக்கப் பட்டதேயாகும்.

இராசசிம்ம பாண்டியனது ஒன்பதாம் ஆட்சியாண்டுக் கல் வெட்டொன்று சின்னமனூர் விஷ்ணு கோயிலிலும், குற்றாலத்திலுள்ள குற்றாலநாதர் கோயிலிலும காணப்படுகின்றது. இவ் வேந்தனது பத்தாமாட்சியாண்டுக் கல்வெட்டு தேனூரிலும், பதினொன்று, பதின்மூன்றுமாட்சியாண்டுக் கல்வெட்டுகள் அம்பாசமுத்திரத்திலும், பதினைன்காமாட்சியாண்டுக் கல் வெட்டு சோழவந்தானிலும், பதினேழாவது ஆட்சியாண்டுக் கல் வெட்டு குற்றாலத்திலும்;[3] பத்தொன்பதாவது ஆட்சியாண்டுக் கல்வெட்டு நான்குனேரியிலும்; இருபதாவது ஆண்டுக் கல் வெட்டுகள் திருப்புடைமருதூரிலும், உத்தமபாளையத்திலும்; இருபத்தொன்றாவது ஆட்சியாண்டுக் கல்வெட்டு கோவில்குளம் செவிலிப்பேரி ஆகிய இடங்களிலும், இருபத்து நான்காமாட்சி யாண்டுக் .கல்வெட்டு திருவைகுண்டத்திற்கருகிலுள்ள பெருங் குளத்திலும் கிடைத்துள்ளன.[4]

மேற்கூறிய கல்வெட்டுகளைக் கொண்டு, இவ் வேந்தன் இருபத்துநான்காண்டுகள் ஆட்சிபுரிந்தனனென்பது புலனாகின்றது. இவன் கி.பி. 907-ஆம் ஆண்டு அரசு கட்டிலேறியவனாதலின் கி. பி. 931 முடிய ஆட்சிபுரிந்தனனென்பது திண்ணம். பாண்டியநாட்டின் பெரும்பகுதி சோழர் வசமிருந்தபோதிலும் பாண்டி நாட்டின் சில பகுதிகள் இவனது ஆட்சிக்குட்பட்டிருந்தது எனக்கூறலாம். மேலும், திருநெல்வேலி, மதுரை, இராமநாதபுரம் ஆகிய மாவட்டங்களிலும் திருவாங்கூர் நாட்டின்

[1] 223 of 1941.
[2] 270 of 1927-28.
[3] S.I.I. Vol. XIV No. 47 to 77

சில பகுதிகளிலும் முதற்பராந்தக சோழனது கல்வெட்டுகள் காணக்கிடைத்தலின் இக் கருத்து வலிவுபெறுகிறது.

**பராந்தக சோழனின் ஈழப்படையெழுச்சி**

வெள்ளூர்ப் போருக்குப்பின், இராசசிம்மன் இலங்கை சென்று ஆங்கு உதவிகிடைக்காத காரணத்தால், தனது அரச முடியினை ஆங்குள்ள வேந்தனிடம் ஒப்படைத்துவிட்டு, தமிழகம் திரும்பியதனை முன்பே கண்டோம். பாண்டியனது முடியினை அடையப்பெறாத முதலாம் பராந்தகன், அக்கால இலங்கை வேந்தனாக அமர்ந்திருந்த நான்காம் உதயன் (கி. பி. 945-53) என்பானுக்கு, பாண்டியனின் மணிமுடியையும் செங்கோலையும் அனுப்பிவைக்கும்படி தூதுக்குழு ஒன்றினை அனுப்பிவைத்தான். அக் கட்டளைக்கு உதயன் பணியாத காரணத்தால், பராந்தக சோழன் இலங்கையின்மீது படையெடுத்தான். இலங்கை வேந்தனோ சோழப்படைக்கஞ்சி தனது தலைநகரினின்றும், பெயர்ந்து, ரோஹணம் என்ற இடத்திற்கு ஓடிவிட்டான். தலைநகரினை விட்டுச்சென்ற இலங்கைவேந்தன், பாண்டியரது மணிமுடியினையும் செங்கோலையும் விட்டுச்செல்ல மனமின்றி, அவற்றையும் உடன்கொண்டு சென்றான். ஈழவேந்தனின் தலைநகரில் உதயனைக் காணப்பெறாத பராந்தகன் தலைநகரைக் கைப்பற்றினான். ஈழவேந்தனின் அரண்மனையில் பாண்டி வேந்தனது மணிமுடியினைக் காணப்பெறாத சோழவேந்தன் ஏமாற்றமடைந்தான். பராந்தகன் வட இலங்கையைத் தன்னாட்சியுடன் இணைத்துக்கொண்ட போதிலும், பாண்டியனின் மணிமுடியினையடைய முடியவில்லை. இவ் ஈழமுவெற்றியின் அறிகுறியாக இவன் 'மதுரையும் ஈழமும் கொண்ட கோப்பரகேசரி' என்னும் பட்டத்தினைப் புனைந்து கொண்டான்.[1]

மதுரை கொண்டானென்று பட்டம் புனைந்து கொண்டிருந்த பராந்தகன், தனது இலங்கை வெற்றிக்குப் பின் 'மதுரையும் ஈழமும் கொண்டானென்று' பட்டம் புனைந்து கொண்டதால், இவன் மறுபடியும் மதுரையின்மீது படையெடுத்தானென்று ஆராய்ச்சியறிஞர் திரு. வெங்கையா அவர்கள் கருதுகின்றார்.[2] முன்பே இவன் மதுரை வெற்றியைப் பெற்றுள்ளதால், ஈழ வெற்றிக்குப் பின், மதுரைமீது இரண்டாம் தடவை வெற்றி கொள்ளாமலேயே 'மதுரையும் ஈழமும் கொண்

[1] Ins. 553 of 1920.
[2] A.R.E. 1907, page 59.

டான்' என்று பட்டம் புனைந்து கொண்டானென்று வரலாற்றறிஞர் திரு. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியார் கருதுகின்றார்.[1]

**மதுரையைக் கைப்பற்றல்**

முதலாம் பராந்தக சோழன் ஈழப்படையெழுச்சியினாலும் இராட்டிரகூடர்களின் பகைமையினால் திருவல்லப்போரில் (கி. பி. 910—911) பங்கு கொண்டதினாலும் கீழைச் சாளுக்கியர், மேலைக்கங்கர் முதலியவர்களின் எதிர்ப்பினைச் சமாளிக்க வேண்டியிருந்ததாலும், தனது பரந்த பேரரசினை நிர்வாகம் செய்வதில் நாட்டம் செலுத்திக் கொண்டிருந்த காரணத்தாலும் பாண்டிய நாட்டில் நிகழ்ந்த ஊடுருவல்களை இவன் தடுக்க இயலவில்லையென்றும், அதுபோழ்து இராசசிம்மன் மீண்டும் மதுரையைக் கைப்பற்றியிருக்கக் கூடுமென்றும் ஊகிக்க இடமுண்டு. இவ்விதம் இவன் மதுரையைக் கைப்பற்றியதால்தான் பராந்தகன் இரண்டாம் தடவையாக மதுரையைக் கைப்பற்றினனென்று திரு. வெங்கையா கூறுகிறாரென்று நாம் கருதலாம்.

மேலும், கி.பி. 931 வரை இவனது கல்வெட்டுகள் பாண்டிய நாட்டின் பல பகுதிகளில் கிடைத்துள்ளதாலும், மதுரைக்கருகிலுள்ள சோழவந்தானில் இவனது பதினான்காமாட்சியாண்டுக் கல்வெட்டு கிடைத்துள்ளதாலும், முதலாம் பராந்தகனின் ஆட்சிக் காலத்திலேயே இராசசிம்மன் தான் இழந்த பகுதிகளுள் சிலவற்றை மீட்டானென்பதாலும், பராந்தகன் பாண்டிய நாட்டின்மீது மீண்டும் படையெடுக்க வேண்டிய நிலையேற்பட்டதென்பதனையும் அறிந்து கொள்ளலாம்.

**கொடைத் திறன்**

இவ் வேந்தன் தனது பதினாறுவது ஆட்சியாண்டில் பராந்தகன் என்னும் பெயர் கொண்ட அந்தணனுக்கு அழல் நாட்டு நற்செய்கைப் புத்தூரைத் தானமாக வழங்கினான். தானம் வழங்கிய போழ்து நற்செய்கைப் புத்தூரெனும் பெயரை கௌரவ மங்கலம் என்று பெயர் மாற்றித் தானம் செய்தான்:

இராசசிம்ம பாண்டியன் கொடை வழங்குவதில் வல்லவனாக விளங்கினானென்பது செப்பேட்டுச் செய்தியால் அறியப்படுகின்றது. இவ் வேந்தன் எண்ணிறந்த பிரமதேயமும்[2]

[1] Nilakanta Sastry, K. A. 'The Pandyan Kingdom' page 73, Foot Note.

[2] பார்ப்பனர்களுக்கு அளிக்கப்படும் நிலக் கொடையே பிரமதானமென்றழைக்கப்படும்.

எண்ணிறந்த தேவதானமும்[1] எண்ணிறந்த பள்ளிச் சந்தமும்[2] அளித்துள்ளான். இதனால் இவன் சமயத் துறையில் குறுகிய மனப்பான்மை கொள்ளாது, பரந்த விரிந்த மனப்பான்மை கொண்டிருந்தானென்பது புலனாகின்றது. சமயப் பொறை (Religious toleration) கொண்ட இவ் வேந்தன் தனது ஆட்சியின் கீழுள்ள பிறசமயத்தாருக்கும் மத சுதந்தரம் அளித்து தாம் விரும்பும் இறைவனை வணங்க அனுமதியளித்தான்.

**பொதுப்பணி:** மேலும், இவன் நூற்றுக்கணக்கான ஏரிகளை வெட்டி நீர்ப்பாசனத்தைப் பெருக்கினான். இதனால் இவனது ஆட்சிக்காலத்தில் வேளாண்மைத் தொழில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. இவ்வாறு இவன் கொடை வழங்கும் விழுமிய பண்பு பெற்றிருந்ததனால்தான் பெரும்புகழ் பெற்று விளங்கினானென்று தளவாய்புரச் செப்பேடுகள் குறிப்பிடுகின்றன.

**பாண்டியர் வீழ்ச்சி**

நெடுங்காலமாகவே வலிமைமிக்க பல்லவர்களுடன் போராடி வந்த பாண்டியப்படைவீரர்கள் நாளடைவில் வலிமை குன்றினர். பல்லவர்களின் வலிமை மிக்க தாக்குதலின் காரணமாக ஒடுக்கப்பட்ட பாண்டியர்கள், அந்த வீழ்ச்சியினின்றும் எழுச்சி பெறுவதற்கு முன்பே, பல்லவரினும் வலிமையில் மேம்பட்ட சோழ அரசின் வலிமையான தாக்குதலைத் தாங்கிக்கொள்ள வியலாது வீழ்ந்துபட்டனர். ஏற்கெனவே ஆடிக்கொண்டிருந்த பாண்டியப் பேரரசென்னும் கட்டடம் சோழனின் தாக்குதலினால் ஒரேயடியாகச் சாய்ந்துவிட்டது.

இருண்டுவிட்ட வானத்தில் தோன்றிவிட்ட விண்மீன்கள் விடிந்துவிட்ட வானத்தில் மறைந்துவிட்டதுபோல், ஒரு காலத்தில் பார்புகழ, சீரும் சிறப்புமாக ஆண்டு கொண்டிருந்த பாண்டிய மன்னர்கள் பேராதிக்கச் சோழமன்னர்களின்கீழ் அடங்கிக் கிடக்க வேண்டிய அவல நிலையேற்பட்டது. ஏறத்தாழ முன்னூற்றிருபத்தைந்தாண்டு காலம் பாண்டிய நாட்டினை ஆண்டு, சங்கம் வைத்து மொழி வளர்த்த பாண்டியர் பெருமையற்று சிறுமையுற்று வாழ்ந்து வந்தனர்.

**பாண்டிய நாட்டில் சோழராட்சி**

வீழ்ந்து கொண்டிருந்த பாண்டிய அரசினை வீழ்ச்சியினின்றும் தடுத்த நிறுத்த இராசசிம்மன் மேற்கொண்ட

[1] சிவன் கோயிலுக்களிக்கப்படும் கொடைகள் (நிலம்) தேவதானமென்றழைக்கப்பெறுகிறது.

[2] சமண புத்த ஆலயங்களுக்கு வழங்கப் பெறும் நிலங்கள் 'பள்ளிச் சந்தம்' எனப் பெயரிடப்பட்டது.

முயற்சிகள் பயனளிக்கவில்லை; இவனது ஆட்சியும் கி.பி. 931-ல் முடிவுற்றது. இந் நிலையில் பராந்தக சோழன் பாண்டிய நாட்டினைக் கைப்பற்றிக் கொண்டான். பராந்தகனின் இருபத்து நான்காம் ஆட்சியாண்டுக் கல்வெட்டே[1] (கி.பி. 907 + 24 = கி.பி. 931-ஆம் ஆண்டு) பாண்டிய நாட்டில் காணப்பெறும் முதல் சோழர் கல்வெட்டாதலின் இதனை நாமறியலாம். அடுத்து, பராந்தக சோழனின் ஆட்சி பாண்டிய நாட்டில் நிலைத்து விட்டது என்பதனை இவனது முப்பத்து மூன்றும் ஆட்சியாண்டினதான (கி. பி. 940) ஆனைமலைக் கல்வெட்டாலறியலாம்.[2] இக் கல்வெட்டினைக் கொண்டு இவ் வேந்தனது அதிகாரியான அருணிதி கலியன் தனது பெயரால் 'கலியனேரி' என்னும் ஏரி ஒன்றினை வெட்டிய செய்தி அறியப்படுகிறது.

கி. பி. 931-க்கும் கி. பி.946-க்கும் இடைப்பட்ட காலத்திய பாண்டியர் கல்வெட்டுகள் யாண்டும் காணப்பெறவில்லை. எனவே, இக் கால கட்டத்தில் பாண்டியர் பாண்டிய நாட்டினை ஆட்சி புரியவில்லை என்றும், முதலாம் பராந்தகனே பாண்டிய நாட்டினை ஆண்டு வந்தான் என்றும் அறியலாம். இச் சோழரின் ஆட்சிக் காலத்திலிருந்து சோழர் ஒளிவிட ஆரம்பிக்கின்றனர்.

## வீரபாண்டியன் (கி. பி. 946—966)

**சான்றுகள்**

'பாண்டி மார்த்தாண்டன்' 'சோழாந்தகன்'[3] 'சோழன் தலை கொண்ட கோவீரபாண்டியன்'[4] முதலான சிறப்புப் பட்டங்களைக் கைக்கொண்ட வீரபாண்டியன் வீழ்ச்சியுற்ற பாண்டியரின் பெருமையினை மீண்டும் இப் பாரினில் நிலைநாட்ட முயன்றவனென்பது குறிப்பிடத்தக்க தொன்றாகும். இவ் வேந்தனைப் பற்றிய செய்திகளை அறிந்து கொள்ள, நமக்குப் பதினைந்திற்கும் மேற்பட்ட கல்வெட்டுகள் கிடைத்துள்ளன. இவற்றின் துணை கொண்டு இவ் வேந்தனைப்பற்றி நாம் ஈண்டு ஆய்வோம்.

**இவனது திட்டம்**

இவ் வேந்தன் கி. பி. 946ஆம் ஆண்டு பாண்டி நாட்டின் மன்னனாக முடிபுனைந்து கொண்டு, பாண்டிய நாட்டின் சில

1 No. 446 of 1917.
2 No. 63 of 1905.
3 Annual Report on South Indian Epigraphy for 1932-33. Part II, Para 30; Ibid for 1935-36, Part II, Para 47.
4 S.1.1. Vol. V. No. 455.

பகுதிகளையாண்டு வந்தான். இராசசிம்ம பாண்டியன் கி.பி. 920ஆம் ஆண்டு முதலாம் பராந்தக சோழனால் தோற்கடிக்கப் பட்டு, பாண்டி நாட்டினின்றும் ஈழநாடு சென்றதும், பின்னர் தனது இறுதிக் காலத்தில் பாண்டி நாட்டின் சில பகுதிகளை மீண்டும் கைப்பற்றிக் கொண்டு ஆட்சி புரிந்ததும், நாம் முன்பே அறிந்தவொன்றாகும். இராசசிம்ம பாண்டியனின் இறப்பிற்குப் பின்னர், அவனது மகனான வீரபாண்டியன் கி.பி. 946-ல் அரியணையேறினான்.[1] வீரபாண்டியன் தனது பாண்டிய நாட்டின் பகுதிகள் முழுவதையும் கைக்கொள்ள வேண்டுமென்று திட்டம் தீட்டினான்.

### தக்கோலப் போர்

இவ் வேளையில் சோழ வேந்தனும் முதலாம் பராந்தகனின் இறுதிக் காலத்தில் இராட்டிரகூடருக்கும் சோழருக்கும் பெரும் பகை மூண்டது.[2] தனது மருமகன் மீண்டும் இராட்டிரகூட மன்னனாகப் பதவியேற்க வேண்டுமென்ற எண்ணத்தால் இராட்டிரகூடருடன் போரிட்ட பராந்தகன் கி.பி. 939ஆம் ஆண்டில் தோல்வியைத் தழுவினான். சோழருக்கும் இராட்டிர கூடருக்கும் பகை மேலும் வளர்ந்தது. பின்னர் கி.பி. 949-ல் மூன்றாம் கிருட்டிணதேவன் தனது மைத்துனனும், கங்க நாட்டு மன்னனுமான பூதுகனின் துணைகொண்டு சோணாட்டின்மீது படையெடுத்தான். இருதிறத்தாருக்கும் தக்கோலம் (அரக் கோணத்திற்குக் கிழக்கே ஆறு கல் தொலைவில்) என்னுமிடத்தில் கடும் போர் நிகழ்ந்தது. இப் போரில் சோழர் படைக்குத் தலைமையேற்றுச் சென்றவன் இளவரசன் இராசாதித்தன் ஆவான். இவன் யானைமீதமர்ந்து பெரு வீரத்துடன் போர் செய்து கொண்டிருந்தபோது, பூதுகன் விட்ட அம்பொன்று இவன்மீது பட்டு, யானையின்மீது இருந்தவாறு உயிர் துறந் தான். இதன் காரணமாக இவன் 'யானைமீது துஞ்சிய தேவர்'[3] என அழைக்கப் பெறுகிறான்.

[1] Ins. 122 of 1905; T.A.S. Vol. III, page 68. திருப்புடைமருதூர்க் கல்வெட்டு.

[2] இராட்டிரகூட மன்னன் இரண்டாம் கிருட்டிண தேவனுடைய பேரனின் மகன் நான்காம் கோவிந்தனுக்குத் தனது மகள் வீரமாதேவியை மணம் செய்து கொடுத்தான். நான்காம் கோவிந்தன் மன்னனாக இருந்தபோது உள்நாட்டுக் குழப்பம் ஏற்படவே கோவிந்தனின் சிறிய தந்தையின் மகனான மூன்றாம் கிருட்டின தேவன் அவனை அரச கட்டிலினின்றும் ஓட்டிவிட்டான். அரசிழந்த நான்காம் கோவிந்தன் தன் தேவியுடன் மாமனார் வீட்டிற்கு (தஞ்சை) வந்து தங்கிவிட்டான். இதன் காரணமாக மூன்றாம் கிருட்டிணனுக்கும் பராந்தகனுக்கும் பெரும் பகை மூண்டது.

[3] S. I. I. Vol. III. Nos. 132 and 201.

**மதுரை கைப்பற்றப்படல்**

தக்கோலப் போரில் வெற்றி வாகை சூடிய மூன்றும் கிருட்டிணன் சோணாட்டின் பெரும் பகுதியினைக் கைப்பற்றிக் கொண்டான். இவன் சோணாட்டின் தலைநகராம் தஞ்சை மாநகர் வரையில் படையெடுத்துச் சென்றானென்றும் அறிகிறோம். இவ்வாறு இராட்டிரகூடர்களிடம் தோல்வியுற்ற சோழ வேந்தன், தன்னாட்டின் பெரும் பகுதியினை இழந்ததுமின்றி பாண்டி நாட்டினைப் பாதுகாக்க இயலாதிருந்தான். இத் தருணத்தில்தான், சோழரிடமிருந்து பாண்டி நாட்டின் பகுதிகளை மீட்டுக் கொள்ளும் எண்ணத்தினை நிறைவேற்றிக் கொள்ளக் காலங் கருதியிருந்த வீரபாண்டியன், தனது எண்ணத்தினை நிறைவு செய்து கொண்டான்; மதுரையையும் கைப்பற்றிக் கொண்டான். இவ்வாறு தன் எண்ணம் நிறைவேற உறுதுணை புரிந்த, ஆனையூரில் எழுந்தருளியிருக்கும் ஐராவதீஸ்வரருக்கு (Offerings) காணிக்கை செலுத்தினன்; தனது நன்றியறிதலை ஈசனுக்கு உணர்த்தினன். இதனை மதுரைக் கருகாமையிலுள்ள ஆனையூர் ஐராவதீஸ்வரர் கோயில் பலகணியின் பக்கநிலைக் கதவுகளிலுள்ள (Door Jambs) இவ்வேந்தனது பத்தாமாட்சியாண்டுக் கல்வெட்டாலறியலாம்.[1] எனவே, வீரபாண்டியன் கி. பி. 956-க்குள் மதுரை மாநகரினைச் சோழரிடமிருந்து மீட்டுத் தனியாட்சி செலுத்தினனென்பது பெறப்படுகின்றது.

மேலும், வீரபாண்டியனது கல்வெட்டுகள் திருநெல்வேலி, இராமநாதபுரம் மாவட்டங்களிலும் திருவாங்கூர் நாட்டின் தென்பகுதியிலும் காணப்படுவதாலும்[2] இவ் வேந்தனது ஒன்பதாமாட்சியாண்டுக் கல்வெட்டும், பத்தாமாட்சியாண்டுக் கல்வெட்டும் மதுரை மாவட்டம் திருமங்கலம் வட்டத்திலுள்ள கீழ்மாத்தூர்க் கோயிலில் காணப்படுவதாலும்,[3] இவன் சோழ வேந்தனிடமிருந்து பாண்டி நாட்டின் பகுதிகளைக் கைப்பற்றினனென்ற கருத்து வலிவுடையதாகிறது. முதற் பராந்தக சோழனுக்குப் பின்னர் சோணாட்டினை ஆட்சி புரிந்து வந்த கண்டராதித்தன், அரிஞ்சயன் முதலான சோழ வேந்தர்களின் கல்வெட்டுகள் மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலி ஆகிய மாவட்டங்களில் காணப் பெறாமையும், ஈண்டு நினைவிற் கொள்ளத்தக்கதாகும்.

1 A.R.E. 1961—62. pp. 16-17.

2 I.A.S. Vol. III, Nos. 22-26.

3 Ins. Nos. 624 and 625 of 1926; S.I.I. Vol. V. No. 304.

### சோழன் தலை கொண்டான்

வீரபாண்டியன் தனது பெயருக்கேற்ப வீரம் செறிந்த மாவீரனென்பது ஈண்டு குறிப்பிடத்தக்கதாகும். இவன் தனது ஆறும் ஆட்சியாண்டு முதல் 'சோழன் தலை கொண்ட கோவீர பாண்டியன்' என்று கல்வெட்டுகளில் குறித்துக் கொண்டுள்ளதால்[1] இவன் சோழனை வென்று, கொன்று புகழ்பெற்றானென்பது இனிது விளங்கும். இவன் சோழனை வென்ற காரணத்தால் 'சோழாந்தகன்' என்னும் விருதுப் பெயரினைப் பூண்டான்.[2] இவ் விருதுப் பெயர் பொன்றாது நின்று நிலவும் பொருட்டு, குருவித்துறை என்னும் ஊருக்குச் சோழாந்தக சதுர்வேதிமங்கலமெனப் பெயரிட்டான். சோழாந்தகன் என்பது தற்போது சோழவந்தான் என (மதுரை மாவட்டம்) மருவி வழங்குகிறது.[3] தனது அதிகாரியொருவனும் சோழாந்தகப் பல்லவரையன் எனும் சிறப்புப் பெயரினைப் பெற்றான்.

### பாண்டியனிடம் தலையையிழந்த சோழன் யாவன்?

வீரபாண்டியனால் கொல்லப்பட்ட சோழன் யாவன்? என்பது குறித்து வரலாற்றாராய்ச்சியாளரிடையே ஒருமித்த கருத்து நிலவவில்லை. அரிஞ்சயனின் புதல்வனும், முதலாம் இராசராசப் பெருமன்னனின் தந்தையுமான இரண்டாம் பராந்தகனென்றழைக்கப்படும் சுந்தர சோழனே வீரபாண்டியனால் கொல்லப்பட்டவனென்று சில ஆராய்ச்சியறிஞர்கள் கருதுகின்றனர்.[4] முதலாம் பராந்தக சோழனுக்கும், முதலாம் இராசராச சோழனுக்குமிடையே ஆட்சி புரிந்த சோழர்களைப் பார்க்குங்கால் வீரபாண்டியனால் கொல்லப்பட்டவன் இவனது சமகாலத்தவனாகிய சுந்தர சோழனாகவேயிருத்தல் கூடுமென்று சிலர் எண்ணக்கூடும்.[5] ஆனால், கல்வெட்டுச் சான்றுகள் இக்

[1] ஆறுமாட்சியாண்டு முதல் பத்தொன்பதாமாட்சியாண்டு முடிய 163 of 1894, 65 of 1869.

[2] I.M.P. 1175; 474 of 1909.

[3] Nilakanta Sastri, K. A. 'The Pandian Kingdom', page 120.

[4] Gopinatha Rao, T. A. E. I: Vol. XV, Contra, H. K. Sastri in Para 31, Part ii of A.R.E. for 1915.

[5] சுந்தரசோழன் சேவூர் (Chevur) என்னுமிடத்தில் நிகழ்ந்த போரில் தனது வில்லாற்றலின் திறத்தால் எதிரிகளின் யானைகளைக் கொன்று குருதியாறு ஓடச் செய்தான். தனது வாள் வீச்சால் மாற்றாரை வெட்டி வீழ்த்தினான் என்று பெரிய லீடன் செப்பேடு குறிப்பிடுகின்றது. இவன் இப் போரில் வெற்றி பெற்றான் என்று இக் கல்வெட்டில் யாண்டும் குறிக்கப் பெறவில்லையாதலின் இவன் தோல்வியடைந்தான் எனக் கொள்ளலாம்.

கருத்தினை மறுத்துப் பேசுகின்றன. சுந்தரசோழன் 'பொன் மாளிகைத் துஞ்சின தேவர்' என்று கல்வெட்டுகளில் குறிக்கப் பெற்றுள்ளதால்[6] இவன் காஞ்சியிலுள்ள பொன் மாளிகையில் துஞ்சியிருத்தல் வேண்டுமென்பது உறுதி பெறுகிறது. பொன் மாளிகை என்பது சோழ வேந்தரது ஆட்சிக் காலத்தில் காஞ்சி யிலிருந்த அரண்மனைகளுளொன்று என்பது கல்வெட்டுக ளாலும்[7] கலிங்கத்துப்பரணிச் செய்யுளாலுமறியப்படுகின்றது.[8] இவனால் கொல்லப்பட்ட சோழ வேந்தன் முதலாம் பராந்தக சோழன் ஆவான் என்ற கருத்தும் பொருத்தமுடையதாகத் தோன்றவில்லை.

வீரபாண்டியனால் கொல்லப்பட்ட சோழ மன்னன் யாவன்? என்பதனையறிந்துகொள்ளப் போதிய ஆதாரங்கள் கிடைக்காத காரணத்தால், இவனால் கொல்லப்பட்டவன் சோழ இளவரசர் களுள் ஒருவனாயிருத்தல் வேண்டுமென்று கருதலாம். இவனால் கொல்லப்பட்டவன் கண்டராதித்தனாக இருத்தல் கூடுமென்ற கருத்து பொருத்தமுடையதாகத் தோன்றுகிறது. கண்ட ராதித்தர் இருவர் இருந்ததாகத் தெரிகிறது. இதில் 'மேற்கெழுந் தருளிய தேவர்' ஒருவர். மற்றொருவர் தலையை இவன் கொண் டிருக்கலாம். இருப்பினும் உறுதியாகக் கூறச் சான்றுகளில்லை. இவனால் கொல்லப்பட்டவன் முதலாம் பராந்தகன் அல்ல வென்பது மட்டும் உறுதி.[9]

**விளைவுகள்**

இவ் வெற்றியின் காரணமாக இவன் பாண்டிய நாட்டின் பகுதிகளைக் கைப்பற்றிக் கொண்டு தனியாட்சி நடாத்திய

---

1. பராந்தகன்
2. கண்டராதித்தன்
3. அரிஞ்சயன்
4. இரண்டாம் பராந்தகன், சுந்தரசோழன்
   (2–4: வீரபாண்டியனின் சமகாலத்தவர்கள்.)
5. ஆதித்த இரண்டாம் கரிகாலன்
6. மதுராந்தக உத்தம சோழன்
7. இராசராசன்–I

கண்டராதித்த சோழனின் தலையை வீரபாண்டியன் கொண்டிருக்கலாமென்று திரு. கே.கே. பிள்ளையவர்கள் கருதுகின்றார். 'மதுரை கும்பாபிஷேக மலர்' 1974, பக். 950.

[6] S.I.I. Vol. II, pp. 72 and 74; Ibid. Nos. 723 and 980.

[7] Ibid. Vol. III, No. 142.

[8] அம்பொன் மேரு அதுகொல் இது கோவென்று
ஆயிரங் கதிர் வெய்யவ னையுறுஞ்
செம்பொன் மாளிகைத் தென்குட திக்கினிற்
செய்த சித்திர மண்டபந் தன்னிலே'
கலிங்கத்துப் பரணி 302.

[9] S.I.I. Vol. iii, page 255; E.I. Vol. xii, pp. 124–25.

போதிலும், இவனது வெற்றி நிரந்தரமான விளைவுகளை ஏற்படுத்த வில்லை என்பதும், பாண்டியப் பேரரசினை விரிவுபடுத்துவதில் துணை செய்யவில்லையென்பதும் உறுதி. இவன் இவ் வெற்றியின் விளைவுகளை நீண்ட நாள் சுவைக்க இயலவில்லையென்பதும் நன்கு புலனாகின்றது.

**இவனது உயர்ச்சி**

இராசாதித்தனது இறப்பினால் மனமுடைந்த பராந்தகன் கி. பி. 950-ல் கண்டராதித்தனுக்கு இளவரசுப் பட்டம் கட்டினான். கண்டராதித்த சோழனது ஆட்சிக் காலத்தில் வீரபாண்டியன் பாண்டி நாட்டில் புகழ்மிக்க மன்னனாகத் திகழ்ந்தான். கண்டராதித்த சோழனுக்குப் பின்பு சோணாட்டின் அரியணையேறிய அரிஞ்சய சோழனின் ஆட்சிக் காலத்தும் வீர பாண்டியனது கை ஓங்கியிருந்தது.

**சேவூர் போர்**

கி.பி. 957 முதல் 970 முடிய சோணாட்டின் மன்னனாக ஆண்டு வந்த இரண்டாம் பராந்தகன் வீரபாண்டியனுடன் போர் மேற்கொண்டான். இப் போர் கி.பி. 962-ல் சேவூர் என்னுமிடத்தில் நடைபெற்றது; வீரபாண்டியன் இப் போரில் தோற்கடிக்கப்பட்டான். இவ் வெற்றியின் காரணமாக இரண்டாம் பராந்தகன் 'மதுரை கொண்டான்'[1] எனப் பெயர் பெற்றான். வீரபாண்டியன் காட்டிற்கு விரட்டப்பட்டதால் பராந்தகன் 'பாண்டியனைச் சுரம் இறக்கின பெருமாள்'[2] என்றும் அழைக்கப்பெறுகிறான். இவன் காட்டிற்கு விரட்டப்பட்ட செய்தி கன்னியாகுமரிச் செப்பேட்டிலும், கரந்தைச் செப்பேட்டிலும் கூறப்பட்டுள்ளது.

**இவன் கொல்லப்படுதல்**

சில ஆண்டுகளுக்குப் பின் வீரபாண்டியன் மீண்டும் பராந்தக சோழனை எதிர்த்துப் போரிட்டான். இப் போர் கி.பி. 906-ல் நடைபெற்றது. பராந்தகனுக்காக இரண்டாம் ஆதித்த சோழன், கொடும்பாளூர்ச் சிற்றரசன் பூதிவிக்கிரமகேசரி, இளவரசர் பார்த்திவேந்திரபன்மர் ஆகிய மூவரும் போரிட்டனர். சிங்களவேந்தன் நான்காம் மகிந்தனே வீரபாண்டியனுக்குப் படையுதவியளித்தான். இருதிறத்தாருக்கும் நிகழ்ந்த கடும் போரில், சோழரின் கை ஓங்கியிருந்தது. வீரபாண்டியன்

1 Ibid. Vol. IV. Nos. 15. 116 to 118.
2 Epi. Ind. Vol. XII, No. 15; Ins. 302 of 1908.

ஆதித்த கரிகாலனால் கொல்லப்பட்டான். இதன் விளைவாக ஆதித்த கரிகாலன் 'வீரபாண்டியன் தலைகொண்ட கோப்பரகேசரிவர்மன்' என்று பெயர் பெற்றானென்பதனைக் கல்வெட்டுச் செய்திகளாலறியலாம்.[1] ஆதித்த கரிகாலன் என்பான் சுந்தர சோழனது முதல் புதல்வனும், முதலாம் இராசராசனின் தமையனுமாவான். வீரபாண்டியன் இவனால் போரில் கொல்லப்பட்டானென்பதனால்,[2] வீரபாண்டியனால் தனது குலத்திற்கேற்பட்ட களங்கத்தினைத் துடைத்தானென்பது புலனாகும்.

இப்போரில் கலந்து கொண்டு, சோழரின் வெற்றிக்குத் துணை புரிந்த இளவரசர் பார்த்திவேந்திரபன்மரும் 'வீரபாண்டியன் தலை கொண்டான்' என்னும் விருதினைப் பெற்றான். இவனது கல்வெட்டுகளில் இவன் 'வீரபாண்டியன் தலைகொண்ட பாதம மகாராஜா' என்று குறிக்கப்பெறுகிறான்.[3]

**ஈழ-சோழப் போர்**

வீரபாண்டியனுக்குச் சிங்கள வேந்தன் படையுதவி செய்த காரணத்திற்காக இரண்டாம் பராந்தகன் சிங்கள வேந்தனும் நான்காம் மகிந்தனுடன் போரிட்டான். சோழப் படை ஈழத் தீவினையடைந்து போர் முழக்கம் செய்தது. இப் படையெழுச்சிக்குக் கொடும்பாளூர் வேளான் பராந்தகன் சிறிய வேளான் தலைமை தாங்கினான். கி. பி 966-ல் நடைபெற்ற இப் போரில் 'சேனா' என்பான் சிங்களப் படையின் தலைவனாகப் பதவியேற்று பெருவீரம் விளைவித்தான்; சிறிய வேளான் இறந்து பட்டான். இருப்பினும் சோழர் வென்றனர்.

இரண்டாம் ஆதித்த கரிகாலன் வீரபாண்டியனை கி. பி. 966ஆம் ஆண்டில் போரில் கொன்றனன் என்பதனை ஆதித்தனின் இரண்டாமாட்சியாண்டுக் கல்வெட்டால் அறியலாம்.[4] லெய்டன் செப்பேடும் வீரபாண்டியன் போரில் இறந்த செய்தியினை உறுதிப்படுத்துகிறது. எனவே, இப் போர் இவ் வேந்தனது தந்தையின் ஆட்சிக் காலத்திலேயே, நடைபெற்றிருக்க வேண்டு

[1] S.I.I. Vol. III, Nos. 200-204.

[2] Ibid, No. 205, Verses 67 and 68.

[3] Ibid, No. 152. ஆதித்த கரிகாலனும் இவனும் ஒரே பெயரைப் பெற்றிருப்பதால் இருவரும் ஒருவரேயாகுமென்று சிலர் முடிவு செய்தனர். ஆனால், இவ்வாறு நாம் கொள்ளமுடியாது. காரணம் ஆதித்த கரிகாலனது கல்வெட்டுகள் அவனது ஐந்தாமாண்டுவரையில்தான் கிடைத்துள்ளன. இவனுடையதோ பதினைந்தாமாண்டுவரை கிடைத்துள்ளன. இவனை யாரென்று முடிவாகக் கூறவியலாது.

[4] S.I.I. Vol. IV, No. 199.

மென்று கருதலாம்.[1] வீரபாண்டியனின் கல்வெட்டுகள் இருபதாமாட்சியாண்டிற்குப்[2] பின்பு காணப்பெறாமையின் இவன் கி. பி. 966-ல் இறந்திருத்தல் வேண்டுமென்ற செய்தி உறுதி பெறுகிறது. அழிந்து கொண்டிருந்த பாண்டிய அரசினைத் தனது வாளாண்மையாலும் தோளாண்மையாலும் காப்பாற்ற முயன்ற வீரபாண்டியன், இறுதியில் பாண்டிய அரசினை இழந்தான்; தானும் இறந்தான்.

**பாண்டியரின் வீழ்ச்சி**

இவனது இறப்புடன் பாண்டியர் முடிமன்னராகவிருந்து பாண்டிய நாட்டினையாளும் உரிமையை இழந்தனர். இவ் வேந்தனுக்குப் பின் கி. பி. பதின்மூன்றாம் நூற்றாண்டின் தொடக்ககாலம் வரையில் உள்ள காலத்தில் பாண்டியர் புகழ் மங்கிக் கிடந்தனர்; சோழர்களுக்குக்கீழ் சிற்றரசர்களாக அடங்கிக் கிடந்தனர். சோழர்களுக்குத் திறை செலுத்திவந்த இப் பாண்டியச் சிற்றரசர்கள்பற்றிய முறையான, விரிவான வரலாற்றினையறிந்துகொள்ளத்தக்க ஆதாரங்கள் பாண்டிய நாட்டினில் கிடைக்கப்பெறவில்லை. இவர்களைப்பற்றிய ஒருசில செய்திகளை மட்டும் சோழர்களின் கல்வெட்டுகளின் மூலம், நாம் ஒருவாறு அறிந்துகொள்ள முடிகின்றது; இதுவும் முழுமையான வரலாறல்லவென்பதும் நாம் ஈண்டு நினைவிற் கொள்ளத்தக்க தாகும். குறிப்பாக அதிலும் சிறப்பாக முதலாம் இராசராச சோழன் (கி. பி. 985—1012), முதலாம் இராசேந்திர சோழன் (கி. பி. 1012—1014), முதலாம் இராசாதிராசன் போன்ற சோழ வேந்தர்களின் கல்வெட்டுகளின் துணைகொண்டு இவர்களது வரலாற்றினை நாம் ஒருவாறு கணிக்கலாம்.

**சோழாந்தகன்**

இவ் வேந்தனது நான்காமாண்டுக் கல்வெட்டில் திருச்சுழி என்ற கிராமத்திலுள்ள சுந்தரபாண்டிய ஈஸ்வரமுடையார் கோயிலைப்பற்றிய குறிப்பொன்று காணப்படுகின்றது. வீர பாண்டியனின் கல்வெட்டுகளில் 'சோழாந்தக பிரமராயா'[3]

[1] லீடன் செப்பேடு, 11. 58-60: திருவாலங்காட்டுச் செப்பேடு, பாட்டு 67; A.R.E. 1900, p. 7; 1910, p. 76; 1911, p. 88; 1921, p. 109.

[2] Epi. Ind. Vol. XXV, No. 6.
இவ் வேந்தனது இருபதாமாட்சியாண்டுக் கல்வெட்டொன்று இராமநாதபுரம் மாவட்டம் சாலைக் கிராமத்தில் காணப்படுகிறது. இவன் திருப்பாலையூர் என்னும் ஊரில் பாசறையமைத்திருந்த (Camping) செய்தி இக் கல்வெட்டால் அறியப்படுகிறது.

[3] நாராயணன் மாதவனான சோழாந்தக பிரம்மராயன் பள்ளிமடம் கல்வெட்டில் குறிக்கப் பெறுகிறான். (S.I.I. Vol. XIV, No. 79, அடிக்குறிப்பு).

'சோழாந்தக பல்லவரையன்'[1] 'சோழாந்தகன் நாழி' 'சோழாந்தகன் செய்'[2] ஆகிய பெயர்களைப்பற்றிய குறிப்பு காணப்படுதலின், இவன் சோழனை வென்றதாகக் கொள்ளலாம். மேலும், குருவித்துறை என்னும் ஊரின் பெயர் 'சோழாந்தக சதுர்வேதிமங்கலம்' என அழைக்கப்பட்டதும் இதனை உறுதி செய்கிறது. பிரும ராயன், பல்லவரையன் போன்ற பட்டங்கள் படைத் தலைவர்களுக்கு வழங்கப்பட்டதாகவும் உணரலாம். ஈண்டு நாழி என்பது மரக்காலைக் குறிப்பதால் இவனது ஆட்சிக்காலத்தில் இவன் முகத்தலளவை, நிறுத்தலளவை போன்றவற்றை நிர்ணயம் செய்தானெனக் கொள்ளலாம்.

இராமநாதபுரம் மாவட்டத்தில் இவ் வேந்தனின் 6 கல்வெட்டுகள் கிடைத்துள்ளன. சிவகாசிச் செப்பேடும் சுந்தர பாண்டிய ஈஸ்வரமுடையார் கோயில்பற்றிக் குறிப்பிடுகின்றது. சுந்தரபாண்டியன், வீரபாண்டியனின் அண்ணனென்பதனைச் சிவகாசிச் செப்பேட்டாலறியலாம். அண்மையில், மதுரைக் கருகிலுள்ள ஆனையூரின்கண்ணுள்ள ஐராவதேஸ்வரர் கோயிலில் இவ் வேந்தனது மூன்று கல்வெட்டுகள் கிடைத்துள்ளன. அவற்றிலுள்ள ஒரு கல்வெட்டின் துணைகொண்டு இவ் வேந்தன் மங்களாபுரத்திலுள்ள 'மானாபரணன் திருமாளிகை' யென்னும் பெயர்கொண்ட அரண்மனையிலுள்ள 'வீரகேரளன்' என்ற இருக்கை (Seat) யிலமர்ந்துகொண்டு தனது ஆணைகளைப் பிறப்பித்தானென்று அறிகிறோம். வீரபாண்டியன தனது தந்தையாம் மானாபரணன்[3] நினைவாகத் தனது அரண்மனைக்கு 'மானாபரணன் திருமாளிகை' யெனவும், தன்னை ஈன்றெடுத்த தனது தாயாம் சேரநாட்டு இளவரசியின் நினைவாகத் தனது இருக்கைக்கு 'வீரகேரளன்' எனவும் பெயரிட்டமைத்

[1] மாறஞ்சடையனது ஐந்தாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டில் பொலியூர் நாட்டு மாறன் ஆதித்தனை தென்னவன் பல்லவரையன் ஒருவன் குறிக்கப் பெறுகிறான். பள்ளி மடம் கல்வெட்டில் பொலியூர் நாட்டு மாறன் ஆதித்தனை சோழாந்தகப் பல்லவரையன் குறிக்கப் பெறுகிறான், இவ் விருவரும் ஒருவனாகவே இருப்பானேயாகில், தென்னவன் பல்லவரையன் என்பான் தனது வேந்தரும் வீரபாண்டியன் சோழனை வென்று 'சோழாந்தகன் எனப் பட்டம் கொண்டதன் நினைவாக, இவனும் தனது பெயரைச் சோழாந்தகப் பல்லவரையன் என மாற்றிக் கொண்டான் எனலாம். அல்லது இவன் சோழனை முறியடிப்பதில் பெரும் பங்கு கொண்டதனால் 'சோழாந்தகப் பல்லவரையன்' என்ற பட்டத்தை வேந்தன் இவனுக்கு வழங்கியிருக்கலாம்.

[2] பயிர் செய்யப்பட்ட நிலம் சோழாந்தகன்செய் எனப்பட்டது. (S.I.I. Vol. XIV. No. 85)

[3] இவ் வேந்தன் இராசசிம்ம பாண்டியனின் புதல்வனென்பது திருநெல்வேலி மாவட்டம் திருப்புடைமருதூரிலுள்ள கல்வெட்டொன்றால உய்த்துணரப்படுகின்றது என்று சதாசிவ பண்டாரத்தார், டி. வி. 'பாண்டியர் வரலாறு' பக். 82—ல் கூறியுள்ளார். ஆனால், சிவகாசிச் செப்பேட்டில் இவ் வேந்தனது தந்தையின் பெயர் 'மானாபரணன்' என்று குறிக்கப்பட்டுள்ளது.

தான் என்று எண்ணும்போது, இவன் தனது பெற்றோர்மாட்டு எத்துணையன்பு கொண்டிருந்தானென்பது இனிதுபுலனாகின்றது.

**அதிகாரிகள்**

இவ் வேந்தன் நல்லாட்சி நடத்தும் பணியில் இவனது திறமைசான்ற அலுவலர்கள் பேருதவி புரிந்தனரென்பது மிகவும் பாராட்டத்தக்கதாகும். அவ் வதிகாரிகளின் பெயர்களை இவ் வேந்தனது கல்வெட்டுகள் எடுத்துரைக்கின்றன. அவர் களுள் அரும் பணியாற்றிய ஒருசில அதிகாரிகளின் பெயர்களை மட்டும் ஈண்டு நாம் காண்போம்.

தமிழ்வேள், தென்னவன் தமிழ்வேள், விக்கிரமபாண்டிய மூவேந்த வேளான், சோழாந்தக பிரும்மராயன், பாண்டி மார்த் தாண்ட பல்லவரையன், சாத்தன் தமிழன் (மூர்க்க விச்சாதிர பல்லவரையர்), சோழாந்தகப் பல்லவரையர், தென்னவன் கந்தன் சாத்தன்—முதலான அரசியல் அலுவலர்கள் வீரபாண்டி யனது ஆட்சிக்காலத்தில் பணியாற்றியவர்களுள் குறிப்பிடத் தக்கவராவர்.

இவர்களுள் தென்னவன் கண்டன் சாத்தன் என்பான் கோயில் தொடர்பான வேலைகளை மேற்பார்வையிட்டு வந்தான்.[1] தென்னவன் தமிழ்வேள்பற்றிய குறிப்பினை இவ் வேந்தனது கீழ்மாத்தூர்க் கல்வெட்டாலறியலாம்.[2] வீரபாண்டியனது காலத்திய அரசியல் அலுவலரைப்பற்றி 'பாண்டியர் கால அரசியல் தலைவர்கள்' என்னும் தலைப்பில் விரிவாகக் காணலாம். தென்னவன் தமிழ் வேளாயின கண்டன் சாத்தன் கீழ்மாத்தூர் கோயிலைச் சேர்ந்த (இருங்கையூரில் இருந்த) தேவதான நிலங் களைச் சரிபார்த்தான் என்பது குறிப்பிடத்தக்கது'.

**சிறப்புப் பெயர்**

முற்காலப் பாண்டியரது பெருமையை மீண்டும் உயர்த்தும் பணியில் பெரிதும் ஈடுபாடு கொண்டிருந்த வீரபாண்டியன், 'பாண்டி மார்த்தாண்டன்', 'சோழன் தலைகொண்ட கோவீர பாண்டியன்', 'சோழாந்தகன்' முதலான சிறப்புப் பெயர்களைப் பெற்றிருந்தான் என்பதனை நாம் முன்பே கண்டோம்.

[1] S.I.I. Vol. XIV. No. 84 and 85.

[2] Ibid. No. 87.

பாண்டி மார்த்தாண்ட பல்லவரையன் என்னும் அரசிய லதிகாரியொருவன் இவ்வேந்தனது கல்வெட்டில்[1] குறிக்கப் பெற்றிருத்தலின், இவன் 'பாண்டி மார்த்தாண்டன்' என்னும் விருதுப் பெயரினைப் பெற்றிருந்ததாக ஊகிக்கலாம்.

'மானவீரன்' என்னும் விருதுப் பெயரினையும் இவ்வேந்தன் பெற்றிருத்தல் வேண்டுமென்பதனைக் கல்வெட்டுச் செய்திகளால் அறியலாம். மானவீரவள நாடு என்னும் அரசியல் பிரிவு திருவழுதி நாட்டின் பகுதியாகக் குறிக்கப் பெற்றிருக்கின்றது. இதனால் இவ்வேந்தன் 'மானவீரன்' என்னும் விருதுப் பெயரையும் பெற்றிருந்தான் என ஊகிக்கலாம். பாண்டியரின் வீழ்ச்சிக் காலத்தின்போது, பாண்டியரது மானத்தைக் காக்கப் போரிட்ட இவ்வீரனுக்கு 'மானவீரன்' என்னும் விருதுப் பெயர் மிகப் பொருத்தமுடையதேயாகும்.

### வீரபாண்டியனின் நினைவாகப் பெயரிடப்பெற்ற ஊர்கள்

வீரமிக்க வீரபாண்டியனின் பெயரால் பாண்டிய நாட்டின்கண் பல ஊர்கள் வழங்கப்படுகின்றன. மதுரை மாவட்டம் பெரிய குளம் வட்டத்தில் வீரபாண்டியன் நல்லூர் எனும் ஊரொன்று உண்டு. அவ்வூர் பண்டு புல்லை நல்லூர் எனும் அழகிய பெயரால் அழைக்கப் பெற்றது. பின்பு அவ்வூர் வீரபாண்டியனின் பெயரைத் தாங்கியதென்பதனைக் கல்வெட்டின்[2] வாயிலாக அறியலாம். அவ் வீரபாண்டி நல்லூரே தற்காலத்தில் வீரபாண்டியென சுருக்கமாக அழைக்கப் பெறுகிறது. இது தேனியிலிருந்து தெற்கே மூன்று கல் (மைல்) தொலைவில் அமைந்துள்ளது. மேலும், நெல்லை நாட்டு நாங்குநேரி வட்டத்தில் வீரபாண்டியன் பெயரால் வீரபாண்டி நல்லூர் என்று முன்னளிற் பெயர் பெற்றிருந்த ஊர் இன்று வீரபாண்டியம் என வழங்கப் படுகின்றது.

### முடிவுரை

புயலுக்குப் பின்னே தோன்றிய அமைதி போன்று, இராசசிம்ம பாண்டியனின் அமைதியற்ற ஆட்சிக்குப் பின்பு, வீரபாண்டியனது ஆட்சிக் காலத்தில் பாண்டிய நாட்டின்கண் ஓரளவு அமைதி நிலவிற்று. இவன் தன்னுலியன்ற வரை

1 பதினைந்தாம் ஆட்சியாண்டினதான பெருங்குளம் கல்வெட்டு. இவ்வேந்தனது கல்வெட்டுகளில் பாண்டி மார்த்தாண்ட வளநாடு என்னும் அரசியல் பிரிவு குறிக்கப் பெற்றிருத்தலாலும் இதனை நாம் உறுதி செய்யலாம்.

2 426 of 1907: ஆங்கமைந்துள்ள பழமைமிக்க சிவன் கோயில் 'கண்ணுடைய ஈச்சுவரம்' என்று கல்வெட்டில் குறிக்கப் பெறுகிறது. இது இன்று கண்ணீஸ்வரர் கோயிலென்று அழைக்கப் பெறுகிறது.

வீழ்ச்சிப் பாதையினை நோக்கி விரைந்து சென்று கொண்டிருந்த தனது அரசினைக் காக்க முயன்றான். இருப்பினும் தனது முயற்சியில் வெற்றி கண்டானில்லை. வங்கக் கடலில் செங்கதிர் பிறந்தது போன்று, பாண்டிய நாட்டில் சோழரின் ஆட்சி மலர்ந்தது. பரிதியைக் கண்ட பனி போன்று பாண்டியரின் தனியாட்சி மறைந்தது. பதின்மூன்றாம் நூற்றாண்டில் முகிலைக் கிழித்து வெளிக் கிளம்பும் முழுமதி போன்று தோன்றிய பிற்காலப் பாண்டியப் பேரரசின் மலர்ச்சி வரை, இவர்கள் சோழர்க் கடங்கிய சிற்றரசர்களாகவே ஆட்சி புரிந்தனர். ஒரு காலத்தில் எட்டுத் திக்கும் பாண்டியரின் புகழ் பரவ, கொடி கட்டி ஆண்ட இம் மறக்குடியினர் சோழர்க்குக் கைகட்டி வாழ்ந்தனர்.

மானமொன்றே வாழ்வின் உயிர்நாடி என்ற அடிப்படையில் வாழ்ந்து வந்த பாண்டியர் உண்மையிலேயே கைகட்டி வாழ்ந்தனரா? அல்லது தமது வீரம் காட்டி மாற்றானின் அரசிற்கெதிராகத் தடைக்கற்கள் வீசினரா? என்பதன் விடைதான் அடுத்த தலைப்பு.

**முற்காலப் பாண்டியர் காலம் : மதிப்பீடு**

தமிழகத்தில் ஏற்பட்ட களப்பிரரது ஆட்சியின் வீழ்ச்சிக்குப் பின்னர் தமிழக அரசியல் அரங்கில் முகிழ்த்த அரசுகள் இரண்டு. அவை பாண்டிய, பல்லவ அரசுகள் ஆகும். பாண்டியர் தெற்குப் பகுதியிலும், பல்லவர் வடக்குப் பகுதியிலும் தமது செல்வாக்கினைப் பெருக்கிக் கொண்டு நல்லாட்சி புரிந்து வந்தனர். பேராதிக்க மனப்பான்மையின் காரணமாகப் பாண்டியரும் பல்லவரும் பகைமை பூண்டு, அண்டைய சிற்றரசுகளின் துணை கொண்டு அடிக்கடிப் போரிட்டு வந்தனர். கொங்கு நாடு, சோழ நாடு ஆகியவற்றின் பல பகுதிகள் இவர்கள் போர் புரியும் போர்க் களங்களாக மாறின. முற்காலப் பாண்டியர் காலத்தில் பாண்டியர்-பல்லவர் போராட்டம் ஒரு சுவை மிக்க அத்தியாயமாகவே உள்ளது. பாண்டியர்கள் கொங்கு, சோழ, சேர, வேணாட்டுப் பகுதிகளை வெற்றி கொண்ட போதிலும், அவைகள் நிரந்தரமாகப் பாண்டியரின் மேலாண்மையினை ஏற்றுக் கொள்ளவில்லை; அவர்கள் அடிக்கடிப் பாண்டியருக்கடங்காது தனியாட்சி மேற்கொள்வதில் முனைந்து நின்றனர். அவர்களை அடக்கியொடுக்குவதில் பாண்டியர் தமது நேரத்தையும் வலிமையையும் செலவிட வேண்டியிருந்தது.

அடுத்து, குறுநில மன்னர் பலர் புடைசூழ புகழ்ப் பரணி பாடி வந்த பல்லவர் என்னும் வல்லவருடனும் இவர்கள் அடிக்கடிப் போரிட வேண்டியிருந்தது. இதன் காரணமாகப் பாண்டிய

அரசு பேரரசாக வளர இயலவில்லை. இவர்களது அரசு மதுரையிலிருந்து கன்னியாகுமரி வரையிலேயே பரவியிருந்தது. அடுத்து, பாண்டிய அரசு பேரரசாகாமல் பல்லவர்கள் தடைக்கல்லாக நின்றனர். முற்காலப் பாண்டியர் தமது பிற்பகுதியில் பல்லவர், சோழர், கொடும்பாளூர் வேளிர் முதலானோர் எதிர்ப்பையும் சமாளிக்க வேண்டியிருந்தது.

இவ்வளவு தடைகளுக்கும் இடையில் பாண்டியர் பெரு முயற்சியும் வலிவும் கொண்டு, பகை கொன்று உயர்ச்சி பெற்றனர். வரலாற்றில் தமது முத்திரையைப் பதித்தனர். இறுதியில் புத்துணர்ச்சியும் புதுப் பொலிவும் பெற்று எழுந்த சோழரிடம் தோல்வி கண்டனர். முற்காலப் பாண்டிய அரசு பிற்காலப் பாண்டியப் பேரரசைப் போன்று அவ்வளவு கீர்த்தி மிக்கதாக விளங்கவில்லை என்பதனை மட்டும் நாம் நினைவிற் கொள்ளுதல் வேண்டும்.

# 8. சோழராதிக்கம்

## (அல்லது)

## கி. பி. 966 முதல் கி. பி. 1190 முடிய ஆண்ட பாண்டியர்கள்

**பாண்டியர் வீழ்ச்சி**

'வாழ்வு ஒரு காலம், தாழ்வு ஒரு காலம்' தோற்றம் என்று ஒன்றிருந்தால் மறைவு என்று ஒன்றிருக்கும். இது இயற்கையின் நியதி. இதற்குப் பாண்டியப் பேரரசு மட்டும் விதிவிலக்காக இருத்தல் இயலாது. ஒரு காலத்தில் ஆற்றல் மிகப்பெற்று, மாற்றானின் மண்டைக் கனத்தைக் குறைத்து, மதிப்பைச் சிதைத்து, மண்டியிட வைத்து, அண்டை நாடுகளில் தனது மேலாண்மையினை நிறுவி, ஓங்கு புகழ்பெற்ற பாண்டியப் பேரரசின் கால்கோளும் (அஸ்திவாரமும்) காலப்புயலில் ஆட்டம் காண ஆரம்பித்தது. விதி தன் விளையாட்டை வீரபாண்டிய னுக்குப்பின் கட்டவிழ்த்து விட்டது. முழுமதி தேய்ந்து, இருள் பாய்ந்ததுபோல், பாண்டிய நாட்டில் எவ்வித ஆக்கமுமில்லாத ஒரு தேக்கநிலை ஏற்பட்டது. பாண்டியர் தங்களது ஆண்மை குறைந்து, மேன்மை குலைந்து, உரிமையிழந்து காணப்பட்டனர்; இந்தக் கால கட்டத்தில் சோழரது படையெழுச்சி என்கின்ற சூறைக்காற்று பாண்டியரது பெருமை என்கின்ற கோபுரக் கலசத்தைக் குப்பை மேட்டிற்குத் தூக்கியெறிந்தது. குண்டடி பட்ட குருவிக் குஞ்சென பாண்டிய அரசு சோழரது காலடியில் வீழ்ந்தது. வலிமை குன்றி, உரிமையின்றித் தவித்த பாண்டியர் சோழவேந்தர்க்கடங்கிய திறை செலுத்தும் சிற்றரசர்களாக மாற்றப்பட்டனர். பாண்டியரும் தம் பழம்பெருமையினை இழந்து விட்டனர்.

**பாண்டியரது நாட்டுப் பற்று**

இவ்விதமானதொரு இக்கட்டான சூழ்நிலையில்கூட, நாட்டுப் பற்றிலே நாட்டங்கொண்ட பாண்டியர், சோழருக்குக்கீழ் அடிமைகளாக, மிடிமைகளாக அடங்கிக் கிடக்க விரும்பவில்லை. தனியா விடுதலை வேட்கைகொண்டு, வீறுகொண்டு, வெகுண்

டெழுந்தனர்; சோழருக்கெதிராகக் கிளர்ச்சியைத் தொடங்கினர். போர் முரசு கொட்டினர்; தோள் தட்டினர். இவ்வாறு சோழருக்கெதிராகப் பாண்டியர்களால் உயர்த்தப்பட்ட புரட்சிக்கொடி ஏறத்தாழ இருநூறு ஆண்டுகள் இறக்கப்படவில்லை. ஈண்டுநாம் பேராதிக்கச் சோழர்களின் பிடியில் சிக்கித் தவித்து, சிற்றரசராகச் சிதறிய பாண்டிய வேந்தர்களின் வரலாற்றினைக் காண்போம்.

முத்தமிழ் வேந்தர் மூவருள், முத்துவிளைவித்தவர், பழமை மிக்கவர், சங்கம் வைத்தவர், மொழி வளர்த்தவர் என்றெல்லாம் போற்றப்பெறும் பெருமைக்குரிய பாண்டியர் இக் கால கட்டத்தில் புகழ்மங்கிக் கிடந்தனர். பகலுக்குப்பின் தோன்றுகின்ற இரவுபோன்று, இவர்களது வரலாறும் இருண்டே காணப்படுகின்றது.

### ஆதாரங்கள்

இக் கால கட்டத்தில் இவர்களைப்பற்றிய வரலாற்றினை அறிந்துகொள்ளத் தக்க பாண்டிய மன்னர் செப்பேடுகளோ, கல்வெட்டுகளோ பாண்டிய நாட்டில் யாண்டும் காணப்படவில்லை; இவர்களை அடக்கி ஆண்டு வந்த சோழர்களின் சாசனங்களிலோவெனின், இவர்களின் பெயர்கள் மட்டும் காணப்படுகின்றனவேயன்றி, இவர்களைப்பற்றிய வேறு விவரங்கள் யாதும் கூறப்படவில்லை. எனவே, இப் பாண்டிய வேந்தர்களைப்பற்றிய முறையான, தெளிவான, விரிவான வரலாற்றினை நாம் அறிந்து கொள்ளவும், இவர்கட்கிடையேயான உறவு முறையினைத் தெரிந்துகொள்ளவும் இயலவில்லை. இருப்பினும் சோழர் சாசனங்களின் துணை கொண்டு, இவர்களைப்பற்றிய சில செய்திகளைக் காண்போம்.

### இராசராச சோழனுக்கு முன்னராண்ட சோழர் காலம்

விசயாலய சோழன் முதல், முதலாம் இராசராசன் ஆட்சிக் காலத் தொடக்கம் வரை சோணாட்டினையாண்டு வந்த மன்னர்களின் ஆட்சிக் காலத்தில் பாண்டிய நாடு முழுமையும் சோழராட்சிக்குட்படவில்லை. இதன் காரணம் யாதெனின், இச் சோழ மன்னர்கள் இராசராசனைப் போன்று பெருவீரம் படைத்தவர்களல்ல. சோழ வேந்தர்களுள் பாண்டியநாடு முழுமையும் கைப்பற்றி, அதனைத் தன்னாட்டுடன் இணைத்துக் கொண்ட பெருமை, முதன் முதலாக இராசராசனையே சாரும். முதலாம் பராந்தகன் பாண்டிய வேந்தனை எவ்விதம் 'மதுராந்தகன்' எனப் பெயர் பெற்றானென்பதனை நாம் முன்பே கண்டோம்.

முதலாம் பராந்தகனுக்குப் பின்னர் சோழர் அரியணையை அலங்கரித்தவன் கண்டராதித்த சோழன் ஆவான். இவன், 'மதுரை கொண்ட ராஜகேசரி' என்னும் விருதுப் பெயரினைப் பெற்றிருந்தான். இவன் தனது ஆட்சிக் காலத்தில் பாண்டிய நாட்டின்மீது படையெடுத்து வென்றதாகத் தெரியவில்லை. எனவே, இவன் தனது தந்தையின் காலத்தில் படைத்தலைமை யேற்று, பாண்டியரை வென்றதாகக் கொள்ளலாம். அடுத்து, மதுராந்தக உத்தம சோழன் என்ற சோழவேந்தனின் சிறப்புப் பெயரினைப் பார்க்கும்போது, இவனும் பாண்டிய நாட்டினை வென்றானா? எந்த வேந்தனை வென்றான்? என்ற வினாக்கள் எழுகின்றன. இந்த வினாக்களுக்கு விடையளிக்கத் தக்க ஆதாரங்கள் நமக்குக் கிடைக்கவில்லை. ஒருவேளை இவன் தனது தந்தையினது பட்டத்தினைத் தானும் இணைத்துக் கொண்டிருக்கலாம். அடுத்து, இரண்டாம் ஆதித்த சோழனும் பாண்டியரை வென்று மதுரையைக் கைப்பற்றிய செய்தியினை நாம் முன்பே கண்டோம். இருப்பினும் இவனது வெற்றியினால் பாண்டிய நாட்டில், சோழரின் மேலாண்மை முழுவதும் செலுத்தப்படவில்லையென்பது உறுதி.

### இராசராசனது காலம்

மாமன்னன் முதலாம் இராசராச சோழனின் (கி. பி. 985-1012) ஆட்சிக் காலத்தில்தான் பாண்டியநாடு முழுமையும் சோழராட்சிக்குட்பட்டது. இவ் வேந்தனது கல்வெட்டுகளை நாம் ஆய்ந்து பார்க்குங்கால், இவன் பாண்டிய நாட்டின்மீது மேற்கொண்ட படையெழுச்சி மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த நிகழ்ச்சியாகப் போற்றப்படுவதனை நாம் அறியலாம். இதனை 'செழியரைத் தேசுகொள் கோவிராச கேசரிவர்மன்' என்று இராசராசன் மெய்க்கீர்த்திப் பகுதியில்[1] கூறிக்கொள்வதனாலும் இனிது விளங்கும். இராசராச சோழன் அமரபுயங்கன் என்னும் பாண்டியனை வென்று பாண்டிய நாட்டினைக் கைப்பற்றியதாக அவனது கல்வெட்டுகள் உணர்த்துவதால் இவ் வேந்தனைப் பற்றி ஒரு சிறிது காண்போம்.

[1] தனது வெற்றி மேம்பாடுகளையும் சாதனைகளையும் முறையாகத் தொகுத்து கல்வெட்டுகளில் வெளியிடுவதால் மெய்க்கீர்த்தி எனப்படுகிறது. இராசராசன் தனது ஆட்சியாண்டுகளில் முறையே நடைபெற்ற போர்களை முறையே வெளியே வெளிவந்த கல்வெட்டுகளில் முறைப்படி விளக்கமாகக் குறித்துள்ளான். இம் முறையினை முதன் முதலில் புகுத்தியவன் முதலாம் இராசராசனே யாவான். இதனை ஒரு வரலாற்று ஏடென்றே நவிலலாம். இவனது மெய்க்கீர்த்தி 'திருமகள்போல'—என்னும் தொடக்கத்தினைக் கொண்டது. ஒவ்வொரு மன்னனும் தனது மெய்க்கீர்த்தியினை வெவ்வேறு அடிகளைக்கொண்டு தொடங்குகின்றனர். இதனால் ஒருவருடைய மெய்க்கீர்த்தியினை மற்றொருவருடைய மெய்க்கீர்த்தியினின்றும் வேறுபடுத்தியறியலாம்.

**அமரபுயங்கன்**

இப் பாண்டி வேந்தன் யாருடைய மைந்தன் என்பதும், எந்த ஆண்டில் அரசு கட்டிலேறினன் என்பதும், இவன் யாருக்குப்பின் அரியணையேறினனென்பதும் நம்மால் அறிந்து கொள்ள இயலவில்லை. திருவாலங்காட்டுச் செப்பேட்டின்[1] துணை கொண்டு அமரபுயங்கன் என்னும் பாண்டிய நாட்டு வேந்தன் முதலாம் இராசராச சோழனால் வெல்லப்பட்டன னென்னும் செய்தியினை நாம் அறிந்து கொள்கிறோம். இப் பாண்டிவேந்தன் சேரர்களுடன் நட்பு பூண்டிருந்தனனென்பதும் கல்வெட்டுச் செய்தியினாலினிது அறியப்படுகின்றது. அக்காலை அமரபுயங்கனின் சமகாலத்தவனாக இருந்து சேரநாட்டினை ஆண்டு வந்தவன் பாஸ்கர இரவிவர்மன் திருவடி (கி. பி. 964-1021) ஆவான்.

இராசராசனால் சேரநாட்டிற்கு அனுப்பப்பட்ட தூதுவன், சேரமன்னனால் அவமதிக்கப்பெற்று, இழிவாக நடத்தப்பெற்று சிறைவைக்கப் பெற்றதால் சோழப்படை சேரநாட்டின்மீது படையெடுத்தது. இப் படைத்தலைவனாகப் பஞ்சவன் மாராயன் என்ற இராசேந்திரன், இராசராச பெருமன்னனால் அனுப்பப் பட்டான். சோழப் பெரும்படை பாண்டிநாட்டின் வழியாகச் சேர நாட்டினை நோக்கிச் சென்றது. சோழப்படை பாண்டி நாட்டின் எல்லையில் நுழைந்ததற்கு அமரபுயங்கன் கடும் எதிர்ப்பு தெரிவித்தான். இதன் காரணமாகப் பாண்டியப் படைகளும் சோழப்படைகளும பெரும்போர் நிகழ்த்தின. இறுதியில் அமரபுயங்கன் வெற்றி வாய்ப்பினை இழந்தான். வெற்றி கொண்ட சோழர் விழிஞம் என்னும் துறைமுகத்தையும் கைப் பற்றி எந்தவிதத் தடையுமின்றிச் சோழப்படை சேரநாட்டினை நோக்கிச் சென்றது. வெற்றியும் பெற்றது. பாண்டிய நாடும் சேரநாடும் சோழரால் கைப்பற்றப்பட்டன. பாண்டியநாடு இராசராசனது ஆட்சிக் காலத்தில் இராசராச மண்டலம் அல்லது இராசராசப் பாண்டியநாடு[2] எனப் பெயரினைப் பெற்று சோணாட்டுடன் இணைக்கபபட்டது. இராசராசனின் கல் வெட்டுகளும் பாண்டிய நாட்டின் பல இடங்களில் காணப்படு கின்றன.

இராசராசனால் அமைக்கப்பட்ட தஞ்சைப் பெருவுடையார் கோயில் கல்வெட்டுகளில் இவ் வேந்தன் 'மலைநாட்டுச் சேர மானையும் பாண்டியர்களையும் எறிந்து கொண்ட பண்டாரம்'

[1] S.I.I. Vol. III, No. 205, Verses 76-79.
[2] A.R.E. 1917, pp. 106-7.

என்று குறிக்கப் பெற்றிருத்தலின் இவன் மறுபடியும் பாண்டி வேந்தர் சிலரை[1] வென்றிருத்தல் வேண்டுமென்பது தெளிவாகிறது. இதனால் இராசராசனது ஆட்சிக் காலத்தில் பாண்டிய நாட்டில் பல சிற்றரசர்கள் ஆண்டு வந்தனரென்பதும், அவர்கள் மீது இராசராசன் ஒரு தடவைக்குமேல் படையெடுத்தான் என்பதும் அவர்களுக்கு அமரபுயங்கன் தலைவனாக விளங்கியிருத்தல் வேண்டுமென்பதும் உய்த்துரைக்கப்படுகின்றது. பாண்டியரை வென்றடிப்படுத்திய இராசராசன் 'பாண்டிய குலாசனி' என்னும் சிறப்புப் பெயர் பெற்றான். பெரும் புகழ் பெற்றான். 'பாண்டிய குலாசனி வளநாடு' என்ற ஒரு அரசியற் பிரிவும் இராசராசனது சிறப்புப் பெயரினைக் கொண்டு ஏற்படுத்தப்பட்டது.[2]

இராசராசன் பாண்டிய நாட்டினை வென்றடிப்படுத்திய பின்பு பஞ்சவன் மாதேவி என்ற பாண்டிய இளவரசியை மணஞ் செய்து கொண்டான். இவ் வேந்தனது பத்தாமாட்சியாண்டிலிருந்து வெளிப்பட்ட கல்வெட்டுகளில் பஞ்சமாதேவியார் குறிக்கப்படுகின்றார்.[3]

இவ் வேந்தனது இருபத்தெட்டாவது ஆட்சியாண்டுக் கல்வெட்டில், இவனது தேவியருள் ஒருத்தியான வேம்பன் சிருடையார் என்ற மீனவன் மகாதேவியார்[4] நன்கொடையளித்துள்ளதாகக் குறிக்கப் பெற்றிருத்தலின், இவன் மீனவன் மாதேவியார் என்ற மற்றொரு பாண்டிய இளவரசியையும், தனது அரசியாக்கிக் கொண்டானென்று தெரிகிறது.

இவ் வேந்தனது இருபத்தைந்தாம் ஆட்சியாண்டினதாகிய தஞ்சைக் கோயில் கல்வெட்டொன்று[5] இராசராச வள நாட்டில் வரிசெலுத்தாதோர் பட்டியல் ஒன்றினைக் கூறுவதாலும், இராசராசனின் மகனான இராசேந்திரன் அரியணையேறும்போது பாண்டிய நாட்டின் ஆட்சிப் பொறுப்பினையும், தந்தையிடமிருந்து பெற்றுக் கொண்ட காரணத்தாலும், இராசராசனின் ஆட்சிக்கால முழுமையும் பாண்டிய நாடு சோழராட்சிக்குட்பட்டதனை அறியலாம். மேலும், இராசராசன் தனது பதினேழாமாட்சியாண்டு முதல் இருபதாமாட்சியாண்டு முடிய ஈழப்போரில்

1 S.I.I. Vol. ii Intro. pp. 2–3 (Venkayya).
2 No. 455 of 1908; 672 of 1909 (691 and 538, Thiruchirappalli District in Sri. V. Rangacharya's Inscriptions of the Madras Presidency'.)
3 No. 254 of 1907.
4 A.R.E. 1909. P. 91.
5 S.I.I. Vol. iii, No. 9.

ஈடுபட்டிருந்தான். அதுபோழ்து பாண்டிய நாட்டினைத் தனது ஈழ வெற்றிக்கு அடித்தளமாகக் கொண்டிருந்தான்.[1]

இதுகாறும் கூறியவற்றுன் இராசராசனது ஆட்சிக் காலத்தில் பாண்டிய நாட்டினை அமரபுயங்கன் ஆண்டு வந்தானென்றும், அவன் அஞ்சாமையும், வீரமும் கொண்டிருந்த காரணத்தால்தான் சேரநாடு நோக்கிச்சென்ற சோழர் படையினை வழிமறித்துப் போரிட்டானென்றும் அறிகிறோம். இவன் இப் போரில் வெற்றி வாய்ப்பினை இழந்த போதிலும் சோழருக்கு அடிபணியாது அஞ்சா நெஞ்சத்துடன் போரிட்டானென்பது போற்றத் தக்கதாகும். மிக விரைவாக வளர்ந்து வரும் சோழ ராதிக்கத்தினை, இவன் தடுத்து நிறுத்த வேண்டுமென்ற உயரிய நோக்கத்தினுலேயே சோழர்களுடன் போரிட்டான் எனக் கொள்ளலாம்.

**இராசேந்திரனது காலம்**

முதலாம் இராசராசப் பெருமன்னன் தனது ஆட்சியின் இறுதிக் காலத்தில் தனது மைந்தனுன முதலாம் இராசேந்திர சோழனுக்கு இளவரசுப் பட்டம் கட்டி விட்டான். கி. பி. 1012 முதல் இராசேந்திரனும், தனது தந்தையுடன் இணைந்த ஆட்சியினை (Joint Rule) மேற்கொண்டு, சோணுட்டினை ஆண்டு வந்தான். இராசராசனின் ஆட்சிக் காலத்திலேயே பாண்டிய நாடு முழுமையும், சோணுட்டுடன் இணைக்கப்பட்டு, இராசராச பாண்டி மண்டலம் எனப் பெயரிடப்பட்டதனை, நாம் முன்பே கண்டோம். எனவே, இராசேந்திரன் அரியணையேறும் போது, சோணுட்டுடன் இணைக்கப்பட்ட பாண்டிய நாட்டிற்கும் மன்னனுகப் பதவியேற்றுனென்பது, சொல்லாமலேயே விளங்கும். இராசேந்திரனது ஆட்சியாண்டுக் கல்வெட்டுகள் பாண்டிய நாட்டின் பகுதிகளான திருநெல்வேலி, கன்னியாகுமரி முனை (Cafe Comoria) ஆகிய இடங்களில் காணப்படுகின்றன.[2] இராசேந்திரன் அப் பகுதிகளைத் தான் வெற்றி கொண்டதாக யாண்டும் கூறிக் கொள்ளாத காரணத்தினுல் பாண்டிய நாட்டின் ஆட்சிப் பொறுப்பினை இராசேந்திரன் தனது தந்தையிடமிருந்து பெற்றுக் கொண்டனனென்பது விளங்குகிறது.

இராசேந்திரனது சாசனங்களின் துணை கொண்டு அவனுக்கும் பாண்டியர்களுக்குமிருந்த தொடர்பினை நாம்

[1] J.R.A.S. 1913, pp. 523–24.
[2] Cf. A.R.E. 1917, p. *107*; Contra Mr. K.V.S. Iyer, p. **151** of Ancient Deccan.

நன்குணரலாம். பாண்டியர் இராசராசனால் வென்றடக்கப் பட்ட போதிலும் அவர்கள் தொடர்ந்து சிற்றரசர்களாகவே சோழருக்குட்பட்டு பாண்டிய நாட்டினை ஆண்டு வந்தனர். தஞ்சை மாவட்டத்தின்கண் திருவிசலூர் என்னும் ஊரில் காணப்படுகின்ற இராசேந்திர சோழனின் மூன்றாமாட்சி யாண்டுக் கல்வெட்டில்[1] சீவள்ளுவர் (Sri Valluvar) என்னும் பாண்டி வேந்தனின் தேவியார், திருவிசலூர்க் கோயிலுக்கு நிவந்தங்களித்துள்ள செய்தி குறிப்பிடப்பட்டுள்ளதால் இதனை நாம் அறியலாம்.

**சோழ - பாண்டியர்**

சிற்றரசர்களாகப் பாண்டி நாட்டினை ஆண்டு வந்த பாண் டியர், தாம் வலிமையெய்தியகாலையும், சோழ வேந்தர் அண்டை நாட்டு வேந்தருடன் போர் மேற்கொண்டிருந்தபோதும், சோழ ருடன் முரண்பட்டு திறை செலுத்தாது தமது தணியாத தனி யாட்சி வேட்கையினை வெளிப்படுத்துதல், வழக்கமான செய லாம். இதுபோன்று இராசேந்திரனது ஆட்சியின் ஆரம்ப காலத்தும், பாண்டி வேந்தன் சோழருடன் முரண்பட்டு, நாட்டுப்பற்று கொண்டு கிளர்ந்தெழுந்தான். இதனைக் கண்ட இராசேந்திரன் பாண்டி நாட்டின்மீது போர் தொடுத்தான். பாண்டி வேந்தனோ சோழர்க்கஞ்சி மலைய மலையில் ஒளிந்து கொண்டான். இதனைக் கண்ட இராசேந்திரன் பாண்டிய நாட்டின் சிறப்புக்குக் காரணமாகிய வெண் முத்துக்களை மிகுதி யான அளவில் கவர்ந்து கொண்டு தனது மகனைப் பாண்டிய நாட்டின் பிரதிநிதியாக நியமனஞ் செய்து, 'சோழ–பாண்டியன்' எனும் பட்டத்துடன் ஆண்டு வருமாறு, ஏற்பாடுகளைச் செய்து விட்டுச் சோணாடு மீண்டான்.

சோழர் படைக்கஞ்சி மலைய மலையில் ஒளிந்து கொண்ட பாண்டி வேந்தன் யாவன்? என்பதனை அறிந்து கொள்ளத் தக்க சான்றுகள் இதுகாறும் கிடைக்கப் பெறவில்லை. இவ் வேந்தன் சீவல்லபனாகவோ அல்லது அவனுக்குப் பின்பு பட்டம் சூடிக் கொண்ட பாண்டி வேந்தனாகவோ இருத்தல் வேண்டுமென்பது உறுதி.

**சுந்தர சோழ பாண்டியன்**

இவ்வாறு முதல் சோழ பாண்டிய பிரதிநிதியாக இராசேந்திர சோழனால் நியமிக்கப்பட்டவன், அவனது மகனான சுந்தர சோழ பாண்டியனாவான். கடைச்சங்க காலத்திற்குப் பின்னர் பாண்டிய

[1] 46 of 1907.

நாட்டினையாண்டு வந்த பாண்டி வேந்தர் மாறவர்மன், சடைய வர்மன் என்னும் பட்டங்களை, ஒருவர் பின் ஒருவராக மாறி மாறிப் புனைந்து கொண்ட வழக்கத்தினையொட்டி, சுந்தர சோழ-பாண்டியனும், சடைய வர்மன் எனும் பட்டப் பெயருடன் பாண்டிய நாட்டின் ஆட்சிப் பொறுப்பினையேற்றான். பிற்காலச் சோழ மன்னர்களும் தங்களது பெயருக்கு முன்னால் இராசகேசரி, பரகேசரி என்னும் பட்டங்களை, ஒருவர் பின் ஒருவராக மாறி மாறிப் புனைந்து கொண்டனர் என்பதும் ஈண்டு நாம் நினைவிற் கொள்ளத்தக்கதாகும்.

இவன் கி. பி. 1018ஆம் ஆண்டில் மதுரையம்பதியில் அரசப் பிரதிநிதியாக நியமிக்கப் பெற்றிருத்தல் வேண்டுமென் பதனைத் திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள மன்னார்கோயிலில் காணப்படுகின்ற கல்வெட்டால் அறியலாம். கி. பி. 1018-ல் நியமனம் செய்யப்பெற்ற இவன், ஏறத்தாழ இருபத்து மூன்றாண்டுகள் தொடர்ந்து ஆட்சி செலுத்திய பின் கி. பி. 1040-ல் தனது ஆட்சிப் பொறுப்பினின்றும் விலகியிருத்தல் வேண்டுமென்பதனைக் கல்வெட்டுகள் உணர்த்துகின்றன. ஆராய்ச்சியறிஞர் திரு. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியார் போன்ற வரலாற்றறிஞர்களும் இக் கருத்தினையே கொண்டுள்ளனர்.

சடையவர்மன் சுந்தர சோழ-பாண்டியன் முதலாம் இராசேந்திர சோழனால் பாண்டிய நாட்டின் அரசப் பிரதிநிதி யாக (Viceroy) நியமிக்கப்பட்ட செய்தி புதுச்சேரிக்கண்மையி லுள்ள திருவாண்டார் கோயிலில் காணப்படுகின்ற இராசேந்தி ரனது பத்தாமாட்சியாண்டுக் கல்வெட்டில்[1] 'பாரது நிகழப் பாண்டி மண்டலத்து மதுரையில் மாளிகை எடுப்பித்துத் தன் மகன் சோழப் பாண்டியன் என்று அபிடேகஞ் செய்து தண்டார் சாலைக் கலமறுத்த கோப்பர கேசரி' என்று குறிப் பிடப்பட்டுள்ளதால் உறுதி பெறுகிறது. மேலும், இக் கல் வெட்டினைக் கொண்டு முதலாம் இராசேந்திரன் தெற்கே காந்தளூர் சாலை வரையில் படையெடுத்துச் சென்றானென் பதனையும் அறியலாம்.[2] இதனால் சோழரது ஆதிக்கம் தென் கோடி வரையில் நிலைநாட்டப்பட்டதனை அறியலாம்.

### இராசாதிராசனது காலம்

இராசேந்திரனது பாண்டிய நாட்டின் படையெழுச்சிக்குப் பின்பும் ஏறத்தாழ அரை நூற்றாண்டு காலம் பாண்டிய நாட்டில்

[1] 363 of 1917.
[2] A.R.E. 1918. p. 144 and Appendix. B.

சோழ பாண்டியப் பிரதிநிதிகளின் ஆட்சி நீடித்தது. இராசேந்திரனுக்குப் பின் சோணாட்டரியணையிலமர்ந்த முதலாம் இராசாதிராசனது ஆட்சிக் காலத்திலும் தொடர்ந்து இவ் வழக்கம் பின்பற்றப்பட்டது. முதலாம் குலோத்துங்க சோழன் அரியணையேறும் வரையும் இம் முறை நீடித்ததாக நாம் அறிகிறோம். சாடவர்மன் சுந்தரசோழ பாண்டியனின் கல்வெட்டுகள் மதுரை, திருநெல்வேலி மாவட்டங்களின் பல பகுதிகளிலும், புதுக்கோட்டைப் பகுதிகளிலும், தென் திருவாங்கூரிலும் பெருமளவில் கிடைத்துள்ளன. இவ் வேந்தனது ஐந்து, ஒன்பது, பதின்மூன்றுமாட்சியாண்டுக் கல்வெட்டுகள் அண்மைக் காலத்தில் மதுரைக்கருகாமையிலுள்ள அணையூர் என்னுமிடத்தில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இக் கல்வெட்டுகளுள் ஒன்று இவ் வேந்தனது ஆட்சிக் காலத்தில் படைத்தலைவர் அல்லது படைப்பிரிவின் தலைவர்கள் (Heads of Regiments) கோயில் சம்பந்தப்பட்ட விவகாரங்களையும் கவனித்து வந்தனரென்பதனைக் குறிப்பிடுகின்றது.[1]

இவ் வேந்தனின் பத்தாமாட்சியாண்டில் வெளியிடப்பெற்ற செப்பேடு ஒன்று[2] கி.பி. 1958-ல் கோயில்பட்டி வட்டத்திலுள்ள பாண்டவர் மங்கலத்தில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. சோழப் பாண்டியப் பிரதிநிதிகளுள், செப்பேட்டினை வெளியிட்டுள்ள பெருமை இவனையேச் சாரும். இவனும் ஒரே ஒரு செப்பேட்டினை மட்டுமே வெளியிட்டதாக, இதுவரை நமக்குக் கிடைத்துள்ள சான்றுகளாலறியலாம். இச் செப்பேட்டின் துணைகொண்டு, பாண்டவர் மங்கலம் பஞ்சவன்மாதேவிச் சதுர்வேதி மங்கலமென அழைக்கப்பட்டதனை அறியலாம்.

### பெயர் மாற்றம்

இவ் வேந்தனது ஆட்சிக் காலத்தில் பாண்டிய நாட்டில் முன்பு வழக்கிலிருந்த ஊர், கோயில், தெரு ஆகியவற்றின் பெயர்கள் மாற்றப்பட்டன. இப் பெயர்கள் அனைத்தும் பாண்டியரின் அடிச்சுவட்டினையழித்து, சோழரின் பெயரையும் புகழையும் நிலை நாட்டுதல் பொருட்டு, மாற்றப்பட்டதாகத் தோன்றுகிறது. பாண்டிய நாட்டிலுள்ள மன்னார்கோயில் தனது பாட்டனின் நினைவாக இராசராச சதுர்வேதி மங்கலம் எனப் பெயரிடப்பெற்றது. இவ்வூர் பார்ப்பனர்களுக்குப் பிரமதேயமாக வழங்கப்பெற்றிருத்தல் வேண்டுமென்று கருதலாம். இவ் வூரிலுள்ள கோயிலும், தனது தந்தையின் பெயரால்

[1] Indian Archaeology. 1961-62. p. 82.
[2] A.R.E. 1958-59. p. 16.

இராசேந்திர சோழ விண்ணகர் எனப் பெயரிடப்பெற்றது.[1] 'சேர்மாதேவி' என்னும் பண்டைய பெயர் நிகரிலி சோழ சதுர்வேதி மங்கலமென்று தனது பாட்டனும் முதலாம் இராசாதிராசனின் பெயரின் நினைவாக மாற்றப்பட்டு, அவ் வூரிலுள்ள கோயிலின் பெயரும் 'சோழேந்திர சிம்மேச்வரம்' எனப் பெயரிடப்பட்டது.[2] திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள பெருங்குளம், உத்தம சோழ நல்லூர் எனப் பெயரிடப்பட்டது.[3] இப்படியாகப் பாண்டியர் காலத்தில் நிலவி வந்த பெயர்கள் பல, சோழ பாண்டியப் பிரதிநிதிகளின் காலத்தில், சோழர் பெயர் கொண்டதாக மாற்றப்பட்டது. இதனால் புதிதாக ஆட்சியைக் கைப்பற்றுவோர் தங்களது ஆட்சியின் நினைவாகத் தங்களது பெயர்களை இடுகின்ற வழக்கம், இக் காலத்தில் மட்டுமின்றி அக் காலத்தும் பின்பற்றப் பட்டதனையறியலாம்.

பாண்டிய நாட்டின்கண் சோழபாண்டியப் பிரதிநிதிகளை நியமித்து சோழரின் மேலாண்மையினை நிறுவிய சோழ வேந்தர்கள், ஆங்கு தமது நிலையான பெரும் படையினைப் பல விடங்களில் நிறுத்தி, பாண்டியர் சோழராட்சிக்கெதிராகப் புரட்சிக் கொடியுயர்த்தாமல் தடுத்தனர் என்பதனை முன்பே கண்டோம். சாடவர்மன் சுந்தர சோழ பாண்டியனும் ஆற்றூர் பெருங்குளம் என்னும் ஊரில் வலிமைமிக்க சோழப்படையொன்றினை நிறுத்தியிருந்தான். அப் படையினைச் சார்ந்த 'சுந்தர-சோழ பாண்டியத் தெரிந்த பாளையேறல்' (Sundara-Sola pandyatterinde-palaiyeral) என்ற பெயர் கொண்ட படை வீரனொருவன் ஆற்றூர்-பெருங்குளம் கோயிலுக்கு நன்கொடையளித்துள்ளான் என்ற செய்தியும் கல்வெட்டுகளால் அறியப்படுகின்றன.

**சேர நாட்டிற்கும் பிரதிநிதி**

சோழ - பாண்டியனென்னும் பெயர் புனைந்து பாண்டிய நாட்டின் அரசப் பிரதிநிதியாக நியமிக்கப்பட்ட சாடவர்மன் சுந்தரபாண்டியனிடம் சேரநாட்டின் ஆட்சிப் பொறுப்பும் இராசேந்திரனால் வழங்கப்பட்டது. சாடவர்மன் சுந்தர சோழ பாண்டியனின் கல்வெட்டுகள் சேரநாட்டின் பகுதிகளில் காணப்படுதலின் இவன் பாண்டிய, சேரநாட்டின் பிரதிநிதியாக நியமிக்கப்பட்ட செய்தி தெளிவாகிறது.

1 S.I.I, XIV. No. 144.
2 Ibid. No. 137.
3 Ibid. No. 131.

அம்பாசமுத்திரத்திற்கருகிலுள்ள மன்னார்குடியில் கிடைத்துள்ள இவ் வேந்தனது பதினான்காட்சியாண்டுக் கல்வெட்டுகள் சிலவற்றுள் இராசராசன், இராசசிம்மன் முதலான சேர வேந்தர்களின் பெயர்கள் குறிப்பிடப் பெற்றுள்ளமையாலும், சேர வேந்தனை இராச சிங்கர் என்பான் தனது பதின்மூன்று மாட்சியாண்டில் (ஏறக்தாழ கி பி. 1033-34-ல்) பாண்டி நாட்டு மன்னார்கோயிலில் இராசேந்திர சோழ விண்ணகர பரம சுவாமிகள் என்னும் விஷ்ணு கோயில் ஒன்றினை அமைத்துள்ளதாலும்,[1] மேலும் பல கல்வெட்டுகளில் இராசசிங்கனுடைய பெயர் குறிக்கப் பெற்றுள்ளதாலும்,[2] நாஞ்சில் நாட்டின் கண்ணுள்ள சுசீந்திரம் 'சுந்தர சோழ சதுர்வேதி மங்கலமென்று அழைக்கப்பட்டுள்ளதாலும், விஷ்ணுவர்த்தனப் பேரரசனை சாளுக்கிய விசயாதித்திய விக்கியண்ணன் என்பான் சுந்தர சோழன் ஆட்சிக் காலத்தில் (கி. பி. 1029) நாகர்கோயிலுக்கருகிலுள்ள கோட்டாற்றில் இராசேந்திர சோழேச்சுரமுடைய மகா தேவர்க்கு நந்தா விளக்கிற்கு நிவந்தமளித்ததாக அக் கோயில் கல்வெட்டில் கூறப்பட்டுள்ளதாலும், சடையவர்மன் சுந்தர பாண்டியன் பாண்டிய நாட்டுடன் சேரநாட்டிற்கும் அரசப்பிரதிநிதியாக அமர்த்தப்பட்டான் என்பது உறுதி பெறுகிறது. இவன் சேரநாட்டின் பிரதிநிதியாகவும் அமர்த்தப் பெற்றதால் 'வீர கேரளன்' எனவும் அழைக்கப் பெறுகிறான்.

மன்னார்கோயில் கல்வெட்டில் இராசராசப் பாண்டிய நாட்டினுள்ளடங்கிய முடிகொண்ட சோழ வளநாட்டிலுள்ள குறுமடை நாட்டைச் சேர்ந்த வெள்ளான், வகையிலுள்ள பிஞ்ஞனூர் என்னும் கிராமம் இராசசிங்கர் கட்டிய 'இராசேந்திர சோழ விண்ணகர்க்குத்' தேவதானமாக அளிக்கப்பட்ட செய்தி குறிக்கப்பட்டுள்ளது. சுந்தர சோழ பாண்டியன் தனது தலைமையிடமாக (Head quarters) இராசேந்திர சோழபுரத்தினைக் கொண்டிருந்தான். காஞ்சியிலும், மதுரைக்கருகிலும் சில சமயம் இவன் தங்கியிருந்ததாகவும் இக் கல்வெட்டுக் குறிக்கிறது.

முதலாம் இராசேந்திர சோழனால் நியமிக்கப்பட்ட இவன் முதலாம் இராசேந்திரனது புதல்வனும், அவனையடுத்து

1 Nos. 111, 113 and 114 of 1905.

2 இராசேந்திர சோழனின் இருபத்திரண்டாமாட்சியாண்டுக் கல்வெட்டு, (112 of 1905)

A.R.E. 1905; Appendix B and E.I. Vol. XI P. 294; No 232 of 1916—சேரன் இராசசிங்க தேவனது தேவியர் கோயிலுக்களித்த நன்கொடையைக் குறிப்பிடுகின்றது.

3 S.I.I. XIV, No. 170.

சோணாட்டரியணையிலமர்ந்த முதலாம் இராசாதிராசனது ஆட்சியின் தொடக்க காலத்திலும், சில ஆண்டுகள் சோழ-பாண்டிய அரசப் பிரதிநிதியாக ஆட்சிபுரிந்ததாகக் கொள்ளலாம்.

அரச குடும்பத்தினர்கள் மகிழ்வுடன் பொழுது போக்குவதற்கான, கலை நிகழ்ச்சிகள் நடைபெறும் அரங்கம் ஒன்றினையும் கொண்ட, ஆடம்பரமான அரண்மனையொன்றினையும் இவன் பெற்றிருந்தான் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

**மாறவர்மன் விக்கிரம சோழ-பாண்டியன்**

சடையவர்மன் சுந்தர சோழ பாண்டியனுக்குப் பின் பாண்டிய நாட்டின் சோழ-பாண்டியப் பிரதிநிதியாக அமர்த்தப் பட்டவன் மாறவர்மன் விக்கிரம சோழ-பாண்டியனுவான். இவன் முதலாம் இராசேந்திரனின் புதல்வன். இவ் வேந்தனது கல்வெட்டுகள், திருநெல்வேலி மாவட்டத்தில் மட்டுமே காணப் படுகின்றன. மதுரை, இராமநாதபுரம் மாவட்டங்களில் இவனது கல்வெட்டுகள் காணப்பெறுமையின் காரணம் யாது? என விளங்கவில்லை. இவனது ஆட்சிக் காலத்தில் ஆற்றூர் இராசாதிராச-சதுர்வேதி மங்கலத்தின் பகுதியாகக் குறிக்கப் பட்டுள்ளது.[1] இவனது ஆட்சிக் காலத்தில் முதலாம் இராசாதிராசன் சோணாட்டின் வேந்தனாக அமர்ந்திருந்தான்.

விக்கிரம சோழ பாண்டியனின் கல்வெட்டுகள் இவனது இருபதாமாட்சியாண்டு முதல்தான் இடைக்கப் பெறுகின்றன, இவ் வேந்தனின் கடைசிக் கல்வெட்டு, இவனது இருபத்தைந்தாமாட்சியாண்டிற்கு முன் தேதியிட்ட இவனது கல்வெட்டுகள் யாண்டும் கிடைக்கப் பெறவில்லை. இவற்றினை நாம் நுண்ணிதின் ஆய்ந்து பார்க்குங்கால், இவன் ஏறத்தாழ இருபதாண்டுகள் சடையவர்மன் சுந்தர சோழ பாண்டியனுடன் பாண்டிய நாட்டின் இணைந்த அரசப் பகர ஆளுநராக ஆட்சிப்பொறுப்பினை யேற்றிருந்தானெனவும், இருபதாமாட்சியாண்டு முதல் இருபத்தைந்தாமாட்சியாண்டு முடிய, ஐந்து ஆண்டுக் காலம் தனது பெயரில் தான் மட்டும், தனித்து பாண்டிய நாட்டின் அரசப் பிரதிநிதியாக ஆட்சி புரிந்திருத்தல் வேண்டுமெனவும் கூறலாம்.

இவ் வேந்தனது இருபத்தைந்தாமாட்சியாண்டுக் கல்வெட்டு திருநெல்வேலி மாவட்டம் திருச்செந்தூர் வட்டத்திலுள்ள ஆத்தூரில் காணப்படுகிறது. சேரமாதேவியில் காணப்படுகின்ற இவனது கல்வெட்டொன்று, பராக்கிரம-நாராயணன் என்னும்

[1] Ibid 186.

படைத்தலைவன் (தண்டநாயகன்) நன்கொடையொன்று அளித்த தாகக் குறிப்பிடுகின்றது.[1] மேலும், சேரமாதேவியிலுள்ள கோயிலின் சுற்றுலை 'இராசாதிராசன் திருச் சுற்றுலை'யென வழங்கப் பெற்றதாகவும் இக் கல்வெட்டுணர்த்துகின்றது.

## சடையவர்மன் சோழ பாண்டிய தேவன்

சடையவர்மன் சோழ பாண்டியன் மாறவர்மன், விக்கிரம சோழ பாண்டியனுக்குப் பின்பு பாண்டி நாட்டின் அரசப் பிரதி நிதியாக அமர்த்தப்பட்டான். வீரராசேந்திரனின் மகனை இவன் சோழ வேந்தர்களாலனுப்பப்பட்ட, மூன்றாவது சோழ பாண்டியப் பிரதிநிதியாவான். கங்கை கொண்ட சோழனென அழைக்கப்பட்டவனும் இவனேயாதல் வேண்டும். இவ் வேந்த னுடைய ஒரு சில கல்வெட்டுகளே நமக்குக் கிடைத்துள்ளன. இவையனைத்தும் திருநெல்வேலி மாவட்டத்தில் மட்டுமே காணப்படுகின்றன. இவனது மூன்றுமாட்சியாண்டினதாகிய இரு கல்வெட்டுகள் வெளியிடப்பட்டுள்ளன.[2]

இவனது மூன்றுமாட்சியாண்டுக் கல்வெட்டொன்று சேர மாதேவியில் காணப்படுகின்றது, இக் கல்வெட்டினைக் கொண்டு இவன் இராசேந்திர சோழபுரம் என்னும் அரண்மனையில் அமர்ந்திருந்ததாகத் தெரிகிறது. சில நிலங்களுக்கு வரி விலக் களிக்க வேண்டுமென்று உத்தரவிடுகின்ற ஆணையொன்றினை, இவன் சோழ வேந்தனிடமிருந்து (நம் ஐயன்) பெற்றுக் கொண் டானென்று, கல்வெட்டுச் செய்தியொன்று[3] கூறுவதால், சோழ பாண்டியப் பிரதிநிதி சோணாட்டு வேந்தனின் ஆணைக்குட்பட்டு ஆட்சி செலுத்தியதாக அறியலாம்.

இவ் வேந்தனது இருபத்திநான்கு, இருபத்தைந்தா மாண்டுக் கல்வெட்டுகள், கன்னியாகுமரி மாவட்டம் சுசீந் திரத்தில் காணப்படுகின்றது.[4] இவனது இருபத்தைந்தா மாண்டுக் கல்வெட்டு, சோழ மண்டலத்தில் இராசாதிராச வள நாடு என்னும் பிரிவு ஒன்று இருந்ததாகக் கூறுகின்றது. இவ் வேந்தனது ஆட்சிக்காலம் எப்பொழுது தொடங்கி, எதுவரை நீடித்ததென்பதனை, அறுதியிட்டு உறுதியாகக் கூறவியலவில்லை. இவ் வேந்தனது கல்வெட்டுகளும் மாறவர்மன் விக்கிரம சோழ பாண்டியனின் கல்வெட்டுகளைப் போன்று மதுரை, இராமநாத

1 Ibid 189
2 S.I.I. Vol. XIV.
3 194,
4 S.I.I. XIV. Nos. 196—97.

புரம் ஆகிய மாவட்டங்களில் காணப் பெறாததன் காரணம் யாதென்று புரியவில்லை. ஒருவேளை இப் பகுதிகள் சோழநாட்டரசனின் நேரடியாட்சிக்குட்பட்டிருந்திருக்கக் கூடுமென்று கருதலாம்.

வீர இராசேந்திரனது மற்றொரு மகனான இராசேந்திர சோழன் என்பானும் 'சோழ-பாண்டியன்' என்னும் பட்டத்தினைத் தனது தந்தையிடமிருந்து பெற்றுக்கொண்டானெனத் தெரிகிறது.

## மாறவர்மன் பராக்கிரம சோழ-பாண்டியன்

இதுகாறும் நமக்குக் கிடைத்துள்ள ஆதாரங்களின்படி பராக்கிரம சோழ பாண்டியனே, சோழப் பேரரசர்களால் அமர்த்தப்பட்ட கடைசி சோழ பாண்டியப் பிரதிநிதியாவான். இவன் மாறவர்மன் என்னும் பட்டப் பெயருடன் பாண்டியப் பகுதிகளை ஆட்சி புரிந்து வந்தான். இவ் வேந்தனைப்பற்றிய கல்வெட்டுகள் நமக்கு அதிக அளவில் கிடைக்கப் பெறவில்லை. இவனைப் பற்றிய இரண்டு கல்வெட்டுகளே நமக்குக் கிடைத்துள்ளன. அவையிரண்டும் கி. பி. 1116ஆம் ஆண்டிலேயே வெளியிடப்பட்டு விட்டன. இக் கல்வெட்டுகளை அடுத்து வேறொன்றும் நமக்குக் கிட்டாத காரணத்தால் இவனைப்பற்றி விரிவாக நாமொன்றும் அறிந்து கொள்ளக் கூடவில்லை.

இவ் வேந்தனது கல்வெட்டுகளும் திருநெல்வேலி மாவட்டத்தில் மட்டுமே காணப்படுகின்றது. மதுரை, இராமநாதபுரம் மாவட்டங்களில் காணப்படாமையின் காரணம் புலப்படவில்லை. இவனது கல்வெட்டொன்று காஷ்மீர தேசம், ஆரிய தேசம் ஆகியவற்றைச் சேர்ந்தவர்கள் அறச் செயல் புரிந்த (Benefaction) செய்தியினைக் குறிப்பிடுகின்றது. இவர்கள் இப் பகுதிக்குத் தீர்த்தயாத்திரை மேற்கொண்டிருத்தல் வேண்டும், அல்லது இவர்கள் தங்களது நாட்டிலிருந்து குடி பெயர்ந்து வந்து இப் பகுதிகளில் குடியேறி இருத்தல் வேண்டும்.

அடுத்து, முதலாம் வீர இராசேந்திரன் தனது மகனான கங்கை கொண்ட சோழனைப் பாண்டிய நாட்டின் அரசப் பிரதிநிதியாக நியமித்து, பாண்டியனென்ற பட்டப் பெயரினையளித்ததாகத் தெரிகிறது.[2] சோழரது சாசனங்களில் இவனைப்பற்றிய குறிப்பு காணப்பெற்ற போதிலும், சோழ பாண்டியர் கல்வெட்டு

[1] Ibid Vol. iii, p. 33.

களைக் கொண்டு இவன் சோழ-பாண்டியர் பட்டியலில் எங்ஙனம் குறிப்பிடப்பட்டுள்ளான் என்பது தெரியவில்லை.

மேற்கூறியவற்றால் சோழப் பெரு மன்னர்கள் பாண்டி மண்டலத்தில் தமது அரசப் பிரதிநிதிகளையமர்த்திச் செம்மையாக ஆட்சி புரியச் செய்தனர் என்பது புலனாகின்றது. இவ்வாறு சோழ பாண்டியப் பிரதிநிதிகளையமர்த்தும் வழக்கம் ஏறத்தாழ முதலாம் குலோத்துங்கனின் ஆட்சிக் காலத் தொடக்கம் வரை நீடித்ததென்றும், அவன் அரியணையேறிய பின்பு இவ் வழக்கம் பின்பற்றப்பட்டதாகத் தெரியவில்லையென்பதும் நினைவிற் கொள்ளத் தக்கதாகும். எனவே, இம்முறை ஏறத்தாழ கி. பி. 1070 வரை நீடித்ததாகக் கொள்ளலாம்.

**சோழ - பாண்டியர் பெயர்க் காரணம்**

பாண்டிய நாட்டின் பிரதிநிதிகளாகச் சோழ வேந்தரால் அனுப்பப்பட்ட சோழ இளவரசர்கள் யாது காரணம்பற்றி 'சோழ - பாண்டியன்' என அழைக்கப் பெற்றனரென்பதனைக் காணுதல் அவசியமாகும். நாட்டுப் பற்றில் மேம்பட்ட பாண்டிய நாட்டு மக்களை மனநிறைவு செய்யவே இவர்கள் பாண்டியரது பெயரையும் தமது பெயருடன் இணைத்துக் கொண்டிருத்தல் வேண்டும்.[1] சோழரின் ஆட்சிக் காலம் முழுமையும் பாண்டியர் சோழரது மேலாண்மைக்கெதிராகவும் கலகங்கள் விளைவித்து வந்தனராதலின் பாண்டியரை முழுமையாகத் தன்னடிப்படுத்தல் வேண்டுமென்பதற்காகவே அவர்கள் அமர்த்தப் பெற்றனரென்றும் சிலர் கருதுகின்றனர்.[2] பாண்டியரது பெயரையும் பட்டங்களையும் சோழப் பிரதிநிதிகள் சூட்டிக்கொள்வதன் மூலம் பாண்டியரது நினைவுகளனைத்தையும் அழித்தொழித்துவிட்டு அவர்களோடு இவர்கள் இணைந்து கொண்டதாகக் காட்டிக் கொள்ளலாமென்பதே இவர்களது எண்ணமாகும் என்றும் கருதப்படுகிறது.[3]

**முதன் முதலில் அரசப் பிரதிநிதியை நியமித்தவன்**

சோழரது வரலாற்றில் முதன் முதலாக அரசப் பிரதிநிதிகளை நியமித்துத் தம்மால் வென்றடக்கப்பட்ட நாடுகளை ஆட்சி புரிகின்ற மரபினை ஆரம்பித்த பெருமை முதலாம் இராசேந்தி

1 A;R.E. 1905, pp. 48—49.

2 Aiyar, K.V S. Epi. Ind Vol, xi p 293.

3 'By assumins the Pandyan names and titles, they wanted to wipe out all memories of the Pandyas and step into their shoes'.
Raman, K.V. Dr. 'Soms Aspects of Pandyan History in the light of recent discoveries': p. 18—19.

ரனைச் சாரும். இதனை விளக்கமாக அறிந்து கொள்ள விரும்புவோர் யான் இயற்றியுள்ள 'முதலாம் இராசேந்திர சோழன்' என்னும் நூலில் 103, 104 ஆம் பக்கம் கண்டு கொள்க. இவன் தனது தந்தையாம் முதலாம் இராசராச சோழனவிட மேம்பட்ட வெற்றிச் சிறப்பினைக் கொண்டவனாதலின், அண்டை நாடுகள் முழுவதையும் வென்று, வட நாட்டிலும், கடல் கடந்த நாடுகளிலும் தனது மேலாண்மையினை நிலைநாட்டும் அவாவினைக் கொண்டான். எனவே, தன்னால் வென்றடக்கப்பட்ட அண்டை நாடுகளை, முழுக்க முழுக்க தனது கட்டுப்பாட்டிற்குள் வைத்துக் கொண்டால்தான், தனது அன்னிய நாட்டுப் படையெடுப்பின் போது அவர்கள் கலகம் செய்யாது அடங்கிக் கிடப்பர் என்று தெளிவாக உணர்ந்தான்.

அடுத்து, பன்னெடுங்காலமாகவே நாட்டுப்பற்றிற்கும், தணியாத தனியாட்சி வேட்கைக்கும் உறைவிடமாகத் திகழும் பாண்டியநாட்டினர், புதிதாக ஏற்படுத்தப்படும் சோழராட்சியினை அன்னியாட்சியெனக் கருதி, அதற்கெதிராய் எதிர்ப்புத் தெரிவித்தல் கூடாதென்பதனை மனத்திற்கொண்டே, அவர்களது ஒழுகலாற்றின்படி அவர்களது பட்டப்பெயர்களை (சடையவர்மன், மாறவர்மன்) இவர்களுக்குச் சூட்டி, பாண்டிய வேந்தருள் ஒருவராகவே இப் பிரதிநிதிகளும் அவர்களால் கருதப்பட வேண்டுமென்று இரோசந்திரன் கருதியிருத்தல் வேண்டும். அடுத்து, சோழரது தாக்குதலுக்கிரையான ஈழ நாட்டுடன் பாண்டியர் நட்புறவு கொண்டு, சோழரது ஏகாதிபத்தியபத்தினை (Imperi i s n) அழித்தொழிக்கக் கங்கணம் கட்டிக்கொண்டிருந்ததனையுணர்ந்த இராசேந்திரன், பாண்டிய வேந்தர்களை சிற்றரசர்களாக நியமனஞ் செய்யாது தனது அரசப் பிரதிநிதிகளையே நியமித்தான். இதனால் பாண்டியர் ஈழ வேந்தர்களுடன் கொள்ளும் உறவினை நன்கு கண்காணித்து, பாண்டிய - ஈழக் கூட்டைத் தவிர்ககலாம் என எண்ணியிருத்தலும் கூடும்.

**ஈழ-பாண்டிய உறவு**

பாதிக்கப்பட்ட பாண்டியரும், ஈழ நாட்டினரும் சோழருக்கெதிரான நடவடிக்கையில் ஈடுபட்டனரென்பதனை, மகாவமசம் என்னும் இலங்கை வரலாற்று நூலும், சோழரது சாசனங்களும் நன்கு உணர்த்துகின்றன. இதன் காரணமாகத்தான் அக்காலத்தியப் பாண்டிய அரசகுடும்பத்தினர் பலரும், இலங்கை அரச குடும்பத்தினர் பலரும், ஒரே மாதிரியான (Identical) பெயர்களைப் பூண்டிருந்தனர். இருப்பினும இவ்விரு ஆதாரங்களும் ஒத்த முறையில் நிகழ்ச்சிகளை விவரிக்காத காரணத்தால்,

இதனை நாம் முழுமையாக ஏற்றுக் கொள்ளவியலவில்லை. இருப்பினும் தனியாட்சி விரும்பிய பாண்டியர் ஆங்காங்கு சோழ-பாண்டியப் பிரதிநிதிகளுக்கெதிராகக் கலகஞ் செய்து வந்தனர்.

**பிற பகுதிகளுக்கு அனுப்பப்பட்ட அரச பிரதிநிதிகள்**

பாண்டிய நாட்டிற்கு அனுப்பப்பட்ட அரசப் பிரதிநிதிகள் சோழ-பாண்டியரென அழைக்கப்பட்டதுபோல கங்கநாட்டிற் கனுப்பப்பட்டப் பிரதிநிதி சோழ-கங்கனெனவும், அயோத்தி நாட்டிற்கனுப்பப்பட்ட பிரதிநிதி சோழ-அயோத்திய ராசனெனவும் அழைக்கப் பெற்றமை ஈண்டு நினைவிற்கொள்ளத் தக்கதாகும். இதனைத் 'திருமாது புவியெனும்' என்ற தொடக்கத்தினைக் கொண்ட இரண்டாம் இராசேந்திரனது மெய்க்கீர்த்தியாலறியலாம்.[1]

எனவே, தனது பரந்து விரிந்த சோழப் பேரரசினைத் தனித்து ஆட்சி புரிதல் இயலாதென்று கருதிய, சோழ வேந்தர் அண்டை நாடுகட்குத் தமது அரசப் பிரதிநிதிகளை அனுப்பினரென்றும், அம் முறையில்தான் பாண்டிய நாட்டிற்கும் சோழ-பாண்டியப் பிரதிநிதிகளை அனுப்பினர் என்றும் அறியலாம். (அரசப் பிரதிநிதியாகச் சென்ற இளவரசன் தான் ஆளுகின்ற நாட்டின் பெயருடன் சோழனென்பதனையும் இணைத்துக் கொண்டான். இதனால் ஒரு நாட்டுப் பிரதிநிதியை மற்ற நாட்டுப் பிரதிநிதியுடன் வேறுபடுத்தியறிதல் எளிதாகும்.) இவர்கள் பாண்டிய மக்களின் நன்மதிப்பையும் நம்பிக்கையும் பெறுவான் வேண்டி சடையவர்மன் மாறவர்மன் எனும் பட்டங்களைப் புனைந்து கொண்டனரெனலாம்.

**அதிகாரங்கள்**

சோழ-பாண்டியப் பிரதிநிதியாக நியமிக்கப்பட்ட இளவரசர் தனது மாநிலத்தில் மன்னனுக்குரிய அனைத்து அதிகாரங்களையும் பெற்றிருந்தான்; அதிகாரப் பூர்வமான ஆணைகளைத் தன்னாட்சியாண்டில் வெளியிடும், தனியுரிமையும் கொண்டிருந்தான். மத்தியாட்சிக்கும் மாநில ஆட்சிக்கும் நெருங்கிய தொடர்

[1] தன்திருத் தம்பியர் தம்முள் வென்றிகொள்
மும்முடிச் சோழனைத் தெம்முனை யடுதிறள்
சோழ பாண்டியரென்றுங் கோழிமன்
தொடுகழற் வீரசோழனை படிபுகழ்
கரிகால் சோழனென்றுங் பொருத தொழிற்
வாள்வலி தடக்கை மதுராந்தகனை
சோழ-கங்கனென்றும் தோள் வலி
மேவிகள் பராந்தக தேவனைச் சோழ
வயோத்திய ராசனென்றுங் இரண்டாம் இராசேந்திரனின் மெய்க்கீர்த்தி

பிருந்தது. சோழ பாண்டியப் பிரதிநிதிகளால் வெளியிடப்பெற்ற கல்வெட்டுகளுக்கருகில் சோழ வேந்தரது கல்வெட்டும் காணப் படுதலின் இப்பிரதிநிதிகள் சோழ வேந்தனுக்குட்பட்டே ஆட்சி புரிந்தனரென்றும், மாநில ஆட்சியின்மீது மத்தியாட்சியின் கட்டுப்பாடு வலிவுடையதாகவும், முறைப்பட்டதாகவும், ஒழுங் கானதாகவும் (regular) இருந்ததாகத் தெரிகிறது. இதனைச் சோழ வேந்தன் சில நிலங்களுக்கு வரி விலக்களிப்பான் வேண்டி சடையவர்மன் சோழ பாண்டியனுக்கனுப்பிய ஆணையொன்றினு லறியலாம். மேலும், சோழராட்சிபற்றிய பல செய்திகளை விரிவாகக் கூறும் மன்னார் கோயில் கல்வெட்டுச் செய்தி அரசப் பிரதிநிதிகள்பற்றிய அதிகாரங்களைக் குறிப்பிடுவதனாலும் இதனை நாம் தெளிவாக அறியலாம்.

**படை நிறுத்தப்படல்**

சோழரது மேலாதிக்கத்தினைப் பாண்டி நாட்டில் நிறுவ விழைந்த சோழ வேந்தர் பாண்டி நாட்டில் ஆங்காங்கே வலிமை மிக்க சோழப்படைகளை நிறுத்தியிருந்தனர். மதுரை மாவட் டத்தின் கண்ணுள்ள அணையூரிலும், திருநெல்வேலி மாவட் டத்தின் கண்ணுள்ள சேரமாதேவியிலும், ஆற்றூர் பெருங் குளத்திலும் நிறுத்தப்பட்ட சோழப்படைகளை இதற்கு நாம் எடுத்துக்காட்டாகச் சுட்டலாம்.

## மானாபரணன், வீரகேரள பாண்டியன், சுந்தர பாண்டியன், விக்கிரம பாண்டியன், வீர பாண்டியன்

**பாண்டியர் எழுச்சி**

சோழ வேந்தர் பாண்டி நாட்டாட்சியைக் கவனித்தற் பொருட்டு தனது இளவரசர்களை அரசப் பிரதிநிதிகளாக அமர்த்தி, பாண்டியரது எழுச்சியினைத் தடைசெய்ய முயன்ற போதிலும், பாண்டியரது எழுச்சியினைத் தடுத்து நிறுத்தவியல வில்லை. சோழரின் அடக்குமுறைக்கஞ்சாது பாண்டியர் ஆங் காங்கு கலகங்கள் செய்தனர். நாட்டுப்பற்றில் நாட்டங்கொண்ட இவர்களைச் சோழ-பாண்டியப் பிரதிநிதிகளும் அடக்கியொடுக்க முடியாது தவித்தனர். படிப்படியாக (gradually) வலிமையெய்திய பாண்டி வேந்தர், சோழரின் மேலாதிக்கத்தினின்றும் தம்மை விடுவித்துக் கொள்ளும் தருணம் நோக்கியிருந்தனர்.

முதலாம் இராசேந்திர சோழனின் மைந்தனான முதலாம் இராசாதிராசனது ஆட்சிக் காலத்திலும் பாண்டியர் வலிமை யெய்தி சோழருக்கெதிராகக் கிளர்ந்தெழுந்தனர். இவ்வாறு

சோழ-பாண்டியப் பிரதிநிதிகளுக்கெதிராகக் கிளர்ந்தெழுந்த பாண்டியர்மீது இராசாதிராசன் போர் தொடுக்க வேண்டியிருந்தது. இப் பாண்டியரின் கிளர்ச்சியினை முன்னின்று நடத்தியவர்கள் மானாபரண பாண்டியனும், வீரகேரள பாண்டியனும், சுந்தர பாண்டியனும், விக்கிரம பாண்டியனும வீரபாண்டியனுமாவர். முதலாம இராசாதிராசனது இருபத்தொன்பதாமாட்சியாண்டினதாகிய மெய்க்கீர்த்தியில் (கி. பி. 1046) இவன் மானாபரணன், வீர கேரளன், சுந்தர பாண்டியன் ஆகிய மூவரின் கூட்டிணைவுப் படையொன்றினை வென்றதாகக் கூறப்பட்டுள்ளது.

**போர்**

சோழருக்கும் பாண்டியருக்கும் நிகழ்ந்த இக் கடும்போரில் இராசாதிராசனது கை ஓங்கி நின்றது. இப் போரில் மானாபரணனும், வீர கேரளனும் சோழ வீரர்களால் போர்க்களத்திலேயே கொல்லப்பட்டனர்; சுந்தர பாண்டியனோ சோழரின் வலிமை மிக்க தாக்குதலுக்கு எதிர் நிற்க மாட்டாது தோற்றோடி முல்லையூர் என்னுமிடத்தில் ஒளிந்து கொண்டான். இராசாதிராசனுக்கும் பாண்டியருக்கும் நிகழ்ந்த இப் போர்பற்றி யான் இயற்றியுள்ள 'முதலாம இராசேந்திரசோழன்' என்னும் நூலில் விரிவாகக் காணலாம்.[1]

இராசாதிராசன் இப் புரட்சியினை எந்த ஆண்டில் அடக்கினான்? என்பதனை நாம் அறுதியிட்டு உறுதியாகக் கூறுதலியலாது.[2] இந் நிகழ்ச்சியினைக் குறிக்கும் கல்வெட்டுகள் சோணாட்டிலோ, அன்றிப் பாண்டிய நாட்டிலோ கிடைக்கப் பெறவில்லை. முதலாம் இராசாதிராசனின் மெய்க்கீர்த்தி ஒன்றினையே நாம் சான்றாகக் கொள்ள வேண்டியுளது.[3]

1 இராசசேகர தங்கமணி ம. 'முதலாம் இராசேந்திர சோழன்' பக். 162

2 S.I.I. Vol. III. p. 56·

3 மன்னுபல் லூழியுட் தென்னவர் மூவருள்
மானாபரணன் பொன்முடியானைப்
பருமணிப் பசுந்தலை பொருகளத் தறிந்து
வாரண வியகழல் வீரகேரளனை
முனைவயிற் பிடித்து தனது வாரணக்
கடற் களிற்றின லுதைப்பித் தருளி
அந்தமில் பெரும்புகழ் சுந்தர பாண்டியன்
கொற்றவெண் குடையும் கற்றை வெண் கவரியும்
சிங்கா தனமும் வெங்களத் திகழ்ந்துதன்
முடிவிழத் தலைவிரித் தடிதளர்ந்தோட
தொல்லை முல்லையூர் துரத்தி யொல்களில்'
முதலாம் இராசாதிராசனின் மெய்க்கீர்த்தி.

இப் புரட்சியில் பங்கு கொண்ட விக்கிரம பாண்டியன் போரில் தோல்வியுற்று ஈழ மண்டலம் நோக்கியோடி, ஆங்கு அடைக்கலம் புகுந்தான். இறுதியாக வீரபாண்டியனும் கி. பி. 1048–ல் இராசாதிராச சோழனால் கொல்லப்பட்டான். இதனைக் கோலார் மாவட்டம், மிண்டிக்கல் என்னுமிடத்தில் காணப்படுகின்ற கல்வெட்டொன்றினால் அறியலாம்.[1] முதலாம் இராசாதிராசனின் திருக்களர் செப்பேட்டிலும் இச் செய்தி குறிப்பிடப் பட்டுள்ளது.[2] சோழருக்கெதிராகப் புரட்சிக் கொடியுயர்த்திய இவ் வைந்து பாண்டியரைப்பற்றிய விரிவான, தெளிவான செய்திகள் நமக்குக் கிடைக்கப் பெறவில்லை.

## சீவல்லப பாண்டியன்

சீவல்லப பாண்டியன் இரண்டாம் இராசேந்திர சோழனின் சமகாலத்தவனாவான். இவன் சோழர்க்கடங்கிய சிற்றரசனாகப் பாண்டிய நாட்டினையாண்டு கொண்டு, சோழ வேந்தனுக்குத் திறை செலுத்தி வந்தவனாதல் வேண்டும். இப் பாண்டியனது பட்டத்தரசி கி. பி. 1054 ஆம் ஆண்டு சோணாட்டின் கண்ணுள்ள திருவிசயலூர்க் கோயிலுக்கு விலையுயர்ந்த அணிகலன்கள் பல வழங்கியதனை, அவ்வூர்க் கல்வெட்டொன்று அறிவிக்கின்றது.[3]

## பாண்டியன் வீரகேசரி

இவன் சீவல்லப பாண்டியனின் மைந்தனாவான். இவனைப் பற்றிய குறிப்பொன்று வீர இராசேந்திரனின் மெய்க்கீர்த்தியில் இடம் பெற்றுள்ளது. இதனைக் கொண்டு பாண்டியன் வீரகேசரி கி. பி. 1065ஆம் ஆண்டில் வீர இராசேந்திர சோழனுடன் போரிட்டானென்றும், அப் போரில் வீரகேசரி இறந்துபட்டானென்றும் அறிகிறோம்.

வீர இராசேந்திரனுக்குப் பின்பு, அவனது மகனான அதிராசேந்திர சோழன் சோணாட்டின் அரியணையிலமர்ந்தான். இவனது ஆட்சி நெடிது நாள் நீடிக்கவில்லை. இவன் சில திங்களே ஆட்சி புரிந்து கி. பி. 1070–ல் நோய்வாய்ப்பட்டு, இறந்துபட்டான். இவனுக்குப் பின்பு சோணாட்டின் மணி முடியை ஏற்றுக் கொள்ளும் தகுதி படைத்த சோழ இளவரசன் ஒருவனுமில்லாத காரணத்தால், சோணாட்டில் குழப்பமும்

[1] Epi. Ind. Vol. IV, No. 31
[2] S.I.I, Vol. III. No. 208.
[3] Ins. 46 of 1907.

கொந்தளிப்பும் அரசோச்சின. சோணாடு, மக்களைப் பேணிக் காக்கும் மன்னனின்றித் தவித்தது போன்று, பாண்டிய நாடும் அரசப் பிரதிநிதியின்றிக் கிடந்தது. சோழ பாண்டியப் பிரதி நிதிகள் பாண்டிய நாட்டிற்கு அனுப்பப் பெறவில்லையெனத் தெரிகிறது. இதனையே பெருவாய்ப்பாகக் கொண்டு பாண்டியர் சிலர், வலிமை பெற்று, தாமிழந்த பகுதியினை மீட்டுக் கொண்டு, ஆட்சி புரியலாயினர். இவர்களது ஆட்சி ஏறத்தாழ கி. பி. 1081 முடிய நீடித்தது எனலாம்.

**குலோத்துங்கன்**

சோணாட்டரியணையிலமர்ந்து மணிமுடி சூடிக் கொள்ள, சோழ இளவரசர் ஒருவருமின்றி சோணாடு குழப்பத்திலாழ்ந் திருந்த அதே காலத்தில், கீழைச் சாளுக்கிய நாட்டில் இராசேந் திரன் அரியணையேறும் வாய்ப்பினையிழந்தான். இந் நிலையில் இராசேந்திரனுக்குப் பொன்னான வாய்ப்பொன்று கிடைத்தது. இவன் சோணாட்டையாளும் மன்னனாகி மணிமுடி தரித்துக் கொள்ளும் தக்கதோர் பேறு பெற்றான். தாய் வழியில் சோழனாகவும் தந்தை வழியில் கீழைச் சாளுக்கியனாகவும் விளங்கிய குலோத்துங்க சோழன் எனும் பட்டப் பெயர் பூண்டு சோணாட்டினையாண்டான். எத்தனையோ இடர்ப்பாடுகளுக்கிடையிலும் தடைக் கற்கள் இவன்மீது வீசப்பட்ட நிலையிலும், உறுதி குன்றாது இவன் ஆட்சியினை மேற்கொண்ட போதிலும், இவனது ஆட்சியின் ஆரம்ப காலத்தில் சோணாட்டில் குழப்ப மும், அமைதியின்மையும் தலைவிரித்தாடின. இக் குழப்பத்தி னின்றும், தொல்லைகளினின்றும் குலோத்துங்க சோழனோ அவனுக்குப் பின்னாண்ட சோழ வேந்தர்களோ முழுமையாக விடுபட்டதாகத் தெரியவில்லை.

**பாண்டியரின் மறுமலர்ச்சி**

விசயாலய சோழன் கால முதல் சோணாட்டில் நிலவி வந்த நல்லாட்சியும், ஆட்சித் திறனும் முதலாம் குலோத்துங்கனின் ஆட்சிக் காலத்தும், அவனது பின்னோர்களின் ஆட்சிக் காலத் திலும் முழுமையாக நீடித்ததாகத் தோன்றவில்லை. முதலாம் குலோத்துங்கனுக்குப் பின்பு, சோழராட்சி முறையில முன்பு இருந்த உயிரோட்டம் காணப் பெறவில்லையென்பது உண்மை யேயாகும். மேலும், இத் தருணத்தில் பாண்டிய நாட்டில் சோழ பாண்டிய அரசப் பிரதிநிதிகள் ஒருவரும் அமர்த்தப்பட்டதாக நமக்குச் சான்றுகள் கிடைக்கவில்லை. இதனையே நல்லதொரு வாய்ப்பாகக் கொண்டு பாண்டியர் சோழராட்சியினின்றும் விடு

பட்டு, படிப்படியாக வலிமை பெற்றுத் தனியாட்சியினை நிறுவும் நிலைக்கு மாறினர். பின்பு, சோழ வேந்தரைத் தனது சிற்றரசராகவும் மாற்றினர். இதனையே வரலாற்றறிஞர்கள் இரண்டாவது (பிற்காலப்) பாண்டியப் பேரரசென்று போற்றினர்; பறை சாற்றினர்.

முதலாம் குலோத்துங்க சோழனது ஆட்சிக் காலத்தில் பாண்டியர் எங்ஙனம் மீட்சி பெற்றனர், ஆட்சி புரிந்தனர் என்பனபற்றிய செய்திகளை நாம் அடுத்த தலைப்பில் காண்போம்.

# 9. பாண்டியரின் மீட்சி

### முதலாம் குலோத்துங்க சோழனும் பாண்டிய நாடும்

சோணாட்டின்கண் முதலாம் குலோத்துங்க சோழன் அரசு கட்டிலேறும்போது, ஆங்கு குழப்பமும் கொந்தளிப்பும் அரசோச்சியதனை நாம் முன்பே கண்டோம். இக் காலத்தில் பாண்டிய அரச குலத்தவரும், வலிமை பெற்று, சோழநுக்கடங்காது தனியாட்சி மேற்கொண்டனர். பாண்டிய நாட்டின் பல்வேறு பகுதிகளில் பலர் தத்தமது பகுதிகளில் புத்தாட்சி கண்டனர். இதனைக் கேள்வியுற்ற சோழ வேந்தனும் முதலாம் குலோத்துங்கன் கடுஞ்சினங் கொண்டான்; பாண்டி நாட்டின் மீது படையெடுப்பினை மேற்கொண்டான்; பாண்டி வேந்தர் ஐவரையும் வெற்றி கண்டான்; அவர்களது நாட்டையும் கைப்பற்றிக் கொண்டான்; வெற்றியின் நினைவாக வெற்றித் தூண்களும் நிறுவினான்.

மேற்கூறிய வெற்றிச் செய்தியினை இம் மாமன்னனின் மெய்க்கீர்த்தி மிக அழகாக விரித்துரைக்கின்றது.[1] இவ்வேந்தன் பாண்டியர்களைப் புறங்கண்டு, புகழ் கொண்ட செய்தி, சயங் கொண்டாரின் கலிங்கத்துப்பரணியாலும் உறுதி செய்யப்படுகிறது.[2] இந் நூல் முதலாம் குலோத்துங்க சோழனது புகழ் பாடும் தமிழ் நூலென்பது யாவருமறிந்ததே. இவ் வேந்தனால் வென்றடக்கப்பட்ட பாண்டி வேந்தர்களின் பெயர்கள் யாங்கணும் குறிப்பிடப் பெறவில்லை. இருப்பினும் குலோத்துங்கனின் சம காலத்தில், பாண்டிய நாட்டில் வீற்றிருந்து அரசாண்ட வேந்தர்களைப்பற்றிய செய்திகள், வேறு சில சான்றுகளால் நமக்குக் கிடைத்துள்ளன. இச் செய்தியினை அடிப்படை

1 தன் பெருஞ்சேனை யேவிப் பஞ்சவர் ஐவரும்
பொருதப் போர்க்களத் தஞ்சி
வெரீஇத் தோடி அரணெனப் புக்க
காடறத் துடைத்து நாடடிப் படுத்து'
முதலாம் குலோத்துங்க சோழனின் மெய்க்கீர்த்தி.

2 விட்ட தண்டெழ மீனவர் ஐவருங்
கெட்ட கேட்டினைக் கேட்டிலை போலுநீ
கலிங்கத்துப் பரணி—368.

யாகக் கொண்டு, சோழ வேந்தனிடம் தோல்வி கண்ட பாண்டி வேந்தர்பற்றி ஆய்வோம்.

### சடையவர்மன் சீவல்லபன்

முதற் குலோத்துங்க சோழனது ஆட்சிக் காலத்தில் பாண்டிய நாட்டினை ஆண்டு வந்த வேந்தர்களுள் சீவல்லபனும் ஒருவனாவான்.[1] இவன் சித்திரை விண்மீனில் (Star) பிறந்தான். இவன் முதலாம் குலோத்துங்கனின் சம காலத்தவனென்பதனை விசய மங்கலத்தில் காணப்படும் கல்வெட்டாலறியலாம்.[2] இவ் வேந்தன் கி. பி. 1120 முதல் கி. பி. 1122-க்குள் அரியணையினைக் கைக்கொண்டிருத்தல் வேண்டுமென்று கல்வெட்டறிஞர் திரு. கே. ஜி. கிருட்டிணன் அவர்கள் ஒரு கல்வெட்டின் துணை கொண்டு கணித்துள்ளார்.[3] அண்மையில் அணையூர் என்னுமிடத்தில் கண்டுபிடிக்கப்பட்ட இவ் வேந்தனது கல்வெட்டைக் கொண்டு இவனது முடிசூட்டு விழா வண்டமிழ்க் கூடலில் (மதுரை) நிகழ்வுற்றதாக அறிகிறோம்.[4]

### கல்வெட்டுச் செய்திகள்

சடையவர்மன் சீவல்லபனது கல்வெட்டுகள் நமக்கு மிகுதியான அளவில் கிடைத்துள்ளன. இவ் வேந்தனது இரண்டாமாட்சியாண்டு முதல், இருபத்தாறுமாட்சியாண்டு வரையிலான கல்வெட்டுகள் மதுரை, திருநெல்வேலி, இராமநாதபுர மாவட்டத்தின் பல பகுதிகளில் காணப்படுகின்றன. இவற்றுள் எழுபதுக்கும் மேற்பட்டவை திரு. ஏ. எஸ். இராமநாதையரவர்களால் தொகுக்கப் பெற்றுள்ளன; இவையனைத்தும் தென்னிந்தியக் கல்வெட்டுத் தொகுதிகள், தொகுதி 14-ல் வெளியிடப் பட்டுள்ளன. (S.I.I. Vol. 14). குருவித்துறையிலும், திருப்புத்தூரிலும் காணப்படுகின்ற கல்வெட்டுக்களும் இவ் வேந்தனைப் பற்றிய சில செய்திகளை நன்கு குறிக்கின்றன. இம் மன்னனது மெய்க்கீர்த்தி பெரும்பாலும் 'திருமடந்தையும் செய மடந்தையும்' எனத் தொடங்குகின்றன. அம்பாசமுத்திரம் என்னுமிடத்தில் மிக அண்மைக் காலத்தில் கண்டுபிடிக்கப்பட்ட இவனது கல்வெட்டொன்று 'பூமாது புணர' என்னும் தொடக்கத்தைக்

1 S.I.I. Vol. V, Nos. 294 and 298; 30 and 32 of 1909.

2 மேலும் வீரசேகரன் என்ற அதலையூர் நாடாள்வான் என்பான் சடையவர்மன் சீவல்லபனின் நான்காமாட்சியாண்டினை ஒரு கல்வெட்டிலும் திருபுவனச் சக்ரவர்த்திகு லோத்துங்க தேவனின் நாற்பத்தேழாமாட்சியாண்டினை மற்றுமொரு கல்வெட்டிலும் குறித்துள்ளான். (30 and 32 of 1909)

3 A.R.E. 1962—63. page vi.

4 Ibid. Page 31.

கொண்டுளது.[1] எனவே, 'திருமடந்தையும் செயமாதும்' 'பூமாது புணர' என்னும் தொடக்கங்களைக் கொண்டவை யனைத்தும் இவனது கல்வெட்டுகளாகுமென்பது விளங்குகிறது. இவற்றினைக் கொண்டு இவ் வேந்தனைப்பற்றியும், இவனது ஆட்சியின் மாட்சிபற்றியும் பல பயனுள்ள செய்திகளையறிந்து கொள்ள முடிகின்றது.

**இவனது குடும்பம்**

இவ் வேந்தனது மாதேவியின் பெயர் 'உலகமுழுதுடையாள்' என்பதாகும். இவள் மடமொன்றினை நிறுவி தக்கார்க்குத் தான தருமஞ் செய்து வந்தனள்.[2] திருப்பத்தூர் கோயிலில் அன்ன தான (kitchen) மடமொன்றினையும் இவள் நிறுவியுள்ளாள். இவனுக்குப் 'பிள்ளையார் சுந்தர பாண்டிய தேவர்', 'மாறு பரணன்'[3] என்ற இரு மைந்தர்கள் இருந்தனர். பிள்ளையார் சுந்தர பாண்டிய தேவர் ஒரு தடவை கோயில்பட்டி வட்டத்தி லுள்ள சோழபுரம் என்னும் ஊரில் பாசறையமைத்திருந்தான். அதுபோழ்து அவ்வூர் சபையார் வேண்டிக்கொண்டதற்கிணங்க, சோழபுரம் கோயிலுக்கு இவன் நிலதானம் செய்துள்ளான். அவ் வூர் சுந்தர பாண்டிய சதுர்வேதி மங்கலமெனவும், அவ்வூர்க் கோயில் சுந்தர பாண்டிய - விண்ணகரெனவும் அழைக்கப் பெற்றது.[4] இவண் குறிக்கப்பெற்றுள்ள பிள்ளையார் சுந்தர பாண்டிய தேவர் என்னும் இளவரசன், அரசு கட்டிலேறும் வாய்ப்பினைப் பெற்றதாகத் தெரியவில்லை.

**அரியணையின் பெயர்**

நாங்குநேரியில் கிடைக்கப் பெற்றுள்ள கல்வெட்டொன்றில் 'திரிபுவன சக்கரவர்த்திகள் ஸ்ரீ வல்லப தேவர் மதுரை கோயிலில் உள்ளாலை அழகிய பாண்டிய கூடத்து பள்ளிக் கட்டில் பாண்டிய ராஜநில் எழுந்தருளிவித்து வரி விலக்குக் கோரி மனுச் செய் தோரின் குறைகளைக் கேட்டறிந்தார்'[5] எனக் குறிக்கப் பெற் றுள்ளது. இக் கல்வெட்டின் துணைகொண்டு இவ் வேந்தனது இருக்கை (thron) 'பாண்டியராசன்' என அழைக்கப்பட்டதாக அறிகிறோம். இவன் 'கலிங்கத் தரையன்'[6] என்னும் பெயர் கொண்ட அரியணையிலும் அமர்ந்திருந்தானென்பதனை மற்று

1 Ibid
2 S.I.I. Vol. XIV. Nos. 200 and 248.
3 He is described 'Nampillai' No. 225 also see 238; 250.
4 No. 205
5 206, 223 & 229.
6 — 234

மொரு கல்வெட்டு உணர்த்துகின்றது. இப்பெயர் பல கல்வெட்டுகளில் குறிக்கப்பெற்றுள்ளது. இவ் வேந்தனின்கீழ் பணியாற்றிய 'கலிங்கத் தரையன்' என்ற அதிகாரியின் பெயரால் இவ் வரியணை இவ்வாறு அழைக்கப்பட்டிருக்கலாம் என நாம் கருத இடமுண்டு.

### அலுவலர்களும் பணியும்

சில கால்வாய்களும், மதகுகளும், நீர் நிலைகளும் பராக்கிரம பாண்டியனது பெயராலும், முகத்தலளவை ஒன்று வீரபாண்டியனது பெயராலும் அழைக்கப் பெற்றிருந்ததாகக் கல்வெட்டுச் செய்திகள் குறிப்பிடுவதால் இவ்விருவரும் இவ் வேந்தனுக்கு முந்தியாண்ட பாண்டிய மன்னர்களாகவோ (Predecessors) இவனுடன் இணைந்து ஆட்சி புரிந்த பகர ஆளுநர்களாகவோ (co-regents) இருத்தல் வேண்டுமென்று கருதலாம்.[1] பராக்கிரம பாண்டியன், இவ் வேந்தனது ஆட்சிக்காலத்தில் குறிப்பிடத் தக்கதொரு அமைச்சராக (உத்தர மந்திரி)க் கல்வெட்டுகளில் குறிக்கப் பெற்றுள்ளமையும்[2] ஈண்டு இக் கருத்தினை வலியுறுத்துகின்றன.

### வாசுதேவப் பேராறு

இவ் வேந்தனது ஆட்சிக் காலத்தில் 'இரவி கோதைவர்மன் என்பான் வேணாட்டு மன்னனாக ஆட்சி புரிந்து வந்தான். இதனை விசய நாராயணம் என்னுமூரில் காணப்படுகின்ற சீவல்லபனின் பன்னிரண்டாமாட்சியாண்டுக் கல்வெட்டாலறியலாம். இரவி கோதைவர்மனின் அரசியற் பேராளான (Agent) வாசுதேவன் என்பான் ஏரியில் ஏற்பட்ட உடைப்பினை அடைத்ததுடன், வாசுதேவப் பேராறு என்னும் கால்வாயைப் பழுது பார்த்துள்ளான்.[3]

### திருப்பணி

சீமாறன் போற்றுதற்குரிய வீரனாகவும் ஆட்சியாளனாகவும் விளங்கியதோடு வரையாது வழங்கும் வள்ளமை கொண்டவனாகவும் விளங்கினான். இறைப்பற்றில் மேம்பட்ட இவன் ஆலயப் பணிகட்கும் அளவிறந்த பொருள்களைக் கொடுத்து ஆண்டவனின் அருளைப் பெற்றான். திருக்கோட்டியூரி (Thiruk-kostiyur) லுள்ள அழகிய மணவாளர் (சௌமிய நாராயண

[1] A.R.E. 1909, Part ii, Para 23.

[2] 228—பராக்கிரமப் பேராறு ஒன்று குறிக்கப்பட்டுள்ளது. மற்றுமொரு கல்வெட்டு (236) குலசேகர மங்கலம் என்ற ஊரினைக் குறிப்பிடுகின்றது.

[3] 231

கோயில்) ஆலயத்திற்கு இவன் பெருமளவில் கொடையளித் துள்ளான். இக் கோயிலில் ஒன்பது நாள்கள் தொடர்ந்து திரு விழா நடைபெறுவதும். கடைசிநாள் திருவிழா சித்திரை நாளன்று முடிவுறுவதும் வழக்கமாகும். இச் சித்திரையே சீவல்லபனின் பிறப்பு விண்மீன் (நட்சத்திரம்) என்பது நினைவு கூரத் தக்கதொன்றாகும்.[1]

இவன் பாகனூர் நாட்டின்மீது படையெடுக்கதும், இராச சிங்கக்குளக்கீழிலுள்ள இராசேந்திர சோழபுரத்தில் வீற்றிருந்து சில நிலங்களுக்கு வரி விலக்களிக்கும் ஆணையொன்றினை அவ் வூர்ச் சபையாருக்கு வழங்கியதும் கல்வெட்டில் இடம் பெற் றுள்ளன.[2] இதனால் இவனது காலத்தில் 'சபை' என்ற கிராம அமைப்பொன்று நிலவி வந்ததையுமறியலாம்.

### போர்ப்படை

சீவல்லபன் போற்றுதற்குரிய வெற்றி வீரனாகத் திகழ்ந்ததால் தனது ஆட்சிக் காலத்தில் ஆற்றல் மிக்க நிலப்படையொன்றினை நிர்வகித்து வந்தான். இடைவிடாத போர்ப் பயிற்சியின் காரண மாக பாண்டிய வீரர்கள் ஆற்றல் மறவர்களாகவும், அஞ்சா நெஞ்சம் கொண்டவர்களாகவும் விளங்கினர். இராசராச வல்லப நாடாள்வார் என்னும் ஈடு இணையற்ற வீரன் இப் பாண்டிப் படையின் படைத்தலைவனாகப் பணிபுரிந்தான்.

### சீவல்லப வளநாடு

'மானாபரண உத்திர மந்திரி' என்பானும் சீவல்லபனின் ஆட்சிக் காலத்தில் நாடாளும் நற்பணியில் சீரிய பணியாற் றினன்.[3] மாப்புகழ் பெற்ற சீவல்லபனின் நினைவாகப் பாண்டி நாட்டிலுள்ள வளநாடொன்று சீவல்லப வளநாடென்னும் பெயர் பெற்றது. குடநாடும் இப் பிரிவுனுள் ஒன்றாகவே திகழ்ந்தது.[4]

### திரமா என்னும் நாணயம்

இவ் வேந்தனது ஆட்சிக் காலத்தில் புழக்கத்திலிருந்த நாணயங்களுள் திரமா (Dramma) என்பதும் ஒன்றாகும்.

### சிறப்புப் பெயர்

இவன் 'சோழாந்தகன், என்னும் விருதுப் பெயரையும் புனைந்து கொண்டிருத்தல் வேண்டுமெனத் தெரிகிறது. இவன்

[1] : 34
[2] 263 and 264
[3] 239
[4] 232

சோழராட்சியினின்றும் விடுபட்டுத் தனியாட்சி செலுத்து வதற்கு முன்பே சோழரை வென்று 'சோழாந்தகன்' எனப் பெயர் பெற்றிருத்தல் வேண்டும். இவ் வேந்தனுடைய சாசனத்தின் முன்னுரை தொடங்குகின்ற முறையைப் பார்த்தால் இவ்வாறு எண்ணத் தோன்றுகிறது.[1] இருப்பினும் இவன் சோழனை வென்ற செய்தி இம் மன்னனது மெய்க்கீர்த்தியின் முன்னுரையில் குறிக்கப்படாத காரணத்தால் இதனை நாம் உறுதியாகக் கூறுதல் இயலாது.[2]

### புகழ் மங்குதல்

முதலாம் குலோத்துங்க சோழன் சடையவர்மன் சீவல்லபனை உள்ளிட்ட ஐந்து பாண்டியர்களை வென்றதாகக் குறிக்கப்பட் டுள்ளது. இத் தோல்விக்குப் பின்னும் சடையவர்மன் சீவல்லபன் தொடர்ந்து பாண்டிய நாட்டின் வேந்தனாக ஆட்சி புரிந்து வந்தான்; இருப்பினும் இவன் தனது பழைய புகழுடன் ஆட்சி புரிந்ததாகத் தோன்றவில்லை. இத் தோல்விக்குப் பின் இவனது புகழ் சிறிது மங்கிவிட்டதாகக் கொள்ளலாம். இதனை முதலாம் குலோத்துங்க சோழனின் பிற்காலத்திய கல்வெட் டொன்றில் 'இவன் தென்னாட்டுடன் தனது எல்லைகளை நிர்ண யித்துக் கொண்டான்' என்று குறிக்கப் பெற்றிருத்தலா லறியலாம்.[3]

## மாறவர்மன் திரிபுவன சக்ரவர்த்தி பராக்கிரம பாண்டியன்

### குலோத்துங்கனின் சமகாலத்தவன்

முதலாம் குலோத்துங்க சோழனின் காலத்தில் பாண்டிய நாட்டினை யாண்டு வந்த சிற்றரசர்களுள் பராக்கிரம பாண்டி யனும் ஒருவனாவான். இவன் சீவல்லபனையடுத்து பாண்டி நாட்டின் அரியணையிலமர்ந்திருத்தல் வேண்டும் எனக் கருதலாம்.[4] விக்கிரம மங்கலத்தில் காணப்படும் இவனது இருபத்து மூன்று மாட்சியாண்டுக் கல்வெட்டு முதற் குலோத்துங்க சோழனது நாற்பதாமாட்சியாண்டுபற்றிக் குறிப்பிடுகிறது.[5] இதனால் இவன் குலோத்துங்கனது சமகாலத்தவனென்பது உறுதி பெறு

1 A.R.E. 1909, Part ii. Para 23.
2 Nilakanta Sastry, K. A, 'The Pandiyan Kingdom' page 106, lines 8-9
3 Ibid. Page 108. கடைசி இருவரிகள்
4 A.R.E. for 1909, Part II, Para 29; A.R.E. for 1910, Part II, Para 32,
5 Ibid. 1909, Para 29; Ibid 1910, Para 32.

இறது. இதனை இராசேந்திர சோழன் கேரளன் என்ற விசதாசன் கோயிலில் நந்தா விளக்கிற்குச் சீவல்லபனின் இருபத்தோராம் ஆட்சியாண்டில் ஆடுகளைத் தானம் செய்திருப்பதாலும், அதே கோயிலுக்குப் பராக்கிரம பாண்டியனின் பதினோராம் ஆட்சியாண்டில் நெல் தானம் செய்திருப்பதாலும் உறுதி செய்யலாம்.[1]

### கல்வெட்டுகள்

இவனது மெய்க்கீர்த்தி (பிரசஸ்தி) 'திருமகள் புணர' என்னும் அழகிய தொடக்கத்தினைக் கொண்டுள்ளது. சீவல்லபனின் சாசனங்களிலும் இவனைப்பற்றிய குறிப்புகள் காணப்படுவதனை நாம் முன்பே கண்டோம். சீவல்லபனின் பதினோராம் ஆட்சியாண்டுக் கல்வெட்டொன்று (கி. பி. 1131) 'பராக்கிரமப் பாண்டியப் பேராறு' பற்றிக் குறிப்பிடுவதனை ஈண்டு நாம் எடுத்துக்காட்டாகச் சுட்டலாம்.[2] இவனது ஆட்சிக் காலத்தில் 'திரமா' என்ற காசும் வழக்கிலிருந்ததாக அறிகிறோம்.

## சடையவர்மன் பராந்தக பாண்டியன்

இவன் பராக்கிரம பாண்டியனுக்கு எவ்வகையில் உறவினன் என்பது புலனாகவில்லை. இவன் சடையவர்மன் பராக்கிரம பாண்டியனுக்குப் பின்பு பாண்டிய நாட்டின் மணிமுடி தரித்துக் கொண்டான் போலும். பாண்டிய நாட்டின் ஒழுகலாற்றின் படி இவன் சடையவர்மன் என்னும் பட்டப் பெயரினைப் புனைந்து கொண்டான். இவன் முதலாம் குலோத்துங்க சோழனது ஆட்சிக் காலத்தின் பிற்பகுதியினைச் சார்ந்தவனாவான்.

### ஆதாரங்கள்

பராந்தக பாண்டியனது கல்வெட்டொன்று கன்னியாகுமரியில் கிடைத்துள்ளது. எவ்விதச் சிதைவுமின்றி முழுமையாகக் கிடைத்துள்ள இக் கல்வெட்டைக் கொண்டு இவனது வீரச் செயலினைத் தெளிவாக அறிந்துகொள்ள முடிகின்றது. இக் கல்வெட்டு இவ் வேந்தனது ஒன்பதாமாட்சியாண்டில் வெளியிடப் பெற்றதாகும்.[3] திருவளரச் செயம்வளரத் தென்னவர் தம் குலம் வளர' எனத் தொடங்குகின்ற இவனது மெய்க்

[1] Ibid. 1909, Part ii, Para 29. See also 1910, Part ii, Para 32.

[2] 808 of 1908

[3] Travancore Archaeological Series Vol. I. No. 3, pp. 18 ff; also Indian Ephemeries by L. D. Swamikkannu, Vol. I, Part II, Page 87.

கீர்த்தி இவ் வேந்தனது சாதனைகளை முறையாக எடுத்தியம்பு கின்றது.

### வெற்றிகள்

பராந்தக பாண்டியன் சேரவேந்தனை வெற்றி கொண்டு திறை கொண்டதையும், காந்தளூர்ச் சாலையில்கலமறுத்த தையும்,[1] விழிஞம் என்னும் நகரில் தாக்குதல் நிகழ்த்தி அதனைக் கைப்பற்றியதையும், தெலுங்க வீமனது தென் கலிங்க நாட்டினைத் தன்னடிப் படுத்தியதையும் இக் கல்வெட்டு இவனது வெற்றிச் செயல்களாக விரித்துரைக்கின்றது.

### தென் கலிங்க வெற்றி

மேற்குறிப்பிட்ட வெற்றிகளுள் இவனது தென் கலிங்க வெற்றி மிகவும் குறிப்பிடத்தக்கதாகும். இவ் வெற்றியின் காரணமாக இவன் 'தெலிங்க குல காலன்' என்னும் விருதினைப் பெற்றதாகத் தெரிகிறது. சீவல்லப பாண்டியனது கல்வெட் டொன்று, தென் காசிக்கருகிலுள்ள கருங்குலத்தினைத் தெலிங்க குல கால - சதுர்வேதி மங்கலமெனை அழைப்பதால் இக் கருத்து உறுதி பெறுகிறது. இப் பெயர் இவ் வேந்தனது குறிப்பிடத் தக்க தென் கலிங்க வெற்றியின் நினைவாக அமைந்திருப்பதாகக் கொள்ளலாம்.[2]

முதலாம் குலோத்துங்கனது மைந்தனும், அவனுக்குப் பின் சோணாட்டாட்சியினையேற்றுக் கொண்டவனுமான விக்கிரம சோழனது மெய்க்கீர்த்தியிலும் தென் கலிங்க வெற்றிபற்றியும் தெலுங்க வீமன்பற்றியும் குறிப்பிடப்பட்டுள்ளது. இவ் வெற்றி இவனது பட்டமளிப்பு விழாவிற்கு (கி. பி. 1118) முன்பும் இவன் வேங்கியில் நிலையாகத் தங்குவதற்கு முன்பும் நிகழ்ந்ததாகக் குறிப்பிடப்பட்டிருத்தலின், குலோத்துங்க சோழனது இறுதிக் காலத்திற்கு முன்பே நிகழ்ந்திருத்தல் வேண்டுமென்று அறிஞர் திரு. உல்ட்ஸ் (Hultzsch) அவர்கள் குறிப்பிடுகின்றார். இக் கலிங்க வெற்றி, கலிங்கத்துப்பரணியில் சிறப்பாகப் போற்றப் பட்டுள்ள, குலோத்துங்க சோழனின் புகழ் மிக்க கலிங்கப் போரினின்றும் வேறுபட்டதென்பதனை நாம் ஈண்டு நினைவிற் கொள்ளுதல் வேண்டும்.[1]

1 'காந்தளூர்ச் சாலை கலமறுத்தல்' என்பதற்கான விரிவான விளக்கத்தினை யான் இயற்றியுள்ள 'முதலாம் இராசேந்திர சோழன்' என்னும் நூலின்கண் கண்டு கொள்க.

2 818 of 1908 XXV P. 84

3 A.R.E. 1903, Page 4, Para 8, Also 1905, Part II, Para 8.

மேற்கூறியவற்றான் பராந்தக பாண்டியன், விக்கிரம சோழனுடன் சேர்ந்து கொண்டு தென் கலிங்க மன்னனுடன் போர் தொடுத்திருக்க வேண்டுமென்று கருதலாம். இப் படையெழுச்சி முதலாம் குலோத்துங்கனது இறுதிக் காலத்திற்கு முன்பே நடைபெற்றிருத்தலின், இப் பாண்டியன் சோழனுக் கடங்கிய சிற்றரசனாக இருந்து, சோழனது ஆணைக்கிணங்க தென் கலிங்கப் போரினைப் நிகழ்த்தியிருத்தல் வேண்டுமென்றும் கருதலாம். மார மங்கலத்தில் (கொற்கைக்கருகில்) கிடைத்துள்ள முதலாம் குலோத்துங்கனின் நாற்பத்தி நான்கு, நாற்பத்தேழாமாட்சியாண்டுக் கல்வெட்டுகளில் இராசராசப் பாண்டி நாட்டின் ஒரு பிரிவாகப் பராந்தக வளநாடும் குறிக்கப் பெற்றிருத்தலின் பராந்தகன், சோழனது ஆட்சிக்குட்பட்டவனால் வேண்டுமெனக் கருதலாம்.[1] சீவல்லப வளநாடும் இராசராசப் பாண்டி நாட்டின் பகுதியாக இக் கல்வெட்டில் குறிக்கப் பெற்றுள்ளது.

#### மண உறவு

தென் திருவாங்கூர் நாட்டிலுள்ள கூபகத்து வேந்தன் தனது மகளை இவ் வேந்தனுக்குத் திருமணம் செய்விக்க விழைந்தானெனவும், இவனும் அவளை மணஞ்செய்து கொண்டானெனவும் இவனது கல்வெட்டுணர்த்துகின்றது.

#### சீர்திருத்தங்கள்

இவ் வேந்தனது காலத்திற்கு முன்பு வழக்கத்திலிருந்த நிறுத்தலளவை, முகத்தலளவை ஆகியவை ஒழுங்காகவும் முறையாகவுமில்லாது இருந்தன. எனவே, இவன் தனது ஆட்சிக் காலத்தில் அவற்றை ஒழுங்குபடுத்தி, பழைய பெயர்களை நீக்கி விட்டு, புதிதாகக் கயல் முத்திரையினைப் பொறித்து, நாட்டில் வாணிகம் செம்மையாக நடைபெற வழி வகுத்தான்.

#### அறக்கொடைகள்

வெற்றியும் வீரமும் அணியாகக் கொண்ட பராந்தகப் பாண்டியன் இறைவன்மீது இணையற்ற காதல் கொண்டிருந்தான்; அதில் மன நிறைவும் கண்டிருந்தான். தன்னாலியன்ற அறக்கொடைகளும் இறைவர்க்களித்து வந்தான். இதனை, இவன் திருவனந்தபுரத்தில் எழுந்தருளியுள்ள திருமாலுக்குப் பத்து மணி விளக்குகள் அமைத்துள்ளதாலும், பாண்டியரது குல தெய்வ

[2] Nos. 161 and 164 of 1903; Nilakanta Sastri, K. A. 'The Pandian Kingdom' page iii, Line 18-25.

மாகிய கன்னி பகவதிக்கு, ஆண்டுதோறும் தைப்பூசத் திருவிழா சிறப்பாக நடைபெறுவதற்கும், அவ் விழாவிற்கு வரும் அன்பர்களை உண்பித்துப் பொருளுதவி புரிவதற்கும் நிவந்தமாகப் புறத்தாய நாடு முழுவதையும் வழங்கியுள்ளதாலும் நன்கறியலாம்.[1] ஆண்டவனுக்கும் அடியார்களுக்கும் திருத்தொண்டு செய்த இவன் சிறந்த கொடை வள்ளலாகவும் திகழ்ந்தான்.

## மாறவர்மன் சீவல்லபன்

**மெய்க்கீர்த்தி**

சீவல்லபன் பூரட்டாதி நட்சத்திரத்தில் பிறந்தவனுவான். இவன் கி. பி. 1132-33-ல் பாண்டி நாட்டு அரியணையேறினுன். சடையவர்மன் பராந்தக பாண்டியனுக்கு இவன் எவ்வழியில் உறவினனென்பது விளங்கவில்லை. இவ் வேந்தனது கல்வெட்டுகள் திருநெல்வேலி மாவட்டத்தின் பல பகுதிகளில் கிடைத்துள்ளன.[2] இவனது மெய்க்கீர்த்தி 'பூமகள் சயமகள் பொலிவுடன் தழைப்ப' என்னும் கவின் மிக்கத் தொடக்கத்தினைக் கொண்டுள்ளது.

கோட்டாற்றில் கிடைத்துள்ள இவ் வேந்தனது கல்வெட்டொன்று[3] குலசேகரன் என்னும் இளவரசனைப்பற்றிக் குறிப்பிடுகின்றது. சீவல்லபனின் இறப்பிற்குப் பின்னர் பாண்டி நாட்டின் அரியணைக்குப் போட்டியிட்டவர்களுள் ஒருவனுகக் குறிக்கப் பெற்றுள்ள குலசேகரன் இவ் விளவரசனுயிருத்தல் வேண்டுமென்று நாம் ஊகிக்கலாம். கோட்டாற்றில் கிடைத்துள்ள மற்றுமொரு கல்வெட்டின்[4] மூலம் இவன் திருநெல்வேலி மாவட்டம், கீழ் வேம்ப நாட்டிலுள்ள 'முனையதரையன்' என்னும் அரசிருக்கையிலமர்ந்து ஆட்சி புரிந்ததாகத் தெரிகிறது' இக் கல்வெட்டு இவ் வேந்தனது இரண்டாமாட்சியாண்டில் வெளியிடப்பட்டதாகும்.

1 'யனந்தபுரத் தெம்மாற்கு
நிலவிய பொன் மணிவிளக்கு நின்றெறியப் பத்தமைத்து
............................
தைப்பூசப் பிற்றை ஞான்று
வந்திருந்தா ரெல்லார்க்கு மாற்றாதே தியாகமிட
அறத்தால் விளங்கிய வாய்ந்த கேள்விப்
புறத்தாய நாடுபூமகட் களித்துத்
தெலிங்க விமன் குலங் கொண்டு
தென் கலிங்க மடிப் படுத்து
பராந்தக பாண்டியனது மெய்க்கீர்த்தி

2 318 of 1908 XXV, p. 84

3 49 of 1896

4 50 of 1896

5 A.R.E. 1909, Part ii, Para 29; 271 of 1927-28.

சுசீந்திரத்தில் கிடைத்துள்ள இவ் வேந்தனது பத்தாமாட்சி யாண்டுக் கல்வெட்டு ஆண்டபிள்ளை பட்ட அதிராத்ரயாஜி (Andapillai Bhatta Atiratrayaji) என்பவனைப்பற்றிக் குறிப்பிடுகின்றது. இவன் சார்பாகவே மன்னன் சுசீந்திரம் கோயிலுக்கு நிலக்கொடையளித்ததாகத் தெரிகிறது. 'கிரியப் பிரயோக வர்த்தி' (Grhayaprayogaurtti) என்னும் இந்து சமயச்சடங்குகள் அடங்கிய நூலினை இயற்றிய ஆண்ட பிள்ளையும், இவன் அதிராத்ரய யாகம் செய்த ஆண்ட பிள்ளையும் ஒருவனாயிருத்தல் வேண்டுமென்று ஆராய்ச்சியறிஞர் திரு. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியார் குறிப்பிடுகின்றார்.[1] இன்றும் இந்நூல் தென்னிந்தியாவில் பயிலப்பட்டு வருகிறது.

### எழுத்து மண்டபம்

இவ் வேந்தனது முப்பத்தோருமாட்சியாண்டுக் கல்வெட்டொன்று, இவன் வரதுங்க தேவ நல்லூர் என்னும் ஊரின் கண்ணுள்ள எழுத்து மண்டபம் (Eluthumandapam) என்னும் பெயர் கொண்ட அலுவலகத்திலிருந்து ஆணையொன்றினைப் பிறப்பித்தானென்று அறிகிறோம். எழுத்து மண்டபமென்பது தற்காலத்திய செயலகத்தினை (Secretariat) ஒத்திருந்ததாகக் கொள்ளலாம். இவ் வேந்தனது இச் சாசனம் 'சயமடந்தையும்' என்னும் தொடக்கத்தினைப் பெற்றுள்ளது.[2] இவனது முப்பத்தேழாமாட்சியாண்டுக் கல்வெட்டொன்றும் இதே தொடக்கத்தினைக் கொண்டுள்ளது. இது ஏறத்தாழ சடையவர்மன் சீவல்லபனின் மெய்க்கீர்த்தித் தொடக்கத்தினை ஒத்திருக்கிறது. இவ் வேந்தன் கி. பி. 1182 வரை ஆட்சி புரிந்ததாகத் தெரிகிறது.

இவனது காலம்வரை பாண்டியரின் வளர்ச்சிக்குப் பல இடையூறுகள் ஏற்பட்ட போதிலும் அவ் வளர்ச்சி தடைப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

## சடையவர்மன் குலசேகர பாண்டியன்

### அரியணையேறல்

மாறவர்மன் சீவல்லபனின் மகனான இவன் கி. பி. 1162ஆம் ஆண்டு பாண்டி நாட்டு மன்னனாக முடிபுனைந்து கொண்டான். இவனும் தனது தந்தையைப் போன்று திருநெல்வேலியைத் தனது தலைமையிடமாகக் கொண்டு பாண்டிய நாட்டின் தென்

[1] T. A. S. Series Vol. iv, Page 124; Nilakanta Sastri, K. A. 'The Pandyan Kingdom', Page 112, Lines 5-9.
[2] 243 of 1939—40

பகுதியினை ஆட்சி புரிந்து வந்தான். பாண்டிய நாட்டின் வட பகுதியினை இவனது உடன் பிறப்பான (Brother) பராக்கிரம பாண்டியன் மதுரையினைத் தலைநகராகக் கொண்டு மக்களைப் பேணிக் காத்து வந்தான்.

**உள்நாட்டுப் போர்**

குலசேகரன், பராக்கிரமன் ஆகிய இருவருமே பாண்டிய நாடு முழுமையையும் தாமே ஆள வேண்டுமென்று பேராசை கொண்டனர்; பகைமை கொண்டனர்; பகைமை முற்றியது; இதன் காரணமாக ஒருவருக்கொருவர் போரிடவும் தயாராயினர். குலசேகர பாண்டியன் பாண்டிய நாட்டின் வடபகுதியினைக் கைப்பற்றத் திட்டம் தீட்டினான்; தனது ஆற்றல் மிகு படையினை மதுரை நோக்கிப் புறப்படும்படி உத்தரவிட்டான்; இவனது படையும் மதுரை மாநகரினை முற்றுகையிட்டது. இவ்வாறாக குலசேகர பாண்டியன், பாண்டிய நாட்டில், முதல் உள்நாட்டுப் போரினைத் தொடங்கி வைத்தான்.

**ஈழ நாட்டுதவி**

குலசேகர பாண்டியன் தனது தலைநகரின்கண் முற்றுகை யிடுவதனைக் கண்ணுற்ற பராக்கிரம பாண்டியன் இலங்கை வேந்தனை நாடி, படையுதவியளிக்கும்படி வேண்டிக் கொண்டான். இலங்கை வேந்தனான பராக்கிரம பாகுவும் பராக்கிரம பாண்டியனுக்கு உதவியாகத் தனது படைத் தலைவனின் கீழ்ப் பெரும்படை யொன்றினைப் பாண்டிய நாட்டிற்கு அனுப்பி வைத்தான். இலங்கைப் படை கடல் கடந்து, பாண்டிய நாட்டினை வந்தடைவதற்குள், குலசேகரப் பாண்டியன் பராக்கிரம பாண்டியனை வென்று, அவனைக் கொன்று, அவனது மனைவி மக்களையும் கொன்று, மதுரையம்பதியினைக் கைப் பற்றிக் கொண்டான்.

**சிங்களர் வெற்றி**

பாண்டியநாடு வந்தடைந்த இலங்கைப்படைத் தலைவனான லங்காபுரா என்பான் இச் செய்தி கேட்டு திகைப்படைந்தான். இருப்பினும் தனது மன்னனது ஆணைக்கிணங்க குலசேகரன் மீது போர் தொடுத்தான்; இராமேச்சுரம், குந்துகாலம் என்னும் ஊர்களைக் கைப்பற்றினான். குலசேகரனது படைக்கும், பாண்டிய நாட்டின் பகுதிகளைச் சிறிது சிறிதாகக் கைப்பற்றிக் கொண்டு வந்த இலங்கைப் படைக்கும் பல இடங்களில் போர்கள் நிகழ்ந்தன; சிங்களப் படை அடுக்கடுக்காகப் பல வெற்றிகளைப் பெற்றது. குலசேகர பாண்டியனது புகழ்

படைத்த படைத் தலைவர்களான சுந்தர பாண்டியன், பாண்டிய ராசன் ஆகியோர் தோல்வியைத் தழுவினர்; ஆளவந்தான் என்னும் பாண்டியப் படைத்தலைவன் போரில் வீரமரணம் எய்தினன்.

**மீண்டும் வெற்றி**

சிங்களப் படையினரும் தோல்வி கண்ட குலசேகர பாண்டியன், கொங்கு நாட்டிலிருந்த தனது மாமனிடம் உதவி நாடி அவனிடம் இருந்த படைகளையும், சிதறிக்கிடந்த பராக்கிரம பாண்டியனின் படைகளையும், ஒன்று திரட்டினன்; அப் படைக்குத் தானே தலைமையேற்று இலங்கைப் படைத்தலைவனுடன் போர் தொடுத்தான். இப் போரிலும் பாண்டியன் இலங்கைப் படைகளிடம் தோல்வி பெற்றான். வெற்றி மடந்தைக்கு மாலையிட்ட இலங்கைப் படையினர், மதுரையைக் கைப்பற்றி, கொலையுண்ட பராக்கிரம பாண்டியனின் கடைசி மகனும், மலைநாட்டிற் கொடியவனுமாகிய வீரபாண்டியனுக்கு முடிசூட்டி, பாண்டிய நாட்டினை ஆண்டு வருமாறு செய்தனர். இவ்வாறு பராக்கிரம பாண்டியனின் வாரிசிடம் பாண்டிய நாடு ஒப்படைக்கப்பட்டது. இதுகாறும் நாம் கண்ட போர் நிகழ்ச்சிகள் யாவும் இலங்கை வரலாற்று நூலான மகாவம்சத்தில் நன்கு விளக்கப்பட்டுள்ளன. சிங்களப்படை குலசேகர பாண்டியனது படைமீது அடுக்கடுக்காக வெற்றிகளைப் பெற்றதென்றும், ஆரம்ப காலத்தில் சிங்களப் படைத்தலைவனை லங்காபுரா சில வெற்றியினைப் பெற்றானென்றும், பின்பு நடைபெற்ற போர் களில் மற்றொரு சிங்களப் படைத் தலைவனும் சகத் விசயனும் (Jaged Vijayan) புதியதொரு படையுடன் லங்காபுராவுடன் சேர்ந்து கொண்டு மேலும் பலவெற்றிகள் பெற்றானென்றும் மகாவம்சம் குறிப்பிடுகின்றது. இதனை நாம் சிறிது விரிவாகக் காண்போம்.

லங்காபுரா வீரபாண்டியனைப் பாண்டிய மன்னனாக முடி சூட்டி வைத்ததுடன் அமைதி பெறாது, கீழை மங்கலம், மேலை மங்கலம் முதலான ஊர்களையும் வென்று அவற்றினைக் 'கண்ட தேவ மழவராயன்' என்பானிடம் ஒப்படைத்து, ஆண்டு வருமாறு பணித்தான். பின்பு தொண்டி, கருந்தங்குடி, திருவேகம்பம் ஆகிய ஊர்களையும் பிடித்து மழவச் சக்கரவர்த்தியிடம் ஒப்படைத்து, அவற்றின் ஆட்சிப் பொறுப்பினையும் அவனுக்கு வழங்கினன். இவ் விதமாக சிங்களப் படைத்தலைவன் பாண்டி நாட்டுத் தலைவர்க்கு ஆட்சியுரிமை தந்து, அவர்களைத் தனக்காதரவாளர்களாக ஆக்கிக் கொண்டான்.

**வீரபாண்டியன் விரட்டப்படல்**

சிங்களப் படையிடம் தோல்வி கண்டு, தனது நாட்டினை யிழந்த குலசேகர பாண்டியன் தோல்வியால் துவண்டு விடவில்லை. மீண்டும் தனது அரசினைக் கைப்பற்றத் திட்டமிட்டான்; சிங்களப் படைத் தலைவனால் ஆட்சி வழங்கப்பெற்ற பாண்டி நாட்டுத் தலைவர்களையும் தனது பக்கம் இழுத்துக் கொண்டான்; பெரும் படை திரட்டி வீரபாண்டியனோடு போர் தொடுத்தான். குலசேகரன் போரில் வெற்றி பெற்று, மதுரையைக் கைப்பற்றி, வீரபாண்டியனை மதுரையினின்றும் விரட்டினான்.

**ஈழவர் உதவி**

வீரபாண்டியன் பதவியினின்றும் அகற்றப்பட்டதனை யுணர்ந்த சிங்களப் படைத்தலைவன் ஈழ நாட்டிலிருந்து தனக்குத் துணைப்படை அனுப்ப வேண்டி, சிங்கள வேந்தனுக்குத் தூதொன்று அனுப்பினான். பராக்கிரம பாகுவும் சகத் விசயன் என்னும் தனது படைத்தலைவனின் தலைமையில் பெரும்படை யொன்றினையனுப்பி வைத்தான். துணைப் படையின் துணை பெற்ற சிங்களப் படைத் தலைவனும் குலசேகரப் பாண்டியன் மீது தாக்குதல் நிகழ்த்தி, அவனைத் தோற்கடித்து, பாண்டிய நாட்டின் வேந்தனாக மீண்டும் வீர பாண்டியனை அமர்த்தினான். மதுரையை விட்டு ஓடிய குலசேகர பாண்டியன், மீண்டும் சிவில்லிபுத்தூரில் தோற்கடிக்கப்பட்டு, திருநெல்வேலிப் பக்கஞ் சென்று ஆங்கு தங்கியிருந்தான்.[1]

**சோழரின் தலையீடு**

நாடிழந்து, நம்பிக்கையிழந்து, துன்பத்தில் உழன்று கொண்டிருந்த குலசேகரன் செய்வதறியாது தவித்தான். வேறு வழியின்றி பாண்டியரின் நெடுநாள் பகைவரான சோழ வேந்தனிடம் தஞ்சம் புகுந்தான்; தனக்குதவி செய்யுமாறு வேண்டினான். அக் காலை சோணாட்டு வேந்தனாக வீற்றிருந்தவன் இரண்டாம் இராசாதிராசனாவான். கி.பி. 1167ஆம் ஆண்டு சோழ நாட்டில் தஞ்சம் புகுந்த குலசேகரனைக் கண்டு இரக்கம் கொண்ட இராசாதிராச சோழன் அவனது வேண்டுகோளை ஏற்றுக் கொண்டான்; திருச்சிற்றம்பலமுடையான் பெருமானம்பிப் பல்லவராயன் என்னும் பெயர் கொண்ட தனது படைத்தலை

[1] இந் நிகழ்ச்சிகளனைத்தும் மகாவம்சத்தில் 76, 77ஆம் அதிகாரங்களில் விளக்கப்பட்டுள்ளன. இந் நூல்களில் குறிக்கப் பெற்றுள்ள தமிழ்நாட்டூர்கள் சில யாண்டுள்ளதென்று நம்மால் அறிந்து கொள்ளக் கூடவில்லை. சிலர் மகாவம்சத்தில் கூறப்பட்டுள்ள அனைத்தையும் ஒப்புக்கொள்ள வியலாதெனக் கருதுகின்றனர்.

வனின்கீழ்ப் பெரும்படையொன்றினைப் பாண்டிய நாட்டிற் கனுப்பி வைத்தான்.

### போர்கள்

சோழரது படையும், பாண்டியர்-சிங்களர் இணைப்புப் படையும் தொண்டி, பாசிப்பட்டினம் என்னும் இடங்களில் சந்தித்துப் போர் புரிந்தன. கடும் போருக்குப் பின் சிங்களப் படைத் தலைவர்களான லங்காபுரா, சகத் விசயன் ஆகியோர் வெற்றி பெற்றனர். இதனைக் காஞ்சி மாநகரினையடுத்துள்ள ஆர்ப்பாக்கம் கல்வெட்டாலறியலாம்.[1] இக் கல்வெட்டு இராசாதிராச சோழனின் ஐந்தாமாட்சியாண்டில் வெளியிடப் பெற்றதாகும்.

### சோழரின் வெற்றியும் குலசேகரன் முடிசூடலும்

இதற்குப் பின்னர் நடைபெற்ற போரில் சோழரது பெரும் படை தனது முழு வலிமையும் கொண்டு சிங்களரைத் தாக்கி, அவர்களைத் தோற்கடித்ததோடு, சிங்களப் படைத்தலைவர்களது தலைகளையும் கொய்து அவற்றினை மதுரைக் கோட்டை வாயிலில்

[1] S.I.I. Vol. VI, No. 456; 20 of 1899.

'ஈழப்படை பாண்டி மண்டலத்தைக் கைக்கொண்டு மதுரையிலே இருந்த ராஜா குலசேகரனைப் போகத் துரத்தி, பின்பு மகாராஜா ஸ்ரீ ராஜாதிராஜதேவர் ஸாமந்தரோடே பூசல் வரத் தொடங்கி, தொண்டிபாசி முதலிய பிரதேசத்தில் பூசலுண்டாய் அபாயத்திலே ஈழப்படை ஜயித்தவாறே சோழ மண்டலத்திலும் மற்றுமுள்ள நாடுகளிலும் உள்ள ஜனங்களெல்லாம் பயப்பட்டமையைக் கேட்டு, எதிரிலி சோழ சம்புவராய சேனன் 'எனக்கு இது எங்ஙனேயாமோ என்று விசாரந்தோன்றி, ஸ்வாமிதேவர் ஸ்ரீபாதத்தேறச் சென்று இப்படிப் புகுந்தது ஈழப்படையாகிறது' சாலப் பாபகர்மாக்கள்; அவர்கள் சோழ மண்டலத் தெல்லை புகுதில், ஸ்ரீமகாதேவர் கோயிலுள்ளிட்ட தேவர்கள் கோயிலுக்கும் பிராமணர்களுக்கும் ராஷ்டிரத்துக்கும் அடங்க விரோதமுண்டாகும். இதுக்கும் பரிகாரமாக ஜபஹோம மார்ச்சனங்களால் எல்லாப்படியாலும் அபுஷ்டரமதம பண்ணியருளவேணும்' என்று விண்ணப்பஞ் செய்ய தேவர் அருளிச் செய்கிறார்— 'ஈழப் படையாகிற இது சாலப் பாபிஷ்டருமாய் துர்ஜனருமாய் திருவிராமீச் வரத்தில் தேவர் கோயிலைத் திருக்காப்புக் கொண்டு பூஜை முட்டப் பண்ணி அங்குள்ள ஸ்ரீபண்டாரங்களெல்லாம் கைக்கொண்ட சிவத்துரோகிகள் என்னு மிடம் அறிந்தோம். அவர்கள் பூசலிலே அறப்பட்டுத் துரப்புண்டு போம்படிக்கு அதிருஷ்ட முகத்தாலே வேண்டும யத்னம் பண்ணுகிறோம்' என்றருளிச் செய்து இருபத்தெட்டுநாள் அகோரலி பூஜை பண்ணியருளினர். இதுக்குப பின்பு பிள்ளை பல்லவராயர் பாடு நின்றும் எனக்கு ஓலை கொண்டு தூதர் வந்தார்கள். அதில் 'ஜயத் நாத் தண்ட நாயக்கனும் லங்காபுரி தண்ட நாயக்கனும் உள்ளிட்ட பிரதானிகளும் படையும் அடங்கப்பட்டு ஓடிப் போச்சுது' என்று சொல்லி வந்தது. இப் பட்டாங்கை தேவர் ஸ்ரீபாதத்திலே ஸம்ப்ரமத்துச் செ... 'தேவர் செய்தருளின அதிருஷ்ட யத்னமாய் இப்படி வந்த'தென்று விண்ணப்பம் செய்தனர்'.

குறிப்பு:— சம்புவராய சேனர் என்பார் பாண்டி நாட்டுப் போரில் பல்லவ ராயர் ஈடுபட்டிருந்த காலத்தில், சோழ அரசியலில் தலைமையதிகாரம் வகித்து வந்தவர் என்பதும் இதனால் போதரும்.

வைத்து, அனைவரும் காணும் நிலைக்கு உள்ளாக்கியது.[1] இதன் பின்னர் சோழர் படைத்தலைவனான திருச்சிற்றம்பலமுடையான் பெருமானம்பிப் பல்லவராயன் மதுரை மாநகரினை குலசேகர பாண்டியனுக்கு வழங்கி, அவனைப் பாண்டி நாட்டு மன்னனாக மீண்டும் ஆண்டு வருமாறு செய்தான். இவனது ஆட்சியும் சில காலம் நீடித்தது. இவ்வாறு குலசேகர பாண்டியன் சோழரது உதவியினால் பாண்டி மன்னனாக முடிபுனைந்து கொண்டான்.

### நன்றி மறந்த குலசேகரன்

குலசேகர பாண்டியன் சோழரது உதவியால் சிங்களப் படையினைத் தோற்கடித்ததைக் கேள்விப்பட்ட சிங்கள வேந்தனும் பராக்கிரம பாகு பெருஞ்சினங் கொண்டான்; பாண்டியன் குலசேகரன்மீதும் சோழன்மீதும் போர் தொடுக்க முயன்று, அம் முயற்சியில் தோல்வி கண்டான். எனவே, வேறு வழியின்றி குலசேகரன் பாண்டியனைப் பாண்டி வேந்தனாக ஏற்றுக்கொண்டு, பரிசுகள் பல அவனுக்களித்து அவனுடன் நட்புக்கொண்டான். குலசேகர பாண்டியனும், இலங்கை வேந்தனுடன் நட்புறவும், திருமண உறவும் கொள்ள ஒப்புதல் அளித்தான்.[2] தனக்கு அரச பதவியளித்த சோழ வேந்தனது உதவியை மறந்தான்; அவனது நட்பினையும் துறந்தான். சோழ வேந்தரிடத்து நெருங்கிய தொடர்பும், நட்பும் கொண்டிருந்த

[1] Epi. Ind. Vol. XXI. No. 31.

14 '...... ஈழத்தானி பாண்டி நாட்டிலே படைகளும் காரணவர் ஆனாரை யு(ம்) மிகுதிப்... விட்டு இந் நாடு கைக்கொள்ளக் கடவனாகப் பண்ணின இ... பாண்டியனார் குலசேகர தேவர் —

15. தம்முடைய ராஜ்யம் விட்டுச் சோழ ராஜ்யத்திலே புகுந்து என்னுடைய ராஜ்யம் நான் பெறும்படிப் பண்ணவேணும் என்று சொல்ல இவர் உடையார் ...... வர் பெறும்படி பண்ணக்கட—

16. வர் ஆகவும் இந்த ராஜ்யத்திலே புகுந்து (வந்து) கைக்கொண்ட இலங்காபுரி தண்ட நாயகனுள்ளிட்டாரைக் கொன்று பாண்டியர்கள் இ—

17. ருப்பான மதுரை வாசலிலே இவர்கள் தலை தைப்பிக்கக் கடவராக உஞ் சொல்லி இப்படி எல்லாம் விண்ணப்பஞ் செய்து திருவுள்ளம் ஆனபடியே பாண்டியனார் குலசேகர தேவர் சோழ ராஜ்யத்தில் இருந்த நாளில் இவர்க்குவே—

18. ண்டுவன [illegible]ங் குறைவறச் செய்து பரிகரித்த பலத்தாலும் அர்த்தத்தாலும் உ[illegible]லும் பாண்டி நாடு கைக்கொண்டு தாஞ் சொன்ன படியே இலங்காபுரி தண்ட நாயகன் உள்ளிட்டாரைக் கொன்று இவர்கள் தலை—

19. மதுரை வாசலிலே தைப்பித்து பாண்டியனார் குலசேகர தேவர் மதுரையிலே புகுகைக்குச் செய்ய வேண்டுவனவும் வன்...... (ஜ்யத்)து செய்வித்து இவரை மதுரையிலே புகவிட்டுப் பாண்டிய நாடு ஈழ நாடாகாத—

20. படி பரிகரித்துச் சோழ ராஜ்யம் சென்ற படிக்கு ஈடாகத் தொண்டை நாடும் பாண்டி நாடும் செல்லும்படியும் பண்ணி ராஜ காரியங் கொண்டு நிர்வகிக்கக் கடவம்... சூத்தங் கட்டளை இட்டுக் காரியங் கொண்டு செலுத்தினபடியே தமக்குப் பி—'

—பல்லவராயன் பேட்டைச் சாசனம்.

[2] Epi. Ind' Vol. XXII, No. 14. (வடதிருவாலங்காட்டுக் கல்வெட்டு)

இராசராசக் கற்குடி மாராயன், இராச கம்பீரக் அஞ்சுக் கோட்டை நாடாழ்வான் முதலான பாண்டியப் படைத் தலைவர்களை அந் நாட்டினின்றும் விரட்டினான். மதுரைக் கோட்டைச் சுவரில் முன்பு பலரது பார்வைக்கு வைக்கப்பட்ட சிங்களப் படைத்தலைவர்களது தலைகளையும் அகற்றினான்.

**குலசேகரன் அரியணையை இழத்தல்**

குலசேகர பாண்டியன் நன்றி மறந்து, சோழருக்கெதிரான நடவடிக்கையில் ஈடுபட்டு வருவதனையும் அறிந்த சோழவேந்தன் அவனைத் தண்டிக்க உறுதி பூண்டான்; தன் அமைச்சனும் தேவ தானமுடையான் அம்மையப்பன் அண்ணன் பல்லவராயனது[1] தலைமையில் பெரும்படையொன்றினையனுப்பி, மதுரை மாநகரின்மீது படையெடுக்க ஆணையிட்டான். அவனும் பாண்டி நாடு நோக்கி விரைந்து படை நடாத்திச் சென்று, குல சேகர பாண்டியனை வென்று, பராக்கிரம பாண்டியனின் மகனை வீரபாண்டியனுக்கு அளித்து, அவனை அரியணையிலேற்றினான்.[2] இவ்வாறு இராதிராச சோழன் நன்றி கொன்ற குலசேகரனைப் பழி வாங்கினான்.

இதுகாறும் கூறியவற்றான் நாடிழந்து அல்லற்பட்ட குல சேகர பாண்டியன் இரண்டாம் இராசாதிராசனின் பேருதவி யினால் கி. பி. 1168ஆம் ஆண்டு பாண்டி நாட்டினைக் கைப்பற்றி, நன்றி கொன்ற தன்மையினால் கி. பி. 1175-ஆம் ஆண்டில் இராசாதிராச சோழனாலேயே அரியணையினின்றும் நீக்கப் பட்டான் என்பது தெளிவு. 'எந்நன்றி கொன்றார்க்கும் உய் வுண்டாம், உய்வில்லை செய்ந் நன்றி கொன்ற மகற்கு'[3] என்னும் வளமார்ந்த வள்ளுவனின் வாய்மொழிக்கு இலக்கணமாகத் திகழ்ந்தான் இவன். இந் நிகழ்ச்சிக்குப் பின் இவனைப்பற்றிய செய்திகள் யாண்டும் கிடைக்கப் பெறவில்லை.

**முடிவு**

பாண்டிய அரசின் மறுமலர்ச்சிக்கு அடிகோலிய மாறவர்மன் சீவல்லபன், எத்துணையோ இன்னல்களுக்கிடையேயும் தனது அரசினைத் தடைபடாது காத்தோம்பி வந்தான். இவ்வாறு கண்ணுங் கருத்துமாய் பேணிப் பாதுகாக்கப் பெற்ற பாண்டிய அரசு, குலசேகரனது ஆட்சிக் காலத்தில் தனக்கும் பராக்கிரம பாண்டியனுக்குமிடையே ஏற்பட்ட தகராறின் விளைவாக

1. A.R.E. 1924, Part ii, Para. 21.
2. Epi. Ind. Vol XXII. page. 86.
3. திருக்குறள் 110.

வளர்ச்சி பெருமல் நின்றது. சோழரும், சிங்களவரும் இவ்வுள் நாட்டுப் போரில் தலையிட்டதன் காரணமாக, சிறு போர் பெரும் போராக மாற்றப்பட்டது. இதனால் இக் கால கட்டத்தில், பாண்டியரின் வளர்ச்சி குன்றியது. சோழரின் செல்வாக்கு வளர ஆரம்பித்தது.

## சடையவர்மன் பராக்கிரம பாண்டியன்

### முன்னுரை

இவன் எப்பொழுது அரசு கட்டில் ஏறினன் என்பதுபற்றி அறிந்து கொள்ள இயலவில்லை. இவன் பாண்டிய நாட்டின் வட பகுதியினை மதுரையில் வீற்றிருந்து ஆண்டு வந்தனனென்பதனை நாம் முன்பே கண்டோம். இவன் எவ்வாறு பாண்டிய நாட்டின் வட பகுதியினைப் பெற்றனனெனவும், அதற்குச் சாதகமான சூழ்நிலை யாது? எனவும் நம்மால் அறிந்து கொள்ளக் கூடவில்லை. இவை ஒரு புதிராகவே இன்றளவும் உள்ளன.

### ஆதாரம் அதிகமின்மை

குலசேகர பாண்டியனைப்பற்றிய செய்திகள் அதிக அளவில் கிடைத்துள்ளபோது, அவனுக்குச் சமகாலத்தில் வாழ்ந்தவனும், தாயத்தினனும், அரச பதவிக்குப் போட்டியிட்டவனுமான பராக்கிரம பாண்டியனைப்பற்றிய செய்திகள் குறிப்பிடத் தக்க வகையில் யாதும் கிடைக்காமலிருப்பது விந்தையாக உள்ளது. இருப்பினும் இவன் சீவல்லபனுக்குச் சம காலத்தில் வாழ்ந்தவன் என்பதும், அவனுடன் இணைந்து அரசப் பகர ஆளுநராக (Co-regent) ஆட்சியை மேற்கொண்டவனென்பதும் அறியப்படுகின்றது.

### கடமை தவறிய அருச்சகர் நீக்கப்பெறல்

திருநெல்வேலி மாவட்டம் தேவதானத்தில் மிக அண்மைக் காலத்தில் கண்டுபிடிக்கப்பட்ட இரு கல்வெட்டுகளால் இவ் வேந்தன் காலத்திய ஒரு சில செய்திகளையறிந்து கொள்கிறோம்.[1] இவற்றுள் ஒன்று இவ் வேந்தனது காலத்திய கோயில் அருச்சகர் (Priest) பற்றிக் குறிப்பிடுகின்றது. இவ்வூர்க் கோயிலிலமர்த்தப் பட்ட அருச்சகர்கள் தங்களது கடமைகளைச் செய்யாமல் வீண் பொழுது போக்கினர். இவர்கள் தமது கடமைகளைச் செய்ய வேண்டுமென்று பல முறை அழைப்பு விடுத்த போதிலும் அதற்குச் செவி சாய்க்கவில்லை. ஒருமுறை கோயிலுக்கு வருகை

[1] A.R.E. 1939-40, p. 244.

ந்த மன்னன், இவர்கள் சரியாகத் தமது திருப்பணிகளைச் செய்யாத காரணத்தால் அவர்களை விலக்கி விட்டு புதியஅருச்சகர் ஒருவரை நியமித்தான். இவ்வாறு நியமிக்கப்பட்ட அருச்சகர் பெயர் முடி வழங்கும் பாண்டிய பிரம்மாதிராயனுன சூரிய பட்டர் ஆகும். இந் நிகழ்ச்சியினைக் கொண்டு பாண்டிய நாட்டில் அச் சமயத்தில் குழப்பமும் கொந்தளிப்பும் ஏற்பட்டு, அரசியலில் அமைதியற்ற சூழல் நிலவியது என்பதனை உணர லாம். இதனைப் போன்று இலங்கை நாட்டுப் படைத்தலைவன் திருப்பத்தூரைக் கைப்பற்றியபோழ்து, அக் கோயிலில் முறை யான வழிபாடு நிறுத்தப் பட்டதென்பதனை ஈண்டு ஒப்புமையாகக் கூறலாம். அரசியலில் அமைதியின்மையோ, வெளிநாட்டுப் படையெழுச்சியால் மக்களுக்குத் தொல்லையேற்பட்ட காலத்தோ, கோயிலில் முறையான வழிபாடு நிறுத்தப்படும்.

#### கோயில் நிர்வாகம்

தேவதானம் கோயிலுக்குப் புதிய அருச்சகரை நியமித்த இம் மன்னன் அக் கோயிலைப் புதுப்பிப்பதற்கும் தகுந்த ஏற்பாடு களைச் செய்தான். இதனைக் கொண்டு அக் காலத்தில் பாண்டி வேந்தர் கோயிலை நன்கு பாதுகாத்து வந்தனரென்றும், அடிக்கடி அதனை நன்கு மேற்பார்வை பார்த்து ஆவன செய்தனர் என் பதும் புலனுகும். இவர்கள் காலத்திலும் கோயில் விவகாரங் களைக் கவனிக்க படைத்தலைவர்கள் போன்ற அதிகாரிகள் நியமிக்கப்பட்டனரெனவும் ஊகிக்கலாம். மாறவர்மன் சீவல்லபனது (கி.பி. 1133-ல் அரியணையேறல்) கல்வெட் டொன்றும் ஆங்கு காணப்படுகிறது. நெமெலி உதையன் என்பான் (Nemeli Udaiyan) இவ்விரு சாசனங்களிலும் தனது கையெழுத்தினையிட்டு உறுதியளித்துள்ளான் (attested). சீவல்லபனது சாசனத்தில் பராக்கிரம சந்தி (Parakrama Sandi) பற்றியும் குறிக்கப்பட்டுள்ளது. இதனைக் கொண்டு பராக்கிரம பாண்டியன் சீவல்லபனின் சம காலத்தவனென்றும், அவன் கூட்டுப் பகர ஆட்சியாளராகவும் (Co-regent) இருந்தான் என் பதும் விளங்குகின்றது.

#### முடிவுரை

இவற்றைத் தவிர இவனைப்பற்றி அறிந்து கொள்ளத் தக்க ஆதாரங்கள் நமக்குக் கிடைக்கவில்லை. எப்படியிருப்பினும் ஆராய்ச்சியறிஞர் திரு. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியார் குறிப்பிட் டுள்ளது போன்று இவன் தொடக்கத்தில் சோழ வேந்தருக்கு உண்மையுள்ளவனுக விளங்கியவனுதல் வேண்டுமென்று கருத லாம். இவன் ஈழ நாட்டு வேந்தனுன பராக்கிரம பாண்டி

யனுடன் தொடர்பு கொண்டிருந்தனனென்பதும் ஈண்டு நினைவு கொள்ளத் தக்கதாகும்.

## சடையவர்மன் வீரபாண்டியன்

### கி.பி. 1175-ல் முடிசூடல்

வீரபாண்டியன் சடையவர்மன் பராக்கிரம பாண்டியனின் மகனும் பாண்டிய அரச பதவிக்கு முதலாம் குலசேகர பாண்டியனுடன் போட்டியிட்ட இளவரசனுமாவான். சிங்களப் படைத் தலைவர்களின் பெருந்துணையால் இவன் பாண்டி நாட்டின் அரசுரிமையைப் பெற்றான். சில ஆண்டுகள் ஆட்சி புரிந்தான்; பின்பு சோழர் படையெழுச்சியின் விளைவாக கி.பி. 1168-ல் அரசுப் பதவியைத் துறக்க நேரிட்டது. இவனுக்குப் பின் குலசேகர பாண்டியன் சோழரது முயற்சியால் மதுரை மாநகரின்கண் அரியணையிலமர்ந்தான். பின்பு, குலசேகர பாண்டியன் தனக்கு உதவி புரிந்த சோழருக்கு நன்றியுணர்வுடன் நடந்து கொள்ளாததால் சோழர் படைத் தலைவனான வேதவனமுடையான் அம்மையப்பன் அண்ணன் பல்லவராயன் என்பான் தனது வேந்தனின் ஆணைப்படி அவனை நீக்கி விட்டு, வீரபாண்டியனுக்கு ஆட்சியுரிமை வழங்கினான். எனவே, இவன் மீண்டும் கி. பி. 1175ஆம் ஆண்டில் பாண்டி நாட்டின் வேந்தனாக மணிமகுடம் சூட்டிக் கொண்டான்.

இவனது மெய்க்கீர்த்தி 'பூமடந்தையும் சயமடந்தையும்' என்ற எழில் மிக்கத் தொடக்கத்தினைக் கொண்டுள்ளது; இவ் வேந்தன் கி. பி. 1180ஆம் ஆண்டு வரையில் பாண்டி நாட்டு அரியணையில் அமர்ந்திருந்தான் எனக் கொள்ளலாம்.

### சோழனின் உதவி

கி. பி. 1178ஆம் ஆண்டு சோணாட்டின் பேரரசனாக மூன்றாம் குலோத்துங்க சோழன் அரச அமளிமிசையமர்ந்தான். இந் நிலையில் வீரபாண்டியனோ தான் அரசு பதவியெய்தப் பேருதவிப் புரிந்த சோழருக்கு நன்றியுணர்வுடன் நடந்து கொள்ளாது, சிங்கள வேந்தனுடன் நட்புறவு கொண்டு, நன்றி கொன்றவனாக விளங்கினான். இத் தருணத்தில்தான் சடையவர்மன் குலசேகர பாண்டியனது மைந்தனான விக்கிரம பாண்டியன் என்பான் தனது தந்தையிடம் கருத்து வேறுபாடு கொண்டு அவனை விட்டு நீங்கி, தனது தந்தையின் நன்றி மறந்த பண்புக்கு வருந்தி, மூன்றாம் குலோத்துங்கன்பால் அடைக்கலம் புகுந்தான். தனது நாட்டைத் தான் ஆட்சி புரிய வேண்டுமென்றும்

வேண்டிக் கொண்டான்.[1] மூன்றும் குலோத்துங்க சோழனும் இவனது வேண்டுகோளை ஏற்றுக் கொண்டு ஆவன புரிய உறுதி யளித்தான்; வீரபாண்டியனுக்கெதிராகப் பாண்டி நாட்டின் மீதுத் தாக்குதல் நடத்த ஆணை பிறப்பித்தான்.

**பாண்டிய—சோழப் போர்**

சோழர்களிடம் தோல்வி கண்டும் தளர்ச்சியடையாத பராக்கிரம பாகு (இலங்கை வேந்தன்) சோழர்களை ஒழித்துக் கட்டத் தருணம் நோக்கியிருந்தான். எனவே, இதனையே வாய்ப் பாகக் கொண்டு ஈழப் படையும், பாண்டியப் படைகளுடன் சேர்ந்து கொண்டு சோழரை எதிர்க்கத் தயாராயின. வேணாட்டுத் தலைவனும் இவர்களுடன் சேர்ந்து கொண்டதாகத் தெரி கிறது.

கி. பி. 1180ஆம் ஆண்டில்[2] மூன்றும் குலோத்துங்க சோழனது படைக்கும், வீரபாண்டியனது படைக்கும் நடந்த போரில் வீரபாண்டியனது மைந்தன் ஒருவன் போர்க்களத்தில் படுகாயமுற்று வீரமரணமெய்தினன். சோழனின் வலிமை மிக்க தாக்குதலுக்கு எதிர் நிற்க மாட்டாது ஈழகப் படைகளும் மறவர் படைகளும் நிலைகுலைந்து ஓட ஆரம்பித்தன. ஈழப் படை களும் சோழப் படைக்கஞ்சி புறமுதுகு காட்டியோடின. போரில் பெரு வெற்றி பெற்ற மூன்றும் குலோத்துங்கன் மதுரையையும், பாண்டிய நாட்டையும் கைப்பற்றித் தன்னிடம் அடைக்கலம் புகுந்த விக்கிரம பாண்டியனுக்கு அளித்து மகிழ்ந் தான்.[3] வீரபாண்டியன் நாடிழந்த செய்தியும், பராக்கிரம பாண்டியன் பாண்டி நாட்டின் அரியணையேறிய செய்தியும் நிகழ்வுற்ற காலம் கி.பி. 1180 ஆகும். இங்ஙனம் வீரபாண்டியன் பாண்டிய நாட்டினின்றும் துரத்தப் பட்டான்; விக்கிரம பாண் டியன் அரியணையிலமர்த்தப்பட்டான்.

**நெட்டூர் போர்**

நாடிழந்த வீரபாண்டியன் வேறு வழியின்றி மலை நாட்டிற்கு ஓடினன்; சேர மன்னனின் உதவியை நாடினன்; தனது நாட்டினை மீட்டுத் தர வேண்டினன். இவனது வேண்டு கோளுக்குச் செவிசாய்த்த சேர வேந்தனும் படையொன்றினை அவனுக்குத் துணையாக அனுப்பி வைத்தான். 'சிதறிக் கிடந்த தனது படையுடன் இத்துணைப் படையையும் சேர்த்துக்

[1] S.I.I.Vol. VI. No. 436. (திருக்கொள்ளம்பூதூர்க் கல்வெட்டு)
[2] Ins. 190 of 1904.
[3] S.I.I. Vol. III. No. 86&87.

கொண்டு வீர பாண்டியன் மதுரை நோக்கிப் படை நடத்திச் சென்றான். இதனைக் கேள்வியுற்ற மூன்றாம் குலோத்துங்க சோழன் வலிமை மிக்க தனது படையுடன் விரைந்து சென்று வீரபாண்டியனது படையினை மதுரையம்பதிக்குக் கிழக்கே யுள்ள நெட்டூர் என்னுமிடத்தில் இடைமறித்துக் கடும்போர் புரிந்தான். சோழருக்கு ஆதரவாக வாண கோவரசன் ஒருவன் போரிட்டான். இவன் சோழருக்கடங்கிய குறுநில மன்னனும், இப் போரில் பெருவீரம் விளைவித்துப் போரிட்டவனும் ஆவான். இப் போரில் வீரபாண்டியனது படை வீரத்துடன் போரிட்ட போதிலும் சோழப் படையின் கடுமையான தாக்குதலுக்குத் தாக்குப்பிடிக்கவியலாது சிதறியோட ஆரம்பித்தது. புலிக் கொடியின் முன்னே மீன் கொடி தாழ்ந்தது. வெற்றித் திருவினை மணந்த குலோத்துங்கன் பாண்டியரைப் புறங் கண்டதுடன், பாண்டியரது அரச முடியையும் (crown) கவர்ந்து கொண்டான்.[1] பாண்டியனது தேவி சோழ வேந்தனால் சிறைப் பிடிக்கப்பட்டு, வேளத்தில் வைக்கப்பட்டாள். உயர்ந்த குடியைச் சார்ந்த மகளிர்க்குச் சோழர் அமைத்த சிறைக் கோட்டம் வேளம் என்றழைக்கப்பட்டது. குலோத்துங்க சோழனின் நெட்டூர் வெற்றியினைப் பாணப்புலவன் சிறப்பித்துப் பாடினான். இப் பாட்டுத் திறத்தினைப் போற்றிய சோழன் பாணனுக்குப் பாண்டி நாட்டின் அரசினை வழங்கினான். இதனை 'மதுரை கொண்ட தோள் வலி பாடிய பாணனைப் பாண்டியன் என்று பருமணிப் பட்டம் சூட்டினான்' என்ற குலோத்துங்க சோழனது மெய்க் கீர்த்தியாலறியலாம்.

**சோழனைப் பணிதல்**

தோல்வியைத் தழுவிய வீரபாண்டியனோ துன்ப மிகுதியால் துடித்தான்; கண்ணீர் வடித்தான். செய்வதறியாது விழித்தான்; பின்பு தனது உரிமைச் சுற்றத்துடன் திருவனந்தபுரம் சென்று சேர வேந்தனிடம் அடைக்கலம் புகுந்தான். இவனது அடைக் கலத்தைச் சேர வேந்தன் ஏற்றுக் கொண்ட போதிலும், இதன் காரணமாக மூன்றாம் குலோத்துங்கனின் பகைமையைத் தான் பெற நேரிடுமோ என அஞ்சினான். எனவே, வீரபாண்டியனையும் அவனது இரு மக்களையும் உடன் அழைத்துக் கொண்டு மதுரையம்பதியில் கொலுமண்டபத்தில் (Court) வீற்றிருந்த குலோத்துங்க சோழனிடம் எல்லோரும் ஒருங்கே அடைக்கலம் புகுந்தனர்.

[3] S.I.I. Vol. VIII. No. 797: Inscriptions of the pudukkottai state. No. 166. இவண் நெட்டூர் எனக் குறிக்கப்பட்டுள்ள ஊர் இராமநாதபுரம் மாவட்டம் சிவகங்கை வட்டத்திலுள்ள இளையான்குடிக்கருகில் உள்ளது.

**சோழனின் பெருந்தன்மை**

தஞ்சமென வந்தோரைக் காத்தல் அறனெனும் தங்க நிகர் கருத்தினைக் கொண்டிருந்த சோழனும் அவர்களுக்கு நல்லாசி கூறி அன்புடன் ஏற்றுக்கொண்டான். இத் தருணத்தில் மூன்றும் குலோத்துங்க சோழன், தன்னடி பணிந்த வீரபாண்டியனது தலையில் தன்னடி வைத்தானென்றும், பாண்டியன் சோழனிடம் முற்றிலும் பணிந்தானென்பதனையே இது குறிக்கின்றதென்றும் கருதுகின்றனர். இதனை 'அவன் முடிமேல் அடி வைத்து' என வரும் கல்வெட்டாலறியலாகும். மூன்றும் குலோத்துங்கன் வீரபாண்டியனது தலையினை வெட்டி வீழ்த்தி அதன்மீது தனது காலினை வைத்தானென்று திரு. எஸ். கிருட்டிணசாமி அய்யங்கார்[1] தமது நூலின்கண் குறித்துள்ளார். இதற்குத் தக்க ஆதாரங்கள் யாண்டும் காணப்படவில்லை. இது உயர்வு நவிற்சியாக இருக்கலாம்.

தன்னைத் தஞ்சமெனக் கொண்ட வீரபாண்டியனுக்குத் தன்னாலியன்ற உதவியைச் செய்ய நினைத்தசோழன், அவனுக்குப் பாண்டிய நாட்டின் பகுதி ஒன்றினையளித்து அப் பகுதியின் மன்னனாக மணி மகுடம் சூட்டி வைத்தருளினான். அத்துடன் நில்லாது அவனது மைந்தனுக்குப் 'பருதி குலபதி' என்ற பெயரைச் சூட்டி[2] இச் சோழன் முன் நிறுத்தினான். இதனால் மகிழ்ந்த சோழன் பருதி குலபதியைத் தன்னருகிலமர்த்தி உணவுண்ணும் வாய்ப்பினையும் பெருமையினையுமீந்து 'இருநிதியும் பரிசட்டமும் இலங்கு மணிக் கலனும் நல்கினன்' திருவக்கரை, திட்டைக்குடி முதலான ஊர்களில் காணப்பெறும் கல்வெட்டுகளின் துணை கொண்டு பார்த்தால், மேற்கூறிய நிகழ்ச்சிகள் யாவும் கி. பி. 1182-க்குள் நிகழ்வுற்றிருத்தல் வேண்டுமென்று கருதலாம்.[3] இதனை அறுதியிட்டு உறுதியாகக் கூறத் தக்க சான்றுகள் இதுகாறும் கிடைக்கவில்லை.

[1] Krishnaswami Iyangar 'South India And Her Muhammadan Invaders' page. p. 26.

[2] 'பருதி குலபதி' என்பது குலோத்துங்கனின் சிறப்புப் பெயர்களுள் ஒன்றாயிருத்தல் வேண்டும். மாறவர்மன் சுந்தர பாண்டியன் சோழரைப் பழிக்குப் பழி வாங்கும் முகத்தான் செய்த காரியங்களிலே சோழன் தான் பெற்ற புதல்வனை நின்பேரென்று (பாண்டியர்) முன் காட்டித் தொழுதெழுந்தான்' என்று அப் பாண்டியன் மெய்க்கீர்த்தி கூறுதல் இங்கு ஒப்பிடத் தகுந்ததாகும்.

[3] குலோத்துங்க சோழன் மதுரையும் பாண்டியன் முடித்தலையும் கொண்டருளிய நிகழ்ச்சி, இவன் பட்டமெய்திய இரண்டாண்டுகள் நிகழ்ந்ததாதல் வேண்டும். இவன் கி. பி. 1178ஆம் ஆண்டு ஜூலை மாதம் ஆறும் தேதி முதல் எட்டாம் தேதிக்குள் அரியணையேறினன் என்று கணிக்கப்பட்டுள்ளது. திருவக்கரை சாசனம் இவனது இரண்டாமாட்சியாண்டில் வெளியிடப் பெற்றது இவன் இவ் வெற்றிகளைத் தனது இருபத்திரண்டாம் வயதில் பெற்றதாகக் கொள்ளலாம். இவ் வினைமைக் செயல்களையே இவனது கோவையும் பின்வருமாறு புகழ்கிறது:

**முடித்தலை கொண்ட சோழபுரம்**

நெட்டூர் போரில் பாண்டியனது முடியைக் கவர்ந்து கொண்டதன் காரணமாகவே இவன் 'மதுரையும் பாண்டியன் முடித் தலையும் கொண்டருளிய' எனக் குறிக்கப்பட்டுள்ளான். பாண்டியனது முடித்தலை கொண்ட களமாதல்பற்றியே, மதுரைக்கு 'முடித்தலை கொண்ட சோழபுர'மென்ற பெயர் பின்பு வழங்கப் பட்டது. இதனை 'மல்லல் வையை மதுரையையும் மதுரை யென்ற பேர் மாற்றி, தொல்லை முடித்தலை கொண்ட சோழபுரம் என்றருளி' எனவரும் குலோத்துங்கனது மெய்க்கீர்த்தியா லறியலாம்.

மொகலாய வேந்தன் உமாயூனைப் (Humayun) போன்று, தனது வாழ்நாளில் இவன் அல்லல் பல பட்டு ஆற்றாது அமைதி யின்றி வாழ்ந்து வந்தனன் என்பது இவண் நினைவு கூரத்தக்க தாகும். இருப்பினும் இவன் தனது இறுதிக் காலத்தில் சில காலம் அமைதிக் கனியைச் சுவைத்து இறந்திருத்தல் வேண்டு மென்று கருதலாம். மூன்றும் குலோத்துங்க சோழனால் அளிக்கப்பட்ட அரச பதவியினை இவன் தனது வாழ்நாள் முழுவதிலும் காப்பாற்றி வந்தவனாதல் வேண்டுமென்றும் நாம் ஊகிக்கலாம். இன்பமும் துன்பமும் இரவு பகல் போன்று இவனது வாழ்வில் மாறிமாறி வந்தன.

## சடையவர்மன் விக்கிரம பாண்டியன்

**சோழரின் உதவி**

விக்கிரம பாண்டியன், சடையவர்மன் குலசேகர பாண்டி யனது புதல்வனும், அவனுக்குப் பின்பு பாண்டிய நாட்டினை அரசாண்ட வேந்தனுமாவான். இவன் மூன்றும் குலோத்துங்க சோழனது பேருதவியால் வீரபாண்டியனைப் பாண்டிய அரியணை யினின்றும் இறக்கிவிட்டு அரச பதவியேற்றவனாவான். மூன்றும் குலோத்துங்கனின் உதவியால் வீர பாண்டியன் எவ்வாறு துரத்தப்பட்டானென்ற சுவையான செய்தி முன் பகுதியிலேயே விளக்கப்பட்டுள்ளது. கி. பி. 1180-ஆம் ஆண்டு செம்மையான முறையில் பாண்டி நாட்டின் அரியணையேறிய இவன் கி. பி. 1190-ஆம் ஆண்டு வரை எவ்வித இடையூறுமின்றி நலமுடன் செங்கோல் செலுத்தி வந்தான்.

---

'மீனவர் சேரரை வெங்கண்ட வீரம் விழுக்கவிஞ
ரானவர் பாடுங் குலோத்துங்க சோழன்' (195)
'வழுதியர் சேரர் திறைதர வேவன் சிறையை விடுத்து
அழுதியர் மாற்றும் [illegible] (60)

வீரபாண்டியன் சேர மன்னனது துணைப் படையுடன் மீண்டும் மதுரையைக் கைப்பற்றும் நோக்கத்துடன் மதுரை மீது படையெடுத்து வந்தான். இப் படையெழுச்சி ஏறத்தாழ கி. பி. 1187ஆம் ஆண்டில் நிகழ்ந்ததாகக் கொள்ளலாம். சற்றேறக் குறைய எட்டாண்டு காலம் பாண்டி நாட்டரசனை வீற்றிருந்த இவன் இப் படையெழுச்சியினைக் கண்டு தானே தனது படை வலிமையால் அப் படையெழுச்சியினை அடக்கி யொடுக்க முடியாது, மூன்றாம் குலோத்துங்கனது உதவியை நாடினான். சோழ வேந்தனும் தனது படைபலத்தால் வீர பாண்டியனை நெட்டூரில் முறியடித்தான். 'தன் கையே தனக் குதவி' என்பது போலன்றி, தனது காலிலேயே வலுவாக நிற்க முடியாத பாக்கிரம பராண்டியன், குலோத்துங்கனது பேருத வியைக் கொண்டே தனது நாட்டினைக் காத்தான். தனக்கு உற்ற துணையாக ஊன்றுகோலாகத் தனக்குக் கிடைத்த மாமருந்து போன்றவனான குலோத்துங்கனுக்கு இவன் தன் வாணாள் முழுமையும் உண்மையோடும், நன்றியறிதலோடும் ஒழுகி வந்தமையின், இவன் தனது ஆட்சிக் கால முழுமையும் அமைதியாகவே வாழ்வினைக் கழித்து வந்தான் எனலாம். இவன் கி. பி. 1190-ஆம் ஆண்டு இறந்து பட்டான் எனக் கருதலாம்.

**அமைதியான ஆட்சி**

இவ் வேந்தனது ஆட்சிக்காலத்தில் பாண்டிய நாட்டின் முதல் உள்நாட்டுப் போர் முடிவுற்றது. இவனது ஆட்சிக் காலம் முழுமையும் பாண்டிய நாட்டில் யாங்கணும் அமைதியே அரசோச் சிற்று எனக் கொள்ளலாம். வேதாகமங்களிலும், சாத்திரங் களிலும் தேர்ச்சி பெற்ற பிராமணர்கள் இவனால் நன்கு ஆதரிக்கப்பட்டனர்; இவர்களது வாழ்விலும் வளர்ச்சியிலும் இவன் மிகுந்த அக்கறை காட்டி வந்தான். இதனை அண்மைக் காலத்தில் திருச்செந்தூர் வட்டம் கட்டாரி மங்கலம் என்னும் ஊரில் கண்டுபிடிக்கப்பட்டுள்ள கல்வெட்டாலறியலாம். இக் கல்வெட்டினைக் கொண்டு இவன் இவ்வூரில் வேதங்களிலும், சாத்திரங்களிலும் நற்பயிற்சி பெற்ற அறுபத்து நான்கு அந்தணர்களைக் குடியமர்த்தி பிரமதேயமாக மாற்றினானென் பதனை அறிகிறோம்.[1]

[1] 'வண்டறைதார் வழுதியரைக்
கொண்ட பாண்டி மண்டலத்தை
சோழ பாண்டி மண்டலமென்
றேழுபாரும் சொலநிறுத்தி
மல்லல்வையை மதுரையையும்
மதுரையென்று பேரொழித்துத்
தொல்லைமுடித் தலைகொண்ட
சோழபுரம் என்றருளி

இவ் வேந்தனது 'கட்டாரி மங்கலம்' கல்வெட்டினைக் கொண்டு இவன் கட்டாரி மங்கலம் என்னும் கிராமத்தின் பெயரினை விக்கிரம பாண்டிய-சதுர்வேதி மங்கலமெனப் பெயர் மாற்றியதாக அறிகிறோம். புயலுக்குப் பின்னே தோன்றிய அமைதி போன்று, உள்நாட்டுப் போரென்னும் சூறாவளிக்குப் பின் இவனது ஆட்சியென்னும் அமைதி தோன்றியது.

**சோழனின் கைப்பாவை**

இவனது ஆட்சிக் காலத்தில் பாண்டிய நாட்டின்கண் ஓரளவு அமைதி நிலவிய போதிலும், இவனது ஆட்சியைப் பெருமை மிக்கதென்றோ, புகழ் மிக்கதென்றோ நாம் கருத இயலாது. தனித்து நின்று செயலாற்றும் ஆற்றலும், இராச தந்திரமும், அரசியல் தெளிவும் அடையப் பெறாத இவன் மூன்றாம் குலோத்துங்கனின் கைப்பாவையாகவே விளங்கினான். இவன் குலோத்துங்கனுக்குக் கீழடங்கிய சிற்றரசனாகவே பாண்டிய நாட்டினையாண்டு வந்ததாகக் கொள்ளலாம்.

இவன் திறமையற்ற வேந்தனாதலின் சோனாட்டு வேந்தன் அடிக்கடி பாண்டிய நாட்டு விவகாரங்களில் தலையிட வேண்டியிருந்தது. பாண்டி நாட்டின் விவகாரங்களில் சோழனது ஆதிக்கமே வலுத்திருந்தது. நெட்டூர் போருக்குப் பின்பு மூன்றாம் குலோத்துங்க சோழன் பாண்டி நாட்டின் தலைநகராம் மதுரையின்கண்ணுள்ள அத்தாணி மண்டபத்தில் கொலு வீற்றிருந்து (தர்பார்) அரசுப் பேரவை நடத்தினானென்றும், அதுபோழ்து வீர பாண்டியனும், சேர வேந்தனும் சோழ வேந்தன் முன் அடிபணிந்தனரென்றும், சோழனும் வீர பாண்டியனது தலையில் தன் காலை வைத்து அடைக்கலம் தந்தானென்றும் முன்பே கண்டோம்.

**திறமையற்ற வேந்தன்**

செயல் திறனில்லாத விக்கிரம பாண்டியன், பெயரளவில் பாண்டி வேந்தனாக வீற்றிருந்தானென்றும், இவன் ஒரு வலிமையற்ற வேந்தனே (Weak ruler) யென்றும், இவனது ஆட்சியால்

---

தாடொழுத மண்டபத்தில்
சேரபாண்டியர் தம்பிரானென்று பேரெழுதி

என்றும்,

பாண்டியனைப் பாண்டியன்
என்னும் பேர் மாறிவர
நெடும்படைத் தென்னவர் கெட
மதுரை கொண்ட தோள்வலி பாடிய'

என்றும் இவனது மெய்க்கீர்த்தி குறிப்பிடுகின்றது.

பாண்டியரது புகழும் பெருமையும் உயர்த்தப்படவில்லை யென்றும் நாம் மனத்திற் கொள்ளல் வேண்டும்.

தன்மான உணர்வும், தனித்தியங்கும் ஆற்றலும், அஞ்சா நெஞ்சமும் அணிகலன்களாக அடையப் பெறாத இவ் வேந்தனே சோழருக்கடங்கிய பாண்டியர் வரிசையில் இறுதியானவன். இவனுடன் வலிமையற்ற பாண்டிய வேந்தரின் பட்டியல் முடிவுற்றது. தனியாட்சி வேட்கையும், தன்மான உணர்ச்சியும் கொண்டு எழுச்சி பெற்ற பாண்டியர் இத்துணைக் காலமாகத் தம்மை மிதித்து, தமது வளர்ச்சியையும், எழுச்சியையும் அழித்து வந்த பேராதிக்கச் சோழர்களின் விலாவெலும்பினை முறித்து, நொறுக்கி அவர்களைப் பழிக்குப்பழி வாங்க உறுதி கொண்டனர்; தமது இழந்த பெருமையினை மீட்கவும் உறுதி பூண்டனர். இதன் விளைவாகத்தான் புதியதொரு பாண்டியர் மரபு உருவாயிற்று. இம் மரபினர் பாண்டியரின் புகழினைப் பாரறியப் பறைசாற்றித் தமது மேலாதிக்கத்தினை நிலைநாட்டிப் பாண்டிய வரலாற்றிலோர் மறுமலர்ச்சியினை, மங்காப் புகழினை ஏற்படுத்திப் புதியதோர் வரலாறு கண்டனர்; பெரும் புகழ் கொண்டனர்.

புகழ் மங்கியதோர் நிலைவாகக் காட்சி தந்த பாண்டியர் வரலாற்றில் புத்தொளி தோன்றியது. முகிலைக் கிழித்து வெளிக் கிளம்பும் முழு மதிபோல் தமிழக வரலாற்றில் இரண்டாவது பாண்டியப் பேரரசு முகிழ்த்தது; பகையழித்தது; சோழரின் ஆதிக்கத்தினை ஒழித்தது. தனக்கெனவோர் தனியிடத்தைத் தமிழக வரலாற்றில் பெற்றது.

விக்கிரம பாண்டியனது ஆட்சிக்காலம், பாண்டிய மறுமலர்ச்சியின் தொடக்க காலமென்று கருதலாமென்பது பண்டாரகர் திரு. மு. ஆரோக்கியசாமி அவர்களது கருத்தாகும்.[1]

[1] 'அதற்குப் பிறகு விக்கிரமன் மதுரையில் மன்னனானன். இதையே நாம் பாண்டிய மறுமலர்ச்சியின் தொடக்கம் என்று கூற வேண்டும். விக்கிரமனுடைய மக்கள் ஜடாவர்மனும், குலசேகரனும், மாறவர்மன் சுந்தரனும் பாண்டிய அரசை உறுதிப்படுத்தினர்.

ஆரோக்கியசாமி, பண்டாரகர் மு. 'தமிழ்நாட்டு வரலாறு' பக்கம்; 75.

விக்கிரமன் காலத்தினைக் காட்டிலும் முதலாம் சடையவர்மனின் குலசேகரனது காலமே பாண்டியர் மறுமலர்ச்சியின் தொடக்க காலமெனக் கருதுதல் ஏற்புடைத்தாகும்.

# 10. பிற்காலப் பாண்டியர்

## (கி. பி. 1190 முதல் கி. பி. 1310 முடிய)

**முன்னுரை**

வாழ்வு! தாழ்வு!! மறுமலர்ச்சி !!!-இதுவே வரலாற்றில் எப்பக்கம் புரட்டினாலும் நாம் காணும் சுவைமிக்க, குறிப்பிடத் தக்க நிலைகளாகும். ஒரு காலத்தில் ஏற்றமும் தோற்றமும் பெற்று, எட்டுத் திக்கும் வெற்றிக்கொடி கட்டி, புகழீட்டித் தனது அருமை பெருமைகளை நிலைநாட்டி, தமிழக வரலாற்றில் தனக்கெனத் தனித்ததொரு வீர அத்தியாயத்தை உருவாக்கிக் கொண்டு, செம்மாந்து பவனி வந்த பாண்டியர், கி. பி. பத்தாம் நூற்றாண்டு முதல் கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டின் இறுதி வரையில் தனது பழம் பெருமையினையிழந்து, மாற்றாரிடம் மண்டியிட்டு, அடிமைப்பட்டுக் கிடந்தனர். தன்னிலை குலைந்து வீழ்ந்து கிடந்த இந் நேரத்தும், அவர்கள் தனியாட்சிபெறும் தணியா வேட்கையால் அடிக்கடி சோழருக்கு அடங்காமல் கொதித்தெழுந்தனர்; புரட்சிக் கொடியுயர்த்தினர்; தங்களது வீரத்தினை மாற்றாருக்குணர்த்தினர். அயர்ச்சியற்ற முயற்சி கொண்ட இவர்கள் படிப்படியாக வலிமை பெற்று, கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் விழிப்புற்று, மறுமலர்ச்சி பெற்றனர்; வலிமை மிக்கதொரு பாண்டியப் பேரரசினை உருவாக்கினர். பெருமுயற்சியின் பயனாக ஏற்படுத்தப்பட்ட இப் பேரரசும் ஏறத்தாழ இரு நூற்றாண்டுகள் எத்திக்கும் புகழ் பரப்பி, பாண்டியரின் பெருமையினைப் பாரறியச் செயதது; தென்னிந்திய வரலாற்றில் தனக்கெனநிலையானதொரு இடத்தினையெய்தியது. கி. பி. 1190 முதல் கி. பி. 1310 முடிய, தனக்கு ஒப்பாரும் மிக்காரும் இன்றித் தென்னிந்திய வரலாறு என்னும் வானத்தில், வெங்கதிர் பரப்பும் செங்கதிரோனாக, ஒளிவீசிக் கொண்டிருந்த இப் பேரரசே, பிற்காலப் பாண்டிய பேரரசாகும். இதனை இரண்டாவது பாண்டியப் பேரரசெனவும் அறிஞர் அழைப்பர். உயர்ச்சியும் மறுமலர்ச்சியும் பெற்ற பாண்டியர், எங்ஙனம் தமது பகைஞர்களை வெட்டி வீழ்த்தி, பாண்டியப் பேரரசினைக் கட்டிக் காத்தனர்; புத்தம் புதிய வரலாற்றை யாத்தனர் என்பதனை ஈண்டு நாம் ஆய்வோம்.

**சில இடர்ப்பாடுகள்**

பேராதிக்கச் சோழரது பிடியினின்றும் தங்களை விடுவித்துக் கொள்ளத் துடித்தெழுந்து, தனியாட்சி நிறுவிய இப் பாண்டியரைப்பற்றிய செய்திகள் அவர்களால் வெளியிடப் பெற்ற எண்ணிறந்த கல்வெட்டுகளால் நுண்ணிதின் அறியப்படுகின்றன. பாண்டியரது பேராண்மையும் பெரு வீரமும், தாளாண்மையும் வேளாண்மையும் இவ் வெட்டெழுத்துகளால் (Inscriptions) விரித்துரைக்கப் பெற்றிருப்பினும், இவர்களது உறவு முறையும், கால வரையறையும், இன்னாருக்குப் பின் இன்னார் அரியணையேறினர் என்ற செய்திகளும், விளக்கமாகக் குறிக்கப்பெறுமை வருந்துதற்குரியதொன்றேயாகும். இதனால் இக் காலத்தைப்பற்றிய வரலாற்றாராய்ச்சி இன்றும் இருள் சூழ்ந்த நிலையிலேயே இருந்து வருகின்றது. இதனைப்பற்றி, ஆய்வு நிகழ்த்திய ஆராய்ச்சியாளர்களும் ஒருமித்த கருத்துடையோரிலராகி, மாறுபட்ட கருத்துடையோராகவே காணப்படுகின்றனர். இக் குறைபாடு நீக்கப்பெற்று, குழப்பம் போக்கப் பெற்றால் பாண்டியர் வரலாற்றில் தெளிவு பிறக்கும்.

இரண்டாவது பாண்டியப் பேரரசினையாண்ட மன்னர்களது வெட்டெழுத்துகளில் சில காலக் குறிப்புகளும், நாளும் கோளும் காணப்படுகின்றன.[1] இவற்றினை நுண்ணிதின் ஆய்ந்து அரிய பெரிய கருத்துகளை வெளியிட்டு, வரலாற்றுலகிற்களித்து, அரும்பணியாற்றிய பெருமை பண்டாரகர் கீல்ஹார்ன் (Kielhorn), இராபர்ட் சிவல் (Robert sewell), ஜாகோபி (Jacobi), எல். டி. சுவாமிக்கண்ணுப்பிள்ளை முதலாய அறிஞர்களையே சாரும்.

**காலக் கணிப்பு**

ஈண்டு நாம் அக் காலப் பாண்டியரின் கல்வெட்டுகளில் குறிக்கப்பெற்றுள்ள காலக்குறிப்புகளுள் ஒரு சிலவற்றைக் காண்போம். 'ஸ்ரீ கோச்சடைய வன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீ விக்கிரம பாண்டிய தேவற்கு யாண்டுச ஆவது மிதுன ஞாயிற்றுப் பூர்வபட்சத்து நவமியும் வியாழக்கிழமையும் பெற்ற சோதி நாள்'[2] என்றும் 'ஸ்ரீ கோச்சடைய வன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீ குலசேகர தேவற்கு யாண்டு பதின்மூன்றாவதின் எதிராமாண்டு மீன ஞாயிற்று நாலாந்திய தியும் அமரபட்சத்துத் தசமியும் வியாழக்கிழமையும் பெற்ற

1 திரிபுவனச் செப்பேடு, மற்ற செப்பேடுகள், கல்வெட்டுகள்.
2 S.I.I. Vol. V. No. 299

பூராடத்து நாள்[1] என்றும் 'ஸ்ரீ கோமாற வன்மரான திரிபுவன சக்கரவர்த்திகள் எம்மண்டலமுங் கொண்டருளிய ஸ்ரீ குலசேகர தேவற்கு யாண்டு உகஎ—ஆவது தநுர்நாயிற்று கச தியதியும் வெள்ளிக்கிழமையும் அமரபட்சத்து சப்தமியும் பெற்ற உத்திர நாள்[2] என்றும் கல்வெட்டுகளில் குறிக்கப் பெற்றுள்ளன. இக் காலக் குறிப்பினைக் கொண்டுதான் இம் மன்னர்களின் ஆட்சி யாண்டினை அறிஞர் பெருமக்கள் கணித்துள்ளனர்.

### ஒரே காலத்தில் பல மன்னர்கள்

காலக் கணிப்பில் ஏற்பட்டுள்ள சிக்கல்களைக் காட்டிலும் பாண்டிய நாட்டின் பல்வேறு பகுதிகளில் ஒரே காலத்தில் ஆண்டு வந்த பல்வேறு மன்னர்களைப்பற்றிய செய்திகளும் ஒரே பெயருடைய வேந்தர் பலரை ஒருவரினின்றும் மற்றொருவரை வேறுபடுத்துவதுமாகிய சிக்கலே பெரிதாக உள்ளது. பாண்டிய நாட்டின்கண் ஏக காலத்தில் ஒருவருக்கு மேற்பட்டும், சில சமயங்களில் ஐந்து மன்னர்களும், ஆட்சி புரிந்திருந்த விந்தை யான செய்தி, நம்மைக் குழப்பத்தில் ஆழ்த்துகின்றன. இச் சிக்கல்களை அவிழ்ப்பதென்பது எளிமையான செயலன்று. இது காறும் படியெடுக்கப்பட்டுள்ள கல்வெட்டுகளனைத்தும் அச்சிடப்பட்டு, வெளியிடப்படும் வரை இதுபோன்ற குழப்பங் களையும் சிக்கல்களையும் தெளிவாக்குதலியலாது.

### சான்றுகள்

இக் காலப் பாண்டியரைப்பற்றிய ஒரு சில செய்திகளை அறிந்து கொள்வதில் சிக்கல்கள் தோன்றியுள்ள போதிலும், இவர்களைப்பற்றிய சாதனைகள் பாண்டியரது வெட்டெழுத்து களில் (Inscriptions) மட்டுமின்றி சோழர், போசளர் (Hoysalas) தெலுங்குச் சோழர், காடவராயர், சம்புவராயர், காகதீயர் போன்ற பாண்டியரது சமகாலத்தில் ஆட்சி புரிந்த மன்னர் களது வெட்டெழுத்துகளிலும் குறிக்கப் பெற்றுள்ளன. இதனால் இக் கால கட்டத்தைச் சார்ந்த பாண்டி வேந்தரது வரலாறு தெள்ளத்தெளிய படம்பிடிக்கப்பட்டுள்ளன.

### பாண்டியரின் எழுச்சி

வீரத்தின் திருவுருவாய், வெற்றியின் பேருருவாய்த் திகழ்ந்த மூன்றும் குலோத்துங்க சோழனின் ஆட்சிக் காலத்தில் பாண்டி வேந்தர் அடக்கியொடுக்கப்பட்டனரென்பதனையும், அக் காலைப்

[1] Ibid No, 412
[2] Ibid No. 426

பாண்டிய நாட்டினையாண்டு வந்த வேந்தன் சோழனுக்கடங்கி திறை செலுத்தும் நிலையிலேயே இருந்தானென்பதனையும் நாம் முன்பகுதியிலேயே கண்டோம். கி. பி. 1218ஆம் ஆண்டு பாண்டியரது நல்வாழ்விற்கு வழிவகுத்த பொற்காலமென்றும், பாண்டிய அரசின் இருளகற்றும் ஒளிவிளக்கென்றும் நாம் கருதலாம். இவ் வாண்டில்தான் சோழ நாட்டினைச் சீரும் சிறப்புடன் ஆண்டு வந்த பெருமன்னன் மூன்றும் குலோத்துங்கன் மாண்டான். இவனது இறப்பின்போது சோழரது பேராதிக்கமும் இறந்துபட்டதாகக் கூறினுல் அது மிகையாகாது. பாண்டியரது பேரரசின் எழுச்சியும், சோழரது வீழ்ச்சியும் இவ்வாண்டின் சிறந்த நிகழ்ச்சியாகும்.

மூன்றும் குலோத்துங்க சோழனுக்குப் பின்னர் சோழ வேந்தனுகக் கொலு வீற்றிருந்த மூன்றும் இராசராச சோழனது வலிமையின்மையின் காரணமாகப் பாண்டியர் சோழருக்குத் திறை செலுத்துதலை நிறுத்தி விட்டு, தனியாட்சி வேட்கையால் உந்தப்பட்டு, தனியரசு கண்டனர்; சோழரை வெற்றி கொண்டனர்; அண்டையரசுகளை வென்றனர்; பகை கொன்றனர். தனது பேரரசினை வடக்கே நெல்லூர் கடப்பை முதலிய மாவட்டங்கள் வரை விரிவுபடுத்தினர். தனது மேலாண்மைக் குட்படுத்தினர். இவ்வாறு தனது பேரரசினைப் பரப்பிப் பாராண்ட பாண்டியரது பெருமையும் பெயரும் அக் காலத்தில் குன்றிலிட்ட விளக்குப் போன்று ஒளிவிட்டது; இதன் புகழ் வட நாட்டையும் எட்டியது. ஏறத்தாழ 300 ஆண்டு காலம் மங்காது, மறையாது, குன்றுது, குறையாது ஆட்சி புரிந்த பேராதிக்கச் சோழர் தென்னுட்டரசியல் வரலாற்றரங்கினை விட்டு மறைந்தனர்; இருளினை நோக்கி விரைந்தனர்.

## முதலாம் சடையவர்மன் குலசேகர பாண்டியன்

### முடிபுனைதலும் மணஞ் செய்தலும்

குலசேகர பாண்டியன் மாறவர்மன் விக்கிரம பாண்டியனது மகனுவான். கி. பி. 1190 ஆம் ஆண்டு அரியணையேறிய இவன் கி. பி. 1218 ஆம் ஆண்டு வரையில் பாண்டிய வேந்தனுக மதுரையம்பதியில் வீற்றிருந்து, மக்கள் நலம் பேணி, நல்லாட்சி புரிந்தான். இவனது தந்தையான மாறவர்மன் விக்கிரம பாண்டியன் சோணுட்டு வேந்தனும் மூன்றும் குலோத்துங்க சோழனது ஆதரவினைக் கொண்டு, பாண்டிய நாட்டினையாண்டான் என்பதனை முன்பே கண்டோம். இவன் தரணி முழுதுடையாள் என்னும் சேரநாட்டு நங்கையைத் தனது பட்டத்தரசியாகக் கொண்டான். இதனை அழகர் கோயிலில் காணப்படுகின்ற

கல்வெட்டொன்றால் அறியலாம். சேர இளவரசன் கோதை இரவிவர்மன் என்பான் இவனது மைத்துனனென்பது, 1964ஆம் ஆண்டு சேரன்மாதேவியில் கண்டுபிடிக்கப்பட்ட இவ் வேந்தனது மூன்றாமாட்சியாண்டுக் கல்வெட்டாலறியலாம். விரதமுடித்த பெருமாள் என்பானும், அழகப்பெருமாள் என்பானும் இவனது மைத்துனர்களாகக் கல்வெட்டில் குறிக்கப் பெற்றுள்ளனர். இம் மூவரும் ஒருவரையே குறிக்கின்றனவா? அல்லது மூவருமே இவ் வேந்தனது மைத்துனர்களா? என்பதனை அறிந்து கோடற்குத் தக்க சான்றுகள் கிடைத்தில. இவ் வேந்தன் 'இராச கம்பீரன்' எனும் விருதினையும் பெற்றிருந்த தாகத் தெரிகிறது.

### மெய்க்கீர்த்தி

இவ் வேந்தனது இரண்டாமாட்சியாண்டு முதல் இருபத்தெட்டாமாட்சி முடிய வெளியிடப் பெற்ற கல்வெட்டுகள் பல இன்று நமக்குக் கிடைத்துள்ளன.[1] இவை பெரும்பாலும் 'பூவின் கிழத்தி'[2], 'பூதல மடந்தை'[3], 'பூதல வனிதை'[4] என்னும் தொடக்கங்களைக் கொண்டுள்ளன. இவனது மெய்க்கீர்த்திகள் இவ் வேந்தனை வானளாவப் புகழ்கின்றனவேயன்றி, இவனது காலத்திய நிகழ்ச்சிகளையும், சாதனைகளையும் தெளிவாக விளக்கிக் கூறவில்லை. இவற்றின் துணை கொண்டு இவனைப்பற்றிய வரலாற்றினைச் செம்மையாக அறிந்து கொள்ள இயலவில்லை.

### அரியணையின் பெயர்கள்

முதன் முதலாக இம் மாமன்னனது ஆட்சிக் காலத்தில்தான் பாண்டியராட்சி தற்காலத்திய மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலி ஆகிய மாவட்டங்களில் பரவியிருந்தது என்பது குறிப்பிடத் தக்கதாகும். இவன் மதுரையம்பதியில் அமைந்துள்ள புகழாபரணன் என்னும் பெயர் கொண்ட மண்டபத்திலுள்ள 'மழவராயன்' என்னும் சிம்மாசனத்திலமர்ந்திருந்தானென்று கல்வெட்டுச் செய்தியுணர்த்துகின்றது.[5] 'மழவராயன்' என அழைக்கப்படுகின்ற இச் சிம்மாசனம், மழவராயர்களால் குலசேகர பாண்டியனுக்கு அன்பளிப்பாக அளிக்கப் பெற்றிருத்தல் கூடுமென்று, பண்டாரகர் திரு. கே. வி. இராமன்

1 No. 685 of 1916
2 No. 14 of 1894
3 No. 5 of 1894
4 No. 13 of 1894
5 459 of 1909

அவர்கள் கூறுவது,[1] ஈண்டு பொருத்தமுடையதாகத் தோன்று கிறது.

இவ் வேந்தனது அரியணையொன்று மழவராயன் என அழைக்கப் பெற்றது போன்று, வேறு சில அரியணைகள் கலிங்க ராயன்[2] எனவும், முனையதரையன்[3] எனவும் அழைக்கப் பெற் றிருந்ததென்பது கல்வெட்டுகளால் அறியப்படுகின்றன. இவை களால் இவன் வெற்றி மேம்பாடு மிக்க பெருமன்னனுகத் திகழ்ந்தானெனவும், தனது வெற்றிச் சிறப்பின் நினைவாகப் பல அரியணைகளைப் பெற்றிருந்தானென்பதும் புலனுகும். இவை யனைத்தும் மதுரை மாநகரின்கண்ணே அமைக்கப்பட்டிருந்தன என்பதும், அரண்மனையில் பணிபுரிய அகப்பரிவாரம் என்னும் அரண்மனை ஊழியர் பலர் நியமிக்கப் பெற்றிருந்தனரென்பதும் கல்வெட்டுகளால் தெளிவாகின்றன.[4]

திருப்பரங்குன்றம் கல்வெட்டொன்றால் 'குலசேகர நரசிங்க மண்டபம்' எனும் பெயர்கொண்ட மண்டபமொன்று அன்று இருந்ததாக அறிகிறோம். இவ் வலங்கார மண்டபம் குலசேகர பாண்டியனது அரசியலதிகாரியான நரசிங்கன் என்பானல் அமைக்கப்பட்டதாகும்.

**சோழ-பாண்டியப் போர்**

பாண்டிய நாடு முழுமையும் ஆட்சிபுரிந்த குலசேகர பாண் டியன் சோழர் ஆதிக்கத்தினின்றும் விடுபட பெருவிருப்பங் கொண்டான். இத் தருணத்தில் சோழ வேந்தனை மூன்றும் குலோத்துங்க சோழன், கொங்குநாட்டின்மீது படையெடுத்து கருவூரைக் கைப்பற்றினன்; அதனை அவ் வேந்தனுக்குத் திரும்பவும் வழங்கினன்; கருவூருக்கு 'முடிவழங்கு சோழபுரம்' எனப் பெயரிட்டான்; சோழ கேரளன் என்னும் பட்டத்துடன் விசய மாமுடி சூடினன். இதன் பின்னர் தனக்குக் கீழ் அடங்கி யிருந்த பாண்டிய நாட்டின் தலைநகராம் மதுரையின்கண் வீராபி டேகஞ் செய்து கொள்ள விழைந்தான். இதனைக் கேள்விப்பட்ட குலசேர பாண்டியன் அதற்குடன்படவில்லை, சோழனிடம் தனது பகைமையுணர்ச்சியைக் காட்டவும் தயங்கவில்லை. குல

[1] It appears to me that this was contributed or gifted to the king (Kulasekara) by the Malavarayans'.
Raman, Dr. K. V. 'Some Aspects of Pandyan Histroy in the light of recent discoveries' page 26. lines 16—17.

[2] 29 of 1924

[3] 660 of 1916

[4] 720 of 1916

சேகர பாண்டியனது தந்தையான விக்கிரம பாண்டியனுக்குத் தான் உதவிகள் பல புரிந்து நாடும் அரசும் தந்துதவி, உள் நாட்டுக் குழப்பத்தினை ஒழித்து, அமைதி நிலவ, நல்லாட்சி நிலவ வழி வகுத்ததனை மறந்து, நன்றி கொன்று[1] தன்னுடன் மாறு பட்டுள்ள பாண்டியனைப் பழிவாங்க மூன்றும் குலோத்துங்க சோழன் முயன்றான். எனவே, பாண்டிய நாட்டின்மீது படை யெடுத்துச் சென்றான்.

பெருவீரங்கொண்ட குலசேகர பாண்டியனும் தனது மறப் படை ஈழகப்படைகளின் துணைகொண்டு சோழப் படையினை எதிர்த்து நின்றான். இக் கடும்போர் மட்டியூர், கழிக்கோட்டை முதலான ஊர்களில் நிகழ்வுற்றன.[2] இவண் மட்டியூரென குறிக்கப்பெற்ற ஊர் இக்காலை சதுர்வேதிமங்கலம் எனும் பெயரால் இராமநாதபுரம் மாவட்டம் திருப்பத்தூர் வட்டத்தில் அமைந்துள்ளது. சோழப் படைகளின் வலிவான தாக்குதலுக் கெதிர் நிற்க மாட்டது பாண்டியப்படை புறங்காட்டி உலைந் தோடியது. தோல்வியால் துவண்ட குலசேகர பாண்டியன் வேறு வழியின்றித் தனது உரிமைச் சுற்றத்தினருடன் மதுரையை விட்டோடினான்; வேறிடத்தில் புகலிடம் தேடினான்.

**சோழவேந்தன் பாண்டியர் தலைநகரில் முடிசூடல்**

வெற்றிமாலை அணிந்த குலோத்துங்கன் தனது படைகளுடன் மதுரை நகர் புகுந்து, அழகு மிக்க அரண்மனையிலுள்ள மண்ட பங்கள் சிலவற்றை இடித்துத் தரைமட்டமாக்கிக் கழுதையேர் கொண்டுழுது கவடி வித்திப் பாழ்படுத்தித் தனது சினத்தினை ஒருவாறு தணித்துக் கொண்டான்;[3] தனது விருப்பப்படி அங்கு முடி சூட்டிக் கொண்டான்; 'சோழ பாண்டியன்' என்றும் 'திரிபுவன வீரதேவன்' என்றும் ஆரவாரமிக்க, தோரணையான சிறப்புப் பெயர்களைப் பூண்டான். மேற்கூறிய நிகழ்ச்சிகள் யாவும் கி.பி. 1202ஆம் ஆண்டிலோ அல்லது அதற்கு முன்போ நிகழ்வுற்றிருத்தல் வேண்டும்.[4] இவன் தனது வெற்றியின் நினைவாக வெற்றித்தூண் ஒன்றையும் நட்டான்.[5]

1 இராமச்சந்திர தீட்சதர் வி. இரா. 'மூன்றும் குலோத்துங்க சோழன்' (1946) பக். 47.

2 Ins. of the Pudukkottai State No. 166

3 இராமச்சந்திர தீட்சதர் வி. இரா. 'மூன்றும் குலோத்துங்க சோழன்' பக். 48.

4 Ins. 554 of 1 04. மூன்றும் குலோத்துங்க சோழனது இருபத்து நான்காமாட்சியாண்டுக் கல்வெட்டொன்று தஞ்சை மாவட்டம் திருவாரூரில் காணப்படுகிறது. இதில் குலோத்துங்கன் மதுரை மாநகரின்கண் புனைந்து கொண்ட, திரிபுவன மாவீரன் என்னும் பட்டப் பெயர் குறிக்கப் பெற்றிருத் தலின் இவ் வாண்டில் இவன் வீராபிடேகம் செய்து கொண்டான் எனலாம்,

மூன்றும் குலோத்துங்கன் பாண்டிய நாட்டினை சோணுட்டுடன் இணைத்துக் கொண்டான்;[6] சில ஆண்டுகள் கழிந்த பின்பு அதனை குலசேகரனுக்கே வழங்கிவிட்டான் போலும்; குலசேகர பாண்டியனும் குலோத்துங்க சோழனுக்கடங்கிய வேந்தனுகவே தன்னுட்டை ஆண்டுவந்தானெனலாம். இதனைக் குலோத்துங்க சோழனது முப்பத்தொன்பது, நாற்பதாமாண்டுக் கல்வெட்டுகள் பாண்டிய நாட்டில் காணப் பெறுதலின் அறியலாம். மூன்றும் குலோத்துங்க சோழனது ஆயுட்கால முழுமையும் இந் நிலை நீடித்ததாகக் கொள்ளலாம். எனவே, இப்பாண்டிய வேந்தன் கி. பி. 1218ஆம் ஆண்டு முடிய, தனியாட்சி நிறுவவியலாத நிலையிலேயே சோழருக்கடங்கியிருந்தானென்பதனை ஊகிக்கலாம்.

'பூதல வனிதை' எனத் தொடங்கும் இவனது மெய்க்கீர்த்தியில் 'வஞ்சினங்கூறு மதகளிறி வற்ந்த வெஞ்சின வேங்கை வில்லுட னெளிப்ப' எனக் குறிக்கப்பட்டுள்ளது. இதனைக் கொண்டு இவன் சேர, பாண்டியர்மீதுத் தனது மேலாதிக்கத்தினைச் செலுத்தினுனென்று கொள்வதைவிட இவையனைத்தும் வீண் புகழ்ச்சியே எனக் கொள்ளலாம்.[7]

### அறக் கொடைகள்

வாளாண்மையும் தோளாண்மையுங் கொண்டு பாண்டியநாடு முழுதுமாண்ட இவன் தாளாண்மை மிக்கவனுகவும் விளங்கினுனென்பது கல்வெட்டுகளாலறியப்படுகின்றன. இவன் தனது இருபத்தைந்தாமாட்சியாண்டில் (செப்டம்பர் 29, கி. பி. 1214)

---

[5] இராமச்சந்திர தீட்சதர் வி. இரா. 'மூன்றும் குலோத்துங்க சோழன்' பக். 49

[6] 'வண்டறைதார் வழுதியரைக்
கொண்ட பாண்டிமண்டலத்தை
சோழ பாண்டி மண்டலமென்
றேழுபாரும் சொலநிறுத்தி
மல்லல்வையை மதுரையையும்
மதுரையென்று பேரொழித்துத்
தொல்லைமுடித் தலைகொண்ட
சோழபுரம் என்றருளி
தாடொழுத மண்டபத்தில்
சேர பாண்டியர் தம்பிரானென்று பேரெழுதி'

என்று கூறுகிறது குலோத்துங்கனின் மெய்க்கீர்த்தி. பாண்டி மண்டலத்திற்குச் 'சோழ பாண்டி மண்டலம்' எனறும், மதுரைக்கு 'முடித்தலைகொண்ட சோழபுரம்' என்றும், மதுரை அத்தாணி மண்டபத்திற்குச் சேர பாண்டியர் தம்பிரான் என்றும் பெயரிட்டது இதனுல் விளங்குகின்றது.

[7] S.I.I. Vol. No. 428, ii, 2—3

பழைய சிற்றூர் பலவற்றை ஒருங்கிணைத்து இராச கம்பீர சதுர் வேதி மங்கலமெனப் பெயரிட்டு, எல்லை சூழ்ந்து, பிடி சூழ்ந்து, அதனை ஆயிரத்து முப்பது அந்தணர்களுக்குப் பிரம்மதேய மாகவும், திருப்புவனத்திறைவருக்கு தேவதானமாகவும் வழங்கி யுள்ளமை திருப்புவனச் செப்பேட்டாலறியலாம்.[1] இதனைக் கொண்டு இவ் வேந்தனுக்கு 'இராச-கம்பீரன்' என்னும் சிறப்புப் பெயர் அக் காலத்தில் வழங்கப்பட்டதாக அறியலாம். குறையிலா இறையன்பு நிறையப் பெற்ற இவன், இறைவழிபாடு தொடர்ந்து நடைபெற, நிறைய செல்வங்களையளித்துள்ளான். குலசேகரன்-சந்தியின்போது களப்பிரன் (Kalapiran) என்னும் இறைவருக்கு நாள்வழிபாடு தொடர்ந்து நிகழ்த்தப் பெறுதற்கு மானியங்கள் மனமுவந்து வழங்கியுள்ளான்.[2]

இவ் வேந்தனைப் போன்றே இவனது பட்டத்தரசியான தரணி முழுதுடையாள் என்பாளும் சத்துவக்கும் இன்பம் பெற்றவளாகக் காணப்படுகிறாள். இவள் அழகர் மலையின் உச்சியில் நீரூற்றருகே மலர்ச்சோலை யொன்றினையமைத்து, அதனைப் பராமரித்து வந்தாளென்பதனை அழகர் கோயில் கல் வெட்டொன்று அறிவிக்கின்றது.[3]

தரணி முழுதுடையாளின் உடன் பிறப்பான கோதை இரவிவர்மனும், இணையிலா இறைவர்க்கு வரையாது வழங்கும் வள்ளண்மை பெற்றிருந்தான். இச் சேர இளங்கோ (Chera Prince) கோயிலுக்கு நிவந்தங்களளித்துள்ள செய்தியினைச் சேரமாதேவியில் அண்மையில் கண்டுபிடிக்கப்பட்டுள்ள குல சேகர பாண்டியனின் மூன்றுமாட்சியாண்டுக் கல்வெட்டொன்று செப்புகின்றது.[4] இவன் குலசேகர பாண்டியனின் மைத்துனன் (Brother-in-law) என்பதனை நாம் முன்பே கண்டோம்.

குலசேகர பாண்டியனின் மைத்துனனை விரதமுடித்த பெருமாள் என்பான், இராமநாதபுரம் மாவட்டம் இராசபாளையம் வட்டம் சேத்தூரில் (Settur) விஷ்ணுவுக்கு ஆலயமொன்று எழுப்பி, அதற்குச் 'சேரன் கரையன் விண்ணகர்' எனும் பெயரினையிட்டான். இத் திருப்பணியால் விரதமுடித்த பெருமாளின் கரையிலா இறையன்பு நன்கு வெளிப்படு கின்றது.

1 I.A. Vol. xx. p. 288. The Text and translation in Burgess and Natesa Sastri's Tamil and Sanskrit inscriptions (A.S.S.I. Vol, iv) E I. Vol. XXV. No. 11

2 341 of 1959—60

3 300 of 1929—30

4 Indian Archaelogy 1964—65, p. 57; No. 665 of 1916

**பொதுப்பணி**

பொதுமக்களின் நல்வாழ்விலும் வளத்திலும் நாட்டம் கொண்ட குலசேகர பாண்டியன் நீர்நிலைகளைப் பெருக்குவதிலும் வேளாண்மையை விரிவுபடுத்துவதிலும், பேரார்வம் காட்டினான். தனது பெயரால் வெட்டப் பெற்ற குளம் ஒன்றினை ஆழப்படுத்துவதற்கு இவ் வேந்தன் நூறு திரமங்களைக்(Drammas drachms) கொடையாக அளித்துள்ளான்.[1]

இவ் வேந்தனது ஆட்சிக் காலத்தில் பணிபுரிந்த கப்பலூரைச் சார்ந்த மானாபரண மூவேந்த வேளான் என்னும் அதிகாரியொருவன் வைகையாற்றினின்றும் 'தியாகஞ்சிறிய—பேராறு' என்ற ஒன்றினை வெட்டியதாகக் குலசேகர பாண்டியனது கி. பி. 1212 ஆம் ஆண்டினதாகிய கல்வெட்டொன்று செப்புகின்றது.[2] இவ் வேந்தனிடம் பணியாற்றிய நரசிங்கன் என்னும் அதிகாரி, மன்னன் பெயரையும் தனது பெயரையும் இணைத்து, 'குலசேகர - நரசிங்க - மண்டபம்' என்ற ஒன்றினைக் கட்டினான் என்று திருப்பரங்குன்றக் கல்வெட்டு செப்புகின்றது.

**நில அளவை**

குலசேகர பாண்டியனது ஆட்சிக் காலத்தில் நிலங்கள் முறையாக அளக்கப்பட்டு, தரவாரியாகப் பிரிக்கப்பட்டன. நில அளவைகளும் புதிய முறையில் மாற்றப்பட்டன. இதனால் முன்பு வழக்கிலிருந்த நில அளவுக் கருவிகள் நீக்கப்பெற்று புதிய கருவிகள் புழக்கத்திற்குக் கொண்டு வரப்பட்டன. வெம்பட்டில் (Vembattu) கிடைத்துள்ள இவ் வேந்தனது பதின்மூன்றும் ஆட்சியாண்டுக் கல்வெட்டினைக் கொண்டும், மற்றும் சில கல்வெட்டுகளைக் கொண்டும், புதிய நில அளவைகள் 'களவழி-நாடாள்வான்' என்னும் புகழ் பூத்த அலுவலரால் மேற்கொள்ளப்பட்டதாக அறிகிறோம்.[3] இவ் வலுவலர் குலசேகர பாண்டியனால் நிலஅளவை முறைகளை நிறைவேற்றும் பொருட்டு நியமிக்கப்பட்டான். இவனது காலத்தில் 'குடி தங்கை' என்னும் புதிய நில அளவைக் கருவி பயன்படுத்தப்பட்டது. இக் கருவி முன்பு வழக்கிலிருந்த அளவைக் கருவியினைவிட கால் பங்கு நீளமுடையது.[4] இப் புதிய கருவியினைக் கொண்டே எல்லா நிலங்களும் முறையாக அளக்கப்பட்டன. இதனால் நில

1 459 of 1909
2 333 of 1961—62
3 A.R.E. 1939—40 p. 245
4 323 and 329 of 1959—60

வரி ஒழுங்காக வசூலிக்கப்பட்டு, அரசாங்கப் பொருளகத்தில் (Treasury) சேர்க்கப்பட்டது.

குலசேகர பாண்டியனது காலத்தில் நாடு முழுவதிலுமுள்ள நிலங்கள் அளக்கப்பட்டமை, முதலாம் இராசராசனின் ஆட்சிக் காலத்தில் சோழநாடு முழுமையும் முதன் முறையாக, ஒழுங்காக அளக்கப்பட்டதனையும், அதற்கென அவன் 'குரவன் உலகளந் தான்' என்ற அதிகாரியை நியமித்ததையும், சூர் மன்னனான செர்சா (sher shah, the sur 1540-1545) தனது ஆட்சிக்காலத்தில் புதிய நில அளவைக் கருவிகளைப் பயன்படுத்தியதையும் நமக்கு நினைவூட்டுகின்றன. இதனால் நிலம் சரியாக அளக்கப்பட்டு, வரி விதிக்கப்படுவதன் முக்கியத்துவத்தினை அக் கால மன்னர்கள் அறிந்திருந்தனர் என்பது புலனாகின்றது.

### அரசியல் தலைவர்கள்

குலசேகர பாண்டியன் தனது ஆட்சியினைச் செம்மையாக நடத்துவதில் அவனது அரசியல் அலுவலர்கள் (officers) பெருந் துணை புரிந்தனர். மன்னனும் இவ் வதிகாரிகளுக்கு ஆட்சித் துறையில் நல்ல பயிற்சியளித்து அரசியலில் தேர்ச்சி பெறச் செய்தான். இவனுக்கு உறுதுணையாக, ஊன்றுகோலாக விளங்கிய ஒரு சில அரசியல் அலுவலர்பற்றி ஈண்டு நாம் காண் போம்.

இவ் வேந்தனது ஆட்சிக்காலத்தில் அரசியல் தலைவர்களாக அரும்பெரும் பணியாற்றியவர்களுள் களவழி நாடாள்வான், கந்தன் ஆளுடையான், மும்முடிச்சோழன் மழவர் சக்கரவர்த்தி, மானாபரணன் மூவேந்த வேளான், நரசிங்கன், அழகப் பெருமாள் முதலானோர் குறிப்பிடத்தக்கவராவர்.

இவர்களுள் களவழி நாடாள்வான் தலைசிறந்தவன் ஆவான்.[1] கந்தன் ஆளுடையான் என்பானைப்பற்றிய செய்திகள் இராமநாத புரம் மாவட்டம் திருப்பத்தூரில் உள்ள கல்வெட்டில் கூறப் பட்டுள்ளது.[2]

இவ் வேந்தனது ஆட்சிக்காலத்தில் மக்களுக்கு நல்லாட்சி வழங்கப் பாடுபட்ட அரசியல் அதிகாரிகளைப்பற்றி 'பாண்டியர் கால அரசியல் தலைவர்கள்' என்னும் பகுதியில் விரிவாகக் காண்க.

[1] Ins. 313 of 1923
[2] 167, 187 and 188 of 1935—36

**ஆட்சி முடிவு**

சடையவர்மன் குலசேகரனது இருபத்தெட்டாவது ஆட்சியாண்டுக் கல்வெட்டே கிடைத்துள்ள இறுதிக் கல்வெட்டாகும். இருபத்தெட்டாமாட்சியாண்டிற்குப் பிறகு வெளியிடப்பட்ட கல்வெட்டுகள் ஒன்றும் கிடைக்கப் பெறாமையின், இவன் ஏறத்தாழ கி. பி. 1216-ஆம் ஆண்டு வரை உயிர் வாழ்ந்திருந்ததாகக் கொள்ளலாம். இவ் வேந்தன் தனது இறப்பிற்கு இரண்டு அல்லது மூன்றாண்டுகளுக்கு முன்னர் தனது தம்பியான சுந்தர பாண்டியனுக்கு இளங்கோப் பட்டங் கட்டி ஆட்சித் துறையில் பயிற்சியளித்தனன் எனத் தெரிகிறது.

## முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியன்

**உறவு முறை**

சுந்தரபாண்டியன் கி.பி. 1216-ஆம் ஆண்டிலேயே பாண்டிய நாட்டின் அரச பதவியைப் பெற்றனனென்று அறியலாம்.[1] இவன் சடையவர்மன் குலசேகர பாண்டியனது தம்பியாவான். இதனைச் சுந்தர பாண்டியனது கல்வெட்டில் குலசேகர பாண்டியன் பெரிய நாயனாரெனக் குறிக்கப் பெற்றுள்ளதாலும், குலசேகர பாண்டியனது கல்வெட்டில், தனது மைத்துனனைக் குறிக்கப்பெற்றுள்ள அழகப் பெருமாள், சுந்தர பாண்டியனது திருப்பத்தூர்க் கல்வெட்டில் சுந்தர பாண்டியனது மைத்துனனைக் குறிக்கப்பெற்றுள்ளமையினாலும் இவ் விருவரையும் உடன்பிறந்தோராகக் கருதலாம். மேலும், இவர்களிருவரும் சடையவர்மன் விக்கிரமபாண்டியனின் புதல்வர்களாவர் என்பதனைக் குலசேகர பாண்டியனும், சுந்தரபாண்டியனும் தமது கல்வெட்டுகளில் விக்கிரமபாண்டியனைப் பெரிய தேவரென்று குறித்துள்ளதால்[2] விளங்குகின்றது. இவனது பட்டத்தரசி உலகமுழுதுடையாள் என்று கல்வெட்டு உணர்த்துகின்றது.[3] கி. பி. 1215 முதல் கி. பி. 1239 முடிய பாண்டிய நாட்டினையாண்டு வந்த இவன் மாறவர்மன் என்னும் பட்டப் பெயரினைப் புனைந்து கொண்டான்.

[1] Raman, Dr. K. V. 'Some Aspects of Pandyan Histroy in the light of recent discoveries', page 27.
ஆராய்ச்சியறிஞர் கீல்ஹார்ன் அவர்கள், (Kielhorn) இவன் கி. பி. 1216-ல் ஆட்சிக்கு வந்ததாக E. I. Vol. viii. App. II p. 24-ல் குறித்துள்ளார். A.R.E. 1927, Part ii, Para 41-லும் இக் கருத்தே குறிக்கப்பட்டுள்ளது. திரு. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியாரும், திரு. டி. வி. சதாசிவ பண்டாரத்தாரும் கீல்ஹார்னது கருத்தினைப் பின்பற்றுகின்றனர்.

[2] Ins. Nos. 83 of 1927 aud 47 of 1926.

[3] Ins. of the Pudukkottai State. No. 250

**பிறப்பு**

சுந்தரபாண்டியன் புரட்டாசித் திங்கள் அவிட்ட நாளில் தோன்றியவன் என்பது, திருநெல்வேலி மாவட்டம் அம்பாசமுத்திரம் வட்டத்திலுள்ள திருவாலீசுவரத்தில்[1] காணப்படும் கல்வெட்டொன்றாலும், இராமநாதபுரம் மாவட்டம் திருப்பத்தூர் வட்டம், திருப்பத்தூரில்[2] காணப்படுகின்ற கல்வெட்டொன்றாலும் அறியப்படுகின்றது.

**இவனது குறிக்கோள்**

கருவிலே திருவுடைய இவ் வேந்தன் தனது இளமைக் காலத்திலிருந்தே சோழர்களைப் பழிக்குப்பழி வாங்கி வஞ்சம் தீர்த்துக் கொள்ள வேண்டுமென்று உறுதி பூண்டான். தனது பேராற்றலாலும், பெரு வீரத்தாலும் மாற்றாரை முறியடித்து, மண்டியிடச் செய்து, பாண்டியரது மீன் கொடியினைப் பட்டொளி வீசிப் பறக்கவிட்டு, பாண்டியரது பெருமையினைப் பாரறியச் செய்த ஆற்றல் மறவன் இவனேயாவான்.

**திருப்புமுனை**

இவ் வேந்தனது மெய்க்கீர்த்தி 'பூமருவிய திருமடந்தையும் புவிமடந்தையும் புயத்திருப்ப' என்னும் தொடக்கத்தினைக் கொண்டுள்ளது. இவ் வேந்தன் அரியணையேறியதிலிருந்து பாண்டியப் பேரரசு புதுப்பொலிவு பெற்று, புதிய வரலாறொன்றினைப் படைக்கத் தொடங்கியது. சுந்தர பாண்டியனது ஆட்சிக்காலம் பாண்டிய வரலாற்றிலோர் திருப்புமுனையாகும். புதியதொரு கால கட்டத்தினைத் தொடங்கிய இவன், இத்துணைக் காலமாகச் சோழருக்கடங்கி, திறை செலுத்திய நிலையிலிருந்த பாண்டியரை, சோழரையடக்கி, அவர்களிடம் திறை வசூலிக்கும் பேராதிக்கம் கொண்ட பரம்பரையினராக மாற்றிய பெருமைக்குரியவனுவான்.

வரலாற்றறிஞர், பண்டாரகர் திரு. மு. ஆரோக்கியசாமி அவர்கள் 'மாறவர்மன் சுந்தரன் மதுரையிலே ஆட்சி செய்த காலம் (கி. பி. 1316-38) பாண்டிய மறுமலர்ச்சி வரலாற்றிலே பொன் எழுத்துகளால் பொறிக்கப்பட வேண்டிய காலம் ஆகும்' என்று தமது நூலின்கண்[3] குறிப்பிட்டுள்ளதாலும் இவ் வேந்தனது சிறப்பு நன்கு புலனாகின்றது.

1 Ins. 340 of 1916
2 Ins. 183 of 1935—36
3 ஆரோக்கியசாமி. Dr. மு. 'தமிழ்நாட்டு வரலாறு' பக். 75

இவ் வேந்தனது எழுச்சியால் சோழர் குலம் தாழ்கின்றது. பாண்டியர்குலம் உயர்கின்றது. கங்கை கொண்ட சோழபுரத்தில் உயர்ச்சி பெற்றுக்கொண்டிருந்த சோழரின் கொற்றம் மங்கி விடுகின்றது. இவ் வேந்தன் பாண்டியப் பேரரசின் மறுமலர்ச்சிக் காலத்தின் புதியதோர் அத்தியாயத்தைத் தொடங்கிய பண்டைய பாண்டியர் ஏற்றி வைத்துச் சென்ற புகழொளியைத் தூண்டிவிட்டான் எனலாம்.

**ஆதாரங்கள்**

பாண்டியரின் மறுமலர்ச்சிக்குப் புத்துணர்ச்சியூட்டி, அதன் உயர்ச்சிக்கு அடிகோலிய இக் கோமான்பற்றி அறிந்துகொள்ள ஏராளமான கல்வெட்டுகள் பெருந்துணை புரிகின்றன. அவற்றுள் இவ் வேந்தனது மூன்றுமாட்சியாண்டில் வெளியிடப் பெற்ற குடுமியாமலைக் கல்வெட்டும்,[1] திருச்சிமாவட்டம் கரூருக்கு மேற்கே உள்ள ரெங்கமலைக் கல்வெட்டும்,[2] நான்காமாட்சியாண்டில் வெளியான தென்காசிக் கல்வெட்டும்,[3] ஐந்தாமாண்டினதாகிய திருவாலீஸ்வரம் கல்வெட்டும்,[4] ஆறுமாண்டினதான திருச்சுனல் கல்வெட்டும்,[5] (Thiruccunal), தென் திருப்பேரைக்

[1] 362 of 1906

[2] ரெங்கமலை கரூர் — திண்டுக்கல் சாலையில் (வழி அரவக்குறிச்சி) பள்ளப்பட்டிக்கு அண்மையில் உள்ளது. இம்மலை முன்பு தங்கமலையென்றழைக்கப்பட்டது. இம்மலை சஞ்சீவி மலை, சதுரகிரி என்னும் பெயர்களாலும் அழைக்கப் பெறுகின்றது. முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியன் சோணாட்டைக் கைப்பற்றியபோது (கி. பி. 1219), அந் நாட்டின் ஒரு பகுதியான கரூரையும் கைப்பற்றினன் அவனது படை பாண்டிய நாட்டிலிருந்து சோணாட்டிற்கு ரெங்கமலை வழியாகப் படை நடத்திச் சென்றிருக்கக் கூடும். இம் மலையின் பாறையில் இவனது ஏழாமாட்சியாண்டுக் கல்வெட்டொன்று காணப் பெறுகின்றது. இக் கல்வெட்டில் உருவப் படையொன்று குறிக்கப்பட்டுள்ளது. இம் மலையின்மீது 'மல்லீசுவரர்' ஆலயம் ஒன்றுள்ளது. இக் கோயில் கட்டட அமைதியை, உற்று நோக்குங்கால், இது சுந்தர பாண்டியனது காலத்தில் எடுப்பிக்கப் பெற்று, பின்னர் புதுப்பிக்கப்பட்டதாகத் தெரிகிறது. இச் சிவன் கோயில் மண்டபத் தூணில் ஒருருவம் சாமி கும்பிடுவது போன்ற நிலையில் செதுக்கப்பட்டுள்ளது. இது சுந்தர பாண்டியனது உருவமாக இருக்கலாமென்று கருதப்படுகிறது. சுந்தர பாண்டியனது கல்வெட்டு இங்கு காணப்படுவதனாலும், இக் கல்வெட்டில் இவனது நிலதானம் குறிக்கப்பட்டுள்ளதாலும் இதனை நாம் இவ்வாறு ஊகிக்கலாம். பாண்டியரது மீன் சின்னமும் இங்குப் பொறிக்கப்பட்டுள்ளது. கரூர்ப் பகுதியிலுள்ள திருவெஞ்சமாக் கூடலிலுள்ள சிவன் கோயிலிலும், திருமுக்கூடலிலும் இவன் சில திருப்பணிகளைச் செய்துள்ளான்.

மதுரை மாவட்டத்தினையும், திருச்சி மாவட்டத்தினையும் இம்மலையருகேயுள்ள 'ரெங்கமலைக் கணவாய்' பிரிக்கின்றது என்பது ஈண்டு குறிப்பிடத்தக்கதாகும்.

[3] 122 of 1910

[4] 353 of 1916

[5] 122 of 1908

கல்வெட்டும்,[1] திருச்சிக் கல்வெட்டும்,[2] திருப்பத்தூர்க் கல் வெட்டும்,[3] போசளர், சோழர் கல்வெட்டுகளும் குறிப்பிடத் தக்கவையாகும்.

**சோனாட்டின்மீது படையெடுத்தல்**

தனது இளமைக் காலத்தில் சோழப் பெருவேந்தனும் மூன்றாம் குலோத்துங்கன் பாண்டிய நாட்டின்மீது படை யெடுத்து, மணிமண்டபங்களையும், நகரினையும் அழித்து, பாண் டியரது பெருமையினைக் குலைத்து, பாண்டிய வரலாற்றில் நீங்காத கறையினையேற்படுத்தியதும், சுந்தரபாண்டியனது நெஞ்சத்தில் நிழலாடிக் கொண்டிருந்தன; பசுமரத்தாணிபோல் மனத்தை உறுத்திக் கொண்டிருந்தன. இந் நிலையில் சோனாட் டினை மூன்றாம் குலோத்துங்க சோழனின் மகனான மூன்றாம் இராசராசன் ஆண்டு கொண்டிருந்தான்.

'கொக்கொக்கக் கூம்பும் பருவத்து மற்றதன்
குத்தொக்க சீர்த்த இடத்து'

என்னும் வளமார்ந்த வள்ளுவனின் வாக்கினுக்கிணங்க சோனாட்டின்மீது படையெடுக்கக் காலம் கருதியிருந்த சுந்தர பாண்டியன் போர்ப்படைத் தலைவரையும், நாற்படையாள ரையும் திரட்டிக்கொண்டு கி.பி. 1219-ஆம் ஆண்டு சோனாட்டின் மீது வேங்கையெனப் பாய்ந்தான்; மூன்றாம் இராசராச சோழனைப் போரில் வென்றான்; அந் நாட்டினையும் கைப்பற்றிக் கொண்டான்.

**பழிக்குப் பழி**

சுந்தர பாண்டியனது போர்ச் செயல்களை உற்று நோக்குங் கால், மூன்றாம் குலோத்துங்க சோழன் பாண்டிய நாட்டின் மீது படையெடுத்து என்னென்ன அழிவுகளைச் செய்தானோ அவற்றையே தானும் தனது சோனாட்டுப் படையெடுப்பில் திருப்பிச் செய்தான்; பழிக்குப்பழி வாங்கினானென்பது நன்கு புலனாகின்றது. சோனாட்டுப் படையெழுச்சியின்போது பாண்டிய நாட்டு வீரர்கள் சோழரின் பழைய தலைநகரான தஞ்சையையும், உறையூரையும் தீக்கிரையாக்கினர்; பேரழிவை நிகழ்த்தினர்; பல மணி மண்டபங்களும் மாடமாளிகைகளும், கூட கோபுரங்களும் இடித்துத் தள்ளப்பட்டன. தரைமட்ட

1 284 of 1940—41.
2 323 of 1955—56
3 176, 186 of 1935—36

மாக்கப்பட்டன. இவ்வாறு பாண்டியரது சீற்றமும் ஒருவாறு தணிக்கப்பட்டது. சோழன் கரிகாற் பெருவளத்தான் பட்டினப் பாலை பாடிய உருத்திரங் கண்ணனாருக்கு, அவரது புலமைத் திறத்தினைப் பாராட்டு முகத்தான் பரிசிலாக வழங்கிய, பதினாறு கால்மண்டபம் மட்டுமே இவ் வழிவினின்றும் தப்பியதென்பதனை திருவெள்ளாரையில் காணப்படுகின்ற செய்யுள் வடிவிலான பின் வரும் சுந்தர பாண்டியனது கல்வெட்டொன்று கூறுகிறது:

'வெறியார் தளவத் தொடைச் செய மாறன் வெகுண்ட
தொன்றும்
அறியாத செம்பியன் காவிரி நாட்டி லரமியத்துப்
பறியாத தூணில்லை கண்ணன்செய் பட்டினப்பாலைக்
கன்று
நெறியால் விடுந் தூண் பதினாறு மேயங்கு நின்றனவே'

— திருவெள்ளாரைக் கல்வெட்டு

### எரியூட்டலும் பேரழிவு நிகழ்த்துதலும்

சுந்தர பாண்டியன் சோணாட்டின்கண் நிகழ்த்திய இப் பேரழிவினை எண்ணும்போது கி. பி. 1565ஆம் ஆண்டில் தலைக் கோட்டைப் போரில், வெற்றி பெற்ற பாமினி சுல்தான்கள் விசய நகரத்தினைத் தீக்கிரையாக்கி, பேரழிவிற்கு உட்படுத்திய பயங்கரமான நிகழ்ச்சியும், கி.பி. 1398-ல் கொடுமையே உருவான தைமூர் டில்லியினைச் சுட்டுப் பொசுக்கி, சுடுகாடாக மாற்றிய சோக நிகழ்ச்சியுமே நம் மனக் கண் முன் நிழலாடுகின்றன.

### வீராபிஷேகம்

இப் பேரழிவின் காரணமாகச் சோணாட்டின் தலைநகரங்களில் பட்டினியும் பஞ்சமும் தலைவிரித்தாடின. எங்கு நோக்கினும் வறுமையும் வெறுமையும் அரசோச்சின. போரில் தோல்வி கண்ட மூன்றாம் இராசராசன் தனது உரிமைச் சுற்றத்துடன் தலைநகரினை விட்டு வெளியேறி வேறிடஞ்சென்றான். போரில் பெரு வெற்றி பெற்ற சுந்தர பாண்டியன் சோழர்களின் இரண்டாவது தலைநகரான பழையாறை என்னும் பழமை மிக்க நகரை யடைந்து, ஆங்குள்ள ஆயிரத்தளி என்னும் பெயர் கொண்ட அரண்மனையின்கண்ணுள்ள சோழர்கள் முடிசூட்டு விழாவினை நடத்தும் மணி மண்டபத்தின்கண் வீராபிடேகஞ் செய்து கொண்டான்.[1] முன்பு மூன்றாம் குலோத்துங்க சோழன்

[1] மாவர்மன் சுந்தர பாண்டியனது மூன்று, நான்கு, ஏழு ஆகிய ஆண்டுக் கல்வெட்டுகள் திருவானைக்காவல் ஜம்புகேசுவரர் ஆலயத்தில் காணப்படுகின்றன. இவன் சோழரை வென்று, பழையாறை ஆயிரத்தளியில் விசயாபிடேகம் செய்

மதுரை மாநகரின்கண்ணமைந்துள்ள மணிமண்டபத்தில் வீராபிடேகஞ் செய்து கொண்டது போன்று இவனும் ஆயிரத்தளி[2] மணி மண்டபத்தில் வீராபிடேகஞ் செய்து கொண்டு பாண்டியருக்கு ஏற்பட்ட களங்கத்தினைப் போக்கிக் கொண்டானென்பது ஈண்டு நினைவு கொள்ளத்தக்கதாகும். பின்பு சுந்தர பாண்டியன், மன்றிலே நின்றாடுகின்ற நடராசப் பெருமான் எழுந்தருளியுள்ள தில்லையம்பதி சென்று, பொன்னம்பலவாணனை வணங்கி அவனை நினைந்து நினைந்து நெஞ்சுருகி மகிழ்ந்தான்.

**சோணாட்டினை வழங்குதல்**

ஆடவல்லானை வணங்கி மகிழ்ந்த சுந்தர பாண்டியன் பின்னர் பாண்டி நாடு திரும்பினான். திரும்புங்கால் இடையி லுள்ள பொன்னமராவதியிலிருந்த தனது அரண்மனையில் சின்னாட்கள் தங்கியிருந்து, மக்களின் குறைகளைக் கேட்டறிந்து ஆவன செய்தான். அதுபோழ்து சோணாடிழந்து சோகச்சுமை யோடிருந்த மூன்றாம் இராசராச சோழனை அழைத்துவரத் தூதொன்று அனுப்பினான்; சோழ வேந்தனும் அவனது மைந்தனும் பொன்னமராவதி வந்து சேர்ந்தனர்; பாண்டியனது பாதம் பணிந்தனர்; பாண்டியனும் அவனது சோணாட்டினை அவனுக்கு வழங்கினான். பாண்டியருக்கு முறையாகத் திறை செலுத்தி வருமாறு ஆணையிட்டான்; 'சோணாடு வழங்கியருளிய சுந்தர பாண்டிய தேவர்' என்னும் சிறப்புப் பெயரும் பூண்டான்.

இவன் சோணாடு கொண்ட நிகழ்ச்சியும், அதனைத் திரும்பவும் சோழ வேந்தனுக்கு வழங்கிய நிகழ்ச்சியும் இவ் வேந்தனது மூன்றாமாட்சியாண்டுக் கல்வெட்டுகளில் விளக்கமாகக் கூறப் பட்டுள்ளன. இச் செய்தி தஞ்சை மாவட்டம் திருக்காட்டுப்

---

செய்தியினைத் தனது மூன்றாமாட்சியாண்டில் வெளியிட்ட கல்வெட்டில் குறித்து, அதனை மூன்றாம் பிரகார கிழைக் கோபுரத்தில் பொறித்து வைத்தானென்று கல் வெட்டொன்றும் கூறுகின்றது. 'திருவானைக்கா கும்பாபிஷேக மலர். 1961)

2 பேராதிக்கச் சோழர் மரபு விசயாலயனால் தொடங்கப் பெறு முன்பு புகழ்மங்கி, சிற்றரசர்களாகத் திகழ்ந்த சோழ அரச குடும்பத்தினர் பழையாறை நகரிலேயே வாழ்ந்து வந்தனர். இம்முதுநகர் இன்று தன் பெருமைக் குன்றி காணப் பெறுகின்றது. இக்காலை கும்பகோணத்திற்கு மேற்கிலுள்ள தாராசுரம் புகைவண்டி நிலையத்திலிருந்து தெற்கே ஒன்றரைக் கல் தொலைவில் பழையாறை அமைந்துள்ளது. அக்காலை இந் நகரம் முழையூர், பட்டீச்சுரம், திருச்சத்தி முற்றம், சோழமாளிகை, திருமேற்றளி, கோபிநாத பெருமாள் கோயில், ஆரியப் படையூர், புதுப்படையூர், பம்பைப் படையூர், மணப்படையூர், அரிச் சந்திரபுரம், தாராசுரம், நாதன்கோயில் ஆகிய ஊர்களையும் தன்னகத்தே கொண்டு பெருநகராகத் திகழ்ந்தது. (திரு டி. வி. சதாசிவ பண்டாரத்தார் – செந்தமிழ் தொகுதி 43 – பகுதி. 3, 4. (பழையாறை நகர்)

பள்ளிக்கருகிலுள்ள கோயிலடி என்னும் ஊரிலுள்ள இவ் வேந்தனது கல்வெட்டிலும் குறிக்கப்பட்டுள்ளது.[1] இக் கல் வெட்டுகள் இவன் சோணாட்டினை வென்று கைக்கொண்டமை யின் 'சோணாடு கொண்டருளிய சுந்தர பாண்டிய தேவர்'[2] என்றும் அதனைச் சோழவேந்தனுக்கு வழங்கியமையின் 'சோணாடு வழங்கியருளிய சுந்தர பாண்டிய தேவர்'[3] என்றும் குறித்துள்ளதால் இச் செய்தி உறுதி பெறுகிறது. இவை யாவும் இவனது மூன்றாமாட்சியாண்டுக் கல்வெட்டில் குறிக்கப்பெற்றுள்ளதால், இவை கி. பி. 1218 ஆம் ஆண்டிற்குள் நிகழ்ந்திருத்தல் வேண்டுமென்று அறுதியிட்டு உறுதியாகக் கூறலாம்.

**சோணாட்டை வழங்கியதன் உள் நோக்கம்**

சுந்தர பாண்டியன் தான் வென்ற சோணாட்டினைச் சில திங்களுக்குள் சோணாட்டு வேந்தனுக்குத் திரும்ப கொடுத்தருளி யமைக்குச் சில அரசியல் காரணங்களும் உண்டெனத் தெரி கிறது. மேற்கில் போசளர் (Hoysalas) கை ஓங்கியிருந்தது. அரசியல் செல்வாக்கிலும் சூழ்ச்சியிலும் வலியிலும் அவர்கள் மேம்பட்ட நிலையினையடைந்தனர். போசளப் பேரரசனும் இரண்டாம் வல்லாளன் (கி. பி. 1173—1220) சோணாட்டிள வரசியை மணந்தான்; அவள் வயிற்றில் இரண்டாம் நரசிம்மன் பிறந்தான்; வளர்ந்தான்.

பாண்டி வேந்தனது கல்வெட்டினைக் கொண்டு போசளர், தமது வீழ்ச்சிப் பாதையினை நோக்கி விரைந்து சென்று கொண் டிருந்த சோழருக்குப் பேருதவி புரிந்தனரென்பதனை அறியலாம். போசள மன்னனான இரண்டாம் வல்லாள தேவனும் அவனது மைந்தனான வீர நரசிம்மனும், சோழ வேந்தனான மூன்றாம் இராசராசனுக்குத் தன்னாலியன்ற உதவிகளைச் செய்து வந்தனர்.

மேற்கூறியவற்றான் பாண்டிய நாட்டில் போசளரின் அச்சுறுத்தல் இருந்ததென்றும், போசளரும் சோழரும் கூட்டுச் சேர்ந்து பாண்டிய நாட்டின்கண் படையெடுப்பதனைத் தடுத்து நிறுத்த வேண்டுமெனின், சோணாட்டரசையும் முடியையும் சோணாட்டு வேந்தனிடம் ஒப்படைத்தல் நலம் பயக்குமென்ற அரசியல் தந்திரத்தால், சுந்தர பாண்டியன் தூண்டப் பெற்று

1 No. 270 of 1901: திருக்காட்டுப்பள்ளி கல்லணை—சாலையில் கல்லணையி லிருந்து கிழக்கே நான்கு கல் தொலைவில் கோயிலடி உள்ளது.

2 Ins. 358 of 1916.

3 Ins. 322 of 1927—28.

னெனவும் கொள்ளலாம். இதன் காரணமாகத்தான் பாண்டியன் சோழரிடம் பெருந்தன்மையுடன் நடந்து கொள்ள வேண்டியதொரு இக்கட்டான நிலைக்குத் தள்ளப்பட்டதாகக் கொள்ளலாம். மேலும், போசளரது எழுச்சியின் காரணமாக, பாண்டியர் சோழரைப் பகைத்துக் கொள்ள முடியவில்லை. போசள மன்னர்களின் வெட்டெழுத்துகளாலும், உருத்திரப்பட்டர் என்பார் இயற்றிய 'சகனாதவிசயம்' என்ற கன்னட நூலாலும் இச் செய்தியினை நாம் அறிந்து கொள்ள முடிகிறது.

### மெய்க்கீர்த்தி

சுந்தர பாண்டியன் சோழரை வென்று தன்னடிப்படுத்தியதும், சோநாட்டினைக் கைப்பற்றி, அதனை மீண்டும் அவர்கட்கு வழங்கியதும், அவனது மெய்க்கீர்த்திப் பகுதியில், விரிவாக விளக்கப்பட்டுள்ளன. அவற்றினைத் தெளிவாக அறிந்து கொள்ளும் பொருட்டு அப் பகுதியினைக் காண்போம்:

'பனிமலர்த் தாமரை திசைமுகன் படைத்த
மனுநெறி தழைப்ப மணிமுடி சூடிப்
பொன்னிசூழ் நாட்டிற் புலியாணை போயகலக்
கன்னிசூழ் நாட்டிற் கயலாணை கைவளர
வெஞ்சின விவுளியும் வேழமும் பரப்பித்
தஞ்சையும் உறந்தையும் செந்தழல் கொளுத்திக்
காவியு நீலமும் நின்று கவினிழப்ப
வாவியு மாறு மணிநீர் நலனழித்துக்
கூடமு மாமதிலுங் கோபுரமு மாடரங்கும்
மாடமு மாளிகையும் மண்டபமும் பலவிடித்துத்
தொழுதுவந் தடையா நிருபர்தந் தோகையர்
அழுத கண்ணீ ராறு பரப்பிக்
கழுதை கொண்டுழுது கவடி வித்திச்
செம்பியனைச் சினமிரியப் பொருதுசுரம் புகவோட்டிப்
பைம்பொன் முடிபறித்துப் பாணருக்குக் கொடுத்தருளிப்
பாடருஞ் சிறப்பிற் பருதி வான்றோய்
ஆடகப் புரிசை ஆயிரத் தளியிற்
சோழ வளவன் அபிஷேக மண்டபத்து
வீராபி ஷேகஞ் செய்து புகழ்விரித்து
நாளும் பரராசர் நாமத் தலைபிடுங்கி
மீளுந் தறுகண் மதயானை மேற்கொண்டு
நீராழி வைய முழுதும் பொதுவொழித்துக்
கூராழியுஞ் செய்ய தோளுமே கொண்டு போய்
ஆயப்படாத வருமறைதே ரந்தணர்வாழ்

தெய்வப் புலியூர்த் திருவெல்லை யுட்புக்குப்
பொன்னம் பலம்பொலிய ஆடுவார் பூவையுடன்
மன்னுந் திருமேனி கண்டு மனங்களித்துக்
கோல மலர்மே லயனுங் குளிர்துழாய்
மாலு மறியா மலர்ச்சே வடிவணங்கி
வாங்கு சிறை யன்னந் துயிலொழிய வண்டெழுப்பும்
பூங்கமல வாவிசூழ் பொன்னம ராவதியில்
ஒத்துலகந் தாங்கு முயற்மேருவைக் கொணர்ந்து
வைத்தனைய சோதி மணி மண்ட பத்திருந்து
சோலை மலிபழனச் சோணாடுந் தானிழந்து
மாலை முடியுந் தரவருக வென்றழைப்ப
மானநிலை குலைய வாழ்நகரிக் கப்புறத்துப்
போன வளவ னுரிமை யொடும புகுந்து
பெற்ற புதல்வனை நின் பேரென்று முன்காட்டி
வெற்றி யரியணைக்கிழ் வீழ்ந்து தொழுதிரப்பத்
தானோடி முன்னிகழ்ந்த தன்மையெலாங் கையலகத்
தானோதகம் பன்னித் தணடார் முடியுடனே
விட்ட புகலிடந்தன் மாளிகைக் குத்திரிய
விட்டபடிக் கென்று மிதுபிடிபா டாகவென
பொங்குதிரை ஞாலத்துப் பூபாலர் தோள் விளங்குஞ்
செங்கயல் கொண்டுன்றுந் திருமுகமும் பண்டிழந்த
சோளபதி யென்னு நாமமுந் தொன்னகரும்
மீள வழங்கி விடை கொடுத்து விட்டருளி'.

'பூமருவிய திருமடந்தையும் புவிமடந்தையும்' எனத் தொடங்கும் இவ் வேந்தனது மெய்க்கீர்த்தியின் முற்பகுதியில் கொங்கர், கலிங்கர், கோசலர், மாளவர், சிங்களர், தெலுங்கர், சீனர், குச்சரர், வில்லவர், மகதர், விக்கலர், செம்பியர், பல்லவர் முதலிய பார்த்திவர் அனைவரும் இவ் வேந்தனுக்குத் திறை செலுத்திய செய்தி கூறப்பட்டுள்ளது.

சீனர் என்பது சீன நாட்டு அரசர். இது பாண்டிய வேந்தனது அரசவையில் வீற்றிருந்த சீன நாட்டு அரசனின் தூதுவரைக் குறிப்பதாக திரு. இராமச்சந்திர தீட்சதர் கருதுகின்றார்.

குச்சரர் என்பது குச்சர தேசத்து அரசர். இது குஜராத் தேசமாக இருத்தல் வேண்டுமென்று திரு. இராமச்சந்திர தீட்சதர் கருத்துத் தெரிவிக்கிறார்.

### கொங்கு வேந்தருடன் நட்பு

பாண்டியரது நெடுநாள் பகைவரான சோழரை வென்று அடக்கி, திறை செலுத்தும் வேந்தனாக மாற்றிய, ஆற்றல் மறவனும் இவன், பாண்டிய நாட்டினைப் பெருமையுடன் ஆண்டு கொண்டிருந்த காலை, கொங்கு நாட்டின்கண் குழப்பமும் கொந்தளிப்பும் ஏற்பட்டது. கொங்கு வேந்தர்களிடையே பொறாமையும் பகைமையும் உருவாயிற்று. வடகொங்கு வேந்தன் தனது உறவினர்களால் சொல்லவொண்ணாத் தொல்லைகளுக்கு ஆளாக்கப்பட்டான். தொல்லையின் எல்லையைக் கண்ட, வட கொங்கு வேந்தன் தன்னாட்டின் எல்லையினைத் தாண்டி வந்து, சுந்தர பாண்டியன்பால் அடைக்கலம் புகுந்தான்; தனக்குதவி புரியுமாறு அவனிடம் வேண்டுகோள் விடுத்தான்.

இதனையறிந்த தென் கொங்கு வேந்தனும் தனக்குப் பாண்டிய வேந்தனால் தொல்லைகள் நிகழக் கூடுமென்று அஞ்சி, தனது பெரும்படையுடன் பாண்டி நாடு போந்து சுந்தர பாண்டியனை வணங்கி அவனடி பணிந்தான். பாண்டியன் இருவரையும் சில நாட்கள் தனது விருந்தினராக ஏற்றுக் கொண்டு, அவர்களை அச்சுறுத்தித் தனது கருத்தினை ஏற்றுக் கொள்ளுமாறு செய்து, அவர்களது முரண்பாட்டினை யொழித்து, வழியனுப்பிவைத்தான். இதனால் சுந்தர பாண்டியனது பெருமை கொங்கு நாட்டில் பரவியது. இந் நிகழ்ச்சிபற்றி நாம் தெளிவாக அறிந்துகொள்ளக் கூடவில்லையாயினும் கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும், பதின்மூன்றும் நூற்றாண்டின் முற்பகுதியிலும் பாண்டியருக்கும் கொங்கு வேந்தருக்குமிடையே நட்புரிமை வலுப்பெற்றிருந்ததென்பதனை மட்டும் நாம் அறிந்து கொள்ள முடிகிறது.[1]

### மீண்டும் சோழருடன் போர்

ஆண்டுகள் சில கழிந்த பின் சோழன் தான் கொடுத்திருந்த வாக்குறுதியை மறந்தான். அவனுக்குத் திறை செலுத்துதலைத் துறந்தான். இவ்வாறு இராசராச சோழன் திறை கொடுக்க மறுத்தமையின் சுந்தர பாண்டியன், சோழனை எதிர்த்துப் போரிடத் துணிந்தான். கி. பி. 1231ஆம் ஆண்டு தனது பெரும் படையினைத் திரட்டிக் கொண்டு சோணாட்டின்மீது புலி யெனப் பாய்ந்தான். மீண்டும் சுந்தர பாண்டியனுக்கும் இராசராச சோழனுக்கும் பெரும் போர் மூண்டது. போரின் இறுதியில் சோழனது படை வலிவிழந்து, நிலைகுலைந்து, புற

1 Ins. 336 of 1927—28; S.I.I. Vol. V. No. 421; Ins. 672 of 1916.

முதுகிட்டோடியது. வெற்றி வாய்ப்பினையிழந்த சோழ வேந்தன் நாட்டினையும் முடியினையும் இழந்து வடபுலம் நோக்கிச் சென்றான். இராசராச சோழனது தேவியரும் பட்டத்தரசியும் அந்தப்புர (Harem) அழகிகளும் பாண்டி வேந்தனால் சிறை பிடிக்கப்பட்டு, முடிகொண்ட சோழபுரத்திற்குக் கொண்டு செல்லப்பட்டனர்.

அதுபோழ்து பல்லவப் பேரரசின் வழிவந்த குறுநில மன்னனான முதலாம் கோப்பெருஞ்சிங்கன், இராசராச சோழனை வடவார்க்காடு மாவட்டத்திலுள்ள வந்தவாசி என்னும் ஊரில் இடைமறித்துப் பிடித்துச் சேந்தமங்கலத்திலிருந்த கோட்டையில் சிறை வைத்தான் (கி. பி. 1331).[1] இத்துடன் நில்லாது கோப்பெருஞ்சிங்கன் சோணாட்டின் பகுதிகள் சிலவற்றையும் வெற்றி கொண்டான். பேரழிவினையும் நிகழ்த்தினான். சுந்தர பாண்டியன் இரண்டாம் தடவையாகச் சோணாட்டின்மீது படையெடுத்த நிகழ்ச்சி இவனது இருபதாமாண்டுக் கல்வெட்டிலும் கூறப்பட்டுள்ளது.[2]

**வீராபிடேகமும் விசயாபிடேகமும்**

வெற்றி வீரனான சுந்தர பாண்டியன் சோழரது இரண்டாம் தலைநகரும், சோழ வேந்தர் முடிசூட்டு விழாவினை நடத்தும் பெரு நகரமான முடிகொண்ட சோழபுரம் சென்று, ஆங்கு இரண்டாம் முறையாக வீராபிடேகமும் விசயாபிடேகமும் செய்து பெருமை கொண்டான். முடி கொண்ட சோழபுரமென்பது தஞ்சை மாவட்டம் கும்பகோணத்திற்கருகிலுள்ள ஊரேயாகும்.[3] ஆங்கு சோழர்களது அரண்மனை நிலைபெற்றிருந்த இடம் இக்காலை சோழ மாளிகையெனும் பெயரால் தனியூராகவே உள்ளது.

இவ்வாறு சோழ வேந்தனை இரண்டாவது தடவையும் வென்று, வீராபிடேகஞ் செய்துகொண்ட சுந்தர பாண்டியனை அவனது பதினைந்தாமாண்டுக் கல்வெட்டுகளுள் சில 'சோணாடு

[1] Ep. Ind. Vol, XXIII, No. 27; The Vailur Inscription of Kopperunjinga I.

[2] சோழனுக்கெதிரான போரில், பாணன் பாண்டியனுக்குத் துணையாகப் போரிட்ட காரணத்தால், சோணாட்டினை அப் பாணனுக்குச் சுந்தர பாண்டியன் வழங்கினான் என்பதனைத் திருவானைக்கா மேலைக் கோபுரக் கல்வெட்டு கூறுகிறது. (481 of 1908)

[3] Ins. 271 of 1927. (முடிகொண்ட சோழபுரமென்பது திருச்சி மாவட்டத்திலுள்ள சயங்கொண்ட சோழபுரமாகுமென்று பண்டாரகர் திரு. கே. எஸ். அய்யங்கார் கருதுகின்றார். திரு. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியாரும் அய்யங்காரது கருத்தையே கொண்டுள்ளார். இக் கருத்து பொருத்தமாகத் தோன்றவில்லை)

வழங்கியருளிய ஸ்ரீ சுந்தர பாண்டிய தேவர்[1] எனவும், அதே ஆட்சியாண்டில் வெளியிடப்பெற்ற வேறு சில கல்வெட்டுகள் 'சோணாடு கொண்டு முடி கொண்ட சோழபுரத்து வீராபிஷேகமும் விசயாபிஷேகமும் பண்ணியருளிய வீர சுந்தரபாண்டிய தேவர்'[2] என்றும் குறிப்பிடுகின்றன.

இவற்றினை நாம் நுண்ணிதின் ஆய்ந்து பார்க்குங்கால், இப்போர் நிகழ்ச்சி இவ் வேந்தனது பதினைந்தாமாட்சியாண்டில் பிற்பகுதியில் நிகழ்ந்திருத்தல் வேண்டுமென்று உறுதி செய்யலாம். இவன் சோணாட்டின்மீது மேற்கொண்ட இரண்டாவது படையெழுச்சியும், அதுபோழ்து அவன் நிகழ்த்திய வீர தீரச் செயல்களும் இவனது மெய்க்கீர்த்தியில் விரிவாகக் கூறப்பட்டு உள்ளன. தஞ்சாவூர் மாவட்டம், திருச்சி மாவட்டம், புதுக்கோட்டை நாடு ஆகியவற்றின் பல பகுதிகளில் இவ் வேந்தனது கல்வெட்டுகள் காணப்படுதலின், இவையனைத்தும், இவனது ஆட்சிக்குச் சிலகாலம் உட்பட்டிருந்தன என்பதனை நன்குணரலாம்.

**எண்ணம் ஈடேறவில்லை**

சுந்தர பாண்டியன் இரண்டு தடவை சோணாட்டின்மீது படை நடத்திச் சென்று, சோழரை வென்று, அவரது அரசினைக் கைப்பற்றி, அவரது தலைநகரத்தின்கண் வீராபிடேகம் செய்து கொண்ட போதிலும், நிரந்தரமாகச் சோணாட்டினைத் தனது ஆதிக்கத்தின்கீழ்க் கொணர முடியவில்லையென்றும், அந்நாட்டினை முழுமையாகக் கைப்பற்றியதாகத் தெரியவில்லையென்றும் அறியப்படுகின்றன. இவ் வேந்தனது கல்வெட்டுகளுள் சில சோணாட்டிலுள்ள திருவரங்கம், திருக்காட்டுப்பள்ளி கோயிலடி[3] ஆகியவிடங்களில் காணப்பட்ட போதிலும், இவனது மேலாண்மையும் நேரடியாட்சியும் சோணாட்டில் நிரந்தரமாக ஏற்படாமல், பாண்டிய நாட்டில் மட்டுமே நிலவியிருந்தது. இதனால் சோணாட்டினை வென்று அதனையடக்கி ஆள வேண்டுமென்ற இவனது எண்ணம் நிறைவேறவில்லையென்றும்,

[1] Ins. of the Pudukkottai State; Nos. 293 and 295.

[2] Ibid. Nos. 292, 297 and 298,

[3] இவ் வேந்தனது ஒன்பதாமாட்சிக் கல்வெட்டொன்று திருச்சிக்கண்மையிலுள்ள திருவரங்கத்தில் காணப் பெறுகிறது. இதனைக் கொண்டு இவன் கோயில் விவகாரங்களில் சில சீர்திருத்தங்களைச் செய்தானென்பது புலனாகின்றது. (No, 53 of 1892—S.1.1. Texts Vol. 1V, No. 500) தஞ்சை மாவட்டத்தின்கண்ணுள்ள திருக்காட்டுப் பள்ளியில் காணப்பெறுகின்ற இவ் வேந்தனது ஏழாமாட்சியாண்டுக் கல்வெட்டு, ஆங்கு அம்மன் கோயிலொன்று கட்டப்பட்டதனைக் குறிப்பிடுகின்றது. (52 of 1897; E.1. Vol. V1, p. 304) திருக்காட்டுப் பள்ளிக்க கிலுள்ள கோயிலடிக் கல்வெட்டு இவனது வெற்றிகளைப் பேசுகின்றது. (No, 270 of 1901)

இதற்குப் போசளரின் தலையீடும் ஒரு தடைக்கல்லாக இருந்த தென்றும் உணரலாம்.

**போசளரின் வெற்றியும் பாண்டியரின் தோல்வியும்**

மேற்கில் போசளர்கள் தமது படை வலிமையைப் பெருக்கிக் கொண்டு வலிமை பெற்றிருந்தனர். அவர்கள் சோழருடன் மணவினைத் தொடர்பும் கொண்டிருந்தனர். தாய் வழியில் சோழர் குலத்தினன வீர நரசிம்மன் என்னும் போசள வேந்தன் மூன்றும் இராசராசசோழன் கோப்பெருஞ்சிங்கனால் சிறையிலடைக்கப்பட்ட செய்தி கேட்டுத் துடித்தெழுந்தான்; கொதித்தெழுந்தான்; கோப்பெருஞ்சிங்கனை முறியடிக்க உறுதி பூண்டான்; பெரும்படையுடன் கோப்பெருஞ்சிங்கனது படையின் மீது பாய்ந்தான்; கோப்பெருஞ்சிங்கனைத் தோற்கடித்தான். சேந்தமங்கலத்தில் சிறை வைக்கப் பெற்றிருந்த சோழ வேந்தனை மீட்டான்;[1] சோணாட்டினையும் கைப்பற்றி விட்டான்.

சோழ வேந்தனின் பகைவனான சுந்தர பாண்டியனைத் தண்டிக்கவும் முடிவெடுத்தான். பாண்டியரின்மீது போர் தொடுத்தான்; காவிரியாற்றங்கரையிலுள்ள மகேந்திர மங்கலத்தில் நிகழப்பெற்ற கடும்போரில் சுந்தர பாண்டியனை முறியடித்தான்.[2] சுந்தர பாண்டியன், போசள வேந்தனான வீரநரசிம்மனிடம் சோணாட்டில் நிகழ்ந்த போரில் தோல்வி கண்டனனென்றும், அவனுக்குத் திறை செலுத்தினனென்றும் 'கத்திய கர்ணாமிர்தம்'[3] என்னும் கன்னட நூலும் சான்று பகர்வதால் சுந்தர பாண்டியனின் தோல்வி உறுதி செய்யப் பெறுகிறது. எனவே, சோணாட்டின் ஆட்சி இப் பாண்டி வேந்தனது ஆட்சிக்குச் சில ஆண்டுகளே உட்பட்டிருந்தது என்பது தெளிவாகிறது.[4]

[1] Ep. Ind. Vol. VII. pp. 167—68.

[2] Nilakanta Sastri, K. A. 'The Colas' Second Edition (1955) pp. 424—425.

[3] Mrs.Sharma Sastri on the 'Gadyakarnamirta' in the Mysore Archaeological Report 1924, P. 12.

[4] சுந்தரபாண்டியன் சோணாட்டின்மீது மேற்கொண்ட முதற் படையெழுச்சியில் இவனிடம் தோல்வி கண்டவன் மூன்றும் குலோத்துங்கனே எனச் சிலர் கூறினர். இக்கருத்து பிழைபட்டதென்பதும், அதுபோழ்து குலோத்துங்க சோழன் உயிருடன் வாழ்ந்திருக்கவில்லை என்பதும் அறியத்தக்கதாகும். பின்னர் மேற்கொண்ட இரு படையெழுச்சிகளிலும் சோழவேந்தன் மூன்றும் இராசராசனே தோல்வியுற்றான் என்பதனால் இதனை அறியலாம் என்று பண்டாரத்தார் கருதுகின்றார். (பிற்காலச் சோழர் சரித்திரம்)

**சான்றுகள்**

போசளர் பாண்டிய நாட்டின்மீது படையெடுத்த நிகழ்ச்சி மேற்கூறிய சான்றுகளால் மட்டுமின்றி, சுந்தர பாண்டியனது கல்வெட்டுகளாலும் உறுதி பெறுகிறது. சுந்தர பாண்டியனது இருபத்திரண்டா மாட்சியாண்டுக் (கி. பி. 1239) கல்வெட்டொன்று திருப்பத்தூரில் காணப்படுகிறது. இக் கல்வெட்டினைக் கொண்டு, போசளரின் படையெழுச்சி பாண்டிய நாட்டின்கண் நிகழ்ந்தகாலை, நாட்டில் நிலவிய அமைதியற்ற சூழ்நிலையைப் பயன்படுத்திக் கொண்டு. கோயிலில் நுழைந்து ஆங்குள்ள பொருளகத்திலுள்ள பொருள்களைச் சிலர் கொள்ளையடிக்க முயன்று, நாட்டில் குழப்பத்தை உண்டு பண்ண முயற்சித்தன ரென்பதையும், அவர்கள் பின்பு பாண்டி வேந்தனால் பிடிக்கப் பட்டு, தண்டிக்கப் பெற்றனரென்பதையும் அறிந்து கொள்ள முடிகிறது.[1] இவ் வேந்தனது பத்தொன்பதாமாட்சியாண்டினைச் சார்ந்த (கி. பி. 1236) மற்றொரு கல்வெட்டில் போசளர் படைத் தலைவனை 'மகாப்பிரதானி போக தண்ட நாயகன்' பாண்டி நாட்டின்கண் கொள்ளையடிக்காமல் இருத்தற் பொருட்டு, அவனுக்குக் காப்புரிமை (immunity) யளிப்பதற்காக இளையான் குடி வாழ் மக்களிடம் தனி வரியொன்று (Special Cess) வசூலிக்கப் பெற்றதாகக் குறிக்கப் பெற்றுள்ளது.[2]

## போசளரின் தலையீடு

### (Intervention of the Hoysalas)

**போசள - பாண்டிய உறவு**

சோணாட்டினைக் கைப்பற்றிய போசள மன்னனான வீர நரசிம்மன், அந் நாட்டினை மூன்றாம் இராசராச சோழனிடத்து திரும்பவும் வழங்கினான். வீர நரசிம்மன் பாண்டியனை வென்ற பின்னர் பாண்டியருக்கும் போசளருக்கும் திருமண உறவுகள் நடைபெற்றன. சோழருக்கும் போசளருக்கும் திருமண உறவு ஏற்பட்டதனை நாம் முன்பே கண்டோம். இதனால் போசள பாண்டிய உறவு வலிமை பெற்றது.

போசளருக்குக் கீழ்ப்படிந்த சோழரது மேலாட்சி தளர்ச்சி யுற்றவுடன் சோழருக்குக் கட்டுப்பட்டுத் திறை செலுத்திய சிற்றரசர்கள் தனியாட்சி நிறுவினர்.

[1] 170 of 1935—36
[2] 294 of 1949—50

இந் நிலையில் பாண்டியரது உறவையும் சோழரது பணிவையும் அடையப் பெற்ற, போசள மன்னன் தமிழக அரசியலில் மிக்க செல்வாக்கும், செருக்கும் பெற்று செம்மாந்து பவனி வந்தான் என்பதனை ஈண்டு நாம் நினைவிற் கொள்ளல் வேண்டும். தமிழக அரசியல் விவகாரங்களில் போசளரின் தலையீடு, இக் கால கட்டத்தின் சுவை மிக்கதொரு அத்தியாயமாகும்.

**வீர நரசிம்மனின் வீரம்**

மூன்றும் இராசராச சோழனை விடுவிக்கத் தனது தலைநகரான துவாரசமுத்திரத்திலிருந்து புறப்பட்ட வீர நரசிம்மன் திருவரங்கத்துக்கண்மையிலுள்ள பாச்சூரில் தனது படைகளை நிறுத்தி வைத்தான்; திருவரங்கத்தையும் காஞ்சிபுரத்தையும் கைப்பற்றினன். கோப்பெருஞ்சிங்கனை அடக்கியொடுக்குவதற்குத் தனது ஆற்றல் மிக்க படைத் தலைவர் இருவரை அனுப்பி வைத்தான்; தான் இராமேசுவரம் சென்று ஆங்கு வெற்றித் தூண் ஒன்றினை நாட்டினன். புகழ் கூட்டினன் (கி.பி. 1231—32).

கோப்பெருஞ்சிங்கனையொடுக்கச் சென்ற படைத்தலைவர்களான அப்பண்ணுவும் சமுத்திர கோபய்யாவும், கோப்பெருஞ்சிங்கனையும் அவனுக்குத் துணை நின்ற சிங்களத்து இளவரசனையும் போர்க்களத்தில் வென்றனர்; சிங்களத்து இளவரசனைச் செங்களத்தில் கொன்றனர். சோழ வேந்தனைச் சிறை மீட்டனர். காடவனிடமிருந்து வீர நரசிம்மன் சோணாட்டினை மீட்டான். 'சோழராச்சிய பிரதிஷ்டாபனாசாரியன்' என்னும் சிறப்புப் பெயரையும் சூட்டிக் கொண்டு சோணாட்டினைத் தான் மீட்டு, நிலை நிறுவின தனது பெருமையினையும் உலகிற்குப் பறைசாற்றினன்; போசளரின் செல்வாக்கினையும் புகழேணியில் ஏற்றினன். பாண்டியரை வென்றான். பகை கொன்றான் (முன்பே கண்டோம்).

பாண்டியருடனும் சோழருடனும் திருமண உறவு கொண்ட போசளர் தென்னிந்தியாவில் தனது மேலாண்மையினை நிறுவினர். தமிழக அரசியலில் அடிக்கடி தலையிட்டுத் தனது செல்வாக்கினை விரிவுபடுத்தினர். இரண்டாம் நரசிம்மனின் மகன் (கி.பி. 1234—63) திருச்சிக்கண்மையிலுள்ள கண்ணனூரிலேயே தங்கிச் சோழரது அரசியலில் இடையிடையே தலையிட்டுத் தனது மேலாண்மையினை நிறுவ முயற்சிகள் மேற்கொண்டான்; ஓரளவுக்கு இதில் வெற்றியினையும் கண்டான்; இத் தருணத்தில் சோழ வேந்தனும் மூன்றும் இராசராசனும் கண் மூடினன்.

**மண உறவுகள்**

போசள மன்னனான இரண்டாம் வல்லாளனது தேவியும், இரண்டாம் வீர நாராயணனது தாயுமானவள் சோழ இளவரசி யாவாரென்பதனை[1] முன்பே கண்டோம். மூன்றாம் இராசராச னுக்குப் பின்பு சோணாட்டின் அரியணையேறிய மூன்றாம் இராசேந்திரன் வீரநரசிம்மனின் மகனான சோமேசுவரனை மாமா எனக் குறிப்பிட்டுள்ளான்.[2] இரண்டாம் மாறவர்மன் சுந்தர பாண்டியனும் (கி. பி. 1238-ல் அரியணையேறியவன்) சோமேசுவரனை மாமடி (மாமன் அல்லது மாமனார்) என்று குறிப்பிடுகின்றான்.

இவ் வுறவினை நாம் நுணுகி ஆய்ந்து பார்க்குங்கால், முதலாம் சுந்தர பாண்டியன் சோமேசுவரனது உடன் பிறந்தாளைத் திருமணம் புரிந்தானென்று கருதலாம்.[3] பாண்டியரது வெட்டெழுத்துகளில் (Inscriptions) குறிக்கப் பெற்றுள்ள 'பம்மி யக்கன்' (Pammiyakkan) என்ற போசள இளவரசியே முதலாம் சுந்தரபாண்டியனை மணந்தவளாக இருக்கக் கூடுமென்று ஊகிக்கலாம். இரண்டாம் சுந்தரபாண்டியனது காலத்திலும் பாண்டிய-போசள உறவுகள் வலுவுடையதாக இருந்தது என்பது மிகவும் குறிப்பிடத்தக்கதாகும்.

**போசளர் தலையீட்டின் விளைவுகள்**

தமிழக அரசியலில் போசளரின் தலையீட்டால் ஏற்பட்ட விளைவு யாது? என்பதும், இத் தலையீடு பாண்டிய, சோழ வரலாற்றினை எவ் வகையில் பாதித்தது என்பதுமே, நாம் அறிந்து கொள்ள வேண்டிய செய்தியாகும். முதலாம் சுந்தர பாண்டியன் தனது மூன்றாமாட்சியாண்டில் சோணாட்டினைக் கைப்பற்றி பின்பு சோழ வேந்தனிடமே அந் நாட்டினை வழங்கினான். இதற்கு இரண்டாம் வீர நாராயணனது தலையீடே முழுமுதற் காரணமாகுமென்பதனை முன்பே கண்டோம். இதன் காரணமாகத்தான் வீரநாராயணன் 'சோழப் பேரரசை மீண்டும் நிறுவியவன்' என்னும் பொருளில் சோழ ராஜ்ய பிரதிஷ்டா பனாசாரியன்' என்னும் பட்டத்தினைச் சூட்டிக் கொண்டுள்ளான். சோழ அரசினைப் பொறுத்த மட்டில் போசளரின் இடையீடு,

[1] Epigraphia Carnatica Vol. v. p. xxii; Q.J.M.S. Vol. ii p. 120.

[2] E. I. Vol. vii, Kielhorns Inscriptions of South India No. 865 (No. 65 of 1892) திருச்சிக்கருகில் உள்ள சோமரசன்பேட்டை இவனது பெயரால் ஏற்பட்ட ஊராகும்.

[3] A.R.E. 1907, Part; ii Para 26 and 1912. Part ii. Para-34-Mysore Arch. Report, 1920, p. 48; Nilakanta Sastri, K. A. 'The Pandyan Kingdom'- Page. 131. lines 3—6.

அவ்வரசினை அழிவினின்றும் காப்பாற்றியதென்றும் அல்லது சோழப் பேரரசின் அழிவினை ஒத்திப் போட்டதென்றும் கருதலாம் (Postponment).

**போசளரின் ஆதிக்கம்**

பாண்டிய அரசினைப் பொறுத்தவரையில் போசளரது இடையீடு பாண்டியரது மேலாண்மை வளர்ச்சியினை ஓரளவு தளர்ச்சியுறச் செய்ததாகக் கொள்ளலாம். வீரநரசிம்மனின் கி.பி. 1223-ஆம் ஆண்டுக் கல்வெட்டுகள்[1] இவன் 'பாண்டியனை அகற்றியவன் (Pandya Disapattanum) என்றும் சோழப் பேரரசினை நிறுவியவனென்றும் குறிப்பிடுகின்றன. இவன் அதியமானையும் சேரனையும் பாண்டியனையும் மகரனையும் காடவனையும் வென்றதாகக் கல்வெட்டுகளில் குறிக்கப் பெற்றிருப்பதோடு, இவன் மலைகளுக்கு இந்திரனாகவும், பாண்டியரது செருக்கடக்கியவனென்றும் (Indra to the mountain, the pride of the pandya:champion)[2] குறிக்கப் பெற்றுள்ளான். கி. பி. 1237–ஆம் ஆண்டு வெளியிடப்பெற்ற போசளர்களின் கல்வெட்டொன்று போசள வேந்தன் பாண்டியர்களை வென்று, வெற்றித் திருவுலா (திக் விஜயம்) நடத்தினனென்றும், போசளனுக்குப் பணியும்படி பாண்டியர்களுக்குக் கடல் அறிவுரை கூறியதாகவும் எடுப்பான செய்யுள் நடையில் கூறப்பட்டுள்ளது.[3]

கி. பி. 1261–ஆம் ஆண்டினதாகிய நரசிம்மனுக்குப் பின்னராண்ட போசள வேந்தனது கல்வெட்டு,[4] எதிரிகளின் தாக்குதலால் மிதித்து, அழிக்கப்பட்டு, தரையிலே கிடந்த சோழ அரசினைத் தூக்கி நிறுத்தி, பாண்டியரை அழித்தவனென்றும் சோழ அரசினை நிறுவியவனென்றும் போற்றப் பெறுகின்ற நரசிம்மனென்று சிறப்பித்துக் கூறுகின்றன.

**உண்மை யாது?**

மேற்கூறிய போசளர்களது கல்வெட்டுகளின் செய்தியினை நாம் தள்ளிவிடுதலியலாது; அதே நேரத்தில் அவற்றில் கூறப்பட்டவையனைத்தும் முழுக்க முழுக்க உண்மையேயென்றும் நாம் ஏற்றுக் கொள்ளவியலாது. சோழப் பேரரசு அழிந்துபடுவதனைப் போசளர் விரும்பவில்லை. எப்படியும் சோழப் பேரரசினை அழிவினின்றும் காத்தல் வேண்டுமென்பது

1 Lewis Rice. Epigraphia Carnatica, Vol. v. Part, i. Introd. pp. xxii ff
2 Ak. 82 of A.D. 1234
3 Ak. 123
4 Bi. 74

அவர்களாது குறிக்கோள். எனவே, அவர்கள் பாண்டியரது பிடியிலிருந்து சோழரை விடுவிக்க முடிவெடுத்தனர். தனது தலைநகரான துவாரசமுத்திரத்திலிருந்து படையெடுத்து வந்தனர். இதனைக் கேள்வியுற்ற பாண்டியர் சோழ அரசினைச் சோழனிடம் ஒப்படைத்து விட்டனர். வீர நரசிம்மனும் கி. பி. 1222-ஆம் ஆண்டு தனது படைகளைத் திருவரங்கத்தினை நோக்கிச் செலுத்தினனென்று அவனது கல்வெட்டு கூறுவதனையும், கி. பி. 1224-ஆம் ஆண்டு அவன் சோழ அரசினை நிறுவியவ னென்று அவனது கல்வெட்டு குறிப்பிடுவதனையும் ஆய்ந்து பார்க்கும்போது போசளரது அதிகாரத்தைக் கண்டு அஞ்சிய பாண்டியர் சோழராட்சியினை, சோழனுக்கு வழங்கியதாகக் கருதலாம்.

போசளரது கல்வெட்டுகளேயன்றி சோழரது கல்வெட்டு களும், பாண்டியரது கல்வெட்டுகளும் தமிழகத்தில் போசளரது படையெழுச்சியினைப்பற்றிக் குறிப்பிடுகின்றன. மூன்றும் இராசராச சோழனது பதினாறுமாட்சியாண்டுக் கல் வெட்டொன்று திருவேந்திபுரத்தில் காணப்படுகிறது. அதில் போசளரது தலையீட்டால் சோழ வேந்தன் சேந்தமங்கலம் சிறையிலிருந்து விடுவிக்கப்பட்டதாகக் கூறப்பட்டுள்ளது. முதலாம் சுந்தர பாண்டியரது இருபத்திரண்டாமாட்சி யாண்டுக் கல்வெட்டும் (திருப்பத்தூர்), இருபத்ியோராமாட்சி யாண்டுக் கல்வெட்டும் வீரநாராயணனது பாண்டியப்படை யெழுச்சிபற்றிக் குறிக்கின்றன; மஹாபிரதானி போக தண்ட நாயகன் என்னும் போசள படைத் தலைவன்பற்றியும் செப்பு கின்றன. 'கத்திய கர்ணாமிர்தம்' என்னும் கன்னட நூலும் இவன் போசளனிடம் தோல்வி கண்டதாகக் கூறுகிறது.

**ஆய்ந்த முடிபு**

இச் செய்திகளனைத்தும் மனத்திற் கொண்டு காய்தல் உவத்த லின்றி ஆராய்ந்து பார்த்தால், போசளர் பாண்டியரது எல்லைப் பகுதிகளில் ஊடுருவல் செய்தனரென்றும், பாண்டியரும் போசளரது அச்சுறுத்தலுக்கு அஞ்சியே சோணாட்டினைச் சோழ ருக்கு ஒப்படைத்தனரென்றும், பின்பு பாண்டியரும் போசளரும் நட்பு கொண்டனரென்றும் கூறலாம். பாண்டியர் சோணாட்டினை இரண்டு தடவைகள் கைப்பற்றியபோதிலும், அதனை நீண்ட நாட்கள் தனது ஆட்சியின்கீழ் வைத்துக் கொள்ளவியலவில்லை. இதற்குக் காரணம் போசளரின் தலையீடுதான். இதனால்தான் பாண்டியரது சோழப் படையெழுச்சி நிரந்தர விளைவுகளை ஏற்

படுத்தவில்லையென்றும், பாண்டியரது வளர்ச்சி, தளர்ச்சியுற்ற தென்றும் கருதலாம்.

**மழவராயர்**

மதுரையம்பதியின்கண்ணுள்ள இவ் வேந்தனது அரியணை (throne) 'மழவராயன்' எனும் பெயரினைப் பெற்றிருந்தது.[1] புறநாட்டினைச் சார்ந்த பொன்னமராவதி என்னும் நகரின் அரண் மனையின்கண்ணுள்ள இவ் வேந்தனது சிம்மாசனமும் 'மழவ ராயன்' என அழைக்கப்பட்டதாகக் கல்வெட்டுச் சான்று பகர் கிறது.[2] இவ் வேந்தனது அண்ணனான சடையவர்மன் குல சேகர பாண்டியனது அரியணையும் 'மழவராயன்' என அழைக் கப்பட்டதனை நாம் முன்பே கண்டோம்.

**இறையன்பு**

'மழவராயர்' வேண்டுகோளுக்கிணங்க இவ் வேந்தன் இராம நாதபுரம் மாவட்டம் சாலைக்கிராமத்திலுள்ள 'வரகுண ஈஸ்வரம் கோயிலில்' 'சுந்தர பாண்டியன்-சந்தி' சிறப்பாக நடைபெற வரித்தொகையினைக் கட்டினான் என்பது கல்வெட்டுச் செய்தி யால் அறியப்படுகிறது.[3] இதனால் இவ் வேந்தனது இறையன்பு நன்கு வெளிப்படுகின்றது. சுந்தர பாண்டிய சதுர்வேதிமங்கல மென்னும் கிராமத்தின்கண் பூமிப்பரத்தியரது வடிவம் (image) நிறுவப்பட்டதென அறிகிறோம்.[4] இவ் வூரிலுள்ள சிவன் கோயிலில் சுந்தரமூர்த்தி நாயனாரது திருவுருவமும் பரவை நாச்சியாரது திருவுருவமும் வழிபாட்டில் வைக்கப்பட்டன.[5]

தென் திருப்பேரையிலுள்ள விஷ்ணு கோயிலில் காணப்படு கின்ற கல்வெட்டொன்றால் ஆங்கு இவ் வேந்தனின் பெயரால் ஞானசமுத்திர - மண்டபமொன்று அமைக்கப்பட்டதனை யறியலாம். இக் கல்வெட்டினைக் கொண்டு இவனுக்கு 'ஞான சமுத்திரன்' என்னும் சிறப்புப் பெயர் வழக்கிலிருந்ததாக அறியலாம். திருச்சி மாவட்டம், பள்ளப்பட்டியையடுத்துள்ள ரெங்கமலையின்மீது சிவன் கோயிலொன்று இவனால் கட்டப் பட்டதாகத் தெரிகிறது.

திருப்பத்தூரில் காணப்படுகின்ற இவ் வேந்தனது கல் வெட்டொன்று இவனிடம் பணியாற்றிய அரசியல் அலுவலர்

[1] 546 of 1922; 148 of 1908.
[2] No. 77 of 1916
[3] 313 of 1948—49
[4] 284 of 1940—41
[5] 248 of 1940—41.

களின் பட்டியலைக் குறிப்பிடுகின்றது. இப் பட்டியலில் இவ் வேந்தனது மைத்துனனான அழகப்பெருமாள் என்னும் பெயரும் காணப்படுகிறது. இவன் குலசேகர பாண்டியனது கல்வெட்டிலும் மைத்துனனென்று குறிக்கப்பெற்றிருத்தல் ஈண்டு நினைவிற் கொள்ளத் தக்கதாகும்.[1]

### அரசியல் அலுவலர்

சுந்தர பாண்டியனது ஆட்சி, மாட்சி பெறுவதற்கு இவனது அலுவலர்களும் அரசியல் துறையில் நன்கு ஒத்துழைத்தனர். இவர்களது அயரா முயற்சியின் விளைவாகத்தான் இவ் வேந்தன் பெறற்கரிய பெருவெற்றிகள் பெற்றதோடு, நாட்டில் நல்லாட்சியினை நிறுவி மக்களைக் காத்தோம்பினான். இவனது ஆட்சிக் காலத்தில் பணிபுரிந்த குறிப்பிடத்தக்க அரசியல் அலுவலர் பற்றிய செய்திகளை மட்டும் இங்கு காண்போம்.

சோழன் உய்ய நின்றாடுவானான குருகுலத்தரையன், கண்டன் உதயஞ் செய்தான் காங்கேயன், திருக்கானப் பேருடையான் மழவச் சக்கரவர்த்தி ஆகியோர், இவ் வேந்தனது ஆட்சிக் காலத்தில் பணிபுரிந்த அரசியல் தலைவர்களுள் முதன்மையானவராவர். இராமநாதபுரம் மாவட்டம் திருத்தங்காலில் குருகுலத்தரையன் தங்கலீஸ்வரருக்கும் ஏகௌரியம்மனுக்கும் கற்றளியமைத்ததுடன்,[2] அங்குள்ள பெருமாள் கோயிலுக்குப் பல திருப்பணிகள்[3] செய்துள்ளான். இதன் காரணமாக இவன் கோயிலுக்குள் நுழைகின்றபோது 'குருகுலத் தம்பிரானே வருக' என்று காலம் ஒலிக்கும்படி ஏற்பாடு செய்யப் பட்டிருந்ததாம்.[4]

காங்கேயன், தேனாற்றுப் போக்கிலுள்ள நியமம் என்ற ஊரில் பிறந்தான்.[5] இவன் புலவர்களைப் போற்றும் திறம் கொண்டோனாவான்.[6]

திருக்கானப்பேருடையான், கவிராயர் ஈசுவரசிவ உடையாரின் சிஷ்யனாவார். இவர் தனது ஆசானுக்கு நிலதானம் செய்துள்ளார்.[7]

[1] 176, 186 of 1935—36.
[2] A.R.E. for 1923 Part II Paras 4 and 50
Ins. Nos. 575 of 1922,
[3] Ins, Nos. 554 of 1922.
[4] கொம்பு போன்ற ஊதும் கருவி.
[5] Ins. 26 of 1926.
[6] Ins. 75 of 1934.
[7] Ins 47 of 1924; A.R.E. for 1924, Part II, Para 29—33.

திருப்பத்தூர்க் கல்வெட்டில்,[1] மேற்கூறப்பட்ட அரசியல் தலைவர்களேயன்றி 11 அதிகாரிகள் குறிக்கப் பெறுகின்றனர். இவர்களுள் கலவாயில் நாடாள்வானான கண்டன் ஆளுடையான் ஒருவனாவான்.[2]

இப் பாண்டியனின் அண்ணனான சடையவர்மன் குலசேகரனின் காலத்தில் பணி புரிந்தோர் பலர் இவனது காலத்தில் பணி புரிந்துள்ளனர். இதனால் அவர்கள் ஆட்சித் துறையில் நல்ல அனுபவம் பெற்றிருந்தனர்.

### சுந்தர பாண்டியனது சிறப்புப் பெயர்கள்

பெருவீரனான சுந்தர பாண்டியன் பார் புகழப் பாண்டி நாட்டினையாண்டு வந்த வேந்தனாவான். இவனது காலத்தில் இவனுக்குப் பல விருதுப் பெயர்கள், சிறப்புப் பெயர்கள், பட்டப் பெயர்கள் வழக்கத்திலிருந்தன. அவற்றுள் ஒரு சிலவற்றை மட்டும் இவண் காண்போம்:

#### 1. ஞான சமுத்திரன்

சுந்தர பாண்டியன், ஞானசமுத்திரன் என்னும் சிறப்புப் பெயரினைப் பெற்றிருந்தானென்பது தென் திருப்பேரை விஷ்ணு கோயில் கல்வெட்டாலறியலாகும்.[3] இதனால் இவன் கலவி கேள்விகளில் மேம்பட்டவனாகத் திகழ்ந்தான் எனலாம்.

#### 2. கலியுக ராமன்

சுந்தர பாண்டியன் 'கலியுக இராமன்' எனவும் சிறப்பாக அழைக்கப் பெற்றதாகத் தெரிகிறது. இவ் வேந்தனது பதினெட்டாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டொன்று மேல் கடயம் என்னும் ஊரில் காணப்படுகிறது.[4] இதில் 'கலியுக இராமேஸ்வரம்' என்னும் கோயில் குறிக்கப் பெற்றுள்ளதாலும் சுந்தர பாண்டியனது காலத்தைச் சேர்ந்ததாகக் கருதப்பெறும் நாணயங்களில் 'கலியுக ராமா' என்னும் பெயர் பொறிக்கப்பட்டுள்ள காரணத்தாலும் இவன் அப் பெயரைக் கொண்டிருத்தல் வேண்டுமெனக் கருதலாம்.

[1] 176, 186 of 1935—36.

[2] கேரள சிங்க வளநாட்டின் உட்பிரிவுகளில் ஒன்றான இது புதுக்கோட்டை மாவட்டத்தில் திருமய்யம் வட்டம், செல்வாயில் முதலிய ஊர்களைத் தனகத்தே கொண்டது.

[3] 284 of 1940—41.

[4] No. 524 of 1916.

### 3. அதிசய பாண்டிய தேவர்

சுந்தர பாண்டியன் 'அதிசயப் பாண்டிய தேவர்' என்னும் பெயரினையும் பெற்றிருந்ததாகச் சேரமாதேவியில் காணப் பெறுகின்ற கல்வெட்டுச் செய்தியொன்றால் அறியக் கிடக்கிறது.[1]

### வேறு பட்டப் பெயர்கள்

மேற்கூறிய விருதுப் பெயர்களேயன்றி இவன் சோணாட்டு வேந்தனும் மூன்றும் இராசராசனை வென்று, சோணாட்டாட்சியைக் கைப்பற்றியமையின் 'சோணாடு கொண்ட' அல்லது 'சோணாடு கொண்டருளிய' என்னும் பட்டத்தினையும், தான் வென்ற சோணாட்டினை அவ் வேந்தனுக்கே திருப்பிக் கொடுத்தருளியமையின் 'சோணாடு வழங்கியருளிய' என்னும் பட்டத்தினையும், இரண்டாம் தடவையாகச் சோணாட்டினைக் கைப்பற்றி முடிகொண்ட சோழபுரத்தில் வீராபிடேகமும் விசயாபிடேகமும் செய்து கொண்ட காரணத்தால் 'சோணாடு கொண்ட-முடி கொண்ட-சோழபுரத்து - வீரர்' என்னும் பட்டத்தினையும் சூட்டிக் கொண்டதாகக் கல்வெட்டுகளிலிருந்து அறிகிறோம். இவன், 'சோணாடு கொண்டான்' என்னும் பெயர் பொறித்த நாணயம் ஒன்றினை வெளியிட்டதாக அறிவதால், அவனது சிறப்புப் பெயர்களுள் இது குறிப்பிடத்தக்கதாகக் கொள்ளலாம்.

### இவனது பெயரால் அமைக்கப்பட்ட ஊர், சந்தி

அக் காலத்தில் சில ஊர்கள் சுந்தர பாண்டியனது பெயரால் அழைக்கப்பட்டனவென்பதனைக் கல்வெட்டுகள் உணர்த்துகின்றன. கிராமம் ஒன்று 'சுந்தர பாண்டிய சதுர்வேதிமங்கல'மென்று அழைக்கப்பட்டதனை இதற்கு எடுத்துக்காட்டாகச் சுட்டலாம்.[2] நாட்டினையாளுகின்ற மன்னர்கள் தங்களது பெயர்களால் கோயிலில் வழிபாடுகள் நிகழ்த்தினர். சில விழாக்கள் மன்னனது பெயரையும் தாங்கியிருந்தன. திருத்தங்காலிலுள்ள திருமால் கோயிலில் சுந்தர பாண்டியன் சந்தி என்ற வழிபாடு நாள்தோறும் நடைபெற்றதாகவும் அறிகிறோம். அடுத்து, இவன் தனது ஏழாமாட்சியாண்டில் 'முடிவழங்கும் பெருமாள் சந்தி' ஒன்றினையேற்படுத்தியதாகவும் அறிகிறோம்.[3]

1 No. 662 of 1916 from sermadevi; A.R.E. 1917 part II, para 9.
2 284 of 1940-41.
3 No. 77 of 1916.

**கலைப்பணி**

போர்க் கலையிலும், ஆட்சிக் கலையிலும் தேர்ச்சிப் பெற்ற இவன், கட்டடக் கலையிலும் ஆர்வம் கொண்டிருந்தான். இவன் மதுரை திருவாலயுடையார் சுவாமி சன்னிதி ஒன்பது நிலைக் கிழக்குக் கோபுரத்தைக் கட்டி முடிக்கும் பெரும் பணியை மேற் கொண்டான். மதுரை மேல மாசி வீதியிலுள்ள 'இம்மையில் நன்மை தருவார்' கோயிலும் இவ் வேந்தனால் கட்டப்பட்டதே யாகும். சுந்தரேசுவரர் (மதுரை) கோயிலுள்ள சுந்தரமாறன் திருமதிலும், அம்மன் கோயிலுள்ள சுந்தர பாண்டியன் மண்டப மும், இம் மன்னனால் கட்டுவிக்கப்பட்டதாகும். இவ் வேந்தனது பெயரால் 'ஞான சமுத்திர மண்டபம்' ஒன்றும் அன்று அமைக் கப்பட்டது.

திருச்சியை அடுத்துள்ள திருவானைக் கோயில் ஜம்புகேசுவரர் ஆலயத்தின் ஏழடுக்கு 'சுந்தர பாண்டியன் திருக்கோபுரம் அமைக்கும் பணி கி. பி. 1216-ல் இவனால் தொடங்கப்பட்டது. (ஆனால், இது போசள வீரசோமேசுவரனால் முடிக்கப் பெற்றது.) இக் கோயிலிலுள்ள பழைய மதில் இவனால் பழுது பார்க்கப் பட்டது போலும். இம் மதிலில் 'திருநீற்று சுந்தர பாண்டியன்' என்னும் பெயர் இம் மதிற் கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ளது. விபூதிப் பிரகாரம் எனப்படும் திருமாளிகை திருநீற்றுச் சுந்தர பாண்டியனால் கட்டப்பட்டதேயாகும். கொங்கு நாட்டில் திரு வெஞ்சமான் கூடலூர், திருமுக்கூடல் முதலான ஊர்க்கோயில் களில் இவன் திருப்பணிகள் புரிந்துள்ளான்.

**மனைவியின் பெயரால் ஊர்**

இவ் வேந்தனது தேவியின் பெயரால் திரிபுவனமாதேவி - நல்லூர் என்ற கிராமம் ஒன்றும் இருந்தது.[1] இதனால் நாடாண்ட நாயகர்கள் அன்றும் தங்களது பெயர் என்றென்றும் பொன்றாது நின்று நிலவும் பொருட்டுத் தங்களது பெயரால் ஊரும் மண்டப மும் அமைத்தல் பெரு வழக்காயிருந்ததென்பது புலனாகின்றது.

மேற்கூறியவற்றால் இவனது கலையார்வமும், இறையன்பும் நன்கு புலனாகின்றன. திருவானைக்கா கோயிலில் சந்திரமூர்த்தி சுந்தர பாண்டியனுக்கு அருள் புரிவது போன்றதொரு சிற்பமும் உள்ளது. இதில் அவனது இடையில் வாள் காணப் பெறுகிறது. இவ் வருளாலே இவன் போர்களில் வெற்றி பெற்றானாம்.

இதுகாறும் நமக்குக் கிடைத்துள்ள இவ் வேந்தனது கல் வெட்டுகளுள் இருபத்து மூன்றாமாட்சியாண்டுக் கல்வெட்டே

[1] 323 of 1955-56.

காலத்தால் பிற்பட்டதாகும். இவ் வாட்சியாண்டுக்குப் பிந்தைய கல்வெட்டுகள் யாண்டும் கிடைக்கப் பெறவில்லையாதலின் இவன் கி. பி. 1237-38 வரையில் ஆட்சி புரிந்தனனென்று கருதலாம்.

## நாணயங்கள்

### சோணாடு கொண்டான்

நாணயங்கள் நாட்டின் வாணிக வளர்ச்சிக்குப் பெரிதும் துணை புரிவனவாகும். நமக்குக் கிடைத்துள்ள பாண்டியர் கால நாணயங்களுள் 'சோணாடு கொண்டான்' எனப் பெயர் பொறிக்கப்பட்டுள்ள நாணயமுமொன்றாகும். இவ் வேந்தன் தான் சோணாடு கொண்டருளிய நிகழ்ச்சியினைப் பெருமையுடையதாக எண்ணியமையின் 'சோணாடு கொண்டருளிய சுந்தர பாண்டிய தேவர்' எனக் கல்வெட்டுகளில் கூறிக் கொண்டுள்ளான். எனவே, 'சோணாடு கொண்டான்' என்று குறிக்கப்பட்டுள்ள நாணயம் இவ் வேந்தனால் வெளியிடப் பெற்றதாகக் கூறலாம்.[1]

### கச்சி வழங்கும் பெருமாள்

'கச்சி வழங்கும் பெருமாள்' என்று பெயர் பொறிக்கப்பட்டுள்ள நாணயமும் இவ் வேந்தன் காலத்தில் புழக்கத்திலிருந்ததாகக் கருதப்படுகிறது.[2] இக் கருத்தினை உறுதிப்படுத்தத் தக்க சான்றுகளில்லை.

### கலியுக ராமா

'கலியுக ராமா' என்னும் பெயர் தாங்கியுள்ள நாணயம் ஒன்றும் நமக்குக் கிடைத்துள்ளது. இவ் வேந்தனது பதினெட்டாமாட்சியாண்டில் வெளியிடப்பெற்ற மேல் கடயம் என்னுமிடத்தில் காணப்படுகின்ற கல்வெட்டொன்றில் 'கலியுக இராமேஸ்வரம்' என்னும் பெயர் கொண்ட கோயில் ஒன்று குறிக்கப்பட்டுள்ளது.[3] இதனைக் கொண்டு இவன் கலியுக ராமனென்னும் சிறப்புப் பெயரைப் பெற்றிருந்தானென்றும், தனது சிறப்புப் பெயரால் நாணயம் ஒன்றினை வெளியிட்டானென்றும் ஊகிக்கலாம். ('கலியுக ராமா' எனப் பொறிக்கப்பட்டுள்ள நாணயம் இவ் வேந்தனது காலத்திலோ இவனது முன்னோரது காலத்திலோ வெளியிடப் பெற்றதாகக் கொள்வர் சிலர்.)

1 Desikachari's papers on Pandyan coins 'Tamilian Antiquary'.
2 Nilakanta Sastri, K.A, 'The Pandyan Kingdom', p. 135.
3 No. 524 of 1916.

## இரண்டாம் சடையவர்மன் குலசேகர பாண்டியன்

### அரசுகட்டி லேறுதல்

குலசேகர பாண்டியன், முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியனது ஆட்சிக் காலத்தின் இறுதிப் பகுதியில் இளவரசனாக நியமிக்கப்பட்டதாகத் தெரிகிறது. அவ் வேந்தனது இறப்பிற்குப் பின்பு இவன் சில காலம் பாண்டி நாட்டினை ஆட்சி புரிந்து வந்தான். இவன் சடையவர்மன் என்னும் பட்டம் புனைந்து அரியணையிலமர்ந்தான். இவ்விரு பாண்டியரும் எம்முறைக் கேளிர் என்பது தெரியவில்லை. சுந்தர பாண்டியனது கல்வெட்டில்[1] அவனது மைத்துனருச குலசேகரன் என்பான் ஒருவன் குறிக்கப்பட்டுள்ளான். அக் குலசேகரனும் இவனும் ஒருவன்தானு அல்லது வேறுபட்டவனு என்பதனை அறுதியிட்டு உறுதியாகக் கூறத்தக்க சான்றுகள் கிடைத்தில. திருத்தங்காலில் காணப்படும் கல்வெட்டொன்றால் இவன் சுந்தர பாண்டியனுக்குப் பின் மணிமுடி சூடினனென்பது மட்டும் உறுதியாகத் தெரிகிறது.[2]

இவ் வேந்தனது மெய்க்கீர்த்தி 'பூதல வனிதை'[3] என்னும் அழகிய அடிகளைக் கொண்டு தொடங்குகிறது. சுந்தர பாண்டியனது ஆட்சிக் காலம் ஏறத்தாழக் கி.பி. 1237-38 வரை நீடித்ததாகத் தெரிகின்ற காரணத்தால், இவன் சற்றேறத்தாழக் கி.பி. 1238ஆம் ஆண்டின் இடைப் பகுதியில் (ஜூன் மாதம்)[4] முடி புனைந்து குடிகளைக் காக்கத் தொடங்கினனென்று குறிப்பிடலாம்.

### ஆட்சிக்காலம்

இவ் வேந்தனது இரண்டாமாட்சியாண்டுக் கல்வெட்டொன்று[5] சோழன் உய்ய நின்றாடுவானை குருகுலத்தரையனென்னும் அரசியலதிகாரி திருத்தங்கால் திருமால் கோயிலில் சுந்தர பாண்டியன் சந்தி தொடர்ந்து நடைபெற நிவந்தமளித்த செய்தியினைக் குறிக்கின்றது. இவனது இரண்டாமாட்சியாண்டுக்குப் பின் தேதியிட்ட கல்வெட்டு யாண்டும் இதுகாறும் கிடைக்கப்பெறாமையின், இவனது ஆட்சி இரண்டாண்டுகளே நீடித்ததாகக் கொள்ளலாம். திரு. எல். டி. சாமிக்கண்ணுப் பிள்ளையவர்களது குறிப்பும்[6] புதுக்கோட்டை வெட்டெழுத்துத்

1. No. 78 of 1916
2. A.R.E. for 1923 part II para 51; Ins. 548 of 1922
3. S.I.I. Vol. V. Nos. 301 and 428
4. See I A Vol xliv, pp. 190-1
5. A.R.E. 1923, Part ii, para 51
6. I.A. Vol. xliv and Ephemeries, Vol. I, part ii, p. 91. A.R.E. 1916, App. G

தொகுதியும்[1] இவனது ஆட்சியாண்டு பல்லாண்டு நீடித்ததாகக் கூறுவது பொருத்தமுடையதாகத் தோன்றவில்லை.

சுந்தர பாண்டியனது ஆயுட்காலத்திலேயே குலசேகரன் இறந்துபட்டிருத்தல் வேண்டுமென்றும், அவ்வாறு அவன் இறந்துபடுவதற்கு முன்பே, சுந்தர பாண்டியன் மாறவர்மன் சுந்தர பாண்டியனென்ற வேறொருவனை இளவரசனாகத் தேர்ந்தெடுத்திருத்தல் வேண்டுமென்றும் திரு. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியார் ஊகிக்கின்றார். அவ்வாறு தேர்ந்தெடுக்கப்பட்டவன் கி. பி. 1238ஆம் ஆண்டில் ஜூலை பதின்மூன்றாம் தேதிக்கும் டிசம்பர் ஏழாம் தேதிக்கும் இடைப்பட்ட நாளில் அரியணையமர்ந்திருத்தல் வேண்டுமென்றும் கருதுகின்றார்.[2]

இவ் வேந்தனைப்பற்றிய வேறு செய்திகள் நமக்கொன்றும் கிடைத்தில. இவன் மிகக் குறுகிய காலமே யாட்சிபுரிந்தனனென்பது மட்டும் உறுதியாகத் தெரிகிறது.

## இரண்டாம் மாறவர்மன் சுந்தர பாண்டியன்

**உறவு முறை**

இரண்டாம் சடையவர்மன் குலசேகர பாண்டியனுக்குப் பின்பு, இவன் கி. பி. 1238ஆம் ஆண்டு பாண்டி வேந்தனாக ஆட்சிப் பொறுப்பேற்றான். மதுரையம்பதியில் அரண்மனையின் கண்ணுள்ள இவனது அரியணை இரண்டும் மழவராயன், பல்லவரையன் என்னும் பெயர்களைக் கொண்டுள்ளன. இவ் வேந்தனது தேவியார் உலகமுழுதுடையாள் என அழைக்கப் படுகிறாள். இவன் மாறவர்மன் விக்கிரம பாண்டியனது உடன் பிறந்தான் என்பது குறிப்பிடத்தக்கதாகும். மாறவர்மன் விக்கிரம பாண்டியனது மைத்துனனான விக்கிரம சோழன் என்பான் இரண்டாம் மாறவர்மன் சுந்தர பாண்டியனது மைத்துனனாகக் குறிக்கப்பட்டுள்ளதால் இதனை நாம் அறிந்து கொள்ளலாம்.[3] போசள மன்னனாகிய வீர சோமேசுவரன் இவனது மாமன் ஆகுவென்பதனையும் இவனது கல்வெட்டாலறிந்து கொள்ளலாம்.[4] சுந்தர பாண்டியன் பெரிய அளவில் நன்கொடைகளும் நிவந்தங்களும் அளிப்பதற்கு விக்கிரம சோழன் தூண்டுகோலாக இருந்தனன் என்பதும் தெரிய வருகிறது.[5]

[1] Pudukkottai Inscriptions; Nos. 330 to 337. இவற்றுள் இவனுக்கு எட்டாமாண்டு முதல் இருபத்தாறும் ஆண்டு முடியக் கொடுக்கப்பட்டுள்ளது. இவை இவனுக்கு முன்பாண்ட மன்னனது ஆட்சியாகத்தான் இருத்தல் வேண்டும்.

[2] Nilakanta Sastri. K. A. 'The Pandyan Kingdom', p. 137.

[3] A.R.E. 1929-30, p. 27

[4] S.I.I. Vol. V, Nos. 448 and 421

[5] No. 182 of 1894 Lines 15. (S.I.I. Vol. V)

'பூமலர்த் திருவும் பொருசய மடந்தையும்' என்னும் கவின் மிகு தொடக்கத்தினைக் கொண்டு விளங்குகின்ற இவனது மெய்க் கீர்த்தி, தேனினுமினிய செந்தமிழ் நடையால் யாக்கப்பட் டுள்ளது. இவ்வினிய மெய்க்கீர்த்தியினைக் கொண்டு, இவனது ஆட்சியில் நிகழ்வுற்ற வரலாற்று முக்கியத்துவமிக்க செய்திகள் ஒன்றினையும் அறிந்துகொள்ள இயலவில்லை.[1] திருக்கோயிலில் தெய்வமணங் கமழும் பக்திப் பாடல்கள் கற்றுத் தரப்பட்டதும், கல்லையும் கனிந்துருகச் செய்யும் பக்திப் பாடல்கள் ஓதப் பட்டதும், சமயத் தொடர்பான காரியங்களுக்கு மன்னனால் விடப்பட்ட நிவந்தங்களைப்பற்றியதுமான செய்திகளே இவனது மெய்க்கீர்த்தியில் இடம்பெற்றுள்ளன. கோயில்கள், பல்கலைக்கழகங்கள் போன்று இவன் காலத்தில் பணியாற்றி வந்தன.

**அரசியல் சூழல்**

இவ்வேந்தனது ஆட்சிக் காலத்தில் போசளரும், கொங்கு நாட்டினரும் பாண்டியரின் நட்பினராகவிருந்தனர். சோணாட் டின்கண் மூன்றும் இராசேந்திர சோழன் கொலு வீற்றிருந்தான். சோழர் பாண்டியருடன் முரண்பட்டிருந்தனர். போசளர் பாண்டியருடன் நட்புறவு கொண்டிருந்த போதிலும், அவர் களது செல்வாக்கு பாண்டி நாட்டில் மிகுதியாகவே இருந்த தாகக் கொள்ளலாம். அரசியல் பிரச்சினைகளில் அவர்கள் அடிக் கடி தலையிட்டுச் சில சமயங்களில் குழப்பங்கள் ஏற்படுகின்ற அளவிற்கு நடந்து கொண்டதாகத் தெரிகிறது. இதனால் தனது உறவினர்களான போசளர் பாண்டிய நாட்டில் அடிக்கடி தலை யிடுவதனை இவ் வேந்தன் விரும்பவில்லை போலும். இவ் வேந்தனது கல்வெட்டுகளனைத்தையும் ஆய்ந்து பார்க்குங்கால் இவற்றுள் மிகுந்த அளவில் போசளர்களைப்பற்றியும், போசள படைத் தலைவர்களைப்பற்றியும் குறிப்புகள் காணப்படுவதனை நாம் காணலாம். எனவே, இவ் வேந்தனது குறுகிய கால ஆட்சி போசளர்களது பெருமையும் புகழும் உச்ச நிலையிலிருந்த கால மாகக் கொள்ளலாம். போசளரது ஆதிக்க வளர்ச்சிபற்றி இங்குச் சிறிது காண்போம்.

**போசளரின் ஆதிக்க வளர்ச்சி**

சுந்தர பாண்டியனது ஆட்சியின் தொடக்க காலத்தில் புதுக்கோட்டை மாவட்டம், திருமெய்யத்தில் சைவ சமயத் தினரும் வைணவ சமயத்தினரும் ஒருவருக்கொருவர் மாறுபட்டுப்

[1] S.I.I Vol. V, No 421

பூசல் விளைவித்து வந்தனர்; போசள படைத் தளபதியான அப்பண்ண தண்டநாயகா என்பான் இச் சமயப் போரினை யொழித்து அடக்கி அமைதியை நிலைநாட்டினான்.[1] வீரசோமேசுவரனின்[2] படைத்தலைவனாகிய இவன் மைசூர்க் கல்வெட்டுகளில் 'பாண்டிய குல சம்ரக்ஷண-தக்ஸ-தக்ஷிண-பூஜா (பாண்டியர் குலத்தைக் காத்தவன்) என்று பெருமையுடன் குறிக்கப்பட்டுள்ளான்.

இவ் வேந்தனது பதின்மூராமாட்சியாண்டில் திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள ஓர் ஊருக்குத் தனது மாமனான போசள வீர சோமேசுவரனது பெயரினை அவனது ஆலோசனைப்படி இட்டிருக்கிறான். அதே நேரத்தில் போசள வேந்தனது படையதிகாரியான வரதண்ண தண்டநாயகா என்பான் திருநெல்வேலியில் இருந்தான்.[3]

**போசளரின் தலையீடு**

மூன்றாம் இராசராச சோழனது ஆட்சிக் காலத்தில் பாண்டியரது படையெழுச்சியால் ஏற்பட்ட இழிவினைப் போக்கிக் கொள்ள, சோணாட்டு வேந்தனாக அரியணை வீற்றிருந்த மூன்றாம் இராசேந்திர சோழன் முடிவெடுத்தான்; பாண்டிய நாட்டின் மீது படையெடுத்தான்; பாண்டியனை முறியடித்தான்; பாண்டி நாட்டையும் தன் வசப்படுத்தினான்.[4] இத் தருணத்தில் இராசேந்திர சோழனோடு போர் மேற்கொண்டு, வெற்றி கண்டு, பாண்டி வேந்தனிடம் பாண்டி மண்டலத்தை ஒப்படைத்துப் பெருந்தொண்டு புரிந்தவன் போசள வேந்தனான வீரசோமேசுவரனே யாவான். இதனை இப் போசள வேந்தன் தனது கல்வெட்டுகளில் 'இராசேந்திரனைப் போரில் வென்றவன்'[5] என்றும், 'பாண்டிய குலக் காவலன்' (சம்ரக்ஷகன்)[6] என்றும் தன்னைப் பற்றிக் குறித்துக் கொண்டுள்ளதாலறியலாம். இவற்றால் இவ் வேந்தனது ஆட்சிக் காலத்தில் போசளரின் ஆதிக்கமும்

[1] S.I.I. Vol. V, No. 427 and 448; Inscriptions of the Pudukkottai State. No. 340, 341.

[2] No. 387 of 1906 and A. R. E. 1907, Part ii, Para 26 காரண நாடு என்னும் ஊரினைக் கைப்பற்றி இக் காலத்தினைப் போசளர் படைத்தலைவன் அடக்கினனென்று கூறப்பட்டுள்ளது. திரு. வெங்கையா அவர்கள் இப் படையெழுச்சி பாண்டியரின் சார்பாகவே நடைபெற்றதென்று கருதுகின்றார். Epigraphia Carnatica Vol.V, Part i, P. XXV-ல் சோமேசுவரனது பட்டங்களைப் பற்றிய குறிப்பினைக் காணலாம்.

[3] 156 of 1894 and 138 of 1894

[4] S.I.I. Vol. IV, No. 511

[5] Epigraphia Carnatica No. 123

[6] Ibid Vol. V, Ak. 125

செல்வாக்கும் பெருமையும் முன்னெப்பொழுதுமில்லாத அளவிற்கு உயர்ந்திருந்ததென்பது உறுதி பெறுகிறது.[1]

**அரசு அலுவலர்**

நாங்குநேரியில் காணப்பெறுகின்ற இவ் வேந்தனது பதினன்கா மாட்சியாண்டினதாகிய வெட்டெழுத்தொன்று 'இரணசிங்க வீரன் தெரிந்த வில்லிகள்' என்னும் படைப்பிரிவைப் (Battallion) பற்றிக் குறிப்பிடுகின்றது. இவ் வேந்தனது ஆட்சிக் காலத்தில் ஐயன் மழவராயன் என்னும் அரசியல் அலுவலரும் சக்கரபாணி நல்லூரைச் சார்ந்த 'அண்ணன் தமிழ்ப் பல்லவரையன்' என்னும் அரசியல் அலுவலரும் பணி புரிந்தனர்.[2] இவ்விருவருள் ஐயன் மழவராயன் என்பான் இவனுக்கு முன்பு ஆட்சிபுரிந்த முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியனது ஆட்சிக் காலத்திலும் பணி புரிந்தனன் என்பதனை நாம் முன்பே கண்டோம்.

**ஆட்சியின் முடிவு**

இவன் ஏறத்தாழக் கி.பி. 1252ஆம் ஆண்டு வரையிரல் ஆட்சி புரிந்ததாகக் கூறலாம்.[3] (இவ் வேந்தனது பதினெந்தாமாட்சியாண்டுக் கல்வெட்டும், திருவேந்திபுரத்தில் காணக் கிடைக்கும் பதினறுமாட்சியாண்டுக் கல்வெட்டும், பதினேழாமாட்சியாண்டு கல்வெட்டும் நமக்குக் கிடைத்துள்ள போதிலும், இவனது ஆட்சி 1252-ல் முடிவடைந்ததாகக் கொள்வது நலம் பயப்பதாகும் ஏனெனில் கி.பி. 1252ஆம் ஆண்டு சடையவர்மன் சுந்தர பாண்டியன் அரியணை யேறினனென்று அண்மைக் காலத்தில் நிறுவப்பட்டுள்ளது. இவ் விருவரும் இணைந்த ஆட்சியினை (Joint Rule) மேற்கொண்டனர் எனவும் கொள்ளலாம்).

**கலை வளர்ச்சி**

இவ் வேந்தனது காலத்தில், காலடி என்னும் ஊரினைச் சேர்ந்த இரவிசங்கரன் என்னும் கூபகராயன் 'வாழவல்ல பாண்டீச்சுரர்' கோயிலையமைத்தான். இக் கோயில் திருநெல்வேலி மாவட்டம் தருவை என்னுமூரில் உள்ளது. இக் கோயிலில் இவ் வேந்தனது ஆறு கல்வெட்டுகள் இடம் பெற்றுள்ளன.

## முதலாம் சடையவர்மன் சுந்தர பாண்டியன்

**முன்னுரை**

'எம்மண்டலமுங் கொண்டருளிய சுந்தர பாண்டிய தேவர்', 'எல்லாந் தலையானை பெருமாள்', 'காஞ்சி புரவரா தீசுவரன்',

[1] A.R.E. 1927-28, p. 56
[2] Ibid 1939-40, p. 247
[3] Ins. 28 of 1937-38

(காஞ்சிபுரங் கொண்டான்) 'சமஸ்த ஜகநாதரன்', 'சேரனை வென்ற பாண்டிய தேவன்', 'ஹேமாச் சாதன ராஜா', "மகா ராஜாதிராஜ-ஸ்ரீ பரமேசுவரர்','மரகதப் பிருதிவி-பிரித்','கோயில் பொன் வேய்ந்த பெருமான்'—முதலான சிறப்புப் பட்டங்கள் பல கொண்டு, பாண்டிய நாட்டினை ஆண்டு வந்த முதலாம் சடையவர்மன் சுந்தர பாண்டியன், இரண்டாவது பாண்டியப் பேரரசின் ஈடு இணையற்ற வேந்தனவான். பாண்டி வேந்தருள் பேரிலும் புகழிலும் முன்னணியில் நிற்கும் இவன், புகழ் மங்கிக் கிடந்த பாண்டி நாட்டு ஒளியினைத் தூண்டி விட்டுப் பாரெல்லாம் ஒளிவீசும் பேரொளியாக மாற்றிய மாவலி கொண்ட மாபெரும் வெற்றி வீரனுமாவான். 'இவனது ஆட்சிக் காலத்தில் பாண்டிய அரசு உச்ச நிலையை அடைந்தது' என்று கூறுவது பொருத்தமுடையதேயாகும்.

### பார் புகழும் பேரரசன்

சித்திரைத் திங்கள் மூலநாளிற் பிறந்த[3] சுந்தர பாண்டியன் கி.பி. 1252ஆம் ஆண்டு பாண்டியப் பேரரசனாக மணிமுடி சூட்டிக் கொண்டான். இரண்டாம் மாறவர்மன் சுந்தர பாண்டியனது இறப்பிற்குப் பின், ஆட்சிப் பொறுப்பேற்ற இவன், அண்டை நாடுகளுடன் சண்டையிட்டு அவற்றைக் கைக் கொண்டு, பாண்டி நாட்டின் எல்லையினை விரிவுபடுத்தி, பாண்டிய அரசினைப் பார்புகழும் பேரரசாக மாற்றிய பேரரசன் என்னும் பெருமைக்குரியவனாகப் பாண்டிய வரலாற்றினை அணி செய்து கொண்டிருக்கிறான். இப் பெரு வீரனது ஆட்சிக் காலத்தில் பாண்டிய நாட்டின் ஆதிக்கம் சோணாட்டினைக் கடந்து, ஆந்திரம், மலைநாடு, கொங்குநாடு ஆகிய நாடுகளிலும் நிலைபெற்றிருந்ததால் கன்னியாகுமரி முதல் ஆந்திர நாட்டிலுள்ள நெல்லூர் வரை பாண்டியரது புகழே யாங்கணும் பரவியிருந்ததனை யறியலாம்.

### ஆதாரங்கள்

'பூமலர்வளர் திகழ் திருமகள் புகழாகம் புணர்ந்திருப்ப'[1] என்னும் புகழ்மிக்க இவ் வேந்தனது மெய்க்கீர்த்தி, இவனது பெறற்கரிய வெற்றிகளையும், வரையாது வழங்கும் வள்ளல் தன்மையினையும், அறக் கொடைகளையும் விரிவாக எடுத்துக் கூறுகின்றது. சேலம் அருங்காட்சியகத்தில் வைக்கப்பட்டுள்ள

S 1.1. Vol. V, No. 459. இத் தொடக்கத்தினைக் கொண்ட இவனது ஏழாமாட்சியாண்டுக் கல்வெட்டொன்று தஞ்சை மாவட்டம், திருப்பூந்துருத்தியில் காணப்பெறுகிறது. இதில் மூலாம் என்பதற்கு, தவறுதலாகக் கன்னி என்று பொறிக்கப்பட்டுள்ளது.

இரு நடுகல்லும், ஒரு துண்டுக் கல்வெட்டும் இவனைப்பற்றிக் கூறுகின்றன.[1] இதனைப் போன்றே திருவரங்கத்தில் காணப் படுகின்ற இவ் வேந்தனது வடமொழி சுலோகங்களால் வரையப் பட்டுள்ள கல்வெட்டொன்று[2] இவனது அருமை பெருமைகளைத் தெள்ளத் தெளிய விளக்குகின்றது. இவ் வேந்தனது வீரச் செயல்களும் அறச் செயல்களும் திருப்பணிகளும் 'சமஸ்த ஜகதா தார சோம'[3] எனத்தொடங்கும் இவனது கல்வெட்டாலும் இனிது விளங்குகின்றது. திருவேந்திபுரம், சிதம்பரம், திருப் புட்குழி, திருநெல்வேலி, காஞ்சீபுரம், திருக்கோளிலி முதலான ஊர்களில் காணப்படுகின்ற கல்வெட்டுகளும் இவனது ஆதிக்க வளர்ச்சியினையும், அரசியல் திறத்தினையும், கொடைத்திறத் தினையும், இறையன்பினையும் எடுத்துக் காட்டுகின்றன. இவற்றுள் சிதம்பரம், திருப்புட்குழி முதலான ஊர்களின் கோயில்களிலுள்ள கல்வெட்டுகள் சிறந்த செந்தமிழ் நடையில் யாக்கப் பெற்றுள்ளன.[4] மார்க்கோ போலர், வாசப் போன்ற வெளிநாட்டினரது குறிப்புகளும் இவ் வேந்தனைப்பற்றி அறிய உதவுகின்றன.

### அரசியல் சூழல்

சுண்டுச் சுந்தர பாண்டியன் பாண்டி நாட்டிலே செங்கோல் செலுத்தி வந்தகாலை அதனைச் சூழ்ந்துள்ள ஏனைய அரசுகளைப் பற்றியும் ஒரு சிறிது காண்போம். சோணாட்டினை மூன்றும் இராசராச சோழனின் புதல்வனான மூன்றும் இராசேந்திர சோழன் அரசோச்சி வந்தான். இவன் பெருவீரமும், பேராற் றலும் கொண்டிருந்த போதிலும், வீழ்ச்சியினை நோக்கி விரைந்து சென்று கொண்டிருந்த, தனது அரசினைக் காத்தற்கியலாது தடுமாறினான். இவனது சமகாலத்தவனான வீரரவி உதய மார்த்தாண்டவர்மன் என்னும் சேர வேந்தனும், பாண்டியனை எதிர்க்கின்ற அளவு வலிமை மிக்கவனாகக் காணப்படவில்லை. சோணாட்டின் ஒரு பகுதியினைத் திருச்சிக்கண்மையிலுள்ள கண்ணனூரைத் தலைநகராகக் கொண்டு நல்லாட்சி செலுத்தி வந்த போசள வேந்தனும், வீர நரசிம்மனின் மகனுமான வீர சோமேச்சுரன், வீரமும் வெற்றியும் நிரம்பிய வலிமை மிக்க வேந்தனாக விளங்கி வந்தான்.

[1] சேலம் அருங்காட்சியகக் கையேடு பக்கம் 11-12

[2] Epi. Ind. Vol. 111, No. 2

[3] S.1.1. Vol. V11, Nos. 429 and 446; 1bid Vol. V111, No. 486

[4] 1bid Vol. 1V, Nos. 618-620

தமிழக அரசியலில் போசளரின் ஆதிக்கம் மேம்பட்ட நிலையிலிருந்ததென்பதனை நாம் முன்பே கண்டோம். பாண்டியரது பேரரசு எல்லைப் புறங்களில் விரிவடையவொட்டாமல் தடைக் கல்லாக நின்றவருள் போசளர் முதன்மையானவராவர் என்பது ஈண்டு குறிப்பிடத் தக்கதாகும். இவர்கள் காவிரிக்கரை நாடுகளைத் தன்னுட்சிக்குட்படுத்தினர்.

பாண்டிய நாட்டினையடுத்திருந்த கொங்குநாடும் அக்காலத்திலிருந்த புகழ் பூத்த அரசுகளில் ஒன்றாகும். அடுத்து. சேலம் மாவட்டத்தின் கீழ்ப் பகுதியினையும், தென்னார்க்காடு மாவட்டத்தின் மேற்குப் பகுதியினையும் தன்னகத்தே கொண்டு விளங்கியதோர் உள்நாடாக மகதநாடு விளங்கியது. இதன் தலை நகரம் ஆறகழூராகும். இந் நகர் இக் காலை ஆறகளூரென வழங்கப் பெறுகிறது. இம் மகத நாட்டினை ஆண்டு வந்தோர் 'வாணகோவரையர்' என்றும் 'வாணாதிராச' ரென்றும் அழைக்கப் பெற்றனர்.

**கோப்பெருஞ்சிங்கன்**

சோழருக்குத் திறை செலுத்தும் சிற்றரசனாகத் திகழ்ந்து வந்த கோப்பெருஞ்சிங்கன் தனியாட்சி பெற்று, பல்லவ நாட்டின் ஆட்சிப் பொறுப்பினையேற்றிருந்தான்.

இவ் வேந்தனது கல்வெட்டுகள் வடக்கே கர்நூல், கோதாவரி வரை காணக் கிடைக்கின்றன.[1] இவன் சோழ வேந்தனைச் சிறை செய்ததனையும் போசள வேந்தனது பெருமுயற்சியால் அவன் விடுவிக்கப்பட்டதனையும், நாம் முன்பே கண்டோம். கி.பி. 1243-44-ல் சுயாட்சி பெற்று 'தேவன்', 'சகல புவன சக்கரவர்த்தி' என்னும் விருதுகளை இவன் பெற்றான்; புகழ் பெற்றான். பத்தாண்டுகட்குப் பின்பு இவன் பெரம்பலூரில் நிகழ்ந்த போரில் போசளப் படைத்தலைவர் சிலரை வென்றதாகத் தெரிகிறது.[2] இப் போரில் இவன் போசளரது அரும்பொருட்குவியலையும், மணிகளையும், பெண்மணிகளையும் கவர்ந்து கொண்டதாகக் கல்வெட்டுகளில் குறித்துள்ளான். எனவே, அக் காலை ஆட்சி புரிந்த வலிமை பொருந்திய வேந்தர்களுள் இவனும் ஒருவனாவனென்பது புலனாகின்றது.

**ஏனைய அரசுகள்**

இவன் பாண்டியனை எதிர்க்கின்ற அளவிற்கு வலிமை பெற்று விளங்கியதாகத் தோன்றவில்லை. அடுத்து, காஞ்சி

[1] E. g. Nos. *198* of *1905* and *419* of *1893*

[2] No. *73* of *1918* from Vridhachalam and A.R.E. *1925*, Part ii, Para *26*, பெரம்பலூர், திருச்சி—சென்னை நெடுஞ்சாலையில் உள்ளது.

மாநகரையும், அதனைச் சூழ்ந்துள்ள பகுதிகளையும், தெலுங்குப் பல்லவ வேந்தனை விசயகண்ட கோபாலன் ஆண்டு வந்தான். அக் காலை காகதீப நாட்டினைக் கணபதி என்னும் ஆற்றல் மிக்கோன் ஆண்டு கொண்டிருந்தான். பாண்டிய நாட்டின் நேர் தெற்கே கடல் கடந்த அரசாகிய சிங்களமும், தமிழக அரசியலில் அடிக்கடி தலையிட்டு வந்தது. இதுபோன்ற பல அரசுகளால் சூழப்பெற்ற பாண்டி வேந்தன் எவ்விதம் இவற்றினை வென்று தன்னடிப்படுத்தினனென்பதனைக் காண்போம்.

## வெற்றிகள்

### 1. சோருடன் போர்

நாடு பிடிப்பதில் நாட்டங்கொண்ட பாண்டி வேந்தன் முதன் முதலாகத் தனது பார்வையைச் சேரநாட்டின்மீது திருப்பினான். பாண்டியரது படை சேரநாட்டினையடைந்தது; சேரப் படையுடன் போர் தொடுத்தது; சேரப் படையோ பாண்டியரது தாக்குதலுக்குத் தாக்குப் பிடிக்கவியலாது தோற்றோடியது. வெற்றி வாகை சூடிய சுந்தர பாண்டியன் மலைநாட்டினைக்[1] கைப் பற்றிக் கொண்டான். 'சேரனை வென்றான்' என்னும் விருதுப் பெயரினையும் கொண்டான் எனத் தெரிகிறது. இதன் காரணமாகவே இவன் தான் பிறந்த சித்திரைத் திங்கள் மூலநாளில் திருச்சியினையடுத்துள்ளதும் காவிரி, கொள்ளிடப் பேராறுகட்கிடையிலுள்ளதுமான திருவானைக்காவில் 'ஜம்புகேஸ்வரர்' திருக்கோயிலில் 'சேரனை வென்றான் திருநாள்' என்னும் திருவிழா ஆண்டுதோறும் சிறப்பான முறையில் கொண்டாடப் பெறுவதற்கு முட்டை பாடி, வீரதொங்கபுரம், பாகன்குடி ஆகிய மூன்று ஊர்களைக் கொடையாக அளித்துள்ளான்.[2]

கி.பி. 1251 ஆம் ஆண்டு வீர ரவி உதயமார்த்தாண்டவர்மன் என்பான் திருவாங்கூரையாண்டு வந்ததாக அறியப்படுதலின்[3] சுந்தரபாண்டியனிடம் தோல்வி கண்ட சேரவேந்தன் இவனாயிருத்தல் வேண்டுமென்று கருதலாம். திருநெல்வேலியினையடுத்துள்ள ஊரொன்று (இ) ரவிவென்ற சதுர்வேதி மங்கலம் என அழைக்கப்பெற்றதாகத் திரிபுவன சக்கரவர்த்திகள் கோனேரின்மை கொண்டானது மூன்றாமாட்சியாண்டுக் கல்வெட்டொன்று[4] குறிப்பிடுவதனால், நம் வேந்தன் சேரனை வென்ற

[1] Cf. Hatva Ceram in No. 179 of 1892 and Keralavamsanirmulana in the Sanskrit Introduction.

[2] Ins. 28 of 1937-38

[3] A.R.E. 1927, part ii, part 45

[4] No. 75 of 1927

நினைவாகவே இவ்வூர் இப் பெயர் பெற்றதாகக் கொள்ளலாம். திருக்கோளிலி சண்டேசுவரர் கோயிலின் கிழக்குப்புறச் சுவரில் காணப்பெறும் இவ் வேந்தனது கல்வெட்டில் இவன் 'சேரனை வென்ற பாண்டிய தேவன்' என்று குறிக்கப் பெற்றுள்ளதாலும் இவனது சேரநாட்டு வெற்றி உறுதிபெறுகிறது.

## 2. சோழ நாட்டுடன் போர்

மலைநாடு கொண்ட சுந்தர பாண்டியன், அடுத்துச் சோணாட்டின்மீது தனது கவனத்தைத் திருப்பினான். சோணாடும் இவனது மேலாண்மைக்குப் பணிந்தது; ஆண்டுதோறும் பாண்டியருக்குத் திறை செலுத்தி வர ஒப்புக் கொண்டது. இத் தோல்விக்குப் பின்னர் சிலகாலம் நீடித்த சோழவரசு மூன்றாம் இராசேந்திரனது இறப்பிற்குப் பின்பு, பாண்டிய நாட்டுடன் இணைக்கப்பட்டமை பாண்டிய வரலாற்றில் குறிப்பிடத்தக்க நிகழ்ச்சியாகும்.

## 3. போசளருடன் போர்

அடுத்து, சுந்தர பாண்டியன் சோணாட்டின் மற்றொரு பகுதியினை யாண்டு வந்த போசளரது கொட்டத்தினையடக்க முடிவெடுத்தான்; பெரும் படையுடன் அதன்மீது படையெடுத்தான். போசளரது தலைநகராகத் திகழ்ந்து வந்ததும், திருச்சிக்கு வடக்கே ஏழுகல் தொலைவிலுள்ளதும், இக்காலை சமயபுரமென்று அழைக்கப்பட்டு வருவதுமான கண்ணனூர்க் கொப்பம்[1] பாண்டிப் படையால் முற்றுகையிடப்பட்டது. போசளப் படைத்தலைவனான சிங்கணன் என்பான் முற்றுகையைத் தகர்த்தெறியும் பெருமுயற்சியிலீடுபட்டான்; பெருவீரம் விளைவித்த பின் சிங்கணனும் அவனுக்குத் துணை நின்ற பெருவீரர் சிலரும் வீரமரணமெய்தினர்; (மூன்றாம் இராசராச சோழன் ஆட்சிக் கால முதல் போசளர்களால் ஆளப்பட்டு வந்த கண்ணனூர்க் கொப்பம் பாண்டியர் கை மாறியது; போசளரின் ஆதிக்கமும் சுருங்கியது). வீரர் பலர் புறமுதுகிட்டோடினர். புறமுதுகு காட்டியோரை மீண்டும் தாக்குதல் வீரமன்று என்று கருதிய பாண்டிய வீரர், அவர்களுடன் மேற்கொண்டு போர் செய்யாது போரை நிறுத்தினர். போசளரது

[1] இது திருச்சி – சென்னை நெடுஞ்சாலையில், திருச்சிக்கு வடக்கே ஏழுகல் தொலைவில் அமைந்துள்ளது. சமயபுரம் என்று தற்காலை அழைக்கப் பெறுகின்ற இவ் வூரில் மாரியம்மன் கோயிலொன்று உள்ளது. இரண்டாம் பெரும்பிடுகு முத்தரையனது கல்வெட்டுகளிலும் இம் முத்தரையன் கண்ணனூரை வென்றதாக முன்பே கூறப்பட்டுள்ளது. இங்குப் போசளேச்சுரம் என்ற சிவன் கோயிலொன்றும் அழிந்துபட்ட நிலையிலுள்ள கோட்டைச் சுவரும் உள்ளன.

யானைகளும் குதிரைகளும், பெருநிதிக் குவையும், மணியும், பேரழகுமிக்க மங்கையரும் பாண்டியர் வசமாயின.

### 4. சேமனை வெல்லல்

சுந்தர பாண்டியனது திருவரங்கக் கோயில் கல்வெட்டொன்று[1] இவன் கர்நாடக நாட்டுச் சோமனைப் போரில் வென்றான் என்றும், அவனைக் கொன்றான் என்றும் குறிப்பிடுகின்றது. இவண் குறிப்பிடப்பட்டுள்ள சோமன் என்பான் போசள வேந்தனான வீர சோமேச்சுரன்தானா? என்பது தெளிவாகப் புலப்படவில்லை.

'நட்பது போலுட் பகையாய் நின்ற
சோமனைக் கொன்று சினந்தணிந் தருளி
நண்ணுதல் பிறரா லெண்ணுதற் கரிய
கண்ணனூர்க் கொப்பத்தைக் கைக்கொண் டருளிப்
பொன்னி சூழ்செல் வப்புன னாட்டைக்
கன்னி நாடெனக் காத்தருள் செய்ய'

என்று இவ் வேந்தனது மெய்க்கீர்த்தி குறிப்பிடுவதனால், இவன் கண்ணனூர்க் கொப்பத்தில் நிகழ்த்திய போரில் தனக்கு உற்ற நண்பன் போல் நடித்து உட்பகையாளனாக மாறிய சோமன்[2] என்னும் துரோகியைக் கொன்று சினந்தணிந்தானென்பதும், கண்ணனூர்க் கொப்பத்தைக் கைப்பற்றி பொன் வளமிக்க பொன்னி (காவிரி) நாட்டினைத் தனது கன்னி நாடாகக் கொண்டானென்பதும் தெளிவாகின்றன.

### 5. கருநாடக வேந்தனை வெல்லல்

அடுத்து, இவனது மெய்க்கீர்த்தியில் 'கருநடராசனைக் களிறு திறை கொண்டு' என்றோர் அடி குறிக்கப் பெற்றுள்ளது. இதனால் இவன் கருநாடக வேந்தனொருவனை வென்றானென்பதும், களிறுகளைத் திறையாகக் கொண்டானென்பதும் உறுதி பெறுகிறது. இக் கருநாடக வேந்தன் யாவனென்பது தெரியவில்லை. ஒருவேளை இவன் போசள வேந்தனான வீர சோமேச்சுரனின் மைந்தனான வீர ராமநாதனாக இருத்தல் கூடும்.

[1] Epi. Ind. Vol. 111 No. 2.

[2] வரலாற்றறிஞர் திரு. டி. ஏ. கோபிநாதராவ் அவர்கள் சேமனை என்பதனைச் சேரனை எனக் கொள்கின்றார். சேரர்மீது இவன் பெற்ற வெற்றி முன்பே குறிப்பிடப்பட்டிருத்தலின், மீண்டும் இது சேரனைக் குறிப்பதாகக் கொள்வது பொருத்தமுடையதாகத் தோன்றவில்லை.

### 6. சிங்கள வெற்றி

சோணாடு முழுமையினையும் தன்னாட்டுடன் இணைத்துக் கொண்டதுடன், மனநிறைவு கொள்ளாத பாண்டியன் அடுத்துத் தனது கடற்படை வலிமையினை சிங்கள நாட்டின்மீது காட்ட வேணவாக் கொண்டான்; கப்பற் படையினைச் செப்பம் செய்தான்; சிங்களத் தீவினை நோக்கிப் படை கொண்டுச் சென்றான்; சிங்கள வேந்தனை வென்றான்; எண்ணற்ற யானைகளையும், விலை மதிக்கவொண்ணா மணிகளையும், திறைப் பொருளாகக் கொண்டான்; இலங்கைத் தீவும் இவன் வெற்றிப் புகழ் பாடக் கண்டான்.

### 7. கோப்பெருஞ்சிங்கனை வென்றடிப்படுத்துதல்[2]

சிங்கள வேந்தனிடமிருந்து பெரும் பொருளைக் கப்பமாகப் பெற்ற சுந்தர பாண்டியன் பல்லவ வேந்தனும் கோப்பெருஞ் சிங்கன், பாண்டியனது பெருவெற்றி கண்டஞ்சி அனுப்பி வைத்த கப்பப் பொருளை ஏற்றுக்கொள்ள மறுத்து, அவனை ஒறுத்துத் தனது மேலாண்மையினை நிறுவ விழைந்தான்; படையுடன் சேந்தமங்கலம் நோக்கி விரைந்தான்; சேந்தமங்கலம் முற்றுகையிடப்பட்டது; அந் நகர் கைப்பற்றப்பட்டது. பகைவனது யானை, குதிரை, அரும்பெருஞ் செல்வம் ஆகிய யாவும் கைக் கொள்ளப்பட்டன. பின்பு அவற்றினை யாவும் அவனுக்கே யளித்துத் தனது மேலாண்மையினை ஏற்றுக்கொள்ளச் செய்து, குறுநில மன்னனாக அவனையும் ஏற்றுத் தன்னாடு திரும்பினான்.

இவன் 'பாண்டிய - மண்டல - ஸ்தாபன - சூத்ர - தாரேண என்று தனது திராக்ஷாராமா (Draksarama)[3] கல்வெட்டில்,

[1] சேந்தமங்கலம் என்னும் ஊர் தென்னார்க்காடு மாவட்டம் திருநாவலூருக்கு அண்மையில் உள்ளது.

[2] சிதம்பரம் கோயிலில் இவ் வேந்தனது வெற்றிச் சிறப்பைப் பரக்கக் கூறுவதாகப் பாவடிவில் கல்வெட்டொன்றுள்ளது. இப் பாடலில் 'காடவர் கோன்' என்று குறிப்பிடப் பெற்றிருப்பவன் கோப்பெருஞ்சிங்கன் போலும்.

காரேற்ற தண்டலைக் காவிரி நாடனைக் கானுலவுந்
தேரேற்றி விட்ட செழுந்தமிழ்த் தென்னவன் சென்றெதிர்ந்து
தாரேற்ற வெம்படை யாரியர் தண்டு படத்தனியே
போரேற்று நின்ற பெருவார்த்தை யின்றும் புதுவார்த்தையே.

பண்பட்ட மென்மொழிப் பைந்தொடி கொங்கையர்க் கவைமேற்
கண்பட்ட முத்தவடங் கண்டு கலக்கின் காடவர்கோன்
எண்பட்ட சேனை யெதிர்பட் டொழுக வெழுந்தபுண்ணீர்
விண்பட் டலையப் படைதொட்ட சுந்தர மீனவனே.

குறிப்பு: செந்தமிழ்த் தென்னவன்—சடாவர்மன் சுந்தரபாண்டியன் I
காடவர்கோன்—கோப்பெருஞ்சிங்கன் போலும்.

No. 618, S 1.1. Vol. 1V.

[3] E.1. Volume vii, 167, n. 5, திராக்சாராமா கல்வெட்டு சகம் 1184 ஆம் ஆண்டு அதாவது கி. பி. 1262-ல் வெளியிடப் பெற்றதாகும். இதில் இவன் பாண்டிய அரசினை நிறுவும் பணியில் அணைபுரிந்ததாகக் குறித்துள்ள செய்தியினைப்

குறித்துக், கொண்டுள்ளதால், இவன் போசளருக்கெதிராக நிகழ்ந்த போரில் பாண்டியருக்குத் துணை புரிந்திருத்தல் வேண்டுமென்று கருதலாம்.

இப் போரின் விளைவால் சுந்தர பாண்டியன் தனது மேலாண்மையினைத் தற்காலத்திய திருச்சி, புதுக்கோட்டை, தஞ்சாவூர், தென்னார்க்காடு ஆகிய மாவட்டங்களிலும் திருவாங்கூர்ப் பகுதியிலும் நிறுவினான். இவ்வாறு இவன் தனது ஆட்சியின் தொடக்க காலத்திலேயே பரந்ததொரு பேரரசினைக் கைக்கொண்டான்.

இப் போர் நிகழ்ச்சிகள் யாவும் இவ் வேந்தனது ஏழாமாட்சி யாண்டிற்குள் நிகழ்வுற்றிருத்தல் வேண்டும். எனவே, இவை கி. பி. 1259ஆம் ஆண்டிற்குள்[4] நடைபெற்றதாகக் கொள்ளலாம். இவற்றுள் எந்த நாடு? எவ்வாண்டில் வெற்றி கொள்ளப்பட்டதென்பதனை முறையாக நம்மால் அறிந்து கொள்ள வியலவில்லை.

### இரண்டாவது கட்டப் போர்

அடுத்து, இவ் வேந்தனது போர்ச் செயலின் இரண்டாவது கட்டம் ஆரம்பமாயிற்று. வெற்றிச் செருக்கில் செம்மாந்து பவனி வந்த இவ் வேந்தன் அடுத்து மகத நாட்டின்மீது போர் தொடுத்து, வாணர்களை முறியடித்து, அவர்களது நாட்டினைத் தனது ஆட்சிக்குட்படுத்தினான். மகதத்தை வென்ற பாண்டியன் பின்பு கொங்கு வேந்தர்களால் ஆளப்பட்டு வந்து கொங்கு நாட்டின்மீது படையெடுத்து, அதனைக் கைப்பற்றித் தனது ஆட்சியுடன் இணைத்துக்கொண்டான்; பெரும் புகழினை அணைத்துக்கொண்டான்.

### தெலுங்குப் பல்லவர் தோல்வி

புகழேணியின் உச்சியில் நின்று கொண்டிருந்த புகழ் பூத்த பாண்டி வேந்தன், பின்னர் தெலுங்குப் பல்லவனை ஆளுந்திக்க

---

பொய்யென்று ஒதுக்கித் தள்ளிவிட முடியாது. அதேசமயம் சுந்தரபாண்டியனும் இவனும் நட்பு கொண்டிருப்பார்களேயானால், பாண்டியன் அவன்மீது போர் தொடுக்கவேண்டிய காரணம் யாது என்பதும் புலப்படவில்லை. இருப்பினும் இந் நிகழ்ச்சிக்குப் பின் ஏறத்தாழப் பதினான்காண்டுகளுக்குப் பின்பே இவன் பாண்டியனுக்குத் திறை செலுத்தியிருக்கிறான். (No. 192 of 1914 of the fourteenth year Jatavarman Veerapandya), A.R.E. 1915, Part ii, Para 36)

[4] S.I.I. Vol. V, No. 459

கண்ட கோபாலன்[1] மீது போர் மேற்கொண்டு அவனைக்கொன்று அவனது ஆட்சிக்குட்பட்டிருந்த காஞ்சிபுரத்தினைக் கைப்பற்றிக் கொண்டான். பின்பு வடபுல வேந்தனும், காகாதித்திய வேந்தனுமான கணபதி என்பானையும் முறியடித்து, நெல்லூரைப் பிடித்து ஆங்கு வீராபிடேகம் செய்து கொண்டான்; புகழ் கொண்டான்.[2]

ஆளுந்திக்க கண்ட கோபாலனது அரசினைக் கைப்பற்றிய பாண்டியன் அதனை நீண்ட காலம் தன்னுட்சியில் வைத்திருந்ததாகத் தோன்றவில்லை. கண்ட கோபாலனது திருத்தம்பியர் தமது அண்ணனையும் அரசினையும் இழந்த பின்பு, பாண்டி வேந்தனை வணங்கி, அவர்களது அரசினைத் திருப்பித் தந்தருளுமாறு வேண்டிக் கொண்டதற்கிணங்க, அதனை அவர்கட்கு அன்புடன் தந்தருளி, அவர்களைத் தொடர்ந்து திறை செலுத்திக் கொண்டு வருமாறு ஆணை பிறப்பித்தான் என்பதனைப் பின் வரும் செய்யுளாலறியலாம்:

[1] சுந்தரபாண்டியன் 'வன்கழற் கண்ட கோபாலனை விண்ணுலகிற்கு' அனுப்பினன் என்று கல்வெட்டுச் செய்தி கூறுகின்றது. (Ins. 354 of 1913; S.I.I. Vol. IV, No. 624; செந்தமிழ்—தொகுதி IV—பக்கம் 493). கண்டகோபாலன் என்னும் பெயரில் பண்டு வேந்தர் பலர் இருந்தனர். அவர்களுள் தெலுங்குச் சோழ வேந்தனை கண்ட கோபாலன், தெலுங்குப் பல்லவ வேந்தர்களான விசய கண்ட கோபாலன், ஆளுந்திக்க கண்ட கோபாலன், வீரகண்ட கோபாலன் முதலானோர் குறிப்பிடத்தக்கவராவர். இவர்களுள் சுந்தரபாண்டியனிடம் தோல்வி கண்ட, கண்ட கோபாலன் யார் என்பதுபற்றி நாம் காணவேண்டியுள்ளது.

'நம் சுந்தரபாண்டியன் தெலுங்கச் சோழனுகிய விசய கண்ட கோபாலனைப் போரிற்கொன்று அவன் ஆட்சிக்குட்பட்டிருந்த காஞ்சிமா நகரைக் கைப்பற்றினான்.' என்று திரு. தி. வை. சதாசிவ பண்டாரத்தார் அவர்கள் கருத்துத் தெரிவித்துள்ளார். (பாண்டியர் வரலாறு—இரண்டாம் பதிப்பு. 1950 பககம் 133). இதுகாறும் வரலாற்றறிஞர்கள் விசய கண்ட கோபாலனைத் தெலுங்கச் சோழ மரபினன் என்றே கருதிவந்தனர். கி.பி. 12–14 நூற்றுண்டுகளில் தொண்டைநாடு தெலுங்கச் சோழரது ஆட்சியில் அடங்கியிருந்ததாலும் கண்ட கோபாலன் முதலான தெலுங்குச் சோழ வேந்தர்களது விருதுப் பெயர்களை விசய கண்ட கோபாலன் தாங்கியிருந்தாலும், இவர்கள் இவ்வாறு கருதினர்போலும். இக் கருத்து இன்று மாற்றப்படத் தககதாக உள்ளது.

உத்தரமேரூர், திருப்புட்குழி, விசயராகவப் பெருமாள் கோயில், ஆத்மகூர் (ஆந்திர மாநிலம்), திரிபுராந்தகம்—முதலான இடங்களில் காணப்பெறுகின்ற கல்வெட்டுகளில் (192 of 1916; 186 of 1923; நெல்லூர்க் கல்வெட்டுகள்—ஆத்மகூர் எண். 25; 272 of 1905) விசயகண்ட கோபாலன் பல்லவர் குலத்தில், பாரத்வாஜ குடியில் (கோத்ரம்) பிறந்தவன் என்று குறிப்பிடப் பெற்றுள்ளது. இதனுல் இவன் தெலுங்குப் பல்லவ மரபினனே என்பது புலனுகும். இக் கருத்தினை அடிப்படையாகக் கொண்டு திரு. பண்டாரத்தார் அவர்களது கருத்து பொருத்தம் உடையதாகத் தோன்றவில்லை என்று துணியலாம்.

அடுத்து, கி. பி. 1250 ஆம் ஆண்டிலிருந்து ஆளுந்திக்க கண்ட கோபாலனும் விசயகண்ட கோபாலனும் இணைந்து ஆட்சிபுரியத் தொடங்கியதாகத் தெரிகிறது. இவ் விருவருள் ஆளுந்திக்க கண்ட கோபாலனது கல்வெட்டுகள் கி. பி. 1257 க்கு முன்னர் காணப்படுகின்றன. இவ் வாண்டுக்குப் பின்னரான கல்வெட்டு ஒன்று கூடக் காணப்பெறவில்லை. விசயகண்ட கோபாலனது கல்வெட்டுகளோ கி. பி. 1257-க்குப் பின்னரும் காணப்படுவதுடன் சுந்தரபாண்டியனது இறப்பிற்குப்

'வாக்கியல் செந்தமிழ்ச் சுந்தர பாண்டியன் வாளமரில்
வீக்கிய வன்கழற் கண்டகோ பாலனை விண்ணுலகிற்
போக்கிய பின்பவன் தம்பியர் போற்றப் புரந்தரசில்
ஆக்கிய வார்த்தை பதினு லுலகமு மாகியதே'[3]

(செந்தமிழ்-தொகுதி iv, பக்கம் 493)

இவன் தெலுங்கருடன் போர் செய்த களம் கல்வெட்டில் நன்கு சித்திரிக்கப்பட்டுள்ளது.[4]

**எல்லாந் தலையான பெருமாள்**

இவ்வாறு தனது வாளாண்மையிலும், தோளாண்மையிலும் பெறற்கரிய பெருவெற்றிகள் பல பெற்று, மாற்றுரை மண்டியிடச் செய்து, திறை பெற்று எட்டுத் திக்கும் வெற்றிக் கொடி கட்டி, புகழ்நீட்டி, பாண்டியப் பேரரசினுக்கு உரமூட்டிய சுந்தர பாண்டியன் 'எல்லா மண்டலமுங் கொண்டருளியவன்' 'எல்லாந் தலையான பெருமாள்', 'மகாராசாதிராச ஸ்ரீ பரமேசுவரன்' என்னும் பட்டங்களைப் புனைந்து கொண்டதில் வியப்பொன்றுமில்லை.'

---

பின்னரும் (கி.பி. 1271) காணப்படுகின்றன. இவற்றை அடிப்படையாகக் கொண்டு ஆளுந்திக்க கண்ட கோபாலன் இடையிலேயே இறந்துவிட்டான் என்றும், விசயகண்ட கோபாலன் நீண்ட நாள் உயிர் வாழ்ந்திருந்தான் என்பதும் தெளிவாகிறது. சுந்தரபாண்டியன் தெலுங்குப் பல்லவருடன் போர் தொடுத்த ஆண்டு கி.பி. 1257 ஆகும். இவ்வாண்டுக்குப் பின் தேதியிட்ட ஆளுந்திக்க கண்ட கோபாலனது கல்வெட்டு ஒன்றுகூட இதுகாறும் காணப்படவில்லை. எனவே. சுந்தரபாண்டியனால் கி.பி. 1257-ல் போரில் கொல்லப்பட்டவன் ஆளுந்திக்க கண்ட கோபாலனேயன்றி விசயகண்ட கோபாலன் அல்லன் என்பது தெளிவாகிறது. அடுத்து, பாண்டியர் கல்வெட்டில் கண்ட கோபாலனது தம்பி என்று குறிக்கப் பெற்றுள்ளவன் ஆளுந்திக்க கண்ட கோபாலனது தம்பியான விசயகண்ட கோபாலனாக இருக்கலாம் என்றும் கருதலாம்.

சிலர், சுந்தரபாண்டியனால் கொல்லப்பட்டவனை, வீரகண்ட கோபாலனே யாவன் எனக் கருதினர் (Sathu Subramania Sastry Thiruppati Devasthanam. Epigraphical Report 1930. p. 126; m. Prateep-'Vijagandagopala'-Journal of Indian History 1970. pp. 287-293; ஆ. வேலுப்பிள்ளை, 'சாசனமும தமிழும்' பக். 268) மேன்பு கூறப்பட்டவற்றால் இக் கருத்து ஏற்றுக் கொள்ளத்தக்கதாக இல்லையென்பதனை அறியலாம். மேலும் வீரகண்ட கோபாலன், விசயகண்ட கோபாலனது மைந்தனென்பதனைத் திருப்புட்குழிக் கல்வெட்டுணர்த்துவதாலும், (179 of 1916) கி.பி. 1291 ஆம் ஆண்டிற்கு முன்னதாக இவனது கல்வெட்டு ஒன்றும் தமிழகத்தில் காணப்பெறாததாலும் இவன் சுந்தரபாண்டியனது இறப்பிற்குப் பின்னரே ஆட்சிக்கு வந்தான் என்பதனை அறியலாம் கி.பி. 1291 ஆம் ஆண்டிற்குப்பின் கல்வெட்டுகளை வெளியிட்ட இவன் கி.பி. 1257-ல் கொல்லப்பட்டான் எனக் கருதுதல் முற்றிலும் பொருந்தாத வாதமாகும்.

அடுத்து, திரு. எகாம்பரநாதன் அவர்களும், பாண்டியனால் கொல்லப்பட்ட மன்னன் ஆளுந்திக்க கண்டகோபாலனேயாவான் என்று தமது கட்டுரையில் வலியுறுத்துகிறார். (ஏ. ஏகாம்பரநாதன் -'தமிழக வரலாற்றில் விசயகண்ட கோபாலன்-கொங்கு 15-10-76. பக்கங்கள 8-14: 'திருமுல்லைவாயில் மதுராந்தக பொத்தப்பிச் சோழன் கல்வெட்டு' - Ibid. 15-12-77, பக்கங்கள் 6-7).

**அறக் கொடைகள்**

வெற்றிச் சிறப்புகளில் மேம்பட்டிருந்த இவ் வேந்தன், இறைவனது திருக்கோயில்களுக்கு வரையாது வழங்கும் கொடைத் தன்மையும் சிறக்கப் பெற்றமை, பொன்மலர் நாற்றம் பெற்றதனையொக்கும். தமிழகத்தின்கண் பெரும் புகழ் பெற்று விளங்கும் கோயில்களுள், முன்னணியில் வைத்துப் போற்றப் பெறும் சிதம்பரம், திருவரங்கம் ஆகியவற்றிற்கு இவன் அளித்துள்ள அறக்கொடைகள் ஏராளம்! ஏராளம்!! தில்லையம்பதியின்கண் எழுந்தருளியுள்ள பொன்னம்பல வாணனின் பொன்னடி பணிந்து, ஏத்தித் துலாபாரதானங்கள்[4] செய்து அவனருளடையப் பெற்றான்; அவ் விறைவன்மீது தான் கொண்ட ஆராக் காதலை உலகிற்கறிவிக்கும் பொருட்டு, அத் திருக்கோயிலைப் பொன்னால் வேய்ந்து,[5] பொன்றாப் புகழ் பெற்றான். சிதம்பரத்திலுள்ள சிவன் கோயிலுக்கும் விஷ்ணு கோயிலுக்கும் பெரும் பொருளைத் தானமாக வழங்கினான். அக் கோயிலின்கண்ணுள்ள மேலைக் கோபுரம் இவ் வேந்தனது பெயரால் சுந்தரபாண்டியன் கோபுரமென அழைக்கப்பட்ட தென்பதனைக் கல்வெட்டுச் செய்தியுணர்த்துகின்றது.[6] இப் பெயரினைக் கொண்ட இக் கோபுரம் சுந்தர பாண்டியனால் அமைக்கப்பட்டதென்பதனை நன்கறியலாம்.[7] மதுரையம் பதியின்கண்ணுள்ள அங்கையற்கண்ணி ஆலயத்திலுள்ள

---

[2] இப் பாடல் சிதம்பரம் நடராஜர்கோயில் கீழைக் கோபுரத்துத் தெற்குக் கதவுநிலையில் பொறிக்கப்பட்டுள்ளது. இப் பாடலுடன், சுந்தரபாண்டியனின் வீரத்தினை விளக்கிக்கூறும் மற்றும் இரு பாடல்கள் குறிக்கப்பெற்றுள்ளன. அவற்றையும் கீழே காண்போம்:

'மீளா வழிசெல்ல வேணாடர் தங்களை வென்றதடந்
தோளான் மதுரைமன் சுந்தர பாண்டியன் சூழ்ந்திறைஞ்சி
யாளான மன்னவர் தன்னேவல் செய்ய வவணிமுட்ட
வாளால் வழிதிறந் தான்வட வேந்தரை மார்திறந்தே'

கொங்க ருடல்கிழியக் குந்தியிரு கோட்டெடுத்து
வெங்க ணழலில் வெதுப்புமே—மங்கையர் கண்
சூழத் தாமம்புனையுஞ் சுந்தரத்தோள் மீனவனுக்
கீழ்த்தா னிட்ட இறை.

வாக்கியல்...............................................
...................................லுலகமு மாகியதுவே.

செந்தமிழ்—தொகுதி IV. பக்கம் 492–93.

3
வட்ட வெண்குடை மன்னர் தம்புகல்
கொண்டு மாமுடி கொண்டு போர்
மாறு கொண்டெழு போசளன் தடை
கொண்டு வாணன் வனம்புகத்
தொட்ட வெம்படை வீரன் வெற்றி
புனைந்த சுந்தர மாறன்முன்
சூழி விட்ட தெலிங்கர் சேனை
துணிந்து வென்ற களத்துமேல்

சுந்தரேசர் கோயிலின் கீழைக் கோபுரமும், இவ் வேந்தனால் அமைக்கப்பட்டதென்பதனையும் ஈண்டு நாம் நினைவிற் கொள்ளலாம்.[8]

**இறையன்பு**

அடுத்து, சுந்தர பாண்டியன் இந்தியாவின் பல பகுதிகளிலிருந்தும், பக்த கோடிகளைத் தன்பால் ஈர்த்துக் கொண்டிருக்கும் திருவரங்கப் பெருமானைக் கண்டான்; அவன்பால் பேரன்பு கொண்டான்; வணங்கினான்; வாழ்த்தினான். அத்துடன் மனநிறைவு கொள்ளாது அக் கோயிலையும் பொன்வேய்ந்தான். அவ் விறைவனது சன்னிதானத்திலேயே முடிபுனைந்து கொண்டு பல துலாபார தானங்கள் செய்தான்; திருவரங்கத்திலேயுள்ள அரவணைத்துயிலும் அண்ணலுக்கு அளவிறந்த பொன்னும், பொருளும், நிவந்தங்களும் விட்டுத் திருப்பணிகள் பலபுரிந்தான். அரங்கநாதரது கோயில் கோபுரத்தைப் பொன் வேய்ந்த காரணத்தால் இவன் 'ஹேமசந்தன்ராஜா', 'கோயில் பொன் வேய்ந்த பெருமாள்' என்னும் பட்டப் பெயர்களைப் பூண்டான். திருவரங்கக் கோயிலிலுள்ள வடமொழிக் கல்வெட்டும்,[9] 'கோயிலொழுகு' (Koilolugu) என்னும் புகழ்பெற்ற வைணவ நூலும் இச் செய்திகளை விளக்கிக் கூறுகின்றன.

**திருவரங்கக் கோயிலுக்கு அளித்த அறக்கொடைகள்**

திருவரங்கக் கோயிலுக்கு இம் மன்னன் இனிதே வழங்கிய பரிசில் குறித்து வடமொழிக் கல்வெட்டொன்று மிகுதியாகப் புகழ்கின்றது. இது குறித்து உல்ட்சு (Hultzch) என்பார் பின் வருமாறு வர்ணித்துள்ளார்.[10]

---

விட்ட வெம்பரி பட்ட பொழுதெழு
    சோரி வாரியை யொக்கு நீர்
மேல் மிதந்த நிணப் பெருத்திரள்
    வெண் ணுரைத்திட லொக்குமுன்
பட்ட வெங்கரி யந்த வீரர்
    படிந்த மாமுகி லொக்கும்வீழ்
பருமணிக் குடையங்கு வந்தெழு
    பருதி மண்டல மொக்குமே.

இப் பாடல் சிதம்பரம் கோயிலில் உள்ளது. (No. 619. S.I.I Vol. IV) இப் பாடலின் கருத்து: குதிரைப்படை சிந்திய குருதி நுரை போலிருக்கிறது. போரில் இறந்துபட்ட கரிப்படை கடல் நீரைப் பருகும் மேகம் போன்றன. தோல்வி பெற்று, விட்டுச்சென்ற பகைவேந்தனின் வெண்கொற்றக்குடை கடலிலிருந்து தோன்றுகின்ற சூரியனைப் போன்றிருந்தது.

4 S.I.I. Vol. iv, No. 620.

'இனவ... ... கம்புரி வெண்பிறைக் கோட்டிகல் வெங்குடுங்கட்
சின மதத்த வெங்கரிச் சுந்தரத் தென்னவன் தில்லைமன்றில்
வசைத் திருவுடன் செஞ்சொற் றிருவை மணந்த தொக்கும்
கனகத் துலையுடன் முத்தத் துலையிற் கலந்ததுவே'

'தங்கத்தாலான நரசிம்ம உருவத்தையும், விஷ்ணுவின் அடியாரான விஷ்வசேனு உருவத்தையும் செதுக்கியுள்ளார்; நரசிம்ம உருவம் பொறித்த பொன்வேய்ந்த கூரையும் கட்டி யுள்ளார். மேலும், தன் திருப்பணிகளுக்கெல்லாம் சிகரம் வைத்தாற் போன்று, தன்புனைப்பெயரான ஹேமச்சாதனராஜா என்ற பெயருக்கேற்ற வண்ணம், ஆலயத்தின் நடுப்பகுதி முழு வதையும் பொன்னுல் வேய்ந்தார். அவ்வாலயக் கருவறையில் தான் பதித்த தங்கத்தாலான திருமாலின் உருவத்திற்குத் தன் பெயரை வைத்துப் பெருமிதம் கொண்டார். ஆலய உட் பகுதியைப் பொன்னுல் வேய்ந்து, அங்கு தங்கக்கலன்கள் நிறைந்த உணவறை ஒன்றைக் கட்டினுர். சித்திரைத் திங்கள் முழுநிலா நாளில் முழு முதல்வனுக்கு 'உலா விழா'க் கொண்டாடி உளம் மகிழ்ந்தார். திருமாலுக்கும் அவன் தேவிக்கும் கொண் டாடும் நீராட்டு விழாவிற்காகவே பொற்கப்பல் கட்டினுர். ஹேமச்சாதனராஜா ஹரியின் தங்க உருவத்திற்கு மேலும், கருட விக்ரகத்திற்கு மேலும், திருமாலின் பள்ளியறையின் மேலும்,ஒவ்வொன்ருக மூன்று கூரைகள் தங்கத்தால் வேய்ந்தார் என கல்வெட்டின் கடைசிப் பகுதி புகழ்கின்றது.

மரகதமாலை, மாணிக்கமுடி, சேசனின் தங்கவிக்ரகம், பொன்வளைவு, பொலிவுதரும் முத்துமாலையும், முத்துவிதானமும், தங்கத்தால் வார்த்தெடுத்த கனிவகைகள், தங்கத்தேர், தங்கக் கருட விக்ரகம், தங்கத்தாலான உள் அங்கி, தங்கத்தலையணி, தங்க அடிப்பீடம், மாணிக்க அணிகலன்கள், தங்கக்கவசம், தங்கக் கலன்கள், தங்க சிம்மாசனம் ஆகிய இன்னேரன்ன பரிசில்களைக் கொடுத்துப் பெருமையடைந்தார்'.

---

சிதம்பரம் நடராசர் கோயிலில் செதுக்கப்பட்டுள்ள பாவடிவிலான கல்வெட்டு. இவ் வாசகம் திரு. மயிலை சீனிவேங்கடசாமி அவர்கள் 'சாசனத் தமிழ்க்கவி மஞ்சரி' என்னும் தமது நூலில் கொடுக்கப்பட்டுள்ளது. திரு. டி. வி. சதாசிவ பண்டாரத்தார் முதலடியை 'சினவரிக் கிம்புரி' என்று தொடங்கியுள்ளார். (பாண்டியர் வரலாறு பக். 132.)

[5] S.I.I. Vol. IV, Nos. 628, 629 and 630

[6] I bid. No. 624.

[7] Nos. 286 of 1941-42; 281 of 1939-40. அவனி வேந்தராமன் திருக் கோபுரம் எனப் பெயர் பெற்றுள்ளது. 285 of 1942. பெருந்தொகைப் பாடல் 908.

[8] திருப்பணி விவரமும் திருப்பணி மாலையும் கீழைக் கோபுரம் கி. பி. 1218-ல் சுந்தர பாண்டியனுல் கட்டப்பட்டதென்று கூறுகின்றது. அண்மைக் கால ஆராய்ச்சியின்படி அவனி வேந்த இராமன் என்னும் பட்டம் இரண்டாம் சுந்தரபாண்டியனுக்கு (கி.பி. 1276-ல் அரியணையேறிய) மிகவும் பொருந்துவதாக உள்ளது. இக் கோபுரத்தில் காணப்பெறும் பழமை மிக்க கல்வெட்டுகள் இதனை 'சுந்தர பாண்டியன் கோபுரம்' என்றும் 'அவனி வேந்த ராமன் கோபுரம்' என்றும் குறிக்கின்றன. இக் கோபுரத்தில் இணைக்கயல் பொறிக்கப்பட்டிருப்பது இது பாண்டியர் காலக்கோபுரம் என்பதனை உறுதி செய்கின்றது. இக் கோபுரத்தின் இரண்டாவது தளத்தில் (Storey) நான்கு கல்வெட்டுகள் காணப்படுகின்றன.

மேற்கூறிய பரிசிலின் முதற்பகுதியினை மரகத மன்னன் என்றழைக்கப்படும் 'மரகதப்பிரிதிவிப்ரித்' எனும் மன்னன் அளித்திருப்பான் எனக் கருதப்படுகிறது. இவன் சுந்தர பாண்டியனாக இருந்திருக்கலாம் என கல்வெட்டின் 13ஆம் பகுதி பகர்கின்றது. காடவர் குலக்கோன் கோப்பெருஞ்சிங்கன் என்பானிடமிருந்து மேற்சொன்ன மரகதமாலை வாள்முனையில் பறிக்கப்பட்டது என்பர் (பகுதி 4).[11]

**கோயில் திருப்பணி**

இவ் வேந்தனது ஆட்சிக் காலத்தில் தஞ்சை மாவட்டத்தி லுள்ள திருக்கோளிலி (திருக்குவளை) சிவன் கோயில் திருப்பணி குறைவற நடைபெற்றது. இக் கோயில் மகா மண்டபத்தின் துவாரவாசல் முதல் கீழை வாசல் முடிய, வட வல்லத்தை இருக்கையாக உடைய இருன் குடியான் இந்திராவதி நல்லூர் உய்ய வந்தான் சீகாழிப் பிள்ளையான ஜயதுங்க பன்மரால் திருப் பணி செய்யப்பட்டது. (அன்றைய இருன்குடி இன்று இறை யான்குடி என அழைக்கப்பெறுகிறது. இறையான்குடி, வட வல்லம் ஆகியவை திருக்குவளைக்கு (திருக்கோளிலி) வடமேற்கே ஏறத்தாழ நான்குகல் தொலைவில் உள்ளன) திருப்பதி மலையின் மீதுள்ள வெங்கடேசுவரர் ஆலயத்திற்கு இவன் பொற்கலசம் அமைத்துள்ளான்.

**சந்தி, விழா, படிமம்**

'கோயில் பொன் வேய்ந்த பெருமாள்' என்னும் தனது விருதுப் பெயர் என்றென்றும் நின்று நிலவும் பொருட்டு திரு வரங்கம்[12], திருவேந்திபுரம்[13] மற்றும் பல இடங்களில் உள்ள

---

இவை முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியன், சடைய வர்மன் குலசேகரன் (கி.பி. 1238-ல் அரியணையேறியவன்) ஆகியோரது கல்வெட்டுகள் காணப்படு கின்றன. இவற்றை அடிப்படையாகக் கொண்டு இக் கோபுரம் முதலாம் மாற வர்மனால் ஆரம்பிக்கப்பட்டதென்றும், பின்னர் இதனை முதலாம் சடையவர்மன் சுந்தர பாண்டியனே, இரண்டாம் சடைய வர்மன் சுந்தர பாண்டியனே முடித் திருக்கலாம் என்று கூறலாம். Devakunjari, D. Miss. Dr. 'The Antiquity of the Madurai Temple' Madurai Sri Meenakshi Sundareswarar Mahakumbabishekam Souvenir. (1963) page XL viii

9 Epi. Ind. Vol. 111, pp. 7-17.

10 Nos. 179 and 182 of 1892. Nilakanta Sastri, K.A. 'The Pandyan Kingdom', p. 149.

11 Ibid. page. 150.

12 Ins. 6 of 1936-37.

13 A.R.E. 1937-38. p. 75.

கோயில்களில்[1] படிமங்கள் நிறுவி, ஆங்கு திங்கள்தோறும் தனது பிறந்த நாளில் திருவிழாக்கள் சீரும் சிறப்புமாக நடைபெறத்தக்க முன்னேற்பாடுகளைச் செய்துள்ளான். அழகர் கோயிலுள்ள விஷ்ணு ஆலயத்தின்கண் மண்டபம் ஒன்றினையமைத்து, அதற்குக் 'கோயில் பொன் வேய்ந்த பெருமாள் திரு மண்டபம்' எனப் பெயரிட்டான்.[2]

திருவரங்கத்தின்கண் இவன் 'சேரனை வென்றான் திருமண்டபம்' எனும் பெயரால் மண்டபமொன்றினையமைத்ததாகத் தெரிகிறது.[3] இவன் திருவானைக்கோயிலில் தனது பிறந்த நாள் நினைவாகச் 'சேரனை வென்றான் திருநாள்' என்னும் பெயரால் திருவிழா நிகழ்த்துவதற்கு நிவந்தமளித்துள்ளான். இவற்றால் இவன் சேரனை வென்றதன் நினைவாகச் 'சேரனை வென்றான்' என்னும் பட்டப் பெயரினைப் புனைந்து கொண்டதாக உணரலாம்.

சடையவர்மன் சுந்தர பாண்டியனது வேறு கல்வெட்டுகள் இவ் வேந்தனது பெயரால் 'அவனிவேந்த இராமன் சந்தி' என்னும் விழாவொன்று நிகழ்ந்து வந்ததாகத் தெரிவிக்கின்றது. ஆனால், இத் திருவிழா உத்தராடதி நட்சத்திரத்தில் கொண்டாடப்பட்டதாக இக் கல்வெட்டு அறிவிக்கின்றது. இவ் வேந்தனது பிறந்த நாள் மூலநட்சத்திரமாகவிருத்தலின் இது இவனுக்குப் பொருந்துவதாக இல்லை. மூன்றாம் சுந்தர பாண்டியன் பூச நட்சத்திரத்தில் தோன்றியவனாதலின் அவனுக்கும் இவ் விழாவிற்கும் எவ்விதப் பொருத்தமுமிருப்பதாகத் தெரியவில்லை. எனவே, இவ்விழா கி.பி. 1276 ஆம் ஆண்டில் அரசபதவியேற்ற இரண்டாம் சடையவர்மன் சுந்தர பாண்டியனுக்குத் தொடர்புடையதென்று நம்பலாம்[4].

திருவைகுண்டத்திலுள்ள விஷ்ணு கோயிலிலுள்ள சுந்தர பாண்டிய கோபுரம் இவனால் கட்டப் பெற்றிருத்தல் வேண்டுமென்பதனைக் கல்வெட்டொன்று கூறுகிறது.[5] இவ் வேந்தன் தனது இரண்டாமாட்சியாண்டில் விரதவகுளத்தில் தங்கியிருந்த காலை, தேவபிரான் தாதன் (Devapiran Tadan) என்னும் புகழ் மிக்க வைணவத் தலைவன் அவனைச் சந்தித்தான் என்பது அறியப்

1 Ins. 150 of 1904; Ins. 531 of 1920.
2 85 of 1928–29.
3 Raman, K. V. Dr. 'Some Aspects of pandyan History in the light of recent discoveries' page–30.
4 299 and 300 of 1943–44.
5 373 of 1959–60.

படுகிறது.[1] இதுபோன்று நமது வேந்தன் வைணவத் தலைவருடன் தொடர்பு கொண்டிருந்த காரணத்தால் வைணவப் பெரியார்கள்மீது இவன் கொண்டிருந்த நல்லெண்ணத்தையும் நன்மதிப்பையும் நாம் நன்கறியலாம்.

இரண்டாவது பாண்டியப் பேரரசருள் தனக்கு ஒப்பாருமின்றி மிக்காருமின்றி ஓங்கு புகழ் பெற்று வீர தீரச்செயல்கள் பல புரிந்த இவ் வெற்றி வீரன், பாண்டியரது பெருமையினையும் புகழினையும் எம்மண்டலமும் பரப்பிய ஆற்றல் மறவனுவான். இவன் கி. பி. 1271 ஆம் ஆண்டு முடிய நல்லாட்சி புரிந்து, அவ்வாண்டிலேயே இறைவன் திருவடி நிழலையடைந்தானென்று கூறலாம். அரசியல் துறையில் தேர்ச்சி பெற்றவன் இவ்வேந்தன் என்பதனை இவன் தனது இரண்டாமாண்டு முடிந்தவுடன் சடையவர்மன் வீர பாண்டியனுக்கு இளவரசுப் பட்டங் கட்டி தன்னுடன் ஒத்துழைக்கும் வகையில் அரசப் பகர ஆளுநராக நியமனம் செய்தமையாலறியலாம்.

## சிறப்புப் பெயர்கள்

### 1. எம்மண்டலமுங் கொண்டருளியவன்

இவன் தனது பேரரசினைச் சூழ்ந்துள்ள சோழ மண்டலம், சேர மண்டலம், கொங்கு மண்டலம், போசளர் நாடு, சிங்களம், பல்லவநாடு ஆகியவற்றினை வென்று பெரும் புகழ் பெற்றமையின் இவன் எம்மண்டலமும் கொண்டருளியவனென்னும் சிறப்புப் பெயரினைப் பெறுகிறுன். இவன் எம் மண்டலமும் கொண்டதன் விளைவாகத்தான் இவ் வேந்தனது பேரரசும் தெற்கே திருவாங்கூரிலிருந்து வடக்கே தென்னுர்க்காடு மாவட்டம் வரையிலும் பரந்து விரிந்திருந்தது.

### 2. எல்லாந் தலையான பெருமாள்

இவன் அண்டையிலுள்ள அரச வேந்தரனைவருக்கும் தலைமையாக, முதன்மையாகத் திகழ்ந்தமையின் எல்லாம் தலையான பெருமாள் என்று அழைக்கப் பெறுவதாகக் கொள்ளலாம்.[2] திருவேந்திபுரத்திலிருந்து அண்மைக் காலத்தில் கண்டுபிடிக்கப் பட்ட கல்வெட்டொன்று இரண்டாம் சுந்தர பாண்டியன் தனது அண்ணனை சுந்தர பாண்டியனின் பெயரால் 'எல்லாந் தலையான பெருமாள்' என்னும் படிமத்தை நிறுவியதாக அறியலாம். எனவே, முதலாம் சுந்தர பாண்டியனுக்கு இப் பட்டம் வழங்கப்

[1] I bid. page. 25.
[2] S.I.I. Vol. VIII, No. 359.

பெற்றிருத்தல் வேண்டுமென்று அறியலாம். மாறவர்மன் குலசேகர பாண்டியனும் இப் பட்டத்தினைப் பெற்றிருந்தான்.[1] 'எல்லாந் தலையானான்' என்னும் பெயர் கொண்ட நாணயம் ஒன்று சுந்தர பாண்டியனது காலத்தில் வழக்கிலிருந்ததாக அறியலாம். இவனை 'எல்லாம் தலையான பெருமாள்' என்று அழைப்பது பொருத்தமாகுமாவெனப் பண்டாரகர் டி. தேவ குஞ்சரி ஐயுறுகிறார்.[2]

### 3. மகாராஜாதி ராஜ ஸ்ரீபரமேசுவரன்

இவன் பெரு வெற்றிகள் பல பெற்ற பெருவீரனாகவும், பேரரசனாகவும் திகழ்ந்தமையின் இப் பெயர் பெறுகிறான்.

### 4. காஞ்சீபுரங் கொண்டான் (காஞ்சிபுர வராதீசுவரன்)

தெலுங்குச் சோழ வேந்தனை கண்ட கோபாலனைப் போரில் வென்று, காஞ்சிபுரத்திரத்தினைக் கைப்பற்றியமையின் இவன் இப்பெயர் பெறுகிறான்.[3] காஞ்சிபுர வராதீசுவரன் என்பது வடமொழிப் பட்டமாகும். இதன் பொருள் காஞ்சி புரங் கொண்டான்.

### 5. சேரனை வென்றான்

இவ் வேந்தன் திருவாங்கூர் நாட்டினையும் அதனைச் சூழ்ந்த பகுதியினையும் ஆண்டு வந்த சேர வேந்தனை வென்றமையின் 'சேரனை வென்றா'னென்னும் பெயர் கொண்டான். இப் பெயரால் திருவானைக்கோயிலில் திருவிழாவொன்றும் நிகழ்ந்தது. திருவரங்கத்தில் மண்டபமொன்றும் கட்டப் பெற்றது. தஞ்சை மாவட்டம் திருக்கோளிலி கல்வெட்டில் இவன் 'சேரனை வென்ற பாண்டிய தேவன்' எனக் குறிக்கப் பெறுகிறான்.

### 6. கோயில் பொன் வேய்ந்த பெருமாள்

திருவரங்கம், சிதம்பரம் ஆகிய நகரங்களிலுள்ள கோயில்களைப் பொன் வேய்ந்தவனாதலின் இவன் இப்பெயர் பெற்றான். தான் பகைவர்களை வென்றபோது தமக்குக் கிடைத்த பெரும் பொருளைக் கொண்டு இவன் அக் கோயில்களைப் பொன் வேய்ந்தான். இப் பெயரால் நாட்டின் நாலா பக்கங்களிலுமுள்ள கோயில்களில் படிமங்கள் நிறுவி இவ் வேந்தன் விழாவெடுத்

[1] 299 and 300 of 1943–44.

[2] Devakunjari, Dr. D. 'Some Problems of Mediavel Pandyan Chronology' (R. Nagasamy Editor) கல்வெட்டுக் கருத்தரங்கு.

[3] இவ் வேந்தன் காஞ்சிபுரத்திலும் வீராபிடேகம் செய்து கொண்டான் என்ற செய்தி திருப்புட்குழியிலுள்ள இவனது வடமொழிக் கல்வெட்டொன்று செப்புகின்றது. (செந்தமிழ்—தொகுதி iv. பக்கம் 513.)

தான். அதன் செலவுக்காக நிவந்தங்கள் கொடுத்தான். (இவன் கோயில் பொன் வேய்ந்ததால் 'ஹேமாச் சந்தன் ராஜா' என்றும் வடமொழியில் அழைக்கப் பெறுகிறான்).

**7. அவனி வேந்த ராமன்**

இவன் அவனி முழுவதற்கும் அதிபதியாக விளங்கியதாக எண்ணியிருந்ததால் 'அவனி வேந்த ராமன்' என்னும் பட்டத்தினைப் பெற்றான். இதனை, இவ் வேந்தன் 'அவனி வேந்த ராமன்—திருக்கோபுரம்' என்னும் பெயரால் கோபுரம் ஒன்றினை மதுரையின்கண்ணுள்ள அங்கயற்கண்ணி ஆலயத்தில் உள்ள சுந்தரேசர் கோயிலின் கீழ்ப்புறம் அமைத்துள்ளதால் அறியலாம்.[1] இவனது கல்வெட்டுகளில் 'அவனி வேந்த ராமன்-சந்தி' என்ற ஒரு விழாவும் நடைபெற்றதாகக் குறிப்பு வருகிறது.

**8. 'இராஜ சூர்யா' 'ராஜ தபன' 'சித்திபதி ரவி'**

இவ் வேந்தன் சூரியன் போன்ற வலிமையும் வீரமும் (பராக்கிரமம் )கொண்டிருந்த காரணத்தால் இப் பெயர்களைப் பெற்றானென்று அரங்கநாதர் கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன.

**9. இரண்டாவது இராமன்**

சுந்தர பாண்டியன் இலங்கைத் தீவின்மீதுப் படையெடுத்து, பகைஞரைத் தோற்கடித்து, ஆங்குப் பேரழிவினை நிகழ்த்தினான். இவன் இராமனைப் போன்று இலங்கையை அழிவுக்குள்ளாக்கியமையின் இரண்டாவது இராமன் எனும் பெயர் பெற்றதாகக் கூறப்படுகிறது.[2]

மேற்கண்ட பட்டங்கள் பலவற்றினைச் சுந்தர பாண்டியன் புனைந்திருந்த போதிலும் அவற்றுள் 'கோயில் பொன் வேய்ந்த பெருமாள்' என்னும் பட்டமும் 'எம் மண்டலமுங் கொண்டருளியவன்' என்னும் பட்டமும் மக்களாலும், புலவர் பெருமக்களாலும் நன்கு போற்றப்பட்டதாக அறியலாம். இதனைச் செங்கற்பட்டு மாவட்டம் காஞ்சீபுரம் வட்டத்திலுள்ள திருப்புட்குழித் திருமால் கோயிலில் பொறிக்கப்பட்டுள்ள வாழ்த்துப்பா ஒன்றாலறியலாம். இவ் வாழ்த்துப்பா பண்டைப் புலவர் ஒருவரால்

1 இப் பெயர் இவனைவிட இரண்டாம் சுந்தர பாண்டியனுக்கு (கி. பி. 1276–ல் அரியணையேறியவன்) மிகவும் பொருந்துவதாகுமென்று அடிக்குறிப்பு எண் 116A–ல் குறிக்கப்பட்டுள்ளது.

2 Contra K. V. S. Aiyar 'Ancient Deccan, p. 167 Krishnaswamy Aiyangar, Dr. S.K. Op, cit p. 53 and A R.E. 1921, part ii, Para 41.

சடைய வர்மன் சுந்தர பாண்டியன்மீது பாடப் பெற்றதாகும்.[1] அதனைக் கீழே காண்போம்:

'வாழ்க கோயில் பொன்வேய்ந்த மகிபதி
வாழ்க செந்தமிழ் மாலை தெரிந்தவன்
வாழ்க மண்டலம் யாவையுங் கொண்டவன்
வாழ்க சுந்தர மன்னவன் தென்னனே'

**வெளிநாட்டினரின் குறிப்பு**

பாண்டிய நாட்டில் சில சமயங்களில் ஒருவருக்கு மேற்பட்ட மன்னர்கள் ஆட்சி செலுத்தி வந்திருக்கின்றனர். இவ் வேந்தர்களனைவரும் தனியுரிமையுடனும் சம அதிகாரத்துடனும் அரசாண்டு வந்தனர். தங்கள் பெயரால் கல்வெட்டுகள் வெளியிட்டுத் தங்களது ஆட்சியாண்டினைப் பொறித்துக் கொள்ளவும் உரிமை பெற்றிருந்தனர். இம் முறை பாண்டிய நாட்டின் மரபாகவே இருந்து வந்தது. இத்தாலி நாட்டினைச் சார்ந்த வெனிஸ் வழிச்செலவினனான (Pilgrim) 'மார்க்கோ போலோ' என்பானும் தான் பாண்டிய நாட்டினுக்கு வருகை புரிந்தபோது, ஐந்து பாண்டி வேந்தர்கள் ஆங்கு ஆட்சி புரிந்ததாகக் குறிப்பிடுகிறான், என்பது ஈண்டு நோக்குதற்குரியது. வாசப் என்ற அன்னிய நாட்டானும், இவ்வினோதமான முறைபற்றிக் குறித்துள்ளான். சோழர்கள், தாங்கள் வென்ற புதிய அரசுகளை ஆட்சிபுரிய அரசப் பிரதிநிதிகளையனுப்பியதனையும், முதலாம் இராசராசன், முதலாம் இராசேந்திரன் போன்ற சோழப் பெருமன்னர்களின் ஆட்சிக் காலத்தில் இணைந்த ஆட்சி (Joint Rule) மேற்கொண்டதனையும், பாண்டியர்கள் பின்பற்றியிருத்தல் வேண்டும் என்று எண்ணத் தோன்றுகிறது.

சடைய வர்மன் சுந்தர பாண்டியனது ஆட்சிக் காலத்திலும் சடையவர்மன் வீரபாண்டியன்,[2] சடைய வர்மன் விக்கிரம பாண்டியன் என்னும் பெயர்கொண்ட பாண்டிய வேந்தர்கள் பாண்டிய நாட்டில் அரசு புரிந்தனர்.[3] இவர்கள் சுந்தர பாண்டியனுக்கு எம்முறைக் கேளிர் என்பது தெளிவாகத் தெரியவில்லை. இவர்கள் சுந்தரபாண்டியனது உடன்பிறந்தோராகவோ, மக்களாகவோ இருக்கலாமென்று ஊகித்தாலும் தவறில்லை.

[1] S.I.I. Vol. VI. No. 455.

[2] Nilakanta Sastri, K.A. 'The Pindyan Kingdom' p. 153–58.

[3] இவ் வேந்தனுடன் விக்கிரமபாண்டியனும் வீர பாண்டியனும் 'உடன் ஆளும் உரிமை பெற்றிருந்தனர் என்பதனைத் திருவேந்திபுரத்திலுள்ள சுந்தர பாண்டியனது பத்தாமாட்சியாண்டுக் கல்வெட்டில் 'பெருமாள் சுந்தர பாண்டிய தேவர், பெருமாள் விக்கிரம பாண்டிய தேவர், பெருமான் வீரபாண்டிய தேவர் எழுதின திருமுகப்படி' என்று குறிக்கப்பட்டுள்ளதால் அறியலாம்.

எவ்வகை உறவு இருப்பினும், இவர்கள் அனைவரும் பாண்டி வேந்தனது உறவினரென்பது மட்டும் உறுதி. சடைய வர்மன் சுந்தர பாண்டியனது சமகாலத்தினராக இணைந்த ஆட்சியினை மேற்கொண்ட பாண்டி வேந்தர்களைப்பற்றி அறியக் கிடைக் கின்ற ஒரு சில செய்திகளை மட்டும் இங்கே நாம் காண்போம்.

## சடையவர்மன் வீரபாண்டியன்

சடையவர்மன் சுந்தர பாண்டியனது ஆட்சிக்காலத்தில் அமர்த்தப் பெற்றிருந்த அரசப் பிரதிநிதிகளுள் சடையவர்மன் வீரபாண்டியனும் ஒருவனுவான் என்பது கல்வெட்டுச் செய்தி களால் அறியப்படுகின்றது. சுந்தரபாண்டியனது தொடக்க காலத்திலேயே இவன் ஆட்சிப் பொறுப்பில் அமர்த்தப்பட்டான் என்று தெரிகிறது. இவன் கி. பி. 1253–ஆம் ஆண்டில் முன்னே னுடன் இணைந்து ஆட்சி புரியும் அரசப் பகர ஆளுநராக நிய மிக்கப்பட்டான்.[1] ஏறத்தாழ கி. பி. 1268–ஆம் ஆண்டு முடிய, இவன் பாண்டி நாட்டு மக்களுக்குத் தன்னாலியன்ற பணிகளைப் புரிந்து வந்தான் எனத் தெரிகிறது. இவ் வேந்தனது கல்வெட் டுகள் பெருமளவில் பாண்டிய நாட்டிலும் (திருநெல்வேலி, மதுரை, இராமநாதபுரம், புதுக்கோட்டை மாவட்டங்கள்) சில கொங்கு நாட்டிலும்[2] சோழ மண்டலத்திலும், தொண்டை மண் டலத்திலும்[3] கிடைக்கப் பெறுகின்ற காரணத்தால் இவன் இப் பகுதிகளின் அரசப் பிரதிநிதியாகப் பொறுப்பேற்று ஆட்சி புரிந்தானெனலாம்.

**ஆதாரங்கள்**

இவ் வேந்தனது மெய்க்கீர்த்திகள் 'திருமகள் வளர,'[4] என்னும் தொடக்கத்தினையும் 'கொங்கு ஈழங்கொண்டு, கொடு வடுகு கோடழித்து'[5] என்னும் தொடக்கத்தினையும் கொண்டு

[1] I. A. Vol. Xliv. p. 196
கீல்ஹார்ன் என்னும் அறிஞரும், சிவெல் என்னும் அறிஞரும் இவன் முறையே கி.பி. 1253–ஆம் ஆண்டு ஜுான் 20 ஜுாலை 4 தேதிகளில ஆட்சிக்கட்டிலேறியதாகக் கருதுகின்றனர்.

[2] கோவை மாவட்டம் No. 35 of 1923; and A.R.E. 1923 part il para 68·

[3] காஞ்சிபுரம் No. 483 ol 1919. வட ஆர்க்காடு Nos. 299 and 302 of 1919.

[4] lns. of the Pudukkottai State No. 366.

[5] 'கோச்சடையவர்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள், கொங்கு ஈழங் கொண்டு கொடுவடுகுக் கோடழித்து–கங்கா கயிரு கரையுங் காவிரியுங் கைக்கொண்டு –திங்கள் அரவமுஞ் செழுமலராத தாரகடன்–பொங்கு புனற் செஞ்சடையோன் பொற்புலியூர் வீற்றிருந்து–காடவன் திறையிடக் கண்டினிதிருந்து–வீராபிஷேகமும் விசயாபிஷேகமும் பண்ணியருளிய ஸ்ரீவீரபாண்டிய தேவர்க்கு யாண்டு' Ibid. Nos. 370 and 372.

விளங்குகின்றன. இவற்றுள் முன்னது விரிவாகவும், பின்னது சிறிய அளவிலும் அமைந்துள்ளன. இவ் விருவகையான தொடக்கங்களைக் கொண்ட கல்வெட்டுகளேயன்றி, இவ் வேந்தனது சிறப்புப் பெயர்களான சடைய வர்மன். திரிபுவன சக்கரவர்த்தி ஆகியவை குறிக்கப்பெற்ற கல்வெட்டுகளும் காணப்படுகின்றன.[1] இதன் மூலம் இவனது ஈழப் படையெழுச்சி, கொங்கு நாட்டுப் படையெழுச்சி, சோணாட்டுப் படையெழுச்சி ஆகியவை விரிவாக விளக்கப்பட்டுள்ளன. இவன் வல்லாளனை வென்றதும், சிதம்பரத்தின்கண் முடி புனைந்து கொண்டதும், இக் கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ளன.

'கொங்குகீழங் கொண்டு கொடுவடுகு கோடழித்து, கங்கையிருகரையும் காவிரியுங் கைக் கொண்டு' எனும் தொடக்கத்தினைக் கொண்ட, கல்வெட்டினைக் கொண்டு, இவன் கொங்கு நாடு, ஈழநாடு, வடுகரது மலை, கங்கைக் கரை, காவிரிக்கரை ஆகியவற்றை வென்ற செய்தியும், இவ் வேந்தன் சிதம்பரத்தின் கண் வீற்றிருந்து, பல்லவ வேந்தனும் இரண்டாம் கோப்பெருஞ் சிங்கனிடம் திறை கொண்டு, சிதம்பரத்தின்கண் வீராபிடேகமும் விசயாபிடேகமும் செய்து கொண்ட செய்தியும் நன்கு விளக்கப் பட்டுள்ளன. இவ் வேந்தன் கங்கைப் பேராற்றின் இரு கரையினையும், வென்றதாகக் குறிப்பிடப்பட்டுள்ள இச் செய்தியினை உறுதிப்படுத்த, வேறு ஆதாரங்கள், யாங்கனும் கிடைக்கப் பெறவில்லை. இருப்பினும் இவனது திராட்சாராமக் கல்வெட்டு கிடைத்துள்ளதால் இவன் கங்கைக்கரையை வென்றிருக்கலாம். இவண் கொடுவடுகும் வல்லானும், எனக் குறிக்கப் பெற்றுள்ளமை, முறையே கண்ட கோபாலனும், போசள மன்னனும், நம் வேந்தனிடம் தோல்வி கண்டதனைக் குறிப்பதாகக் கொள்ளலாம். 'வல்லானை வென்றான்' என்னும் சொல் பல்லாளனை அல்லது போசளனை வென்றான் என்பது பொருத்தமாகத் தெரிகிறது. வீர பாண்டியன் கண்ணனூர் என்னுமிடத்தில் போசளரை வென்று, சோமேச்சுரனைக் கொன்றான் என்பதனை ஈண்டு நாம் நினைவிற் கொள்ளல் வேண்டும். இதன் தொடர்பாகவே இவனும் இப் பெயரினைப் பெற்றான்.[2]

[1] எடுத்துக்காட்டாக 185 of 1895 என்னுள்ள கல்வெட்டைக் குறிப்பிடலாம்.

[2] Ins. 616 of 1929–30. சிதம்பரத்தின்கண்ணுள்ள நூற்றுக்கால் மண்டபம் மணவிற் கூத்தன் காலிங்கராயனால் அமைக்கப் பெற்றதாகும். இவன் விக்கிரம சோழனிடம் பணிபுரிந்த படைத்தலைவருள் தலையாடவனுவான். இம் மண்டபத்திலுள்ள பன்னிரண்டு தூண்கள் விக்கிரமசோழன் திருமண்டபம் என்னும் பெயரினைத் தாங்கியுள்ளது. வீரபாண்டியன் ஆங்கு முடிசூட்டிக் கொண்டதன் பிறகு இம் மண்டபம் 'வீரபாண்டியன் திருமண்டபம்' என்று பெயரிடப்பட்டது.

**திருமண்டபங்கள்**

கி. பி. 1267-ஆம் ஆண்டு இவன் வீராபிடேகமும் விசயாபி டேகமும் செய்து கொண்ட இடம், தில்லையம்பதியிலுள்ள வீர-பாண்டியன் திருமண்டபமே என்பதனை நன்கறியலாம். இம் மண்டபத்தின்கண் இவன் முடிசூட்டிக் கொண்டதன் நினைவாகவே, இது இவனது பெயரைத் தாங்கியுள்ளது. இம்மண்டபம் நூறு தூண்களைக் கொண்டுள்ள பெரிய மண்டபமாகும். தில்லைத் திருக்கோயிலில் சிவகாமக் கோட்டத்திற்குத் தென் புறமும், சிவகங்கைக்கு மேற்புறமுள்ள இந்நூற்றுக்கால் மண்டபத்தின் முகப்பில் இன்றும் 'வீரபாண்டியன் திருமண்டபம்' என்னும் பெயர் தாங்கியிருப்பதனைக் காணலாம்.

## வெற்றிகள்

**இலங்கை வெற்றி**

அடுத்து, இவ்வேந்தன் ஈழ நாட்டின்மீதுப் படையெடுத்து அந்நாட்டு வேந்தருள் ஒருவனைப் போரில் கொன்று மற்றொருவனை வேந்தாக்கியதும், கோணமலை, திரிகூடகிரி என்னும் மலைகளின் உச்சியில் இருகயல் கொண்ட பாண்டியரது கொடியினை நாட்டியதும்,[1] சோழ வேந்தனைக் காவிக்களம் என்னும் ஊரில் முறியடித்ததுமாகிய செய்திகள் 'திருமகள் வளர' என்னுந் தொடக்கத்தினைக் கொண்ட மெய்க்கீர்த்தியில் கூறப்பட்டுள்ளன. இம் மெய்க்கீர்த்தியில் 'கோணமலை' யென்பது திருகோண மலையாகும். திரிகூடமலையென்பது கண்டி நாட்டிலுள்ள முச்சிகரங்கள் கொண்ட மலையாகும்.[2]

புதிதாக அரியணையேற்றப்பட்ட ஈழ வேந்தன் வீரபாண்டியனுக்கு யானைகளைப் பரிசளித்தான். தன்னிடம் தோல்வி கண்ட ஈழ வேந்தனது படையினையும் தேர்களையும் பெருநிதியினையும் அரியணையினையும் அரச முடியினையும் கழுத்தாரத்தினையும் மற்றுமுள்ள அரச சின்னங்களையும் இவன் கைப்பற்றிக் கொண்டானென்ற விரிவான செய்திகளும் இதில் விளக்கப்பட்டுள்ளன.

இவனது பத்தாமாட்சியாண்டுக் கல்வெட்டுக்கு முன்னர் இவ்வீழப் படையெழுச்சி யாண்டும் குறிக்கப் பெறவில்லை. சுந்தர பாண்டியன் தனது ஏழாமாட்சியாண்டுக் கல்வெட்டில் தான் இலங்கை வேந்தனிடம் அளவிறந்த திறைப் பொருளும்

1 திரு. சாத்தான்குளம் அ. இராகவன் 'கோநகர் கொற்கை'
2 A.R.E. 1912. part ii, para 39.

யானைகளும் பெற்றதாகக் குறிப்பிட்டுள்ளான். எனவே, வீர பாண்டியனது இலங்கைப் படையெழுச்சி சுந்தர பாண்டியனுக்கு உதவியாக மேற்கொள்ளப்பட்டிருத்தல் வேண்டுமென்று ஊகிக்கலாம். இலங்கை வரலாற்று நூலான 'மகா வம்சம்' இச் செய்திபற்றியும், ஈழ நாட்டில் இரு வேந்தருக்குமிடையே பட்டத் தகராறு ஏற்பட்டு, அதில் ஒருவன் வீர பாண்டியனால் அரியணையினின்றிறக்கப்பட்ட செய்திபற்றியும் யாதும் குறிப்பிடவில்லை. எனவே, இதுபற்றி நாம் அறுதியிட்டு உறுதியாகக் கூறவியலாது.

### சோழர் மீது போர்

அடுத்து, வீர பாண்டியனிடம் தோல்வி கண்ட சோழ வேந்தன் யார்? என்பதும், காவிக்களம் ஒன்ற ஊர் யாண்டுளது என்பதும் தெளிவாக அறிந்து கொள்ள வியலவில்லை. அவனது சம காலத்தில் சோணாட்டில் ஆட்சி புரிந்தவன் மூன்றாம் இராசேந்திர சோழனாவான். இவன் பாண்டியனிடம் தோல்வி கண்டதாக இவனது கல்வெட்டுகளிலிருந்து அறிந்து கொள்ளக் கூடவில்லை. மாறாக இவன் பாண்டி வேந்தர் இருவரைத் தோற்கடித்து, அவரது முடியினைக் கைப்பற்றியதாகப் பறை சாற்றிக் கொள்கிறான்.[1] எனவே, இது குறித்தும் நாம் ஒன்றும் முடிந்த முடிபாகக் கூறவியலாது.

### கொங்கரை வெல்லல்

இவ் வேந்தனது கல்வெட்டுகள் சில கோயம்புத்தூர் மாவட்டத்தில் கிடைக்கப் பெறுவதால், இவன் கொங்கரை வென்ற செய்தி ஒருவாறு உறுதிப்படுகின்றது.[2]

இவ் வேந்தனது வெற்றிகளாகக் குறிக்கப் பெற்றுள்ளவை பல, சடையவர்மன் சுந்தர பாண்டியனது கல்வெட்டுகளிலும் அவனது வெற்றிகளாகக் குறிக்கப் பெற்றுள்ளன. இவற்றைச் சிறிது எண்ணிப் பார்க்குங்கால், இவை யாவும் சுந்தர பாண்டியனது ஆணைக்கிணங்க வீரபாண்டியனது தலைமையில் நடைபெற்ற, படையெழுச்சிகளாகக் கொள்ளுதல் பொருத்தமுடையதாகும். இவ்வாறு முடிமன்னனாகவிருக்கும் ஒருவனது ஆட்சிக் காலத்தில் பெறுகின்ற வெற்றிகளை, அவனுக்குக் கீழ்ப் பணி புரியும் சிற்றரசரோ, இளவரசரோ, இணையரசரோ படைத் தலைமை தாங்கிச் சென்றதால் தனது வெற்றியாகக் கூறிக் கொள்வது மரபாகும்.

1. No. 515 of 1922.
2. A.R.E. 1923, part ii, para 68 and No. 35 of 1926 from I davai.

**வேந்தனது தேவியார்**

கொல்லம் ஆண்டு 413 (கி. பி. 1238) குறிக்கப்பெற்ற கல்வெட்டொன்று நாகர்கோயில் மாவட்டம் சுசீந்திரத்தில் கிடைத்துள்ளது. இதனைக் கொண்டு வேணாட்டு மன்னனும் வீரரவிவர்மன் தனது பேராளின் துணையால் (agent) சில கட்டடங்கள் கட்டியதாக அறியலாம். இப் பேராள் வீரபாண்டியனது தேவியான சொக்கத் தாண்டாளான உலக முழுதுடையாள் என்பாரிடம் கி.பி. 1526-ல் நன்கொடையாகப் பொற்காசுகளைப் பெற்றுகொண்டதாகவும் குறிக்கப்படுகின்றது.[1] இக் கல்வெட்டின் துணை கொண்டு உலகமுழுதுடையாள்' என்பார் வீரபாண்டியனின் அரசியாவார் என்பது புலனாகின்றது.

**இறப்பு**

இவ் வேந்தனது கல்வெட்டுகள் பல புதுக்கோட்டைப் பகுதியில் கிடைக்கின்றன. இவை யாவும் இவனது இருபத்து மூன்றாமாட்சி யாண்டினதாகவும், அதற்கு முற்பட்டதாகவும் காணப்படுகின்றன. இக் கல்வெட்டுக்குப் பிந்தி வெளியிடப் பெற்றுள்ள, அதாவது இருபத்தெட்டாமாட்சி யாண்டுக் கல்வெட்டொன்று, திருநெல்வேலி மாவட்டத்தின்கண்ணுள்ள கல்லிடைக்குறிச்சியிலும் காணப்படுகிறது. இக் காரணங்களால் இவன் ஏறத்தாழ கி. பி. 1281ஆம் ஆண்டு இம் மண்ணுலக வாழ்வினை விட்டு நீங்கியிருத்தல் வேண்டுமெனக் கொள்ளலாம்.

**சமூக-பொருளாதார வாழ்வு**

அடுத்து, இவ் வேந்தனது வீரதீரச் செயல்களையன்றி, இவனது காலத்திய சமூக-பொருளாதார வாழ்வுபற்றிய பல தெளிவான செய்திகளையும் இக் காலத்தியக் கல்வெட்டுகள் குறித்துள்ளன. இதனால் அக்காலத்திய மக்கள் வாழ்க்கை முறையினையும் மன்னனது போக்கினையும் நன்கறியலாம். அவற்றினைப்பற்றி முக்கியமான ஒரு சிலவற்றை மட்டும் இங்கு நாம் காண்போம்.

அக் காலத்திய நீதி வழங்கும் முறையினை புதுக்கோட்டை நாட்டுக் கல்வெட்டொன்று குறிக்கின்றது.[2] திருநெல்வேலி மாவட்டம் குற்றாலத்தில் கிடைத்துள்ள கல்வெட்டொன்று திருக்குற்றாலம் ஊரவைக்குமிருந்த கொடுக்கல் வாங்கலினைக் குறிக்கின்றது. வடவார்க்காடு மாவட்டத்தில் கிடைத்துள்ள

[1] A.R.E. 1958-59, p. 18.
[2] No. 372 of 1906.

இரு கல்வெட்டுகள் இவ் வேந்தனது காலத்தில் விதிக்கப்பட்ட கடமை (அரசிறை) பற்றி விரித்துரைக்கின்றது.[1]

**நிலக் குத்தகை**

அடுத்து, சேரமாதேவியில் கிடைத்துள்ள கல்வெட்டுத் தொகுதியின் மூலம்[2] திருக்கோயில்களுக்கு வழங்கப்படும் நிவந்தங்களும் அறக்கட்டளைகளும் எவ்வாறு பதிவு செய்யப் பட்டு, இறையிலியாக்கப்பட்டதென்பதன் விவரத்தினை நாம் அறிந்து கொள்ள முடிகின்றது. சுந்தர பாண்டிபுரத்து மக்களது நிலத்தினை அவ்வூர்ச் சபையார் வாங்கி, அதன் ஒரு பகுதியினை ஆண்ட பிள்ளை என்பானுக்கு நிரந்தரமாகக் குத்தகைக்கு விட்டதும், அதற்கு அவனிடம் ஆண்டுதோறும் பயிர் செய்யப் பட்ட நிலம் மாவொன்றிற்கு நெல்லும் பணமுமாகப் பெற்றுக் கொண்ட குத்தகையும் கூறப்பட்டுள்ளன.[3]

**ஆலோசனைக் கூட்டம்**

இராமநாதபுரம் மாவட்டக் கல்வெட்டொன்று பழைய இடி பாட்டுக்குள்ளான கோயிலொன்றினைப் புதுப்பித்து, கற்றளி யாக்கப்பட ஒரு மாபெரும் ஆலோசனைக் கூட்டமொன்று கூட்டப்பட்டதாகவும், அதில் பதினெட்டு விஷயங்கள் (மாநிலங்கள், Provinces) கலந்து கொண்டதாகவும் குறிப்பிடு கின்றது. இதற்குப் பணம் திரட்டுவதற்காக வாணிகப் பொருள்கள்மீது அச்சுக்கு ஒரு காசு வீதம் வசூல் செய்வதென்று தீர்மானிக்கப்பட்டது. இத் தீர்மானத்திற்குத் தென்னிலங் கையைச் சேர்ந்த வலஞ்சியர், அஞ்சுவண்ணத்தார், மணிக் கிராமத்தார் போன்ற தனித்தியங்கும் வணிகப் பெருங்குழு வினரும் தமது இசைவினைத் தெரிவித்ததாக அறிகிறோம்.[4]

**நாணயம்**

பாண்டியரது ஆட்சி முறையினையும், மக்களது வாழ்க்கை முறையினையும், அறிந்து கொள்வதில் இவை பெரிதும் துணை புரிகின்றன. இவ் வேந்தனது காலத்தில் புழக்கத்திலிருந்த காசு களுள் இவன் பெயரினைக் கொண்ட 'வீர பாண்டியன் காசு' என்பதுமொன்று என்பது ஈண்டு குறிப்பிடத் தக்கதாகும்.[5]

1 Nos. 299; and 302 of 1919
2 Nos. 540 to 543 of 1911
3 A.R.E. 1918, part ii, para 48
4 A.R.E 1927 part ii, paras 46-8; E.I. Vol. IV, p.p. 293-4 and n 2-at p. 296 Venkayyah
5 No. 181 of 1907 and A.R.E. 1912, part ii, para. 89

## முதலாம் மாறவர்மன் குலசேகர பாண்டியன்

இவனும் சடையவர்மன் சுந்தரபாண்டியன், வீர பாண்டியன் ஆகியோரது சமகாலத்தவனுவான். கி. பி. 1268–ஆம் ஆண்டு இவன் பாண்டிய நாட்டின் அரியணையேறினான். இவன் பாண்டி நாட்டின் ஆட்சிப் பொறுப்பேற்ற காலை, சுந்தர பாண்டியனும் வீர பாண்டியனும் பாண்டி நாட்டின் வேந்தர்களாகவே தொடர்ந்து ஆட்சிபுரிந்தனர். எனவே, இக் காலத்தில் பாண்டிய வேந்தர் மூவர் பாண்டிய நாட்டினை ஆண்டு வந்தனர்; இது பாண்டிய நாட்டின வரலாற்றில் காணப்படுகின்ற புதுமையான முறையாகும். இம் மரபு வெளிநாட்டுப் பயணிகளின் உள்ளத்தையும் கொள்ளை கொண்டது. எனவே, தங்களது குறிப்புக்களில் இவ் விநோதமான முறைபற்றி அவர்கள் குறித்துள்ளனர். பாண்டியரது வரலாற்றில் இம் மூவராட்சி மட்டுமல்ல, ஐந்து மன்னர்கள் இணைந்து ஆண்ட, விந்தையான செய்தியும் குறிக்கப்பட்டுள்ளன. இது போன்ற ஐவராட்சியின் காரணமாக ஒருவரை மற்றொருவரிடமிருந்து, சரியாக வேறுபடுத்த முடியாத நிலையில், சில சமயங்களில் குழப்பமான நிலையும் உருவாகிறது. மாறவர்மன் விக்கிரம பாண்டியன் ஒருவனும், முதலாம் சடையவர்மன் சுந்தர பாண்டியன், இரண்டாம் சடையவர்மன் சுந்தர பாண்டியன், சடையவர்மன் விக்கிரம பாண்டியன், மாறவர்மன் குலசேகர பாண்டியன் ஆகிய ஐவரும் ஒருவருக்கொருவர், அதிகக் கால இடையீடின்றி ஆண்டு வந்தமையின் ஒவ்வொருவரது ஆட்சிபற்றியும், தெளிவாக அறிந்துகொள்ளவியலாத குழப்பநிலை உருவாகிறது. அடுத்து, மாறவர்மன் சீவல்லபன், சடையவர்மன் சீவல்லபன் (கி. பி. 1257–ல் அரியணையேறியவனும், கி. பி. 1291–ல் அரியணையேறியவனும்) ஆகியோரைப் பற்றியும் திட்டவட்டமாக யாதும் அறிந்து கொள்ளவியலவில்லை.

### வெளிநாட்டார் குறிப்பு

மார்க்கோ போலர்: (Marco-polo) கி.பி. பதின்மூன்றும் நூற்றாண்டின் இறுதியில் வெனிஸ் நகரத்தைச் சார்ந்த மார்க்கோ போலோ என்பான் சீனம் முதலிய நாடுகளைச் சுற்றிக் கொண்டு தென்னிந்தியா வந்து சேர்ந்தான். அவனும் பாண்டிய நாட்டின் பல பகுதிகளை, ஐந்து பாண்டியர் முடி புனைந்து ஆண்டு வந்ததனை வியப்பிற்குரிய நிகழ்ச்சிகளுள் ஒன்றுகவே குறிப்பிடுகின்றான். தமிழகத்தின் குதிரை வாணிகம்பற்றிக் குறிப்பிடுகின்ற அவன், பாண்டிய நாட்டினைப்பற்றியும், மிகத் தெளிவாகக் குறிப்பிடுகின்றதனைப் பின்வருமாறு காணலாம்:

'இந் நாட்டினர் குதிரை வளர்ப்பதில்லை. ஆகையால் ஆண்டு தோறும் குதிரைகளை இறக்குமதி செய்வதில் எண்ணிலாப் பெரும் பொருளைச் செலவிடுகின்றனர். கிஷ், ஹார்மூஸ், டோபிர், சோபிர், ஏடன் முதலான பட்டினங்களிலுள்ளார் பெருந்தொகை யான குதிரைகளைத் தொகுத்து, சுந்தர பாண்டியனும் அவன் தம்பிகளும் ஆள்கின்ற, நாட்டுக்கு அவைகளைக் கொணர் கின்றனர். பாண்டி வேந்தரும் ஒரு குதிரைக்கு 500 'சாகி' பொன் கொடுத்து அதை வாங்குகின்றனர். ஐந்து வேந்தர்களும் ஆளுக்கு ஆண்டுதோறும் இரண்டாயிரம் குதிரைகள் வாங்கு கின்றனர்.[1]

### வாஸப்

வெளிநாட்டுப் பயணியான அப்ருல்லா வாஸப் என்பானும் தனது நூலில் சுந்தர பாண்டியனும் அவனது சகோதரர் மூவரும் தனித்தனியாக ஆண்டுவந்ததாகக் குறிப்பிடுகிறான். பாண்டியப் பேரரசு நாலாபக்கங்களிலும் பரந்து விரிந்த காரணத் தால், இணைந்து ஆளும் அரசப் பகர ஆளுநராகவே (Co-regency), இணைந்து ஆண்ட அரசர்களாகவோ, அல்லது பலர் ஒரே சமயத்தில் அரசாளும் மரபினைப் பெற்றனர். பதின் மூன்றும் நூற்றாண்டில் பரந்துபட்ட பேரரசினையாட்சி புரிந்த பாண்டியர், சோழரைப் போன்று நாட்டின் பல பகுதிகளுக்கும் அரசப் பிரதிநிதிகளை நியமித்து, நல்லாட்சி புரிந்ததாகக் கொள்ள லாம்.[2] எனவே, பாண்டியப் பேரரசின் எல்லைகள் விரிவடைந்து கொண்டே சென்று, சுந்தர பாண்டியனது ஆட்சிக் காலத்தில் உச்ச நிலையிலிருந்ததால் ஒன்றுக்கு மேற்பட்ட மன்னர்கள் அந் நாட்டினை ஆளத் தேவைப்பட்டதாக நாம் எண்ணலாம்.

### ஆதாரங்கள்

மாறவர்மன் குலசேகர பாண்டியனும் பிற்காலப் பாண்டியப் பேரரசினையாண்டு வந்த புகழ்பூத்த வேந்தர்களுள் தலையாய வனுவான். இவனது கல்வெட்டுகள் சோணாட்டின் பல பகுதி களிலும் காணப்படுகின்றன. இவனது முப்பத்தோரும்' ஆட்சி யாண்டுக் கல்வெட்டொன்று தஞ்சை மாவட்டம் (தருமபுர ஆதி னத்தைச் சார்ந்தது) திருக்கோளிலி (திருக்குவளை) சிவன் கோயிலில் பொறிக்கப்பட்டுள்ளது. திருவரங்கம், இளையான் குடி, திருநெல்வேலி, சேரமாதேவி ஆகிய ஊர்களில் அண்மையில் கண்டுபிடிக்கப்பட்ட கல்வெட்டுகளும், இவ்வேந்தனைப்பற்றி அறிந்து கொள்ள நமக்குப் பேருதவி புரிகின்றன.

[1] Marcopolo; Vol. 11, p. 885 ff.
[2] Nilakanta Sastri, K.A. 'The Pandyan Kingdom'

**அரசியல் சூழல்**

குலசேகரப் பாண்டியன் அரியணையேறியகாலை பாண்டியப் பேரரசு புகழின் கொடுமுடியில் நின்று அண்டை அரசுகளைத் தன்னடிப் படுத்தியிருந்தது. அக்காலை சோழ அரசு அரியணையிலிருந்து இறக்கப்பட்டு, ஆளும் உரிமையினை இழந்து, பாண்டி நாட்டுடன் இணைக்கப்பட்டிருந்தது.[1] மலைநாடு, கொங்கு நாடு, தொண்டை மண்டலம் ஆகியவை முன்பே வென்றடக்கப்பட்டு பாண்டியரது மேலாண்மையினை ஏற்றுக் கொண்டிருந்தன. பாணர்களும் பாண்டியரது ஆட்சிக்குட்பட்டிருந்தனர்.

**ஈழம்**

இக் காலகட்டத்தில் ஈழநாட்டில் அமைதியின்மையும் குழப்பமும் அரசோச்சியது. அதுகாலை ஈழநாட்டு அரியணையில் அமர்ந்திருந்த நான்காம் விசயபாகு என்பான் (Vijaya Bahu, IV) ஆற்றல்மிக்க வேந்தனாகக் காணப்படவில்லை. இரண்டாம் பராக்கிரம பாகுவின் மைந்தனான இவன் ஈழநாட்டுப்படைத் தலைவனால் கொலை செய்யப்பட்டான். இக் கொடுஞ்செயலைக் கண்ட படைவீரர்கள் படைத் தலைவனுக்கெதிராகப் புரட்சிக் கொடியுயர்த்தினர். மேலும், அவர்கள் அப்படைத் தலைவனைக் கொன்றுவிட்டு, புவனைக பாகு (Bhuvanaika Bahu) என்பானை அரசனாக அமர்த்தினர். அரியணையில் அமர்ந்த இவ் வேந்தன் தனது தலைநகரத்தினைத் தம்பதேனியாவிற்கு (Dambadeniya) மாற்றிக் கொண்டான். இருந்தபோதிலும் தனது படைகளை யபகுவா என்னுமிடத்தில் நிறுத்தி வைத்து, அவனும் ஆங்கு தங்கியிருந்தான். தம்பதேனியாவைக் காட்டிலும் யபகுவா பாதுகாப்பானதொரு கோட்டையைப் பெற்றிருந்ததுடன், போர் நடவடிக்கைகளுக்கு இவ்விடமே மிகவும் பொருத்தமாக இருந்தது.

**போர்ச் செயல்கள்**

பிற்காலப் பாண்டிய மரபின் இறுதி பேரரசனாக விளங்கிய இவ் வேந்தன்,

'கொங்கிரண்டும் மலை மண்டலமும் குளமும் சோழ மண்டலமும் நடுவில் மண்டலமும் செயங்கொண்ட சோழ மண்டலமும் கொண்டருளிய ஸ்ரீகுலசேகரதேவர்' (S.I.E.I.I. No.453) என்றும்,

[1] A.R.E. 1912; part ii, para 32 and 1923, part ii, para-45; Also Krishnaswamy, S. Aiyangar op. cit, pp. 56 and 94-5

'கொங்கு ஈழங்கொண்டு கொடுவடுகு கோடமித்து தங்கை இருகரையும் காவிரியும் கைக்கொண்டும்' (A.R.E. 131 of 1907) என்றும் பாராட்டப் பெறுகின்றான்.

மேற்கூறியவற்றான் இவன் கொங்குநாடு, மலைநாடு, தெலுங்க வீமனின்குளம், சோணாடு, நடுவில் மண்டலம், தொண்டை மண்டலம், ஈழம் ஆகியவற்றினை வெற்றி கொண்ட செய்தி அறியப்படுகின்றது,[1] மேற்கூறப்பெற்ற பகுதிகளுள் பெரும் பாலானவை சுந்தரபாண்டியனால் வென்றடக்கப்பட்டதனை முன்பே கண்டோம். இவை மறுபடியும் குலசேகர பாண் டியனால் வெற்றி கொள்ளப்பட்டதாகக் குறிக்கப் பெற்றுள் ளமையின், அப் பகுதிகள் பாண்டியரது ஆட்சிக்கெதிராகக் கலகங்கள் விளைவித்திருக்க வேண்டுமென்றோ, அப்போழ்து உள் நாட்டுக் கலகங்கள் ஏற்பட்டிருத்தல் வேண்டுமென்றோ கருத தலாம். இதன் காரணமாகவே இவன் மீண்டும் கைப்பற்ற வேண்டியிருந்தது எனலாம்.

**குளம்**

எம் மண்டலமும் கொண்டருளிய மாறவர்மன் குலசேகர பாண்டியன் மைசூர் மாநிலத்திலுள்ள 'சரவணபெல்குளம்' என்னும் பகுதியையோ, தெலுங்க வீமனின் ஆட்சிப் பகுதியி லிருந்த குளம் என்னும் பகுதியையோ கைக்கொண்டான் என்ப தனைக் 'குளம்' என்னும் சொல் உணர்த்துவதாகக் கொள்ளலாம். 'குளத்திடைத் தெலுங்க வீமன்' என்ற மெய்க்கீர்த்தியைப் பார்க்கும்போது இதன் தெலுங்க வீமனின் குளத்தைத்தான் வென்றான் எனலாம். பாண்டியனின் கல்வெட்டு 'திராட்சா ராமாவில்' கிடைத்திருப்பதாலும் இக் கருத்து வலிவு பெறு கிறது. 'குளம்' என்பது ஆந்திர மாநிலத்திலுள்ள கொலேர் ஏரியாகவே (Colair lake) இருத்தல் வேண்டும். குளம் என்ப தற்குக் 'கொல்லம்' என்று கே. ஏ. என். சாஸ்திரியார் பொருள் கொள்வது பொருந்துவதாகத் தோன்றவில்லை. மலைமண்டலம் என்று குறிக்கப்பட்டதனை அடுத்து கொல்லத்தை வென்றான் எனக் கூறத் தேவையில்லை.

**சேர நாடு**

தன்னாட்சியின் தொடக்கக் காலத்திலேயே இவ் வேந்தன் திருவாங்கூர் நாட்டின்மீதுப் படையெடுத்துச் சென்று, சேர வேந்தனை வென்று, அவ் வெற்றியின் நினைவாகச் 'சேரனை

[1] சேரமாதேவியில் காணப்பெறுகின்ற இவ் வேந்தனது இருபதாமாட்சி யாண்டுக் கல்வெட்டு No. 692 of 1916.

வென்றான்' என்றும், 'கொல்லம் கொண்டான்'[1] என்றும் சிறப்புப் பெயர் பூண்டான். திருநெல்வேலியில் காணக் கிடைக்கின்ற இவ் வேந்தனது கல்வெட்டுகளும் இவன் மலை நாட்டினை மீண்டும் வென்றானென்று கூறுகின்றன.

**கொங்கு நாடு**

இவ் வேந்தன் கொங்கு நாட்டினை வென்றதாகக் கூறிக் கொண்டபோதிலும், இவனது கல்வெட்டுகள் கொங்கு நாட்டில் யாங்கனும் கிடைக்கப் பெறவில்லை. இவ் வேந்தனது சமகாலத்தவனும் அரசப் பகர ஆளுநருமான சடையவர்மனின் (கி. பி. 1276-ல் அரியணையேறியவன்) கல்வெட்டுகள் கொங்கு நாட்டில் காணப்பெறுவதாலும், பதினான்காம் நூற்றாண்டின் தொடக்க காலத்தில் பாண்டி வேந்தனொருவன் 'களுள்' (களூர்)[2] என்னும் நகரினைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்ததாக முகமதிய வரலாற்றறிஞர்கள் குறிப்பிடுவதனாலும், இவன் தனது பதினேந்தாமாட்சியாண்டில் கண்ணனூரில் தங்கியிருந்ததாகக் கூறப்படுவதாலும், ஏறத்தாழ குலசேகர பாண்டியனது ஆட்சிக்காலம் முடியும் வரை, கொங்குநாடு[3] பாண்டியரது ஆட்சிக்குட்பட்டதாகக் கொள்ளலாம். தனது 15ஆம் ஆட்சியாண்டில் இவன் விக்ரம பாண்டியனை நடுநாடு, தொண்டைநாடு பகுதிகளின் பிரதிநிதியாக நியமித்தான்.[4]

**போசளர், சோழர்**

சோணாட்டிலும் தொண்டை மண்டலத்திலும் இவனது மேலாண்மை நிலைநாட்டப்பட்டிருந்தது.

திருநெல்வேலிக் கல்வெட்டு, குலசேகர பாண்டியன் கேரளர், போசளர், சோழர் ஆகியோரை வென்று, அதன் மூலமாகக் கிடைத்த திறைப் பொருளினைக் கொண்டு, திருநெல்வேலிக் கோயிலின் திருச்சுற்றாலயத்தைக் (பிரகாரம்) கட்டினானென்று குறிப்பிடுகின்றது.[5] இதனால் இவன் போசளரையும், கேரளரையும், சோழரையும் வென்றான் எனக் கூறலாம்.

[1] இவன் தனது எட்டாமாட்சியாண்டில் சேரனை வென்றதாகக் குறிக்கப் பட்டுள்ளது. No. 126 of 1907

[2] Wassaf in Elliot and Dowson Vol, iii, p. 54

[3] No. 328 of 1923, Summarised in A.R.E. 1924, part ii, para-35

[4] A.R.E. 1927, part ii, 44

[5] No. 29 of 1927. இக்கல்வெட்டு கி. பி. 1190-ஆம் ஆண்டு அரியணையேறிய சடையவர்மன் குலசேகரனது சாதனையாக A.R.E. 1927, part ii, para 41-ல் குறிக்கப்பட்டுள்ளது. இக் காலத்தில் பாண்டியர் போசளரை வென்றதாகக் கூறுதல் பொருத்தமுடையதாகாதென்று திரு. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியார் கருதுகின்றார். எனவே, இக் கல்வெட்டு சுந்தர பாண்டியனது சமகாலத்தவனான இக் குலசேகரனையே குறிப்பதாகக் கொள்ள வேண்டும்.

பிற்காலப் பாண்டியப் பேரரசர்களுள் பெரும் புகழ்பெற்ற வீரனாகவும் வேந்தனாகவும் திகழ்ந்த இவனது வெற்றிகள் இத்துடன் நின்று விடவில்லை; இவனது வெற்றிகள் தொடர் கதையாயின. இவை இவனது புகழுக்கும் வித்தாயின. வெற்றி வீரனை இவன் ஏறத்தாழ ஐம்பதாண்டுக் காலம் பாண்டி நாட்டினை அமைதியுடன் ஆண்டு வந்தான் எனலாம். ஆனால், அது புயலுக்கு முன்னே ஏற்பட்ட அமைதியாகவே முடிந்தது.

**ஈழப் படையெழுச்சி**

அடுத்து, குலசேகர பாண்டியன் கி. பி. 1284ஆம் ஆண்டில் ஈழ நாட்டின்மீது படையெடுத்தான். பாண்டியரது படை ஈழ நாடு நோக்கிக் கப்பலில் புறப்பட்டது. பாண்டியப் படையினது தலைமை, புகழ்பூத்த அமைச்சனும், கீர்த்தி மிக்க வீரனுமான ஆரியச் சக்கரவர்த்தி என்பானிடம் ஒப்படைக்கப்பட்டது. இவனது முழுப் பெயர் 'மதிதுங்கன் தனிநின்று வென்றான் பெருமாள் என்ற செவ்வுருக்கை நாட்டினைச் சார்ந்த சக்கர வர்த்தி நல்லூரின் ஆரியச் சக்கரவர்த்தி' என்பதாகும். இப் படைத் தலைவனது அஞ்சாநெஞ்சத்தினாலும், போர்த் திறமையினாலும் ஈழப் படை தோற்கடிக்கப்பட்டு, ஈழநாடு பாண்டிய நாட்டிற்கடிமைப்பட்டது. இப் படையெழுச்சியின்போது, ஈழ நாட்டிலுள்ள சுபகிரி என்னும் நகரத்தின் கோட்டை அழிக்கப் பட்டது; விலை மதிப்பிட முடியாத செல்வங்கள் கைப்பற்றப் பட்டன.

இலங்கை நாட்டு வரலாற்று நூலான மகாவம்சமும், ஆரியச் சக்கரவர்த்தியென்னும் பாண்டியப் படைத்தலைவன் இலங்கையில் நிகழ்த்திய அழிவுபற்றியும் சுபகிரிக் கோட்டை தரைமட்டமாக்கப்பட்டதுபற்றியும், புத்ததேவரது மாண்புமிக்க பல் (tooth relic), பெருஞ்செல்வம் ஆகியன கைப்பற்றிச் செல்லப் பட்டதுபற்றியும் விரிவாகக் குறிப்பிடுகின்றது.[1] இச் சான்றுகளால், இவ் வேந்தனது இலங்கைப் படையெழுச்சி இனிது விளங்குகின்றது. அண்மைக் காலத்தில் திருவரங்கத்தில் கண்டு

[1] Mahavamsa, XC; Turmour and Wijesinha, Part ii, pp. 314–15. 'Then there arose a famine in the land (Ceylon), Then the five lase thren who governed the Pandyan kingdom sent to this island. at the head of an army, a great minister of much power who was a chief amons the Tamils known as Ariya Chaktavarthi, abeit he was not an Ariya. And when he had landed and laid wasbe the country on everyside he entered the great and noble fortress, the city of Subhagiri. And he took the venerable tooth relic and all the solid wealth that was there and returned to the Pandyan country. And there he gave the tooth relic unto to the kin'g Kulasekara who was even like unto a sum expcnding the lotus—like race of the great pandya kings!

பிடிக்கப்பட்ட, கி. பி. 1277ஆம் ஆண்டினதாகிய கல்வெட்டொன்று ஆரியச் சக்கரவர்த்தி வழங்கிய அறக்கொடைபற்றிக் குறிப்பிடுகின்றது.

### புத்ததேவனது புனிதப் பல்

இலங்கை நாட்டினின்றும் ஆரியச் சக்கரவாத்தியால் பாண்டிய நாட்டிற்குக் கொண்டு வரப்பட்ட புத்தரது மாண்பு மிக்க பல், குலசேகர பாண்டியனிடம் ஒப்படைக்கப்பட்டதாக 'மகாவம்சம்' கூறுகிறது. பின்பு பராக்கிரம பாகு என்னும் ஈழ வேந்தன் புத்த தேவரது புனிதப் பல்லை மீண்டும் பெறுவான் வேண்டி, பாண்டிய நாட்டிற்கு வந்து குலசேகர பாண்டியனைக் கொலு மண்டபத்தில் சந்தித்து, இறைஞ்சி, புத்த தேவனது புனிதப் பல்லை அளித்தருளுமாறு வேண்டிக் கொண்டனனென்றும், பாண்டியனும் அதனை அவ் வேந்தனிடம் ஒப்படைத்ததாகவும் அந்நூல் கூறுகிறது.

இவ் வேந்தனது முப்பத்தேழாமாட்சியாண்டுக் கல்வெட்டொன்று, ஆரியச் சக்கரவர்த்தி, வேந்தனிடம் ஆணையொன்றினைப் பெற்றுக் கொண்டிருந்ததாகக் குறிப்பிடுகிறது.

### மெய்க்கீர்த்தியால் அறியப்படுவன

'புவனேக வீரன்' என்னும் விருதுப் பெயரினை குலசேகர பாண்டியன் புனைந்திருந்ததாகத் தெரிகிறது. இவ் வேந்தனது மெய்க்கீர்த்தி 'தேர்போல்' என்னும் தொடக்கத்தினைக் கொண்டு உள்ளது. இவனது இம் மெய்க்கீர்த்தி அழகான செய்யுளால் யாக்கப் பெற்றுள்ளது. குலசேகர பாண்டியனை வெகுவாகப் புகழ்ந்து கூறும் இம் மெய்க்கீர்த்தியினைக் கொண்டு சோழரது புலி, காட்டிற்கு விரட்டப்பட்டதாகவும், நாட்டு மக்கள் சமயக் காழ்ப்பின்றி மகிழ்வுடன் வாழ்ந்ததாகவும், பிறநாட்டு வேந்தர் இம் மன்னனுக்கு முறையாகத் திறை செலுத்தியதாகவும் அறிய முடிகின்றது. இவனைப்பற்றிய வேறு வரலாற்று முக்கியத்துவம் மிக்க செய்திகள் ஒன்றும் குறிக்கப்படவில்லை.

### அரண்மனையும் அரியணையும்

சயங்கொண்ட சோழ மண்டலம் இவனது ஆட்சிக்குட்பட்டிருந்தது. இவனது சிம்மாசனம் 'காலிங்க ராயன்' எனும் பெயரால் அழைக்கப்பட்டது. இச் சிம்மாசனம் சயங்கொண்ட சோழபுரத்தில் கண்ணுள்ள அரண்மனையிலிருந்தது. இவ்

வேந்தன் உறையூர்க் கூற்றத்திலுள்ள வீரதாவளம்(Viradavalam) என்னும் அரண்மனையின்கண்ணுள்ள கச்சிக்கு வாசன் (Kachchikku-Vasan) என்னும் தனது அரியணையின்கண் அமர்ந்திருந்தானென்று இவனது முப்பத்து மூன்றாமாட்சியாண்டுக் கல்வெட்டொன்று கூறுகிறது. இவ் வரண்மனை 'உய்யக் கொண்டான் திருமலை' என்றும் அழைக்கப் பெறுகிறது.[1] உய்யக்கொண்டான் - திருமலை திருச்சியிலிருந்து மேற்கே ஐந்து கல் தொலைவில் உள்ளது. இவற்றால் குலசேகரனது ஆட்சிக் காலத்தில் சோழ அரச குலம் தனது அரியணையையும் அதிகாரத்தையும் இழந்திருந்ததென்பதனையும், அவர்களது தலைநகரமும், அரண்மனைகளும் பிற நகரங்களும், பாண்டி வேந்தர்களது இருப்பிடங்களாக மாற்றப்பட்டன என்பதும் தெளிவாகிறது. எனவே, புதிததாக வெல்லப்பட்ட சோணாடு மாறவர்மன் குலசேகர பாண்டியனது பொறுப்பில் விடப்பட்டிருந்ததெனவும் கூறலாம்.

**வாணாதிராயர்**

இளையான்குடியின்கண்ணுள்ள வேணுகோபாலர் ஆலயத்தில் காணப்படுகின்ற கல்வெட்டொன்று, 'வாண திராயர் கலிங்கராயன்' என்னும் தலைவனைப்பற்றிக் குறிப்பிடுகின்றது. இவன் பல்வேறு கோயில்களைக் கட்டியதுடன், தனது தலைவனான குலசேகர பாண்டியனது நினைவாகவும், அவ் வேந்தனது மகனான வீரபாண்டியனது நினைவாகவும் 'அக்ரகாரங்களும்' நிறுவியிருக்கின்றான்.[2] இத் தலைவன் ஒரு பாணனாக இருத்தல் வேண்டும்.

வாணாதராயர் என்னும் தலைவர்கள் பிற்காலத்தில் தமிழக அரசியலில் புகழ் பெற்றனர். இவர்களுள் பலர் 'மஹாபலி வாணாதராயர்கள்' என்னும் பெயரால் புகழ்பெற்று அழகர் கோயில், சீவில்லிபுத்தூர் ஆகிய இடங்களில் காணப்படுகின்ற கல்வெட்டுகளில் குறிக்கப் பெறுகின்றனர். குலசேகர பாண்டியனது கல்வெட்டுகளில் குறிக்கப்பட்டுள்ள குலசேகர மாவலி வாணாதரையன் என்பானும் இவ்வினத்தைச் சார்ந்தவனாவான். கேரள சிங்க வளநாட்டின் (இராமநாதபுரம் மாவட்டம்) அதிகாரியாயிருந்த 'வாணாதராயர்' என்பான் சடையவர்மன் சுந்தர பாண்டியனது ஆட்சிக் காலத்திலிருந்து குலசேகர பாண்டியனது இருபத்து நான்காமாட்சியாண்டு வரை பதவியிலிருந்ததாகத் தெரிகிறது.

[1] *242* of *1941–42*; A.R.E. part II, p. *248*.
[2] A. R. E. *1949–50*.

வீரபாண்டியனது கல்வெட்டுகளிலும் இக் குறுநில மன்னர்கள் குறிக்கப் பெறுகின்றனர். வாணாதிராயன், மாவலி வாணாதிராயன் எனக் குறிக்கப் பெறுகின்ற குறுநில மன்னர்களான இவர்கள் ஆரம்ப காலத்தில் பாண்டிய நாட்டின் அரசியல் துறை அதிகாரிகளாகப் பல பகுதிகளில் பணிபுரிந்து, பின்னர் பாண்டியர் வலி குன்றியவுடன், குறுநில மன்னர்களாகத் தங்களை உயர்த்திக் கொண்டனரென்று எண்ணத் தோன்றுகிறது.

## ஆட்சியிலடங்கிய அரசுகள்

இவ் வேந்தனது கல்வெட்டுகள் தொண்டை நாடு, நடுநாடு, சோணாடு ஆகியவற்றின் பல ஊர்களில் காணப்படுதலின், இவை யனைத்தும் இவனது ஆட்சிக்குட்பட்டிருந்ததெனக் கொள்ள லாம். இவனுக்கு முன்பு ஆட்சி புரிந்த முதலாம் சடையவர்மன் சுந்தர பாண்டியனது ஆட்சியில் அடங்கியிருந்த அரசு களனைத்தும், ஏறத்தாழ இவ் வேந்தனது ஆட்சிக் காலத்திலும் தொடர்ந்து பாண்டியப் பேரரசிலடங்கியிருந்ததாகவும் கொள்ள லாம். இதுபோன்ற பல மண்டலங்களையும் உள்ளடக்கிப் பெரு நாட்டின் மன்னனாகப் ஆட்சிப் பொறுப்பேற்றிருந்த காரணத்தால்தான் இவனும் சுந்தர பாண்டியனைப் போல் 'எம் மண்டலமுங் கொண்டருளிய' என்னும் விருதுப் பெயரினை ஏற்றுக் கொண்டான். இவ்வாறு இப் பட்டத்தினை இவன் ஏற்றுக் கொண்டமை பொருத்தமுடையதாகவும் தோன்று கிறது.

## அரசியல் அறிஞன்

குலசேகர பாண்டியன் அரசியல் திறனும் தேர்ச்சியும் பெற்றிருந்த காரணத்தால் தனது பரந்துபட்ட பேரரசின் பல பகுதிகளைத் திறமையுடன் நிர்வகித்து வர, ஆங்கு அமைதியை நிலைநாட்டத் தனது தம்பியரை அரசப் பிரதிநிதிகளாக அமர்த் தினன்; நல்லாட்சியை நிறுவினன். இவ் வேந்தனது ஆட்சிக் காலத்தில் சடையவர்மன் சுந்தர பாண்டியன், மாறவர்மன் விக்கிரம பாண்டியன், மாறவர்மன் வீரபாண்டியன் ஆகியோர் அரசப் பிரதிநிதிகளாக அமர்த்தப்பட்டனர். இவர்களைப்பற்றிய விவரங்கள் நமக்குத் தெளிவாகத் தெரியவில்லையாயினும், அவர் களால் வெளியிடப்பட்டு ஆங்காங்குக் காணப்பெறும் கல்வெட்டு களைக் கொண்டு சில செய்திகளை மட்டும் நாம் தொகுக்க முடி கின்றது.

## வெளிநாட்டுறவு

**சீன நாட்டுடன்**

நீண்ட நெடுங்காலமாகவே சீனாவிற்கும் தமிழகத்திற்கும், கலாசார உறவுகள் நிலவி வந்தன. இவ்விரு நாடுகளுக்கு மிடையேயான வாணிகமும் பல்கிப் பெருகியிருந்தது. குறிப்பாக அதிலும் சிறப்பாக பேராதிக்கச் சோழர்களின் ஆட்சிக் காலத்தில், தமிழகமும் சீனநாடும் நெருங்கிய கலாசார உறவினைக் கொண்டிருந்தது. முதலாம் இராசராச சோழன், முதலாம் இராசேந்திர சோழன்[1], முதலாம் குலோத்துங்க சோழன் முதலான வேந்தர்கள் சீன நாட்டிற்குத் தூதுக்குழுவினையும் அனுப்பி வைத்தனர்; தமது உறவினைப் பெருக்கினர்.

**தூதுக்குழு**

சோழரது வீழ்ச்சிக்குப் பின்னும் தமிழக சீன உறவு நீடித்தது. பாண்டிய வேந்தர்கள் சீன நாட்டுடன் கலாசார உறவும், வாணிக உறவும் கொண்டிருந்தனர். முதலாம் மாறவர்மன் குலசேகர பாண்டியன் கி.பி. 2280ஆம் ஆண்டு ஜமாலுதீன் (Jamaluddin) என்பானைச் சீன நாட்டிற்குத் தூது அனுப்பினான்[2]. தனது பகைவர்களை வெல்லுதற் பொருட்டு சீன வேந்தனின் உதவியை நாடிய பாண்டி வேந்தன், இத் தூதுவனிடம் விலையுயர்ந்த பொருள்களைச் சீன வேந்தனுக்குத் திறைப் பொருளாக அனுப்பினான்.

**சீனத் தூதுவன்**

பாண்டிய வேந்தனால் அனுப்பப்பட்ட விலை மதிப்பிட முடியாத பரிசில் பொருள்களைப் பெற்றுக் கொண்ட சீனவேந்தன் எல்லையற்ற மகிழ்ச்சி கொண்டான். தனது மேலாண்மையினைப் பாண்டிய நாட்டில் நிறுவ வேண்டுமென்று ஆவலுடன் காத்திருந்த சீன வேந்தனுக்கு, பழம் நழுவிப் பாலில் விழுந்தது போன்ற மகிழ்ச்சிக்குரிய செய்தியாகவே இது இருந்தது. மகிழ்ச்சியின் எல்லையிலே நின்ற சீன வேந்தனும் யாங் திங் பீ என்னும் பெயர் கொண்ட தனது தூதுவனை மாபாருக்கு அனுப்பி வைத்தான்.[3] சீனத் தூதுவன் பாண்டி வேந்தனால் மகிழ்ச்சியுடன் வரவேற்கப்பட்டான். அத் தூதுவனும் தென்னிந்தியாவில் சில காலம் தங்கியிருந்தான்; தென்னாட்டுப் பகுதிகளைச் சுற்றிப் பார்ப்பதில் பேரின்பம் கண்டான். பின்பு அவன் கி. பி. 1282ஆம் ஆண்டில் சீனாவிற்குத் திரும்பினான்.

[1] இராசசேகர தங்கமணி, ம. 'முதலாம் இராசேந்திர சோழன்' பக். 174
[2] Mahalingam, T.V. 'South Indian Polity' p. 307
[3] Ibid.

**பாண்டி வேந்தனனுப்பிய பரிசுப் பொருள்கள்**

அடுத்து, மாபார் மன்னன் கி. பி. 1283ஆம் ஆண்டில் ஒரு தூதுக்குழுவினையும், கி.பி. 1284ஆம் ஆண்டில் மற்றொரு தூதுக் குழுவினையும்[1] சீனாவிற்கு அனுப்பிவைத்தான். சீன நாடு சென்று, அந்நாட்டு மன்னனைச் சந்தித்த மாபார் தூதர்கள் தாங்கள் கொண்டு சென்ற விலையுயர்ந்த கத்தும் கடலில் பூத்த வெண்முத்துக்கள், கிடைத்தற்கரிய அணிகலன்கள், மெல்லிய பட்டுத்துணிகள் ஆகியவை கொண்ட வெகுமதிப் பொருள்களை அவனுக்களித்தனர்.

**சீன வேந்தனனுப்பிய இரண்டாவது தூதுக்குழு**

இச் செயலால் பெரிதும் மகிழ்ந்த சீனவேந்தன் கி. பி. 1285ஆம் ஆண்டு மற்றுமொரு தூதுக்குழுவினை மாபாருக்கு அனுப்பிவைத்தான். இதன் தொடர்ச்சியாக மாபார், மங்களூர், கிராங்கனூர் ஆகிய தென்னாட்டு அரசுகளும், தமது தூதுவரை சீனப் பேரரசின் அரசவைக்கு அனுப்பின.[2] இவ்வாறு குல சேகர பாண்டியனது காலத்தில் பாண்டிய நாட்டிற்கும் சீன நாட்டிற்குமிடையே கலாசார உறவுகள் வளர்ந்தன. சீன நாட்டுடன் நட்புறவு கொண்ட குலசேகரன் தெளிந்த அரசிய லறிஞன் என்பதனை இதனாலறியலாம். சீனாவிற்கும் தென்னிந்தி யாவிற்குமிடையே பண்பாட்டுத் தொடர்பு இருந்ததென்பதனை இவர்கள் தூதுவர் பரிமாற்றம் செய்து கொண்டதாலறியலாம்.[3]

## சடையவர்மன் வீரபாண்டியனும் இரண்டாம் சடையவர்மன் சுந்தர பாண்டியனும்

**உறவு முறை**

குலசேகர பாண்டியன், சடையவர்மன் வீர பாண்டியன் (கி. பி. 1270–71ல் ஆட்சிக்கு வந்தான்) இரண்டாம் சடையவர்மன் சுந்தர பாண்டியன் (கி. பி. 1276-ல் ஆட்சிக்கு வந்தவன்) ஆகிய மூவரும் சம காலத்தில் பாண்டி நாட்டினை ஆண்டனர். இவர் களது உறவுமுறை இத்துணை நாட்களாக அறியப்படாத புதி ராகவே இருந்து வந்தது. இப்புதிரானது நல்ல வேளையாக அண்மையில் கிடைக்கப்பெற்ற, சில கல்வெட்டுகளால் தீர்க்கப்

[1] I bid.
[2] I bid.
[3] 'Missions were sent from South India in 1288, 1289, and 1290. while return missions were received from china in 1290, 1291, 1296 and 1297' I bid.

பட்டது. அவ்விருவரும் குலசேகர பாண்டியனது புதல்வர்களென்பது இரு கல்வெட்டுகளால் உறுதிசெய்யப்படுகிறது.[1]

**வைணவத் தொடர்பு**

இவ்விரண்டனுள் ஒரு கல்வெட்டு குலசேகர பாண்டியனது ஈழ நாட்டுப் படையெழுச்சியிலும், கொங்கு நாட்டுப் படையெழுச்சியிலும் வீர பாண்டியன் பெரும் பங்கு கொண்டதனை விளக்குகின்றது. திருவைகுண்டத்தில் (Sri Vaikundam) காணக் கிடைக்கும் இரு கல்வெட்டுகளால் குலசேகர பாண்டியனும், சுந்தர பாண்டியனும் வீரபாண்டியனும் ஒரே காலத்தினரென்பது உறுதியாகவும், அறுதியாகவும் தெரிகிறது. இக் கல்வெட்டுகளிலிருந்து தேவபிரான் தாதர் (Tevapiran Tadar) என்னும் வைணவ சமயத்தலைவன் இம் மூன்று வேந்தர்களையும், வெவ்வேறிடங்களில் வெவ்வேறு சமயங்களில், சந்தித்த செய்தி கூறப்பட்டுள்ளது. இவ் வேந்தர்களிடம் நன்கொடை பெறும் பொருட்டு இவன் அவர்களைச் சந்தித்தான்.[2] இவர்களை அவ் வைணவத் தலைவன் எப்பொழுது சந்தித்தனன் என்பது பற்றியும் கல்வெட்டுச் செய்தி கூறுவதனை நாம் காண்போம்.

குலசேகர பாண்டியன் தனது முப்பத்தெட்டாமாட்சியாண்டில் கங்கைகொண்ட சோழபுரத்திலுள்ள அரண்மனையின்கண் தங்கியிருந்தபோது, தேவபிரான் தாதர் அவனைச் சந்தித்தான். இரண்டாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் தனது இரண்டாமாட்சியாண்டில், உறையூர்க் கூற்றத்திலுள்ள வீரதாவளம் என்னும் அரண்மனையின்கண் அமர்ந்திருந்த காலை, வைணவத் தலைவன் அவனைச் சந்தித்து, கொடையளிக்க வேண்டிக் கொண்டான். தேவபிரான் தாதர் வீரபாண்டியனை அவனது இரண்டாமாட்சியாண்டில் கண்டியூர் என்னுமிடத்தில் சந்தித்திருக்கிறான். இச் செய்தியினை ஆதாரமாகக் கொண்டு சுந்தரபாண்டியனும், வீரபாண்டியனும் குலசேகர பாண்டியனின் புதல்வர்களென்றும், அவர்கள் இவனது ஆட்சிக் காலத்தின் பிற்பகுதியில் தந்தையுடன் பாண்டிய நாட்டு ஆட்சியுரிமையினைப் பெற்றிருந்தனரென்பதும் தெளிவாகத் தெரிகிறது.

**ஆட்சிக் காலம்**

இரண்டாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் கி.பி. 1276-ஆம் ஆண்டில் ஆட்சிக்கு வந்தான்.[3] இதுகாறும் நமக்குக்

[1] A.R.E. 1949-50.
[2] Ibid. 1960-61, p. 23
[3] Epigrahpia India Vol. ix, pp. 228-9 and E.I. Vol. xi pp. 136 and 259-61; also E.I. Vol. x, pp. 143-44

கிடைத்துள்ள கல்வெட்டுகளுள் இவ் வேந்தனது பதினேழா மாட்சியாண்டுக் கல்வெட்டே இவனது கடைசியாண்டுக் கல் வெட்டாகும். இதனை ஆதாரமாகக் கொண்டு இவனது ஆட்சி ஏறத்தாழ பதினேழு ஆண்டு காலம் நீடித்ததாகக் கொள்ள லாம்.[1] இவனது ஆட்சிக் காலம் கி.பி. 1292-93-ல் முடிவுற்றது.

**சைவ சமய மறுமலர்ச்சி**

சுந்தர பாண்டியனது கல்வெட்டுகள் தஞ்சாவூர், தென்னார்க்காடு, செங்கல்பட்டு மாவட்டங்களில் மட்டுமின்றி கோயம்புத்தூர் மாவட்டங்களிலும், கடப்பை மாவட்டத்திலும் கிடைக்கப்பெறுகின்றன. தஞ்சையில் கிடைத்துள்ள இவனது கல்வெட்டின் துணைகொண்டு இவ் வேந்தனது ஆட்சிக்காலத்தில் சைவ மடமொன்று வித்யாசிவபண்டிதரால் நிறுவப்பட்ட செய்தி அறியப்படுகின்றது. இதனை நாம் நுண்ணிதின் ஆய்ந்து பார்க்குங்கால் இவ் வேந்தனது ஆட்சிக் காலத்தில் சைவ சமய மறுமலர்ச்சி தமிழகத்தின்கண் பரவிக் கொண்டிருந்ததனை அறிந்து கொள்ளலாம். தமிழக வரலாற்றில் கி. பி. பதின் மூன்றாம் நூற்றாண்டு சைவ சமய மறுமலர்ச்சியினைக் கண்டதால் மக்கள் வாழ்வினில் புதியதொரு மாற்றத்தினைக் காணமுடிகிறது. சைவப் பெரியார்கள் ஆங்காங்கு மக்களிடையே சைவ சமயக் கருத்துக்களைப் பரப்பினர். மெய்கண்டாரது அயரா உழைப்பின் பயனாகச் சைவ சித்தாந்தக் கொள்கை உருவாக்கப்பட்டது.[2]

வெனிஸ் நகரப் பயணியான மார்க்கோபோலோ இவ் வேந்தனது பெயரினை 'சௌந்தர் பாண்டி தேவர்' (Soundar Bandi Devar) என்று தமது குறிப்புகளில் குறித்துள்ளான். தமிழ்நாட்டில் பயணம் செய்த முகமதியப் பயணியான வாசப் (Wassaf) சுந்தர பாண்டி என்னும் தேவர் ஹிஜ்ரா 692-ல் இறந்துபட்டதாகக் குறிப்பிடுகின்றார், இவ் வேந்தனைப்பற்றிய செய்திகளைப் பாண்டிய நாட்டில் கிடைக்கின்ற கல்வெட்டுகளைக் கொண்டு மட்டுமின்றி[3] மார்க்கோபோலோ, 'வாசப்' போன்ற அன்னிய நாட்டுப் பயணிகளது குறிப்புகளாலும் நன்கறிந்து கொள்ளலாம்.

1 No. 594 of 1907.
2 A.R.E. 1927, Part ii, para 44.
3 I.A. Vol. Xliv-Sewell: Note under Jatavarman Sundara II at 66 of the list of Pudukkottai Inscriptions and Epheneries (Vol. I, Part ii, p. 101)

## மாறவர்மன் விக்கிரம பாண்டியன்
## (கி. பி. 1283-1296)

இவன் குலசேகர பாண்டியனது தம்பியும் சமகாலத்தவனு மாவான்.[1] குலசேகர பாண்டியனது இறுதிக் காலத்தில் இவனும் பாண்டிய நாட்டாட்சியினைக் கவனித்து வந்தானென் பதனை நாம் முன்பே கண்டோம். திருவெண்ணெய் நல்லூரி லுள்ள கல்வெட்டொன்று இச் செய்தியினை நமக்கு அறிவிக் கின்றது.[2] விக்ரம பாண்டியன் தைத்திங்கள் அத்தநாளில் (Hasta Star) பிறந்தவனென்பது கல்வெட்டுச் செய்தியால் உறுதிப்படுகிறது.[3] விக்ரம பாண்டியனது தேவியார் உலக முழுதுடையாளாகும். இவ் வேந்தன் உரோகிணி நாளில் முடி புனைந்து கொண்டான். இதனை இவனது முடிசூடிய ரோகிணி நாளில், 'விக்ரம பாண்டியன் சந்தி' என்னும் விழாவொன்று நடைபெற்று வந்ததாலறியலாம்.[4] இவ் வேந்தனது கல் வெட்டுகள் செங்கற்பட்டு, தென்னார்க்காடு, சேலம்-முதலான மாவட்டங்களில் கிடைத்துள்ளன. அச்சிறுப்பாக்கம், சிதம் பரம், திருப்புட்குழி, திருமாணிகுழி, திருக்கோவலூர் ஆகிய வூர்களில் காணப்பெறும்[5] கல்வெட்டுகளும் இவ் வேந்தனது ஆட்சிக் காலத்தைச் சேர்ந்ததாகக் கொள்வர் அறிஞர்.[6] சேலம் மாவட்டம் இராசிபுரத்திலுள்ள கைலாசநாதர் கோயில் குத்துக் கல்லில் இவ் வேந்தனது கல்வெட்டொன்று காணப்படுகிறது. அதில் 'விக்கிரம பாண்டியத் தொண்டைமான்'[7] குறிக்கப் பெறு கிறான்.

மேற்கூறப்பட்ட கல்வெட்டுகளை ஆய்ந்து பார்க்குங்கால் இவன் சில ஆண்டுகள் தொண்டை மண்டலத்திலும், நடு நாட்

[1] விக்கிரம பாண்டியனின் கல்வெட்டொன்று மாறவர்மன் குலசேகர பாண் டியனை 'அண்ணழ்வார்' என்று சுட்டுகிறது. (A. R. E. 462 of 1921) இவனது கல்வெட்டுகள் தொண்டை நாட்டிலும் நடுநாட்டிலும் கிடைத்துள்ளன.

[2] Ins. 462 of 1921.

[3] இவ் வேந்தன் தென்னார்க்காடு மாவட்டம் திருநறுங்கொண்டையிலுள்ள நாப்பத்தொண்ணாயிரப் பெரும்பள்ளியென்னும் சமணப் பள்ளியில் தனது பிறந்த நாளாம் தைத்திங்கள் அத்தநாளில் (Hasta) 'இராசாக்கள் நாயன் திருவிழா' நடை பெறுவதற்கு இறையிலி நிலம் அளித்துள்ளான். இச் செய்தியினைக் கொண்டு இவனது பிறந்தநாள் அறியப்படுகின்றது.

(S.I.I. Vol. VII, No. 1014).

திருவேந்திபுரத்திலுள்ள கோயிலில் 'இராசாக்கள் நாயன் சந்தி' என்னும் விழா வைகாசித் திங்கள் அத்தநாளில் கொண்டாடப்பட்டதாகக் குறிப்பிடப்பட் டுள்ளது. இந்நாள் அவனது பிறந்தநாளைக் குறிப்பிடுகின்றதா என்பது ஐயப் பாட்டிற்குரியதாக உள்ளது.

[4] A.R.E. 1955-56 p. 7;

[5] S.I.I. Vol. VII. Nos. 459, 55. 793 and 128.

[6] சதாசிவ பண்டாரத்தார், தி.வை. 'பாண்டியர் வரலாறு' பக். 189.

டிலும் கொங்கு நாட்டின் கிழக்குப் பகுதியிலும் அரசப் பிரதிநிதியாக அமர்த்தப் பெற்றிருந்தான் என்று தெரிய வருகிறது. பாண்டிய நாடு முஸ்லிம் வசமானபோது, இவன் தனது ஆட்சிப் பகுதியினைக் கொங்கு நாட்டில் காவிரிக்கரை வரையில் விரிவு படுத்தியதாகத் தெரிகிறது.

இராசிபுரம் கல்வெட்டில் இவன் 'பாண்டியத் தொண்டைமான்' என்று குறிக்கப் பெற்றுள்ளதனைக் கொண்டு 'தொண்டை நாட்டில் அமர்த்தப் பெற்ற பாண்டியன்' இவன் என்பது புலனாகும். முதலாம் இராசேந்திரனது ஆட்சிக் காலத்தில் பாண்டிய நாட்டிற்கு அனுப்பப்பட்ட சோழ அரசப் பிரதிநிதிகள் 'சோழ பாண்டியர்' என்று அழைக்கப் பெற்றதனைப் பின்பற்றியே பாண்டியர் தமது தொண்டை நாட்டுப் அரசப் பிரதிநிதிகளுக்குப் 'பாண்டியர் தொண்டைமான்' எனப் பெயர் இட்டனர் எனத் தெரிகிறது. சில கல்வெட்டுகளில் தொண்டை நாட்டுப் பிரதிநிதி தொண்டைமானார் என்றும் தொண்டை மான்[8] எனவும் அழைக்கப் பெறுகிறான் பிற்காலப் பாண்டியப் பேரரசு தமிழகத்தின் பெரும்பகுதிகளில் விரிவடைந்திருந்ததன் விளைவாகவே, பாண்டிய வேந்தர் பல பகுதிகளுக்கும் தமது அரசப் பிரதிநிதிகளை அனுப்பி, மக்களின் நலனைக் கவனித்து வந்தனர் என்பதனை அறியலாம்

அரசப் பிரதிநிதியாகப் பணிபுரிந்து வந்த விக்கிரம பாண்டியன், குலசேகர பாண்டியனுக்குப் பல வகையில் உதவி புரிந்தான். குலசேகர பாண்டியனது ஆட்சிக் காலத்தில் நடைபெற்ற பல போர்களில் இவன் படைத்தலைமையேற்றுப் போர் புரிந்துள்ளான் என்று கருதப்படுகின்றது.

---

[7] 'ஸ்வஸ்தி ஸ்ரீ வி
க்ரம பாண்டிய
த் தொண்டை
மான் ஓலை இரா
சி புரத்து உடை
யார் ஸ்ரீ கயில
ரய முடைய ந
ரய நார் கோயி
வில் தா நத்தா
ற்கு ..................
.........................
........ ...............
இவை தி
ருமலை கண்
டன் எழுத்து'
புலவர் செ. இராசு அவர்கள் படியெடுத்தது.

**சிறப்புப் பெயர்கள்**

பாண்டிய நாட்டின் அதிகாரத்தை நாடெங்கிலும் பரப்ப முயற்சிகள் மேற்கொண்ட விக்கிரம பாண்டியனுக்குப் 'புவனேக வீரன்'[9] என்னும் சிறப்புப் பெயர் இருந்ததாக அறிகிறோம். 'திருநீலகண்டன்' என்னும் விருதுப் பெயரினையும் இவன் கொண்டிருந்தான் என்பதனை இராசிபுரக் கல்வெட்டால் ஊகிக் கலாம்.[10]

இவனது பேராற்றலையும், வெற்றிச் சிறப்பினையும், தில்லையம்பதியின்கண்ணுள்ள கோயிலில் பொறிக்கப்பட்டுள்ள[11] பாவடிவிலான கல்வெட்டு சிறப்பித்துப் பேசுகின்றது. 'இராசாக்கள் நாயகன்' என்னும் சிறப்புப் பெயரும் இவனுக்கு இருந்தது என்பதனை எலவானாசூர், மங்களாதேவி கோட்டம் முதலான கல்வெட்டுகளாலறியலாம்.

இவ் வேந்தனது கல்வெட்டுகளில் 'திருமலர் சயமகள்'[12] என்னும் தொடகத்தினையும் 'திருமலர் மாது' என்னும் தொடக்

---

8 'நம்மகைவர்கள் தந்த அச்சு அரநூறும் தொண்டை மானருக்குக் காரிய வசத்துக்கு தந்த அச்சுநூறாக அச்சு எழுநூறும் நம் மோலைப்படி பெற்றோர் களுக்குக் குடுக்கையில்—திரிபுவன தேவர்க்கு யாண்டு மூன்றாவது நாற்பத்து இவை தொண்டைமான் எழுத்து (S. I. T. I. 291)

ஸ்வஸ்தி ஸ்ரீ எம்மண்டலமும் கொண்
டருளிய ஸ்ரீ குலசேகர தேவர்க்கு
யாண்டு 29 ஆவது ஸ்ரீ பூரணகிரி
ஆளுடைய நா
ச்சியார்க்குத் திருநீல கண்டன் இராசாக்க
ளாயகனான தொண்டைமானேன் இந்
நாச்சியார்க்குத் தேவதான மாக அமு
துபடிக்கும் பல நிமந்தத்துக்கும் இட்ட நிலத்
துக்கு எல்லையாவது வட எல்லை நேரிட்
டயாற்றுக்குத் தெற்கும் ...............................

...........................................................................

குடுத்தேன் திருநீலகண்
டன் இராசாக்களாயனான தொண்டை மானேன்
இப்படிக்கு தொண்டைமான் எழுத்து
அருளிச் செயல்

A. R. No. 284 of 1966.

172 of 1920, 355 of 1914 எண் கொண்ட கல்வெட்டுகளிலும் தொண்டைமானார் குறிக்கப் பெறுகிறார்,

மற்றொரு கல்வெட்டில் நாட்டாசாரியன் என்னும் அதிகாரி ஒருவனும், தொண்டைமானும் குறிக்கப் பெறுகின்றனர்.

A. R. No. 282 of 1966.

9 S.I.I. Vol. IV, No. 228

'எந்து மருவி யிரவி புரவியின் முன்
பூந்துவலை வீசும் பொதியிலே—காந்து சின
வேலை...லைவென்ற விக்கிரம பாண்டியன் மெய்ப்
பூணாரம் பூண்டான் பொருப்பு.'

கத்தினையும் கொண்ட இரண்டு மெய்க்கீர்த்திகள் காணப்படு கின்றன. இவன் புவனேக வீரன்[13], கொற்கைக் காவலன், ராஜாக்கள் நாயன் போன்ற பட்டங்களைப் புனைந்துகொண்டான். ராஜாக்கள் நாயன் என்னும் தனது சிறப்பு பெயரில் 'ராஜாக்கள் நாயன் சந்தி' என்னும் விழா வொன்று இவன் காலத்தில் சிறப் பாகக் கொண்டாடப் படுவதற்கு இவன் தகுந்த ஏற்பாடுகளைச் செய்தான். இவ் விழா ஆண்டுதோறும் திருவேந்திபுரம் கோயிலில் வைகாசித் திங்கள் அத்தநாளில் சிறப்பாக நடை பெற்றது.

விக்கிரம பாண்டியன், சிவன் கோயில்களிலும் அமண்பள்ளி களிலும் திருமால் கோட்டங்களிலும் 'இராசாக்கள் நாயன்' என்னும் பெயரால் நாள் வழிபாடும் திருவிழாவும் நடைபெறு வதற்குப் பலவிடங்களிலும் இறையிலி நிலங்கள் அளித்திருக் கின்றான்.[14] இதனால் 'இராசாக்கள் நாயன்' என்ற சிறப்புப் பெயரினை விக்கிரம பாண்டியன் அந்நாளில் பூண்டிருந்த னென்பது விளங்குகின்றது.[15] இவன் புறச் சமயத்தினரை வெறுக்காது, பெரிதும் மதித்து, ஆதரித்து வந்தான் என்பது தெளிவாகிறது. சமயப் பொறையுணர்வுடன் ஆட்சி நடத்திய இவனது காலத்தில் மக்கள் அமைதியுடன் வாழ்ந்தனரென லாம்.

**சமஸ்த புவனைக வீரர்**

இவ் வேந்தனது சில கல்வெட்டுகள் 'சமஸ்த புவனைகவீரா (Samasta-Bhuwanaikavira) என்று சமஸ்கிருத மொழியில்

---

'புயலுந் தருவும் பொருகைப் புவனேக வீரபுனல்
வயலுந் தரளந் தருகொற்கைக் காவல வாரணப் போர்
முயலுங் கணபதி மொய்தசெஞ் சோதி முகத் திரண்டு
கயலுண் டெனுமது வோமுனி வாறிய காரணமே'
(சிதம்பரச்சாசனங்கள்–செந்தமிழ்–தொகுதி 4. பக். 493-94)

10 'திருநீலகண்டன் இராசாக்களுபனை தொண்டைமானேன்' எனவரும் இராசிபுரம் கல்வெட்டு.

11 சிதம்பரச் சாசனங்கள்–செந்தமிழ்–தொகுதி 4. பக், 493–94

12 Ins. 462 of 1921.

13 S.I.I. Vol. IV, No. 228

14 S.I.I. Vol. VII No. 795, 916, 1013 and 1028.

15 மூன்றும் குலோத்துங்க சோழன் இராசாக்களையன் என்னுஞ் சிறப்புப் பெயர் உடையவன் என்றும், எனவே அவன் தைத்திஙகள அத்தநாளில் பிறந்த வன் என்றும் 'மூன்றும் குலோத்துங்க சோழன்' என்ற நூலின் ஆசிரியர் வி. இரா. இராமச்சந்திர தீட்சதர் குறித்திருப்பது பொருத்தமாக இல்லை.

தென்னார்க்காடு மாவட்டம கீழூரில் கிடைத்துள்ள இவ் வேந்தனது எட்டா மாட்சி யாண்டுக் கல்வெட்டிலிருந்து, இவனுக்கு இராசாககள் நாடன் எனும பெயர் உண்டென்று அறியப் படுகின்றது. (M.E R. 287 of 1902); 'திருநீலகண்டன் இராசாக்களையனை' என்று இராசிபுரம் கல்வெட்டு குறிப்பிடுகிறது.

தொடங்கப் பெற்றுள்ளன. இவனது சமஸ்கிருத கல்வெட்டி லிருந்து இவன் புதிதாக எவ்விதச் சிறப்பான வெற்றிகளையும் பெற்றதாகக் கருதவியலாது.

**வெற்றிகள்**

வேணாடு (திருவாங்கூர்) இவ் வேந்தனால் வெல்லப்பட்ட தென்பதனைத் தில்லைத் திருக்கோயிலில் காணப்படுகின்ற செய்யுள் வடிவிலான கல்வெட்டொன்றால் அறிகிறோம். இச் செய்யுளில் இவனது போர்ச் செயல்களும் வெற்றிகளும் குறிக்கப்பட்டுள்ளன. இதனை நாம் ஆய்ந்து பார்க்குங்கால் இவையனைத்தும் சடையவர்மன் சுந்தர பாண்டியனது ஆட்சிக் காலத்தில் நிகழ்ந்தவையாகுமென்பதும், இப் போர்களை மன்னனது ஆணைக்கிணங்க, இவன் தலைமையேற்று நடத்தி யிருத்தல் வேண்டுமென்பதும் புலனாகிறது. இவற்றினை நமக்குப் புலப்படுத்துகின்ற பாடல்களைக் காண்பது அவசியமாகுமென் பதனால் அவற்றைக் காண்போம்.

1. 'ஏந்து மருவி யிரவி புரவியின் முன்
பூந்துவலை வீசும் பொதியிலே—காந்துசின
வேணாடனை வென்ற விக்கிரம பாண்டியன் மெய்ப்
பூணாரம் பூண்டான் பொருப்பு!

2. புயலுந் தருவும் பொருகைப் புவனேக வீரபுனல்
வயலுந் தரளந் தரு கொற்கை காவல் வாரணப்போர்
முயலுங் கணபதி மொய்த்தசெஞ் சோதி முகத்திரண்டு
கயலுண் டெனுமது வோமுனி வாறிய காரணமே'[1]

(சிதம்பரச் சாசனங்கள் — செந்தமிழ் — தொகுதி IV பக்கங்கள் 493—94).

[1] முதற்பாடலினைக் கொண்டு இவன் வேணாடன் ஆகிய திருவாங்கூர் மன்னனை வென்று அவனுடைய பொதிய மலையைத் தனது மலையாக்கிக் கொண்ட தனையறியலாம்.

இரண்டாம் பாடலைக்கொண்டு, இவன் புவனேக வீரன் என்னும் பட்டத் தினைப் பெற்றிருந்தான் என்றும், காகதிய வேந்தனை வீரகண்ட கோபாலனைப் போரில் கொன்று, அவனது உறவினனை கணபதி என்பானிடம் அந் நாட்டினை ஒப்படைத்தான் என்றும் அறியலாம்.

வெங்கண் மதயானை விக்கிரம பாண்டியனே
பொங்கி வடதிசையிற் போகாதே—யங்கிருப்பாள்
பெண்ணென்று மீண்ட பெருமாளே பேரிசையாம்ப்
பண்ணொன்றும் வேய்வாய் பகை.

இதுவே மூன்றாம் பாடல், இப் பாடலில் 'பொங்கி வடதிசையிற் போகாதேயங்கிருப்பாள் பெண்' என்ற அடி உள்ளது, இதன் விளக்கத்தினைக் காண்போம். தெலுங்கு தேசத்தின் ஒரு பகுதியை காகதியக் குலத்தில் வந்த ருத்திரமமா என்பாள் அரசாண்டதாகத் தெரிகிறது. இந்த ராணி ருத்திரதேவ மகாராஜா என்னும ஆண் பெயர் பூண்டு அரசாண்டாள் என்று பிரபதாபருத்தி ரீயம் என்னும் நூல் கூறுகின்றது பெண்ணின்மீது போர் தொடுக்கக் கூடாது; அரசருக்கு இது மரபன்று என்பதுவே இப் பாடலால் அறியப்படுகின்றது.

**சோழரை வெல்லுதல்**

விக்கிரம பாண்டியன் சோழர்களை வெள்ளாற்றங்கரையில் நிகழ்ந்த போரில் முறியடித்து மண்டியிடச் செய்தான். இப்போரில் பாண்டியப் படைவீரர்கள் வீறு கொண்டெழுந்து, வெறி கொண்டு போரிட்டதன் விளைவாக சோழப் படைவீரர் பலர் உயிரிழந்தனர்; வெள்ளாறு குருதி படிந்த செவ்வாறுபோல் காட்சி தந்தது.[1] பாண்டியரது படையில் முக்கிய இடம்பெற்ற வாணதரையன் என்பானும் அவனது புதல்வர்களும் இப்போரில் தமது அஞ்சாநெஞ்சம் காட்டி, பகைஞரை வெட்டி வீழ்த்தினர்.[2] தங்களது உயிரைத் துச்சமென மதித்தனர்; வீரம் விளைவித்தனர்; வெள்ளாற்றுப் போரில் இவர்கள் தங்களது பெயரையும், வீரத்தையும் காட்டினர்; தங்களது புகழைப் பாண்டியர் வரலாற்றில் நிலைநாட்டினர்.

**ஆட்சியின் முடிவு**

நமக்குக் கிடைத்துள்ள கல்வெட்டுகளுள் இவ் வேந்தனது பதின்மூன்றாமாட்சியாண்டுக் கல்வெட்டே காலத்தால் பிந்தியதாகும்.[3] எனவே, கி.பி. 1283[4] ஆம் ஆண்டில் ஆட்சிப் பொறுப்பேற்ற இவன் பதின்மூன்றாண்டுகள் ஆட்சி புரிந்தனனெனவும் இவனது ஆட்சி கி. பி. 1296 ஆம் ஆண்டில் முடிவுற்றதெனவும் கருதலாம்.

1 Nos. 123 of 1888; 329, 336 and 365 of 1913 and A.R.E. 1914, part ii, para 20.

'சீர் கொண்ட வெள்ளாறு குருதிப் பெருக்கிற்
செவ்வாறு பட்டோட வவ்வாறு சென்றப்
போர்வென்று வனப்பேய் நடங்கண் டதற்பின்
புலியூர் நடங்கண்ட புவனேக வீரா

பார்பண் டளந்துண்டோ ராலிற் கிடக்கும்
பச்சைப் பசுங்கொண்ட லேபத்ப நாபா
கார்கொண்ட நின்கையில் வேலுக்கு வற்றுங்
கடலல்ல வென்பேதை கண்டந்த கடலே.

மாறுபடு மன்னவர்தங் கைபூண்ட வாளிரும்பு
வேறுமவர் கால்பூண்டு விட்டதே—சீறிமிக
வேட்டந் திரிகளிற்று விக்கிரம பாண்டியன்த
ஞட்டங் கடைசிவந்த நாள்.'

(விக்ரம பாண்டியன் வெள்ளாறு என்னுமிடத்தில் போர் வென்றதையும் பகை மன்னரைச் சிறை பிடித்ததையும் இவை கூறுகின்றன)

சிதம்பரம் நடராசர் கோயில் இரண்டாம் பிரகார வாயிலின் மேற்குப் பக்கச் சுவரில் உள்ளது. (பதிப்பு No. 228, S.I.I. Vol IV)

2 270 of 1939–40

3 No. 539 of 1910.

4 No. 82 of 1918 and A.R.E. 1918, part ii, para 45; No. 43 of 1905. தென் ஆர்க்காட்டிலுள்ள இவ் வேந்தனது ஏழாமாட்சியாண்டுக் கல்வெட்டு.

### அரியணைகள்

இவ் வேந்தனது கல்வெட்டுகளைக் கொண்டு இவனுக்கு மதுரையம்பதியின்கண் 'முனைய தரையன்' என்னும் பெயர் கொண்ட ஒரு அரியணையும், இராச சிங்கபுரத்திற்குக் கிழக்கே யுள்ள இராசேந்திரம் என்னும் ஊரின்கண் 'மலைய தரையன்' என்னும் வேறொரு அரியணையும் ஆக மொத்தம் இரண்டு அரியணைகளிருந்ததாக அறிகிறோம்.[1]

### விக்ரம பாண்டிய வளநாடு

தென்னார்க்காடு மாவட்டத்திலுள்ள விக்ரம பாண்டியனது ஐந்தாமாட்சியாண்டுக் கல்வெட்டின் துணைகொண்டு 'விக்ரம பாண்டிய வளநாடு' என்னும் பெயரால் நாட்டுப் பிரிவொன் றிருந்ததாக அறியலாம்.[2]

### சதுர்வேதி மங்கலம்

திருச்சி நகரத்திலுள்ள தாயுமானவர் ஆலயக் கல்வெட் டொன்றில் குலசேகர பாண்டியனது அன்னையான கண்ணுடைய-நாயகியின் பெயரால் சதுர்வேதி மங்கலமொன்று நிறுவப்பட்டதாக அறிகிறோம்.[3] விக்ரம பாண்டியன் தனது மனைவியான உலக முழுதுடையாள் என்பாரின் பெயரால் விழா வொன்று (பூஜை அல்லது சந்தி) தொடர்ந்து நடைபெற ஏற் பாடுகள் செய்திருந்ததாகத் தென்னார்க்காடு மாவட்டம் திருநாம நல்லூர்க் கல்வெட்டொன்று சான்று பகர்கிறது.[4]

### உடன் பிறந்தோரின் ஆட்சி

இவ்வேந்தன் தனது கல்வெட்டில் குலசேகர பாண்டியனைத் தனது அண்ணனென்று (அண்ணாழ்வார்) குறிப்பிட்டுள்ளார். இக் குறிப்பும், மார்க்கோபோலோவும், வாசப்புர் தமது குறிப் புகளில் தாம் பாண்டிய நாட்டிற்கு வருகை தந்த போழ்து, ஆட்சி புரிந்தனரென்று குறித்துள்ளதும் ஒத்திருப்பதால் இவற்றை நாம் ஏற்றுக் கொள்ள முடிகிறது; வெளிநாட்டினரது கருத்தினை உறுதி செய்வதாகவும் இச் செய்தி உள்ளது.

### சமயப் பொதுமை

விக்ரம பாண்டியன் எல்லாம் வல்ல ஆண்டவன்மீது எல்லை யற்ற அன்புகொண்டிருந்தான். 'எம்மதமும் சம்மதம்' என்னும்

1 Nos. 312 and 317 of 1923 and A.R.E. 1924, part ii, para. 36
2 137 of 1956-57
3 A.R.E. 1955-56, p. 7
4 252-3 of 1939-40

தங்கம் நிகர் கொள்கையினைத் தரம் குறையாக் கருத்தினை மனத்திலிருத்தி, அனைத்து மதங்களும் வளர்ச்சி பெறத் தன்னலமி யன்ற தொண்டினைச் செய்தான். இதனை இவன் சிவன் கோயில் களுக்கும் சமணப் பள்ளிகளுக்கும், திருமால் கோட்டங்களுக்கும் இறையிலி நிலங்கள் வழங்கியுள்ளதாலறியலாம். தன்னாட்டி லுள்ள கோயில்களில் இறைவழிபாடு குறைவற நடைபெறு வதற்குத் தேவையான உதவிகளைச் செய்த இவன் 'இராசாக்கள் நாயன் சந்தி' என்னும் பெயர்களில் விழாக்கள் கொண்டாடப் பெறுவதற்கும் தக்க ஏற்பாடுகளைச் செய்திருந்தான்.

இறையன்பில் இணையற்று விளங்கிய இவ் வேந்தன் கலை களைப் பேணிக்காக்கும் பெருந்தகையாளனாகவும் திகழ்ந்தான்.

**இவ் வேந்தனது பெயரால் அமைந்த ஊர்**

புவனேக வீரன் என்னும் விருதுப் பெயரினை இவ்வேந்தன் பெற்றிருந்தான் என்பதனை நாம் முன்பே கண்டோம். இவ்வேந் தனது நினைவாகப் பண்டு 'புவனேக வீரன் பட்டினம்' என்னும் ஊரொன்று பெயரிடப் பெற்றிருந்தது. இன்றோ அவ்வூர் புவன கிரி என்று மருவி வழங்கப்பெறுகிறது. புவனகிரி சிதம்பரத் திற்கு அண்மையில் அமைந்துள்ளது.

**முடிவுரை**

இதுகாறும் கூறியவற்றான் சடையவர்மன் விக்கிரம பாண் டியன், குலசேகர பாண்டியனது அரசப் பிரதிநிதியாகத் தொண்டைநாடு, நடுநாடு, கொங்கு நாட்டின் கீழ்ப்பகுதி ஆகிய வற்றில் அமர்த்தப் பெற்றிருந்தான் என்பதும், இவன் பாண் டியத் தொண்டைமான் என்றழைக்கப்பட்டான் என்பதும் புலனாகும்.

# 11. உள்நாட்டுக் குழப்பமும் முஸ்லிம் படையெழுச்சியும்

**முன்னுரை**

குலசேகரப் பாண்டியனது நீண்ட ஆட்சிக் காலத்தில் மக்கள் பெருவாழ்வு வாழ்ந்தனர். இவ் வேந்தனது ஆட்சிக் காலத்தின் முற்பகுதியில் நாடெங்கும் அமைதி நிலவியது; ஆனால், இறுதிக் காலத்திலோ இளவரசர்களுக்குள் ஏற்பட்ட அரசுரிமைத் தகராறின் காரணமாக 'நாட்டின் அமைதி பாதிக்கப்பட்டு, சீர்மை கெட்டு, உள்நாட்டுப் போரும் குழப்பமும் ஏற்பட்டது. இக் குழப்பமான நிலை பாண்டிய நாட்டின்கண் நிலவியகாலை, டில்லிப் பேரரசின்கண் வீற்றிருந்த அலாவுதீன் கில்ஜியின் (Alauddin Khalji கி.பி. 1296—1316) தென்னிந்தியப் படையெழுச்சி நிகழ்வுற்றது. அந் நிகழ்ச்சி வரலாற்றுப் புகழும் பெற்றது. அலாவுதீன் கில்ஜியின் தென்னிந்தியப் படையெழுச்சி அவனது ஆற்றல்மிகு படைத் தளபதியாம் மாலிக்காபூரின் தலைமையில் நிகழ்வுற்றது. வட இந்தியா முழுவதிலும் கில்ஜிப் பேரரசின் மேலாண்மையினை நிறுவிய அலாவுதீன் கில்ஜி, தென்னிந்தியாவின்மீதும் படையெடுத்து, தனது வலிமையினை ஆங்கு உணர்த்த முடிவெடுத்து, படைத்தலைவனின் கீழ் படையொன்றினை அனுப்பி வைத்தான். மாலிக்காபூரும் தென்னகத்தில் வெற்றிகள் பல குவித்தான்; பெரும் பொருளைக் கொள்ளையிட்டு டெல்லி சுல்தானுக்கு அனுப்பி வைத்தான்.

**அலாவுதீன் கில்ஜி (கி.பி. 1216—கி.பி. 1316)**

அலாவுதீன் கில்ஜியின் தென்னிந்தியப் படையெழுச்சிப் பற்றி நாம் அறிந்துகொள்வதற்குமுன், அவனது ஆட்சிபற்றியும் பதின்மூன்றும் நூற்றாண்டின் தென்னிந்திய அரசியலைப் பற்றியும், அறிந்து கொள்ள வேண்டியது அவசியமாகும். இதனை அறிந்து கொண்டால்தான் முஸ்லிம் படையெழுச்சியின் முக்கியத்துவத்தினை நாம் தெளிவாக அறிந்துகொள்ள இயலும். தமிழகத்தைப் பொறுத்தமட்டில் அலாவுதீன் கில்ஜியின் படையெழுச்சியே, முதல் முஸ்லிம் படையெழுச்சியாகும். வட இந்தியாவிலோவெனின் அலாவுதீனுக்கு முன்பே பல முஸ்லிம்கள்

ஆங்குப் படையெடுத்து வந்து, தமது ஆட்சியினை நிறுவியிருந்தனர். அவர்களைப்பற்றியும் ஒரு சில உண்மைகளைத் தெரிந்து கொண்டால்தான் முஸ்லிம் படையெழுச்சியின் உள் நோக்கத்தினையும், வரலாற்றுத் தொடர்ச்சியினையும் நாம் அறிந்து கொண்டவர்களாவோம்.

### அலாவுதீன் கில்ஜிக்கு முந்திய முஸ்லிம்கள்

இந்திய வரலாற்றில் கி. பி. 712ஆம் ஆண்டு குறிப்பிடத்தக்க தொன்றாகும். இவ்வாண்டில்தான் முகம்மது பின் காசிம் என்ற அராபிய முஸ்லிம் சிந்துவினைக் கைப்பற்றினான். இருப்பினும் இவனது ஆட்சி ஆங்கு நீண்ட நாள் நீடிக்கவில்லை.

அராபியரின் இந்தியப் படையெழுச்சி நிகழ்ந்து, மூன்று நூற்றாண்டுகள் கழிந்த பின்புதான் துருக்கியர் இந்தியாவின்மீது படையெடுத்தனர். இவர்களுள் கஜினி முகம்மது குறிப்பிடத் தக்கவனாவான். இந்தியாவின் செல்வச் செழிப்பையும் வளமைக் கொழிப்பையும் கேள்வியுற்ற இவன், கி. பி. 1000 முதல் கி. பி. 1026-க்குள் பதினேழு தடவை இந்தியாவின்மீதுப் பெரும் படை யெடுத்தான்; பொருளைக் கொள்ளையடித்தான்.

கஜினி முகம்மதுவிற்குப் பின்னர் கோரி முகம்மது கி. பி. 1191-ல் இந்தியாவின்மீது படையெடுத்தான்; வட இந்தியாவில் முஸ்லிம் ஆட்சியையும் தொடங்கி வைத்தான்.

### அடிமை வம்சம்

கி. பி. 1206-ல் கோரி முகம்மது கொலை செய்யப்படவே அவனது அடிமையான குத்புதீன் ஐபக் என்பான், அதே ஆண்டிலேயே 'அடிமை வம்சம்' (Slave dynasty) என்னும் புதியதொரு அரச குலத்தினைத் தோற்றுவித்தான். இக் குடியில் பெரும் புகழ் பெற்ற சுல்தானே பால்பன் என்பவனாவான். அடிமை வம்ச அரசர்கள் கி. பி. 1206 முதல் கி. பி. 1290 முடிய டெல்லி சுல்தானியத்தினைச் சீரும் சிறப்புடன் ஆண்டு வந்தனர்.

### கில்ஜி வம்சம்

கி. பி. 1290-ல் அடிமை வம்சம் அழிந்தது; கில்ஜி வம்சம் அரியணையிலமர்ந்தது. ஜலாலுதீன் பிரூஸ் கில்ஜியே (Jalal-ud-din Firuz-Khilji) இப் புதிய வம்சத்தைத் தோற்றுவித்தான். கி.பி. 1296ஆம் ஆண்டில் ஜலாலுதீன் பிரூஸ்கில்ஜி தனது மருமகனின் வேண்டுதலாலும் தூண்டுதலாலும் கொல்லப்பட்டான். இவ்வாறு தனது மாமனாரின் உயிருக்கே உலை வைத்த உத்தமன்

தான் அலாவுதீன் கில்ஜி என்பவனுவான். கி.பி. 1296ஆம் ஆண்டில் சுல்தானுன இவன் கி.பி. 1316ஆம் ஆண்டு முடிய டெல்லி சுல்தானுக ஆட்சி புரிந்து வந்தான்.

அருளே உருவாய் அமர்ந்து தனது தள்ளாத பருவத்திலும் சோர்வு கொள்ளாது, மக்கள் நலம் பேணி, நாடாண்ட சுல்தானேக் கொன்ற அலாவுதீன், பிரபுக்களும் மக்களும் தன்னேச் சுல்தானுக ஏற்றுக் கொள்ளவும், தனது கறை படிந்த பண்பினே அவர்கள் தமது நினேவிலிருந்து விட்டுத் தள்ளவும், எண்ணிறந்த பொன்னே யும் மணியையும் மக்களுக்கு அள்ளியள்ளி வீசினுன். பொன்னேக் கொட்டி, மக்களது நம்பிக்கையைத் தட்டிப் பறித்த இக் கேடு கெட்ட வேந்தனே, தனது வாழ்நாள் முழுமையும் பொன்னுசை கொண்டே வாழ்ந்தான்.

அதிகார வெறியும் பேராசையும் குறியாகக் கொண்ட இவ் வேந்தனே, தொன்மை மிக்க தென்னகத்தின்மீது முதன்முதல் படை கொண்டு வந்த முஸ்லிமாவான். ஆதிக்க வெறிகொண்டு அண்டை நாடுகளுடன் சண்டையிட்டு அவற்றைக் கைப்பற்றி பேரரசொன்றினே ஆளவேண்டுமென்பதே இவனது அசையாத நோக்கமாகும். இவன் எவ்விதம் ஆட்சிக்கு வந்தான் என்ப தனேயும் ஈண்டு காண்போம்.

**தேவகிரிப் படையெழுச்சி—1296**

அலாவுதீன் கில்ஜி, மாமனுரைக் கொன்று ஆட்சிக்கு வரு வதற்கு முன்பே மகாராஷ்டிரத்தைச் சேர்ந்த யாதவ மன்னர் களின் தலேநகரான தேவகிரியில் விலேயுயர்ந்த பொன்னும், மணியும், பொருள்களும் மண்டிக்கிடக்கின்றனவென்று கேள்விப்பட்டிருந்தான். இது அவனேப் பெரிதும் உருத்தியது. அந் நாட்டின்மீது படையெடுக்கும் திட்டமொன்றும் அதனுல் உருவாகியது. அலாவுதீன் தனது மனேவி, மாமியார் ஆகி யோரின் பணச் செருக்கையடக்கவும் இப் படையெழுச்சி, வித்தாக அமையுமென்று எண்ணினுன். கி. பி. 1296-ஆம் ஆண்டில் இவனது எண்ணம் செயல்வடிவம் பெற்றது.

**யாதவ வேந்தன் அடிபணிதல்**

அவன் எட்டாயிரம் குதிரைப் படையுடன் புறப்பட்டான் தேவகிரி நோக்கி. எழுநூறு கல்தொலேவிலுள்ள தேவகிரியை அடையக் கல்லும் முள்ளும், காடும் மேடும், நாடும் நகரமும் தாண்டிச் செல்ல வேண்டியிருந்தது அப்படை – இருப்பினும் தளராது வீர நடை போட்டது. தேவகிரியையெட்டிவிட்டது

முஸ்லிம்படை. இத் தருணத்தில் தேவகிரியின் வேந்தனை ராமச்சந்திரனின் மகனை சங்கரதேவனென்பான், சேனையின் பகுதியொன்று உடன் வர, தென்திசை நாடுகளை நோக்கிப் புனிதப் பயணம் சென்றிருந்தான். இதனால் படை பலம் குறைந்த தேவகிரி மன்னன், அலாவுதீனின் வருகையைக் கண்டு வெஞ்சமர்புரிய அஞ்சி, கோட்டைக்குள் தஞ்சம் புகுந்தான். முஸ்லிம் வீரர்களோ நகருக்குள் நுழைந்து பார்ப்பனர்களையும், வணிகர்களையும் கொன்று குவித்தனர்; அவர்களது உடைமைகளைப் பறித்தனர். இந் நிலையில் தேவகிரி முழுமையினையும் கைப்பற்றி இருபதினாயிரம் குதிரைப் படையினரைக் கொண்ட பெரும் படையொன்று வந்து கொண்டிருக்கின்றதென்ற வதந்தியையும் அலாவுதீன் கிளப்பிவிட்டான். இதனைக் கேள்வியுற்ற தேவகிரி வேந்தன் அலாவுதீனிடம் அடிபணிந்தான்; சமாதானம் செய்து கொண்டான்; பெரும் பொருளைத் திறையாகக் கொடுக்கவும் ஒப்புக் கொண்டான்.

இந் நிலையில் புனிதப் பயணம் சென்றிருந்த இளவரசன் திரும்பி வந்தான்; இச் சமாதானத்தினை நிராகரித்தான்; பின்னர் ஏற்றுக்கொண்டான். பதினேழாயிரம் பவுண்ட் பொன்னும், இருநூறு பவுண்ட் முத்தும், ஐம்பத்தைந்து பவுண்ட் இரத்தினமும், இரண்டாயிரத்து எண்ணூறு பவுண்ட் வெள்ளியும், ஆயிரம் பட்டுத் துண்டுகளும் பெற்றுக் கொண்ட அலாவுதீன் டெல்லி திரும்பினான். மாமனாரைக் கொல்ல சதித்திட்டமொன்றும் அவனால் தீட்டப்பட்டது. காவலனது கழுத்தும் வெட்டப்பட்டது, அலாவுதீனும் வேந்தனானான்.

### வட இந்திய வெற்றிகள்

நாடு பிடிப்பதில் கோடியின்பம் கண்ட அலாவுதீன் குஜராத், ரேந்தம்பார், மேவார், மாளவம், ஜேலர், மார்வார் முதலான வட இந்திய அரசுகளனைத்தையும் கி. பி. 1305-க்குள் தன் காலடியில் கிடத்தினான். வட இந்தியா முழுவதையும் தனது பேய்ப்பசிக்கு இரையாக்கிக் கொண்ட அலாவுதீனின் பசி அடங்கவில்லை; தென்னாட்டையும் விழுங்கத் திட்டமிட்டான்.

### இந்துக்களைக் கொடுமைப் படுத்துதல்

முஸ்லிம் மன்னர்கள் இந்துக்களின்மீதுப் போர் தொடுப்பதனைத் தமது புனிதக் கடமையாகக் கருதினர். எனவே, இந்துக்கள் மீதான போர் புனிதப் போரெனப் பட்டது (Jehad, Holy war). இந்துக்களைக் கொடுமைப் படுத்துதல் அவர்களது பொழுதுபோக்கு. இந் நெறியினைப் பின்பற்றிய அலாவுதீனும்

இந்துக்கள்மீது கடுமையான வரிகளை விதித்தான். வரிக் கொடுமையால் இந்துக்கள் வாடினர். இதனால் அவர்கள் குதிரை மீது அமர்ந்து செல்லவோ, வெற்றிலைப் போட்டுக் கொள்ளவோ இயலாத நிலையில் இருந்தனர். வறுமையிலும் வெறுமையிலும் வாடிய இந்துப் பெண்கள், முஸ்லிம் வீடுகளில் பணிப்பெண்க ளாகப் பணியாற்றினர்; வயிறு வளர்த்தனர்.

அலாவுதீன் கில்ஜியின் காலத்தில் இந்துக்கள் நடத்தப்பட்ட முறைகளைப் பின்வரும் வரிகள் விளக்கமாகச் செப்புகின்றன. ஒருமுறை அலாவுதீன் தனது காஜியிடம் (Qazi) முகமதிய மன்னரின் ஆட்சியின்கீழ் வாழும் இந்துக்களின் நிலையாதென்று கேட்டான். அதற்குக் காஜி கூறியதாவது: 'அவர்கள் கப்பம் செலுத்தக் கடமைப்பட்டவர்கள். வருவாய்த்துறை அலு வலர்கள் அவர்களிடம் வெள்ளியைக் கேட்டால், அவர்கள் வணக்கத்துடனும் இணக்கத்துடனும் பணிவுடனும் பொன்னைக் கொடுக்க வேண்டும். வரிவசூல் செய்யும் அதிகாரி எச்சில் துப்ப நினைத்தால், அருகிலே இருக்கின்ற ஒரு இந்து தயக்க மின்றித் தனது வாயைத் திறந்து காட்டி, அதில் துப்பச் சொல்லி தனது பணிவினை அதிகாரிக்குக் காட்ட வேண்டும். இஸ்லாம் சமயத்தின் பெருமையை உயர்த்துவது ஒருவரின் கடமையாகும். அதனை வெறுப்பதோ வீண் செயலாகும். இந்துக்கள் முகமது நபியின் பகைஞர்களாதலால், இறைவனே அவர்களை இழிவு படுத்த வேண்டுமென்று கட்டளையிடுகிறான். இந்துக்கள் இஸ்லாம் மதத்தைத் தழுவவேண்டும்; இல்லையேல் அவர்கள் இறப்பினைத் தழுவும்படிச் செய்ய வேண்டும். அல்லது அவர்கள் அடிமைகளாக்கப்பட வேண்டும். அவர்களது உடைமைகள் பறிமுதல் செய்யப்பட வேண்டுமென்று நபியே நவின்றுள்ளார். அனிஃபா மட்டுமே இந்துக்கள்மீது ஜிசியா என்னும் தலை வரியை விதிக்கலாமென்றும் விளம்பியுள்ளார். இந்துக்கள் மதம் மாற மறுத்தால் அவர்கள் கொல்லப்படுவதைத் தவிர வேறு வழியில்லையென்று மற்றனைவரும் கூறியுள்ளனர்.'

**அலாவுதீன் கில்ஜி தென்னிந்தியாவின்மீது படையெடுக்கக் காரணங்கள்**

1. பாண்டிய நாட்டின்கண் குலசேகரப் பாண்டியனது மக்களான சுந்தர பாண்டியனுக்கும், வீரபாண்டியனுக்குமிடை யில் பட்டத்தகராறு குறித்துப் போர் மூண்டது; இதனால் உள் நாட்டுக் குழப்பமும் தோன்றியது.

2. வீரபாண்டியனால் தோற்கடிக்கப்பட்ட சுந்தரபாண் டியன் டெல்லிக்கு ஓடினான்; அலாவுதீன் கில்ஜியிடம் உதவியை

நாடினன். இதனைச் செவிமடுத்த அலாவுதீன் தனது படைத் தலைவனை மாலிக்காபூரைப் (Hazardinari) படையுடன் அனுப்பி மாபாரைக் (மதுரை) கைப்பற்ற ஆணை பிறப்பித்தான். இவன் தென்னிந்தியாவில் படையெழுச்சியினை மேற்கொண்டிருந்த, அலாவுதீனின் படைத்தலைவனை மாலிக்காபூரைச் சந்தித்து உதவி புரியுமாறு வேண்டிக் கொண்டதாகக் கொள்வதே ஈண்டு பொருத்தமாகத் தோன்றுகிறது.

3. மாலிக்காபூர் போசள நாட்டின்மீது படையெடுத்த போது போசள வேந்தனை மூன்றும் வீர வல்லாளன் பாண்டியரது உதவியை நாடினன். வீரபாண்டியன் போசளருக்குத் துணையாக மாலிக்காபூரை எதிர்க்கப் படையொன்றினையனுப்பினன். இதனுல் சோபங்கொண்ட மாலிக்காபூர் பாண்டி நாட்டின்மீது படையெடுத்தான்.

4. அலாவுதீன் கில்ஜி தென்னிந்தியாவிலும் தக்காணத்திலும் படை கொண்டு சென்று, முஸ்லிம் மதத்தினை ஆங்குப் பரப்ப ஆவல் கொண்டான். மாபார் பகுதி டெல்லியினின்றும் தொலைதூரத்திலிருந்ததாலும், டெல்லியிலிருந்து ஆங்குச் செல்ல பன்னிரண்டு மாதங்கள் ஆகின்றதாலும், முகமதியர் ஆங்குப் புனிதப்போர் நடத்த முடியாததொரு சூழ்நிலையிருந்து வந்தது. இதன் காரணமாக அலாவுதீன் தென்னிந்தியாவின்மீது படையெடுக்க உறுதி பூண்டான்.

5. பெரும் படையினை நிர்வகிப்பதற்கும், நல்லாட்சி முறையினை மக்களுக்கு நல்குவதற்கும், நிறைந்த பணம் தேவையென்பதனையுணர்ந்த அலாவுதீன், தென்னிந்தியாவினின்றும் பெரும் பொருளைத் திறைப் பொருளாகப் பெற்று, அதனை ஈடு செய்யத் திட்டமிட்டான்; தனது படைத் தலைவனைத் தென்னிந்தியாவின்மீது படையெடுக்க ஆணை பிறப்பித்தான்.

மேற்கூறப்பட்ட காரணங்களை மனத்திற் கொண்டே அலாவுதீன் தென்னிந்தியப் படையெழுச்சியில் நாட்டங்கொண்டான். பெரும்படை திரட்டினன்; தனது ஆற்றல்மிக்க படைத் தலைவனும் மாலிக்காபூரை அனுப்பினன் படையுடன். வென்று வா—பகை கொன்று வா—பெரும் பொருள் கொண்டு வா—என வாழ்த்தி வழியனுப்பினன். மாலிக்காபூர் தென்னிந்தியா வந்து அடைந்தபோது, அதன் அரசியல் சூழலும் அவனுக்குச் சாதகமாகவே அமைந்திருந்தது. ஈண்டு நாம் முதலில் தென்னாட்டின் அரசியல் சூழலை அறிந்து கொள்வது நலம் பயப்பதாகும்.

## கி.பி. பதின்மூன்றும் நூற்றாண்டில் தென்னாட்டின் அரசியல் சூழல்

### யாதவப் பேரரசு

தென்னாட்டின் மேற்குப் பகுதியில் தபதி, கோதாவரி ஆகிய இரு பேராறுகளுக்குமிடையிலான இவ்வரசே யாதவப் பேரரசு என்றழைக்கப் பெற்றது. இதன் தலைநகரம் தேவகிரியாகும். இவர்கள் கண்ணனைத் தனது முன்னோனெனக் கூறுகின்றனர். கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டில் யாதவ நாடு உருப்பெற்றது கி.பி. 1185 முதல் 1193 முடிய இந்நாட்டினை ஐந்தாம் பில்லாளர் முழுவுரிமை பெற்ற வேந்தனாக ஆண்டார். ஜயதுகியும், சிங்களனும், கிருஷ்ணனும் இம் மரபின் அதிகாரத்தினை விரிவுபடுத்தினர். தென்னாட்டரங்கில் இந் நாட்டிற்குப் புகழ் தேடிக் கொடுத்தனர். பின்பு மகாதேவன், இராமச்சந்திரன் முதலான வேந்தர்கள் இம் மரபின் புகழினைக் காத்தனர். இராமச்சந்திரன் (கி.பி. 1271—1310) என்னும் வேந்தன் காகாத்திய வேந்தனான இரண்டாம் பிருதாபருத்திரனுடனும், மாளவ மன்னனுடனும், போசள வேந்தனான மூன்றும் நரசிம்மனுடனும், போசள வேந்தனாகப் பதவியேற்ற மூன்றும் வல்லாள தேவனுடனும் இவன் போர்புரிந்து வந்தான். இத் தருணத்தில் மாலிக்காபூர் படையெழுச்சி நடந்ததால் இருவருக்குமிடையேயான போர் முற்றுப் பெறுமல் நின்றது.

### இராமச்சந்திரன்

பதின்மூன்றும் நூற்றாண்டின் இறுதிப்பகுதியிலும் பதினன்காம் நூற்றாண்டின் தொடக்கப்பகுதியிலும் யாதவ அரசினை ஆண்டு வந்த இராமச்சந்திரனே இவ் வம்சத்தின் பெரும்புகழ் பெற்ற வேந்தனாகத் திகழ்ந்தான். அலாவுதீன் கில்ஜியால் கி. பி. 1296-ல் தோற்கடிக்கப்பட்டவன் இவனேயாவன். இவனது மகனான சங்கரதேவனே இவனுக்குப்பின்னர் யாதவ அரசினைக் கட்டிக் காத்தவனாவான். அலாவுதீன் கில்ஜியின் படைத் தலைவனான மாலிக்காபூரின் தாக்குதலுக்கு இரையான அரசும் இதுவேயாகும்.

### காகதீயப் பேரரசு

இவர்களது அரசோ, தென்னாட்டின் கிழக்குப் பகுதியில் கிழக்குத் கோதாவரியாற்றுக்கும் கிருஷ்ணையாற்றுக்குமிடைப்பட்ட நிலப்பரப்பில் அமைந்திருந்தது. ஆரம்ப காலத்தில் பேராதிக்கச் சோழர்களுக்கும் சாளுக்கியர்களுக்கும் சிற்றரசர்களாக விளங்கிய இவர்கள், கி. பி. பன்னிரெண்டாம் நூற்

றுண்டில் அவ்விரு பேரரசுகளும் அழிந்தபின்பு தனியாட்சி கண்டனர். புகழ் கொண்டனர். இவர்கள் காகதிதேவியை வணங்கி வந்தமையின் காகதீயர் என அழைக்கப் பெற்றனர்.

**அமைவிடம்**

காகதீயநாடு தக்காணத்தின் கிழக்குப்பகுதி, ஆந்திர நாட்டின் கிழக்குக்கரை ஆகிய பகுதிகளையும் உள்ளடக்கியிருக்கிறது. இவர்களது கோநகர் ஓரங்கல்லாகும். ஓரங்கல் எனப் படுவது இக் காலை வாரங்கல் என்னும் பெயரால் அழைக்கப் பெறுகிறது. இன்றைய ஐதராபாத்தின் ஒரு பகுதியாகவே வாரங்கல் விளங்குவது யாவருமறிந்ததே.

## மன்னர்கள்

**பிரதாபருத்திரன் I**

காகதீயப் பேரரசின் புகழ்பூத்த மன்னர்களின் வரிசையில் கி.பி. 1158 முதல் கி.பி. 1195 முடிய ஆட்சிபுரிந்த முதலாம் பிரதாப ருத்திரன் என்பான் முன்னணியில் நிற்கிறான். பெருவீரனான இவனுக்குப் பின்னர் கி.பி. 1199 முதல் 1262 முடிய ஆட்சி புரிந்த கணபதி என்பான் மாண்புறு மன்னனாகப் போற்றப் பெறு கிறான். தனது பேரரசின் பேராதிக்கத்தைப் பெருக்கிய இவன், மூன்றாம் குலோத்துங்க சோழன் (கி பி. 1178-1216), மூன்றாம் இராசராச சோழன் (கி. பி. 1216-1246), மூன்றாம் இராசேந்திர சோழன் (கி.பி. 1246-1279) முதலான முப்பெரும் வேந்தர்களின் உடன் காலத்தவனுவான் (Contemporary). அறுபத்து மூன் றுண்டுகள் நல்லாட்சி புரிந்த இவனது ஆட்சிக் காலத்தில், காகதீயப் பேரரசு ஓர் வல்லரசாகத் திகழ்ந்தது.

**பெண்ணரசி**

கணபதியினையடுத்து ருத்திராம்பாள் என்னும் பேரரசி கி.பி. 1262 முதல் 1296 முடிய ஆண்டு வந்தாள். தனது தந்தை யான கணபதியின் ஆட்சிக்காலத்தில் ஆட்சித்துறையில் நற் பயிற்சி பெற்று, தனது தந்தையால் ருத்திரதேவ மகாராஜா என்றழைக்கப்பெறும் நற்பேறு பெற்றவள், இவளென்பது பெண்ணினத்திற்குப் பெருமை சேர்ப்பதாகும். கி. பி. 1293-ஆம் ஆண்டில் தமிழகத்தில் சுற்றுப்பயணம் மேற்கொண்ட இத்தாலிய நாட்டினனான மார்க்கோபோலர், இப் பெண்ணர சியின் மாட்சிமிக்க ஆட்சியினைப் புகழ்ந்து பாராட்டியுள்ளார். இவள் யாதவ மன்னனான மகாதேவனிடம் (கி. பி. 1261-1271) தோல்வி கண்டாள்.

**இரண்டாம் பிரதாபருத்திரன்**

ருத்திராம்பாள் தனது இறுதிக்காலத்தில் தனது பேரனை இரண்டாம் பிருதாபருத்திரனை கி.பி. 1296-ல் அரியணையிலமர்த்தி விட்டு உயிர் துறந்தாள். கி.பி. 1296-ஆம் ஆண்டு முதல் கி. பி. 1322-ஆம் ஆண்டு வரை ஆட்சி புரிந்த இவன் இரவலர்களின் புரவலனாகவும், பகைவனையழிக்கும் ஆற்றல் மறவனாகவுந் திகழ்ந்தான்; தனது முன்னோர் இழந்த பகுதிகளையும் மீட்டான். கி. பி. 1309-10-ல் வாரங்கல்மீது படையெடுத்து வந்த, அலாவுதீன் கில்ஜியின் தளகர்த்தனை மாலிக்காபூருடன் அஞ்சா நெஞ்சத்துடன் வெஞ்சமர் புரிந்தான். தோல்விதான் தனக்குக் கிட்டுமென்று எண்ணிய இவன் மாலிக்காபூருடன் சமாதானம் செய்து கொண்டு, பெரும் பொருளைப் பரிசுப்பொருளாகத் தந்தான்,

தோல்வியைத் தழுவிய பிரதாபருத்திரன் துவண்டுவிடவில்லை; தனது படைகளை முன்னிலும் பன்மடங்கு பெருக்கினான். தனது ஆற்றல்மிகு படைகளைத் தமிழகத்தின்மீது செலுத்தினான்; குறுகிய காலத்திலேயே தனது படைவலிமையால், திருச்சிராப்பள்ளி வரையிலான பெரும்பகுதியினைப் கைப்பற்றிக் கொண்டான். அதுபோழ்து திருச்சிராப்பள்ளி போசளரின் ஆட்சியிலிருந்தது. தனது பகைஞர்களால் பாண்டியருடனும் யாதவர்களுடனும் இவன் பகைமைகொண்டு, போர் மேற்கொண்டான். இவனது ஆட்சியின் இறுதிக் காலத்தில் காகதீயப்பேரரசு கோதாவரியாற்றிலிருந்து திருச்சிராப்பள்ளி வரையில் விரிவடைந்திருந்தது. பெரும் புகழும் பெரும் வீரமும் பெற்றிருந்த இவன் கி.பி. 1322-ஆம் ஆண்டு உலூகானல் வாரங்கல்லில் தோற்கடிக்கப்பட்டான்; டெல்லிக்குக் கொண்டு செல்லப்பட்டான். இடைவழியில் இவன் தன்னுயிரைப் போக்கிக் கொண்டான் என்பர். கி. பி. பதின்மூன்றும் நூற்றாண்டின் இறுதிப் பகுதியிலும் பதினான்காம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் பெரு வீரனாகவும், பெருமைசான்ற வேந்தனாகவும் மிளிர்ந்த இவன் இறந்து பட்டான்; காகதீயர் வரலாற்றில் இவனது இழப்பு ஈடு செய்ய முடியாத பேரிழப்பாகும். மாட்சிமை மிக்க ஆட்சியாளனாகவும் இவன் சிறந்து விளங்கினான். (J. Duncan M. Derrett. The Hoysalas C. P. 15) (தனது உடைவாளைக் கொண்டு கொன்றான் எனக் கூறுதலுமுண்டு),

## போசளப் பேரரசு

### பூர்வீகம்

போசளப் பேரரசினை (Hoysalas) நிறுவியவன் சாலன் என்பது கதையொன்றின் வாயிலாகப் புலனாகின்றது. ஹொய் சால அரசு என்பதே போசள அரசெனத் தமிழ்ப்படுத்தப் பட்டுள்ளது. ஹொய் என்ற சொல்லிற்குக் கன்னட மொழியில் எறி (எறிதல்) என்று பொருள்; சால என்பது ஒருவரின் பெயரைக் குறிப்பதாக இருக்கிறது. எனவே, 'சாலனே எறி' என்பதுவே இதன் தெளிவான பொருளாகும். சாலன் எதனை எறிந்தான் என்பதைக் கீழே காண்போம்.

### புராணக் கதை

இக் கதை போசளப் பேரரசின் தோற்றத்திற்குத் தொடர் புடையதாயிருத்தலின் இதனை நாம் காண வேண்டியுள்ளது. அடர்ந்த காட்டில் முனிவனொருவன், வாசாந்திகா என்னும் தனது குலதெய்வத்தினை திருக்கோயிலுக்குச் சென்று, பூசனை செய்து கொண்டிருந்தான் அவனருகே சாலன் என்ற தலைவ னொருவனுமிருந்தான். முனிவன் இறைவழிபாட்டில் மூழ்கி யிருந்தபோழ்து, புலியொன்று அப்பக்கம் பாய்ந்து வந்து ஒலி எழுப்பியது. முனிவனைக் கண்ட புலி அவன்மீது பாய்ந்துவிடும்; அவனது உயிரும் சென்று விடும் என்றதொரு இக்கட்டான சூழ்நிலை உருவாயிற்று. உடனே முனிவன் சாலனிடம் இரும்புத் துண்டொன்றினைக் கையில் கொடுத்துப் புலியின்மீது எறியக் (Hit it Sala;ஹொய்சால) கட்டளையிட்டான். நொடிப்பொழுதில் சாலனும் இரும்புத்துண்டைப் புலியின்மீது வீசினான்; புலியும் பலத்த அடிபட்டுக் கீழே விழுந்தது; உயிரை இழந்தது. முனி வரும் சாலனென்னும் அப் பக்தனை விளித்து 'அன்னை வாசாந் தியின் அருளால் பிற்காலத்தில் நீ ஒரு வேந்தனாவாய்' என்று ஆசி கூறினார். சமண முனிவரும் சாலனது பேருதவியைப் பாராட்டும் பொருட்டு, மக்களிடம் அவனுக்குப் பொருள் திரட்டித்தர ஆணையிட்டான். அவனுக்கும் பொருள் சேர்ந்தது; புதியதொரு அரசினையும் நிறுவினான். இப் புராணக் கதையைக் கொண்டு இவன் ஹொய்சால அரசின் முதல்வனாயிருத்தல் வேண்டுமென்ப தனையறியலாம்.

### அமைவிடம்

மைசூர் நாட்டினையும் அதனைச் சூழ்ந்துள்ள பகுதிகளும் போசள நாட்டிலடங்கியிருந்தன. இவ்வரசு கிருஷ்ணை, துங்க பத்திரா ஆகிய ஆறுகளுக்குத் தெற்கே அமைந்திருந்தது.

போசளர் மைசூர் மாநிலத்திலுள்ள கங்காவதி என்னுமிடத்தின் வடமேற்குப் பகுதியிலுள்ள மலைப்பகுதியில் வாழ்ந்து வந்தனர். 'காடூர் மாவட்டத்திலுள்ள முத்கீர் வட்டத்தைச் சேர்ந்த ஓர் கிராமமே போசளர்களின் பூர்வீகமான ஊரென்று மரபுவழிச் செய்திகள் சில கூறுகின்றன.

### போசள வேந்தர்கள்

போசள பேரரசனை நிறுவிய முதல்வன் சாலனேயாவான் என்பது பலரது கருத்தாகும். இவன் நிருபகாமா என அழைக்கப் பெற்றான். 'இராசமல்ல பெருமானாதி' என்னும் சிறப்புப் பெயரையுமிவன் பூண்டிருந்தான். இவன் பொதுமக்களின் பாதுகாப்பினையும் நலனையுங்கருதி, காட்டிலுள்ள புலிகளைக் கொன்று, மக்களிடம் நற்பெயர் பெற்றான். அஞ்சா நெஞ்சமும் போர்த்திறனுங் கொண்ட இவன் படிப்படியாக உயர்ச்சி பெற்று இறுதியில் சோசாகபுரம் என்னுமூருக்குத் தலைவனானான். சால னுக்குப் பின் இவனது மகனான வினயாதித்தன், சாளுக்கிய வேந்தனான ஆறாம் விக்கிரமாதித்தன் ஆணைக்குட்பட்ட சிற்றரசனாக ஆட்சி புரிந்து வந்தான். இவனுக்குப்பின் இவனுடைய பேரனான முதலாம் பல்லாளன் அரசு கட்டி லேறினான். தனது நாட்டின் கோநகரத்தினை சோசாகபுரத்தி னின்றும் பேலூருக்கு (Belur) மாற்றியவன் இவனேயாவாவன். இவன் தனது உடன்பிறந்தானை விஷ்ணுவின் துணையுடன் பாண்டியர்க்குரிய நொளம்பபாடியின்மீது படையெடுத்தான். அடுத்து, ஜகதேவா என்ற பரமார மன்னனின் படையெழுச்சி யினை முறியடித்தான். போசளப் பேரரசின் புகழ்பூத்த வேந்தர் களுள் முதலாம் பல்லாளனும் (கி.பி. 1100—1106) ஒருவனாவான்.

### விஷ்ணு வர்த்தனன்

முதலாம் பல்லாளனுக்குப் பின்பு அவனது தம்பியான பிட்டிகா (பிட்டிதேவா) பதவியேற்றான். இவன் விஷ்ணு வர்த்தனன் எனவும் அழைக்கப் பெறுகிறான். கி.பி. 1106 முதல் 1156 வரை ஆட்சி புரிந்த இவன் போசளரின் பெருமையினையும், புகழினையும் பெரிதுமுயர்த்திய பெருமைக்குரியவனாவான். நொளம்பபாடி, கங்கவாடி, தலைக்காடு ஆகிய இடங்களைத் தன்னாட்டுடன் இணைத்துக்கொண்ட இவன் கிருஷ்ணாநதி வரைத் தனது வெற்றிப் படையைச் செலுத்தினான்; கிருஷ்ணா நதிக்கரையில் விக்கிரமாதித்தியரால் இவனது முன்னேற்றம் தடை செய்யப்பட்டது. இவன் சுதந்திர அரசினை ஏற்படுத்தா விடினும் புகழ் படைத்த மன்னனாவான்.

**இரண்டாம் வல்லாளன்**

விஷ்ணுவர்த்தனனையடுத்து, அவனது மகனான முதலாம் விஜய நரசிம்மனும், அவனுக்குப்பின் இரண்டாம் வல்லாளனும் (கி.பி. 1172–1219) போசள நாட்டையாண்டனர். இவன் நொளம்பர், காளச்சூரிகள், யாதவர் ஆகியவர்களுக்கெதிராகப் போர்கள் பல புரிந்தான். பனவாசிக் கடம்பர்களுக்கெதிராகவும் இவன் போர் மேற்கொண்டான். சுந்தர பாண்டியனுக்கெதிராக மூன்றும் குலோத்துங்க சோழன், மூன்றும் இராசராச சோழன் ஆகிய வேந்தர்கள் மேற்கொண்ட போர்களில் சோழர்க்குப் பெருந்துணை புரிந்துள்ளான். கி.பி. 1194ஆம் ஆண்டு முதல், இவன் சுதந்திர வேந்தனானன். இதனால் இவ் வேந்தனே போசள நாட்டினை முழு உரிமையோடாண்ட முதல் மன்னனென்பது புலனாகும்.

இவ க்குப்பின் இவனது மகனான இரண்டாம் நரசிம்மன் (கி.பி. 1220—1234) மன்னனானன். இவன் பாண்டியரையும் பல்லவரையும் வென்றவனென்றும், நாடிழந்த மூன்றும் இராச ராச சோழனுக்கு அவனது நாட்டை மீட்டுக் கொடுத்தவ னென்றும் போற்றப் பெறுகிறுன். (சோழனுக்காதரவாக கி.பி. 1231ஆம் ஆண்டில் காவிரிக் கரையிலுள்ள மகேந்திரமங்கலம் என்னுமிடத்தில் சுந்தர பாண்டியனை வென்றதாகக் கூறப்படு கிறது).

**சோமேசுவரன்**

இரண்டாம் நரசிம்மனையடுத்து அவனது மகனான சோமேசு வரன் என்பான் அரியணையேறினன். கி.பி. 1234 தொடங்கி கி.பி. 1263 வரை இவன் கொலு வீற்றிருந்தான். இவனது காலத்தில் போசளப் பேரரசின் எல்லை தமிழகத்திற்கண்மையில் வந்துவிட்டது. சோழருக்கு உதவி புரியும் பொருட்டு திருவரங் கத்திலிருந்து ஏறத்தாழ நான்குகல் தொலைவிலுள்ள கண்ணனூர் கொப்பம் (விக்ரமபுரம்) என்னுமிடத்தில் கோநகரொன்றினைப் புதிதாக நிறுவினன். இக்காலை இது சமயபுரம் என்னும் பெயரால் அழைக்கப் பெறுகிறது. கி.பி. பத்து முதல் பன்னி ரண்டாம் நூற்றூண்டு வரையிலான எல்லாக் குறிப்புகளிலும் இது கண்ணனூர் கொப்பம் என்றே குறிக்கப்பெற்றுள்ளது. சோழர்களின் பகைவர்களான படை வீட்டைச் சேர்ந்த சம்புவ ராயர்கள், கடலூரைச் சேர்ந்த கோப்பெருஞ்சிங்கன் ஆகியோருடன் இவன் போர் மேற்கொண்டான். சடையவர்மன் சுந்தரபாண்டியனுக்கெதிரான போரில் இவன் வெற்றி வாய்ப் பினையிழந்தான்.

**பேரரசின் பிரிவு**

சோமேசுவரன் இரு மக்களைப் பெற்றிருந்தான். தனது வாழ்நாள் முடிவதற்குள் மூன்றும் நரசிம்மன், வீர ராமநாதன் ஆகிய இருவரையும் தனித்தனிப் பகுதிக்கு வேந்தனாக்கினான். தனது நாட்டினைச் சுற்றிப் பகைஞர்கள் இருந்ததால் தனது பேரரசினை இரு பிரிவுகளாகப் பகுத்தான். மூத்த மகனான மூன்றும் நரசிம்மன் (கி. பி. 1254—1291) அரசின் வடபகுதிக்கு அரசனாக்கப்பட்டான்; தென்பகுதியான தமிழ்நாட்டுப் பகுதியோ வீர ராமநாதனுக்குக் (கி.பி. 1254—1695) கொடுக்கப்பட்டது. கண்ணனூர்க் கொப்பம் இவனது கோநகராயிற்று. நரசிம்மன் யாதவர்களைப் போரில் வென்று அவரது கொட்டத்தினையடக்கினான். கி.பி. 1291-ல் இவன் உயிர் நீத்தான்.

**மூன்றும் வீர வல்லாளன்**

வீர ராமநாதனும், சோழ வேந்தனும் மூன்றும் இராசேந்திரனும் மாறவர்மன் குலசேகரப் பாண்டியனிடம் தோல்வி கண்டனர். வீரராமநாதனுக்குப் பின்னர் மூன்றும் வல்லாளன் அரசுப் பொறுப்பேற்றான். போசள வேந்தர்களுள் வீரமும் ஆட்சித்திறனும் ஒருங்கே அமையப்பெற்ற வேந்தனான இவன், தனது நாட்டின் இரு பகுதியினையும் ஒரே குடைக்கீழ் ஆண்டு வந்தான். இவன் கி.பி. 1291-ல் தொடங்கி 1342 முடிய ஆட்சி புரிந்தான். இவனது ஆட்சிக் காலத்தில்தான் முஸ்லிம் படைத் தலைவனான மாலிக்காபூர், துவாரசமுத்திரத்தின்மீது தாக்குதல் நிகழ்த்தினான்; கோட்டையையும் அழித்தான். மாலிக்காபூரின் படையெழுச்சி என்னும் சூறைக்காற்று சுழன்றடித்துச் சிறிது காலத்திற்குள் மற்றுமொரு முஸ்லிம் படையெழுச்சியென்னும் கடும்புயல் அங்கு வீசிற்று. இதனால் போசளர் மீண்டும் தலை தூக்க இயலவில்லை. தொடர்ந்து வந்த முஸ்லிம் ஆட்சியும் இவ்வரசின் முன்னேற்றத்திற்குத் தடைக்கல்லாக நின்றது. முஸ்லிம் ஆதிக்கத்தினை அழிப்பதனையே தனது மூச்சாகக் கொண்ட மூன்றும் வீரவல்லாளன் தனது தூய பணியில் வெற்றிபெற இயலாததொரு இக்கட்டான சூழ்நிலை உருவாயிற்று. முஸ்லிம்களை ஒழிக்கும் அறப்பணிக்கே தனது வாழ்வினை அர்ப்பணித்த இவன் கி. பி. 1312-ல் இம் மண்ணுலக வாழ்வை நீத்தான். இப் புகழ்பூத்த மன்னனுக்குப் பின் நான்காம் வல்லாளன் வேந்தனானான். இவனது ஆட்சியும் கி.பி. 1336-ல் முடிவுற்றது. விசயநகரப் பேரரசு யாண்டும் செங்கதிர் பரப்பும் வெங்கதிரோனாக எழுந்தது.

**பாண்டியப் பேரரசு**

கி.பி. பதின்மூன்றும் நூற்றாண்டளவில் தென்னகத்தில் செல்வாக்கு பெற்றுத் திகழ்ந்த நான்கு பேரரசுகளுள் பாண்டியப் பேரரசுமொன்று. இதனைப்பற்றி பின்னர் காண்போம்.

மேற்கூறப்பெற்ற நான்கு பெரும் பேரரசுகளேயன்றி மேற்குக் கடலோரத்தில் விளங்கிய கேரள நாடும் அன்று நல்லாட்சியினைப் பெற்றிருந்தது. இதனுள் வேணாடும் வேறு சில சிற்றரசுகளும் அடங்கியிருந்தன. கேரள நாட்டிலும் அன்று ஒற்றுமை நிலவவில்லை; பொது எதிரியான முஸ்லிம் படையினை வெல்லும் ஆற்றலுமில்லை.

அடுத்து, கி.பி. பதின்மூன்றும் நூற்றாண்டில், தென்னிந்தியாவில் பல குறுநில மன்னர்களும் தலைவர்களும் ஆண்டு வந்தனர் அவர்களுள் நெல்லூர் நாட்டினை ஆண்டு வந்த தெலுங்குச் சோழர்களும், ஒரிஸாப் பகுயினை ஆண்டு வந்த கலிங்கக் கங்க அரசர்களும், மங்கலாபுரத்தினை ஆண்டு வந்த ஆலூபத் தலைவரும் (The Aluppa Chieftains) குறிப்பிடத் தக்கவராவர். ஒரிஸா பகுதியினை ஆண்டு வந்த கீழைக் கங்கர் கி. பி. எட்டாம் நூற்றாண்டின் இடைப் பகுதியிலிருந்து நல்லாட்சி புரிந்தனர். இவர்கள் கி.பி. 1205-ல் ஒரிஸாவில் நிகழ்ந்த முஸ்லிம்களின் முதல் படையெடுப்பைத் தடுத்து நிறுத்திய போதிலும் மாலிக்காபூரின் வருகையின்போது பலம் குன்றியே காணப்பட்டனர்.

மேலைக்கங்க குலத்தினரும் கி.பி. 16ஆம் நூற்றாண்டு வரை ஆங்காங்கே சிற்றரசர்களாகத்தான் ஆண்டு வந்தனர்; வலிமை குன்றியே இருந்தனர்.

விந்திய மலைக்குத் தெற்கே கன்னியாகுமரிமுனை வரையுள்ள தென்னிந்தியப் பேரரசுகள் நான்கும் தனித்தனியாட்சியினை நிறுவியிருந்தன. பொருளாதாரத் துறையில் நல்ல முன்னேற்றமும் பெற்றிருந்தனர். இவர்களது செல்வச் சிறப்புப்பற்றி வட இந்திய மன்னர்களின் காதுக்கெட்டுகின்ற அளவிற்கு இருந்த தென்றால், அவர்களது செல்வச் செழிப்பினைப்பற்றிக் கூறவும் வேண்டுமோ? இவர்களுள் குறிப்பாக, அதுவும் சிறப்பாகப் பாண்டியரின் முத்து, பொன், இரத்தினம் ஆகிய விலையுயர்ந்த பொருள்களும், அவர்களது கடல் வாணிகச் சிறப்பும் வட இந்திய முஸ்லிம் வேந்தர்களது கருத்தைக் கவர்ந்தன.

**செல்வச் செழிப்பு**

கி.பி. பதின்மூன்றும் நூற்றாண்டில் தென்னிந்தியா இந் நான்குப் பேரரசுகளையே கொண்டிருந்தது; இக் காலத்திய தென் னிந்திய வரலாறும் இவர்களது சாதனைப் பட்டியலேயாகும். இந் நான்கு பேரரசுகளும் இந்துப் பேரரசுகளாதலின், அவர்களது கோயில்கள் செல்வக் களஞ்சியங்களாக விளங்கின. இதன் காரணமாவே உருவ வழிபாட்டினை (idolatory) ஏற்றுக் கொண் டிருக்கும் மக்களைத் தண்டிக்கவும், இந்துக் கோயில்களை அழித்து ஆங்கேயுள்ள விலையுயர்ந்த செல்வங்களைக் கொள்ளையிடவும், திருக்குரான் வாக்குப்படி முஸ்லிம் அல்லாதார்மீது புனிதப் போர் தொடுக்கவும்; முஸ்லிம்கள் தென்னகத்தில் படையெடுத் தனர். தென்னிந்திய அரசுகளிடம் ஒற்றுமையில்லாத காரணத் தால், பொது விரோதியான முஸ்லிம்களைத் தோற்கடிப்பதில் இவைகள் கூட்டு முயற்சியினை மேற்கொள்ளவில்லை. ஒற்றுமை யின்மையின் காரணமாகத்தென்னாடு முஸ்லிம்களின் வேட்டைக் காடாக மாறிற்று; தென்னகம் போர்க்களமாயிற்று. 'ஒன்று பட்டால் உண்டு வாழ்வு' என்னும் பொன்னான கொள்கையைப் பின்பற்றாத காரணத்தால் இப் பொன்னாடு மண்ணாயிற்று. தென்னிந்திய அரசுகள் முஸ்லிம் படையெழுச்சிக்கு அடிபணிந்த தையும், சிறப்பாகப் பாண்டியப் பேரரசு அடைந்த தொல்லை யினையும் ஈண்டு காண்போம். முஸ்லிம் படையெழுச்சியின் போது பாண்டிய நாட்டில் அமைதி நிலவவில்லை என்பதும் இவண் நினைவு கொள்ளத்தக்கதாகும்.

## யாதவ நாட்டின்மீது மாலிக்காபூர் படையெழுச்சி

**காரணங்கள்**

யாதவ நாட்டு இராமச்சந்திரனின் மகனான சங்கரதேவன் என்பான் தான் முன்பு ஒப்புக்கொண்டவாறு டில்லிப் பேரரசனான அலாவுதீன் கில்ஜிக்குச் செலுத்த வேண்டிய திறை யினைச் செலுத்தவில்லை. இராமச்சந்திரன் தனது மகனை வற் புறுத்திய போதிலும் சங்கரதேவன் திறைசெலுத்த இணங்க வில்லை. இதன் காரணமாக இராமச்சந்திரன் தனது மகனை அரச பதவியிலிருந்து நீக்கியதுடன், தனது ஆட்சியைத் தன்னிடம் ஒப்படைக்க ஆவன செய்யுமாறு அலாவுதீன் கில்ஜிக்கு வேண்டுகோள் விடுத்தான்.

அலாவுதீனும் கி. பி. 1307-ல் தனது படைத்தலைவனான மாலிக்காபூரின் தலைமையில் தேவகிரியை நோக்கிப் படையொன் றினையனுப்பி வைத்தான். மாலிக்காபூர் சங்கரதேவனைப்

போரில் வென்றான். முஸ்லிம் படைத்தலைவன் தேவகிரியைக் கொள்ளையடித்து, நாட்டையும் கைப்பற்றிக் கொண்டான். அத்துடன் இராமச்சந்திரனையும் அவனது குடும்பத்தினரையும் சிறை செய்து டில்லிக்கு அழைத்துச் சென்றான். பின்பு, இராமச்சந்திரன் தனது நாட்டை ஆளும் உரிமையை அலாவுதீனிடம் பெற்று, அவனுக்குற்ற நண்பனாயிருந்தான்.

### காகதீய நாட்டின்மீதுப் படையெழுச்சி

கி.பி. 1303-1304-ல் அலாவுதீன் கில்ஜியால் மாலிக் பக்ருதீன் ஜூனா என்பவனின் படைத்தலைமையில் வாரங்கல் நோக்கி அனுப்பப்பட்ட படை தோல்வி கண்டதுபற்றி அலாவுதீன் சினங்கொண்டிருந்தான். எனவே, இரண்டாவது படையெடுப்பொன்றினை நிகழ்த்தினான். இம்முறை மாலிக்காபூர் பெரும் படையுடன் தேவகிரி வழியாகக் கி.பி. 1310-ல் வாரங்கல்லை வந்தடைந்தான். வாரங்கல் கோட்டை முற்றுகையிடப் பெற்றது; முற்றுகை ஒரு திங்கள் நீடித்தது. பின்னர், காகதீய வேந்தனை இரண்டாம் பிரதாபருத்திரன் கப்பங்கட்ட ஒப்புக்கொண்டான். கி.பி. 1310-ல் மாலிக்காபூர் பெரும் பொருளுடன் டெல்லி சென்று அவற்றை வேந்தனிடம் சேர்ப்பித்தான்.

### போசள நாட்டின்மீதுப் படையெடுப்பு

பேராசை கொண்ட இவ் வலிப்படைத் தலைவன் (Eunuch-general) பின்பு போசள நாட்டின்மீது பாய்ந்தான். இத் தருணத்தில் போசள வேந்தனை மூன்றாம் வீரவல்லாளனோ தனது இழந்த பகுதியினை மீட்பதற்குப் பாண்டிய நாட்டின்மீது படைகொண்டு சென்றிருந்தான். தனது தலைநகரில் மாலிக்காபூர் படைத்தாக்குதல் நிகழ்த்துதலைக் கேள்விப்பட்ட வீரவல்லாளன் உடன் நாடு திரும்பினான். இவனது வேண்டுகோளுக்கிணங்க வீரபாண்டியனும் போசளருக்கு உதவியாகப் படையொன்றினை அனுப்பிவைத்தான். இருப்பினும் வீர வல்லாளன் முஸ்லிம் படைகளிடம் தோல்வி கண்டான்; மாலிக்காபூரிடம் உடன்பாடும் செய்து கொண்டான்.

பெருவீரம்படைத்த வீரவல்லாளன் தானணிந்திருந்த பூணூலைத்தவிர, மற்ற செல்வங்களனைத்தையும் மாலிக்காபூரிடம் ஒப்படைத்தான். வெற்றிமேல் வெற்றியும், பெருஞ் செல்வத்துடன் பொன்னும் மணியும், மின்னும் வைரமும் குவித்த மாலிக்காபூர் அடுத்து பாண்டி நாட்டின்மீதுப் படையெடுக்கும் முடிவுடன், போசள நாட்டில் இரு வாரம் தங்கியிருந்து, பாண்டிய நாட்டின் அரசியல் நிகழ்ச்சிகளைக் கூர்ந்து கவனித்து

வந்தான். முத்து விளைவிக்கும் பாண்டிய நாட்டினை அவன் கொத்தோடு பறிக்கத் திட்டமும் தீட்டிக் கொண்டிருந்தான்.

### மாலிக்காபூரின் படையெழுச்சியின்போழ்து பாண்டிய நாட்டின் அரசியல் சூழல்

மாறவர்மன் குலசேகர பாண்டியனது ஆட்சியின் இறுதிக் காலம் அமைதி நிறைந்ததாகக் காணப்பெறவில்லை; மாறாக அமைதி குறைந்த காலமாகக் காணப்பட்டது. சடையவர்மன் வீரபாண்டியன் கி.பி. 1297-ல் குலசேகர பாண்டியனின் இணைந்த அரசப்பகர ஆளுநராகப் (Co-Regency) பதவியேற்றான்; இவன் குலசேகர பாண்டியனது வைப்பு மனைவிக்குப்(Illegitimate Son) பிறந்த மகனென்று வாசப் குறிப்பிடுகின்றார். இவன் சடைய வர்மனென்னும் பட்டம் புனைந்து கொண்டான்.

இவன் பதவிக்கு வந்து, ஐந்து அல்லது ஆறாண்டுகள் கழிந்தபின்பு[1] சுந்தர பாண்டியனும் பாண்டி நாட்டின் இணைந்த அரசப் பகர ஆளுநராகப் பொறுப்பேற்றான். சடையவர்ம னென்னும் பட்டம் புனைந்து கொண்ட இவன் குலசேகரப் பாண்டியனது பட்டத்தரசிக்குப் பிறந்த மகனாவான் என்பது வாசப் அவர்களின் கூற்று. எனவே, வீரபாண்டியனும், சுந்தர பாண்டியனும், குலசேகரப்பாண்டியனது மக்களாவார் என்பதில் சிறிதும் ஐயமில்லை.[2] ஒரு சிறிய கருத்து வேறுபாடு யாதெனில் திரு. வாசப் அவர்கள் சுந்தரபாண்டியனை மூத்த மக னென்றும் வீரபாண்டியனை இளையமகனென்றும் குறிப்பிடுகிறார்.

குலசேகரப் பாண்டியனது மக்களிருவருக்கும் ஏற்பட்ட பகைமையுணர்ச்சியும், பட்டத்துக்கராறும் நாட்டில் உள்நாட்டுப் போரினை உருவாக்கியது; குலசேகரப் பாண்டியன் கொல்லப் பட்டான்; நாடு குழப்பத்தில் தள்ளப்பட்டது. இதுபற்றிப் பலவிதமான கருத்துக்கள் நிலவுகின்றன; இதனால் இதன் தொடர்பான செய்திகளை நாம் முறையாக அறிந்துகொள்ளக் கூடவில்லை. வாசப் அவர்கள் இந் நிகழ்ச்சிகளை நன்கு விளக்கிக் கூறுகிறார். ஆயினும் இவரது விளக்கங்களை உறுதி செய்வதற் கான வேறுசான்றுகள் நமக்குக் கிடைத்தில. அதுமட்டுமின்றி இவரது குறிப்பும், காலவரையறையும் (Chronology) குல சேகரனது காலத்திய கல்வெட்டுகளுடன் ஒத்திராது மாறு

[1] Indian Ephemeries, Vol. i, part ii, p. 107. கி.பி. 1303ஆம் ஆண்டு மார்ச் திங்கள் 31ஆம் தேதியிலிருந்து அதே ஆண்டு மே திங்கள் 16ஆம் தேதிக்குள் பொறுப்பேற்றான் எனலாம்.

[2] Elliot and Dowson, Vol. iii, pp. 52-53.

பட்டிருக்கிறது. எனவே, ஈண்டு நாம் வாசப் அவர்கள் தமது குறிப்பில் இதுபற்றி யாது கூறுகின்றார் என்பதனை விளக்கமாகக் காண்போம்.

## மாலிக்காபூர் படையெழுச்சிபற்றி வாசப் கூற்று

"திரபாண்டி (வீரபாண்டியன்) ஆற்றலும், கூர்த்தமதியும் ஒருங்கமைந்து போற்றத்தக்க வீரனாய் விளங்கிய காரணத்தால், குலசேகரப் பாண்டியன் அவனுக்கு, தனக்குப் பின்பு நாடாளும் உரிமையினை வழங்கினான். தனது உரிமைகளைப் புறக்கணித்துத் தனது சகோதரனுக்கு ஆட்சியுரிமையினையளித்தது கண்டு 'சுந்தரபாண்டி' வெஞ்சினங் கொண்டு வெகுண்டெழுந்தான்; ஹிஜிரி 907–ஆம் ஆண்டினிறுதியில் (கி. பி. 1310) கடமையுணர் வின்றித் தனது தந்தையினைக் கொன்றான்; மர்தி (மதுரை) என்னும் நகரத்தில் முடிசூட்டிக்கொண்டான். ஆங்கிருந்த படைகளைத் தனக்கு ஆதரவளிக்க வற்புறுத்தினான்.......இதனைக் கண்ட திரபாண்டி தனது தந்தையின் இறப்புக்குப் பழிக்குப் பழிவாங்க முடிவெடுத்தான்; படை திரட்டினான். 'தளச்சி' என்று அவர்கள் மொழியில் கூறப்படுகின்ற ஏரிக்கரையருகே இரு படைகளும் சந்தித்தன. சுந்தர பாண்டியன், வீரபாண்டியன் ஆகிய இருவரும் போர்க்களத்தினின்றும் ஓட்டம் பிடித்தனர்; திரபாண்டி படுகாயமுற்றான்; மாற்றானிடம் அகப்பட்டுக் கொண்டான்; ஆங்குக் கைப்பற்றப்பட்டப் பொன் யாவும் ஏழு யானைகள்மீது ஏற்றப்பட்டன; இவையனைத்தும் சுந்தரபாண்டியனது கையில் சிக்கியது. அதுபோழ்து கேல்ஸ் தேவரது (Kales Dewar) பேரனான 'மனர்பர்முள்' என்பவன் வீரபாண்டியனுக்குப் படையுதவியளிக்க முன்வந்தான். கலூலுக்கு (Kalul) அருகாமையிலுள்ள கரம் ஹத்தியில் தங்கியிருந்த அவன் பெரும் படையுடன் புறப்பட்டுச்சென்று வீரபாண்டியனுடன் சேர்ந்து கொண்டான். இவண் கலூல், கரம்ஹத்தி (Karamhati) என்பது கரூரும், அதற்கருகிலுள்ள பரமத்தி என்னும் ஊராகவும் இருத்தல் வேண்டும்... .....ஹிஜிரா 710-ஆம் ஆண்டின் (கி. பி. 1310) இடைப்பகுதியில் பெரும்படையொன்றின் துணைகொண்டு தீர்பாண்டி, சுந்தர்பாண்டியனை ஒழித்துக்கட்டச் சென்றான்; இப் படையினைக்கண்டு சுந்தர்பாண்டி நடுநடுங்கினான்; அஞ்சினான்; தாய் நாட்டினின்றும் ஓட்டம் பிடித்தான்; டில்லியிலுள்ள அலாவுதீன் கில்ஜியிடம் அடைக்கலம் புகுந்தான். தீர்பாண்டி தனது முன்னோரது பேரரசின்கண் நிலையாக, பலமாக அமர்ந்து கொண்டான்."

## குலசேகரன் கொலை செய்யப்படல்

வாசப் அவர்களது குறிப்பில் குலசேகரப் பாண்டியன் கி. பி. 1310-ஆம் ஆண்டு மே-ஜுன் திங்களில் (ஹிஜிரா 709) கொலை செய்யப்பட்டதாகக் குறித்துள்ளார். இந் நிகழ்ச்சி மாலிக்காபூர் துவாரசமுத்திரத்தில் தனது தாக்குதலை நிகழ்த்துவதற்கு முன்பே நடைபெற்றதாகக் கொள்ளலாம். இதற்கு மாறாக, குலசேகரனது நாற்பத்து நான்காமாட்சியாண்டுக் கல்வெட்டுகள் நமக்குக் கிடைத்துள்ளன. இவனது நாற்பத்து நான்காமாட்சி யாண்டு ஜுன் 10, கி.பி. 1311-க்குப் பிறகுதான் ஆரம்பமாகிறது. நமக்குக் கிடைத்துள்ள கல்வெட்டுகளுள் இராமநாதபுரம் மாவட்டம் திருக்காளக்குடியில் கிடைக்கப்பெற்றுள்ள கல் வெட்டும் ஒன்றாகும். இதில் இவன் 'எம்மண்டலமுங் கொண் டருளிய' என்னும் பட்டத்தினைக் கொண்டுள்ளான். இது இவ் வேந்தனது பட்டந்தான் என்பதில் ஐயமில்லை. வாசப் கூறுவது போன்று குலசேகரப் பாண்டியன் கி. பி. 1310-ல் கொல்லப்பட் டிருந்தால், இவனது கல்வெட்டு கி. பி. 1311-ல் வெளிவருதல் இயலாத காரியமாகும். பொதுவாக ஒரு வேந்தன் இறந்தபின்பும் அவனது ஆட்சியாண்டின் தொடர்ச்சியாகக் கல்வெட்டுகளை வெளியிடுவது தமிழகத்தின் முறையன்று. இவ் வேந்தன் இறந்துபட்டு ஓராண்டு கழித்து இவனது மகனும் இவனது ஆட்சியாண்டின் தொடர்ச்சியாகக் கல்வெட்டினை வெளியிட்டா னெனக் கொள்வதும் பொருத்தமாகத் தோன்றவில்லை. எனவே, வாசப் கூறுகின்ற தேதியும், கல்வெட்டுக் கூறுகின்ற தேதியும் ஒன்றுக்கொன்று முரண்பட்டுள்ளதென்பது குறிப்பிடத்தக்க தாகும்.[1] குலசேகரப் பாண்டியனது கல்வெட்டு, தலைநகராம் மதுரைக்கருகாமையிலேயே கிடைத்துள்ளது என்பதனை நாம் நினைவிற் கொள்ள வேண்டும்.

### சுந்தரபாண்டியன் கிளர்ச்சி செய்தது ஏன்?

வீரபாண்டியன் கி. பி. 1297-ல் ஆட்சிப் பொறுப்பில் பங்கு கொண்டதும், சுந்தரபாண்டியன் கி. பி. 1303 முதல் ஆட்சிப் பொறுப்பில் இடம் பெற்றதும் நாம் முன்பே கண்டோம். சுந்தர பாண்டியன் 1303 முதல் அரசாட்சியில் பங்கு கொண்டிருந்தும் கி.பி. 1311-ஆம் ஆண்டுதான் தனது உரிமைப் பறிக்கப்பட்டதாக வெகுண்டெழுந்து தனது தந்தையைக் கொன்றிருக்கிறான். சுந்தரபாண்டியன் இத்துணைக் காலம் எதிர்ப்புத் தெரிவிக்காது

[1] திரு.எஸ். கிருஷ்ணசாமி ஐயங்கார் இதுபற்றிய செய்தியினைத் தமது நூலில் ஆராய்ச்சிக்கு எடுத்துக் கொள்ளவில்லை.
Op. cit 55, 59, 96 and 97.

இருந்ததேன்? வீரபாண்டியன் அரசுப் பொறுப்பில் நியமிக்கப்பட்டு ஏறத்தாழ பதின்மூன்றாண்டுகள் கழிந்த பிறகே இவனது எதிர்ப்பு வெடித்திருக்கின்றது. தொடக்க காலத்திலேயே இவன் ஏன் தன் உரிமையினை மன்னனுக்கு உணர்த்தித் தனது உரிமைக்காகப் போராடவில்லை? என்னும் கேள்விகளெழுவதும் இயற்கையேயாகும்.

**கொலையின் காரணம்**

இவ் வினாக்களுக்கு நாம் கீழ்க்காணும் விடையைத்தான் கூறவியலும். வீரபாண்டியனையும், சுந்தரபாண்டியனையும் அரசப் பிரதிநிதிகளாக நியமித்த குலசேகரப் பாண்டியன் கி.பி.1311-ஆம் ஆண்டிற்கு முன்பு, தனக்குப் பின்பு பாண்டி நாட்டினையாளு முரிமையினை, தகுதியும் வீரமுமிக்க வீரபாண்டியனுக்கே வழங்குதல் வேண்டுமென்ற தனது முடிவினைத் தெரிவித்திருக்க வேண்டும். தனக்கு அரசப்பதவி கிடைக்குமென்று நீண்டநாட்களாக ஆவலுடன் காத்திருந்த சுந்தரபாண்டியன், தான் வீரபாண்டியனுக்குக்கீழ் அரசப் பிரதிநிதியாகவோ அல்லது அவனைவிடத் தாழ்ந்ததொரு பொறுப்பிலோ அமர மனம் பொறாமல் வெகுண்டெழுந்திருக்க வேண்டும். பட்டத்தரசியின் மகனாகத் தானிருக்கத் தனக்குக் கிடைக்க வேண்டிய அரசப்பதவி, வைப்பாட்டி மகனான அவனுக்குக் கிடைப்பதா? இது முறையா? என்று மனம் வெதும்பிய சுந்தரபாண்டியன் இதற்கெல்லாம் காரணமான தனது தந்தையினைக் கொன்றான்; பழிதீர்த்துக் கொண்டான்; அரசு கட்டிலேறினானென்று கொள்ளலாம்.[1] பாண்டிய நாட்டின்கண் மாலிக்காபூரால் மேற்கொள்ளப்பட்ட படையெழுச்சியினைவிவரித்துக் கூறும்முஸ்லிமதிய வரலாற்றறிஞர்களான அமீர்குஸ்ருவும் சியாவுதீன் பரணியும் (Amir Khusru and Zia-uddin-Barani) குலசேகரன், வீரபாண்டியன்பற்றிக் குறிப்பிடும்பொழுது, குலசேகரப் பாண்டியனது முடிவுபற்றி யாதும் குறிப்பிடாதிருத்தல் விந்தையாகவுள்ளது.

குலசேகரப் பாண்டியன் சுந்தர பாண்டியனால் கொல்லப்பட்ட செய்தியை நாம் ஏற்றுக்கொண்டாலும், ஏற்றுக்கொள்ளாவிட்டாலும், மாலிக்காபூர் பாண்டிய நாட்டின்மீதுப் படையெடுத்தபோது குலசேகரப் பாண்டியன் உயிருடனில்லையென்பதனை மட்டும் உறுதியாக நாம் அறியலாம்.

[1] திரு. எஸ். கிருஷ்ணசாமி ஐயங்கார், இக் கருத்தினையே வலியுறுத்துகின்றார்.
Krishnasamy Ayyangar, S. Dr. 'South India and Her Muhammadan Invaders' p. 96.

**மாலிக்காபூருக்கு அழைப்பு**

தனது தந்தையைக்கொன்ற சுந்தரபாண்டியனைத் தண்டிக்க வீரபாண்டியன் உறுதிபூண்டான்; சுந்தரபாண்டியனை வெற்றி கொண்டான்; அவனை மதுரையை விட்டு விரட்டினான். மதுரையினைவிட்டுத் துரத்தப்பட்ட சுந்தர பாண்டியன் ஓடினான்; உதவியை நாடினான். இறுதியில் டில்லிப் பேரரசினை ஆண்டு வந்த அலாவுதீனின் காலடியில் வீழ்ந்தான். இவன் டெல்லி சென்று சுல்தானின் உதவியை நாடியிருக்க வேண்டும். அல்லது தென்னிந்தியாவில் தனது படையெழுச்சியினை வெற்றிகரமாக நிகழ்த்திக் கொண்டிருந்த மாலிக்காபூரைச் சந்தித்து அவனிடம் முறையிட்டிருக்க வேண்டும். இதனையே நல்லதொரு வாய்ப்பாகக் கொண்டு மாலிக்காபூர் மதுரையின்மீது படையெடுத்தானென்று வாசப் அவர்கள் கருதுகின்றார்.

**அமீர்குஸ்ருவின் கூற்று**

முஸ்லிம் வரலாற்றறிஞரான அமீர்குஸ்ரு என்பானும் வாசப்பின் கருத்தினை உறுதி செய்கிறான். 'இதுகாறும் ஒற்றுமையாக மாபார் பகுதியினையாண்டுவந்த இருவரும் அதாவது மூத்தவனான பீர்பாண்டியனும் (வீரபாண்டியன்) இளையோனான சுந்தர்பாண்டியனும் தங்களுக்குள் வேறுபட்டு, மாறுபட்டு போர்க்கோலம் பூண்டுள்ளனர்' என்று மாலிக்காபூரிடம் கூறப்பட்டதாக அமீர் குஸ்ரு குறிப்பிட்டுள்ளார்.[1]

துவாரசமுத்திரத்தில் பொன்னும் மணியும் பெரும் பொருளும் கவர்ந்து கொண்ட மாலிக்காபூர் ஷவ்வல் பதினெட்டாம் தேதி புதன்கிழமை போசள நாட்டினின்றும் மாபார் நாடு நோக்கித் தனது படைகளை நடாத்திச் சென்றான். ஐந்தே நாட்களில் முகம்மதியப்படை மாபாரையும்போசள நட்டையும் பிரிக்கும் மலைப்பகுதியினையடைந்தது. பின்பு, அப் படை அங்கிருந்து 'சர்மலி', 'தபர்' (Sarmalal and Tabar) என்னும் கணவாய்களைக் கடந்து 'கனேபரி' ஆற்றங்கரையையடைந்து, அந்த இரவினை ஆற்றங்கரையில் கழித்தது. விடியற்காலையில் முகம்மதியப்படை 'பீர்துல்' (Birdhul) என்னும் நகரினை நோக்கி வீரநடைபோட்டது. முஸ்லிம்படை பீர்தூலை நோக்கி வருவதனையறிந்த வீரபாண்டியன் வலிமைமிக்க முஸ்லிம்படைகளை நேருக்கு நேர் எதிர்த்து நின்று போர் புரிய விரும்பவில்லை. அவ்வாறு செய்தல் தங்களது அழிவினைத் தாங்களே தேடிக்கொள்வதாக முடியுமென்பதனை எண்ணி, முஸ்லிம்களை நேரடிப்போரில்

[1] Elliot and Dowson, Vol. iii, p. 88

எதிர்க்காது, அவர்களைப் பல இடங்களுக்கும் அலைக்கழித்து, அவர்களைக் களைக்க வைத்து, வலிமையினைக் குறைத்து, அவர் களுக்கடங்காதிருக்க முடிவு செய்தான். இத்தகைய போசனை அவனுக்கு நல்ல பயனும் தந்தது. பீர்துல்லையடைந்த அப்படை எதிர்ப்படைகளானது ஆங்குக் காணாது களித்து, அந் நகரினை யழித்து, நிர்மூலமாக்கி, அதனைச் சுற்றியுள்ள பகுதிகளிலும் பேரழிவினை ஏற்படுத்திற்று; பெரும் பொருளைக் கொள்ளையடித்து ஒருவாறு மனவமைதி பெற்றது. 'ராய்பீர்' (Raibir) பீர்தூலி லிருந்து 'கந்தருக்கு'ச் (Kander) சென்று தங்கியிருந்தான்; மாலிக்காபூரது படைகள் வீரபாண்டியனைப் பின் தொடர்ந்து கந்தர் சென்றது. ஆங்கு அவன் காணப்படவில்லை. முகம்மதியப் படைகளை அலைக்கழித்து அவர்களைக் களைக்க வைத்த வீரபாண் டியன் கந்தருக்கருகிலுள்ள அடர்த்தியான காடுகளில் ஒளிந்து கொண்டான்.

**பீர்துல் யாது?**

இவண் 'பீர்துல்' என்று அமீர்குஸ்ருவால் குறிக்கப்பெறுவது சோழவேந்தர்களின் பண்டைத் தலைநகராம் உறையூருக்கருகில் இருந்ததாக அறிஞர்கள் கருதுகின்றனர். 'ராய்பீர்' என்பது பாண்டி வேந்தனும் வீரபாண்டியனையும், 'கந்தூர்' என்பது போசளர்களின் தலைநகராம் 'கண்ணனூர்'[1] என்னும் நகரினையும் குறிப்பதாகக் கொள்ளலாம். கண்ணனூர் திருச்சியிலிருந்து வடக்கே ஏறத்தாழ எட்டுக்கல் தொலைவிலுள்ளது. கனோபரி ஆறென்பது காவிரியாறாகும்.

கண்ணனூரில் வீரபாண்டியனைக் காணாது மாலிக்காபூர் வருந்தினன்; அதுபோழ்து கண்ணனூரில் இருபதினாயிரம் முஸ்லிம்கள் இந்துக்களின் ஆட்சியில் அடங்கிக்கிடப்பதனைக் கண்டு மனம் பொறாமல் அவர்களைத் தனது படையில் சேர்த்துக் கொள்ளத் திட்டமிட்டான். அவர்களே முன்வந்து மாலிக்கா பூரிடம் சேர்ந்துகொள்ள உடன்பட்டதால் மாலிக்காபூர், அவர்களுக்கு, அடைக்கலந் தந்து (Half Hindus) தன்னுடன் சேர்த்துக் கொண்டான்.

**ஜல்கோடா செல்லல்**

வீரபாண்டியன் கண்ணனூர்க் காட்டிலிருந்து வெளிப்பட்டு 'ஜல்கோடா' என்றவிடத்திற்குச் சென்று விட்டான். இது

1 இது வடமொழியில் 'கந்தனபுரம்' எனவும், தமிழ் இலக்கியங்களில் கண்ணனூரெனவும் அழைக்கப் பெறுகிறது. போசள மன்னனான சோமேசுவ ரனது காலத்தில் 'திரு விக்ரமபுரம்' என்று அழைக்கப்பட்டது.

பாண்டியரின் தொன்மைச் சிறப்பு மிக்க நகரமாகும். ஜல்கோடா வரை பாண்டி வேந்தனைத் தேடிச்சென்ற மாலிக்காபூர், அவனை ஆங்குக் காண முடியவில்லை. பாண்டிவேந்தனே அதனருகிலுள்ள காடுகளில் படையுடன் புகுந்து கொண்டான். பாண்டி வேந்தனைத் தேடித்தேடியலைந்து களைப்புற்ற மாலிக்காபூர் பெருத்த ஏமாற்றத்துடன் கண்ணனூர் திரும்பினன். இவ்வாறு அவன் பலவிடங்களுக்கு அலைக்கழிக்கப்பட்டதால் மாலிக்காபூருக்கு ஆட்சேதமும் பொருட்சேதமுமேற்பட்டது. கண்ணனூரில் பல யானைகளையும், பெருஞ்செல்வத்தினையுங் கவர்வதன் மூலம் இவ் விழப்பினை மாலிக்காபூர் ஈடு செய்து கொண்டான்.

**சிதம்பரம்**

அலைக்கழிக்கப்பட்ட முகமதியப் படைத்தலைவன் ஓய்வெடுத்துக் கொண்டிருந்த காலை, 'பிரமஸ்த் பூரி' 'Brahmastpuri' என்னுமிடத்திலுள்ள பெரிய ஆலயத்தில், பொன்னலான இறைவனது படிவமும், யானைகளும் இருக்கும் செய்தியைக் கேள்விப்பட்டான். அவற்றைக் கைப்பற்றவும் திட்டந் தீட்டினன். ஆசை யாரை விட்டது? இரவென்றும் பாராது முகம்மதியப்படை 'பிரமஸ்த்பூரி'யை நோக்கி விரைந்தது. அதிகாலைக்குள் அப்படை 250 யானைகளுக்குமேல் கைப்பற்றியது; இந்துக்களின் புனிதக்கோயில் தரைமட்டமாக்கப்பட்டது; கோயிலைக்காத்து நின்ற பார்ப்பனர்களும் வீரர்களும் கொலை செய்யப்பெற்றனர். குருதி ஆறு ஓடிற்று. மகாதேவரது லிங்கமும், தேவநாராயணனது லிங்கமும் அடியோடு சாய்க்கப்பட்டது. அக்கோயிலில் வைக்கப்பட்டிருந்த படிமங்களனைத்தும் தரையுடன் பெயர்த்தெடுக்கப்பட்டன; சுக்கு நூறாகவுடைக்கப்பட்டன; பீடத்தினடியிலுள்ள விலையுயர்ந்த பொன்னும் மணியும் முகம்மதியர்களால் கைப்பற்றப்பட்டன. இந்த லிங்கங்களுக்குக் காலிருந்திருந்தால் அவையனைத்தும் உயிர் தப்பிப் பிழைத்தால் போதுமென்று ஓட்டம் பிடித்திருக்குமென்று அமீர்குஸ்ரு நகைச்சுவையுடன் இந் நிகழ்ச்சியினைத் தீட்டியுள்ளார். கோயில்கள் தீக்கிரையாக்கப்பட்டன; நகரமும் எரியூட்டப்பட்டது; இளம்பெண்களது கற்பு சூறையாடப்பட்டது; ஆண்களும் பெண்களும் குழந்தைகளும் கொல்லப்பட்டனர்; சிலர் உயிர்பிழைத்தால் போதுமென்றுத் தமது உடைமைகளையெல்லாம் விட்டுவிட்டு, நகரத்தை விட்டுத் தலைதெறிக்க ஓடினர்.

**உறையூர்**

பிரமஸ்த்பூரியில் பேரழிவினை நிகழ்த்தி, உருவவழிபாடு செய்யும் (Idolators) உளுத்தர்களை வெட்டி வீழ்த்தித் தங்களது சினத்தினை ஒருவாறு தணித்துக் கொண்ட முகம்மதிய வீரர்கள் 'பீர் தூல்' நோக்கிப் புறப்பட்டனர். ஆங்காங்குத் தம் கண்ணிற் பட்ட கோயில்களை இடித்துத் தரைமட்டமாக்கினர்; இறைவனது படிமங்களை இடுப்பொடியத் தள்ளியுடைத்து நொறுக்கினர். இவ்வாறு முகமதிய வீரர்கள் சில்காதா 13, A.H. 710-ல் (கி. பி. ஏப்ரல் 1311) பீர்தூலிலிருந்த கோயில்களில் அட்டூழியங்கள் புரிந்தனர். பொன்னும் மணியும் வைரமும் வைடூரியமும் அள்ளிச் சென்றனர்; தங்களது பண்டாரத்தை (Treasury) நிரப்பினர். பீர்தூலிலிருந்த கோயில்களும் அதனைச் சுற்றிலுமிருந்த கோயில்களும் முகம்மதியரின் வெறியாட்டங்களுக்குட் பட்டன; வரைமுட்டும் கோயில்கள் தரைமட்டமாயின.

**பிரமஸ்பூரி யாது ?**

'பிரமஸ்பூரி'க் கோயில் முகம்மதியப் படையால் கொள்ளையடிக்கப்பட்ட நிகழ்ச்சியினை அமீர்குஸ்ரு மேற்சொன்னவாறு தரீக்-இ-அலைய் (Tarikh-i-Alai) என்னும் நூலின்கண் விளக்கியுள்ளார். பிரமஸ்த்பூரி என்று அவரால் குறிக்கப்பட்ட நகரம் யாதென்பதனை நாம் முதலில் தெரிந்து கொள்ள வேண்டுமல்லவா? இதனை நாம் அறிந்து கொள்ள வேண்டுமெனின் மாலிக்காபூர் அக் கோயிலில் நிகழ்த்திய அழிவினையும், அவனுடைத்த படிமங்களையும் நமது மனக்கண்முன் கொண்டு வந்து நிறுத்துதல் வேண்டும். முதலாவதாக அக் கோயில் பொன்னால் வேயப்பட்டு, மணிகள் பதிக்கப்பட்டு அழகு செய்யப்பட்டிருந்ததென்பதனை அறிகிறோம். அடுத்து, அங்குச் சிவலிங்கமும் (லிங் மகாதேவ்) விஷ்ணு விக்ரகமும் (தேவ் நாரைன்) அழிக்கப்பட்டதாகத் தெரிவதால், அது சிவனுக்கும் திருமாலுக்கும் சேர்ந்த கோயிலாக இருத்தல் வேண்டுமென்பது உறுதியாகத் தெரிகிறது. இவற்றையெல்லாம் நாம் மனத்திற் கொண்டு பார்க்குங்கால் இது சிதம்பரத்தைக் குறிப்பதாகக் கொள்ளலாம்.

**சிதம்பரமே!**

சிதம்பரம் சைவ இலக்கியங்களில் 'பிரம்மபூரி' என அழைக்கப்படுகிறது. சிதம்பரத்தின் வடபால் 'திருக்கலாஞ்சேரி' (Thirukkalancheri) என்றழைக்கப்பெறுகின்ற கோயில் ஒன்றிருக்கிறது. அக் கோயிலில் எழுந்தருளியுள்ள இறைவன்

'பிரம்மபூரீஸ்வரர்' எனவும், கோயில் பிரம்மபூரி, எனவும் பெயர் பெறுகிறது. இக் கோயிலில் ஆண்டுதோறும் சிறப்பாகத் திரு விழாக்கள் நடைபெறுதல் வேண்டி, மூன்றும் குலோத்துங்க சோழன் ஆயிரத்து நூறு தங்க நாணயங்கள் அளித்துள்ள செய்தி கல்வெட்டுகளால் புலனுகின்றது. சிதம்பரம் கோயிலில் பொன்னம்பலம் (Golden Hall) உள்ளது; பொன்னுல் வேயப் பட்ட கூரையுள்ளது; இங்குப் பொன்னும் மணியும் மிகுந் திருந்தது. பேராதிக்கச் சோழர்கள் பொன்னம்பலவாணனைத் தமது குலதெய்வமாகக் கொண்டு, அவ் விறைவனுக்கு அடிக்கடி நிவந்தங்கள் அளித்து அறக்கொடைகள் பல அளித்துள்ள நிகழ்ச்சி நாமறிந்தவொன்றுகும். குறிப்பாக அதிலும் சிறப்பாக முதலாம் இராசேந்திர சோழனுக்குப் பின்பு பட்டத்திற்கு வந்த சோழப்பெருமன்னர்கள் தில்லைக்கூத்தன்பால் எல்லையில்லாக் காதல் கொண்டு, பொன்னம்பலவாணனின் பொன்னடி வணங்கி, அவனது நல்லாட்சி பெற்ற பின்பே முடிபுனைந்து கொள்ளும் வழக்கத்தினைக் கொண்டிருந்தனர்.[1] முதலாம் இராசேந்திரன் ஆடவல்லான்மீது கொண்டிருந்த பேரன்பினை யான் இயற்றியுள்ள 'முதலாம் இராசேந்திர சோழன்' என்னும் நூலில் காண்க.[2] எனவே, 'பிரம்மஸ்த்பூரி' என்று அமீர்குஸ்ரு குறிப்பிட்டிருப்பது சிதம்பரமாக இருக்கலாமென்று கூறலாம்.

**இராமேசுவரமா ?**

அடுத்து, 'பிரம்மஸ்த்பூரி' என்பது சீர்காழி, இராமேஸ் வரம், திருவரங்கம் ஆகியவற்றுள் ஒன்றுக இருத்தல் கூடு மென்றும் எண்ணலாம். ஒரே உதையில் லிங்கம் இலங்கை நாட்டின்கண் தாண்டி விழுந்ததென்று அமீர்குஸ்ரு குறிப் பிடுவதனுல் இது இராமேசுவரமாக இருக்கலாமென்று யூகிக்கலாம்.

ஆனுல், மற்ற செய்திகளனைத்தும் சீர்காழிக்கும், இராமேசு வரத்திற்கும் பொருத்தமாக இல்லை. அடுத்துத் திருவரங்கத்தில் பொன்னுல் வேயப்பட்ட கூரையுள்ளது; விலையுயர்ந்த மணி களும், பொன்னும் இந்தியாவின் பலபகுதிகளிலுள்ள மக்களை ஈர்க்கும் தன்மையுமுள்ளது. இருப்பினும் இங்குச் சிவனுக்கும் விஷ்ணுவுக்கும் இணைந்த கோயிலில்லை. எனவே, 'பிரமஸ்பூரி' என்பது சிதம்பரமாகவே இருத்தல் வேண்டுமென்பது புலனு

[1] 'குலோத்துங்க சோழனுலா' மதுரை சங்கச் சுவடிகள்.

[2] இராசசேகர தங்கமணி, ம, 'முதலாம் இராசேந்திர சோழன்' பக்கம் 203-204.

கின்றது. திரு. எஸ். ராய் அவர்களும் இதனைத் தற்காலத்திய சிதம்பரம் என்றே குறிப்பிடுகின்றார்.[1]

சிதம்பரத்தில் வசித்து வந்த மக்கள் கொன்று குவிக்கப் பட்டனர்; பொற்கோயில் தரைமட்டமாக்கப்பட்டது; அதன் அஸ்திவாரமும் தோண்டியெடுக்கப்பட்டது; பெரும் பொருள் கொள்ளையிடப் பெற்றன. எல்லையில்லாப் பொருட்களை இரு நூற்றைம்பது யானைகளில் ஏற்றிக்கொண்டு முஸ்லிம்படை கி.பி. 1311-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதமிரண்டாம் நாள் பீர்தூலை நோக்கிப் புறப்பட்டது.

**திருவரங்க அரங்கநாதர்**

சிதம்பரம் கோயிலை இடித்துத்தள்ளி, ஆங்குப் பேரழிவினை ஏற்படுத்திப் பெரும்பொருளைக் கைப்பற்றிய மாலிக்காபூர், அடுத்து, 'பீர்தூல்' நகரத்திலுள்ள கோயில்களையும், அதனைச் சூழ்ந்துள்ள கோயில்களையும் அழித்தானென்று அமீர்குஸ்ரு குறிப்பிடுகின்றார். பீர்தூலிலிருந்து கண்ணனூருக்கு (கந்தூர்) வீரபாண்டியனைப் பின்தொடர்ந்து சென்ற மாலிக்காபூரது கழுகுக் கண்களுக்குத் திருவரங்கம் தப்பியிருக்க முடியாது. ஏனெனில், திருவரங்கம் அக் காலத்திலேயே பெருஞ்செல்வங் கொண்ட கோயிலாகவும் புகழ்பெற்றதாகவுமிருந்தது. மேலும், சுந்தரபாண்டியன் இக் கோயிலுக்குப் பல நிவந்தங்கள் அளித்துள்ளான். மன்னர்களது நிவந்தங்களைப் பெருமளவில் பெற்று மக்களிடையே பெரும்புகழ் பெற்றிருந்த இத் திருக்கோயில் மாலிக்காபூரது கவனத்தைக் கவர்ந்திருக்குமென்பதில் சிறிதும் ஐயமில்லை.

**கோயிலுலகு கூறும் சான்று**

மாலிக்காபூர் திருவரங்கம் திருக்கோயிலில் நிகழ்த்திய பேரழிவினைக் 'கோயிலுலகு' என்னும் நூலின் வாயிலாக ஒருவாறு அறியலாம். இக் கோயிலமைக்கப்பட்ட நாள் முதல் பதினெட்டாம் நூற்றாண்டு வரையிலான இக் கோயிலின் வரலாறு பற்றியும், இக் கோயிலுக்கு நிவந்தங்கள் அளிக்கப்பட்ட வரலாறுபற்றியும் இந்நூல் தெளிவாகக் குறிப்பிடுகின்றது. இந் நூலில் இடம்பெற்றுள்ளப் பல செய்திகள் அக் கோயிலில் பொறிக்கப்பட்டுள்ள கல்வெட்டுகளை அடிப்படையாகக் கொண்டவையாகும். முகம்மதியர் படையெழுச்சியின்போது திருவரங்கம்

[1] 'History and Culture of the Indian People' Vol. VI. 'The Delhi Sultanate' p. 36.
'Bharatiya Vidya Bhavan Series'

கோயில் கொள்ளையடிக்கப்பட்டதும், அதுபோழ்து அரங்க நாதரின் படிமம் டில்லிக்கு எடுத்துச் செல்லப்பட்டதுமான நிகழ்ச்சிகள் இந் நூலில் குறிக்கப்பட்டுள்ளன. இங்குக் குறிக்கப் பட்டுள்ள முகம்மதியப் படையெழுச்சி, மாலிக்காபூரது படை யெழுச்சியேயென்பதில் சிறிதும் ஐயமில்லை. இனி நாம் 'கோயி லுலகில்' கூறப்பட்டுள்ள திருவரங்கம் கோயிலில் நிகழ்ந்த பேரழிவுபற்றிக் காண்போம்.

**அரங்கநாதப் பெருமான் டெல்லி சென்றார்**

பிரதாபருத்திரனை வென்ற டெல்லி சுல்தான், பின்பு தொண்டை மண்டலத்தின்மீதும் சோழ மண்டலத்தின்மீதும் தனது தாக்குதலை நிகழ்த்தினான். முகம்மதியப் படை ஆங்குள்ள கோயில்களை இடித்துத் தரைமட்டமாக்கி, பெரும்பொருளைக் கொள்ளையடித்தது. ஏராளமான படிமங்கள் உடைக்கபபட்டன. இவ்வாறு பேரழிவினை ஏற்படுத்திய முகம்மதியப்படை வடக்கு வாயில்வழியாகத் திருவரங்கம் கோயிலினுட்புகுந்தது. அங்குள்ள காவலாளிகளுக்குத் தொல்லைகளைத் தந்தது. வடக்கு வாயிலின் பாதுகாப்பு வடநாட்டுப் பிராமணர்களது பொறுப்பில் விடப் பட்டிருந்தது. பஞ்சு கொண்டான் போன்ற காவலாளிகள் உயிர் தப்பிபோடினர். முகம்மதியப்படை வீரர்கள் திருவரங்கம் திருக் கோயிலுள்ள அரங்கநாதரின் அழகிய படிமத்தினையும், மற்றும் பல படிமங்களையும் தம்முடன் தூக்கிச் சென்றனர். அவர்கள் கொண்டு சென்ற படிமங்களுள் திருநாராயணபுரம் (மேலுக் கோட்டை)கோயிலிலுள்ள 'இராமப்பிரியர்' படிமமும் ஒன்றாகும்.

**கிழவியின் காதல்!**

திருவரங்கத்தின் வடக்கே நான்கு கல் தொலைவிலுள்ளது உத்தர்கோயிலென்னுமூர். இது கொள்ளிடத்தின் வடகரையி லுள்ளது. இங்கு இக்காலை புகைவண்டி நிலையமுமுள்ளது. இவ் வூரில் ஒரு கிழவி வசித்து வந்தாள்; இவள் அரவணைத்துயிலும் அண்ணல்மீது (அரங்கநாதப் பெருமான்) அளவற்ற காதல் கொண்டாள்; நாடோறும் அவனை வணங்கிய பின்னரே உண வுண்ணும் வழக்கத்தினை அவள் கொண்டிருந்தாள். முகம்மதியப் படை திருவரங்கப் பெருமானது படிமத்தைத் தம்முடன் எடுத்துச் செல்கின்றனரென்ற செய்தியினை அவள் கேள்விப் பட்டாள்; எவ் வகையிலும் பள்ளிகொண்ட பெருமானது படி மத்தினை மீட்டல் வேண்டுமென்று உறுதி கொண்டாள்.

**கிழவி டெல்லி செல்லல்**

திருவரங்கத்தில் பேரழிவினை நிகழ்த்தி விட்டு, டெல்லி நோக்கிச் செல்லும் முகம்மதியப்படையினை, மாறுவேடத்துடன்

பின்தொடர்ந்தாள். பிச்சைக்காரியைப் போன்று வேடமணிந்த அவள் டெல்லியிலுள்ள சுல்தானின் அரண்மனையினையடைந்தாள்; படிமங்கள் பூட்டிவைக்கப்பட்ட அறையினையுங் கண்டு கொண்டாள். சுல்தானின் இளவரசிகளுள் இளையவள் ஒருத்தித் தனது கண்ணையுங் கருத்தையுங் கவர்ந்த, அழகின் பிறப்பிடமாய்த் திகழ்ந்த அரங்கநாதரின் படிமத்தைத் தனது விளையாட்டுப் பொம்மையாகக் கொண்டு, அதனையணுவளவும் பிரியாத நிலைமையினையுங் கண்டாள். அரங்கநாதரது படிமம் பத்திரமான முறையில் சிறிய பெண்ணால் காப்பாற்றப்படுவதனையறிந்து, அரண்மனையை விட்டு வெளியேறி, திருவரங்கத்தினை நோக்கித் தனது பயணத்தைத் தொடர்ந்தாள்; திருவரங்கம் வந்தவுடன் இச் செய்தியினை முக்கியமான மனிதர் சிலரிடம் தெரிவித்தாள்.

### அரங்கநாதரை மீட்கும் பணி

கிழவியின் சொற்கேட்டு மகிழ்ந்த சிலர் கோயிலின் வடக்கு வாயிலை நன்கடைத்து விட்டு, முகம்மதியரின் கையிலகப்படாத அம்மனின் படிமத்தினை வில்வமரத்தினடியில் புதைத்து விட்டு, டெல்லி செல்ல ஏற்பாடுகள் செய்தனர். கூத்திலும் பாட்டிலும் சிறந்த அறுபதின்மர், பிச்சைக்கார உடையிலிருந்த கிழவியைத் தமது வழிகாட்டியாகக் கொண்டு டெல்லிக்குப் பயணமானார்கள். பிச்சைக்கார கிழவி முன்புபோல் சுல்தானின் அரண்மனைக்குட் புகுந்தாள். மற்றவர்கள் சுல்தானின் முன் ஆடிப்பாடித் தமது திறமைகளையெல்லாம் வெளிப்படுத்தி, அவனை மனங்குளிரச் செய்தனர்; அவர்களது கூத்தால் கவரப்பட்ட சுல்தான் அவர்களை வெகுவாகப் புகழ்ந்தான்; நல்ல பல பரிசில்களை அவர்களுக்கு வழங்க முற்பட்டான். கூத்தாடிகளோ பரிசில்களை ஏற்றுக் கொள்ள மறுத்து அரங்கநாதரின் அழகிய படிமத்தினை அவர்களுக்களிக்க வேண்டினர். சுல்தானும் அதற்கிசைந்தான்; படிமங்கள் பத்திரப்படுத்தி வைக்கப்பட்டிருந்த அறை அவர்களுக்குத் திறந்து விடப்பட்டது. தாம் விரும்பிய படிமத்தினை ஏற்றுக் கொள்ள சுல்தான் ஆணையும் பிறப்பித்தான்; படிமம் ஆங்கில்லை. (அது சுல்தானின் பெண் குழந்தையிடம் இருப்பது தான் அவர்கள் முன்பே அறிந்த செய்தியாயிற்றே) அச் சிலை காணப்படவில்லையென்று அவர்கள் அவனிடம் தெரிவித்தனர்.

### கடவுள் வந்தார்

இக்கட்டான சூழ்நிலையில் விடப்பட்ட சுல்தான் 'உங்களது கடவுளை நீங்களே கூப்பிடுங்கள், வந்தால் கொண்டு செல்லுங்கள்' என்று நகைச்சுவையுடன் கூறினான். கூத்தாடிகள்

தமது இறைவன்மீது பக்திப் பரவசத்தால் ஆடினர்; பாடினர்; அழைத்தனர். அரங்கநாதப் பெருமானும் தம்மை நினைந்துருகும் அடியார்களின் வேண்டுகோளுக்கிணங்கி அவர்கள் முன் வந்து காட்சிதந்தார். இறைவனது படிமம் வந்துவிட்டதனைச் சுல்தானுக்குக் காண்பித்து, அதனை எடுத்துச் செல்ல அனுமதி பெற்று இறைவனது படிமத்துடன் திருவரங்கம் நோக்கி இரவோடிரவாகப் பயணத்தினை மேற்கொண்டனர்.

### திருப்பதியை அடைதல்

பொழுது விடிந்தது; சுல்தானது சிறுமியும் படுக்கையை விட்டெழுந்தாள்; தனதருகிலிருந்த அரங்கநாதர் (பொம்மை) காணப்பெறாதது கண்டு துடித்தாள்; கண்ணீர் வடித்தாள்; உணவு கொள்வதனை விடுத்தாள்; அச்சிலையில்லையேல் தான் உயிர் வாழ மாட்டேனென்று அச்சிலை (பெண்) அடம்பிடித்தாள். இதனைக் கேள்விப்பட்ட சுல்தான் அக் கூத்தாடிகளைத் தேடிப் பிடிக்க ஆணை பிறப்பித்தான்; ஆயினும் பலனில்லை. இளவரசிக்குப் பக்கத் துணையாக, பாதுகாப்பாகச் சிலர் அமர்த்தப் பட்டனர்; திருவரங்கத்துப் பார்ப்பனர்களைத் தேடிப்பிடிக்க, அக் குழு பயணம் மேற்கொண்டது. இதுபோல் நடக்குமென்று முன்பே அறிந்திருந்த சீரங்கத்தார் தக்க முன்னறிவிப்புடன், அக் குழுவினிடம் அகப்படாது திருப்பதியென்னும் திருப்பதியினை வந்தடைந்தனர்.

திருப்பதியில் அவர்கள் ஓய்வெடுத்துக் கொண்டிருந்த போழ்து இளவரசியாரது குழுவும் அப் பதிவந்து சேர்ந்த செய்தி அவர்கள் காதுக்கெட்டியது. உடனே அவர்கள் கும்பலாக விருந்தால் அகப்பட்டுக் கொள்வோமென்பதனையுணர்ந்து பல குழுக்களாகப் பிரிந்தனர்; அரங்கநாதரது படிமம் திறமைமிக்க மூவரிடம் ஒப்படைக்கப்பட்டது. தந்தையும், தனயனும், மாமனுமாகிய அம் மூவரும் மலையருகேயிருந்த போழ்து, இளவரசியின் குழுவினர் அவ்வழியே, வருவதாகக் கேள்விப்பட்டு, மலையில் பதுங்கிக் கொண்டனர். இளவரசியின் குழு மலையை நோக்கி வருவதனைக் கண்ட இம் மூவரும் புதிய திட்டமொன்று வகுத்தனர். தப்பவேண்டுமெனின் ஒருவன் மலையுச்சியிலிருந்து பள்ளத்தாக்கிற்கு உருண்டோடுவதன்றி வேறு வழியில்லை என்பதனை யுணர்ந்தனர். ஒருவனது உடலோடு அரங்கநாதர் படிமம் சேர்த்துக்கட்டப்பட்டது. அவனும் அவ்விருவரால் மலையிலிருந்து உருட்டி விடப்பட்டான். அவனும் பத்திரமாகப் படிமத்துடன் மலையடிவாரத்தினையடைந்தான். மற்றிருவரும் அடிவாரத்திற்கு இறங்கி வந்தனர். மக்களரவமற்ற காட்டில்

அரங்கநாதப் பெருமானுடன் அம் மூவரும் பிறரறியா வண்ணம் வாழ்ந்து வந்தனர்.

**இளவரசியின் குழுவினர் திருவரங்கத்தினை அடைதல்**

சீரங்கத்தாரைத் தேடிவந்த இளவரசியின் குழுவினர், அவர்களைக் காணப்பெறாது திருப்பதியினை விட்டுத் திருவரங்கம் நோக்கிப் பயணம் தொடங்கினர்; திருவரங்கம் வந்தடைந்தனர்; கோயிலின் வடக்குவாயில் அடைக்கப்பட்டிருப்பதனையும், கோயிலில் எவ்விதப் படிமமும் காணப்பெறாமையினையும் இளவரசி பார்த்தாள்; வருந்தினாள்; மனமுடைந்தாள்; உயிரை விட்டாள். டெல்லியின் இளவரசி திருவரங்கப்பெருமானின் சன்னிதியில் தனது இன்னுயிரைவிட்டு முகம்மதியர்களுக்கேற் பட்ட களங்கத்தினைத் துடைத்தாளென்று கூறுவது பொருத்த மாகத் தோன்றுகிறது.

திருப்பதிக்கருகாமையிலுள்ள காட்டில் அரங்கநாதருடன் வாழ்ந்து கொண்டிருந்த மூவரும் திருவரங்கம் திரும்பிவர வழி யின்றி ஆங்கேயே தமது வாழ்வினைத் தொடர்ந்தனர். ஐம்பத் தேழரையாண்டுகள் அவர்கள் காட்டில் வாழ்ந்த பின்பு, இருவர் முதுமையின் காரணமாக இறந்து பட்டனர்; மூன்றாமவனாகிய மகனும் முதுமையடைந்தான்; தனது எண்பதாவது வயதினை எட்டிப் பிடித்தான்; தனது உயிரைக் காலன் தட்டிப்பறித்து விடுவானென்று நம்பினான்; தான் அங்கு வந்து சேர்ந்த நிகழ்ச்சி யினையும், அரங்கநாதப் பெருமானின் படிமத்தைக் காத்து வருவ தனையும், அங்குள்ள சில காட்டு மக்களிடம் கூறினான். இச் செய்தி நகரத்திற்கெட்டியது.

**அரங்கநாதர் திருவரங்கம் திரும்புதல்**

சந்திரகிரிக்கருகாமையிலுள்ள நாராயண புத்திரனை, விசய நகர மன்னனுக்குட்பட்டு ஆண்டு வந்த கோபண்ணனின் செவி களுக்கு இச் செய்தி எட்டியது. கோபண்ணன் அப் படிமத்தினை செஞ்சிக்குக் கொண்டு வந்து (Ginji) சிங்கவரம் என்னும் கோயிலில் வழிபாட்டிற்கு வைத்தான். கம்பண இளவரசன் (Prince Kampana) தென்னாட்டின் பல்வேறு பகுதிகளில் வைத் திருந்த முகம்மதியப் படைகளை முறியடித்து, அவற்றினைத் தகர்த் தெறிந்து விசயநகரப் பேரரசின் ஆளுமைக்கு அவற்றைக் கொணர்ந்த பின்னர், அரங்கநாதப் பெருமானது படிமம் கி. பி. 1370–71-ல் மூன் அதாவது பரிதாபி ஆண்டு வைகாசித் திங்கள் பதினேழாம் நாள் மீண்டும் திருவரங்கம் திருக்கோயிலில் வழி பாட்டிற்கு வைக்கப்பெற்றது, (சக ஆண்டு 1293). இக் கதை

யினை நாம் முழுக்க முழுக்க உண்மையென்று நம்ப முடியாது.[1] இன்று சிவபுரம் நடராசப் பெருமான் அமெரிக்காவுக்குக் கடத்தப்பட்டது போன்று, அன்று அரவணைத்துயிலும் அண்ணல் படிமமும் டெல்லிக்குக் கடத்தப்பட்டது. பின்னர் தாய்நாடு திரும்பிற்று.

சுருத்தானி அரங்கநாதரது படிமம் இவ்விதம் வடநாடு சென்று திரும்பியதன் நினைவாக இன்றும் திருவரங்கம் திருக் கோயிலின் வெளிமண்டபத்தின் வடகிழக்கு மூலையின் அருகிலுள்ள சுவற்றின்கண் தீட்டப்பட்ட ஓவியத்தில் சுருத்தானி ஒருவனின் உருவம் தீட்டப்பட்டுள்ளது. இது துலுக்கச்சி நாச்சியாரென்று அழைக்கப்பெறுகிறது. இக் கடவுளுக்கு அந்திப்பொழுதில் ரொட்டியும் வெண்ணெய்யும் படைக்கப் படுவது இக் கோயிலின் குறிப்பிடத்தக்க வழக்கமாகும்.

### முடிபு

கி.பி. 1370-71-ல் அரங்கநாதரது படிமம் மீண்டும் பூஜைக்கு வைக்கப்பட்டதனை நாம் முன்பே கண்டோம். 59½ ஆண்டு களுக்குப் பின்பு இப் படிமம் வழிபாட்டிற்கு வைக்கப்பட் டுள்ளது. எனவே, இப் படிமம் கி.பி. 1310-11-ல் முகம்மதியரால் கொண்டு செல்லப்பட்டிருத்தல் வேண்டுமென்பது புலனு கின்றது. இதனை அடிப்படையாகக் கொண்டு பார்த்தால் இதில் குறிப்பிட்டுள்ள படையெழுச்சி, மாலிக்காபூரின் படையெழுச்சி யாகவே இருத்தல் வேண்டுமெனக் கொள்ளலாம். இருப்பினும் 'கோவிலுலகு' இதற்குப் பின்பு மற்றுமொரு முகம்மதியப் படை யெழுச்சி திருவரங்கத்தில் அழிவினை ஏற்படுத்தியதாகக்குறிப்பிட் டிருத்தலின் இதனை நாம் உறுதியாகக் கூறவியலவில்லை.

### முஸ்லிம் படையெழுச்சிபற்றிய கல்வெட்டுச் சான்று

இப் பகுதியில் நிகழ்ந்த முகம்மதியப் படையெழுச்சிபற்றிய செய்தியினை உறுதி செய்வதற்குக் கல்வெட்டுச் சான்றுகளும் பயன்படுகின்றன. இச் செய்தியைப்பற்றிக் கூறும் கல் வெட்டுகள் சில இப் பகுதிகளில் கிடைத்துள்ளன. தென்னார்க் காடு மாவட்டம் திருவாமாத்தூரில் கிடைத்துள்ள 'வென்று மண் கொண்ட சாம்புவராயனின்' பதினான்காமாட்சியாண்டுக் கல் வெட்டொன்று[2] சில நாட்களுக்கு முன்பு நிகழ்ந்த முகம்மதியப்

[1] இக் கதையினை திரு. எஸ். கிருஷ்ணசாமி ஐயங்காரவர்கள் தனது 'தென்னிந்தியாவும் முகம்மதிய படையெடுப்பும்' என்னும் நூலில் 113-116 பக்கங் களில் குறித்துள்ளார். இதில் கூறப்பட்டுள்ள செய்திகளனைத்தும் வரலாற்றிற் குரியப் பயன் தரத்தக்கனவல்ல. இருப்பினும் இக் கதையினை நாம் முழுமையாக ஒதுக்கிவிடவும் இயலாது.

[2] No. 434 of 1903 Madras Epigraphist Collection.

படையெழுச்சிபற்றியும், அதனால் ஏற்பட்ட பேரழிவுபற்றியும் குறிப்பிடுகின்றது. இவன் கி.பி. 1322-ல் அரசு கட்டிலேறிய தாகப் பேராசிரியர் கீல்ஹார்ன் (Professor Kielhorn) குறிப்பிடு வதனால் இது கி.பி. 1335-ஐக் குறிப்பதாகக் கொள்ளலாம்.

இராமநாதபுரம் மாவட்டம் திருப்பத்தூரில் கிடைத்துள்ள கல்வெட்டொன்று வீரபாண்டியனது நாற்பத்து நான்காமாட்சி யாண்டினையும் நாற்பத்தாறுமாண்டினையும் குறிப்பிடுகின்றது. இதில் முகம்மதியரது தென்னிந்தியப் படையெழுச்சியின்மீது திருப்பத்தூர்க்கோயில் முகம்மதியரது பிடியில் சிக்கியதென்றும், பின்னர், இவ் வேந்தனது நாற்பத்தாறு, நாற்பத்தேழாமாண்டு களில் இக்கோயில் திருப்பணி செய்யப் பெற்றதாகவும் குறிக்கப் பெற்றுள்ளது. இத் திருப்பணியை முன்னின்று நடாத்தியவன் 'விசையாலய தேவன்' என்னும் அதிகாரியாவான். இவன் மாற வர்மன் குலசேகரனது கல்வெட்டுகளிலும் குறிக்கப் பெற்றுள் ளான். எனவே, இவ் வதிகாரியும் வீரபாண்டியனது கல் வெட்டில் இடம் பெறுபவனும் ஒருவனேயாதல் வேண்டுமெனக் கொள்ளலாம்.[1]

மேற்கூறப்பட்டவை உண்மையானால் இக் கல்வெட்டுகள் கி.பி. 1339-40, கி.பி. 1341-42-ல் வெளியிடப் பெற்றவை யென்பது புலனாகும். எனவே, இவண் குறிக்கப்பட்டுள்ள வீர பாண்டியன், சுந்தரபாண்டியனது சமகாலத்தவனும் மாலிக்கா பூரால் தோற்கடிக்கப்பட்டவனுமான கி.பி. 1295-96-ல் அரியணை யேறிய சடையவர்மன் வீரபாண்டியனாயிருத்தல் வேண்டும்.

இதனையடுத்து, இராச நாராயண சம்புவராயனது ஏழா மாட்சியாண்டுக் கல்வெட்டொன்று முகம்மதியப் படையெழுச்சி பற்றிக் குறிப்பிடுகின்றது. பேராசிரியர் 'கில்ஹார்னது' கால வரையறைப்படி இது கி.பி. 1346-ஆம் ஆண்டினைக் குறிப்ப தாகக் கொள்ளலாம்.

நமக்குக் கிடைத்துள்ள கல்வெட்டுகளுள் திருக்களாக் குடியில் கிடைத்துள்ள கல்வெட்டொன்றுதான்[2] முகம்மதியரது படையெழுச்சிபற்றியும் கோயில்கள் அவர்களது வசமானது

[1] விசையாலயதேவன் எனப் பெயர்கொண்ட பல அதிகாரிகள் பாண்டி வேந்தர் பலரிடம் பணியாற்றியதாகத் தெரிகிறது. இவர்கள் பொதுவாக 'அரையன்','விசையாலய தேவன்' என்னும் பெயரால் அழைக்கப் பெறுகின்றனர். சூறைக்குடி அல்லது வன்னியன் சூறைக்குடி என்னும் ஊருக்கும இவர்களுக்கும் தொடர்பு இருப்பதாகத் தெரிகிறது. திருப்பத்தூர்—கானாடுகாத்தான் சாலையி லுள்ள இப் பெயரினைக்கொண்ட மற்றும் ஒரு ஊரினும் இது வேறுபட்டதாகும்.

[2] 64 of 1916.

பற்றியும் கோயில் நிலங்களனைத்தும் அவர்களால் கைப்பற்றப் பட்டதுபற்றியும், கோயிலில் வழிபாடு நிறுத்தப்பட்டது பற்றியும் நமக்குத் தெளிவாக உணர்த்துகின்றது. இளவரசனாகிய கம்பண உடையார் படையெடுத்து வந்த முகம்மதியரின் மேலாதிக்கத்தினை ஒழித்து, கோயில்களின் நிர்வாகத்தினை நன்கு கவனிக்கவும், கோயிலில் முறையாக வழிபாடு நடைபெறுவதனை மேற்பார்வையிடவும் அதிகாரிகள் (நாயக்கன்மார்கள்) நியமனம் செய்யப் பெறுவது வரை, இவ்வவல நிலைமைப் பாண்டிய நாட்டில் நீடித்ததென்பதனை இக் கல்வெட்டாலறிகிறோம். இக் கல்வெட்டு மாறவர்மன் வீரபாண்டியனது முப்பத்தோராமாட்சியாண்டினதாகக் கொள்ளலாம். இதில் குறிக்கப்பட்டுள்ள நாளும் கோளும் கொண்டு இராவ்பகதூர் திரு. கிருஷ்ண சாஸ்திரிகள் கி.பி. 1358 என்று காலத்தினைக் கணித்துள்ளார்.[1] கி.பி. 1358-ஆம் ஆண்டினதான திருப்புட்குழிக் கல்வெட்டு கம்பணன் இராசகம்பீர இராச்சியத்தைக் கைப்பற்றிப் புவனமுழுவதும் ஆண்டானென்பதனைத் தெளிவாகக் கூறுகிறது.

### இராமேசுவரம் வரை

இதுகாறும் நமக்குக் கிடைத்துள்ள கல்வெட்டின் துணை கொண்டு தொடக்க காலத்தில் தென்னிந்தியப் படையெழுச்சியினை மேற்கொண்ட முகம்மதியர் பாண்டிய நாட்டின்மீதுப் படையெடுத்து, ஆங்குப் பெரும் பொருளைக் கொள்ளையிட்டு இராமேஸ்வரம் வரைத் தொடர்ந்து படைநடத்தி வெற்றிவாகை சூடினரென்பது உறுதி. இப் படையெழுச்சியின் தன்மையினை முழுமையாகச் சிந்தித்துப் பார்க்குங்கால், அலாவுதீன் கில்ஜி பெரும்பொருளைக் கொள்ளையிட்டுச் செல்வதனையே தனது அடிப்படை நோக்கமாகக் கொண்டதாகக் கருதலாம். அடுத்து, உருவ வழிபாட்டினை மேற்கொள்ளும் இந்துக்களைத் தண்டிப்பதும், அவர்கள்மீது இஸ்லாம் மத தர்மத்தின்படி (முஸ்லிம் அல்லாதார் மீது) புனிதப் போர் (Jehad) நிகழ்த்துவதனையும் அவன் தனது அடிப்படை நோக்கமாகக் கொண்டிருந்தான் எனக் கூறலாம்.

### மதுரையில் முகம்மதியப் படை

சோணாட்டின் பகுதிகளில் இருந்த பல நகரங்களைப் பாழாக்கி, கோயில்களைச் சூறையாடிய மாலிக்காபூர் தனது வெறியாட்டங்களை மதுரையம்பதியிலும் நிகழ்த்த உறுதி கொண்டான். பதினேழாம் தேதி வியாழக்கிழமை சில்காதா (Zi-l-ka'da. A. H. 710; ஏப்ரல் மாதம் 1311.) மாலிக்காபூரது

[1] Epi. Rep. for 1916. Sec. 33.

படை பீர்தூலியிலிருந்து வெறியுடன் புறப்பட்டது. ஐந்தே நாட்களில் 'காம்' என்னும் நகரினை அடைந்த முகம்மதியப்படை மறு ஐந்து நாட்களில் மதுரை மாநகரினையடைந்தது. அது போழ்து, மதுரையினை சுந்தரபாண்டியன் ஆண்டு வந்தானென்பதனை நாம் முன்பே கண்டோம். முகம்மதியப்படை மதுரை நோக்கி வந்துகொண்டிருப்பதனைக் கேள்வியுற்ற சுந்தரபாண்டியன் தனது தேவியரை உடனழைத்துக் கொண்டும், பண்டாரத்திலுள்ள (Treasury) பெரும் பொருளையெடுத்துக் கொண்டும் மதுரையைக் கைவிட்டுச் சென்றான். மதுரையினின்றும் புறப்பட்டபோது இரண்டு மூன்று யானைகளை மட்டும் ஜக்னூர் ஆலயத்தில் (சொக்கநாதர்) விட்டுச் சென்றான். இதனைக் கண்டு பெரிதும் சினங்கொண்ட மாலிக்காபூர் யானைகளைக் கைப்பற்றிக் கொண்டு சொக்கநாதர் ஆலயத்தினைத் தீயிட்டுக் கொளுத்தினான்; பாழாக்கினான்; விலைமதிக்கமுடியாத பெரும்பொருளைக் கைப்பற்றினான்.

**மாலிக்காபூர் தோற்கடிக்கப் பெறுதல்**

முஸ்லிம்படை மதுரையின்கண் பேரழிவொன்றினை நிகழ்த்துவது கேட்டு சுந்தரபாண்டியன் வாளாயிருக்கவில்லை; மாறாக தனது சிற்றப்பனை விக்கிரபாண்டியனது உதவியை நாடினான். விக்கிரபாண்டியனும் பெரும்படையொன்றைத் திரட்டி மாலிக்காபூர் மேல் ஏவினான். அத் தாக்குதலினின்றும் மாலிக்காபூர் தப்பிப் புறமுதுகிட வேண்டியவனானான்.[1] மாலிக்காபூர் பெற்ற தோல்வியினை முஸ்லிம் வரலாற்றறிஞர்கள் குறிப்பிடாதுவிட்டு விட்டனர். ஆனால், இந்து ஆதாரங்கள் இந்துக்கள் தொடர்ந்து பெற்ற வெற்றியினைக் குறிப்பிடுகின்றன. இவையிரண்டையும் நாம் அப்படியே ஏற்றுக்கொள்ளாவிட்டாலும் முஸ்லிம்களது படையெழுச்சியினை இந்துக்கள் வன்மையாக எதிர்த்தனரென்பதும், அமீர்குஸ்ரு முதலான முஸ்லிம் அறிஞர்கள் குறிப்பிடுகின்ற அளவுக்கு எளிதான முறையில் வெற்றி ஒன்றினையே பெற்று முன்னேறின என்பதனை முடியாதென்பதும் அறியப்படுகின்றது. இந்துக்களிடம் தோல்வி கண்ட மாலிக்காபூர் தான் கைப்பற்றிய பொருள்களை மட்டும் கைவிட்டு விடாமல் டெல்லிக் கொண்டு சென்றான். அவற்றுள் 512 யானைகளும், 5000 குதிரைகளும், 500 மணங்கு நிறையுள்ள (Maunds) வகைவகையான அணிகலன்களும், வைரமும் முத்தும் மாணிக்கமும் மரகதமும் அடங்கும். முகம்மதியப்படை

[1] பிள்ளை, கே. கே. 'தமிழக வரலாறு—மக்களும் பண்பாடும். பக்கம்' 367-368. பாரதிய வித்தியா பவன் (Bharatiya Vidya Bhavans). The Delhi Sultanate, page 36.

யெடுப்பில் மதுரை மாநகரம் பொலிவிழந்து காணப்பட்டது. சுருங்கக் கூறின் அது ஒரு சுடுகாடு போன்றே காட்சியளித்தது. முகம்மதியரது கோரப்பிடியிலகப்பட்ட ஆலயங்கள் இடிந்த மண்டபங்களாகவே காணப்பட்டன.

**கல் யானை கரும்பு தின்றது!**

மாலிக்காபூர் மதுரை மீனாட்சிசுந்தரர் கோயிலை இடித்து வந்த காலை, நிகழ்ந்த அற்புதம் ஒன்றினை இத் திருக்கோயிலுள்ள சீதளப் புத்தகம் குறிப்பிடுகின்றது. இதனை நாம் கீழே காண் போம்:

கி. பி. 1310-ஆம் ஆண்டு சூன் மாதம் இருபதாம் நாள் மாலிக்காபூர் மதுரையை முற்றுகையிட்டான்; பாண்டியனது கோட்டையைக் கைப்பற்றிவிட்டான்; கோட்டையையும், மதுரையிலுள்ள கோயில் பலவற்றையும் தரைமட்டமாக்கினன். அங்கயற்கண்ணி ஆலவாயுடையார் திருக்கோயிலின் பெரும் பகுதியும் இடிபட்டது. அவ் வேளையில் திருயேகம்பராயர் என்பான் கோயிலைப் பார்க்க வந்தான். மாலிக்காபூர் படையைச் சேர்ந்த இவன் சுவாமிகோயிலின் பிரகாரத்தைச் சுற்றி வருங் கால் கருவறையைச் சுற்றி யானையின் உருவங்கள் எட்டினைக் கண்டான்; அதன் விவரமறிய ஆவல் கொண்டான்.

அப்போது சித்தர் சந்நிதியில் தியானம் செய்து கொண் டிருந்த சொக்கநாதர் என்னும் துறவியைக் கண்டு இதுபற்றி வினவினன். துறவியும் அவ் யானைகளைப்பற்றியும், கல் யானைக்குக் கரும்பு கொடுத்த திருவிளையாடல்பற்றியும் தெளிவாகக் கூறினர். இதனைச் செவிமடுத்த திருயேகம்பராயர் வியப்பில் ஆழ்ந்தான். அடுத்து, அஃது உண்மையாயின் இந்தக் கல் யானை இப்பொழுது கரும்பு தின்னுமா?' என்றும் அவன் வினவினன். துறவியாரும் அவ்வாறே இன்றும் தின்னும் என்று விடையிறுத்தார்.

இதனைக்கேட்ட இராயர் அவ்வதிசயத்தைக்காண மாலிக்கா பூரையும் அழைத்து வந்தான். துறவியார் மாலிக்காபூரிடம் கரும்பைக்கொடுத்து, யானையிடம் தரச்சொன்னர். மாலிக்கா பூரும் கரும்பைக் கல் யானையிடம் நீட்டினன். கல் யானை தனது துதிக்கையை நீட்டிக் கரும்பை வாங்கித்தின்றது. இதனைக் கண்ட மாலிக்காபூர் ''ஆஹா! இங்கு அல்லா இருக்கிறார்'' என்று கத்தியதுடன், ''இனிமேல் கோயில் இடிக்கவேண்டாம்'' என்று தனது வீரர்களுக்கு ஆணைப்பிறப்பித்தான். ஆனல், இதற் குள் கபாலியுடையவர் திருமதிலுக்கு வெளியேயுள்ள பெரும்

பகுதிகள் இடித்துத் தரைமட்டமாக்கப்பட்டன. நல்லவேளை யாக அத்திருமதிலுக்குட்பட்ட சுவாமி கோயில் கருவறை முதல் ஆறுகால் பீடம்வரை உள்ள பகுதிகள் மட்டும் இடிபடாமல் விடப்பட்டன. சிறிது நேரங்கழித்து அத் துறவியார் மறைந்து விட்டார். இச் செயல் சோமசுந்தரப் பெருமானின் திருவிளை யாடலே என்று கருதப்படுகின்றது; இக் கதையினை மெய் எனக் கொள்வோரும் உண்டு; பொய் என்று தள்ளுவோரும் உண்டு.

எனினும், இக் கதை மாலிக்காபூரின் மதுரைப் படை யெழுச்சியுடன் தொடர்பு கொண்டதனால் இவண் கூறப் படுகிறது.

**இராமேஸ்வரம்மீது படையெடுப்பு**

'ஆசைக்கு அளவில்லை' இது ஒரு பொன்மொழி. மதுரையில் பெரும் பொருளைக் கொள்ளைகொண்ட கபூரது பேராசை இத் துடன் நிற்கவில்லை. மனநிறைவு கொள்ளாத அவன் தென்னிந்தி யாவின் தென்கோடிப் பகுதிவரைத் தனது அழிவுச்செயலை நிகழ்த்தத் திட்டமிட்டான். பாண்டிய இளவரசர்கள் ஆண்டு வந்த பகுதிகளையும் கைப்பற்றுவதில் இவன் பேராவல் கொண் டான். தண்டு தூக்கினன். அவனது கொடுமையான தாக்கு தலுக்கு இலக்கானவன் 'பாண்டிய குரு' வென்று அமீர்குஸ்ரு வால் குறிக்கப்பெறுகின்ற பாண்டிய இளவரசனுவான். இவன் ஒரு பிராமணனென்றும் அவர் கூறுகின்றார். இக் குறிப்புகள் அவரது 'அஷீகா' என்னும் நூலில் கூறப்பட்டது. இவன் சுந்தரபாண்டியன், வீரபாண்டியன் ஆகிய இருவரினின்றும் வேறுபட்டவன். இவனது ஆட்சியில் இந்துக்களோடு முஸ்லிம் களும் அடங்கியிருந்தனர். பெரும்படையும், கப்பல்களும் கொண்டிருந்த இவன் ஆயிரக்கணக்கான யானைகளும் எண்ணி- லடங்கா குதிரைகளும் கொண்டிருந்தான். இவன் பாதனைத் [Fatan] தலைநகராகக் கொண்டிருந்தான். பாதம் என்பது பட்டினத்தைக்குறிக்கும். இவனது ஆதிக்கத்தில் பல நகரங்களு மடங்கியிருந்தன. இவற்றினையெல்லாம் நாம் மனத்திற்கொண்டு ஆய்ந்து பார்க்குங்கால், இது இராமேஸ்வரமாயிருத்தல் வேண்டுமென்று கருதலாம்.

**கோயில் மசூதியாதல்**

இராமேஸ்வரத்தின்மீதுத் தாக்குதலை நிகழ்த்திய மாலிக்கா பூருடன் ஆங்கிருந்த முஸ்லிம்களும் இணைந்து கொண்டனர். அப் பகுதியினை ஆண்டுவந்த மன்னனும் தலைநகரினைவிட்டு வெளி யேறி விட்டான். இராமேஸ்வரம் கோயிலிலிருந்த பொன்னு

பரணங்களால் அலங்கரிக்கப்பட்ட படிமமும் ஐந்நூறு யானை களும் மாலிக்காபூர் வசமாயின. சில கோயில்கள் இடிக்கப் பட்டன. மசூதிகளாக மாற்றப்பட்டன.

### விளைவுகள்

வடகோடியில் ஆட்சி புரிந்த டில்லி சுல்தான் தென்கோடி வரைத் தனது வலிமையினை உணர்த்தினான். மலைக்கும் கடலுக் கும் இடையே பரந்து கிடந்த இப் பாரத தேசத்தினைத் தனது படையாலளந்தான் அலாவுதீன். இந்தியாவின் பல பகுதிகளில் ஆண்டு வந்த பெரு மன்னர்கள் அலாவுதீனின் அடிபணிந்தனர். வரலாற்று முக்கியத்துவம் மிக்க மாலிக்காபூரது தென்னிந்தியப் படையெழுச்சிக்குப் பாண்டிய நாடும் இரையாயிற்று; பாண்டிய நாடும் தனது பெயரினைப் பதிவு செய்து கொண்டது. பாண்டிய வேந்தர் ஒருவருக்கொருவர் மாறுபட்டு போரிட்டதன் விளைவால் இந் நாடு மாற்றானின் பிடியில் சிக்கித் தவித்தது. மக்களின் இதயம் எல்லாம் கொதித்தது. இது பாண்டிய நாட்டின் பொருளாதாரத்தைப் பாதித்தது. மாலிக்காபூரின் படையெழுச்சி தமிழகத்தில் பெருஞ் சூறாவளி போன்று வீசித் தமிழகத்தின் முன்னேற்றத்தினைச் சிலகாலம் தடுத்து நிறுத்தியது.

### மாலிக்காபூரின் இலங்கைப் படையெழுச்சி

மாலிக்காபூரின் படையெழுச்சி இந்தியாவின் தென்கோடிப் பகுதியான இராமேஸ்வரம்வரை நீண்டதாகவே நாம் கருதிக் கொண்டிருக்கிறோம். ஆனால், அது இலங்கை நாட்டிலும் தொடர்ந்ததாக 'பெரிஷ்தா' என்னும் முஸ்லிம் வரலாற்று அறிஞர் செப்புகிறார். இராமேஸ்வரத்தினின்றும் கப்பற்படை யின் துணைகொண்டு இலங்கையினை அடைந்த மாலிக்காபூர் ஆங்கும் தனது திருப்பணிகளை-அழிவுப்பணியினைத் தொடர்ந்து செய்தான். அதாவது நகரங்களை அழித்துக் கோயில் ஒன்றினை இடித்துத் தரைமட்டம் ஆக்கினான். பின்பு அங்கிருந்து வடக்கு நோக்கித் தனது பயணத்தைத் தொடங்கினான். இவனது இலங் கைப் படையெழுச்சிபற்றி அறிந்து கொள்ள வேறு சான்றுகள் நமக்குக் கிட்டாத காரணத்தால் இதனை நாம் முழுமையாக ஏற்றுக்கொள்ள முடியவில்லை.

### டெல்லி அனுப்புதல்

தென்னாட்டின்கண் படை எழுச்சியினை மேற்கொண்டு, பல அரசுகளை வென்று, பல மக்களைக்கொன்று குவித்துப் பெரும் பொருளைக் கொள்ளையிட்டு அவற்றை யானைகளின்மீது ஏற்றிக் கொண்டு சென்ற மாலிக்காபூர் கி.பி. 1311 ஆம் ஆண்டின்

இறுதிப் பகுதியிலோ கி.பி. 1312ஆம் ஆண்டின் தொடக்கத்திலோ டெல்லியை அடைந்தான் எனலாம். விலை மதிப்பிட இயலாத பெரும் பொருளினைத் திறையாகக்கொண்ட மாலிக்காபூர் அவை அனைத்தையும் டெல்லிப் பேரரசின் சுல்தானை அலாவுதீன் கில்ஜியின் காலடியில் வைத்தான். அலாவுதீன் கில்ஜியோ எல்லையற்ற மகிழ்ச்சி அடைந்தான். தனது ஆற்றல் மிக்கப் படைத் தலைவனது வீரத்தினையும், போராற்றலையும் பெரிதும் பாராட்டினான். இத் தேதியிலிருந்து ஏறத்தாழ அலாவுதீன் தான் இவ்வுலக வாழ்வினை இழக்கும் வரை (கி. பி. 1315) தென்னிந்தியாவின் மீது மறுமுறை படையெடுக்கவில்லை.

**விளைவுகள்**

மாலிக்காபூரின் தென்னாட்டுப் படையெழுச்சியினால் எவ்வித நிரந்தர விளைவுகளும் ஏற்பட்டதாகத் தெரியவில்லை. கொலை, கொள்ளை, எரியூட்டல் ஆகிய வெறியாட்டங்களை மட்டுமே நோக்கமாகக் கொண்ட மாலிக்காபூர் தன்னால் வென்று அடக்கப் பட்ட அரசுகளை, டெல்லிப் பேரரசுடன் இணைத்து, அதனை சுல்தானின் ஆட்சியின் கீழ்க் கொண்டுவர முடியவில்லை. ஏற்கெனவே பல் சூழ்வும் பாழ் செய்யும் உட்பகையும் நிறைந் திருந்த பாண்டி நாட்டில்,மாலிக்காபூரின் படை எழுச்சி எரிகின்ற நெருப்பில் எண்ணெய் ஊற்றியது போன்று, நிலைமையினை மேலும் மோசமாக்கின. வீரபாண்டியனுக்கும், சுந்தரபாண்டி யனுக்குமிடையே நிலவிய பகைமை உணர்ச்சியால் பாண்டிய நாட்டில் தோன்றிய குழப்பநிலை மேலும் குழம்பியது. எனவே, குழப்பமான நிலையினை மேலும் குழப்பமாக்கியதுதான் மாலிக்கா பூரது படையெடுப்பின் முக்கியமான விளைவென்று கூறலாம்.

**எதிர்பாராதது**

சுந்தர பாண்டியன் மாலிக்காபூரைச் சந்தித்து,[1] தனது பகைவனும் வீரபாண்டியனுக்கு எதிராகப் போர் தொடுத்து, பாண்டிய ஆட்சியினைத் தனக்கு மீட்டுத் தருமாறு வேண்டு கோள் விடுத்த போதிலும், பாண்டிய நாட்டில் நிகழ்ந்த முகம்ம திய படையெழுச்சிக்குப்பின் மாலிக்காபூரின் உதவியால் சுந்தர பாண்டியன் அரியணை ஏற்றப்பட்டதாகத் தெரியவில்லை. இதனால் சுந்தரபாண்டியன் எதற்காக மாலிக்காபூரை அழைத்தானோ, அந்த எண்ணம் நிறைவேறவில்லை. எனவே, மாலிக்காபூரின்

[1] "முன்னாள் இராசராசன் சுந்தரபாண்டிய தேவர் துலுக்கருடன் வந்த நாளிலே ஒக்கூருடையாரும் இவர் தம்பிமாரும் அனைவரும் அடியாரும்............ செத்தும் கெட்டும் போல் அலைந்து ஊரும் வெள்ளத்தாலும், கலகத்தாலும் பாழா யிருக்கிற அளவிலே" என்ற கல்வெட்டுச் செய்தியால் சுந்தரபாண்டியன் மாலிக் கபூரின் உதவியை நாடினான் என்பது தெளிவு S.I.I. Vol. VIII, No. 241.

படையெழுச்சி சுந்தரபாண்டியனுக்கும் சாதகமாக அமைய வில்லை என்பது உறுதி. பிள்ளையார் பிடிக்கக் குரங்காக மாறிய கதையைப் போன்றதுதான் இதுவும் எனலாம்.

**மதுரையில் படை நிறுத்தப்பட்டதா?**

தனது படையெழுச்சியினை முடித்துக் கொண்டு மாபாரை விட்டுத் திரும்புகையில் மாலிக்காபூர் முகம்மதியப் படையொன் றினைப் பாண்டிய நாட்டின் தலைநகராம் மதுரையின்கண் நிறுத்திச் சென்றதாகச் சிலர் கருதுகின்றனர். இப்படை குல சேகர பாண்டியனது மகனை சுந்தரபாண்டியனது பாதுகாப் பிற்காகவே நிறுவப்பட்டதாகவும் கருதுகின்றனர். இக் கருத்து ஏற்றுக்கொள்ளத் தக்கதாகத் தோன்றவில்லை. அவ்வாறு முஸ்லிம் படையொன்று நிறுவப் பெற்றிருந்தாலும், அதன் அதிகாரம் மதுரை நகரில் மட்டுமே நிலைநாட்டப்பட்டதாகவும், அதற்கப்பால் செல்லவில்லை என்றும் கொள்ளலாம்.[1] வரலாற் றறிஞர் திரு. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியாரும் 'சுந்தர பாண் டியன் மதுரையம்பகுதியிலுள்ள அரியணையில் மீண்டும் அமர்த்தப்பட்டதாகவும் முகம்மதியப் படையொன்று இப் பாண்டியனது பாதுகாப்பிற்காக மதுரைநகரின்கண் நிறுவப் பட்டதாகவும் கொள்ளச் சான்றுகள் இல்லை'[2] என்று அறுதி யிட்டு உறுதியாகக் கூறுவதாலும் மேற்குறிப்பிட்ட கருத்து உறுதி பெறுகிறது.

**படை நிறுத்தப்பெறவில்லை**

வரலாற்று அறிஞர் திரு. சர் வோல்சே யெக் அவர்கள் 'மதுரையின்கண் முகம்மதிய ஆளுநர் ஒருவர் மாலிக்காபூரால் நியமனம் செய்யப் பெற்றார்' என்று தமது 'கேம்பிரிஜ் இந்திய வரலாறு' என்னும் நூலின்கண் குறித்துள்ளார்.[3] இக் கருத்

[1] "Three seems however little doubt that he left a garrison behind in Madura the head-quarters of the Pandya Kulasekara, who had fled for protection to Delhi. Whether the garrison was left to safeguard the interests of Kulas kara is not clearly stated, but seems quite likely. There are good reasons for believing that a Musalman garrison continued in Madura. If it did, its authority must have been confined very narrowly, not extending in all probability to very much beyond the territory immediatly round Madura" S. Krishnaswamy Iyyangar "South India and Her Muhammadan Invaders" page 123, line 26-35. சுந்தரபாண்டியன் என்பதற்கு பதிலாகத் தவறுதலாக குலசேகரபாண்டியனென்று இவரது புத்தகத்தில் கூறப்பட்டுள்ளது.

[2] 'There is thus no reason to suppose that Sundara Pandya was restored to the throne of Madura and that a Muhammadan garrison was left behind in the city for his protection" K. A. Nilakanta Sastry. 'The Pandyan Kingdom' page 183, lines 8-11.

[3] Sir Wolseley Haig "Cambridge History of India" page 116.

திற்கும் தக்க சான்றுகள் இருப்பதாகத் தெரியவில்லை. இவரைப் பின்பற்றிய வரலாற்று மேதை வின்சன்ட் ஸ்மித் அவர்களும் தமது 'ஆக்ஸ்போர்டு இந்திய வரலாறு' என்னும் நூலின்கண் இக்கருத்தினைக் குறித்துள்ளார்.[1] மதுரையில் முகம்மதிய ஆளுநர் நியமிக்கப் பெற்றதாகக் கூறுவது ஆதாரமற்ற செய்தியாகவே தோன்றுகிறது. எனவே, இது பிழைபட்ட கருத்தாகும்.

**மற்ற முஸ்லிம் படையெழுச்சிகளுக்கு முன்னோடி**

பாண்டியரது வரலாற்றினைப் பொறுத்த வரையில் இம் முகம்மதியப் படையெழுச்சி பின்னர் தோன்றிய முகம்மதியப் படையெழுச்சிகளுக்கு முன்னோடியாகத் திகழ்ந்தது எனலாம். பாண்டிய நாட்டின் நகரங்கள் பல அழிக்கப்பட்டன. வரை முட்டும் கோயில்கள் தரைமட்டமாக்கப்பட்டன. அற நிலையங்கள் அழிக்கப்பட்டன. ஆங்குள்ள பொன்னும் மணியும் விலை உயர்ந்த ஆபரணங்களும் கவர்ந்து செல்லப்பட்டன. பல அழகிய இறைவனது படிமங்கள் உடைக்கப்பட்டன. நகரம் தீக்கரையாயிற்று; பெண்கள் கற்பழிக்கப்பட்டனர். ஆயிரக் கணக்கான மக்கள் கொலையுண்டனர். எஞ்சியுள்ளோர் சொல்ல வொண்ணாத் தொல்லைகளுக்குள்ளாயினர். இதனால் பாண்டியருக்கு ஆட்சேதமும், பொருட்சேதமும் ஏற்பட்டது. வறுமையும், வெறுமையும், அமைதியின்மையும், தான் தோன்றித்தனமும் அதிகமாயின என்று சுருங்கக் கூறலாம். சயாவுதீன் பரணி என்னும் முகம்மதிய வரலாற்று அறிஞனும் மாலிக்காபூர் கைப்பற்றியவற்றைக் குறித்துள்ளார்.[2]

மாலிக்காபூர் பாண்டிய நாட்டில் மின்னலெனத் தோன்றி, அழிவுகளை நிகழ்த்தி மின்னல் போன்று மறைந்தான். இவன் பாண்டியர்களை அடக்கி அடிமை கொள்ளாமலேயே, திரும்பி விட்டான். சில காலஞ்சென்ற பின்பு, மீண்டும் பாண்டி நாட்டில் பாண்டியர் ஆட்சிப் பொறுப்பேற்றனர். எனவே, மாலிக்காபூரின் தலையீடு பாண்டி நாட்டின் படை பலத்தையும், நாட்டின் வளத்தையும், பொருளாதார நிலையையும் சீர்குலைத்ததே யன்றி, பாண்டியரின் உரிமைகளையும் விடுதலை வேட்கையையும் சிறிதும் பாதிக்கவில்லை எனலாம்.

1 Vincent Smith 'Oxford History of India' page 233.

2 குலசேகர பாண்டியரது இரு புதல்வர்களது உடைகளும் செல்வங்களும் மாலிக்காபூரால் கொள்ளையடிக்கப் பெற்று, டில்லி மாநகருக்குக் கொண்டு செல்லப்பட்டது. இப் பாண்டி வேந்தருக்குரிய அறுநூற்றுப் பன்னிரெண்டு யானைகளும், இருபதினாயிரம் குதிரைகளும், தொண்ணூறாயிரம் மணங்கு பொன்னும் முத்துக்களும் அணிகலன்களும் அடங்கிய பல பெட்டிகளும் ஆகியவற்றை மாலிக்காபூர் கொள்ளையடித்துச் சென்றான் என்று பரணி கூறியுள்ளார்.
(Elliot and Dowson Vol. III, p. 204).

**இரண்டாவது பாண்டியப் பேரரசின் வீழ்ச்சி**

இப் படையெழுச்சியின் முக்கிய விளைவுகளுள் ஒன்றாக இரண்டாவது பாண்டியப் பேரரசு அழிய ஆரம்பித்ததனை நாம் கொள்ளலாம். குலசேகரன் என்னும் சேர நாட்டரசன் பாண்டிய நாட்டின்மீது படையெடுப்பதற்குச் சாதகமான சூழ்நிலைகளை இம் முகம்மதியப் படையெழுச்சி உருவாக்கியது என்று கூறலாம். பாண்டியப் பேரரசின் அழிவிற்கு மாலிக்காபூரின் படையெழுச்சி நேரடிக் காரணமாக இல்லாவிடினும், மறைமுகமாக இப் பேரரசினை வலிமை குன்றச் செய்து, அண்டையரசுகள் இதன் மீது ஆதிக்கம் புரிவதற்கு வழிவகுத்ததென்று கூறலாம்.

**சிற்றரசுகளின் சுயாட்சி**

மாலிக்காபூரது படையெழுச்சியால் வலிமை இழந்த பாண்டியப் பேரரசு, தன்னுடைமன் வட பகுதியினைக் காகத்தியரிடம் நிரந்தரமாக இழக்கவும், பாண்டியரின்கீழ் அடங்கியிருந்த சிற்றரசுகள் சுயாட்சி பெறவும் நேர்ந்ததனை கண்டு நாம் நினைவிற் கொள்ளுதல் வேண்டும்.

இப் படையெழுச்சிக்குப் பின் பாண்டியரது பேரரசு வீழ்ச்சியினை நோக்கி விரைந்து சென்று, காலம் செல்லச் செல்லத் தனது மேலாண்மையினை இழந்து, திருநெல்வேலி மாவட்டத்தின் சில பகுதிகளில் மட்டுமே ஆட்சியுரிமை பெற்ற அரசாக சுருங்கியதோடு, கி. பி. பதினோராம் நூற்றாண்டின் இறுதிக் கட்டத்தில் பாண்டிய அரசு என்ற பெயரினைக்கூட, தமிழக அரசியல் படத்தில் (Political Map of Tamilnad) காண இயலாத அளவிற்கு மறைந்து ஒழிந்தது. உலக முழுவதும் வென்று தன்னடிப் படுத்துவதனையே குறிக்கோளாகக்கொண்ட மாவீரன் அலெக்ஸாந்தரால் கைகொள்ளப் பெறாத பாண்டிய நாடு, இந்தியாவின் முதல் பேரரசன் என்று போற்றப்பெறும் சந்திரகுப்த மௌரியனால் அடிமைப்படுத்த இயலாத பாண்டிய நாடு, தென்னிந்தியா முழுவதிலும், வெற்றித் திருவுலா நடத்திய சமுத்திரகுப்தனுக்கு அடங்காத பாண்டியநாடு கேவலம் மாலிக் காபூர் என்ற அலித்தலைவனுக்கு அடிபணிந்ததென்று சிலர் கருதலாம்.

பாண்டியர் அலாவுதீன்கில்ஜி என்னும் டெல்லி சுல்தானுக்கு அடிபணிந்த செய்தி வியப்புக்குரியதன்று. ஏறத்தாழ இந்தியா முழுமையிலும், தனது மேலாதிக்கத்தினை நிறுவிய அலாவுதீனுக்கு, இந்தியப் பேரரசர்களின் படைவரிசையில் மிகவும் பரந்து விரிந்ததொரு பேரரசினைக் கொண்டிருந்தவனென்று

போற்றப்பெறும் இச் சுல்தானுக்கு, சின்னஞ்சிறு அரசான பாண்டியர் இணையாக மாட்டார்.

தமிழகத்தின் நிலை தாழ்ந்தது; எங்கணும் இருள் சூழ்ந்தது. முகம்மதியரின் ஆட்சி தமிழகத்திலும் பரவ இப் படையெழுச்சி வழிவகுத்தது.

'யானை வரும் பின்னே மணி ஓசை வரும் முன்னே' என்ற பழமொழிக்கேற்ப, பிற்காலத்தில் அழிந்துபட இருக்கின்ற பாண்டியப் பேரரசின் அறிகுறி முகம்மதியப் படையெழுச்சியின் காலத்திலேயே காணப்பட்டதாகக் கூறலாம். முகம்மதியப் படையெழுச்சியின் வலிமையான அடியிலிருந்து (blow) தன்னைக் காப்பாற்றிக் கொள்ள இயலாத பாண்டியப் பேரரசு பின்னர் நிகழ்ந்த சேர, காகத்திய முஸ்லிம் படையெழுச்சிகளைத் தாங்கிக் கொள்ளும் வலிமையினைப் பெற்றிருக்கவில்லை.

**படை சென்ற தடம் (Route)**

மாலிக்காபூர் டில்லியிலிருந்து இராமேஸ்வரம் வரை மேற்கொண்ட தனது தென்னிந்தியப் படையெழுச்சியில் மேற்கொண்ட வழி (route) அல்லது பாட்டை யாது என்பதனை திரு. எஸ். கிருட்டினசாமி ஐயங்கார் ஆய்ந்தறிந்து கூறியுள்ளார். அவை அனைத்தும் நமக்குத் தேவைப்படுவதாயில்லை. இருப்பினும் முகம்மதியப் படை கண்ணனூரிலிருந்து எவ் வழியைப் பின்பற்றி மதுரையடைந்தது என்பதனை மட்டும் அறிந்து கொள்ள நமக்கு ஆர்வம் பிறக்கிறது. கண்ணனூரிலிருந்து திருவரங்கம் வழியாக திருச்சியை அடைந்த பின்பு அப் படை எப்படி மதுரையை அடைந்திருக்க வேண்டுமென்பதற்கு அவர் பல வழிகளையும் ஆய்ந்து இறுதியில் ஒரு வழியைக் கூறியுள்ளார். திருச்சியிலிருந்து புறப்பட்ட முகம்மதியப் படை மாத்தூர்குளத்தினை அடைந்தது. மாத்தூர்குளம் என்பது திருச்சி-புதுக்கோட்டை பாட்டையில் குடுமியான்மலை வழியில் உள்ளது. பின்பு மாத்தூர்குளத்திலிருந்து புறப்பட்டு சித்தன்னவாயில் வழியாகக் குறுக்கே சென்று குடுமியான்மலையை அடைந்தது. குடுமியான்மலையிலிருந்து பொன்னமராவதி வந்தடைந்தது. பின்பு கந்தவராயன்பட்டி, திருப்பத்தூர் வழியாக மதுரை நேர் வழியில் சேர்ந்து மதுரையை அடைந்ததாக திரு. எஸ். கிருட்டினசாமி ஐயங்கார் அவர்கள் தமது நூலில் குறிப்பிட்டுள்ளார்.[1]

[1] S. Krishnaswami Iyyangar "South India and Her Muhammadan Invaders" page 108, lines 14-20.

**சேர வேந்தனின் படையெழுச்சி கி. பி. 1311-13**

அலாவுதீன் கில்ஜியின் படைத்தலைவனான மாலிக்காபூர் தென்னிந்தியாவின்மீதுப் படையெடுத்தகாலை பல வலிமை மிக்க அரசுகள் அவனடி பணிந்ததையும் அவற்றுள் போசளரும், பாண்டியரும் குறிப்பிடத்தக்கவராவர் என்பதையும் நாம் முன்பே கண்டோம். அதுபோழ்து சேர நாட்டின் பகுதிகளைக் கொல்லத்தைத் (Quilon) தலைநகராகக் கொண்டு ஆண்டு வந்தவன், இரவிவர்மன் குலசேகரன் ஆவான்.[1] ஆற்றலும் அறிவும் நிரம்பப் பெற்ற இவன் 'சங்கராமதீரன் (போர் வலிமை பெற்றவன்) என்ற விருதுப் பெயரினையும் பெற்று, திருவாங்கூர்ப் பகுதியில் மக்களது நலம் பேணி நல்லாட்சி புரிந்து வந்தான் நல்ல வேளையாகத் தென்னாட்டில் சூறாவளிபோல் தனது படையெழுச்சியினை மேற்கொண்டு பேரழிவினை நிகழ்த்தி வந்த மாலிக்காபூரது படையெழுச்சியால் இவன் சிக்கவில்லை. சேரநாடு முகம்மதியப் படையெழுச்சியினின்றும் தப்பிப் பிழைத்து; சூறாவளியில் சிக்கிய கொடிமலர்போல் மற்ற தென்னிந்திய அரசுகள் சிதறி அடிக்கப்பட்டபோது, சேர மலர் மட்டும் தேன் சொட்டும் மலராகப் பூத்துக் குலுங்கியது. அதன் மணமும் யாண்டும் பரவியது. இதன் காரணமாகச் சேர அரசு அண்டை அரசுகளைவிட வலிமை குன்றாது புதுப் பொலிவுடன் திகழ்ந்தது.

**பாண்டிய நாட்டின்மீது தாக்குதல்**

மாலிக்காபூர் தனது தென்னிந்தியப் படையெழுச்சியினை முடித்துக் கொண்டு பொருளைக் கொள்ளை கொண்டு டெல்லிக்குத் திரும்பினான்; முகம்மதிய தாக்குதலினால் பாண்டியப் பேரரசோ வீழ்த்தப்பட்டுக் கிடந்தது; முஸ்லிம் படையெழுச்சியின் விளைவாலும் அரசுரிமைப் போராட்டங்களின் விளைவாகவும் பாண்டி வேந்தரின் குடும்பத்தில் கட்டுப்பாடும் ஒற்றுமையுணர்வும் குலைந்தது. மாலிக்காபூர் மதுரையைவிட்டு டெல்லிக்குப் புறப்பட்ட பின்புகூட வீரபாண்டியனுக்கும், சுந்தரபாண்டியனுக்கும் பாண்டிய நாட்டில் அரசுரிமைப் போர் தொடர்ந்து நடை

[1] இவன் கி.பி. 1266-67ல் பிறந்தான். சேரவேந்தர்களும் புகழ்மிக்க வேந்தன். இவனைப்பற்றிய விரிவான செய்திகள் 'A Medival Karala Ruler' என்ற தலைப்பில் திரு. எஸ். கிருஷ்ணசாமி ஐயங்காரால் எழுதப் பெற்ற கட்டுரையில் காணலாம். இது எர்ணாகுளம் கல்லூரி ஜூலை 1919-ல் வெளியிடப் பெற்ற மலரில் இடம் பெற்றுள்ளது.

E.1. Vol. iv, pp. 145, ff. Vol. viii, -p. 8; A.R. t. 1900, para 15; 1911, part ii, part ii, para 40; 1914 part ii, para 24 etc and T.A.S. Vol. ii, pp. 53 ff. Dr. S. Krishnaswami Iyengar. South India and Her Muhammadan Invaders p. 124.

பெற்றது. இந் நிலையில் தன்னாட்டினைப் பன்முறை வென்று தன்னாட்டின் பெருமையைக் குலைத்து வந்த பாண்டியரை வென்று பழி தீர்த்துக் கொள்ள இதுவே தக்க தருணம் என்று இரவிவர்மன் குலசேகரன் எண்ணினான்: பெரும் படை திரட்டினான்; அடியுண்ட நாகம் போல் வீழ்ந்து கிடந்த பாண்டியப் பேரரசின் மேல் கிரியெனப் பாய்ந்தான். வீரபாண்டியன் என்னும் பாண்டி வேந்தனுக்கும், இரவிவர்மன் குலசேகரனுக்கும் போர் நிகழ்ந்தது. வீரபாண்டியன் தோல்வியைத் தழுவியதுடன் கொங்கனில் (Konkon) அடைக்கலம் புகுந்தான். இப் போர் நிகழ்ச்சியினைத் திருவரங்கத்தில் காணப்பெறும் இரவிவர்மன் குலசேகரனது கி. பி. 1313-14-ஆம் ஆண்டுக் கல்வெட்டுகளால் அறியலாம்.[1]

### சோழ நாட்டின்மீது தாக்குதல்

பாண்டியரை வென்று தன்னடிமைப்படுத்திய சேர வேந்தன், பின்பு சோழநாட்டின்மீதும் தாக்குதல் நிகழ்த்தினான். முன்பே தன் வலிமையை இழந்திருந்த சோழர்கள், சேரனை எதிர்த்துத் தாக்கும் பெரு வலிமை கொண்டவர்களாகத் திகழவில்லை. எனவே, சேரனுக்கு அடிபணிந்தனர். கி. பி. 1313-ல் வடக்கே தென்னார்க்காடு மாவட்டம் திருவடி என்னுமூரில், இவன் இருந்தான் என்லாம்.

### இரவிவர்மன் முடிசூடல்

இரவிவர்மன் குலசேகரனது கல்வெட்டுகள் திருவரங்கம், காஞ்சிபுரம், பூந்தமல்லி ஆகிய இடங்களில் காணப் பெறுகின்றன. இவ் வேந்தனது நான்காம் ஆட்சி ஆண்டுக் கல்வெட்டு (கி. பி. 1315-16) காஞ்சிபுரத்தில் காணப்படுகின்றது. இக் கல்வெட்டில் இவன் பாண்டியரையும், சோழரையும் வென்று, சேரனின் மேலாண்மையினை ஏற்றுக் கொள்ளச் செய்து தனது நாற்பத்தாறுவது வயதில் வேகவதி ஆற்றங்கரையில் தமிழகத்தின் தன்னிகரற்ற வேந்தனாக முடிபுனைந்து கொண்டதாகக் குறிக்கப்பட்டுள்ளது.[2] இவ்வாறு இவன் முடி கவித்துக் கொண்டது ஏறத்தாழ கி. பி. 1312-1313-ல் இருக்கலாம் என்று கருதலாம். காஞ்சிபுரத்திற்கு அருகில் ஓடிப் பாலாற்றில் கலக்கும் சிற்றாறுதான் வேகவதி ஆறு என்று அறிஞர்கள் திரு. கில்ஹார்ன், திரு. உல்ஷ், திரு. கிருஷ்ணசாமி ஐயங்கார் ஆகியோர்

[1] Epi. Coll. for 1909. Sec. 74.

[2] No. 34 of 1911.

கருதுகின்றனர்.[1] இது மதுரை மாவட்டத்தில் உள்ள ஆறு என்று திரு. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியார் கருதுகின்றார்.

**பிரமதேயம்**

பூந்தமல்லியில் கிடைத்துள்ள இவ் வேந்தனது வடமொழிக் கல்வெட்டொன்று (கிரந்த எழுத்தில்) சேர வேந்தன், பாண்டி வேந்தனான சுந்தரபாண்டியனை வென்று அடக்கிய செய்தியினைக் குறிப்பிடுகின்றது. இக் கல்வெட்டினைக் கொண்டு, பூந்தமல்லி என்னும் பெயர் தனது வெற்றியின் நினைவாகச் சேரபாண்டிய சதுர்வேதிமங்கலமெனப் பெயரிடப் பெற்று, பிராமணர்களுக்குப் பிரமதேயமாக வழங்கப்பட்டதெனவும் அறியலாம்.

இச் செய்தியினை உறுதி செய்கின்ற வகையில் மற்றும் ஒரு கல்வெட்டும் பூந்தமல்லியில் காணப்பெறுகின்றது. இக் கல்வெட்டின் வலப்புற ஓரத்தில் பாண்டியரது இரு மீன்களும் ஒரு அங்குசத்தின்கீழ் இருக்கின்ற நிலையில் செதுக்கப்பட்டுள்ளது.[2] பாண்டியரின் மீன் சின்னம் சேரனது அங்குசத்திற்குத்[3] தாழ்ந்தது என்னும் கருத்தை விளக்குவதாகவே இது அமைந்துள்ளதால் பாண்டியரை சேரர் வெற்றிகொண்ட செய்தி நன்கு சித்திரிக்கப்பட்டு உள்ளதென அறியலாம்.

மேற்கூறிய கல்வெட்டுச் செய்திகளால் பாண்டி நாட்டு வேந்தர்களான வீரபாண்டியன், சுந்தர பாண்டியன் ஆகிய இருவருமே இரவிவர்மன் குலசேகரனால் தோற்கடிக்கப்பட்டாரென்பதனை அறியலாம். இவ்விருவரும் மாறவர்மன் குலசேகர பாண்டியனின் மைந்தர்களாவார்.[4]

[1] பாண்டியரது சின்னம் இரு மீன்களேயாகும். இதனை ஈராசுப் பாதிரியார் கூற்றாலும் (The Minaran in MohenJo-Daro-Rev. H. Heras, S.J.) சடையவர்மன் இரண்டாம் வீரபாண்டியனின் கல்வெட்டாலும் (A.R.E. No. 356 of 1906 it 19!2 and 65)—Ceylon Coins and Currency—H. W. Codrington, B.A. (oxon) c. cs 1925) பாண்டியரது மீன் கொடியை விளக்கமாக அறிய விரும்புவோர் திரு. அ. இராகவன் அவர்கள் இயற்றிய 'கோநகர் கொற்கை' என்னும் நூலில் கண்டுகொள்க (கொடியும் முத்திரையும் பக்கம் 126–140).

[2] No. 33 of 1911.

[3] அங்குசமென்பது யானைப்பாகன் கையிலுள்ள கருவி. யானையை அடக்குவதற்கு இது மிகவும் பயன்படுகின்றது.

[4] இவண் குறிக்கப்பட்டுள்ள சுந்தர பாண்டியன் மாறவர்மன் குலசேகர பாண்டியனின் மகனான சுந்தர பாண்டியனே என்பதுறுதி. இங்கு கூறப்பட்டுள்ள வீரபாண்டியனைப் பொறுத்தமட்டில் நாம் இவன் மாறவர்மன் குலசேகரபாண்டியனது மகனா? என்பதனை அறுதியிட்டு உறுதியாகக் கூற வியலவில்லை. ஏனெனில் ரவிவர்மன் குலசேகரனுக்கு வீரபாண்டியன் என்ற பெயர் கொண்ட இரு எதிரிகள் இருந்ததாகத் தெரிகிறது. இவ் விருவருள் ஒருவன் கி.பி. 1296–97-ல் அரியணை ஏறினான். மற்றொருவன் வேணாட்டினை யாண்டுவந்த வீர பாண்டியனாகத் தெரிகிறது. போரில் தோல்வியுற்று கொங்கன் சென்று அடைக்கலம் புகுந்தவனே இவனாவான். (E.I. Vol. IV, p. 148 and note 4 on 146).

### குஸ்ருகானின் மாபார் படையெழுச்சி கி. பி. 1318

டில்லி சுல்தான்களுள் சிறப்பு மிக்க மன்னவனாகத் திகழ்ந்த அலாவுதீன் கில்ஜி கி.பி. 1316ஆம் ஆண்டு ஜனவரி திங்கள் ஐந்தாம் நாள் இறந்துபட்டான்; நோய்வாய்ப்பட்ட சுல்தான் இறந்தவுடன், அதிகாரப் பொறுப்புகளைத் தனது கையில் வைத்திருந்த மாலிக்காபூர் டெல்லி சுல்தானாக முடிபுனைந்து கொள்ள ஆவலுடன் காத்திருந்தான்; அலாவுதீன் கில்ஜியின் குழந்தைகளைச் சிறையிலடைத்தான். சுல்தானது ஒரு மகனை மட்டும் தன் பக்கம் சேர்த்துக் கொண்டான். பெயரளவில் அவனிடம் ஆட்சியினை ஒப்படைத்துத் தானே ஆட்சிப் பொறுப்புகளை மேற்கொண்டான். முப்பத்தைந்து நாட்கள் முடிவதற்குள் எதிர்பாராத விதமாக மாலிக்காபூர் கொல்லப்பட்டான். இந்நிலையில் சிறையினின்றும் தப்பியோடி வந்த, அலாவுதீனின் மகனை முபாரக் ஷா (கி.பி. 1316-1320) என்பான் ஆட்சியைக் கைப்பற்றினான்.

குஸ்ருகான் டெல்லி சுல்தானாகப் பதவி ஏற்றவுடன் தென்னாட்டினை வெல்லத் திட்டமொன்று தீட்டினான். முதன் முதலில் யாதவ நாட்டின்மீது படையெடுத்து, அதன் தலைநகரான தேவகிரியைக் கைப்பற்றி அங்கு நல்லாட்சி நடைபெறும் பொருட்டு முஸ்லிம் கவர்னர் ஒருவனை அமர்த்தினான். அடுத்து, போசள நாட்டின்மீது படையெடுத்து, அதன் தலைநகரான துவாரசமுத்திரத்திலும் முஸ்லிம் ஆதிக்கத்தினை நிறுவ முற்பட்டான். துவாரசமுத்திரத்தில் முஸ்லிம் பாதுகாப்புப் படையொன்றினை நிறுத்துவதில் இவன் வெற்றி பெற முடியவில்லை. எனவே, தோல்வியுடன் திரும்பினான் டெல்லி நோக்கி.

### காகதீயரின் தோல்வி

காகதீய நாட்டு வேந்தன் சுல்தானுக்குச் செலுத்த வேண்டிய திறைப் பணத்தைச் செலுத்தாத காரணத்தால் சீற்றம் கொண்ட சுல்தான், தனது படைத் தலைவனை குஸ்ருகானும் காகதீய வேந்தனை இரண்டாம் பிரதாபருத்திரனை வென்ற அவனிடம் திறையினைப் பெற்று வந்தான். காகதீயரை வென்று குஸ்ருகான் அடுத்து, தனது பார்வையினைத் தமிழ்நாட்டின்மீது செலுத்தினான். கி. பி. 1317ல் இப் படைத் தலைவன் தமிழகத்தின்மீது படையெடுத்தான்.

### காரணம்

மாபாரில் முஸ்லிம்களது பிடி தளர்ந்ததால் மீண்டும் தனது மேலாண்மையினை அங்கு நிறுவும் பொருட்டோ, அல்லது

மாபாரின்மீது படையெடுத்து, அதனை வெற்றி கொண்டு, பெரும் பொருள் சேர்க்கவோ, இப் படையெழுச்சி மேற் கொள்ளப்பட்டது எனலாம்.

மாலிக்காபூரின் மதுரைப் படையெழுச்சி நிகழ்ந்து சில ஆண்டுகளில் குத்புதீன் முபாரக்ஷா, தனது படைத்தலைவனைத் தென்னிந்தியாவிற்கு அனுப்பினான். இப் படையெழுச்சிப் பற்றி பரணி அவர்கள் தமது நூலில் குறிப்பிட்டுள்ளார். குஸ்ருகான் படையெடுத்துச் சென்றபோதும் வீரபாண்டியன், சுந்தரபாண்டியன் ஆகிய இருவரிடையே ஒற்றுமை நிலவவில்லை. இருவர்களிடையேயான உரிமைப் போராட்டமும் நின்றபாடில்லை. குஸ்ருகானது படை பாண்டிய நாட்டில் காலடி எடுத்து வைத்தபோது அதனை ஆண்டு வந்த சுந்தரபாண்டியன் தனது தலைநகரினைவிட்டே ஓட்டம் பிடித்தான். தலைநகரில் பாண்டிய வேந்தனையும் அவனது படையையும் காணப்பெறாத குஸ்ருகான் இரு நகரங்களிலும் தனது கண்ணிற்குத் தென்பட்ட ஏறத்தாழ நூறு யானைகளைக் கைப்பற்றிக் கொண்டான். இத் தருணத்தில் மழைக் காலம் வந்துவிட்டதால் குஸ்ருகான் பகைவரை வென்று தன்னடிப் படுத்த முடியாமல் தனது நாட்டிற்குச் செல்லவும் இயலாமல் அங்கேயே தனது படையுடன் தங்க நேரிட்டது.

**சதித் திட்டம்**

அங்கு தங்கி வந்த காலத்தில் பணக்கார வணிகனும், சன்னி முஸ்லிமுமான 'தகீ கான்' என்பானை மிரட்டி அவனைப் பலவந்தப்படுத்தி அவனது செல்வத்தினைச் சுரண்டியதோடு, இறுதியில் அவனைக் கொன்றுவிட்டான். குஸ்ருகான் ஏறத்தாழ ஓராண்டு காலம் மாபாரில் தங்கினானெனலாம்.

இக் கொலை பாதகச் செயல் மட்டுமின்றி, குஸ்ருகான் தனது சுல்தானையும் பதவியிலிருந்து இறக்கிவிட்டு, தானே டெல்லிப் பேரரசின் சுல்தானாக அமர்வதற்குத் திட்டம் தீட்டினான். அங்குள்ள புகழ்மிக்க பிரபுக்களைத் தூண்டி விட்டு சுல்தானுக்கு எதிராகச் சதிச் செயலில் ஈடுபட்டான். இத் திட்டத்துடன் டெல்லி சென்ற குஸ்ருகான், தனது ஆதரவாளர்களின் உதவியால் சுல்தான் முபாரக்ஷாவைக் கொன்று, டெல்லி சுல்தானாகத் தானே முடி முனைந்து கொண்டான். இவன் 'நஸ்ரு தீன் குஸ்ரு ஷா' என்ற பட்டப்பெயருடன் கி. பி. 1320–ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் பதினைந்தாம் நாள் டெல்லி சுல்தானாகப் பதவி ஏற்றான். 'முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்' என்பது போன்று அதே

ஆண்டு செப்டம்பர் மாதம் ஐந்தாம் நாள் அவன் கொல்லப் பட்டான்.

பத்து ஆண்டுகளுக்கு முன்பாக அலாவுதீன் கில்ஜியால் கொள்ளையடிக்கப்பட்ட மதுரை சுல்தானின் ஆட்சிக்குட்பட்ட நிலையான முகம்மதியப் படையெழுச்சியொன்று மேற்கொள்ளப் படவேண்டிய தேவையே இல்லை. இதனால் முகம்மதிய அரசு முன்பு நிலையாக நிறுவப்படவில்லையென்பது தெரிகிறது.

**காகதீயரின் படையெழுச்சி**

தமிழகத்தின் மாபெரும் வெற்றி வீரனாகத் திகழ்ந்த சேர வேந்தனும் இரவிவர்மன் குலசேகரன் தனது வெற்றிக் கனியை நீண்டநாள் சுவைத்து இன்புற முடியாத எதிர்பாராத சூழ்நிலை யொன்று ஏற்பட்டது. இத் தருணத்தில் போசளர்கள் தாங்கள் தமிழகத்தில் இழந்த பகுதிகளைக் கைப்பற்றத் திட்டமிட்டு, படைவலியைப் பெருக்கி, தமிழகத்தின்மீது படையெழுச்சியினை மேற்கொள்ளக் காத்திருந்தனர். மூன்றும் வீர வல்லாளன், வீர உதய மார்த்தாண்டவர்மன் பாண்டி வேந்தன் ஆகியோர் கூட்டுச் சேர்ந்து சேரமன்னனை விரட்டியடிக்க முயன்றனர். மதுரையை ஆண்டு கொண்டிருந்த வீர பாண்டியன், பல தொல்லைகளின் காரணமாகத் துவண்டு கிடந்த போதிலும் போசளரின் துணை கிடைத்ததைப் பெருவாய்ப்பாகக் கருதினான். இச் சமயத்தில் காகதீய மன்னனான பிரதாபருத்திரன் தனது படைத்தலைவனை முப்பிடி நாயகன் தலைமையில் வலிமை மிக்கப் படையொன்றினைக் கொடுத்து, பாண்டிய நாட்டின்மீது படை யெடுத்து வர ஆணை பிறப்பித்தான். இவற்றினைக் கேள்வியுற்ற சேர வேந்தன் தனக்குச் சாதகமான சூழ்நிலை வட பாண்டிய நாட்டில் உருவாகாத காரணத்தால், அப் பகுதியினை விட்டு வெளி யேறி விட்டதாகத் தோன்றுகிறது. முப்பிடி நாயகன் பாண்டிய நாட்டில் படையெடுத்து வந்த காலை, சேரவேந்தன் வடபாண்டி நாட்டில் காணப் பெறுமையின் மேற்கூறிய கருத்து உறுதிப் படுகிறது.

**காஞ்சி கைப்பற்றப்படல்**

திட்டமிட்டபடி முப்பிடி நாயகன் வடபாண்டிய நாட்டின் மீது படையெடுத்தான். காகதீயப்படை பாண்டிய நாட்டின் கண் நுழைந்தது கண்டு பாண்டியர் பதறினர். தனது பேரரசு அழிந்துபட்டு விடுமென்று அஞ்சிய வீரபாண்டியன், சுந்தர பாண்டியன், விக்கிரம பாண்டியன், குலசேகர பாண்டியன்,

பராக்கிரம பாண்டியன் ஆகிய ஐவரும் ஒன்று திரண்டனர். பெரும்படை திரட்டினர்.

இரு படைகளும் காஞ்சிபுரத்தில் அணிவகுத்து நின்றன. காகதீயரின் படைபலத்திற்கு முன்னால், ஒற்றுமையின்றித் தம்முள் வேறுபாடும், மாறுபாடும் கொண்ட பாண்டியப்படையெதிர் நிற்க முடியவில்லை. வெற்றிக் களியைச் சுவைத்த காகதீயர் காஞ்சிபுரத்தைக் கைப்பற்றினர்.

பாண்டியரது படைகளை ஒன்று திரட்டிக் காகதீயரை எதிர்ப்பதில் முன்னணியில் நின்ற சுந்தரபாண்டியன் பாண்டிய நாட்டின் வடக்குப் பகுதியினை இழந்தான். இப் போரில் வெற்றி பெற்ற காகத்தீயர் பாண்டியரது யானைப் படைகளைக் கவர்ந்து கொண்டது, ஈண்டு நினைவு கொள்ளத் தக்கதாகும். முப்பிடி நாயகனின் கல்வெட்டுகள் காஞ்சியிலும் திருவானைக்காவலிலும் (ஜம்புகேஸ்வரம்) காணப்படுவதால் இவன் திருச்சிப் பகுதியையும் கைப்பற்றி இருத்தல் வேண்டுமெனக் கொள்ளலாம்.

**கல்வெட்டுச் செய்தி**

சுந்தரபாண்டியனது பதினான்காம் ஆட்சியாண்டுக் கல்வெட்டொன்று தென்னார்க்காடு மாவட்டம் விருத்தாசலத்துக் கோயிலில் காணப்படுகின்றது. இக் கல்வெட்டினைக் கொண்டு முப்பிடி நாயகன் பெயரால் பூசையொன்று இக் கோயிலில் நடைபெற்றதாக அறிய முடிகின்றது. இதனால் காகதீயப் படைத் தலைவனை முப்பிடி நாயகனிடம் தோல்விகண்ட பாண்டியன் சுந்தரபாண்டியனாக இருத்தல் வேண்டுமென அறியலாம்.

**காஞ்சிப்போரின் விளைவுகள்**

காஞ்சிப்போரின் விளைவாகப் பாண்டிநாட்டின் வடபகுதி காகதீயரால் கைப்பற்றப்பட்டது. பாண்டியர் ஆங்குத் தாம் பெருமையினை இழந்தனர். ஓரங்கல் (Orangal) நாட்டுத் தெலுங்கு வேந்தர்களின் மேலாண்மை சில காலம் வடபாண்டி நாட்டில் நிலைபெற இப் போர் வழிவகுத்தது.[1] அலையலையாகத் தொல்லைகள் பாய்ந்து வந்த போதிலும், அன்னியரின் படையெழுச்சியினைப் பாண்டிநாடு அடிக்கடி சமாளிக்க வேண்டியிருந்தபோதிலும், பாண்டியநாடு தனது வீழ்ச்சிப் பாதையை நோக்கி விரைந்து சென்று கொண்டிருந்தபோதிலும், பாண்டி நாட்டினைக் காத்து, அதன் பெருமையை உயர்த்தத் தாம்

[1] See. A.R.E. 1909. part ii, para 73 and 1918. part ii, para 50.

ஒற்றுமையுடன் இருக்க வேண்டுமென்ற எண்ணம் வீரபாண்டியனது நெஞ்சிலும் சுந்தரபாண்டியனது நெஞ்சிலும் கொஞ்சமும் தோன்றவில்லை. மாறாகத் தானே பாண்டிய நாட்டாட்சி என்னும் கட்டமுகுக் கன்னியை அடைய வேண்டுமென்று ஒவ்வொருவரும் முயன்றனர். பொது நலங்கருதி ஒற்றுமையாக இருக்கவேண்டிய பாண்டி இளவரசர் இருவருமே தன்னலமெனும் காந்தக் கண்களால் கவரப்பட்டனர். ஒருவரோடு ஒருவர் மாறுபட்டனர்; வேறுபட்டனர். வீர பாண்டியன் ஒரு பக்கமும் அவனுடைய மைந்தனை சமுத்திர பாண்டியன், பராக்கிரம பாண்டியன் ஆகிய இருவரும் ஒரு பக்கமும் நின்று அரசுரிமைப் போரைத் தொடர்ந்து மேற்கொண்டனர். அதிகார வெறியாலும், ஆணவப் போதையாலும் மயங்கிய இவர்கள் தம்மையும், தமது பேரரசினையும் விழுங்கவிருந்த ஆபத்தினைச் சிறிதும் உணராது, பொறுப்பற்ற முறையிலேயே நடந்து கொண்டனர்.

### குறுநில மன்னர் தனி ஆட்சி நிறுவுதல்

கோட்டையிலே குத்தும் வெட்டும், அரசுரிமைப் போரும் நடந்து கொண்டிருந்ததைக் கண்ட பாண்டிய சிற்றரசர்கள், தமக்கு இது ஒரு நல்வாய்ப்பே என மகிழ்ந்தனர். நெடு நாட்களாகத் தனித்த ஒரு தன்னாட்சியினை மேற்கொள்ளத் துடித்துப் போர்க் கொடியுயர்த்தி வந்த குறுநில மன்னர்கள், பாண்டியர்க்குத் திறை செலுத்த மறுத்தனர். சமயம் நேர்ந்தால் தமது படைகளைப் பாண்டியர்க்கெதிராக நிறுத்தவும் தயாராயினர்.

### சம்புவராயர் சுயாட்சிப் பெறல்

கி. பி. 1264 முதல் பாண்டியர்க்குத் திறை செலுத்தும் சிற்றரசர்களாக இருந்து கொண்டு வட ஆர்க்காட்டினை ஆண்டு வந்த படைவீட்டு இராச்சியத்துச் சாம்புவராயர்கள் இதனைப் பொன்னான வாய்ப்பாகக் கொண்டு தனியாட்சிப் பெற்றனர். சம்புவராயர்களின் தனியாட்சியை நிறுவிய அடலேறு விடுதலை வீரன் குலசேகரன் ஆவான். இவன் பாண்டியரது மேலாண்மையினை கி. பி. 1317-18 ல் தகர்த்து எரிந்து தனியாட்சியினை மேற்கொண்டான்.

### சோழர்

இவ்விதம் குலசேகர சம்புவராயன் பாண்டியரின் பிடியிலிருந்து விடுபட்டதனைத் தொடர்ந்து சோழரும் தன்னாட்சி நிறுவும் முயற்சியில் ஈடுபட்டனர். மூன்றும் இராசேந்திர சோழனின் மகனான சேமப்பிள்ளை என்பான் அக்காலப் புதுக்கோட்

டைப் பகுதியில் சோழ வேந்தனாகப் பாண்டியருக்குட்பட்டு ஆண்டு வந்தான். 'காற்றுள்ள போதே தூற்றிக்கொள்' என்ற பழமொழியைப் பின்பற்றி சேமப்பிள்ளையும் பாண்டிய நாடு குழப்பத்தில் மூழ்கியிருந்தபோது பாண்டியரது ஆதிக்கத்தினை உதறித்தள்ளி, தனியாட்சி மேற்கொண்டான்.

### மூன்றும் சடைய வர்மன் சுந்தர பாண்டியனும் வீரபாண்டியனும்

அன்னியரின் படையெழுச்சிக்குட்பட்ட போதிலும் பாண்டியப் பேரரசு வலிமை குன்றிய போதிலும், பாண்டியப் பேரரசு முற்றிலும் அழிந்து படவில்லை. கி. பி. 1319 வரையில் சுந்தர பாண்டியன் தொடர்ந்து பாண்டி வேந்தனாகச் செங்கோல் செலுத்தி வந்தான். இதே கால கட்டத்தில் வீரபாண்டியனும் இராமநாதபுரம் பகுதியில் ஆண்டு வந்தான். தனது ஆட்சியாண்டின் பெயரால் கல்வெட்டுகளை வெளியிட்டு வந்தான். கி. பி. 1303ல் அரசு கட்டிலேறிய மூன்றும் சடையவர்மன் சுந்தர பாண்டியன் தனது பதினேழாம் ஆட்சி ஆண்டுவரை கல்வெட்டுகள் வெளியிட்டதாகத் தெரிகிறது. மாவீரனாகத் திகழ்ந்த இவன் 'கோதண்டராமன்' என்னும் சிறப்புப் பெயர் பெற்றிருந்தான். கோதண்டராமன் என்னும் பெயரினை ஒரு பக்கம் தாங்கியும், இரட்டை மீன்களை மறுபக்கமும் கொண்டு விளங்குகின்ற நாணயம் ஒன்று நமக்குக் கிடைத்துள்ளது. இந் நாணயத்தினை இவனே வெளியிட்டிருத்தல் கூடுமென்று ஊகிக்கலாம்.[1] தென்னார்க்காடு மாவட்டத்தின்கண் கிடைத்துள்ள இவ் வேந்தனது கல்வெட்டு கோதண்டராம் சதுர்வேதி மங்கலம் என்னும் குடியிருப்பு ஒன்றினை இவன் நிறுவினான் என்று கூறுகின்றது.[2]

### கலியுக ராமன்

சடையவர்மன் சுந்தர பாண்டியனின் போட்டியாளனான (rival) வீரபாண்டியன் 'கலியுகராமன்' என்னும் பட்டத்தினைப் புனைந்திருந்தான். இவனது கல்வெட்டு மதுரையிலும் காணப்படுகின்றது.[3] இக் கல்வெட்டினைக் கொண்டு தியாகவிந்த பிரம ராஜன் என்பான் இவனிடம் திருமந்திர ஓலை நாயகமாகப் பணி புரிந்தான் எனத் தெரிகின்றது. வட ஆர்க்காட்டுப் பகுதியில்

[1] A.R.E. 1918, para ii, para 50. Contta K. V. S. Iyyar. cop. at p. 167) இவனுக்கு முன்னர் கண்ட வீரபாண்டியனே கோதண்டராமனென்று வழங்கப்பட்டானென்றும், எனவே, இக்காசு அவனால் வெளியிடப்பட்டதென்று கூறுவாரும் உளர்.

[2] A.R.E. 1956–57, p. 77–78.

[3] 279 of 1942.

காணப்பெறும் இவ்வேந்தனது முப்பத்தோராம் ஆட்சியாண்டு கல்வெட்டு,[1] இவ் வேந்தனது தேவியான உலக முழுதுடைய ராமன் 'கலியுக ராமன்—திருத்தோள் பிரியாத—திருமங்கை' என்பான் செய்த தானத்தினைக் குறிக்கின்றது.

**கியாசுதீன் துக்ளக்கின் படையெழுச்சி கி.பி. 1323—கியாசுதீனும் அவனது குறிக்கோள்களும்**

கியாசுதீன் துக்ளக் என்பான் கி. பி. 1320 முதல் 1325 முடிய டில்லி பேரரசினை ஆண்ட சுல்தான் ஆவான். இவன் கி.பி. 1320ல் கில்ஜி வம்சத்தின் கடைசி சுல்தானுன குஸ்ருகானைக் [khusru khan] கொன்றுவிட்டு டில்லி அரியணையில் அமர்ந்து புதியதொரு அரசினை நிறுவினுன். இதுவே துக்ளக் வம்சம் என்று அழைக்கப்பெறுகிறது. இவனது இயற்பெயர் காஜிமாலிக் [ghazi Malik] என்பதாகும்.

கில்ஜிப் பேரரசினை ஒழித்துவிட்டு, துக்ளக் பேரரசினை நிறுவிய கியாசுதீன் தனது ஆதிக்கத்தினை இந்தியா முழுவதும் பரப்பத்திட்டமிட்டான். நாடு பிடிப்பதிலே நாட்டம் கொண்ட இவன் டில்லிப்பேரரசின் மேலாதிக்கத்தினை ஏற்றுக்கொள்ளாத அரசுகள்மீது கடுமையான நடவடிக்கைகளை மேற்கொள்ள உறுதி பூண்டான். தக்காணத்திலும் தொலைவிலுள்ள தென்னிந்திய அரசுகள்மீதும் தனது மேலாண்மையினை நிலைநாட்டத் திட்டம் தீட்டினுன்.

## அரசியல் சூழல்

**வாரங்கல் மாபார் (மதுரை)**

தக்காண அரசுகளில் காகாத்திய அரசே அக் காலத்தில் வலிமை பெற்றிருந்தது. இவ் வரசினை பிரதாபருத்திரன் என்பான் வாரங்கல்லைத் தலைநகராகக்கொண்டு சிறப்புடன் ஆண்டுவந்தான். அலாவுதீன் கில்ஜியின் ஆட்சிக் காலத்தில் டெல்லி சுல்தானியத்தின் மேலாண்மையினை ஏற்றுக்கொண்டிருந்த காகாத்திய அரசு அலாவுதீன் கில்ஜியின் பின்னர் சுல்தானியத்தின் மேலாதிக்கத்தினைத் தூக்கி எறிந்துவிட்டுத் தனியாட்சி மேற்கொண்டது.

தனது படை வலிமையினைப் பெருக்கிக்கொண்டு அண்டை அரசினையும் மிரட்டிகொண்டிருந்தது. இவனை மற்ற சிற்றரசர்

[1] A.R.E. 1939-40. p. 251.

களும் பின்பற்றினர். மராட்டிய நாட்டில் டில்லி சுல்தானியத்தின் ஆளுனனுக இருந்த ஒருவனது பகுதியிலும் விடுதலை இயக்கம் தலைதூக்கியது.

**பாண்டிய நாடு**

பாண்டிய நாட்டினை பராக்கிரம பாண்டியன் என்பான் ஆண்டுவந்தான். இவனுடைய அரசு மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலி ஆகிய மாவட்டங்களையும் திருச்சி, தஞ்சை மாவட்டங்களின் ஒரு சில பகுதிகளையும் உள்ளடக்கியதாக இருந்தது. பாண்டிய வேந்தரது எதிரிகள் அவனுக்கு எதிராக கிளர்ச்சிகளைச் செய்துகொண்டு இருந்தனர். முன்பே அழிந்து கொண்டிருந்த பாண்டிய அரசு இவனது காலத்தில் அரசுரிமைப் போட்டி காரணமாக மேலும் குழப்பத்தில் ஆழ்ந்திருந்தது. கி.பி. 1311, 1318ஆம் ஆண்டுகளில் முறையே மாலிக்காபூர், குஷ்ருகான் ஆகியோரது தாக்குதலுக்கு இலக்காகிய பாண்டிய அரசு, தனது அரசியல் நிலையினைச் சீர் செய்துகொள்ள இயலாது நீண்ட உறக்கத்திலே கிடந்தது. ஒற்றுமையின்மையும் அமைதியின்மையும் நாட்டின் பல பகுதிகளில் தலைவிரித்தாடியது. இவ்வாறு பல பகுதிகள் சுல்தானிய ஆட்சியினின்றும் விடுபடுவதனைக் கண்ட துக்ளக் தென்னிந்தியாவில் உள்ள இந்து அரசுகள் அனைத்தையும் ஒன்றன்பின் ஒன்ருகக் கைப்பற்றித் தன்னுடைய ஆட்சியைக் குமரிமுனை வரை விரிவுபடுத்தத் தீர்மானித்தான்: படையெடுத்தான்.

**கியாசுதீனினின் வாரங்கல் படையெழுச்சி**

கியாசுதீன் துக்ளக் தனது இரண்டாம் ஆட்சியாண்டில் (கி.பி. 1321–1322) ஜீனுகான், ஜீனு என்றும் உலூகான் என்றும் அழைக்கப்பெறுகின்ற தனது மகனை ஒரு பெரும் படையுடன் தெற்கு நோக்கி அனுப்பினுன். உலூகானின் படை தேவகிரி வழியாக வாரங்கல்லை அடைந்தது. பெரும் போரினைத் தொடங்கியது. தோல்வியினையும் தழுவியது. தோல்வியைத் தழுவிய உலூகான் டில்லி திரும்பினுன். கி.பி. 1323-ல் இரண்டாம் தடவையாகப் பெரும் படையுடன் வந்து வாரங்கல்லை முற்றுகையிட்டு அதன் வேந்தனை பிரதாபருத்திரனை முறியடித்தான். அவன் நாட்டினையும் கைபற்றிக்கொண்டான். பிரதாபருத்திரனையும் அவர் குடும்பத்தினையும் சிறைபிடித்து டில்லிக்கு அனுப்பிவைத்தான். பிரதாபருத்திரனே இடைவழியிலேயே தற்கொலை செய்துகொண்டான் என்பர்.

**மதுரைப் படையெழுச்சி**

முஸ்லிம் ஆதாரங்கள் மதுரையினை மாபார் என்றே குறிப்பிடுகின்றன. வாரங்கல்லில் பெரு வெற்றிபெற்ற உலூகான் அடுத்து பாண்டிய நாட்டின்மீது தனது படையையேவினான்.[1] கி.பி. 1323-ல் டில்லிப் படை பாண்டிய நாட்டின் தலைநகரான மதுரையைக் கைப்பற்றியதாக உள்நாட்டுக் குறிப்புகள் கூறுகின்றன.[2] உலூகான் மாபாருக்கும் ஒரு படையை அனுப்பினான். அந்தப் படை மாபாரை வென்றது. அதனால், அது டில்லி சுல்தானுடைய ஆட்சியின்கீழ் சிறிதுகாலம் இருந்தது. பாண்டிய மன்னன் பராக்கிரம தேவனை முஸ்லிம்கள் சிறைபிடித்து டில்லிக்குக் கொண்டுபோனார்கள் என்று திரு. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியார் கூறுகின்றார்.[3] கி.பி. 1327ஆம் ஆண்டு முகம்மது பின் துக்ளக் தனது தலைநகரினை டில்லியிலிருந்து தேவகிரிக்கு மாற்றும்போது மதுரையும் டில்லி சுல்தானது பேரரசிற்கு உட்பட்ட பகுதியாக இருந்ததென்பதனை முஸ்லிம் வரலாற்றிஞர் பரணி (Barani) குறிப்பிடுவதனாலும் அறியலாம்.

**விளைவுகள்**

இவ் வெற்றியின் விளைவாகப் பாண்டியநாடு துக்ளக் ஆட்சியுடன் சேர்க்கப்பட்டது. எனவேதான், திரு. சிராஜுதீன் அபுல் பத் உமார் (Siraj-ud-din Abdul Fath Umar) என்ற டெல்லி அரசவை வக்கீல் முகம்மது துக்ளக்கின் இருபத்து மூன்று மாநிலங்களில் பாண்டிய நாடும் ஒன்றாக இருந்ததென்று கூறியுள்ளார்.[4] ஏறத்தாழ கி. பி. 1330-ல் முகம்மது துக்ளக்கின் பேரரசு லாகூர் முதல் மாபார் வரை பரவியிருந்ததனை நாமறியலாம்.[5]

கிட்டத்தட்ட கி. பி. 1332-ல் பாண்டிய நாட்டில் நல்லாட்சி நிலவவில்லையென்று திருச்சி மாவட்டம் ராங்கியம் என்னுமூரிலுள்ள கல்வெட்டுக் குறிப்பிடுகின்றது.[6] இதில் ஆதிசுரத்தானைப்

1 Dr. N. Venkataramayya 'Early Muslim expansion in South India' p. 159

2 Journal of Oriental Research Madras, X11, 212.

3 K. A. Nilakanta Sastri 'History of South India' (Tamil translation by M. R. Perumal Mudaliar. தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை) page 363.

4 Elliot and Dowson Vol. 111, pp. 574-75.

5 Dr. S. Krishnaswami Iyengar. 'South India and Her Muhammadan Invaders' p. 136.

6 No. 670 of Pudukkotai State Inscriptions.

பற்றியும் குறிக்கப்பட்டுள்ளது. இவண் ஆதிசுரத்தானென்பது முகம்மது துக்ளக்கையோ அல்லது அவனது அதிகாரிகளுள் ஒருவனையோ குறிப்பதாகும். இதுபோன்ற படையெடுப்பு களால் பாண்டிய நாட்டில் உள்நாட்டுக் குழப்பங்கள் மலர்ந்திருந் தமையின் மக்கள் பல சொல்லொணுத் தொல்லைகளுக் குள்ளாயினர். இக் காலகட்டத்தில் பொன்னமராவதி நாட்டி லுள்ள குலமங்களம் பண்ணையூராகிய கிராமத்தார் கூலிப்படை களாகி ஒருவரோடொருவர் சண்டையிட்டுக் கொண்டனர்.

பாண்டிய நாட்டை ஆட்சிபுரிய ஜலாலுதீன் அசன்ஷா என்பவன் ஆளுநராக முகம்மது துக்ளக்கால் அனுப்பப் பட்டான். உலூகான் என்ற இப் படைத்தலைவனே கியாசுதீன் துக்ளக்கிற்குப் பின்பு முகம்மது-பின்-துக்ளக் என்ற பெயருடன் டெல்லி சுல்தாளுக கி. பி. 1325-ஆம் ஆண்டு பதவியேற்றுன். இவன் கி. பி. 1351-ஆம் ஆண்டு முடிய டெல்லி சுல்தாளுக ஆட்சிபுரிந்து வந்தான்.

**பாண்டிய வேந்தர்களின் ஆட்சி**

பாண்டியர்கள் பழம்பெருமையிழந்து காணப்பட்ட போதிலும் அவர்களது ஆட்சி மறையவில்லை. மதுரை, இராம நாதபுரம், தஞ்சாவூர் ஆகிய பகுதிகளில் பாண்டியரின் ஆட்சி மங்காது, மறையாது தொடர்ந்து நடைபெற்று வந்தது. பாண்டிய வேந்தர்பலர், தனித்தனிப் பகுதிகளைத் தன்னுட்சியின் கீழ்க்கொண்டு ஆண்டு வந்தனர். இவர்கள் தங்கள் பெயரால் கல்வெட்டுகளை வெளியிட்டு வந்தனர். சடையவர்மன் பராக்கிரம பாண்டியன், மாறவர்மன் வீரபாண்டியன், மாற வர்மன் பராக்கிரம பாண்டியன், சடையவர்மன் பராக்கிரம பாண்டியன் போன்ற பாண்டி வேந்தர்கள் இக் காலப் பகுதியில் பலவிடங்களில் பிரிந்து நின்று ஆட்சி புரிந்தனர். இவ் வேந்தர் களைவிட மிக்கப் புகழுடனும், பெருமையுடனும் ஆண்டு வந்தவன் சுந்தரபாண்டியனின் தம்பியான மாறவர்மன் குலசேகர பாண்டியனுவான். இவன் கி. பி. 1346 வரையில் நலமுடன் ஆண்டு வந்தான்.

**முஸ்லிம் ஆட்சி**

இவர்கள் பாண்டி நாட்டின் சில பகுதிகளையாண்டு வந்த போதிலும் பாண்டியரின் தொன்னகரும் தலைநகருமான மதுரையின்கண் சுல்தானின் (முஸ்லிம் மன்னன்) ஆட்சியே நடைபெற்று வந்தது. இதனைக் கண்டு மனம் பொருத பாண்டி வேந்தர்களும், போசள வேந்தனுன மூன்றும் வீர வல்லாள

னுடன் கூட்டு சேர்ந்து மதுரை முஸ்லிம்களின் ஆட்சியை ஒழிக்கத் திட்டமிட்டனர்; இருப்பினும் வெற்றி கிட்டவில்லை. முஸ்லிம் ஆட்சியே மதுரையில் நீடித்தது.

**முடிவுரை**

இதுகாறுங் கூறியவற்றான் குலசேகர பாண்டியனது ஆட்சியின் பிற்பகுதியில், அவனது மக்களிடையே பட்டத் தகராறு ஏற்பட்டதென்றும், அதன் காரணமாக நாட்டில் உள் நாட்டுக் குழப்பம் ஏற்பட்டதென்றும், அதுபோழ்து இந்தியாவின் இணையற்ற வேந்தனான அலாவுதீன் கில்ஜி தென்னிந்தியாவின்மீது படையெடுக்கத் தன் படைத்தலைவனான மாலிக்காபூரை அனுப்பினான் என்றும், அவன் தென்னாட்டின் பல அரசுகளை வென்றானென்றும் அறியலாம். இதனால் பாண்டிய நாடும் பாதிக்கப்பட்டது; டெல்லி சுல்தானியம் போன்று மதுரை சுல்தானியமும் ஏற்பட்டது.

# 12. மதுரையில் சுல்தான்கள் ஆட்சி

**முன்னுரை**

மதுரையினை ஆண்டுவந்த சுல்தான்களின் ஆட்சிபற்றி அறியுமுன்பு, மதுரை சுல்தானியம் ஏற்படக்காரணமாயிருந்த டில்லி சுல்தானியத்தைப்பற்றியும், ஆங்கு சுல்தானாக வீற்றிருந்து ஆட்சிபுரிந்துவந்த, முகம்மது பின் துக்ளக்கின் செயல்முறைகள் பற்றியும் அறிந்துகொள்ள வேண்டியது அவசியமாகிறது.

## முகம்மது பின் துக்ளக் (கி. பி. 1325-1351)

டில்லி சுல்தானியத்தின் ஆற்றல்மிகு சுல்தானாக யாவரும் போற்றும் வண்ணம் ஆட்சிபுரிந்துவந்த அலாவுதீன் கில்ஜிக்குப் (கி. பி. 1296-1316) பின்னர், கில்ஜி வம்சத்தினைச் சேர்ந்த நசிருதீன் குஸ்ரூஷா, டில்லி சுல்தானாகப் பதவியேற்றான். இவனே கில்ஜி வம்சத்தின் கடைசி சுல்தானுவான். கி. பி. 1320-ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் பதினைந்தாம் நாள் டில்லி சுல்தானாகப் பதவியேற்ற இவன், அதே ஆண்டு செப்டம்பர் திங்கள் ஐந்தாம் நாள் கியாசுதீன் துக்ளக் ஷாவினால் கொல்லப்பட்டான்; இவனுடன் கில்ஜிப் பேரரசு முடிவுற்றது; துக்ளக் பேரரசு முளைவிட்டது. டில்லி சுல்தானாக அமர்ந்த கியாசுதீன் துக்ளக்ஷா (கி.பி. 1320-1325), தனது மகனை உலூகானைத் தென்னிந்தியப் படையெழுச்சியில் ஈடுபடுத்தினான். கி. பி. 1323-ஆம் ஆண்டு பராக்கிரம பாண்டியன் தோற்கடிக்கப்பட்டு, சிறைபிடிக்கப் பட்ட செய்தியும், அவ்வாண்டில் மாபார் (பாண்டிய நாடு) டில்லி சுல்தானிய ஆட்சியின்கீழ் கொண்டு வரப்பட்ட செய்தியும், கியாசுதீன் துக்ளக்கின் அரிய சாதனையாகும். பன்னெடுங்காலம் மதுரை மாநகரின்கண் மாண்புடன் விளங்கிய பாண்டியப் பேரரசு நிலைகுலைந்தது. தென்னிந்தியாவில் வெற்றிவாகை சூடிய இவ் வுலூகான் கி.பி. 1325-ஆம் ஆண்டின் தொடக்கத்தில் (பிப்ரவரி அல்லது மார்ச் மாதம்) தனது தந்தையைக் கொன்று விட்டு, முகம்மது துக்ளக் என்னும் பட்டப்பெயர் கொண்டு டில்லி சுல்தானாகப் பதவியேற்றான்.

**தக்காணத்தின் நிலை**

முகம்மது துக்ளக் அறிவிலும் ஆற்றலிலும் மேம்பட்டவனாகத் திகழ்ந்த போதிலும், இவனது ஆட்சிக் காலத்தில் டில்லி சுல்தானியத்தின் பெயரும் புகழும் குன்றிவிட்டது. இவன் டெல்லி சுல்தானாகப் பதவியேற்ற தருணத்தில் தக்காணத்தின் பல பகுதிகள் டெல்லி சுல்தானியத்தின் மேலாண்மையினை ஏற்றுக்கொண்டிருந்தன. தேவகிரியும் வாரங்கல்லும் சுல்தானிய அதிகாரிகளின் நேர்முகக் கட்டுப்பாட்டில் கொண்டு வரப்பட்டன. தென்கோடியில் டில்லியினின்றும் வெகு தொலைவிலுள்ள மாபெரும் டெல்லி சுல்தானின் அரசப் பிரதிநிதியால் ஆளப்பட்டு வந்தது. இருப்பினும் இவற்றின்மீது சுல்தானது மேலாண்மையும் பிடியும் தளர்ந்துகொண்டிருந்தது. இவனது திறமையின்மையின் காரணமாக இவை சரியானமுறையில் கண்காணிக்கப்படவில்லை. இந்தியா முழுமையினையும் - ஏன் அண்டை நாடுகளையும் வெற்றிகொண்டு பரந்ததொரு பேரரசினை ஆளவேண்டுமென்ற பேராசை அவனது மனத்திலே இருந்ததேயன்றி, அதற்கான செயல் திறமையும், நுண்ணறிவும் அவனிடமில்லை. இவனது தருணந் தவறியதும், பொருந்தாததுமான நடவடிக்கைகளால் இவன் எந்தப் படையெழுச்சியையும் வெற்றியுடன் முற்றுப்பெற வைக்க இயலவில்லை.

**சுல்தானின் திறமையின்மை**

டிரான்சாக்சியானா, குரசான், ஈரான் முதலியவற்றை வெற்றிகொள்ளத் திட்டமிட்டு, 3,70,000 போர் வீரர்களுக்கு ஓராண்டுகாலம் பயிற்சியளித்த துக்ளக், பின்பு இத் திட்டத்தினைக் கைவிட்டுவிட்டதுடன் படையையும் கலைத்து விட்டார். இவனது குஜ்ரால் படையெடுப்பும் இவனது செயலாற்றும் திறமையின்மைக்கே சான்றாக அமைந்திருந்தது. மேலும், மாங்கோலியத் தாக்குதலினை இவனால் சமாளிக்க இயலவில்லை.

**அரசுகளின் கிளர்ச்சியும் சுயாட்சியும்**

இவனது திறமையின்மையைக் கண்ட டெல்லி சுல்தானியத்தின் கீழுள்ள பல அரசுகள் சுல்தானுக்கெதிராகக் கிளர்ச்சியினைத் (Rebellion) தொடங்கினர். லாகூரிலும், தௌலதாபாத்திலும், வங்காளத்திலும். காராவிலும், பீடாரிலும், குல்பர்க்காவிலும் அவுத்திலும் முல்தானிலும் மத்திய ஆட்சிக்கெதிராகக் கலகங்கள் வெடித்தன. ஜத், பட்கி ஆகிய இராசபுத்திர குலத்தலைவர்களும் சமனாவில் சுல்தானுக்கெதிராகப் புரட்சிக்கொடியினை உயர்த்தினர். இவற்றுள் பல சுல்தானது

கடுமையான அடக்குமுறையால் ஒடுக்கப்பட்டன. சில இவனால் அடக்கப்பெறாது சுயாட்சி பெற்றன.

கி.பி. 1334-35-ல் மதுரையில் டில்லி சுல்தானின் கொத்தவாலாக அமர்த்தப்பட்டிருந்த சையது ஆஷன்ஷா தன்னுரிமையினைப் பறைசாற்றினான். கி. பி. 1336-ஆம் ஆண்டு விசயநகர இந்துப்பேரரசு தோன்றுவதற்குக் கால்கோளிடப்பட்டது.கி.பி. 1337-ஆம் ஆண்டு வங்கம் மத்திய ஆட்சியின் கட்டுப்பாட்டினைத் தகர்த்தெறிந்தது. கிருஷ்ணா துங்கபத்திரை நதிகளுக்குத் தெற்கேயிருந்த பகுதிகளனைத்தும் (குஜரத், தேவகிரி தவிர) சுல்தானிடமிருந்து பறிபோயின. இதுபோன்ற குழப்பமும், கொந்தளிப்பும் பல்கிப் பெருகியதால், சுல்தான் இருதலைக் கொள்ளி எறும்புபோல் தத்தளித்தான். பல அரசுகள் விடுபட்டன; சுல்தானோ துன்பத்தினின்றும் விடுபட்டபாடில்லை. மேற்கண்ட சுல்தானுக்கெதிரான புரட்சியில் விசயநகரப் பேரரசு தனியாட்சி நிறுவியதும், மதுரையில் சையது ஆசன்ஷா மத்திய ஆட்சியினைத் தூக்கியெறிந்து, தனியாட்சி மேற்கொண்டதுமே, பாண்டிய அரசினுக்குத் தொடர்புடையதாகலின், இதனை மட்டும் ஈண்டு நாம் விரிவாகக் காண்போம்.

**விசயநகரப் பேரரசு உருவாகுதல்**

தென்னிந்திய வேந்தர்கள் டில்லி சுல்தானது மேலாண்மையினை ஏற்றுக்கொள்ள மறுத்ததும், விடுதலை பெறத்துடித்ததும் முன்பே கண்டோம். முஸ்லிம் ஆதிக்கத்தினின்றும் தக்காணத்தை விடுவித்துக் கொள்ளும் எண்ணத்தில் கி. பி. 1329-ல் ஒரு இயக்கம் தோன்றியது. இதே தருணத்தில் தமிழகத்தில் சைவசமய மறுமலர்ச்சியும் விரைவாக மலர்ந்து மணம் பரப்பிக் கொண்டிருந்தது. முஸ்லிம்கள் தங்களது கோயில்களை இடிப்பதனையும், முஸ்லிம்களின் அட்டூழியத்தால் இந்துமதத்தின் புனிதத்தன்மை குழிதோண்டிப் புதைக்கப்படுவதனையும், தங்களது பழக்க வழக்கங்களும் மரபு முறைகளும் அழிந்துபடுவதனையும் கண்டு இந்துக்கள் குமுறினர்; ஆபத்து வந்ததென அலறினர். இச் சமயத்தில்தான் முகிலைக் கிழித்து வெளிக் கிளம்பும் முழுமதிபோல் சங்கமன் என்பானுடைய அரும்பெறற் புதல்வர்களான ஹரிஹரனும் புக்கனும் இந்து மதத்தினைக் காக்க கிளம்பினர். முஸ்லிம்களின் கொட்டத்தினையொடுக்கி, இந்து மதத்தின் புனிதத்தன்மையைக் காக்க முனைந்தனர்.

இந் நிலையில் மராத்திய மாகாணம் தவிர, தக்காணத்தின் பிறபகுதிகள் அனைத்தும் துக்ளக் ஆட்சியினைத்தூக்கி எறிந்தன.

மாபாரிலும் ஒரு பகுதி முஸ்லிம் ஆட்சியிலிருந்து விடுதலை பெற்றது; மற்றொரு பகுதியினை ஆண்டு வந்த முஸ்லிம் வேந்தனே டெல்லி சுல்தானை எதிர்த்துக் கலகஞ் செய்தவன். இவ்வாறு தக்காணம் முழுவதும் பரவலாகத் தோன்றிய முஸ்லிம் எதிர்ப்பு இயக்கம் ஹரிஹரர், புக்கர் ஆகிய இருவரையும் சிந்தனையில் ஆழ்த்தியது. முகம்மது துக்ளக்கிடம் அவர்கள் பணியாற்றிய போதிலும், துக்ளக்கின்மீது கொண்டிருந்த ராஜ பக்தி நாளடைவில் குறைந்தது. முஸ்லிம் மதத்தின்மீது இருந்த ஈடுபாடும் மறைந்தது. தமது நாட்டிற்கும், புனிதமான இந்து மதத்திற்கும் தூய தொண்டு புரிய உறுதி பூண்டனர். வித்யாரண்யரைக் கண்டனர். வித்யாரண்யரின் அறிவுரைப்படி துங்கபத்திரா நதிக்கரையில் தென்னிந்தியாவில் புதியதொரு நகரினை நிறுவி, அதற்கு விசயநகரம் (வெற்றி நகரம்) என்னும் பெயரினை யிட்டனர். 1336 ஏப்ரல் 18-ஆம் நாளன்று, அந் நகரிலே முதலாம் ஹரிஹரன் முடிசூடிக் கொண்டான்; இந்துக்களுக்கெனத் தனித்ததொரு இந்து அரசு ஒன்றினைக் கண்டான். இதுவே விசயநகரப் பேரரசு என அழைக்கப்பெற்றது; தென்னிந்திய வரலாற்றில் புகழும் பெற்றது.

### நோக்கம்

தென்னிந்தியாவில் முஸ்லிம் ஆதிக்கத்தினைத்தடுத்து நிறுத்தி, இந்துக்களின் உரிமைகளைப் பாதுகாப்பதனை நோக்கமாகக் கொண்டுதான் விசயநகரப் பேரரசு ஏற்படுத்தப்பட்டதென் பதனை ஈண்டு நாம் நினைவிற் கொள்ளவேண்டும். முஸ்லிம் அரசு இந்தியாவின் பெரும்பகுதிகளை ஆண்டுவந்த சமயத்தில், விசயநகர இந்து அரசு தோற்றுவிக்கப்பட்டு, புகழ் பரப்பியது போற்றுதற்குரியதொன்றாகும். விசயநகர அரசு நிறுவப்பெற்றிருக்காவிடில் இந்தியா முழுமையும் இஸ்லாம் மயமாக்கப் பட்டிருக்குமென்பதில் ஐயமில்லை.

### மதுரையில், டெல்லி சுல்தான் ஆட்சி ஒழிக்கப்படல்

டெல்லி சுல்தானான முகம்மது பின் துக்ளக் தனது மேலாண்மைக்கு உட்பட்ட பகுதிகளுக்குத் தனது ஆளுநர்களை அமர்த்தி ஆட்சிபுரியத் தக்க ஏற்பாடுகளைச் செய்திருந்தான். இவ்வாறு முகம்மது துக்ளக்கால் மதுரைக்கு ஆளுநராக அனுப்பப்பட்டவனே சயீது அஷன் ஷா (Sayyid Ashan Shah) என்பவனாவான். இவனை ஜலாலுதின் அசன் ஷா (Sharif-Jalal-ud-din Ashan Shah) என்னும் பெயராலும் சிலர் குறிப்பிடுகின்றனர். மற்ற ஆளுநர்களைப் போன்று மதுரையில் கொத்தவாலாக (Kotwal) இருந்த சயீது அஷன் ஷாவும் டெல்லி சுல்தானி

யத்திற்கெதிராகப் புரட்சிக்கொடியுயர்த்தினன். படையதிகாரிகள் பலரையும், மத்திய அரசின் அலுவலர் சிலரையும், முகம்மது துக்ளக்கின் ஆதரவாளரையும் கொன்று குவித்து, மத்திய ஆட்சியினை உதறி எறிந்துவிட்டு, தனியாட்சி நிறுவி, தனது பெயரில் தங்க நாணயங்களும் வெள்ளி நாணயங்களும் வெளியிட்டான். இவ்வாறு இவன் டில்லி சுல்தானிய மேலாதிக்கத்தினின்றும் விடுபட்டது கி.பி. 1334–35ஆம் ஆண்டாகும். கி.பி. 1323-ல் மாபாரில் தோன்றிய டெல்லி சுல்தானிய ஆட்சி பத்து ஆண்டுகளே நீடித்ததென்பதனை இதனாலறியலாம்.

**சுல்தான் அனுப்பிய படை**

மாபார் மத்திய ஆட்சியினின்றும் பிரிந்து தனியாட்சியாக உருவான செய்தியினைக் கேள்விப்பட்ட முகம்மது பின் துக்ளக் பெரும் படையொன்றினையனுப்பி சயித் அஹ்ஸன் ஷாவின் கொட்டத்தினையடக்கி வருமாறு ஆணை பிறப்பித்தான். அறிஞர் பரணி அவர்கள் கூறுவதுபோல் இப் படை டில்லிக்குத் திரும்பாமல் மாபாரிலேயே தங்கிவிட்டது.[1] இதனால் சுல்தானால் அனுப்பப்பட்ட படை அஹ்ஸன் ஷாவைத் தண்டிக்காமல் அஹ்ஸன் ஷாவின் பக்கம் சேர்ந்துகொண்டதெனலாம். மாபார் சென்ற தனது படை திரும்பி வராதது கண்ட முகம்மது துக்ளக் இம்முறை தானே நேரடியாக மாபார் சென்று அஹ்ஸன் ஷாவைத் தண்டிக்கப் படை கொண்டு சென்றான். தௌலதாபாத் வாரங்கல் வழியாகப் படை நடத்திச்சென்ற துக்ளக் வாரங்கல்லில் (திலிங்க நாட்டுத் தலைநகரான பத்ரகோட்) தங்கினர்; ஆங்கு கொடிய தொத்துநோய் பரவியதன் காரணமாகத் தனது படை வீரர் பலர் மாண்டுவிடவும், தனக்கும் அந் நோய் பீடித்து விடவுமான ஓர் இக்கட்டான சூழ்நிலை உருவாகிற்று. இதன் விளைவாக முகம்மது துக்ளக்கின் மாபார் படையெடுப்பும் தடைப்பட்டது; டெல்லி சுல்தான் தௌலதாபாத்திற்குத் திரும்ப வேண்டி நேரிட்டது. முகம்மது துக்ளக்கின் தலைமையில் புறப்பட்ட படை மாபார் செல்லாமல் இடையிலே திரும்பிவிட்டதனை திரு. பரணி, திரு. பெரிஷ்தா, திரு. இப்னே பதூதா ஆகியோரது குறிப்புகளால் அறியலாம்.

இந் நிகழ்ச்சியால், தென்னிந்தியாவில் முன்பே புகழ் மங்கிக் கிடந்த டெல்லி சுல்தானியத்தின் மதிப்பு மேலும் குறைக்கப்பட்டது. ஏன் அழிக்கவும்பட்டது. இந் நிலையில் நோயினால் பீடிக்கப்பட்ட சுல்தான் இறந்துபட்டானென்ற பொய்யான

[1] History of India as told by its own historians translated by H. M. Elliot and J. Dowson, London, 1867. iii, 243.

வதந்தியும் மக்களிடையே பரவிய காரணத்தால் நாட்டில் குழப்பம் மேலும் பெருகியது. இதன் காரணமாக இந்து, முஸ்லிம் ஆகிய இருவகைக் கலகக்காரர்கள் மேலும் ஊக்கம் பெற்றனர்; தமது திருப்பணிகளைத் தொடங்கினர்.

**நாணயங்கள்**

கி.பி. 1334ஆம் ஆண்டு வரை டெல்லி சுல்தானியத்தின் மேலாதிக்கம் மதுரையில் நிலைபெற்றிருந்த தென்பதனையும், சயீது அஷன் ஷா அதுவரை டெல்லி சுல்தானியத்தின் கவர்னராக இருந்தான் என்பதனையும் கி.பி. 1330, 1333, 1334ஆம் ஆண்டு பொறிக்கப்பட்ட முகம்மது துக்ளக்கின் நாணயங்கள் பாண்டி நாட்டில் கிடைத்துள்ளதால் அறியலாம்.[1] சயீது அஷன் ஷாவால் வெளியிடப்பெற்ற நாணயங்களுள் காலத்தால் முற்பட்டது கி.பி. 1335ஆம் ஆண்டு பொறிக்கப்பட்ட நாணயமாகும்.[2] முகம்மது துக்ளக்கினல் வெளியிடப்பெற்ற நாணயங்களுள் கி.பி. 1334ஆம் ஆண்டு பொறிக்கப்பட்டதே கடைசியாண்டினதாக உள்ளதாலும், அஷன் ஷா கி.பி.1335ஆம் ஆண்டு முதல் முதலாகத் தனது நாணயத்தினை வெளியிட்டுள்ளதாலும், அஷன் ஷா கி.பி. 1335ஆம் ஆண்டு மதுரைச் சுல்தானகப் பதவிபெற்றான் என்பதுறுதி.

**மதுரை சுல்தானிய ஆட்சித் தொடக்கத்தின்போது தமிழகத்தின் அரசியல் சூழல்**

முன்பு நிகழ்ந்த முஸ்லிம் படையெழுச்சியின் காரணமாக தமிழகத்தில் அமைதியற்ற சூழ்நிலை உருவாயிற்று. கொடுமைக்கு உள்ளான இந்துக்கள், தங்களது மதம் ஒடுக்கப்பட்டதாலும் வாட்டமுற்றுக் காணப்பட்டனர். இந் நிலையில் பாண்டியருக்கடங்கிய சிற்றரசராக ஆட்சிபுரிந்த வாணாதிராயர் பாண்டியரை வென்று கைப்பற்றி பாண்டிய நாட்டினை ஆட்சி புரியலாயினர். சேரவேந்தன் ரவிவர்மன் குலசேகரனும் பாண்டிய நாட்டின் சில பகுதிகளைக் கைப்பற்றிக்கொண்டு, அவற்றை ஆண்டு வந்தான். சம்புவராயர்கள் படைவீட்டிலிருந்து தொண்டை மண்டலத்தை ஆட்சிபுரிந்தனர். பாண்டிய நாட்டின் தென் பகுதியில் மட்டும் பாண்டியர் சிலர் இருந்து ஆட்சிபுரிந்தனர். இந் நிலையில் 'மழைவிட்டும் தூவானம் விடவில்லை' என்பது போல், மதுரையில் டெல்லி சுல்தானிய ஆட்சி முடிவுற்று,

[1] R. Sathianathier 'History of India' Vol. II, page 101.

[2] இவரது நாணயம் ஒன்றில் 'He who puts his trust in the help of the Merciful. Ashan Shah Sultan' என்ற எழுத்துக்கள் பொறிக்கப்பட்டுள்ளன. K. A. Nilakanta Sastri 'Foreign Notices of South India' page 217.

மதுரை சுல்தானிய ஆட்சி தொடங்கியது. 'தலைவலி போய் திருகுவலி வந்தது' எனக் கூறுவது போன்று ஒரு முஸ்லிம் ஆட்சி முடிந்து அடுத்த முஸ்லிம் ஆட்சி ஆரம்பித்தது. இவ் வவலநிலை கண்டு இந்துக்கள் மனம் துடித்தனர்; கண்ணீர் வடித்தனர்.

**சுல்தான் சையது அஷன்ஷா கி.பி. 1335-1340**

மதுரை சுல்தானியத்தின் முதல் சுல்தான் சையது அஷன் ஷா (Syed Ashan Shah) ஆவான். சையது ஹசன் (Syed Hasan) என்று அறிஞர் பரணியாலும் சையது ஹூசன் (Hussan) என்று அறிஞர் பெரிஷ்தாவாலும் குறிக்கப்படுபவன் இவனேயாவா னென்பது ஈண்டு நினைவிற் கொள்ளத்தக்கதாகும். கி.பி. 1335-ல் சுல்தானுகப் பதவியேற்ற இவன், தனது பெயரில் நாணயங்கள் அச்சிட்டான்; வெளியிட்டான்.

சையது அஷன்ஷா, அவனது பிரபுக்களில் ஒருவனுன அல்லாவுதீன் உதாஜி என்பவனுல் கி.பி. 1340 ஆம் ஆண்டு கொல்லப்பட்டான். இதனை முஸ்லிம் அறிஞரான திரு. இபின்பதூதா குறிப்பிடுவதனுல் அறியலாம். டில்லி சுல்தானிட மிருந்து விடுபட்டு மதுரை சுல்தானியத்தைத்தொடங்கிய அஷன் ஷாவின் ஆட்சி இவ்வாறு முடிவுற்றது. இவன் தனது காலத்தில், தன்பெயரால் நாணயங்கள் வெளியிட்ட செய்தி முன்னமே கூறப்பட்டுள்ளது. தானே சுல்தானுக வேண்டு மென்ற பேராசையால் உந்தப்பட்டு அஷன் ஷாவைக் கொலை செய்த உதாஜியே அடுத்து சுல்தானுகப் பதவியேற்ருன்.

**சுல்தான் அல்லாவுதீன் உதாஜி கி. பி. 1340**

அல்லாவுதீன் உதாஜி (Alauddin Udaji) கி. பி. 1340-ல் மதுரை சுல்தானுக அரியணையேறினுன். இரத்த வெறி பிடித்த அரக்கனுன இவன் அஷன் ஷாவிடம் முன்பு பணியாற்றிய அதி காரிகளுள் ஒருவனுவான். முஸ்லிம் மதக் கோட்பாட்டின்படி இந்துக்களின்மீது புனிதப் போர் செய்வதனை இவன் கடமை யாகக் கொண்டிருந்தான்; ஆனுல், இவனது ஆட்சியோ நீடிக்க வில்லை. இவன் ஒரே ஒரு ஆண்டுதான் சுல்தானுகப் பதவி யேற்றிருந்தான்.

**உதாஜியின் வெற்றியும் இறப்பும்**

முகம்மதிய மதத்தில் நம்பிக்கையற்றவர்மீது (Infidels) புனிதப் போரொன்றினை மேற்கொள்ள விழைந்த இவன் போசள மன்னனை மூன்றும் வீரவல்லாளனை வென்று தன்னடிப்படுத்த

தனது படையினை திருவண்ணுமலை நோக்கிப் புறப்பட ஆணை பிறப்பித்தான். கி.பி.1340-ல் வல்லாளனும் திருவண்ணுமலையில் தன் படையுடன் காத்திருந்தான். இரு திறத்தாரும் போரில் முட்டி மோதிக் கொண்டனர். இறுதியில் கி.பி. 1341-ல் உதாஜி வெற்றி பெற்ருன். பெற்றி வெற்ற உதாஜி தலைக்கவசத்தைக் (Helmet) கழற்றிவிட்டு, தண்ணீர்குடிக்க முயன்றபோது யாரோ ஒருவன் எய்த அம்புபட்டு, அதே இடத்திலேயே உயிர் துறந்தான்.[1] இவ்வாறு அம்பெய்தவன், சுல்தான்களின் ஆட்சியினை வேருடன் அகற்றவேண்டுமென்று கங்கணம் கட்டிக் கொண்டிருந்த மூன்ரும் வல்லாளனுக இருத்தல் கூடுமென்று திரு. எஸ். கிருஷ்ணசாமி அய்யங்கார் கருதுகின்ருர்.[2] இருப்பினும் இதனை உறுதிப்படுத்தத் தக்க சான்றுகளில்லை.

சுல்தான் குத்புதீன் கி. பி. 1340

சுல்தான் அல்லாவுதீன் உதாஜி கொல்லப்பட்டபின்பு, அவனுடைய மருமகன், குத்புதீன் என்ற பட்டத்துடன் மதுரை சுல்தானுக மணிமுடி தரித்துக் கொண்டான். நாற்பது நாட்களே மதுரை சிம்மாசனத்தில் சுல்தானுக அமர்ந்த துரதிஷ்டசாலியான (unfortunate) இவன் மக்களின் நல்லெண்ணத்தையும் நம்பிக்கையையும் இழந்த மன்னனுகக் கருதப்படுகிருன். இவனது நோக்கும் போக்கும் மக்களுக்கு அறவே பிடிக்காத காரணத்தால், முடிசூடி நாற்பது நாட்கள் கழிவதற்குள்ளேயே கொலை செய்யப்பட்டான்.[3]

மிகமிகக் குறுகிய காலமே ஆட்சிபுரிந்த போதிலும், குத்புதீன் தனது ஆட்சிக்காலத்தில் சில நாணயங்களை வெளியிட்டான்; வாணிகத்தைப் பெருக்கினுன். இவன் வழங்கிய நாணயத்தில் இவனுடைய பெயரும் ஆட்சியாண்டும் பொறிக்கப்பட்டுள்ளன. குருதிபடிந்த வரலாற்றினைக் கொண்ட இவனது நினைவாக ஒரு நாணயமாவது கிடைத்துள்ளதே என்பது நமக்கு ஆறுதல் அளிக்கிறது.

**கியாதுடீன் தாமகன் ஷா கி. பி. 1341-42**

சுல்தான் குத்புதீன் கொல்லப்பட்ட பின்பு கியாதுடீன் தாமகன்ஷா (Ghiyatha-ud-din Damaghan Shah) என்பான் சுல்தானுகப் பதவியேற்ருன். இவன் முன்பே முகம்மது பின்

[1] Journal of the Royal Asiatic Society 1909, pp. 673–75.
[2] S. Krishnaswami Iyengar 'South India and Her Muhammadan Invaders' p. 165.
[3] Ibn-Batuta.

துக்ளக்கின் படையில் குதிரை வீரனைகப் பணியாற்றி, போர்க் கலையில் நல்ல தேர்ச்சி பெற்றிருந்தான். மதுரையின் முதல் சுல்தானை அஷன் ஷாவினுடைய மகளை இவன் மணந்து கொண்டான். இவனது மனைவியின் உடன்பிறந்தாளை இபின் பதூதா மணந்து கொண்டான். இதனுல் இவன் இபின் பதூதாவிற்கும் நெருங்கிய உறவினன் ஆனுன். கி. பி. 1342-ல் இபின் பதூதா டெல்லி சுல்தானுல் சீனுவுக்கு அனுப்பப்பட்டபோது, கலமுடைந்து, கடலில் அல்லல்பட்டு இறுதியில் கரை சேர்ந்தான். நல்லவேளையாக, அச் சமயத்தில் ஆர்க்காடு (Harekatu) என்னுமிடத்தில்தான் கியாதுடீன், இந்துக்களுக்கு எதிராகத் தான் மேற்கொண்ட புனிதப்போரின் பொருட்டு ஆங்கு கூடாரமிட்டிருந்தான். இபின் பதூதாவினது கடல் விபத்துப்பற்றிக் கேள்விப்பட்ட சுல்தான் உடனே ஒரு குழுவினை அனுப்பி, அவனை அழைத்து வரச்செய்து, தனது கூடாரத்தில் தங்க வைத்து இன்முகங்காட்டி, இன்சொல் பேசி சத்தான உணவளித்தான்.

### சுல்தானின் அட்டூழியம்

இவ்விதமாக, தற்செயலாகத் தமிழ்நாட்டிற்கு வந்த இபின் பதூதா, தமிழ்நாட்டின் சில பகுதிகளைச் சுற்றிப்பார்க்கின்ற வாய்ப்பினைப்பெற்றுன். இவன் பல நாட்கள் மதுரையில் தங்கியிருந்து அங்குள்ள மக்கள் வாழ்வினைக் கண்டான். களி கொண்டான். சுல்தானும் தனது உறவினனுமான கியாதுடீனின் ஆட்சிபற்றியும் விவரமாக எழுதியுள்ளான். சுல்தான் இந்துக்களிடம் கொடுமையாக நடந்து கொண்டதோடு, அவர்களை மனிதத் தன்மையோடு நடத்தாது, நாயினும் கீழாக நடத்தியதுடன், அவர்களைக் கழுவேற்றி ஈவு இரக்கமின்றிக் கொன்று குவித்ததாக இபின் பதூதா தமது குறிப்புகளில் குறித்துள்ளார்.

இவனது ஆட்சிக்காலத்தில் பெண்கள், குழந்தைகள் ஆகியோரது கழுத்துகள் அறுக்கப்பட்ட கொடுமை வேறெங்கும் காணமுடியாத தொன்றுகும். குழந்தைகள் தமது தாயார்களிடம் பால்குடித்துக்கொண்டிருக்கும்போதே துடிக்கத் துடிக்கத் தலைகள் துண்டிக்கப்பட்டன. இவன், தான் கொன்று குவித்த இந்துக் குடிகளின் தலைகளை வெட்டி மாலைகளாகக் கட்டிச் சூலங்களுக்குச் சூட்டி மகிழ்ந்தான். கியாதுடீன் தாமகன் ஷா இந்துக்களைக் கொடுமையாக நடத்தினுனென்பதற்கு இவனது கூற்றினைத் தக்க சான்ருகக் கொள்ளலாம். சுல்தான் தனக்கு உறவினனுக இருந்தபோதிலும் அவனது அட்டூழி

யங்களை இவன் சுட்டிக்காட்டியிருப்பது பாராட்டத்தக்கதாகும். சுல்தான் இவ்வாறு கொடுமையாக நடந்து கொண்டால்தான், இவனது இறப்பும் ஆண்டவனால் விரைவுபடுத்தப்பட்டது.[1] கொடுமையெனும் குன்றின் கொடுமுடியில் நின்று கொக்கரித்த கொடியனும் இவனைக் கொடுமையே உருவான அட்டில்லா[2] வினுடன்தான் ஒப்பிடமுடிகின்றது.

## மூன்றும் பல்லாளனுக்கும் கியாதுடீனுக்கும் இடையேயான போர்

### கியாதுடீனின் நோக்கம்

மதவெறியால் மயக்கமுற்ற கியாதுடீன் அண்டையிலுள்ள இந்து அரசுகளையெல்லாம் அழித்தொழிக்கத் திட்டமிட்டான். குரானின் கட்டளைக்கிணங்க முஸ்லிம் அல்லாதார்மீது புனிதப் போரினைத் (Jehad) தொடுத்தான். தனது ஆட்சிக்குட்பட்ட இந்துக்களை அடக்கியொடுக்க சுல்தான் அண்டையிலுள்ள போசள (Hoysalas) அரசினை அழிக்கத் திட்டம் தீட்டினான்.

### போசளரின் ஆதிக்கம்

அக் கால இந்துஅரசுகளில் போசள அரசே படைவலியும், பெருநிலப்பரப்பும் கொண்ட பேரரசாக விளங்கியது. அக் காலை மூன்றும் பல்லாளதேவா என்பான் போசளநாட்டினைத் திறம்பட ஆண்டு வந்தான். இவனது பேரரசு பரந்துபட்டதாக இருந்ததால் இவன் மைசூர் நாட்டில் துவாரசமுத்திரம் என்னும் தலைநகரத்தையும், சேலம் பகுதியில் குந்தை என்னும் தலைநகரத்தையும், வடஆர்க்காடு பகுதியில் திருவண்ணாமலை என்னும் தலைநகரத்தையும் கொண்டு சிறப்புடன் ஆண்டு வந்தான். தமிழ் நாட்டில் போசளரின் ஆதிக்கம் பெருகிக் கொண்டிருந்தது. தனது ஆட்சியின் கடைசிப் பதினைந்து ஆண்டுகளில், வீர பல்லாளன் திருவண்ணாமலையிலுள்ள தனது தலைநகரில் தனது இருப்பிடத்தை அமைத்துக்கொண்டு முஸ்லிம் ஆதிக்கத்தினை ஒடுக்கும் பணியில் ஈடுபட்டுக்கொண்டிருந்தான். தொண்டை மண்டலத்தில் சம்புவராய ஆட்சியை நிறுவ பல்லாளன் பெரு முயற்சி மேற்கொண்ட காரணத்தால் அவனுக்கும் மதுரை முஸ்லிம் அரசுக்கும் முன்பே மனக்கசப்பு ஏற்பட்டிருந்தது. இதுவே பகையெனும் செடியாகி, மரமாகி, பூவாகி, பிஞ்சாகி, காயாகி, போரெனும் கனியாகக் கனிந்தது. அடுத்து, பல்லாளனின் தலைநகரான திருவண்ணாமலை மையமான

1 K. A. Nilakanta Sastri 'Foreign Notices of South India' p. 279.
2 இவன் ஒரு மங்கோலியன்.

இடத்தில் அமைந்திருந்ததோடு மதுரைக்கும் வடக்குப் பகுதிக்குமான நேரடிப் போக்குவரத்திலமைந்திருந்தது. இதனால் போசளரின் செல்வாக்கு பரவ ஏதுவாயிருந்தது.

**போர் நிகழ்ச்சிகள்**

வீரபல்லாளன் சோழமண்டலக் கடற்கரை (Coromandal Coast) முழுவதினையும் கைப்பற்றத் திட்டம் தீட்டியிருந்ததே இப் போருக்குக் காரணமாகுமென்று திரு. இபன் பதூதா கூறுகின்றார். இப் போர்பற்றிய செய்தியினையும் இபின் பதூதா தனது குறிப்புகளில் குறிக்க மறக்கவில்லை. ஈண்டு நாம் இபின் பதூதா இப் போரினை யாங்ஙனம் விளக்குகின்றார் என்பதனைக் காண்போம்.

கியாதுடீன் அரசினையொட்டி, இந்து அரசர்களிலே தலைசிறந்து விளங்கிய பிலால்தேவ் (மூன்றாம் வீரபல்லாளன்) என்பானுடைய இந்துப்பேரரசு அமைந்திருந்தது. பல்லாளனது படை இருபதினாயிரம் (20,000) முஸ்லிம்களையும் அகதிகளையும் கொண்டிருந்ததோடு, நூறாயிரத்திற்கும் (100,000) மேற்பட்ட வீரர்களைக் கொண்டிருந்தது. அவன் மாபார் அரசினைக் கைப்பற்றும் திட்டத்தினையும் கொண்டிருந்தான். மாபாரினை ஆண்டு வந்த முஸ்லிம் படையோ ஆறாயிரம் வீரர்களை மட்டுமே கொண்டிருந்தது; இவர்களுள் பாதிப்பேர் சிறந்த வீரர்களாகவும், மீதிப் பேர் சிறிதும் தகுதியற்றவர்களாகவும் இருந்தனர். போசளரது படை ஓரிடத்தில் அணிவகுத்து நின்று முதலில் முஸ்லிம் படைகளைத் தாக்கிப் போரிட ஆரம்பித்தது. போசளரின் தாக்குதலினுக்குத் தாக்குப்பிடிக்க முடியாத முஸ்லிம்படை உலைந்து ஓடிற்று. பின்பு போசளர், கண்ணனூர் கொப்பத்தில்[1] முகம்மதியப் படைகளை முற்றுகையிட்டனர்.

இம் முற்றுகை ஆறு மாத காலம் நீடித்தது. முற்றுகையினின்றும் தன்னை இனி காத்துக்கொள்ள வியலாது என்றெண்ணிய முஸ்லிம்படை போசளருடன், சமாதானப் பேச்சுவார்த்தை நடத்துவதற்கு முன்வந்தது. கோட்டையைத் தன்னிடம் விட்டுவிடுவதனால், அவர்கள் மதுரைக்குத் திரும்பிச் செல்ல அனுமதிப்பதாக வீரபல்லாளன் கூறினான். 'தமது சுல்தானிடம் இதுபற்றிக் கலந்தாலோசிக்க வேண்டுமென்று 'முஸ்லிம் படையினர் கூறினர். இதனால் வீர பல்லாளனும்

[1] இது திருவரங்கத்திற்கு அருகிலுள்ள 'கண்ணனூர் கொப்பம்' என்னுமிடமாகும். கண்ணனூர் கொப்பம் இக் காலை சமயபுரம் என அழைக்கப்படுகிறது. இது திருச்சியிலிருந்து வடக்கே ஏறத்தாழ எட்டுக்கல் தொலைவிலுள்ளது.

பதினான்கு நாட்களுக்குப் போர் நிறுத்த உடன்பாட்டினைச் செய்து கொண்டான். வீரவல்லாளன் முஸ்லிம்களுடன் பேச்சு வார்த்தைக்கு இணங்கியதும், அவர்களைச் சுல்தானுடன் கலந்தாலோசிக்க அனுமதித்ததும் பல்லாளனின் மாபெரும் தவறாகும். முஸ்லிம் வீரர்களும் இங்குள்ள நிலையினை விளக்கமாக மதுரைச் சுல்தானுக்கு எழுதினர்.

இக்கடிதம் கிடைக்கப்பெற்ற மதுரைச் சுல்தான், மதுரைப் பள்ளி வாசலில் முஸ்லிம்களனைவரும் தொழுகை நடத்திக் கொண்டிருந்தபோது, இதனைப் படித்துக் காட்டினான். கோட்டையை எக்காரணத்தைக் கொண்டும் பகைவர்களிடம் ஒப்படைத்துவிடக் கூடாதென்றும், அப்படி ஒப்படைத்தால் அதுவே நமக்கு அழிவைத் தருமென்றும், நாம் தொடர்ந்து முற்றுகையை விடுவிக்கத் தீவிர முயற்சி செய்ய வேண்டுமென்றும், முஸ்லிம்கள் முடிவுசெய்தனர். எனவே, கியாசுதீன் (தன்னால் அப்போது திரட்ட முடிந்த) நான்காயிரம் படைவீரர்களைத் திரட்டிக் கொண்டு, இரகசியமாகக் கண்ணனூரில் இந்துக்கள் கூடாரமடித்துக் கொண்டிருக்கும் இடத்திற்குச் சென்று, ஆங்கு குழப்பம் விளைவித்து, அவர்களைத் துரத்தினான்.

எதிர்பாராது நிகழ்ந்த இத் தாக்குதலினால் இந்துக்கள் ஒன்றும் செய்ய இயலவில்லை. ஏறத்தாழ எண்பது வயதான, கிழட்டு மன்னனான பல்லாளன், ஒரு குதிரைமீதேறி தப்பித்துச் செல்ல முயன்றபோது, நஸிருதீனால் கைது செய்யப்பட்டு, சிறைப்பிடிக்கப்பட்டான். நஸிருதீன், கியாதுடீனது உடன் பிறந்தாளின் மகனாவான் (Nephew) என்பது ஈண்டு குறிப்பிடத் தக்கதாகும். பல்லாளனை போசள மன்னனென்று தெரிந்து கொள்ளாத நசிருதீன் அவனைக் கொல்ல முயன்றபோது, அடிமையொருவன் 'அவர்தான் போசள மன்னன்' என்று கூறவே, நசிருதீன் பல்லாளனை அவ் விடத்திலேயே கொல்லாது விடுத்தான்.

**பல்லாளன் கொல்லப்படல்**

சிறைப்பிடிக்கப்பட்ட போசளவேந்தன் சுல்தானின் முன் நிறுத்தப்பட்டான். சுல்தானும் ஆரம்பத்தில் பல்லாளனை மரியாதையுடன் நடத்தினான். அவனது செல்வங்களையும், யானை, குதிரை ஆகியவற்றையும் கவர்ந்துகொண்டான். பின்பு கருணையற்ற முறையிலே அவன் கொல்லப்பட்டான். அவனது தோல் உரிக்கப்பட்டு, (உள்ளே) வைக்கோலால் அடைக்கப்பட்டு, மதுரை மதிலின்மீது தொங்கவிடப்பட்டது. அதே நிலையில்

அதனை கி.பி. 1342-ல் தானும் பார்த்ததாக இபின் பதூதா குறிப்பிடுகின்றார்.

பெரும் படையின் துணையால் முஸ்லிம்களை வென்ற பல்லாளன், விதிவசத்தால், முஸ்லிம் தலைவனின் வார்த்தையினை நம்பி கி.பி. 1342ல் தோல்வியைத் தழுவி, சாவினையும் தழுவினான். இவ்வாறு போசள அரசின் புகழ்மிக்க கடைசி வேந்தனை மூன்றாம் பல்லாளதேவன் சாவின் கரங்களால் அணைக்கப் பட்டான். போசளரது பெருமையும் குன்றியது.

**கியாதுடீனின் இறப்பு**

வல்லாள தேவனைக் கருணையின்றிக் கொன்ற கியாதுடீன் நெடுநாட்கள் உயிர்வாழ முடியவில்லை. 'முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்' என்பதுபோல் கியாதுடீனின் இறுதிக்காலம் நெருங்கிக் கொண்டிருந்தது. வல்லாள தேவன் கொல்லப்பட்டு சில நாட்கள் சென்றபின் மதுரை மாநகரின்கண் கொடுமைமிக்க காலரா கடுமையாகப் பரவியது. கியாதுடீனின் அருமை மகன் முதன் முதலில் காலராவுக்கு இரையானான். தனது ஒரே மகனை யிழந்த சுல்தான் பெரிதும் வருந்தினான். அடுத்து, சுல்தானின் ஆருயிர் மனைவியும் காலராவினால் விழுங்கப்பட்டாள்; இதன் விளைவாகச் சுல்தான் பெருந் துன்பத்திற்குட்பட்டான்; 'பட்ட காலிலே படும், கெட்ட குடியே கெடும்' என்பதுபோல் காலரா, சுல்தானது அருமைத் தாயையும், அடுத்தபடியாகத் தனது வயிற்றில் அடக்கிக்கொண்டது. அடுக்கடுக்காக நேர்ந்த இறப்பினால் கியாதுடீன் துன்பத்தால் துடித்தான்; கண்ணீர் வடித்தான். சோகச் சுமையைத் தாங்க இயலாது தத்தளித்த சுல்தான் அடுத்த பதினைந்து நாட்களுக்குள்ளாகவே தனது இன்னுயிரையும் இழந்தான். கொடுமையின் இருப்பிடமாய், அட்டூழியத்தின் பிறப்பிடமாய் வாழ்ந்துவந்த கியாதுடீன் இறந்துபட்டான்; அவனது உடன் பிறந்தாரின் மகனை நசிருதீன் மதுரைச் சுல்தானாக அரியணையேற்றப்பட்டான். இந் நிகழ்ச்சிகள் யாவும் இபின் பதூதா மதுரையை விட்டுப் பயணமாகுமுன்பே நடைபெற்றன.[1] அவன் நசிருதீன் சுல்தானது ஆட்சிக் காலத்தில் தான் மதுரையை விட்டுப் புறப்பட்டான். அதுவரை அவன் மதுரைப் பகுதியிலேயே தங்கி மக்களின் வாழ்வினைக்கண்டு, அதனைக் குறித்து வைத்துள்ளான்.

[1] For details see Ibn Batula. French translation by C. Defremery and B. R. Sanguinetti, IV, pp. 185-200; S. Krishnaswami Iyengar 'South India and Her Muhammadan Invaders' page 166-168. Dr. A. Krishnaswami 'The Tamil Country under Vijayanager' p. 27.

**கியாதுடீனின் நாணயம் (காசு)**

கியாதுடீன் தாமகன் ஷா தனது ஆட்சிக்காலத்தில் தனது பெயரால் நாணயங்கள் வெளியிட்டுள்ளான். அவனது நாணயங்களுள் இரண்டு நமக்குக் கிடைத்துள்ளன. இந் நாணயத்தில் முஸ்லிம்களின் ஹிஜிரா ஆண்டான 741 (A. H. 741) பொறிக்கப் பட்டுள்ளது;[1] கியாதுடீன் தாமகன் ஷா என்ற பெயரும் பொறிக்கப்பட்டுள்ளது. இந் நாணயங்களைப் பண்டாரகர் உல்ஷ் அவர்கள் சேகரித்து வைத்திருந்ததால், வரலாற்றிற்கு இன்று பயன்படுகின்றன.

**சுல்தான் நசிருதீன்**

சுல்தான் கியாதுடீன் தாமகன் ஷா கொள்ளை நோயால் கொண்டு செல்லப்பட்ட பின்பு, அவனது உடன் பிறந்தாரின் மகனை (Nephew) நசிருதீன் மதுரைச் சுல்தானியத்தின் சுல்தானாகப் பதவியேற்றான். இவன் பதவியேற்றான் என்று சொல்வதைவிட பதவியை விலைக்கு வாங்கினான் என்று கூறுவதுதான் பொருத்தமாகும். அல்லாவுதீன் கில்ஜியைப் போன்று இவனும் பிரபுக்களுக்கும், படையினருக்கும் பெரும் பொருளையும் பொன்னையும் அள்ளிக் கொடுத்து, இவர்களது சம்மதத்தை விலைக்கு வாங்கி சுல்தானாகப் பதவியேற்றான்; பொன்னைப் பெருமளவில் பெற்றுக்கொண்ட அவனது ஆதரவாளர்களும் சுல்தானுக்கு நன்றியுடன் நடந்துகொண்டனர். இபின் பதூதா மட்டும் முன்னூறு தங்க நாணயங்களையும் அரச மரியாதைக்குரிய அங்கியையும் பெற்றுக்கொண்டானாம்.

ஆரம்ப காலத்தில் இவன் டெல்லியில், உள்துறையைச் சார்ந்த ஊழியனாகப் (Domestic Servant) பணியாற்றி வந்தான்; பின்பு தனது உறவினனை கியாதுடீன் சுல்தானாக மதுரையில் பதவியேற்ற உடன் அவனும் மதுரைக்கு வந்துவிட்டான். இவன் ஆட்சிக்கு வந்தவுடன் முதன் முதலாக ஒரு திருப் பணியைச் செய்தான். அதாவது, அவனது தந்தை வழியில் தோன்றிய சிற்றப்பனின் மகனைக் கொன்றான். இவ்வாறு இவனால் கொல்லப் பட்டவனே கியாதுடீனின் மருமகனுவான். இக் கொலையினால் தனது அரச பதவிக்கு முக்கியமானதொரு போட்டியாளனை இவ் வுலகினைவிட்டே அனுப்பிவிட்டு, அமைதியாகக் காலங் கழித்தான். கியாதுடீனின் மருமகனைக் கொன்ற நசிருதீன் இறந்தவனின் இல்லக்கிழத்தியைத் (கணவனையிழந்த கைம் பெண்ணை) திருமணம் செய்துகொண்டு தனது இதய ராணியாக

[1] Coin No. 12 of Dr. Hultzch's collection–date A. H. 746.

வும் ஆக்கிக்கொண்டான். (இவனைப் பின்பற்றியே பேரரசர் அக்பரின் மகனான ஜஹாங்கீரும் மிஹ்ருன்னிசாவின் கணவனைக் கொன்று மிஹ்ருன்னிசாவைத் திருமணம் புரிந்துகொண்டான் போலும்).

இபின் பதூதா சீனாவை நோக்கிப் பயணம் செய்யத் தேவையான கப்பல்களை இவ்வேந்தன் அளித்துத் தக்க ஏற்பாடுகளைச் செய்தான். இபின்பதூதாவும் பதன் (பட்டணம்) மாலத் தீவு, ஹனேவர், சுமத்ரா, ஜாவா வழியாகச் சீனாவை யடைந்தான்.

**நாணயம்**

இவ் வேந்தனும் தனது ஆட்சியின் நினைவாகத் தனது பெயரில் நாணயங்களை வெளியிட்டுள்ளான். அவற்றில் ஒன்று நமக்குக் கிடைத்துள்ளது. அதில் ஹிஜ்ரா ஆண்டு 745 பொறிக்கப்பட்டுள்ளது. இவ்வாண்டு கி.பி. 1334ஆம் ஆண்டுக்குச் சமமானதாகும்.[1] இவனது ஆட்சியின் முடிவுபற்றி நாம் ஒன்றும் அறிந்துகொள்ள முடியவில்லை.

**மதுரை சுல்தானியத்தில் ஓர் இடைவெளி**

நசிருதீன் சுல்தானுக்குப் பின்பு மதுரை சுல்தானிய ஆட்சியில் ஓர் இடையீடு காணப்படுகின்றது. இவனது நாணயத்திலிருந்து இவன் ஏறத்தாழ 1334ஆம் ஆண்டுவரை மதுரையை ஆண்டுவந்தானென்பது உறுதியாகத் தெரிகிறது. இவனது நாணயத்திற்கு அடுத்தபடியாக கி.பி. 1356ஆம் ஆண்டிற்கும் இடைப்பட்ட காலத்தில் மதுரை சுல்தானிய நாணயவரலாற்றில் தொடர்ச்சியின்றி, முறிவு (Break) ஒன்று ஏற்பட்டுள்ளதனையறியலாம். இந்த இடையீட்டுக் காலத்தில் அன்னியரின் படையெழுச்சி ஏற்பட்டிருத்தல் வேண்டுமென்றும், அக் காலத்தில் முஸ்லிம் சுல்தானின் ஆட்சி நடைபெறவில்லையென்றும் நாம் கருதலாம். பண்டாரகர் திரு. உல்ஷ் அவர்களும், பண்டாரகர் திரு. எஸ். கிருஷ்ணசாமி ஐயங்காரவர்களும் மதுரைச் சுல்தான்களது நாணயத்தில் கி.பி. 1344 முதல் கி.பி. 1356 முடிய ஓர் இடைவெளி ஏற்பட்டிருக்கின்றதென்று, இவ் விடைக்காலத்தில் தான் குமாரகம்பணன் மதுரையின்மீது படையெடுத்து அதனைக் கைப்பற்றினனென்றும் திரு. எஸ். கிருஷ்ணசாமி ஐயங்கார் குறிப்பிடுகின்றார்.[2]

[1] S. Krishnaswami Iyengar "South India and Her Muhammadan Invaders" page 169.

[2] Journal of the Royal Asiatic Society. 1909 pp. 667-83 and 'History of South India' p. 363.

இந்த இடையீட்டிற்குப் பின்பு மதுரை சுல்தான்களின் ஆட்சி தொடர்ந்து நடைபெற்றதாகக் கொள்ளலாம். கி.பி. 1356ஆம் ஆண்டு முதல் கி.பி. 1378ஆம் ஆண்டு முடிய மதுரை சுல்தான்களின் ஆட்சியில் வெளியிடப்பெற்ற நாணயங்கள் நமக்குக் கிடைத்துள்ளதால் இதனை நாம் உறுதியாக நம்பலாம். கி.பி. 1356 முதல் மதுரை சுல்தான்களாக அதில்ஷா, பக்ருதீன் முபாரக் ஷா, அல்லாவுதீன் சிக்கந்தர்ஷா ஆகியோர் ஒருவர்பின் ஒருவராகத் தொடர்ந்து கி.பி. 1378 முடிய ஆட்சிபுரிந்துள்ளனர் என்பது பல அறிஞர்களது கருத்தாகும். ஆனால், பண்டாரகர் திரு. என். வேங்கடராமையா அவர்கள் வேறுவிதமாகக் கருதுகின்றார். நசிருதீன் கி.பி. 1343 முதல் 1352 முடிய ஆட்சிபுரிந்தானென்றும், அவனைத் தொடர்ந்து குர்பத் ஹசன் கங்கு என்பான் கி.பி. 1353 முதல் கி.பி. 1371 முடிய ஆட்சி புரிந்தானென்றும் அவர் கருதுகின்றார்.

திரு. என். வேங்கடராமையா அவர்களது கருத்து அவ்வளவு பொருத்தமுடையதாகத் தோன்றவில்லை என்று ஒரு சாரார் கருதுகின்றனர். அவர்கள் அதற்கான காரணங்களைப்பற்றி யாது கூறுகின்றனர் என்பதனைக் காண்போம். குர்பத்ஹசன் கங்குவின் பெயர் பண்டாரகர் உல்ஷ் அவர்களாலும், இராபர்ட் சிவெல், எஸ். கிருஷ்ணசாமி அய்யங்கார் ஆகியோராலும் குறிக்கப்பெறவேயில்லை. முஸ்லிம் வரலாற்றறிஞரான திரு. ஷாம்ஸ்-இ-சிராஜ் அபிப் மட்டுமே குர்பத் ஹசனின் பெயரைக் குறிப்பிட்டுள்ளார். ஷாம்ஸ்-இ-சிராஜ் அபிப் அவர்களது கூற்றினை மட்டும் நாம் ஆதாரமாக வைத்துக்கொண்டு, குர்பத் ஹசன் மதுரை சுல்தானாக ஆண்டுவந்தானென்பதனை நாம் ஏற்றுக்கொள்ள முடியாது. ஏனெனில், இச் செய்தி கல்வெட்டுச் செய்தியாலும் நாணயங்களாலும் உறுதி செய்யப்படவில்லை. மாறாக அதில்ஷா, பக்ருதீன் முபாரக்ஷா, அல்லாவுதீன் சிக்கந்தர் ஷா ஆகியோரது பெயர்களின் நாணயங்கள் வெளியிடப் பெற்றிருக்கின்றபோது இவர்களைத்தான் நாம் மதுரை சுல்தான்களாக ஏற்றுக்கொள்ள முடிகின்றது என்றும் அவர்கள் கூறுகின்றனர்.

ஈண்டு நாம் இவ் விடையீட்டுக் காலத்தில் ஆட்சி புரிந்த சுல்தானையும், அவனாட்சியில் ஏற்பட்ட அன்னியப் படையெழுச்சியினையும் பார்க்குமுன்பு இக் காலத்தில் அரசியல் சூழலைச் சிறிது காண்போம்.

## அரசியல் சூழல்

### 1. டில்லி சுல்தானியப் பேரரசு

கி.பி. 1351ஆம் ஆண்டு பிரோஷ்ஷா துக்ளக் டில்லி சுல்தாளுகைப் பதவியேற்றான். இவன் போரிலே நாட்டமில்லாதவனாதலின், முகம்மது பின் துக்ளக்கின் ஆட்சிக்காலத்தில் தனது பேரரசு இழந்துவிட்ட மாபார் பகுதியை மீட்க எவ்வித முயற்சியும் மேற்கொள்ளவில்லை. மதுரை சுல்தானியத்திற்கு டில்லி சுல்தானியத்தால் எவ்வித ஆபத்தும் நிகழக்கூடிய சூழ்நிலை இல்லை,

### 2. போசள அரசு

தமிழகத்தின் தலைசிறந்த பேரரசாக விளங்கி வந்த போசளர்களும் இக் கால கட்டத்தில் வலிமை குன்றிக் காணப்பட்டனர். இவர்கள் அடிக்கடி முஸ்லிம் அரசுகளுடன் போரிட்டு வந்ததால், தன் வலிமை குன்றியிருந்தனர். மூன்றும் வல்லாளதேவன், சிறந்த போர்வீரனாக இருந்துங்கூட மதுரை சுல்தானை கியாதுடீனால் கொல்லப்பட்டான். இவனது இறப்பிற்குப் பின்பு போசளரது பெருமையும் புகழும் அழிந்துபட்டதெனலாம். இவனுக்குப் பின்னர் அரியணையேறிய இவனது மகனான நான்காம் விரூபாட்ச வல்லாளனும், கி. பி. 1343–ஆம் ஆண்டில் முடிசூட்டிக் கொண்டான் என்ற செய்தியைத் தவிர இவனைப் பற்றிய வேறு குறிப்பிடத்தக்க செய்திகள் நமக்குக் கிடைக்கவில்லை. அந்த அளவிற்கு அவன் பெயருக்குத்தான் மன்னனாக இருந்தான். இவனது தந்தையான மூன்றும் வல்லாளனது ஆட்சிக்காலத்திலேயே விசயநகர வேந்தனான புக்கன் பெனுகொண்டாவைக் கைப்பற்றிக் கொண்டான். மூன்றும் வல்லாளனே எழுச்சியுற்ற விசயநகரப் பேரரசை அழிக்க முடியவில்லை. மாறாக அது விரைவாக வளர்ந்து கொண்டிருந்தது. இதன் பயனாக போசள அரசும் விசயநகரப் பேரரசுக்கு இரையாயிற்று. நெடுங்காலமாக முஸ்லிம் ஆதிக்கத்தினை எதிர்த்து போசள அரசு தென்னாட்டு அரசியல் அரங்கிலிருந்து வெளியேற்றப்பட்டுவிட்டது.

### 3. படைவீட்டின் சம்புவராய அரசு

மதுரை சுல்தான்கள் ஆட்சியின்போது, அதன் எதிரிகளாக இருந்த வலிமைமிக்க இந்துப் பேரரசுகளுள் சம்புவராய அரசும் ஒன்றாகும். இவர்கள் தொண்டை மண்டலப் பகுதியில் தனியாட்சி செலுத்தி வந்தனர். இவர்களது எழுச்சிபற்றியும் அரசியற்பகுதிகள் பற்றியும் நாம் முன்பே கண்டோம். வன்னிய

குல க்ஷத்திரிய இனத்தைச் சேர்ந்த இவர்கள் ஆற்றல் மறவர் களாகத் திகழ்ந்தனர். இவர்களது எழுச்சியும் உயர்ச்சியும் மதுரை சுல்தானியத்திற்கும், விசயநகரப் பேரரசிற்கும் தடைக் கல்லாக இருந்துவந்தது. முதலாம் புக்கர் தனது மகனும் பெரு வீரனுமான குமார கம்பனுக்கு அறிவுரை கூறும்போது 'நீ சம்புவராயரை அடக்கியொடுக்கா விட்டால், மதுரை சுல்தான் களது அதிகாரத்தை உடைப்பது எளிது' என்று கூறியதாக 'மதுரை விஜயம்' என்னும் நூலில் கங்கதேவி[1] குறிப்பிட்டுள்ள தால் சம்புவராயர்களது பெருமை நன்கு புலனுகும்.

4. விஜயநகரப் பேரரசு

விசயநகரப் பேரரசின் தோற்றம்பற்றி நாம் முன்பே கண்டோம். மதுரை சுல்தானியத்தின் ஆதிக்கத்தினை ஒழித்துக் கட்டும் திட்டத்துடன் செயல்பட்ட விஜயநகரப்பேரரசு அக் காலத்தில் பெரிதும் ஏற்றம் பெற்றிருந்தது. போசளரது அரசின் பகுதிகளான பெனுகொண்டா, ஹொசபட்டணத்திற்கும் ஹரி ஹரருக்கும் அண்மையிலிருந்த பகுதிகள், மேற்குக் கடற்கரை யிலிருந்த துளுநாடு போன்றவை விஜயநகர அரசால் விழுங்கப் பட்டு சீரணிக்கப்பட்டன. அடுத்து, கி. பி. 1340-ஆம் ஆண்டி லேயே பாதாமி விசயநகர அரசின் பசிக்கு உணவாயிற்று. தனது அரசு தோன்றி பத்தே ஆண்டுகளுக்குள், விசயநகரப் பேரரசு அரபிக்கடலுக்கும் வங்கக்கடலுக்கும் இடைப்பட்ட எல்லா நாடுகளையும் தன்னுளுகைக்குக் கொண்டு வந்ததுடன் வெற்றி விழாவினையும் (விஜயோத்சவத்தை) வித்தியாரண்யருடைய முன்னிலையில் கொண்டாடியது. முஸ்லிம் ஆதிக்கத்திற்கெதிராக இந்துக்களை ஒன்றுதிரட்டி வலிமையினைப் பெருக்கி வருகையில், தக்காணத்தில் 'பாமினி அரசு' என்னும் முஸ்லிம் அரசும் தோன்றி விசயநகர அரசுடன் போரிடத் தயாராயிற்று. இதன் காரணமாக விசயநகர அரசும் பாமினி அரசும் போரில் ஈடுபட வேண்டியதொரு சூழ்நிலை உருவாயிற்று.

5. பாமினி அரசு

தக்காணத்தில் கி. பி. 1347-ல் முஸ்லிம் அரசு ஒன்று தோன்றியது. அதுவே பாமினி அரசு எனப்பெயர் பெற்றது. அல்லாவுதின் ஹசன் என்பான் இவ்வரசினை கி. பி. 1347 முதல் கி.பி. 1358 முடிய ஆண்டு வந்தான். குல்பர்க்கா இவ்வரசின் தலைநகராக விளங்கி வந்தது. வன்முறையும் மென்முறையும் சமயத்திற்கேற்றவாறு கையாண்டு தனது வலிமையினை அவன்

[1] Mathura Vijayam, Canto III, Stranza 41.

பெருக்கிக்கொண்டான். அல்லாவுதீன் கி.பி. 1349-ஆம் ஆண்டில் விசயநகர அரசினைத் தாக்கிக் கரைச்சூர் என்னும் இடத்தைக் கைப்பற்றிக் கொண்டான். ஐந்தாண்டுகள் கழித்துத் தனது உறவினனை மதுரைச் சுல்தானுடன் ஓர் உடன்படிக்கை செய்து கொண்டு அவன் மீண்டும் விசயநகர அரசின்மீது போர் தொடுத்தான். வலிமைமிக்க பாமினிப்பேரரசு அக் காலத்தில் தனது அரசினைப் பேரரசாக விரிவுபடுத்தியிருந்தது. இவன் தனது நாணயங்களில் 'இரண்டாம் அலெக்சாந்தர்' என்றும் பொறித்துக் கொண்டான்.

**குர்பத் ஹசன் கங்கு**

கி. பி. 1344 முதல் கி. பி. 1356-ஆம் ஆண்டு வரையிலான காலம் மதுரை சுல்தானின் இடையீட்டுக் காலமாகும். இக் கால கட்டத்தில்தான் விசயநகரப் படைத்தலைவனை குமார கம்பண்ணன் மதுரையின்மீது படையெடுத்து அதனைக் கைப் பற்றிக்கொண்டான் என்று பண்டாரகர் உல்ஷ் அவர்களும், பண்டாரகர் எஸ். கிருஷ்ணசாமி அய்யங்காரும் கருதினர். இது பிழைபட்ட கருத்தாகும். அவர்கள் கருதுவதுபோன்று கி. பி. 1356-க்குள் குமார கம்பண்ணன் மதுரையைக் கைப்பற்றி யிருப்பானேயாகில் மதுரைப் பகுதியில் அவனது கல்வெட்டு ஒன்றாகிலும் நமக்குக் கிடைத்திருக்கும். கி.பி. 1371-க்கு முற்பட்ட தான அவனது கல்வெட்டுக்கள் மதுரைப்பகுதியில் ஒன்றுகூட காணப்படவில்லை. அடுத்து, கி.பி. 1358-க்கும் கி.பி. 1363-க்கும் இடைப்பட்ட காலத்தில் கம்பண்ணன் தொண்டை மண்டலத் திலுள்ள சம்புவராயர் அரசு மீதுதான் படையெடுத்துக் கொண் டிருந்தான். இதனால் குமார கம்பண்ணன் இவ் விடைப்பட்ட காலத்தில் மதுரைமீது படையெடுக்கவில்லை என்று கூறலாம்.

குமார கம்பண்ணன் படையெடுக்காவிடில், வேறு யார் மதுரைமீது படையெடுத்து மதுரை சுல்தானியத்தைக் கைப் பற்றினர் என்பது வினா! பிரோஷ்ஷா துக்ளக்கின் (கி. பி. 1351-1388) வரலாறுபற்றி தொகுத்துக் கூறும் முஸ்லிம் வரலாற்றறிஞ ரான ஷாம்ஷி-சிராஜ்-அபிப் என்பார் பிரோஷ்ஷா டெல்லி சுல்தானாகப் பதவியேற்றபோது நிகழ்ந்த ஒரு நிகழ்ச்சியைக் குறிப்பிட்டுள்ளார்.[1] மாபாரிலிருந்து வந்த தூதுவன் ஒருவன் மதுரைச் சுல்தானான குர்பத்ஹசன் கங்கு என்பான், சிறிதும் அரசபதவிக்குத் தகுதியின்றி பெண்களின் உடைகளையணிந்து கொண்டும், நேர்மையற்ற முறையில் நடந்துகொண்டும்

[1] Elliot and Dowson Vol. iii, p. 339 and S. Krishnaswamy Iyengar 'South India and Her Muhammadan Invaders' pp. 186–187.

மக்களுது வெறுப்பினைச் சம்பாதித்துக் கொண்டானென்றும் அதன் காரணமாக மக்கள் அவனுக்கெதிராகப் புரட்சியில் குதித்தனரென்றும், இதனைக் கேள்வியுற்ற 'பக்கன்' என்ற அண்டை நாட்டரசன் பெரும்படையுடன் மதுரைநோக்கி வந்து அச் சுல்தானை வென்று, மதுரையைக் கைப்பற்றிக் கொண்டு, முஸ்லிம் பெண்களைக் கொடுமைப்படுத்தியதுடன் அவர்களைச் சிறையில் தள்ளிவிட்டானென்றும், பிரோஷ்ஷா துக்ளக்கிடம் முறையிட்டான் என்று ஷாம்ஷி-சிராஜ்-அபிப் குறித்துள்ளான்.

முஸ்லிம் ஆசிரியரால் பக்கன் என்று குறிக்கப்பெற்ற இந்து வேந்தன் யார்? பக்கன் என்பது குமார கம்பண்ணனேயாகு மென்று பண்டாரகர் திரு. என். வேங்கடராமையா அவர்கள் குறிப்பிடுகின்றார். திரு. வெங்கடாச்சாரி அவர்களும் இக் கருத்தினையே ஆதரிக்கின்றார். ஆனால், இக் கருத்து பொருத்தமுடையதாகத் தோன்றவில்லை.

**முதலாம் புக்கன்**

'பக்கன்' என்று முஸ்லிம் ஆசிரியரால் குறிக்கப் பெற்றுள்ளவன் பெரும்பாலும் முதலாம் ஹரிஹரனின் தம்பியான முதலாம் புக்கனாகவேயிருத்தல் வேண்டும். இவனே தனது அண்ணனால், மதுரை சுல்தானியத்தை அழித்து ஒழிக்கவும், தனது முன்னோனை மூன்றாம் வீர வல்லாளனைக் கண்ணனூர்க் கொப்பத்துப் போரில் கொன்ற சுல்தான்களைப் பழிவாங்கவும் அனுப்பப்பட்டான் எனக் கருதுதல் பொருத்தமாகும். மேலும், முதலாம் ஹரிஹரனே போசளரது மேன்மையினை நிலைநாட்டியவனாகப் புகழப்படுகின்றான். இதனால் கி.பி. 1344 முதல் 1356 முடிய உள்ள இடைக்காலத்தில் தமிழ்நாட்டில் ஏற்பட்ட முந்தைய படையெழுச்சி இதுவேயாகுமெனக் கருதலாம்.

**முதலாம் ஹரிஹரனின் கோமல் சாசனம்**

மதுரைச் சுல்தானியத்தை வென்ற பின்பே, முதலாம் ஹரிஹரனும் தஞ்சை மாவட்டம், மாயூரம் வட்டத்திலுள்ள கோமல் என்னுமிடத்தில் செப்பேட்டுச் சாசனத்தை வெளியிட்டுள்ளான். இவனால் வெளியிடப்பட்ட செப்பேட்டுச் சாசனம் இதுவொன்றேயாகும். இச் சாசனமும் நமக்கு முழுமையாகக் கிடைக்கப் பெறவில்லை. இதன் கடைசி ஏடு மட்டுமே நமக்குக் கிடைத்துள்ளது. இதனைக் கொண்டு இவ் வேந்தன் சித்தமுரு என்னும் ஊரினை பிராமணர்களுக்குப் பிரமதேயமாக வழங்கினானென்ற செய்தியினையே அறிந்து கொள்ள முடிகின்றது. இச்

சாசனமும் இவனது தமிழ்நாட்டு வெற்றியின் நினைவாகவே வெளியிடப்பெற்றிருத்தல் வேண்டும் எனக்கொள்ளலாம்.

முதலாம் ஹரிஹரன் தனது தம்பியான புக்கனின் தலைமையில் வெல்லப்பட்ட மதுரையை, இவன் தொடர்ந்து தனது ஆட்சியின்கீழ் வைத்துக் கொண்டதாகத் தெரியவில்லை. எனவே, இவ் வெற்றி நிலையானதாக நாம் கொள்ள முடியாது. ஏனெனில், விசயநகரப்படை மதுரையைக் கைப்பற்றித் தனது ஆட்சியை நிறுவியதாகத் தெரிகிறது. இவன் தனது பெயரால் கி. பி. 1356 ல் நாணயம் வெளியிட்டுள்ளதால் இதனை உறுதியாகக் கூறலாம். தெற்கேயுள்ள மதுரையைக் கைப்பற்றுவதற்கு முன்பே சங்கம குலத்தினர் திருப்பதியையும் அதனைச் சூழ்ந்துள்ள பகுதியையும் ஆண்டு வந்தனரென்பதனை அவர்களது சாசனங்களாலறியலாம்.

**யார் இந்த குர்பத் ஹாசன்?**

குர்பத் ஹாசன் பிரோஸ்ஷா துக்ளக் டெல்லியில் ஆட்சிபுரிவதற்கு முன்பு மதுரையையாண்ட சுல்தானுவான். இவன் மதுரையினை ஆண்டு வந்த ஆரம்பகால சுல்தானின் இனத்தைச் சார்ந்தவனல்லன். இவனது பெயரில் 'கங்கு' என்ற சொல்லிருத்தலால் இவன் பாமினி அரசகுடும்பத்தைச் சார்ந்தவனாகக் கொள்ளலாம். இவன் நசிருதீனுக்குப் பின்பு மதுரை அரசு கட்டிலேறினன்; சில காலம் ஆட்சி புரிந்தான்; அவனது ஆட்சிக் காலத்தில் இவன் தனது பெயரால் நாணயம் ஒன்றுகூட வெளியிடவில்லையெனத் தோன்றுகிறது. இவன் முதலாம் புக்கனல் தோற்கடிக்கப்பட்டுக் கைது செய்யப்பட்டான்; பின்பு கொல்லப்பட்டான்.[1]

கல்வெட்டுகளின் ஆதாரத்தினைக் கொண்டு சவண உடையார், கம்பண்ண உடையார் ஆகிய இரு இளவரசர்களும் மதுரையின்மீது கி.பி. 1352-53ல் படையெடுத்து, குர்பத்ஹாசன் கங்குவை வெளியேற்ற முயன்றதாக அறியலாம் என்று பண்டாரகர் திரு. வேங்கடராமையா குறிப்பிடுகின்றார்.

**முடிவு**

இக் கருத்து ஏற்றுக்கொள்ளத் தக்கதாக இல்லை. ஏனெனில், கி. பி. 1371க்கு முற்பட்ட கம்பண்ணனது கல்வெட்டு மதுரைப் பகுதியில் காணப்பெறவில்லை. அடுத்து, சவண உடையார் குமாரகம்பண்ணன் மேற்கொண்ட மதுரைப் படையெழுச்சியில்

1 Journal of Madras University Vol. XI, Dr. Venkata Rangayya.

பங்கு பெறவுமில்லை. முஸ்லிம் அறிஞரான ஷாம்ஸ்-இ- சிராஜ் அவர்கள் பக்கன்தான், குர்பத்ஹாசன் கங்குவினை வென்றானென்று குறிப்பிடுவதனாலும் நாமறியலாம்.

**குர்பத் ஹாசனது ஆட்சிக்காலம்**

குர்பத் ஹாசன் கங்கு கி.பி. 1353 முதல் கி.பி. 1371 முடிய ஆட்சிபுரிந்ததாக திரு. என். வேங்கடராமையா அவர்கள் குறிப்பிடுகின்றார். இக் கருத்து பொருந்துவதாகத் தெரியவில்லை. ஏனெனில், கி.பி. 1356 முதல் கி.பி. 1378 வரை வேறு சுல்தான்கள் ஆண்டுள்ளனர். அவர்கள் வெளியிட்ட நாணயங்களும் நமக்குக் கிடைத்துள்ளன. எனவே, இவன் கி. பி. 1342 முதல் கி. பி. 1352 வரை ஆண்டதாகக் கருதலாம்.

**சுல்தான் அடில்ஷா கி. பி. 1356-1359.**

கி. பி. 1344 முதல் கி. பி. 1356 முடிய மதுரை சுல்தான்களின் ஆட்சி நடைபெறவில்லையெனத் தோன்றுவதாக முன்பே குறிப்பிட்டோம். கி. பி. 1356க்குப் பின்னர் சுல்தான் ஆட்சி மதுரையில் தொடர்ந்து நடைபெற்றது. இவ்விடைவெளிக்குப் பின் மதுரைச் சுல்தானகப் பதவியேற்றவன் அடில்ஷா என்பவனாவான். இவன் காலத்தில் வெளியிடப் பெற்றுள்ள நாணயங்களைக் கொண்டு சுல்தான் அடில்ஷா (Sultan Adil Shah) கி. பி. 1356 முதல் கி.பி. 1359 முடிய ஆட்சி புரிந்ததாகக் கூறலாம்.[1] கி.பி. 1359ஆம் ஆண்டினதாகிய நாணயத்திற்குப் பின் இவனால் வெளியிடப் பெற்ற நாணயங்கள் நமக்குக் கிடைக்கவில்லையாயினும், இவன் கி.பி. 1361 வரை ஆட்சி புரிந்ததாகக் கொள்வது தவறாகாது.

**பக்ருதீன் முபாரக் ஷா கி.பி. 1361—1370**

சுல்தான் அடில்ஷாவினை அடுத்து, பக்ருதீன் முபாரக்ஷா என்பான் (Fakhruddin Mubarak Shah) பட்டத்திற்கு வந்தான். இவ் வேந்தனது நாணயங்கள் நமக்கு மிகுந்த அளவில் கிடைத்துள்ளன. இச் சுல்தானது நாணயங்களின் துணைகொண்டு இவனது ஆட்சி கி.பி. 1361 முதல் கி.பி. 1370 முடிய நிகழ்வுற்றதாகக் கூறலாம். இவனால் வெளியிடப்பெற்ற முதல் நாணயத்தில் ஹிஜிரா ஆண்டு 761 பொறிக்கப்பட்டுள்ளது; இவனால் வெளியிடப்பெற்ற கடைசி நாணயத்தில் ஹிஜ்ரா ஆண்டு 770 பொறிக்கப்பட்டுள்ளது. இவன் வாணிபத்தினைப் பெருக்கினான்.

[1] S. Krishnaswamy Iyengar 'South India and Her Muhammadan Invaders' page 169.

இவனது ஆட்சிக்காலத்தில்தான் விசயநகர வீரனான குமார கம்பண்ணா மதுரையின்மீது படையெடுத்து இவனை வென்றான்.[1] இவ் வேந்தனால் வெளியிடப்பெற்ற நாணயத்தினை அடிப்படையாகக்கொண்டு இதனை நாம் அறியலாம்.

**கங்கதேவி கூறுவது யாது?**

குமார கம்பண்ணாவுக்கும் மதுரைச் சுல்தானுக்கும் நடைபெற்ற இப் போரினைப்பற்றி கங்கதேவி விளக்கமாகக் கூறுகின்றாள். குதிரைமீது அமர்ந்துகொண்டு ஒய்யாரமாகப் போர் புரிந்த கம்பணன் சுல்தானைக் கத்தியால் வெட்டி வீழ்த்தினான் என்று அவள் கூறுவாள்.[2] இதனையே நாம் ஆதாரமாகக்கொண்டு பக்ருதீன் முபாரக் ஷா போரில் இறந்தாரென்று நாம் கொள்ளலாம். மேலும், குமார கம்பணன் சாம்புவராயர்மீதும் மதுரை சுல்தான்மீதும் படையெடுத்தபோது, அவனுக்குதவியாகச் சாலுவமங்குச் சென்றானென்றும், போரில் மதுரைச் சுல்தான் கொல்லப்பட்டானென்றும் சாலுவ நரசிம்மனின் 'ராமபியூதயம் (The Ramabhyudayam of Salwa Narasimha) சான்று பகர்வதால் இதனை நாம் உறுதியாகக் கொள்ளலாம்.

**சுல்தான் அலாவுதீன் சிக்கந்தர் ஷாவும் சுல்தான் ஆட்சியின் அழிவும்**

பக்ருதீன் முபாரக் ஷாவிற்குப் பின்னர் சுல்தான் அலாவுதீன் சிக்கந்தர் ஷா மதுரைச் சிம்மாசனத்தில் அமர்ந்தான். மதுரைச் சுல்தானியத்தின் கடைசி மன்னனான இவன் பல நாணயங்களை வெளியிட்டுள்ளான். இவன் முபாரக் ஷாவினைப் போன்று பெரியதொரு அரசினை ஆண்டிருந்தான் எனக் கூறுதல் இயலாது. ஏனெனில், குமார கம்பணனால் இவ்வரசு கைப்பற்றப்பட்ட பின்பு ஒரு சிறிய பகுதியையே இவன் ஆண்டுவந்தான் எனக் கொள்ளலாம்.[3] விசயநகர வேந்தனாக அச் சமயத்தில் கொலுவீற்றிருந்தவன் இரண்டாம் ஹரிஹரன் (கி.பி. 1376—1404) ஆவான். வலிமைமிக்க இவ் வேந்தனே மதுரை சுல்தானிய ஆட்சி அடிச்சுவடின்றி அழிந்தது. தனது முன்னோனுக்கு நேர்ந்த கதியே அலாவுதீன் சிக்கந்தர் ஷாவுக்கும் நிகழ்ந்திருக்க வேண்டுமென்று கருதலாம்.[4]

[1] Dr. A. Krishnaswami 'The Tamil Country under Vijayanagar' page 38.

[2] Gangadevi 'Madura Vijayam' Canto. 9.

[3] Dr. A. Krishnaswami 'The Tamil Country under Vijayanagar' page 40.

[4] R. Sathianathier 'A Political and Cultural History of India' Vol. II, page 136.

இவ்வாறு விசயநகரப் பேரரசின் வளர்ச்சியால் மதுரைச் சுல்தான் ஆட்சியின் வீழ்ச்சி நிர்ணயிக்கப்பட்டது. விசயநகரப் பேரரசு என்ற கருடன் மதுரைச் சுல்தானியம் என்ற பாம்பினை விழுங்கிற்று. மதுரை மாநகரினையே நெடுங்காலமாகத் தலை நகராகக் கொண்டாண்டு வந்த ஆற்றல் மறவர்களான பாண்டியர்கள் செய்து முடிக்க முடியாத ஒரு காரியத்தை விசயநகர இந்துப் பேரரசு சாதித்தது. முஸ்லிம்களது வெறிச் செயலுக்கும், மத வெறிக்கும் இவ்வாறு முற்றுப்புள்ளி வைக்கப்பட்டது.

### குமார கம்பணனின் மதுரைப் படையெழுச்சி

விசயநகர அரசின் முதல் மன்னனான ஹரிஹரன் தனது ஆற்றலால் விசயநகர அரசினை விரிவுபடுத்தினான். இவனுக்குப் பின் இவனது தம்பியான முதலாம் புக்கரும் தனது அரசினை செம்மையாக ஆண்டு தென்னிந்தியாவின் சிறந்த மன்னராகப் போற்றப்பெறும் தகுதி பெற்றிருந்தான். வலிமைமிக்க படையினையும் இவன் நிர்வகித்து வந்தான். இவனது போர்ச் செயல்களில் பங்குகொண்டு பேருதவி புரிந்தவன் இவனது மகனான குமார கம்பணன் ஆவான். இவனொரு ஆற்றல்மிக்க படைத் தலைவன்; முஸ்லிம் ஆட்சியினை ஒழிப்பதில் ஆர்வம் கொண்டவன். இவன் மதுரைச் சுல்தானியத்தை வேருடன் சாய்க்க உறுதி கொண்டான்.

### முஸ்லிம் ஆட்சியால் விளைந்த தீங்கு

மதுரையில் நிலைபெற்றிருந்த சுல்தான்களின் ஆட்சியால் இந்துக்களின் உரிமைகள் பறிக்கப்பட்டன; அவர்களது சொத்துக்கள் பறிமுதல் செய்யப்பட்டன; இந்துக் கோயில்கள் இடிக்கப்பட்டன. எங்கு நோக்கினும் அமைதியின்மை, அநியாயம், அட்டூழியம் தாண்டவமாடிற்று. புனிதமான இந்துமதம் ஏறத்தாழ அழிந்துபட்ட நிலையிலேயே காணப்பட்டது. மதுரைச் சுல்தானிய ஆட்சியின்போது உள்ள சூழ்நிலையைக் கங்கதேவி தனது 'மதுரா விஜயம்' என்னும் வடமொழி நூலில் மிக விளக்கமாகக் கூறியுள்ளாள். இதனை நாம் முழுவதும் ஏற்றுக் கொள்ளாவிட்டாலும், அதன் அடிப்படை உண்மைகளை நாம் மறுக்கவோ, மறைக்கவோ இயலாது. முஸ்லிம் சுல்தான் ஆட்சியில் மக்கள் அனுபவித்த துன்பத்தினை மற்ற இந்துக்களின் குறிப்புகளினின்றும், இபின் பதூதா குறிப்புகளிலிருந்தும அறிந்துகொள்ளலாம். இதுபோன்ற அநியாயத்தை அழிக்கவும், உலகத்தின் எதிரியாக இருந்த மதுரைச் சுல்தானை ஒழிக்கவும், மறைவடக்கமான பெண் ஒருத்தி (Mysterious Lady) புனிதமான வாள் ஒன்றினைத் தந்து அனுப்பினாள் என்று மதுரா

விஜயம் குறிப்பிடுகின்றது.[1] இதனால் முஸ்லிம்களின் ஆட்டூழி யங்களை ஒழிக்கவே குமார கம்பணன் மதுரையின்மீது படை யெடுத்தான் எனக் கொள்ளலாம்.

### குமார கம்பணன் மதுரைப் படையெழுச்சியினை மேற்கொண்ட ஆண்டு யாது?

குமார கம்பணனின் மதுரைப் படையெழுச்சி தமிழக வரலாற்றின் சுவைமிக்கதொரு அத்தியாயமாகும். இவன் எப்போது மதுரையின்மீது படையெடுத்தான் என்பது குறித்து வரலாற்றாசிரியர்கள் பல்வேறுபட்ட கருத்துகளைக் கொண்டுள்ளனர். இதனை ஆய்ந்தறிந்து முடிவு கூறுதல் மிகவும் அவசியமானதொன்றாகும். எனவே, அறிஞர்களின் கருத்து களை ஈண்டு நாம் ஆய்ந்து பார்ப்போம்.

| நூலாசிரியர் | | தேதி |
|---|---|---|
| 1. எஸ். கிருஷ்ணசாமி அய்யங்கார் | — | கி. பி. 1358-க்கு முன்பு |
| 2. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியார் | — | ஏறத்தாழ கி. பி. 1364 அல்லது அதற்குச் சிறிது முன்பு |
| 3. டி. வி. சதாசிவப் பண்டாரத்தார் | — | கி. பி. 1364. |
| 4. டி. வி. மகாலிங்கம் | — | கி. பி. 1361 முதல் 1363 முடிய |
| 5. ஈராசுப் பாதிரியார் | — | கி. பி. 1377 |
| 6. வி. ரெங்காச்சாரி | — | கி. பி. 1363 முதல் 1371 முடிய |
| 7. ஹயவதனராவ் | — | கி. பி. 1371 |
| 8. கே. ஆர். வெங்கடராம ஐயர் | — | கி. பி. 1371 |

அறிஞர்களிடையே இதுபற்றிக் கருத்து வேறுபாடு நிலவு வதால், நாம் குமாரகம்பணது கல்வெட்டுகளின் ஆதாரங்களைச் சிறிது ஆய்ந்து பார்த்து அதன் அடிப்படையில் அவனது மதுரைப் படையெழுச்சியினை முடிவு செய்யலாம். இராமேஸ் வரத்திற்கு அருகிலுள்ள திருப்புல்லாணி என்னுமிடத்திலுள்ள ஜகந்நாதசாமி கோயிலில் மூன்று கல்வெட்டுகள் காணப்படு கின்றன. அவையனைத்திலும் கி. பி. 1371-ஆம் ஆண்டுக்கு நிகரான விரோதி கிருது ஆண்டே குறிக்கப்பட்டுள்ளது.

[1] S. Thiruvenkatachari, 'Mathura Vijayam' page 63.

முதலாவது கல்வெட்டில்[1] (சக ஆண்டு 1293) விரோதி கிருது வைகாசித் திங்கள் எட்டாம்நாள் குறிக்கப்பட்டுள்ளது. இது கி.பி. 1371–ஆம் ஆண்டு ஜுன் திங்கள் நான்காம் தேதிக்குச் சமமாகும்.

இரண்டாவது கல்வெட்டு[2] (சக ஆண்டு 1293) விரோதி கிருது ஆண்டு கற்கடகம், மூன்றும் தேதி புதன்கிழமை இடம் பெற்றுள்ளது. இது ஏறத்தாழ பதினைந்தாம் தேதி ஜுலை மாதம் 1371–ஆம் ஆண்டிற்கு நிகராகும்.

மூன்றாவது கல்வெட்டு[3]. (சக ஆண்டு 1293) விரோதி கிருது கன்னி 10 திங்கள் திருவோனம் என்று குறிக்கின்றது. ஏறத்தாழ கி.பி. 1371–ஆம் ஆண்டு செப்டம்பர் இருபதாம் நாளுக்கு இது சமமாகுமென்று கூறலாம்.[4]

இக் கல்வெட்டுகள் குமாரகம்பணன், கோயிலுக்கு அளித்த கொடைகள்பற்றியும், நிவந்தங்கள்பற்றியும் குறிப்பிடுகின்றன. இக் கல்வெட்டுகளில் தானம் வழங்கப்பட்ட காலம் மிகத் துல்லியமாகக் கூறப்பட்டுள்ளது. இவையனைத்தும் இவன் மதுரையை வெற்றிகொண்ட பின்பு வெளியிடப்பெற்றதாதல் வேண்டும். இந்து மதத்தில் ஆழ்ந்த பற்றுகொண்ட இவன் தனது மதுரை வெற்றிக்குப் பின்பு இராமேசுவரத்தில் புனித நீராடி, தனது வெற்றிக்கு உறுதுணை புரிந்த இறைவர்க்கு நன்றி தெரிவிக்கும் பொருட்டு இவன் தானம் வழங்கியதாகக் கொள்ளலாம். இம் மூன்று கல்வெட்டுகளிலும் விரோதி கிருது ஆண்டு வைகாசித் திங்கள் எட்டாம் நாளிட்டதேதி முந்தியதாகலின், இவன் மதுரையை கி. பி. 1371–ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் அல்லது மே மாதம் வென்றதாகக் கொள்ளலாமென்று திரு. ஏ. கிருட்டிணசாமி அவர்கள் ஆய்ந்து கூறுகின்றார்.[5]

**குமார கம்பணனால் தோற்கடிக்கப்பட்ட சுல்தான் யார்?**

குமார கம்பணனிடம் தோல்விகண்ட சுல்தான் யாவன்? என்ற வினாவிற்கு அறிஞர்கள் ஒரே விடையைக் கொடுக்கவில்லை.

1 Sewell's List of Antiquities Vol. I, page 301.
2 No. 111 of 1903.
3 No. 106 of 1903.
4 S.I.I. Vol, 8, Nos. 392 and 400,
5 Dr. A. Krishnaswami The 'Tamil Country under Vijayanagar' page 34.
மற்ற அறிஞர்களது காலக் கணிப்பையும் நன்கு ஆய்ந்து இதனைக் கூறியுள்ளார்.

இதனையும் ஆய்ந்து அறிய வேண்டிய நிலையில்தான் நாம் உள்ளோம். குமாரகம்பணன் மதுரையை கி. பி. 1371-ஆம் ஆண்டு கைப்பற்றினனென்று நாம் முன்பே கண்டோம். அந்த ஆண்டில் மதுரைச் சுல்தானாக வீற்றிருந்தவன் யாரென்பது குறித்தும் கருத்து வேறுபாடு உளது. எனவே, நாம் ஈண்டு மதுரைச் சுல்தான்களது ஆட்சி குறித்து அறிஞர்களிடையே நிலவுகின்ற கருத்து மாறுபாட்டினை அறிவோம்.

| பண்டாரகர் உல்ஷ்[1] | இராபர்ட் சிவெல், எஸ். கிருஷ்ணசாமி அய்யங்கார்[2] | பண்டாரகர் என். வேங்கட ராமையா |
|---|---|---|
| 1. ஷெரீப் ஜலாலுதீன் அஷன் ஷா | ஜலாலுதீன் அஷன் ஷா கி.பி. 1335–1340 | ஜலாலுதீன் அஷன் ஷா கி.பி.1334–1339 |
| 2. அல்லாவுதீன் உதாஜி ஷா | அல்லாவுதீன் உதாஜி கி. பி. 1340 | அல்லாவுதீன் உதாஜி கி.பி. 1339-40 |
| 3. குத்புதீன் பிரோஷ் ஷா | குத்புதீன் பிரோஷ் ஷா—40 நாட்கள் | குத்புதீன் கி. பி. 1340 |
| 4. கியாதுடீன் தாமகன் ஷா | கியாதுடீன் தாமகன் ஷா 1341–42 | கியாதுடீன் தாமகன் ஷா 1341-43 |
| 5. நஸிருதீன் முகமது ஷா நாணயம் சில காலம் நிறுத்தப்படல் (Break in - Coinage) | நஸிருதீன் 1342 சில காலம் நாணயம் நிறுத்தப்படல். (Break in Coinage) | நஸிருதீன் 1343 - 52 குர்பத் ஹாசன் கங்கு 1353-71 |
| 6. அடில் ஷா | அடில் ஷா 1356 | — இல்லை. |
| 7. பக்ருதீன் முபாரக் ஷா | பக்ருதீன் முபாரக் 1359-1368 | — இல்லை. |
| 8. அல்லாவுதீன் சிக்கந்தர் ஷா[3] | அல்லாவுதீன் சிக்கந்தர்ஷா 1378.[4] | — இல்லை[5] |

[1] Ref. Artido by Dr. Hultzch—The Coinage of the Sultans of Madura in Journal of the Royal Asiatic Society 1909.

[2] மதுரைத் தல வரலாறு.
R. Sathianathier 'The Nayaks of Madura' page 374.

[3] Jourual of the Royal Asiatic Society 1909. pp. 667-63.

[4] 'History of South India' page 362.

[5] Journal of the Madras University Vol. XI, Mabar from 1323-1371 p. 41-65.

மேற்காணும் பட்டியலில் திரு. என். வெங்கடராமையா அவர்கள் குர்பத் ஹாசன் கங்கு என்பான் கி.பி. 1353 முதல் கி.பி. 1371 வரை சுல்தானாக ஆட்சிபுரிந்ததாகக் கூறுகிறார். ஆனால், மற்ற இருவரும் இவனது பெயரினையே குறிக்காமல் வேறு அரசர்களின் பெயர்களைக் குறித்துள்ளனர். முஸ்லீம் வரலாற்றாசிரியரான ஷாம்ஸ் - இ - சிராஜ் அபிப் அவர்களது[1] குறிப்பினைக் கொண்டே திரு. வேங்கடராமையா, குர்பத் ஹாசனைக் குறிப்பிடுகின்றார். அடுத்து, குமாரகம்பணனால் தோற்கடிக்கப்பட்ட மதுரைச் சுல்தான் குர்பத்ஹாசன் கங்குவே எனக் குறித்துள்ளார். இக் கருத்தினை வலியுறுத்த சில சான்றுகளைக் காட்டுகின்றார். அவற்றுள் ஒன்றில் புக்கன் என்பான் தனது வலிமை மிக்க படையினால் மாபாரின்மீது படையெடுத்து, குர்பத் ஹாசன் கங்குவினைக்கொன்று, மதுரையைக் கைப்பற்றியதாகக் குறிப்பிடுகின்றார்.[2] ஷாம்ஸ்-இ-சிராஜ் அவர்களும் பிரோஷ்ஷா துக்ளக் ஆட்சிக்கு வந்தவுடன் ஏறத்தாழ கி. பி. 1352-ல் பக்கன் என்பான் மதுரையை வென்றான் என்றே குறிப்பிடுகின்றார். எனவே, முதலாம் ஹரிஹரனின் தம்பியான புக்கன் குர்பத் ஹாசனை வென்றதனையே இது குறிப்பிடுவதாகக் கொள்ளலாமே யன்றி, குமார கம்பணன் இவனை வென்றதாகக் கூறவியலாது.

எனவே, திரு. வேங்கடராமையா அவர்களது கருத்து ஏற்றுக்கொள்ளத் தக்கதல்லவென்றும், குமாரகம்பணனால் தோற்கடிக்கப்பட்ட மதுரை சுல்தான் முபாரக்ஷாவே என்று அறிஞர் கருதுகின்றனர்.[3] இதுகாறும் கூறியவற்றான் குமார கம்பணன் கி.பி. 1371-ஆம் ஆண்டு மதுரை சுல்தானான முபாரக் ஷாவை வென்றானென்பது புலனாகின்றது. கி. பி. 1371-ஆம் ஆண்டு மதுரை டெல்லி சுல்தானியத்திற்கு மரண அடி கொடுக்கப்பட்டது. அதன்பின் சில ஆண்டுகள் முஸ்லிம்கள் மதுரைப் பகுதியில் பெயரளவில் ஆண்டு வந்தனர். கி. பி. 1378-ஆம் ஆண்டு சுல்தான் ஆட்சிக்குச் சாவுமணி அடிக்கப் பட்டது.

**வினாவுகள்**

1. தமிழகத்தில் இந்துக்கோயில்களை இடித்துத் தள்ளி தரைமட்டமாக்கிப் பொன்னையும், மணியையும், மின்னும்

[1] Elliot and Dowson Vol. III, p. 339.

[2] Dr. Venkata Rangayya—Journal of Madras University Vol. XI.

[3] Dr. A. Krishnaswami 'The Tamil Country under Vijayanagar' page 38.

இவ்வாசிரியர் இதனை மிகவும் விளக்கமாக அலசிப்பார்த்து, பின்னரே முடிவு கூறியுள்ளார். நான் இவரது ஆய்வுக் கட்டுரையைப் பின்பற்றியே இதனைக் குறித்துள்ளேன் (Phd. Thesis 1959).

வைரத்தையும் பிற சொத்துக்களையும் கொள்ளையிட்டு, இந்துக்களுக்குத் தொல்லைகள் பல தந்து சொல்லொணாத் துயரத்திற்கு உள்ளாக்கிய முஸ்லிம்களின் ஆட்சி மதுரையினின்றும் அகற்றப்பட்டது.

2. மதுரையானது கம்பணன் கைக்கு மாறியது.

3. முஸ்லிம்களின் அட்டூழியத்திற்கு அஞ்சி மறைத்து வைக்கப்பட்டிருந்த அரங்கநாதரின் படிமம் மீண்டும் திருவரங்கக் கோயிலில் வழிபாட்டிற்கு வைக்கப்பட்டது.

4. இந்து தர்மமும், இந்துமதக் கோட்பாடுகளும் மீண்டும் நிலைநாட்டப்பட்டது. இந்துக்கோயில்கள் அழிவினின்றும் தடுக்கப்பட்டு, நன்முறையில் பராமரிக்கப்பட்ட சாதகமான சூழ்நிலை உருவாயிற்று.

5. விசயநகரப் பேரரசின் புகழ் தென்னிந்தியாவில் பரவியது.

### வெற்றியின் முக்கியத்துவம்

இந்துமத வரலாற்றிலும், தமிழக வரலாற்றிலும் குமார கம்பணனது மதுரை வெற்றி மிகவும் குறிப்பிடத்தக்க தொன்றாகும். இதனால் முஸ்லிம்களது ஆதிக்கம் நிலைகுலைந்தது. இந்து மதம் அழியாது காக்கப்பெற்று, வளர்ச்சிபெற வழி வகுத்தது. தமிழர்களின் பண்பாடு காக்கப்பட்டது. தமிழகத்தில் ஆன்மீகத்துறை மீண்டும் வளர்ச்சி பெறத் தொடங்கியது. நாட்டில் ஓரளவு அமைதி அரசோச்ச ஆரம்பித்தது.

இப் படையெழுச்சியால் பாண்டியர்க்கு உருப்படியான பலம் ஏதும் கிட்டியதாகத் தெரியவில்லை. விசயநகர ஆட்சி மதுரையில் நிறுவப்பட்டதனால் மதுரையில் பாண்டியர் ஆட்சி அழியத் தொடங்கியது. இதனைப் பதினான்காம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும், பதினைந்தாம் நூற்றாண்டிலும் பாண்டி வேந்தர்களது கல்வெட்டுகள் மதுரை நகரிலும், மதுரை மாவட்டத்திலும் காணப்பெறாமையாலறியலாம். 'ஆயினும் அவன் (குமார கம்பணன்) பாண்டியர்க்கு உற்றுழி உதவுமாறும், அறநிலையங்களைப் பாதுகாத்து வருமாறும் சில தலைவர்களைப் பாண்டி நாட்டில் ஆங்காங்கு அமர்த்திச் சென்றனன்' என்று திரு. டி.வி. சதாசிவப் பண்டாரத்தார் அவர்கள்[1] கூறியிருப்பது போன்ற

[1] டி. வி. சதாசிவ பண்டாரத்தார் (பாண்டியர் வரலாறு) பக்கம் 155.

தொரு சிறு வாய்ப்பாவது பாண்டியர் தலைவர்களுக்குக் கிட்டி யிருத்தல் வேண்டுமெனக் கருதலாம்.

கி. பி. பதினைந்தாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் பாண்டியரது ஆட்சி மதுரை மாவட்டத்தில் மறைந்து விட்டதால் அவர்கள் திருநெல்வேலி மாவட்டத்தில் தனது ஆட்சியினை நிறுவினர். திருநெல்வேலி மாவட்டத்தில் பாண்டி வேந்தர்களது கல்வெட்டுகள் காணக்கிடைத்தலின் இதனை நாம் அறியலாம். குமார கம்பணன் மேற்கொண்ட முயற்சிகளை இரண்டாம் ஹரிஹரன் (கி. பி. 1376-1404) முற்றுப்பெற வைத்தான். சமயப் பொறை கொண்ட இவ் வேந்தன் சைவம், வைணவம், சமணம் ஆகிய முச் சமயங்களின் வளர்ச்சிக்கும் பேருதவி புரிந்தான். சிதம்பரம், திருக்காளத்தி, திருப்பருப்பதம், திருவரங்கம், திருப்பதி முதலான ஊர்களிலுள்ள கோயில்களுக்கு நிவந்தங்கள் பலவிட்டான்; சமய ஆர்வத்தினைக் காட்டினான். பதினான்காம் நூற்றாண்டின் இறுதியில் பாண்டியர் திருநெல்வேலிப் பகுதியில் ஆட்சிபுரிந்துவந்த காலை, விசயநகரப்பேரரசு தென்னிந்தியாவின் தனிப்பெரும் பேரரசாகத் திகழ்ந்தது; இதன் ஆட்சி பல மாகாணங்களில் மலர்ந்தது. அம் மாகாணங்களுள் ஒன்றுதான் இராசகம்பீர இராச்சியம்; அந்த இராச்சியத்தின் பகுதி களாகவே சோழநாடும், பாண்டியநாடும், கொங்குநாடும் அடங்கிக் கிடந்தது. ஒரு காலத்தில் தமிழகத்தின் தலைசிறந்த பேரரசுகளாகத் திகழ்ந்த தமிழரசுகள் விசயநகர வேந்தருக்குட் பட்டன. இந் நிலையிலும் பாண்டிய அரசு மறைந்தொழியாமல் திருநெல்வேலிப் பகுதியில் உயிர் வாழ்ந்து கொண்டிருந்தது. தென்னவன் என்று புகழப்பட்ட பாண்டியர் தமிழகத்தின் தென் கோடிக்கே சென்று விட்டனர்.

மதுரைச் சுல்தான்களது ஆட்சியோ, குமார கம்பண்ணனது படையெழுச்சியோ அல்லது இவைகட்கு முன்பு போசளர்கள் முஸ்லிம் ஆட்சியை மதுரையினின்றும் அகற்ற மேற்கொண்ட முயற்சியோ, பாண்டியர்களுக்குத் தொடர்பில்லாத நிகழ்ச்சியே யாகும். இவற்றில் பாண்டியர்கள் பங்கு பெறவில்லை என்று தான் தோன்றுகிறது. ஏனெனில், பதினான்காம் நூற்றாண்டின் பிற்பகுதியில் பாண்டியர்க்கும் மதுரைக்கும் தொடர்பேது மில்லாத சூழ்நிலையொன்று உருவாகிற்று. இவர்கள் தென் பாண்டிநாட்டில் இருந்து கொண்டு, தங்களது வரலாற்றினை உருவாக்கிக் கொண்டிருந்தனர். மதுரையில் நடைபெற்ற முஸ்லிம அட்டூழியங்களைப்பற்றி இவர்கள் கவலை கொள்ளவும் இல்லை. கவலை கொண்டிருந்தாலும் அவற்றைப் போக்கவும்

நீக்கவும் இவர்கள் அதற்கான வலிமையைப் பெற்றிருக்கவில்லை. வயது முதிர்ந்த கிழட்டுச் சிங்கம், தனது முதுமைக் காலத்தில் குகையிலேயே அடைப்பட்டுக் கிடப்பது போன்று, தமது வீழ்ச்சிப்பாதையில் விரைந்து சென்றுகொண்டிருந்த பாண்டியர் இக் கால கட்டத்தில் புகழ்மங்கிக் கிடந்தனர். பெரிய ஓட்டப் பந்தயத் திடலில் ஓடிக்கொண்டிருந்த குதிரை மிகக் குறுகலான அறையொன்றில் ஓடிக்கொண்டிருந்தது போன்று, பேரரசினை ஆண்டுவந்த பாண்டியர் இன்று திருநெல்வேலிப் பகுதியில் மட்டுமே முடங்கிக் கிடந்தனர். 'குண்டுச் சட்டிக்குள் குதிரை ஓட்டுவது' என்று மொழிகின்றோமே அதற்கோர் எடுத்துக் காட்டாகவே இவர்கள் திகழ்ந்தனரெனலாம்.

# 13. திருநெல்வேலிப் பாண்டியரும் வீழ்ச்சியும்

கி. பி. 1335-ஆம் ஆண்டு முகம்மதியர் பாண்டிய நாட்டின் தலைநகராம் மதுரையினைக் கைப்பற்றிக் கொண்டு, அதனையும் அதனைச் சூழ்ந்த பகுதிகளையும் ஆண்டு வருவாராயினர். பாண்டியர் மதுரையை இழந்தபோதிலும், தமது ஆட்சியை இழக்கவில்லை. தொடர்ந்து அவர்கள் தமது ஆட்சியினை மேற்கொண்டனர்; தமது ஆட்சியாண்டில் கல்வெட்டுகளையும் வெளியிட்டு வந்தனர். இவர்களது கல்வெட்டுகள் திருநெல்வேலி, தஞ்சாவூர், புதுக்கோட்டைப் பகுதிகளில் அதிக அளவில் கிடைத்துள்ளதால், பாண்டியர் மதுரை சுல்தான்களைப்பற்றிக் கவலைப்படாமல், மேற்கூறிய பகுதிகளில் அமைதியுடன் ஆண்டு, வந்தனர் எனலாம். சில சமயங்களில் பாண்டிவேந்தர்கள் சுல்தான்களை ஒழித்துக்கட்ட, அவர்களுடன் போரும் புரிந்து வந்தனர். மதுரைச் சுல்தான்களது ஆட்சியும், மதுரையையும் அதனையடுத்துள்ள பகுதிகளில் மட்டுமே நிலைபெற்றிருந்ததால், தொலைவிலுள்ள பகுதிகளிலுள்ள மக்கள், முகம்மதியரின் கொடுமைக்காளாகவில்லை. பாண்டி வேந்தர்களும் மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலி மாவட்டங்களின் சிறு சிறு பகுதிகளில் ஆட்சிபுரிந்து வந்தனர். இவர்கள் சுல்தான்களுக்குக் கீழ்ப்படாதிருந்ததால்தான், தங்களது பெயர்களிலும் ஆட்சியாண்டுகளிலும் சாசனங்களை வெளியிட முடிந்ததெனலாம்.

**பாண்டி வேந்தர் நால்வர்**

இவ்வாறு தனியாட்சி மேற்கொண்டுவந்த பாண்டிய வேந்தருள் மாறவர்மன் குலசேகர பாண்டியன் (கி. பி. 1314 - 1346), சடையவர்மன் பராக்கிரம பாண்டியன் (கி.பி. 1315-1347), மாறவர்மன் வீரபாண்டியன் (கி. பி. 1340-1380), மாறவர்மன் பராக்கிரம பாண்டியன் (கி. பி. 1335-1352) ஆகியோர்பற்றிய கல்வெட்டுகள் நமக்குக் கிடைத்துள்ளன. இவர்களது கல்வெட்டுகள் பாண்டிய நாட்டின் பல பகுதிகளில் கண்டுபிடிக்கப் பட்டுள்ளன. இவற்றைக் கொண்டு இவர்கள் எந்தெந்தப் பகுதி

களில் ஆட்சியினை மேற்கொண்டிருந்தனர் என்பதனை அறிந்து கொள்ளக் கூடவில்லை.

**சான்றுகளும் சாதனைகளும்**

மாறவர்மன் குலசேகர பாண்டியனின் கல்வெட்டுகள் சில தஞ்சாவூர் மாவட்டம் சீர்காழியில் கிடைத்துள்ளன. இவனுடன் அரசப் பகர ஆளுநராக (Co-regent) ஆண்டு வந்த சடையவர்மன் பராக்கிரம பாண்டியனின் ஒருசில கல்வெட்டுகளே திருநெல் வேலி, புதுக்கோட்டை, மதுரை, இராமநாதபுரம், தஞ்சாவூர் ஆகிய மாவட்டங்களின் பகுதிகளில் கிடைத்துள்ளன.[1] இவன் ஒன்பது நிலைகொண்ட மேலைக்கோபுரம் ஒன்றினை கி. பி. 1323-ல் கட்டிமுடித்த பெருமைக்குரியவனாவான்.[3]

புதுக்கோட்டைப் பகுதிகளில் மாறவர்மன் வீரபாண் டியனது கல்வெட்டுகள் காணப்பெறுகின்றன. இவனது கல் வெட்டுகளைக்கொண்டு இவன் ஏறத்தாழ நாற்பது ஆண்டுகள் ஆட்சிபுரிந்தான் எனக்கொள்ளலாம். எனவே, இவனது ஆட்சி கிட்டத்தட்ட கி.பி. 1380-ல் முடிவுற்றிருத்தல் வேண்டும்.[3] குமார கம்பணனது மதுரைப் படையெழுச்சி கி. பி. 1371-ஆம் ஆண்டு நிகழ்வுற்றது என்பதனை நாம் ஏற்றுக்கொள்வோமேயானால், இவன் கி. பி. 1340-ல் அரியணையேறினனென்பதையும் ஒத்துக் கொள்ள வேண்டும். ஏனெனில், இராமநாதபுரம் மாவட்டம் திருக்காளக்குடி என்னும் ஊரில் கிடைத்துள்ள கல்வெட்டில், இவனது முப்பத்தோராமாட்சியாண்டில் குமாரகம்பணன் படை யெடுத்து வந்ததாகக் குறிக்கப்பட்டுள்ளது.[4] இவன் தனியாட்சி மேற்கொண்டிருந்தானா? அல்லது விசயநகர ஆட்சிக்குட்பட்டு தனது நாட்டினை ஆண்டு வந்தானா? என்பதனை அறிந்து கொள்ளக்கூடவில்லை. ஏனெனில், இலக்கியமும் வெட்டெழுத்து களும் இதுபற்றி யாதும் கூறவில்லை. இராமநாதபுரம் பகுதி களில் ஆட்சிபுரிந்து வந்த இவன், முஸ்லிம் ஆதிக்கத்தின் விளை வாக மக்கள்படும் தொல்லையினைக் களைய முயற்சிகள் மேற் கொண்டிருக்கலாம். ஆனால், அவைகள் வெற்றி பெற்றதாகக் தெரியவில்லை. அடுத்து, மாறவர்மன் பராக்கிரம பாண்டியனது

[1] Indian Antiquary, Vol. XIIV, p. 254, Nos. 395 of 1906, No' 17 of 1894, 564 of 1921, 527 and 601 of 1926.

[2] குலசேகர மாவலிவாணராயர் என்பான் பராக்கிரம பாண்டியனின் சிற்றப்பனாகக் (uncle) குறிக்கப் பெற்றுள்ளான். (A.R.E. 1936-37, p. 77-78). கோயில் மாநகர் பக். 116.

[3] Nos. 453 and 454 of Pudukkottai list and 386 of 1913 and other records Indian Ephemeris, Vol. i, part ii, pp. 110-1.

[4] No. 94 of 1916.

கல்வெட்டுகள் இராமநாதபுரம், தஞ்சாவூர், செங்கற்பட்டு, தென்னார்க்காடு ஆகிய மாவட்டங்களிலும் காணப்படுகின்றன.[1]

**மதுரையினின்றும் வெளியேற்றம்**

பதினான்காம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும், பதினைந்தாம் நூற்றாண்டிலும் ஆட்சிபுரிந்த பாண்டிய வேந்தர்களது கல்வெட்டுகள் மதுரை மாவட்டத்தில் யாண்டும் காணப்படவில்லை. இதனால் இவர்களது ஆட்சியும் ஆங்கு நீடிக்கவில்லையென்பதனையறியலாம். இக்கால கட்டத்தில் இவர்கள் வெளியிட்டுள்ள கல்வெட்டுகள் அனைத்தும் திருநெல்வேலி மாவட்டத்தில் மட்டுமே காணப்பெறுகின்றமையின் இவர்களது ஆட்சியும் அம் மாவட்டத்தில் மட்டுமே நிலைத்திருந்ததனையறியலாம். நீண்ட நெடுங்காலமாக மதுரை மாநகரில் பவனி வந்த பாண்டியர், இன்று அப் பகுதியினைத் துறந்து தெற்கேயுள்ள திருநெல்வேலி மாவட்டத்தில் தங்களது ஆட்சியைத் தொடங்கியதாகக் கொள்ளலாம்.

**வாணாதிராயர்**

மதுரை மாவட்டத்தினை இழந்த பாண்டியர் இராமநாதபுரம் மாவட்டத்தினையும் இழந்து விட்டனர். 'கழுதை தேய்ந்து கட்டெறும்பாயிற்று' என்ற பழமொழியைப் போன்று, ஒரு காலத்தில் பேரரசினை ஆண்டு வந்த இவர்கள் சிறு அரசினை ஆண்டு வரலாயினர்; மதுரை, இராமநாதபுரம் ஆகிய பகுதிகளை இழந்து விட்டனர். ஒரு காலத்தில் பாண்டியர்க்கடங்கிய சிற்றரசர்களாக ஆண்டுவந்த வாணாதிராயர், பாண்டியர் தளர்ச்சியுற்றிருந்தபோது தமது வளர்ச்சியைத் தேடிக்கொண்டனர். பாண்டியர்மீது பாய்ந்து, தனது படைவலியால் அவர்களை வென்றடக்கினர். தனியாட்சி பெற்ற வாணாதிராயர் பின்பு மதுரையினையும் அதனைச் சூழ்ந்த பகுதிகளையும் கைப்பற்றிக் கொண்டனர். பாண்டியர்களைச் சிவில்லிப்புத்தூருக்குத் தெற்கே விரட்டினர். இவ்விதமாகப் பாண்டியர் தமது பகுதிகளை இழந்து தெற்கே நகர்ந்தனர்.

**பாண்டிய குலாந்தகன்**

மதுரை மண்டலம் வாணாதிராயர் கைக்கு மாறிய செய்தியினை, இராமநாதபுரம் மாவட்டம் சீவில்லிப்புத்தூரில் கிடைத்துள்ள கல்வெட்டொன்று[2] 'மகாபலி வாணதரையர் சீர்மையான

[1] Epigraphia India, Vol. ix. p. 228 and Vol. vii, p. 11, A.R.E. 1913. part ii, para 46, 1918, part ii, para 53 and 1927, part ii, para 39.
[2] Travancore Archaeological Series Vol. i, p. 46, Ins. 577 of 1926.

மதுரை மண்டலம்' எனக் கூறுவதாலறியலாம். இக் கல்வெட்டு கி. பி. 1453-ஆம் ஆண்டு வரையப்பெற்றதாகும். மேலும், இவர்கள் தம்மை 'மதுராபுரி நாயகன்' என்றும், 'பாண்டியரை அழித்தவர்' அல்லது 'பாண்டிய குலாந்தகன்' என்றும் கூறிக் கொண்ட செய்தியினை புதுக்கோட்டைப் பகுதியிலுள்ள நெக்கோணம் என்னும் ஊரிலுள்ள கி. பி. 1483-ஆம் ஆண்டினதாகிய கல்வெட்டொன்று[1] தெரிவிக்கின்றது. 'பாண்டிய குலாந்தகன்' என்று இவர்கள் தம்மைச் சிறப்பித்துக் கொண்டுள்ளதால் இவர்கள் பாண்டியர்மீது பகைமை கொண்டு அவர்களை வென்றடக்கினார்கள் என்ற செய்தி உறுதிபெறுவதாகக் கொள்ளலாம்.

மால்விட்ட படைதுரந்து வடுகெறிந்த
மகதேசன் வடிவேல் வங்கக்
கால்விட்ட கதிர்முடிமே லிந்திரனைப்
புடைத்ததுமுன் கடல் போய் வற்ற
வேல்விட்ட தொருதிறலு முகிலிட்ட
தனிவிலங்கும் வெற்பிலேறச்
சேல்விட்ட பெருவலியு மாங்கேவிட்
டுடனடந்தான் தென்னர் கோவே[2]

இழைத்த படியிதுவோ வெங்கணு வென்றென்
றழைத்த வழுகுர லேயால் — தழைத்த குடை
மன்னவர்கோன் வாணன் வடிவேலால் தோற்றுடைந்த
தென்னவர்கோன் போன திசை[3]

மேற்குறிப்பிட்டுள்ள இரு பாடல்களும் புதுக்கோட்டைப் பகுதியிலுள்ள குடுமியான்மலைக் கல்வெட்டில் இடம்பெற்றுள்ளன. இப் பாடல்களைக் கொண்டு வாணாதிராயர்கள் பாண்டியரை வெற்றி கொண்டு அவர்களை வேற்றிடத்திற்கு விரட்டினர் என்பது தெளிவாகிறது.

### பாண்டியரின் தலைநகரங்கள்

தென்பாண்டி நாட்டிற்குச் சென்று ஆங்கு தமது ஆட்சியினை நிறுவிய பாண்டியர்கள் ஏறத்தாழ இரண்டரை நூற்றாண்டு காலம் தொடர்ந்து அப் பகுதியிலேயே ஆட்சிபுரிந்து வந்தனர். தென்பாண்டி நாட்டில் பாண்டியராட்சியை நிறுவிய இவர்கள் தங்களது தலைநகராக எதனைக் கொண்டனர் என்பது திட்ட வட்டமாகத் தெரியவில்லை. இருப்பினும் கொற்கை, தென்காசி,

[1] Inscriptions of the Pudukkottai State, No. 672.
[2] Ibid. No. 653.
[3] Ibid. No. 678.

கரிவலம்வந்தநல்லூர், கயத்தாறு முதலான நகரங்களும் அவர்களது தலைநகரங்களாகச் சில காலம் விளங்கியிருத்தல் வேண்டுமென்று ஊகிக்க இடமுண்டு. இவற்றுள் தென்காசியே பெரும்பாலான வேந்தர்களின் தலைமை இருப்பிடமாகத் திகழ்ந்தது என்பது சில சான்றுகளால் உறுதி பெறுகிறது. இதன் காரணமாகவே இக் கடைக்காலப் பாண்டியரை நாம் தென்காசிப் பாண்டியர் என அழைக்கிறோம்.

அடுத்து, கரிவலம்வந்தநல்லூரும் சில காலம் இப் பாண்டியரது தலைநகராக விளங்கி வந்ததனைச் சில சான்றுகளால் அறிய முடிகின்றது. கரிவலம்வந்தநல்லூரை அடுத்துள்ள 'சோளபுரம்' என்னும் ஊரில் அரண்மனை, கோட்டை, கொத்தளம் – ஆகியன பண்டு இருந்ததற்கான அடிச்சுவடுகள் இன்றும் காணப்பெறுவதால், பாண்டிய வேந்தனது அரண்மனை ஆங்குதான் அமைந்திருந்தது என்றோ, சோளபுரமும் சில காலம் பாண்டியர் தலைநகராக விளங்கியதென்றோ ஊகிக்கலாம்.

**சடையவர்மன் பராக்கிரமபாண்டியன் (கி. பி. 1357-ல் ஆட்சித் தொடக்கம்)**

இக் காலப் பகுதியில் ஆட்சிபுரிந்த பாண்டிய வேந்தர்களுள் கி. பி. 1357–ஆம் ஆண்டு அரியணையேறியதாகக் கருதப்பெறும் சடையவர்மன் பராக்கிரம பாண்டியன் என்பானும் கல்வெட்டுகளில் குறிக்கப்பெறுகிறான். இவனது கல்வெட்டுகள் இராமநாதபுரம் மாவட்டத்திலும், புதுக்கோட்டைப் பகுதிகளிலும் காணப்பெறுகின்றன. ஏறத்தாழ இருபத்து மூன்றாண்டுகள் இவனது ஆட்சி நீடித்ததாகக் கல்வெட்டுச் சான்றினால் அறியலாம்.[1] இருப்பினும் இவனது ஆட்சிக்காலத்தில் பாண்டியரின் வலிமை பெருக்கப்பட்டதாகக் கூறவியலாது.

**கோச்சடையவர்மன் பராக்கிரம பாண்டியன்**

இவன் ஏறத்தாழ கி.பி. 1356-ஆம் ஆண்டு ஆட்சிக் கட்டில் ஏறினான் எனலாம். நாகர்கோயிலுக்கண்மையிலுள்ள கோட்டாறு என்னுமிடத்தில் கிடைத்துள்ள இவ் வேந்தனது பதினைந்தாமாட்சியாண்டுக் கல்வெட்டினைக் கொண்டு[2] (கி. பி. 1371) இவன் திருநெல்வேலி மாவட்டத்தில் ஆட்சி புரிந்ததாகக் கொள்ளலாம்.

[1] Epigraphia Indica Vol. ix, pp. 225–8, No. 63 of 1924.
[2] A Topographical List of Inscriptions by V. Rangachari iii, Travancore 5 (30 of 1896).

**பராக்கிரம பாண்டியன் (கி. பி. 1367)**

அடுத்து, கி. பி. 1367-ஆம் ஆண்டு அரசு கட்டிலேறிய பராக்கிரம பாண்டியன் என்பான் புகழ்மிக்க மன்னனாகத் திகழ்ந்தான். கலை வளர்ச்சியில் நாட்டம்கொண்ட இவன் தனது இருபதாமாட்சியாண்டில் திருநெல்வேலி மாவட்டம், தென்காசிக் கண்மையிலுள்ள திருக்குற்றாலம் என்னும் ஊரிலுள்ள கோயில் திருப்பணியை (renovation) நன்கு நிறைவேற்றியதுடன், அக் கோயில் மண்டபத்தினையும் புதுப்பித்தான்.[1] கி. பி. 1387-ஆம் ஆண்டு கோயில் திருப்பணி புரிந்த நிகழ்ச்சியே இவனது ஆட்சிக் காலத்தின் குறிப்பிடத்தக்கதொரு நிகழ்ச்சியாகும். இவனைப் பற்றிய வேறு செய்திகளை அறிந்துகொள்ளத்தக்க ஆதாரங்கள் நமக்குக் கிடைத்தில.

**பராக்கிரம பாண்டியன் (கி. பி. 1384)**

மேற்குறிப்பிட்ட வேந்தனைப்போன்று மற்றொரு பாண்டிய வேந்தனும், பராக்கிரம பாண்டியன் என்னும் பெயரினைக் கொண்டு திருநெல்வேலிப் பகுதியில் ஆட்சிபுரிந்து வந்ததாகக் கல்வெட்டுகள் உணர்த்துகின்றன. கி. பி. 1384-ஆம் ஆண்டு ஆட்சிக்கு வந்த இவ் வேந்தனைப்பற்றிய குறிப்பிடத்தக்க செய்திகள் ஒன்றுமில்லை. இவனது முப்பத்தோராவது ஆட்சி யாண்டு ஏறத்தாழ சக ஆண்டு 1337-க்குச் சரியானதாகுமென்ற காலக்கணிப்பு மட்டுமே ஒரு கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ளது.[2] இதனைக் கொண்டு இவன் அரியணையேறிய ஆண்டினை மட்டுமே நாம் அறிந்துகொள்ள முடிகின்றது. இவன் கி. பி. 1415 வரை ஆட்சி புரிந்ததாகக் கொள்ளலாம்.

**ஐந்து பராக்கிரம பாண்டியர்**

கி. பி. பதின்மூன்றும் நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் வெனிஸ் நாட்டினனான மார்க்கோபோலோ பாண்டிய நாட்டிற்கு வருகை தந்த காலை பாண்டிய நாட்டில் ஐந்து பாண்டிய இளவரசர்கள் ஒரே காலத்தில் ஆட்சிபுரிந்து வந்தது போன்று பதினான்காம் நூற்றாண்டிலும் ஐந்து பாண்டிய வேந்தர்கள் அதுவும் பராக்கிரம பாண்டியர் என்னும் பெயர்கொண்ட வேந்தர் ஆண்டு வந்தனர். பதின்மூன்றும் நூற்றாண்டில் ஆட்சி புரிந்த அவ் வேந்தர்களைப்பற்றி நாம் தெளிவாக அறிந்து கொள்ள இயலாதது போன்று, இக் கால கட்டத்தில் ஆட்சி புரிந்துவந்த பராக்கிரம பாண்டியர்களைப்பற்றிய செய்திகளையும்

[1] No. 408 of 1917 and A.R.E. 1918, part iii, para 54.
[2] No. 203 of 1895.

நாம் தெளிவாக அறிந்து கொள்ள முடியாத சூழ்நிலையில் உள்ளோம். இவர்களது ஆட்சி நிறுவப்பட்ட பகுதிகளும் அறிந்துகொள்ளக்கூடவில்லை. நமக்குக் கிடைத்துள்ள ஆதாரங் களைக் கொண்டு இவர்கள் திருநெல்வேலி, இராமநாதபுரம் மாவட்டத்தின் எப்பகுதிகளை ஆண்டு வந்தனரென்பதும். இவர்கள் தனித்தனியாக ஆட்சி புரிந்தனரா அல்லது இணைந்து ஆட்சி புரிந்தனரா என்பதும் அறிந்துகொள்ள இயலவில்லை. கி.பி. 1499 வரையில் விசயநகர வேந்தர்களது கல்வெட்டுகள் தென்காசிப்பகுதியில் காணப்பெறவில்லையாதலின் இவர்கள் விசயநகர அரசுக்குக் கட்டுப்பட்டவர்களாகக் கூறவியலாது. இதனால் கி.பி. 1371ஆம் ஆண்டு முதல் கி.பி. 1422 வரையில் இவர்களுக்கும் விசயநகர அரசுகளுக்கும் அரசியல் தொடர் பிருந்ததாக அறுதியிட்டு உறுதியாகக் கூறுதல் இயலாது.

இருப்பினும் திரு. ஆர். அரிகரமையர் அவர்கள் கி.பி. 14ஆம் நூற்றாண்டளவில் பாண்டியரின் ஐந்து பிரிவினர் தனித்தனிப் பகுதிகளில் ஆண்டிருத்தல் வேண்டுமென்பதனை ஊகித்துள்ளார். இவரது கூற்றினைப் பார்க்கும்போது இவ் ஐவரே பஞ்ச பாண்டியர் என அழைக்கப் பெற்றிருத்தல் வேண்டுமென்பதனை நாம் ஊகிக்கலாம். இதோ அவரது கூற்று:

"மாறவர்மன் குலசேகர பாண்டியனுக்குப் பிறகு ஏறத்தாழ 40 வருடங்கள் வரை பல பாண்டியர்கள், வடக்கே நெல்லூர் முதல் கன்னியாகுமரி வரையிலும் ஆங்காங்குப் பல குடும்பங் களாகப் பிரிந்து அரசு செலுத்தி வந்ததாகச் சொல்லி வேண்டி யிருக்கிறது. சேர, சோழ, பாண்டிய நாடுகளிலும், தொண்டை நாட்டிலும், பிற இடங்களிலும் பல பாண்டியர்களின் சாசனங் களிருப்பதே இதற்கோர் அத்தாட்சியாகும். இப் பாண்டியர்கள் யாவரும், சிற்றரசரின் நிலைமையையடைந்தவராய். விஜய நகர வேந்தரது கண்காணிப்புக்குட்பட்டவராயிருந்ததனால், தங்கள் நிலைமையை அறிந்து ஒருவருக்கொருவர் சண்டை சச்சரவுகள் செய்து கொள்ளாமல் சமாதானத்துடன் உள் நாட்டிலும் புற நாடுகளிலும் வசப்பட்டிருந்த நாடுகளைப் பங்கிட்டுக் கொண்டது போல் ஒருவாறு எல்லைகளேற்படுத்திக்கொண்டு ஆங்காங்குத் தலைநகர்களையும், தற்காப்புக்கான கோட்டை முதலானவை களையுங் கட்டிக்கொண்டு வாழ்ந்து வந்தனராகத் தெரிகின்றனர். இக் குடும்பத்தார், முதற்கண் ஐந்து கிளைகளாகப் பிரிந்திருக் கின்றனர் என்னலாம். இவ்வைந்து குடும்பங்களும் தென் கன்னட முதலான பிரதேசங்கள், மதுரை, கரிவலம்வந்த நல்லூர், தென்காசி, திருநெல்வேலி ஆகிய இடங்களிலிருந்

திருக்கின்றன. "ஒவ்வொருவரெல்லைகளுள்ளும் ஒவ்வொருவர் சாசனங்களும் காணக் கிடக்கின்றன என்பர். இதுவே இவ்வரசனது சமாதானத்தை விளக்கா நிற்கின்றது. நாளடைவில் இவ்வைந்து குடும்பங்களும் இன்னும் பல்கிப் பல பாகுபாடுகளை அடைந்தனவாகவுஞ் சொல்ல இடமுண்டு. இப்படி ஆனகாலம் கி. பி. 14-ஆம் நூற்றுண்டின் கடைசியாகலாமென்று துணியப்படுகின்றது." இவரது கருத்து ஓரளவு பொருத்தமுடையதாகத் தோன்றுகிறது. பாண்டியர் ஐந்து பிரிவினராகப் பிரிந்து ஆண்டமை இதனுல் அறியப் படுகிறது.

### சடையவர்மன் குலசேகர பாண்டியன்

இப் பராக்கிரம பாண்டியர்களையடுத்து சடையவர்மன் குலசேகர பாண்டியன் என்பான் இப் பகுதியில் ஆட்சிபுரிந்து வந்ததாகக் கல்வெட்டுகள் சான்று பகர்கின்றன. இவன் கி. பி. 1395ஆம் ஆண்டு தனது ஆட்சியினைத் தொடங்கியதாகவும் அறிகிறோம்.[1] (இவன் கி. பி. 1396 ல் அரியணையேறியதாகவும் சிலர் கொள்வர்.[2]) கரிவலம்வந்தநல்லூரில் இவ் வேந்தனது கல்வெட்டொன்று காணப்பெறுகின்றது. இஃது இவ் வேந்தனது ஆணைத் திருமுகமாகும் என்பது ஈண்டு குறிப்பிடத்தக்கதாகும்.[3] தென்காசிக்கருகிலுள்ள இலஞ்சி என்னும் ஊரிலுள்ள கோயிலைப் புதுப்பித்தவன் இவனேயாகும். இவன் முறையே தனது பதினன்காம் ஆட்சியாண்டிலும், பதினுரும் ஆட்சியாண்டிலும் பிராமணர்கள் குடியிருப்பதற்கென்று புதியதொரு பிரமதேயத்தை நிறுவியதாகத் தெரிகிறது.

### பதினைந்தாம் நூற்றுண்டின் தொடக்க காலமுதல் ஆட்சிபுரிந்த பாண்டியர்

தென்பாண்டி நாட்டின்கண் ஆட்சிபுரிந்து வந்த பிற்காலப் பாண்டிய வேந்தர்கள், இக் காலத்தில் மிக்க புகழுடன் ஆண்டதாகக் கூறவியலாது. இக் கால கட்டத்தினைப் பாண்டியரது அதிகாரத்தின் சரிவுக் காலமாகவே கொள்ளுதல் வேண்டும். தங்களது ஆட்சியினை வலுப்படுத்தி, மறுமலர்ச்சி பெறும் எண்ணத்துடன், இவர்கள் மேற்கொண்ட முயற்சிகளனைத்தும் விழலுக்கிறைத்த நீர் போலும் கடலினில் பெய்த மழை போலும், பாலைவனத்தில் பொழிந்த நிலவொளி போலும் வீண் போயிற்று;

[1] A.R.E. 1912, part ii, para 42, 1918 part ii, para 54.
[2] 270 of 1908. Dr. A. Krishnaswami 'The Tamil Country under Vijayanagar' page 150.
[3] Travancore Archaelogical Series, Vol. I, p. 45.

இதனால் இவர்கள் பயனடைந்ததாகக் கூறவியலாது. இருப்பினும் இவர்கள் தாங்கள் உயர்ச்சிப் பெறத் தங்களாலியன்ற முயற்சிகளை மேற்கொண்டு வந்தனர். கி. பி. பதினைந்தாம் நூற்றாண்டின் தொடக்க கால வரையிலான இவர்களது வரலாறு தங்களை அழிவினின்றும் காத்துக் கொள்ள மேற்கொண்ட முயற்சிகளையும், புகழ்மங்கிக் கிடந்த இவர்களது குறுகிய ஆட்சியையும் விளக்கிக் கூறுவதாகக் கொள்ளலாம். இக் கால கட்டத்தில் ஆட்சிபுரிந்த வேந்தர்களின் குடிவழிப்பட்டி (genealogy) இக் காலத்திய பாண்டிய வேந்தர்களைப்பற்றி அறிந்து கொள்ளப் பெருந்துணை புரிகின்றது.

#### சடையவர்மன் விக்கிரம பாண்டியன்

பதினைந்தாம் நூற்றாண்டு தொடங்கியவுடனே இவனும் தனது ஆட்சியைத் தொடங்கினான் எனலாம். கி. பி. 1401-ஆம் ஆண்டு அரியணையேறிய இவன் கி. பி. 1422-ஆம் ஆண்டு முடிய பாண்டிய நாட்டினை ஆண்டு வந்தான். இவ் வேந்தனது கல்வெட்டுகள் திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள திருக்குற்றாலத்திலும், இராமநாதபுர மாவட்டத்திலுள்ள திருப்புத்தூரிலும் காணப்பெறுகின்றன.[1] பிற்காலப் பாண்டியரின் குடிவழியினைக் கூறுகின்ற செப்பேடுகளில் இவனது பெயர் காணப்பெறாதது விந்தையேயாகும். இவ் வேந்தன் மட்டுமின்றி வேறுசில பாண்டி வேந்தர்களது பெயர்களும் இச் செப்பேட்டில் குறிக்கப் பெறவில்லை. இதனால் இச் செப்பேடுகளில் இடம்பெறாத பாண்டி வேந்தர்களும் இக் காலப் பகுதியில் ஆண்டுவந்தனரென்பது தெரிகின்றது.

#### மாறவர்மன் குலசேகர தேவன்

சக ஆண்டு 1331 ஆண்டு குறிக்கப் பெற்ற இவ் வேந்தனது பதினான்காமாட்சியாண்டுக் கல்வெட்டொன்று தென்காசியில் கிடைத்துள்ளது. இச் சகஆண்டு, கி. பி. 1409-க்குச் சமமாகும். இதில் அழகன் பெருமாள் குலசேகரன் என்னும் மன்னன் தென்காசிக் கோயிலைப் பழுது பார்த்ததாகத் தெரிகிறது.[2] தென்காசியிலுள்ள மற்றொரு கல்வெட்டு சடையவர்மன் கோனேரின்மைகொண்டான் குலசேகர தேவனின் பத்தாமாட்சிபற்றிக் குறிப்பிடுகின்றது.[3]

[1] Epigraphia Indica Vol. ix, p. 228 and 124 of 1908.
[2] 528 of 1911.
[3] 530 of 1911.

## சடையவர்மன் பராக்கிரம பாண்டியன்

### சான்றுகள்

பராக்கிரமபாண்டியன் கி.பி. 1422-ஆம் ஆண்டு முடிபுனைந்து கொண்டான். தென்காசிப் பாண்டி வேந்தர்களுள் பெரும் புகழ்பெற்ற வேந்தனான இவன், கி. பி. 1463-ஆம் ஆண்டு முடிய நல்லாட்சி புரிந்து வந்தான். இவனது தலைநகரம் தென்காசி யாகும். 'பூமிசை வனிதை நாவினிற் பொலிய' என்னும் கவின் மிகு தொடக்கத்துடன் தென்காசிக் கோயிலில் காணப்பெறும் இவ் வேந்தனது நீண்ட மெய்க்கீர்த்தி[1] இவனுடைய சாதனைகளை நன்கு விளக்குகின்றது. இவனைப்பற்றிய கல்வெட்டுகள் நமக்கு மிகுந்த அளவில் கிடைத்துள்ளன. இவ் வேந்தனது வெற்றிகளும், திருப்பணிகளும், பண்பு நலன்களும் இவனது மெய்க்கீர்த்தியால் நன்கு புலனாகின்றன.

### சிறப்புப் பெயர்கள்

இவ் வேந்தன் 'மானபூசண' கொற்கை வேந்தன், மதுரை வேந்தன், மானவேகன், தென்காசிகண்ட பெருமான், பொன்னின் பெருமாள்[2], மாணாபரண, வடிவெழுதவொண்ணாத அழகன், விந்தைப்போர் கடந்த பாண்டியன்,[3] அரிகேசரி, 'மானகவசன்' என்னும் பல சிறப்புப் பெயர்களால் அன்று அழைக்கப் பெற்றுள்ளான். இதனால் இவ் வேந்தனது பெருமையினையும் புகழினையும் நாம் ஒருவாறு அறிந்து கொள்ளலாம்.

### வெற்றிகள்

வீரமும் வெற்றியும் ஒருங்கே நிரம்பப்பெற்ற இவன், பாண்டியரது பெருமையினை அண்டை நாடுகளில் பரப்பினான். இவனது மெய்க்கீர்த்தியின் துணைகொண்டு இவன் தனது பகைவர்களை, சங்கரநயினார் கோயில், திருக்குற்றாலம், முதலைக் குளம், வீரகேரளம்புத்தூர் ஆகிய ஊர்களில் நடைபெற்ற போர்களில் முறியடித்துத் தனது மேலாண்மையினை நிறுவினான் என்பது புலனாகின்றது. தளவாய் அக்கிரகாரச் செப்பேடு களும் பாண்டி வேந்தனான இவன், சேரனைத் திருக்குற்றாலம்

[1] Travancore Archaelogical Series, Vol. I, p. 91.
இவ் வேந்தன் கி.பி. 1411-ல் அரியணையேறியதாக திரு. தி. வை. சதாசிவ பண்டாரத்தார் அவர்கள் தமது 'பாண்டியர் வரலாறு' என்னும் நூலிலும் (பக்கம் 158). திரு. ஏ. கிருஷ்ணசாமி அவர்கள் இவ் வேந்தன் கி.பி. 1422ஆம் ஆண்டு அரியணையேறியதாகத் தமது 'விசயநகர அரசின்கீழ் தமிழ்நாடு' என்னும் ஆங்கில நூலிலும் (பக்கம் 152) குறிப்பிடுகின்றனர்.

[2] T.A.S. Vol. I, 97.

[3] Ibid. No. 111, pages 95-98.

என்னுமிடத்தில் நிகழ்ந்த போரில் தோற்கடித்துப் பெரும்புகழ் பெற்றான் எனப் பேசுகின்றது.[1] இவன் சிங்கை, அனுரை, இரசை, செண்பை, விண்டை, முதலை, வைப்பாறு ஆகிய இடங்களில் பகைஞரை வெற்றி கொண்டதாகவும் கூறிக்கொண்டான்[2]. இவ் விடங்களில் இவனால் வெல்லப்பட்டவர் யாவரென்பது புரியவில்லை.

**இலங்கைமீது போர்**

இவ் வேந்தன் சிங்கை, அனுரை ஆகிய இலங்கைப் பகுதிகளில் வெற்றி பெற்றுள்ளான் என்பதனைக் கொண்டு, இவன் விசயநகர வேந்தனை இரண்டாம் தேவராயன் மேற்கொண்ட இலங்கைப் படையெழுச்சியில் ஒத்துழைத்தானென்று பண்டாரகர் திரு. டி. வி. மகாலிங்கம் அவர்கள் கருதுகின்றார். அரிகேசரி பராக்கிரம பாண்டியன் விசயநகர அரசின் மேலாண்மையினை ஏற்றுக்கொண்டு, அவ் வரசுக்கடங்கிய சிற்றரசனாக விளங்கியதால், இலங்கைப் படையெழுச்சியின்போது இவன் படையுதவி புரிந்தான் என்றும் அவர் கருதுகின்றார். மேலும், விசயநகர வேந்தனின் ஆணைப்படி இலங்கை நோக்கிப் படையெடுத்துச் சென்ற அவனது படைத்தலைவனை லக்கண்ணன் என்பான் 'தெட்சிண சமுத்திராதிபதி' என்னும் விருதுப் பெயரினைப் பூண்டுள்ளதால், தென்காசிப் பாண்டியர் இரண்டாம் தேவராயனுக்கும், அவனுக்குப் பின்பு ஆட்சிபுரிந்த விசயநகர வேந்தர்களுக்கும் உட்பட்ட சிற்றரசனாகவே ஆண்டு வந்தனர் என்று பண்டாரகர் திரு. டி. வி. மகாலிங்கம்[3] அவர்கள் குறிப்பிடுகின்றார்.

**உண்மை யாது?**

திரு. டி.வி. மகாலிங்கம் அவர்களது கருத்து ஈண்டு பொருத்தமுடையதாகத் தோன்றவில்லை. அரிகேசரி பராக்கிரம

[1] Ibid. pp. 126 and 133.

[2] Ibid. Nos. 1–14, p. 52

சிங்கை யென்பது யாழ்ப்பாணத்தின் தலைநகரான சிங்கையாக இருக்கலாம், அல்லது விக்கிரமசிங்கபுரமாகவுமிருக்கலாம். விந்தை என்பது ஆய்குடியின் கிழக்கில் ஐந்துகல் தொலைவில் அமைந்துள்ள விந்தை என்னும் ஊராகும். இங்கு மண்கோட்டை ஒன்றிருந்ததற்கான தடயங்கள் காணப் பெறுகின்றன.

வைப்பாறு என்னும் ஊர் வைப்பாற்றின் அணித்தாய்க் கீழ்க்கடலை அடுத்துள்ளது. இங்கோர் சிற்றரசன் ஆண்டு வந்ததாகவும் தெரிகிறது.

இராசை என்பது கீழ்வேம்பு நாட்டில் உள்ள இராஜவல்லிபுரம் ஆகும். கொல்லம் ஆண்டு 425-ல இராஜவல்லி புரத்தினனை நாராயணன் என்றழைக்கப் பெறும் தமிழ்ப் பல்லவரையன் என்பான் விளவன்கோடு வட்டம், குழித்துறையினின்றும் நான்கு கல் தொலைவில் வடகிழக்கில் அமைந்துள்ள திருச்சாரனத்துமலையில் எழுந்தருளியுள்ள பகவதியம்மனுக்குத் தானம் செய்துள்ளான் என்ற செய்தி திரு. டி. ஏ. கோபிநாதராவ் குறிப்பிட்டுள்ளார்.

[3] Proceedings of the Indian History Congress 1945, p. 201.

பாண்டியன் இரண்டாம் தேவராயனுக்குக் கீழடங்கிய சிற்றரச னாகவிருந்து, அவனுடன் இலங்கைப் படையெழுச்சியில் கலந்து கொண்டான் என்பதனை உறுதிப்படுத்த கல்வெட்டுச் சான்று களோ இலக்கியச் சான்றுகளோ இதுகாறும் கிடைக்கப் பெற வில்லை. விசயநகர வேந்தர்களும், அவர்களது தண்ட நாயகர் களும் 'தட்சிண சமுத்திராதிபதி' என்று கூறிக் கொள்வதனால் மட்டும் பாண்டி வேந்தன் இவர்களது ஆட்சிக்குட்பட்டிருந்தான் என்றும், விசயநகரப் பேரரசின் மேலாண்மை தென்கோடி வரையில் நிலைநாட்டப் பெற்றதென்றும் கூறுதல் பொருந்தாக் கூற்றாகும். இவர்கள் 'தட்சிண சமுத்திராதிபதி' என்றும் கூறிக்கொண்டுள்ளனர். இதனால் இவர்களது மேலாண்மை ஆர்க்டிக் கடற்கரைவரை பரவியிருந்ததென்று கொள்ள முடியுமா? இவ் விருதுகளனைத்தும் பொருளற்ற வெற்றுரையே யாகுமென்றுதான் எண்ணத் தோன்றுகிறது. இதுபோன்று பலவேந்தர்கள் வீண்பெருமையடித்துக் கொள்வதும் உண்டு.[1]

அடுத்து, கி. பி. 1499 ஆம் ஆண்டினுக்கு (நரசநாயக்கனின் படையெழுச்சி) முன்னதாகிய விசயநகர வேந்தரது கல்வெட்டு ஒன்றுகூட, மதுரைக்குத் தெற்கேயுள்ள தென் பாண்டி நாட்டில் கிடைக்கப்பெறவில்லை. தென்காசிப் பாண்டியர் விசயநகர வேந் தர்களுக்கு அடங்கிய சிற்றரசர்களாயிருந்திருப்பார்களேயானால் தமது கல்வெட்டுப் பாணியை அவர்களைப் (விசயநகர வேந்தர்) போன்று அமைத்துக் கொண்டிருப்பர். விசயநகர வேந்தர்களது பெயரினையும் குறித்திருப்பர். ஆனால், தென்பாண்டி வேந்தரோ, வாழையடி வாழையாகத் தாங்கள் பின்பற்றி வந்த முறையிலேயே தங்களது வெற்றிகளைக் குறித்துள்ளர்; விசயநகர வேந்தர்களைக் குறிப்பிடாமல் தமிழ் முறையிலேயே பொறித்துள்ளனர் என்பதும் ஈண்டு குறிப்பிடத்தக்கதாகும். மேற்கூறிய காரணங் களால் அரிகேசரி பராக்கிரமபாண்டியன், விசயநகர வேந்தனை இரண்டாம் தேவராயனின்கீழ் சிற்றரசனாக விளங்கவில்லை யென்பது புலனாகின்றது. அடுத்து, இப் பாண்டியன் தேவ ராயனின் இறப்பிற்குப் பின்னரே (4 ஆண்டுகழித்து) அதாவது கி.பி. 1450-ல் ஈழப்படையெழுச்சியினை மேற்கொண்டுள்ளான்.[2] எனவே, இவன் ஈழத்தின்மீது தனித்தே போர் தொடுத்தான்

[1] 'கைலாசம் வரையிலும், மலய பர்வதம் வரையிலும் உதயகிரி, அஸ்தமகிரி ஆகிய இருமலை வரையிலும் உள்ள பூமியில் பரந்து நிலவியது' என்று உதயபூர்ச் சாசனத்தில் போசராசனின் ஆட்சியெல்லை பரவியதாகக் கூறப்பட்டுள்ளதனை ஈண்டு நாம் எடுத்துக்காட்டாகச் சுட்டலாம். இது புலவரின் புனைந்துரையே யாகும்.

[2] Pillay, K. K. 'South India and Srilanka' p. 111 (1963)

எனலாம். பாண்டிய-ஈழ போர்பற்றி அடுத்த பகுதியில் விரிவாகக் காணலாம்.

### பராக்கிரம பாண்டியன் மதுரையை ஆண்டு வந்தானா?

அரிகேசரி பராக்கிரம பாண்டியன் விசயநகர அரசின்கீழ் சிற்றரசனாக ஆட்சிபுரிந்து வந்தான் என்ற கருத்தினைக் கொண்டுள்ள பண்டாரகர் திரு. டி. வி. மகாலிங்கம் அவர்கள், பராக்கிரம பாண்டியன் விசயநகரப் பேரரசிற்கு மிகவும் நம்பிக் கையுள்ள முறையிலும் உண்மையாகவும் நடந்து கொண்ட காரணத்தால், விசயநகர வேந்தர், பராக்கிரம பாண்டியன் தனது முன்னோர்களாண்டு வந்த மதுரைப் பகுதியினைக் கைப்பற்று தற்கு உறுதுணையாக இருந்தனரென்று கூறுகின்றார். இவ்வாறு தனது மதுரைப் பகுதியினைக் கைப்பற்றிய பராக்கிரம பாண்டியன் தனது பெருமையினை உயர்த்திக் கொண்டு தனது இருபத்தைந்தாவது ஆட்சியாண்டில் நாணயங்கள் வெளியிட ஆரம்பித்தானென்றும், அதன்பின்பு மல்லிகார்ஜுன விருபாக்சா ஆகியோரது ஆட்சிக் காலங்களில் விசயநகரப் பேரரசில் குழப்பம் நிகழ்ந்து கொண்டிருந்தபோது இப் பாண்டியன் மதுரையில் தனியாட்சி நிறுவினனென்றும் திரு. டி. வி. மகாலிங்கம் அவர்கள் குறிப்பிடுகின்றார்.[1]

### சுதந்திர அரசன்

பராக்கிரம பாண்டியனது கல்வெட்டுகளிலும், விசயநகர வேந்தர்களது கல்வெட்டுகளிலும் பராக்கிரமன் தென்காசியை விட்டு மதுரையைக் கைப்பற்றி தனது புதிய தலைநகரத்தினை ஆங்கு அமைத்துக் கொண்டான் என்ற குறிப்பு காணப்பட வில்லை. அடுத்து, இவன் தொடர்ந்து தென்காசி விசுவநாதரின் மீது எல்லையற்ற காதல் கொண்டு, அப் பொன்னடியினையே தனது இருப்பிடமாகக் கொண்டு வாழ்ந்து வந்தான் என்ப தனையும், அவன் கி.பி. 1463ஆம் ஆண்டு தென்காசியிலேயே இறந்துபட்டானென்றும் அக் கோயில் கல்வெட்டுகள் செப்பு கின்றன. மேலும், இவ் வேந்தன் தனியாட்சி செலுத்தியது (விடுதலை பெற்று) குறித்தோ, விசயநகர அரசர்களின்கீழ் ஆட்சி புரிந்தது குறித்தோ நாணயங்கள் யாதும் செப்பவில்லை. அவன் வெளியிட்டதாக எந்த நாணயமும் நமக்குக் கிடைக்கவுமில்லை. அடுத்து, மல்லிகார்ஜுனனும் விருபாக்சனும் விசயநகர வேந்தர் களாக வீற்றிருந்தபோது பராக்கிரம பாண்டியன் மதுரையில்

[1] Dr. A. Krishnaswami 'The Tamil Country under Vijayanagar' page 155.

ஆட்சிபுரியவில்லை; மாறாக வாணாதிராயர்களே மதுரைப் பகுதியினை ஆட்சிபுரிந்து வந்தனர்.[1] இவ் வாணாதிராயர் குலத் தலைவனான புவனேகவீரன் என்பானே மதுரையில் விசயநகரப் பேரரசின் மேலாண்மையினைத் தூக்கியெறிந்து, தனியாட்சி செலுத்தியதுடன் அவர்களது காஞ்சிப் பகுதியில் தாக்குதல் நிகழ்த்தி அப் பகுதியினைக் கைக்கொண்டானென்பது கல் வெட்டுகளால் புலனாகின்றது.[2]

மேற்கூறிய காரணங்களால் பராக்கிரம பாண்டியன் தென் காசிப்பகுதியில் ஆட்சிபுரிந்தானேயன்றி, மதுரைப் பகுதியினை ஆண்டுவரவில்லை என்பதும், விசயநகரப் பேரரசுக்குக் கீழ்ப் படிந்த சிற்றரசனாக விளங்காமல் தனியாட்சி புரிந்து வந்தா னென்பதும் உறுதியாகத் தெரிகிறது.

**பராக்கிரம பாண்டியனும் நரச நாயக்கரின் படையெழுச்சியும்**

விசயநகரப் படைத்தலைவனான நரச நாயக்கரிடம் தோல்வி பெற்றதாகக் குறிக்கப்பெறுகின்ற மானபூசனா அல்லது மானக வசன் என்று குறிப்பிடப்பெறும் பாண்டி வேந்தன் அரிகேசரி பராக்கிரம பாண்டியனேயாவான் என்று ஆராய்ச்சியறிஞர் திரு. டி. ஏ. கோபிநாதராவ்[3] அவர்கள் கருதுகின்றார். திரு. டி. ஏ. கோபிநாதராவ் அவர்களைப் பின்பற்றி மறைத்திரு ஈராசுப் பாதிரியார் அவர்களும் விரூபாக்சாவின் ஆட்சிக்காலத்தில், நரச நாயக்கரால் தோற்கடிக்கப்பட்ட பாண்டிவேந்தன் பராக் கிரம பாண்டியனேயாவான் என்று தமது நூலில் குறிப்பிடு கின்றார்.[4] திரு. டி. வி. மகாலிங்கம் அவர்களும் மதுரையில் ஆட்சிபுரிந்த பராக்கிரம பாண்டியனை நரசநாயக்கர் அங்கிருந்து தென்காசிக்கு விரட்டிவிட்டு, மதுரையின் ஆட்சிப்பொறுப்பினை மாவலிவாணாதிராயரிடம் ஒப்படைத்ததாகக் கருதுகின்றார்.[5]

மேற்கூறிய கருத்துகளனைத்தும் ஏற்றுக்கொள்ளத்தக்கதாக இல்லை. ஏனெனில், நரச நாயக்கரது தமிழ்நாட்டுப் படை யெழுச்சி கி.பி. 1497-க்குப் பின்பு நடைபெற்றதாகக் கல்வெட்டுச் சான்றுகள் பகர்கின்றன. பராக்கிரம பாண்டியனோ கி.பி. 1422 முதல் கி.பி. 1463ஆம் ஆண்டு வரையில்தான் அரசு புரிந்திருக்

1 Pudukkottai State Inscriptions, No. 671.
2 Travancore Archaeological Series No. 1–14, p. 52 and Epigraphia Indica. Vol. 9. 330.
3 The Aravidu Dynasty, pp. 108 and 109.
4 Proceedings of the Indian History Congress 1945, p. 202.
5 Epigraphia Carnatica Vol. VIII, No. 34.

கின்றான் என்பதனைக் கல்வெட்டுச் சான்றுகள் கூறுகின்றன. நரச நாயக்கன் மதுரையில் படையெடுக்கும்பொழுது பராக்கிரம பாண்டியன் உயிர் வாழ்ந்திருக்கவில்லை. அடுத்து, பராக்கிரம பாண்டியன் தென்காசியில் ஆண்டானேயன்றி மதுரையில் ஆட்சிபுரியவே இல்லை. எனவே, இறந்துபட்ட ஒருவனை நரச நாயக்கன் வென்றானெனக் கூறுதல் பொருந்தாக் கருத்தாகும்.

**நரசநாயக்கனால் தோற்கடிக்கப்பட்ட வேந்தன் யார் ?**

அரிகேசரி பராக்கிரம பாண்டியனது ஆட்சிக்காலத்திலிருந்து பாண்டியர் வலிமைபெற ஆரம்பித்தனர். இதனால் இரண்டாம் தேவராயனுக்குப் பின்னராண்ட விசயநகர வேந்தர்கள் பாண்டியரை அடக்கி ஆளுவது கடினமாக இருந்தது. எனவே, தென்னிந்தியாவின் தென்கோடிப் பகுதியில் தனது மேலாண்மையை நிலைநாட்ட விரும்பிய நரச நாயக்கர் சோழ பாண்டிய நாடுகளின்மீது படையெடுத்தார். இவர் 'மதுரையின் அதிபதியான மானபூஷணனை வென்று மதுரையைக் கைப்பற்றியதாகக் கல்வெட்டுக் கூறுகின்றது.[1] அச்சுதராயாப்யுதயம் (Aeyutarayabhyudayam of Varadamba), பாரிஜாதா பகரநமு (Parijatapaharanamu of Muggu Timmanna), வரதாம்பிகா பரிணயம் (Varadambika Parinayam of Tirumalamba) முதலான இலக்கியங்களும் இக் கருத்தினையே வலியுறுத்துகின்றன.

'மதுரவல்லபம் மானபூஷணம்' என்று குறிக்கப்படும் வேந்தன் ஒருவனை இவனது சமகாலத்தினனான யாழ்ப்பாண வேந்தனாக இருக்கலாமோ என சாஸ்திரியார் ஊகிக்கிறார்.[2] இலங்கை வேந்தர்களும் 'மானபூஷண' என்னும் பட்டத்தினை ஏற்றுக் கொண்டுள்ளதால் இவர் இவ்விதம் கருதுகிறார்போலும். மானபூஷண என்று குறிக்கப் பெறுபவன் குலசேகரன் என்னும் தென்காசிப் பாண்டிய வேந்தனாகவோ[3] மதுரையை ஆண்டு வந்த பாண்டிய இளவரசனாகவோ இருத்தல் வேண்டும். எனவே, நரச நாயக்கரிடம் தோல்வி பெற்றவன் பாண்டிய இளவரசனாகவோ, தென்காசி குலசேகரனாகவோதான் இருத்தல் வேண்டுமெனலாம்.

1 Nilakanta Sastry, K. A. 'History of Ceylon' op. cit. pp. 689-90.

2 அரிகேசரி பராக்கிரமன் மானபூஷணன் என்னும் பட்டப் பெயரினைப் பூண்டிருந்தான். எனவே, இவனது பின்னோர்களும் இப் பட்டப் பெயரைப் பூண்டிருக்கலாம்.

**மொழியறிவு**

கல்வி கேள்விகளில் தேர்ச்சிப்பெற்ற இவ் வேந்தன் தென் மொழியாம் தமிழிலும், வடமொழியாம் சமக்கிருதத்திலும் நல்ல புலமை பெற்றிருந்தான் என்பது ஈண்டு குறிப்பிடத்தக்கதாகும். இதனால், இவ் வேந்தனது மொழியறிவு நன்கு புலனாகின்றது. இவனது கல்வெட்டுகளும் உயர்ந்த நடையில் வரையப் பெற்றுள்ளன. இவன் கற்றறிந்த சான்றோர்களைப் போற்றி வளர்த்தான்; தானே தமிழில் கவிதை இயற்றும் ஆற்றலினையும் பெற்றிருந்தான்.[1]

**கலைக் காவலன்**

போற்றத்தகுந்த மொழியறிஞனாய்த் திகழ்ந்த இவன் கலைப் புரவலனாகவும் திகழ்ந்தமை பெரிதும் பாராட்டத்தக்கதாகும். தென்காசி விசுவநாதர் ஆலயத்தை எடுப்பித்துப் புகழ்பெற்ற இவ் வேந்தன் அக் கோயிலில் காண்போரின் கண்ணையும் கருத்தையும் கவரும் வண்ணம் நுண்ணிய கலைத்திறன் வாய்ந்த பேரெழில் மிக்க, சிற்பங்களை வடித்து வைத்திருத்தல், இவனது அளப்பரிய சிவபக்தியினையும் கலையார்வத்தினையும் எடுத்துக் காட்டுவதாக அமைந்துள்ளன. அக் காலத்தில் வடிக்கப் பெற்ற சிற்பங்கள், இன்றும் நமது கண்களுக்கு நல்விருந்தாய் அமைந்துள்ளன. இதனை எண்ணுங்கால் இச் சிற்பங்கள் அண்மைக் காலத்தில்தான் தோற்றுவிக்கப்பட்டதோ என்ற உணர்வே நம் இதயத்தில் எழுகின்றது. தென்காசிப் பாண்டியரின் பெருமையினையும் புகழினையும் கலைத்திறனையும் இன்றும் பறை சாற்றிக் கொண்டிருப்பது இக் கோயிலாகும்.

**தேவதானம்**

தென்காசிக் கோயிலில் நாள்வழிபாடும், ஆண்டுவிழாவும் எவ்வித இடையீடுமின்றித் தொடர்ந்து நடைபெற இவ் வேந்தன் பல ஊர்களை தேவதான இறையிலியாக அளித்துள்ளான்.[2] குன்றக்குடி, வாயுளான், நல்லூர், வடசாரி நாட்டுப்பைம் பொழில், புலியூர், வீரபாண்டியன் ஆகிய ஊர்கள் இவற்றுள் அடங்கும்.

**கனவு நனவாதல்**

தென்காசிக் கோயிற் கோபுரத்தின் முன்னர் நிலை நாட்டப் பட்டுள்ள கற்றூண் ஒன்று இவ் வேந்தன் இக் கோயிலைக் கட்ட

[1] தென்காசிக் கோயிலில் இவனது பாடல் இடம் பெற்றுள்ளதால் இதனை நாம் உறுதி செய்யலாம்.

[2] Travancore Archaelogical Series Vol. I, pp. 91–92, 98 and 101.

வேண்டிய காரணத்தைத் தெளிவாக விளக்குகின்றன.[1] இது படிப்பதற்குச் சுவையானதாகவும் உள்ளதால்ஈண்டுநாம் அதனைக் காண்போம். ஒருநாள் இரவு இவ் வேந்தன் தனது மாளிகையில் உறங்கிக் கொண்டிருந்தபோது, தென்னாடுடைய சிவபெருமான் இவனது கனவில் தோன்றினான். வடநாட்டின் கண்ணுள்ள காசியில் அமைந்துள்ள தனது கோயிலில், நாள் வழிபாடு நடை பெறாது அழிந்தநிலையில் இருப்பதால், தென்னிந்தியாவில், சித்ரா நதியின் வடகரையில் தென்காசியும் அதிற் சிவன் கோயில் ஒன்றும் அமைக்கவேண்டுமென ஆண்டவன் இவ் வேந்தனைக் கேட்டுக்கொண்டானாம். இறைவனது அறிவுரையைக் கேட்ட தன் காரணமாகவே, இவன் இக் கோயிலைக் கட்டி முறையாக நாள் வழிபாடு நிகழ்வுற நிலதானமும் செய்துள்ளான். இக்கோயில் கட்டப்பெற்று திருப்பணி முடிவு பெறுவதற்குப் பதினேழு ஆண்டுகள் ஆயிற்று என்பதும் இக் கோயில் கல்வெட்டால் உணர்த்தப்படுகின்றது. அயற்சியற்ற முயற்சியுடன் இத் திருப் பணியை முடித்த இவன், தான் தொடங்கிய ஒன்பது நிலைக் கோபுரத் திருப்பணியை மட்டும் தனது ஆட்சிக் காலத்திற்குள் செய்து முடிக்க இயலவில்லை. இவனது தம்பியாலேயே பின்னர் இது முடிக்கப் பெற்றது.

### பேணிப் பாதுகாத்தல்

இறைவன் சொன்னதற்கிணங்க இக் கோயிலை அமைத்த இவன், இக் கோயில் நன்கு பாதுகாக்கப் பெறவும் தக்க ஏற்பாடு களைச் செய்யத்தவறவில்லை. எவ்வித இடையூறுமின்றி, இக் கோ யிலைப் பேணிப் பாதுகாக்க வேண்டுமென்று சிவநேயச் செல்வர் களுக்கும் தனதுவழித்தோன்றல்களுக்கும் வேண்டுகோள் விடுத் துள்ளான். இவ் வேண்டுகோளைத் தித்திக்கும் தீந்தமிழ்ப் பாடல் களால் இவ் வேந்தன் வடித்துத் தந்துள்ள பான்மை போற்றத் தக்கதாக உள்ளது. இப் பாடல்களைக் கொண்டு இவ் வேந்தனது இறையன்பினையும், இன்தமிழ்ப் புலமையினையும் நன்கறியலாம். கருவுக்குள் உருவாகும் சிசுவும்கூட கண்ணீரால் நனையுமளவிற்கு பக்திச்சுவை நனிசொட்டச்சொட்ட இயற்றப்பட்ட இன்சுவைப் பாடல்கள் இன்றும் தென்காசிக் கோயில் கோபுரத்தில் காணப் படுகின்றன.[1]

1 Ibid. pp. 99 and 100.

2 (1) 'மனத்தால் வருக்கவு மெட்டாத கோயில் வருக்க முன்னின்
றெனைத்தான் பணிகொண்ட நாதன் றென்காசியை யென்றுமண் மேல்
நினைத்தா தரஞ்செய்து தங்காவல் பூண்ட நிருபர் பதந்
தனைத்தாழ்ந் திறைஞ்சித் தலைமீ தியானுந் தரித்தனனே',

சடையவர்மன் பராக்கிரம பாண்டியனால் அமைக்கப்பட்ட இக்கோயிலின் கண்ணேதான் பிற்காலப் பாண்டி வேந்தர்கள் முடிசூடிக்கொண்டனர். எனவே, இக்கோயில் பிற்காலப் பாண்டியர் வரலாற்றில் முக்கியமானதொரு இடத்தினைப் பெறுவதாயிற்று.

**திருப்பணிகள்**

சிவபெருமான்மீது எல்லையற்ற காதல் கொண்ட இம் மன்னன் திருக்குற்றாலம், திருப்புடைமருதூர் போன்ற பல ஊர்களிலுள்ள கோயில்களில் மண்டபம் அமைத்தும், திருநெல்வேலியில் கோயில் கொண்டுள்ள சிவபெருமானுக்கு அர்த்தயாம வழிபாட்டிற்கு நிவந்தங்கள் விட்டுமுள்ளான்.[3] இவன் விந்தனூர் முதலான ஐந்து ஊர்களில் அகரங்கள் நிறுவி, அந்தணர்களைக்குடியிருக்கச்செய்து, அவற்றை அவர்களுக்கே தானமாகவும் அளித்தான். செங்கோட்டை வட்டத்திலுள்ள இவ் விந்தனூர், அக்காலத்தில் பராக்கிரம பாண்டியர் சதுர்வேதிமங்கலம் எனவும் அழைக்கப் பெற்றது. சுசீந்திரமுடையார்க்குத் தன் பெயரால் சந்திபூசை நிறுவ சில நன்செய் நிலங்களை இவன் இறையிலியாக அளித்துள்ளான்.

**நீர்நிலைகள்**

கோயில் கட்டி இறைவனது அருளைப்பெற்ற இவன், குளத்தை வெட்டி மக்களது நலம் பேணினான்; அவர்களது வாழ்வில் வளம் கொழிக்கச் செய்தான். இவனால் வெட்டப்பெற்ற இப் பேரேரி விசுவநாதப்பேரேரி என்று ஆண்டவனின் பெயரினைக் கொண்டே அழைக்கப்பெற்றது. இவனது போற்றுதற்குரிய

---

(2) ஆரா யினுமிந்தத் தென்காசி மேவும்பொன் னாலயத்து
வாராத தோர்குற்றம் வந்தாலப் போதங்கு வந்ததனை
நேராக வேயொழித் துப்புரப் பார்களை நீதியுடன்
பாரா ரறியப் பணிந்தேன் பராக்ரம பாண்டியனே.

(3) சேலே றியவயற் றென்காசி யாலயந் தெய்வச்செய
லாலே சமைந்ததிங் கென்செய லல்ல வதனையின்ன
மேலே விரிவுசெய் தேபுரப் பாரடி வீழ்ந்தவர்தம்
பாலேவல் செய்து பணிவன் பராக்ரம பாண்டியனே.

(4) சாத்திரம் பார்த்திங் கியான்கண்ட பூசைகள் தாம்நடத்தி
யேத்தியன் பால்விசுவ நாதன்பொற் கோயிலென் றும்புரக்க
பார்த்திபன் கொற்கைப் பராக்ரம மாறன் பரிவுடனங்
கோத்திரந் தன்னிலுள் ளார்க்கு மடைக்கலங் கூறினனே.'

Travancore Archaelogical Series, Vol. I, p. 51.

3 கோயில்களில் உள்ள உற்சவ மூர்த்திகளுக்கு இரத்தின கிரீடங்கள் வழங்கினான்.

செயல்களில் இது தலைசிறந்ததாகவும். கருதப்படுகின்றது.[1] வாழ்வின் உயிர்நாடியான தண்ணீரை எல்லா மக்களும் பயன் படித்தும்படி இவன் செய்தது போற்றுதற்குரியதொன்றேயா கும். இவனது ஆட்சிக்காலத்தில் 1/6 பங்கு கடமை வசூலிக்கப் பட்டது.

**கொற்கை வேந்தன்**

அடுத்து, இவ் வேந்தன் கொற்கை வேந்தனென்றும் அழைக் கப் பெறுகிறான். இவன் கடல் வாணிபத்தில் சிறந்து விளங்கிய தாகவும் கொள்ளலாம். நரச நாயக்கனால்[2] தோற்கடிக்கப்பட்ட மதுரைப்பாண்டிய வேந்தன் இவனாகவேயிருப்பானாகில், சில காலம் இவனது ஆட்சி மதுரைமாநகரின் கண் நிலைபெற்றிருந் ததாகக் கொள்ளலாம் என்று திரு. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரி யார் கருதுகின்றார்.

**இறப்பு**

இறையன்பிலும், மக்களது நலம் பேணுவதிலும் நீதி நெறி முறைகளைக் காப்பதிலும் நாட்டம்கொண்ட இவன் கி.பி. 1463 ஆம் ஆண்டு இம் மண்ணுலகை மறந்தான். வாழ்வினைத் துறந் தான் எனலாம். தென்காசி விசுவநாதர் கோயிலில் சகஆண்டு 1385ஆம் ஆண்டு குறிக்கப்பட்ட கல்வெட்டொன்று பெருமாள் மாறனை பராக்கிரம பாண்டியன் அவ்வாண்டு (1463) இறந்த தாகக் கூறுகின்றது.[3] இதனைத் தென்காசி விசுவநாதர் கோயிலிற் பொறிக்கப்பட்டுள்ள செய்யுளால் அறியலாம். இச் செய்யுள் இம் மன்னன் இறந்தஞான்று, புலவன் ஒருவனால் பாடப்பெற்ற பாடலாகும்.

கோதற்ற பத்தி யறுபத்து மூவர்தங் கூட்டத்திலோ
தீதற்ற வெள்ளிச் சிலம்பகத் தோசெப்பொ னம்பலத்தோ
வேதத் திலோசிவ லோகத் திலோவிசுவ நாதனிரு
பாதத்திலோ சென்று புக்கான் பராக்ரம பாண்டியனே[4]

[1] 'நாம் நவமாக்கண்ட விசுவநாதப் பேரேரிக்குப் பெரு நான்கு எல்லை யாவது' Travancore Archaelogical Series Vol. 1 p. 51.

[2] Gopinatha Rao (op. cit. pp. 52–3) Heras. op. cit. pp. 108–9.

[3] A Topographical List of Inscriptions by V. Rangachari III Tinn. Nos. 342 and 367.

[4] பராக்கிரம பாண்டியன் கி.பி. 1463–ல் இறந்து பட்டான். விசயநகரப் பேரரசை முறைகேடாகக் கைப்பற்றி ஆண்ட நரசநாயக்கன் கி.பி. 1496–ல் அல்லது சற்றுமுன்பு தெற்கில் தண்டு கூட்டி வந்தான், எனவே, பராக்கிரமன் நரச நாயக்கனால் தோற்கடிக்கப்பட வாய்ப்புகளில்லை.

புவியரசனாய்த் திகழ்ந்ததோடு கவியரசனாய்த் திகழ்ந்ததும், பண்டைய சமயத்தை உயிர்ப்பித்ததும் கலைப்பண்ணைகளாகிய திருக்கோயில்களில் மண்டபங்கள் அமைத்ததும் இவ் வேந்தனது அரும்பெரும் சாதனைகளாகும். இவ் வேந்தனது ஆட்சிக்காலத்தின்போது சங்கம குலத்தைச் சேர்ந்த இரண்டாம் தேவராயரும் மல்லிகார்ஜுனரும் விசயநகரப் பேரரசினை ஆண்டு வந்தனர். எனவே, இவர்கள் இவனது உடன்காலத்தினர்(Contemporaries) ஆவர். இவ் வேந்தனது செப்புப் படிமன் ஒன்று தென்காசிக் கோயிலில் நிறுவப்பட்டுள்ளது.

## இவனது தேவி

அரிகேசரி பராக்கிரம பாண்டியரின் தேவியார் உலகமுழுதுடையாள் ஆவார். இவ் வம்மையும், கணவரும் 'இலகு கருணை இரண்டு உருவென்ன அம்மையும் அப்பனுமாய் அனைத்துயிர்க்கும் இம்மைப்பயனும் மறுமைக்கு உறுதியும் மேம்பட நல்கி' எனப் போற்றப்பெறுகின்றனர்.

## சடைய வர்மன் குலசேகர பாண்டியன்

பராக்கிரம பாண்டியனும் குலசேகர பாண்டியனும் ஒரு அன்னை வயிற்றில் தோன்றிய முன்னவனும் பின்னவனும் ஆவர் (அண்ணன் தம்பி). இவன் கி.பி. 1430 முதல் கி.பி. 1474 முடிய ஆட்சி புரிந்துவந்தான். இவன் கி.பி. 1430ஆம் ஆண்டிலேயே முடிபுனைந்து கொண்டதால் இவன் தனது முன்னவனுடன் சேர்ந்து தென்பாண்டி நாட்டில் இணைந்த ஆட்சியினை (Joint-rule) மேற்கொண்டான் எனக் கொள்ளலாம். தனது அண்ணனது ஆட்சிக் காலத்தில் முடிக்கப்பெறாத நிலையில் விடப்பட்ட தென்காசி விசுவநாதர் ஆலயத்தின் ஒன்பது நிலைக் கோபுரத் திருப்பணியினைச் செம்மையான முறையில் நிறைவேற்றியவன் இம் மன்னவனேயாவான்.[1] இவன் தனது முப்பத்தோராமாட்சியாண்டில் இதனை முற்றுப்பெற வைத்தான் என்பதனைக் கி.பி.1465ஆம் ஆண்டில் வெளியான இவனது கல்வெட்டுக் கூறுகின்றது.

## கல்வெட்டுச் செய்தி

இச் செய்தி கி.பி. 1465ஆம் ஆண்டு இவ் வேந்தனால் வெளியிடப்பட்ட தென்காசிக் கல்வெட்டொன்றால் அறியப்படுகின்றது. இக் கல்வெட்டு இவனது முப்பத்தோராமாட்சியாண்டில் வரையப்பெற்றதாகும். இவ் வேந்தனது முப்பத்தெட்டாமாட்சியாண்டுக் கல்வெட்டும், முப்பத்தொன்பதா

[1] Travancore Archaelogical Series Vol. I p. 103.

மாட்சியாண்டுக் கல்வெட்டும் தென்காசியிலேயே கிடைத்துள்ளன.[1] இவ் வேந்தனது கல்வெட்டுகளனைத்தும் திருநெல்வேலிப் பகுதியில் மட்டுமே காணப்பெறுகின்றன.

### திருவோலக்க மண்டபம்

பராக்கிரம பாண்டியனின் தம்பியாகிய இவன் தனது பெயரால் தென்காசி விசுவநாதர் கோயிலில் மண்டபம் ஒன்று அமைத்தனன். இதனை 'இன்நாயனுற்குத் திருவொலக்க மண்டபமாக குலசேகரன் மண்டபமும் திருப்பணி செய்வித்து' என்று வருகின்ற கல்வெட்டுச் செய்தியால் அறியலாம்.[2]

குலசேகரன் அமைத்த 'குலசேகரன் மண்டபம்' இன்றும் பொன்றாது நின்று நிலவுகின்ற தெனலாம். விசுவநாதர் கோயில் கோபுரவாயிலைக் கடந்து உள்ளே செல்வோமானால், கவின்மிகு சிற்பங்கள் அணி செய்கின்ற மண்டபம் ஒன்றுளது. இன்றும் இது திருவோலக்க மண்டபமென்றே அழைக்கப் பெறுகிறது. குலசேகரனும் தனது பெயரால் திருவோலக்க மண்டபம் ஒன்று அமைத்த கல்வெட்டுச் செய்தியினையும், இன்றும் அதே பெயரினைக் கொண்ட மண்டபம் இருத்தலையும் கூர்ந்து நோக்குங்கால், அவையிரண்டும் ஒன்றனையே குறிப்பதாகக் கொள்வதில் தவறேதுமில்லை.[3]

### ஆட்சியின் முடிவு

இவனுக்கும் விசயநகர வேந்தர்களுக்கும் அரசியல் தொடர்பு யாதுமில்லையாதலின், இவன் விரூபாக்சருக்குக் கீழும் சாளுவ நரசிம்மனுக்குக் கீழும் சிற்றரசனாக ஆட்சி புரியவில்லை என்பது நன்கு புலனாகின்றது. இவன் ஏறத்தாழ நாற்பத்து நான்காண்டுகள் ஆட்சிபுரிந்தானென்றும், இவனது ஆட்சி கி.பி. 1474 ஆம் ஆண்டு முடிவுற்றதென்றும் கொள்ளலாம்.[4]

## அழகன் பெருமாள் பராக்கிரம பாண்டியன்

### அரியணையேறுதல்

சடையவர்மன் குலசேகர பாண்டியனின் மகனான இவன் கி.பி. 1473ஆம் ஆண்டு முடி கவித்துக் கொண்டான். இவனது ஆட்சி கி.பி. 1506ஆம் ஆண்டு முடிய நீடித்தது. இவனும் தனது

[1] 643 and 645 of 1917.
[2] S.I.I. Vol. V. Text No. 762.
[3] 'கல்வெட்டு' இதழ் இரண்டு பக்கம். 82.
[4] 544 and 565 of 1917.

தந்தையுடன் கி.பி. 1468ஆம் ஆண்டு முதல் இணைந்து ஆட்சி புரிந்ததாகத் தெரிகிறது. அல்லது இவன் அவ்வாண்டிலிருந்து அரசப்பிரதிநிதியாக (Viceroy) ஆண்டிருந்ததாகக் கொள்ளலாம்.

இவன் அவிட்ட நட்சத்திரத்தில் பிறந்ததாகக் கல்வெட்டுச் செய்தி கூறுகின்றது. கரிவலம்வந்தநல்லூரில் கிடைத்துள்ள கல்வெட்டொன்று இவன் கி.பி. 1471ஆம் ஆண்டு சீவல்லப சதுர்வேதிமங்கலம் என்னும் ஊரில் ஆறு வீடு கட்டும் மனைகளை வழங்கிய செய்தியினைக் குறிப்பிடுகின்றது.[1] கி.பி. 1474ஆம் ஆண்டினதாகிய கன்னியாகுமரி கல்வெட்டுகளில் இவன் பராக்கிரம வீரபாண்டியன் என்றும் அழைக்கப்பட்டதாகக் கூறப்பட்டுள்ளது.[2] இவன் ஏறத்தாழ பதினெட்டாண்டுகள் ஆட்சிபுரிந்தானென்றும் கி.பி. 1486-ல் இவனது ஆட்சி முடிவுற்றதென்றும் கொள்ளலாம்.[3]

## பதினைந்தாம் நூற்றாண்டில் தமிழ்நாட்டில் நிகழ்ந்த படையெழுச்சிகள்

அழகன் பெருமாள் பராக்கிரம பாண்டியன் தென்காசியில் ஆண்டுவந்த காலை, விசயநகரப் பேரரசு பல தொல்லைகளைத் தாங்க வேண்டியிருந்தது. அயல்நாட்டுப் படையெழுச்சியெனும் புயல் ஆங்கு வீசிற்று.

**ஒரிசா மன்னன்**

கபிலேஸ்வர கஜபதி என்பான் கி.பி. 1435ஆம் ஆண்டு ஒரிசா நாட்டு வேந்தனாகப் பதவியேற்றான். இவன் கி.பி. 1470ஆம் ஆண்டுவரை உயிர்வாழ்ந்து வந்தான். கட்டாக் மாவட்டத்திலுள்ள ஜகந்நாதர் கல்வெட்டினைக் கொண்டு இவன் 'கர்னாடக ஜஹாசிம்மா' என்னும் பட்டத்தினைப் பெற்றிருந்தானென்று திரு. எஸ். கிருஷ்ணசாமி அய்யங்கார் குறிப்பிடுகின்றார். இப்பட்டத்தினை இவன் ஏறத்தாழ கி.பி. 1465ஆம் ஆண்டு ஏற்றுக் கொண்டதாகக் கூறலாம். இவன் தனது மகனான குமார ஹம்வீரன் என்பானைத் தென்னாட்டிற்கனுப்பி விசயநகரப் பேரரசின் பல பகுதிகளை வெற்றிகொள்ளச் செய்தான். ஏறத்தாழ இவன் தென்னார்க்காடு மாவட்டத்தின் எல்லைவரையுள்ள பல பகுதிகளை வெற்றிகொண்டான். தமிழ்நாட்டில் ஒட்டர கலாபை (Oddiyan Kalabai) ஏறத்தாழ கி.பி. 1463ஆம் ஆண்டில் நிகழ்ந்ததாகக் கொள்ளலாம்.[4]

[1] A Topographical List of Inscriptions by V. Rangachari III Tinne. 298.
[2] Sewell, Historical Inscriptions of Southern India, p. 227.
[3] 548 of 1917.
[4] Dr. N. Venkatarammaya, 'Further Sources of Vijayanagar History.

**சான்றுகள்**

இப் படையெழுச்சியினை உறுதியாக நம்புவதற்குத் தமிழ் நாட்டின்கண் மண்ணூர், திருவந்ததுறை (தென்னார்க்காடு) ஆகிய இடங்களில் கிடைத்துள்ள கல்வெட்டுகளே சான்றுகளாகும்.[1] இக் கல்வெட்டுகளில் கூறப்பட்டுள்ள நாள்கோள் குறிப்புகளைக் கொண்டு இப் படையெழுச்சி நவம்பர் மாதம் கி.பி. 1463-ல் இருந்து கி.பி. 1464ஆம் ஆண்டு ஜூன் மாதம் ஏழாம் தேதிக்குள் நிகழ்வுற்றதாகக் கொள்ளலாம்.[2]

**காஞ்சி கைப்பற்றப்படுதல்**

ஒட்டரநாட்டுப் படையெழுச்சியால் விசயநகரப் பேரரசு மக்கள் துன்புற்றதுபோல், கி.பி. 1469ஆம் ஆண்டிலும் மக்கள் துன்புற்றனர். ஒட்டரப் படையெழுச்சி முடிந்து அதன் வடு மாறுவதற்கு முன் விசயநகர அரசு மற்றுமொரு படையெழுச்சியினைத் தாங்கிக்கொள்ள வேண்டியிருந்தது. இப் படையெழுச்சியினை மேற்கொண்டு காஞ்சிமாநகரைக் கைப்பற்றிக் கொண்டவன் புவனேக வீரன் சமரகோலாகலன் என்பவனாவான். திரு. ஹயவதனராவ் (Hayavadana Rao) என்பார் இவ் வேந்தன் பாண்டிய மரபினனேயாவான் என்று கருதுகின்றார். இவரைப் பின்பற்றி பண்டாரகர் என். வேங்கடரமணய்யா (Dr. N. Venkataramanayya) அவர்களும் மேற் கூறப்பட்ட படைத்தலைவன் பாண்டியத் தலைவனேயாகுமென்று நம்பிக்கை தெரிவிக்கிறார். இவனது பட்டத்தைப் பார்க்குங்கால் இவன் பாண்டிவேந்தரது குடியில் தோன்றியவனாகத் தோன்றுகிறது. ஆனால், பண்டாரகர் திரு. ஏ. கிருஷ்ணசாமி அவர்கள் இவன் ஒரு வாணாதிராயனே எனக் கருதுகின்றார்.[3] எனவே, இதுபற்றி நாம் சிறிது ஆய்ந்து பார்ப்போம்.

**சான்று**

புவனேகவீர சமரகோலாகலனின் படையெழுச்சிபற்றிய செய்திகள் காஞ்சியிலுள்ள ஏகாம்பரநாதர் கோயிலில் காணப்பெறுகின்றது. இக் கல்வெட்டில் புவனேகவாச நல்லூர், சமரகோலாகலநல்லூர் என்னும் பாண்டிய நாட்டின் ஊர்கள் இரண்டும் ஏகாம்பர இறைவர்க்குத் தேவதானமாக அளிக்கப்பட்ட செய்தி குறிக்கப்பட்டுள்ளது. இதனையடுத்த கல்வெட்டு

[1] No. *211* of *1929*.

[2] Dr. A. Krishnaswami, 'The Tamil Country under Vijayanagar', p. 112.

[3] Ibid. p. *115*.

சமரகோலாகலன் காஞ்சிப் பகுதியினைத் தன்னாட்சிக்குட்படுத்தினான் எனக் கூறுகின்றது.[1]

குமார கம்பணனது தமிழகப் படையெழுச்சி கி.பி. 1471-ல் நிகழ்வுற்றது. அதுபோழ்து மதுரை நகரினைப் பாண்டியர்கள் ஆண்டு வரவில்லை. மாறாக வாணாதிராயர்களே ஆண்டு வந்தனர். குமார கம்பணனும் மதுரையை வாணாதிராயர்களிடமிருந்து தான் கைப்பற்றினான். எனவே, புவனேகவீரன் சமரகோலாகலன் யாவன் என்பதனை அறிந்துகொள்ள வேண்டுமெனின், விசயநகர வேந்தர்கள் மதுரைப் பகுதிகளையும் அதனையடுத்துள்ள தென்காசிப் பகுதியினையும் முன்பு ஆட்சிபுரிய மேற்கொண்ட ஏற்பாடுகளைப்பற்றி அறிந்துகொள்ள வேண்டியுளது.

**மதுரைத் தல வரலாறு கூறுவன யாது?**

குமார கம்பணன் மதுரையை வென்று தன்னடிப்படுத்திய பின்பு, அப் பகுதியின் சிற்றரசனாகச் சோமசேகர பாண்டியன் என்பானை அமர்த்திவிட்டுச் சென்றான் என்பதனை மறைதிரு. ஈராசுப் பாதிரியார் அவர்கள் பொய்யென்று புகலுகிறார்.[2] ஏனெனில், சோமசேகர பாண்டியனது பெயர் வெட்டெழுத்துகள் தருகின்ற பாண்டியர் குடிவழிப் பட்டியலில் இடம்பெறவில்லை. மேலும், இக் கால கட்டத்தில் பாண்டியரது ஆட்சி மதுரையில் நடைபெறாது தென்காசிப்பகுதியில்தான் நடைபெற்றுவந்தது; இந் நிகழ்ச்சிக்கு முன்பே பாண்டியர் மதுரையை விட்டு வெளியேறியதனை நாம் முன்பே கண்டோம். அடுத்து, மதுரைத் தல வரலாறும் கி.பி. 1371 முதல் கி.பி. 1402 முடிய மதுரைப்பகுதி ஏறத்தாழ முப்பத்து மூன்று ஆண்டுக் காலம் கம்பணனாலும், அவனது மகனான எம்பணாவாலும், கம்பணனது உறவினனான பொற்காச உடையாராலும் ஆளப்பட்டுவந்ததாகக் கூறுகின்றது. கி.பி. 1403 முதல் கி.பி. 1448 முடிய லக்கண நாயக்கரும், மாதன நாயக்கரும் மதுரைப்பகுதியில் ஆளுநராக இருந்து (governor) ஆண்டுவந்த செய்தி கல்வெட்டுகளிலும் மதுரைத் தல வரலாற்றிலும் குறிக்கப்பட்டுள்ளது.

**மதுரையில் மீண்டும் பாண்டியராட்சி**

கி.பி. 1448ஆம் ஆண்டிற்குப் பின்னதான மதுரை வரலாற்றினைத் தெளிவாக அறிய இயலவில்லை. மதுரைத் தல வரலாறும் ஸ்தானிகர் வரலாறும் ஒன்றுக்கொன்று முரண்பட்ட செய்திகளைக் கூறுவதே இதற்குக் காரணமாகும். இவ்விரு நூல்

1 S.I.I., vol. 4, No. 349.
2 Father Heras, 'The Aravidu Dynasty' p. 106.

களும் இலக்கணு, பாண்டியரின் வழிவந்தோரை மதுரையில் மீண்டும் அரசப்பிரதிநிதியாக அமர்த்தியதைக் கூறுகின்றன. இவ்வாறு அரசப்பிரதிநிதிகளாக அமர்த்தப்பட்ட பாண்டியர், பாண்டிய வேந்தருக்குக் காளையார்கோயிலில் ஆடல் மகளிராக இருந்த அபிராமி வயிற்றில் பிறந்தவராவர் என்பதனை இவ்விரு நூல்களும் தெளிவாக்குகின்றன. எனவே, இவர்களனைவரும் பாண்டியனுக்கு முறையற்ற வழியில் தோன்றிய (தேவடியாளுக்கு–concubine) மக்களென்பதனை அறியலாம். இவர்களது எண்ணிக்கை நான்கென்று மதுரைத் தல வரலாறும், ஆறென்று ஸ்தானிகர் வரலாறும் கூறுகின்றன.

**உண்மை யாது?** இலக்கணுல் மதுரை ஆளுநராக நியமிக்கப்பட்டவன் 'சுந்தரத்தோள் மாவலி வாணுதிராயர்' என்னும் பெயர் கொண்டவனென்று மதுரைத் தல வரலாறு கூறுகின்றது. எனவே, விசயநகரப் பேரரசனுன இரண்டாம் தேவராயரின் ஆட்சிக் காலத்தில் மதுரை ஆளுநராக இலக்கணுல் அமர்த்தப்பட்ட சுந்தரத்தோள் வாணுதிராயர் என்பான் வாணர் குலத்தைச் சேர்ந்தவனேயன்றிப் பாண்டியர் குலத்தவனல்லனென்பது புலனுகும்.

**புவனேக வீர சமரகோலாகலன்**

காளையார் சோமனுர் அஞ்சாத பெருமாளும், மூத்தரசர் திருமலை வாணுதிராயரும் மற்ற இரு பாண குலத்தலைவர்கள் ஆவர். இவர்கள் பாண்டிய குலத்தைச் சார்ந்தவர்கள் அல்லரென்றும் முந்தைய பாண்டிய அரசகுலத்தினருடன் முறையற்ற வழியில் தொடர்புடையவரென்றும் பாண்டிய ஆதாரங்கள் கூறுகின்றன. எனவே, இவர்கள் வாணர் குலத்தோன்றல்கள் என்பது தெளிவாகின்றது. இவர்களது வழிவந்தவனே புவனேக வீர சமரகோலாகலன் என்பவன் ஆவான். இவனே காஞ்சியைக் கைக்கொண்டு, சுதந்திரமாக ஆண்டுவந்தான். இவன் சீமாறன், மூவராய கந்தன், இராசமிசூரகந்தன், சமரகோலாகலன், புவனேகவீரன், வீரகரிஷசுகன், வீரபிரதாபன், திருமாலிருஞ்சோலை, நின்றான் மாவலி வாணுதிராயன் ஆகிய பகட்டான பல பட்டங்களைப் பெற்றிருந்தான்.

வாணுதிராயர்கள் சேர, சோழ, பாண்டியர் ஆகிய மூவேந்தர்களின் பிரதிநிதிகளாகத் தம்மைக் கூறிக்கொண்டதுடன் கருடனைத் தங்களது அரச சின்னமாகக் கொண்டனர். இவனது பட்டப் பெயர்களைக் கொண்டு இவன் வாணுதிராயர்

குலத்தோன்றல் என்பதனை அறியலாம்.[1] அடுத்து, இவர்கள் 'பாண்டியனை அழித்தவர்' என்று தம்மைக் கூறிக்கொள்வதால் இவர்கள் பாண்டியர்கள் அல்லரென்றும் வாணகுலத்தினரே யென்பதனையும் அறுதியிட்டு உறுதியாகக் கூறலாம்.

மேற்கூறியவற்றான் விசயநகரப் பேரரசுக்கு எதிராகப் பாண்டியர் காஞ்சியைக் கைப்பற்றினர் என்ற திரு. சுயவதன ராவ், திரு. வேங்கடரமணய்யா ஆகியோரது கருத்து மறுக்கப் பட்டு, திரு. ஏ. கோவிந்தசாமி அவர்களது கருத்து (பாணரின் காஞ்சிப் படையெழுச்சி) ஏற்றுக் கொள்ளத்தக்கதாக உள்ளது என்ற செய்தி உறுதிப்படுகிறது. இதனால் காஞ்சிப் படை யெழுச்சிக்கும் தென்பாண்டி வேந்தருக்கும் எவ்விதத் தொடர்பு மில்லை என்பது புலனாகின்றது.

**சடையவர்மன் குலசேகர பராக்கிரம பாண்டியன்**

**பதவியேற்றல்:** அழகன் பெருமாள் பராக்கிரம பாண்டிய னுக்குப் பின், சடையவர்மன் குலசேகர பராக்கிரம பாண்டியன் மன்னனாகப் பதவியேற்றான். இவன் அழகன் பெருமாள் பராக் கிரம பாண்டியனுக்கு எவ்வகையில் உறவினனென்பது புரிய வில்லை. கல்வெட்டுச் சான்றுகளும் இலக்கியச் சான்றுகளும் இதுபற்றி எதுவும் கூறவில்லை. இருப்பினும், திரு. கே. ஏ. நீல கண்ட சாஸ்திரியார், இவன் அரிகேசரி பராக்கிரம பாண்டியனின் உடன்பிறந்தாளின் மகனென்று கருதுகின்றார். இவன் கார்த்திகை நட்சத்திரத்தில் பிறந்த பெருமைக்குரியவனாவான். கி.பி. 1480ஆம ஆண்டு ஜனவரித் திங்கள் பன்னிரண்டாம் நாளுக்கும் ஏப்ரல் திங்கள் முதல் நாளுக்கும் இடையில் இவன் அரியணையேறினான் எனக் கொள்ளலாம்.[2]

கி.பி. 1484ஆம் ஆண்டுத் தேதியிட்ட இவ்வேந்தனது கல் வெட்டொன்று, கி.பி. 1484ஆம் ஆண்டு அவனது ஆட்சி நடைபெற்றுக் கொண்டிருந்த செய்தியினைக் குறிக்கின்றது.[3] இவனது பதினொன்று, பதினைந்து, பதினெட்டு, பத்தொன்பது, இருபத்தொன்று, இருபத்தாறு, இருபத்தொன்பதாமாட்சி

1 Pudukkottai State Inscriptions, No. 674.
சென்னி புலிக்கொடியும் தென்னன் கயற்கொடியும்
மின்னும் கழல் பிறையோன் விற்கொடியும்
மன்னும் வரிசை நொடைத் திருமால் மாவலி வாணராயன்
கருடக் கொடியும் கொடியே காண்.

2 Sewell, Historical Inscriptions of Southern India, p. 229.

3 550 of 1917.

பாண்டுக் கல்வெட்டுகளும் தென்காசியில் கிடைத்துள்ளமை[1] கண்டுக் குறிப்பிடத்தக்கதாகும். சகம் 1413-ல் பொறிக்கப்பட்ட இவனது கல்வெட்டொன்று சங்கரநயினர் கோயிலில் உள்ளது.[2] சக ஆண்டு 1429-ல் பொறிக்கப்பட்டுள்ள கல்வெட்டே இவ் வேந்தனது இறுதியாட்சியாண்டில் வெளியிடப்பெற்றதாகக் கொள்ளலாம். இதனை நாம் ஏற்றுக்கொண்டால் இவன் கி.பி. 1507 ஆம் ஆண்டு வரை ஆட்சிபுரிந்ததாகக் கொள்ளலாம். இவனது ஏழாமாட்சியாண்டில் இவன் கோயிலில் பூசனை நிகழ்த்த அர்ச்சகர்களை நியமித்தான்.[3]

### பட்டப் பெயர்

கி.பி. 1480 ஆம் ஆண்டில் தென்காசியைத் தலைநகராகக் கொண்டு தனது ஆட்சியினைத் தொடங்கிய இவன் கி.பி. 1507 ஆம் ஆண்டு முடிய ஆட்சிபுரிந்தான் எனலாம். அரிகேசரி பராக்கிரம பாண்டியனைப் போன்று இவ் வேந்தனும் மானபூஷணன் அல்லது மானாபரணன் என்னும் பட்டத்தினைப் புனைந்து கொண்டிருந்தான் எனக் கருதலாம்.

### நரச நாயக்கனால் தோற்கடிக்கப்பட்டவன் யார்?

இவன் கி.பி. 1480 முதல் கி.பி. 1507 முடிய ஆட்சி புரிந்திருத்தலின், நரசநாயக்கா, இம்மடி நரசிம்மன், வீர நரசிம்மன் ஆகிய விசயநகர வேந்தர்களின் உடன் காலத்தவனாக இவன் கருதப்படுகின்றான். நரசநாயக்காவின் தென்னிந்தியப் படையெழுச்சி கி.பி. 1439 ஆம் ஆண்டு நிகழ்வுற்றதாக நாம் கொள்வதால், அவனால் தோற்கடிக்கப்பட்டதாகக் குறிக்கப் பெறும் மானபூஷண என்பான் தென்காசியினை ஆண்டுவந்த சடையவர்மன் குலசேகர பராக்கிரம பாண்டியனாக இருத்தல் வேண்டுமெனக் கொள்ளலாம். ஆனால், பண்டாரகர் வேங்கடரமணய்யா அவர்களோ மானபூஷண என்னும் பெயர் கொண்டவன் சேரவேந்தனோ, பாண்டிய வேந்தனோ, சோழ வேந்தனோ அல்லனென்றும் இவன் இம் மூவருமேயன்றி வேறொரு வேந்தனாயிருத்தல் வேண்டுமென்றும் கருத்துத்தெரிவிக்கின்றார். இருப்பினும், நரசநாயக்கனின் பகைஞன், தென்காசியில் ஆண்டுவந்த பாண்டியனும் கி.பி. 1479 முதல் 1499

[1] Nos. 508, 508, 502, 624, 516, 151 and 618 of 1917.

[2] S.I.I, Vol. II. 862.

[3] சகம் 1418-ல் இவ் வேந்தன் ஆத்திரேய கோத்திரத்து ஆசிலாயன குத்திரத்தில் சங்கரநயனர் சதாசிவபட்டன் முதலான அர்ச்சகர்களைக் கோயிற் பணிக்கு அமர்த்தினன்.

S.I.I., vol. II, No. 866.

முடிய ஆட்சி புரிந்தவனுமான பராக்கிரம குலசேகர பாண்டியனுவானென்று கருதுகின்றார். இதுகாறும் நமக்குக் கிடைத்துள்ள ஆதாரங்களைக் கொண்டு நரசநாயக்கனால் தோற்கடிக்கப் பட்டவன் சடையவர்மன் குலசேகர பராக்கிரம பாண்டியனே யாவானென்று கூறலாம்.

### பாண்டியன் தோல்வி

கி.பி. 1479ஆம் ஆண்டு நரசநாயக்கன் தென்காசிப் பகுதியில் படைநடத்திச் சென்று, ஆங்கு வீற்றிருந்த தென்பாண்டி வேந்தனை சடையவர்மன் குலசேகர பராக்கிரம பாண்டியனுடன் போர்புரிந்தான். இப் போரில் பாண்டியன் தோல்வியுற்றான். வெற்றிபெற்ற நரசநாயக்கன், பாண்டிவேந்தனைத் தனது பேரரசின் மேலாண்மையினை ஏற்றுக்கொள்ளச் செய்து விட்டு, பேரரசின் சிற்றரசனாக மாற்றிவிட்டுத் தன்னாடு திரும்பினான்.

### போருக்கான காரணங்கள்

தென்காசிப் பாண்டியர் தாமிழந்த மதுரைப்பகுதியினைக் கைப்பற்ற முயன்றதாலேயே தென்காசிப் பாண்டியருக்கும் விசயநகரப் பேரரசனுக்கும் போர் மூண்டதென்று திரு. எஸ். கிருஷ்ணசாமி அய்யங்கார் அவர்கள் கருதுகின்றார்.[1] இதனை உறுதிப்படுத்தத் தேவையான இலக்கியச் சான்றுகளோ, கல்வெட்டுச் சான்றுகளோ இதுகாறும் நமக்குக் கிடைக்கவில்லை. எனவே, பாண்டியர்கள் தமது இழந்த பகுதியினை மீட்க முயன்றதாக நாம் கூறுதல் இயலாது. அடுத்து, இவர்கள் அவ்வாறு முயன்றிருப்பார்களேயானால், மதுரைப்பகுதியினை ஆண்டுவந்த வாணாதிராயர்களின் துணைகொண்டு இவர்கள் பெருவலியுடன் விசயநகரப் பேரரசினை எதிர்த்திருப்பார்கள் என்றும், ஆனால் அவர்கள் அவ்விதம் செய்யவில்லையென்றும் திரு. ஏ. கிருஷ்ணசாமி அவர்கள் கருதுகின்றார்.[2] ஏனெனில், தென்கோடியில் சிறு பகுதியொன்றினை ஆண்டுவந்த பாண்டியர் பேரரசாக விளங்கிய விசயநகர அரசினைத் தனித்து எதிர்த்தல் என்பது இயலாத காரியமாகும். மேலும், 'வரதாம்பிக-பரிணயம்', 'அச்சுதராயப் பூதயம்' என்னும் நூல்களில் வாணாதிராயர்களுக்கும் பாண்டியர்களுக்கும் உடன்பாடு இருந்ததாகக் குறிப்பிடப்பெறவில்லை.

[1] S. Krishnaswami Aiyangar, 'Sources of Vijayanagar History', p. 10.

[2] Dr. A. Krishnaswami, 'The Tamil Country under Vijayanagar' p. 159.

**ஆதிக்க மனப்பான்மை**

இவற்றை நாம் ஆய்ந்து பார்க்குங்கால், தனது பேரரசினை விரிவுபடுத்த வேண்டுமென்ற ஆதிக்க மனப்பான்மையே நரச நாயக்கனைத் தென்பாண்டி நாட்டின்மீது படையெடுக்கச் செய்தது எனலாம். எனவே, இவன் தமிழகம் முழுமையும் தன்னடிப்படுத்த வேண்டுமென்ற பேராசையினாலேயே, பாண்டி வேந்தனை வென்று, தனது மேலாண்மையினை ஆங்கு நிறுவினு னெனலாம்.

**பாண்டியர் வரலாற்றில் மாற்றம்**

கி.பி. 1479ஆம் ஆண்டினைத் தென்பாண்டி நாட்டுப் பாண்டியர் வரலாற்றின் ஒரு திருப்பு முனையாகவும், வரலாற்று முக்கியத் துவம் மிக்க ஆண்டாகவும் கொள்ளலாம். இதுவரை தனியாட்சி செலுத்திய பாண்டியர் இத் தேதியிலிருந்து விசயநகர அரசுக் குட்பட்ட சிற்றரசராக மாற்றப்பட்டனர். இது இவர்களது விடுதலையுணர்ச்சியினை ஒருவாறு கிள்ளியெறிந்து, அடிமைக் குழியில் தள்ளியதெனலாம். கப்பம் கட்டும் சிற்றரசராக மாற்றப்பட்ட பாண்டியர்களின் புகழும் இக் கால கட்டத்தில் மங்கிக் கொண்டிருந்தது.

**சந்திரசேகர பாண்டியன்**

சந்திரசேகர பாண்டியன் என்பான் கிருஷ்ணதேவராயரது ஆட்சிக்காலத்தில் பாண்டிய நாட்டினை ஆண்டு வந்ததாகத் தெரிகிறது. இதே காலத்தில் சோழநாடு வீரசேகர சோழனால் ஆளப்பட்டு வந்தது. பாண்டியன்மீது பகைமைகொண்ட சோழன் பாண்டியனைத் தோற்கடித்து, பாண்டிய நாட்டினைக் கைப்பற்றிக்கொண்டான். பாண்டியன் கிருஷ்ணதேவராயரிடம் முறையிட்டான். கிருஷ்ணதேவராயரும் நாகமநாயகரைப் பாண்டியனுக்குத் துணையாகப் படையுடன் அனுப்பினர். நாகம நாயகன் சோழனை வென்று, பாண்டிய நாட்டினைப் பாண்டிய வேந்தனிடமே ஒப்படைத்தான்.

நாகம நாயக்கரின் மகனே மதுரையில் நாயக்கர் ஆட்சியை உருவாக்கிய விசுவநாத நாயக்கர் ஆவார் என்று 'தஞ்சாவூர்ஆந்திர ராஜ சரிதம்' முதலான நூல்கள் கூறுகின்றன. புதுக்கோட்டை மாவட்டம், திருமெய்யம் வட்டம், திருக்களம்பூர் கதலீச்சுரர் கோயில் கல்வெட்டொன்று இவ்வூர் சந்திரசேகர பாண்டி மண்டலத்துக் கேரள சிங்க வளநாட்டில் இருந்ததாகக் கூறு கின்றது.[1] இக் கல்வெட்டு கி.பி. 1502ஐச் (சகம 1424) சேர்ந்தது,

[1] Inscriptions of the Pudukkottai State, No. 772.

இக் கல்வெட்டின் காலத்தில் சாளுவ இம்மடி விசயநகர வேந்தனாக இருக்க, நரசநாயக்கன் புதுக்கோட்டைப் பகுதியின் தலைவனாக அமர்த்தப் பெற்றிருந்தான்.

இதற்கு முன்பு (சோழரது ஆட்சிக்காலத்தில்) பாண்டியநாடு 'ராசராசப் பாண்டி மண்டலம்' என்றே பெயரிடப்பட்டிருந்தது. ஆனால், கி.பி. 1502-ல் இது சந்திரசேகரப் பாண்டி மண்டலம் என்று பெயர் மாற்றப்பட்டுள்ளது. இம் மாற்றம் ஏறத்தாழ கி.பி. 1500-ல் ஏற்பட்டிருக்கலாம்.[1]

இக் கல்வெட்டினைக் கொண்டு கி.பி. 16ஆம் நூற்றாண்டில் பாண்டியநாட்டின் ஒரு பகுதி சந்திரசேகர பாண்டியனால் ஆளப் பட்டது உறுதிபெறுகிறது. இதற்கு முன்பு வரலாற்றறிஞர்கள் சந்திரசேகரன் ஒரு பாண்டிய மன்னனா? என்று ஐயுற்றனர். இப்போது ஐயப்படவேண்டிய தேவையில்லை.

### அபிராம பராக்கிரம பாண்டியன் ஆகவராமன்

புதுக்கோட்டைச் செப்பேடுகளில் அபிராம பராக்கிரம பாண்டியன், ஆகவராமன் ஆகிய இருவரது பெயர்கள் குறிக்கப் பட்டுள்ளன.[2] இவர்களிருவரும் உடன் பிறந்தார் என்ற செய்தியைத் தவிர வேறு ஒன்றும் நாம் அறிந்து கொள்ளக் கூடவில்லை. பிற்காலப் பாண்டியரின் குடிவழிப் பட்டி இவ் வேந்தர்களைக் கொண்டு தொடங்குவதாகச் செப்பேடுகளின் மூலம் அறியலாம். இவர்கள் எப்பொழுது ஆட்சிக்கு வந்தனர், எத்தனை ஆண்டுகள் ஆட்சி புரிந்தனர் என்பனவற்றை அறிந்து கொள்ள இயலவில்லை.[3]

### சடையவர்மன் சீவல்லப பாண்டியன்

மேலே குறிக்கப்பட்டுள்ள ஆகவராமனின் புதல்வனான இவன் கி.பி. 1534ஆம் ஆண்டு அரியணையேறினான். இவன் சடைய வர்மன் திரிபுவன சீவல்லபதேவன் எனவும் அழைக்கப் பெறு கிறான். இவன் விசயநகர அச்சுதராயனின் சமகாலத்தவன் ஆவான். இவன் கி.பி. 1545ஆம் ஆண்டு முடிய அரியணையில் வீற்றிருந்தான். தற்காலத் திருநெல்வேலி மாவட்டத்தில் இவ் வேந்தனது பன்னிரண்டு கல்வெட்டுகள் காணப்படுகின்றன. இவற்றுள் கி.பி. 1534ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் இருபத்

[1] கல்வெட்டு—இதழ் 6. இராட்சச ஆண்டு ஆடித் திங்கள் பக். 38 (தமிழ் நாட்டரசுத் தொல்பொருள் துறை மாத இதழ்).

[2] Travancore Archaelogical Series Vol. I, p. 88.

[3] Ibid.p. 54.

தொன்பதாம் தேதியிட்ட கல்வெட்டே முதல் கல்வெட்டாகும்.[1] இவன் அனுஷ நட்சத்திரத்தில் பிறந்தவன் ஆவான்.[2]

## அரசியல் சூழல்

**விசயநகர அரசு**

சடையவர்மன் சீவல்லபன் தென்பாண்டி நாட்டில் விசய நகர அரசருக்கடங்கிய சிற்றரசராக அரியணையேறுவதற்கு நான்காண்டுகளுக்கு முன்பு (கி.பி.1530)விசயநகரப் பேரரசனை கிருட்டிணதேவராயர் மண்ணுலக வாழ்வை விட்டு மறைந்தார். இம் மன்னவன் இறந்ததால் அவனது பின்னவனை அச்சுதராயர் மணிமுடி புனைந்து கொண்டார். அச்சுதராயனது ஆட்சியின் தொடக்க காலத்தில் அவனது சட்டகரான செல்லப்ப நாயக்கர் சோழ நாட்டிற்குத் தெற்கு மண்டல முதலியாக (தட்சிண மண்டலேஸ்வரராக) அமர்த்தப்பட்டார். விசுவநாத நாயக்கரோ பாண்டிய நாட்டின் மண்டல முதலியாக அமர்த்தப்பட்டார்.

**திருவாங்கூர் நாடு** (திருவடி)

அக் காலத்தில் திருவாங்கூர் நாடும் விசயநகரப் பேரரசிற்கு உட்பட்ட சிற்றரசாகவே இருந்து வந்தது. உதயமார்த்தாண்ட வர்மன் என்னும் மன்னன் திருவாங்கூர்ப் பகுதியினைச் செம்மையான முறையில் ஆண்டு வந்தான். இவன் வலிமை மிக்க படையொன்றினையும் பெற்றிருந்தான்.விசயநகர அரசுக் (மத்திய ஆட்சி) கெதிராகப் புரட்சி செய்த தஞ்சை கவர்னருக்கு இவன் அடைக்கலந் தந்ததுடன், விசயநகர வேந்தனுக்கு வழக்கமாகச் செலுத்தி வந்த (இரண்டாம் தேவராயர் கால முதற்கொண்டு) கப்பத்தைக் கட்டவும் மறுத்து விட்டான். அடுத்து, இவன் தெற்கில் படையெழுச்சியினையும் மேற் கொள்ளக் காத்திருந்தான்; தருணம் பார்த்திருந்தான். இவன் சோழ குல இளவரசி ஒருத்தியை மணந்து கொண்டானென்றும் இதன் காரணமாகச் சோழரது புலிச்சின்னத்தையும் இணைத்துப் புலி மார்த்தாண்டவர்மனெனப் பெயர் பெற்றதாகவும் கேரள வரலாற்றறிஞர் திரு. டி. கே. வேலுப்பிள்ளை எண்ணுகிறார்.[3] இவனது காலத்தில் சோழ வேந்தர் யாருமில்லையாதலின், சோழ நாட்டின் மண்டலாதிபதியாக ஆண்டுவந்த சாலுவநாயக்கரே, சோழ வேந்தனெனத் தவறுதலாகக குறிக்கப்பட்டுள்ளதாகக்

[1] No. 624 of 1926.
[2] S.I.I., vol. II. No. 861.
[3] Travancore State Manual, vol. II, p. 157.

கருதலாம். பேராசிரியர் திரு. அரங்காச்சாரி அவர்கள் கூறுவது போல சாலுவநாயக்கரே தனது மகளை உதயமார்த்தாண்ட வர்மனுக்கு மணம் புரிவித்து மருமகனுக்கிக் கொண்டானெனலாம்.[1]

## பஞ்ச பாண்டியர் கலகம்

### விடுதலை வேட்கை

அச்சுதராயர் தனது ஆட்சியின் தொடக்க காலத்தில் விசுவநாதநாயக்கரின் துணைகொண்டு தமிழ்நாட்டில் அரசியல் சிரமைப்பினைச் செய்து வந்தான். இச் சீர்திருத்தத்தால் திருச்சி மாநகர் சீர்பெற்றது. இத் தருணத்தில்தான் தென் பாண்டி நாட்டில் திருநெல்வேலிப் பகுதியில் உள்நாட்டுக் குழப்பம் உருவாகிக் கொண்டிருந்தது. தென்பாண்டி நாட்டிலுள்ள கயத்தாறு என்னும் ஊரினைச் சூழ்ந்த 'பகுதியினை ஆண்டுவந்த சிற்றரசர்கள் விசுவநாத நாயக்கரின் மேலாண்மையினை ஏற்க மறுத்துக் கலகம் செய்தனர். இச் சிற்றரசர்களே பஞ்ச பாண்டியர் என அழைக்கப் பெறுகின்றனர். சந்திர சேகர பாண்டியனது கால்வழியினர் என்று தம்மைப் பெருமையுடன் கூறிக் கொண்ட இவர்கள், தனியாட்சி நிறுவும் வேட்கையால் சண்டையிட முற்பட்டனர். மதுரைத் தலைவருக்குக் கீழ்ப்படிந்து ஆண்டுவரவும் மறுத்துவிட்டனர்.

### போர் மூண்டது

இக் கலகத்தினைக் கேள்விப்பட்ட விசுவநாதநாயக்கர் தளவாய் அரியநாதரை அங்கே அனுப்பி, கலகத்தினை அடக்கியொடுக்கி வருமாறு ஆணை பிறப்பித்தார். இவர் தனது படையுடன் திருநெல்வேலிப் பகுதிக்குச் சென்றபோது பஞ்சபாண்டியர் இவருடன் போர்புரியவும் அஞ்சாது முன் வந்தனர். இரு திறத்தாருக்கும் பெரும் போர் மூண்டது. போர் நெடு நாள் நீடித்தது. வெற்றி நங்கை எவருக்கு மாலையிடுவதென்றறியாமல் திகைத்து நின்றாள்.

### புரட்சி அடக்கப்படுதல்

போர் முற்றுப்பெறுதலைக் கேள்வியுற்ற விசுவநாதநாயக்கர் தானே நேரில் அங்குச் சென்று அரச தந்திர முறையைக் கையாண்டுப் பஞ்சபாண்டியரை வென்றடக்கினர். பேரரசின் படையும் இம் முயற்சியில் பேருதவி புரிந்தது. இவரிடம் தோல்வி கண்ட பஞ்சபாண்டியர்களது பெயர்கள் இதுகாறும்

[1] Indian Antiquary, vol. 43, p. 189.

கிடைக்கவில்லை. இவர்களுக்கும் சீவல்லப பாண்டியனுக்கும் என்ன தொடர்பு? என்பதும் அறிந்துகொள்ளக் கூடவில்லை. இருப்பினும் இவர்கள் திருநெல்வேலிப் பகுதியில் சிறுசிறு பகுதிகளை ஆண்டுவந்த சிற்றரசர்கள் என்பது மட்டும் உறுதி. இவர்கள் மதுரை மண்டலாதிபதிக்கு உட்பட்டே ஆட்சிபுரிந்து வந்தனர் என்பது திண்ணம். இக் கலகம் சீவல்லபன் காலத்திற்கு முன்பு நடைபெற்றது போலும்.

### உதயமார்த்தாண்ட வர்மனின் படையெழுச்சி

படைவலியைப் பெருக்கிக் கொண்டு, தெற்கில் படையெழிச்சியினை மேற்கொள்ளக் காத்திருந்த திருவாங்கூர் வேந்தனும் உதயமார்த்தாண்டவர்மன் பாண்டிய நாட்டின் குழப்ப நிலையைக் கண்டு, இதுவே தக்க தருணம் எனக் கொண்டு கி.பி. 1515-ல் தென்பாண்டி நாட்டின்மீது தண்டு தூக்கினன். சீவல்லப பாண்டியனைத் தாக்கினன்; தோற்கடித்தான். அவனது பகுதிகளையும் கைப்பற்றிக் கொண்டான்.

இவ்வெற்றியின் விளைவாகத் திருநெல்வேலிப் பகுதியின் பெரும் பகுதி அவன் கைக்கு மாறிற்று; அத்துடன் 'வென்று மண்கொண்ட பூதல வீரன்' என்னும் பட்டப்பெயரினையும் பெற்றான். கி.பி. 1515ஆம் ஆண்டு பாண்டிய நாட்டில் படையெழுச்சியைத் தொடங்கிய இவன் ஏறத்தாழ கி.பி.1531 வரை பலபகுதிகளில் போரிட்டு வெற்றிகள் பெற்றான். இவன் பாண்டி நாட்டில் படையெடுத்தபோது செல்லப்பாவும்[1] (சாலுவ வீர நரசிம்ம நாயக்கர்) பக்கத்துணையாயிருந்து பாண்டியனை எதிர்த்தான்.

### திருப்பணி

கி.பி. 1531 ஆம் ஆண்டு ஏப்ரல் இருபத்தேழாம் தேதியிட்ட உதயமார்த்தாண்டனது கல்லிடைக்குறிச்சிக் கல்வெட்டொன்று இவன் 'வடசே' (Vadasey) என்னுமிடத்தில் தங்கியிருந்த காலை சிவன் கோயிலுக்கு நிலதானமளித்த செய்தியினைக் குறிப்பிடு

[1] செல்லப்பா தலுவகுலைந்தன் பட்டன் என்பாவின் மகன் ஆவான். காஞ்சி ஏகாம்பரநாதரது ஆலயத்தில் செல்லப்பாவின் தந்தை தேவகன்மியாகப் பணிபுரிந்து வந்தான். (487 of 1920 and 25 of 1916.) தேவகன்மி என்றால் கோயில் அதிகாரியாகும். செல்லப்பா சாலுவ வீர நரசிம்ம நாயக்கன் என்றும் அழைக்கப் பெறுகிறான். தமிழ் பிராமண குலத்தில் பிறந்த இவன் கி.பி. 1510ஆம் ஆண்டு விசயநகர வேந்தனான கிருஷ்ணதேவராயரது அரசவையில பணி புரிந்தான். இவனை 'Lord Prosperous Sellappan' என்று கல்வெட்டுக் கூறுகின்றது. காஞ்சிபுர வரதீஸ்வரா, சுவாமி செல்லப்பர் என்னும் பெயர்களாலும் இவன் அழைக்கப் பெற்றான்.

கின்றது. திருநெல்வேலி மாவட்டம் பிரமதேசம் என்னுமிடத்திலுள்ள கல்வெட்டில் இவன் ஆங்கு தங்கியிருந்தபோழ்து அவ்வூர்க் கோயிலில் வழிபாடு தொடர்ந்து நடைபெறவும் பழுது பார்க்கவும் வேப்பங்குளம் என்னும் ஊரினைத் தானமளித்த செய்தி கூறப்பட்டுள்ளது. திருநெல்வேலி மாவட்டம் 'களக்காடு' என்னும் ஊரினைத் தனது தமிழ்நாட்டின் தலைமையிடமாகக்கொண்டு ஆங்கு தங்கியிருந்த அவன் அம்பாசமுத்திரம், மன்னார்கோயில், களக்காடு போன்ற திருக்கோயில்களில் திருப்பணி புரிந்ததுடன் பல ஊர்களைச் சீர்திருத்திக் கொண்டுமிருந்தான்.

**கல்வெட்டுச் சான்று**

உதயமார்த்தாண்டன் தென்பாண்டி நாட்டினைக் கைப்பற்றிய செய்தி பிரமதேசம், சேரமாதேவி, அம்பாசமுத்திரம், களக்காடு முதலான ஊர்களில் காணப்படுகின்ற இவனது கல்வெட்டுகளால் உறுதிபெறுகிறது. மேலும், இப் பகுதியினை இவன் சிறிதுகாலம் ஆட்சி புரிந்ததாகவும் தெரிகிறது.

**பாண்டியனின் முறையீடு**

நாடிழந்த சீவல்லப பாண்டியன் விசயநகர வேந்தனாகிய அச்சுததேவராயனிடம் தனது அவல நிலையினைக் கூறி, முறையிட்டுத் தனக்குதவிபுரியும்படி வேண்டினான். விசயநகர வேந்தனுக்கு உதயமார்த்தாண்டவர்மன் திறை செலுத்த மறுத்ததனையும் நாம் முன்பே கண்டோம்.

**விசயநகர வேந்தனுக்கு எதிராகப் போரணி**

பாண்டிய நாட்டின்மீது ஊடுருவல் செய்ததாலும் விசயநகரப் பேரரசுக்குத் திறை செலுத்தாத காரணத்தாலும் அச்சுதராயனின் வெறுப்பினையும் சிற்றத்தினையும் உதயமார்த்தாண்டவர்மன் சம்பாதித்துக் கொண்டான். விசயநகர வேந்தனின் பகைவனாக இவன் மாறியதால், விசயநகரப் பேரரசின் ஆதிக்கத்தினை எதிர்த்துக் கிளர்ச்சி செய்த சாலுவ நாயக்கனும் உதயமார்த்தாண்ட வர்மன் பக்கம் சேர்ந்து கொண்டான். இத் தருணத்தில், முன்பு சாலுவ நாயக்கன் விசயநகர அரசுக்கெதிராக நடத்திய கிளர்ச்சியில் உறுதுணை புரிந்த பரமக்குடி தும்பிச்சிநாயக்கனும் விசயநகரவேந்தனுக்குப் பகைவனானான். இக் காலகட்டத்தில் விசயநகரப் பேரரசனுக்கெதிராகத் தெற்கே அணி அணியாக எதிர்ப்புகள் உருவாயிற்று. இச் சூழலை பேராசிரியர் திரு. அரங்காச்சாரி அவர்கள் மிக அழகாக விளக்கியுள்ளார்.[1]

[1] Indian Antiquary, vol. 43. p. 100.

காவிரிக் கரை முதல் தீபகற்பத்தின் கடைசிப் பகுதிவரை சங்கிலித் தொடர் போன்று எதிரிகள் விசயநகர அரசுக்கெதிராக அணிவகுத்து நின்றனர். காவிரிக்கரைப் பகுதியில் சாலுவ நாயக்கரும், வைகைக் கரைப்பகுதியில் தும்பிச்சி நாயக்கனும், தாமிரபரணிக்கரையில் உதயமார்த்தாண்டவர்மனும் விசய நகர அரசை வெற்றி கொள்ளத் துடித்துக் கொண்டிருந்தனர். இந் நிலையினை அமைச்சன் விசயநகர வேந்தனுக்கு எடுத்துக் காட்டி, நாடிழந்த[1] பாண்டியனுக்கு உதவிபுரியவும், சேரனையும் செல்லப்பாவையும் தண்டிக்கவும் கேட்டுக்கொண்டான.

### அச்சுதராயனின் சீற்றம்

மேற்கூறியது போன்றதொரு சூழ்நிலை, தனது அரசுக் கெதிராக உருவானது கண்ட அச்சுதராயன், கொதித் தெழுந்தான்; பகைஞர்களை வெட்டிவீழ்த்தி, பகையொழித்து, நாடிழந்த பாண்டியனுக்கு நாடளிக்கவும் உறுதியெடுத்துக் கொண்டான். தனது படைத் தலைவனையழைத்து, படை யெழுச்சிக்குத் தக்க ஏற்பாடுகளை உடனடியாகச் செய்யக் கட்டளையிட்டான். தனது படைத் தலைவனும், இளைய மைத்துனனுமான (Younger brother-in-law) சாலகராஜு சின்ன திருமலா (Salakaraju Chinna Thirumala) ஆற்றல் மிக்க அடலேறாக இருந்தபோதிலும், தானே படைநடத்திச் செல்ல முடிவெடுத்தான் வேந்தன்.

### படையெழுச்சி

படைத் தலைமையேற்ற வேந்தன் தனது படைகளுடன் வெற்றிநகரை (விசயநகரம்) விட்டுப் புறப்பட்டான் வெற்றிபெற; சின்னாட்களுக்குள் அவனது படை சந்திரகிரியையடைந்தது. தனது படையை ஆங்கு தங்கியிருக்கும்படி ஆணை பிறப்பித்து விட்டு, அச்சுதராயன் திருப்பதி சென்று வெங்கடேசப் பெருமானை வணங்கி விட்டு, காளகஸ்தி சென்று சிவபிரானை வணங்கினான். பின்பு அங்கிருந்து சந்திரகிரி சென்று தன் படைகளை நடத்திக் கொண்டு காஞ்சி மாநகரினையடைந்தான். ஆங்கு அவனது உள்நாட்டு அதிகாரிகளும் சிற்றரசர்களும் திறைப்பொருளும், பரிசிற்பொருளும், பொன்னும் மணியும் அவனுக்களித்துத் தங்களது மகிழ்ச்சியினையும் கீழ்ப்படிதலையும் தெரிவித்துக் கொண்டனர். இவ்வாறு விண்மீன்கள் புடை சூழ்ந்த வெண்ணிலவு போன்று அச்சுதராயன் தனது சிற்றர

[1] Dr. S. Krishnaswami Iyengar, 'Sources of Vijayanagar History' pp. 158-159.

சர்களும் அதிகாரிகளும் புடைசூழக் காஞ்சியினின்றும் புறப்பட்டுத் திருவண்ணாமலை வந்து சேர்ந்தான். திருவண்ணாமலையில் எழுந்தருளியிருக்கும் இறைவனைக் கைகூப்பி வணங்கிய வேந்தன் பின்பு சோழநாடு வந்தடைந்தான். பின்பு, திருவரங்கத்தினை வந்தடைந்த அச்சுதராயன், தனது படையினர் வெற்றிவாகை சூடும்வரை ஆங்கு தங்கியிருந்தான். மேற்கூறிய நிகழ்ச்சிகள் யாவும் 'அச்சுதராய பூதயம்' என்னும் நூலின்கண் மிக அழகாக விவரிக்கப்பட்டுள்ளது.[1]

### சாலகராஜு சின்ன திருமலாவின் தலைமை

கலகக்காரர்களை அடக்கவேண்டிய சிறுபணியினை வேந்தனே முன்னின்று நடத்துவதைவிடத் தானே மிக எளிமையாக முடித்து வெற்றிவாகை சூடி வருவதாகப் படைத்தலைவனான சாலகராஜு சின்ன திருமலை வேந்தனிடம் வேண்டினான். வேந்தனும் அப்படியே செய்ய ஆணை பிறப்பித்தான். காற்றினும் கடிது சென்றது விசயநகரப் படை; அடைந்தது மதுரை மாநகரை; பாசறையமைத்தது தாமிரபரணியாற்றங் கரையில்;[2] தாமிரபரணியாற்றங்கரை வரை எவ்வித எதிர்ப்பினையும் இவர்கள் சந்திக்கவில்லை.

### வெற்றியும் வெற்றித் தூணும்

பின்பு சாலகராஜு ஆங்கு தங்கிக்கொண்டு, தனக்குக் கீழுள்ள அதிகாரிக்குச் சேரவேந்தனைத் தண்டித்துவர ஆணை பிறப்பித்தான். விசயநகரப் படையும் அணிவகுத்துச் சென்றது சேரனைத் தேடி; கடிதுசென்ற விசய நகரப்படையின் முன்னேற்றத்தைத் திருவடி வேந்தனது படை அருவாய்மொழிக் கணவாயில் தடுத்தது. இதன் காரணமாக இரு திறத்தாருக்கும் போர்மூண்டது. போரில் உதய மார்த்தாண்டவர்மனுக்குத் தோல்வியே கிட்டியது.[3] வெற்றி பெற்ற சாலகராஜு தாமிர பரணியாற்றங்கரையில் வெற்றித்தூண் ஒன்றினை நட்டான்.

### உதய மார்த்தாண்டன் அடிபணிதல்

போரில் தோல்வியைத் தழுவிய உதயமார்த்தாண்டன், தனது எஞ்சிய படைகளுடனும், புரட்சியாளனான செல்லப்பாவுடனும் சாலகராஜுவிடம் அடிபணிந்து, செல்லப்பாவை அவனிடம் ஒப்படைத்ததுடன் யானைகளையும் குதிரைகளையும் அவனுக்குத் திறையாகச் செலுத்தினான். விசயநகர வேந்தனின்

[1] Achyutarayabhyudayam, Canto V; Sources. p. 159.
[2] N. Venkataramanayya, 'Studies in the Third Dynasty of Vijayanagara' p. 31.
[3] Ibid. p. 32.

சார்பாக இவற்றைப் பெற்றுக்கொண்ட சாலகராஜு, நாடிழந்த சீவல்லப பாண்டியனுக்கு அவனது நாட்டினையளித்து அவனை வேந்தனாக்கி மகிழ்ந்தான். இத் திருப்பணியைப் புரிந்த சாலகராஜு நேரே திருவனந்தபுரம் சென்று பத்மனுபப் பெருமானை வணங்கி, அங்கிருந்து இராமேஸ்வரம் வழியாகத் திருவரங்கத்தினை அடைந்தான்.[1]

### அச்சுதராயர் பாண்டியப் பைங்கிளியை மணத்தல்

பின்பு, அவன் உதய மார்த்தாண்டவர்மனையும் செல்லப் பாவையும் அச்சுதராயரிடம் ஒப்படைத்ததுடன், தனது படையெழுச்சிபற்றிய அறிக்கையையும் அவனிடம் அளித்தான். பெருமகிழ்ச்சியில் திளைத்த வேந்தன், சேரவேந்தனைத் தண்டிக்கத் தனது அமைச்சனுக்கு ஆணை பிறப்பித்தான். பாண்டிய வேந்தனை அரியணையில் மீண்டும் ஏற்றிய அவனது செயலுக்கு ஒப்புதல் அளித்தான். இத் தருணத்தில்தான் அச்சுதராயன் பாண்டிய இளவரசியை மணம் முடித்தான்.[2]

### சான்றுகள்

காளகஸ்தி, காஞ்சிபுரம் ஆகிய இடங்களில் கிடைக்கின்ற கல்வெட்டுகள் மேற்கூறப்பட்ட செய்திகளைக் கூறுகின்றன. காஞ்சியிலுள்ள காமாட்சியம்மன் கோயில் கல்வெட்டு இந் நிகழ்ச்சிகளின் சுருக்கத்தினைக் கோவைபடக் கூறுகின்றது.[3]

### இறந்தகாலம் எடுத்தவன்

'எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு'

என்ற வள்ளுவனின் வாய்மொழிக்கிணங்க, தனக்குத்தக்க தருணத்தில் படையுதவி புரிந்து, தனது நாட்டினை மீட்டுக் கொடுத்த அச்சுத தேவராயனுக்குத் தனது நன்றியினைத் தெரிவிக்கும் பொருட்டுத் தனது மகளை அவனுக்கு மணஞ்செய்து

[1] Dr. S. Krishnaswamy Aiyangar, 'Sources of Vijayanagar History' p. 159.

[2] 'Studies in the Third Dynasty of Vijayanagara' p. 83.

[3] S.I.I., vol. VII, No. 52.

அச்சுதராயர் திருவடிவேந்தனை வெல்லப்படையொன்றினையனுப்பினன்; தாமிரபரணியாற்றங்கரைதனில் வெற்றித்தூண் ஒன்றினை நிறுவினன்; உதயமார்த்தாண்டவர்மனிடம் திறை பெற்றான்; பாண்டிய அரசகுலப் பெண்ணைத் திருமணம் புரிந்துகொண்டான்; சாலுவ நாயக்கனையும் தும்பிச்சி நாயக்கனையும் ஒறுத்தான்; தனது தேவியுடனும் இளவரசனான வெங்கடாத்திரியுடனும் காஞ்சி வந்தடைந்தான். ஆங்கு துலாபாரம், மகபூதகதிதானம், நித்தியதானம் போன்ற பல தானங்களையளித்தான்; காமாட்சியம்மன் கோயிலுக்கு விலைமதிக்க வொண்ணு பொன்னும் நிலமும் தானம் செய்தான்.

கொடுத்தான்;[1] தனது உறவினனாகவும் ஆக்கிக்கொண்டான். இம் மகிழ்ச்சிக்குரிய நிகழ்ச்சியினால் தனது பாண்டியர் குடிக்குப் பழைய பெருமையும் புகழும் மீண்டும் உண்டாகும் சூழ்நிலையைத் தான் உருவாக்கியதாக எண்ணி 'இறந்தகாலமெடுத்தவன்'[2] என்னும் பட்டத்தினையும், 'பாண்டியராச்சிய தாபனாசாரியன்'[3] என்னும் பட்டத்தினையும் இவன் புனைந்து கொண்டான் போலும். திருவாங்கூர் வேந்தனும் விசயநகர பேரரசனுக்கு முறையாகக் கப்பம் கட்டிவந்தான்.

நாடிழந்த சீவல்லப பாண்டியன், விசயநகர வேந்தனும் அச்சுதராயனின் உதவியால் நாட்டினை மீட்டான்; இருப்பினும் தனது குடி இழந்த பெருமையினையும் புகழினையும், எவராலும் மீட்க முடியவில்லை. ஒரு காலத்தில் பாராண்ட பாண்டியர் இன்று சிறிய பகுதிக்கே அதிபதியாயிருந்தனர். அதுவும் விசயநகரப் பேரரசுக்கு உட்பட்ட சிற்றரசாக.

## பாண்டிய நாட்டில் குழப்பம்

**ஒற்றுமையின்மை**

கி.பி. பதினாறும் நூற்றாண்டில் பிற்பகுதியில் பாண்டிய நாட்டில் உள்நாட்டுக் குழப்பம் ஏற்பட்டது. சிறு பகுதியினை ஆண்டு வரவேண்டியதொரு சிறுமை தமக்குற்றபோதிலும், அதனைக் கண்டு வெட்கமோ, கழிவிரக்கமோ கொள்ளாத பாண்டியர் ஒற்றுமையுணர்வின் அவசியத்தை உணராது அல்லற்பட்டனர்; தமக்குள் மாறுபட்டனர்; கருத்து வேறுபட்டனர்.[4] தமது முன்னோரின் ஒற்றுமையின்மையின் காரணமாகத் தமது நாடு முஸ்லிம் படையெழுச்சிக்கு இலக்காகி சிறுமையுற்றதனை மறந்தனர்; ஒற்றுமையுணர்வினைத் துறந்தனர்.

**இரு துண்டாதல்**

இக் கால கட்டத்தில் பாண்டியச் சிற்றரசு இரு துண்டாக்கப்பட்டது. தென்காசியும், கயத்தாறும் இவ்விரு அரசுகளின் தலைநகரங்களாயின; இக் காலத்திய தென்காசி, செங்கோட்டை, சங்கரநயினார்கோயில், சீவில்லிபுத்தூர் ஆகிய

1 Travancore Arshaelogical Series Vol. I. p. 56.
2 Ibid. p. 47.
3 Ibid. p. 54.
4 Dr. A. Krishnaswami 'The Tamil Country under Vijayanagar' page 219.

வட்டங்கள் (Taluks) ஒன்று சேர்ந்து ஒரு குறுநிலப்பகுதியானது அதன் தலைநகரமே தென்காசி. இப் பகுதியின் வேந்தனை சடையவர்மன் விசயநகரப் பேரரசுக்கடங்கிய சிற்றரசனாக ஆண்டுவந்தான்.[1]

**கயத்தாறு பாண்டியர்**

அடுத்த குறுநிலப் பகுதியோ தற்காலத்திய கோயில்பட்டி, சிவைகுண்டம், திருநெல்வேலி ஆகிய வட்டங்களைத் தன்னகத்தே கொண்டு விளங்கிற்று. கயத்தாறு இப் பிரிவின் தலைமை அரசுப் பீடமாக விளங்கிற்று. வெட்டும் பெருமாள் ராஜா[2] என்பான் கயத்தாறுப் பகுதியின் காவலனாக விளங்கினான். இவ் வேந்தனும் சீவல்லப பாண்டியனைப் போன்று புகழ்மிக்கவன்; போற்றத் தக்கவன். கயத்தாறு கோட்டை இவனால் கட்டப்பட்ட தென்பது தொன்றுதொட்டு வழங்கிவரும் கூற்றாகும். இவன் வெங்கால ராஜாவை வென்றதும், அதன் நினைவாகக் கோயில் பட்டி வட்டத்தில் உள்ள இளவேலங்காலில் (Ilavelankal) கல்லாலான சிற்பங்கள் செதுக்கப்பட்டதும் உண்டென்று கூறப்படுகின்றது.

**உன்னிகேரள வர்மனின் தமிழகப் படையெடுப்பு**

பாண்டியர் குலத்துதித்த இவ் வேந்தர் இருவரும் தம்முள் ஒற்றுமையின்றி, மாறுபட்டுப் போரிட்டனர் அடிக்கடி; இதனால் தோன்றியதே இப் பகுதிகளில் நெருக்கடி. தென்பாண்டி நாட்டில் அமைதி கெட்டிருந்த நேரத்தில் திருவடி மன்னர்கள் (திருவாங்கூரில் ஐந்து அரசுகள்) தமது மேலாண்மையைப் பெருக்கவும், தமது ஆட்சிப்பரப்பைப் பெருக்கவும் முனைந்து நின்றனர். திருவாங்கூர் வேந்தனாகப் புதிதாகப் பதவியேற்ற உன்னிகேரளவர்மன் என்பான் குமரிமுனைவரைப் படையெடுக்கத் திட்டமிட்டான். வேந்தனையிழந்த கன்னியாகுமரி அரசு சிறு பையனால் ஆளப்பட்டபோது அதனை எளிமையாகவும் அவன் கைப்பற்றிக்கொண்டான். அடுத்து, கயத்தாறு வேந்தனும் வெட்டும்பெருமாளுடனும் இரகசிய உறவுகொண்டான்; தமிழகத்தின் நன்புகழ் பெருகக் கண்டான்.

[1] Travancore Archaeological Series Vol. 1, p. 48, Note 16.

[2] போர்த்துகீஸியர் இவனை பெட்டிமுனல், பெட்டர்மீல், பெட்டர் பெமாட், பெட்டேர்னல் என்றெல்லாம் (Betimunal, Betermeal, Beterbemad and Beternal) தவறுதலாகக் குறித்துள்ளனர். மறைத்திரு ஈராசு அடிகளார் இவனை வித்தலராயாவுடன் தொடர்பு படுத்துகிறார்.

**உன்னிகேரள வர்மனின் தவறு**

இவ்வாறு தனது வலிமையைப் பெருக்கிக்கொண்ட உன்னி கேரளவர்மன், விசயநகர வேந்தனுக்குத் திறை செலுத்துவதனைத் துறந்தான்; தனது முன்னோனை வீர உதயமார்த்தாண்ட வர்மனுக்கு நேர்ந்த கதியினையும் மறந்தான். அடுத்தபடியாக, தென்காசிப் பாண்டிய வேந்தனை சடையவர்மன் சீவல்லபனது நாட்டில் ஊடுருவல் செய்தான்; அங்குள்ள மக்களின் இன்பத்தினைக் கொய்தான். பாண்டியநாட்டின்கண் முன்பு ஊடுருவல் செய்த வீர உதய மார்த்தாண்டவர்மன் விசயநகர அரசிற்கு அடிபணிந்த நிகழ்ச்சி அவன் நினைவிற்கு வரவில்லை போலும்.

**இராமராயரின் சீற்றம்**

தனது ஆட்சிக்குட்பட்ட தென்காசிப் பாண்டிய நாட்டில் திருவடிவேந்தன் காலடி வைத்தது கண்டும், அவன் திறை செலுத்த மறுப்பது கண்டும் இராமராயர் சீற்றங்கொண்டான். தனது நாட்டின் எல்லையிலே தொல்லை விளைவிக்கின்ற திருவடி வேந்தனை விரட்டியோட்டத் தன் படைத்தலைவர்களுக்கு ஆணையிட்டான். புறப்பட்டது விசயநகரப்படை திருவடிவேந்தனைத் தண்டிக்க. வித்தல்ராயரும் சின்ன திம்மண்ணாவும் படைத்தலைமையேற்றனர்.

**படையெழுச்சியின் நோக்கம்**

விசயநகரப்படை முதன்முதல் திருவாங்கூர் நாட்டின்மீது தான் படையெடுத்தது. தென்காசிப் பாண்டிநாட்டில் ஊடுருவல் செய்து, திறைசெலுத்த மறுத்த திருவனந்தபுர வேந்தனைத் தண்டிக்க வேண்டுமென்பதே இப் படையெழுச்சியின் முக்கிய நோக்கமாகுமென்று மறைத்திரு ஈராசு அடிகள் கூறுவார்.[1]

**படையெழுச்சி**

பின்பு, விசயநகரப்படை காவிரியாற்றினைக் கடந்து திருச்சிராப்பள்ளி. இராமநாதபுரம் மாவட்டங்களையடைந்தது. இதுவே தன்னரசு நாடு என அழைக்கப்பட்டது. திறைசெலுத்த மறுத்த சிற்றரசர்கள் ஒதுக்கப்பட்டனர்.

**வெட்டும் பெருமாள் தோல்வி**

அடுத்து, விசயநகரப்படை தென்பாண்டி நாட்டில் நுழைந்தது. தென்காசி வேந்தனைத் துரத்தியடித்த கயத்தாறு

[1] Father Heras 'The Aravidu Dynasty' p. 141.

வேந்தனும் வெட்டும்பெருமாள்ராஜா வெற்றிகொள்ளப் பட்டான்; சீவல்லபன் தென்காசி வேந்தனை அமர்த்தப் பட்டான். தோல்வியைத் தழுவிய வெட்டும்பெருமாள் ராஜா, கயத்தாற்றினின்றும் நழுவினன்; திருவனந்தபுரத்தில் நுழைந் தான்; உன்னிகேரளவர்மனின் அடியினைத் தழுவினன்.

#### மீண்டும் பதவி

இவ்வாறு திருவனந்தபுர வேந்தனாலும், கயத்தாறு வேந்த னாலும் தாக்குதலுக்குள்ளாகி நாடிழந்த சீவல்லபபாண்டியன், இரண்டாம் முறையாக விசயநகரவேந்தனின் தலையீட்டால் தனது நாட்டினைப் பெற்றான். தனக்கு அண்டைய நாட்டின் வேந்தனால் துன்பம் வருகின்ற போதெல்லாம் சீவல்லப பாண்டியன் விசயநகர வேந்தனைநாடி, அவனது உதவியைத் தேடி, தனது அரசினை அழிவினின்றும் காத்துக்கொள்ள வேண்டிய இக் கட்டான சூழ்நிலைக்குத் தள்ளப்பட்டான்.

#### சீர்திருத்தங்கள்

அன்னியப் படையெழுச்சிக்குப் பின்னர் சிலகாலம் சென்றது. தென்பாண்டி நாட்டில் அமைதியும் நிலவியது; பின் தங்கிய நிலையிலிருந்த தென்பாண்டி நாட்டில் சில சீர்திருத்தங் களைச் செய்ய விசுவநாத நாயக்கரும் தளவாய் அரியநாதரும் முயற்சிகள் மேற்கொண்டனர்.[1] தாமிரபரணியாற்றின் இரு மருங்கிலும் இருந்த அடர்ந்த காடுகள் அழிக்கப்பட்டன. புதிய சாலைகள் அமைக்கப்பட்டன. கள்ளர் தொல்லை ஒழிக்கப்பட்டது.

#### சீர்திருத்தத்தின் விளைவுகள்

இவற்றின் விளைவாக உள்நாட்டு வாணிபம் வளர்ச்சியுற்றது. திருநெல்வேலி நகரம் விரிவாக்கப்பட்டு, பெருநகராயிற்று. நாட்டில் நீர்ப்பாசன வசதிக்கான திட்டங்கள் பல மேற்கொள்ளப் பட்டன. இதன் காரணமாக வேளாண்மைத் தொழில் பெரிதும் விரிவடைந்தது. மக்களது அடிப்படைத் தேவைகள் நிறை வேற்றப்பட்டபின்பு, ஆன்மீகத் துறையும் சீர்பெற நட வடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. நெல்லையப்பர் கோயில் பழுதுபார்க்கப்பட்டு, வழிபாடு தொடர்ந்து நடைபெற ஏற்பாடுகள் செய்யப்பட்டன. காடுகொன்று நாடாக்கி, குளம் தொட்டு வளம்பெருக்கிய விசுவநாதநாயக்கர் மக்களால் பெரிதும் மதிக்கப்பெற்றார்.

1 பரந்தாமனர், அ. கி. 'மதுரை நாயக்கர் வரலாறு' பக்கம். 102.

**சடையவர்மன் பராக்கிரம குலசேகர பாண்டியன்**

அபிராம பராக்கிரம பாண்டியனது மூத்தமகனாகிய[1] இவனது கல்வெட்டுகள் கி.பி. 1543 முதல் கி.பி. 1552 வரையில் உள்ளன. இவனால் வெளியிடப்பெற்றதாக நமக்குக் கிடைத்துள்ள கல்வெட்டுகளில் கி. பி. 1543ஆம் ஆண்டினதாகிய கல்வெட்டே முந்தியதாகலின் இவன் ஏறத்தாழ கி.பி. 1543ஆம் ஆண்டோ அல்லது ஒரு சில ஆண்டுகளுக்கு முன்போ அரியணையேறியதாகக் கொள்ளலாம். இவனைப்பற்றிய செய்திகள் வேறொன்றும் நமக்குக் கிடைக்கவில்லை. இவன் அஸ்வினி நட்சத்திரத்தில் பிறந்தவன் ஆவான்.[2]

## நெல்வேலி மாறன்

**சிறப்புப் பெயர்கள்**

நெல்வேலி மாறன், அபிராம பராக்கிரம பாண்டியனுடைய இரண்டாவது மகனாவான். இவன் கி.பி. 1552ஆம் ஆண்டு முதல் கி.பி. 1564ஆம் ஆண்டு முடிய அரசு புரிந்ததாக அறியப் படுகின்றது இவ் வேந்தன் பல சிறப்புப் பெயர்களைப் புனைந்து கொண்டான். அவற்றுள் வீரபாண்டியன், குலசேகரபாண்டியன், பொன்னின் பாண்டியன், தர்மப்பெருமாள், அழகன் பெருமாள் ஆகியவை குறிப்பிடத்தக்கவையாகும். கீர்த்திமிக்க இம் மன்னன் புலவர் பெருமக்கள் பாடிய வீரவெண்பாமாலை கொண்டவன் என்பதனைத் தென்காசியிலுள்ள கல்வெட்டொன்றின் துணையால் அறியலாம்.[3]

1 'அபிராம பராக்கிரம பாண்டியதேவர் நந்தனரான ஸ்ரீ பெருமாள் குலசேகர தேவரான பராக்கிரம பாண்டிய தேவர்' என்னும் கல்வெட்டுத் தொடரால் இதனை அறியலாம். நந்தனர்–மகன். T. A. S. Vol. I, No. VI, சுந்தரேச வாண்டையார், வை. 'கல்வெட்டு மூலமும் விளக்கவுரையும்' பக்கம். 160. (1958)

2 S.I.I. Vol. I. 855: 277 of 1908.

3 T.A.S, Vol. I, No. VII.

ஏறிய சகாத்த மாயிரத்து நானூற்றெழுபதின்
    னுலில் வரிம்சம் பரிதாபிதனில் மாதம்
தேறிய சித்திரை யிருபத் தொன்பதாந் தேதி
    யிரண்டாம் பகந் திங்க ளுரோகனிநாள்
வீறுயர்ந்த மிதுனத்து நெல்வேலி மாறன்
    வீரவேள் குலசேகரச் செழியனென்று சுர
ராறுபுனை யகிலேசர் காசியிலே விளங்கவணி
    மவுலி தரித்தனன் பரராசர் பணிந்தனரே.
ஓடியல் மாலையணிந் தாலும் வாடு மெனப் புலவோர்
பாடிய வீரவெண்பா மாலையைப் பொன்னின் பாண்டியன்போர்
தேடிய வேற்செழியன் குலசேகரத் தென்னனைப் போற்
சூடிய வேந்தருண்டோ வொரு வேந்தரைச்
            சொல்லுகிலே நன்றாக.
இந்நூல் இப்பொழுது இருக்கிறதா? தெரியவில்லை.

இவ் வேந்தனது ஆட்சிக்காலத்தில் இவனது மூத்த மகனான அதிவீரராமபாண்டியன் இளங்கோ பட்டம் கட்டப்பெற்று, ஆட்சித்துறையில் தனது தந்தைக்குப் பேருதவி புரிந்துவந்தான். கி.பி. 1558 ஆம் ஆண்டினதாகிய சாசனத்தில் விசுவநாத நாயக்கரும், அதிவீரராம பாண்டியரும் குறிக்கப்பெற்றுள்ளனர். விசயநகரப் பேரரசினுக்கடங்கிய சிற்றரசனாக நெல்வேலி மாறன் ஆட்சிபுரிந்து வந்ததால் விசுவநாத நாயக்கர் இவனது ஆட்சிக்காலத்தில் நாட்டின் நிலையினை நேரில் கண்டறிய தென் பாண்டிநாட்டில் சுற்றுப் பயணம் செய்திருத்தல் வேண்டுமெனக் கொள்ளலாம். பொதுவாகத் தென்காசிப் பாண்டியர்கள் விசய நகர அரசினுக்கும் மதுரை நாயக்கர்களுக்கும் கீழடங்கி உண்மையுள்ளவர்களாக ஆண்டு வந்தனர்.

நெல்வேலி மாறனுக்குப்பின் இவனது மூத்த புதல்வனும் அதிவீரராம பாண்டியன் நாட்டின் அரியணையேறினான்.

## சடையவர்மன் அதிவீரராம பாண்டியன்

### அரியணையேறுதல்

பிற்காலப்பாண்டிய வேந்தருள் அருந்திறன் வாய்க்கப்பெற்ற ஆட்சியாளனாகவும், அருட்செல்வராகவும், செந்தமிழில் செம்மை சால் புலமைபெற்ற சான்றோனாகவும் விளங்கிய இவன் கி. பி. 1564 ஆம் ஆண்டு அரியணையேறினான். இவன் கி.பி. 1564 ஆம் ஆண்டுமுதல் கி.பி. 1604ஆம் ஆண்டு முடிய மக்கள் நலம்பேணும் நல்வேந்தனாய் அரசோச்சினான். இவன் அழகன் பெருமாள், சீவலவேள், சீவல்லபன் எனவும் அழைக்கப்பெறுகிறான்.

### நாணயம் வெளியிடல்

தனது தந்தையின் ஆட்சிக்காலத்திலேயே, இளங்கோவாக இருந்து ஆட்சித்துறையில் நல்ல தேர்ச்சி பெற்ற இவன் மக்களின் நலனுக்காகப் பல பணிகளைச் செய்துவந்தான். விசய நகரப் பேரரசினுக்கடங்கியே இவன் ஆட்சிசெய்த போதிலும், முழு அதிகாரம் படைத்த வேந்தனாகவே ஆட்சிபுரிந்து வந்தான். இவன் தனது காலத்தில் நாணயங்களும் வெளியிட்டுள்ளான். இவனது நாணயங்களில் மீன் சின்னம் இடம்பெற்றுள்ளது.

### இலக்கிய வளர்ச்சி

ஒரு காலத்தில் பார்முழுதும் ஆண்டு, தமது மேலாண்மையினைச் செலுத்திவந்த பாண்டியவேந்தர், இக் காலத்தில் இலக்கியத் துறையில் மட்டுமாவது தமது பண்டைய பெருமையினை இழக்காது, நிலைநாட்டினரென்பது ஒன்றே

நமக்கு ஆறுதல் அளிப்பதாக உள்ளது. பிற்காலப் பாண்டி வேந்தர்களது வரலாற்றில், அதிவீரராம பாண்டியன் ஒரு மொகலாய அக்பரது காலத்தையோ, அல்லது உரோமநாட்டு அகஸ்தஸின் காலத்தையோ உருவாக்கினன் எனக்கூறுமளவிற்கு இவனது ஆட்சி இலக்கிய வளர்ச்சியின் உச்ச காலமாகத் திகழ்ந்தது. கொற்கை இவ் வேந்தனது கோநகராகும்.

இவன் நெல்வேலிமாறனின் மகனுவான். இவனுக்கு வல்லபர் என்ற தம்பியும், சொக்கன் அதிவீரராம பாண்டியன் என்ற மகனும் இருந்தனர். இவரது பெரியப்பர் மைந்தரே வரதுங்கராம பாண்டியராவார்.

**தமிழ்ப் புலமை**

பொங்கு தமிழ் வளர்த்த சங்கத்துப் பாண்டியரின் கால் வழியினனை இவன், செந்தமிழ்ப் புலமையில் சிறந்து விளங்கினன். புவியரசினை இக் கவியரசன் வடநாட்டுப் பெரு வேந்தன் ஹர்ஷன் இயற்றிய 'நைஷதம்' என்னும் நூலினைத் தமிழ்மொழிபெயர்த்துப் பாடியுள்ளான்; பைந்தமிழில் பேருக்கம் காட்டினன். ஒரு காவலன் செய்த நூலை வேறொரு காவலன் மொழிபெயர்த்துள்ளான் என்பது போற்றுதற்குரியதொன்றே யாகும். இந்நூல்'நைடதம்' என்னும் பெயரினைப் பெற்றுள்ளது. இந்நூலை மொழிபெயர்க்கும் பணியில் இவ் வேந்தனுக்குத் துணை புரிந்தவர் வடமொழிப் புலவரான நைடதம் இராமகிருஷ்ணர் ஆவார்.[1] 'நைடதம் புலவர்க் கௌடதம்' என்னும் பழமொழி அந்நூலின் சிறப்பினை எடுத்துக்காட்டுகிறது. திரு. ஆர். அரிஹர மய்யர் அவர்கள் 'இக் காவியத்தை ஒரு முறையேனும் படித்தறியாதவர் வித்துவான்களாக மாட்டார்கள் என்பது துணிபு' என்று கூறியிருப்பது இந்நூலின் சிறப்பினைப் படம் பிடித்துக் காட்டுவதாக அமைந்துள்ளது.[2]

இம் மொழிபெயர்ப்பு நூலேயன்றி பைந்தமிழ்க்குரிசிலான இவ்வேந்தன் கூர்மபுராணம், வாயுசங்கிதை, காசிகாண்டம், இலிங்க புராணம், வெற்றி வேற்கை என்னும் நறுந்தொகை முதலான செந்தமிழ் நூல்களையும் இயற்றியுள்ளான். புகழீட்டியுள்ளான். கொக்கோகமும் இவனியற்றியதென்பர்.[3] இருப்பினும் இதனை உறுதிப்படுத்தச் சான்றுகளில்லை. சைவ புராணங்களை

1 Ibid. page 85.
2 அரிஹரமையர், ஆர். 'பாண்டியராஜ வம்ச சரித்திரம்'. பகுதி. 3, பக்கம் 86. (1926)
3 Ibid. page 40.

இயற்றியுள்ளதால் இவன் சிவபிரானின்மீது கொண்டிருந்த ஈடுபாடு நன்கு புலனாகின்றது.

**இறையன்பு**

இறைவன் மாட்டு எல்லையற்ற அன்பு கொண்ட இவன் தென் காசியிலும் இலஞ்சிநகரிலும் சிவாலயங்கள் கட்டுவித்தான். இதன் கட்டட அமைப்பு சாதாரண வேலைப்பாடு கொண்டதாகவே இருந்தது. இங்குள்ள மூலஸ்தான மகாலிங்கத்திற்கு அவ்வேந்தன் தனது தந்தையின் பெயரான குலசேகரமுடையார் என்பதனையே இட்டுள்ளான். தென்காசிக் குலசேகரமுடையார் கோயிலின்முன் கோபுரம் முற்றுப்பெறாத நிலையிலேயே உள்ளது. ஒருவேளை இப் பணி முற்றுப்பெறுவதற்கு முன் இவனது ஆட்சிக் காலம் முற்றுப் பெற்று விட்டதோ? என்று எண்ணத் தோன்றுகிறது. இக் கோயிலில் இவ் வேந்தனது கல்வெட்டுகள் சில காணப்பெறுகின்றன.

பாண்டிய நாட்டின் உள்நாடுகளான தென்னாரியநாடு, வடவாரிய நாடு, முள்ளிநாடு, கீழ்வேம்புநாடு, மேல்வேம்பு நாடு, வல்ல நாடு—முதலான பகுதிகளில் உள்ள சில கோயில்களுக்கு இவன் பல அறக்கட்டளைகளை அளித்துள்ளான்.

**பிராமணர்களுக்குத் தானம்**

இவன் பிராமணர்களது முன்னேற்றத்திலும் பேரார்வம் கொண்டிருந்தான். அவர்களுக்கு வீட்டுமனை, விளைநிலம் ஆகியவற்றை அளித்து அவற்றை இறையிலியாக்கியுள்ளான். கிருஷ்ண நாயக்கனின் வேண்டுகோளுக்கிணங்க, நடுக்குறிச்சி என்னும் ஊரின் பெயரை அதிவீரராமபுரமென மாற்றி அதனைப் பிராமணர்களுக்குத் தானமளித்தான்.

**தந்தைமீது பேரன்பு**

இவ் வேந்தன் தன்னைப் பேணிக் காத்துச் சான்றோனாக்கிய தனது தந்தையார்மீது எல்லையற்ற ஈடுபாடு கொண்டிருந்தான். இதனால் 'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' என்னும் முதுமொழிக்கு இவன் இலக்கணமாகமாகத் திகழ்ந்தார் எனலாம். மேலும், தனது தந்தையின் பெயரால் தென்காசியில் குலசேகரமுடையார் கோயிலைக் கட்டியதாலும் இவன் தனது தந்தையின்மீது கொண்டிருந்த பேரன்பினை அறிந்து கொள்ளலாம்.[1]

[1] Travancore Archaelogical Series, Vol. I, No. VII

**சிறப்புப் பெயர்**

இவ் வேந்தன் தன்னை உலகத்திற்கோர் வீரனென்றும் சார்வ பௌமனென்றும், சிம்மள, கேரள சோழ நாடுகளை வெற்றி கொண்டவனென்றும் தனது சாசனங்களில் கூறிக்கொண்டுள்ளான். இவனிடம் தோல்வி கண்ட பகையரசர் பெயர் யாண்டும் குறிப்பிடப் பெறவில்லை. எனவே, இவையனைத்தும் புனைந்துரையேயன்றி, உண்மையன்று.

இவன் கொற்கையம்பதியைத் தலைநகராகக் கொண்டிருந்தான் என்றும், இமயமலையில் மீனக்கொடியைப் பொறித்தான் என்றும் பாரிடத்தைப் பொது நீக்கித் தானே ஆட்சி புரிந்தான் என்றும், நைடத முதலான நூல்களின் சிறப்புப் பாயிரத்தில் கூறப்பட்டுள்ளது. இவற்றில் சிறிதேனும் உண்மையிருப்பதாகத் தோன்றவில்லை. இவை யாவும் இவனது முன்னோரது பெருமை யாகும் என்பதில் ஐயமில்லை.

**ஆசிரியர்கள்**

சுவாமி தேவரான கணபதிபட்டர், ஈசான முனிவர் ஆகியோரை இவ் வேந்தன் தனது ஆசிரியராகப் பெற்றிருப்பதாகத் தெரிகிறது.

**விசயநகரப் பேரரசின் வீழ்ச்சி**

சடையவர்மன் அதிவீரராம பாண்டியன் ஆட்சிப் பொறுப் பேற்ற அதே ஆண்டில், முதலாம் கிருஷ்ணப்பநாயக்கர் என்பார் மதுரை நாட்டு ஆட்சியை மேற்கொண்டது குறிப்பிடத்தக்க தாகும். மதுரைப் பெருநாட்டில் நாயக்கர் ஆட்சி வேரூன்றி நிலைப்பதற்கு முழுமுதற் காரணமாக இருந்த விசுவநாத நாயக்கர் மறைந்த ஆண்டும் கி.பி. 1564 ஆகும். முதலாம் கிருஷ்ணப்ப நாயக்கரை அடுத்து வீரப்ப நாயக்கர் கி.பி.1572 ஆம் ஆண்டு டிசம்பர்த் திங்கள் இறுதியில் ஆட்சிப் பொறுப்பேற்று, கி.பி. 1595ஆம் ஆண்டு முடிய நல்லாட்சி புரிந்து வந்தார். கி.பி. 1565ஆம் ஆண்டு நிகழ்வுற்ற தலைக்கோட்டைப் போருக்குப் (ரக்சாஸ்-டக்டிபோர்) பின்னர் விசயநகரப் பேரரசு வீழ்ந்தது; தமிழக வரலாற்றில் மட்டுமின்றித் தென்னிந்திய வரலாற்றிலும் இது குறிப்பிடத்தக்கதொரு நிகழ்ச்சியாகும். இருப்பினும் சிதைந்த அரசினைப் பெயரளவில் விசயநகர அரசர்கள் ஆண்டு வந்தனர். மதுரை நாயக்கர்கள் விரும்பியிருப்பார்களேயானால், விசயநகர அரசின் மேலாண்மையினின்றும் தம்மை விடுவித்துக் கொண்டு தனியாட்சி மேற்கொண்டிருக்கமுடியும். ஆனால், விசுவநாத நாயக்கரும் கிருஷ்ணப்ப நாயக்கரும் அவ்வாறு செய்ய

வில்லை. அவர்களுக்குப் பின்பு ஆட்சிப்பொறுப்பேற்ற வீரப்ப நாயக்கரும் விசயநகரப் பேரரசுக்குக் கீழ்ப்பட்டே ஆட்சி புரிந்து வந்தனர். இவருக்குப் பின்பு கி.பி. 1595 ஆம் ஆண்டு முதல் கி.பி. 1601 ஆம் ஆண்டு வரை மதுரைமாநாட்டு ஆட்சிப் பொறுப்பேற்றிருந்த இரண்டாம் கிருஷ்ணப்ப நாயக்கரும் பெயரளவில் உயிர் வாழ்ந்து கொண்டிருந்த விசயநகர அரசிடமிருந்து தன்னைத் துண்டித்துக் கொள்ளமுடியவில்லை.

அதிவீரராம பாண்டியரின்[1] ஆட்சி முடிவதற்குள் மதுரை நாயக்கர் ஆட்சி நான்கு ஆட்சியாளர்களால் ஒருவர்பின் ஒருவராக ஆளப்பட்டு வந்தது. ஆனால், அதிவீரராமப் பாண்டியனே தொடர்ந்து நாற்பது ஆண்டுகள் ஆட்சி புரிந்து வந்தான். அதிவீரராமபாண்டியன் வீரப்ப நாயக்கருக்குத் தொடர்ந்து உண்மையுள்ளவனாகவே ஆட்சிபுரிந்து வந்தான். இக் காலகட்டத்தில் அரியநாதர் மதுரை நாயக்கரின்கீழ் தளவாயாகவும் பிரதானியாகவும் இருந்த காரணத்தால் நாடு அமைதியில் ஆழ்ந்திருந்ததாகக் கொள்ளலாம்.

[1] இவன் மதுரை நாயக்கரான விசுவநாதரின் காலத்தில் வாழ்ந்தவனென்பதனை, இம் முன்னவனின் கி.பி. 1558 ஆம் ஆண்டு சாசனத்திலிருந்தும் நன்கறியலாம். இவன் முதலாம் கிருஷ்ணப்பர், வீரப்பர், இரண்டாம் கிருஷ்ணப்பர் முத்துக் கிருஷ்ணப்பர் முதலான மற்ற நாயக்க வேந்தர்களின் உடன் காலத்திலும், அவர்களுக்கடங்கிய வேந்தனாக ஆண்டு வந்தான்'

இளமைக் காலத்திலேயே கல்வியில் நாட்டங்கொண்ட இவருக்கு, சுவாமி தேவர் என்னும் மூதறிஞர் நல்லாசிரியராய் வாய்க்கப் பெற்ருர். தனக்கு ஞானாசிரியனாக விளங்கிய ஆசிரியரை இவ்வேந்தன் 'அருட் கடைக்கண் அளித்தாண்ட சுவாமி தேவன் இருதாள் அகத்துள் வைப்பாம்' என்று காசி காண்டத்திலும், 'சூழ் சுடர் ஞானத்திருவுரு அமைந்த சுவாமிதேவர்' என்று கூர்மபுராணத்திலும் சிறப்பித்துப் போற்றுகின்ருர்; நன்றிக்கடன் ஆற்றுகின்ருர்.

கி.பி. 1558 ஆம் ஆண்டு இவர் இளங்கோப் பட்டம் பெற்ருர்; கி.பி. 1564 ஆம் ஆண்டு முடிசூட்டப் பெற்ருர். கவியரசனும் புவியரசனுமாய் இவர் நாற்பதாண்டு காலம் மக்கள் நலம்பேணி கி.பி. 1604-ல் இம்மண்ணுலக வாழ்வை நீத்தார்; தமிழிலக்கிய வரலாற்றில் புதியதொரு வரலாற்றினை யாத்தார்

பாவேந்தனாகவும் பார்வேந்தனாகவும் சிறப்புற்ற இவன் கொடை வேந்தனாகவும் திகழ்ந்து வந்தான் என்பதனைத் திருநெல்வேலித் தென்காசி விசுவநாத சுவாமி கோயில் பெரிய கோபுரத்தின் வடக்குச் சுவரில் உள்ள சாசனச் செய்யுள் இவ் வேந்தன் இக் கோயிலுக்கு இனிதே வழங்கிய தானங்களை எடுத்தியம்புகிறது.

'அத்தர் தென்காசி கண்டோன் கண்ட வாலயமு
மடியாரும் வாழ்வுபெற ; வந்
தழக னதிவீர ராமன் சறுவமானிய
மதாகக் கொடுத்த படிதான்
சித்திரைப் பரணியூர்த் தொண்ட கோஷப் பொன்
திரும்பக் கொடுத்தவ் வூரிற்
செங்கோட்டையார் கொண்ட பகுதியு நிறுத்தித்
திருக்கோயிற் பகுதியாய்
வைத்ததை யறக்கழித் தாயங் கணக்குடன்
மகாசுவமி திரு நாளிடை
வந்த காணிக்கை பாட்டப் பகுதி காணம்பல்
வரியிவை யெலாங் கழித்துப்

### வரதுங்கராமப் பாண்டியன்

பராக்கிரம குலசேகர பாண்டியனுடைய இரண்டாவது மகனும், அதிவீரராமபாண்டியனது இளவலுமான இவன் கி.பி. 1588 ஆம் ஆண்டு முடிபுனைந்து கொண்டான். அதிவீரராம பாண்டியனது ஆட்சிக் காலத்திலேயே இவன் தென்பாண்டி நாட்டின் சில பகுதிகளைக் கரிவலம்வந்தநல்லூரிலிருந்து இவன் ஆட்சிபுரிந்து வந்திருத்தல் வேண்டுமென்பதனைச் சில ஆதாரங்களால் உணரலாம்.[2]

பெருவெற்றி வீரனாகத் திகழ்ந்த இவன், வில்லவனை வென்றதும், வல்லமெறிந்ததும் தென்காசிக் கல்வெட்டொன்றால் அறியப்படுகின்றது.[3] இவனிடம் தோல்வியுற்ற சேரவேந்தன் யாரென்பதும், வல்லத்ததிபதி யாரென்பதும் தெரியவில்லை. இவ்வேந்தனது முடிசூட்டு விழாவின்போது, தென்காசியில் வாழ்ந்து வந்த கவியன் கவிராயர் என்னும் புலவர் பெருமான் நாண்மங்கலமும், குடைமங்கலமும், வாண்மங்கலமும் பாடி இவ்வேந்தனைப் புகழ்ந்துள்ளார்.

### சிறப்புப் பெயர்

செந்தமிழ்ப் புலவனும், மாட்சிமிக்க ஆட்சியாளனும், சிவநெறிச் செல்வனுமான இவன், அபிராம சுந்தரேசுவரன் என்னும் சிறப்புப் பெயரினையும 'வீரபாண்டியன்' என்னும் பெயரினையும் கொண்டு விளங்கினனென்பது செப்பேட்டுச் சான்றுகளால் புலனாகின்றது.[4]

### தமிழ்ப் புலமை

அண்ணனைப் போன்று (அதிவீரராம பாண்டியன்) இப் பின்னவனும் செந்தமிழ்ப் புலமையில் ஈடு இணையற்று விளங்கினன். பேசுகின்ற பேச்சன்றி மூச்சிலும் தமிழ்மணக்கும்

---

பத்திரமாய்க் குண ராமநாதற்கு மேற்படி
பணங்கழித் தடியர் வீட்டுப்
பணமுங்கழி............த்திப்படிச் சருவமானியப்
பட்டையமு மருளி னனே'
'செந்தமிழ்'– தொகுதி. 4 – பக்கம். 120

2 Travancore Archaelogical Series, Vol. I, p. 125.

3 டி. வி. சதாசிவ பண்டாரத்தார் 'கல்வெட்டுகளால் அறியப்படும் சில தமிழ்ப் புலவர்கள்' செந்தமிழ்த் தொகுதி 29, பக்கம் 291—96.
'பற்றலர்மண் கொள்ளும் பணிந்தார்க் கரசளிக்குங்
கொற்ற முயர்க்குமறங் கூறுமே—விற்றடந் தோள்
வில்லவனை வென்று கொண்ட வீரமா றன்செழியன்
வல்லமெறிந் தானேந்து வாள்'
இப்பாடல் வாண் மங்கலத்தைச் சேர்ந்தது.

4 Travancore Archaelogical Series Vol. I, pp. 115 and 188.

இக் கவியரசு பிரமோத்தர காண்டம், கருவைக் கலித்துறை அந்தாதி, கருவைப் பதிற்றுப்பத்தந்தாதி, கருவை வெண்பா அந்தாதி ஆகிய இலக்கியங்களை ஆக்கித் தந்துள்ளான்.[1] இவனைப் பற்றிய இலக்கியங்களின் துணைகொண்டு, இவனும் தனது அண்ணனைப்போன்று சிவநேயச் செல்வனாக விளங்கினான் என்பது போதரும்.

**மக்களின் நன்மதிப்பைப் பெறுதல்**

'உடன் பிறந்தார் இருவரும் பைந்தமிழ்ப் புலமைமிக்க வேந்தர்களாகவும், கற்றோரைப் போற்றி வளர்க்கும் பெற்றியுடையோராகவுமிருந்தலால் 'காகித்திய சர்வ பௌமன்' என்னும் பட்டத்தினைப்பெறுவதற்குத் தகுதி படைத்தவராவார்' என்று வரலாற்றறிஞர் திரு. நீலகண்ட சாஸ்திரியார் குறிப்பிடுகிறார்.[2] இவ் வேந்தரிருவரும் குளங்களை வெட்டி, கோயில்களைக் கட்டி, பொதுமக்களுக்கான பல பணிகளையும் புரிந்து தொண்டு செய்ததன் விளைவாக மக்களது நம்பிக்கைக்கும் போற்றுதலுக்கும் உரியவராயினர். மக்கள் நலனே தமது நலனெனக் கொண்டு தன்னலமற்ற தொண்டுபுரிந்த இவர்கள் பொது மக்களால் போற்றப் பெற்றதிலும்,

'முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்
கிறை யென்று வைக்கப்படும்'

என்னும் குறளுக்கு இலக்கியமாகத் திகழ்ந்ததிலும் வியப்பேதுமில்லை. இவர்கள் தங்களை 'தேவபிராமண—ஸ்தாபகாச்சாரியார்' என்று சொல்லிக் கொள்வதனை விரும்பினர் என்று திரு. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியார்[3] தமது நூலில் குறிப்பிட்டுள்ளார்.

இவர்கள் தங்களது நூல்களிற் கூறியுள்ள குரு வணக்கங்களை நுண்ணிதின் ஆய்ந்து பார்க்குங்கால், அதிவீரராம பாண்டியன் சுவாமி தேவரையும், வரதுங்கராம பாண்டியன் வேம்பற்றூர் ஈசான முனிவரையும் தனது ஞானாசிரியர்களாகக் கொண்டு இருத்தல் வேண்டுமென்பது புலனாகின்றது என்று கல்வெட்டறிஞர் திரு டி. வி. சதாசிவ பண்டாரத்தார் குறிப்பிடுகின்றார்.[4]

[1] சில அறிஞர்கள் இவ்வந்தாதிகள் அதிவீரராம பாண்டியனால் இயற்றப்பட்டவையன்றென்று செப்புகின்றனர். இவ்வாறு கருதுவது பிழைபட்ட கருத்தாகுமென்று ஆராய்ச்சியறிஞர். திரு. டி. வி. சதாசிவ பண்டாரத்தார் கூறுகின்றார். 'பாண்டியர் வரலாறு' பக்கம் 221.

[2] Nilakanta Sastry, K. A. 'The Pandyan Kingdom' p. 221.

[3] Ibid. page 221.

[4] டி. வி. சதாசிவ பண்டாரத்தார் 'பாண்டியர் வரலாறு' பக்கம் 166.

**வரகுண ராமகுல சேகர பாண்டியன்**

வரதுங்க பாண்டியனுக்குப்பின் வரகுணராம குலசேகர பாண்டியன் என்பான் கி.பி. 1613-ல் முடிகவித்துக் கொண்டான். இவ் வேந்தன் முன்னவர்களுக்கு என்ன வகையில் உறவினன் என்பது புரியவில்லை. இவன் போற்றத்தக்க செயல் ஒன்றினையும் செய்ததாகத் தெரியாவிட்டாலும், இவன் அரியணையேறியது பற்றி அதிகார பூர்வமான வெட்டெழுத்துச் சான்றுகள் கிடைத் துள்ளன.

கி.பி. 1615 ஆம் ஆண்டு இவன் வேத விதிப்படி வேள்வி புரிந்தான். இதன் காரணமாகக் 'குலசேகர சோமாசிரியர்' என்னும் பெயரால் இவன் அழைக்கப்பட்டுள்ளான் என்பது மட்டும் தெரிகிறது.[1]

**வரகுணராம பாண்டிய குலசேகர தேவதீட்சதர்**

இவனைப் போலவே வரகுணராம பாண்டிய குலசேகர தேவ தீட்சதர் என்னும் மற்றொரு பாண்டியனும் வெட்டெழுத்து களில் குறிக்கப் பெறுகிறான். இவனது இவ்வெட்டெழுத்து கி.பி. 1748-ஆம் ஆண்டில் வரையப்பட்டதாகும். இவ்விரு மன்னர்களும் ஒருவரா? அல்லது இருவேறு பட்டங்களைக் கொண்ட இவர்கள் வேறுவேறு அரசர்களா? என்பது சரியாகத் தெரியவில்லை. (இதில் குறிக்கப்பட்ட ஆண்டு தவறுதலாகவும் இருக்கலாம்) திரு. நீலகண்ட சாஸ்திரியார் அவர்கள் இவ்விரு வரும் ஒருவரே என்றும், அவனது ஆட்சிக்காலம் கி.பி. 1562 முடிய நீடித்ததாகவும் கூறுகின்றார்.[2]

**அழகன் பெருமாள் சீவல—வரகுணராம பாண்டிய குலசேகர தேவர்**

திருக்குற்றாலத்திலுள்ள குத்தாலநாதசாமி கோயிலில் காணப்படுகின்ற இரண்டு செப்பேடுகள் இவ் வேந்தனைப்பற்றி குறிப்பிடுகின்றன.[3] இச் செப்பேடுகளில் சகஆண்டு 1675 ஆம்

[1] Travancore Archaelogical Series Vol. I, p. 418.

[2] 'The last of these kings, of whom we have authentic Epigraphical evidence, performed a Vedic Sacrifice in A. D. *1615* and assumed the titles Samayaji and Diksitar. He seems to have lived up to A. D. 1652.
K. A. Nilakanta Sastry 'The Pandyan Kingdom'. P. 222.

[3] *'சாலிவாகனசகாப்தம் 1675 ............ மேற்செல்லா நின்ற கொல்லம் சகத்திரிபுவகேச வீரசந்திரகுல ப்ரதிப மதுரா மகேந்திர செந்தமங்கல புரவ...... தீசுர சேமேசுர நாரசிங்க கேரள தமோதிவாகர சோளசிங்கு வடபாலன சந்தே*

ஆண்டு குறிக்கப் பெற்றுள்ளது. இது கி.பி. 1753 ஆம் ஆண்டிற்குச் சமமாகும். இவ் வேந்தன் 'இறந்த காலம் எடுத்த' (Who brought back the past) என்னும் பட்டத்தினைப் பெற்று இருந்தான். இச் செப்பேட்டினைக் கொண்டு இவன் தனது முன்னோர்களது விருதுகள் பலவற்றைப் புனைந்து கொண்டதாக அறியலாம். தென்காசிப் பாண்டியருள் இவனே இறுதி வேந்தனவான்

### மதுரை மகேந்திரர்

தென் பாண்டி நாட்டிலாண்ட சில பாண்டி வேந்தர்களது வெட்டெழுத்துகள் 'சமஸ்தபுவனைகவீரர்' என்னும் தொடக்கத்தினைக் கொண்டிருப்பதுடன் 'மதுரை மகேந்திரர்' என்றும் இவர்களைக் குறிக்கின்றது. இவ்வாறு இவர்கள் மதுரை மகேந்திரர் என்று தங்களைக் கூறிக்கொள்வதில் பொருளேதும் இருப்பதாகத் தோன்றவில்லை. ஏனெனில், ஏறத்தாழ ஒரு நூற்றாண்டு காலமாக இவர்களுக்கும் மதுரைக்கும் எவ்விதத் தொடர்புமில்லை எனத் தெரிகிறது.

### பாண்டியரின் இறுதி வீழ்ச்சி

மேற்கூறிய வேந்தர்களுடன் தென்பாண்டி நாட்டில் ஆட்சி புரிந்த பாண்டியரின் வரலாறு முற்றுப் பெறுகிறது. வரலாற்றுக் காலத்திற்கு முன்பே ஆட்சியைத் தொடங்கிவிட்ட பாண்டிய வேந்தர் ஏறத்தாழ பதினேழாம் நூற்றாண்டின் இறுதிக்காலம் வரை ஒப்புயர்வற்ற பேரரசர்களாகத் திகழ்ந்து, அண்டை வேந்தரை வென்று, தன்னடிப்படுத்திய பேராதிக்கவாதிகளாகவும், சிலகாலம் சோழர்க்கடங்கிய சிற்றரசர்களாகவும், பின்பு பார்முழுதும் ஆண்டு புகழ் பரப்பிய பேராதிக்க வேந்தர்களாகவும், சிலகாலம் முஸ்லிம் ஆட்சியில் சிக்கித்தவித்த வேந்தர்களாகவும், பின்பு விசயநகர அரசுக்கும் மதுரை நாயக்கருக்கும் கீழ்ப்படிந்த சிற்றரசர்களாகவும் ஆட்சிபுரிந்து வந்தனர்.

---

சாகித்திய சார்வபௌம தெய்வப் பிராமணஸ்தாபனசாரிய கோசடில வர்மரான திரிபுவன சக்கரவர்த்தி கோனேர்மை கொண்டான் ஸ்ரீபெருமாள் அழகன் பெருமான் இறந்தகாலமெடுத்த சேவலவரகுணராம பாண்டியகுலசேகர தேவதீக்ஷிதர்க்கு ஆண்டாவது கொல்லம் 930 வருஷம் பவருஷம் கார்த்திகை மாசம் 26-ம் தெய்தி ஆதித்ய வாரமும் உத்திர நக்ஷத்திரமும் நவமியும் ஆயுட் கரண நாம யோகமும் கெஜகரணமும் சுபயோக சுபகரணமும் பெற்ற புண்ணிய தினத்தில் சுவாமி குற்றாலநாதச் சுவாமி கோயில் சாயரட்சைக் கட்டளைக்கு.........' என்று ஒரு செப்பேடு இவனை இவன் குற்றாலநாதருக்கு சாயரட்சைக் கட்டளை அளித்ததைக் குறிப்பிடுகிறது.

இவ்வாறு பன்னெடுங்காலம் தனது ஆட்சியினைத் தமிழகத்தில் நிறுவிய பாண்டியர் எந்தக் கால சட்டத்திலும் வரலாற்று அரங்கத்தினின்றும் மறைந்து விடவில்லை. விரட்டப் படவுமில்லையென்பது குறிப்பிடத்தக்கதாகும். பல்லவர், சோழர் போன்ற அரச குலத்தினரோ சிலகாலம் வரலாற்றுப் புத்தகத்தில் இடம்பெறுமலேயே உள்ளனர். எடுத்துக் காட்டாகச் சோழர்களது வரலாற்றில் சங்ககாலச் சோழருக்குப் பின்னரும்,விசயாலய சோழ வம்சத்திற்கு முன்னருமான இடைப் பட்டகாலத்தில் சோழர்கள் முடி மன்னர்களாக இருக்கவில்லை. அவ் வம்சத்தின் தலைவர்களது பெயர்களும் வரலாறும் முழுமை யாக அறியப்படவில்லை. இம் மாதிரியானதொரு சூழ்நிலை பாண்டிய வேந்தர்களுக்கு ஒருபோதும் ஏற்படவில்லை. சோழர்கள் பாண்டிய நாட்டினைக் கைப்பற்றித் தன்னாட்டுடன் அதனை இணைத்துக் கொண்ட காலத்தும், பாண்டி வேந்தர் சிலர் சிற்றரசர்களாக ஆண்டுவந்தனர்; சமயம் நேரும் போதெல்லாம் புரட்சிக் கொடியுயர்த்தினர்; தமது தன்மானத் தையும், விடுதலை வேட்கையையும் மாற்றார்க்கு உணர்த்தினர்.

சங்க காலத் தொடக்கத்திற்கு முன்பே தமது ஆட்சியினைத் தமிழ் மண்ணிலே தொடங்கி, பதினேழாம் நூற்றாண்டின் இறுதிக்காலம் வரை ஆட்சி புரிந்து வந்த பாண்டியர், முத்தமிழைப் போற்றி வளர்த்தும், கத்தும் கடலின் பூத்த முத்தைத் தமது சொத்தாகக் கொண்டும், இறையன்பில் நாட்டங் கொண்டு இறைவர்க்கு ஆலயங்கள் பல எழுப்பியும், குடைவரைக் கோயில் பல குடைந்தும், அருங்கலைகளில் ஆர்வம் கொண்டும் மக்கள் நலங்கருதி நல்லாட்சி புரியும் வல்லவர் களாகவும் ஆட்சி புரிந்து வந்தமை குறிப்பிடத் தக்கதாகும். சங்ககாலப் பாண்டி வேந்தரைப் போன்று பிற்காலப் பாண்டி வேந்தருள் பலர், செந்தமிழ்ப் புலமை மிக்க பைந்தமிழ்ச் செல்வர்களாகத் திகழ்ந்தனர் என்பதும் பாராட்டுக்குரிய தொன்றாகும். நீண்ட நெடுங்காலம் அரசு பதவியில் வீற்றிருந்த பாண்டியர், தமிழக வரலாற்றில் தனக்கெனத் தனித்ததொரு நிலையான இடத்தினைப் பெற்றுள்ளனர். தென் பாண்டி நாட்டில் அவர்கள் மேற்கொண்ட பொதுப்பணி நடவடிக்கைகள் என்றென்றும் எண்ணியெண்ணி வியக்கத்தக்கனவாகும். அண்மைக் காலத்தில் இராமநாதபுர மாவட்டத்தின்கண் கண்டு பிடிக்கப்பட்ட பாண்டியர் காலக் கேணிகள், அவர்கள் நீர்ப் பாசனத்தினை விரிவுபடுத்த மேற்கொண்ட அரும்பணிகளை நமக்கு நினைவூட்டுகின்றன.

**ஒரே தமிழராட்சி**

தென்காசிப் பாண்டியரது ஆட்சிக் காலத்தில் தமிழகம் முழுவதிலும் தமிழரின் ஆட்சி அகற்றப்பட்டு, பிற இனத்தவரின் ஆட்சியே நடைபெற்றது. தமிழகம் முழுமையிலும் பிற வேந்தரது ஆட்சி நிலைபெற்றிருந்தபோழ்து தமிழகத்தின் தென் பகுதியான தென்காசியில் மட்டுமாவது தமிழரான பாண்டிய சிற்றரசரது ஆட்சி நடைபெற்றது என்பது பெருமைக்குரிய செய்தியேயாகும். தென்காசிப் பாண்டியர் பேரரசினை நிறுவிய பேராதிக்கவாதிகளாக இல்லாவிடினும், தமிழையும், தமிழ்ப் பண்பாட்டினையும், தமிழர் கலையினையும் போற்றிப் புரந்தனர் என்பது ஈண்டு குறிப்பிடத் தக்கது.



பாண்டிய நாட்டுப் போர்க்களங்கள்
அரபிக் கடல்
வங்காள விரிகுடா
இந்துப் பெருங்கடல்
பல்லவ அரசு
தெள்ளாறு
மகாபலிபுரம்
சேந்தமங்கலம்
காவிரிப்பூம் பட்டினம்
திருப்புறம்பியம்
குடந்தை
உறையூர்
கொடுமுடி
சித்தன்னவாசல்
தலையாலங் கானம்
பொன்னமராவதி
மதுரை
இராமேசுவரம்
கொற்கை
நெட்டூர்
விழிஞம்
குமரி


படம்—1


பாண்டிய நாட்டுத்
துறைமுகங்கள்
காவிரி
வைகை
சாலியூர்
தொண்டி
வங்கக்
கடல்
அரபிக் கடல்
மருங்கூர்
தாமிரபரணி
கொற்கை
காயல்
விழிஞம்
குமரி
இந்துப் பெருங் கடல்

படம்—2


மாலிக்காபூர்
படையெழுச்சியின் வழி
(ROUTE)
தேவகிரி
துவாரசமுத்திரம்
வாரங்கல்
போசளர்
காஞ்சி
வங்காள
விரிகுடா
தோப்பூர்
சிதம்பரம்
கங்கை கொண்ட
சோழபுரம்
கண்ணனூர்
ஸ்ரீரங்கம்
தஞ்சாவூர்
மாபார்
பாண்டியர்
மதுரை
இராமேசுவரம்
அரபிக் கடல்
குமரி
படையெழுச்சியின்
வழி
இந்துப் பெருங் கடல்
SCALE - 1:30000000

படம்—8


வாரங்கல்
வெங்கி
கடப்பா
நெல்லூர்
காஞ்சீபுரம்
மல்லை
கருவூர்
திருவேடகம்
பொன்னமராவதி
மதுரை
அநுராதபுரம்
வங்கக் கடல்
அரபிக் கடல்
இந்துப் பெருங்கடல்
முதலாம் சடையவர்மன்
சுந்தரபாண்டியனின் பேரரசு
பேரரசின் எல்லை

படம்—4


கி.பி. 9 ஆம் நூறருண்டில்
பாண்டியப் பேரரசு
மரக்காணம்
சேந்தமங்கலம்
சிதம்பரம்
கொங்கு
சீரங்கம்
உறையூர்
தஞ்சை
நாகப்பட்டினம்
திருப்பத்தூர்
மதுரை
தொண்டி
சேரர்
அரபிக்கடல்
வங்காள
விரிகுடா
தென்காசி
திருநெல்வேலி
கொற்கை
காயல்
திருச்செந்தூர்
கோட்டாறு
குமரி
உத்தேசமான எல்லை
இந்துப் பெருங் கடல்
SCALE

படம்—5

பாண்டியநாடு - (எல்லைகள்)

பழனி
திண்டுக்கல்
புதுக்கோட்டை
வேதாரண்யம்
கொடைக்கானல்
திருப்பத்தூர்
அறந்தாங்கி
மேலூர்
மதுரை
சிவகங்கை
தொண்டி
பாண்டியநாடு
வங்கக் கடல்
வைகை
அருப்புக்கோட்டை
சாத்தூர்
இராமநாதபுரம்
வைப்பாறு
கோவில்பட்டி
தென்காசி
தாமிரபரணி
திருநெல்வேலி
தூத்துக்குடி
ஸ்ரீவைகுண்டம்
திருச்செந்தூர்
குலசேகரப்பட்டினம்
குமரிமுனை
அரபிக் கடல்
கேரளநாடு

படம்—8


சங்க காலத்
தமிழகம்
வட பெண்ணை
வேங்கட மலை
அருவா வடதலை
பாலாறு
மாமல்லபுரம்
அருவா நாடு
தென் பெண்ணை
கோசர்
நீலகிரி
கொங்கு நாடு
காவிரிப்பூம்
பட்டினம்
ஆனைமலை
முசிறி
வஞ்சி
மதுரை
திருப்பரங்குன்றம்
குமரி
இந்துப் பெருங் கடல்
ஈழம்

படம்—7

# பிற்சேர்க்கை

## முச்சங்க வரலாற்றைத் தெரிவிக்கும் ஒரு பழைய பாடல்

"வேங்கடங் குமரி தீம்புனற் பௌவத்து
இந்நான் கெல்லையின் இருந்தமிழ் பயின்ற
செந்நாப் புலவர் செய்தி யீண்டுரைப்பின்,"

### தலைச் சங்கம்

ஆடகக் குடுமி மாடக் கூடலின்
முன்னர்ச் சங்கக் கன்மாப் பலகையில்
திரிபுர மெரித்த விரிசடைக் கடவுள்
மன்றன் மராத்தார்க் குன்றெறி யிளஞ்சேய்
திண்டிறற் புலமைக் குண்டிகைக் குறுமுனி
புவிபுகழ் மருதங் கவினிய முரஞ்சிப்
பதி முடி நாகன் நதியின் கிழவன்
இனையர் நானூற் றுநாற் பத்தொன் பதின்மர்
அனையர் நாலுன் காயிர நூற்றொடு
நாற்பத் தொன்பதின்மர் பார்க்கிற் செந்தமிழோர்
புரிந்தன செய்யுட் பெரும்பரி பாடலும்
முதுமை யடுத்த நாரையுங் குருகும்
கதியுறச் செய்த களரியா விரையும்
ஆங்கவ ரிருந்ததும் அத்தொகை யாகும்
ஈங்கிவர் தம்மை யிரீஇய பாண்டியர்கள்
காய்சின வழுதிமுதற் கடுங்கோ னீறு
ஏசி லாவகை யெண்பத் தொன்பதின்மர்
கவியரங் கேறினு ரெழுவ ராகும்
மகத்துவ முடைய அகத்தியம் இலக்கணம்

### இடைச் சங்கம்

வடுவறு காட்சி நடுவட் சங்கத்து
அகத்தியர் தொல்காப்பியத் தமிழ் முனிவர்
இருந்தை யூரிற் கருங்கோழி மோசியார்
எள்ளாப் புலமை வெள்ளூர்க் காப்பியன்
இறவா இசையிற் சிறுபாண்ட் ரங்கன்
தேசிக மதுரை யாசிரியன் மாறன்

தவரொப் பாப துவரைக் கோமான்
தேருங் கவிபுனை கீரந்தை யாரிவர்
ஒன்ப தோடுத்த வைம்பதின்ம ராகும்
தவலருங் கேள்வித் தன்மைய ருள்ளிட்டு
இவர்மூ வாயிரத் தெழுநூற் றுவரே
வையகம் பரவச் செய்த செய்யுளும்
இருங்கலிக்கடிந்த பெருங்கலித் தொகையொடு
குருகு வெண்டாளி தெருள் வியாழமாலை
அங்நா ளிலக்கணம் அகத்திய மதனொடு
பின்னாட் செய்த பிறங்கு தொல்காப்பியம்
மதிநலங் கனின்ற மாபுராணம்
புதுநலங் கனிந்த பூத புராணம்
வல்லிதி னுணர்ந்த நல்லிசை நுணுக்கம்
தாவாக் காலம் தமிழ்பயின் றதுவும்
மூவா யிரத்தோ டெழுநூற் றியாண்டு
பரீஇய சங்கம் இரீஇய பாண்டியர்கள்
வெண்டேர்ச் செழியன் முதலா விறல்கெழு
திண்டேர்க் கொற்ற முடத்திரு மாறன்
முரசுடைத் தானை மூவா வந்தம்
அரசுநிலை யிட்டோ ரைம்பத் தொன் பதின்மர்
இவ்வகை யரசரிற் கவியரங் கேறினர்
ஐவகை யரச ராயிடைச் சங்கம்
விண்ணகம் பரவு மேதகு கீர்த்திக்
கண்ணகன் பரப்பிற் கபாட புர மென்ப.

### கடைச் சங்கம்

அருங்கடைச் சங்க மிருந்தோர் யாரெனிற்
சிறுமே தாவியார் சேந்தம் பூதனார்
அறிவுடை யரனார் பெருங்குன் றூர்கிழார்
பாடல் சான்ற விளந்திரு மாறன்
கூடலா சிரியர் நல்லந் துவனார்
பரவுதமிழ் மதுரை மருதனிள நாகர்
அவிர்கணக் காயர் நவினக் கீரர்
கீரங் கொற்றர் கிளர்தே னூர்கிழார்
ஒருங் கலைமண லூரா சிரியர்
நல்லூர்ப் புளியங் காய்ப்பெருஞ் சேந்தர்
செல்லூ ராசிரியர் முண்டம் பெருங்குமரர்
முசிறியா சிரியர் நில கண்டனார்
அசை விரி குன்றத் தாசிரிய ரன்றி
நாத்தலங் கனிக்குஞ் உப்பூரி குடிகிழார்

உருத்திர சன்மர் மருத்துவ ராகிய
நாம நாற்கலைத் தாமோ தரனார்
மாதவளனாரோ டோதுமிள நாகர்
கடியுங் காமப் படியங் கொற்றனார்
அருஞ் செய லூர்வாழ் பெருஞ்சுவ னாருடன்
புவி புகழ் புலமைக் கபிலர் பரணர்
இன்னாத் தடிந்த நன்னாக ரன்றியும்
ஒல்காப் பெருமைத் தொல்காப் பியத்துக்
குடையிடை யிட்ட விரகர் கல்லாடர்
பேர்மூல முணரு மாமூலர் தம்மொடு
விச்சை கற்றிடு நச்செள்ளை யார்மூலம்
தேனாற் றெடுப்பச் செந்தமிழ் பகர்ந்தோர்
நானூற் றுவர்முத னாற்பத்தொன் பதின்மர்

### கடைச்சங்க நூற்கள்

பீடுபெற வுலகிற் பாடிய செய்யுள்
முத்தொள் ளாயிர நற்றிணை நெடுந்தொகை
அகநா னூறு புறநா னூறு
குறுந்தொகை சிற்றிசை பேரிசை வரியோ
டறம்புகல் பதிற்றுப்பத் தைம்பதோ டிருபான்
பெரும் பரி பாடலுங் குறுங்கலி நூற்றைம்
பதுமுத லாகிய நவையறுங் கலைகள்
அக்கா லத்தவர்க் ககத்திய மதனொடு
மிக்கா மிலக்கணம் விளங்கு தொல் காப்பியம்
எண்ணூற் றைம்பது வருட மென்ப
இடர்ப் படா திவர்களைச் சங்க மிரீஇயினார்
முடத்திரு மாறன் முதலா வுக்கிரப்
பெருவழுதி யீறாப் பிறங்கு பாண்டிய
நரபதி களாகு நாற்பத் தொன் பதின்மர்
இவருட் கவியரங் கேறினர் மூவர்
புவியிற் சங்கம் புகழ்படு மதுரை

### உரை தோன்றக் காரணம்

ஆதிமுச் சங்கத் தருந்தமிழ்க் கவிஞர்
ஓதிய செய்யு ளுலவாப் பெரும் பொருள்
வாளாக் கேட்டுந் தோளாச் செவிக்கும்
கேட்டுத் தெரியாத வோட்டை நெஞ் சினுக்கும்
நுழையா வாதலி னுழைபுலன் தன்னொடும்
விழைவார்க் குரைக்க வேண்டுவர் தெரிந்தே

## முச்சங்கப் புலவர்கள்

### முதற் சங்கம்

| | |
|---|---|
| இடம் : | கூடல் |
| புலவர்கள் : | திரிபுரமெரித்த விரிசடைக் கடவுள் |
| | இளஞ்சேய் |
| | குண்டிகைக் குறுமுனி (அகத்தியன்) |
| | முரஞ்சிப்பதி முடிநாகன் |
| | நதியின் கிழவன் |
| செய்யுள் நூல்கள் : | பரிபாடல் |
| | முதுநாரை |
| | முதுகுருகு |
| | களரியாவிரை |
| இலக்கணம் : | அகத்தியம் |
| இரீஇய பாண்டியர்கள் : | காய்சினவழுதி முதல் கடுங்கோன் வரை 89 பேர் |
| கவியரங் கேறியவர்கள் : | 7 பேர் |

### இடைச் சங்கம்

| | |
|---|---|
| இடம் : | கபாட புரம் |
| புலவர்கள் : | அகத்தியர் |
| | தொல்காப்பியர் |
| | இருந்தையூர்க் கருங்கோழி மோசியார் |
| | வெள்ளூர்க் காப்பியன் |
| | சிறு பாண்டரங்கன் |
| | மதுரையாசிரியன் மாறன் |
| | துவரைக் கோமான் |
| | கீரந்தையார் |
| செய்யுள் நூல்கள் : | கலித்தொகை |
| | குருகு |
| | வெண்டாளி |
| | வியாழமாலை |
| இலக்கணம் : | அகத்தியம் |
| | தொல்காப்பியம் |
| | மாபுராணம் |
| | பூதபுராணம் |
| | இசை நுணுக்கம் |

இரீஇய பாண்டியர்கள் : வெண்டேர்ச் செழியன் முதல் முடத் திருமாறன் வரை 50 பேர்

கவியரங் கேறியவர்கள் : 5 பேர்

**கடைச்சங்கம்**

இடம் : வடமதுரை (இன்றைய மதுரை)

புலவர்கள் : சிறு மேதாவியார்
சேந்தம் பூதன்
அரனார்
பெருங்குன்றூர் கிழார்
இளம் திருமாறன்
கூடலாசிரியர் நல்லந்துவனார்
மதுரை மருதனின் நாகன்
கணக்காயர்
நக்கீரர்
கீரன் கொற்றன்
தேனூர் கிழார்
மணலூர் ஆசிரியர்
நல்லூர்ப் புளியங்காய் பெருஞ் சேந்தர்
செல்லூர் ஆசிரியர் முண்டம் பெருங் குமரர்
முசிறி ஆசிரியர் நீலகண்டனார்
குன்றத் தாசிரியர்
சித்தலைச் சாத்தர்
உப்பூரிகுடி கிழார் உருத்திரசன்மர்
மருத்துவர் தாமோதரனார்
மாத வளனார்
இள நாகர்
படியங் கொற்றனார்
செயலூர் பெருஞ்சுவனார்
கபிலர்
பரணர்
நன் கனார்
கல்லாடனார்
மாமூலனார்
நச்செள்ளையார்

செய்யுள் நூல்கள் : முத்தொள்ளாயிரம்
நற்றிணை
நெடுந் தொகை

அகநானூறு
குறுந் தொகை
சிற்றிசை
பேரிசை
வரி
பதிற்றுப் பத்து
இருபது பரிபாடல்
குறுங்கலி நூற்றைம்பது

இலக்கணம் : அகத்தியம்
தொல்காப்பியம்

இரீஇய பாண்டியர்கள் } : முடத்திரு மாறன் முதல் உக்கிரப் பெருவழுதி ஈறாக 49 பேர்

கவியரங் கேறியவர்கள் } : 3 பேர்

## தளவாய்புரச் சாசனம்—தமிழ்ப் பகுதி

ஓங்குதிரை வியன்பரப்பில் உததிஆ லயமாகத்
தேங்கமழ் மலர்நெடுங்கட் டிசைமகளிர் மெய்காப்ப
விண்ணெண் பெயரெய்திய மேகஜாலி விதானத்தின்
தண்ணிழற்கீழ் ஸகஸ்ரபண மணிகிரணம் விளக்கமைப்ப
புஜங்கம புரஸ்ஸர போகிஎன்னும் பொங்கணை
மீமிசைப் பயந்தரு தும்புரு நாரதர்
பனுவ னரப்பிசை செவியுறப் பூதல
மகளொடு பூமகள் பாதஸ்பரி சனை செய்யக்
கண்படுத்த கார்வண்ணன் திண்படைமால் ஸ்ரீபூபதி
ஆதிபுருஷன் அமரநாயகன் அழகமைநாபி மண்டலத்துச்
சோதிமரகத துளைத்தாட் சுடற்பொற் றாமரைமலர்மிசை
விளைவுறு களம கணிசமென மிளிர்ந்திலங்கு
சடைமுடியொ டளவியன்ற கமண்டலுவொ டக்ஷமாலை
யொடு தோன்றின
சதுர்ப்புஜன் சதுர்வக்த்ரன் சதுர்த்வயாக்ஷன்
மதுகமழ்மலர்க் கமலயோனி மனந்தந்த மாமுனிஅத்ரி
அருமரபிற் பலகாலந் தவஞ்செய்வுழி அவன்கண்ணில்
இருள்பருகும் பெருஞ்சோதி இந்துகிரணன் வெளிப்
பட்டனன்
மற்றவற்கு மகனாகிய மணிநீள்முடிப் புதனுக்குக்
கற்றைச்செங் கதிர்க்கடவுள் வழிவந்த கழல்வேந்தன்
ஏந்தெழிற்றோள் இளனெருநா ளீசனது சாபமெய்திப்
பூந்தளவ மணிமுறுவற் பொன்னாகிய பொன்வயிற்றுள்

போர்வேந்தர் தலைபணிப்ப வந்துதோன்றிய புரூரவற்பின்
பார் வேந்த ரேனைப்பலரும் பார்காவல். பூண்டுயத்தபின்
திசையானையின் கும்பகூடத் துலவியசெழு மசரக்குலம்
விசையொடு வின்மீனெடு போர்மிக்கெழுந்த கடற்றிரைகள்
சென்றுதன் சேவடிப்பணிய அன்றுநின்ற ஒருவன்பின்
விஞ்சத்தின் விஜ்ரும்பணையும் பெறல்நகுஷன் மதவிலாசமும்
வஞ்சத்தொழில் வாதாவி சிராவியும் மகோததிகளின்
சுருங்காத பெருந்தன்மையும் சுகேதுசுதை சுந்தரதையும்
ஒருங்குமுன்னாள் மடிவித்த சிறுமேனி உயர்தவத்தோன்
மடலவிழ்பூ மலயத்து மாமுனி புரோசிதனைக்
கடல்கடைந்து அமிர்துகொண்டுங் கயலிணைவட வரைப்
பொறித்தும்
ஹரிஹயன தாரம்பூண்டு மவன்முடியொடு வளைஉடைத்தும்
விரிகடலை வேலின்மீட்டும் தேவாசுரர்ச் செருவென்றும்
அகத்தியனொடு தமிழாய்ந்தும் மிகத்திறனுடை வேங்
தழித்தும்
தசவதனன் சார்பாகச் சந்துசெய்தும் தார்த்தராஷ்ட்ரர்
படைமுழுதும் களத்தவிப் பாரதத்துப் பகடோட்டியும்
மடைமிகுவேல் வானரத்வஜன் வசுசாப மகல்வித்தும்
அரிச்சந்த்ர னகரழித்தவன் பரிச்சந்தம் பலகவர்ந்தும்
நாற்கடலொரு பகலாடி நாற்கோடிபொன் னியதிங்கி
நூற்கடலைக் கரைகண்டு நோன்பகடா யிரம்வழங்கியும்
உரம்போந்த திண்டோளரைசுகள் சுரம்போகித் துறக்க
மெய்தியும்
பொன்னிமையப் பொருப்பதனில் கன்னிமையிற் கயலெழு
தியும்
பாயல்மீ மிசைநிமிர்ந்து பல்லுண்டி விருப்புற்றும்
காயல்பாய் கடல்போலக் குளம்பலவின் கரையுயரியும்
மன்னெதிரா வகைவென்று தென்மதுரா புரஞ்செய்தும்
அங்கதனி லருந்தமிழ்நற் சங்கம் இரீஇத் தமிழ்வளர்த்தும்
ஆலங்கானத் தமர்வென்று ஞாலங்காவல் நன்கெய்தியும்
கடிஞாறு கவினலங்கற் களப்பாழர் குலங்களைந்தும்
முடிசூடிய முரண்மன்னர் ஏனைப்பலரு முன்னிகந்தபின்
இடையாறையும் எழில்வெண்பைக் குடியிலும்வெல் கொடி
எடுத்த
குடைவேந்தன் றிருக்குலத்துக் கோமன்னர் பலர்கழிந்தபின்
காடவனைக் கருவூரில் கால்கலங்கக் களிறுதைத்த
கூடலர்கோன் ஸ்ரீபராந்தகன் குரைகழற்கோச் சடையற்குச்
சேயாகி வெளிப்பட்ட செங்கண்மால் ஸ்ரீவல்லபன்
வேய்போலுந்தோளியர் கேள் வித்யாதர ஹிரண்யகர்ப்பன்

குண்ணூரி லமர்வென்றுங் குரைகடலீ ழங்கொண்டும்
விண்ணுள வில்லவற்கு விழிஞத்து விடைகொடுத்தும்
காடவனைக் கடலாணூர்ப் பீடழியப் பின்னின்றும்
குடகுட்டுவர் குணசோழர் தென்கூபகர் வடபுலவர்
அடலழிந்து களஞ்சேர அமர்வல்லான் மகன்படத்தன்
களிறொன்று வண்குடந்தைக் கதிகாட்டி யம்புரசிலன்
ஒளிநிலைவேல் உபாயபஹுலன் உம்பர்வான் உலகணைந்தபின்
மற்றவற்கு மகனாகிய கொற்றவனெங் கோவரகுணன்
பிள்ளைப் பிறைச் சடைக்கணிந்த பினாகபாணி எம்பெருமானை
உள்ளத்தி லினிதிருவி உலகங்காக் கின்றநாளில்
அரவரைசன் பல்லூழி ஆயிரமா யிருந்தலையால்
பெரிதரிதின் பொறுக்கின்ற பெரும்பொறைமண் மகளைத்தன்
தொடித்தோளி லெளிது தாங்கிய தொண்டியர்கோன் துளக்கில்லி
வடிப்படைமா னாபரணன் திருமகன் மயிலையர்கோன்
பொத்தப்பிக் குலச்சோழன் புகழ்தரு சிரீகண்டராசன்
மத்தமா மலைவலவன் மணிமக ளக்களநிம்மடி
திருவயிறு கருவுயிர்த்த ஸ்ரீ பராந்தக மகாராஜன்
விரைபரித்தேர் வீரநாரணன் முன்பிறந்த வேல்வேந்தனைச்
செந்தாமரை மலர்ப்பழனச் செங்கிலந்தைச் செருவென்றும்
கொந்தார்பூங் பொழிற்குன்றையும் குடகொங்கிலும் பொக்கரணியும்
தென்மாயலுஞ் செழுவெண்கையும் பராந்தகனதுஞ் சிலைச்செதிர்ந்த
மன்மாய மாமிகுத்தவர் வஸ்துவா கனம்கொண்டும்
ஆறுபல தலைகண்டும் அமராலயம் பல செய்தும்
சேறுபடு வியன்கழனித் தென்விழிஞ நகர்கொண்டும்
கொங்கினின்று தேனூரளவுங் குடகொங்க ருடல்மடிய
வெங்கதிர்வேல் வலங்கொண்டும் வீரதுங்கனைக் குசைகொண்டும்
எண்ணிறந்த பிரமதேயமும் எண்ணிறந்த தேவதானமும்
எண்ணிறந்த தடாகங்களும் இருநிலத்தி லியற்றுவித்தும்
நின்றபெரும் புகழாலும் நிதிவழங்கு கொடையாலும்
வென்றிப் போர்த் திருவாலும் வெல்வேந்தரில் மேம்பட்ட
கதிரார்கடுஞ் சுடரிலைவேல் கலிப்பகை கண்டருள்கண்டன்
மதுராபுர பரமேச்வரன் மாநிமகர கேதனன்தன்
செங்கோல்யாண்டு நாற்பதின்மேல் மூன்றா மூர்யாண்டில்
பொன்சிறுகா மணிமாடப் புரந்தரனது நகர்போன்ற
களக்குடிநா டதனிற்படும் பிரமதேயம் கன்னிடக்கைத்
தேசமலி திருமங்கல மிதுபண்டு பெருநல்லூர்ப்

படுவதனைப் பாங்கமைந்த குடிகளது காராண்மை
மோடெழுந்த முதுகொம்பர்க் கோடெழுந்து கிடந்ததனைக்
கற்றறிந்தோர் திறல்பரவக் களப்பாழரைக் களைகட்ட
மற்றிரடோண் மாக்கடுங்கோன் மானம் பேர்த்
தருளியகோன்

ஒன்றுமொழிந் திரண்டோம்பி ஒருமுத்தீ யுள்பட்டு
நன்றுநான் மறைபேணி ஐவேள்வி நலம்படுத்து
அறுதொழில்கள் மேம்பட்ட மறையோர்பன் னிருவர்க்குக்
காராண்மை மீயாட்சி உள்ளடங்கக் கண்டமைத்துச்
செப்பேடுசெய்து கொடுத்தருளினன் தேர்வேந்த! நின்குல
முதல்வன்

மைப்படுகண் மடமகளிர் மதவேள் மனுசமானன்
வழுவாத செங்கோனடவி மண்மகட்கொரு கோவாகிக்
கழுதூரில் சித்திசெய்த கடிக்கூட னகர்காவலன்

சோமாசி குறிச்சியிது தொல்லைமேற்படி கிடந்ததனை சோமபாந மனோசுத்த ராகிய காடகஸ் ஸோமயாஜியார்க்கு ஏகபோகமதுவாக எழிற்செப்பேட்டொடு கொடுத்தனன் ஆகிய இவ்வூரிரண்டின் செப்பேடு மறக்கேட்டில் இழந்துபோயின வென்றும் ஏதமில் சோமாசிகுறிச்சிச் செழுந்தகைய நிலத்துப் படும் நிலத்தைக் கடற்றிருக்கை கிழவன் மதிதரு பெருநான் கெல்லை இட்டுக்கொண்டு மற்றதனை மதுரதர நல்லூரென்று பெயரிட்டுக் குடிநிலனாகக் கொண்ட நிலமதுவும் அவன் குடிநிலனைை தவிர்ந்து தொண்டு சோமாசிகுறிச்சி மேலைபுர வேறப் பெறுவதென்றும் சொல்லிய ஊரிரண்டும் தம்மிலெல்லை கலந்து கிடக்குமாதலில் ஒன்றாக வுடன்கூட்டிப் புரவெழுதிப் பிடிசூழ்ந்து நன்றாகிய சாசனஞ்செய்து நன்கருள வேண்டு மென்றும் வாசநாள்மலர் கமழ்பொழில் ஆசிநாட்டுள் அக்ரமாகிய கருவமைந்த கனகமாளிகை திருமங்கல நகர்த் தோன்றல் சோமாசிகுறிச்சியென்னும் காமர்வண் பதிகாவலன் வடிவமை வானகோத்ரத்து பௌதாயன கல்பத்துக் குடிவிளங்க வெளிப்பட்ட குணகணங்கட் கிடமாகி மறைநான்கின் றுறை போகிய மாயாநம்பி பட்டற்குச் சிறுவனாகிய பெருந்தகையின் திசைமுகன்வெளிப் பட்டனையோன் தர்மவத்ஸலன் அதர்ம கோபி மாயாநாராயண பட்டர் மகாபன்னி வயிறுயிர்த்த சேயான திருத்தகையின் ஸ்ரீநாராயணங் கேசவன் கல்விக் கடல் கரை கண்டும் க்ஷத்ரியாநு மதமுணர்ந்து சொல்வித்தகம் தனதாக்கி சுத்தசீலாசாரனாகி மீனவன் வீரநாரணற்கு விச்வாச கர்மங்கட்கான தன்மையனாதலில் அருளறிந்து விண்ணப் பஞ்செய மதுரதரநல்லூரென்னும் வளம்பதி சோமாசி குறிச்சி

அதன்மேலே புரவேற்றி ஆங்கதுவும் திருமங்கலமும் உடன்கூடப் பிடிசூழ்வித்து உலகறியக் கொடுத்தருளினன்.

வடம்கூடு முலைமகளிர் மன்மதவேள் மனுசரிதன்
மற்றிதனுக் காணத்தி வண்டமிழ்க்கோ னதிகாரி
பொற்றடம்பூண் மணிமார்பன் பொழிற்புல்லூ ரெழிற் பூசுரன்
செய்யுந்து புனற்செருவின் செங்கழுநீர் மலர்படுகர்
வைகுந்த வளநாடன் வாத்ஸ கோத்ர சூடாமணி
ஹரிசரண கமலசேகரன் ஆயிரத் தைஞ் ஞாற்றுவன்
திருமகி ழிளையானக்கன் திசைநிறை பெரும்புகழாளன்
புவனதலம் புகழுநிதி அவனிசுர குலதிலகன்
தாதலர்பூம் பொழில்தழுவிச் சாலிவிளை வயவளத்தால்
மேதகுபுகழ் வேண்புநாட்டு பெருந்தூவெள்ளி யெனப் பெயரிய
திருந்துபதிக் குடித்தலைவன் தென்னவன்திரு வருள்சூடிய
பெருந்தூவெள்ளி கிழவனாகிய பெருந்தகை சேந்தங்கிழவன்
நலமலிசிர் நடுவுநிலை நன்குநா யகனாகவும்
அலர்கமழும் பொன்னளற்று நாட்டுக் கக்கிரமாகிய
முகில்தோய்பொழில் முசுக்குறிச்சி முற்குடிப்பிறேனார் கான்முளை
அகனிலத்தோர் புகழளற்று நாட்டுக்கோன் அருந்தமிழின்
பாத்தொகுபொருள் பயனுணர்வோன் கொடைபயில் கற்பகசீலன்
சாத்தம்படார னெனப்பெயரிய தக்கோன் மிக்கோங்கு
கார்வயல்சூழ் களாத்திருகைப் பேரரண்சூழ் பெருங்காக்கூர்த்
தலையாகிய குலக்குருசில் தகுதேய மாணிக்கம்
கலைபயில் கிழவங்கோனும் கணக்குநூல்பயில் கணக்க ராகவும்
மாசில்வான் குடித்தோன்றி ஆசிநாட்டு நாட்டாரும்
மச்சுறுவளம் அணவிவேந்த னேச்சுரநாட்டு நாட்டாரும்
உடனாகின் றெல்லைகாட்டப் பிடிசூழ்ந்த பெருநான்கெல்லை
யிமெலலலை.

## தளவாய்புரச் செப்பேட்டில் காணப்படுகிற பாண்டியர் பரம்பரை

(சம்ஸ்கிருதப் பகுதி)

பராந்தகன்
↓
மாறன் (மாறவர்மன்)
(கேரளனையும் சிங்களனையும் வென்றான் தேவனை (?) வென்றான்)
↓
→ வரகுணன்
→ வீரநாராயணன் (இவன் தாய் அக்களநிம்மடி 45 ஆட்சியாண்டில் ஸ்ரீவல்லபமங்கலத்தைத் தானம் செய்தான்)

(தமிழ்ப் பகுதி)

ஸ்ரீ பராந்தகன் கோச்சடையன்
(கருவூரில் காடவனை யானைப் படையால் வென்றான்)
↓
ஸ்ரீவல்லபன்
(குண்ணூரிலும் ஈழத்திலும் போர் வென்றான். விழிஞத்தில் சேரனை வென்றான். காடவனைக் கடலானூரில் வென்றான். அமர்வல்லான் மகனைக் குடந்தைப் போரில் வென்றான்)
↓
→ வரகுணன் (சிவபக்தன்)
→ ஸ்ரீபராந்தக மகாராசன் வீரநாராயணன் (அக்களநிம்மடி இவனுடைய தாய். தன் தமையனைச் செந்நிலப்போரில் வென்றான். குன்றை, குடகொங்கு, பொக்கரணி, தென்மாயல், வெண்பை, பராந்தகன் (?) போர்களில் வெற்றி கொண்டான். விழிஞ நகரைக் கைப்பற்றினான். கொங்கு முதல் தேனூரையும் கொங்கரையும் அடக்கினான். வீரதுங்கனைக் குசை கொண்டான். 45 ஆம் ஆட்சியாண்டில் இச் செப்பேட்டை வழங்கினான்.)

## சிவகாசிச் சாசனம்

### தமிழ்ப் பகுதி

சந்திரனது வழித்தோன்றிஇத் தராமண்டல முழுதாண்டு
பண்டிந்திரன்முடி வளையுடைத்தும் இமயத்துக் கயலெழுதியும்
ஆனையாயிர மையமிட்டும் அகத்தியனொடு தமிழ் தெரிந்தும்
வானவர்க்குத் தூதுசென்றும் மால்கடலின் வரவுமாற்றியும்
ஈண்டியவக் கடல்கடைந்தும் இன்னனபல திறல்செய்த
பாண்டியபர[1] மேச்வரராள் பரம்பரையில் வந்துதோன்றினன்
மன்னவர்கோன் இராசமல்லன் மணிமுடியுமா ஞபரணன்
தென்னவர்கோன் மற்றவற்குச் சேரலன்றன் மடப்பாவை
சீர்திகழு மணிபயிலிச் செழுநிலந்தொழ வெளிப்பட்ட
வீரகேரளன் வீரபாண்டியன் விநயகஞ்சுகன்
தன்னுடைய குலம்விளங்கத் தன்னுடைய தமிழ்க்கூடலில்
மன்னியமணி முடிகவித்து மகாபிஷேக மகிழ்ந்தநாளில்
மேதகு சாசனச் சுலோகம் விதிகிடந்தவா செய்யவல்ல
பூசுரமத் திவன்னது தன் பூம்பொருநம் புடைவர்க்கும்
சீர்திகழ்தரு முள்ளிநாட்டுத் தென்வீரதர மங்கலத்து
ஏர்திகழும் தன்மை ராதிதர கோத்திரத்தில்
அளப்பரிய பேரொழுக்கத் தாச்வலாயன சூத்திரத்து
விளக்கமுற வந்துதோன்றி விப்ரர்க்கோர் விளக்காயின
ஒருதன்மை யிருபிறப்பில் முச்செந்தீ நால்வேதத்து
அருமரபில் ஐவேள்வி ஆறங்கத் தந்தணாளன்
கோவிந்தஸ்வாமி பட்டர்க்குச் சோமாசிதன் குலவரவில்
வாசுதேவ பீதாம்பர பட்டனென்ற மறைவாழ்நனை
மதித்தருளி நீசெய்கென மற்றவனு மனமகிழ்ந்து
விதித்தமைத்த அநுஷ்டுப்பின் விழுப்பநோக்கி மிகமகிழ்ந்து

பாண்டிய வம்சத்தில்

↓

தீவிர கோபன்

↓

ஸ்ரீ வல்லபன்

↓

மானகுலாசலன்

↓

மானுபரணன்

(தென்னவர்கோன், ராசமல்லன், கேரள அரசனான ரவியின் மகளை மணந்தவன்.)

↓

சுந்தரபாண்டியன் (அறிஞர்களின் புகலிடம்)

வீரபாண்டியன் (கேரள மன்னனான ரவியினுடைய மகள் இவன் தாய் ஆவள்) (வீரகேரளன், விநய கஞ்சுகன், விசால சீலன்)

## பாண்டியர் செய்த அருஞ்செயல்கள்

மேற்கூறப்பட்ட, மனித ஆற்றலுக்கு அப்பாற்பட்டதாகச் சில சமயங்களில் நம்பவியலாத செயற்கரிய செயல்களைப்பற்றிக் குறிப்பிடும் பாண்டியரது செப்பேடுகள் பாண்டியர்கள் செய்த அரும்பெரும் செயல்கள்பற்றியும் குறிப்பிடுகின்றன. அவற்றுள் சிலவற்றினை ஈண்டுகாண்போம்.

(1) இந்தியாவிற்கோர் அரணாகத் திகழ்ந்துவரும் இமய மலையின் உச்சியிலுள்ள பாறைமீது பாண்டியவேந்தன் தனது வெற்றியின் அறிகுறியாக அரச முத்திரையான இணைக்கயலைப் பொருத்து மீண்டான்.

(2) பாண்டி வேந்தனொருவன் கடல் நீரினைக் கொணர்ந்து அபிடேகம் செய்து கொண்டான். அவன் நாற்கடலின் நீரை ஒரே பகலில் கொண்டு வரச் செய்து அபிடேகம் பண்ணிய நிகழ்ச்சி பாண்டியரது செப்பேடுகளில் குறிக்கப்பட்டுள்ளது.

(3) செந்தமிழில் ஆற்றல் மிக்க பாண்டி வேந்தன் ஒருவன் மகாபாரதத்தைத் தமிழ்மொழியில் எழுதுவித்தான்.

(4). 'ஆனை ஆயிரம் ஐயமிட்டும்' என்று சின்னமனூர்ச் சிறிய செப்பேடும், 'போர்க் குன்றாயிரம் வீசியும்' என்று சின்ன

மனூர்ப் பெரிய செப்பேடும் பாண்டியனது கொடைத்திறனைப் புகழ்ந்து பாடுகின்றது. இப்பாடல்களைக் கொண்டு பாண்டிய வேந்தனொருவன் ஆயிரம் யானைகளைக் கொடையாக அளித்த நிகழ்ச்சியினை நாமறியலாம்.

(5) கல்வி கேள்விகளில் ஆர்வமிகக்கொண்ட பாண்டி வேந்தனொருவன் நான்கு கோடிப் பொன் கொடுத்து நாற்கடலைக் கரைகண்டானும் என்ற செய்தி கீழ்வரும் செப்பேட்டடிகளால் நாமறியலாம்.

'நாற்கோடி பொன் கொடுத்து நாற்கடலைக் கரை கண்டான்'

(6) தாய்த்தமிழைப் பேணிக்காப்பதே தனது தலையாய கடமை என்னும் பொன்னான கொள்கையினை மனத்திற் கொண்ட பாண்டியன் மதுரை மாநகரின்கண் தமிழ்ச் சங்கத்தினை நிறுவி, தமிழாய்ந்து தமிழ்த்தொண்டு புரிந்தான். தேனினுமினிய தமிழ் மொழியில் நாட்டங்கொண்ட பாண்டியர் தமிழ் நூல்களைக் கற்றுத் தெளிந்தனர். இதனையே சின்ன மனூர்ப் பெரிய சாசனமும் 'தென்றமிழின் கரைகண்டும்' என்று செப்புகின்றது.

(7) பாண்டிய நாட்டிலே பஞ்சம் வந்தது; மக்களுக்குச் சொல்லொணாத் துயரைத் தந்தது. இதனைக்கண்ட பாண்டியனோ பஞ்சத்தினின்றும் மக்களைக் காக்க எல்லாவிதமான முயற்சிகளையும் மேற்கொண்டான். அம் முயற்சிகள் பலனளிக்கவில்லை. இறுதியாக பாண்டிய வேந்தன் மக்களின் பசியைப் போக்க மழைத் தெய்வமாம் இந்திரனுக்குப் பெருவிழா ஒன்று நடத்தினான். இதனைச் சின்னமனூர்ப் பெரியசாசனமும் 'அடும்பசி நோய் நாடகற்றி அம்பொற் சித்திரம் உயரியும்' என்று சித்திரிக்கின்றது. இவ்வடிகளின் உண்மையான பொருளை நாமறிந்து கொள்ள வேண்டுமெனின் 'அம்பொற் சித்திரம் உயரியும்' என்னும் சொல்லில் அடங்கியுள்ள நிகழ்ச்சியினை விரிவாக அறிதல் வேண்டும். அதனை ஈண்டு கண்போம்.

**'அம்பொற் சித்திரம் உயரியும்'**

இச் சொற்கள் சின்னமனூர்ப் பெரிய செப்பேட்டில் குறிக்கப்பட்டுள்ளது. சின்னமனூர்ச் செப்பேட்டினை அச்சிட்டு வெளியிட்ட (S.I.I. Vol. III part IV) திரு. சுப்பிரமணிய ஐயர் அவர்கள் இதுபற்றிய விளக்கத்தினைக் கூறவில்லை. வரலாற்றுப் பேரறிஞர் திரு. எஸ். கிருட்டிணசாமி அய்யங்கார் அவர்கள் இப்பாட்டடியின் விளக்கத்தினை வெளியிட்டுள்ளார். அவரது கருத்துப்படி அம்பொன் சித்திரம் என்பது இந்திர விழாவின்போது

இந்திரனது கொடி ஏற்றுவிக்கப்பட்டதனைக் குறிக்கின்றது. இதனை அவர் விளக்கமாகவே குறித்துள்ளார். இந்திரனது வாகனம் யானையாதலின் அவனது கொடியில் யானை பொறிக்கப் பட்டிருந்தது.

பண்டைக் காலத்தில் பரத கண்ட முழுவதும் இந்திரவிழா சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. இந்திர விழாவின்போது இந்திரனது கொடியை ஏற்றுவித்துப் பறக்க விடுவது வழக்க மாகும். குறிப்பாக அதிலும் சிறப்பாக இவ் விழா சோணாட்டின் துறைமுகமாம் காவிரிப்பூம்பட்டினத்தில் விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. இவ் விழா ஆண்டுதோறும் சித்திரைத் திங்களில் இருபத்தெட்டு நாள் தொடர்ந்து கொண்டாடப் பட்டது. இந்நிகழ்ச்சிகளைச் சிலப்பதிகாரம், மணிமேகலை முதலான இலக்கியங்கள் மிகவிரிவாகச் சித்திரிக்கின்றது.

தமிழ் இலக்கியங்களேயன்றி வடமொழி இலக்கியங்களும் இந்திர விழாபற்றி விவரிக்கின்றன. அவற்றுள் வடமொழிக் கவிஞனும் காளிதாசன் எழுதிய இரகுவம்சம் என்னும் நூல் குறிப்பிடத் தக்கதாகும். இக் காவியத்தில் நான்காவது சருக்கம் மூன்றாவது சுலோகத்தில் இவ்விழா குறிக்கப்பெறுகின்றது. இரகுமகாராசனுடைய முடிசூட்டு விழா சிறப்பாகக் கொண் டாடப்பட்டது; அதுபோழ்து ஏராளமான மக்கள் குழுமியிருந்து அதனைக் கண்டுகளித்தனர். இதனை விவரிக்கும் கவிகாளிதாசர் இவ் விழாவினை இந்திரவிழாவுடன் ஒப்பிட்டுக் கூறுகின்றார். புரு ஹூதனுடைய (இந்திரன்) கொடியினையுயர்த்தி சிறப்பான முறையில் கொண்டாடப் பெறுகின்ற இந்திரவிழாவிற்கு நகர மக்களனைவரும் வருகை தந்து சிறப்பித்ததைப் போன்று இரகு வினுடைய முடிசூட்டு விழாவிற்கும் மக்கள் திரளாக வந்து சிறப் பித்தனர் என்று அந்த சுலோகம் கூறுகின்றது.

இச் சுலோகத்திற்கு உரை எழுதிய மல்லிநாதா, இப் பாட்டினை விளக்கும் பொருட்டு இந்திரவிழாவைப்பற்றிய முதல் மூன்று சுலோகங்களை மேற்கோள் காட்டுகின்றார். அவற்றுள் முதல் சுலோகம் யானையின் உருவம் பொறிக்கப்பட்ட கொடிகள் நகர வாயலில் அமைக்கப்பட்டிருந்த நான்கு கம்பங்களின்மேல் ஏற்பட்டிருந்தது என்பதனைக் குறிப்பிடுகின்றது.

இரண்டாவது சுலோகம் சதுரவடிவமாக அமைத்த சக்கர துவஜத்தை (இந்திரனது கொடி) வேந்தன் தனது அரண்மனைக் கெதிரில் நாட்டப்பட்டதனைக் குறிப்பிடுகின்றது. இந்திரனது கொடி நகர மக்களுக்கு உடல் நலனையும், மகிழ்ச்சியையும்

அளித்ததாகக் குறிப்பிடுகின்ருர். இந்திரனுக்கு விழாவெடுத்து இந்திரனது கொடியினைத் தனது தலைநகரத்தில் நாட்டுகின்ற வேந்தனது நாடே மும்மாரி மழைபெறும் என்னும் செய்தியினை மூன்ருவது சுலோகம் எடுத்துக் கூறுகின்றது.

இவற்றையெல்லாம் மேற்கோள் காட்டி திரு. கிருட்டிணசாமி அய்யங்கார் அவர்கள் மேலும் சில கருத்துகளை எடுத்தியம்பு கின்ருர். இந்திரனது கொடியினையேற்றி, இந்திரவிழாவினைச் சிறப்பாகக் கொண்டாடினுல் நாட்டில் மழை பெய்யுமென்பது அக் கால வேந்தர்களின் நம்பிக்கையாகும். காவிரிப்பூம் பட்டினத்தில் இந்திரனுடைய வச்சிராயுதக் கோயிலில் வைக்கப் பட்டிருந்த முரசையெடுத்து, யானையின்மீது அமர்ந்து கொண்டு இந்திர விழா தொடங்குகின்ற தேதியினையும் முடிவினையும் நாட்டு மக்களுக்கு அறிவிப்பர். பின்பு காவிரிப்பூம்பட்டினத்திலேயே இந்திரனுடைய கற்பகத்தருக் கோயிலில் இருந்த ஐராவதம் என்னும் யானையின் உருவம் பொறிக்கப்பட்ட கொடியைத் தூக்கிக்கொண்டு ஊர்வலம்வந்து, கொடியினை ஏற்றிவிழா நடத்தப்பட்டது. இந் நிகழ்ச்சிகளைக் கொண்டு சோணுட்டில் இந்திர விழா சிறப்பாக நடைபெற்றதனை அறிந்துகொள்ளலாம். பூம்புகாரில் நடைபெற்ற இந்திரவிழாவைப்பற்றி விரிவான செய்திகள் தமிழ் நாட்டரசு தொல்பொருள் துறையினர் வெளி யிட்டுள்ள 'பூம்புகார்' என்னும் நூலில் கூறப்பட்டுள்ளது

இவ்விந்திர விழா பாண்டிய நாட்டிலும் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. பாண்டிவேந்தனெருவன் இந்திரனுக்குக் கொடியேற்றி, இந்திரவிழா நடத்தினனென்பதனையே சின்னமனூர்ச் செப்பேடுகள் 'அம்பொற் சித்ர முயரியும்' என்று குறிப்பிடுவதாக திரு. எஸ். கிருட்டிணசாமி அய்யங்கார் குறிப்பிடுகின்ருர்.

## பாண்டிய வேந்தர்களது மெய்க்கீர்த்தியின் தொடக்க அடிகள்

| வரிசை எண் | வேந்தனின் பெயர் | காலம் | மெய்க்கீர்த்தியின் தொடக்கம் |
|---|---|---|---|
| 1 | சடையவர்மன் சீவல்லபன் | கி.பி. 1120-22- | 1. 'திருமடந்தையும் செயமடந்தையும்'<br>2. 'பூமாதுபுனர...' [அண்மைக் காலத்தில் அம்பாசமுத்திரத்தில் கண்டுபிடிக்கப் பட்ட கல்வெட்டில் உள்ளது] |
| 2 | மாறவர்மன் திரிபுவன சக்கர வர்த்தி பராக்கிரம பாண்டியன் | 1120- | 'திருமகள் புனர...' |
| 3 | சடையவர்மன் பராந்தக பாண்டியன் | | 'திருவளரச் செயம்வளரத் தென்னவர் தம் குலம் வளர' |
| 4 | மாறவர்மன் சீவல்லபன் | 1132-1182 | 1. 'பூமகள் செயமகள்பொலிவுடன் தழைப்ப'<br>2. 'சயமடந்தையும்' [வரதுங்க தேவ நல்லூரில் கிடைத்த கல்வெட்டு] |
| 5 | சடையவர்மன் குலசேகர பாண்டியன் | 1162<br>1168-1173 | 'பூதல மடந்தை......' |
| 6 | சடையவர்மன் வீரபாண்டியன் | ...1168<br>1175-1180 | 'பூமடந்தையும் சயமடந்தையும் பொலிந்து திருப்புயத்திருப்ப' |
| 7 | முதலாம் சடையவர்மன் குலசேகர பாண்டியன் | 1190-1218 | 1. 'பூவின் கிழத்தி...'<br>2. 'பூதல வனிதை...' |

| வரிசை எண் | வேந்தனின் பெயர் | காலம் | மெய்க்கீர்த்தியின் தொடக்கம் |
| --- | --- | --- | --- |
| 8 | முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியன் | கி.பி. 1215–1238 | 1. 'பூமருவிய திருமடந்தையும் புவிமடந்தையும் புயத்திருப்ப'<br>2. 'சோணாடு கொண்டருளிய சுந்தர பாண்டிய தேவர்'<br>3. 'சோணாடு வழங்கியருளிய சுந்தர பாண்டிய தேவர்' |
| 9 | இரண்டாம் மாறவர்மன் சுந்தர பாண்டியன் | கி.பி. 1238–1252 | 'பூமலர்த்திருவும் பொருசயமடந்தையும்...' |
| 10 | இரண்டாம் சடையவர்மன் குலசேகர பாண்டியன் | கி.பி. 1238–1240 | 'பூதல வனிதை...' |
| 11 | முதலாம் சடையவர்மன் சுந்தர பாண்டியன் | கி.பி 1252–1271 | 1. 'பூமலர் வளர்திகழ் திருமகள் புகழாகம் புணர்ந்திருப்ப'<br>2. 'சமஸ்த ஜகதாதார சோம குல திலக' |
| 12 | சடையவர்மன் வீரபாண்டியன் | கி.பி. 1253–1268 | 1. 'திருமகள் வளர...'<br>2. 'கொங்கீழம் கொண்டு கொடுவடுகு கோடழித்து கங்கையிரு கரையும் காவிரியும் கைக்கொண்டு' |

| | | | |
|---|---|---|---|
| 13 | முதலாம் மாறவர்மன் குலசேகர பாண்டியன் | கி.பி. 1268 | 'தேர்போல்...' |
| 14 | மாறவர்மன் விக்கிரம பாண்டியன் | கி.பி. 1283-1296 | 1. 'திருமகள் ஜயமகள்'<br>2. 'திருமலர் மாது...'<br>3. 'சமஸ்த புவனைகவீரா...' |
| 15 | சடையவர்மன் பராக்கிரம பாண்டியன் | கி.பி. 1422-1463 | 'பூமிசை வனிதை நாவினிற் பொலிய...' |

## பாண்டிய வேந்தரது சிறப்புப் பெயர்கள்

| வரிசை எண் | வேந்தனின் பெயர் | அரியணை யேறிய ஆண்டு | விருதுப் பெயர்களும் சிறப்புப் பெயர்களும் |
|---|---|---|---|
| 1 | கடுங்கோன் | கி.பி. 570 | கதிர்வேல் தென்னன், மானம் பேர்த்தருளிய கோன் |
| 2 | சேந்தன் | ,, 625 | செங்கோற்சேந்தன், வானவன், வானவரம்பன், செழியன் வேந்தர் வேந்தன் |
| 3 | மாறவர்மன் அரிகேசரி | ,, 640 | சுந்தரபாண்டியன், கூன்பாண்டியன், நெடுமாறன், அரிகேசரி பராந்தகன், நெல்வேலி வென்ற நின்ற சீர்நெடுமாறன், பராங்குசன், அசமசமன், சிரீமாறவர்மன், |
| 4 | கோச்சடையன் ரணதீரன் | ,, 690 | வானவன், செம்பியன், கொங்கர் கோமான், மதுர கருநாடகன், மன்னர் மன்னன், செங்கோல் தென்னன், சோசன். |
| 5 | அரிகேசரி பராங்குச மாறவர்மன் | ,, 730 | தேர்மாறன், பல்லவ பஞ்சனன் |
| 6 | நெடுஞ்சடையன் பராந்தகன் | ,, 768 | ஜடிலன், பராந்தகன், மாறஞ்சடையன், வரகுண மகாராசன், நெடுஞ்சடையன், தென்னவன், சீவரன், சினச்சோழன், சீ மனோகரன். புனப் |

| | | | |
|---|---|---|---|
| | | | பூழியன், வீரபுரோகன், வீத கன்மஷன், விநயவிச்ருதன, விக்கிரமபாரகன், மருத்பலன் மானிய சாசனன், மநூபமன், மர்த்திதவீரன், கிரிஸ்தரன், கீதகிஃனரன், கிருபாலயன், கிருதாபதானன், கலிப்பகை, கண்டக நிஷ்டூரன், கார்ய தக்ஷிணன், கார்முக பார்த்தன், பண்டித வத்சலன், பரிபூர்ணன், பாபபீரு, குணக்ராசியன், கூடநிர்ணயன். |
| 7 | சீமாறன் சீவல்லபன் | கி.பி. 815 | ஏகவீரன், அவனிபசேகரன், பரசக்ர கோலாகலன், யம்புரசீலன், உபாய பஹுலன். |
| 8 | இரண்டாம் வரகுண பாண்டியன் | ,, 862 | பரச்சக்ர கோலாகலன் |
| 9 | பராந்தக பாண்டியன் | ,, 862 | விகடவாடவன், சிரீகாந்தன், மீனுங்கி தசைலேந்திரன், இராஜ சிகாமணி, தென்னன், ராஜிதகுணகண நங்கோன், வீரநாராயணன், மனுசரிதன், வாட்சடையன், கலிப்பகை, கண்டருள் கண்டன், (வீரருள் வீரன்) மதுராபுரிப் பரமேச்சுவரன், மானினீ, மகரகேதனன். |
| 10 | இரண்டாம் இராசசிம்ம பாண்டியன் | ,, 907 | சடையன் மாறன், இராசசிகாமணி, சீகாந்தன், மந்தர கௌரமேரு. |
| 11 | வீரபாண்டியன் | ,, 946 | சோழாந்தகன், பாண்டி மார்த்தாண்டன், சோழன் தலைகொண்ட கோவீரபாண்டியன் |
| 12 | முதலாம் சடையவர்மன் குலசேகர பாண்டியன் | ,, 1190 | இராசகம்பீரன் |

| வரிசை எண். | வேந்தனின் பெயர் | அரியணையேறிய ஆண்டு | விருதுப் பெயர்களும் சிறப்புப் பெயர்களும் |
|---|---|---|---|
| 13 | முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியன் | கி.பி. 1215 | சோணாடு கொண்டருளிய சுந்தரபாண்டியன், சோணாடு கொண்டு முடிகொண்ட சோழபுரத்து வீராபிஷேகமும் விஜயாபிஷேகமும் பண்ணியருளிய வீரசுந்தர பாண்டிய தேவர், சோணாடு வழங்கியருளிய ஸ்ரீசுந்தர பாண்டிய தேவர், ஞான சமுத்திரன், கலியுகராமன், அதிசயப் பாண்டியதேவர், சோணாடு கொண்ட சோழபுரத்து வீரர். |
| 14 | முதலாம் ஜடாவர்மன் சுந்தர பாண்டியன் | ,, 1252 | எல்லாந்தலையான பெருமாள், காஞ்சிபுரங்கொண்டான், காஞ்சிபுரவராதீசுவரன், எம்மண்டலமுங் கொண்டருளிய சுந்தரபாண்டிய தேவன், அவனி வேந்தராமன், இரண்டாவது இராமன், சித்திபதிரவி, இராஜ சூர்யா, ராஜதாபனு ஹேமசந்தன் ராஜா, கோயில் பொன்வேய்ந்த பெருமாள் தேவன், சகலபுவன சக்கரவர்த்தி, சேரனை வென்றான், சமஸ்த ஜகநாதரன், மகாராஜாதிராஜ ஸ்ரீபரமேசுவரா, மரகதப் பிருதிவி பிரித். |
| 15 | முதலாம் மாறவர்மன் குலசேகர பாண்டியன் | ,, 1268 | சேரனை வென்ற பாண்டிய தேவன், கொல்லம் கொண்ட பாண்டியன் 'எம்மண்டலமும் கொண்டருளிய' |

| | | | |
|---|---|---|---|
| 16 | மாறவர்மன் விக்ரம பாண்டியன் | ,, 1283 | புவனேக வீரன், கொற்கைக் காவலன், ராஜாக்கள் நாயன். |
| 17 | சடையவர்மன் பராக்கிரம பாண்டியன் | ,, 1422 | பொன்னின் பெருமாள், மானகவசன், மான வேகன், அரிகேசரி, கொற்கை வேந்தன், மதுரை வேந்தன், தென்காசி கண்ட பெருமாள், வடிவெழுதவொண்ணாத அழகன், விந்தைப்போர் கடந்த பாண்டியன். |
| 18 | சடையவர்மன் சீவல்லப பாண்டியன் | ,, 1534 | இறந்தகால மெடுத்தவன், பாண்டியராச்சிய தாபனசாரியன். |
| 19 | நெல்வேலி மாறன் | ,, 1552 | வீரபாண்டியன், குலசேகர பாண்டியன், பொன்னின் பாண்டியன், தர்மப்பெருமாள், அழகன் பெருமாள். |
| 20 | சடையவர்மன் அதிவீரராம பாண்டியன் | ,, 1564 | சீவலவேள், அழகன் பெருமாள். |
| 21 | வரதுங்கராம பாண்டியன் | ,, 1588 | அபிராம சுந்தரேசுவரன், வீரபாண்டியன், வல்லமெறிந்தான் |
| 22 | வரகுணராம குலசேகர பாண்டியன் | ,, 1613 | குலசேகர சோமாசியார். |
| 23 | அழகன் பெருமாள் சீவல வரகுண ராம பாண்டிய குலசேகர தேவர் | ,, 18ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதி | 'இறந்த காலமெடுத்தவன்' |

## பாண்டிய வேந்தரும் அரியணைகளும்

| வரிசை எண் | பாண்டிய வேந்தனின் பெயர் | காலம் | அரண்மனையின் பெயர் | அரியணையின் பெயர் |
|---|---|---|---|---|
| 1 | வீரபாண்டியன் | 946-966 | மாளுபரணன் திருமாளிகை | வீர—கேரளன் |
| 2 | சடையவர்மன் சீவல்லபன் | 1120-22 | அழகிய பாண்டியன் கூடம் | பாண்டியராஜன் கலிங்கத்தரையன் |
| 3 | முதலாம் சடையவர்மன் குலசேகரன் | 1190-1218 | புகழாபரணன் | மழவராயன், காலிங்க ராயன், முனையதரையன் |
| 4 | முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியன் | 1215 | ................................ | மழவராயன் |
| 5 | இரண்டாம் மாறவர்மன் சுந்தர பாண்டியன் | 1239-1251 | ................................ | மழவராயன், பல்லவரையன் |
| 6 | முதலாம் மாறவர்மன் குலசேகரன் | 1268-1372 | ................................ | காலிங்கராயன் |
| 7 | மாறவர்மன் விக்கிரம பாண்டியன் | 1283-1296 | ................................ | முனையதரையன் (மதுரை) மேலையதரையன் (இராசேந்திரம்) |
| 8 | பராக்கிரம பாண்டியன் | ........... | மாளுபரணன் கூடம் (Hal.) | இசைபுறவு கண்டன் (மதுரை) |

| | |
|---|---|
| கி. பி. 570 | கடுங்கோன் அரியணையேறுதல் |
| ,, 600 | மாறவர்மன் அவனிசூளாமணி அரியணையேறுதல் |
| ,, 625 | செழியன் சேந்தன் அரியணையேறுதல் |
| ,, 640 | மாறவர்மன் அரிகேசரி அரியணையேறுதல் |
| ,, 690 | கோச்சடையன் ரணதீரன் அரியணையேறுதல் |
| ,, 730 | முதலாம் இராசசிம்மன் (அரிகேசரி பராங்குச மாறவர்மன்) அரியணையேறுதல் |
| ,, 768 | நெடுஞ்சடையன் பராந்தகன் (முதலாம் வரகுணன்) அரியணையேறுதல் |
| ,, 815 | சீமாறன் சீவல்லபன் அரியணையேறுதல் |
| ,, 854 | தெள்ளாற்றுப் போர் |
| ,, 859 | பராந்தக வீரநாராயணன் இளவரசனாதல் (உத்தேசமாக ஆண்டு) |
| ,, 862 | இரண்டாம் வரகுணன் அரியணையேறுதல் |
| ,, 880 | திருப்புறம்பியப் போர் |
| ,, 907 | இரண்டாம் இராசசிம்மன் அரியணையேறுதல் |
| ,, 920 | வெள்ளூர்ப் போர் |
| ,, 946 | வீரபாண்டியன் அரியணையேறுதல் |
| ,, 962 | சேவூர்ப் போர் |
| ,, 966 | வீரபாண்டியனின் இறப்பு |
| ,, 1018 | சுந்தரசோழபாண்டியன் மதுரையில் அரசப் பிரதிநிதியாக நியமனம் பெறுதல் |
| ,, 1133 | மாறவர்மன் சீவல்லபன் அரியணையேறுதல் |
| ,, 1162 | சடையவர்மன் குலசேகர பாண்டியன் அரியணையேறுதல் |
| ,, 1168 | குலசேகரபாண்டியன் சோழரின் உதவியால் மீண்டும் ஆட்சியைக் கைப்பற்றுதல் |
| ,, 1180 | சடையவர்மன் விக்கிரம பாண்டியன் அரியணையேறுதல் |
| ,, 1190 | முதலாம் சடையவர்மன் குலசேகரன் அரியணையேறுதல் |

| | |
|---|---|
| கி.பி. 1215 | முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் அரியணையேறுதல் |
| ,, 1238 | இரண்டாம் சடையவர்மன் குலசேகர பாண்டியன் அரியணையேறுதல் |
| ,, 1252 | முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் அரியணையேறுதல் |
| ,, 1268 | முதலாம் மாறவர்மன் குலசேகர பாண்டியன் அரியணையேறுதல் |
| ,, 1276 | இரண்டாம் சடையவர்மன் சுந்தர பாண்டியன் அரியணையேறுதல் |
| ,, 1283 | மாறவர்மன் விக்கிரம பாண்டியன் அரியணையேறுதல் |
| ,, 1311 | மாலிக்காபூர் பாண்டிய நாட்டின்மீது படையெடுப்பு |
| ,, 1318 | குஸ்ருகானின் மாபார் படையெழுச்சி |
| ,, 1323 | கியாசுதீன் துக்ளக் மதுரையைக் கைப்பற்றல் |
| ,, 1334-35 | மதுரை டில்லி சுல்தானிய ஆட்சியிலிருந்து விடுபடல் |
| ,, 1335 | அஸன்ஷா மதுரைச் சுல்தானகப் பதவி யேற்றல் |
| ,, 1371 | குமாரகம்பணன் மதுரையைக் கைப்பற்றல் |
| ,, 1378 | மதுரை சுல்தானிய ஆட்சி முடிவு |
| ,, 1395 | சடையவர்மன் குலசேகரபாண்டியன் அரியணையேறுதல் |
| ,, 1401 | சடையவர்மன் விக்கிரம பாண்டியன் அரியணையேறுதல் |
| ,, 1422 | சடையவர்மன் பராக்கிரம பாண்டியன் அரியணையேறுதல் |
| ,, 1430 | சடையவர்மன் குலசேகர பாண்டியன் அரியணையேறுதல் |
| ,, 1473 | அழகன் பெருமாள் பாண்டியன் அரியணையேறுதல் |
| ,, 1480 | சடையவர்மன் குலசேகர பராக்கிரம பாண்டியன் அரியணையேறுதல் |
| ,, 1515 | உதயமார்த்தாண்டவர்மன் தென்பாண்டி நாட்டில் படையெடுத்தல் |
| ,, 1564 | சடையவர்மன் அதிவீரராம பாண்டியன் அரியணையேறுதல் |
| 18 ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதி | திருநெல்வேலிப் பாண்டியரின் வீழ்ச்சி. |

# மேற்கோள் நூல் பட்டியல்

Annual Reports of the Archaelogical Survey of India, calcutta.

Annual Reports on South India Epigraphy, madras

Archaeological Survey of Southern India–Lists of Antiquarian Remains in the presidency of madras by Robert Sewell.

Archaeological Survey of India. South Indian Inscriptions

A Topographical List of Inscriptions of the madras

Presidency (collected till 1915) with noted and references by V. Rangachari, 3 Vols. madras-1919

Archaeological Survey of Ceylon-Annual Reports.

Chronological List of Inscriptions of the pudukkottai state: Published by authority (pudukkottai 1929)

Epigraphia Indica, vols. 1 to 29 Calcutta

Epigraphia zeylanica, Vols. I to IV.

Indian Ephimeries-vol. I

Thirumalai Triupati Devasthanam Inscriptions (madras 1931-6)

Travancore Archaeological Series.

South Indian Temple Inscriptions, Madras.

பாண்டியர் செப்பேடுகள் பத்து - தமிழ் வரலாற்றுக் கழகம், 40, பீட்டர்ஸ் ரோடு, சென்னை-14. (1967)

பல்லவர் செப்பேடுகள் முப்பது. தமிழ் வரலாற்றுக் கழகம், சென்னை-28.:(1966)

கன்னியாகுமரி மாவட்டக் கல்வெட்டுகள்—மூன்று பகுதிகள் நடனகாசிநாதன் (தொகுப்பாளர்) தமிழ்நாட்டரசு தொல் பொருள் துறை, சென்னை.

தஞ்சைப் பெருவுடையார் கோயில் கல்வெட்டுகள், முதற் பகுதி இரா. நாகசாமி (பதிப்பாசிரியர்) தொல் பொருள் ஆய்வுத்துறை.
தென்னிந்தியக் கோயிற் சாசனங்கள்—மூன்று பகுதிகள் பதிப்பாசிரியர் என். சுப்பிரமணியன்.

| | | |
|---|---|---|
| Aiyangar, Dr. S.K. | : | Hindu Administrative Institutions in South India (madras 1930) |
| Aiyangar, Dr. S.K. | : | South India And her muhammadan Invaders (Calcutta, 1923) |
| Aiyangar, Dr. S.K. | : | Sources of vijayanagar History (Madras 1924) |
| Altekar, Dr. A.S. | : | A History of Village communities in western India. (Madras 1927) |
| Arokiaswami, Dr. M. | : | The Kongu Country (Madras 1956) |
| Bhandarkar, R.G. | : | Early History of the Deccan down to the muslim couquest (Calcutta 1928 |
| Bhandarkar, R.G. | : | Vaishanvism, Saivism and other minor Religions (Strassburg 1913) |
| Basham, A. L. | : | The wonder that was India (London 1954) |
| Balasubramanian, S. R. | : | Kopperunjinga |
| Brown, C. J. | : | The coins of India (Calcutta 1922) |
| Burnell, A. C. | : | Elements of South Indian palaeography From the 4th to the 7th century A. D. (London 1878) |
| Coldwell, Bishop. R. | : | History of Tinnevelly (Madras 1881) |
| Cambridge History of India | : | Vols 3. and 4. 1928 and 1937. |
| Dikshitar, V.R.R. | : | Studies in Tamil Literature and History (Madras 1936) |
| Elliot and Dowson | : | History of India as told by her own historians III vols. (London 1871) |

Elliot, Sir walter : Coins of Southern India (London 1885)

Gopalan, R. ; History of the Pallavas of kanchi (Madras 1928)

Gopalachari, K. : Early History of the Andhra (Madras 1941)

James Hornell, F.L.S. : The Sacred chanks of India (1914)

Krishnaswami, A. Dr. : The Tamil Country under Vijayanagar (The Annamalai university 1964)

Kanagasabapathy pillai Dr. K. : The Sucindram Temple (Madras 1953)

Mahalingam, T.V. : South Indian Polity (University of Madras 1967)

Mahalingam, T.V. : Administration And Social Life under Vijayanagar (Madras 1940)

Majumdar, R.C. : History And Culture of the Indian People, Volume. I I (1960)

Nagasamy, R. (Editor) : Saminar on Hero Stones (Department of Archaeology Tamilnadu 1974)

Narayana Iyer, C.U. : Origin and early History of saivism in S. India (1936)

Nilakanta Sastri, K.A. : The Colas university of Madras 1955)

Nilakanta Sastri, K.A. : A History of South India. Oxford University Press. Madras 1955)

Nilakanta Sastri, K.A. : The Pandyan Kingdom.(Madras-18.1972)

Nilakanta Sastri, K.A. : Foreign Notices of South India from Megasthenes to ma-huan (Madras 1940)

Nelson, J.H. : The Madura country A Manual Complied by the order of the Madras. govt (Madras 1868)

Pillai, K.K. : A Social History of the Tamils, Part I. Uuniversity of Madras.

Pillai, K.K. : South India And SriLanka (University of Madras 1975)

Paranavitana, S. : History of ceylon Vol I, Parts I & II (University of Ceylon Press Board 1959)

Ramanujam, B.U. : History of Vaishnavism in south India upto Ramanuja (1973)

Raman, K.U. : Some Aspects of Pandyan History in the light of recent discoveries - University of Madras (Lectures delivered in 1971-72)

Ramachandran, C.E. : Ahananuru in its Historical Setting. University of Madras 1974

Sathianathaier, R. : (1) 'History of India' Vol. II (2) History of India Vol. I (3) History of the Nayaks of Madura Madras 1924

Sir Wolseley Haig : Cambridge History of India. Vol. III.

Smith, V. : The early History of India 1914 Oxford History of India.

Sewel's List of Antiquities

Stuart : Manual of Tinnevely

Subramania Aiyer, K.V.. : Historical Sketches of Ancient Deccan, Vol. I Modern Printing works Madras 1917

Subramania Aiyer, K.V. : Vol. I Vol. II. Coimbatore 1967

Subramania Aiyer, K.V. : Vol. I Vol.III.Coimbatore 1969

Subramanian, N. : History of Tamil Nad (To 1336) Koodal Publishers, 217-A) South masi st., Madurai. 1972 The Sangam Polity.

Schoff, W.H. (ed) : The Periplus of the Erythraean Sea.

Srinivasan, K.R. : Temples of South India

Srinivasa Iyengar, P.T. : History of the Tamils 1929

Sivaraja Pillai, K.N. : Chronlogy of the early Tamils 1932

Tara Chand : A Short History of Indian People

Venkataramayyah, N. : Early Muslim Expansion in South India

Venkatarama Ayyar K.R. : A Manual of the Pudukkottai State Vols. I and II. 1944

Govindasamy, M.S. : The Role of Feudatories in Pallava History. The Annamalai University. 1965

அரிகரமையர் : பாண்டிய ராஜ வம்ச சரித்திரம் அம்பாசமுத்திரம். 1926)

அறவாணன், க.ப. : ஆய்வுக்கொத்து, ஆராய்ச்சிப் பேரவை, 60, முனிரெத்தினம் தெரு, அய்யாவு நாயுடு குடியிருப்பு, சென்னை-29. 1973

அறவாணன், க.ப. : சைனரின் தமிழிலக்கண நன்கொடை, ஜைன இளைஞர் மன்றம் சென்னை-17. 1974

ஆரோக்கியசாமி, மு. : தமிழ்நாட்டு வரலாறு. 1958

ஆபிரஹாம், ஐ.கோ. : பழைய காயல் தலபுராணம்

இராசசேகர தங்கமணி, ம. : முதலாம் இராசேந்திர சோழன், தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை. 1973

இராசமாணிக்கனார், மா. : பல்லவர் வரலாறு, கழகம், சென்னை. 1944.

இராசமாணிக்கனார், மா. : சோழர் வரலாறு

,, : பெரியபுராண ஆராய்ச்சி. ாடல் பப்ளிகேஷன்ஸ், சென்னை. 1948

இராகவன்(சாத்தான்குளம்) : கோநகர் கொற்கை

இராமச்சந்திர தீட்சிதர், வி.ரா. : மூன்றாம் குலோத்துங்க சோழன், பி. வரதாச்சாரி கம்பெனியார், சென்னை. 1946

இராமகிருஷ்ணன், எஸ், : இந்தியப் பண்பாடும் தமிழரும், மீனாட்சி புத்தக நிலையம், மதுரை. 1971

சதாசிவப் பண்டாரத்தார், டி. வி. : பாண்டியர் வரலாறு, கழகம். பிற்காலச் சோழர் சரித்திரம், இரண்டு தொகுதிகள் - அண்ணாமலைப் பல்கலைக் கழகம் 1957, 1958.

சதாசிவப் பண்டாரத்தார், டி.வி. : இலக்கிய ஆராய்ச்சியும் கல் வெட்டுகளும், தொல்காப்பியர் நூலகம், சிதம்பரம். 1961.

சதாசிவப் பண்டாரத்தார், டி.வி. : டுகளால் அறியப் பெறும் உண்மைகள். 1961.

செந்தமிழ்ச்செல்வன், க. : முத்தரையர் வரலாறு

சேதுப்பிள்ளை, ரா.பி. : தமிழகம் ஊரும் பேரும்-பழனி யப்பா பிரதர்ஸ், சென்னை.

சோமசுந்தரம் பிள்ளை, ஜே. எம். : பாண்டியர் பெருமாட்சி - தமிழ் எழுத்தாளர் கூட்டுறவுச் சங்கம், சென்னை-8. 1968

இராகவையங்கார், மு. : ாசனத் தமிழ்க்கவி சரிதம் மதுரை. 1958

இளங்கோவன், மா.ரா. : தமிழகத்தின் துறைமுகங்கள்

இளங்கோவன், மா.ரா. : தமிழகத்தின் தலைநகரங்கள்

இராகவன், அ. : கோநகர் கொற்கை

கந்தையாபிள்ளை, ந.சி. : தமிழர் சரித்திரம்

கோவிந்தன், கா.புலவர். : சங்ககால அரசர் வரிசை தொகுதி-1. கழகம், சென்னை.

1955 தொகுதி 2, 1961.
தமிழகத்தில் கோசர்கள்.

சிவராமமூர்த்தி, க. : இந்திய ஓவியம்— நேஷனல் புக் டிரஸ்ட் ஆப் இந்தியா, புது டெல்லி, 1974.

நாகசாமி, இரா. : யாவரும் கேளிர்— வாசகர் வட்டம், சென்னை.

நாகசாமி, இரா. : கையேடு

நாகசாமி, இரா.
சந்தரமூர்த்தி, மா. } : தமிழகக் கோயிற்கலைகள்-தமிழ் நாடு அரசு தொல்பொருள் துறை, சென்னை 1973.

நாகசாமி, இரா., நடன காசிநாதன், தாமோதரன், கு., அரிஹரன், ச. } : கல்வெட்டியல் — தமிழ்நாடு அரசு தொல்பொருள் துறை, சென்னை, 1972.

நடன காசிநாதன் : காலச் சுவடுகள்—சேகர் பதிப்பகம், 56, உஸ்மான் ரோடு, சென்னை-17, 1973.

,, : முத்தரையர்—சென்னை (1976)

பன்னீர் செல்வம், இர. : தமிழ்நாடும் களப்பிரர் ஆட்சியும் —வி. மாணிக்கம் கம்பெனி, 32, ஐயப்ப செட்டித் தெரு, சென்னை-1, 1973.

பத்மநாபன், எஸ். : குமரி மாவட்டக் கோயில்கள். குமரன் பதிப்பகம், இராமவர்மபுரம், நாகர் கோயில், 1970.

பரந்தாமனூர், அ.கி. : மதுரை நாயக்கர் வரலாறு

,, : தமிழக வரலாறு

பழனியப்பன், கி. : கோயில் மாநகர்—மதுரை, 1963.

பிள்ளை, கே.கே. : தமிழக வரலாறு-மக்களும் பண்பாடும்—தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை 1972.

பிள்ளை, கே.கே. : தென்னிந்திய வரலாறு—முதற் பகுதி.

பிள்ளை, கே.கே. : தென்னிந்திய வரலாறு, இரண்டாம் பகுதி, பழனியப்பா பிரதர்ஸ், சென்னை.

**பேராசிரியர் அறுவர்** : தமிழக வரலாறு— கழகம், சென்னை, 1972.

**வேங்கடசாமி, மயிலை, சீனி.** : தமிழர் வளர்த்த அழகுக் கலைகள்— பாரி நிலையம், சென்னை, 1956.

**வேங்கடசாமி, மயிலை, சீனி.** : சங்ககாலத் தமிழக வரலாற்றில் சில செய்திகள்—அண்ணாமலைப் பல்கலைக் கழகம், 1970.

**வேங்கடசாமி, மயிலை, சீனி.** : சமணமும் தமிழும்—1954.

**வேங்கடசாமி, மயிலை, சீனி.** : மறைந்துபோன தமிழ்நூல்கள்—1967. பழங்காலத் தமிழர் வாணிகம் (சங்ககாலம்)— கொங்கு நாட்டு வரலாறு— நியூசெஞ்சுரி புத்தக நிலையம்.

**வேலுப்பிள்ளை, ஆ., கலாநிதி** : சாசனமும் தமிழும் (இலங்கை).

## தமிழ் இலக்கியம்

**திருக்குறள்** : பரிமேலழகர் உரை

குலோத்துங்க சோழனுலா : மதுரைச் சங்கச் சுவடிகள்

பாண்டிக் கோவை : கழகம், சென்னை

**சிலப்பதிகாரம்** : கழகம், சென்னை

**அகநானூறு** : வேங்கடசாமி நாட்டார் பதிப்பு, 1946

புறநானூறு : ஒளவை சு. துரைசாமிப்பிள்ளை, 1952

**கலிங்கத்துப் பரணி** : கழகம், சென்னை

பெரிய புராணம் : சைவ சித்தாந்த மஹா சமாஜம், 1950

பன்னிரு திருமுறை வரலாறு : அண்ணாமலைப் பல்கலைக் கழக வெளியீடு.

## இதழ்கள்

**ஆராய்ச்சி** : நா. வானமாமலை, காலாண்டிதழ்; ஜனவரி 1974, ஏப்ரல் 1974, 258, திருச்செந்தூர் சாலை, பாளையங்கோட்டை.

இளந்தமிழன் : பிப்ரவரி, ஜூன், 1975
கல்வெட்டு : இரா. நாகசாமி. காலாண்டிதழ், தமிழ் நாட்டரசு தொல் பொருள் துறை, சென்னை
கொங்கு : மாத இதழ். புலவர் செ. இராசு, 1973-1976; 26, இந்திரா நகர், சென்னை-20
செந்தமிழ் : மதுரைத் தமிழ்ச் சங்கம்
தமிழ்ப்பொழில் : கரந்தைத் தமிழ்ச் சங்கம் 1974-1975
முத்தரையர் முரசு : மாத இதழ். 1974-75, ஊருணி முத்தரையன், 25-A, மல்லன் பொன்னப்ப முதலித் தெரு, சென்னை-5.
முத்தரையர் முழக்கம் : மாத இதழ். வேங்கடசாமி நாயுடு, 470, திருவொற்றியூர் நெடுஞ்சாலை, சென்னை-21.
முக்குடை : ஜூன், 1975

பேராசிரியர் டாக்டர் ரா.பி. சேதுப்பிள்ளை வெள்ளி விழா மலர், 1961.

இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்ற ஏழாவது கருத்தரங்க ஆய்வுக் கோவை, தொகுதி 1, 1975.

கருவூர் ஆனிலையப்பர் திருக்கோயில் குடநீராட்டு விழாமலர், 1974.

நெல்லை மாவட்டக் கோயில் வரலாறு-தமிழ் நாட்டரசு, 1962.

மதுரைத் திருக்கோயில், திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா மலர், 1974.

திருவானைக் கோயில்-கும்பாபிஷேக மலர்.

Madurai Sri Meenakshi Sundareswarar Mahakumbabishekam —Souvenir-1963.

Paridimal Kalaignar Commemorative Volume, 1971.

Proceedings of Indian History Congress.

Journal of the Madras University, Vol. XI.

அரசினர் கலைக்கல்லூரி, கரூர்; ஆண்டு மலர்-1964.

கரந்தைத் தமிழ்ச் சங்க மலர், 1974.

இரண்டாவது உலகத் தமிழ் மாநாட்டு மலர்.

லண்டன் தமிழ்ச் சங்க மலர், 1968.

அகில இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மாநாட்டு ஆராய்ச்சிக் கட்டுரைத் தொகுதிகள் 6, 7 & 8.

Madurai Sri Meenakshi Sundareswarar Mahakumbabishekam —Souvenir, 1962 & 1974.

Paridimal Kalaignar Commemorative Volume, 1971.

Proceedings of Indian History Congress.

Journal of the Madras University, Vol. XI

Journal of Indian History, Vol. XLIX, Part I, II & III, April, August & December 1971.

Tamil Culture, Vols. 3—9.

Indian Antiquary, Vols. 1—29.

Journal of Oriental Research Vols. 5—12.

Journal of the Royal Asiatic Society, 1909.

## ஆய்வுக் கட்டுரைகள்

1. Islam in Negapatam—M. Abdul Rahim. (Bulletin of the Institute of Traditional Cultures, Madras, 1974.)

2. The Urban Phase of Ancient Tamil Culture—T.V. Kuppusamy. (Bulletin of the Institute of Traditional Culture, Madras, 1972.)

3. Karavandapuram or Uggirankottai - An Ancient Fortrses Town of the Pandyas—K.V. Raman. (Journal of Ancient Indian History, Vol. LII, April,1974, Part I, Trivandrum.)

4. A Flash of Light on a Hidden Fact--Prof.C.Govindarajan (Palam Porul Eluthu Nilayam, Thanjavur-2, Jan, (1968.)

5. கம்பம் கூடலூர் மங்கலாதேவி கோயில் கண்ணகிக் கோட்டமா?—புலவர் செ.இராசு (தமிழ் இலக்கியப் பேரவை, திருப்பூர்-1).

6. மதுக்கரைப் பட்டயம் பதிப்பாசிரியர்—கொடுமுடி சண்முகப் பிரகதம் (கொங்கு பதிப்பகம், சென்னை-600020).

**ஆய்வுக் கட்டுரைகள் (வெளியிடப் பெறாதவை)**

Manur Inscription—A reassessment—Natana Kasinathan.

பாண்டியர் ஆட்சிமுறை — நடன காசிநாதன்

கரவந்தபுரம் — கு. தாமோதரன்

பாண்டிய நாட்டில் அகழ்வாய்வு — ஏ. அப்துல் மஜீத்

வெள்ளூர் போர்-ஒரு மறு ஆய்வு — ம. இராசசேகர தங்கமணி (திருச்சி மாவட்ட வரலாற்றுக் கருத்தரங்கில் வாசித்த ஆய்வுக் கட்டுரை, 1976)

கரூர் பெருமாள் கோயில் கல்வெட்டு-ஓர் ஆய்வு—ம.இராசசேகர தங்கமணி. (அகில இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மாநாட்டு இதழுக்கு அனுப்பப்பட்டது.)

# சாசனச் சொல்லும் பொருளும்

### அ

அக நாழிகையர் — உண்ணாழியில் இருந்து திருவாராதனை புரிவோர்
அஃகமாக — விலையாக
அகிதம் — தீங்கு
அஞ்சொன்று — ஐந்தில் ஒன்று ($\frac{1}{5}$)
அப முத்திரை — அஞ்சேல் என்ற குறி
அபோஹநங் கிடந்த பூமி — பயிர் செய்யாது தரிசாய்க் கிடந்த நிலம்
அபிசேக மண்டபம் — திருமஞ்சன சாலை, குளிக்கும் இடம்
அயன வாரம் — புதன் கிழமை
அம்பலத்தார் — சபையார்
அட்டழிய வைத்த அரிசி — சோறு சமைத்து அளிப்பதற்கு வைக்கப்பட்ட அரிசி
அரிச்சிப்பார் — பூசனை நிகழ்த்துவார்
அன்றாடு நற்காசு — அன்று வழக்கிலிருந்த காசு
அலகிடுவார் — பெருக்கித் தூய்மை செய்வார்
அர்த்த மண்டபம் — கருவறையின் முன்னுள்ள மண்டபம்
அதிகார மேலெழுத்து — அதிகாரியின் உடன்பாடு
அகோவணம் — தரிசு நிலம், பாழ் நிலம்
அந்தராயம் — உள்வரி
அரக்கல் — அரசுக்குச் செலுத்த வேண்டிய இறையைச் சிறு பகுதிகளாகக் கட்டுவதற்கான தவணை
அணுக்கர் (அணுக்கியர்) — அந்தரங்க ஊழியர்

### ஆ

ஆட்டை வட்டம் — ஆண்டொன்று
ஆவணக் களம் — பதிவு அலுவலகம்

ஆயவற்கம் — வரிவகைகள்
ஆணை அச்சு — ஒரு வகையான காசு
ஆக்ஞப்தி — ஆணத்தி, கட்டளையை நிறைவேற்றுபவன்
ஆதுலர் சாலை (ஆதுரசாலை) — வைத்தியசாலை, உணவிடும் சாலை
ஆள் நெல் (ஆணெல்) — நெல்லாகக் கொடுக்கும் வரி வகை

இ

இஷவக் கொட்டில் — நந்தி மண்டபம்
இயக்கர் பதுமம் — யக்ஷர் திருமேனி
இறங்கல் பட்டு — பூசனை நடைபெறாது நிறுத்தப்பட்டு

உ

உபய பலிகை — பொருளாகவும் பணமாகவும் வரும் வட்டி
உதிரப்பட்டி — போரில் இறந்த வீரரின் வழி வந்தோருக்கு வழங்கப் பட்ட நிலம்
உசாவடி — போர்க் காலங்களில் படை வீரர்கள் சிறிதுநேரம் தங்கி ஒய்வு பெற்றுச் செல்லு வதற்கு அமைக்கப்பட்ட இடம்
உத்தர மந்திரி — முதன் மந்திரி
உவச்சன் — பறைமுழக்குவோன், கோயில் மத்தளம் வாசிப்போன்
உவச்சப்புறம் — பறையறைவோனுக்கு விடப் படும் நிலதானம்
உபையத் தீட்டு — நிவந்தங்கள் செய்ய ஏற்படுத் திக்கொள்ளும் ஒப்பந்தச் சீட்டு
உபாதி (ஓபாதி) — கடமை

ஊ

ஊர்க்கல் — ஊரில் வழக்கில் உள்ள எடைக்கல்

## எ

| | |
|---|---|
| எம்பி | — தம்பி |
| எற்றி | — ஆக மொத்தம் |
| எற்சோறு (எச்சோறு) | — பகற் சாப்பாடு |
| எழுத்து விநியோகம் | — ஊர்க் கணக்கருக்கான வரியை ஊரார் பங்கு பங்காக இறுத்தல் |

## ஏ

| | |
|---|---|
| ஏக போக இறையிலி | — தனியொருவர் பயன்பெற வரியின்றி வழங்கப்பட்ட நிலம் |
| ஏரி காடி | — ஏரியின் பெயரால் வசூலிக்கப் பெறும் வரி |
| ஏரி வாரியம் | — கிராம சுயாட்சி முறையில் ஏரியைப் பராமரிக்கும் நிர்வாகக் குழு |
| ஏரியாயம் | — குளத்தை உபயோகப்படுத்துவதற்கான வரி |
| ஏரியினிருணுந்நிலம் | — ஏரியிலிருந்து பாசனம் பெறும் நிலம் |
| ஏறிலும் சுருங்கிலும் | — கூடினாலும் குறைந்தாலும் |
| ஏற்றம் புலம் | — ஏற்றம் போட்டு நீர் இறைத்துப் பயிர் செய்யும் நிலம் |

## ஐ

| | |
|---|---|
| ஐப்பிகை | — ஐப்பசி மாதம் |
| ஐஞ்சு வண்ணம் (அஞ்சிரண்டு வண்ணம்) | — நெல்லின் வகை |

## ஓ

| | |
|---|---|
| ஒடுக்கின | — வைத்த |
| ஒற்றி வைத்தல் | — அடகு வைத்தல் |
| ஒன்றுகால் | — ஒன்றுக்கு கால் பங்கு ($\frac{1}{4}$) |
| ஒன்று முக்கால் | — ஒன்றுக்கு முக்கால் பங்கு ($\frac{3}{4}$) |

## க

| | |
|---|---|
| கல்வி | — தோண்டி |
| கணப்பெருமக்கள் | — கோயிலுக்கு அமைந்த அவையில் இடம்பெறும் அங்கத்தினர் (முதியோர்) |
| கடைக் கூட்டத்தார் | — வரிபாக்கியை வசூலிக்க வருவோர் |
| கலிஞ்சு (கலிங்கு) | — மதகு, அணை |
| கடைப்பூ | — கடைசி போகம், இறுதி விளைச்சல் |
| கர்ப்பகிருஹகம் | — கருவறை, மூலஸ்தானம் |
| காசுகல் | — தங்கம் முதலியவற்றை நிறுப்பதற்கான எடை |
| காணம் | — ஒரு வகைக் காசு, பொன் |
| காணியாட்சி (காணியாண்மை) | — பரம்பரையாக அனுபவிக்கும் உரிமை |
| காடுகோள் | — விளைநிலம் காடு மண்டிப் போதல் |
| காராண்கிழமை (காராண்மை) | — பயிரிடும் உரிமை |
| கிழிகைச் செலவற | — பத்திரச் செலவு போக |
| குத்துக்கால் | — தடை, இடையூறு |
| குதம்பை | — காதில் அணியப்படும் ஒரு வகை அணி |
| குடமும் அலகும் | — தண்ணீர்க் குடமும், தருப்பைப் புல்லும் |
| குறுவாள் கூலி | — நெல்குற்றும் கூலி |
| குமார விருத்தி | — பிள்ளை வரி |
| கூறை | — புதிய ஆடை, புடவை |
| கை பிழைபாடு | — எழுத்துக் குற்றம் |
| கொல்லை நிலம் | — புஞ்சை நிலம் |
| கோவணர் | — துறவிகள் |
| குடவர் (கொடவர்) | — கோயில் சொத்துகளைக் கவனிக்கும் ஒரு பகுதியினர் |
| குடிநற்கல் (குடிநைக்கல்) | — நிர்ணயம் செய்யப்பெற்ற நிறையுடைய நற்கல் |
| கைச்சாத்து (கச்சாத்து) | — கையெழுத்திட்ட ரசீது |
| கோல் கூலி | — அளவுகோலைப் பயன்படுத்துவதற்காகத் தரும் கூலி |

ச

| | |
|---|---|
| சந்தி | — இரவும் பகலும் அல்லது பகலும் இரவும் சேரும் காலத்திலோ, நண்பகலிலோ கோயிலில் இறைவர்க்கு நிகழ்த்தும் வழிபாடு |
| சந்தியா தீபம் | — கோயிலில் மாலை நேரத்தில் எரிக்கப்படும் விளக்கு |
| சன்ன வீரம் | — வீரன் தனது மார்பின் குறுக்கே அணிந்துள்ள அணி |
| சருவ மானியம் | — முழு சுதந்திரம் |
| சட்டப் பெருமக்கள் | — மடத்தை நிர்வாகம் செய்யும் துறவிகள் |
| சண்டேசுவரப் பெருவிலை | — சிவன் கோயில் நிலத்தின் விலை |
| காமந்தர் | — படைத்தலைவர் |
| சாவா மூவாப் பேராடு | — இறவாத, மூப்படையாத பேராடு (ஓர் ஆடு இறந்து விட்டாலும் அதன் சந்ததி இருந்து வரும் என்பதால் சாவா எனப்பட்டது) |
| சாலிகைத்தறி (சாலியத்தறி) | — துணி நெய்யும் தறி |
| சிறு சோறு | — சிற்றுண்டி |
| செப்புக் காளம் | — செம்பினால் செய்யப்பட்ட ஊது கொம்பு |
| செப்புப் பலித்தாலம் | — செம்பினால் செய்யப்பட்ட பலிப்பொருள் வைக்கும் தட்டு |
| செகுத்து | — சேர்த்து |
| சோதி சொல்லுவான் | — சோதிடம் சொல்வோன் |
| சேனாபதிப் பெருவிலை | — திருமால் கோயில்களின் நில விலை |
| சேனாபதி ஆள்வார் | — திருமால் கோவில்களின் சேனை முதலியார் |
| சித்தி செய்த | — இறந்துபோன |
| சிராவணம் | — சிராவணி, ஆணவம் |
| சிறுகாலைச் சந்தி | — விடியற்காலை வழிபாடு |
| சீவிதப் பற்று | — சீவியத்துக்கு மட்டும் விடப் பட்ட நிலம் (ஜன்மக்காணி) |

செட்டியிறை — வியாபாரிகள் இறுக்கும் வரி

## த

தசபந்தம் (தசவந்தம்) — பொதுக் காரியங்களுக்காக விதிக்கப்பெறும் $\frac{1}{10}$ பங்கு வரி

தண்டம் — அபராதம்

தங்களாச்சி — தங்கை, தங்கச்சி

தர்ம்மாசனம் — அறமுரைக்கும் மன்றம், நீதி மன்றம்

தர்ம வாரியம் — அறச்செயல்களை மேற்பார்வையிடும் குழு

தகர் — ஆட்டுக்கிடா, செம்மறி ஆடு

தளிகை — உண்கலம்

தலைமாறு — ஒன்றுக்குப் பதிலாக

தனியூர் — வளநாட்டுடன் நேரடித் தொடர்பு கொண்ட பேரூர்

தண்டல் நாயகம் — வரிவசூலிக்கும் தலைமை அதிகாரி

தற்குறி — கையெழுத்து இடத்தெரியாத

தலையுவா — அமாவாசை, வளர்பிறையின் தொடக்க நாள்

தர்மோப தேஷ்டா குரு — தர்மத்தை உபதேசிக்கும் ஆசாரியன்

திங்கள் ஆட்சை — திங்கட் கிழமை

திரமம் — உரோமானியக் காசு (தமிழகத்தில் புழக்கத்தில் இருந்தது)

திருச் சுற்றுலை — கோயில் மதில்

திருக்கை கொட்டி — திருப்பதியத்தைப் பண்ணோடு கைகொட்டிப் பாடுதல்

திருச்சுற்று மாளிகை — மண்டபத்தோடு இணைந்த மதில்

திருச் சூலக்கல் — சிவன் கோயில்களுக்கு நன்கொடையாக அளிக்கப்பட்ட நிலத்தின் எல்லையில் நடப்படும் கல்

திருநடை மாளிகை — மூலத்தானத்தைச் சுற்றியுள்ள மண்டபம்

| | |
|---|---|
| திருவாழிக்கல் | — வைணவக் கோயில்களுக்குக் கொடையாக அளிக்கப் பட்ட நிலத்தில் எல்லையாக நடப்படும் கல் |
| திரு எழுத்து | — வேந்தனது கையொப்பம் |
| திருப்பரி சட்டம் | — கடவுளர் திருவுருவங்களின் தலையில் அணியப்படும் ஆடை |
| திருப்படி மாற்று | — காலந்தோறும் நடைபெறும் பூசனை |
| திருமாலைப் புறம் | — இறைவர்க்கு மலர்மாலை தொடுத்துச் சாத்துவதற்காக விடப்படும் நிலம் |
| திருநாமத்துக் காணி | — சிவன் கோயில்களுக்கு வழங்கப்பெறும் நிலக் கொடை |
| திருவிடை யாட்டம் | — வைணவக் கோயிலுக்கு வழங்கப்பெறும் நிலக் கொடை |
| தீபமாலை | — சரவிளக்கு |
| துலுக்க வாணம் | — துலுக்கர் கலகம் |
| தலையாரிக் காணம் | — தலையாரிக்குக் கொடுப்பதற் காக விதிக்கப்பட்ட வரி |
| தூண்டுவான் கூலி | — விளக்கேற்றுவானுக்குத் தரப்படும் கூலி<br>விளக்கின் திரியைத் தூண்டி விடுபவனுக்குத் தரப்படும் கூலி |
| தேவகுடிமை | — கோயிலின் குடிமை |
| தூசுப்படை (தூசிப்படை) | — படையின் பகுதிகளில் முத லணியில் செல்லும் படைப் பிரிவு |
| துளைநிறை பொன் (துளை நிறை) | — சுத்தமான பொன் |
| தண்டிகை (தண்டு) | — பல்லக்கு |
| தழையிடுவோர் | — கோயிலில் வில்வம், திருத் துழாய் முதலான பச்சிலை களை வழிபாட்டிற்கு வழங்கு வோர் |
| திருக்கைக் கோட்டி (திருக்கை யோட்டி) | — கோயில் திருமுறை ஓதப் பெறும் மண்டபம் |

## ந

நட்டுவன் — நாட்டியம் சொல்லித்தரும் ஆசிரியர்

நட்டுவப்புறம் — நாட்டியம் கற்றுத் தருவதற்கு வழங்கப்பெறும் நிலதானம்

நடுவிருக்கை — மத்யஸ்தன். அரசுக்கும் மக்களுக்கும் தொடர்புபடுத்தும் அதிகாரி

நவிரை — ஆடி மாதத்தில் அறுவடையாகும் ஒரு வகையான நெல்

நாள்வாய் — நாள் ஒன்றிற்கு

நாட்டு விநியோகம் — நாட்டாரால் வரி விலக்கு அளிக்கப்பட்ட நிலங்களால் குறைந்த நிதியை நிரப்பத் தனிப்பட்டவர் வழங்கும் பங்கு

நிசிதி — நித்தம்

நிலைப்பொலியூட்டு — நிலையான வட்டி

நீர்கோவை நிலன் — நீர் கோத்துக் காணப்படும் நிலம், சதுப்பு நிலம்

## ப

பதவாரம் — நிலப்பரிவர்த்தனைக்காக அளிக்கப்பெறும் வரி

பசானம் — சித்திரை மாதத்தில் அறுவடை செய்யப்படும் ஒருவகை நெல்

பதியாத மூலப்பட்டுடைய பஞ்சாரியர் — சிவன் கோயில் ஊழியர்

பண்டாரம் — கருவூலம்

பள்ளித்தாமம் — பள்ளிக்கட்டிலில் தொங்க விடப்படும் பூமாலை

பலிசை — வட்டி

பட்டர் — கோயிலில் பூசனை நிகழ்த்தும் பிராமணன்

பட்டான் — இறந்தான்

பாடி காவல் — ஊர் நிலம் முதலானவற்றைக் காவல் செய்வதற்கு வசூல் செய்யப்படும் வரி

பிரசண்டைக் காணிக்கை — இராணுவத்துக்குரிய இரு வகை வரி

பிடாகை — சிற்றூர்

பிரிய தேயம் — பிராமணர்களுக்கு வழங்கப் பெறும் நிலதானம்

பிரமதேயக் கிழவர் — பிராம்மணர் குடியிருப்பு நிலவுடைமையாளர்

பிநாகபாணி — சிவபெருமான்

பிடிபாடு — ஒப்பந்தச் சீட்டு

புரவு — நிலவரி

புரவு வரி — அரசிறை நீக்கப்பெற்ற ஊர்களினின்றும் வருவதற்குரிய பிற வரிகளுக்குக் கணக்கு வைத்திருப்பவன்

புணை (பிணை) — ஆள் (நபர்) ஜாமீன் (surety)

பொருள் செலவோலை — பொருள்களுக்குத் தந்த பணத்துக்கான பற்றுச் சீட்டு (receipt)

பொன்னின் தளிகை — பொன்னால் செய்யப்பட்ட உண்கலம்

போகி — ஆசைநாயகி, மனைவி

ம

மாணிக்கத்தார் — தேவரடியார்

மசக்கி — வயக்கி

மடல் — மடல் போன்ற வடிவம் கொண்ட திருநீற்றுப் பாத்திரம்

மடவளாகம் (மடை விளாகம்) — கோயில் பரிவாரத்தார் குடியிருக்கும் கோயிலைச் சூழ்ந்த பகுதி

மிணாளன் — மணாளன்

முதுகண் — பாதுகாவலர், பேராள் (representative)

முகமண்டகம் — முக மண்டபம்

| | | |
|---|---|---|
| முழாக் காசு | — | மூன்று ஆழக்காசு |
| மூன்றத் தொன்று | — | மூன்றில் ஒன்று ($\frac{1}{3}$) |

## ய

| | | |
|---|---|---|
| யக்கிப்பட்டி | — | யக்கி தேவிக்கு வரியில்லாமல் விட்ட நிலம் |
| யானை ஒழுக்கு | — | யானையை நடத்திச் செல்பவன் |

## வ

| | | |
|---|---|---|
| வகை செய்வார் | — | நிலத்தின் தரம், அளவு முதலியவற்றை ஒழுங்கு செய்து தீர்வை விதிக்கும் அலுவலர் |
| வர்த்தனை (வத்தனை) | — | குறிப்பிட்ட அதிகாரிகள், பணியாளர் ஆகியோருக்கு மானியமாக வழங்கப் பெறுவது |
| வழுதியச் சுவர்க்கம் | — | பாண்டியருக்கு அவர் காசிற் கொடுக்க வேண்டிய வரி வகை |
| வழுவாமை | — | தவறாமல் |
| வாத முத்திரை | — | கொடையளிப்பது போன்ற கைக்குறி |
| வாசி | — | வட்டி |
| வாத்திய மாராயன் (வாச்சிய மாராயன்) | — | கோயில் மேளத்தலைவன் |
| வாடாக் கடமை | — | குறையாத நிலவரி |
| விபூதிக் காணிக்கை | — | விபூதி வழங்கும்போது கோவிலுக்குக் கொடுக்க வேண்டிய வரி |
| விஞ்சனம் | — | சேதாரம் |
| விக்ஞப்தி | — | விண்ணப்பித்துக் கொண்டவன் |
| விடு தீட்டு | — | விடுதலைப் பத்திரம் |
| விப்பிர விஞ்ஞேதி வரி | — | பிராமண மாந்திரீகனிடமிருந்து பெறும் வரி |
| விலையோலை | — | விற்பனைப் பத்திரம் |

| | |
|---|---|
| விலை மாவுறுதிப் பொருட் செலவோலை | — வாங்க வேண்டிய பொருளின் விலையை இறுதியாக நிர்ண யித்து அதனை எழுதித்தரும் ஓலை |
| வீராசனம் | — வீரனைப் போன்று (கால்மேல் கால் வைத்து) அமரும் நிலை |
| வெள்ளச் சாய்வு | — வெள்ளத்தால் அழிந்த பகுதி |
| வெள்ளான் வகை | — ஊர் மக்களே பயிரிட்டு அதற் குரிய அரசிறையை அம் மக்களே நேரடியாகச் செலுத்திடும் நிலவகை |
| வெள்ளி மண்டை | — வெள்ளியால் செய்யப்பட்ட இரப்போர் கலம் |
| வெள்ளிச் சட்டுவம் | — வெள்ளியால் செய்யப்பட்ட தட்டைக் கரண்டி |
| வெட்டி முட்டையான் (வெட்டி முட்டாவான்) | — கிராமத்தின் பொது வேலைக்கு அவ் வேலை முடியும் வரை யில் இடையறாமல் வேலை செய்வதற்கு அனுப்பப் பெறும் ஆள் |
| வேட்கோவர் | — குயவர், வேளார் |
| வைத்திய விருத்தி | — வைத்தியருக்கு விடப்பட்ட நிலம் |

## ஜ

| | |
|---|---|
| ஜாதகக் குடி | — வாழ்நாள் முழுவதும் திருக் கோயில்களுக்குப் பணி புரிய முன்வந்தோர் |

## ஸ்ரீ

| | |
|---|---|
| ஸ்ரீகாரியம் (சிகாரியம்) | — கோயிற் காரியம் |
| ஸ்ரீபண்டாரம் (சிபண்டாரம்) | — கோயிற் பண்டங்கள் வைக் கப்பெறுமிடம் (theasury), காசு வைக்குமிடம் |
| ஸ்ரீமுகம் (சிமுகம், சிரிமுகம்) | — திருமுகம் |
| ஸ்ரீருத்திரர் (சிருத்திரர்) | — சைவத் துறவிகள் |

## ஹ

| | |
|---|---|
| ஹஸ்தம் | — முத்திரை |

---